உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

சுத்தசைவராகிய

ஸ்ரீ பரஞ்சோதிமாமுனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற்புராணம்

## மதுரைக்காண்டம்.

கயிலாயபரம்பரைத்

திருவாவடுதுறையாதீனமகாவித்துவான்

ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

மாணாக்கராகிய

சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத் தமிழ்ப்புலவராயிருந்த

சோடச அவதானம்

## தி-க. சுப்பராயசெட்டியாரால்

தாம் இயற்றிய உரையோடு

சென்னை:

பா. சோமையரவர்களது

ஆதிகலாநிதியச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

சர்வசித்து௵ மேடரவி.



விலை ரூபா-௧. அணா-௮.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

புரசை - அஷ்டாவதானம் வித்துவான்

## ஸ்ரீசபாபதிமுதலியாரவர்கள்

இயற்றிய

## நிலைமண்டில ஆசிரியப்பா.

புவிதிகழ்பனிமுடி யிமவாசலத்திமத்—திறையெனநெடுங்க ணுதியிலம
ர்ந்த—பண்ணவர்முதலாப் பாறபடுமூவரும—எண்ணியதமதொழி லன்னுதன்னு
ணையின்—வழிநிலைநடாத்த வாளாமேவும்—அழிவிலின்பத் தருட்கடற்பெருமான்
எல்லையின்மான்மிய மபல்லவோதும்—சைவமுதலாந் தசபுராணங்களு—ளுய்வ
கைநிறவு முயர்காந்தநிற—சனற்குமார சங்கிதைமுதலா—வனற்குமாராருய்
ஒக்கும்வகுப்பிறுட்—சங்கரசங்கிதை யங்கணிறைதரும—உலகமாம்புருடற் கலகி
லாதிலாத—சாந்தமாவயங்குசி வாய்ந்தமாமறைமை—மான்மியமெனத்தும் வட
மொழிநன்னின்—மேன்முறைக்கண்ணே யிரிதருவுள்ளன—தேன்சுவையதனினுந்
திஞ்சுவைபயக்கும்—தென்றமிழ்மொழியாற் சிறப்பியாகத்—தன்பினபயிலத் தொ
குத்தனர்சில்லோர்—அங்கவையனைத்தும் டாங்குறத்திரட்டிச்—சுத்தசைவ வித்தக
த்தொன்மைசால்—பரஞ்சோதிமுனிவர் சிரம்புறவியற்றிய—வரஞ்சேர் திருவிளையா
டன்மாபுராணத்—திடம்பெறுநன்பொருள் எளிதிலெவர்க்கும்—மடம்படவிளங்க
வடநூற்கதைரால்—இந்நூன்முதனூல் இயல்பினிறுப்ப—தென்றமிழுணர்சயர்
தோற்றக்காட்டியும்—ஆங்காங்கமைந்த அரும்பொருள்சொற்சுவை—சுற்றுநனிவிய
ப்ப இயைநரக்காட்டியும்—தன்னாலியனடை தோன்றயாங்கெவரும்—எந்நூல்விதி
யோ வெனவயராமல்—இலக்கணவிலக்கியம் நலக்கக்காட்டியும்—பன்னலம்கிடைப்
பச் சொன்னலந்தழைப்ப—மிகுத்துரைபடாது வகுத்துரையெழுதினன்—அன்ன
வன்யாரெனில் அறையக்கேண்மின்—நன்னெறியாயா மனினியகுரவன்—அள
லவயுள்யாமறிந்தவை சிலகூறுதும்—அல்கலுமிசெறிதொல்காப்பியமுதல்—சொ
ல்காவியம்பல தகவுறவுணர்ந்தோன்—எவ்வகைநூலா யினுங்கேட்பவர்தமக்—கவ்
வவ்வுளக்கிடை யளந்தெடுத்திசைப்போன்—பதிபசுபாசப் பான்மையைத்தெரிக்கு
ம்—மதிகொள்சித்தாந்த வாய்மைதைவந்தோன—தான்கற்றனவெலாம் தராதலத்
துள்ளோர்—ஊன்புக்குருக்க வுளப்பலவெனவுய—இதுபோற்பன்னய மெதனினு
மிலையென்—றையந்திர வையநகிளக்கவும்—பாரவுறுசைவ புராணம்பற்பல—மன்
பதையனைத்து மின்புறநொடித்தோன்—திசையுலாமவனிசை பகர்வதற்கரிதெய்ய
தேறுகூறியபுகழ் மிருகூறிசுந்தர—புலவர்சோமான்பாற பலகலையுணர்ந்தோன்
அன்னவைக்கமைய மனனியநடையோன்—சிவமேபரமெனத் தேர்ந்தவனடியார்தம்
தவவேடமேபொரு ளாமெனக்கொண்டோன்—புதிசாதனம் போற்றியொழுகும்
நீதியிற்பிறழா நிலைமையுடையோன்—கன்னல்கமுகங் காணையுயரும்—பண்ணினர்
களிப்ப யாங்கணும்படப்பைசூழ்—திரிசிரபுரத்துள் வரிசைகூர்வாழ்க்கையான்—வீர
ராகவமால் விழுத்தவப்பேற்றால்—சீர்தவழ்ப்பெரு நிலமிசைவந்தோன்—தவறி
லாச்சோடச வவதானத்திறல்—விற்பனமாண்பு மிக்கசீர்க்குரிசில்—சபபராயச்சு
குணநாவலனே.

நண்ணியநால்வகைச்சொல்லுநயம்படவைத்திணைந்துநலனுமேவித்
தண்ணியநாரந்தனைநேர்தந்துவரும்பத்திரசந்நய்க்கியூறப்
பண்ணியனுமொழிவிவைகள்பாக்கடொறுங்களிசெய்யப்பரனைப்போற்றும்
புண்ணியனுஞ்சுத்தசைவப்பரஞ்சோதிமுனிவனவில்புராணநூற்கே. (௨)

கருத்தமாயக்கடலின்கரைகாணார்க்குலகோபகாரமாகத்
திருத்தமாய்ப்பதப்பொருளுந்தெளிதரவாங்காங்கொளிர்விசேடத்தோடு
பொருத்தமாயியற்குறிப்பும்பொறித்துமலமாயையெனும்புன்மையெலாம்
வருத்தமாய்த்தின்பருளும்வாய்மையுறுசித்தாந்தவளமுங்காட்டி. (௩)

நச்சினார்க்கினியமதாய்நவில்பரிமேலழகராய்நயக்குநாகக்
கச்சினார்க்கினியவருட்கிலையவிளம்பூரணமாய்க்காட்டுமுன்னை
வைச்சினார்க்கினியதெனவவையாதுபத்திமையார்மனமகிழ்ந்தோர்க்கு
மெச்சினார்க்கினியபலன்விரவவியன்மணக்கவுரைவியக்கச்செய்தான். (௪)

அன்னவனுமொழிற்றன்னையடுத்தவரைத்தன்மயமதாக்குமேரு
மன்னவனார்தங்களிலெண்மடங்குவருபுகழுடையோனமழுமானேந்து
முன்னவனார்பஃறலமான்மியமுரைத்தோனமலயமாமுனிவன்சொல்லைத்
தென்னவனுமொழிவளர்த்தசிருட்செகந்தரதேசிகன்பாலன்பால். (௫)

இகத்துறுதொல்காப்பியமாவிலக்கியமுமிலக்கணமுமின்பால்நு
மகத்துறுசைவசித்தாந்தமெய்யநூலுமபன்னூலுமையந்தீர்
சுகத்துறுநல்லறிஞர்புகழ்தரவுணர்ந்தோன்கடவுளுடைகொடாரணிமாதின்
முகத்துறுபொற்றிலகமன்னான்மூநதிஞர்குழாத்திடையேமுயங்குநீரான். (௬)

துரிசிராமலைதருநஞ்சுதுதரிசித்துயமினைத்துலங்கக்காட்டும
பரிசிராமலைகளைதம்பரனருளுக்கிலக்காகும்பரிவின்மிக்கோன்
கரிசிராமலையமர்நாற்கவிவல்லோன்வீரராகவவேண்மைந்தன்
திரிசிராமலையுடையான்றிவலிதொட்டவதானஞ்செய்யுந்திரன். (௭)

வாரணனுகிளமுலைதோய்வன்றொண்டர்தொகையாகவகுத்தவற்றுள்
வாரணனுந்தகங்கொடுமாமகவரிக்கோர்முன்னோனைமறவாநெஞ்சன்
காரணனுண்மலர்க்குழலாள்காணியபொன்மணிமன்றிற்கவினவாடுங்
காரணனும்பராபரன்றருள்பராவுறுசுப்பராயவியற்கவிச்சிங்கமே. (௮)

இந்நூலுரைகாரரும்

சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல்பாடசாலைத் தமிழ்ப்புலவரும் ஆகிய

சோடச அவதானம்

தி. க. சுப்பராயசெட்டியார் மாணாக்கர்

பிரம்பூர்.

## கோவிந்தராஜகவிராயரியற்றிய

நேரிசையாசிரியப்பா.

உலகம்யாவும் இலகுறப்புகழும்—பொன்னெடுங்குன்றந் தன்னுறைவிட மாப்—பொருங்கயற்களித்த பெருந்திறல்வழுதியர்—வான்பிரதாபம் போன்மென ச்சேயொளி—நீட்டும்பங்கயக் கூட்டமுந்தமாது—விழுக்குடிமுதல்வனுய்ச் செழிக்

குமம்புலி—வாழ்தரவளித்தவி சேழ்தலையளத்த—வன்னவர்புகழுன மன்னிலாப்
பில்கும்—பங்கயக்குழாமுந் தங்கியகிடங்கொடு—பண்ணவர்களுலி கண்ணிவாழ்பு
விக்கெலாம்—தானேயாளு யாளுதமர்தலின்—கன்னியோர்பங்கன் பொன்னடியா
கி—வல்லநூற்றுவரைக்கொல்லியும்பிறவும்—மண்டியபொதியுங் கொண்டழியாத—
மின்னெடும்புரிசை மன்னியமூதூர்—தவாதசாந்தத் தபோதனர்பிரியாத்—துவாத
சாந்தத் தூயபெருந்தலம்—மூர்த்தியடிகள் மும்மையாலாண்டருள்—சீர்த்திசான்ற
செல்வத்திருநகர்—மெய்வருந்தவத்தினர் தெய்வக்கற்பினர்—மங்கையர்க்கரசியா
ரொக்குலச்சிறையார்—தாரணிநின்ற சீர்நெடுமாறனார்—சைவம்வளர்த்தருள் சமட்
டிவீச்சாபுரம்—பொருப்பிற்பிறந்தவிருப்புடன்றவழ்ந்து—நண்ணியதண்டமிழ்ப்பெ
ண்ணிளங்குழவிக்கு—மூன்றுசங்கத் தேன்றுபாலூட்டி—யாரியமென்னும் பேரிளம்
பெண்ணுடல்—விளர்த்துநாளுற வளர்த்தவெழிற்புரம்—முதிர்வளஞ்சான்ற மது
ரைமாநகரில்—தனதருவெட்டலு ளிறுதொழியாதும்—அங்கமுபாங்க மாகப்பொங்
குற—மண்பிறைசேர்தண்கலை செம்புனலுண்முடி—காற்றுணைபசும்பூண் கதிர்மூன்
றம்விழியாப்—போற்றுறுகொணடோன புராதனன்புண்ணியன்—பழமுறைச்செ
ன்னியும் தொழுதற்கரிதாக்—திருவருளொளுங்கொடி யொருவாதுபடர்ந்த—செய்ய
கற்பக முய்யச்செயத—திருவிளையாடலை திரிபறத்தெரிக்கும்—மேன்மையாரால
வாய் மான்மியமொழிபெயர்த்—திருந்தமிழ்மொழியி லருந்தமிழ்ந்தென்னச்—சுத்த
சைவ சித்தாந்தத்தலைவன்—முதத்மிழ்பொழியும் விதகன்வியாகரும்—பரஞ்சோதி
யடிகள் பரஞ்சோதிமுனிவரன்—விருத்தப்பாவால் விருத்தமின்றி—விளையாடருட்
டிரு விளையாடற்புராணம்—மெய்ம்பெருங்காப்பியந் தனியல்விளங்க—மன்னெ
டும்புவியோர் சென்னியிறகோடலின்—சிகாமணியெனவு மகாசவுந்தரிய—மணிந்
தோர்க்களித்தலி னமுதமெயெனவும்—இணர்ந்தராக்காட்டின் றிசைமயக்கறுத்தலின்—
இமிழ்கடற்பிறந்த வமிழ்தேயெனவு—மகவிருள்மீத்தா யிகமகிழ்வுறுத்தலின்—கு
றைவின்றுநிறைந்த மறுவின்றுவிளங்குந்—திங்களேயெனவுந் துங்கநூற்புலவ—ர
ரிதிற்பண்ணுள் பெரிதுருபுகது—புரையறவமைந்த வுரையெறுமுடிக்குமரங்—கரப்ப
ப்புகழொளி சிறப்பிருதாமெ—யொன்றாய்ச்சமு ம்னறவம்மா—விளங்கவின்களங்
கறு மிளங்கதிர்தளங்குமம—பரிதியேயெனவு மொருதமிழ்மங்கைக்—கிலகமன்னு
றுத்தலிற் றிலகமேயெனவும்—சரியையுங்கிரியையு மரியயோகமும்—தழுவுஞானமு
முமாங் குழவிவார்தலோன்—சிவாகமநற்றுய் செழும்பாலெனவு—மவாவிப்புலவ
ரனைவரும்போற்ற—வரிறபததெள்ளிறு வரைசெய்தனனால்—பரவுகைலாச பரம்ப
ரைத்துறைசை—யுரவாதீனத் துயாபெருபுலவன்—கம்பனிருப்பின கம்பனுய்நா
னைக்—கும்பனறுகுந்த ரூபன்முறையென—வெண்ணிலாக்காப்பிய நண்ணூறலபற்ப
ல—வமிழ்ந்தநூறகவிருன் கமழ்ந்தபைங்குவளையன்—* மீனாட்சியந்தணன் மீனாட்சி
சுந்தரன்—றனபாலருநதமிழன்பாலுணர்நதோன்—காழுகிற்புகையாற் கேழொளிம
றிக்கு—மறுவருமபியதென வெறிகொடியிட்டட—நாளுந்துடைக்கு மாளிகையோ
ங்குந்—திரசிரபுரம்வாழ் சரிசிலாவள்ளல்—செந்தமிழ்ப்பயனுந் திருத்தொண்டர்பு
ராணமு—மகதமிலின்ப மருளுநூல்பிறவும்—சங்கச்செய்யுளும் பொருநுகாப்பிய
ங்களாம்—சிந்தாமணிமுத னந்தாநூல்களும்—வகுக்கருமிறையனு ரகப்பொருளுட
னே—தொல்காப்பியத்திற் கொல்காப்பொருளொனும—வளஞ்சானமீப்புகழிளம்பூர
ணமு—மாறுவழுகுகொள் சேனாவரையமு—முச்சிமேற்கொடுநறு நச்சினார்க்கினி
யமு—மிலக்கணக்கொத்து மிலக்கணவிளக்கச்—சூறுவளியுஞ் சூத்திரவிருத்தியும்—
வீறுநன்னூல் விருத்தியும்பிறவு—மடைந்தோர்க்குருக மரும்பெருங்குரவன்—மிடை

* மீனாட்சியந்தணன் மீனராசியை ஆட்சியாகவுடைய தேவகுரு.

*ந்தசேயிதழ் விரிந்தபங்கயச்—சேவடியெமாது சென்னியிற்சூட்டிய—பாவலன்சிவபிரான் பதாம்புயமுளம்வைச்—சுப்பராயன்பால்வாழும்—சுப்பராயப்பேர்த் தோன்றிலெம்பிரானே.*

---

### சைவசித்தாந்தக்கருத்துகளுள் ஆலாலசுந்தரம்பிள்ளைமுன்னிலையாகக் காஞ்சிபுரம் - ஸ்ரீ ஏகாம்பரசிவயோகியார் உபகரித்த சைவசித்தாந்தக்கருத்துகள்.

---

சிறப்புப்பாயிரம்-௩-செய்யுளில் ஐம்புலன்வழியே என்பதுமுதல் ஆடிமறைச்சிலம்படிகள் என்பதுகாறும், ௬-இல் சுத்தம் என்பதுமுதல் தன்மைதான்றெரியுமன்றே என்பதுகாறும், ௭ - இல் பிரமன்முதலிய என்பதுமுதல் ஆவிநாயகன் என்பது காறும், ௯ - இல் எவ்வுயிர்க்கும் என்பதுமுதல் திருத்தநிலை... என்பதுகாறும், ௧௨ - இல் ஆன்மாக்கள் என்பதுமுதல் மலர்ப்பதந்தோறு என்பதுகாறும், ௧௩-இல் பாசஞானங்களில் என்பதுமுதல் உன்றுடனுமை என்பதுகாறும, ௧௪ - இல் ஆன்மாவினது என்பதுமுதல் சொன்னோனறி என்பதுகாறும், ௧௯ - இல் எல்லாப்பொருள்களும் என்பதுமுதல் நீத்தபிரான் என்பதுகாறும், ௨௦ - இல் சிவஞானசித்தியார் என்பதுமுதல் கலந்து என்பதுகாறும, ௨௧ - இல ஏகமாகியபிரமம் என்பதுமுதல் இளைத்து என்பதுகாறும்,—திருநாட்டுப்படலத்தில் - ௧௪-இல் வேதங்கள் என்பதுமுதல் தெளிந்தது என்பதுகாறும,—திருநகரப்படலத்தில் - ௩௦ - இல் திருவடிநிழலை என்பதுமுதல் ஊரிபணுய்சிற்றல் என்பதுகாறும, ௮௨ - இல் ஆத்திகராவார் என்பதுமுதல் முத்திவேட்குஞ்செல்வர் என்பதுகாறும, ௮௫ - இல் பிறர்மதங்களையவல்லவாதம் என்பதுமுதல் துறைநிறுத்தல் என்பதுகாறும, ௮௬ - இல் மறைமுடிவு என்பதுமுதல் மாதவர் என்பதுகாறும், ௯௦ - இல் பலபடவுணர்தற்கு என்பதுமுதல் சொல்பரோவுற்று என்பதுகாறும, ௯௧ - இல் உபநிடதங்களை என்பதுமுதல் நடுநிலைப்பொருள் என்பதுகாறும், ௧௦௭ - இல் ஞானவேள்வி என்பதுமுதல்சிலர் என்பதுகாறும்,—திருக்கைலாயப்புகழ்ச்சியில் - ௧ - இல் அவிச்சை என்பதுமுதல் வேதச்சிரங்கடந்தவன் என்பதுகாறும,—தீர்த்தவிசேடத்தில் - ௩ - இல் சிவதத்துவம் என்பதுமுதல் உருவங்கொண்டு என்பதுகாறும்;—இந்திரன்பழிதீர்த்தபடலத்தில் - ௩௫ - இல் தேகேந்திரியம என்பதுமுதல் இருந்தான என்பதுகாறும், ௭௮-இல் சிவம் என்பதுமுதல் கருவாகி என்பதுகாறும், ௭௯- இல் திருவருளே என்பதுமுதல் பிரிந்தாய் என்பதுகாறும், ௯௦ - இல் ஆகமவிதிமுதல் அடிகள என்பதுகாறும்;—திருநகரங்கண்டபடலத்தில் - ௧௭ - இல் ஆன்மாக்கள் என்பதுமுதல் காட்டுவார்என்பதுகாறும்;—தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலத்தில் - ௨௨ - இல் உருவும் என்பதுமுதல் முதல்வி என்பதுகாறும்;— திருமணப்படலத்தில் - ௪௫ - இல் சத்தனுயுள்ள என்பதுமுதல் வந்தனம் என்பதுகாறும், ௯௦ - இல் நால்வகை என்பதுமுதல் புரிகுவார் என்பதுகாறும், ௧௧௩ - இல் திருவருட்கண்ணால் என்பதுமுதல் புராணன்வந்தான் என்பதுகாறும், ௧௪௯ - இல் பொருட்பிரபஞ்சம என்பதுமுதல் பொன்னடி என்பதுகாறும், ௧௫௪ - இல் அத்துவாவில் என்பதுமுதல் விளக்கவல்ல என்பதுகாறும்;—எழுகடலழைத்தபடலத்தில் - ௭ - இல் ஸ்ரீபஞ்சாக்கரம் என்பதுமுதல் வரைப்படுத்திக்கூறல் என்பதுகாறும், ௪௫ - இல் பிருதிவிக்குரியபொன்னிறம் என்பதுமுதல் படிகநிறமும் என்பதுகாறும்;—உக்கிரகுமாரபாண்டியரது திருவவதாரப்படலத்தில் - ௫ - இல் ஆன்மாக்களது என்பதுமுதல் அரியதென்பார் என்பதுகாறும் என வுணர்க.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவிளையாடற்புராணம்

## மூலமும் உரையும்.

### சிறப்புப்பாயிரம்.

சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தியான முதலைத் துதிசெயச்
சுத்தியாகிய சொற்பொருணல்குவ
சித்தியானைதன் செய்யபொற் பாதமே.

(இதன்பொருள்.)

சித்தியானைதன் செய்ய பொற்பாதம் - சித்திவிநாயகக்கடவுளுடைய சிவந்த பொன்னைப்போலும் அரியதிருவடிகள், சத்தியாய் சிவம் ஆகி தனி பரமுத்தி ஆன முதலை துதிசெய - சத்தியுமாகிச் சிவமுமாகி ஒப்பில்லாத பரமுத்தியும் ஆகிநின்ற பரசிவத்தை வாழ்த்த, சுத்தி ஆகிய சொல் பொருள் நல்குவ - குற்றமற்ற சொல்லையும் பொருளையும் அருளாநிற்கும்.

இங்ஙனம் நூலுட்கூறப்படும் பொருளை யொருவாறு தொகுத்துக் கூறுதல் சிறப்புப்பாயிரத்திற்கு இலக்கணமாதலால் சத்தியாயெனவே அறுபத்துநான்கு சத்திபீடங்களுள் முதற்பீடமாய் உலகமாம்பூநடுவணது வாதசாந்தத்தலமாய்நின்ற திருவாலவாயில் அப்பராசத்தி விச்சாவதிக்குத் தானே தந்தருளியவரத்தால் மலயத்துவசபாண்டியன் வேள்வியிற் றோன்றிப் பண்டுபோலச் சிவபெருமானின்று நீங்காது அரசுபுரிந்து திக்குவிசயங்கொண்டு அப்பெருமானைத் திருமணம்புணர்ந்து தன்னரசுதந்து அவனின்றும் பிரியாது தாதான்மியமாக நிற்குந் தலைமையும், சிவமாய் எனவே ஆன்மாக்களுக்கு மலபாசம் வருவித்தற்கு "நிலவுமருவுருவின்றி" நின்ற முதலாகிய நிட்களசிவம் தன்னினின்றும்பிரியாத அச்சத்தியைத் தான்விதித்தவிதி நிலைபெறத் திருமணம்புணர்ந்து உக்கிரகுமாரபாண்டியனைத் தந்தருளி வழிவழித் திருவிளையாடல்களைப் புரிந்தருளுதற்குச் சகளீகரித்துநின்ற அருட்டன்மையும், பரமுத்தியெனவே தமது திருவிளையாடல்களைக் கேட்டும் சிந்தித்தும் வழிபடுவோர்க்குப் பரமுத்திதந்தருளும் இந்நூற்பயனும் குறிப்பாய்த் தோன்ற நின்றன.

இதனுட்கூறப்படும் ஆய், ஆகி, ஆன என்னும் மூன்றெச்சங்களால் தன்னினின்று அநாதியேநீங்கின ஆன்மாக்களின் பாசத்தொடக்கினை யறுத்துத் திருவடியிற் கூட்டுகைக்குச் சகளமாய் நின்ற இறைவனது குணங்களை யுணர்த்திற்றென்று கொள்ளலும் ஒன்று. அது வருமாறு "இன்னதன்மையனென் றறியொணாவெம்மானை" என்றபடி நின்ற முதலாகிய நிட்களசிவம் அளவின்றிப்பரந்த பிரபஞ்சம் சிருட்-

டியாதற்பொருட்டுத் தன்னினின்று நீங்கிய ஆன்மாக்களுய்ய அநந்தசத்தியாய்நிற்ற
லால் முடிவிலாற்றலுடைமையும், அங்ஙனம் சகளீகரிப்பினும் விகாரமின்றித் தா
னொருமுதலாய்ப் பாசம்வருத்திய அவ்வான்மாக்களுக்கு அளவிலின்பந்தருதற்பொ
ருட்டுச் சிவமாய்நிற்றலால் சுதந்திரம் எனப்படுந் தன்வயத்தனாதலும், அநாதிபோ
தம் அநாதிமுத்தத்தன்மை யெனப்படும் இயல்பாகவே பாசங்களினீங்குதலும், விசு
த்த தேகமெனப்படுந் தூயவுடம்பினனாதலும், அப்பக்குவர்களுக்கு ஞானாசிரியனா
யெழுந்தருளி யவரவர்நிலைமைக்கேற்பத் திருநோக்கமுதலிய அறுவகைத் தீக்கைபு
ரிந்து உலகாயதன் முதல் பாடாணவாதியீறாயுள்ளோர் வரையறுத்துக்கூறும் பத்து
முத்திகளும் பழிசேர்முத்திகளெனவுணர்த்தி, அவற்றைக்களைந்து திருவடிமுத்திதரு
தலால் அநுத்த சத்தியெனப்படும் பேரருளுடைமையும் பூர்த்தியெனப்படும் வரம்
பிலின்பமுடைமையுங் கூறப்பட்டவென வுணர்க. இங்ஙனஞ் சத்தியுஞ் சிவமுமாயு
ள்ள முதலைத் துதித்தற்கு அவர்வடிவாய்நின்ற சொல்லும் பொருளும் வேண்டும்
என்பார் சத்தியாகிய சொற்பொருள் எனவும், அவற்றை யிடையூறின்றித் தொடுத்
து முடித்துப் பயன்பெறுதற்கு ஓர் முதல் வேண்டுமெனபார் சித்திவிநாயகன் செய்
யபொற்பாதம் எனவுங்கூறினார்.

முதற்பீடம் என்றது "சத்திபீடமூவிருபத்துநான்கவற்றின் முற்பீடம் - மா
ட்மோங்கிய மதுரையாம்". எனவும், உலகமாம் புருடனது துவாதசாந்ததலம்
என்றது "உலகமெல்லாமுருவமாம் புருடற்குள்ளம் - இன்னதாந்துவாத்சாந்
தமென் றிறையருளிச்செய்ய" எனவும், பண்டுபோலச் சிவபெருமானினின்று
நீங்காது என்றது "என்றுதொட்டந்திருக்கையின்மேறசயாற்குறித்தெழுந்துபோந்த
னையாமும் - அன்றுதொட்டிம்மதுரைவிட்டினைவிடாதுதெதுவந்தனம்" எனவும்
இந்நூலிற் பின்னர் வருதலாலும், தன்னினின்று அநாதியே நீங்கின ஆன்மா
க்கள் என்றது "நீக்கமுன்னெனைத்தன்னொடு நிலாவகைகுரம்பையிற்புகப்பெய்து"
என்ற திருவாசகத்தாலும், அநந்தசத்தியாய் நிற்றல் என்றது "பொன்மைநீலாதிவ
ன்னம்பொருந்திடப்பளிங்கவற்றின் - தன்மையாய்நிறதுமாபோற்சத்திதன்பேதமெ
ல்லா - நின்மலன்றானாய்த்தோன்றி" எனவும விகாரமின்றி, என்றது "நிலைமை
யொன்றுயேநிற்பன்" எனவும் வரும் சிவஞானசித்தியாராலும், தானொருமுதலாய்
என்றது "அன்னலதொனுமதுவேயுனறி - நிறையொப்பிமுதலதனறி நின்றிடாவி
மலனாகும் - இறையவன்முதல" என்ற சிவப்பிரகாசத்தாலும், அவரவர்நிலைமைக்
கேற்ப என்றது "எவ்வுலகத்துமோதநி யேதுகொண்டி வணியகும - அவ்வுலகத்து
மேனியதுகொண்டங்கமருமீசன" என்ற பூசாகரணத்தாலும், அறுவகைத் தீக்கை
என்றது "திருநோக்கற்பரிசத்தாற நிகமும்வாக்கால் - பாவனையால்மிகுநூலா வி
யோகப்பண்பால்" எனவும, உலகாயதன முதல் பாடாணவாதி யீறாயுள்ளோர் வ
ரையறுத்துக்கூறும் பத்துமுத்திகளும் பழிசேர்முத்திகள் என்றது "அறிவையறின்
புறமுத்திகர்தமைநதமமுமுத்தித்ரிகுணமுமடங்குமுத்தி - விரிவுவினைகெடுமுத்திம
லம்போமுத்திவிக்கிரகவிதநமுத்திவிவேகமுத்தி - பரவுமுயிர்கெடுமுத்திசித்திமுத்தி
பாடாணமுத்தியிவைபழிசேர்முத்தி" எனவும, திருவடிமுத்தி என்றது "திரிமலமு
மகலவுயிரருள்சேர்முத்திதிகழ்முத்தி" எனவும் வரும் ஷை சிவப்பிரகாசத்தாலும்,
அவர்வடிவாய்நின்ற சொல்லும பொருளும் என்றது "என்னையிகழ்ந்தனனோ சொ
ல்வடிவாய்நின்னிடம்பிரியாவிமையப்பாவை - தனையுஞ்சொற்பொருளானவுன்னை
யுமேயிகழ்ந்தனன்" என இந்நூலிற் பின்னர் வருதலாலும், இடையூறின்றித்தொ
டுத்து முடித்துப் பயன்பெறுதற்கு என்றது அடியில்வரும் "மூாரி" என்பதனானு
முறையே யுணர்க.

## சிறப்புப்பாயிரம்.

ஓர் கருமஞ்செய்வோர் அது இடையூறின்றி முடிதற்பொருட்டு முன்னர் விநாயகக்கடவுளைத் துதிசெய்வது முறைமையாதலால் இந்நூலாசிரியரும் தாம் எடுத்த நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு விநாயகக்கடவுளைத் துதிசெய்தார்.

விநாயகபுராணம் - திருவவதாரப்படலம்.

"முராரியாதிய தேவர்கண்முதலுறு முழுதுலகினிலுள்ளோர்
விராவியதொரு காரியமாயினும் விளைக்குறச்செயவென்றே
பராவியுன்னருச்சனைசெய்வோர் மனத்துறுபான்மைதந்தருளுன்னன்
பிராதுசெய்பவர் காரியமுறுசெய இடுதியென்றிவைசொல்வான்."

என்பதனானுணர்க. திருமால் முதலியோர் துன்பநீங்குதற்பொருட்டுக் கஜமுகாசுரனைக்கொல்லக்கொண்டருளிய மாறுபட்ட திருவுருவங்களினும் திருமுகஞ் சிறந்ததாதலின் சிந்தியானையென்றார்.

திருமான்முதலியோர்க்குத் துன்பமவித்தானென்றது.

மேற்படி புராணம்-கஜமுகனுபாதிப்படலம்.

"வானாடுறை யும்பரால் மண்ணுமானிடரால்
தானவர்குலத் தவர்களால் மற்றுளோர் தம்மால்
கானகத்துறு விலங்கினால் கருவியிற் றந்தே
யீனமுறாதிடா வகையுமெற் கருளென்றான்."

என்பதனாலும், மாறுபட்ட திருவுருவங்களென்றது "மணிகொண்டகோடொருமருங்குண்மையாலாண்மை வடிவென்றுமஃதின்மையோர், மருங்குண்மையாற்பெண்மை வடிவென்றுமீதிற்ற மாறியதிருக்கோட்டியால், அலிகொண்டவுயாதுமையது தென்றுமஃறிணையென்று மாக்குமல்லாதலிதாம்" ஐங்கரசிந்தாரத்தின், என்பதனாலும் உணர்க.

பரம் அஃறிணை இடப்பெயராதலால் ஒருமைநீங்க நல்குவ என அஃறிணைப்பன்மை முடிபுதந்தார். இச்செய்யுள் பாடாண்டிணையுள் கடவுள் வாழ்த்து என்னும் துறை. தொல்காப்பியம். பொருளதிகாரம் புறத்திணையியலில் "அமரர்கண்முடியும் அறுவகையானும் - புரைதீர்காமம் புல்லியவகையினும் ஒன்றன்பகுதி ஒன்றுமென்ப" என்பதனால் உணர்க.

### வாழ்த்து.

அறுசீரடியாசிரியவிருத்தம்

மல்குகவேதவேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குகவளங்களெங்கும் பரவுகவறங்களின்பம்
நல்குகவுயிர்கட்கெல்லாநான்மறைச்சைவமோங்கிப்
புல்குகவுலகமெல்லாம்புரவலன்செங்கோல்வாழ்க.

(இ-ள்) வேதவேள்வி மல்குக - வேதவிதிவழுவாமல் செய்யும் யாகங்கள் குறைவில்லாமல் நிரம்புக, வானம் சுரந்து வழங்குக - (அவற்றால்)மேகங்கருக்கொண்டு காலந்தப்பாமல் மழைபொழிக, எங்கும் வளங்கள் பல்குக - (நீர்ப்பெருமையால்) உலகமெங்கும் பலவளங்களும் பெருகுக, அறங்கள் பரவுக - (அவ்வளங்களால்) தருமங்கள் விருத்தியடைக, உயிர்கட்கு எல்லாம் இன்பம் நல்குக - (அத்தருமங்களால்) எல்லாவுயிர்களுக்கும் இன்பமுண்டாகுக, நான்மறைச் சைவமோங்கி உலகம் எல்லாம் புல்குக - (இப்பேற்றால்) நான்குவேதங்களின் சம்பந்தத்தையுடைய

சைவசமயமானது மற்றைச்சமயங்களுக்கும் அச்சமயநூல்களுக்கும் மேற்பட்டு எல்லாவுலகங்களிலும் நிலைபெறுக, புரவலன் செங்கோல் வாழ்க - (இவை மாறுபடாமல் நடத்தவல்ல) அரசனது செங்கோல் நீடூழிவாழ்க.

ஆளுடையபிள்ளையார்புராணத்தில், "வேள்விநற்பயன்வீழ்புனலாவது" என்னும் உண்மைத்திருவாக்கால் வேள்வியை முதற்கண்வைத்தும், இஃதுக்கூறுங்காரணத்தால், ஒன்றற்கொன்று காரியகாரணங்களாகவரினும் அரசன்செங்கோல் வழுவாதிருக்குமாயின் இவையும் வழுவாவென்பதுதோன்றப் புரவலன் செங்கோல்வாழ்க என்பதை யிறுதிக்கண்வைத்துங்கூறினார். வேதம்-உடலும், சைவாகமம்-உயிருமாதலால், நான்மறைச்சைவமென்றார். சிவப்பிரகாசம். "வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தம்" என்பதனாலுணர்க. வேதமும் சைவமுமெனப்பொருள்கொள்ளின்-நான்மறைசைவமெனப் பாடங்கொள்க. ஆளுடையபிள்ளையார் புராணம். "வேதநெறிதழைத்தோங்க மிகுசைவதுறைவிளங்க" என்றதனாலுணர்க. ஷை தொல்காப்பியம். "அறுவகையானும்" என்றதனால வேள்விமுடித்தற்குக் காரணம் - பஞ்சகவ்விய மாதலால் ஆனினத்தையும், முடிப்போர் அந்தணரும முனிவோருமாதலால் முனிவோரையும் அந்தணரையும், வானமென்றமையால் மழையையும், புரவலன் என்றமையால் முடியுடைவேந்தனையும், செங்கோல் என்றமையால் நிலைபெறுதற்குத் தானமாகிய வுலகினையும், வாழ்த்தியதெனக்கொண்டு பாடாண்டிணையுள் அடக்குக "கடவுளும் முனிவரும பசுவும பார்ப்பாரும அரசரும மழையும் நாடுமென்ப" என்னுஞ்சூத்திரத்தால், சைவம் என்றமையால் கடவுளையும் மறை யென்றதனால் நான்மறையையும் உடன எண்ணினார்.

இவை யொன்றற்கொன்று காரணமாய் நிற்றலால காரணமாலையணி. (௧)

## நூற்பயன்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திங்களணிதிருவாலவாயெம்மண்ணல் றிருவிளையாட்டிவையன்புசெய்துகேட்போர், சங்கநிதிபதுமநிதிச்செல்வமோங்கித் தகைமைதருமகப்பெறுவர்பகையைவெல்வா, மங்கலநன்மணம்பெறுவர்பிணிவந்தெய்தார்-வாழ்நாளுநனிபெறுவர் வாளுடெய்திப், புங்கவராயங்குள்ள போகமூழ்கிப் புண்ணியராய்ச்சிவனடிக்கீழ்நண்ணிவாழவார்.

(இ-ள்.) திங்கள் அணி திருவாலவாய் எம்மண்ணல் திருவிளையாட்டு - (இந்நூல்) சந்திரனையணிந்த திருவாலவாயில் எழுந்தருளிய எமது இறைவனாகிய சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல், இவை அன்புசெய்து கேட்போர்-இந்நூலுட்கூறிய திருவிளையாடல்களை அன்போடு வழிபட்டுக் கேட்பவர், சங்கநிதி பதுமநிதி செல்வமோங்கி தகைமைதரு மகபபெறுவர் பகையைவெல்வர் - சங்கநிதி பதுமநிதியைப்போலும் செல்வத்தால் மிக்குயர்ந்து நல்லொழுக்கமுடைய புத்திரர்களையும் பெறுவார்கள் பகையையும் வெல்வார்கள், மஙகலம நன் மணம் பெறுவர் பிணிவந்து எய்தார் வாழ்நாளும் நனிபெறுவர் - மங்களகரமாகிய நல்ல விவாகங்களையும் பெறுவர் நோயும்வந்தடையப்பெறார் நீடித்த ஆயுளையும் மிகப்பெறுவார்கள் (இவ்வாறு இம்மைப்பயன்களைநுகர்ந்து) வாளுடு எய்தி புங்கவராய் அங்குள்ள போகமூழ்கி புண்ணியராய் சிவன் அடிக்கீழ் நண்ணிவாழ்வார் - (அதன்மேல்) விண்ணுலகிற்சென்று தேவர்களா யங்குள்ள போகாதிகளைநுகர்ந்து சிவபுண்ணியங்களையுடையவர்களாய்ச் சிவபெருமானுடைய திருவடிநீழலிலும் அழியாதுவாழாநிற்பர்.

## சிறப்புப்பாயிரம்.

ஆன்மாக்கள் விரும்பினவற்றை விரும்பினபடியே தந்தருளுஞ் சோமசுந்தரக்கடவுள் தமது திருவருளால் நடித்தருளிய திருவிளையாடலைக்கேட்போர் இம்மை மறுமைப்பயன்களைக் குறைவின்றி நுகர்வாரென்பார், சங்கநிதி பதுமநிதிச் செல்வமோங்கி - புங்கவராயங்குள்ளபோகமுந்தி - எனவும், அவைமுடிந்தபின் அச்சிவபுண்ணிய மிகுதியால் சிவனது திருவடியை அடைவாரென்பார் - சிவனடிக்கீழ் அண்ணிவாழ்வார் - எனவுங்கூறினார்.

திருவிளையாட்டு - இப்பெயர் இந்நூலை யுணர்த்துதற்குத் தானமாகிய நூல்மேனின்றலால்-தானியாகுபெயர். பகைமுதலியவற்றினின்றுகியில் வீரனாதநீஇய எச்சவும்மைகள்தொகுத்தல், சங்கநிதி பதுமநிதி குபேரனுடையசெல்வங்கள், அந்நிதிகள் சங்கவடிவாகவும் தாமரைவடிவாகவும் உள்ளன. செல்வம் மிக்கோங்கி உயர்திணையோடு தொடர்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றுப்பெறுவர் என்னும் வினைமுற்றின் முதனிலையோடு முடிந்தது. வந்து செயவெனெச்சத்திரிபு.

இக்கண்ணி யென்னும் விசேஷணம், கேட்போர் குறையினின்றுநீங்கி இம்மையிற் பெருஞ்செல்வராய் மறுமையினும் அழியாவின்பத்தை நுகர்வாரென்னுங் கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையடையணி. *

சந்திரன் தக்கன சாபத்தால் சோடசகலைகளுள் பதினைந்துகலையிழந்து ஒருகலையையும் இழப்பதன்முன் சரணடையச் சிவபிரானார் கருணைகூர்ந்து அந்தக் கன்சாபந்தொடராமல் அவ்வொருகலையைத் தமது திருமுடியிலணிந்து கலைவளரும்படி அனுக்கிரகஞ்செய்தாரென்பது நூல்வரலாறு.

கந்தபுராணம் - தக்ஷகாண்டம், சந்திரசாபப்படலம் விருத்தம்.

" ஓராகலைவனாதியே நிகடனினிடை
ஆடகிரிப்பிமிலை யங்கையிற்கொளா
வாரகிரிச்சடைமிசை வயங்கச்சோத்தினன்
சாரதிலதிவழிந்தக்கனசாபமே." (உ)

---

## கடவுள் வணக்கம்.

### சிவபெருமான்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வென்றுளேபுலன்களைந்தார்மெய்யுணருள்ளந்தோறுஞ்
சென்றுளேயமுதமூறுந்திருவருள்போற்றியேற்றுக்
குன்றுளேயிருந்துகாட்சிகொடுத்தருள்கோலம்போற்றி
மன்றுளேமாறியாடுமறைச்சிலம்படிகள்போற்றி.

(இ-ள்.) உள்ளே புலன் வென்று களைந்தார் மெய் உணர் உள்ளந்தோறும் சென்று உள்ளே அமுதம் ஊறும் திரு அருள் போற்றி - உட்புலன்கள் ஐந்தையும் வென்று களைந்தவர்களுடைய உண்மையையுணர்ந்த இதயங்கள்தோறுஞ்சென்று அவர்கள் அறிவினுள்ளே பேரின்பமாகிய அமிர்தத்தைப் பொழிகின்ற திருவருளுக்குவந்தனம், குன்று ஏறு உள்ளே இருந்து காட்சி கொடுத்தருள் கோலம்போற்றி - வெள்ளிமலைபோலும் இடபத்தின்கண் ஆரோகணித்துத் தரிசனங்கொடுத்தருளும் திருவருட்கோலத்துக்கு வந்தனம், மன்று உள்ளே மாறி ஆடும் மறைச்சிலம்பு அடிகள் போற்றி - வெள்ளியம்பலத்தின்கண் கான்மாறியாடியருளும் வேதங்களாகிய சிலம்புகளணிந்த திருவடிகளுக்கு வந்தனம்.

கலசம்போற்றி - கவுணியகோத்திரத்தில் தோன்றிய ஆளுடையபிள்ளையாருக்குத் திருஞானப்பால் சுரந்தருளிய பொற்கலசம்போன்ற திருத்தனங்களுக்குவந்தனம், அரும்பும் இளநகைபோற்றி - தோன்றும் திருப்புன்னகைக்குவந்தனம்; ஆரண நூபுரம் சிலம்பும் அடிகள்போற்றி - வேதமாகிய சிலம்புகள் ஒலிக்கின்ற திருவடி களுக்கு வந்தனம்.

சோதி திருவடிகாறும் வணக்கம் கூறினார் ஆன்மாக்கள் உய்யும்பொரு ட்டுப் புறச்சமயங்களொழியவும், சைவசமயம் ஓங்கவும் திருஞானப்பாலூட்டின மையாலும், ஆன்மாக்களின் பிறவிவெப்பொழியப் பேரின்பநிழல் தருதலாலும், ஏனையவுறுப்புகளுக்கு அடைகொடுத்ததுபோலத் திருத்தனத்துக்கும் திருவடிக்கும் அடைகொடாதும், செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களினின்று நீங்காது அவற்றி னிச்சாஞானக்கிரியைகளை மறைத்துநிற்கும் ஆணவமலத்தைப் பாகம்வருத்துதற் பொருட்டுத் திரோதானசத்தியாய்நின்று பாகம்வருத்திச் சிவபெருமான் திருவடி கூடத் திருநோக்களித்தலால் கயற்கண்ணாளுக்கு என்னையெடுத்தாண்ட என ஏனைய டைபோலாத அடைகொடுத்துங்கூறினார். "பாகமாம்வகைநின்றுதிரோதாயிசத்திப ண்ணுதலான்மலமெனவும்பகர்வாரது பரிந்து, நாசமாந்திமதியம்பொதிசடையானடி க்கணணுகுமவகைகருணைமிகநயக்குந்தானே' எனவருஞ்சிவப்பிரகாசத்தால் உணர்க.

போற்றிதொழிற்பெயர். போற்றிய என்னும் வியங்கோள்வினைமுற்று ஈறு கெட்டுப் போற்றி எனநின்று அளகபாரமுதலியவற்றை வந்திக்கின்றேன எனக் கொள்ளினும் ஒன்று. (௬)

## பரசிவம்.

### கலிநிலைத்துறை.

பூவண்ணம்பூவின்மணம்போலமெய்போதவின்ப
மாவண்ணமெய்கொண்டவன்றன்வலியாணைதாங்கி
மூவண்ணறன்சந்நிதிமுத்தொழில்செய்யவாளா
மேவண்ணலன்னான்விளையாட்டின்வினையைவெல்வாம்.

(இ-ள்.) பூவண்ணம் பூவின்மணம்போல - பூவினிறமும் பூவின்வாசமும் அபேதமாய் நிற்றல்போல, மெய் போதம் இன்பம் மெய் ஆவண்ணங்கொண்டவன் தன்வலி ஆணை தாங்கி - உண்மையறிவானந்தங்களே திருமேனியாகும்வண்ணங் கொண்டருளிய சிவபிரான், தனது சத்தியை (நிறங்களை) மேற்கொண்டு, மூவ ண்ணல் தன் சந்நிதி முத்தொழில் செய்ய - பிரமன் திருமால் உருத்திரராகிய திரிமூர்த்திகளும் தன் சந்நிதியில் படைப்புக் காப்புச் சங்காரம் என்னு மூன்றுதொ ழில்களையும் செய்யாநிற்க, வாளாமேவு அண்ணல் அன்னான் விளையாட்டின் வினை யை வெல்வாம் - அசைவற்றிருக்குங்கடவுள், அக்கடவுளுடைய திருவிளையாடல் களால் விடாதுதொடருங் கருமமலத்தைக்களைவாம்.

பூவினிறமும் பூவின்மணமும் பூவையன்றி வேறின்மைபோல உண்மை யறிவானந்தமே சிவபெருமான் திருமேனியன்றி வேறில்லை என்பார் - மெய் போதவின்பமாவண்ண மெய்கொண்டவன் எனவும், ஆன்மாக்களி னிருவினைக் கீடாகப் பிரமன்முதலியமூவரும் படைப்புத் திதி சங்காரமென்னு முத்தொழிலுந் தன் சந்நிதிமாத்திரையிற்செய்ய நிலவுவோன் என்பார். தன்வலியாணைதாங்கி சந்நி திமுத்தொழில்செய்ய எனவும், ஆன்மதத்துவமுதலிய தத்துவங்களையும் அத்தத்து வகத்தாக்களையுங் கடந்துநின்ற பரசிவம் என்பார், வாளாமேவண்ணல் எனவும்,

அசிந்தனாகிய அப்பரசிவத்தை அவன்திருவிளையாடலாற் சிந்திதனைக்கேட்டுச் சிந்தித்தால் கருமமலத்தைக் களைவாம் என்பார். அன்னான்விளையாட்டின் விளைவையெய்துவாம் எனவுங்கூறினார். வலி ஆணை ஒருபொருட்கிளவிகள்.

வேற்றுமைப்பொருள்தோன்றப் பூவின் என விரித்திருத்தலுணராது பூவும் நிறமும் மணமும்போல மெய்யும் போதமும் இன்பமும் திருமேனியாகும்வண்ணங்கொண்டவன் எனப்பொருள்கொள்வாரும் உளர். அங்ஙனங்கொள்ளில் மெய் போதம் இன்பமாகிய இவற்றிற்குத் திருமேனி, ஓர்முதலாகப் பொருளிற்குவந்தாற்போலப் பூவண்ணம் மணம் ஆகிய இவற்றிற்கும் ஓர்முதல்வேண்டும் அவ்வாறு உவமைக்கின்மையேயென்னுங்குற்றமும், பூவண்ணம் மணம் என்றமையாது பூவின் எனல் மிகைபடக்கூறலென்னுங்குற்றமும் போதரும் எனவுணர்க.

வாளா என்னும் இடைச்சொல்-சும்மாவென்னும் பொருணமேனின்றது, படிப்போரையுங் கேட்போரையுந் தனனொடுபடுத்திக்கூறுதலால் வெலதாம் உளப்பாட்டுத் தன்மைப்பனமை வினைமுற்று. சந்தி தனசதிசங்கற்பரூபம். (ரு)

வேறு

அண்டங்களெல்லாமணுவாகவணுக்களெல்லா
மண்டங்களாகப்பெரிதாய்ச்சிறிதாயினுனு
மண்டங்களுள்ளும்புறமபுங்கரியாயினானு
மண்டங்களின்றுணையென்பரறிந்தநல்லோர்.

(இ-ள்.) எல்லாம் அண்டங்கள் அணுவாக பெரிதாயினானும் - (தனனளவை நோக்குமிடத்து) எல்லா அண்டங்களும் அணுவளவாய் நிற்கப்பெரிதானவனும், அணுக்கள் எல்லாம் அண்டங்களாக சிறிதாயினானும் - எல்லா அணுக்களும் அண்டங்களாய் நிற்கச் சிறிதானவனும், அண்டங்கள உளளும் புறமபும் கரியாயினானும்- அண்டங்களின் உள்ளும்புறமபும் உள்ளபொருள்களுககுச் சாக்ஷியாய்நிற்பவனும், அறிந்த நல்லோர் அண்டங்கள் ஈன்றுள் துணையெனபர் - வேதாகமங்களையுணர்ந்த பெரியோர் அவ்வண்டங்களைப்பெற்ற உமையாளுடைய கணவன் என்று கூறுவர்.

சுத்தம் அசுத்தம் மிச்சிரமமாகிய மாயாகாரியமாயுள்ள அண்டத்தொகுதிகளெல்லாம் அணுவாகி மகாசங்காரத்தில முறையே காரணமாயையிலொடுங்க அம்மாயை சிற்சத்தியிலொடுங்கச் சிற்சத்தி தனக்காதாரமாகிய சிவத்திலொடுங்கச் சின்மாத்திரமாய்ச்சேடித்துத் தானே தானாயிருக்கு மவதரத்துப் பெரிதாய்நிற்றலின் பெரிதாயினானும் எனவும், யாது யாணடொழிக்கும் அஃது அதனில் உற்பத்தியாம் மண்ணிற்குடம்போலும எனனும அவினாபாவத்தால் மீளத்தோனறுங்கால் சத்தி சங்கற்பித்தவழிக் காரணமாயையின் காரியப்பாட்டால் அணுககளாயொடுங்கிய அண்டங்களைகளெல்லாம் முனபோல் விரிந்துதோன்றிய அவதரத்து - "தோன்றாத்துணையாயிருந்தான்" என்பதுபோலச் சிறிதாய் நிற்றலின் சிறிதாயினானும் எனவும், முற்று முணர்தற்றன்மையால் அவையிறறின தோற்றக்கேடுகளுக்கெல்லாஞ் சான்றாய் நிற்றலின் அண்டங்கள் உள்ளும் புறம்புங் கரியாயினானும் எனவும், காரியகாரணரூபமான தோற்றக்கேடுகளை அவ்வவ்வியல்பிற் பிறழாமல் பயப்பிக்குஞ் சதுரப்பாடுடைய துணைவியாகிய சிற்சத்திக்கு ஆதாரமாகிய துணைவனாய் நிற்றலின் அண்டங்களீன்றுள் துணை எனவும், பதிபசுபாசங்களை அநிதிநித்தியமென அறுதியிட்டுரைக்கும் பதிநூலாகிய வேதாகமங்களின்றுணிபாகிய அறத்தின்வழியறிந்த அருளுடையார்க்கன்றி அவற்றிற்குமாறாய் முப்பொருட்செய்தியை முரணிக்கூறும் பசுநூல்களின்றுணிபாகிய மறத்தின்வழிபோ மருளுடையார்க்கு உணரக்கூடாதாதலின் அறிந்த நல்லோர் என்பர் எனவுங்கூறினார்.

திருவிசைப்பா. "அண்டமோரணுவாம் பெருமைகொண்டணுவோ ரண்டமாஞ் சிறுமைகொண்டு" என்பதனாலும்.

சிவஞானசித்தியார். "தவந்தருஞானத்தோர்க்கித் தன்மைதான் றெரியுமன்றே" என்பதனாலுமறிக.

பெரிது சிறிது என்பவற்றிற்கு அளவையைத் தோன்று வினைமுதலாகக் கொள்க. அண்டங்களென்பவற்றின் முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். உள்புறம்பு உயிர்கள்மேனிற்றலால் இடவாகுபெயர்கள். துணை பண்பாகுபெயராய்ப் பண்பின் மேல் நின்றது. (௬)

## சொக்கலிங்கமூர்த்தி.

### கலிவிருத்தம்.

பூவினாயகன் பூமகணாயகன்
காவினாயகனாதிக்கடவுளர்க்
காவிநாயகனங்கயற்கண்ணிமா
தேவிநாயகன்சேவடியேத்துவாம்.

(இ-ள்.) பூவின் நாயகன் பூமகள் நாயகன் காவின் நாயகன் ஆதி கடவுளர்க்கு ஆவி நாயகன் - தாமரைமலரில்வசிக்கும் தலைவனாகிய பிரமன் இலக்குமிதேவியின் தலைவனாகிய திருமால் கற்பகச்சோலையின் தலைவனாகிய இந்திரன்முதலிய மற்றைக் கடவுளர்க்கும் உயிர்போலுமுள்ள தலைவனும், அங்கயற்கண்ணிமா தேவி நாயகன் - மீனாக்ஷியம்மையாகிய மாதேவியின் தலைவனுமாயுள்ள சிவபெருமானுடைய, சேவடி ஏத்துவாம் - செவந்த திருவடிகளைத் துதிசெய்வாம்.

தேவிவிளையாட்டுடையவன், பிரமன் முதலிய தேவர்கட்கெல்லாம் சுதந்தரமின்மையுந் தனது சுதந்தரசத்தியாகிய குண்டலிசத்தியின் வழியாய்ப் பிராணனும் நின்ற அக்கரங்களைக்கொண்டு மூர்த்திகளைச் செலுத்துந் தன்மையுந்தோன்ற ஆவி நாயகன் என்றார்.

மா - தேவி, இரண்டும் ஒருசொல்லாதலால் வருமொழிமுதல் இயல்பாய் நின்றது. ஆவிநாயகன் அங்கயற்கண்ணிமா தேவிநாயகன், ஒருபொருண்மேல்வந்த பலப்பெயர்கள். (௭)

## மீனாக்ஷியம்மை.

### வேறு.

பங்கயற்கணரியபரம்பரனுருவேதனக்குரியபடிவமாகி
யிங்கயற்கணகனுலகத்தெண்ணிறந்தசராசரங்களீன்றுந்தாழாக்
கொங்கயற்கண்மலர்க்கூந்தற்குமரிபாண்டியன்மகள்போற்கோலங்கொண்ட
வங்கயற்கண்ணம்மையிருபாதப்போதெப்போதுமகந்துவைப்பாம்.

(இ-ள்.) பங்கயற்கு அண் அரிய பரம்பரன் உருவே தனக்கு உரிய படிவம் ஆகி - பிரமனுக்குங் கிட்டுதற்கரிய சிவபிரானுடைய திருவுருவமே தனக்குரிய திருவுருவமாக, இங்கு அயற்கண் அகன் உலகத்து எண் இறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை அல்கண் மலர் கூந்தல் குமரி-இவ்வுலகத்தையும் அயலிடமாகிய இடம்பரந்த மற்ற விண்ணுலகங்களையும் அளவில்லாத ஆன்மகோடிகளையும் பெற்றருளியுஞ் சரியாத போதானந்தமாகிய தனங்களையும் அந்தகாரம்போன்ற மலரையணிந்த அளகத்தையுமுடைய கன்னியாய், பாண்டியன் மகள் போல் கோலம்

கொண்ட அங்கயற்கண் அம்மை இருபாதம் போது எப்போதும் அகத்துள் வைப்பாம் - மலயத்துவச பாண்டியன் திருமகள்போலத் திருக்கோலங்கொண்டருளிய மீனாக்ஷியம்மையினது இரண்டு திருவடிகளாகிய தாமரை மலர்களை எக்காலத்தும் மனத்திற் கருதுவாம்.

பங்கயன் என்பதன் இறுதியில் தொக்கு நின்ற உம்மை - திருமால்மேனிற் றலால் இறந்தது தழீஇய எச்சம்.

மலயத்துவசபாண்டியன் வேள்வியில் மூன்றுவயது பெண்ணாக வந்தருளினமையால் பாண்டியன் மகள்போற் கோலங்கொண்ட என்றார். பிரபஞ்சங் காரியப்படும்பொருட்டுப் பராசத்திவடிவாய் நிற்றலால் அப்பராசத்தியும் அவனது வடிவா மென்பார். பரம்பரனுருவே தனக்குரிய படிவமாகி எனவும், சிவன் திருவுள்ளத்துக் கேடாகப் பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, திரோதானசத்திகளுமாய், அருவம் உருவம் அருவுருவமுமாய் நின்று, சேதனாசேதனங்களாயுள்ள பிரபஞ்சங்களையீன்றுந் தன்னியல்பு திரியாதிருந்தாளென்பார், உலகத்தெண்ணிறந்த சராசரங்களீன்றுந் தாழாக் கொங்கைக்குமரி எனவுங்கூறினார்.

தேவாரம். "ஒருடம்பினை யீருருவாகவே புனபொருட்டிற மீருருவாகவே" என்பதனாலும். சிவஞானசித்தியார். "சிவன்சத்திதன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன்றும், உவந்திருவரும்புணர்ந்திங் குலகுயிரெல்லாமீன்றும், பவன்பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்" என்பதனாலும், கல்லாடம். "அண்டமீன்றளித்தகன்னி" என்பதனுமறிக.

ஆகி செயவெனெச்சத்திரிபு - இசையெச்சமாய் நின்ற ஆய் என்னும் வினையெச்சங் கொண்ட வென்னும் பெயரெச்சத்தின் முதனிலைகொண்டது, கொங்கையென்பதன் ஐகாரவீறு எழுத்துப்போலியாய்க் கொங்கய் என நின்றது. தொல்காப்பியம் மொழிமரபு. "அகரத்திம்பர் யகரப்புள்ளியும், ஐயெனெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்." என்னுஞ் சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியார் எழுதிய உரையால் உணர்க. அகம் என்னும் உள்ளிடப்பெயர் அங்கிருக்குமனத்தின்மே னிற்றலால் இடவாகுபெயர். (அ)

## சபாபதி.

ஷெ

உண்மையறிவானந்தவுருவாகியெவ்வுயிர்க்கு முயிராய்நீரின்
றண்மையனல்வெம்மையெனத்தனையகலாதிருந்துசராசரங்களீன்ற
பெண்மையுருவாகியதன்னானந்தக்கொடிமகிழ்ச்சிபெருகயார்க்கு
மண்மையதாயம்பலத்துளாடியருள்பேரொளியையகத்துள்வைப்பாம்.

(இ-ள்.) உண்மை அறிவு ஆனந்தம் உருவாகி எவ்வுயிர்க்கும் உயிராய் - சத்துச் சித்து ஆனந்தமே திருமேனியாகக்கொண்டு எல்லாவுயிர்களுக்கும் உயிராய் நின்று, நீரின் தண்மை அனல் வெம்மை என - நீரிற்குளிர்ச்சியும் நெருப்பில் உட்டிணமும் நீங்காதிருத்தல்போல, தன்னை அகலாதிருந்து சராசரங்கள் ஈன்ற பெண்மை உருவாகிய தன் ஆனந்தக் கொடி மகிழ்ச்சி பெருக - தன்னை நீங்காதிருந்து ஆன்மகோடிகளைப்பெற்றருளிய பெண்வடிவமாகிய தன் ஆனந்தக்கொடியென்னுஞ் சிவகாமசுந்தரியம்மைக்கு மகிழ்ச்சி யதிகரிக்க, யார்க்கும் அண்மையதாய் - யாவருக்கும் கிட்டுதற்கெளிதாகி, அம்பலத்துள் ஆடி அருள் பேர் ஒளியை அகத்துள் வைப்பாம் - பொன்னம்பலத்துள் நடனஞ்செய்தருளும் பெரிய ஒளிமயமாயுள்ள நடேசப்பெருமானை மனத்தில் சிந்திப்பாம்.

எவ்வுயிர்க்கும் உயிராய் என்றதனால் ஒருமல மிருமல மும்மலவான்மகளாயுள்ள ஆன்மாக்களுக்கும் என்பார், யார்க்கும் என்றார். அஞ்ஞானி சித்த மலபந்த வான்மாக்களைப்போல ஆக்கக்கேடுகளின்றி நிலைபேறுடைய அஞ்ஞானி சுத்தமுத்தத்தன்மையனும் சிற்றவின் உண்மை எனவும், ஆன்மாக்களிடத்தில் வியஞ்சகமாய் நின்று உணர்த்துமாறுபோல் தனக்கோர் வியஞ்சகம் வேண்டாது விளங்கியும் விளக்குஞ் செய்தும் இயற்கை யுணர்வினனும் சிற்றவின் அறிவெனவும், மலபோதத்தால் ஆன்மாக்கள் மலைவுற்றுச சிற்றறிவால் அனுபவிக்குஞ் சிற்றின்பங்கள்போலாது அன்னோர்க்கு முத்தியின்கண் பேரின்பமளிக்கும் வரம்பி லின்பமுடையனும் சிற்றவின் ஆனந்தமெனவும், இவைகளே தனக்கோர் திருவுருவமாக சிற்றவின் உருவாம் எனவும், அறிகருவியாயுள்ள புத்தி ஆன்மாவையன்றி யறியாவாறுபோல அறியுஞ் சித்தாகிய ஆன்மாவும் முதல்வன் உள்நின்றாய் நின்றுணர்த்த உணர்வதன்றி யுணராமையானும், இயக்க இயக்குவதன்றி இயங்காமையானும் எவ்வுயிர்க்கு முயிராய் எனவும், தன்னையுந் தலைவனையுமறியாது பாசத்தில் தளைப்பட்டிருந்த அவதரத்துக்காட்டிய கலாஞானக்கருத்தறியாது அங்ஙனங்கூடக் கூட்டியமாயைத் தொடர்பால் சார்போதனெனனும் தன்மைவாய்ந்து மேலுங்கீழுமாய் மருண்டு பவக்கடலிற் சுழன்று இளைக்கும் ஆன்மாக்கள் அவ்விளைப்பு நீங்கி முத்திக்கரையேற ஸ்ரீபஞ்சாக்கரத் திருநடனங்காணு மகிழ்வுகூறலில் ஆனந்தக்கொம மகிழ்ச்சிபெருக எனவும், யாவருக்கும் அவ்வைகக்கெட்டாத வொளிப்பிழம்பாம் சிற்றவின் பேரொளியெனவும், முத்திக்கரைசேரும்பொருட்டு ஆடிய ஆனந்தத்தால் விளக்கியருளிய ஸ்ரீபஞ்சாக்கரங்களையும் அவற்றின்பொருளையு முறைப்படி சிந்திக்கவேண்டுதலின் அகத்துள் வைப்பாமெனவுங்கூறினார்.

உண்மைவிளக்கம். "பரையிடமாய்நின்றமிகு பஞ்சாக்கரத்தால், உரையுணர்வுக்கெட்டா வொருவன்-வரைமகடான், காணும்படியே கருணையுருக்கொண்டாடல், பேணுமவர்க்குண்டோ பிறப்பு" என்றதனானுமா.

போற்றிப்பஃறொடை "பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிராங்கவர்கோன், மாமன்னுசோதி மணிமார்பன்-நாமன்னும், வேதம்வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன், நாதாந்த நல்வேதம் - போதத்தால், மாவாவுந்தேடா வளவிறந்தவப்பாலைச், சேமவொளி வெருந் தேறம்வகை - மாமணிசூழ், மன்றுணிறைந்து பிறவியழுக்கறுக்க, நின்றதிருத்த நிலைபோற்றி" என்றதனாலுமுணர்க.

ஆகி ஆய் என வேறுபல வடுக்கிய வினையெச்சங்கள் பெருக வென்னும் வினையெச்சத்தின் முடிபாகிய ஆடி யென்னும் எச்சத்தின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. (க)

## சோமசுந்தரக்கடவுள்.

ஷை

சடைமறைத்துக் கதிர்மகுடந்தரித்து நறுங் கொன்றையந்தார் தணந்து
வேப்பந், தொடைமுடித்து விடநாகக்கலனகற்றி மாணிக்கச்சுடர்ப்பூணேந்தி,
விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமருமகனாகி மீனநோக்கின், மடவாளை
மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ்செய்வாம்.

(இ-ள்) சடைமறைத்து கதிர்மகுடந்தரித்து - சடாமுடியை மறைத்துப் பிரகாசத்தையுடைய இரத்தினகிரீடத்தைத்தரித்து, நறுங்கொன்றையந்தார் தணந்து வேப்பம் தொடை முடித்து - அழகிய நறியமணத்தையுடைய கொன்றை மலர்மா

லையைக்களைந்து வேப்பமலர்மாலையைச்சூடி, விடம் நாகக் கலன் அகற்றி மாணிக்கம் சுடர்ப்பூண் ஏந்தி - விடத்தையுடைய சர்ப்பாபரணத்தைக்கழித்து ஒளியையுடைய இரத்தினாபரணங்களைப்பூண்டு, விடைநிறுத்திக் கயல் எடுத்து - இடபக்கொடியை எடாது மீனக்கொடியையேந்தி, மீனநோக்கின் மடவாலை மணந்து வழுதி மருமகனாகி உலக முழுதும் ஆண்ட சுந்தரனை வணக்கம் செய்வாம் - மீனாக்ஷியம்மையாகிய தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்து மலையத்துவசபாண்டியன் மருமகனாகி உலகமுழுமையும் மநுநூல்வழிநடத்திய சோமசுந்தரக்கடவுளை வணங்குவாம்.

தான்கொண்டருளும் அரசாதிருக்கோலத்துக்கேற்பக் களைய வேண்டுவனவற்றைக் களைந்துகொள்ளவேண்டுவனவற்றைக் கொள்ளவேண்டுதலால், மறைத்து தரித்துத் தணந்து முடித்து அகற்றி ஏந்தி நிறுத்தி எடுத்தென ஒன்றற்கொன்று மறைவினை விதிவினையாகவும், தனக்கெனவோர் முறையிலனாயினும் அம்மைமையத திருமண முடித்தற்கேற்ப வழுதிமருமகனாகி எனவும், வேதநெறியைத்தானே அக்கோலம் புனைந்து நடக்கும் நடத்தியும், செய்தும் செயல்தகும், நிலைபெறச்செய்யானேல் ஒருவரும் அவ்வேதத்தின் பயனுயுள்ள அறத்தினியல்புணர்ந்து அப்புருடார்த்தத்தைப் பெறுவொழிவராதலின் ஆண்ட எனவுங்கூறினார்.

நடக்கும் செய்தும் என்பனவற்றைக் கல்லாடம் "மூன்றுமூன்றமைந்த சிலைநுதற் றிருவினை, யருமறைவிதிக்கத் திருமணம்புணர்ந்து, மதிக்குலம்வாய்த்த மன்னவனாகி, மேதினிபுரக்கும் விதியுடைநன்னா" என்பதனாலுணர்க.

தரித்து முடித்து ஏந்தி எடுத்து மணந்து ஆகி என வேறு பல வடுக்கிய வினையெச்சங்கள் தனித்தனி ஆண்டவென்னும் பெயரெச்சத்துடன் முதனிலையொடு முடிந்தன. சடை மகுட முதலிய கருமப்பொருள்களை வினைமுதல்களாக வைத்துக் கூறினார். "செயப்படுபொருளைச் செய்ததுபோலத், தொழிற்படக்கிளத்தலும் வழக்கினு ளுரித்தே" என்பதனால். இனைத்தெனவறிபொருளில் வந்த முற்றும்மை தொகுத்தல்.'

ஆசிரியவசனங் கூறவேண்டிதலின், கல்லாடம். "கங்கையலைமாற்றி. வேப்பமலர்சூடி, மையவாய்க்காப்புவிட் டணிப்பூணணிந்து, விரிசடைமறைத்து மணிமுடி கவித்து, விடைக்கொடிநிறுத்திக் கயற்கொடியெடுத்து, வழுதியாகி" என்றதனை பொருளுஞ் சொல்லும் இதனுள் அமைத்துக் கூறினார். (க)

## தடாதகைப்பிராட்டியார்.

செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்து செங்கோலோச்சி, முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொளாக் கந்திகணை முனைப்போர் சாய்த்துத், தொழுதகணவற் கணிமணமாலிகைசூட்டித் தனமகுடஞ் சூட்டிச் செல்வந், தழைவுறத்தன் னரசளித்த பெண்ணரசி யடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.

(இ-ள்.) செழியர்பிரான் திருமகளாய் கலைபயின்று முடிபுனைந்து செங்கோல் ஓச்சி உலகமுழுதும் சயங்கொண்டு திறைகொண்டு - பாண்டியர்குலத் தலைவனாகிய மலையத்துவசபாண்டியன் திருமகளாய்த் திருவவதாரஞ்செய்து வேதாகமமுதலிய கலைகளைக் கற்றுணர்ந்து மகுடஞ் சூட்டப்பெற்று மநுநூல்வழிச் செங்கோல் நடத்தி உலகமுழுமையுந் தன்னடிக் கீழ்ப்படுத்தி வேற்றரசரிறுக்குந் திறையைவாங்கி, கந்திகணம் முனைப்போர்சாய்த்து தொழுகணவற்கு அணிமணமாலிகை சூட்டி தன் மகுடம் சூட்டி செல்வம் தழைவுற தன் அரசஅளித்த பெண்ணரசி அடிக்கமலம்

தலைமேல் வைப்பாம் - (திருக்கைலைக்குச்சென்ற) போரிலெதிர்த்த நந்திகணங்களைப் புறங்கண்டு பிரமன்முதலியோர் வணங்கும் தன் கணவனாகிய சிவபெருமானுக்கு அழகிய மணமாலிகையைச் சூட்டித் தனது கிரீடத்தையுஞ் சூட்டிச் செல்வமிக்க தனது அரசியலையுங் கொடுத்தருளிய பெண்ணரசியாகிய தடாதகைப்பிராட்டியாருடைய திருவடித்தாமரைகளைத் தலையின்கண்முடிப்பாம் (வணங்குவாமென்றபடி.)

எட்டுத்திக்கும் தன்வழிப்படுத்தினாள் என்பதுதோன்றத் திறைகொண்டுசாய்த்தெனவும், சத்தி முன்னும சிவம் பின்னுமாகத் தோன்றுமென்னு முறைப்படி அருள்வடிவாகிய சத்தி பாண்டியன் மகளாய்த்தோன்றி அங்ஙனம் பூண்ட அரசுரிமை முதலியவற்றைச் சிவம் வெளிப்படச் சத்தி சிவமாய் நிற்குந் தன்மையும், தனது சங்கற்பத்தாலுண்டாகிய ஆக்கம் யாவும் சிவசங்கற்பமாத்திரையாய் முடியுமென்னும் இயல்புந்தோன்ற, தன் மகுடஞ்சூட்டிச் செல்வந் தழைவுற தன்னரசளித்த பெண்ணரசி எனவுங் கூறினர்.

ஆய் முதலிய வினையெச்சங்கள் ஒன்றனையொன்று கொண்டு அளித்த என்னும் பெயரெச்சத்தின் முதனிலையைக்கொண்டும், அது பெண்ணரசி என்னும் வினைமுதற்பொருளையுங்கொண்டு நிற்றலின யாற்றுநீர்ப் பொருள்கோள். (௧௧)

## கான்மாறியாடினவர்.

பொருமாறிற்கிளர் தடந்தோளொருமாறன் மனங்கிடந்தபுழுக்கமாற
வருமாறிற்கண்ணருவிமாறாது களிப்படையமண்ணும்விண்ணு
முருமாறிப்பவக்கடல்வீழ்ந்துசலெனத்தடுமாறியுழலுமாக்கள்
கருமாறிக்கதிபடையக்கான்மாறிநடித்தவரைக்கருத்துள்வைப்பாம்.

(இ-ள்.) பொரும் ஆறில் கிளர் தடம் தோள் ஒருமாறன் மனம் கிடந்த புழுக்கமாற - போர்செய்யுந்துறையில் கிளர்ச்சியுற்ற பெரிய தோள்களையுடைய ஒப்பில்லாத இராசசேகர பாண்டியனுடைய மனத்தில் நிலைபெற்ற புழுக்கமானது நீங்கவும், வரும் ஆறில் கண் அருவி மாறாது களிப்படைய - பெருக்கெடுக்கும் ஆற்றுவெள்ளம் போலக் கண்கள் தம்மினின்றும் ஆனந்தவெள்ளம் இடைவிடாமற்பெருக்கிக் களிப்படையா நிற்கவும், உசல் என விண்ணும மண்ணும் உருமாறி பவக்கடல் வீழ்ந்து தடுமாறி உழலு மாக்கள் கருமாறி கதியடைய - மேலுங்கீழுமாகப் போவதும் வருவதுமாகிய ஊசலைப்போலச் சொர்க்கமுதலிய பதங்களில் செல்லுதலும் மீட்டு மண்ணுலகில் வருதலுமாகிய அச்சுமாறிப் பிறவிக்கடலில்வீழ்ந்து மனந்தடுமாறிச் சுழலுகின்ற மனிதர்கள் அப்பிறவிக்கடலினின்று நீங்கி மோக்ஷமாகிய கரையை அணையா நிற்கவும், கால் மாறி நடித்தவரை கருத்துள் வைப்பாம் - கால்மாறியாடிய சோமசுந்தரக்கடவுளை இருதயத்தில் கருதுவாம்.

பரதநூன்முறையிற் சென்ற பாண்டியன் கால் தளர்ந்து வேசற்று வருந்தி இவ்வாறே நமது பெருமான் எடுத்த திருவடியும் வேசற்று வருந்துமே என்று மாறாத மனம் புழுங்கினமையால், மனங்கிடந்த புழுக்கமாற எனவும், அப்பாண்டியன் வேண்டுகோளின்படி ஊன்றிய திருவடியை மேலெடுத்தருளினமையால் வருமாறிற் கண்ணருவி மாறாது களிப்படைய எனவும், ஆன்மாக்கள் இதரகிதங்களினால் ஆர்ச்சித்த கன்மங்களுக்கீடாய் மேலுங் கீழுமாய் இன்பதுன்பங்கள் நுகர்ந்து திரிதலால் பவக்கடல்வீழ்ந்து தடுமாறி யுழலுமாக்கள் எனவும், அருளை யெடுத்தக் காலத்துத் திரோதசத்தியாய் ஆன்மாக்களை மீட்கைக்கேதுவாங் காரியந்தோன்ற விடயகோடிகளை ருசிப்பித்து ஊன்றி நிற்றலும், முத்திக்காலத்து அங்ஙனம் ருசிப்

பித்து நின்ற திரோத சத்தி அருள் வடிவாய் முத்தாந்தப் பாதமலர்க்கீழ் வைக்கும் காரணந்தோன்றத் தூக்கி நிற்றலும் உடைமையால் அக்குறிப்புத் தோன்றக் கான் மாறி நடித்தவரெனவுங் கூறினார்.

தேவாரம். "உறுகயிறூசல்போல வொன்றுவிட்டொன்றுபற்றி, மருகயிறூசல்போல வந்துவந்துலவுநெஞ்சம்." எனபதனாலும்.

உண்மைவிளக்கம். "ஊன்றுமலர்ப்பதத்தே யுற்றதிரோதமுத்தி, நான்றமலாப்பதத்தேநாடு" என்பதனாலுமறிக.

உயிரின் றொழில் கண்ணின்மே லேற்றிக் களிப்படைய எனக் காரணத்தின் றொழிலைக் காரியத்தின்மேலேற்றிக் கூறினார். உருமாறி-உயர்திணையோடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபெற்றது. பவக்கடல் என்றமையால் கதியைக் கரையென்றாம். (கஉ)

## தக்ஷிணாமூர்த்தி.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்றகேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்.

(இ-ள்.) கல்லாலின் புடை அமர்ந்து - கல்லாலவிருட்சத்தின் கீழ் எழுந்தருளி, நான் மறை ஆறங்கமுதல் கற்றகேள்வி வல்லார்கள் நால்வருக்கும - நான்குவேதங்களும் ஆறங்கங்களுமுதலாக எல்லாக் கலைகளையும் கற்றுணர்ந்த நூற்கேள்வியில் வல்லவர்களாகிய சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர், என்னும் நான்கு முனிவர்களுக்கும், வாக்கு இறந்த பூரணமாய் மறைக்கு அப்பாலாய் எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை - வாக்குக்கெட்டாத பரிபூரணமாய் வேதங்களுக்கு அப்புறத்ததாய் எல்லாப் பொருளுமாய் அப்பொருள் தானல்லாததுமாய் இருந்த வுண்மைப பொருளை, இருந்தபடி இருந்து காட்டி சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்து பவத் தொடக்கை வெல்வாம் - அது அசைவற இருந்தவண்ணம் தானும் அசைவறவிருந்து சின்முத்திரையாற்காட்டி வாக்காற் சொல்லாமல் குறிப்பாற்சொல்லிய தக்ஷிணாமூர்த்தியைத் தற்போதவழியிற் சிந்தியாமல் திருவருள்வழி நின்று சிந்தித்துச் சனனபந்தத்தை வெல்லுவாம்.

பாசஞானங்களில் வல்லவராய் அணுநிமுத்தரைப்போல முத்தத்தன்மை வாய்ந்த யாமும் பிரமமாவே மென்னு மலவாசனைபற்றி நிகழும் பசுஞானத்தை அவாய் நிற்றலின் கற்ற கேள்விவல்லார்க ணால்வருக்கும் எனவும், வைகரியாதி நால்வித வாக்கின் பகுதியவாகிய வேதமுதல் நாதமீறானவைகளுக்கு அதீதமாய்ச் சுட்டுணர்வுக்கெட்டாது யாங்கணும் பிரிவின்றிச் சமவேதமாய் நிறைந்து நிற்றலின் வாக்கிறந்த பூரணமாய் எனவும், அங்ஙனம் வாக்கிறந்த பூரணமாய் விளங்கும் பதிப்பொருளை ஏனைய ஞானங்களினாலல்லாமல் பதிஞானத்தால் ஆகமத்தைக்கொண்டறிய வேண்டி யிருத்தலின் மறைக்கப்பாலாய் எனவும், உடலும் உயிரும் போலவும் பாலும் நீரும்போலவும் பரிதியு மதியும்போலவும் உலகத்தோடு வேற்றுமையின்றிக் கலப்பால் ஒன்றாய் நிற்றலின் எல்லாமாய் எனவும், உயிரும் பாலும் பரிதியும் ஒன்றாகாது பொருட்டன்மையால் வேறாய் நிற்றலின் அல்லவுமாய் எனவும், குணமுங் குணியும்போல் உடனாய்நிற்குஞ் சயஞ் சித்தா யிருத்தலின் இருந்ததனை எனவும், சுட்டிறந்தறியும் அவாறிவின்கண் நீங்காது நிலைபெற்றுச் சோதிக்குட் சோதியாய்

விளங்கிநிற்றலின் இருந்தபடி எனவும், அரசன் மந்திரி முதலானவர்கட்குக் காரியப் பாட்டைக் கைச்செயலாற்காட்டி யுணர்த்துமாறுபோலத் தானும் அசைவற விருந்து ஆகமத்துணிபா முப்பொருட்செய்தியைச் சின்முத்திரையாற் காட்டியுணர்த்தினமை யின் இருந்துகாட்டி எனவும், நான்முகத்தானன்றித் தானருளாலுணர்த்தினமையின் சொல்லாமற் சொன்னவவை எனவும், அப்பெற்றித்தாகிய உபதேசப்பொருள் ஒற்றுமைப்பட்டு நின்றுணராதுணரும் அனுபவஞானமாத்திரைக்கே விளங்கித் தோசரிப்ப துண்மையின் வினையாமணிவிளைந்து எனவுங் கூறினர்.

வேதமுதல் நாதரீறானவற்றைப் பாசஞானமென்றதும் நான் பிரமமென்ற தைப் பசுஞானமென்றதும் பதிஞானம் இத்தன்மையதென்பதும்.

சிவஞானசித்தியார் "வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விரும்பசபை வைகரியாதிகதிறங்கண்மேலா, நாதமுடிவானவெலாம் பாசஞான நணுகியான்மாவி வைகீழ்நாடாமல், காதலினானான்பிரமமென்றுநானெனக் கருதுபசுஞானம்" என்ப தனாலும், "பரஞானத்தாற்பரத்தைத் தரிசித்தார் பரமேபார்த்திருப்பர்" என்பதனாலும் எல்லாமாய் அல்லதுமாய் என்றதை - தேவாரம், "பற்றுமாகி வானுளோர்க்குப்பல் கதிரோன்மதிபார், எற்றுநீர்தீக்காலுமேலை விண்ணியமானனொடு, மற்றுமாதோர்பல் லுயிராய் மாலயனுமறைகள், முற்றுமாகி வேறுமானான் மேயதுமுதுகுன்றே" என்பதனாலும், குணமுங் குணியுமேபோல உடனாய நிற்குஞ் சிவமென்றது - திருவா சகம், "அதுபழச்சுவையென வமுதென வறிதற் கரிதென வெளிதென வமரருமறியார், இதுவவன்றிருவுரு" என்பதனாலும், திருக்களிற்றுப்படியார், "உடலுயிருக் குருவு டைமையென்றால், உடனே யிருக்கின்றான் காண்" என்பதனாலும், சுட்டிறந்தறிவும் அவரறிவின்கண்விளங்கிநிற்குமென்றது, மெய் "அன்றிவரு மைம்புலனு நீயுமசையாதே, நின்றபடியே நிற்க முன்னிற்குஞ் - சென்று, கருதுவதனமுன்னங் கருத்தழியப் பாயும், ஒருவடிவன் கேவலனுக்கு" என்பதனாலும், அசைவறவிருந்து சின்முத்தி ரையாற் காட்டியதென்றது, தாயுமானசுவாமிபாடல் "கல்லாலி னிழற்றனி லொரு நால்வர்க்குங் கடவுணீயுணர்த்தியதுங் கைக்காட்டென்றால், சொல்லாலே சொலப் படுமோ" என்பதனாலும், நான்முகத்தானன்றி அருளாலுணர்த்தினென்றது - விறெவெண்பா, "அருளாலுணர்வார்க்கலாத மெய்மை - பொருளாகி" என்பதனா லும், ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அனுபவஞானமாத்திரைக்கே கோசரிக்குமென் றது. திருக்களிற்றுப்படியார், "உள்ளமுதலனைத்து மொன்றவுருகவரின், உள்ள முருகவருந் தன்னுடனும்" என்பதனாலுமுணர்க.

முதல் என்னும் பண்படியாகவந்த வினைப்பகுதி வினையெச்சப் பொருளில் வந்ததா லீறுதிரிந்தது. (௧௫)

## சித்திவிநாயகர்.

உள்ளமெனுங்கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதியாகத்
தள்ளரிய வன்பெனுந் தொடரிப்பூட்டிப் பிடித்துப்பந்தத் தறுகட்பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணையெனுமு
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவருவினைகடீர்ப்பாம்.

(இ-ள்.) உளமம் என்னும் கூடத்தில், ஊக்கம் என்னும் தறி நிறுவி தன் அரிய அன்பு என்னும் தொடர் உறுதியாகப்பூட்டி இடைப்படுத்தி - எமது மனமென் னுங் கூடத்தில் மனவுறுதி யென்னுங் கட்டுத்தறியைநாட்டி ஒழித்தற்கரிய அன் பென்னுஞ் சங்கிலி நிலைபெற அத்தறியினிடத்துப்பூட்டி அதனிடத்து அகப்படுத்தி, தறுகண் பாசம் கள்ளவினை பசுபோதம் கவளம்இட களித்து உண்டு (உண்மையை மறைத்தலில்) அஞ்சுதலில்லாத ஆணவமலத்தோடொன்றாகிய வஞ்ச வினைகளையு

டைய சிவபோதமாகிய கவளங்களை அருத்த அவற்றைக் களிகூர்ந்தருந்தி, கருணை என்னும் வெள்ளமதம்பொழி சித்திவேழத்தை நினைந்து வருவினைகள் தீர்ப்பாம் - கிருபையென்னும் மதவெள்ளத்தைப் பொழிகின்ற யானையாகிய சித்திவிநாயகக் கடவுளைச் சிந்தித்து வரும் வினைகளை யொழிப்பாம்.

ஆன்மாவினது இருதிறனும் அறிவுள் ஒருப்பட்டுதற்குரிய சத்தின் வழி நிகழும் அறிவே மனமாய் நிற்றலால், உள்ளமெனுங்கூடத்தில் எனவும், அவ்வறிவாகிய மனத்தால் சாதனதாற் சாதிக்கப்பெறவே மென்றெழுந்த வெழுச்சியே வைக்கமாதலால் வைக்கமெனுந்தறிநிறவி எனவும், பசுபுண்ணியத்தால் சுவர்க்காதியிற் சென்றோனை அவ்வொழிவில் கீழ்ச்செலுத்துந் தான யாகாதிகளில் வைத்த அன்புபோலன்றி மேன்மேன்முறுகி வளர்வனவாய சரியை கிரியா யோகங்களில் வைத்த அன்பென்னுஞ் சங்கிலியை அம்மனவெழுச்சி தளராமைப் பொருட்டு அதன்கட்பூட்டவேண்டுதலால், உறுதியாகத் தன்னரிய அன்பென்னுந் தொடர்பூட்டி 'எனவும், அவ்வன்பின் முதிர்ச்சியிற் றலைவன் றலைப்படுவனாதலால் இடைப்படுததி எனவும், கல்லெறிந்த வழிநீங்கி, அது விடும்வழிப் பரக்கும் நீரப்பாசிபோல ஆன்மா அரன்றிருவடியை யுற்ற வழி நீங்கினவாகிய மலமாயாகன்மங்கள் ஓரோவழி வாசனை பலத்தால் அஞ்சாது மீளவரின் ஆன்மபோத நிகழுமாதலின் அதனை உபாய நிட்டைகளால் அவ்வாதனையைத் திருவருளில் நடுக்கவேண்டுதலால் தறுகட்பாசக கள்ளவினை! பசுபோதக் கவளமிட எனவும், அந்நிலைக்கண் பசுகரணங்கெட்டுச் சிவகரணமா யிங்ஙன மாறேனென்னும் பெருமிதமகிழ்ச்சியும் இறந்து நின்றிட இவன்றானேயாய் நிற்கக் கூட்டி மகிழ்ந்து நுகருதலால் களித்துண்டு எனவும், அங்ஙனம் ஆயவழிச் சுவானுபூதிகமாகிய தனது ஆனந்தப் பெருக்காங் கிருபாவெள்ளத்தைப் பொழிதலால் கருணையென்னும் வெள்ளமதம் பொழிசித்தி வேழம் எனவுங் கூறினார்.

பசுபுண்ணியத்தில் நிகழும் அன்பு கீழ்ச்செலுத்துமென்றதும், சிவபுண்ணியத்தில் நிகழும் அன்பு மேன்மேன் முறுகிவளருமென்றதும்.

சிவஞானசித்தியார். "தான மியாகந் தீர்த்த மாச்சிரமந் தவங்கள் சாந்தி விரதங் கன்மயோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவில் மீள்வரீச னியோகக்கிரியா சரியையினின் முடன்றோர், ஈனமிலா முதஇபதம் பெற்று" என்பதனாலும், அன்பிற் றலைப்படுவனென்றது. திருவாசகம், "பத்திவலையிற் படுவோன் காண்க" என்பதனாலும், ஆன்மா அரன்றிருவடியை யுற்றவழி மலமாயா கன்மங்கள் நீங்குமென்றதும், ஓரோவழி வாசனாபலத்தான் வருமென்றதும், அதனை உபாயநிட்டைகளால் நீக்கலாமென்றதும், சிவஞானசித்தியார், "பாசிபடு குட்டத்திற் கல்லினை விட்டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுதுபரக்கு, மாசுபடு மலமாயை யருங்கன்மமனைத்து மானடியை புணரும்போ தகலும்பின்னணையும், நேசமொடுந்திருவடிக்கீழ் நீங்காதேதூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையிதுவேயாகும்" என்பதனாலும், இங்ஙன மாறேனென்னும் பெருமிதமகிழ்ச்சியும் இறந்துநின்றிட இவன்றானேயாய் நிற்கக்கூட்டுமென்றது, திருக்களிற்றுப்படியார், "பற்றினுட் பற்றைத் துடைப்பதொருபற்றறிந்து, பற்றிப்பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனைப், பற்றுவிடிலந்நிலையே தானேபராமாகு, மற்றமிகுசொன்னேனறி" என்பதனாலுமுணர்க.

இட்டு என்னும் நிகழ்கால வினையெச்சம், உண்டென்னும் பிறவினைமுதல் வினையெச்சத்தின் முதனிலைகொண்டது. இடுதலும் உண்ணுதலும் முன்பின் இன்றி ஒரேகாலத்து நிகழ்தலால் நிகழ்காலமென்றது.

பலபொருள்களும் தம்முள் இயைபுடையன வாகவைத்து உருவகஞ்செய்தமையால் இயைபுருவகவணி. (௧௯)

## சுப்பிரமணியர்.

கறங்குதிரைக்கருங்கடலுங்காரவுணப்பெருங்கடலுங்கலங்கக்கார்வந்
துறங்குசிகைப்பொருப்புஞ்சூருரப்பொருப்பும்பிளப்பமறையுணர்ந்தோ
மறங்குலவுமகத்தழலுமவுணமடவார்வயிற்றினழலுமூள [ராற்று
மறங்குலவுவேலெடுத்தகுமரவேள்சேவடிகள்வணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) கறங்குதிரை கரும் கடலும் கார் அவுணப் பெரும் கடலும் கலங்க - ஒலிக்கின்ற அலைகளையுடைய கரியகடலுங் கரிய நிறத்தையுடைய அசுரராகிய பெரியகடலுங் கலங்காநிற்கவும், கார்வந்து உறங்கு சிகைப்பொருப்பும் சூர் உரப் பொருப்பும் பிளப்ப - மேகம்வந்து துயிலுஞ் சிகரத்தையுடைய கிரவுஞ்சமலையுஞ் சூரனுடைய மார்பமாகிய மலையும் பிளவுபடாநிற்கவும், மறை உணர்ந்தோர் ஆற்றும் அறங்குலவு மகத்தழலும் அவுண மடவார் வயிற்றின் அழலும் மூள - வேதங்களையுணர்ந்த வந்தணர்செய்யுந் தருமவடிவாகிய யாகாக்கினியும் அசுரமகளிருடைய வயிற்றில் நடுக்கமாகிய தீயுங் கொழுந்துவிட்டெரியாநிற்கவும், மறம் குலவு வேல் எடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கம் செய்வாம் - கொலைத்தொழில் விளங்கும் வேலைத் திருக்கரத்தில் எடுத்தருளிய முருகக்கடவுளுடைய செவந்த திருவடிகளை வணங்குவாம்.

அளத்தற்கரிய கடலும் மலையும் நெருப்பும் தத்தமக்குரிய நெகிழ்ச்சிமுதலிய குணங்கள்தோன்ற, கலங்கப் பிளப்ப மூள எனவும், வேல் சத்திவடிவாதலால் கடற்சார்பு மலையுந் தான் தோன்றுதற்குரிய விடங்களென வொற்றுமைநோக்கிக் கண்ணோடாது நிலைகலங்கவும் பிளவுபடவுஞ் செய்தமையால், மறங்குலவுவேல் எனவுங் கூறினர்.

ஓர் நெய்தனிலததலைவன் தவப்பயனால் அவன்திருமகளாய்க் கடற்சார்பில் அவதரித்தருளினமை இப்புராணத்தில் பின்னர்க்காண்க.

கலங்க பிளப்ப மூள வென்னுங் காரியப்பொருளில்வந்த வினையெச்சங்கள் எடுத்தவென்னும் பெயரெச்சத்தின் முதனிலையோடு தனித்தனிமுடிந்தன. அவுணப் பெருங்கடல் அவுணமடவார் குமரவேள் என்பன உயர்திணையில்வந்ததால் நிலைமொழி யீறுகெட்டுநின்றன. (கரு)

## நாமகள்.

பழுதகன்றநால்வகைச்சொன்மலரெடுத்துப்பத்திபடப்பரப்பித்திக்கு
முழுதகன்றுமணந்துசுவையொழுகியணிபெறமுக்கண்மூர்த்திதாளிற்
றொழுதகன்றவன்பெனுநார்தொடுத்தலங்கல்சூட்டவரிச்சுரும்புநதேனுங்
கொழுதகன்றவெண்டோட்டுமுண்டகத்தாளடிமுடிமேற் கொண்டுவாழ்வாம்.

(இ-ள்.) பழுது அகன்ற நால்வகைச்சொல் மலர் எடுத்து பத்திபடப் பரப்பி - குற்றத்தினின்று நீங்கிய பெயர்வினை யிடை யுரியென்னும் நால்வகைச் சொற்களாகிய நால்வகை மலர்களையும் எடுத்துப் பத்தியுண்டாகப்பரப்பி, திக்குமுழுதும் அகன்று மணந்து சுவை ஒழுகி அணிபெற அகன்ற அன்பென்னும் நார்தொடுத்த அலங்கல் - எட்டுத்திக்கிலுஞ்சென்று மணம்வீசி மதுரமொழுகி அலங்காரம் பெறப் பரந்த அன்பாகிய நாரால்தொடுத்தமைத்த மாலையை, முக்கண் மூர்த்தி தாளில் தொழுது சூட்ட - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான் திருவடியில் வணங்கிச்

சூட்ட, வரிச்சுரும்பும் தேனும் மொழுது அகன்ற வெண் தோட்டு முண்டகத்தாள் அடி முடி மேல் கொண்டு வாழ்வாம் - வரிகளையுடைய ஆண்வண்டும் பெண்வண்டும் குடைதலால் அலர்ந்த வெள்ளிய விதழ்களையுடைய தாமரையில் வசிக்கும் நாமகளது திருவடிகளை எமது தலைமேற்சூடி வாழாநிற்பாம்.

மாலைதொடுப்போன் நால்வகை மலர்களையும் எடுத்து வரிசைபடப் பரப்பி அலங்காரம்பெற நாராற்றொடுத்தமைக்க வேண்டுதலாலும், கவிதொடுப்போன் பெயர் முதலிய நால்வகைச் சொற்களையும் எடுத்துக் கற்போர்க் கின்புண்டாகப் பரப்பிப் பொருளணி சொல்லணிபெற அன்பாற்றொடுத்தமைக்க வேண்டுதலாலும், நால்வகைச்சொல் மலரெடுத்துப் பத்திபடப்பரப்பி அணிபெற அன்பெனு நார்தொடுத்த எனவும், மாலை திக்கெங்கும்பரந்து மணம்வீசித் தேனொழுக்குதலாலும், கவி திக்கெங்கும்பரந்து புகழ்பரப்பி வீரமுதலிய வெண்சுவையை யொழுக்குதலாலும் திக்குமுழுதகன்று மணந்து சுவையொழுகி எனவுங் கூறினர்.

நால்வகைச்சொற்களை, நால்வகை மலர்களாகவும், அன்பே நாராகவு முருவகஞ்செய்து உருபுதொக்கும் விரிந்தும் வரக்கூறினமையால் தொகைவிரி யுருவகவணி. எடுத்துப் பத்திபடப்பரப்பி மணந்து 'சுவையொழுகி யணிபெறத்தொடுத்த. இது செம்மொழிச் சிலேடையணி.

குற்றமாவன புழுக்கடி முதலியனவும், இணைவழுமுதலியனவுமாம். நால்வகைமலராவன கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ. வீரமுதலிய வெண்சுவைகளாவன வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை. நால்வகைச்சொல் மலரென்பத னிறுதியில் இனைத்தென வறிபொருளில்வந்த முற்றும்மையும், முழுது என்பத னிறுதியில் முற்றும்மையுந்தொக்கன. தொடுத்த என்னும் பெயரெச்சத்தின் அகரவீறு தொக்குநின்றது. அலங்கல்சூட்ட என்பதற் கேற்ப மேற்கொண்டென்பதற்குச் சூடியென்றாம். (கஅ)

## நந்திதேவர்.

### வேறு.

வந்திறையடியிற்றாழும்வானவர்மகுடகோடி
பந்தியின்மணிகள்சிந்தவேத்திரப்படையாற்றாக்கி
அந்தியும்பகலுந்தொண்டரலகிடுங்குப்பையாக்கு
நந்தியெம்பெருமான்பாதநகைமலர்முடிமேல்வைப்பாம்.

(இ-ள்.) வந்து இறை அடியில் தாழும் வானவர் மகுட கோடி பந்தியின் மணிகள் சிந்த - (கைலையின்கண்) வந்து சிவபெருமான் திருவடியை வணங்குந் திருமால் முதலிய தேவர்கள் (நெருங்காதவண்ணம் அவரது) கிரீட வுறுப்புகளின் வரிசையினின்று இரத்தினங்கள் சிதறுங்க, வேத்திரப்படையால் தாக்கி அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பை ஆக்கும் எமபெருமான் நந்தி நகை பாதமலர் முடிமேல் வைப்பாம் - பிரம்பாகிய கருவியால் அடித்து மாலைப்பொழுதிலும் பகற்பொழுதிலும அடியார் திருவலகிடுங் குப்பையாகச்செய்யும் எமது பெருமானாகிய நந்திதேவருடைய விளங்குகின்ற திருவடித்தாமரைகளைச் சிரத்திற் சூடுவோம்.

நமது குருமரபுக்கெல்லா முதற் குருவாதலின் அடியார்களுக்குப் பொய்ப்போக வாழ்வனைத்தும் பொய்யென்றுகாட்டி யகற்றி மெய்ப்போக வீடுதவி அவ்வீடு பெற்றுழியும் பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையா மென்பது தோன்ற விளக்கி நிற்பவராதலின், தொண்ட ரலகிடுங் குப்பையாக்கு நந்தியெம் பெருமான் என்று கூறினர்.

மகுடகோடி கோடிபங்தி வடசொற் றொடர்களாதலின், வருமொழி வல்லெழுத்துக வியல்பாய் நின்றன. இன்னுருபு நீக்கற்பொருட்டு. அலகிடு மென்னும் பெயரெச்சம் குப்பையென்னுங் கருவிப்பொருள் கொண்டது.

இவரது பெருமை மிகுதிதோன்ற வானவர் மகுடகோடி பங்தியின் மணிகள் சிந்த வேத்திரப்பிடையாற்றுக்கி எனவும், செல்வ மிகுதிதோன்ற அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பையாக்கும் எனவுங் கூறுதலால் வீறுகோளணி. (கஎ)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

கடியவிழ்கடுக்கைவேணித்தாதைபோற்கனற்கண்மீனக்
கொடியனைவெவநோக்கிக்குறைபிரந்தனையான்கற்பிற்
பிடியனநடையாள்வேண்டப்பின்னுயிரளித்துக்காத்த
முடியணிமாடக்காழிமுனிவனைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) கடியவிழ் கடுக்கை வேணி தாதைபோல் - வாசனையொடு மலர்ந்த கொன்றைமலர் மாலையை யணிந்த சடாமுடியையுடைய தந்தையாராகிய சிவபெருமானாரது செயலைப்போல, கனற்கண் மீனக் கொடியனை வெவநோக்கி - (அனற்கண்ணால் மீனக்கொடியனாகிய மன்மதனை யெரியும்படி பார்த்தருளி) தாமெழுந்தருளியிருந்த திருமடத்தில் சமணர்களிட்ட வெந்தீயின்றியினர் கயற்கொடியையுடைய பாண்டியனைச் சுரநோயாய் வருத்தச்செய்யத் திருக்கண்சாத்தியருளி, பின் அவ்யான் கற்பில் பிடியன நடையாள் வேண்ட உயிரளித்துக் காத்த - (பின்பு அம்மன்மதனது மனைவியாகிய கற்பினையுடைய பெண்யானையின் நடையையொத்த நடையினையுடைய இரதிதேவி முறையிட்டு வேண்ட அம்மன்மதனுக்கு உயிர்கொடுத்துக் காத்தருளிய) பின்பு அப்பாண்டியனது மனைவியாகிய கற்பினையுடைய பெட்டையானையி னடையையொத்த நடையினையுடைய பாண்டிமாதேவியார் குறையிரப்பத் திருவுளமிரங்கித் திருநீற்றால் அவன் வெப்புநோயைத் தவிர்த்து உயிர்கொடுத்துக் காத்தருளிய, முடியணி மாடக்காழி முனிவனை வணக்கஞ் செய்வாம் - சிகரங்களையுடைய மாடங்கள் நெருங்கிய சீகாழியில் அவதரித்தருளிய ஆளுடைய பிள்ளையாரை வணங்குவாம்.

"மகனறிவு தந்தையறிவு" என்றமைக்கேற்பச் சிவபெருமானுந் தன்பொருட்டன்றி அடியார்பொருட்டுத் தான்யோகிருப்ப அதற்கு மாறாகப் பிறப்பிறப்பிற் கேதுவாம் போகத்தைப் புரியுமாறு இடையூறு தீங்குசெய்யப்புகுந்த மன்மதனைக் காய்ந்ததுபோல், மௌனசீலத்தையுடைய சிவகுமாரராகிய காழிநாதனும் உயிர்கள் மாட்டிரங்கிச் சிவநெறிச்செல்வம் வளர்ந்தோங்குமாறு எழுந்தருளிவந்த சிறப்புணராது சமணர்கூற்றுக் குடன்பட்டு அன்னோரைத் தீங்குசெய்யப்புகுவித்த பாண்டியனைத் தன்பொருட்டன்றி அடியார்பொருட்டு வெப்புநோய்கொளுவினமையால், கடியவிழ்கடுக்கைவேணித் தாதைபோல்கனற்கண்மீனக் கொடியனைவெவநோக்கி எனவும், சிவபெருமான் சரணடைந்தாரைக் காப்பதுபோல், பிள்ளையாருங் காத்தமையால், பின்னுயிரளித்துக் காத்த எனவுங் கூறினார்.

முனிவன், மௌனநிலையை யுடையவனென்னும் வடசொற்றிரிபு. சினைவினை முதன்மேலேற்றிக் கடியவிழ்கடுக்கையென்றார். நோக்கி என்னும் வினையெச்சம் அளித்தென்னும் வினையெச்சத்தின் முதனிலையையும், அவ்வெச்சம் காத்த என்னும் பெயரெச்சத்தின் முதனிலையையும், அப்பெயரெச்சம் முனிவன் என்னும் வினைமுதற் பொருளையு முறையேகொண்டன.

தமது தந்தையாரைப்போலத் தாமுஞ் செய்தருளினமையின் அவரோ டொப்பத் தோன்ற நிற்றலின் உவமவுருவகவணி.

யாதுகுறைசெய்து பின்னர்ச் சரணடையினும் அக்குறைகளை நோக்காது அருளுவரென்னுங் குறிப்போடுகூடிய விசேஷணங்களை யெடுத்துக்கூறி வணக்கஞ் செய்வாமென்றது, கருத்துடை யடையணி. பின் வருவனவற்றிற்கும் இவ்வணி கொள்க. (கஅ)

## திருநாவுக்கரசுநாயனார்.

அறப்பெருஞ்செல்விபாகத்தண்ணலஞ்செழுத்தாலஞ்சா
மறப்பெருஞ்செய்கைமாறுவஞ்சகரிட்டநீல
நிறப்பெருங்கடலும்யார்க்குநீந்துதற்கரியவேழு
பிறப்பெனுங்கடலுநீந்தபிரானடிவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) அறப்பெரும் செல்விபாகத்து அண்ணல் ஐந்தெழுத்தால் - முப்பத் திரண்டறங்களையும் வளர்த்த பெருஞ்செல்வியாகிய உமாதேவியாரை இடப்பாகத் தில் வைத்தருளிய சிவபிரானது ஸ்ரீபஞ்சாக்ஷரப்புணையால், அஞ்சா மறப்பெரும் செய்கைமாறு வஞ்சகர் இட்ட நீல நிறப் பெரும் கடலும் - தீச்செயல்களுக்கு அஞ் சாத பெரியபாவச் செயல்களினின்று மாறாத சமணர்கள் கல்லொடு பிணித்துவிட்ட கரிய நிறத்தையுடைய பெரியகடலையும், யார்க்கும் நீந்துதற்கு அரிய ஏழுபிறப்பு எனும் கடலும் நீந்தபிரான் அடி வணக்கம் செய்வாம் - யாவர்க்கும் கடத்தற்கரிய வெழுபிறப்பாகிய கடலையும் எளிதிற் கடந்த ஆளுடைய அரசுகளுடைய திருவடி களை வணங்குவாம்.

சிவபிரானருளிய இருநாழி நெல்லைக்கொண்டு முப்பத்திரண்டு தருமங்களை யும் வளர்த்தருளினமையால், அறப்பெருஞ்செல்வி எனவும், எல்லாப்பொருள்களோ டொன்றாகியும் வேறாகியும் உடனாகியும் நிற்கும் பரசிவத்தை அப்பொருள்களாகிய இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளும் பேதித்து வாதியாவாறுபோல, அச்சிவ னுருவாய் ஸ்ரீபஞ்சாக்ஷரத் தியானத்தால் அகத்திலெய்தும் சோகம்பாவனையும் அதற்கியலப் புறத்தமைந்த அன்புருவாந் திருவேடமும் உள்ளும் புறம்பும் பற்றற்ற செயலும் என்றும் விருப்பு வெறுப்பிற்படாத தன்மையும் இடையறாதவானந்தமும் வாய்ந்துநிற்கும் இவ்வாளுடை யாரைப் பேதித்து அவை வாதியா வாகலான், அஞ் செழுத்தால் நீந்தபிரான் எனவும் கூறினார்.

யார்க்கும் என்பதனிறுதியினின்ற முற்றும்மையால் பிரமன்முதலிய உயிர்த் தொகைகளைக்கொள்க. அஞ்சாமாறு வேறு பலவடுத்திய ஈறு தொக்க எதிர்மறைப் பெயரெச்சங்கள் தனித்தனி வஞ்சகர் என்னும் வினைமுதற் பொருளைக்கொண்டன.

பிறப்பைக் கடலென வுருவகஞ்செய்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைப் புணையாக வுரு வகஞ் செய்யாமையால் ஏகதேச வுருவகவணி. (கக)

## சுந்தரமூர்த்திநாயனார்.

அரவகலல்குலார்பாலாசைநீத்தவர்க்கேவீடு
தருவமென்றளவில்வேதஞ்சாற்றியதலைவன்றன்னைப்
பரவைதன்புலவிதீர்ப்பான்கழுதுகண்படுக்கும்பாது
விரவினிற்றூதுகொண்டோனிணையடிமுடிமேல்வைப்பாம்.

(இ-ள்.) அரவு அகல் அல்குலார்பால் ஆசைநீத்தவர்க்கு ஏ வீடுதருவம் என்ற அளவில்வேதம் சாற்றிய தலைவன் தனை - பாம்பின்படம்போலும் அகன்ற அல்குலை யுடைய பெண்களிடத்து இச்சையொழித்தவர்களுக்கே மோட்சானந்தம் தரு வோமென்ற அளத்தற்கரிய வேதத்தைக் கூறியருளிய தேவநாயகனை, பாவைதன் புலவி தீர்ப்பான் கழுது கண்படுக்கும் பால் நாள் இரவினில் தூதுகொண்டோன் இணையடி முடிமேல் வைப்பாம் - பரவையாருடைய ஊடலைத் தவிர்க்கப் பேயும் உறங்கும் அர்த்தராத்திரியில் தூதுகொண்டருளிய ஆளுடைய நம்பிகளது இரண்டு திருவடித்தாமரைகளையும் எமது சிரத்தில் தரிப்பாம்.

இச்சையை விடுதலே வீடாதலின் அதனை யுடையோர்க்கே வீடு தருதலு ண்மையாதலின் தேற்றேகாரந் தந்ததென்பார், ஆசை நீத்தவர்க்கே வீடுதருவமென வும், அதுவே வேதத்தின்பொருளாமென்பார், அளவில்வேதஞ் சாற்றிய எனவும், அவ்வாறுகூறினோன் பரமயோகியென்பார், தலைவன் எனவும், அந்தப் பரமயோகி யைத் தன்னேவல்வழி நிறுத்துவோன் அளத்தற்கரிய பேரன்பினனென்பார், கழுது கண்படுக்கும் பானாளிரவினிற் றூதுகொண்டோன் எனவுங்கூறினார். ஆசைநீத்தவர்க்கே வீடுதருவமென்ற விதித்த அரனை அவராசைக்குரிய அரிவைமாட்டுத் தூதாகச் செல விடுத்த அன்பின்றிறமும் அவ்வன்பாளர் புலன்வழி நுகரும் பொருளுமாய் அவ்வா னின்ற தன்மையும் இதனாற் கூறப்பட்டன.

அன்பின்றிறம் சிவஞானசித்தியார். “தேசமிடங்காலந்திக் காசனங்களின்றிச் செய்வதொன்றுபோற் செய்யாச செயலதனைச் செய்தல், கூசல்படு மனமின்றி யுலாவ னிற்ற லுறக்க முணாவுண்டி பட்டினி யிருத்தலிடத்தன், மாசதனிற் றூய்மை யினில் வறுமைவாழ்வில் வருத்தத்திற் றிருத்தத்தின மைதனத்திற்சினத்தி, லாசை யினில் விருப்பிலிவையல்லாதுமெல்லா மடைந்தாலு ஞானிகடா மானடியை யகலார்” என்பதனாலும்,

புலன்வழிநுகரும் பொருளா யானின்ற தன்மை திருக்களிற்றுப்படியார். “குற்றமறுத்தென்னையாட் கொண்டருளித் தொண்டனேன், உற்றதியா னொத்துடனு றைவன் - முற்றவரின், மாட்சியமாய் நிற்பனியான் மற்றென்றைக் கண்டிடிலக், காட்சியுமாய்நிற்பான் கலந்து” என்பதனாலுமுணர்க.

கழுது என்பதன் இறுதியில் உயர்வு குறித்தற் பொருளில்வந்த உம்மை தொக்குநின்றது. வேதம் பொருளின்மேனிற்றலால் தானியாகுபெயர். (உய)

## திருவாதவூரடிகள்.

எழுதருமறைகடேறா விறைவனையெல்லிற்கங்குற்
பொழுதறுகாலத்தென்றும் பூசனைவிடாதுசெய்து
தொழுதகைதலைமேலேறத் துளும்புகண்ணீருண்மூழ்கி
யழுதடியடைந்தவன்பனடியவர்க்கடிமைசெய்வாம்.

(இ-ள்.) எழுதரும் மறைகள்தேறா இறைவனை எல்லில் கங்குல்பொழுது அறு காலத்து என்றும் பூசனை விடாது செய்து - எழுதுதற்கரிய வேதங்கள் உணர்ந்து தெளிதற்கரிய தன்மையையுடைய சிவபெருமானை பகற்பொழுதும் இராப் பொழுது மாகிய அறுவகைக் காலத்திலும் எந்நாளும் பூசனை யிடைவிடாமற் செய்து, தொழுதகை தலைமேலேற துளும்பு கண் நீருள்மூழ்கி அழுது அடி அடைந்த அன் பன் அடியவர்க்கு அடிமை செய்வாம் - குவித்தகை தலைமேற்செல்ல அன்பினா

பெருகும் ஆனந்தக் கண்ணீரில் மூழ்கிப் பிரிவாற்றாமையால் அழுது திருவடிகளை யடைந்த பேரன்பராகிய வாதவூரடிகளுடைய அடியார்களுக்கு அன்புசெய்து வழி படுவாம்.

இறைவனென்னுஞ் சொல்லாற்றலால், எழுதருமறைகடேறு மிறைவனெனவும், ஆறுகாலமும் பகலிலும் இரவிலும் அடங்குதலால், எல்லிற் கங்குற் பொழுதறு காலத்து எனவும், எக்காளும் இவ்வாறுசெய்பொழுதில் ஒருபொழுதும் வழுவாது செய்துவந்தமையின், பூசனைவிடாது செய்தெனவும், என்றும் வணங்குத லும் ஆனந்தக்கண்ணீர் பெருக்குதலும் உடைமையால், தொழுத கை தலைமேலேறத் துளும்பு கண்ணீருண் மூழ்கி எனவும், ஆசிரியனுய்வந்த சிவபெருமான் தன்னை விட்டு அடியார் கூட்டத்தோடு மறைந்தருளினமையால், அழுது எனவும், குருமூகூர்த் தத்தால் முத்தியடைந்தவராதலால் அடியடைந்த அன்பரெனவுங் கூறினர். ஆறு காலங்கள் விடியல், உச்சி, எற்பாடு, மாலை, யாமம், வைகறை.

பூசனைவிடாதுசெய்து அடியடைந்த அன்பனென்றது. சிவஞானசித்தியார். "இந்தனத்து னெரிபாலி னெய்பழத்தினிரத மெள்ளின்கணெண்ணெயும்போ லெங்கு முளனிறைவன், கந்தமலர்செய் தெவ்விடத்தும் வழிபடவேயருளு மலமறப்போனன் மாவின் மலரடிஞானத்தாற், சிந்தைசெய் தாச்சக்கிர சிவனுணர்த்தே தோன்றித் தீ யிரும்பைச் செய்வதுபோர் சீவன்றன்னைச், [illegible] யறுத்துத் தானாக்கித் தன் னுருவப் பரப்பையெலாங் கொடுபுறத்து [illegible] பாலே" என்பதனாலும். பிரி வாற்றாமையால் அழுது [illegible] பொருத்தமின்மையேன் பொய் மை யுண்மையேன [illegible] புரிந்து [illegible] வருத்தமின்மையேன் வஞ்சமுண்மையேன் [illegible] காடலா [illegible] யாத்தமேனியா யருள் செயன்பரு நீயுமங்கெழுந்தருளி [illegible] முறையோவென் னெம்பிரான் வம்பனேன் வினைக்கிறுதியில்லையே [illegible] திருவாசகம்.

பூசனைவிடாது செய்தல் [illegible] அணிமாதலின வீடும் என்று பெறு வோமென்னும் ஆராத்தலமையை [illegible] மேலேறத் துளும்பு கண்ணீ ருண் மூழ்கி என்பவை புணர்த்தலால் [illegible] அழுதென்றமையால் அவலமும், உணர்த்தி நிற்றலால் சுவையணி. (உக)

## சண்டேசநாயனார் முதலிய திருத்தொண்டர்கள்.

தந்தைதாளொடும்பிறவித்தாளெறிந்து திருத்திருதாளைச்சேர்ந்த
மைந்தர்தான்வேதநெறிசைவநெறிபத்திநெறிவழுதுவாய்மெய்
சிந்தைதானரனடிக்கேசெலுத்தினராய்சிவானுபவசெல்வராகிப்
பந்தமாந்தொடக்கறுத்ததிருத்தொண்டர்தாளபரவிப்பணிதல்செய்வாம்.

(இ-ள்.) தந்தை தாளொடும் பிறவித்தாள எறிந்து திருத்தா இருதாளை சேர்ந்த மைந்தர்தான்-தனது பிதாவின் தாளொடு பிறவியினது தாளையும் தறித்துச் சிவபெரு மான் திருத்தாள்களை யடைந்த சண்டேசநாயனாருடைய திருவடிகளையும், வேத நெறி சைவநெறி பத்திநெறி வழாது வாய் மெய் சிந்தைதான் அரனடிக்கே செலுத் தினராய் சிவானுபவச் செல்வராகிப் பந்தமாம் தொடக்கு அறுத்த திருத்தொண் டர்தான் - வைதிகமார்க்கத்திலும் சைவமார்க்கத்திலும் பக்திமார்க்கத்திலுஞ் சிறி தும் வழுவாமல் மனம் வாக்குக் காயங்களாலாகிய தொண்டுகளைச் சிவபெருமான் திருவடிக்கே செலுத்தி அவற்றால் விளையுஞ் சிவானுபவப் பெருமபே றுடையராய அதனால் ஆணவமலத் தொடக்கினையறுத்த மற்றை அடியாருடைய திருவடிகளையும், பரவி பணிதல் செய்வாம் - துதித்து வணங்குவாம்.

## முதனூல்வழி.

வேறு.

*அண்ணல்பாற்றெளிந்தநந்தியடிகள்பாற்சனற்குமார*
*னுண்ணிறையன்பினாய்ந்துவியாதனுக்குணர்த்தவந்தப்*
*புண்ணியமுனிவன்சூதற்கோதியபுராணமூவா*
*றெண்ணியவிவற்றுட்காந்தத்தீசசங்கிதையின்மாதோ.*

(இ-ள்) அண்ணல்பால் தெளிந்த நந்தியடிகள் பால் சனற்குமாரன் உள் நிறை அன்பின் ஆய்ந்து வியாதனுக்கு உணர்த்த - சிவபெருமானிடத்து ஐயந்திரிபற ஆராய்ந்து தெளிந்த நந்திதேவரிடத்தில் சனற்குமாரமுனிவர் உள்ளத்தில் நிறைந்த அன்போடு வழிபட்டாராய்ந்துணர்ந்து வியாசமுனிவருக்குப்போதிக்க, அந்தப் புண்ணிய முனிவன் சூதற்கு ஓதிய புராணம் மூவாறு - அந்த வியாசமுனிவர் தன்னை வழிபட்ட சூதமுனிவருக்குச் சொல்லியருளிய புராணங்கள் பதினெட்டாம், எண்ணிய இவற்றுள் காந்தத்து ஈசசங்கிதையில் - எண்ணப்பட்ட இப்பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய காந்தத்தில் சங்கரசங்கிதையில்.

உள்ளென்னும் ஏழனுருபு கூட்டிப் பிரித்தற்பொருளில் வந்தது. (உ௩)

## நூல்செய்தற்குக்காரணம்.

*அறைந்திடப்பட்டதாகுமாலவாய்ப்புகழ்மையந்தச்*
*சிறந்திடும்வடநூறன்னைத்தென்சொலாற்செய்தியென்றிங்*
*குறைந்திடும்பெரியோர்கூறக்கடைப்பிடித்துறுதியிந்தப்*
*பிறந்திடும்பிறப்பிலெய்தப்பெறுதுமென்றுள்ளந்தேறா.*

(இ-ள்.) ஆலவாய்ப்புகழ்மை அறைந்திடப் பட்டதாகும் - திருவாலவாயின் புகழ்ச்சி சொல்லப்பட்டதாம், அந்தச் சிறந்திடும் வடநூல் தன்னை தென்சொலால் செய்தி என்று இங்கு உறைந்திடும் பெரியோர் கூற - அந்தச் சிறப்பமைந்த வடநூலைத் தென்மொழியாற் செய்வாயென்று இத்தலத்தில் வசிக்கும் பெரியோர்கள் விரும்பிச்சொல்ல, கடைப்பிடித்து உறுதி இந்தப் பிறந்திடும் பிறப்பில் எய்தப் பெறுதும் என்று உள்ளந்தேறா - அதனை யுறுதியாகக்கொண்டு ஆன்மலாபத்தை யிந்தப் பிறப்பிலேயே அடையப்பெறுவோமென்று மனந்தெளிந்து.

பேர்பொருதான் என்றாற்போல, பிறந்திடும் பிறப்பிலெனவந்தது. புகழ்மை குணியைக் குணமாகக் கூறுவதோர் மரபுவழுவமைதி. செய்தி எதிர்காலத்துவந்த முன்னிலை யொருமை வினைமுற்று. பெறுதுமெனத் தன்மைப் பன்மையாகக்கூறி அடியில்வருஞ் செய்யுளில் விளம்பலுற்றேனென ஒருமையாகக்கூறியது வழுவன்றோவெனின் தன்னினத்தோரையும் உளப்படுத்திக் கூறினமையால் வழாநிலையாம்.

## மொழிபெயர்த்தவிதம்.

*திருநகர்தீர்த்தமூர்த்திச்சிறப்புமூன்றந்தமூர்த்தி*
*யருள்விளையாடலெட்டெட்டருச்சனைவினையொன்றாக*
*வரன்முறையறுபத்தெட்டாமற்றவைபடலமாக*
*விரிமுறைவிருத்தச்செய்யுள்வகைமையால்விளம்பலுற்றேன்.*

(இ-ள்.) திருநகர்சிறப்பு தீர்த்தச்சிறப்பு மூர்த்திச்சிறப்பு மூன்று - தலவிசேடம் தீர்த்தவிசேடம் மூர்த்திவிசேடம் என மூன்று, அந்தமூர்த்தி அருள்விளையாடல்

எட்டெட்டு அருச்சனை விளையொன்று - அந்த மூர்த்தியானவர் தமது திருவருளால் செய்தருளிய திருவிளையாடல் அறுபத்துநாலு அருச்சனைச் செயலொன்று, ஆக வரன்முறை அறுபத்தெட்டு ஆம் அவை படலமாக விரிமுறை விருத்தச்செய்யுள் வகைமையால் விளம்பலுற்றேன் - ஆக வரன்முறையாய் அறுபத்தெட்டாகும் அவற்றைப் படலங்களாக வமைத்து விரிவகையாக விருத்தமாகிய செய்யுட் பேதங்களால் சொல்லத்தொடங்கினேன்.

விரிமுறையென்பது வடநூலிற் றொகுத்ததை விரித்துக் கூறுதலின் நூல் யாப்பி னொன்று. இந்த மூன்றுங்குளகம். (உ௫)

### அவையடக்கம்.

நாயகன் கவிக்குங் குற்றங்காட்டிய கழகமாந்தர்
மேயவத் தலத்தினோர்க் கென் வெள்ளறி வுரையிற் குற்ற
மாயுமா றரிதன் றேனுநீர் பிரித் தன்ன முண்ணுந்
தூயதீம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை.

(இ-ள்.) நாயகன் கவிக்கும் குற்றம் காட்டிய கழக மாந்தர்மேய அத்தலத்தினோர்க்கு என் வெள்ளறிவுரையில் குற்றம் ஆயுமாறு அரிதன்றேனும் - சோமசுந்தரக் கடவுள் திருவாய் மலர்ந்தருளிய "கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத்தும்பி" என்னுந் திருப்பாசுரத்துக்குங் குற்றங்கூறிய சங்கபுலவர்கள் தங்கிய அம்மதுரையி லிருக்கும் வித்வான்களுக்கு மந்த அறிவாற் கூறிய என்னுடைய சொற்களில் குற்றம் ஆராயும்வகை அரிதல்லவாயினும், நீர் பிரித்து அன்னம் உண்ணும் தூயதீம்பால் போல் சுந்தரன் சரிதந்தன்னை கொள்க - நீரோடுகலந்த பாலுள் நீரைப்பிரித்து அன்னப்பறவையானது களங்கமில்லாத இனிய பாலைப் பருகுதல்போல, சொற் குற்றங்களை யொழித்துச் சோமசுந்தரக்கடவுள் சரித்திரமாகிய திருவிளையாடலைக் கைக்கொள்ளக் கடவார்கள்.

உம்மை உயர்வு சிறப்பு. (உ௬)

### கலிநிலைத்துறை.

கலைகொழுந் தழனாச் சுவைகண்ட வூணிமையோர்
சுவைக்கவின் னமுதாயின துளக்கமில சான்றோ
ரவைக்களம் புகுந்தினியவா யாலவா யுடையார்
செவிக்களம் புகுந்தேறுவ சிறியனேன் பனுவல்.

(இ-ள்.) கலை கொழுந்து அழல் நா சுவை கண்ட ஊண் இமையோர் சுவைக்க இன் அமுது ஆயின - பிளவு பிந்தலைப் பொருந்திய கொழுந்துவிட்டெரியும் அக்கினிதேவன் தன்னுவால் முன்பு சுவைத்த ஊண் தேவர்கள் உண்டுகளிக்க இனிய அமுதாம் (அதுபோல) சிறியனேன் பனுவல் துளக்கமில் சான்றோர் அவைக்களம் புகுந்து இனியவாய ஆலவாய் உடையார் செவிக்களம் புகுந்து ஏறுவ - கல்வியறிவிற் சிறியேனாகிய யான் கூறிய நூல் உறுதியையுடைய அறிவால் நிறைந்த பெரியோர் அவைக்களத்திற்சென்று குற்றம்நீங்கிச் சுவையுடையனவாய்த் திருவாலவாயுடைய பெருமானது திருச்செவியிற்சென்று அடையாநிற்கும்.

அவைக்களம் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. செவிக்களம் என்பதில் களமென்பது ஏழனுருபு. பனுவல் செய்யுள்மேல் முதலாகுபெயராய் நிற்றலால் இனியவாய் எனவும், ஏறுவ எனவும் பன்மை முடிபுதந்து கூறினார். (உ௭)

பாயவாரியுண்டுவர்கெடுத் துலகெலாம்பருகத்
தூயவாக்கியகாரெனச்சொற்பொருடெளிந்தோ
ராயகேள்வியர் துகளறுத் தாலவாயுடைய
நாயனுர்க்கினி தாக்குபநலமிலேன்புன்சொல்.

(இ-ள்.) கார் பாய வாரி உண்டு உவர் கெடுத்து உலகெலாம் பருகத் தூய வாக்கியது என - மேகம் பரந்தகடல் நீரையுண்டு அந்நீரிலுள்ள உப்பைக்கெடுத்து எல்லாவுலகங்களினும் உள்ளவர் பருகக் களிகூரப் புனிதமுடையனவாகச்செய்தது போல, சொல்பொருள் தெளிந்தோர் ஆயகேள்வியர் நலமிலேன் புன்சொல் துகளறுத்து ஆலவாயுடைய நாயனுர்க்கு இனிது ஆக்குப - சொல்லியலையும் பொருளியலையு முணர்ந்தவராகிய நூற்கேள்வியையுடைய பெரியோர் அக்கேள்வி நலஞ் சிறிதுமில்லாத என்னுடைய புன்சொல்லிலுள்ள குற்றங்களை யொழித்துத் திருவாலவாயை யுடைய பெருமானுர்க்கு இனியதாகச் செய்வார்கள்.

ஆக்கியது துவ்விகுதி தொகுத்தல். சொல் பொருள் தமக்குக் கருவியாகிய படலங்களை யுணர்த்தி நிற்றலால் காரியவாகுபெயர்கள். (உஅ)

அலலையி தல்லையிதெனமறைகளுமன்மைச்
சொல்லிஞற்றுதித்திளைக்குமிச்சுந்தரனுடற்
கெல்லையாகுமோவென்னுரையென்செய்கோவிதனைச்
சொல்லுவேனெனுமாசையென்சொல்வழிகேளா.

(இ-ள்.) ஈதல்ல ஈதல்ல என மறைகளும் அன்மைச்சொல்லினல் துதித்து இளைக்கும் இச்சுந்தரன் ஆடலுக்கு என்னுரை எல்லையாகுமோ - இதுவல்ல விது வல்லவென்று வேதங்களும் அன்மைச்சொல்லாற்றுதித்துக் காணுதல் கூடாமையால் வருந்தும் இச்சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடலைக் கூறுதற்கு என்சொல் வரம்புபடுமோவென்று, இதனை சொல்லுவேன் எனும் ஆசை என் சொல்வழிகேளா என்செய்கோ (யான்வாளா விருப்பினும்) இதனைச் சொல்லுவேனென்று என்மனத திற்றோன்றும் விருப்பமானது நான் சொல்லுமார்க்கத்தைக் கேட்கவில்லை (ஆதலால்) நான் என்ன செய்வேன்.

ஏகமாகிய பிரமம் அத்துவிதமா யிருத்தலின், இன்மை மறுதலையாகக் கூறும் பொருள்கட் கிடனுகாது, ஒன்றுகாமலும் இரண்டாகாமலும் ஒன்று மிரண்டு மின்று காமலுமாயுள்ள அனனியத்தை விளக்கும் அன்மைப்பொருளுக் கிடனுய்நின்று வழுத் துதலின், அல்லையீ தல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லினுற்றுதித்து என வும், அப்பொருள் வாக்கு மனுதீதமாய் அறத்திறனல் கோசரிப்பதா யிருத்தலின், இளைத்தெனவுங் கூறினுர்.

ஓ - இரண்டனுள், முன்னது வினு. பின்னது அசைநிலை. செய்கு தன்மை யொருமை வினைமுற்று. இளைக்கும என்னும் பெயரெச்சம் சுந்தரனென்னுங் கருவிப் பொருள்கொண்டது. இகரச்சுட்டு உயர்வுகுறித்தன்மே னின்றது.

அவையடக்கமாவது அவையிலுள்ள புலவர் பலர்க்கும் வழிபடு கிளவியாக அடக்கிக்கூறல். அதனை, யிங்குச் சிவபெருமான் கவிக்குங் குற்றங்கூறிய சங்கப்புல வர்களிருக்குந் தலமாதலின் அங்கிருக்கும் ஏனைப்புலவர்களால் என் , கவிக்குக் குற் றங்கூறுதல் எளிதெனவும, வல்லோராதலின் அவர்கள் அவைக்களத்தில் புகுந்து என்னுல் குற்றமொழிந்து பயன்படுமெனவும், அவர்கள் பெருவள்ளன்மைய ராத

லால் என்னூலைக்கொண்டு அதிலுள்ள குற்றங்களையொழித்துப் பயன்படுத்துவ ரெனவும், என்னால் இந்நூலைச்சொல்ல முடியாதென்றிருப்பினும் என்னுளை என்னைக் குற்றத்தின் வழிப்படுத்திய தெனவும் சான்று செய்யுளாற் கூறினர். தொல்காப்பியம் - பொருளதிகாரம்-செய்யுளியல் "அவையடக்கியலே யரிறபத்தெரியின், வல்லார் கூறினும் வகுத்தனர்கொண்மினென், றெல்லாமாந்தர்க்கும் வழிமொழிந்தனரே" என்பதனு லுணர்க.

## அரங்கேற்றிடம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

அறுகாற்பீடத் துயர்மாலாழிகடைந்தமுதையரங்கேற்றுமாபோல்
அறுகாற்பேடிசைபாடுங்கூடன்மான்மியத்தையருந்தமிழாற்பாடி
அறுகாற்பீடுயர்முடியார்சொக்கேசர்சந்நிதியிலமரர்சூழும்
அறுகாற்பீடத்திருந்துபரஞ்சோதிமுனிவனரங்கேற்றினனே.

(இ-ள்.) அறுகால் பீடத்து உயர் மால் ஆழி கடைந்து அமுதை அரங்கேற்றும் ஆபோல் - ஆதிசேடனாகிய சயனத்தில் அறிதுயில் கொண்டருளிய திருமால் பாற்கடல் கடைந்து அமுதத்தைத் தேவர்களுக்குப் பகுத்த முறைபோல, அறுகால்பேடு இசைபாடும் கூடல் மான்மியத்தை அருந்தமிழால் பாடி - பெட்டை வண்டுகள் தேனுண்டிசைபாடுஞ் சோலைசூழ்ந்த திருவாலவாயின் மகத்துவத்தை அரிய தமிழால் மொழிபெயர்த்து, அறுகு ஆல் பீடு உயர்முடியார் சொக்கேசர் சந்நிதியில்-அறுகினல் பெருமைபெற்று விளங்கும் சடைமுடியையுடைய சொக்கநாதர் சந்நிதியில், அமரர் சூழும் அறுகால் பீடத்து இருந்து பரஞ்சோதிமுனிவன் அரங்கேற்றினன். தேவகணங்கள் சூழ்ந்திருக்கும் அறுகாற்பீடத்திலிருந்து பரஞ்சோதி முனிவ ரரங்கேற்றினர்.

அரங்கேற்றல், சபையின்முன்னோர்க்குப் பொருந்தச் செய்தல். பன்னகமென்பது பாம்பிற்கோர் பரியாயப் பெயராதலால் அறுகால் என்பது அற்றகால்களையுடையதென வினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய்ப் பாம்பின்மேனின்றது, பன்னகம் பாதமில்லாமற் சரிப்பது. அறுகால் என்பது பலபொருள் ஒருசொல்லாதலின் பீடம் என்னுமிடத்தால் ஆதிசேடன்மேலும், இசைபாடென்னும் வினையால் வண்டின்மேலு நின்றது. பின்னர் அறுகாற் பீடமென்றது அங்குள்ளதோராதனம்.

இது சிறப்புப்பாயிரமாதலால் பரஞ்சோதிமுனிவன் என்றமையால் ஆக்கியோன் பெயரும், கூடன் மான்மியம் என்றமையால் நூல்வந்தவழியும், தமிழ் என்றமையால் தமிழ்வழங்கும் எல்லையும், தமிழாற் பாடி என்றமையால் திருவிளையாடலென்னும் நூற்பெயரும், மான்மியம் என்றமையால் நூல் நுதலியபொருளும், அருந்தமிழ் என்றமையால் தமிழ் நூலை முறையாகக் கற்றோரே இந்நூல் கேட்கற்பாற்று என்னும் யாப்பும், அவரே கேட்டற்குரியார் என்னும் அதிகாரிகளும், கேட்போர் முன்னர்க்கூறிய நூற்பயன் பெறுதலால் பயனும், அறுகாற்பீடம் என்றமையால் அரங்கேற்றிய களனும், என வப்பாயிரத்தி னிலக்கணங்கள் எட்டோடும் களனும் இதனுட் கூறப்பட்டன.

சிறப்புப்பாயிர முற்றிற்று.

# மதுரைக்காண்டம்.



## பாண்டித்திருநாட்டுப்படலம்.

---

கலிநிலைத்துறை.

கறைநிறுத்தியகந்தரச்சுந்தரக்கடவு
ளுறைநிறுத்தியவாளினாற்பகையிருளொதுக்கி
மறைநிறுத்தியவழியினால்வழுதியாய்ச்செங்கோன்
முறைநிறுத்தியபாண்டிநாட்டணியதுமொழிவாம்.

(இ-ள்.) கறை நிறுத்திய கந்தரம் சுந்தரக்கடவுள் வழுதியாய் - விடம் நிலைபெறச்செய்த ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் பாண்டியனாகி, உறைநிறுத்திய வாளினால் பகையிருள் ஒதுக்கி - உறையிற்பூட்டிய வாளினாற் பகையாகிய இருளினையோட்டி, மறைநிறுத்திய வழியினால் செங்கோல் முறைநிறுத்திய பாண்டிநாடு அணியது மொழிவாம் - தான் அருளிய வேதத்தில் நிறுத்திய நீதிவழியினால் செங்கோல் முறைமை நிலைபெறச்செய்த பாண்டிநாட்டின் சிறப்பைச் சொல்லுவாம்.

திருமால் முதலிய தேவர்கள் உய்வதற்பொருட்டு உண்டருளிய விடத்தை ஸ்ரீகண்டத்தில் நிறுத்தியது. அத்தேவர்கள் பிறபிறப்பிற்படாது தாமே பரமெனக்கருதி ஓர் காலத்து மறந்தும் அகங்கரியா திருத்தற்பொருட்டும், அன்னோர்க்கும் ஏனையோர்க்கும் அழியாத முதற்கடவுள் தானே என்பது உணர்த்தற்பொருட்டும், தனது முடிவிலாற்றல் விளங்கற்பொருட்டும் ஸ்ரீகண்டத்தில் வைத்தருளினவனாதலின் - கறை பொருந்திய கந்தரமென்றது கறைநிறுத்திய கந்தரமெனவும். விடமுண்டருளியுந் தனதியல்புமாறாது சுயம்பிரகாசமாயிருக்கின்றனனாதலின் சுந்தரக்கடவுளெனவும், தனதியல்பையுணர்ந்து வேற்றரசரெல்லாரும் வழிபட்டு நின்றமையால் உறையினின்றும் வாளைக்கழித்திலனாதலின் உறைநிறுத்திய வாள் எனவும், வேற்றரசர் அவ்வாறு நிற்றலின் பகைசிறிதும் இலனாதலின் கவர் பொருள்பட வாளினாற் பகையிருளொதுக்கி எனவும், வேதத்தில் கருமகாண்டம், பக்திகாண்டம், ஞானகாண்டம், என்பனயாவும் தன்பரமாய்த் தொகுத்தருளியதை யுணரப்பெறாமல் கஞ்சாற்புலர்ந்த விண்ணுலகத்தார்க்கு அம்முறையை வகுத்துக்காட்டித் தன்னடிப்படுத்திக் காத்தருளிய பேரருளினன் ஆதலால் தான் வகுத்தருளிய மறையின் பகுதியதாகிய நீதியினின்று மாறுபடா நெறியை யுணர்ந்து யாவரு நடத்தற்பொருட்டுத் தானருளிய வங்கீதியின் வழிநின்று காட்டினவனாதலின் மறைநிறுத்திய வழியினால் எனவும், சக்தியின்றிப் பாண்டியர் செங்கோல் குன்றுதலெண்ணம் நிறுத்தினவனாதலின்; வழுதியாய்ச் செங்கோல் முறை நிறுத்திய எனவும், ஒரும் பேரும் உருவுமில்லாத சிவபெருமான் வழுதியர் திருக்கோலங்கொண்டு அரசியல் புரியச்செய்தது பாண்டிநாடாதலின் நிறுத்திய பாண்டிநாடெனவுங் கூறினார்.

வாள் - வாளாயுதம், ஒளி. நிறுத்தியவென்னும் பிறவினைப் பெயரெச்சம் பாண்டிநாடென்னும் வினைமுதற் பொருள்கொண்டது. பாண்டியனாடு-பாண்டிநாடு மரூஉ. அணியது-அது பகுதிப்பொருள் விகுதி. சொல்வாம் வகர இடைநிலை மூன்று காலத்தும் வருதலால் இங்கு நிகழ்காலத்தின்மேல் நின்றது. (க)

தெய்வநாயகனீறணிமேனிபோற்சென்று
பௌவமேய்ந்துமைமேனிபோற்பசந்துபல்லுயிர்க்கு
மெவ்வமாற்றுவான்சாந்திமின்னருளென்னக்
கௌவைநீர்சுரந்தெழுந்தனகனைகுரன்மேகம்.

(இ-ள்.) கனை குரல் மேகம் - ஒலிக்கும் ஆரவாரத்தையுடைய மேகங்கள், தெய்வநாயகன் நீறு அணி மேனிபோல் சென்று பௌவம் மேய்ந்து உமை மேனி போல் பசந்து - திருமால் முதலிய தேவர்கள் தலைவனாகிய சிவபெருமானது விபூதி யணிந்தருளிய திருமேனியைப்போல வெண்ணிறங் கொண்டுபோய்க் கடனீரைக் குடித்துப் பார்வதியார் திருமேனியைப்போலப் பசியநிறங்கொண்டு, பல் உயிர்க்கும் எவ்வம் மாற்றுவான் சாந்திடும் இன் அருள் என்ன - அவர்கள் பல ஆன்மகோடிக ளுக்கும் பிறவி வெப்பொழிய இனிய திருவருள் சுரக்குந் தன்மையைப்போல, கௌவைநீர் சுரந்து எழுந்தன - (சராசரங்களாகிய பல்லுயிர்க்குஞ் சூரியன் வெப பொழிக்க) ஆரவாரத்தையுடைய அக்கடல் நீர சுரந்து மேல் எழுந்தன.

சிவபெருமான் திருமேனி செந்நிறமுடைய தாதலால் வெண்ணிறங்குறித் தற்கு நீறணிமேனிபோல் எனவும், கடற்குச் செல்லும்போது வெண்ணிறமுடைமை யால் விளர்த்தென்றது வாளாசென்றெனவுங் கூறினர், "நீறணிந்தகடவு ணிறத் தவான்" எனப் பிறர் கூறுதலுங்காண்க. நீறணிதல் - இறுதிக்காலத்துத் திருமால் முதலியோரை நுதல் விழியாற் பொடித்து நீறாக்கி அந்நீற்றையே தனது திருமேனியி லணிதலால் மகாசங்காரத்தைச்செய்யுங் கடவுளாகிய தானே ஏனைய கடவுளர்க் கெல்லாம் நாதனெனக் காட்டவும் யாவருந் தன்னையே சரணடைந்துய்யவும். குறித்த குறிப்பென்க.

கந்தபுராணச்சருக்கம் - தக்ஷகாண்டம் "வேதன்மான்முத லோரைகம்பன் விதித்தழித்திடு போதெலாந், நீதிலாதவரென்பணிந்து சிரம்கள்சேச மணிந்து நீள், கோதிலாதொளிரா கூலமீதுடல் கொண்டுநீறது கண்டபின், மீதுபூசுமி யாவருந்தனை மேவியுய்த்திட வேண்டியே" என்பதனுணர்க.

நீறணிமேனிபோற் சென்று உமை மேனிபோற் பசந்து என்னுந் தொடர்கள், சிறப்பன்பின்மேனிற்றலால் பண்புவமைகள். மாற்றுவான்செயவெ னெச்சத்திரிபு ஆற்றுவான் எனப்பாடங்கூறி ஆற்ற எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. நீர் என் பதன் முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல், சாந்திடும் இன்னருளென்னக் கௌவை நீர் சுரந்து என்னுந் தொடர் தொழின்மேனிற்றலால் தொழிலுவமை. உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமை புண்மையால் பல்லுயிர்க்கும் எவ்வமாற்றுவான் என்னும் உவமையின் ஒழிபைப் பொருண்மேலேற்றிக் கூறினும்.

நாட்டுச்சிறப்புக் கூறுவோர் அச்சிறப்பிற்குக் கருவியாகிய மேகத்தை முன் னர்க்கூறுதல் வழக்காதலால் இந்நூலாசிரியரும் இவ்வாறு கூறினர். (உ)

இடித்துவாய்திறந்தொல்லெனவெல்லொளிமழுங்கத்
தடித்துவாள்புடைவிதிர்த்துநின்றிந்திரசாபம்
பிடித்துநீளமபுகோட்டைமேற்பெய்துவெம்பெரும்போர்
முடித்துகாமெனவருதல்போன்மொய்த்தனகொண்மூ.

(இ-ள்.) ஒல்லெனவாய் திறந்து இடித்து-ஒல்லென்று வாய்திறந்து ஒலித்து, எல் ஒளி மழுங்க தடித்து வாள் புடை விதிர்த்து நின்று இந்திரசாபம் பிடித்து -

சூரியன் ஒளியும் மழுங்க மின்னலாகிய வாளை நான்குபுறத்திலும் அசைத்து நின்று பச்சைவில்லை யேந்தி. நீள் அம்பு கோடை மேல் பெய்து வெம் பெரும்போர் நாம் முடித்தும் என வருதல்போல் கொண்மூ மொய்த்தன - நீண்ட அம்பினைக் கோடையாகிய பகைவன்மேற் சொரிந்து வெய்ய பெரிய போரினை நாம் முடிப்போமென்று வருதல்போல மேகங்கள் நெருங்கின.

அம்பு - நீர், பாணம். இந்திரசாபம் - இந்திரதனுசு-பச்சைவில். முடித்தும் தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று.

மின்னலை வாளாக வுருவகஞ்செய்து கோடையைப் பகைவனாக உருவகஞ் செய்யாமையால் ஏகதேச வுருவகவணி, இந்திரசாபம் - அம்பு, செம்மொழிச் சிலேடைகள். (௫)

முனிதனீள்வரையுச்சிமேன்முழங்கிவானிவந்து
தனிதநீர்மழைபொழிவன தடஞ்சிலையிராமன்
கனிதனீர்மையாலாலவாய்க்கண்ணுடன்முடிமேற்
புனிதநீர்த்திருமஞ்சனமாட்டுவான்போலும்.

(இ-ள்.) தனிதம் வான் நிவந்து முழங்கி முனிதன் நீள் வரை உச்சி மேல் நீர மழை பொழிவன-மேகங்கள் வானிலுயர்ந்து குமுறி அகஸ்தியருடைய பொதிய மலையின் உச்சியின்மேல் மழையைப் பொழிதல், தடம் சிலை இராமன் கனிதன் நீர்மையால் ஆலவாய் கண்ணுதல் முடிமேல் புனிதநீர் திருமஞ்சனம் ஆட்டுவான் போலும்-நெடிய வில்லை யேந்திய இராமமூர்த்தி கனிந்த தனது அன்பின் குணத்தோடு திருவாலவாயி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருமுடியின்மேல் பரிசுத்தமாகிய நீரால் திருமஞ்சனம் ஆட்டுதலை யொக்கும்.

தனிதம் மேகத்திடியொலி, இது தன்னைத் தருதற்குக் கருவியாகிய மேகத்தின் மேனிற்றதால் காரிய வாகுபெயர். ஆல் உருபு உடனிகழ்ச்சிப் பொருட்டு.

பொழிவன வென்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர் வினைமுதலாய் ஆட்டுவான்போலும் என்னும் பயனிலை கொண்டது. இது தொழிலுவமையணி. (௬)

சுந்தரன்றிருமுடிமிசைத்தூயநீராட்டு
மிந்திரன்றனையொத்தகாரெழிலிதென்மலைமேல்
வந்துபெய்வவத்தனிமுதன்மௌலிமேல்வலாரி
சிந்துகின்றனைப்போதெனப்பன்மணிதெறிப்ப.

(இ-ள்.) கார் எழிலி தென் மலைமேல் வந்து பெய்வ - கரிய மேகங்கள் பொதிய மலையின்மேல்வந்து மழைபொழிதலால், சுந்தரன் திருமுடி மிசை தூய நீர் ஆட்டும் இந்திரன் தனை ஒத்த - சோமசுந்தரக்கடவுள் திருமுடியின்மேல் பரிசுத்தமாகிய நீரால் அபிஷேகஞ் செய்யுந் தேவேந்திரனை யொத்திருந்தன, அத்தனிமுதல் மௌலி மேல் வலாரி கை சிந்துகின்றபோது என பல் மணி தெறிப்ப-அக்கடவுளுடைய திருமுடியின்மேல் தேவேந்திரன் தனது கையால் அர்ச்சிக்கும் பல மலர்களைப்போல அம்மேகங்கள் பல இரத்தினங்களைச்சிந்தின.

இந்திரனுங் கரிய நிறமுடையவனாதலால் இந்திரன்றனை யொத்தன எனவும், மேகங்கள் கடல் நீர் உண்ணும்போது அந்நீருடன் பலமணிகளுங் கலந்து செல்லுதலால் பன்மணி யெனவுங் கூறினார். பொருளின் குணமாகிய பன்மையை உவமைக்கும் ஏற்றுக. பெய்வ என்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர் மூன்றனுருபேற்று ஒத்தன என்னும் இடைச்சொல்லடியாகப்பிறந்த வினைமுற்றின் முதனிலையோடு முடிந்தது. (௭)

உடுத்ததெண்கடன்மேகலையுடையபார்மகட
னிடத்துதித்தபல்லுயிர்க்கெலாமிரங்கித்தன்கொங்கைத்
தடத்துநின்றிழிபாலெனத்தடவரைமுகடு
தொடுத்துவீழ்வனவிழுமெனத்தூங்குவெள்ளருவி.

(இ-ள்.) உடுத்த தெண்கடல் மேகலை உடைய பார்மகள்தன் இடத்து உதித்த பல் உயிர்க்கு எல்லாம் இரங்கி - சூழ்ந்த தெள்ளிய கடலாகிய ஆடையையுடைய பூமிதேவியானவள் தன்னிடத்துத்தோன்றிய சராசரங்களாகிய எல்லா வுயிர்களுக்கும், இரக்கங்கூர்ந்து, தன் கொங்கை தடத்து நின்று இழிபால் என - தனது கொங்கையாகிய உயர்ந்த விடத்தினின்றுஞ் சொரியும் பாலைப்போல, தூங்கு வெள் அருவி இழுமென தடவரை முகடு தொடுத்து வீழ்வன்-அசைந்து வாராநின்ற வெள்ளிய வருவிகள் இழும் என்னும் ஒலிக்குறிப்போடு பெரிய பொதியமலையின் உச்சிதொடுத்து அடிகாறும் வீழாநின்றன.

மேகலை - சேலை, மாதரணி. உடுத்த வென்னும் வினையால் மேகலையென்னும் பலபொருளொருசொல் பொதுமைநீங்கிச் சேலைமேல் நின்றது. (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருநிறமேகமென்னுங்கச்சணிசிகரக்கொங்கை
யருவியாந்தீம்பால்சோரவகன்சுனையென்னுங்கொப்பூழ்
பொருவில்வேயென்னுமென்றோட்பொதியமாஞ்சைலப்பாவை
பெருகுதண்பொருனையென்னும்பெண்மகப்பெற்றாளன்றே.

(இ-ள்.) கருநிறம் மேகம் என்னும் கச்சு அணி சிகரம் கொங்கை அருவியாம் தீம்பால் சோர - கரிய நிறத்தையுடைய மேகமாகிய கச்சினையணிந்த தனது சிகரமாகிய கொங்கையினின்று அருவியாகிய இனிய பால் இழிய, அகன் சுனை என்னும் கொப்பூழ் பொருவில் வேய் என்னும் மென் தோள் பொதிய சைலமாம்பாவை - இடம் பரந்த சுனையாகிய உந்தியையும் ஒப்பில்லாத மூங்கிலாகிய மெல்லிய தோள் களையுமுடைய பொதிய மலையாகிய பெண், பெருகு தண் பொருனை என்னும் பெண் மகப் பெற்றாள் - பெருகிய குளிர்ந்த தாம்பிரபர்ணி என்னும் பெண் குழந்தையைப் பெற்றாள்.

பல பொருளையுந் தம்முள் இயைய வைத்து உருவகஞ் செய்தமையால் இயைபுருவகவணி. (௭)

கல்லெனக்கரைந்துவீழுங்கடிப்புனற்குழவிகானந்
தொல்லெனத்தவழ்ந்துதீம்பாலுண்டொரீஇத்திண்டோண்மள்ளர்
செல்லெனத்தெழிக்கும்பம்பைத்தீங்குரல்செவிவாய்த்தேக்கி
மெல்லெனக்காலிற்போகிப்பணைதொறும்விளையாட்டெய்தி

(இ-ள்.) கல் என கரைந்து வீழும் கடிம்புனல் குழவி - கல்லென்னும் ஒலிக் குறிப்போடு ஒலித்துப் பொதியத்தினின்று வருகின்ற வேகத்தையுடைய தாம்பிர பர்ணியென்னும் பெண் குழந்தை, கானத்து ஒல் என தவழ்ந்து தீம்பால் உண்டு ஒரீஇ - முல்லைநிலத்தில் ஒல்லென்னும் ஒலிக்குறிப்போடு தவழ்ந்து இனிய பாலையுண்டு அவ்விடத்தினின்றும் நீங்கி, திண் தோள் மள்ளர் செல் என தெழிக்கும் பம்பை தீங்குரல் செவிவாய் தேக்கி - திண்ணிய தோளகளையுடைய மள்ளர்கள் மேகம்போல முழக்கும் பம்பையினது இனிய வோசையைக் காதில் நிரப்பி, மெல்

என காலிற் போகி பணைதொறும் விளையாட்டு எய்தி - மெல்லக் காலிற்சென்று பண்ணைகள் தோறும் விளையாடுதலைப் பொருந்தி.

செவி வாய்த்தேக்கி அமுதுவாய்த்தலைப் பொருந்தி எனவும், கால், கால்வாய், கால் எனவும், பண்ணை மகளிர் விளையாட்டு, வயல் எனவும், பொருள் கொள்க.

செவ்வி பண்ணை என்பவற்றின் இடையில்நின்ற வகரமும் ணகரமுந் தொகுத்தல். நடு கடி என்னும் உரிச்சொற்றிரிபு. வாய் முதனிலைத் தொழிற்பெயராதலால் வல்லெழுத்து மிக்கது.

தவழ்தலும் பாலுண்ணுதலும் பம்பைத்தீங்குரல் தேக்குதலும் காலிற் செல்லுதலும் பண்ணைதோறும் விளையாட்டெய்துதலும் குழந்தையினது இயற்கைத் தொழிலாதலால் தொழிற்றன்மையணி. (அ)

அரம்பைமென்குறங்காமாவினவிர்தளிர்நிறமாத்தெங்கின்
குரும்பைவெம்முலையாவஞ்சிக்கொடியிறுநுசுப்பாக்கூந்தல்
சுரும்பவிழ்குழலாக்கஞ்சஞ்சுடர்மதிமுகமாக்கொண்டு
நிரம்பிநீள்கைதைவேலிநெய்தல்சூழ்காவில்வைகி.

(இ-ள்.) அரம்பை மென் குறங்கு ஆ மாவின் அவிர் தளிர் நிறம் ஆ தெங்கின் குரும்பை வெம் முலை ஆ-வாழையே மெல்லிய தொடையாகவும் மாமரத்தினது விளங்குந் தளிரே நிறமாகவும் தென்னங் குரும்பையே விருப்பந்தருந் தனமாகவும், வஞ்சிக்கொடி இறு நுசுப்பு ஆ கூந்தல் சுரும்பு அவிழ் குழல் ஆ கஞ்சம் சுடர் மதி முகமா கொண்டு நிரம்பி - வஞ்சிக்கொடியே முறியும் இடையாகவும் கூந்தற்பனைமடலே வண்டுகள் பரந்த கூந்தலாகவும் தாமரையே விளங்கும் சந்திரனை யொத்த முகமாகவுங்கொண்டு மங்கைப்பருவம் நிரம்பி, நீள் கைதைவேலி நெய்தல் சூழ் காவில் வைகி-நெடிய தாழைகளை வேலியாகவுடைய நெய்தனிலத்தைச் சூழ்ந்த சோலையில் தங்கியிருந்து,

இதுவும் இயைபுருவகவணி. (க)

பனமலர்மாலைவேய்ந்துபானுரைப்போர்வைபோர்த்துத்
தென்மலைத்தேய்ந்தசாந்தமான்மதச்சேறுபூசிப்
பொன்மணியாரந்தாங்கிப்பொருநையாங்கன்னிமுந்நீர்த்
தன்மகிழ்கிழவனாகந்தழீஇக்கொடுகலந்ததன்றே.

(இ-ள்.) பொருநை ஆம் கன்னி பல் மலர் மாலை வேய்ந்து பால் நுரை போர்வை போர்த்து மான் மதம் தென்மலை தேய்ந்த சாந்தம் சேறுபூசி - அந்தத் தாம்பிரபர்ணி யென்னும் கன்னிப் பெண்ணானவள் பல மலர்களாலாகிய மாலையைச் சூடி வெள்ளிய நுரையாகிய போர்வையைப் போர்த்து மிருகமதத்தோடு கலந்த பொதியமலையி லரைபட்ட சந்தனக்குழம்பைப்பூசி, பொன் மணி ஆரம் தாங்கி முந்நீர் தன் மகிழ் கிழவன் ஆகம் தழீஇக் கொடு கலந்தது - பொன்னாரத்தையும் முத்தாரத்தையும் பூண்டு தன்னால் விரும்பப்பட்ட கணவனாகிய சமுத்திர இராஜனுடைய மார்பைத் தழுவிக் கலந்தாள்.

மாலை சூடலும் வெள்ளாடை போர்த்தலும் கலவைபூசுதலும் முத்தாரம் பூணலுங் கலவிக்குரிய தொழில்களாதலால் ஆகம் தழீஇக்கொடு கலந்ததெனவும், கன்னி பொருளால் உயர்திணையேனும் சொல்லால் அஃறிணையாதலால் அஃறிணை முடிபாகக் கலந்ததெனவுங் கூறினர்.

மூன்றீர், ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் மூன்றாகிய தொழிற்றன்மைகளை யுடையதெனப் பண்புத்தொகைநிலைக் களத்துப்பிறந்த அன்மொழித்தொகையாய்க் கடல்மேனின்றது. ஆற்றுநீர் ஊற்றுநீர் மேகநீர் என மூன்று நீர்களையுமுடையதெனப் பொருள் கூறுதலும் ஒன்று. கல்லென் என்னுஞ் செய்யுளின் இறுதியினின்ற எய்தியென்னும் * வினையெச்சம் அரம்பை யென்னுஞ் செய்யுளின் இறுதியினின்ற வைகியென்னும் வினையெச்சத்தின் முதனிலையையும், அவ்வெச்சம் இச்செய்யுளின் இறுதியினின்ற கலந்ததென்னும் வினைமுற்றின் முதனிலையையும் முறையே கொண்டு முடிந்தன. (௪0)

வல்லைதாயிருபால்வைகுஞ்சிவாலயமருங்குமீண்டி
முல்லையானைந்துந்தேனுந்திளைக்கையான்முகந்துவீசி
நல்லமான்மதஞ்சாந்தப்பிநறுவிரைமலர்தூய்நீத்தஞ்
செல்லலாற்பூசைத்தொண்டின்செயல்வினைமாக்கள்போலும்.

(இ-ள்.) நீத்தம் வல்லைதாய் இருபால் வைகும் சிவாலயம் மருங்கும் ஈண்டி- தாமிரபர்ணியானது விரைந்துசென்று தனது இரண்டுபக்கங்களிலுமுள்ள சிவாலயங்களிடத்துப்பொருந்தி, முல்லை ஆன் ஐந்தும் தேனும் திளைக்கையால் முகந்து வீசி நல்ல மான்மதம் சாந்து அப்பி நறு விரை மலர் தூய் செல்லலால் பூசை தொண்டின் செயல் வினை மாக்கள் போலும் - முல்லை நிலத்திலுள்ள பஞ்சகவ்வியங்களையும் தேனையும் அலையாகிய கையினாலே மொண்டு வீசி வாசனைமிக்க மிருகமதத்தையுஞ் சந்தனத்தையும் அப்பி நறுமணங்கமழும் மலர்களைத்தூவிச் செல்லுதலால் சிவ பூசைத்தொண்டு புரியும் செய்கையையுடைய அடியார்களை யொக்கும்.

பஞ்சகவ்வியங்களாவன பால் தயிர் நெய் கோமயம் கோசலம். மருங்கு என் பதன் இறுதியில்நின்ற உம் அசைநிலை. செயலென்னுந் தொழிற்பெயர் பெயரெச்சத் தின்மேனின்றது. (௪௧)

அரும்பவிழனங்கவாளியலைதரவாகம்பொன்போர்த்
திரங்கிவாலன்னமேந்திஇருகையுஞ்சங்கஞ்சிந்தி
மருங்குசூழ்காஞ்சிதள்ளிவரம்பிறவொழுகும்வாரி
பரம்பரற்கையம்பெய்யும்பார்ப்பனமகளிர்போலும்

(இ-ள்.) அரும்பு அவிழ் அனங்கவாளி அலைதர ஆகம் பொன் போர்த்து இரங்கி - அரும்பவிழ்ந்த மல்லிகை மலர்களாகிய பாணங்களை அலைகள் ஒதுக்கத் தன் னுடலமுற்றும் பொற்கட்டிகளை யுடையதா யொலித்து, வால் அன்னம் ஏந்தி இருகையுஞ் சங்கம் சிந்தி மருங்கு சூழ் காஞ்சி தள்ளி வரம்பு இற ஒழுகும் வாரி - வெண்ணிறத்தையுடைய அன்னப்பறவைகளை யேந்தி இரண்டு கரைகளிலும் சங்கு களை வீசிப் பக்கங்களிற் சூழ்ந்த காஞ்சிவிருட்சங்களை முறித்து எல்லைகெடப் பெருக் கெடுத்துச் செல்லுந் தாமிரபர்ணியானது, அரும்பு அவிழ் அனங்கவாளி அலைதர ஆகம்பொன் போர்த்து- இரங்கி-அரும்பவிழ்ந்த மன்மதபாணங்கள் வருத்தத் தம்மு டலமுற்றும் பொற்பிதிர்போன்ற தேமல் பூத்து மனம் வருந்தி, வால் அன்னம் ஏந் தி இருகையும் சங்கம் சிந்தி மருங்கு சூழ் காஞ்சி தள்ளி வரம்பு இற - வெள்ளிய சோற்றையேந்தி இரண்டு கைகளிலுமுள்ள வளையல்கள் கழன்று இடையிலணிந்த காஞ்சியென்னும் ஓர் ஆபரணஞ்சோர்ந்து தமது கற்பினிலைகெட, பரம் பரற்கு ஐயம் பெய்யும் பார்ப்பன மகளிர் போலும் - பிக்ஷாடன மூர்த்தமாய் எழுந்தருளிவந்த சிவபெருமானுக்குப் பிச்சையிடுந் * தாருகாவனத்து ரிஷிபத்தினிகளையொக்கும்.

மலர்களெல்லாம் மன்மதபாணங்களாகக் கூறுதலின் அனங்கவாளி எனவும் நடுப்பாகத்தை "வரையுரம், கடல் அகடு" என்றாற்போல வெள்ளமுற்றும் என்பதற்கு ஆகமெனவுங் கூறினார். காஞ்சி எழுகோவையாயுள்ளவணி, "எண்கோவை மேகலை காஞ்சியெழுகோவை" என்பதனாலுணர்க. பொன்; தேமல் மேனிற்றலால் உவமையாகுபெயர். உடைமையும் உடையதும் வேறாகாமையால் உடைமையின்றொழிலை உடையதின்மேலேற்றிச் சங்கஞ்சிந்தி காஞ்சிதள்ளி என்றார். போர்த்து இறங்கி சிந்தி தள்ளி என வேறு பலவடுக்கிய வினையெச்சங்கள் தனித்தனிவாரி என்னும் வினைமுதற் பொருள்கொண்ட வொழுகுமென்னும் பெயரெச்சத்தின் முதனிலையையும், அவ்வினையெச்சங்கள் பார்ப்பன மகளிர் என்னும் வினைமுதற் பொருள் கொண்ட பெய்யும் என்னும் பெயரெச்சத்தின் முதனிலையையுந் தனித்தனிகொண்டன. இருகையிலும் என்பதில்வந்த உம்மைமுற்று - முன்னாக்கூறிய பொருளோடு பின்னர்க்கூறிய பொருள் விரோதியாமல் சிலேடித்தமையால் அவிரோதச் சிலேடையணி. (௧௨)

வரைபடுமணியும்பொன்னும்வைரமுங்குழையும்பூட்டி
யரைபடுமகிலுஞ்சாந்துமப்பியின்னமுதமூட்டிக
கரைபடுமருதமென்னுங்கன்னியைப்பருவநோக்கித்
திரைபடுபொருனைநீத்தஞ்செவிலிபோல்வளர்க்குமாதோ.

(இ-ள்.) திரைபடு பொருனை நீத்தம் வரைபடு மணியும் பொனனும் வைரமுங் குழையும்பூட்டி அரைபடும் அகிலும் சாந்தும் அப்பி இன் அமுதம் ஊட்டி - அலைகளையுடைய தாமிரபர்ணி யென்னும் வெள்ளமானது மலையினிடத்துண்டாகிய முத்தையும் பொன்னையும் வைரத்தையுங் குண்டலத்தையும்பூட்டி அரைபட்ட அகிலையுஞ் சந்தனத்தையும் அப்பி இனிய அமுதத்தை யுண்பித்து, கரைபடு மருதம் என்னும் கன்னியை பருவம் நோக்கி செவிலிபோல் வளர்க்கும் - வரம்புகளையுடைய மருதநிலமென்னுங் கன்னிப்பெண்ணைப் பருவத்திற்குத் தக்கபடி யாராய்ந்து செவிலித்தாயைப்போல வளர்க்காநிற்கும்.

கரைபடும் என்பதற்குப் புகழ்பொருந்தியவெனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. செவிலி வளர்க்குந்தாய். குண்டலம் - நீராடவந்த அரம்பையர் குண்டலம் அமுதம் - நீர், பால்.

அமுதமென்பதன் இறுதியில் உயாவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. (௧௩)

மறைமுதல்கலைகளெல்லாமணிமிடற்றவனேயெங்கு
நிறைபரமென்றும்பூதிசாதனநெறிவீடென்று
மறைகுவதறிந்துந்தேறாரறிவெனக்கலங்கியந்த
முறையின்வீடுணர்ந்தோர்போலத்தெளிந்ததுமூரிவெள்ளம்.

(இ-ள்.) மூரி வெள்ளம் - பெரிய வெள்ளமானது, மறைமுதல் கலைகள் எல்லாம் - வேதமுதலிய நூல்களெல்லாம், மணிமிடற்றவனே எங்கும் நிறைபரம் என்றும், பூதிசாதன நெறி வீடு என்றும் அறைகுவது அறிந்தும் - நீலகண்டத்தையுடைய சிவபெருமானே எவ்விடத்தும் நிறைந்த பரம்பொருளென்றும் விபூதி தரித்தலும் ஸ்ரீ பஞ்சாக்ஷர முச்சரித்தலும் உடைய சைவசமயநெறியே மோக்ஷமென்றுஞ் சொல்லுதலைத் தெரிந்திருந்தும், தேறார் அறிவென கலங்கி அந்த முறையின் வீடு உணர்ந்தோர் போல தெளிந்தது - தெளியாதார் அறிவைப்போலக்கலங்கி அக்

த் சைவசமய நெறியின் முறையே நின்ற முத்திநிலையை யறிந்தவர் அறிவைப்போல உடனே தெளிந்தது.

வேதங்கள், சிவபெருமானை நேரே வழிபட வறியாத வான்மாக்கள் வழிபடற்குரிய அயன் முதலியோரை யொரோவழி தலைமையுடையவராகக்கூறும் கருத்தறியாது கூறியிருந்தலையே பொருளாகக்கொண்டு அவரவரும் பரமெனத் தம்மில் முரணிக்கூற மயக்கமொழிக் துய்தற்பொருட்டு இக்குறியீடுள்ளவனே பரமெனக் கூறுதலின் - மறைமுதல் கலைகளெல்லா மணிமிடற்றவனை யெங்குமிறை பரமெனவும், ஆன்மாக்கள் எப்பற்றுங் கழன்று பற்றற்றவனைப் பற்றுதற்குரிய அருட்பணிகளில் இயன்றிமையாச் சிறப்பினதாய் முதற்பற்றும் பொருளாய் விளங்கும் விபூதியையும், அப்புறக்காட்சியோடு உண்ணிலவும்; பற்றுக்கோடாய் நோக்கியவற்றை நோக்காதவாறுசெய்யவல்ல ஸ்ரீபஞ்சாக்கரத்தையும், மோக்ஷத்தை யடையக்கூடும் அங்கங்களாவங்களாயுடையது சைவசமயமாதலின், பூதிசாதனநெறி' யீடெனவும். இவ்வாறு பல வேதக்களாலுங் கிட்டாதங்களாலும் வேதாகமங்களிற் கூறியிருக்கும் அவ்வியல் பறிந்தும் அறியாதவர்களாய் மலச்செருக்கால் மலைந்து முக்குண வசத்தராய் முரணிக்கூறிய பசுநூல்வழிச் செல்வோ ரறிவிற்குப் பயனுயுள்ளது கலக்கமன்றிப் பிறிதின்மையின் அனைருவதறிந்துக்தேரு ரறிவெனக்கலங்கி எனவும், அப்பசுமார்க்கத்தை யொழித்துபதிமார்க்கத்தால் முத்தாந்தப் பாதமலர்க்கீழ்ச்சென்று பிறிதொடுபடாது அதுவாய் நிற்றலே தெளிவின் பயனுதலின் அந்த முறையின் வீடுணர்ந்தோர்போலத் தெளிந்தது எனவுங் கூறினா.

சிவதத்துவவிவேகம். "மறையகத்தொல்லாத்தலைமையோரொருபால் வருந்திடுங்கேவலமதுதா, னிறைவனேயிவ்வாறம்புயன் முதலோரினும் பிரித்துத்தியால் விளக்கா, தன்றதருமிதனுன் மாறுபட்டுழிவேரு ராற்றினுற்போக்கவற்றுமல், கறைமிடற்றடக்கியேழை வானவனாக்காத்தருள் கருணைமாகடலே" எனவும்.

"முனரியோன முதலாஞ் சுரரெலாம் பூதமுதலவற்றேடுநிற்றுன்னோ, ரனவிடுந்தலைமையாளரென றவரை யகற்றிமால் விடையவனிலையே, வளமுறமெல்லாத் தலைமையுமுடையோன வருமுதற்காரணனல்லோ, ருளமுறநியானப்பொருளெனச் சிகைதேர் துணைப்பவுமயங்குவா சிலரே" எனவும வருதல் காண்க.

சாதனம -- ருத்திராக்ஷதரித்தல் என்பாருமுளர், கண்மணி பூதிசாதனம் என வருமிடத்துச் சாதனங் கண்மணியிலடங்காமை காண்க. "தெய்வநீறுமைந்தெழுத்துமே சிறைக்கலனுக" எனப் பின்னர் வருதலறிக"

பூதிசாதனம் இவ்விரண்டையுமுடையது சைவசமயமாதலால் உம்மைத் தொகைகிலைக் கலந்துப்பிறந்த அன்மொழித்தொகை. நெறியின் - இறுதியில் பிரிநிலை எகாரந் தொக்கல் (௧௨)

மறைவழிகிளைத்தவெண்ணெண் கலைகள்போல்வருநீர்வெள்ளத்
துறைவழியொழுகும்பல்கால்சோலைதண்பழனஞ்செய்தே
ஞறைவழியோடையெங்குமோடிமன்றுடையார்க்கன்பர்
நிறைவழியாதவுள்ளத்தன்புபோனிரம்பிற்றன்றே.

( இ-ள். ) மறைவழி கிளைத்த வெண்ணெண் கலைகள்போல் - வேதத்துறைவழி கிளைத்த அறுபத்துநான்கு கலைகளைப்போல, வருநீர் வெள்ளம் துறை வழி ஒழுகும் பல்கால் - பொதியமலையினின்றும் வருகின்ற தாமிரபர்ணியான நீர்த்துறையினின்றும் கிளைத்துச்செல்லும் பலகால்களால், சோலை தண் பழனம்செய்தேன்

உறைவழி ஓடை எங்கும் ஓடி - சோலைகளிலும் தண்ணிய மருதநிலத்தார்களிலும் வயல்களிலுந் தேன்துளிசிந்தும் மலரோடைகளிலும் மற்றுள்ள விடங்களிலுஞ் சென்று, மன்று உடையார்க்கு அன்பர் உள்ளத்து நிறைவு அழியாத அன்புபோல் நிரம்பிற்று - பொன்னம்பலத்தை யுடைய சிவபெருமானுர்க்குத் தொழும்பு பூண்ட அன்பருடைய விதயத்தில் நிறைந்த அன்பைப்போல நிறைந்தது.

இடத்தினிகழ்பொருளின்றொழிலை யிடத்தின்மேலேற்றித்தேனுறைவழியோடையென்றார். (கஙு)

கலி நிலைத்துறை.

இழிந்தமாந்தர்கைப்பொருள்களுமிகபரத்தாசை
கழிந்தயோகியர்கைப்படிற்றூயவாய்க்களங்க
மொழிந்தவாறுபோலுவரியுண்டுவர்கெடுத்தெழிலி
பொழிந்தநீரமுதாயினபுவிக்கும்வானவர்க்கும்.

(இ-ள்.) இழிந்த மாந்தர் கை பொருள்களும் இகபரத்து ஆசைகழிந்த யோகியர் கைப்படில் தூய ஆய் களங்கம் ஒழிந்த ஆறுபோல் - கொலை முதலிய தொழிலால் இழிவுபட்ட மனிதர்கள் தமதுகையால்கொடுக்கும் பாவவழியினின்றும் ஈட்டிய பொருள்களும இவ்வுலக போகத்திலுஞ் சுவர்க்க போகத்திலும் உள்ள ஆசையினின்று நீங்கிய சிவயோகிகளது கையிற்பட்டால் பரிசுத்தமுடையனவாய் அக்குற்றங்களினின்று நீங்கிய முறைமைபோல, எழிலி உவரி உண்டு உவர்கெடுத்து பொழிந்த நீர்புவிக்கும் வானவர்க்கும் அமுதாயின - மேகமானது கடல் நீர் பருகி யுங்நீரிலுள்ள உப்பைக்கெடுத்துச் சொரிந்த நீர்த்துளிகள் பூவுலகிலுள்ளவருக்கும் வானுலகிலுள்ள தேவர்களுக்கும் அமுதம் போலாயின.

சிவஞானதீபம். "பரிந்தகொலைப்பாதகன் கைக்கத்தியேனும் பரிசனவேதியைப்பரிக்கப்பொன்னும்" என்றாற்போல இழிந்தமாந்தர்கைப் பொருள்களும் யோகியர்கைப்படில் தூயவாய்க் களங்கமொழிந்தவாறுபோல் எனவும், சிவதருமோத்தரம். "பாவெனும்பதத்தினர்த்தம் பாவமென்கடலிற்பட்டார், தேவனற்பதமென் றீரத் திருத்துவான்றிரத்தினர்த்தம், பாவமென்கடற்பட்டாரைப் பரமர்தம்பதமென் பாரத், தேவியேயிருத்துவானே பாத்திரமென்னப்பட்டான்" என்பதனுல் பாத்திரமாவார் சிவயோகியரன்றி வேறையல்லராதலால் யோகியர் எனவும் "வானின்றுலகம் வழங்கிவருதலாற், றானமிழ்தமென்றுணரற்பாற்று" "சிறப்பொடுபூசனைசெல்லாதுவானம், வறக்குமேல் வானோர்க்குமீண்டு" என்றமையால் புவிக்கும் வானவர்க்கும் பொழிந்த நீரமுதாயின எனவுங் கூறினர்.

உவரி உவர்ப்பினையுடையது என்னும் பொருண்மே னிற்றலால் வினைமுதற் பொருளில்வந்த தொழிற்பெயர். எழிலி மேலெழுதலையுடையது என்னும் பொருண் மேனிற்றலால் அத்தொழிற்பெயர். (கசு)

ஈறிலாதவளொருத்தியேயைந்தொழிலியற்ற
வேறுவேறுபேர்பெற்றெனவேலைநீரொன்றே
யாறுகால்குளங்கூவல்குண்டகழ்கிடங்கெனப்பேர்
மாறியீறில்வான்பயிரொலாம்வளர்ப்பதுமாதோ.

(இ-ள்.) ஈறிலாதவள் ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற வேறு வேறு பேர் பெற்றது என - அழிவில்லாதவளாகிய சிவசத்தி ஒருத்தியே பஞ்சகிருத்தியங்களையுஞ் செய்ய வெவ்வேறு திருநாமங்கள் பெற்றருளியதுபோல, வேலை நீர் ஒன்றே ஆறு

கால் குளம் கூவல் குண்டு அகழ் மடு கு என பேர்மாறி - கடல் நீரொன்றே ஆறு கால் வாய் குளம் கிணறு நீர்நிலை | தோண்டிய மடுக்கு என்ற தனது இயற்பெயர்நீங்கி, ஈறு இல் வான் பயிரெல்லாம் வளர்ப்பது - அளவில்லாத பெரிய பயிர்களையெல்லாம் வளர்க்காநிற்கும்.

பஞ்சகிருத்தியங்களாவன - சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம், இவற்றை முறையே பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, யாகின்ற இயற்றுகின்றவள் சிவசத்தி ஆதலால் ஐந்தொழி லியற்ற வேறு வேறு பேர்பெற்றனை என்றார். பெற்றெனை தொகுத்தல். ஏகாரங்கள் தேற்றப்பொருளில் வந்தன. (௧௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

களமர்கள்பொன்னேர்பூட்டித் தாயர்வாய்க்கனிந்தபாடற்
குளமகிழ்சிறாரினேறுமொருத்தலுமுவகைதூங்க
வளமலிமருதம்பாடி மனவலிகடந்தோர்வென்ற
வளமருபொறிபோலேவலாற்றவாள்வினையின்மூண்டார்.

(இ-ள்.) களமர்கள் பொன்னேர் பூட்டி - மருதநிலமாக்கள் பொன்னேரைப் பூட்டி, தாயர்வாய் கனிந்தபாடற்கு உளமகிழ் சிறாரின் ஏறும் ஒருத்தலும் உவகை தூங்க வளம்மலி மருதம் பாடி - தாய்மார் வாயிலுண்டாகிய கனிந்த பாடலுக்கு மனமகிழுஞ் சிறுவரைப்போல எருதும் எருமைக்கடாக்களும் மகிழ்கூர வளப்பமிகுந்த மருதப் பண்பாடி, மனவலி கடந்தோர் வென்ற அளமரு பொறி போல் ஏவலாற்ற ஆள்வினையில் மூண்டார் - மனத்தின் வலியைக்கடந்த பெரியோர் வென்ற சுழலும் ஐம்பொறிகள் அவர் ஏவல்வழி நிற்றல்போல அவ்வேறும் ஒருத்தலுந் தமது ஏவல்வழிநிற்கப் பயிரிடுந்தொழிலில் தலைப்பட்டார்கள்.

பொன்னேர் புத்தேர். தலையேர் என்றலும் அது மருதப்பண்பாடுவோர் அந்நிலமாக்களாதலால் மருதநிலமாக்களென்றும். மனம் தம் வழிப்பட்டோர்க்கு அதன் வழிச்செல்லும் ஐம்பொறிகளுந் தாமே யடங்கி நிற்றலால் மனவலி கடந்தோர் என்றார். அலமரல் அளமரல் என நின்றது. (௧௮)

பலநிறமணிகோத்தென்னப்பன்னிறவேறுபூட்டி
யலமுகவிரும்புதேயவாள்வினைக்கருங்கான்மள்ளர்
நிலமகளுடலங்கீண்டசால்வழிநிமிர்ந்தசோரிச்
சலமெனநிவந்தசெங்கேழ்த்தழன்மணியிமைக்குமன்றே.

(இ-ள்.) பலநிறம் மணி கோத்து என்ன பல்நிறம் ஏறு பூட்டி அலம் முகம் இரும்பு தேய ஆள்வினை கருங்கால் மள்ளர் - பலநிறங்களையுடைய இரத்தினங்களைக் கோவை செய்ததுபோலப் பலநிறங்களையுடைய வெருதுகளைப் பூட்டிக் கலப்பையின் முகத்திலுள்ள கொழுத்தேய உழுதொழில்செய்யும் கரியகால்களையுடைய மருதநிலமாக்கள், நிலமகள் உடலம் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரி சலம் என - பூமிதேவியின் உடலைக்கிழித்த படைச்சால்வழியில் எழுந்த உதிரவெள்ளம்போல, நிவந்த செங்கேழ் தழன்மணி இமைக்கும் - மேலெழுந்த செந்நிறத்தை யுடைய நெருப்புப் போன்ற இரத்தினங்கள் விளங்காநிற்கும்.

சேறுபடிதலால், நிறந்திரிதலின் கருங்கால் என்றார். கோத்தென தொகுத்தல் விகாரம். (௧௯)

மைஞறுசெய்படைவாய்தேயவுழுநருநீர்கால்யாத்துச்
சேறுசெய்குநருந்தெய்வந்தொழுதுதீஞ்செந்நெல்வீசி
நாறுசெய்குநரும்பேர்த்துநடவுசெய்குநருந்தெவ்வின்
மாறுசெய்களைகட்டோம்பிவளம்படுக்குநருமானார்.

(இ-ள்.) மைஞறுசெய் படைவாய் தேய உழுநரும் நீர் கால் யாத்து சேறு செய்குநரும் - பூமியைக் கிழிக்கா நின்ற கலப்பையின் நுனியாகிய உழுநர் தேய உழுகின்றவரும் நீரைக் கால்வழியாகக்கட்டிச் சேறு செய்கின்றவரும், தெய்வம் தொழுது தீம் செந்நெல் வீசி நாறு செய்குநரும் பேர்த்து நடவுசெய்குநரும் - அந்நிலத்துக்குரிய விக்கிரகத்தை வணங்கி இனிய செந்நெல் முளையை வீசி நடவுசெய்கின்றவரும் அந்நாறுகளைப் பேர்த்து நடுகின்றவரும், தெவ்வின் மாறு செய்களை கட்டு ஓம்பி வளம் படுக்குநரும் ஆனார்-பகைவனைப்போலச் செந்நெற் பயிரோடு மாறுபட்டோங்குங் களைகளைக் களைந்து வளஞ்செய்கின்றவர்களும் ஆக அந்நிலமாக்கள் முயன்றாகள் நகரவிடைநிலை நிகழ்காலத்தின்மேனின்றது. (௨௦)

பழிபடுநறவந்தன்னைக்கடைசியர்பருகிச்செவ்வாய்
மொழிதடுமாறவேர்வைமுகத்தெழமுறுவறோன்ற
விழிசெவந்துழலக்கூந்தன்மென்றுகில்சோரவுள்ளக்
கழிபெருங்களிப்புநல்கிக்கலந்தவரொத்தனன்றே.

(இ-ள்.) பழிபடு நறவம் தன்னை கடைசியர் பருகி-பழிச்சொற்பெருக்குமது வானது தன்னைப் பள்ளப்பெண்கள் பருகுதலால், செவ்வாய் மொழி தடுமாற வேர்வைமுகத்து எழ முறுவல் தோன்ற விழிசெவந்து உழல கூந்தல் மென்துகில் சோர - அவர்கள் செவந்தவாயில் தோன்றுஞ் சொற்கள் முறைபிறழவுங் குறுவெயர்வு முகத்தில் முகிழ்க்கவுந் தம்மையறியாது பெருநகைதோன்றவுங் கண்கள் மதர்ப்பாற்செவந்து சுழலவுங் கூந்தலு மெல்லியவாடையுஞ் சோரவும், உள்ளம் கழி பெரும் களிப்பு நல்கி கலந்தவர் ஒத்தது-மனத்தில் மிக்க பெரியமயக்கைக் கொடுத்துக்கலந்த புருடரை யொத்தது.

புணர்ச்சியில் பெண்கள் சொற்கள் தடுமாறுதலும், குறுவெயர்வு முகத்தில் முகிழ்த்தலும், புன்னகையரும்புதலும், கலிவால் விழிசெவந்து சுழலுதலும், சோர்வால் கூந்தலும் உடையுஞ் சோருதலும், உடைமையால் கள் கலந்தவரை யொத்த தெனக் கூறியது செம்மொழிச்சிலேடை - யுவமையணி. (௨௧)

பட்பகையாகுந்தீஞ்சொற்கடைசியர்பவளச்செவ்வாய்க்
குட்பகையாம்பலென்றுமொண்ணறுங்குவளைநீலங்
கட்பகையாகுமென்றுங்கமலநன்முகத்துக்கென்றுந்
திட்பகையாகுமென்றுஞ்செறுதல்போற்களைதல்செய்வார்.

(இ-ள்.) பண்பகை ஆகும் தீம் சொல் கடைசியர் பவளம் செவ்வாய்க்கு உட்பகை ஆம்பல் என்றும்-(களைகளையத்தலைப்பட்ட) இசைக்குப் பகையாகிய வினிய சொற்களையுடைய பள்ளப்பெண்கள் பவளம்போன்ற தமது செவ்வாய்க்குத் தீராப்பகையுள்ளது குமுதமலரென்றும், ஒள் நறும் குவளை நீலம் கண்பகை ஆகும் என்றும் கமலம் நல்முகத்துக்கு என்றும் திண் பகை ஆகும் என்றும் - ஒள்ளிய நல்லவாசனையையுடைய செங்குவளையுங் கருங்குவளையுங் கண்களுக்குப் பகையாமென்றுந் தாமரை அழகிய முகத்துக்கு என்றும் வைரம்பற்றிய பகையாமென்றும், செறுதல் போல் களைதல் செய்வார் - கொல்லுதல்போலக் களைந்தனர்கள்.

ஆம்பல், குவளை, நீலம், கமலம் - சாதியொருமைகள். செய்வார் இன்கு வகா இடமின்லை - இறந்தகாலத்தின்மேனின்றது. (௨௨)

கடைசியர்முகமுங்காலுங்கைகளுங்கமலமென்னார்
படைவிழிகுவளையென்னார்பவளவாய்குமுதமென்னா
ரடையவுங்களைந்தார்மள்ளர்பகைஞராயடுத்தவெல்லை
யுடையவனாணையாற்றலொறுப்பவர்க்குறவுண்டாமோ.

(இ-ள்.) மள்ளர் கடைசியர் முகமும் காலும் கைகளும் கமலம் என்னார்-பள்ளர்கள் தங்கள் பெண்களுடைய முகமும், காலும் கைகளும் தாமரையோடு உறவுடையனவென்று கருதாமலும், படை விழி குவளை என்னார்-வாள்போன்ற கண்கள் குவளையோடு உறவுடையனவென்று கருதாமலும், பவளம் வாய் குமுதம் என்னார்-பவளம்போன்ற வாய்கள் ஆம்பலோடுறவுடையன வென்று கருதாமலும், அடையவும் களைந்தார்-அவைகளை யொருசேரக் களைந்தார்கள், பகைஞராய் அடுத்த எல்லை உடையவன் ஆணை ஆற்றல் ஒறுப்பவர்க்கு உறவு உண்டு ஆமோ - உறவினர் பகைவராய் வந்தகாலத்து அரசனுடைய கட்டளை வழியினின்று தண்டிக்கும் வீரருக்கு உறவினர் என்ற தாட்சணியமும் உள்ளதோ (இல்லையென்றபடி)

• என்னார் எனனும் வினைமுற்றுகள் வேறுபல வழக்கிய வெச்சங்களாய்க் களைந்தார் என்னும் வினைமுற்றின் முதனிலையைத்தனித்தனிகொண்டன. முன்னர்த்தொடங்கிய பொருட்டிறமுடித்தற்குப் பின்னர் உலகறிபொருளாக வேறுபொருள்வைத்துக் கூறினமையால் வேற்றுப்பொருள் வைப்பணி. (௨௩)

புரையறவுணர்ந்தோர் நூலின் பொருளினுளடங்கியாநூல்
வரையறைகருத்துமானவளர்கருப்புறம்புதோன்றிக்
கரையமை கல்விசாலாக்கவிஞர்போலிறுமாந்துநூ
லுரையெனவிரிந்துகற்பின்மகளிர்போலொசிந்ததன்றே

(இ-ள்) வளர் கரு புரையற உணர்ந்தோர் நூலின் பொருளின் உள் அடங்கி - வளர்கின்ற கருவானது ஐயந்திரிபு என்னுங் குற்றம் நீங்கக் கற்றுணர்ந்த சான்றோர் இயற்றிய நூலின்கட் பொதிந்துகிடக்கும் பொருள்போல உள்ளடங்கியிருந்து, அந்நூல் வரையறை கருத்துமான புறம்புதோன்றி - அந்நூற் பொருளுக்கு வரையறைப்பட்ட கருத்தினைபோல வெளியேதோன்றி, கரை அமை கல்விசாலா கவிஞர்போல் இறுமாந்து - இலக்கணவரம்பு அமைந்த கல்வியிரம்பாத கவிகள்போலத்தலைநிமிர்ந்து, அந்நூல் உரை என விரிந்து - அந்நூலுக்குச் சான்றோரியற்றிய நூற்பொருள் விரிதல்போலக் கதிர்விரிந்து, கற்பின் மகளிர்போல் ஒசிந்தது-கற்புடைய பெண்கள் தமது தாளை நோக்குதல்போலத் தாளை நோக்கித் தலை வளைந்தது.

கல்விசாலாக்கவிஞர் உயர்திணையோடு சார்ந்த அஃறிணை உயர்திணை முடிபேற்றது. இன் உருபு - ஒப்புப்பொருட்டு. உரை பொருளின்மேல் நிற்றலால் சொல்லாகுபெயர். (௨௪)

அன்புறுபத்திவித்தியார்வநீர்பாய்ச்சுந்தொண்டர்க்
கின்புருவானவீசனின்னருள்விளையுமாபோல்
வன்புறுகருங்கான்மள்ளர்வைகலுஞ்செவ்விநோக்கி
நன்புலமுயன்றுகாக்கவிளைந்தனநறுந்தண்சாலி.

(இ-ள்.) அன்பு உற பத்தி வித்தி ஆர்வம் நீர் பாய்ச்சும் தொண்டர்க்கு இன்பு உருவான ஈசன் இன் அருள் விளையும் ஆபோல் - அன்புமிக்க பத்தியாகிய விதையை விதைத்து ஆதரவாகிய நீரைப்பாய்ச்சுகின்ற அடியார்களுக்கு ஆனந்தமே திருவுருவாகக் கொண்டருளிய சிவபெருமானது திருவருட்பயன் விளைவுவிளையும் வகையைப்போல, வன்பு உற கரும் கால் மள்ளர் வைகலும் செவ்வி நோக்கி நன்புலம் முயன்று காக்க - வலிமைமிக்க கரியகாலையுடைய பள்ளர்கள் நாள்தோறும் பருவமறிந்து நல்லபுலன்களுக்குச் செய்யு முயற்சிகளைச் செய்துகாக்க, நறும் தண் சாலி விளைந்தன - நல்லமணமுள்ள குளிர்ந்த நெற்பயிர்கள் விளைந்தன.

செய்யு முயற்சிகளாவன எருவிடுதல் முதலியன. பத்தி வேறு ஆர்வம் வேறாதலின், பத்தி வித்தி ஆர்வ நீர் பாய்ச்சும் என்றார். ஆறு ஈறு தொகுத்தல் "அன்பீனும் ஆர்வமுடைமை" என்றார் நாயனாரும். (உ௫)

அகனிலவேறுபாட்டினியல்செவ்வியறிந்துமள்ளர்
தகவினைமுயற்சிசெய்யக்காமநூல்சாற்றுநான்கு
வகைநலார்பண்புசெவ்வியறிந்துசேர்மைந்தர்க்கின்ப
மிகவிளைபோகம்போன்றுவிளைந்தனபைங்கூழெல்லாம்.

(இ-ள்.) மள்ளர் அகல் நிலம் வேறுபாட்டின் இயல் செவ்வி அறிந்து வினைமுயற்சி தக செய்ய - பள்ளர்கள் அகன்றநில வேற்றுமையினுடைய தன்மையையும் அந்நிலத்திற் பயிர்செய்யும் பருவத்தையும் உணர்ந்து தொழில் முயற்சிகளை அதற்குத் தகுதியாகச்செய்ய, பைங்கூழெல்லாம் - பசிய பயிர்களெல்லாம், காம நூல் சாற்றும் நான்கு வகை நல்லார் பண்பு செவ்வி அறிந்து சேர் மைந்தர்க்கு இன்பம் மிக விளைபோகம் போன்று விளைந்தன - காமநூல் கூறும் நான்குவகைப்பட்ட பெண்களுடைய தன்மையையும் பருவத்தையும் உணர்ந்து புணரும் புருடருக்கு இன்பமிகவும் விளையும் போகத்தையொத்து விளைந்தன.

நான்குவகைப்பட்ட பெண்களாவார் - பத்மினி, சித்தினி, சங்கினி, அத்தினி. விளைவும் போகமாகையால் போகம் போன்றென்றார். மகளிர்போல நிலமும் அம்மகளிரிடத்து விளையும்போகம்போல அந்நிலங்களின் போகமுமெனக் கூறியது வடநூல் முறைமைபற்றியென அறிக. இயல் பண்பு செவ்வி இவைகளினிடையிலும் இறுதியிலும் எண்ணும்மைகள் தொக்கன. (உ௬)

கொடும்பிறைவடிவிற்செய்தகூனிரும்பங்கைவாங்கி
முடங்குகால்வரிவண்டார்ப்பமுள்ளரைக்கமலநீல
மடங்கவெண்சாலிசெந்நெல்வேறுவேறரிந்தீடாக்கி
நெடுங்களந்தம்பொற்குன்றநிரையெனப்பெரும்போர்செய்தார்.

(இ-ள்.) கொடும் பிறை வடிவில் செய்த கூன் இரும்பு அம் கை வாங்கி - வளைந்தபிறையின் வடிவுபோலச்செய்த அரிவாளை (மருதநிலமாக்கள்) கையிலேந்தி, முடங்கு கால் வரிவண்டு ஆர்ப்ப முள்ளரை கமலம் நீலம் அடங்க வெண் சாலி செந்நெல் வேறு வேறு அரிந்து ஈடாக்கி - முடங்கிய கால்களையும் வரிகளையுமுடைய வண்டுகள்மேலெழுந்தொலிக்க முட்பொருந்திய தாளையுடைய தாமரைகளும் நீலோற்பலங்களும் ஒருசேர அடங்க வெண்ணெல்விளைவுகளையும் செந்நெல் விளைவுகளையும் வேறுவேறாக அரிந்து கற்றைகளாக்கி, நெடுங்களத்து அம்பொற் குன்றம் நிரையென பெரும்போர் செய்தார் - நெடிய போர்க்களத்தில் அழகிய

பொன்மலைகளின் வரிசைகளைப்போல வரிசை வரிசையாகப் பெரிய போர்கள் போட்டார்கள்.

பின்பக்கஞ்செருகியிருத்தலின் அங்கை வாங்கி யெனவும், கால்வகை அரைகளுள் கமலநிலங்கள் முள்ளரையுடையனவாதலால் முள்ளரைக்கமல நிலமெனவும் கூறினர். வெண்சாலிசெந்நெல் சொல்முரணணி. (௨௭)

கற்றைவைகளைந்துதூற்றிக்கூப்பியூர்க்காணித்தெய்வ
மற்றவர்க்கற்றவாறீந்தளவைகண்டாறிலொன்று
கொற்றவர்கடமைகொள்ளப்பண்டியிற்கொடுபோய்த்தென்று
டுற்றவர்சுற்றந்தெய்வம்விருந்தினர்க்கூட்டியுண்பார்.

(இ-ள்.) கற்றவை களைந்து தூற்றி கூப்பி-கற்றைகளாகிய வைக்கோலினின்றும் நெற்களைக்களைந்துதூற்றிப் பொலிகளாகக்குவித்து, ஊர்க் காணித் தெய்வம் அற்றவர்க்கு அற்றவாறு ஈந்து அளவைகண்டு-ஊர்க்காணித்தெய்வங்களுக்கும், தரித்திரர்களுக்கும் அறநிசெய்த முறைப்படி கொடுத்து அதன்பின்பு அளந்துதொகை செய்து, ஆறில் ஒன்று கொற்றவர் கடமை கொள்ள பண்டியிற் கொடுபோய் - ஆறிலொருகூற்றை அரசர்கள் தமது இறைப்பொருளாகக்கொள்ள ஏனை ஐவகைக் கூற்றுகளைப் பண்டியிற்கொண்டுசென்று, தென்று உற்றவர் சுற்றம்தெய்வம் விருந்தினர்க்கு ஊட்டி உண்பார்-பிதிரர்க்கும் சுற்றத்தார்க்கும் தெய்வங்களுக்கும் வந்த விருந்தினருக்கும் பகுத்துண்பித்துத் தாங்களும் உண்பார்கள்.

பிதிராவார் படைப்புக்காலத்துப் பிரமனால் படைக்கப்பட்ட ஒருவகைக் கடவுட்சாதியார் அவர்க்கிடம்தென்றிசை யாதலால் தென்றுடுற்றவர் எனவும், விருந்தினர் புதிதாய் வந்தவர் அவர்கள் முன்னறியப்பட்டிருத்தலிற்குறித்து வந்தவரும் அஃதின்மையிற் குறியாது வந்தவருமென இருவகையராதலால் பன்மைப்பொருள்பட விருந்தினரெனவும், தென்புலத்தார் முதலியோர்க்கு உண்பித்தலாகிய நால்வகையறங்களுந் தாமுயிரோடிருந்து செய்யவேண்டுதலின் தம்மைப் பாதுகாத்தலும் அறமாதலால் உண்பார எனவும், இல்வாழ்வோருக்கு இந்த ஐவகையிடங்களும் அறஞ்செய்தற்கு இடங்களாதலின் ஆறிலொன்று கொற்றவர் கடமைகொள்ளவெனவுங்கூறினர். " தென்புலத்தார்தெய்வம் விருந்தொக்கலொனென்றாங், கைம்புலத்தாறோம்பறலை" என்னுந் திருக்குறளானுணர்க. சுற்றஞ்சூழ்ந்தோர்மேனிற்றலில் வினைமுதற்பொருளில்வந்த தொழிற்பெயர். தெய்வம் சாதியொருமை. (௨௮)

சாறடுகட்டியெள்ளுச்சாமைகொள்ளிறுங்குதோரை
யாறிடுமதமால்யானைப்பழுக்குலையவரையேனல்
வேறுபல்பயறோடின்னபுன்னிலவிளைவுமற்று
மேறுபண்டியேற்றியிருநிலங்கிழியவுய்ப்பார்.

(இ-ள்.) சாறு அடு கட்டி எள்ளு சாமை கொள் இறுங்கு தோரை - கருப்பஞ்சாற்றால் காய்ச்சப்பட்ட வெல்லமும் எள்ளுஞ் சாமையுங் கொள்ளுஞ் சோளமும் மலைநெல்லும், ஆறு இடும் மதம் மால் யானை பழுகுலை அவரை ஏனல் பல்வேறு பயறோடு இன்ன புன்னிலம் விளைவுமற்றும் - வெள்ளம்போலும் உவட்டெடுக்கு மதமயக்கத்தையுடைய யானையின் பழுவெலும்பின் வரிசைபோன்ற வாழைக்குலைகளும் அவரையுந் தினையும் பலவகைப்பட்ட பயறுகளுமாகிய இப்புன்னிலப்பொருள்களையும் மற்றுள்ள பொருள்களையும், ஏறு பண்டி ஏற்றி இருநிலம்

கிழிய உய்ப்பார்-எருதுகளின்மேலும் பண்டிகளின்மேலும் ஏற்றிப் பெரியபூமி கிழி படச்செலுத்துவார்கள்.

மூன்னுள்ள ஒடு இசை நிறைத்தற் பொருளில்வந்த இடைச்சொல். பின்னுள்ள ஒடு எண்ணுப்பொருட்டு. இன்ன சுட்டுத்திரிபு. சாறுகெட்டி யானைப் பழுக்குலை இவை நன்னில விளைவுகளாயினும் பன்மைபற்றிய வழக்கால் புன்னில விளைவு என்றார். (உக)

துறவினரீசனேசத்தொண்டினர்பசிக்குநல்லூண்
டிறவினைப்பிணிக்குத்தீர்க்குமருந்துடற்பனிபுக்காடை
யுறைவிடம்பிறிதுநல்கியவரவரொழுகிச்செய்யு
மறவினையிடுக்கணீக்கியருங்கதியுய்க்கவல்லார்.

(இ-ள்.) துறவினர் ஈசன் நேசம் தொண்டினர் பசிக்கு நல் ஊண் திறம் வினை பிணிக்கு தீர்க்கும் மருந்து உடல் பனிப்புக்கு ஆடை உறைவிடம் பிறிதும் நல்கி- இருவகைப்பற்றுகளையும் அவற்றது நிலையாமையையும் நோக்கி முற்றத்துறந்தவர்களும் சிவநேசத்தையுடைய அடியார்களுமாகிய இவர்களுடைய பசிக்கு நல்லவுணவும் நீங்குதலில்லாத வினைவசத்தால் வரும் நோய்களுக்குத் துன்பந்தீர்க்கும் அவுடதமும் பனிமுதலியவற்றால்வரும் உடல் நடுக்கத்திற்கு வஸ்திரமும் வசித்தற்கு இடமும் வேண்டும் மற்றுள்ள பொருளும் (அங்ஙனமிட்டிலுள்ளார்) கொடுத்து, அவரவர் ஒழுகி செய்யும் அறம் வினை இடுக்கண் நீக்கி அரும் கதி உய்க்கவல்லார் - அத்துறவினரும் அடியார்களுந் தத்தமக்குரிய நிலைகளினின்று வழுவாது ஒழுகிச்செய்யும் தருமச்செயல்களுக்கும்வரும் இடையூறுகளை அவற்றொலொழித்து அரியமோக்ஷ வீட்டில் செலுத்தவல்லராவார்.

துறவினரும் சிவனடியார்களுந் தத்தமக்குரிய ஒழுக்கநெறிகளினின்று வழுவாது முடியச்செய்யுமளவும் அச்செய்கைகளுக்கு இடையூறுகளாகிய பசிநோய் குளிர் முதலியன இடையிற்புகுந்து வருத்தாமல் உண்டியுமருந்தும் உறையுளுங் கொடுத்தலால் நல்கி இடுக்கணீக்கி எனவும், இவைகளால் அவர் தத்தமக்குரிய நெறிவழுவாமல் நடத்துதலால் அருங்கதியுய்க்கவல்லாரெனவுங் கூறினார். " இல்வாழ்வானென்பா னியல்புடையமூவர்க்கு, நல்லாற்றினின்றதுணை " என்னுந் திருக்குறளானுணர்க. (௩௦)

நிச்சலுமீசனன்பர்நெறிப்படிற்சிறார்மேல்வைத்த
பொச்சமிலன்புமன்னர்புதல்வரைக்கண்டாலன்ன
வச்சமுங்கொண்டுகூசியடிபணிந்தினியகூறி
யிச்சையாறொழுகியுள்ளக்குறிப்பறிந்தேவல்செய்வார்.

(இ-ள்.) நிச்சலும் ஈசன் அன்பர் நெறிப்படில் - நாடோறுஞ் சிவபெருமானுடைய அடியார்கள் வழியில் எதிர்ப்பட்டால், சிறார்மேல் வைத்த பொச்சம் இல் அன்பும் மன்னர் புதல்வரை கண்டால் அன்ன அச்சமும் கொண்டுகூசி - தமது புத்திரர்கள்மேல்வைத்த உண்மையான அன்பையும் அரசர்களுடைய புத்திரர்களைக்கண்டா லொத்தபயத்தையுங்கொண்டு அகலாமலும் அணுகாமலும், அடிபணிந்து இனியகூறி இச்சை ஆறு ஒழுகி உள்ளக்குறிப்பு அறிந்து ஏவல் செய்வார் - அவ்வடியார் திருவடிகளைவணங்கி இன்சொற்கள் கூறி அவர்கள் இச்சையின் வழித்திறம்பாது நடந்து அவர்களேவாதிருக்கவே மனக்குறிப்பினையுணர்ந்து ஏவும்பணி வினைச்செய்து நிற்பார்கள்.

ளாகிய வுறுப்புகள் தாங்கச்செய்த பொன்னாலியன்ற ஆபரணமே, கோயில் மடம் அறப்புறம் நீர்ச்சாலை இன் அமுது அருத்து சாலை என உருத்திரிந்தது-திருக்கோயிலும் மடமுந் தருமசத்திரமும் நீர்வாக்குஞ்சாலையும் இனியவன்னத்தை உண்பிக்குஞ் சாலையுமென உருவந்திரிந்ததென்று சொல்வதன்றி, பின் எவன் உரைப்பது - வேறேயாதுசொல்லக்கிடந்தது, (அதுவேயென்றபடி.)

பின் என்னும் இடைச்சொல் இங்கு வேறென்னும் பொருள்மேனின்றது. கலன்|சாதி யொருமை, அம்மா-அசைநிலை. நாட்டையும் ஊர்களையும் பெண்ணாகவும் உறுப்புகளாகவும் உருவகஞ் செய்து அவ்வுறுப்புகள் தாங்கிய கலன்கள் இவ்வகையாகத் திரிந்ததெனக் கூறுதலின் திரிபதிசயவணி. (௩௩)

திணைமயக்கம்—கலிநிலைத்துறை.

இன்றடப் புனல்வேலிசூழிந்நிலவரைப்பிற்
குன்றமுல்லைதண்பணைநெய்தல் குலத்திணைநான்கு
மன்றவுள்ளமற்றவைநிற்கமயங்கியமரபி
னொன்றோடொன்றுபோய்மயங்கியதிணைவகையுரைப்பாம்.

(இ-ள்.) இன் தடம் புனல் வேலி சூழ் இ நிலவரைப்பில் - இனிய பெரிய நீர் நிலஞ்சூழ்ந்த இப்பாண்டி நாட்டெல்லையில், குன்றம் முல்லை தண்பணை நெய்தல் நான்கு குலத்திணையும் மன்ற உள்ள அவைநிற்க - குறிஞ்சியும் முல்லையும் குளிர்ச்சி பொருந்திய மருதமும் நெய்தலும் ஆகிய நான்கு குலத்திணைகளுந் தேற்றமாக வுள்ளன அந்நிலங்கள் நிற்க, மயங்கிய மரபின் ஒன்றோடு ஒன்று போய் மயங்கிய திணைவகை உரைப்பாம்-மயக்கமரபால் ஒரு நிலக்கருப் பொருளோடு மற்றொரு நிலக்கருப்பொருள் சென்று மயங்கிய திணைமயக்கக் கூறுபாட்டைச்சொல்லுவாம்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல். "முல்லைகுறிஞ்சி மருதம் நெய்தல் எனச்சொல்லிய முறையாற் சொல்லவும்படுமே" என்ற சூத்திரத்தால் ஏனைய நிலங்கள்போலப் பாலையென வொன்றின்மையால் திணைநான்கெனக் குன்ற முல்லை தண்பணை நெய்தல் எனக்கூறினாரேனும் பாலை யவற்றுளடங்கும். "முல்லையுங்குறிஞ்சியு முறைமையிற்றிரிந்து, நல்லியல்பழிந்து நடுங்குதுயருறுத்துப், பாலையென்பதோர்படிவங்கொள்ளும்" என்பதனாலும், பாலைக்கு ஆசிரியர் நடுவணது என்றிட்ட குறியீடானும். "வெங்கதிர்ப்பிரான் நண்பகற்போதினில்வேனில், மங்கைகொங்கைதோய்ந்தளித்திடும் பாலையாமைந்தன், அங்கணானிலவரசர் பாலிரந்தவன்முரம்பு தங்குசூழலிற் சிற்றரசாள்வதுமுளதால்". என்பதனாலுமுணர்க. முல்லையுங் குறிஞ்சியுந்திரிந்து பாலையாமென்றிருக்க நானிலவரசர்பால் எனக் கூறியது என்னையெனில், நால்வகை நிலத்துக்குமுரிய புணர்தல் இருத்தல் இரங்கல் ஊடல் என்னும் நால்வகை உரிப்பொருள்கட் கிடையிடையே நிகழும் பிரிவு இந்நிலத்ததாதலினென்க. மன்றவுள்ள என்னுஞ் சொலாற்றலால் திணைவளங்கள் கூறினோமெனவும், அவைநிற்க வென்றமையால் கூறி முடிந்ததெனவும் போந்தனவுணர்க. தொல்-சொல்லதிகாரம் இடையியல். "மன்றவென்கிளவி தேற்றஞ்செய்யும்" என்னுஞ்சூத்திரத்தால் தெளிவு பொருண்மையை யுணர்க. நான்கு நிலப்பொருள்களும் ஒருசேர இருப்பது நாட்டிற்குப்பெருவளமுடைமையால் திணைமயக்கமெனக்காவியங்களுட் கூறிவருவது சான்றோராட்சி. திணைமயக்கமாவது - ஒரு நிலக்கருப்பொருளோடு மற்றொரு நிலக்கருப்பொருள்வந்து கூடல். மயக்கமெனினுங் கூட்டமெனினும் தம்முளொக்கும், அகப்பொருள்விளக்கம். ஒழிபியல்,* "முத்திறப்பொருளுந் தத்தம்

திணையோடு, மரபின்வாராதுமயங்கலுமுரிய" என்ற சூத்திரத்தாலும் "உரிப்பொருளல்லன மயங்கவும்பெறுமே" என்ற அகத்திணையியல் சூத்திரத்தாலும் மயங்கிய மரபின் என்றார். முத்திறப்பொருளாவன - நிலப்பொருள் கருப்பொருள் உரிப்பொருள். பாலைக்கருப்பொருள் மயக்கமும் பின்னர் வருதல் காண்க.

திணையென்பத னிறுதியில் நிற்கவேண்டு முற்றும்மை நான்கு என்பதனிறுதியில் நின்றது பொருத்தமில் புணர்ச்சி.

> கொல்லையானிரைமேய்ப் பவர்கோழிணர்க் குருந்தி
> னொல்லைதாயதிற்படர்கறிக்கருந்துணருகுப்ப
> முல்லைசோறெனத்தேன்விராய்முத்திழைசிற்றில்
> எல்லையாயமோடாடுமெயினசிறுமகளிர்.

(இ-ள்.) கொல்லை ஆன் நிரை மேய்ப்பவர் கோழ் இணர் குருந்தின் ஒல்லை தாய் அதில் படர் கருந்துணர் கறி உகுப்ப - முல்லைநிலத்தில் பசுக்கூட்டத்தை மேய்க்கும் இடையர்கள் கொழுவிய பூங்கொத்தையுடைய குருந்தமரத்தில் விரைந்து தாவி யேறி அம்மரத்தில் குறிஞ்சியினின்று படர்ந்த பெரிய கொத்திலுள்ள மிளகுகளை உதிரப்பார்கள், எயின் சிறு மகளிர - பாலைநிலத்திலுள்ள வேடச்சிறுமியர், முத்து இழை சிற்றில் எல்லை முல்லை சோறு என தேன் விராய் ஆயமோடு ஆடுப - நெய்தனிலத்திலுள்ள முத்தாற்கோலிய சிறுவீட்டில் முல்லைநிலத்திலுள்ள முல்லை அரும்பே சோறாக அதனோடு தேன் கலந்து பெண்கள் கூட்டத்தோடு விளையாடுவார்கள்.

இதனால் முல்லைநிலத்தோடு குறிஞ்சிநிலத்துக்கும் பாலை நிலத்தோடு முல்லைக்கும் குறிஞ்சிக்கு நெய்தலுக்கு மயக்கங் கூறினார்.

குருந்தின்-ஒல்லைதாய் அதிற்படர் கறிக்கருந்துணருகுப்ப எனப் பாடங் கூறுவாருமுளர். அதிலுங் கறித்துணருங் குறிஞ்சிநிலப் பொருளாதலால் அத்துணைச் சிறப்பின்றென வறிக. (௩௫)

> கன்றுறுங்களிவண்டுவாய்நக்கவீங்கரும்பு
> மென்றுபொன்சொரிவேங்கைவாயுறங்குவமேதி
> குன்றிளந்தினைமேய்ந்துபூங்கொழுநிழன்மருதஞ்
> சென்றுறங்குவசேவகமெனமுறச்செவிமா.

(இ-ள்.) மேதி கன்றுறும் களிவண்டுவாய் நக்க ஈர்ம் கரும்பு மென்று பொன்சொரி வேங்கை வாய் உறங்குவ - (மருதநிலத்திலுள்ள எருமைகள் தமது கன்றுகளோடு மதுமயக்கமுடைய வண்டுகளுந் தமது கடைவாயை நக்காநிற்கக்குளிர்ந்த கரும்பைக் குதட்டிப் பொன்போன்ற மலர்களைச் சொரியும் (குறிஞ்சிநிலத்திலுள்ள) வேங்கைநிழலின்கட் கண்ணுறங்கும், குன்று முறச் செவிமா - குறிஞ்சிநிலத்திலுள்ள முறம்போன்ற செவியையுடைய யானைகள், இளந்தினை மேய்ந்து பூ மருதம் கொழுநிழல் சென்று சேவகமென உறங்குவ - (அந்நிலத்திலுள்ள) முதிராத தினைக் கதிர்களை மேய்ந்து மருதநிலத்திலுள்ள பூங்கொத்துகளையுடைய மருதமரத்தின் கொழுவிய நிழலின்கீழ்ச்சென்று தான் துயிலுமிடமாகக் கண்ணுறங்கும்.

இதனால் மருதநிலத்தோடு குறிஞ்சிநிலத்துக்கும் குறிஞ்சிநிலத்தோடு மருதநிலத்துக்கும் மயக்கங்கூறினார்.

ஈர்ங்கரும்பு - ஈறுதொக்கவழி வருமொழி வல்லெழுத்துக்கு இனவெழுத்து மிகுதல் உரிச்சொற்றொடராதலால். "இடையுரிவடசொலினியம்பியகொளாதவும்" என்னுஞ் சூத்திரத்தாற்கொள்க. பொன் - பூமேனிற்றலால் உவமையாகுபெயர். தினை - கதிர் மேனிற்றலால் முதலாகுபெயர். கன்றொடுங்களிவண்டினொய்க்க என்றது - மாலையுமுடியுங்கவிகதானென்றாற்போல வேறுவினைப் பல்பொருள் விரவிச் சிறப்பினால் ஒருமுடிபேற்றுவந்த மரபுவழுவமைதி. (௧௬)

எற்றுதெண்டிரையெறிவளையெயிற்றியரிழைத்த
சிற்றில்வாய்நுழைந்தழிப்பவச்சிறுமியர்வெகுண்டு
பற்றிலாரெனச்சிதறியமணவணிபரதர்
முற்றிலாமுலைச்சிறுமியர்முத்தொடுங்கோப்ப

(இ-ள்.) எற்று தெண்டிரை எறிவளை எயிற்றியர் இழைத்த சிற்றில் வாய் நுழைந்து அழிப்ப-(நெய்தனிலத்திற்) கரையோடுமோதுந் தெள்ளிய அலைகள்வீசிய சங்குகள் வேடச்சிறுமியர் கோலிய சிற்றிலிற்புகுந்து அதன் வடிவை யழிக்க, அச்சிறுமியா வெகுண்டு பற்றிலார் என சிதறிய மணவு அணி - அவ்வேடச் சிறுமியர் கோபங்கொண்டு பற்றற்றவர்கள்போலக் கழற்றி வீசிய அக்குமணி ஆபரணத்தை, பரதர் முற்று இலா முலை சிறுமியர் முத்தொடும் கோப்ப - நெய்தனிலமாக்களுடைய முதிராத தனத்தையுடைய பரதச்சிறுமியர் தமது நிலத்திலுள்ள முத்துகளோடுங் கோவைசெய்வார்கள்.

இதனால் நெய்தனிலத்தோடு பாலை நிலத்துக்கும், பாலைநிலத்தோடு நெய்தனிலதுக்கும் மயக்கங் கூறினார்.

எயிற்றியா சிறுமியர் ஒருமையிற் பன்மைவந்த பால்வழுவமைதிகள். கோப்ப பலர்பாற் படர்க்கை வினைமுற்று, உகுப்ப என்பது மது. (௧௭)

முல்லைவண்டுபோய்முல்லையாழ்முளரிவாய்மருதம்
வல்லவண்டினைப்பயிற்றிப்பின்பயில்வனமருதங்
கொல்லையானமடியெறிந்திளங்குழவியென்றிரங்கி
யொல்லையூற்றுபால்வெள்ளத்துகள்வனவாளை.

(இ-ள்.) முல்லை வண்டு போய் முல்லை யாழ் - முல்லை நிலத்திலுள்ள வண்டுகள் மருதநிலத்திற் சென்று அம்முல்லைநிலப்பண்ணை, முளரி வாய் மருதம் வல்ல வண்டினை பயிற்றி மருதம் பின் பயில்வன - தாமரையி லிருக்கும் மருதப்பண்ணில் வன்மையையுடைய வண்டுகளுக்குக் கற்பித்து அம்மருதப்பண்ணைப் பின்பு கற்கா நிற்கும், வாளை - மருதநிலத்திற்றுள்ளிய வாளைமீன்களும், கொல்லை ஆன் மடி எறிந்து - முல்லை நிலத்திலுள்ள பசுவின் மடியில் மோத, இளம் குழவியென்று இரங்கி ஒல்லை ஊற்றுபால் வெள்ளத்துள் உகள்வன - (அப்பசுவானது) தனது இளங்கன்று முட்டியதென்று மனங்கனிந்து விரைந்து சொரியும் பால்வெள்ளத்துள் தாவாநிற்கும்.

இதனால் முல்லைநிலத்தோடு மருதநிலத்துக்கும் மருதநிலத்தோடு முல்லைநிலத்துக்கும் மயக்கங்கூறினார்.

யாழ் பண்மேனிற்றலால் கருவியாகுபெயர். ஐ உருபுமயக்கம். எறிந்துசெயவெனெச்சத்திரிபு. ஒல்லை வினையெச்சப் பொருளில் வந்த இடைச்சொல். தொ - பொருளதிகாரம் மரபியல். "குஞ்சரம்பெறுமே குழவிப்பெயர்கொடை" என்ற சூத்திரத்தின்பாற்படுத்தி. "ஆவும் எருமையு மதுசொலப்படுமே" எனக் கூறுதலால்

பசுவின் கன்றைக் குழவியென்றார். முல்லை யாழ் மருதம் வல்ல வண்டினைப்பயிற்றி மருதம் பின்பயில்வன என்றது பரிவருத்தனையணி. (௩௮)

கரும்பொற்கோட்டிளம்புன்னைவாய்க்கள்ளுண்டுகாளைச்
சுரும்புசெவ்வழிப்பாண்செயக்கொன்றைபொன்சொரிவ
வருந்தடங்கடல்வளையெடுத்தாழியான்கையி
லிருந்தசங்கெனவிறைகொளப்பூவைமேலெறிவ.

(இ-ள்.) காளை சுரும்பு கரும் பொன் கோடு இளம் புன்னைவாய் கள் உண்டு செவ்வழி பாண் செய - ஆண் வண்டுகள் (நெய்தனிலத்திலுள்ள) இரும்பையொத்த கரிய கொம்புகளையுடைய முதிராத புன்னைமலரின் மதுவையுண்டு அந்நிலத்துக்குரிய செவ்வழிப் பண்ணினைப் பாடாநிற்க, கொன்றை பொன் சொரிவ - (முல்லைநிலத்திலுள்ள) கொன்றைமரங்கள் (வள்ளன்மையுடையோர்போல) மலராகிய பொன்னைச் சொரியாநிற்கும், அரும் தடம் கடல் வளை யெடுத்து - அளத்தற்கரிய பெரிய கடலானது (அலையாகிய கையால்) சங்கினையெடுத்து, ஆழியான் கையில் இருந்த சங்கு என பூவை மேல் இறை கொள எறிவ - திருமாலினுடைய கையில் நிலைபெற்ற பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கைப்போல முல்லைநிலத்திலிருக்கும் காயாஞ்செடியின்மேல் நிலைபெற வீசாநிற்கும்.

இதனால் நெய்தனிலத்தோடு முல்லைநிலத்துக்கு மயக்கங் கூறினார்.

வெண்பொன் செம்பொன் என நிற்றலால் பொன் என்னும் பெயர்ச் சொல்லின் பொதுமை நீங்கப் பிறிதொடியையின்மை நீக்கிய விசேஷணந் தந்து கரும்பொன் என்றார். காளைச்சுரும்பென்னுந் தொடரில் காளை இளமையெனின்றது. செவ்வழி நெய்தனிலப்பண். பொன் உவமைப் பொருண்மே னிற்றலால் உவமையாகு பெயர். (௩௯)

கருந்தடெங்கினொண்பழம்பரீஇமுட்பலாக்கனிகீண்
டழிந்ததேனுமவர்க்கேணிபாய்ந்தகற்றுவவுவரை
வழிந்ததேன்மடற்கேதகைமலர்நிழல்குருகென்
றொழிந்ததாமரைப்போதுபுக்கொளிப்பனகெண்டை.

(இ-ள்.) கழிந்த தெங்கின் ஒண் பழம் பரிஇ - (மருதநிலத்தில்) குலையினின்று நீங்கிய தென்னைமரத்தின் ஒள்ளிய நெற்றுகள் விழுந்து கிழித்தலால், முள் பலா கனி கீண்டு அழிந்த தேன் - (அதன்கீழ்க் குறிஞ்சிநிலத்திலுள்ள புனத்தில்) முள்ளையுடைய பலாப்பழங்கள் கிழிபட்டுச் சிந்திய தேன்பெருக்கு, உவர்க்கேணி பாய்ந்து உவரை அகற்றுவ - (நெய்தனிலத்திலுள்ள) உவர்ப்புக் கேணியிற்பாய்ந்து அதிலுள்ள உப்பை நீக்காநிற்கும், கெண்டை - மருதநிலத்திலுள்ள கெண்டை மீன்கள், தேன்வழிந்த மடல் கேதகை மலர் நிழல் குருகு என்று - நெய்தனிலத்தில் தேன்சிந்திய இதழ்களையுடைய தாழைமலரின் நிழலை மருதநிலத்திலுள்ள கொக்கென்று அஞ்சி, ஒழிந்த தாமரைப்போது புக்கு ஒளிப்பன - (அந்நிலத்துக்குரிய) அப்புறமுள்ள இருந்து நீங்கியதாமரை மலரிற்புகுந்து ஒளிக்கும்.

கெண்டை மருதநிலக் கருப்பொருள். மருதநிலத்தோடு குறிஞ்சிக்கும் நெய்தலுக்கும் நெய்தனிலத்தோடு மருதத்துக்கும் மயக்கங் கூறினார்.

பரீஇ பரிவி யென்னும் வினையெச்சஞ் சொல்லிசை நிறைத்தலில் வந்த உயிரளபெடை. (௪௦)

ஆறுசூழ்கழிபபுலால்பொறாதசைந்துகூன்கைதை
சோறுகால்வனவாம்பல்வாய்திறப்பனதுணிந்து
கூறுவாரெனக்குவளைகண்காட்டிடக்கூடித்
தூறுவாரெனச்சிரித்தலர்தூற்றுவமுல்லை.

(இ-ள்.) கூன் கைதை - நெய்தனிலத்திலுள்ள வளைந்த வடிவினையுடைய தாழைமலர்கள், ஆறு சூழ் கழி புலால் பொறாது அசைந்து சோறு கால்வன - ஆறுகட் பட்டினத்தின் புறம்பு சூழ்ந்த வுப்பங்கழியின் புலால் நாற்றத்தைச் சகியாமல் உடம்புகூசிச் சோற்றைக்கக்க (மகரந்தத்தை யுகக்கவென்றபடி) ஆம்பல்வாய் திறப்பன - (அதற்கு நேரே மருதநிலத்திலுள்ள) ஆம்பல்கள் (உண்பவர்போல) வாய் திறக்கும் (மலரும் என்றபடி) குவளை துணிந்து கூறுவார் என கண்காட்டிட - அந்நிலத்திலுள்ள குவளை மலர்கள் மனந்துணிந்து ஒருவர் குற்றத்தை வெளிப்படுத்துவார்போலக் கட்சமிக்கைகாட்ட (மலர என்றபடி) முல்லை - முல்லைநிலத்திலுள்ள முல்லைச்செடிகள், கூடி தூறுவார் என சிரித்து அலர்தூற்றுவ - (ஒருவன் குற்றத்தைக் கண்டவிடத்து) தம்முட்கூடிப் பழிதூற்றுவாரைப்போல நகைத்துப் பலரறியச்செய்யும் (அரும்பிப் பழுப்பூவைச்சிந்தும் என்றபடி.)

இதனால் நெய்தனிலத்திேனாடு மருதநிலத்துக்கும் முல்லை நிலத்துக்கு மயக்கங் கூறினார்.

கால்வன என்னும் வினைமுற்று எச்சமாய்த் திறப்பன வென்னும் பிறவினை முதல்வினையின் முதனிலைகொண்டது. (சக)

துள்ளுசேலவிழிநுளைச்சியர்சுறவொடுமருந்தக்
கள்ளுமாறவுங்கூனலங்காய்தினையவரை
கொள்ளுமாறவுங்கிழங்குதேன்கொழுஞ்சுவைக்கன்ன
லெள்ளுமாறவுமளப்பனவிடைக்கிடைமுத்தம்.

(இ-ள்.) துள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவு ஒடும் அருந்த கள்ளு மாறவும் - தாவுகின்ற சேலின் பிறழ்ச்சியைப்போலும் பிறழ்ச்சியையுடைய கண்களையுடைய நெய்தனிலப்பெண்கள் சுறாமீனோடும் உண்ணக் கள்ளுக்கு மாறவும், கூனலம் காய் தினை அவரை கொள்ளு மாறவும் - புளியங்காய்க்குந் தினைக்கும் அவரைக்குங் கொள்ளுக்கு மாறவும், கிழங்கு தேன் கொழும் சுவை கன்னல் எள்ளு மாறவும் அளப்பன - கிழங்குக்கும் தேனுக்கு மிக்க சுவையையுடைய கரும்புக்கும் எள்ளுக்கு மாறவும் அளக்கும் பொருள்கள், இடைக்கு இடை முத்தம் - மாறப்படும் பொருளளவுக்கேற்ப மாறும் பொருளளவு முத்தங்களாம்.

கூனலங்காய் - வளைந்தகாய். மாறுதலாவது - ஒருபண்டங் கொடுத்து மற்றொரு பண்டங் கொள்ளல். மாறுதல் ஒரு பண்டம் - மாறப்படுதல் மற்றொருபண்டம், கள்ளு கரும்பு மருதநிலக்கருப்பொருள்கள். கூனலங்காய் தினை கிழங்கு தேன் குறிஞ்சிநிலக் கருப்பொருள்கள். அவரை கொள்ளு எள்ளு முல்லை நிலக் கருப்பொருள்கள்.

இதனால் நெய்தனிலத்தோடு மருதத்துக்குங் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் மயக்கங் கூறினார் அளப்பன-வினைமுதல். முத்தம்-பயனிலை. தொக்குநின்ற நான்கனுருபுகள் கோடற்பொருளன. விரிந்துநின்ற நான்கனுருபு எல்லைப்பொருட்டு.

இது பரிவருத்தனையணி. (சஉ)

அவமிகும்புலப்பகைகடந் துயிர்க்கெலாமன்பா
நவமிகுங்குடைநிழற்றிமெய்ச்செய்யகோனடாத்திச்
சிவமிகும்பரஞானமெய்த்திருவொடும்பொலிந்து
தவமிருந்தரசாள்வது தண்டமிழ்ப்பொதியம்.

(இ-ள்.) அவம் மிகும் புலம் பகை கடந்து - கேடுமிகுந்த ஐம்புலனாகிய பகையை வென்று, உயிர்க்கு எலாம் அன்பு ஆம் நவம் மிகும் குடைநிழற்றி - எல்லாவுயிர்களிடத்தும் அருளாகிய புதுமை மிகுந்த குடைநிழலைச்செய்து, மெய்செய்ய கோல் நடாத்தி - மெய்யுணர்வாகிய செங்கோலைச் செலுத்தி, சிவம் மிகும் பரஞானம் மெய் திருவொடும் பொலிந்து - மங்கலமிக்க பரஞானமாகிய அழியாத செல்வத்தோடும் விளங்கி, தவம் இருந்து அரசு ஆள்வது தண் தமிழ் பொதியம் - தவமிருந்து அரசு செய்யுமிடம் குளிர்ந்த தமிழ்தோன்றிய பொதியமலையாம்.

ஐம்புலன் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், இவை பிறவிக்கு வித்தாதலின் அவமிகும் எனவும், தவஞ் செய்வோர் உண்டி சுருங்கல் முதலிய செயல்களால் மனம் புலன்வழிச் செல்லாமல் நிறுத்தவேண்டுதலின் புலப்பகை கடந்தெனவும், தம்முயிர்போலப் பிறவுயிர்களிடத்தும் அருளுடைமை வேண்டுதலின் அன்பாம் நவமிகுங்குடை நிழற்றி எனவும், பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் உண்மையானுணரவேண்டுதலின் மெய்ச்செய்ய கோல் நடாத்தி எனவும், இவற்றின் பயனாய் அமங்கலமுடையோனைப் பொருளெனக்காட்டும் போதம்போலாது அன்னோரைக் கீழ்ப்படுத்தி மங்கலசொரூபமாம் பரசிவத்தை மேற்படுத்திக் காட்டும் திருவடிஞானம் பரஞானமாதலின் சிவமிகும பரஞான மெய்த்திருவொடும் பொலிந்து எனவும், தவத்தினாற்றலைத் தவத்தின்மேலேற்றிக்கூறுதலின் தவமிருந்தரசாள்வது எனவும், அகத்தியருக்குரிய தானமாதலால் தண்டமிழ்ப் பொதியமெனவுங் கூறினார்.

தமிழால் அகத்தியனென வந்தது, "மாறிடத்தழலும் வேற்படை வஞ்சிமன்னவசெந்தமிழ்மயில்யாம், கூறுமூவேந்தர் மணிமுடிதுளக்கக் குலவினோம் நின்குலத்தொருவன், ஆறுசேர்சடையானவையுணமெய்ம்மை யணிசெய்தான் ஆரியப்பொதுப் பெண், சீறுமென்றுணர்ந்தாய் நீயிவண்மதியாய் திருமுனியலையமேறவமே" என்பதனாலுணர்க. "அருளென்னுமன்பீன்குழவி" என்றதனால் அருள்பிறத்தற்கு அன்பு காரணமாதலின் அன்பாமெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார். ஆள்வது என்னும் வினைமுற்று இடப்பொருண்மேனின்று பெயராயிற்று. கு உருபு மயக்கம்.

வானயாறுதோய்ந்துயரிய மலயமேமுக்கண்
ஞானநாயகனைப மலைபோர்த்தகார்நால்வா
யானையீருரியம்மழைமுகப்பதன்புண்ணீர்
கூனல்வான்சிலை குருதிதோய்கோடுபோன்றன்றே.

(இ-ள்.) வான யாறு தோய்ந்து உயரிய மலயம் ஏ முக்கண் ஞான நாயகன் - ஆகாயகங்கையை யளாவ வுயர்ந்த பொதியமலையே திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான், அம்மலை போர்த்த கார் ஏ - அப்பொதியத்தைச் சூழ்ந்த மேகமே, நால் வாய் ஆனை ஈர் உரி - தொங்குகின்றவாயையுடைய யானையினின்றும் உரித்துப் போர்த்த தோலாம், அம் மழை ஏ அதன் அசும்பு புண்ணீர் - அம்மேகத்தின் மழைத்துளி அத்தோலினின்றுந் துளிக்கும் உதிரமாம், கூனல் வான் சிலை குருதி தோய் கோடு போன்றன்று - அம்மேகத்திற் புலப்படும் இந்திரதனுசே உதிரந்தோய்ந்த அவ்வானையின் கொம்பை யொத்தது.

கயாசுரனென்னும் ஓரசுரன் மேருமலைமேற்சென்று நீடித்த வாயுளும் வலிமையும் வேண்டிப் பிரமனைக்குறித்துத் தவஞ்செய்யப் பிரமன் வெளிப்பட்டு அவன் கருதியவற்றைத்தந்து சிவபெருமான் திருமுன்னர்ச்சென்றால் இவ்வரம் அழியுமென அருளிச்சென்றனன், இவ்வரம் பெற்ற கயாசுரன் தேவர் முதலியோரைப் புறங்கண்டு திரிய, அதனைக் கண்டுணர்ந்த முனிவர் பயந்து காசி நகரையடைய அவர்களைவிடாது கயாசுரன் பின்செல்லுதலால் அம்முனிவர்கள் மணிகர்ணிகையிற் புகுந்து சிவபெருமானைச் சரணடைந்தனர், அக்கயாசுரன் தனக்குப் பிரமனருளிய வரத்தைக் கருதாது கோபங்கொண் டம்மணிகர்ணிகையிற்செல்லச் சிவபெருமான் உக்கிரரூபங்கொண்டு அவன்முன்செல்ல, அவன்போர்செய்யத் தொடங்கும்போது அச்சிவபெருமான் அவனைக் காலாலுதைத்துப் பிளந்து அவன்றோலை யுரித்துப் போர்த்தருளினன். கந்தபுராணம் - தக்ஷகாண்டம் - ததீசியுத்தரப்படலம்.

“மதித்துவேழமாந்தானவனெதிர்தலும்வடவை
யுதித்தவன்னியுமச்சுறவெரிவிழித்தொருதன்
கதித்ததாள்கொடுதள்ளவேகயாசுரன்கவிழ்ந்து
பதைத்துவீழ்தலுமிதித்தனன்சிரத்தையோர்பதத்தால்

“ஒருபதத்தினைக்கவானுறுத்திருகரத்துகிரால்
வெரிநிடைப்பிளந்திரிருதாள்புடைமேவக்
குருதிகக்கியேயோலிடவவுணர்தங்குலத்துக்
கரியுரித்தனன்கண்டுநின்றம்மையுங்கலங்க”

“ஆளுநாயகனஃதறிந்துயிர்த்தொகையனைத்தும்
வாளிலாதுகண்ணயர்வதுமாற்றுதன்மதித்து
நீளிருங்கரியுரித்திடுமதளினைநிமலன்
றோளின்மேற்கொடுபோர்த்தனனருள்புரிதொடர்பால்

தோய்ந்து செயவெனெச்சத்திரிபு. தேற்றேகாரத்தைப்பிரித்து வினையிடங்களிற் கூட்டிய பொருள்கோடல் - ஒருசொல்நின்று தனித்தனி யுதவுதலென்னும் விதிமுதனிலைத்தீவகவணியெனினு மொக்கும். கங்கையைத் தோய்தலால் மலையை முக்கண்ஞானநாயகன் என்றது ஏது உருவகவணி. (௪௪)

சுனையகன் கரைச்சூழல்வாய்ச்சுரும்புசூழ்கிடப்ப
நனையவிழ்ந்தசெங்காந்தண்மேனறுவிளவேங்கைச்
சினையவிழ்ந்தவீகிடப்பபொன்றோய்கலத்தெண்ணீ
ரனையபொன்சுடுநெருப்பொடுகரியிருந்தனைய.

(இ-ள்.) சுனை அகன் கரை சூழல் வாய் சுரும்பு சூழ் கிடப்ப - பொதியமலையிலுள்ள சுனையின் இடப்பரந்த கரையின்கண் வண்டுகள் புறத்திற் சூழ்ந்து கிடக்க, நனை அவிழ்ந்த செம் காந்தள்மேல் நாறு இள வேங்கை சினை அவிழ்ந்த வீ கிடப்ப - அரும்பவிழ்ந்த செங்காந்தள் மலர்மேல் முதிராத வேங்கைமரத்தின் கிளையில் மலர்ந்த மலர்கிடத்தல், பொன் தோய்தெள் நீர் கலந்து - காய்ச்சிய பொன்னைத் தோய்த்த தெள்ளிய நீரையுடைய பாத்திரத்தையும், அனைய பொன் சுடு நெருப்பு ஒடு கரி இருந்தது அனைய - அப்பொன்னைச் சுடும் நெருப்பினோடு கரியிருத்தலையு மொத்தன.

சுனையைப் பொன்தோய்தெண்ணீர்க்கலமாகவும் வண்டினைக் கரியாகவும் செங்காந்தள்மலரை நெருப்பாகவு வேங்கைமலரைப் பொன்னாகவுங் கொள்க.

அகம்-அகன் இறுதிநிலைப்போலி. குழல்வாய், காகின இவையின் முறைதந்து நிற்கும் ஒருபொருட் பன்மொழிகளாதலால் வழாநிலைகள. இடப்ப இரண்டனுள் முன்னது நிகழ்காலவினையெச்சம், பின்னது பலவின்பாற்படர்க்கை எதிர்காலவினைமுற்றும் அதினின்றுபிரிந்த தொழிற்பெயர்வினைமுதலாய் அனைய என்னுங்குறிப்பு முற்றுப் பயனிலைகொண்டது. அனைய இரண்டனுள் முன்னது சுட்டுத் திரிபு, பின்னது இடைச்சொல்லடியாகப்பிறந்த பலவின்பால் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று.

இஃது ஒப்புமைக்கூட்டவுவமையணி.

குண்டுநீர்ப்படுகுவளைவாய்க்கொழுஞ்சினைமரவம்
வண்டுகூப்பிடச்செம்மறாய்ப்புதுமதுவார்ப்ப
வண்டர்வாய்ப்படமறைவழிப்பொரிசொரிந்தானெய்
மொண்டுவாக்கிமுத்தீவினைமுடிப்பவரனைய.

(இ-ள்.) குண்டு நீர்ப்படு குவளைவாய் - ஆழமாகிய சுனையின் நீரில் உண்டாகிய செங்கழுநீர் மலரிடத்து, கொழும் சினை மரவம் வண்டு கூப்பிட செம்மல் தாய் புது மதுவார்ப்ப - கொழுவிய கிளைகளையுடைய குங்கும மரங்கள் வண்டுகள் ஒலிக்கப் பழம் பூக்களைச்சொரிந்து புதிய தேனை யொழுகுதல், அண்டர்வாய்ப்பட மறைவழி பொரிசொரிந்து ஆன் நெய் மொண்டுவாக்கி முத்தீவினை முடிப்பவர் அனைய - தேவர்கள் வாயிற்பட வேதகோஷத்தின் வழியே நெற்பொரிகளைச்சிந்திப் பசுவின்நெய்யைமுகந்து வார்த்து வேள்வித்தொழிலை முடிக்கும் முனிவர்களை யொத்திருந்தன.

முத்தீயாவன - ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, காருகபத்தியம் அவை சதுரமும் முக்கோணமும் வில்வடிவமாயு முள்ளன.

செங்கழுநீர் தீயாகவும் மரவம் முனிவராகவும் வண்டுகூப்பிடல் வேதகோஷமாகவும் பழம்பூ நெற்பொரியாகவும் புது மது பசுவின் நெய்யாகவுங் கொள்க. வார்ப்ப வென்னும் பலவின்பாற் படர்க்கை வினைமுற்றினின்றும் பிரிந்த தொழிற்பெயர்வினைமுதலாய் நின்றது. இதுவும் அவ்வணி. மருதநிலத்துக்குரிய குவளைமலரும் நெய்தனிலத்துக்குரிய குங்கும மரமும் பொதியமலையின்கண் ணுள்ளனவாகக் கூறுதல் இடமலைவுமையணி. (௪௧)

அகிலுமாரமுந்தழன்மடுத்தகழ்ந்தெறிந்தழல்கா
றுகிருமாரமுந்தொட்டெறிந்தையவனந்தூவிப்
புகரின்மால்கரிமருப்பினால்வேலிகண்போக்கி
யிகலில்வான்பயிரோம்புவவெயினர்தஞ்சீறூர்.

(இ-ள்.) எயினர்தம் சீறூர் - அப்பொதியத்திலுள்ள குறவர்களது சிற்றூர்கள், அகிலும் ஆரமும் தழல் மடுத்து அகழ்ந்து எறிந்து - அகில் மரங்களிலுஞ் சந்தன மரங்களிலும் நெருப்பிட்டு அவற்றின் வேர்களைக் கல்லியெறிந்து, அழல் கால் துகிரும் ஆரமும் தொட்டு எறிந்து - நெருப்பைப்போலச் செவந்து ஒளிவீசும் பவளத்தையும் முத்துகளையும் (பருக்கைகளாகக்கருதி) தோண்டியெறிந்து (நிலந்திருத்தி) ஐவனம் தூவி - மலைநெல்லைவிதைத்து, புகரில் மால் கரி மருப்பினால் வேலிகள் போக்கி - குற்றமில்லாத பெரியயானைகளின் கொம்புகளால் வேலிகளைக்கோலி, இகல் இல் வான்பயிர் ஓம்புவ - தம்முளொத்த வளர்ச்சியையுடைய பெரியபயிரைப் பாதுகாப்பார்கள்.

அகில் கள்ளியிலுண்டாவது "கள்ளிவயிற்றி னகில்பிறக்கும்" என்பதனாலுணர்க. சீறூர் - குறிஞ்சிநிலத்தூர். எயினர் - வேடர். பாலை - குறிஞ்சியின் திரிபாதலால், குறவரையெயினரெனவும் ஒரோகாலத்து விந்திய பயிராதலால் இகலில் என

வும் "விட்டில்கிளிமாவாய் வேற்றரசுதன்னரசு, நட்டம்பெரும்பெயல்காலெட்டே" இவற்றால் பயிர்களுக்குக் கேடுவாராமல் காக்கவேண்டுதலின் ஓம்புவ எனவும், சிறார் பொருளால் உயர்திணையேனுஞ் சொல்லாமல் அஃறிணையாதலால் அஃறிணைமுடிபு தந்து ஓம்புவவெனவுங் கூறினார். (சஎ)

அண்டவாணவருக்கின்னமுதருத்துவோர்வேள்விக்
குண்டவாரழற்கொழும்புகைபோலுமக்குன்றிற்
புண்டவாதவேலிறவுளர்புனத்தெரிமடுப்
புண்டகாரகிற்றூமமுமொக்கவேமயங்கும்.

(இ-ள்.) அண்டவாணருக்கு இன் அமுது அருத்துவோர் வேள்விக்குண்ட அழல் கொழும் புகைபோலும் அக்குன்றில் - தேவர்களுக்கு இனிய அவியுணவை யுண்பிக்கும் முனிவர்கள் வேட்கும் யாககுண்டத்தில் மிக்க தீயினது கொழுவிய புகைபோலிய அப்பொதியமலையில், புண்தவாத வேல் இறவுளர் புனத்து எரிமடுப்ப - பகைவரூன் நீங்காத வேலையேந்திய குறவர்கள் தமது கொல்லையிலுள்ள காடுகள்போக்கத் தீயிட, உண்டகார் அகில் தூமமும் ஒக்கவே மயங்கும் - அத்தீயுண்ணும் கரிய அகில்மரத்தின் புகையும் அந்தயாகத் தீப்புகையோடு கூடக் கலந்து தோன்றும்.

அகிற்புகையும் நறுநாற்றமுடைய தாதலால் மயங்குமென்றார். உவம உருபு இடைச்சொல் லடியாகப்பிறந்த ஒக்கவென்னும் வினையெச்சங் கூட வென்னும் பொருள்மேனின்றது. தவாத என்னும் எதிர்மறைப்பெயரெச்சந் தாவென்னுமுதனிலையடியாக வந்தது. தீ விரைந்து பற்றுதலின் உண்ட என இறந்தகாலத்தாற் கூறினார் இது விரைவுபற்றி வந்த காலவழுவமைதி. சொ - சொல்லதிகாரம் - வினையியல். "வாராக்காலத்து நிகழுங்காலத்து, மோராங்குவரூஉம் வினைச்சொற்கிளவி, இறந்த காலத்துக் குறிப்பொடுகிளத்தல், விரைந்தபொருள வென்மனார்புலவர். (சஅ)

கருவிவான்சொரிமணிகளுங் கழைசொரிமணியு
மருவிகான்றபன்மணிகளுமகன்றலைநாகத்
திரவிகான்றசெம்மணிகளும்புனங்கவரினமான்
குருவிவீழ்ந்திடக்கொடிச்சியர்கோத்தெறிகவண்கல்.

(இ-ள்.) புனம் கவர் மான் இனம் குருவி வீழ்ந்திட கொடிச்சியர் கவண் கோத்து எறிகல் - கொல்லையிலுள்ள பயிரைக் கவர்வரும் மானின் கூட்டங்களுங் குருவிகளும்வீழக் குறப்பெண்கள் கவணிற்கோத்து எறியுங் கற்கள், கருவிவான் சொரிமணிகளும் - உலகத்திற்குத் துணைக்காரணமாகிய மேகங்கள் சொரிகின்ற முத்துகளும், கழைசொரிமணியும் - அப்பொதியத்திலுள்ள மூங்கிலின் கணுக்கள் வெடித்துச் சிந்திய முத்துகளும், அருவி கான்ற பல் மணிகளும் நாகத்து அகன்றலை இரவிகான்ற செம்மணிகளும் - அருவிகளொதுக்கிய பலரத்தினங்களும் சர்ப்பத்தின் இடம் பரந்த தலையினின்று சூரியனைப்போலும் வெளிப்பட்ட செவந்த இரத்தினங்களுமாம்.

இதனில் செல்வமிகுதியைக் கூறுதலால் வீறுகோளணி. (சகூ)

மாயவன்வடிவாயதுவையமாலுந்திச்
சேயபங்கயமாயதுதென்னனாடலர்மேற்
போயமென்பொகுட்டாயதுபொதியமப்பொகுட்டின
மேயநான்முகனகத்தியன்முத்தமிழ்வேதம்.

(இ-ள்.) வையம் மாயவன் வடிவாயது - இவ்வுலகமானது திருமாலின் வடிவாயுள்ளது, தென்னன் நாடு மால் உந்தி சேய பங்கயம் ஆயது - பாண்டிநாடு அத்திருமாலின் உந்தியிற்பூத்த செவ்வந்த தாமரையாயுள்ளது, பொதியம் அலர்மேல் பொய்யமென்பொகுட்டு ஆயது - அந்நாட்டிலுள்ள பொதியமலை அத்தாமரைமலரின் இடம்பரந்த மிருதுவாகிய பொகுட்டாயுள்ளது, அகத்தியன் அப்பொகுட்டின்மேய நான்முகன் - அம்மலையிலுள்ள அகத்தியன் அம்மலர்ப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமனாயிருக்கின்றனன், முத்தமிழ் வேதம் - அம்முனிவனிடத்துத் தோன்றிய முத்தமிழ்கள் பிரமனிடத்துத்தோன்றிய வேதங்களாயுள்ளன.

அகத்தியன் - அகமாகிய விந்தமலையை யடக்கினவன். முத்தமிழ் - இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ். ஆன்மாக்களுக்கு வேதந்தரும் புருடார்த்தங்களை நிகமாகமங்களின் சாரங்களாகிய திருமுறைகளை யுள்ளடக்கிநின்ற தமிழுந் தருதலால் அதுவே இதுவெனக் கூறலுக்கவா இவ்வுலகைத் திருமாலாகவும், அவ்வுலகிலுள்ள பாண்டிநாடு அத்திருமாலின் உந்தித் தாமரையாகவும், அந்நாட்டிலுள்ள பொதியமலை அத்தாமரைமலரின் பொகுட்டாகவும், அம்மலையிலுள்ள அகத்தியன் அப்பொகுட்டிலுள்ள பிரமனாகவும் உருவகஞ் செய்தலின் பலவயின் உருவகவணி.

> ஏகமாகியமேருவும்பொதியமேபிரும்பொ
> னாகுமேருவைச்சூழ்ந்தசாம்பூநதயாறு
> நாகராடுதண்பொருநையேநாவலாறுடுத்த
> போகபூமியும்பொருநைசூழ்பூமியேபோலும்.

(இ-ள்.) ஏகமாகிய மேருவும் பொதியமே போலும் - தனக்கொரு மலையும் ஒப்பில்லாததாகிய மகாமேருவும் பொதியமலையினையே யொக்கும், இரும்பொன் ஆகும் மேருவை சூழ்ந்த சாம்பூநதயாறு நாகர் ஆடும் தண் பொருநையே போலும் - பெரிய பொன்னாகிய வம்மேருவைச் சூழ்ந்த சாம்பூநதமாகிய ஆறுந் தேவர்கள் குளிக்கும் குளிர்ச்சிபொருந்திய தாமிரபர்ணியையே யொக்கும், நாவல் ஆறு உடுத்த போகபூமியும் பொருநைசூழ் பூமியேபோலும் - அச்சாம்பூநதயாறு சூழ்ந்த போக பூமியும் அத்தாமிரபர்ணி சூழ்ந்த பாண்டிநாட்டையே யொக்கும்.

தேவேந்திரன் முதலிய தேவர்களுந் திரிமூர்த்திகளும் வசிக்குந் தானமாயிருத்தலின் - ஏகமாகிய எனவும், பிரமன் முதலிய தேவர்கள் வணங்கச் சிவபெருமா னிடையறாது வசித்தலால் மேருவும் பொதியமே எனவுங் கூறினர். கந்தபுராணம் அசுரகாண்டம் - அண்டகோசப்படலம்.

"மேருவரையதற்குநடுப்பிரமன்மூதூர் மிக்கமனோவதியதற்குமேலைத்திக்கி,
னாரணன்வாழ்வைகுந்தம்வடகீழ்பால் லுதனமாசோதிட்கந்திசைகளெட்டுஞ், சேதிய
விந்திரன்முதலாமெண்மர்தேயந் தெற்குமுதல்வடக்களவு மருங்கு தன்னில், சேரிய
தோர்தேசமதுசெவ்வேபோகு நெடும்பூழையொன் றளதுகிலைகமாதோ"

அம்மேருமலையின் தென்பால்நின்ற நாவல்மரத்தின் கனியின்சாறு ஓர் ஆறாய் அம்மேருமலையைச் சூழ்ந்து வடபால் செல்லுவது சாம்பூநதயாறு, அதன் சலத்தை யுண்பவர் சுவர்ணமயமாய்ப் பதின்மூவாயிரவருடம் வாழ்வார்கள். அப்பொதியமலையினின்றும் வரும் தாமிரபர்ணியுக் தம்பாலடைந்து குடைந்தோரைத் தேவர்களாக்குதலின் சாம்பூநதயாறு நாகராடுதண் பொருநையே எனவுங் கூறினர்.

"கடிகமழுநாவலொன் றுதென்பானின்ற காரணத்தாற்பாரதன் றன் கண்டமுற்று, மிடனுடையநாவலந்தீவெனப்பேர்பெற்ற தித்தருவின்றீங்கனிநீராறாய்மே

ருத், தடவரையைப்புடைசூழ்ந்துவடபாற்சென்ற சாம்பூநதப்பெயர்பெறுமச்சவி லந்துய்ததோ, முடன்முழுதும்பொன்மயமாயயுதமேலு மொருமூவாயிரமாண்டன் குறைவான்றே"

மேருமலையைச்சூழ்ந்த நவகண்டங்களுள் பாதகண்டந்தவிர மற்றை யெட்டுக் கண்டங்களிலுள்ளோரும் நீடித்த வாயுளும் ஒருவகையுணவும் உடையவராய் நரை திரை மூப்பிகந்தவரா யிருத்தலின் அவை போகபூமிகள். பாண்டிநாட்டிலுள்ளோ ரும் மறுமையில் பெரும் போகமுடையராய் வாழ்தலின் நாவலாருடுத்த போகபூமி யும் பொருனைசூழ் பூமியே எனவுங் கூறினார். சிவதருமோத்திரம் - கோபுரவியல்,

" பொன்னுருவர்கிம்புருடர் புசிப்பிறவிப்புன்கனியே
மன்னுமயுதாயுவுளர் மணக்கவலைதனையில்லார்
இன்னமிலார்நரைதிரையுங் கிளருடலிற்பிணியினையும்
இன்னமுறைமற்றயவேழ் கண்டத்துமெண்ணுகவே"

பாதகண்டத்திலுள்ளோர் யுகங்களுக்குத்தக்க வுணவுகளும், நரை திரை மூப்புப்பிணிகளுங் குறைந்தவாயுளும் உடையராயிருத்தலின் அது போகபூமியாகா தெனவுணர்க. மேற்படி கோபுரவியல்,

" அறிவுவலியாயுளுரு வாகாரமவையெல்லாஞ்
செறியுமுகத்தினுக்கிசையப் பாரதத்துட்டிகழ்வார்கட்
குறுமுணவுபுலத்துழலா வுழுவதுமின்றியுமுண்டு
பெறுபலமுந்தைவிகமா தியமூன்றிற்பிறழாவே"

உம்மைகள் உயர்வு சிறப்புப்பொருளன. போலுமென்பதனை யேனையவிடங் கடோறுங் கூட்டிக்கொள்ளுதலின் ஒருசொல்நின்றே தனித்தனியுதவுதல் என்னும் விதி, கடைநிலைத்தீவகவணி யெனினுமொக்கும். மேற்றொட்டு உவமைகளாய் வரு வனவற்றைப் பொருள்களாக்கியும் பொருள்களாய் வருவனவற்றை யுவமைகளாக் கியுங் கூறுதலின் விபரீத உவமையணி. (௫௧)

சிறந்ததண்டமிழாலவாய்சிவனுலகானாற்
புறந்தயங்கியநகரெலாம்புரந்தரன்பிரமன்
மறந்தயங்கியநேமியோனாதியவானோ
ரறந்தயங்கியவுலகுருவானதேயாகும்.

(இ-ள்.) சிறந்த தண் தமிழ் ஆலவாய் சிவன் உலகு - சிறப்புற்றமைந்த தண்ணிய தமிழ்ச்சங்கமிருந்த திருவாலவாயென்னுந் தலஞ் சிவலோகமாம். ஆனால் புறந்தங்கிய நகர் எலாம் - ஆயின் அவ்வாலவாயின் புறத்து விளங்கிய வேனைநகரங்களெல்லாம், புரந்தரன் பிரமன் மறம்தங்கிய நேமியோன் ஆதிய வானோர் - தேவேந்திரன் பிரமன் கொலைத்தொழில் விளங்கிய சக்கரத்தையுடைய திருமால் முதலாகிய தேவர்களுடைய, அறம் தங்கிய உலகு உரு ஆனது எ ஆகும் - தருமம் விளங்கிய சுவர்க்கமுதலிய பதங்கள் அங்கங்களாக வுருவுதிரிந்தனவாம்.

திருவாலவாய்க்குச் சிவலோகமென்பது ஓர் பரியாயநாமம். இந்திரன் முதலியோர் பதங்கள் சிவலோகத்தின் புறத்தைச் சூழ்ந்திருத்தலின் இப்பூலோக சிவலோகத்தின் புறத்திலுள்ள நகரங்கள் அப்பதங்கள் வடிவுதிரிந்து ஆயினவென வும், உடையவன் றொழிலை உடைமை மேலேற்றி மறந்தயங்கிய நேமி எனவும், உலகு சாதி யொருமையாதலால் ஒருமைமுடிபாக உருவானதெனவுங்கூறினார்.

உபமானப்பொருள் உபமேயத்தின் உருவத்தைக்கொண்டு பரிணமித்தமாகக் கூறினமையால் இது திரிபணி. (௫௨)

வளைந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்து
மளைந்த தெண்டிரைப் பொருநையோ வக்கதிர் ஞாங்கர்
விளைந்த செந்நெலுங் கன்னலும் வீசுமவ் வாசம்.

(இ-ள்.) வளைந்த நுண் இடை மடந்தையர் வனம் முலை மெழுகி களைந்த குங்குமம் கலவையும் காசறை சாந்தும் அளைந்த தென் திரை பொருநை ஒ - (நீராடச் சென்ற) வளைந்த நுண்ணிய விடையையுடைய பெண்கள் அழகிய முலைகளிற் பூசிக். களைதற்குள்ள குங்குமப்பூச்சேர்ந்த கலவைகளையுங் கஸ்தூரிகலந்த சந்தனக் குழம்புகளையுங் கலந்த தெள்ளிய அலையையுடைய தாமிரபர்ணியோ (கமழ்வது) அக்கதிர் ஞாங்கர் விளைந்த செந்நெலும் கன்னலும் அவ்வாசம் வீசும் - அப்பொருநையின் பாய்ச்சலால் பக்கங்களில் விளைந்த செந்நெற்பயிர்களும் கரும்புகளும் அவ்வாசங் களைவீசாநிற்கும்.

களைந்த வென்னும் இறந்தகாலப்பெயரெச்சங் கலவைசாந்தென்னுஞ் செயப்படு பொருள்களைக்கொண்டது. இதனால் நீராடுமகளிர் பெருக்கத்தைக் கூறுதலால் வீறுகோளணி. (௫௩)

பொதியிலே விளைகின்றன சந்தனம் பொதியி
னதியிலே விளைகின்றன முத்தமந் நதிசூழ்
பதியிலே விளைகின்றன தருமமப் பதியோர்
மதியிலே விளைகின்றன மறைமுதல் பத்தி.

(இ-ள்.) சந்தனம் பொதியிலே விளைகின்றன - சந்தனமரங்கள் பொதியமலையின்கண்ணே விளைகின்றன, முத்தம் பொதியின் நதியிலே விளைகின்றன - முத்துகள் பொதியமலையின்கண் நின்றவரும் தாமிரபர்ணியின்கண்ணே யுண்டாகின்றன, தருமம் அந்நதிசூழ் பதியிலே விளைகின்றன - தருமங்கள் அத்தாமிரபர்ணி சூழ்ந்த பாண்டிநாட்டிலே யுண்டாகின்றன, மறைமுதல் பத்தி அப்பதியோர் மதியிலே விளைகின்றன - சிவபெருமானிடத்திற் கொள்ளும் பத்திகள் அப்பாண்டிநாட்டிலுள்ளோர் அறிவிலே யுண்டாகின்றன.

சந்தனம் விளைதற்குரிய விடம் பொதியமலையாதலால் - பொதியிலே விளைகின்றன சந்தனம் எனவும், முத்துந் தென்னாட்டிலுண்டாதலால் பொதியினதியிலே விளைகின்றன முத்தம் எனவும், இச்செல்வப் பெருக்கால் தருமமுண்டாதலின் அந்நதிசூழ்பதியிலே விளைகின்றன தருமம் எனவும், அத்தருமமுதிர்ச்சியால் பத்திவிளைதலின் - அப்பதியோர் மதியிலே விளைகின்றன மறைமுதல் பத்தி எனவுங் கூறினார். "தென்மலையின் மான்மதமுஞ் சாமரையுந் தேமருசீர்ப், பொன்மலையின் சந்தனமும் ஆரமும்" என இடமலைவுக்குக் காட்டிய செய்யுளாலும் "வேழமுடைத்து மலைநாடு மேதக்க, சோழவளநாடு சோறுடைத் - தாழ்கடலின், தென்னாடு முத்துடைத்து" என்பதனாலும், "அறனீனுமின்பமுமீனுந் திறனறிந்து, தீதின்றிவந்தபொருள்" என்பதனாலும், "அருமைத்தாந்தருமத்தாலே சாந்தியுண்டாகும்" என்பதனாலு முணர்க. சிவபெருமானை வழிபடுதல் பலவாதலின் மறைமுதல் பத்திமதியிலே விளைகின்றனவெனப் பன்மை முடிபு தந்தார். பொதியின்-பொதி - பதமாதலால் இன்னுருபு நீக்கற்பொருட்டு. மறைமுதல் சிவபெருமானுக்கு ஓர் பரியாயப்பேராதலால் வருமொழி முதல் வல்லெழுத்துவர ஈறு திரியாது நின்றது. "பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய் வலிவரி னியல்பாம்" என்னும் நன்னூற்சூத்திரத்தானுணர்க.

பரியாயப் பெயராய் வருதல். "மறைமுதலடியார்தம்மை வழிமறித் தருத்துவார்கள்" என முன்னர்வந் திருத்தலைக்காண்க.

பின் பின்னாக வருவனவற்றிற்கு முன் முன்னாக வருவனவற்றை விசேஷியங்களாகக் கூறுதலால் ஒற்றைமணிமாலையணி. (௫௪)

கடுக்கவின் பெறுகண்டனுந்தென் றிசைநோக்கி
யடுக்கவந் துவந்தாடுவா னாடலி னிளைப்பு
விடுக்கவாரமென்கா றிருமுகத்திடை வீசி
மடுக்கவுந்தமிழ் திருச்செவி மாந்தவுமன்றோ.

(இ-ள்.) கடு கவின் பெறு கண்டனும் - விஷத்தால் பொலிவுபெற்ற கண்டத்தையுடைய சிவபெருமானும், தென் திசை நோக்கி அடுக்க வந்து உவந்து ஆடுவான் - தென்திசையைநோக்கிப் பாண்டிநாட்டைப் பொருந்தவந்து மகிழ்கூர்ந்து வெள்ளியம்பலத்தில் திருநடனஞ் செய்கின்றான், (அவ்வாறு திருநடனஞ்செய்வது எற்றுக்கெனில்) ஆடலின் இளைப்பு விடுக்க ஆரம் மென்கால் திருமுகத்து இடைவீசி மடுக்கவும் தமிழ் திருச்செவி மாந்தவும் அன்று ஓ - அத்திருநடனத்தாலுண்டாகும் இளைப்பு நீங்கும்பொருட்டுச் சந்தனச் சோலையில் படிந்துவரும் மெத்தென்ற மந்தமாருதம் தனது திருமுகத்தில் வீசிப படியவும் அதனோடுதோன்றிய தண்ணியசங்கத் தமிழைத் தனது திருச்செவியால் பருகவும் அல்லவா.

கடுக்கவின் பெறுகண்டனென்றமையால் விஷமுண்டகாலத்துத் திருக்கைலையினிடத்து நடனஞ்செய்தருளினனெனவும், தென் திசைநோக்கி யடுக்கவந்து என்றமையால் அதன்றென்பாலுள்ள திருவாலங்காட்டில் காளிக்காக நடனஞ்செய்தருளினன் என்பதும், அதன் றென்பாலுள்ள சிதம்பரத்தில் பதஞ்சலி வியாக்கிரமபாதமுனிவர்பொருட்டுத் திருநடனஞ்செய்தானென்பதும், உவந்து என்றமையால் ஆங்காங்குசெய்தருளிய திருநடனங்களாலாகிய இளைப்பு நீங்குதற்குரிய பரிகாரம் பெறாளுயினன் என்பதும், திருச்செவிமாந்த வென்றமையால் வடமொழி முதலிய வெல்லாப் பாஷைகளிலும் இத்தென்மொழி இனிமையை யுடையதென்பதும் போந்தமைகாண்க. தமிழ்-இனிமை. இப்பண்பு தென்மொழிமேனிற்றலால் பண்பாகுபெயர். திருக்கைலையில் நடனஞ்செய்தருளினன் என்பதற்குசசெய்யுள். ஆகமத்திரட்டு "பொங்குகங்காதரன் காளமயின்றே யொன்றும் புகலாமலிருந்தன னோர்கணப் பொழுது புலவோர், அங்கவனை இடைவிடாதருச்சனைமுன்புரிந்தா ரதிதியேகாதசியாமடுத்ததிதியதனிற், புங்கவர்பாரணம் புசித்தே பூதத்தியுற்றுரிதன்மேற் பொருந்து திதிதனிலிமவான் பொற்கொடியை வைத்துச், சங்கரன்சூலஞ்சுழற்றி நடித்தனனோரியாமஞ் சதுமறைநூலிதுபிரதோடமெனவேசாற்றும" காளிக்காகத் திருநடனஞ்செய்தருளினன் என்பதற்குத் திருவாலங்காட்டுப்புராணத்தில் நிருத்தசருக்கம்

"இன்கலைமொழியஞ்சாயலவிரயமிலங்கச்செவ்விப்
புன்சிறுமுறுவல்பூப்பப்புரணவானந்தம்பூரித்
தன்புறுமறையோருள்ளமயர்தரவியங்கட்கேற்ப
விண்டொடநடனங்காளியோடரன் விளைத்தவேலை.

பிரமன் முதலியோர் அழிதற்குரியவிடத்தால் அழியாது பொலிவு பெற்று விளங்கிய ஸ்ரீகண்டனுதலின் உம்மை உயர்வு சிறப்புப்பொருட்டு. தடாதகைப் பிராட்டியார் திருமணத் தரிசனத்துக்கு வந்த பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள் திருவமுதுசெய்தற்பொருட்டு நடனஞ்செய்தருளும் அருட்குணத்தைமறைத்து வேறு பயனைக்குறித்து நடனஞ்செய்தருளியது எனக்கூறியது குண அவநுதியணி. (௫௫)

விடையுகைத்தவன்பாணினிக்கிலக்கணமேனாள்
வடமொழிக்குரைத்தாங்கியன்மலயமாமுனிக்குத்
திடமுறுத்தியம்மொழிக்கெதிராக்கியதென்சொன்
மடமகட்கரங்கென்பதுவழுதிநாடன்றே.

(இ-ள்.) விடையுகைத்தவன் - இடபவாகனத்தைச் செலுத்தியருளுஞ் சிவபெருமான், பாணினிக்கு இலக்கணம் மேனாள் வடமொழிக்கு உரைத்தது ஆங்கு - பாணினியென்னும் ஓர் முனிவருக்கு இலக்கணச் சூத்திரத்தை முன்னாளில் வடமொழியாகிய சமஸ்கிருதபாஷைக்குச்சொல்லி யருளியதுபோல, மலயமாமுனிக்கு இயல் திடம் உறுத்தி - பொதியமலையிலெழுந்தருளிய பெரிய அகத்தியமுனிவருக்கு இலக்கணச்சூத்திரத்தை ஐயந்திரிவறக் கூறியருளி, அம்மொழிக்கு எதிராக்கிய தென்சொல் மடமகட்கு அரங்கு என்பது வழுதிநாடு அன்றே - அவ்வடமொழிக்கு எதிர்மொழியாகச் செய்த தென்மொழி என்னும் மடமையையுடைய வோர்பெண்ணுக்கு நாடகசாலை யென்று சொல்லப்படுவது பாண்டிநாடல்லவா.

சிவபெருமான் அறக்கடவுள் என்பதைக்குறித்தற்கு அவ்வறத்தின் வடிவமே விடையாயிருத்தலின் விடையுகைத்தவன் எனவும், வடமொழிக்குத் தென்மொழியை எதிர்மொழியாக்குதற்பொருட்டே பாணினிமுனிவருக்கு இலக்கணம்வடமொழிக்கு உபதேசித் தருளியதுபோல அகத்தியமுனிவருக்கும் இலக்கணம் தென்மொழிக்கு உபதேசித்தருளுதலின் இயல் மலயமாமுனிக்குத் திடமுறுத்தி எனவும், சோழனுஞ் சேரனும் தமிழ்வழங்கும் நிலங்களாயினுஞ் சிவபெருமான் சங்கப்புலவர்களோடு தானும் ஓர் புலவனாயிருந்து தமிழ் ஆராய்ந்த இடம் பாண்டிநாடாதலின் தென்சொல் மடமகட்கு அரங்கென்பது வழுதிநாடன்றே எனவுங்கூறினார். திடமுறுத்தி, எதிராக்கிய என்னுஞ்சொல்லாற்றல்களால் தமிழ்பழமையுள்ள மொழிகளுள் ஒன்றாயிருப்பினும் வடமொழிபோலவேத் தென்மொழியும் மாண்பியமுடையதென்பது இதனாற்கூறப்பட்டது. சோழனுஞ் சேரனுந் தமிழ்வழங்கு நாங்கள் என்பதற்குச் சிலப்பதிகாரம். வேனிற்காதை. "தமிழ்வரம்பறுத்த தண்புனனாட்டு, மாடமதுரையும் பீடாருறந்தையும், கலிகெழுவஞ்சியும்" எனவருதல்காண்க. (௫௧)

கண்ணுதற்பெருங்கடவுளுங்கழகமோடமர்ந்து
பண்ணுறத்தெரிந்தாய்ந்தவிப்பசுந்தமிழேனை
மண்ணிடைச்சிலவிலக்கணவரம்பிலாமொழிபோ
லெண்ணிடப்படக்கிடந்ததாவெண்ணவும்படுமோ.

(இ-ள்.) கண் நுதல் பெருங் கடவுளும் - நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானும், கழகமோடு அமர்ந்து பண் உற தெரிந்து ஆய்ந்த இ பசுந்தமிழ் - சங்கப் புலவர்களோடு தானுமோர் புலவனாக வெழுந்தருளி யிருந்து (பரிபாடல் முதலிய நூல்களை) இயலுமிசையும் பொருந்தத்தெரிந்து ஆராய்ந்த இத்தப்பசியதமிழை, ஏனை மண்ணிடை இலக்கணவரம்பு இல்லாத சிலமொழிபோல் - திராவிடம் ஒழிந்த மற்றைப் பதினேழுநிலங்களில் இலக்கணவரம்பு இல்லாத சில சில மொழிகள்போல, எண்ணிடப் படக் கிடந்தது ஆ எண்ணவும்படுமோ - அவற்றோடொன்றாக வைத்து விரல்விமிர்த்து எண்ணக்கிடந்ததாக நினைக்கவுங்கூடுமோ (கூடாது என்றபடி)

தமிழ் ஒழிந்த பதினேழுநிலமாவன - அங்கம், அருணம், கலிங்கம், கவிசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம். ஏனைக்கடவுளர்க்கெல்

லாமுதற்கடவுளாதலின் கண்ணுதலென்றமையாது உயர்வுசிறப்பும்மைதந்து பெருங்கடவுளெனவும், முதலூழி யிறுதிக்கண்ணிருந்த தலைச்சங்கமுதல் மூன்றுசங்கத்திலுந் தலைமைப்புலவனாயிருந்தலின் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றனுருபு தந்து கழகமோடமர்ந்து எனவும், குறைபாடு சிறிதுமின்றி யாராய்தலின் தெரிந்தென்றமையாது பண்ணுற, தெரிந்தாய்ந்த எனவும், இவ்வருமைப்பாட்டால் எல்லாவற்றினுஞ் சிறந்ததாதலின் தமிழ் என்னாது பசுந்தமிழ் எனவும், இத்தமிழை யேனைநிலத்துமொழிகளோடு ஒன்றாகவைத்து எண்ணுதல் பெருமடமையாதலின் இழிவு சிறப்பும்மைதந்து எண்ணிடைப்படக்கிடந்ததா வெண்ணவும்படுமோ எனவுங் கூறினார். பசுமை என்னும் பண்பு அருமையே னின்றது. பச்சைப்பிள்ளையென வருதல் காண்க. எண்ணவும் படுமோ எனப் பின்னர் இருத்தலால் எண்ணிடைப்படக் கிடந்ததா எனப்பாடங் கூறல் வழு. இதனால் தமிழ் பதினெண்ணிலத்து மொழிகளுளொன்றெனக் கூறுவார் கூற்றுக்கள் பெருமடமைக்கூற்றுக்களெனக்கூறப்பட்டன.

தலைச்சங்கமுதல் மூவகைச் சங்கத்திருந்தோர், நூல், காலம், இடம் இவற்றைப் பின்னர்க்காண்க. இறையனாரகப் பொருள். "அன்பினைந்திணைக்களவெனப்படுவ, தந்தணரருமறைமன்றலெட்டினுள், கந்தருவவழக்கம் என்மனார்புலவர்" வடக்குங் குடக்குங் குணக்கும் வேங்கடங் குமரித்தீம்புனற் பௌவமென் றிந்நான்கெல்லை யகவயிற்கிடந்த நூலதன்முறைமை வாலிதின்விரிப்பின் இந்நூலதுவரலாறு. மூவகைச்சங்கமிரீஇயனார் பாண்டியர்கள், அவருட் டனிநூல்கேட்டோர யாரோவெனின்; தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றமெறிந்த முருகவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின்கிழவனு மித்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மரென்பது; அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்றுநாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்பது; அவர்களாற்பாடப்பட்டன பரிபாடலு முதுநாரையு முதுகுருகுங் களரியாவிரையு மித்தொடக்கத்தன; அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப; அவர்களுட் சங்கமிரீஇயினார் காய்சினவழுதிமுதலாகக் கடுங்கோனீறாக வெண்பத்தொன்பதின்மரென்ப; அவருட் கவியரங்கேறினார் எழுவர்பாண்டியரென்பது; அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரையென்ப; அவர்களுக்கு நூல் அகத்தியம்.

இனி இடைச்சங்கமிருந்தார் - அகத்தியனாரும் இருந்தையூர்க் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க்காப்பியனும், சிறுபாண்டரங்கனும், திரையன்மாறனும், துவரைக்கோனும், கீரந்தையாருமென இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப; அவருள்ளிட்டு மூவாயிரத்தெழுநூற்றுவர் பாடினார்; அவர்களால் பாடப்பட்டன - கலியுங் குருகும் வெண்டாளியுமென இத்தொடக்கத்தன; அவர்களுக்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமும் மாபுராணமும் இசைநுணுக்கமும் பூதபுராணமுமென்ப; அவர்களும் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப; அவர்களுள் சங்கமிரீஇயினார் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திருமாறனீறாக ஐம்பத்தொன்பதின்மரென்ப; அவர்களுள் கவியரங்கேறினார் ஐவர்பாண்டியர்களென்ப; அவர் சங்கமிருந்தது கபாடபுரமென்ப; அக்காலம்போலும் பாண்டிநாடு கடல்கொள்ளப்பட்டது.

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தார் சிறுமேதாவியரும், சேந்தன்பூதனாரும், அறிவுடையானாரும், பெருங்குன்றூர்கிழாரும், திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனும், மதுரை மருதனிளநாகனாரும், கணக்காயனார்மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்ப; அவருள்ளிட்டு நூற்றுவர்பாடினார்; அவராற்பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நா

னூறும், நற்றிணைநானூறும் புறநானூறும், எழுபது பரிபாடலும், நூற்றம்பது கலியும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையுமென இத்தொடக்கத்தன. அக்காலத்து நூல் அகத்தியமும், தொல்காப்பியமுமென்ப; கடைச்சங்கமிருந்தது உத்தரமதுரையென்ப; அவர்சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது ஆயிரத்தெண்ணூற்றைம்பதிற்றியாண்டென்ப; அவர்களைச் சங்கமிரீஇயினார் முடத்திருமாறன்முதலாக உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப. என நக்கீரரெழுதிய உரையாலுணர்க. கடல்கொள்ளப்பட்ட பாண்டிநாட்டெல்லையும் அளவும் - தென்பாலிமுகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளியென்னும் ஆற்றிற்கும் இடையே எழுநூற்றுக்காவதம், இவற்றின்நீர் மலிவானென மலிந்த ஏழ்தெங்கநாடும், ஏழ்மதுரைநாடும், ஏழ்முன்பாலைநாடும், ஏழ்பின்பாலைநாடும், ஏழ்குன்றநாடும், ஏழ்குணகாரநாடும், ஏழ்குறும்பனைநாடும் என்னும் இந்நாற்பத்தொன்பது நாடும், குமரிகொல்ல முதலிய பன்மலைநாடுங் காடும் பதியுந் தடநீர்க்குமரி வடபெருங்கோட்டின் காறுங்கடல் கொண்டொழியவெனச் சிலப்பதிகாரம் வேனிற்காதையில் அடியார்க்கு நல்லார் எழுதிய வுரையாலறிக. (௨௭)

தொண்டர்நா தனைத்தூ திடைவிடுத் ததுமுதலை
யுண்டபா லனையழைத் ததுமெலும் புபெண்ணுருவாக்
கண்டதும் மறைக்கதவி னைத்திறந் ததுங்கன்னித்
தண்டமிழ்ச்சொ லோமறு புலச்சொற் களோசாற் றீர்.

(இ-ள்.) தொண்டர் நாதனை தூது இடை விடுத்ததும் - (ஆளுடைய நம்பிகள்) அடியார்க்குத்தலைவனாகிய சிவபெருமானைப் பரவையாரிடத்தில் தூதின்மேற் செல்லப் போக்கியதும், முதலை உண்ட பாலனை அழைத்ததும் - முதலையுண்ட பார்ப்பனப்பிள்ளையைக் கழிந்தபருவத்தோடு வருவித்ததும், எலும்பு பெண்ணுரு ஆ கண்டதும் - (ஆளுடையபிள்ளையார்) எலும்பு பெண்ணுருவமாகச் செய்வித்ததும், மறை கதவினை திறந்ததும் - (ஆளுடையவரசுகள்) வேதங்கள்மூடிய கதவைத்திறப்பித்ததும், கன்னி தண்டமிழ்ச்சொல்லோ மறுபுலச்சொற்களோ சாற்றீர் - அழியாத தண்ணியதமிழ்ப்பாசுரமோ வேற்றுநாட்டினரது சொற்களாலாகிய பாசுரங்களோ புலவீர்சொல்லுங்கள்.

இயல்பாகவே எல்லாப்பற்றுக்களினின்று நீங்கினோன் எப்பற்றுங்கழன்ற அடியார்களுக்குத் தலைவனாகவேண்டுதலின் தொண்டர்நாதனெனவும், அவ்வாறு பற்றினின்று நீங்கினோனையும் மாதரிடத்துத் தூதாகச்செல்லவிடுத்தலின் தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்ததெனவும், பெயர்மாத்திரமாயுள்ளதும் உறுப்புகளொன்றாகிய உக்கியவெலும்பும் உருவுபெற்றும் உருவுகொண்டும் எழச்செய்யும் வன்மையையுடைத்தாதலின் முதலையுண்டபாலனையழைத்ததும் எலும்பு பெண்ணுருவாகக்கண்டதும் எனவும், வேதத்தில் இதுவே பரமனெனத்தெளியாத பொருளை யாவரும் எளிதில் தெளிந்துணர்ந்துய்யப் புலப்படுத்தியது இத்தமிழ்வேதமாகிய பாசுரமாதலின் மறைக்கதவினைத்திறந்ததெனவும், சிவபெருமான் சங்கத்தாரோடு இருந்தாராய்ந்தாரென்பது கதையே, இத்தமிழால் விளைந்த மாண்பியமுளதேல் கூறுகவென்று வினவிப்புலவர்களை நோக்கிக்கூறியதாதலின் சாற்றீர் எனவுங் கூறினர்.

அழைத்தது கண்டது திறந்தது பொருளாற்றெரிந்த பிறவினை முற்றுப்பெயர்கள். ஓகாரம் இரண்டனுள் முன்னையது வினா. பின்னையது எதிர்மறை.

ஆளுடையநம்பிகள் திருவொற்றியூரிலெழுந்தருளிப் படம்பக்கனார் திருவருளால் சங்கிலியாரைத் திருமணமுடித்துத் தாம் இன்புற்றிருந்தசெய்தியைத் திரு

வாரூரிலெழுந்தருளியிருக்கும் பரவையார் கேள்வியுற்றுக் கொண்டவூடலைத் தீர்க்கும்பொருட்டு வீதிவிடங்கப்பெருமானை இரண்டுதரந் தூதுசெல்ல விடுத்தாரென்பது திருத்தொண்டர்புராணத்துட்காண்க.

சேரமான்பெருமானைக் காணவேண்டுமென்னும் விருப்பால் அங்குநின்று மெழுந்து கொங்குநாடுகடந்து திருப்புக்கொளியூரை யடைந்தகாலையில் ஒருவீட்டில் மங்கலவோசையும் ஒருவீட்டில் அழுகையோசையுமாக விருக்கக்கேட்டு அங்கிருந்த வேதியரை வினவ, அவர்கள் இந்த விரண்டுவீட்டுப் பிராமணப்பிள்ளைகளும் ஐந்துவயதுள்ளவர்களா யிருக்குங்காலையில் ஒருநாள் ஏரிக்கு அவ்விருவருஞ்சென்று நீர்விளையாட்டயரும் பொழுது அதிலிருந்த முதலை யொருவனைவிழுங்க மற்றொருவன் பிழைத்துவந்தனன் அவனுக்கு இந்தவீட்டில் உபநயனச்சடங்கு நடப்பதால் தங்கள்பிள்ளையுமிருந்தால் இவ்வாறு சடங்குநடக்குமே என்னுந்துக்கத்தால் இந்த வீட்டிலுள்ளவர்கள் அழுகின்றாகளென்று சொல்ல, ஆளுடையநம்பி திருவுள்ளமிரங்கி முதலையால் அப்பிள்ளையை வருவித்தருளியதற்குத் திருப்பதிகம்.

தேவாரம். " உரைப்பாருரையுகந்துள்கவல்லார்தங்களுச்சியா
யரைக்காடரவாவாதியுமந்தமுமாயினாய்
புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே
கரைக்கான்முதலையைப்பிள்ளைதரச்சொல்லுகாலனையே."

தொண்டைநாட்டில் திருமயிலையில்வாழும் வணிககுலோத்தமராகிய சிவநேசச்செட்டியாருக்குக் கபாலீசுரர்கிருபையால் ஓர் புத்திரிபிறந்து வளருங் கன்னிப்பருவத்தில் ஒருநாள் அப்பெண் தோழிகளோடுஞ்சென்று மலர்கொய்யும்பொழுது பாம்பு தீண்டி யிறந்தனர், அது கண்ட செட்டியார் கவலைகூர்ந்து தகனஞ்செய்வித்து இந்தக்கன்னியை என் திரவியத்தோடு ஆளுடைபிள்ளையாருக்கொப்புவிக்க நியமித்திருந்தமையால் அவரே இக்கன்னியின்கடன் கழித்தற்குரியவர் என்று தகனஞ்செய்த சாம்பலை அஸ்தியோடு குடத்தில் நிரப்பிக் கன்னிமாடத்தில் முன்போலத் தோழிமார்கள் உபசாரஞ்செய்துகொண்டு வரச்செய்தனர். இவ்வாறு நிகழுங்காலத்து ஆளுடையபிள்ளையார் திருவொற்றியூரில் எழுந்தருளியிருத்தலைக் கேள்வியுற்றுத் தண்டாகாரமாகவணங்கி, திருமயிலைக்கு எழுந்தருளும் பிள்ளையாரோடு தாமும்வரப் பிள்ளையார் கபாலீச்சரத்தை தரிசித்துத் திருப்பதிகமோதிச் செட்டியாரைநோக்கி அவ்வஸ்தியைவருவித்து உயிர்கொடுத்தருளியதற்குத் திருப்பதிகம்.

தேவாரம். " மட்டிட்டபுன்னையங் கானல்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான் கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பி னுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய்

திருமறைக்காடு என்னுந்தலத்திற்கு ஆளுடையபிள்ளையாரோடு அரசுகள் எழுந்தருளி வேதம்பூசித்துச் சாத்திவிட்டுப்போன வண்ணமேயிருக்கும் திருக்கதவந் திறக்கும்படி யருளிய திருப்பதிகம்.

தேவாரம். " அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
ரிரக்கமொன்றிலீரெம்பெருமானிரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே." (௫௮)

வெம்மையால்விளைவஃகினும்வேந்தர்கோல்கோடிச்
செம்மைமாறினும்வறுமைநோய்சிதைப்பினுஞ்சிவன்பாற்
பொய்மைமாறியபத்தியும்பொலிவுங்குன்றாவாத்
தம்மைமாறியும்புரிவதுதருமமந்நாடு.

(இ-ள்.) அந்நாடு - அப்பாண்டிநாட்டிலுள்ளோர், வெம்மையால் விளைவஃகினும் - மழையில்லாமையால் விளைவுகுன்றினும், வேந்தர் கோல் கோடி செம்மை மாறினும் - (அதனால்) அரசர்களது செங்கோல் மாறுபட்டு நடுநிலைமையினின்று தவறினாலும், வறுமைநோய் சிதைப்பினும் - (அதனால்) வறுமைநோய்வந்து வருத்தினாலும், சிவன்பால் பொய்மை மாறிய பத்தியும் பொலிவும் குன்றாவாக - சிவ பெருமானிடத்துவைத்த உண்மையாகிய நேயமும் சைவவிளக்கமும் குறைவுபடாதனவாக, (குறைபடாமலென்றபடி), தம்மை மாறியும் புரிவது தருமம் - தம்மைவிற்றாயினுஞ் செய்யுஞ்செய்கைகள் சிவதருமங்களாம்.

சைவவிளக்கங்களாவன - உருத்திராக்ஷம், விபூதி, ஸ்ரீபஞ்சாக்ஷரங்கள். பாண்டிநாடு தம்மைமாறியும் புரிவது தருமமாதலால் மழைவறத்தலும் அரசர்செங்கோல் பிழைத்தலும் வறுமைநோய் வருத்தலும் என்பவில்லையாதலால் எதிர்மறையும்மைகள் தந்து அஃகினும் மாறினும் சிதைப்பினும் எனவும், பத்திகுச் சிவதருமத்தின் ஒருப்பாடு என்பது ஓாபரியாயப் பெயராதலால் பத்தியும் பொலிவும் குன்றாவா எனவுங்கூறினார்.

நாடுபொருளால் உயர்திணையேனுஞ் சொல்லால் அஃறிணையாதலால் புரிவது என அஃறிணைமுடிபுதந்தார். அஃகல் மாறுதல் சிதைத்தல் ஒன்றற்கொன்று காரணமாதலால் காரணமாலையணி. (௬௧)

உலகம் யாவையு மீன்றவ ளுயர்ந்த
திலகநாயகி யாஞ்சுந் தரன்சேயென மூவருந்
தலைவராய் முறைசெய்த நாடிஃதன்றிச் சலதி
சூழ்புவி யினுண்டோ துறக்கத்து மஃதே.

(இ-ள்.) உலகம் யாவையும் ஈன்றவள் - எப்புவனமும் உயர்ந்த திலகநாயகி - எல்லா வுலகங்களையும் பெற்றருளிய தாயாகிய வாணிமுதலாகிய சத்திகளுக்குள் மேம்பட்டதிலகம்போன்ற நாயகியாகிய தடாதகைப்பிராட்டியாரும், மைந்தனார் சேய் என மூன்று தலைவரால் முறைசெய்த நாடு - ஞானவொளிப்பிழம்பாகிய சோமசுந்தரக் கடவுளும் அவர்கள் மதலையாகிய உக்கிரகுமாரபாண்டியனுமென மூன்றுதலைவர்களாலும் செங்கோல்செலுத்தியநாடு, இஃது அன்றி சலதி சூழ்புவியின் உண்டாகுமோ - இந்தப்பாண்டிநாடல்லாமல் கடல்சூழ்ந்த நிலவுலகில் வேறுநாடுகளுண்டா (இல்லையென்றபடி) துறக்கத்தும் அஃது - சுவர்க்கத்திலுண்டோவெனில் அங்குமில்லையாம்.

முகத்திற்குப்பொலிவுசெய்யுந் திலகம்போல வாணிமுதலிய சத்திமார்களைத்தத்தமக்குரிய தொழில்களால் விளக்கம்பெறச்செய்பவளாதலால் உயர்ந்த திலகநாயகி எனவும், சிவபெருமான் சோழநாட்டிலுஞ் சேரநாட்டிலும் அரசுபுரியினும் பிராட்டியாரும் அவர்திருமகனும் அரசுபுரியாமையின் இஃதன்றிச் சலதி சூழ்புவியி னுண்டாகுமோ" எனவும், துறக்கத்தில் அவற்றுளொன்று மின்மையின் துறக்கத்தும் அஃதேயெனவுங்கூறினார். "சிவபெருமான் சேரனாகவும் சோழனாகவும் திருவுருவங்கொண்டு அரசியல் நடத்தியது." திருவாசகம் - குயிற்பத்தின்.

"பெருந்துறைமேய - தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங்கன் வரக் கூவாய்" என்பதனாலுணர்க.

இடப்பொருண்மேனின்ற உகரச்சுட்டின் றிரிபாகிய உம்பர் இடவாகுபெயராய் வாணிமுதலிய சத்திகளின்மேனின்றது. இஃது அஃது இயற்கைச்சுட்டுப்பெயர்கள். தலைவாய் என்பதனிறுதியில் இனைத்தென அறிபொருளில் வந்த முற்றும்மைதொகுத்தல் - ஓ - எதிர்மறை. இதனால் நிலவுலகினும் விண்ணுலகினும் பாண்டிநாடு சிறந்ததென்பது கூறப்பட்டது. (௬௰)

திருநாட்டுப்படல முற்றிற்று.

ஆகப் பாயிரம் உட்பட்ட திருவிருத்தம்—௯

## திருநகரப்படலம்.

மங்கலம்புனைபாண்டிநாடாகியமகட்குச்
சங்கலம்புகைதோளிணைதடமுலையாதி
யங்கமாய்ப்புறந்தழுவியநகரெலாமனைய
நங்கைமாமுகமாகியநகர்வளம்பகர்வாம்.

(இ-ள்.) மங்கலம் புனை பாண்டி நாடு ஆகிய மகட்கு - மங்கலத்தை யிடையறாது பூண்ட பாண்டிநாடாகிய பெண்ணுக்கு, புறம் தழுவிய நகர் எலாம் - புறத்திற் சூழ்ந்த திருவேடகமுதலிய திருநகரங்களெல்லாம், சங்கு அலம்பு கை இணை தோள் தடம் முலை ஆதி அங்கமாம் - வளையலொலிக்குங்கைகள் இரண்டுதோள்கள் உயர்ந்த இரண்டு தனங்கள் முதலாகிய அவயவங்களாம், அனைய நங்கை மாமுகம் ஆகிய நகர்வளம் பகர்வாம் - அத்தன்மையையுடைய பாண்டிநாடாகிய பெண்ணிற்குப் பொலிவுமிக்க முகமாயுள்ள மதுரைநகரத்தின் வளப்பத்தைச் சொல்வாம்.

ஏனைநாடுகள்போல வொருகாலத்தேனு மழைவறத்தல் முதலாகிய குறைபாட்டால் மங்கலமிழத்தலின்மையின் - மங்கலம்புனை பாண்டிநாடெனவும், பின்னா விரித்துக்கூறுதலின் தொகுத்துப் புறந்தழுவிய நகரெலாங் கையாதிய அங்கமாமெனவும், எல்லாநாடுகளினுஞ் சிறந்ததாதலின் நங்கை எனவும், எல்லாநகரங்களினுஞ் சிறந்தது மதுரையாதலின் அதனை யெல்லா வுறுப்புகளினும் மேம்பட்ட முகமெனவுங் கூறினார். குறைபாடாவன - "மிக்கபெயலோடுபெயலின்மையெலிவிட்டில் கிளி - யக்கண்ணரசண்மையோடாறு" என்றிவற்றால் வரும் குறைபாடுகளாம், மங்கலமாவன "பிணியின்மைசெல்வம் விளைவின்பமேமம், அணியென்பநாட்டிற்கிவ் வைந்து" என்பனவாம். நகர்வளம் பகர்வாம் என்பது நுதலிப்புகுதலென்னுமுத்தி.

கொங்கையேபரங்குன்றமுங்கொடுங்குன்றுங்கொப்பூ
ழங்கமேதிருச்சுழியலவ்வயிறுகுற்றாலஞ்
செங்கையேடகமேனியேபூவணந்திரடோள்
பொங்கர்வேய்வனந்திருமுகமதுரையாம்புரமே.

(இ-ள்.) பரங்குன்றமும் கொடுங்குன்றம் கொங்கையே (மலையோடுவமிக்கப்படுவது கொங்கை யாதலால்) திருப்பரங் குன்றமுந் திருக்கொடுங் குன்றமும் (பாண்டிநாடாகிய பெண்ணிற்கு) தனங்களேயாம், திருச்சுழியல் கொப்பூழ் அங்கம் ஏ - (உந்திசுழியோடுவமிக்கப்படுதலின்) திருச்சுழியலென்னுந்தலமானது உந்தியாகிய அவயவமாம், குற்றாலம் அவ்வயிறு (வயிறு ஆலிலையோடுவமிக்கப் படுத

லின்) திருக்குற்றாலமென்னுந்தலம் அப்பெண்ணின் வயிறேயாம், வடகம் செம்கை - (கைதாமரையோ டுவமிக்கப்படுதலின்) திருவேடகமென்னுந்தலம் செவந்தகையேயாம், பூவணம் மேனி - (மேனிமலரோடுவமிக்கப்படுதலின்) திருப்பூவணமென்னுந் தலம் திருமேனியாம், பொங்கர் வேய்வனம் திரள் தோள் ஏ - (தோள் மூங்கிலோடுவமிக்கப்படுதலின்) சோலைசூழ்ந்த திருநெல்வேலி திரண்ட தோள்களேயாம், மதுரையாம்புரம் திருமுகம் ஏ - (முகஞ் சந்திரனோடுவமிக்கப்படுதலின்) மதுரைநகரம் கண்டோரால் விரும்பப்படு முகமேயாம்.

குலசேகரபாண்டியன் காடழித்து நகராக்கி அந்நகரத்திற்குச் சாந்திசெய்யக் கருதியவழிச் சோமசுந்தரக்கடவுள் திருவுள்ளத்தமைந்து தனது திருச்சடையிலணிந்த சந்திரனிடத்தினின்று அமிர்தத்தைப்பெருக்கி அந்நகரமுழுமையும் பாவித்துச் சாந்திசெய்து மதுரமயமாக்கியதன்மையால் மதுரையெனப் பெயர்பெற்றது அதனால் அந்நகரத்திற்குச் சந்திரசம்பந்தமிருத்தலால் திருமுகமதுரையாம் புரமெனக் கூறினர். வடகம் இதழைத் தனதிடத்துடையது என்பது பொருள்.

உவமானம் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பது. உவமேயம் உவமிக்கப்படுவது. இது இயைபுருவகவணி. (௨)

> வடுவின்மாநிலமடந்தைமார்பிடைக்கிடந்திமைக்கும்
> படிவிலாரம்பாண்டிநாடாரமேற்பக்கத்
> திடுவின்மாமணியதனைப்புறநகரெலாமிவற்று
> ணடுவிநாயகமாமணிமதுரைமாநகரம்.

(இ-ள்.) பாண்டிநாடு வடு இல் மா நிலம் மடந்தை மார்பு இடை கிடந்து இமைக்கப்படும வில் ஆரம் ஏ - பாண்டிநாடானது குற்றமில்லாத பெரிய பூமிதேவியின் மார்பினிடத்துக்கிடந்து விளங்கும் ஒளியையுடைய பெரும்பதக்கமாம், அதன் புறம் நகர் எலாம் ஆரம் மேல்பக்கத்து இடுவில் மாமணி - அந்நாட்டின் புறத்திலுள்ள நகரங்களெல்லாம் அப்பதக்கத்தின் சுற்றுப்பக்கங்களிற் பதித்த வொளியையுடைய பெரிய இரத்தினங்களேயாம், மதுரைமாநகரம் இவற்றுள் நடுநாயக மாமணி ஏ - பெரிய மதுரைநகரம் அச்சுற்றுப்பக்கங்களிலுள்ள இரத்தினங்களுள் நடுநாயகமாகிய பெரியரத்தினமேயாம்.

நடுநாயகமணி விலைமிக்கதும ஒளியுள்ளதுமா யிருத்தல்போல மதுரை அந்நாட்டிலுள்ள எல்லாநகரங்களுள்ளும் புகழ்மிக்கதும பெரும்பயன் தருவதுமாயிருத்தலின் நடுநாயக மாமணி மதுரைமாநகரம் எனக் கூறினா. இன் வேண்டா வழிச்சாரி. இமைக்கப்படு இமைக்குமென்றே பொருள்படுதலால் படுசொற்குப் படுபொருளின்மை காண்க. (௩)

> திருமகட்கொருதாமரைக்கூடமேதிருமால்
> மருமகட்குவெண்டாமரையாடமேஞான
> தருமகட்கியோகத்தனிப்பீடமேதனையாம்
> பெருமகட்கணிநிலைக்கமெய்யாமிதுப்பேரூர்.

(இ-ள்.) இப் பேர் ஊர் திருமகட்கு ஒரு தாமரைக் கூடம் ஏ ஆனது - இந்தப் பெரியமதுரை (பலசெல்வங்களையுந்தருதலால்) இலக்குமிதேவிக்குச் செந்தாமரைக் கோயிலாக விருந்தது, திருமால் மருமகட்கு வெண் - தாமரை மாடம் ஏ ஆனது - (கல்வி நிறைதலால்) திருமாலின் மருமகளாகிய சரஸ்வதிக்கு வெள்ளைத்தாமரை மாளிகையாயிருந்தது, ஞானம் தருமகட்கு தனி யோக பீடம் ஏ ஆனது - (சிவஞானந்தருதலால்) ஞானசத்திக்கு ஒப்பில்லாத யோகபீடமாயிருந்தது, பெருதனை

யாம் மகட்கு அணி திலகம் ஏ ஆனது - (நிலவுலகுக்குப் பேரழகுசெய்தலால்) பெரிய பூமிதேவிக்கு அணியுந் திலகமாயிருந்தது.

பல செல்வங்களாவன மணி பொன் முதலியன. கு - உருபுகள் சேர்க்கைப் பொருளன. இதனால் இது இன்னதெனக் கூறுதலின் ஏது உருவகவணி. (௪)

திக்குப வானமும்புதையிருடின்றுவெண்சோதி
கக்குபளிங்கைநிவப்புறுகாட்சியங்நகருண்
மிக்கவாலிதழ்த்தாமரைவெண்மகளிருக்கை
யொக்குமல்லதுபுகழ்மகளிருக்கையுமொக்கும்.

(இ-ள்.) திக்கும் வானமும் புதை இருள் தின்று வெண் சோதி கக்கும் மாளிகை நிவப்புறு காட்சி - எட்டுத்திக்குகளையும் ஆகாயத்தையு மூடிய இருளைப்போக்கி வெள்ளியகிரணத்தை வீசும் மாடங்கள் உயர்ந்து தோன்றுந் தோற்றம், அந்நகருள் வெண்மகள் மிக்க வால் இதழ் தாமரை இருக்கை ஒக்கும் - அம்மதுரைநகரத்தில் உள்ள சரஸ்வதியின மிகுந்த வெள்ளிய இதழ்களையுடைய வெண்டாமரைப்பீடத்தையொக்கும், அல்லது புகழ்மகள் இருக்கையும் ஒக்கும் - அதுவன்றிக் கீர்த்தியென்னும் பெண்ணினது ஆசனத்தையும் ஒக்கும்.

வெண்சோதி - முத்தாலும் சுண்ணத்தாலும் ஆகிய ஒளி. இருளைப் போக்குதலும் கிரணம் வீசுதலையும் குறித்தற்கு - இருள் தின்று வெண் சோதிகக்குமென்றது குணவணி. நியமித்த உவமையை விலக்கிப் பிறிதும் இத்தன்மையதாமெனக் கூறுதலின் அயல் உவமையணி. (௫)

புறநகர்

நெற்கரும்பெனக்கரும்பெலாநெடுங்கமுகென்ன
வர்க்கவான்கமுகொலிகலிதெங்கெனவளர்ந்த
பொற்கவின்குலைத்தெங்குகார்ப்பந்தரைப்பொறுத்து
நிற்கநாட்டியகாலெனநிவந்ததண்பணையே.

(இ-ள்) தண்பணை - குளிர்ந்தவயலில், நெல் கரும்பு என்ன (கண்டோர் மயங்கி) நெற்பயிர்களைக் கரும்பென்று சொல்லவும், கரும்பு எல்லாம் நெடுங் கமுகு என்ன - கரும்புகளெல்லாவற்றையும் நெடிய கமுகமரங்களென்று சொல்லவும், வர்க்கம் வான் கமுகு ஒலி கலி தெங்கு என்ன - வரிசைவரிசையாயுள்ள பெரியகமுகமரங்களை ஒலிக்கும் ஒலியையுடைய தென்னமரங்களென்று சொல்லவும், வளர்ந்த பொன் கவின் குலை தெங்கு - வளர்ந்த பொன்னிறம்போலும் அழகுவாய்ந்த குலைகளையுடைய தென்னமரங்களை, கார் பந்தரை பொறுத்து நிற்க நாட்டிய கால் என நிவந்த - மேகமாகிய பந்தலைச் சுமந்து நிற்கும்படி நாட்டிய கால்களென்று சொல்லவும் அவைகள் உயர்ந்திருக்கின்றன.

தென்னைமரத்தின் இலை ஓலைவடிவாக விருத்தலின் ஒலிகலிதெங்கென்றார். நெல்லைக் கரும்பாகவும் கரும்பைக் கமுகாகவும் ஒரு பொருளை மற்றொருபொருளாக அறிதலின் மயக்கவணி.

மருதமென்னும் அகத்திணைக்குப புறனாயுள்ள உழிஞைத்திணை வேற்றுவேந்தன் அரணை முற்றுகைசெய்தலென்று கூறியிருத்தலாலும், தொ - பொருளதிகாரம் புறத்திணையியல் - உழிஞைதானே மருதத்துப்புறனே என்ற சூத்திரத்திற்கு. நச்சினார்க்கினியர் - "வேந்தன்மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாதலான்" என உரை கூறியிருத்தலாலும், புறநகரம் மதிலின் புறத்திலுள்ளதெனக்கொள்க. அது யானை தேர் குதிரை முதலியனவும் அவற்றை நடத்துவோரும் அவற்றிற்குரிய விம்புரி கலனை முதலிய தொழில்செய்வோரும் வாழும் இடமாம்.

கள் ஒலிக்குந் தாமரைமலரின்மேல் பொருந்த மதுவையும் மலர்களையுஞ் சொரியா நின்றன, (அச்சொரிகை) புத்தேள் வேதம் வேதியர் செம கரம் விரித்து வாய் மனுக்கள் ஓத ஏமமும் உதகமும் உதவுவார் அனைய - தெய்வத்தன்மையுடைய வேதத்தை யுணர்ந்த அந்தணர்கள் சிவந்த கைகளை விரித்து வாயால் மந்திரங்கள் கூற (அவர்கைகளில்) பொன்னையும் அதனைத் தத்தஞ்செய்ய நீரையுங் கொடுப்போர் செயலை யொத்திருந்தன.

சொரிவனவென்னும் வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர் வினைமுதலாய் அனையவென்னுங் குறிப்புமுற்றுப் பயனிலையைக் கொண்டது.

செருந்திகொடுப்போராகவும் கமலங்களைக் கரங்களாகவும் மதுவைத்தத்தஞ் செய்யு நீராகவும் மலரைப் பொன்னாகவும் வண்டுமுரலுதலை மனுக்களாகவும் கூறுதலின் இதுவும் அவ்வணி. (௯)

விரைசெய்பங்கயச்சேக்கைமேற்பெடையொடுமேவி
யரசவன்னநன்மணஞ்செயவம்புயப்பொய்கை
திரைவளைக்கையானுண்டுளிசெறிந்தபாசடையா
மரகதக்கலத்தாளநீராஞ்சனம்வளைப்ப.

(இ-ள்.) அரச அன்னம் விரை செய் பங்கயம் சேக்கை மேல் பெடையொடு மேவி நல் மணம் செய - அரசவன்னமானது வாசமமைந்த தாமரையாகிய படுக்கை மேல் தனது பெட்டையன்னத்தோடு பொருந்தி மங்கலவிவாகஞ்செய்ய, அம்புயம் பொய்கை திரை வளை கையால் நுண் துளி தாளம் செறிந்த பாசு அடையாம் மரகதம் கலம் நீராஞ்சனம் வளைப்ப - (அதனைக்கண்டு) தாமரைத் தடாகங்களாகிய மகளிர்கள் அலைகளாகிய வளையணிந்த கைகளால் நுண்ணிய நீர்த்துளிகளாகிய முத்துகள் நெருங்கிய பசிய இலையாகிய மரகதத்தட்டால் நீராஞ்சனம் வளைக்கா நின்றன.

வளை-சங்கு. சேக்கை செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர். சே-(படு) முதனிலை.

திரை முதலியவற்றை உருவகஞ்செய்து அம்புயப் பொய்கையை உருவகஞ் செய்யாமையின் ஏகதேசவுருவகவணி. தாமரையில் அன்னங்க ளிருத்தலும் அலையால் அவ்விலைகளசைதலும் ஆகிய வியல்பொழியக் கவி தான்கருதிய மற்றொன்றை அவற்றின்மேலேற்றிக் கூறுதலால் தற்குறிப்பேற்ற வுருவகவணி. (௧௦)

இரும்பினன்னதோள்வினைஞரார்த்தெறிந்துவாய்மடுக்குங்
கரும்புதின்றிடியேற்றொலிகாட்டியின்சாறு
சுரும்புசூழ்கிடந்தரற்றிச்சொரிந்துவெஞ்சினத்தீ
யரும்புகட்களிறொத்தனவாலையெந்திரங்கள்.

(இ-ள்) ஆலை எந்திரங்கள் - கரும்பாலைகள், இரும்பின் அன்னதோள் வினைஞர் ஆர்த்து - இரும்பையொத்த தோள்களையுடைய திண்ணியர்கள் கோஷித்து, எறிந்து வாய் மடுக்கும் கரும்பு தின்று இடி ஏறு ஒலிகாட்டி - தறித்துத் தம்வாயிற்கொடுக்கும் கரும்புகளைத்தின்று இடியேறுபோல ஒலித்து, இன் சாறு சுரும்பு சூழ் கிடந்து அரற்றிட சொரிந்து - இனியசாற்றை வண்டுகள் சூழ்ந்துகிடந்து ஒலிக்கப்பொழிந்து, வெம் சினம் தீ அரும்பு கண் களிறு ஒத்தன - வெய்யகோபத்தீ முகிழ்க்குங் கண்களையுடைய யானைகளை யொத்தன.

இரும்பினன்ன தோள்வினைஞர் - யானைப்பாகர். வேல்செய்வோர். வாய் ஆனையின்வாய் - ஆலையின்வாய். தின்னுதல் - நெரித்தல். சொரிதல் - கடைவாயின் வழியொழுகல், புறத்தில் வெளிப்படுதல். கரும்பினை யானைவாயிற்கொடுத்தலும் ஆலைவாயிற்கொடுத்தலும் அதனை யுண்ணும்போதும் நெரிக்கும்போதும் ஆனையும் ஆலையும் ஆரவாரித்தலும் அவ்விருபொருளும் அச்சாற்றைப் புறத்திற்பொழிதலும் உடைமையால் வெஞ்சினத்தி அரும்புகட் களிறொத்தன என்றார்.

கரும்பு களிறு சாதியொருமைகள். இது செம்மொழிச்சிலேடையுவமையணி.

பள்ளநீர்க்குடைந்தஞ்சிறைப்பாசிபோர்த்தெழுந்த
வெள்ளையன்னத்தைக்காரனமெனப்பெடைவீழ்க்க
வுள்ளமீட்டலமரச்சிறகுதறியுள்ளன்பு
கொள்ளவாசையிற்றழீஇக்கொடு குடம்பைசென்றணையும்.

(இ-ள்.) பள்ளம் நீர் குடைந்து அம் சிறை பாசிபோர்த்து எழுந்த வெள்ளை அன்னத்தைக் கார் அன்னம் என - குளங்களிலுள்ள நீரிற்குடைந்து அழகிய சிறைகள் பாசியாற் போர்க்கப்பட்டு மேலெழுந்த வெள்ளியசேவலன்னத்தைக் கரியவேறோரன்னமென்றுகருதி, பெடை வீழ்க்க உள்ளம் மீட்டு அலமர - பெட்டையன்னம் அதனிடத்து விருப்புற்ற மனத்தைத்திருப்பி (சேவலென்று கொளாதொழிந்ததென்று) வருந்த, சிறகு உதறி உள் அன்பு கொள்ள ஆசையில் தழீஇக்கொடு குடம்பை சென்று அணையும் - (அதனைக்கண்ட சேவல்) சிறகுகளையுதறி (பழையவுருக்கொண்டு) மனத்தில் அன்புமீதூர ஆசையால் அதனைத் தழுவிக்கொண்டு கூட்டைச் சென்றணையாநிற்கும்.

சேவலென்கொளாதொழிந்ததென்பதும், அதனைக்கண்ட சேவலென்பதும் அதிகாரத்தால் வருவிக்கப்பட்டன. தனது பெடையின் கற்புநிலை சோதிப்பான் உருவுதிரிந்தமையால் அஞ்சிறைப்பாசி போர்த்தெழுந்த வெள்ளையன்னமெனவும், அதனும் அதனது கற்புநிலைமை புலப்பட்டபின் பிரியாதிருக்கவேண்டுதலின் உள்ளன்புகொள்ள தழீஇக் கொடு குடம்பை சென்றணையுமெனவும் கூறினார்.

வீழ்க்க என்னும் இறந்தகாலப் பெயரெச்சம் உள்ளமென்னும் வினைமுதற் பொருள்கொண்டது. பாசிபோர்த்தெழுந்த, அலமர என்னும் தொழில்களால் கற்புநிலை யாராய்ந்துணர்த்தலில் நுட்பவணி. (கஉ)

இரவியாழியொன்றுடையதேரீர்த்தெழுமிமையாப்
புரவிநாநிமிர்ந்தயில்வனபொங்கர்வாய்த்தளிர்கள்
கரவிலாமகத்தெழுபுகைகற்பகநாட்டிற்
பரவிவாட்டுவபனியெனப்பங்கயப்பொய்கை

(இ-ள்.) இரவி ஒன்று ஆழி உடைய தேர் ஈர்த்து எழும் இமையாப் புரவி நா நிமிர்ந்து பொங்கர்வாய் தளிர்கள் அயில்வன - சூரியனுடைய ஒருருளையுடைய தேரையிழுத்துச்செல்லும் இமையாத கண்களையுடைய குதிரைகள் நாவைநீட்டிச் சோலையினிடத்துள்ள தளிர்களைக் கறிக்காநிற்கும், கரவு இல்லா மகத்து எழுபுகை கற்பகநாட்டில் பனியென பரவி பொய்கை பங்கயம் வாட்டுவ - கள்ளமில்லாத வேள்வியிலெழுந்த புகை தேவருலகில் பனியெனச்சென்று பரவி மானததடாகத்திலுள்ள தாமரைகளை வாட்டாநிற்கும்.

கண்களைக் குறித்தற்கு இமையாவெனவும், வேள்விசெய்வோர் கள்ளமின்மையை உடைமைமேலேற்றிக் கரவிலாமகமெனவும், தேவருலகிற்கு இருதுகளின்

மையின் பனியெனப்பரவி எனவும், இன்னல் கறித்தல் முதலியவற்றிற்கு அயிலுதல் பொதுவினையாதலின் அயில்வன எனவும் கூறினர். சூரியனது குதிரைகளுக்கும் சோலைகளுக்கும் யாகப்புகைக்கும் மானதமவிற்கும் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங்கூறியது தொடர்புயர்வு நவிற்சியணி. (கங)

இடை நகர்.

பிறங்குமாலவாயகத்துளெம்பிரானருளால்வந்
தறங்கொடீர்த்தமாயெழுகடலமர்ந்தவாநோக்கிக்
கறங்குதெண்டிரைப்பெரும்புறக்கடலும்வந்திவ்வூர்ப்
புறங்கிடந்ததேபோன்றதுபுரிசைசூழ்கிடங்கு

(இ-ள்.) புரிசைசூழ் கிடங்கு - மதிலின் புறத்தைச் சூழ்ந்த அகழி, எழுகடல் - எழுகடலும், பிறங்கும் ஆலவாய் அகத்துள் எம்பிரான் அருளால் வந்து அறங்கொள் தீர்த்தமாய் அமர்ந்த ஆறு நோக்கி - விளங்காநின்ற திருவாலவாயுள் எமது பெருமான் திருவருளால்வந்து தருமவடிவாகிய தீர்த்தங்களாய் இருந்தவகையைநோக்கி, கறங்கு தெண் திரை பெரும்புறக் கடலும் வந்து இவ்வூர் புறம் கிடந்ததுபோன்றது - ஒலிக்கும் தெள்ளிய அலையையுடைய பெரும்புறக்கடலும்வந்து இந்த மதுரையின்புறத் திருத்தலை யொத்தது.

இதனால் அவைபோலத் தானும் ஒரு தீர்த்தமாவான்பொருட்டுப் பெரும்புறக்கடலும் அகழிவடிவாய்த்திரிந்து வந்து காத்திருந்தென்பது கூறப்பட்டது.

எழுசமுத்திரங்கள் இன்னவென்பதும் அதற்கப்புறம் சக்கரவாளகிரியின்புறத்தில் பெரும்புறக்கடல் உள்ளதென்பதும் கந்தபுராணம்-அசுரகாண்டம் - அண்டகோசமுரைத்த வத்தியாயத்தில்,

"பாவுமிவ்வுலகிலுப்புப் பால்தயிர் நெய்யிக்கன்னல்
இரதமாமதுநீரென்னு மெழுகடலேழுதீவும்
வான்முறை விரவிச்சூழ மற்றதற்கப்பால்சொர்ணத்
தரையது சூழ்ந்திருக்கும் சக்கரவாளசையம்."

"அன்னதற்கப்பால்வேலை காசறும்புறத்திலாழி" என்பவற்றாலுணர்க.

எழுகடலென்பதனிறுதியில் இனைத்தென வறிபொருளில்வந்த முற்றும்மை தொக்கது. பெரும்புறக்கடலும் என்பதனிறுதியில் நின்ற உம்மை இறந்தது தழீஇய உயர்வு சிறப்புப்பொருட்டு. இருந்தது - இறந்தகால விடைநிலை பெற்ற தொழிற்பெயர். தொ-பொ-புறத்திணை இயல். "முழுமுதலரண முற்றலுங் கோடலும், அனைநெறிமரபிற்றாகுமென்ப" என்னுஞ்சூத்திரத்தில் முழுவரணாவது மலையும்காடும் நீருமல்லாத அகநாட்டுட் சேரவருமதிலெனவும், அது வஞ்சனைபலவும் வாய்த்து தோட்டிமுண்முதலியன பதித்தகாவற்காடு புறஞ்சூழ்ந்து அதனுள்ளே இடங்கர்முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்குபுறஞ்சூழ்ந்து யவனரியற்றிய பல்பொறிகளும் பதணமும் எப்புழை ஞாயிலும் ஏனையபிறவும் அமைந்து எழுவுஞ்சீப்பும் முதலியவற்றாலழிவின்றமைந்த வாயிற்கோபுரமும் பிறவேந்திரமும் இயற்றப்பட்டதாம் எனவும் நச்சினார்க்கினியர் கூறிய உரையால் இவை தனித்துடையது இடைநகரமாம். (கச)

எறியும்வாளையுமடிக்கடியெழுந்துடல்பரப்பிப்
பறியுமாமையும்வாளொடுமேற்கடகம்பற்றிச்
செறியுநாண்மலரகழியுஞ்சேண்டொடும்புரிசைப்
பொறியுமேயொன்றியுடன்றுபோர்புரிவனபோலும்.

குமிழலர்ந்தசெந்தாமரைக்கொடிமுகிழ்கோங்கி
னுமிழ்தருமபரஞானமுண்டுமிழ்ந்தவாய்வேதத்
தமிழறிந்துவைதிகமுடன்சைவமுநிறுத்து
மமிழ்தவெண்டிரைவையையுமொருபுறத்தகழாம்.

(இ-ள்.) குமிழ் அலர்ந்த செம் தாமரைக் கொடி முகிழ் கோங்கு உமிழ் தரும் பரஞானம் வாயுண்டு உமிழ்ந்த வேதத் தமிழ் அறிந்து-குமிழம் பூமலர்ந்த செந்தாமரைக்கொடியில் அரும்பிய கோங்கரும்புபொழிந்த பரஞானமாகிய திருவமுதைத்தமது திருவாயால் மடுத்து மீட்டும் உமிழ்ந்தருளியதுபோல வருளிய வேதப்பயனாகிய திருப்பதிகத்தின் சுவையையறிந்து, வைதிகமுடன் சைவமும் நிறுத்தும் அமிழ்தம் வெண் திரை வையையும் ஒருபுறத்து அகழாம்-வைதிகநெறியோடு சைவநெறியையும் நிலைநிறுத்திய அமிர்தம்போலும் வெள்ளிய அலையையுடைய வையைநதியும் அம்மதுரை நகரத்தின் ஓர்புறத்திலுள்ள அகழியாம்.

குமிழ் செந்தாமரைக்கொடி கோங்குமுதலிய உவமானச் சொற்களால் நாசி திருமுகம் திருமேனி திருத்தனம் ஆகிய உவமேயச்சொற்களைக் கேட்போர் மகிழும் பொருட்டு உயர்வு நவிற்சியணியாக உருவகஞ்செய்து குமிழலர்ந்த செந்தாமரைக் கொடி முகிழ் கோங்கு எனவும், அத்திருத்தனஞ் சொரிந்த திருவமுது பரஞானமாதலால் பரஞானம்வாயுண்டு எனவும், அப்பரஞானமே வேதத்தின்பயனாகிய திருப்பதிகமாதலின் உமிழ்ந்த வேதத்தமிழ் எனவும், திருப்பதிகம் எழுதிய ஏடு எதிர் செல்லச் செய்தமையால் அறிந்தெனவும், அதனால் சமணசமயங்கெட்டோட வேள்விமுதலிய அறங்களின் வடிவாகிய வைதிகமும், அவ்வறங்களின் முதிர்ச்சியால் அடையும் பயனாகிய சைவமும் நிலைபெறச் செய்தமையால் வைதிகமுடன் சைவமு நிறுத்துமெனவும், இவற்றின் உண்மைகளையுணர்ந்து ஆன்மாக்கள் பிறப்பிறப்புகளினின்று நீங்கி உய்யச்செய்தலின் அமிழ்தவையை யெனவுங் கூறினர். இன் வேண்டாவழிச்சாரியை.

எதிர்சென்றருளிய திருப்பாசுரம்.

வாழ்கவந்தணர் வானவரானினம், வீழ்கதண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லா மரனாமமே, சூழ்கவையக முந்துயர்தீர்கவே.

திருத்தொண்டர்புராணத்தில்.

"அந்தணர்தேவரானினங்கள்வாழ்கவென், றிந்தமெய்ம்மொழிப்பயனுலகமின்புறச்
சந்தவேள்விகள்முதல்சங்கரர்க்குமுன், வந்தவர்ச்சனைவழிபாடுமன்னவாம்."
"வேள்விநற்பயன்வீழ்புனலாவது, நாளுமர்ச்சனைநல்லுறுப்பாதலால்
ஆளுமன்னனைவாழ்த்தியதர்ச்சனை, மூளுமற்றிவைகாக்குமுறைமையால்."
"ஆழ்கதீயதென்றோதிற்றயனெறி, வீழ்கவென்றதுவேறெல்லாமரன்பெயர்
சூழ்கவென்றதுதொல்லுயிர்யாவையும், வாழியஞ்செழுத்தோதிவளர்கவே."
"சொன்னவையகமுந்துயர்தீர்கவே, என்னுநீர்மையிகபரத்திற்றுயர்
மன்னிவாழுலகத்தவர்மாற்றிட, முன்னைஞானசம்பந்தர்மொழிந்தனர்."

எனச் சேக்கிழார்சுவாமிகள் அருளிச்செய்த பாசுரங்களால் அத்திருப்பாசுரத்தின் திருவுள்ளக் கிடக்கைகாண்க. (கஎ)

பிள்ளையும்பெடையன்னமுஞ்சேவலும்பிரியாக்
கள்ளமுண்டகச்செவ்வியாற்கண்டவர்கண்ணு
முள்ளமுந்திரும்பாவகைசிறைப்படுத்தோங்கும்
புள்ளலம்புதண்கிடங்கிதுபுரிசையைப்புகல்வாம்.

(இ-ள்.) பின்னையும் பெடை அன்னமும் சேவலும் பிரியா கள்ள முண்டகம் செவ்வியால் - குஞ்சுகளும் பெட்டை அன்னங்களும் சேவலன்னங்களும் (தம்மினின்றும்) நீங்காத தேனையுடைய தாமரைகளின் பொலிவால், கண்டவர் கண்ணும் உள்ளமும் திரும்பாதவகை சிறைப்படுத்து ஓங்கும் பன் அலம்பு தண்கிடங்கு இது புரிசையை புகல்வாம் - பார்த்தவர் கண்களும் மனமும (தன்னினின்று அவர்கள்பால் மீட்டும்) செல்லாதவண்ணம் தன்வசப்படுத்தி மேம்பட்டு விளங்கும் பறவைகள் ஒலிக்கும் தண்ணிய நீர்க்கிடங்கின் தன்மை இத்தன்மையது இனி மதிலின் சிறப்பைச் சொல்வாம்.

கள்ள உடைமைப்பொருளில்வந்த பொருளடியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சம். தண்கிடங்கு - நீரரண். புரிசை - முழுவரண், மதிலரண் எனினுமொக்கும். (கஅ)

மாகமுந்தியகடிமதின்மதுரைநாயகர்கைக்
நாகமென்பதேதேற்றமந்நகர்மதில்விழுங்கி
மேகநின்றசைகின்றதவ்வெஞ்சினப்பணித
னாகமொன்றுதோலுரிபடநெளிவதேயாகும்.

(இ-ள்.) மாகம் உந்திய கடிமதில் - விண்ணுலகையூடுருவிச்சென்ற காவலாயுள்ள மதில், மதுரை நாயகர் கை நாகம் என்பதே தேற்றம் - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கரத்தில் விளங்கும் சர்ப்பகங்கணமென்பதே நிச்சயம், அந்நகர் மதில் விழுங்கி நின்று மேகம் அசைகின்றது - அம்மதுரைநகரின் புடைசூழ்ந்த மதிலை மறைத்து நின்று மேகம் அசைகின்றதோற்றம், அவ் வெம் சினம் பணி தன் ஆகம் ஒன்று தோல் உரிபட நெளிவதுஏ ஆகும் - அந்தக் கொடிய கோபத்தையுடைய பாம்பானது தனது சரீரத்திற் பொருந்திய தோலுரிய நெளிதலே தேற்றமாம்.

மலை காடு நீர் மதில் என்னும் நான்கு காவலுள் மதில் ஓர் காவலாதலால் கடிமதில் எனவும், வங்கிய சேகரபாண்டியன் பொருட்டுச் சிவபெருமான் வெளிப்பட்டுத் தனது கரத்திலணிந்தருளிய சர்ப்பகங்கணத்தால் மதுரை நகர எல்லையை வரையறுத்தமையால் மதில் கைந்நாகமென்பதே தேற்றமெனவும், அதனைச் சாபமாக வருகைஞ்செய்தமையின் சர்ப்பந் தோலுரிதற்பொருட்டு உடல் நெளிதல் இயல்பாதலால் அம்மதிலின்மேல் மேகம் அசைதல் அந்நெளிவேயாகுமெனவும் தேற்றேகாரங்கள் தந்து கூறினார். இது வியமவுருவகவணி.

சிவபெருமான் தனது திருக்கரத்தில் சர்ப்பத்தை யணிந்ததற்குக்காரணம்-தத்தம் நிலைகெட்டழிந்த தாருகாவனத்து முனிவர்கள் தமது நிலைமைக்கேடு சிவபெருமானால் ஆயதென்றுணர்ந்து அச்சிவபெருமானை மாய்த்தற்பொருட்டு ஓர் வேள்விசெய்து அதன்பால் எழுந்த சர்ப்பங்களையேவ அதனை அச்சிவபெருமானணிந்தனர். கந்தபுராணம் - தக்ஷகாண்டம் - ததீசியுத்தரப்படலத்தில்,

“ வந்தியபினர்வேள்வியெரிய தற்கிடையேயெண்ணில்
பார்தனங்கெழுந்துநீயோர பணியினால் சீற்றந்தோடு
போந்தனவவற்றைமாயோன் புள்ளினுக்கஞ்சித்தன்பால்
சேர்ந்திடும்பணிகளோடுசெவ்விதிற்புனைந்தானெங்கோன்.”

“ பணியெலாம்பணியதாகிப்பான்மிசைத்திகழ” என்பவற்றாலுணர்க (கக)

புரங்கடந்தபொற்குன்றுகோபுரமெனச்சுருதிச
சிரங்கடந்தவர்தென்னராயிருந்தனர்திருநகர

ருரங்கடந்திடவேண்டினுமுதவிசெய்தவரால்
வரங்கடந்திடப்பெறவெதிர்நிற்பதுமானும்.

(இ-ள்.) சுருதிசிரம் கடந்தவர் தென்னராய் இருந்தனர் - வேதங்களின் உச்சியைக்கடந்த இறைவர் பாண்டியராய் அரசியல் செலுத்தி யிருக்கின்றனர், திருத்தார் உரம் கடந்திட வேண்டின் - ஒருகால் பகைவரது வலிமையைக்கடக்க வில் வேண்டின், உதவி செய்து அவரால் வரங்கள் தந்திட பெற - (முன்புதிரிபுரங்கடத்தற்கு உதவிசெய்ததுபோல) இன்றும் உதவிசெய்து அவ்விறைவரால் வரங்கள் அருளப்பெறும்பொருட்டு, புரம் கடந்த பொற் குன்று கோபுரம் என எதிர்நிற்பது மானும் - திரிபுரத்தை வென்ற வில்லாகிய மகமேரு மதிலின்வாயிற் கோபுரவடிவாகத் திரிந்து எதிர்நிற்றலை யொக்கும்.

உம்மை அசைநிலை. உபமானமாகிய மேருவானது திருத்தார் உரங் கடந்திடவேண்டின் என அப்பொழுது நிகழ்கின்ற செய்கையிற் பயன்படுதற்பொருட்டுக் கோபுரமாகிய உபமேயத்தின் உருவத்தைக்கொண்டு பரிணமித்ததாகக் கூறுதலின் இது திரிபணி.

மகமேருவில்லானது - சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் அசுரர்கள் மூவரும் தேவதச்சன் வகுத்துக்கொடுத்த பொன் வெள்ளி இரும்புகளாலாகிய அரண்களிலிருந்து சிவநேசந்திறம்பாதவர்களாய் அரசுசெய்திருக்குங்காலையில், தேவேந்திரன்முதலாகிய தேவர்கள் அவர்களுக்குப் புறங்கொடுத்து வருந்தித் திருமால்சரணடைந்துகூற, அத்திருமால் அருள்கூர்ந்து அவர்களைக்கொல்லும்பொருட்டு அபிசாரயாகஞ்செய்து, அதிற்றோன்றிய பூதங்களைத் திரிபுரங்களையழிக்கும்படியேவ, அப்பூதங்கள் சென்று முப்புரத்தவரோடு போர்செய்தழிந்தன; அதனைக்கண்ட தேவேந்திரன் முதலியோர் முகவாட்டத்தைநோக்கி இவ்வசுரர்கள் கொடிய தீத்தொழிலையுடையராயினும் சிவநேசமுடையரா யிருத்தலின் அவர்களை வெல்வது அரிதென்று கருதி ஓர் சூழ்ச்சியால் தனது அமிசங்களினின்று ஓர் புத்தனை வருவித்து அவன்முகநோக்கி நாம் தரும் இந்நூலைக்கொண்டு அவர்கள் நியமத்தைக் கெடுப்பாயென்று நாரதமுனிவரையும் அவனுக்குத் துணையாகவனுப்பி அவர்கள் சிவநேயங்களையழிப்பித்துத் தேவேந்திரன் முதலியோர் புடைசூழ்ந்துவர, அத்திருமால் திருக்கைலைக்குச்சென்று சிவபெருமானார் திருவடிகளைவணங்கித் திரிபுரத்தோர்செய்யுந் துன்பங்களால் நாங்களிதுகாறும்வருந்தினோம், இனியேனுங் கடைக்கணித்தருள்கவென இரந்துவேண்ட, அச்சிவபெருமானார் நந்திநாயனார் திருமுகத்தை நோக்கிப் போர்செய்தற்குரிய ஆயுதங்களொன்றுமில்லோம் அவை வந்துகூடில் அவர்களை வெல்லுதல் அரிதன்றெனத் திருவாய்மலர்ந்தருள, அத்திருமால் அத்தேவர்களோ டொருபுடையிருந்தாராய்ந்தவாறியினர், என்பதற்குக்காஞ்சிபுராணம்-கயிலாயபடலத்தில்,

“உருகெழுங்கலமொருவையமும், இருசுடரிருபுடையாழியுஞ்
சுருதிகடுகளறுவாசியு, மருமலரணையவன்வலவனும்.”
“தடநெடுவடவரைசாபமும், படவரவிரைபகர்நாரியு
மடல் விரிதுளவினன்வாளியுங், கடவுளர்பிறர்பிறகருவியும்.”

“ஆயினா” எனவருஞ் செய்யுள்களாலுணர்க. (௨௦)

சண்டபானுவுந்திங்களுந்தடைபடத்திசையு
மண்டகோளமும்பாந்துநீண்டனறகோபுரங்கள்
விண்டவாயிலால்வழங்குவவிடலாரவங்கார
துண்டபோல்பவுமுமிழ்வனபோல்பவுமுழலா.

(இ-ள்.) சண்ட பானுவும் திங்களும் தடைபட - விரைந்துசெல்லுஞ் சூரியனுஞ் சந்திரனும் (போக்குவரவு புரிதற்குத்) தடைபடும்படி, கோபுரங்கள் திசையும் பார்த்து அண்டகோளமும் நீண்டு அகன்று - கோபுரங்கள் அஷ்டதிக்கெங்கும் பரந்து அண்டகோளத்தின்மேலும் [illegible] பரந்து பரந்திருத்தலால், விடம் அரா அங்காந்து உண்டபோல்பவும் உமிழ்வன போல்பவும் உழலா - விஷத்தையுடைய இராகு கேது என்னும் பாம்புகள் வாய்திறந்துண்டாற்போலவும் உமிழ்ந்தாற்போலவும் சுழன்று, விண்டவாயிலால் வழங்குவ (அக்கோபுரங்களின்) புழையாயுள்ள வாயில்களால் போக்குவரவு புரிகின்றன.

சந்திர சூரியர்கள் செல்லுதற்கு வேறுவழியின்மையின் பாம்புகளின் வாய்ப்பட்டு வருதல்போலக் கோபுரங்களின் வாயிலின்வழியாய்ப் போக்குவரவு புரிகின்றனவென இதனாற்கூறப்பட்டன.

அகன்று என்னும் பலவின்பாற் படர்க்கை வினைமுற்றினின்று பிரிந்த தொழிற்பெயர் மூன்றனுருபேற்று வழங்க எனலும் பிறவினை முதல்வினை முற்றின் முதனிலைகொண்டது. உண்ட உமிழ்வன என்னும் அஃறிணைப் பலவின்பால் படர்க்கை வினைமுற்றுகள் எச்சமாய் நின்றன. உழலா செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகாலவினையெச்சம். இது தொடர்பு உயர்வு நவிற்சியணி. (௨௧)

மகரவேலையென்றியானைபோன்மழையருந்தகழி
சிகரமாலைசூழம்மதிறிரைக்கரந்துழாவி
யகழவோங்குநீர்வையையாலல்லதுவேற்றுப்
பகைவர்சேனையாற்பொரப்படுபாலதோவன்றே.

(இ-ள்.) மழை மகரம் வேலை என்று யானைபோல் அருந்து அகழி சிகரம் மாலை சூழ் அம்மதில்-மேகங்கள் சுறாமீன்களையுடைய சமுத்திரமென்று கருதி யானையைப்போல நீர் பருகும் அகழியும் ஞாயில்களாகிய சிகரபந்திகளுஞ் சூழ்ந்த அந்தமதிலை, திரை கரம் துழாவி அகழ ஓங்கு நீர் வையையால் அல்லது-அலைகளாகிய கைகளால் துழாவிக் கல்லப் பெருக்கெடுத்துவரும் நீர்மயமாகிய வையை நதியால் போர்செய்யப்படுவதன்றி, வேறு பகைவர் சேனையால் பொரப்படும் பாலது ஓ அன்று-மற்றைப் பகைவர் சேனைகளாற் போர்செய்யப்படுந் தன்மையதோ, அல்ல.

இதனால் மதிலின்வன்மை மிகுதியைக் கூறுதலின் வீறுகோளணி. (௨௨)

எல்லைதேர்வழித்தடைசெயுமிம்மதிற்புறஞ்சூழ்ந்
தொல்லைமேவலர்வளைந்துழியுடன்றுபோராற்றி
வெல்லமன்னரும்வேண்டுமோபொறிகளேவெல்ல
வல்லவம்மதிற்பொறிசெயுமறஞ்சிறிதுரைப்பாம்.

(இ-ள்.) எல்லை தேர்வழி தடைசெயும் இம்மதில் புறம் சூழ்ந்து ஒல்லை மேவலர் வளைந்த உழி-(விரிவுநீட்சிகளை) அளவுசெய்யப்புகுந்தவழி அவாறிவைத் தடைசெய்யும் இந்தமதிலின்புறத்தைச் சூழ்ந்து விரைந்து மாற்றலராகிய பகைவர்கள் முற்றுகைசெய்தவிடத்து, உடன்று போர் ஆற்றி வெல்ல மன்னரும் வேண்டும் ஓ- (அவர்கள் உள்ளேவாராமல்) கோபித்துப் போர்செய்து வெற்றிகொள்ள வீரர்களும்வேண்டுமோ, பொறிகள் ஏ வெல்ல வல்ல - (அம்மதிலிலுள்ள) யந்திரங்களே போர்செய்துவெல்லும்படி வல்லமையுள்ளன. அம்மதில் பொறி செயும் மறம் சிறிது உரைப்பாம்-அம்மதில்களிலுள்ள யந்திரங்கள்செய்யும் வீரங்களைச் சிறிது எடுத்துச் சொல்லுவாம்.

தொ - பொருளதிகாரம் - புறத்திணையியல். "முழுமுதலரண முற்றலுங்கோடலும்" என்றசூத்திரத்தால் ஒல்லைமேவலர் வளைந்துழி என்பது - முழுமுதலரண முற்றலும் என்றவிதியும், உடன்று போராற்றி வெல்ல என்பது கோடலுமென்ற விதியுமெனக்கொள்க. இது உழிஞைத்திணை. எல்லைதேர்வழித் தடைசெயுமென்பதற்குச் சூரியனது தேர்வழியாகிய வானைத் தடைசெய்யும் எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. எல்லை-என்பதில் ஐ பகுதிப்பொருள் விகுதி. வளைந்த என்னும் பெயரெச்சத்தின் அகரவீறுதொகுத்தல். ஓ-வினுப்பொருட்டு. (உ௩)

எழுசீரடியாசிரிய விருத்தம்.

மழுக்கள்வீசுவனநஞ்சுபூசுமுழைவாள்கள்வீசுவனமுத்தலைக்
கழுக்கள்வீசுவனகுந்தநேமியெரிகாலவீசுவனகாலனே
ரெழுக்கள்வீசுவனகப்பணங்கள்விடமென்னவீசுவனவன்னெடுங்
கொழுக்கள்வீசுவனகற்கவண்கயிறுகோத்துவீசுவனவார்ந்தரோ.

(இ-ள்.) ஆர்த்து மழுக்கள் வீசுவன - (முற்றுகைசெய்த மறுபுலத்தரசர்கள்மேல் சில யந்திரங்கள் வீராவேசத்தால்) ஆரவாரஞ்செய்து மழுவாயுதங்களை யொருபால் வீசாநின்றன, நஞ்சு பூசுமுழை வான்கள் வீசுவன - நஞ்சிற்றோய்த்த வாயினையுடைய வால்களால் ஓச்சுவன, முத்தலைக் கழுக்கள் வீசுவன - மூன்றுதலைகளையுடைய சூலத்தாற்குத்துவன, குந்தம் நேமி எரி கால வீசுவன - கைவேல்களுஞ் சக்கரங்களுங் கோபாக்கினியைக்கக்க அவற்றை யெறிவன, காலன் நோ எழுக்கள் வீசுவன - இயமனையொத்த வளைதடிகளைச் சுழற்றிவிடுவன, கப்பணங்கள் விடம் என்ன வீசுவன-எஃகாலாகிய நெருஞ்சில்களென்னும் ஆயுதங்களை (உயிரைக்கவரவரும்) விஷமென்று கண்டோர்கள்சொல்ல எறிகின்றன, வல் நெடும் கொழுக்கள் வீசுவன-வலிய நெடியகாறுகளை எறிகின்றன, கவண் கல் கோத்து கயிறு வீசுவன-கவண்களில் கற்களைக்கோத்துக்கயிறுபற்றி வீசுகின்றன.

வீசுவன பொதுவினையாதலால் அவ்வவ்விடங்களுக்கேற்ற செயல்கள்கொள்க. முற்றுகைசெய்த மறுபுலத்தரசர்கள்மேல் என்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. சீவகசிந்தாமணி-நாமகளிலம்பகம்-நகர்வளம்.

"மாற்றவர்மறப்படைமலைந்துமதில்பற்றின்" என்பதனுலுணர்க. (உ௪)

கஞ்சுபில்குதொளைவாளெயிற்றரவுநாநிமிர்த்தெறியுமலையரா
வெஞ்சினங்கொண்முழை வாய்திறந்துபொருநவாரைவிக்கிடவிழுங்குமாற்
குஞ்சரங்கொடியமுசலம்வீசியெதிர்குறுகுவார்தலைகள்சிதறுமா
லஞ்சுவெம்பொறிவிசைப்பினுங்கடுகியடுபுலிப்பொறியமுக்குமால்.

(இ-ன்.) கஞ்சு பில்கு தொளை வாள் எயிறு அரவு நா நிமிர்த்து எறியும் - கஞ்சினைச்சிந்துந் தொளைகளையுடைய வால்போலுங் கூறியபற்களையுடைய பாம்புகள் (நெருங்கியவீரர்களை) நாக்கைநீட்டிப் பல்லாற்கடித்துக்கொல்லும், வெம் சினம் கொள் மலை அரா முழை வாய்திறந்து பொருநரை விக்கிட விழுங்கும் - வெய்ய கோபங்கொண்ட மலைப்பாம்புகள் மலைக்குகைபோன்ற வாயைத்திறந்து நெருங்கிப் போர்செய்யும் வீரர்களை விக்கும்படி விழுங்காநிற்கும், குஞ்சரம் கொடியமுசலம் வீசி எதிர் குறுகுவார் தலைகள் சிதறும் - யானைகள் கொடிய இருப்புலக்கைகளை வீசித் தம்மெதிர் நெருங்கிய வீரர்கள் தலைசிதற அடிக்காநிற்கும் அடுபுலிப் பொறி அஞ்சு வெம் பொறி விசைப்பினும் கடுகி அமுக்கும் - கொல்லாநின்ற புலிகளாகிய யந்திரங்கள் கொடிய ஐம்பொறிகளின் வேகங்களினும் விரைந்துபற்றி யமுக்காநிற்கும். (உ௫)

*எள்ளியே றுகணைமார்பி றவெறிந் துகுண்டகழி யிடைவிழத்*
*தள்ளிமீளு முருள்கல் லிருப்புமுளை தந்துவீசி யுடல்சிந் துமாற்*
*கொள்ளிவா யலகைவாய்திறந் துகனல்கொப் புளிப்பவுடல்குப் புறத்*
*துள்ளியா டுவனகைகள் கொட்டுவன தோளபுடைப்பசில கூளியே.*

(இ-ள்.) இவுளி எள்ளி ஏறு கணை மார்பு இற எறிந்து குண்டு அகழி இடைவிழ தள்ளி மீளும் - குதிரைகள் மதியாதிகழ்ந்து ஏறும் வீரர்களை அவர்கள் மார்பெலும்புமுறிய வுதைத்து ஆழ்ந்த அகழியில் விழத்தள்ளி மீண்டு வாராநிற்கும், உருள் கல் இருப்பு முளை தந்து வீசி உடல் சிந்தும் - (சிலயந்திரங்கள்) திரண்டகற்களையும் இருப்பு முளைகளையும் அரிகயிறுகளையும் வீசிப் பகைவர்களது உடலைச்சிந்தாநிற்கும், கொள்ளி வாய் அலகை வாய் திறந்து கனல் கொப்புளிப்ப உடல் குப்புற துள்ளி ஆடுவன - கொள்ளிவாய்ப்பசாசுகள் வாய்திறந்து தீயைக் கொப்புளிக்கவும் சரீரங்கள் குப்புறவும் (கண்டோர்கள் அஞ்சும்படி) துள்ளியாடாநிற்கும், சிலகூளி கைகள் கொட்டுவன தோள் புடைப்ப - சிலபேய்கள் ஒருபால் கைகள்கொட்டித் தோள்கள் கொட்டும்.

சீவகசிந்தாமணி. ஷை "கரும்பொனியல்பன்றி கதநாகம்விடுசகடம், குரங்குபொருதகரிவெருடு கூர்ந்தரிவநூன்ஞால்" என்னுஞ் செய்யுளில் நூன்ஞால் என்பதற்கு அரிகயிறு என நச்சினார்க்கினியர் கூறிய வுரையானுணர்க. (உக)

*துவக்குசங் கிலியெறிந் திழுக்குமரி தொடர்பிடித் தகையறுக்கவிட்*
*டுவக்குமொன் னலர்கடலை களைத்திருகி யுடனெருக் குமரநிலைகளாற்*
*கவைக்கொழுந் தழல்கொளுத்தி வீசுமெதிர் கல்லுருட் டியடு மொல்லெனக்*
*குவைக்கடுங் கன்மழைபெய் யுமட்டமணல் கொட்டுமே வலர்கள் கிட்டவே.*

(இ-ள்.) மேவலர்கள் கிட்ட துவக்குசங்கிலி எறிந்து இழுக்கும் - மறுபுலப்பகைவர்கள் தம்மேல் நெருங்கச் (சில யந்திரங்கள்) பந்தப்படுக்கும் சங்கிலிகளை அவர்கள்மேல்வீசி இழுக்காநிற்கும், பிடித்தகை அறுக்க அரிதொடர் விட்டு உவக்கும் (சில யந்திரங்கள்) பிடித்த பகைவரது கையை அறுக்கும்படி அரிசங்கிலிகளைவீசிச் சந்தோஷியாநிற்கும், மரநிலைகளால் ஒன்னலார்கள் தலைகளை திருகி உடல் நெருக்கும் - (சில யந்திரங்கள்) மரங்களின் நிலைகளால் பகைவர்களுடைய தலைகளைத்திருகிச் சரீரங்களை நெருக்காநிற்கும், கவை கொழுந்து அழல் கொளுத்தி வீசும் - (சில யந்திரங்கள்) பிளவுபட்ட கொழுந்தினையுடைய தீயைக்கொளுத்தி வீசாநிற்கும், எதிர் கல்லுருட்டி அடும் - (சிலயந்திரங்கள்) எதிர்த்து கற்களையுருட்டிக் கொல்லாநிற்கும், ஒல்லென குவை கடும் கல்மழை பெய்யும் - (சில யந்திரங்கள்) விரைந்து கூட்டமாக அச்சத்தைத்தருகின்ற கல்வருஷங்களைப் பொழியாநிற்கும், அட்டமணல் கொட்டும் - (சில யந்திரங்கள்) வறுத்தமணல்களை யொருபாற்கொட்டாநிற்கும்.

மரநிலைகளால் ஒன்னலார்கள் தலைகளைத்திருகி உடல்நெருக்கும் என்பது. ஷை இலம்பகம். "கற்றலைகள் திருக்கும் வலிநெருக்கு மரநிலையே" என்பதனாலுணர்க. அரிதொடர் - துவக்குச்சங்கிலிகளுள் ஒருவகை. (உஉ)

*உருக்கியீய மழைபெய்யு மாலயவுருக்கு வட்டுருகு செம்பினீர்*
*பெருக்கிவீசும் விடுபடையெலா மெதிர்பிடித் துவிட்டவர் தமைத்தெறச்*
*செருக்கிவீசு நடைகற்று மாடமொடு சென்று சென்று துடிமுரசொடும்*
*பெருக்கிமீளு கடைவையமே னடவியெய்யும் வாளிமழை பெய்யுமால்.*

(இ-ள்.) ஈயம் உருக்கி மழைபெய்யும் (சில யந்திரங்கள் நெருங்கியபகைவர்மேல்) ஈயத்தையுருக்கி மழைபோற்சொரியும், உருக்கு அயம் உருக்கு வட்டு செம்பின் நீர் பெருக்கி வீசும்-தீயிலுருக்கிய இரும்பாலாகிய உருக்குவட்டுகளையும் செம்பினீரையும் ஒருபாற்பெருக்கி வீசாநிற்கும், விடுபடை எலாம் எதிர் பிடித்து விட்டவர் தமை தெற செருக்கி வீசும் - (பகைவர்கள்) எறிந்த ஆயுதங்களையெல்லாம் எதிரேபிடித்து எறிந்த அப்பகைவர்களைக்கொல்ல அகங்கரித்துவீசும், நடை கற்ற மாடமொடு சென்று சென்று துடி முரசும் பெருக்கி மீளும்-சஞ்சரிக்கு மாடங்களோடு (சில யந்திரங்கள்) பல இடங்களிலும் போய்ப்போய் உடுக்கையொலியையும் பேரிகையொலியையும் பெருகச்செய்து திரும்பும், நடை வையம் மேல் நடவி எய்யும் மழை பெய்யும் - (சில யந்திரங்கள்) நடைத்தேர்களை மேலேநடத்திப் பிரயோகஞ் செய்யும் சரவருஷங்களைப் பொழியும்.

ஷை இலம்பகம். "செம் புருகு வெங் களிக ளுமிழ்வ திரிந்தெங்கும், வெம்புருகு வட்டுமிழ்வ" என்பதனுலுணர்க. (உஅ)

வெறிகொளைம்பொறியைவெல்லினும்பொருதுவெல்லுதற்கரியகாலனை
முறியவெல்லினும்வெலற்கருங்கொடியமூரணவாயமரரரணலா
மறிவினுனிறுவுகம்மியன்செயவுமரியவாயவனர்புரியுமிப்
பொறிகள்செய்யும்வினையின்னபொன்னணிபுரத்துவீதிகளுரைத்துமால்.

(இ-ள்.) வெறிகொள் ஐம்பொறியை வெல்லினும் - (விடயங்களிற் சென்று சுழலும்) மயக்கங்கொண்ட ஐந்துபொறிகளை ஒருகால் ஒருவன்வென்றாலும், பொருது வெல்லுதற்கு அரியகாலனை முறிய வெல்லினும் - போர்செய்து பிறர் வெல்ல இயலாத இயமனை முறிபோடவென்றாலும், வெலற்கு அரும் கொடிய மூரணவாய்-(எவராலும் ஒருக்காலும்) வெல்ல இயலாத மிக்க வலிமை யுடையனவாய், அமரர் அரண் எல்லாம் அறிவினுல் நிறுவு கம்மியன் செயவும் அரியவாய் - தேவர்கள் நகரரணங்கள் எல்லாவற்றையும் தனது அறிவினுல் நியமித்த தேவதச்சன் செய்யவும் இயலாதனவாய், யவனர் புரியும் இப்பொறிகள் செய்யும் வினை இன்ன - சிற்பிகள் செய்த இந்த யந்திரங்கள் செய்யுந்தொழில்கள் இத்தன்மையன, பொன் அணி புரத்துவீதிகள் உரைத்தும் - இனிப்பொன்னுல் அலங்கரித்த மதுரை நகரத்தின் வீதிகளைக் கூறுவாம்.

பொறிகளும் இயமனும் ஓர்கால் ஒருவரால் வெல்லப்படினும் இவை யெவராலும் வெல்லுதற் கரியனவா யிருத்தலின் கொடியமூரணவாய் எனவும், தேவருலகரணிலும் இத்தன்மையய பொறிகளின்மையின் செயவுமரியவாய் எனவும். சடப்பொருள்கள் சரப்பொருள்களா யாக்கவல்ல சூத்திரங்கள் உடைமையின் யவனர் புரியும் எனவுங் கூறினர்.

பொறிகளென்னும் வினை முதனிலைகளின் பயனிலைகளாய் நின்ற ஆய் என்னும் வினையெச்சங்கள் செய்யுமென்னும் பெயரெச்சத்தின் முதனிலைகளைத் தனித்தனி கொண்டன. மழுக்கள் வீசுவன என்னுஞ் செய்யுண்முதல் இச்செய்யுள்காறும் பொறிகளின் வீரமிகுதியைக் கூறுதலின வீறு கோளணி. (உகூ)

அகநகர்.

கலிநிலைத்துறை.

கழையுந்தாமமுழுஞ்சுண்ணமுமணிநிழற்கலனுங்
குழையுந்துபமுந்தீபமுங்கும்பமுந்தாங்கித்

தழையுங்காதலர்வரவுபார்த்தன்பகந்ததும்பி
விழையுங்கற்பினரொத்தனவிழாவறாவீதி.

(இ-ள்.) விழா அறா வீதி - திருவிழா என்றும் நிகழும் வீதிகள், கழையும் தாமமும் சுண்ணமும் மணிநிழல் கலனும் குழையும் தூபமும் தீபமும் கும்பமும் தாங்கி - கரும்புகளையும் பூமாலைகளையும் வாசப் பொடிகளையும் இரத்தினங்களா லாகிய ஆபரணங்களையும் மாங்கொத்துகளையும் தூபங்களையும் தீபங்களையும் பூரண கலசங்களையும் தாங்குதலால், (கழையும் தாமமும் சுண்ணமும் மணிநிழல் கலனும் குழையும் தூபமும் தீபமும் கும்பமும் தாங்கி) மன்மதன் கரும்புவில் எழுதியதொ ய்யிலையும் பூமாலையையும் வாசப்பொடியையும் ஒளியையுடைய இரத்தினாபரண ங்களையுங் குண்டலத்தையுமணிந்து தூபமுந் தீபமும் பூரணகும்பமுமாகிய மங்கலங் களைக் கையிலேந்தி) தழையும் காதலர் வரவு பார்த்து அன்பு அகம் ததும்பி விழை யும் கற்பினர் ஒத்தன (ஓதல் முதலிய தொழில்கள்மேல் காலவரையறைகூறித் தம் மினின்று பிரிந்துபோன) மிக்க விருப்பத்தையுடைய தலைவர் வருகையைப் பார்த்து அன்பால் மனம்பூரித்து விரும்புங் கற்பினையுடைய பெண்களையொத்திருந்தன.

வீதி கரும்பு முதலியவற்றால் அலங்கரிக்கப்படுதலால் அவற்றைத் தாங்கித் தொய்யிலெழுதி மாலைமுதலியவற்றை யணிந்து தூபமுதலிய மங்கலங்களை யேந்திப் பிரிந்த தலைவர்களை எதிர்நோக்குங் கற்புடை மகளிரையொத்திருந்ததென இதனாற் கூறப்பட்டது.

அன்பால் ஆசைபிறத்தலின் விழையுமெனவும், முதல் சினையொற்றுமையுண் மையின் சினைவினை முதல்வினையொடுகூட்டி அன்பகந்ததும்பித்தழையுங் கற்பினர், எனவுங்கூறினர். ஓதற்பிரிவு, பரத்தையிற்பிரிவு, காவற்பிரிவு, தூதுவயிற்பிரிவு, து ணைவயிற்பிரிவு, பொருள்வயிற்பிரிவு எனப் பிரிவுகள் அறுவகைப்படும். "பரத்தை யிற்பிரிதலோதற்குப்பட்டாங் - கருட்டகுகாவலொடு தூதிற்கற-லுதவிக்கேகளிதியிற்பி கத்தவென் - றனாபெறாற்பிற்பிரிவறுவகைத்தே" என்னுஞ்சூத்திரத்தாலுணர்க. கற் புடைமகளிர் புருஷன் பிரிந்தகாலையில் ஆபரணமுதலியவற்றை யணியாது அழுக் குப்படிந்தவுடலோடு இருத்தலும் அவன் வருங்காலத்து அவைகளை யணிந்து அவ னையெதிர்கொள்ளுதலும் அவர்கள் இலக்கணமாதலால் தாங்கி வரவுபார்த்து என் றார். காசிகாண்டம் - கற்பிலக்கணங் கூறிய அத்தியாயத்தில்.

"எரிமணிப்பொலம்பூண்சுமர்த்திலுயிர்க், குரிய கேள்வருவப்பமுன்னெய்துவார்
பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையு, மொருவிமாசுடலுண்டிடவைகுவார்."

என்னுஞ் செய்யுளாலுணர்க. கற்புடைமகளிர் செயலை வீதியின்மேலேற்றி அவர் களை யொத்ததெனக் கூறுதலின தற்குறிப்பேற்ற வுவமையணி.

அங்கா - வீதியின் பொதுவிலக்கணமும் தனித்தனிச் சிறப்பிலக்கணமாக வருத்துக்கூறும் பரத்தையர் உறைவிடமும், நால்வகைவருணத்தோர் உறைவிடங்க ளும், கல்விசாலைமுதலிய அறச்சாலைகளும், சிவயோகியர் மடங்களும், திருக்கோ யில்களும் ஆகியவிவற்றை முறையாக வுடையது. (௫௰)

ஆலநின்றமாமணிமிடற்றண்ணலானந்தக்
கோலநின்றசேவடிநிழல்குறுகினர்குணம்போல்
வேலைநின்றெழுமதியெதிர்வெண்ணிலாத்தெண்ணீர்
காலநின்றனசந்திரகாந்தமாளிகையே.

(இ-ள்.) ஆலம் நின்ற மா மணிமிடறு அண்ணல் ஆனந்தம் கோலம் நின்ற சேவடி நிழல் குறுகினர் குணம் போல் - விஷத்குடிகொண்ட பெருமை பொருந்

திய நீலகண்டத்தையுடைய சிவபெருமானுடைய பேரின்பமே திருவுருக்கொண்ட செவந்த திருவடி நிழலைப் பிறவிவெப்பமடைந்த அடியார்களுடைய குணத்தைப் போல, சந்திர காந்தம் மாளிகை-சந்திரகாந்தக்கற்களாகிய வீடுகள், வேலை நின்று எழும் மதி எதிர் வெள் நிலாதெள் நீர் கால நின்றன-கடலினின்று உதயஞ்செய்த சந்திரனுக்கெதிரே வெள்ளிய கிரணத்தையுடைய தெள்ளியநீரைச் சொரியா நின்றன.

சிவசன்னிதியிற் சென்ற அடியார் குணம் உடல் புளகித்தலும் நாத்தழுதழுத்தலுங் கண்ணீர் பெருக்குதலுமாம்.

இங்குத் தெண்ணீர் கால என்ற உவமேயத்தொழிலால் கண்ணீர் பெருக்கல் எனக்கொண்டு தொழில்பற்றிய உவமையணியாகக் கொள்க. குணம் - சாதிபொருமை. (கூக)

குன்றநேர்பளிக்குபரிகைநிரைதொறுங்குழுமி
நின்றபல்சராசரமுமந்நீழல்வாய்வெள்ளி
மன்றகம் பொலிந்தாடியமலரடிநிழல்புக்
கொன்றியொன்றக்கலந்தபல் லுயிர்நிலையனைய.

(இ-ள்) குன்றம் நேர் பளிக்கு உபரிகை நிரை தொறும் குழுமி நின்ற பல் சராசரமும் அந்நீழல்வாய் - மலையையொத்த பளிங்காலாகிய உபரிகைகளின் பந்திகள்தோறும் நெருங்கிநின்ற இயங்கியற்பொருளும் நிலையியற் பொருளுமாகியபல பொருள்களும் அவ்வுபரிகைகளின் நிழல்களில் (விளங்குந் தன்மைகள்) வெள்ளி மன்று அகம் பொலிந்து ஆடிய மலர் அடிநிழல் புக்கு ஒன்று அற ஒன்றி கலந்த பல உயிர்நிலை அனைய - வெள்ளியம்பலத்தின்கண் ஒளிமயமாய் நின்று நடனஞ் செய்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடிநிழலையடைந்து (ஆங்கு) ஒன்றென்னும் தன்மையறக் கூடிக்கலந்த பல உயிர்களின் நிலைமைகளையொத்திருந்தன.

திருவடிநிழலை யடைதலாவது - சிவனருட்சித்தும் சிவனருளைச்சேருஞ் சித்துமாதலால் கசிந்த தொண்டாற்பொருந்தல். ஒன்றென்னுந்தன்மையாவது - ஆன்மா பிறமமாய் நிற்றல். அறதலாவது - அப்பிரமத்தோடொன்றாதலும் அதின் வேறாய்க்கழிதலும் இன்றியனனியமாயிருத்தல். கூடிக்கலத்தலாவது சிவானுபவம் ஒன்றற்கே யுரியனாய் நிற்றல். முத்தியடைந்த பல்லுயிர்களாவன - தணியூர்ப்புராணம் - புழுகீசப்படலத்தில்,

“ பிறைமருப்பீரற்கான் முறச்செவிப்பெருவேழ
நிறைவலிக்கொடுங்கூற் றெனநிகழ்தருமடங்க
லறைமுரட்சினவாளி காற்கதியமைபய்மா
வுறைசெருத்தலா னேனிகிலேறழல்பன்றி ”

“ மரம்பயின்றிவொனர கச்சுவாலெயிற்றி
னுரம்பயின்றிடவாள ராவுகண்டெழுமீனம்
பரம்புமைந்நடக்காமை பல்கவைத்தாண்ஞண்டு
நிரம்புதேன்கவர்வண்டு நண்சிறைநிலவீயே. ”

“ கதியின் மிக்கதாய்விளைசெலுமுயல்கடியுறவி
குதியமைந்துபாய்தவளை பீலிக்குரனை
பொதிசிறைப்பெரும்பிணிமுகம்புகழ்க்கருங்குருவி
யதிரருக்கலிங்கலுழன்முற்பலபலவாக, ”

"சிவபிரான் றிருவருட்குறியருச்சனைசெய்தே
பலமொழிந்தன" என்னுஞ் செய்யுள்களாலுணர்க.

விளங்குந்தன்மை - தோன்று எழுவாய். (௯௨)

கறித்தருந்துபுற் குவைகழீஇக்காற்றொடர்பரியத்
தெறித்தகன் றயன்மரகதச்சித்திரத்தெற்றி
யெறித்தபைங்கதிர்க்கொழுந்தையுமெட்டிநாவளைத்துப்
பறித்துமென் றுவாயசைப்பனபசலையான்கன்று.

(இ-ள்.) ஆன் பசலை கன்று-பசுவின் இளங்கன்றுகள், கறித்து அருந்து புல் குவை கழித்து கால் தொடர்பறிய தெறித்து அகன்று - கறித்துக் குதட்டும் புற்குப்பைகளைக் கழித்துக் காலிற்பூட்டிய கயிறறத்துள்ளி (அங்குநின்றும்) நீங்கி, அயல் மரகதம் சித்திரம் தெற்றி எறித்த பைங்கதிர் கொழுந்தை நா வளைத்து எட்டி பறித்து மென்று வாய் அசைப்பன-பக்கத்திலுள்ள மரகதத்தாற்செய்த சித்திரம் அமைத்த வேதிகைகள் வீசிய பசியகிரணங்களின் கொழுந்துகளை நாவளைத்து எட்டிப்பறித்து மென்று வாயால் அசைபோடுகின்றன.

உம்மை - அசைநிலை. மரகதக்கொழுந்தைப் புல்லென்று மயங்கி நாவளைத்து எட்டிப்பறித்து அசைப்பன என்றமையால் இது மயக்கவணி. (௯௩)

சிறுகுகண்ணவாய்க்காற்றெறிசெவியவாய்ப்பாச
மிறுகுகாலவாய்க்கோட்டுமாவினம்வழங்காறுங்
குறுகுதண்மருங்கிறந்தெழுகோட்டுமானினம்போ
மறுகும்வண்டுசூழ்ந்திறைகொளமான்மதநாறும.

(இ-ள்.) சிறுகு கண்ண வாய்-சிறுகிய கண்களை யுடையனவாகி, காற்று எறி செவியவாய் - காற்று வீசுங் காதுகளை யுடையனவாகி, பாசம் இறுகு காலவாய் - சங்கிலி இறுகச் சூழ்ந்த கால்களையுடையனவாகி, கோட்டுமா இனம் வழங்கு ஆறும் - கொம்புகளை யுடையனவாகிய யானைக்கூட்டங்கள் சஞ்சரிக்கின்றவழிகளிலும், குறுகு தண் மருங்கு இறந்து எழுகோட்டு மான் இனம் போம் மறுகும் - தேயும் நுண்ணிய இடைமுறிய எழுந்துவீங்கும் மலையின் சிகரம்போன்ற தனங்களையுடையமான் போலும் பார்வையையுடைய பெண்கள் கூட்டஞ் செல்லும் வீதிகளிலும், வண்டு சூழ்ந்து இறைகொள - வண்டுகள் புறஞ்சூழ்ந்து மொய்க்க, மான்மதநாறும் - மான் மதங்கமழும்.

மால்மதம் - பெரியமதம், மான்மதம் - மிருகமதம். யானை செல்லும்வீதியில் பெரியமத நீர்கமழுமெனவும், பெண்கள் செல்லும் வீதியில் மிருகமதங் கமழுமெனவும், அவர்ணியங்களாகிய பலபொருள்களைப் பொதுவாகிய ஒரு தருமத்தால் முடித்தலால் இது ஒப்புமைக்கூட்ட வுவமையணி.

இறந்து செயவெனெச்சத்திரிபு, பாசம் - கட்டு. இதனுல் காரணமாகியசங்கிலியை யுபசரித்தார். (௯௪)

மாடமாலையுமேடையுமாளிகைநிரையு
மாடரங்குமமன் றிலேவளன்னவர்முடியு
மேடவிழ்ந்ததாரகலமுமிணைத்தடந்தோளுஞ்
சூடுமோதரார்சிறுடிப்பஞ்சதோய்கவடி.

(இ-ள்.) மாடம் மாலையும் மேடையும் மாளிகை நிரையும் ஆடு அரங்கமும் அன்றி - மாடங்களின் வரிசைகளும் மேடைகளும் உபரிகையின் வரிசைகளும் நிருத்தஞ்செய்யும் நடனசாலைகளும் ஆகிய இவைகளுமன்றி, வேள் அன்னவர் முடியும் வடு அவிழ்ந்த தார் அகலமுந் தடம் தோள் இணையும் - அழகில் மன்மதனை யொத்த ஆடவர்களுடைய சிரசுகளும் இதழ் அவிழ்ந்த மலர்மாலை யணிந்த மார்பமும் உயர்ந்த இரண்டுதோள்களும், மாதரார் சீறு அடிதோய் பஞ்சு சுவடு சூடும் - பெண்களினது சிற்றடிகளி லூட்டிய செம்பஞ்சின் குழம்பின் குறிகளைச் சூடாநிற்கும்.

மாடமுதலியவற்றில் சஞ்சரித்தலாலும், ஊடற்காலத்து வணங்கிய ஆடவர்முடியிலும் மார்பிலும் தோளிலும் படுதலாலும் சீறடிப்பஞ்சுதோய் சுவடு சூடுமென ஒரு முடிபுதந்தார். இதுவும் அவ்வணி. (௩௫)

மருமச்செம்புனலா றிடமா றடுகோட்டுப்
பருமச்செங்கண்மால்யானை பின்பனைக்கையுமறை நூ
லருமைச்செம்பொருளாய்ந்தவர்க்கரும்பொருளீவோர்
தருமச்செங்கையுமொழுகுவ தானநீரா று.

(இ-ள்.) மருமம் செய்புனல் ஆறு இட மாறு அடு கோடு பருமம் செம் கண் மால் யானையின் பனை கையும் - மார்பினின்றுஞ் செவந்த உதிரவெள்ளம்பெருக எதிர்த்த பகைவரைக்கொல்லுங் கொம்பையுங் கவசத்தையுஞ் சிவந்தகண்களையும் பெரிய மதமயக்கத்தையுமுடைய யானையினது பனைபோலுந் திரண்டுநீண்ட துதிக்கையினின்றும், மறைநூல் அருமை செம்பொருள் ஆய்ந்தவர்க்கு அரும்பொருள் ஈவோர் தருமம் செம் கையும் - வேதமுதலிய நூல்களின் அரிய வுண்மைப்பொருள்களை ஆராய்ந்து தெளிந்த அந்தணர்களுக்குப் பெறுதற்கரிய பொன்னுதவும் ஈகையாளரது தருமச் செய்கையையுடைய செவந்த கையினின்றும், தானம் நீர் ஆறு ஒழுகுவ - தானநீராறு பெருகவொழுகும்.

தானம்-மதம், சோடசதானம். யானைத்துதிக்கையில் மதமாகிய நீர் வெள்ளமும், கொடைப்போர்கையில் தானஞ்செய்யும்போது தத்தஞ்செய்யும் நீர் வெள்ளமும் பெருகுவன எனக்கொள்க. செம்பொருள்-உண்மைப்பொருள். விகாரமின்றி எக்காலும் ஒருதன்மைத்தாய் நிற்றலின் அருமைச்செம்பொருள் எனக்கூறினார். மாறு என்னு முதனிலைத்தொழிற்பெயர் அதனை யுடையார்மேனிற்றலால் தொழிலாகுபெயர். செம்மை கோபக்குறிப்பின்மேனிற்றலால் சிவந்த என்றும். (௩௬)

பரியமாமணிபத்தியிற்பதித்திருட்படலம்
பொரியவில்விடக்குயிற்றியபொன்னரமியமுந்
தெரியமாமுரசொலிகெழுசெம்பொனாடரங்கு
மரியமின்பயோதரஞ்சுமந்தாடுவகொடிகள்.

(இ-ள்.) பரிய மாமணி பத்தியில் பதித்து இருள் படலம் பொரிய வில்விடு குயிற்றிய பொன் அரமியமும் - பருத்த பெரிய இரத்தினங்கள் வரிசைபடப் பதித்து இருட்கூட்டங்கள் சிதையும்படி விளங்க இழைத்தபொன்னாலாகிய நிலாமுற்றத்திலும், தெரிய மா முரசு ஒலிகெழு செம்பொன் ஆடு அரங்கும் - (பண்ணுந்தாளவிகற்பங்களும்) தெரியப் பெரியமத்தளத்தின் ஓசைமிக்க செவந்தபொன்னாலாகிய நடனசாலையிலும், கொடிகள் அரிய மின்பயோதரம் சுமந்து ஆடுவ - கொடிகள் அரிய மின்பயோதரங்களைச் சுமந்தாடுகின்றன.

கொடிகள்-துவசங்கள், கொடிபோன்ற பெண்கள், அரிய-பசியநிறத்தையு டைய, இல்லாத. மின்-மின்னுதல், இடை. பயோதரம்-மேகம், கொங்கை.

அரமியத்திறகட்டிய கொடிகள் பசியநிறத்தையுடைய மின்னும் மேகங்களை ச்சுமந்து ஆடுகின்றன எனவும், அரங்கில் பூங்கொடிபோன்ற பெண்கள் அரியமின் னல்போன்ற இடையையுந்தனங்களையுஞ்சுமந்து ஆடுகின்றனர்கள் எனவுங்கூட்டிப் பொருள்கொள்க.

முன்புநின்ற அரியவென்பது பச்சையென்னும் பொருள்மேனின்ற அரி என் னும்பண்படியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம் வேறுபலவடுக்கிய பெயரெ சசங்களாயப் பயோதரமெனனும் பெயரையும, பின்பு இன்மைப்பொருள்மேனின்ற அருமை என்னும பண்படியாகபபிறநத அபபெயரெச்சம் உவமை ஆகுபெயராக நினற மினனெனனும் பெயரையுங்கொண்டன எனக்கொள்க. வாச்சியப் பொருளி ன்மேனினற முரசென்னும பெயாச்சொல் தெரிய ஒலிகெழு என்னும் வினையால் பொதுமைநீங்கி மத்தளததினமேனினறது. இதுவும் அவவணி. (கஎ)

> வலமபடும்புயநதாடவர்மாாபமேற்புலவிக்
> கலமபடாந்தபூண் முலையினாகாலெடுத்தோசசச
> சிலமபலம்பிசைமழுஙகமுனனெழுமவா தேந்தார்ப்
> புலம்புவண்டுசொநதரறறியபொஙகுபேரொலியே.

(இ-ள) வலம் படும புயததை ஆடவா மார்பம் மேல் புலவி கலம்படர்ந்த பூண முலையினார் கால் எடுதது ஒசச - வெறறிபொருநதிய புசததையுடைய தத்தம கணவாகளுடைய மார்பததினமேல ஊடலாகிய ஆபரணமபூண்ட பெண் கள் தமது காலெடுததுவைததக, சிலமபு அலமபு இசை மழுஙக அவர் தேம் தார் புலமபு வண்டு சொரநது அரறறிய பொங்கு பேர் ஒலி முன எழும்-(அவாகள்) சிலம் புகள ஒலிக்கும ஒலி குன்ற அககணவாகள மாாபில அணிநத தேன்பொழிந்த மா லைகளில் இசைபாடும வண்டுகளாவருநதி ஒலிதத மிகக பெரிய ஓசையானது முற்ப ட்டெழுந்தது.

பூண முலையினா-பூணைபணிந்தமுலையா எனப பெண்களுக்குக்காரண ஆக்கப் பெயராயவநதது பரததையிறபிரிநத தலைவாவநதவழி நிகழநத ஊடலாதலால் புலவிககலம் படாநதவெனவும், "கனியுமபுலவியும இலலாயிறகாமம், கனியுங்கரு ககாயுமறறு" எனறமையால எடுததோசச எனவுஙகூறினா. காசிகாண்டம-கற்பில ககணஙகூறிய வததியாயததில.

"கொழுநன்சொறகடவாதுறைகொளகையே, வழுவினல்லறம்வான்றவமாற்றுதல் தொழுதுதெயவம்பராயமலாததூவுதல, பழுதில்கறபுடைபபததினிக்கென்பவே"

எனறபடி கறபுடைமகளிா இலககணம் இவவாறாகலால் எடுத்தோச்சல்வழுவன்றோ வெனின் திருககோவையாா - கலவியிடததுல.

> "சிலைமலிவாணுதலெஙகையதாகமெனச்செழுமபூண்
> மலைமலிமாாபிறுதைப்பததநதானதலைமனனாதில்லை
> உலைமலிவேற்படையூரனிறகளவரிலெனனவுனனிக்
> கலைமலிகாரிகைகண்முத்தமாலைகலுழ்ந்தனவே."

எனப் பரத்தையிற் பிரிந்துவநத தலைவன் புதல்வன்வாயிலாகப் புக்குப் புலவிதீர்த் துப் புணரும்வழித் தலைமகள் ஒருகாரணத்தால் வெகுண்டு அவன்மார்பகத்துதைப்ப அவ்வெகுளுதல் தீரவேண்டி அவன் அவள்காலை,தன்தலைமேல் ஏற்றுக்கொள்ள அது

குறையாக அவள் புலந்தழாநின்றமையைத் தலைமகன் கூறினான் என்னும் பொருள் உள்ளிட்டதுறையில் "மனைவியுயர்வுங் கிழவோன்பணிவும், நினையுங்காலைப்புலவியுளுரிய" என்றார் தொல்காப்பியர் என நச்சினார்க்கினியர் கூறி இருத்தலால் அது காமத்துக் கின்பமாதலின் வழுவன்றென்க. குடிமாதரார் சீறடிப்பஞ்சுதோய்சுவடு என்பதற்கும் இது.

ஓச்ச என்னும் நிகழ்காலவினையெச்சம் சோர்ந்து என்னும் பிறவினை முதல் வினையெச்சத்தின் முதனிலை கொண்டது.

சிலம்பொலிமழுங்க வண்டுகளொலி முற்பட்டெழுந்ததென அவ்வொலிமிகுதியைக் கூறுதலின் வீறுகோளணி. (௩௰)

தையலார்மதிமுகங்களுந்தடங்களுங்குழைய
மையளாவியவிழிகளுமாடமுங்கொடிய
கையுநாண்மலர்ப்பொதும்பருங்கறங்கிசைவண்ட
செய்யவோதியும்வீதியுநீளறனெறிய.

(இ-ள்.) தையலார் மதி முகங்களும் தடங்களும் குழைய - பெண்களுடைய சந்திரனையொத்த முகங்களும் தடாகங்களுங் குழைகளை யுடையன, மை அளாவிய விழிகளும் - மை யெழுதிய கண்களும், மை அளாவிய மாடமும் - மேகமண்டலத்தைத் தோய்ந்த மாடங்களும், கொடிய - கொடியன, கையு நாண்மலர் பொதும்பரும் கறங்கு இசை வண்ட-(அப்பெண்களது)கைகளும் அன்றலர்ந்தமலர்களையுடைய சோலைகளும் கறங்கிசை வண்டுகளையுடையன, செய்ய ஓதியும் வீதியும நீள் அறனெறிய - செய்பூசிய அப்பெண்களின கூந்தலும் வீதிகளும் நீண்ட அறனெறியன.

குழைய என்பதற்குப் பெண்கள் முகங்கள குண்டலத்தையுடையன எனவும், தடாகங்கள் தாமரைமுதலியவற்றின் தளிர்களையுடையன எனவும், கொடிய என்பதற்கு அப்பெண்கள் கண்கள் கொடுந்தொழிலை யுடையன எனவும், மாடங்கள் கொடிகளையுடையன எனவும், கறங்கிசை வண்ட என்பதற்கு அப்பெண்கள் கைகள் ஒலிக்கும் ஒலியையுடைய வளையல்களையுடையன எனவும், சோலைகள் சுழன்று திரியும் இசைபாடுதலையுடைய வண்டுகளையுடையனஎனவும்,நீளற னெறிய என்பதற்கு நீள் அறல் நெறிய எனப் பிரித்து அபபெண்கள் கூந்தல் நீண்ட கருமணல்போலும்நெளிவையுடையன எனவும், நீள் அறன் நெறிய எனப்பிரிதது மிககதருமத்தையுடையன எனவும் பொருள்கொண்டு முடித்து ஒப்புமைக்கூட்ட உவமையணியாகக்கொள்க.

உடையவர்கள் தொழிலை உடைமைகள்மேலேற்றி வீதிகள அறனெறிய என்றார். செய்ய ஓதிய என்றதற்குப் புழுகு பூசிய கூந்தல் என்பதும ஒன்று. குழைய கொடிய வண்ட நெறிய இவை பலவினைபால் படாககைக் குறிப்பு வினை முற்றுகள் செய்ய குறிப்புவினைப் பெயரெச்சம். குழை - குண்டலம, தளிர். கறங்கு - ஒலித்தல், சுழலல். இசை - ஒலித்தல், இராகம். வண்டு - வளையல், வண்டுகள். அறல் கருமணல். நெறி - வளைவு, வழி. (௩௧)

மலருந்திங்கடோய்மாடமுஞ்செய்வனமணங்க
ளலருந்தண்டுறையுங்குடைந்தாடுவதும்பி
சுலவுஞ்சோலையுமாதருந்தூறறுவவலர்கள்
குலவும்பொய்கையுமனைகளுங்குறைபடாவன்னம்.

(இ-ள்.) மலரும் திங்கள் தோய் மாடமும் மணங்கள் செய்வன-மலர்களுஞ் சந்திரமண்டலத்தை யளாவிய மாடங்களும் மணங்களைச்செய்யாநின்றன, அலரும்

தண் துறையும் - மலர்களினுந் தண்ணிய நீர்த்துறைகளினும், தும்பி குடைந்து ஆடுவ - தும்பிகள் குடைந்தாடாநின்றன, சுலவும் சோலையும் மாதரும் - புறத்திற்சூழ்ந்த சோலைகளும் பெண்களும், அலர்கள் தூற்றுவ-அலர்களைத் தூற்றுகின்றன, குலவும் பொய்கையும் மனைகளும் - விளங்காநின்ற நீர் நிலைகளினும் வீடுகளினும், அன்னம் குறைபடா - அன்னங்கள் குறைபடாவாம்.

மணங்கள் செய்வன என்பதற்கு - மலர்கள் வாசம் வீசாநின்றன எனவும், வீட்டிலுள்ளோர் விவாகஞ் செய்கின்றார்கள் எனவும், தும்பி குடைந்து ஆடுவ என்பதற்கு - வண்டுகள் மலரையுழுது மதுவிற்படிவன எனவும், தண்ணிய நீர்த்துறைகளில் யானைகள் முழுகி விளையாடுவன எனவும், அலர்கள் தூற்றுவ என்பதற்கு - சோலைகள் மலர்களைச் சொரிகின்றன எனவும், பெண்கள் பழிச்சொல் தூற்றுவார்களெனவும், அன்னங் குறைபடா என்பதற்கு - பொய்கைகளில் அன்னப்பட்சிகள் குறைபடா எனவும், வீடுகளில் சோறு குறைபடா எனவும் பொருள்கொண்டு முடிக்க. இதுவும் அவ்வணி.

மணம் - வாசம், விவாகம். தும்பி - வண்டு, யானை. அலர் - மலர், பழிச்சொல். அன்னம் - அன்னப்பட்சி, சோறு. வந்த விருந்தினர் உண்டு செல்லவும், வருகின்றவர் உண்ணவும், வருவோர்க்குச் சமைத்தலும் அந்நகரிலுள்ள மனைகள் என்றும் உடைமையால் மனைகள் அன்னங் குறைபடா எனக்கூறினார்.

மாதர் பொருளால் உயர்திணையேனுஞ் சொல்லால் அஃறிணையாதலால் மணங்கள் செய்வன என அஃறிணை முடிபு தந்தார். "செயப்படுபொருளைச் செய்ததுபோலத், தொழிற்படக்கிளத்தலும் வழக்கினுளுரித்தே" என்ற சூத்திரத்திலுள் இலேத் தலும் என்ற உம்மையால் அலர், துறை, பொய்கை, மனை என்னும் இடங்களை வினைமுதல்களாகவைத்துக் குடைந்தாடுவ குறைபடா என அவ்வினைமுதல்களின் வினைகளேற்றிக்கூறினார். இங்கு மாதர் என்றது - காமக்கிழத்தியரும் பரத்தையருமாதலின் சுலவுஞ்சோலையு மாதருந்தூற்றுவ எனத் திணைவிரவிச் சிறப்பினால் அஃறிணை முடிபேற்று நின்றது திணைவழுவமைதி. (௩௦)

> ஊடினா றெறிகலன் களுமம்மனை யுடன்பந்
> தாடினார் பரியாரமு மடியிற்றாம் சிற்றில்
> சாடினாரொடு வெகுண்டு கண்டழும்பு முத்திறைப்ப
> வாடினார் பரிநித்தில மாலையுங் குப்பை.

(இ-ள்.) ஊடினார் எறி கலன்களும் - தத்தம் கணவர்களோடு ஊடிய பெண்கள் வெறுத்தெறிந்த ஆபரணங்களும், அம்மனை உடன் பந்து ஆடினார் பரி ஆரமும் - அம்மனையோடு பந்தாடும் பெண்கள் (பாரமாற்றாது) அறுத்தெறிந்த ஆபரணங்களும், சிற்றில் அடியினால் சாடினார் ஒடு - தாம் விளையாடக்கோலிய சிறுவீடுகளைத் தமது கால்லால் சிதைத்த ஆண்மக்களோடு, வெகுண்டு கண் ததும்பு முத்து இறைப்ப வாடினார் பரி நித்திலம் மாலையும் - கோபித்துக் கண்கள் ததும்புகின்ற நீரைச் சொரிய மெலிந்த சிறுமியர் அறுத்தெறிந்த முத்துமாலைகளும், குப்பை - அந்நகரத்தின் வீதியிலுள்ள குப்பைகளாம்.

முத்து நீர்மேனிற்றலால் உவமையாகு பெயர்.

இவற்றால் அந்நகரத்தின் செல்வமிகுதியைக் கூறுதலின் வீறுகோளணி. ௩௧

> ஐயவென்னுமை வரம்பினதாகுமோ வடிய
> ருய்யமாமணி வரிலனை விறகுவிற்றுழன்றோன்

பொய்யில்வேதமுஞ்சுமந்திடப்பொருதகன்றாற்றுஞ்
செய்யதாண்மலர்சுமந்திடத்தவஞ்செய்தெருக்கள்.

(இ-ள்.) அடியர் உய்ய மாமணி வரிவளை விறகு விற்று உழன்றோன்-அடியார்கள் உய்யும்பொருட்டுப் பெரிய இரத்தினங்களையும் வரிபொருந்திய வளையல்களையும் விறகையும் விற்றுத் திரிந்த இறைவனது, பொய் இல் வேதமும் சுமந்திட பொருது அகன்று அறாற்றும் செய்யதாள் மலர் சுமந்திட தவம் செய்த தெருக்கள்-உண்மைப்பொருளையுடைய வேதங்களுந் தாங்கத் தவஞ்செய்யாமையால் நீங்கிமுறையிடும் செவந்த திருவடித்தாமரையைத் தாங்கத் தவஞ்செய்த அந்நகரத்தின்தெருக்களின் பெருமை, என் உரை வரம்பினது ஆகுமோ - என் சொல் வரம்பில் அடங்கியதாகுமோ (ஆகாது என்றபடி) ஐய (அவ்வாறிருக்க நான் சொல்லக்கருதியது) ஆச்சரியம்.

தவத்தின் சொரூபம் உண்டிசுருக்குதலும், கோடைக்கண் வெயிலில்நிற்றலும், மாரியிலும் பனியிலும் நீரில்நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றால் தம்முயிருக்குவருந் துன்பத்தைப் பொறுத்தலேயாதலால் அதனைத்தொழிலின்மேலேற்றிப் பொருது என்றார். பொருது என்னும் வினையெச்சம் செய்து என்னும் வினையெச்சத்திற்கு எதிர்மறையாதலால் காரணப்பொருள்மேனின்றது. ஒ- எதிர்மறைப்பொருட்டு. ஐய-வியப்பிடைச்சொல். அரற்றுவ என்னும் பெயரெச்சம தாள் என்னும் எல்லைப்பொருள்கொண்டது.

என்னுரை வரம்பினதாகுமோ என்றுகூறிய இன்மையால் வர்ணியத்தை உயர்வடைந்ததாகக் கூறுதலின் இன்மை நவிற்சியணி. (௬௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தோரணநிரைமென்காஞ்சிசூழ்நிலைநெடுந்தேரல்குற்
பூரணகும்பக்கொங்கைப்பொருவின்மங்கலமாமங்கை
தாரணிந்தாரந்தூக்கிசந்தகிற்றிமிர்ந்துபாலிச
சீரணிமுளைவெண்மூரல்செய்துவீற்றிருக்குமன்றே.

(இ-ள்.) தோரணம் நிரை மென் காஞ்சி சூழ் நிலை நெடும தேர் அல்குல்-தோரணபந்திகளாகிய மெத்தென்ற தொழில்படச்செய்த காஞ்சி என்னும் ஆபரணத்தைச்சூழ்ந்த நெடிய நிலைத்தேராகிய அல்குலையும், பூரண கும்பம் கொங்கை பொரு இல் மங்கலம் ஆம் மங்கை - பூரணகலசங்களாகிய தனங்களையுமுடைய ஒப்பில்லாத மங்கலமாகிய பெண்ணானவள், தார அணிந்து ஆரம் தூக்கி சந்து அகில் திமிர்ந்து பாலி சீர் அணிமுளை வெண்மூரல் செய்து வீற்றிருக்கும் - மாலைகளையணிந்து முத்துமாலைகளைத் தொங்கவிட்டுச் சந்தனக்குழம்பையும அகிற்குழம்பையும்பூசிப் பாலிகைகளிலுள்ள பொலிவுமிக்க முளைகள் என்னும் வெள்ளியபுன்னகைகளைத் தோற்றி வீதிகள்தோறும் வீற்றிருப்பாள்.

காஞ்சி யென்கோவை என்றலும் ஒன்று. நிலைத்தேர் அலங்காரத்தின் பொருட்டு வீதிகள்தோறும் நிலையாகச்செய்திருக்கிற நிலைத்தேர் தோரணங்களும் பூரணகலசங்களும் பொலியச்செய்து பந்தல்களில் மலர்மாலைகளையும் முத்துமாலைகளையும் தொங்கவிட்டு முளைப்பாலிகைவைத்திருத்தலின் மங்கலமாமங்கை வீற்றிருக்குமெனக்கூறினார். (௬௩)

திங்களைச்சுண்ணஞ்செய்துசேறுசெய்தூட்டியன்ன
பொங்குவெண்மாடப்பந்திபுண்ணியம்பூசுந்தொண்டர்

தங்கண்மெய்வேடந்தன்னைத்தரித்தனசாலக்கண்கொண்
டங்கணன்விழவுகாண்பானடைந்தெனமிடைந்தவன்றே.

(இ-ள்.) திங்களை சுண்ணம் செய்து சேறு செய்து கூட்டியது அன்ன பொங்கு வெண்மாடம் பந்தி - சந்திரனை நீறுசெய்து அதன் அமுதத்தாற் குழம்பாக்கிப் பூசியதையொத்த விளங்காநின்ற வெள்ளியமாடவரிசைகள், புண்ணியம் பூசும் தொண்டர் தங்கள் மெய் வேடம் தன்னை தரித்தன சால கண் கொண்டு அங்கணன் விழவு காண்பான் அடைந்தன என மிடைந்த - விபூதிதரித்த அடியார்களுடைய உண்மையாகிய திருவேடத்தைத்தாங்கி மிகவுங் கண்களைக்கொண்டு சிவபெருமானுடைய திருவிழாவைக்காணவடைந்தனபோல வீதிகள்தோறு நெருங்கி இருக்கின்றன.

வீதிகளுக்குக் கண்களாவன - பலகணிகள். சேறுசெய்து என்றமையால் அதன் அமுதத்தால் என ஒருசொல் வருவித்தாம். தரித்தன என்னும் வினைமுற்று எச்சமாய் நின்றது. கூட்டியன்ன வடையென்பது தொகுத்தல். மிடைந்த வென்பதினின்ற தகரவிடைநிலை இறந்தகாலத்தின்மேனின்றது. (௮௪)

தேரொலிகலினப்பாய்மான்சிரிப்பொலிபுரவிபூண்ட
தாரொலிகருவியைந்துந்தழங்கொலிமுழங்குகைம்மான்
பேரொலியெல்லாமொன்றிப்பெருகொலியன்றியென்றுங்
காரொலிசெவிமடாதுகடிமனைமாடக்கூடல்.

(இ-ள்.) கடி மனை மாடம் கூடல் - விளக்கத்தையுடைய இரத்தினங்களழுத்திய மாடங்கள்நெருங்கிய மதுராநகரில், தேர் ஒலி - தேரின் ஒலியும், கலினம் பாய் மான் சிரிப்பொலி - கடிவாளம்பூண்ட குதிரைகள் கனைக்கும் ஒலியும், புரவி பூண்ட தார் ஒலி - அக்குதிரைகள்பூண்ட கிண்கிணியின் ஒலியும், கருவி ஐந்தும் தழங்கு ஒலி - தோற்கருவிமுதலிய ஐந்துகருவிகளுமொலிக்கும் ஒலியும், முழங்கு கைம்மான் பேர் ஒலி - முழங்காநின்ற யானைகளினது பெரிய ஒலியும் ஆகிய, எல்லாம் ஒன்றி பெருகு ஒலி அன்றி - இவ்வோசைகளெல்லாம் ஒருசேரத்திரண்டு பெருகிய ஓசையே புலப்படுவதல்லாமல், என்றும் கார் ஒலி செவிமடாது - எப்பொழுதும் மேகத்தின் ஒலி செவிகட்குப்புலப்படாது.

ஐந்துகருவிகளாவன - தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி. தோற்கருவி - பேரிகைமுதலியன. துளைக்கருவி - வேய்ங்குழல்முதலியன. நரப்புக்கருவி-வீணைமுதலியன. கஞ்சக்கருவி-தாளமுதலியன. மிடற்றுக்கருவி-கண்டத்தால் தொனியுண்டாகும்படி பாடுதல்.

இதுகாறும் வீதிகளின் பொதுவிலக்கணங்கூறித் தனித்தனி வீதிகளின் சிறப்பிலக்கணங் கூறுகின்றார். (௮௫)

பரத்தையர்வீதி.

இழிபவருயர்ந்தோர்மூத்தோரிளையவர்கழியாநோயாற்
கழிபவர்யாவரேனுங்கண்வலைப்பட்டுநெஞ்ச
மழிபவர்பொருள்கொண்டெள்ளுக்கெண்ணெய்போலளந்துகாட்டிப்
பழிபடுபோகம்விற்பாராவணப்பண்புசொல்வாம்.

(இ-ள்.) இழிபவர் உயர்ந்தோர் மூத்தோர் இளையவர் கழியா நோயால் கழிபவர் - இழிகுலத்தவர்களும் உயர்குலத்தவர்களும் தம்மில் மூத்தவர்களும் இளையவர்களும் நீங்காத நோயால் மெலிகின்றவர்களும் ஆகிய இவர்களுள், யாவர் ஏனும்

கண்வலைப்பட்டு நெஞ்சம் அழிபவர் பொருள் கொண்டு - எவராயினும் தமது கண்களாகிய வலைகளில் அகப்பட்டு வலிகெடுவோர் பொருள்களைக்கைக்கொண்டு, எள்ளுக்கு எண்ணெய்போல் -(வரையறைசெய்துகொடுத்த) எள்ளுக்குத்தக்கவாறு அளந்துகொடுக்கும் எண்ணெய்போல, அளந்து காட்டி பழிபடு போகம்விற்பார் ஆவணம் பண்பு சொல்வாம் - அப்பொருளளவுக்கேற்பத் தாம்கொடுப்பனவாகிய அளவுசெய்து புலப்படுத்தி (அறிவுடையோர்) விலக்கும்போகத்தை விற்கும்பரத்தையர்வீதியின் தன்மையைக்கூறுவாம்.

தமது நலம் விலைகொடுப்பவர் எவர்க்கும் விற்பதன்றி அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரைவின்மை வரைவின்மகளிர்க்கு இயல்பாதலால் இழிபவர் உயர்ந்தோர் மூத்தோர் இளையவர் கழியாநோயாற் கழிபவர்யாவரேனும் எனவும், கொடுத்தபொருளளவுக்கேற்பப்போகம் அளந்துவிற்றலின் எள்ளுக்கெண்ணெய்போல் அளந்துகாட்டி எனவும், "பொதுநலத்தார்புன்னலந் தோயார்மதிநலத்தின் மாண்டவறிவினவர்" என்றமையால் பழிபடுபோகமெனவுங் கூறினார்.

"சீலமுறைச்சார்பால் வெந்நோய்கோட்பட்டா ரிழிஞரேனும்" எனவும்,

"இருமைவாணியத்திற்கூர்ததமதியருமிறுமபூதெய்த
அருவமாமின்பந்தன்னை யிம்மியினளவுமேறா
தருவமாம்பொருளுக்கேற்ப நிறுத்துவிற்றெழுகவல்ல" எனவும் வருதல் காண்க. (சசு)

மெய்படுமன்பினார்போல்விரும்பினார்ககருத்துந்தஙகள்
பொய்படுமின்பம்யார்க்கும்புலப்படத்தேற்றுவார்போன்
மைபடுகண்ணார்காமன்மறைபபொருள்விளஙகந்தீட்டிக்
கைபடசுவராய்த்தோன்றச்சித்திரங்காணசசெய்வார்.

(இ-ள்.) மைபடு கண்ணார் மெய்படும் அன்பினார்போல் விரும்பினார்க்கு அருத்தும் தங்கள் பொய்படும் இன்பம் - மையெழுதிய கண்களையுடைய பரத்தையர்கள் உண்மையாகிய அன்பினையுடையவர்போலத் தமமை விரும்பிய புருடர்க்கு ஊட்டும் தங்களுடைய பொய்யாகிய இன்பக்கலவிகளை, யார்க்கும் புலப்பட தேறுவார்போல் - தம்மிடத்துவரும் எவர்க்கும முன்னமே விளங்கத்தெளிவிப்பவர்கள் போல, காமன் மறைப்பொருள் விளங்க தீட்டி 'கைபட சுவா ஆய தோனற சித்திரம் காண செய்வார் - மன்மதனுடைய வேதப்பொருள்களாகிய கரணங்கள் சுவர்த்தலங்களில் விளங்கவெழுதிக் கைபடுதலால் (பரிசத்தால் என்றபடி) சுவராகவிளங்கவும் சித்திரங்களென்று புலப்படவும செய்திருக்கின்றார்கள்.

கரணவிகற்பங்களை கல்லாதவர்கள் தம் இல்லில் நுழைதற்குமுன்னே கற்கச்செய்தல் அவர்கட்கின்றியமையாத செயலாதலாற் புலப்படத்தேற்றுவார்போலெனவும், யார்க்கும் என்றலின் இழிபவர்முதலிய எவர்க்கும் எனவும், சித்திரித்த ஓவியங்கள் ஓவியங்கள்போலாதுகாண்பவர்க்கு ஆடவர்மகளிர்போலப் புலப்படுதலால் காரணப்பொருளில்வந்த கைபட என்னும் வினையெச்சந்தந்து கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங்காணச் செய்வார் எனவுங்கூறினார். பட-காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சம். ஆய் - செயவெனெச்சத்திரிபு, சுவராகத்தோன்றவும் சித்திரமென்று புலப்படவும் செய்தல் சிற்பிகள்தொழிலன்றிப் பரத்தையர்தொழிலன்றாயினும் இயற்றுவோர் தொழிற்கு ஏவினோரைக் கருத்தாவாகக்கூறுதலும் விதியாதலால் செய்வாரென ஏவற்கருத்தாவின்முடிபுதந்து கூறினார்.

"பற்குறிகைக் குறிகள்பாணிகொடுதட்டல்
நற்கமிழ்துய்த்தல்களிகன்கெழவிணைத்தல்
அற்குகரணங்களறியார்களெவரோதுங்
கற்கும்வகைகின்றனகதிர்த்தமணியோவம்" எனவருதலுங்காண்க.(௪௭)

திருவிற்கான்மணிப்பூணாகம்பலகையாத்தெண்முத்தார
வருவிநகால்வரைமென்கொங்கைசூதொட்டியாடிவென்று
மருவிக்காமுகரைத்தங்கள்வடிக்கண்வேன்மார்பந்தைப்பக்
கருவிசூதாடிவென்றுங்கைப்பொருள்கவர்தல்செய்வார்.

(இ-ள்.) காமுகரை மருவி திருவில் கால் மணிப்பூண் ஆகம் பலகை ஆக-காமுகரைக்கலந்து அழகிய ஒளியைவீசும் இரத்தினாபரணங்களையணிந்த தமதுமார்பைப் பலகையாகக்கொண்டு, தெள் முத்து ஆரம் அருவி கால் வரை மென் கொங்கை சூது ஒட்டி ஆடி வென்றும் - தெளிவியமுத்தாரமாகிய அருவியைப் புலப்படுத்தும் மலைகளாகிய மெல்லியகொங்கைகளென்னும் வட்டுகளால் பந்தயம்வைத்து ஆடி வெற்றிகொண்டும், தங்கள் வடி கண் வேல் மார்பம் தைப்ப கருவி சூது ஆடி வென்றும் - தங்களது மாவடுவின் பிளவையொத்த கண்களாகிய வேல் அக்காமுகருடைய மார்பிற்பட்டுருவக் கருவிச்சூதினையாடிவென்றும், கைப்பொருள் கவர்தல் செய்வார் - அவர்கள் கையிலுள்ள பொருள்முற்றும் கொள்ளைகொள்வார்கள்.

ஆயுதப்போர்செய்யுமிடத்தும் வஞ்சமுண்டாமையால் கருவிச்சூது எனவும், சூதாட்டில் வென்றவரும் போரில்வென்றவரும் தம்மால்வெல்லப்பட்டோர் பொருள்முற்றும் கவர்ந்துகொள்ளுதல் வழக்காதலின் கைப்பொருள்கவர்தல் செய்வாரெனவுங் கூறினார்.

வடு-மாவடுவின்பிளவு - திருக்கோவையார். "வடுக்கண்ணிவைவஞ்சியஞ்சமிடையிது" என்றும்பாட்டில் வடி-என்பது வடுவிருக்கு ஓர்பெயர்-என நச்சினார்க்கினியர் எழுதியவுரையானுமுணர்க.

வரையாகக் கொங்கையை உருவகஞ்செய்து போர்க்கும் சூதாக உருவகஞ்செய்தது உருவக உருவகவணி. (௪௮)

தண்பனிநீரிற்றோய்த்தமல்லிகைத்தாமநாற்றி
விண்படுமதியந்தீண்டும்வெண்ணிலாமுற்றத்திட்ட
கண்படையணைமேற்கொண்டுகாமனுங்காமுற்றெய்தப்
பண்பலபாடிமைந்தராவியைப்பரிசில்கொள்வார்.

(இ-ள்.) தண்பனி நீரில் தோய்த்த மல்லிகை தாமம் நாற்றி - குளிர்ந்த பனிநீரிற்றோய்த்துத்தொடுத்த மல்லிகைமலர்களாலாகிய மாலிகைகளைத் தொங்கவிட்டு, விண்படு மதியம் தீண்டும் வெள் நிலா முற்றத்து இட்ட கண்படை அணைமேல் கொண்டு - ஆகாயத்திற்பொருந்திய சந்திரனையளாவும் வெள்ளிய நிலாமுற்றத்திற்போட்ட தூங்குமஞ்சத்தின்மேல் வீற்றிருந்து, காமனும் காமுற்று எய்த பலபண்பாடி மைந்தர் ஆவியைப் பரிசில் கொள்வார்-மன்மதனும் தம்மைவிரும்பிவந்தடையக் காந்தாரமுதலிய பலபண்களைப்பாடிப் புருடர்களுடைய ஆவியைப்பரிசிலாகப் பெறுவார்கள்.

யாவரையும் மயக்கும் மன்மதனுங்கேட்டு விரும்பிவந்தடையும் பண்ணாதலின் அதற்குப்பரிசில் பொருளின்றென்பார் ஆவியைப்பரிசில் கொள்வார் என்றார்

காற்றி என்னும் இறந்தகால வினையெச்சம் கண்படை யணையென்னும் வினை முதற்பயனிலைகொண்ட இட்ட என்னும் பெயரொச்சத்தின் முதனிலைகொண்டது. ()

குரும்பைவெம்முலையிற்சிந் துசாந்தமுங்குழலிற்சிந்து
மரும்பவிழ்மாலைத்தாதுமளிநுகர்ந்தெச்சிலாகிப்
பொரும்பரிக்காலிற்றூளாய்ப்போயரமாதர்மெய்யு
மிருங்குழற்காடுஞ்சூழ்போயியன்மணமவிழ்க்குமன்றே.

(இ-ள்.) குரும்பை வெம்முலையில் சிந்து சாந்தமும் குழலிற்சிந்தும் அரும்பு அவிழ் மாலைத்தாதும் அளி நுகர்ந்து எச்சில் ஆகி - (பரத்தையர்களுடைய) தென்னங்குரும்பைபோன்ற விருப்பந்தரும் தனங்களினின்று சிந்தியசந்தனமும் கூந்தலினின்றுசிந்திய அரும்பவிழ்ந்த பூமாலையின் மகரந்தமும் வண்டுகளால் உண்ணப்படுதலால் சேறுபட்டு, பொரும் பரி காலில் தூளாய் போய் -(வீதிகளிற்செல்கின்ற) போர்செய்யுங்குதிரைகளுடையகாலால் தூள்பட்டு மேலெழுந்து, அரமாதர் மெய்யும் இருங்குழல் காடும் போய் சூழ் இயல் மணமவிழ்க்கும் - விண்ணுலகிலுள்ள அரம்பைமார்களுடைய சரீரத்திலும் கூந்தலாகிய காட்டிலுஞ்சென்று சூழ்ந்து அவைகளுக்குரிய இயற்கைவாசனைகளை மறைக்கும்.

தெய்வப்பெண்கள் சரீரங்களும் கூந்தல்களும் இயல்பாகவே மணமுடைமையின் இயல் மணம் என்றார். அதுபோல இந்நிலவுலகிலுள்ள கற்புடை மகளிருடைய சரீரமும் கூந்தலும் இயல்பாகவே மணமுடையன என்றற்கு, "கொங்குதேர் வாழ்க்கையஞ்சிறைத்தும்பி, காமஞ்செப்பாது கண்டதுமொழிமோ, பயிலியதுகெழீஇயநட்பின், மயிலியற்செறிஎயிற்றரிவைகூந்தலின், நறியவுமுளவோநீயறியும்பூவே" எனத்தருமியின்பொருட்டுச் சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரத்தாலுணர்க. (௫0)

ஆலவாயுடையானென்றுமங்கயற்கண்ணியென்றுஞ்
சோலைவாழ்குயிலினல்லார்சொல்லியாயகொருங்குசொல்லும்
பாலவாங்கிளிக்கள்பூவைபன்முறைகுரவனோது
நூலவாய்ச்சந்தைகூட்டி நுவன்மறைசிறாரையொத்த.

(இ-ள்.) சோலைவாழ் குயிலின் நல்லார் - சோலையில் வாழும் குயிலினைப்போலும் சொற்களையுடைய பெண்கள், ஆலவாய் உடையான் என்றும் அங்கயற்கண்ணி என்றும் பல்முறை சொல்லிய ஆங்கு - திருவாலவாயி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் என்றும் மீனாக்ஷியம்மை யென்றும் பலதரம் ஓதுவித்தபடி, ஒருங்குசொல்லும் பால் அவாம் கிளிகள் பூவை - ஒருசேர வோதும் பாலை விரும்பிப்பருகுங்கிளிகளும் நாகணவாய்ப் புட்களும், பல்முறை குரவன் ஓது நூல் அவாய் சந்தைகூட்டி நுவல் மறை சிறாரை ஒத்த - பலதரமும் ஆசிரியன்கூறும் வேதத்தை விரும்பிச் சந்தைகூட்டிக்கூறும் பிராமணப்பிள்ளைகளை யொத்தன.

சந்தை கூட்டலாவது-ஆசிரியன் சொன்ன வேதவாக்கியங்களை ஒருசேரச் சொல்லுதல்.

அந்நகரில் வாழும் பரத்தையர் தீத்தொழிலினராயினும் சிவநேசமுடையார் என்றற்கு ஆலவாயுடையானென்றும் அங்கயற்கண்ணி என்றும் சொல்லியாங்கு என்றார். பரத்தையரை வேதம் ஓதுவிக்கும் ஆசிரியராகவும், அம்மையப்பர் திருநாமங்களை வேதங்களாகவும் அவற்றைப்பயின்றோதும் கிளிகளும் பூவைகளும் ஆசிரியன் சொன்னபடி வேதத்தைச்சொல்லும் பிராமணச்சிறுவர்களாகவும்கூட்டிக்கொள்க.

கட்புலனாதியைந்துமுவப்புறக்கனிந்தகாமம்
விட்புலத்தவரேயன்றிவீடுபெற்றவரும்வீழ்ந்து
பெட்பமுற்றமுதுங்கைப்பப்பெருங்குலக்கற்பினார்போ
னட்பிடைப்படுத்திவிற்குநல்லவரிருக்கையீதால்.

(இ-ள்.) கட்புலன் ஆதி ஐந்தும் உவப்பு உற - நேத்திரேந்திரியமுதலிய பஞ்சேந்திரியங்களும் களிகூர, கனிந்த காமம் விட்புலத்தவரே அன்றி வீடு பெற்றவரும் வீழ்ந்து பெட்பு உற்று அமுதும் கைப்ப - இன்பம் பழுத்த காமநுகர்ச்சியை விண்ணுலகிலுள்ள தேவர்களேயல்லாமல் இருவகைப்பற்றும் கழன்ற சீவன்முத்தரும் விரும்பி மயல்கூர்ந்து தத்தமக்குரிய அமுதையும் வெறுப்ப, பெருங் குலம் கற்பினார் போல் நட்பிடை படுத்தி விற்கும் நல்லவர் இருக்கை ஈது - மேம்பட்ட குலத்திற்றோன்றிய கற்புடைமகளிர்போலத் தமது நட்பில் அகப்படுத்தி விலைப்படுத்தும் பரத்தையர்வீதி இத்தன்மையது.

அமுது - தேவருணவு, மோட்சம். ஆதலால் விண்ணுலகத்தவர் அமுது கைப்ப எனவும், சீவன்முத்தர்கள் மோட்சங் கைப்ப எனவும் பொருள்கொள்க. ஆவணப் பண்புஎன முன்னர்க்கூறினமையால் ஈதென்பதற்குப் பண்புகுறித்த சுட்டடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்றாகப் பொருள்கூறினும். மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் இந்திரியங்கள் களிகூருதல் "கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும் ஐம்புலனும், மொண்டொடியின்கண்ணேயுள" என்பதனாலுணர்க. காமம் அனுபவிப்பதாதலால் காமநுகர்ச்சி என்றும். காமமென்பதனிறுதியில் தொக்குநின்ற இரண்டனுருபு வினைமுதற்பயனிலைகொண்ட விற்குமென்னும் பெயரெச்சத்தின் முதனிலைகொண்டது. பெட்பம் அம்பகுதிப்பொருள் விகுதி. இருவகைப்பற்று - அகப்பற்று, புறப்பற்று. அகப்பற்று யானென்பது, புறப்பற்றுஎனதென்பது. வீடு விடுதலெனனும் பொருள்மேல் நின்ற முதனிலைதிரிந்த தொழிற்பெயர். இப்பற்றுக்களைவிட்டோர் விரும்புதலின்மையால் உம்மை யெதிர்மறைப் பொருட்டு. விரும்பாத சீவன்முத்தர்கள் விரும்பி மோட்சத்தை வெறுக்கஎனக் காமத்தைப் புகழ்தல் மிகுதி நவிற்சியணி. இதனை வடநூலார் அதியுத்தியணி என்பர்.

பெருங்குலக்கற்பினார்போல் நட்பிடைப்படுத்தி யென்பது உபசரித்தல் முதலிய செய்கைகளால் பிறர் பொருளைக் கவர்தற்கு வஞ்சிப்பதாதலால் இது யுத்தியணி. (௫௫)

வேளாளர்வீதி.

வழுக்கறுவாய்மைமாண்புங்கங்கைதன்மரபின்வந்த
விழுக்குடிப்பிறப்புமூவரேவியவினைகேட்டாற்று
மொழுக்கமுமமைச்சாய்வேந்தர்க்குறுதிசூழ்வினையுங்குன்றா
விழுக்கறுமேழிச்செல்வர்வளமறுகியம்பலுற்றாம்.

(இ-ள்.) வழுக்கு அறு வாய்மை மாண்பும் - குற்றமற்ற வாய்மைச் சொல்லின் மாட்சிமையும், கங்கைதன் மரபின் வந்த விழுக்குடிப்பிறப்பும் - கங்கைகுலத்தில் வந்த மேன்மைதங்கிய குடிப்பிறப்பும், மூவர் ஏவிய வினைகேட்டு ஆற்றும் ஒழுக்கமும் - அந்தணர் முதலிய மூவகைவருணத்தோரும் ஏவிய தொழில்களைக் கேட்டு முட்டின்றி முடிக்கும் நல்லொழுக்கமும், வேந்தர்க்கு அமைச்சு ஆய் உறுதி சூழ் வினையும் குன்றாத - அரசருக்கு மந்திரித்தொழில்மை பூண்டு பயன்தருஞ்செயல்களை ஆராய்ந்து முடிக்கும் செய்கைகளுங்குறையாத, இழுக்கு அறு மேழிச் செல்வர் வள

ம் மறுகு இயம்பல் உற்றும்-தவறற்ற மேழியால் வரும் பெருஞ்செல்வத்தையுடைய வேளாளருடைய வீதியின் பெருமையைச் சொல்லுவாம்.

மூவர் ஆவார் - அந்தணர், அரசர், வசியர். ஏவிய வினை-இன்னது வேண்டுமெனல். எவ்வுயிருக்கும் நன்மைபயக்கும் இன்சொல்லையுடையரா யிருத்தலின் வழுக்கறு வாய்மை மாண்பும் எனவும், இக் குலத்தோற்றம் கங்கையால் வருதலால் கங்கைதன்மரபின்வந்த எனவும், ஈகைமுதலிய நல்லொழுக்கங்கள் தொன்றுதொட்டு வருதலின் விழுக்குடியெனவும், அந்தணர்முதலிய மூவகைவருணத்தோரையும் தமது தோற்றத்திற்கு ஏற்பத் தமது உழவால் நிலைபெறத்தாங்கி நிற்றலின் மூவரேவிய வினைகேட்டாற்று மொழுக்கமும் எனவும். அந்தணருக்கு அரசியலும் உடையதென்பதுபற்றி வேந்தர்க் கமைச்சராய் எனவும், அவர்கள் குடைநிழல் உயிர்கள்மாட்டு நிலைபெறச்செய்தல் இவர்கள்செய்கையாதலின் உறநிற்கும் வினையெனவும, ஒருகாலத்தும் குறைபாடின்மையின் இழுக்கறும் எனவும, இவைகளெல்லாம் இடையீடின்றி நிகழுதல் மேழிக்குரிழுமைப் பொருளாயிற்றலின், "மடல்பெரியதாழை" என்றாற்போல மாண்பு, குடிப்பிறப்பு, ஒழுக்கம், வினை தன்று மேழி எனவும், இதனால் பெருஞ்செல்வம் உடையராதலின மேழிச்செல்வா எனவுங்கூறினர். "வாய்மையெனப்படுவதியாதெனின்" என்றதிருக்குறளாலும, "பரப்புநீர்க்காவிரிப்பாவைதன்புதல்வர்" என்ற சிலப்பதிகாரம காடுகாண்காதையாலும், "ஈகைஈகைமுனசொல் இகழாமைநானகும், வகையென்பவாய்மைக்குடிக்கு" என்பதனாலும.

"முருகுயிர்த்தலர்ந்த மலர்வனத்தொறு முகமுதலுறுப்பினைத்தாங்கிச்
சரணமென்றனைய முறுப்பினிற்றோன்றிச் சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவாதுகளை புழவின் வண்மையால்நிலைபெறத்தாங்கி
உரியவேளாண்மை பூண்டபோதமக்கே யுடையவரிடம்பலவவண."

என்ற காஞ்சிபுராணத்தாலும், "அரசபோர் மறமும் புரப்போர்கொற்றமும், உழவிடைவிளைப்போர்" என்ற சிலப்பதிகாரம் - ஊர் காண்காதையாலும், தொ-பொருளதிகாரம-மரபியல். "அந்தணாளர்க் கரசுவரைவின்றே" என்றசூத்திரத்தாலும், "பலகுடைநீழலுந்தங்குடைக்கீழ்க் காண்பர், அலகுடைநீழலவர்" என்றதிருக்குறளாலும, "மேழிச்செல்வம கோழைபடாது" என்ற ஔவையார் திருவாக்காலும். தொ-பொருளதிகாரம-ஷை "வேளாண்மாந்தர்க்குழுதூணல்ல, தில்லெனமொழியபிறவகைநிகழ்ச்சி" என்ற சூத்திரத்தாலுமுணர்க. (௫௪)

வருவிருந்தெதிர்கொண்டேற்றுநயனுரைவழங்குமோசை
யருகிருந்தடிசிலூட்டிமுகமனன்கறையுமோசை
யுரைபெறுதமிழ்பாராட்டுமோசைகேட்டுவகைதுள்ள
விருநிதியளிக்குமோசையெழுகடலடைக்குமோசை.

(இ-ள்.) வருவிருந்து எதிர்கொண்டு ஏற்று நயன் உரை வழங்கும் ஓசை-தம்மைநோக்கி வருகின்றவிருந்தினர் எதிர்சென்று இனியமுகத்தோடு உபசரித்து இன்சொற்களைச்சொல்லும் ஆரவாரமும், அருகு இருந்து அடிசில் ஊட்டி முகமன் நன்கு அறையும் ஓசை - அவர்பக்கல் இருந்து (பண்ணியமுதலியனவமைந்த) உணவுகளை உண்பித்து (இடைக்கிடையே) உபசாரவார்த்தைகளைக் குறைவறக்கூறும் ஆரவாரமும், உரைபெறு தமிழ் பாராட்டும ஓசை கேட்டு உவகைதுள்ள இருநிதியளிக்கும் ஓசை - சொற்சுவையமைந்த தமிழ்க்கவிகளைப்பாடிப் பிரசங்கிக்கும் பிரசங்கத்தைக்கேட்டு ஆராவின்ப மேலெழுந்துபொங்க வரம்பிகந்த பொருளைத்தரும் ஆர

வாரமும், எழுகடல் அடைக்கும் ஓசை - எழுசமுத்திரங்களின் ஓசைகளும் கீழ்ப்பட
டச்செய்யும் ஆரவாரங்களாம்.

முன்னறிந்த உண்மையால் குறித்துவரும் விருந்தினராதலால் வரு விருந்து எனவும், வந்தவிருந்தினர் முகம்வாடிநிற்காமல் செய்கைமக்கண்ணே இன்முகங்காட்ட வேண்டுதலால் எதிர்கொண்டு எனவும், அருகண்டு வந்தவழி உபசரித்து இன்சொற் கூறவேண்டுதலால் ஏற்று நயனுரை வழங்குமெனவும், அதுபற்றி அவர்கள் உடன்பட்டவழி நன்றிசெய்யவேண்டுதலால் அருகிருந்து அடிசில் ஊட்டி எனவும், அவர் உண்ணுங்கால் தமக்குவேண்டுவனவறுறை யொளிக்காமற்கூற இடைக்கிடையே உபசாரவார்த்தைசொல்லவேண்டுதலால் முகமனன்கறையுமோசை எனவும், உண்டபின் தமிழ் ஆராய்தலும் புலவர் வேண்டுவனவற்றைக்கொடுத்தலும் இன்றியமையாத தொழில்களாதலால் உரைபெறு தமிழ்பாராட்டு மோசைகேட்டுவகை துள்ள விருந்தியளிக்கும் ஓசை எனவும கூறினா. (ருரு)

அருந்தினரருந்திசசெல்லவருந்துநின்றருமாங்கே
யிருந்தினிதருந்தாநிற்கவின்னமுதட்டுபபின்னும
விருந்தினர்வரவுநோக்கிவித்தெலாமவயலில்வீசி
வருந்திவிண்ணோக்குமோரோருழவர்போலவாடிநிற்பார்.

(இ-ள்.) அருந்தினர் அருந்திச்செல்ல - உண்டவிருந்தினர் உண்டுசெல்ல, அருந்துகின்றாரும் ஆங்கு இனிது இருந்து அருந்தாநிற்க - உண்ணுகின்ற விருந்தினரும் முன்னுண்டவிருந்தினர்போல மகிழ்ச்சியோடு இருந்து உண்ணாநிற்க, பின்னும் இன் அமுது அட்டு விருந்தினர் வரவுநோக்கி-பின்னும் இனியசோற்றைச்சமைத்து இனிவரும் விருந்தினரோடு (தாம் இருந்துண்ண) அவர்கள வரவைநோக்கி, வித்து எல்லாம் வயலில் வீசி வருந்தி விண்ணோக்கும ஓர் ஏர் உழவர்போல் வாடிநிற்பார்- (தம்மிடத்துள்ள) விதைகளையெல்லாம் வயலில்விதைத்து மழையைப்பார்த்து வாடிநிற்கும் ஓரேர் உழவனைப்போல முகம்புலர்ந்து எதிர்நோக்கிநிற்பார்கள்.

ஓரேருடைய வுழவர் தமது விளைநிலத்திற்குப பலகாலும் செல்லுதலும் உழுதல்முதலிய தொழில்களைத்தாமே மேற்கொண்டு நடத்தலும உடைமையால் ஓரேர் உழவர்போலெனவும், விருந்தோம்புவார் இலக்கணம் இவையாதலால் அருந்திச்செல்ல அருந்தாநிற்கநோக்கி வாடிநிற்பார் எனவுங்கூறினர். "செல்விருந்தோம்பிவருவிருந்துபார்த்திருப்பான்" என்றதிருக்குறளால் உணர்க. உவமையும் பொருளும் ஒற்றுமையுண்மையால் பொருளின்தொழிலை உவமைக்கேற்றி வாடிநிற்கும் என்றும். (ருசு)

வானமுந்திசையும்பொங்கும்புகழ்மையும்வானம்பேறு
ஞானமுமபொறையுங்குன்றாநன்றியுமூக்கப்பாடுந்
தானமுங்கொடையுமன்பும்வரிசையுந்தகைசானண்பு
மானமுந்தவஞ்செய்தீன்றமகவுபோல்வளர்க்கவல்லார்.

(இ-ள்.) வானமும் திசையும் பொங்கும் புகழ்மையும் - விண்ணுலகத்திலும் எட்டுத்திக்கிலும் பரந்துவிளங்கும் கீர்த்தியையும், வானம பேறும் ஞானமும்-விண்ணுலகத்தாரும் விரும்பும் மெய்யறிவையும், பொறையும் குன்றா நன்றியும் ஊக்கப்பாடும் தானமும் கொடையும் அன்பும் வரிசையும் தகைசால் நண்பும் மானமும்- பொறுமையையும் குறைபடாத நன்றியையும் மனவுறுதிப்பாட்டையும் தானத்தையும் ஈகையையும் அன்பினையும் ஒழுக்கத்தையும் பெருமைநிறைந்த நட்பையும் மானத்தையும், தவம் செய்து ஈன்ற மகவுபோல் வளர்க்கவல்லார் - தவஞ்செய்து பெற்ற பிள்ளையைப்போல வளர்க்கவல்லவர்களாம்.

புகழ்மையாவது-பின்வருவனவற்றால்வரும் கீர்த்தி. ஞானமாவன - பிறப்பு வீடுகளையும் அவற்றின்காரணங்களையும் ஐயந்திரிபற உணரும் மெய்யுணர்ச்சி. பொறை-இதனால் பிறர்தமக்குத் தீமைசெய்தவற்றைத் தாமும் அவர்மாட்டுச்செய்யாது பொறுத்தல். நன்றி-அஃது உண்டாயவழி உண்டாகும் செய்ந்நன்றிமறவாமை. ஊக்கப்பாடு-அதனால் எடுத்தகாரியத்தில் மனஞ்சோராதிருத்தல். தானம்-இவை உளவாயவழி நிலையாமைகருதி அந்தணர் முதலியோர்க்குக் கொடுக்குந்தானம். கொடை-வறியார்க்குக்கொடுத்தல். அன்பு-புதல்வர்முதலிய சுற்றத்தார் இடத்தும் பிறவுயிர்களிடத்தும் அருள்பிறத்தல். வரிசை-தத்தமக்குரிய நிலையினின்றுந் தவறாதிருத்தல். மாசால் நண்பு இவற்றிற்குக் குறைவுவாராது இவற்றைப் பாதுகாத்தற்பொருட்டுப் பெரியாரைத் துணைக்கோடல். மானம் இவற்றால் எக்காலுந் தத்தமக்குரிய நிலையினின்றுந் தவறாமையும், ஏழால் தவறுவரவழி உயிர்விடுதலுமாம். இவை தமக்கே ஒருசேர உடைமையும் குறைவரின் உயிர்விடுதலும் உடைமையால் தவஞ்செய்கின்ற மாதவர்போல் விளக்கவல்லார் எனக்கூறினார். இது பின் பின்னாக வருவனவற்றிற்கு முன்முன்னாக வருவனவற்றைக் காரியங்களாகக்கூறி இருத்தலின் காரணமாலையணி.

வருவிருந்தினர் என்றுஞ்செய்யுள் முதல் இதுகாறுங் கூறியவை வேளாண் மரபுக்கே உரியதன்மைகளாதலால் சாதிதன்மையணிகள். (௩௭)

வணிகரியல்பு.

புல்லியோர் பண்டங்கொள்வார் வினவின பொருடம்பக்கல்
இல்லெனி னினமாயுள்ள பொருளுரைத் தெதிர்மறுத்து
மல்லதப் பொருளுண் டென்னின் விலைசுட்டி யறுத்து நேர்ந்தொரு
சொல்லினு மிலாபங் கொள்வார் தொன்மரபிருக்கை சொல்வாம்.

(இ-ள்.) புல்லியோர் பண்டங் கொள்வார் வினவின - தம்மிடத்துவந்து ஒரு பொருளைவாங்குவோர் (பயறுண்டோவென்று) என்றுகேட்டால், அப்பொருள் தம்பக்கல் இல எனின் இனமாய உள்ளபொருள் உரைத்து எதிர்மறுத்தும் - அப்பொருள் தம்மிடத்தில்லையாயின் அதற்கு இனமாயுள்ள உழுந்து முதலியவற்றையும் உண்டெனச்சொல்லி அச்சொல்லால் முன்வினவியது இல்லை என்றும், அல்லது அப்பொருள் உண்டு எனின் விலைசுட்டி அறுத்தும் நேர்ந்தும் - அன்றி அப்பயறே தம்மிடத்து உளதாயின் விலையிவ்வளவு என்று வரையறுத்தும் கொடுத்தும், சொல்லினும் இலாபம் கொள்வார் தொன்மரபு இருக்கை சொல்வாம் - பொருளால் அன்றிச் சொல்லாலும் ஊதியங் கொள்ளும் வணிகருடைய பண்டுபட்டொட்டுள்ள மரபுகள் உறைவிடத்தைச் சொல்லுகின்றோம்.

இனமாயுள்ள பொருளில்லையென்று விடை உரைத்து நிற்றலால் இனமாயுள்ள பொருளுரைத்து எதிர்மறுத்து எனவும், விலை இவ்வளவென்று வரையறுத்துக்கூறுதல் அப்பொருள் உள்ளென்பது தந்துநிற்றலால் விலைசுட்டி யறுத்தும் எனவும், பிறர் பொருளையுந் தமது பொருள்போற்கருதிச்செய்தலின் நேர்தும்எனவும், இவ்வாறு கூறில் சொற்சுருங்குதலின் சொல்லினும் இலாபங்கொள்வார் எனவுங்கூறினார். ஒருவன் வினவியது தம்மிடத்து இல்லையானால் அதனை யில்லையெனச்சொல்லத்தொடங்கில், அவன் வினவியதற்கினமாயது தம்மிடத்துள்ளதனைக்கூறி யச்சொல்லாலதனை இல்லையென்றும், உளதாயின் அதனையுண்டென்றுங் கூறுவர்புலவர் என்னும் பொருளுள்ளிட்ட நன்னூல்-சொல்லதிகாரம் பொதுவியல். "தம்பாலில்லதுஇல்லெனின் இனனாயுள்ளது கூறிமாற்றியும் உள்ளது சுட்டியுமுரைப்பர் சொற்சுருங்குதற்கே" என்னுஞ் சூத்திரத்தின்பொருளே இச்செய்யுளின்பொருளென்க. பிறர்பொரு

ளையுந் தம்பொருள்போற்கருதிச்செய்தல் - கொள்வதுமிகையுங் கொடுப்பதுகுறையுமாகாமல் ஒப்பாகச்செய்தல். "வாணிகஞ்செய்வார்க்குவாணிகம்பேணிப்பிறவுந் தமபோற்செயின்" என்னுந்திருக்குறளானுணர்க.

உம்மையிறந்ததுதழீய எச்சப்பொருட்டு. இதனால் வாணிகத்தின் இலக்கணமும் நடுவுநிலைமையுங் கூறப்பட்டன. (ருஅ)

நீலவேதிமேற்பளிங்கினுனிழற்சுவர்நிறீஇமின்
காலவாலியவைரவாட்கானிரைத்தும்பர்க்
கோலவாணிலாச்சொரிமணிகுயிற்றிவெண்மாட்
மாலைபோல்வகுத்தியற்றினபீடிகைமறுகு.

(இ-ள்.) பீடிகை மறுகு - கடைவீதிகள், நீலம் வேதி மேல் பளிங்கினுல் நிழல் சுவர் நிறுவி - நீலமணியாற்செய்த திண்ணையின்மேற் பளிங்கினால் ஒளியையுடையசுவர்த்தலங்களைநிறுத்தி, மின் கால வாலிய வைரம் வாள் கால்நிரைத்து-ஒளியைவீசு வெள்ளிய வைரத்தாலாகிய பிரகாசத்தையுடைய தூண்களை வரிசைப்படநாட்டி, உம்பர் கோலம் வாள் நிலா சொரி மணி குயிற்றி - அவற்றின்மேல் அழகிய கிரணத்தைச்சொரியும் முத்துகளைப்பதித்து, மாலைபோல் வெள் மாடம் வகுத்து இயற்றின - (பலமலராற்றொடுத்த) மாலைபோல வெள்ளியமாடங்கள் வரிசைப்பட வகுத்துக்கட்டப்பட்டிருக்கின்றன.

இயற்றின-பலவின்பால் வினைமுற்று நோக்குகின்ற செயப்பாட்டு வினைமுற்று. (ருகூ)

திரையளிப்பவுந்திரைபடுதீம்புனல்வேலிக்
கரையளிப்பவுங்கரையிலாணிரைபடுகானந்
தரையளிப்பவுந்தரைகிழித்தூன்றிவிண்டாங்கும்
வரையளிப்பவும்வாங்கிவாய்மடுப்பனமாடம்.

(இ-ள்) திரைஅளிப்பவும் - அலைகளையுடைய கடல்தரும் பொருள்களையும், திரைபடு தீம்புனல் வேலிக்கரை அளிப்பவும் - அலைகள்பொருந்திய இனிய நீர்நிலங்களாகிய மருதநிலங்கள்தரும் பொருள்களையும், கரையில் ஆன் நிரைபடு கானந்தரையளிப்பவும்-அளவில்லாத பசுக்கள்பொருந்திய முல்லைநிலந் தரும்பொருள்களையும், தரை கிழித்து ஊன்றி விண் தாங்கும் வரையளிப்பவும்-தரையைக்கிழித்துவேர் வீழ்த்தி விண்ணுலகைத்தாங்கும மலைதரும் பொருள்களையும, மாடம் வாங்கி வாய்மடுப்பன - வணிகரது மாடங்கள்வாங்கித் தமதிடத்தில் நிரப்புவன.

இங்குமாடமென்பது - பண்டசாலைகள். கடல்படுதிரவியமாவன-உப்பு, முத்து, பவளம், சங்கு, ஓக்கோலை. மருதநிலம்படு திரவியமாவன-செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ்விளநீர். முல்லைநிலம்படு திரவியமாவன - சேனைடை, தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி. மலைபடு திரவியமாவன-மிளகு, கோட்டம் அகில் தக்கோலம், இலவங்கம். அளிப்ப என வருவன வினையாலணையும்பெயர்கள். திரை கரை தரை பின்னும் வருதலின் சொற்பின் வருநிலையணி. மாடம்-உடையவன்றொழிலை உடைமைமேல் ஏற்றி மாடம வாங்கிவாய மடுப்பன என்பது குணவணி (கூO)

கரியகம்பலக்கிடுகின்மேற்கதிர்விடுபவளத்
தெரியல்பொன்னரிமாலிகைதெண்ணிலாசசொரியும்
பரியநித்திலமணிவடமரகதப்பசுந்தார்
விரியவிட்டனவிந்திரவின்னிரையனைய.

(இ-ள்.)கரியகம்பலம் கிடுகின்மேல் கதிர்விடுபவளம் தெரியல்-கரியகம்பலத்தைப்பரப்பிய சட்டத்தின்மேல் ஒளியைவீசுமபவளமாலையையும்,பொன் அரி மாலி

கை - பொன்னலரிந்துசெய்த மாலையையும், தெள் நிலா சொரியும் பரிய நித்தில மணிவடம் - தெள்ளியநிலவைவீசும் பருத்தமுத்துமாலையையும், பசு மரகதம் தார் - பசியமரகதமாலையையும், விரிய இட்டன - ஒளிபரவ நிரைநிரையாய்ப்பரப்பி இருத்தல், இந்திரவில் நிரை அனைய - (கரியமேகத்திற்றோன்றிய) இந்திரதனுசுகளையொத்திருந்தன.

கரியகம்பலத்தைமேகமாகவும் அதனிடத்துப்பரப்பிய பலநிறங்களையுடைய இரத்தினமாலைகளைப் பலநிறங்களையுடைய இந்திரதனுசுகளாகவுங்கூட்டிப்பொருள் கொள்க. உவமையும் பொருளும் ஒத்தமையுண்மைபால் பொருளின்குணங்களை உவமையாகிய இந்திரவில்லின்மேலேற்றிப் பலநிறங்களையுடைய வென்றும். கரியமேகம் தொக்குநிற்றலின் பண்புவமானத்தொகை. (௯௧)

> நாள்களுங்குளிர்திங்களுஞாயிறுமேனைக்
> கோள்களுமகுளிர்விசும்பொரீஇக்குடிபுகுந்தாங்கு
> வாள்கிடந்திராப்பகலொளிமழுங்கலால்வணிக
> ராள்கலம்பகர்பீடிகைதுறக்கநாடனைய.

(இ-ள்.) நாள்களும் குளிர் திங்களும ஞாயிறும் - நக்ஷத்திரங்களும் குளிர்ந்தசந்திரனும் சூரியனும், ஏனைக்கோள்களும்-அவையொழிந்த மற்றைக்கோள்களும், குளிர் விசும்பு ஒருவி குடிபுகுந்தால் ஆங்கு-குளிர்ந்த ஆகாயத்தினின்று நீங்கி இங்குக்குடிபுகுந்தாற்போல, வாள் கிடந்து இரா ஒளி பகல் ஒளி மழுக்கலால்-ஒளியை வீசி இரவின் ஒளியையும பகலின் ஒளியையுங் கீழ்ப்படச்செய்தலால், வணிகர் ஆள் கலம பகர் பீடிகை - வணிகர்கள் யாவரும் பூணும் ஆபரணங்களை விற்குங் கடைவீதிகள், துறக்கநாடு அனைய-விண்ணுலகத்தை யொத்திருந்தன.

கடைவீதிகள் பலவகை ஆபரணங்களையு முடைமையால் நாள்களும் கோள்களும் குடிபுகுந்தாற்போலுள்ள எனவும், அவ்வாபரணங்களின் ஒளியால் இரவொளியும பகலொளியும் புலப்படாமையால் இவ்விரண்டுமில்லாத துறக்கநாடனையன வும், திங்களு ஞாயிறு மெனறதனால் ஏனைக்கோள்களும எனவும் கூறினர். இராப்பகல் ஒளி மழுக்குங் காரணத்தால் பீடிகை துறக்கநாடனைய என்றது ஏது உவமையணி. (௯௨)

> பன்னிறத்தபல்பெருவிலைப்பட்டெலாமவண
> வன்னபட்டின்மேம்படுவிலைப்பருத்தியுமவண
> வெந்நிலத்தரும்பொருள்பதினெழுபுலவணிகர்
> மன்னிருக்கையுமருமபெறல்வளனெலாமவண.

(இ-ள்.) பல் நிறத்த பல் பெருவிலைப் பட்டு எலாம் அவண - பலநிறங்களையுடைய வரம்பிகந்த அதிகவிலையுள்ள பட்டாடைகளின் வகைகள் எல்லாம அவ்விடத்துள்ளன, அன்ன பட்டின் மேம்படு விலை பருத்தியும் அவண - அப்பட்டாடைகளுக்கு மேம்பட்ட விலையையுடைய பருத்திநூலாடைகளும் அவ்விடத்துள்ளன, எந்நிலத்து அரும் பொருளும்-எந்நாட்டிலும் கிடைத்தற்கரிய பலபண்டங்களும், பதின் எழு புல வணிகர் மன் இருக்கையும் - திரவிடம் ஒழிந்த பதினெழுநிலங்களில் உள்ள வணிகர் நிலைபெற்றிருக்கும் உறைவிடங்களும், அரும் பெறல் வளன் எல்லாமும்-பெறுதற்கரிய எல்லாவளங்களும், அவண-அவ்விடத்திலுள்ளன.

பலபண்டங்கள் ஐம்பொறிகள் நுகர்ச்சிக்குரிய பொருள்கள். அவை - ஏனை நாடுகளில் இன்மையால் எந்நிலத்தரும் பொருளெனவும், பதினேழுநிலங்களிலுள்ள வணிகர் - தத்தம் நிலத்திலுள்ள பொருள்களை வருவித்து விலைப்படுத்தற்கும் இங்குள்ள அரியபொருள்களைத் தத்தம்நிலங்களில் பயன்படுத்தற்கும் என்றுமிருத்தலால்

பதினெழுபுலவணிகர் மன்னிருக்கையும் எனவும், பொன்னுகரமுதலிய பலசெல்வ வளங்களும் உளவாதலால் அரும்பெறல்வளனெலாமெனவுங் கூறினர். திரவிடங் கூட்டிப் பதினெண்ணிலங்களையும் முன்னர்க் கூறியிருக்கின்றோம் ஆங்குக்காண்க.— பதினேழு நிலங்களிலும் இத்திரவிடநிலமாகிய மதுரை சிறந்ததெனப் போதரலால் இது உதாரவணி. பட்டு-பருத்தி. ஆடையாகிய காரியத்தின்மே னிற்றலால், கருவியாகுபெயர்கள். எக்நிலத்தரும்பொருள், அரும்பெறல்வளனெலாம் இவற்றின் இறுதியில் எண்ணும்மைகள் விகாரத்தாற்றொக்கன. (கூக)

மரகதத்தினுலம்மிகள்வைரவாளுலக்கை
யுரல்கள்வெள்ளியாலடுப்பகில்விறகுலைபனிநீ
ரரிசிமுத்தழல்செம்மணியடுகலன்பிறவு
மெரிபொனுலிழைத்தாடுபவிவர்சிறுமகளிர்.

(இ-ள்.) இவர் சிறு மகளிர் - இவ்வணிகரது சிறுமிபாகள், மரகதத்தினுல் அம்மிகள் - மரகதமணிகளால் அம்மிகளும் குழவிகளும், வைரம் வாள உலக்கை உரல்கள் - வைரமணிகளால்செய்த உலக்கைகளும உரல்களும், வெள்ளியால் அடுப்பு - வெண் பொனனுல் அடுப்புகளும், அகில் விறகு - அகிற்கட்டையே விறகும், பனி நீர் உலை - பனிநீரே உலைநீரும், முத்து அரிசி - முத்தே அரிசியும, செம் மணி அழல் - செவந்த மாணிக்கமே நெருப்பும், எரிபொனுல் அடுகலன பிறவும்- விளங்குஞ் செம்பொன்னுல் சமைக்கும் பாத்திரங்களு மறறுள்ளனவும் ஆக, இழைத்து ஆடுப - அமைத்து விளையாடுவாாகள.

"ஒருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தே" என்றமையால் அம்மிகள் தமக்கினமாயுள்ள குழவிகளைக்கொண்டன. உலக்கை யுரல்கள அஃறிணையில் வந்த உம்மைத்தொகையாதலால் கள்விறு இறுதியில் வநதது. (கூஉ)

செயிரிற்றீர்ந்தசெம்பொன்னினுற்றிண்ணிலைக்கதவம்
வயிரத்தாழுடைத்தவாகடைவாயிலுமென்று
லயிரிற்றீர்ந்தபேரறிஞருமனையர்தஞ்செலவத்
தியலிற்றுமெனவரையறுத்திசைப்பதெவனே.

(இ-ள்.) அவர் கடை வாயிலும் - அவவணிகரது வீட்டின் கடைவாயிலும், செயிரில் தீர்ந்த செம் பொன்னினுல் திண் நிலை கதவம் - குற்றநதினின்று நீங்கிய செவந்த பொன்னினுற் செய்த திண்ணிய நிலையையுடையாதவு,வயிரம் தாழ் உடைத்து என்றல் - வயிரத்தாற்செய்த தாழக்கோலையுடையது என்று சொல்லப்படுமாளுல், அயிரில் தீர்நத பேர் அறிஞரும் - ஐயத்தினின்று நீங்கிய பேரறிவினை யுடையவரும், அனையர் தம் செல்வத்து இயல் இற்று ஆம் என வரையறுத்து இசைப்பது எவன் - அவ்வணிகரது செல்வததின் அளவு இவ்வளவினதென வரையறை செய்து சொல்வது எப்படி (முடியாது என்றபடி.)

பொன்களுட்சிறந்த சாம்புநதத்தாற் செய்யப்பட்டுளதென்பார், செயிரிற்றீர்ந்த செம்பொன்னினு லெனவும், புலப்படாத அரிய பொருளகளையும் அளவுசெய்யும் கூரிய அறிஞரென்பார்-அயிரிற்றீர்ந்த பேரறிஞரெனவும்,கடைவாயிலுள்ள நிலையுங் கதவும் தாழக்கோலும் பொன்னாலும் வயிரததாலும் செய்யப்பட்டுளவாதலால் அவ்வணிகரது புலப்படும் பொருள்களும் அவாகளால் வரையறைசெய்தற்கரிய வென்பார் இசைப்பதெவனோ எனவும் கூறினர்.

பொன் - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம் என நால்வகைப்படும். உம்மை இரண்டனுள் முன்னது இறந்தது தழீஇய உயர்வுசிறப்பு. பின்னது உயர்வுசிறப்பு. இசைப்பது என்பதனிறுதியினின்ற ஐ - சாரியை. (கூ௩)

எரிக்குறும்பொறியனையசெம்மணிசுடரெறிபொன்
வரிசுரும்புநேர்மரகதமுத்துவாள்வைரந்
தெரிப்பருந்துகிர்சிந்தினசெல்லுநாளொன்றுக்
கரிப்பர்கையகப்படுவனவாயிரத்திரட்டி.

(இ-ள்.) சிந்தின-(வணிகர்வீதியிற்) சிந்திக்கிடக்கும் பொருள்கள், எரி குறும் பொறி அனைய செமமணி - சிறிய தீப்பொறியை யொத்த மாணிக்கங்களும், சுடர் எறி பொன - ஒளியைவீசும் பொற்கட்டிகளும், வரி சுரும்பு நேர் மரகதம்-வரிகளை யுடைய வண்டுகளையொத்த மரகதங்களும், முத்து வாள் வைரம் தெரிப்பு அரும் துகிர் - முத்துகளும் ஒள்ளிய வைரங்களும் விலையளத்தற்கரிய பவளங்களுமாம், அரிப்பர் செல்லும் நாள் ஒன்றுக்கு கை அகப்படுவன ஆயிரத்து இரட்டி - அரிப்பாளர்கள் (அரிகருவியால்) அரிக்கச்செல்லும் நாள்களுள் ஒவ்வொருநாளுக்கும் அவர்கள் கையில அகப்படும பொருள்கள் ஒவ்வொருவனகையிலும் இரண்டாயிரங்களாம்.

குறுமை-சிறுமை; சிந்தின-அகபபடுவன வினையாலணையும்பெயர்கள். (௧௬)

பாயதொன்மரபபறவைபோற்பயன்கொள்வான்பதினெண்
டேயமாந்தருங்கிளைந்தசொற்றிரட்சிதான்றூய
மாயையகாரியவொலியன்றிவான்முதற்கருவி
ஞயகாரியவோசையேயாய்க்கிடந்தன்றே.

(இ-ள்) பாய தொன்மரம் பறவை போல் - (கிளைமுதலியவற்றால்) பரந்த ஆலமரத்தி லுள்ள பழங்களைக் கொள்ள வநது கூடிய பறவைகளைப்போல, பயன் கொள்வான் பதினெண் தேய மாந்தரும - (கடைவீதியிலுள்ள) பயனைக் கொள்ளக் கூடிய திராவிடம உள்ளிட்ட பதினெணணிலத்து மனிதர்களும், கிளைத்த சொல் திரட்சிதான்-(தம்முள்) பேசுகினற சொல்லோசைகளின கூட்டமானது, தூய மாயை காரிய ஒலி யன்றி-சுத்தமாயையின் காரிய ஒலிபோல் அல்லாமல், வான் முதல்கருவின் ஆய காரிய ஓசையே ஆய கிடந்தனறு - ஆகாயமுதலிய பஞ்சபூத காரணங்களால் உண்டாகிய காரிய வோசையேயாகி யிருநதது.

சுத்தமாயாகாரியவொலி அக்கரங்களின்வடிவாய்ப்பொருள்பயப்பது. கடை வீதியிலெழுந்த பதினெணணிலத்துச் சொல்லோசை புறத்திற் கேட்போருக்குப் பொருளபயத்தலின்மையால் மாயை காரிய வொலியன்றி எனவும், ஆகாயம் சத்த வடிவாயிருததலும் வாயு விறுவிறெனவும், தேயு சடசடெனவும், அப்பு சலசலென வும், பிரிதிவு கிண்ணெனவும் ஆகிய வோசை பொருள்பயக்கும் அக்கரவடிவன்மை யால் வான்முதற் கருவினாய காரியவோசையேயாய்க்கிடந்தன்று எனவுங் கூறினார்.

ஓசையினிறுதியில் தேற்றேகாரந் தந்தமையால் போலவென்னும் உவமையு ருபுவருவித்தாம். மாயை காரியவொலி எனபதை "மொழிக்காரணமா நாதகாரிய வொலி, எழுததுமுதல்சாா பெனவிருவகைத்தே" என்னும் இலக்கணவிளக்கச் சூ த்திரத்தாலுணர்க. (௧௭)

ஒழிவில்வேறுபல்பொருளுமேழுலோகமும்பிறவும்
வழுவில்வேறுபல்கலைகளுமாபுளிவகுததுத்
தழுவிவேண்டினர்தாங்கொளத்தக்கவாபகார
வழிவிலாமறைபோன்றனவாவணவீதி.

(இ-ள்.) ஆவணவீதி - வணிகர் கடைவீதி, ஒழிவு இல் வேறு பல் பொருளும் - நீக்குதலில்லாத வெவ்வேறுவகைப்பட்ட பலபண்டங்களையும், எழ் உலோகமும் - பொன் வெள்ளி முதலிய எழுவகை யுலோகங்களையும், பிறவும் - பித்தளை முதலியவற்றையும், வழுவு இல் வேறு பல் கலைகளும் - குற்றமில்லாத வெவ்வேறு வகைப்பட்ட பலவாடைகளையும், மரபு உளி வகுத்து - வரிசையாற்பரப்பி, தழுவி வேண்டினர் தாம் கொள்ள - விரும்பிவந்து வாங்குவோர்வாங்க, தக்க ஆறு பகரா - தக்கபடி விலைகூறுதலால், ஒழிவு இல் வேறு பல் பொருளும்-ஒழிதலில்லாத அறமுதலாக வேறுபட்ட பல வுறுதிப்பொருள்களையும், எழ் உலோகமும் - எழுலகங்களினியல்புகளையும், பிறவும் - ஏனையவிடங்களினியல்புகளையும், வழுவு இல் வேறுபல் கலைகளும் மரபு உளி வகுத்து - குற்றமில்லாத வெவ்வேறுவகைப்பட்ட அறுபத்து நான்குகலைகளையு முறையால் வகுத்து, தழுவி வேண்டினர் தாம்கொள்ள-(தன்னை) விரும்பிவந்தடைந்தவர்கள் கைக்கொள்ள, தக்க ஆறு பகரா (அவரவர்கள் அறிவிற்குத் தக்கபடி பொருள்களைப் புலப்படுத்தி) அழிவு இலாத மறை போன்றன-என்றும் நிலைபெற்ற வேதத்தை ஒத்திருந்தன.

அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கும் மக்களுயிர்க்கு உறுதிபயக்கும்பொருள்களாதலால் பொருள் என்றதற்கு உறுதிப்பொருள்கள் என்றும். உளி மூன்றும் வேற்றுமை யுருபு. இது அவிரோதச் செம்மொழிச் சிலேடையணி. (கூஅ)

இக்கெலாம்புகழ்மதுரையைசசிவபுரமாக்கி
முக்கணாயகனரசுசெய்முறைமைக்கேற்பத்
தக்கதோழனோடளகைமாநகருறைதயக்க
மொக்குமந்நகர்வாணிகருறையுள்சூழ்நியமம்.

(இ-ள்.) முக்கண் நாயகன் - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமான்,திக்கு எல்லாம் புகழ் மதுரையை சிவபுரம் ஆக்கி-எட்டுத்திக்குகளும் புகழாநின்ற மதுரையைச் சிவபுரமாகச்செய்து, அரசு செய் முறைமைக்கு ஏற்ப - அரசியல் செய்த முறைமைக்குப் பொருந்த, தக்க தோழனோடு அளகை மாநகர் உறைதயக்கம் - அவ்விறைவனுக்குத் தகுதியான குபேரனாகிய தோழனோடு அளகைமாநகரம் அம்மதுரையின் அருகில் வந்திருக்குந் தோற்றத்தை, அந்நகர் வாணிகர் உறையுள் சூழ் நியமம் ஒக்கும் - அம்மதுரை நகரில் வணிகருறைவிடத்தைச் சூழ்ந்த கடைவீதிகள் ஒத்துத் தோன்றும்.

சிவபெருமான் சவுந்தரபாண்டியனாய் அரசியல்செய்தகாலத்து அம்மதுரை சிவபுரமெனப் பேர்பெற்றதென்பார். மதுரையைச் சிவபுரமாக்கி எனவும், தான் வந்து அரசியல் செய்தகாலத்துத் தனதுதோழனோடு அவனது நகரமும் வந்திருந்ததென்பார். அந்நகர் வாணிகருறையுள் சூழ் நியமம் அளகைமாநகருறைதயக்கமொக்குமெனவுங் கூறினர். சிவபுரத்திற்கும் அளகைநகருக்குஞ் சம்பந்தத்தைக் கூறுதலால் தகுதியணி. (கூகூ)

மன்னவர்வீதி.

ஒற்றையாழியானுலகிருளொதுக்குமாபோலச்
செற்றநேமியாற்கலியிருடின்றுகோலோச்சி
மற்றடம்புயவலியினன்மாறடுசெற்றக்
கொற்றமன்னவர்விழுக்குடிக்கோமறுகொப்பாம்

(இ-ள்.) ஒற்றை ஆழியான் உலகு இருள் ஒதுக்கும் ஆறுபோல - ஒருருள் பூண்ட தேரையுடைய சூரியன் உலகிலுள்ள புறவிருளை யோட்டும்வகைபோல, செற்றம் சேமியால் கலி இருள் தின்று கோல் ஓச்சி - (தீயோரிடத்துக்) கோபத்தையுடைய ஆக்கினாசக்கரத்தினால் (தமது குடைநிழலின்கீழ் வாழும் குடிகளிடத்துள்ள) துன்பமாகிய இருளை யொழித்து (மநுநூலின்படி) முறைநடாத்தி, மல் தடம் புய வலியினால் மாறு அடு செற்றம் கொற்றம் - மற்போர்புரியும் பெரிய தோள்வலிமையினால் பகைவரைக் கொல்லுங்கோபத்தையும் வெற்றியையுமுடைய, மன்னவர் விழுக்குடி கோமறுகு உரைப்பாம் - அரசர்களுடைய மேம்பட்டகுடியிலுள்ளோர் வசிக்கும் இராஜவீதியின் தன்மையைச் சொல்லுகின்றோம்.

கோல் தன்போலச் செவ்விதாக்கும் முறைமைக்காதலால் உவமையாகுபெயர். தம்மாலும் தமது பரிசனத்தாலும் கள்வராலும் பிறவுயிர்களாலும் குடிகளுக்கு வருந் துன்பத்தை அரசர்கள் ஒழிக்கவேண்டுதலால், செற்றசேமியால் கலியிருடின்று எனவும், அத்துன்பங்களினும் பெருந்துன்பம் விளைப்பவர் பகைவராதலால் மாறடுசெற்றமெனவுங் கூறினார். பெரியபுராணத்தில்.

"மாநிலங்காவலனாவான் மன்னுயிர்காக்குங்காலைத்
தானதனுக்கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ." எனவருதல்காண்க. (௭௦)

தரங்கவேலைகடம்மையே தாளுறப்பிணித்துத்
துரங்கமாவெனத்தொகுத்த மந்துரைபலவருவி
யிரங்குமோரறிவுயிர்வரையாவையும்பெயர்த்து
மரங்கொல்யானைபோற்பிணித்தகூடம்பலமன்னோ.

(இ-ள்.) தரங்கம் வேலைகளை தம்மையே தாள் உற பிணித்து துரங்கம் மா என தொகுத்த மந்துரை பல - அலைகளையுடைய ஏழுசமுத்திரங்களையும் கால்களிற் பொருந்தக் கட்டிக் குதிரைகள்போலக் கூட்டங் கூட்டமாகத் தொகுத்திருக்கிற இலாயங்கள் பலவுள்ளன, அருவி இரங்கும் ஓர் அறிவுயிர் வரை யாவையும் பெயர்த்து மரம் கொல் யானைபோல் பிணித்த கூடம் பல - அருவிகள் ஒலிக்கும் ஓரறிவுயிர்களாகிய மலைகள் எவற்றையும் அடியோடு பேர்த்துக் கட்டுத்தறியை முறிக்கும் யானைபோலக் கட்டிய யானைக்கூடங்கள் பல உள்ளன.

அலைகளைக் குதிரைகளாகவும் குதிரையின்பரப்பைக் கடல்களாகவும் உருவகஞ்செய்து குதிரைகளைப்போல எனவும், மதத்தை யருவியாகவும், மலைகளை யானைகளாகவும் உருவகஞ்செய்து யானைபோலெனவுங் கூறுதல் உவமஉருவகவணி. வேலைகளென்றமையால் ஏழுசமுத்திரங்களும் வெவ்வேறு நிறம்பெற்றிருத்தல்போல வெவ்வேறு நிறம்பெற்ற குதிரைகள் எனக்கொள்க. (௭௧)

மழுக்கள்வச்சிரங்கார்முகம்வாளிமுக்குடுமிக்
கழுக்கள்சக்கரமுடம்பிடிகப்பணநாஞ்சி
லெழுக்களுந்தகம்பலகைதண்டிவைமுதல்படையின்
குழுக்களோடிகல்விந்தைவாழ்கூடமும்பலவால்.

(இ-ள்.) மழுக்கள் வச்சிரம் கார்முகம் வாளி - மழுவாயுதங்களும் வச்சிராயுதங்களும் வில்லுகளும் பாணங்களும், முக்குடுமி கழுக்கள் சக்கரம் உடம்பிடி [illegible]

பணம் நாஞ்சில் - மூன்று தலைகளையுடைய சூலாயுதங்களும் சக்கரங்களும் வேல்க ளும் கைவேல்களும் கலப்பைகளும், எழுக்கள் நாந்தகம் பலகை தண்டு - கணைதடி களும் வாளாயுதங்களும் கேடகங்களும் தண்டாயுதங்களுமாகிய, இவை முதல் படையின் குழுக்களோடு இகல் விந்தை வாழ் கூடமும் பல - இவை முதலிய ஆயு தக்கூட்டங்களோடு போர்செய்யுந் துர்க்கை வாழும் ஆயுதசாலைகளும் (அரசர்வீதி களிற்) பலவுள்ளன.

இவை போர்செய்தற்குரிய கருவிகளாதலால் இகல் எனவும், துர்க்கையின் தானம் ஆயுதசாலைகளாதலால் விந்தைவாழ் கூடமெனவுங் கூறினர். (எ௨)

> தொளையகல்லைமாலெனக்கொண்டுசுழற்றியுஞ்செந்து
> ளளையும்யானைபோற்பாய்ந்துமல்லாற்றியுமாற்றல்
> விளையவாளொடுகேடகம்வீசியும்வென்றி
> யிளையராடமர்பயில்வன வெண்ணிலாககூடம்.

(இ-ள்.) தொளைய கல்லை - தொளையையுடைய கல்லை, மால் என கொண்டு - திருமால் கோவர்த்தனகிரியைக் கையிலேந்தியதுபோலக் கையிலேந்தி, சுழற்றியும் - அதனைச் சக்கரஞ் சுழற்றுவதுபோலச் சுழற்றியும், செந்துள் அளையும் யானைபோல் பாய்ந்து மல் ஆற்றியும் - செந்தூளிற் புரண்டு கலந்த யானைகளைப்போலச் செந்நில த்திற் பாய்ந்து மற்போர்செய்தும, ஆற்றல்விளைய வாள கேடகம வீசியும் - வலிமை விர்த்தியாக வாளையும் கேடகத்தையும் பற்றி யொருவர்மேலொருவர்வீசியும், வென் றி இளையர் ஆடு அமர் பயில்வன எண் இலாத கூடம் - வெற்றியையுடைய இளைஞர் கள் போர்த்தொழில் பயிலும் இடங்களாகிய அளவில்லாத கூடங்கள் பல வுள்ளன.

பயில்வன என்னும் வினைமுற்று இடப்பொருண்மே னின்று பெயராயிற்று. அமர் பயில்வன எண்ணிலாக்கூடம பொருட்பெயரை விசேடித்து நின்ற இருபெய ரொட்டுப் பண்புததொகை. இது தொக்குநின்ற பல வென்னும் பயனிலையைக் கொ ண்டுமுடிந்ததாகக்கொள்க. பயில்வன என்னும் வினைமுற்றைப் பெயரொச்சமாக்கிப் பயிலு மெண்ணிலாக்கூடம் எனக்கொள்ளலும் ஒன்று. (எ௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

> தேசவிர்நீலமாடஞ்செம்மணிச்சென்னிமாடங்
> காசறுகனகமாடஞ்சந்திரகாந்தமாட
> மாசறவிளங்குமின்னமாடநீண்மாலைகூடற்
> பாசிழைமடந்தைபூண்டபன்மணிக்கோவையன்ன.

(இ-ள்.) தேசு அவிர் நீலம் மாடம் செம்மணி சென்னிமாடம் - ஒளிவிளங்கும் நீலரத்தினத்தாற் கட்டிய வீடுகளும் செவந்த இரத்தினங்களாற்கட்டிய சிகரங்களை யுடைய வீடுகளும் [illegible] அறு கனகம் மாடம் சந்திரகாந்த மாடம் மாசு அற விளங்கு ம் - குற்றமற்ற பொ[illegible] வீடுகளும் சந்திரகாந்தக் கற்களாற் கட்டிய வீடுக ளும் குற்றமற விளங்க[illegible]ம், இன்ன மாடம் நீள் மாலை - இவ்வீடுகளின் நீண்ட வரிசைகள், கூடல் பாசு இழை மடந்தை பூண்ட பன்மணி கோவை அன்ன - மது ரைநகரமென்னும் பசும்பொன்னாற் செய்த ஆபரணத்தை யணிந்த பெண்ணானவள் அணிந்த பலரத்தினங்கள் கோத்த கோவையையொத்திருந்தன.

நீலமாட முதலாகிய மாடங்கள் ஒன்றன்பின் ஒன்றிருத்தலால் பன்மணிக் கோவை யன்ன என்றார். இன்ன சுட்டுத்திரிபு. (எ௪)

விளையகல்கதுப்பினல்லார்விங்கிளங்கொங்கைபோழ்ந்த
வளையகன்மார்பமன்றிவடுப்படார்தமக்கன்பில்லா
ருளையகன்மானவாற்றலொழுகுவார்பலகையொள்வாட்
களையகல்விஞ்சைவீரர்கணம்பயில்காட்சித்தெங்கும்.

(இ-ள்.) எங்கும் - எவ்விடத்தும் அவ்வரசர்வீதி, விரை அகல் கதுப்பின் நல்லார் வீங்கு இளம் கொங்கை போழ்ந்த வளை அகல் மார்பம் அன்றி வடுப்படார் - வாசமிக்க கூந்தலையுடைய பெண்கள் பருத்த இளமைதங்கிய தனங்கள் பிளந்த மலைபோலப் பரந்த மார்பத்தில் அல்லவடுக்கொன்றிப் பகைவர் ஆயுதங்களால் வடுப்படாதவர்களும், தமக்கு அன்பில்லார் - தம்முயிர்மேல் அன்பில்லாதவர்களும், உளையகல் மான ஆற்றல் ஒழுகுவார் - புகழ்மிக்கமான வழியில் நடப்பவருமாகிய, பலகை ஒள் வாள் களை அகல் விஞ்சை வீரர் கணம் பயில் காட்சித்து - கேடகத்தையும் ஒள்ளிய வாளையும்பற்றி வீசும் வரம்பிகந்த வித்தையில் வல்ல வீரர்கூட்டம்பயிலும் காட்சியையுடையது.

சுத்தவீரர்களுக்கு வடுப்படல் முன்பன்றிப் பின்பில்லாமையால் மார்பமன்றி வடுப்படார் என்றார். கம்பராமாயணம் - ஆரணியகாண்டம் - கரன் வதைப்படலத்தில்.

"செம்புகாட்டியகண்ணிணைபாலெனத்தெளிந்தீர்
வெம்புகாட்டிடைநுழைதொறும்வெரிநறப்பாய்ந்த
கொம்புகாட்டுதிரோதடமார்பிடைக்குளித்த
அம்புகாட்டுதிரோநுலமங்கையர்க்கம்மா" என்னுஞ் செய்யுளானுணர்க.

தாமும் உயிரும் வேறல்லாமையால், தமக்கு அன்பில்லார் என்றார் - கு - உருபுமயக்கம். சுத்தவீரர்கள் மார்பிலுள்ள வடுக்களைத் தமக்குரிய மகளிர் கொங்கையின் வடுக்களன்றி ஏனைய வாயுதவடுக்களன்றெனக் கூறியது ஒழித்துக்காட்டணி - இதனை வடநூலார் [illegible]பரிசங்கியாலங்காரம் என்பர். (எரு)

மின்னைவாளென்னவீசிவிங்குகார்தம்மிற்போர்மூண்
டென்னவான்மருப்புநீட்டியெதிரெதிர்புதையக்குத்தி
யன்னவாயென்னவாய்விட்டதுவெனச்செந்நீர்சோரப்
பொன்னவாமகன்றமார்பர்பொருகளிறூட்டுவார்கள்.

(இ-ள்.) விங்குகார் மின்னை வாள் என்ன வீசி தம்மில் போர்மூண்டால் என்ன - சூல்முதிர்ந்த மேகங்கள் மின்னல்களை வாள்கள்போல வீசித் தம்முள்போர்செய்தாற்போல, பொருகளிறு வான்மருப்பு எதிர் எதிர் நீட்டி புதையக்குத்தி - போர்செய்யும் யானைகள் பெரியதந்தங்களால் தம்முள் எதிரெதிரேநீட்டி உடம்பிற் புதைபடக்குத்தி, அன்னவான் என்ன வாய் விட்டு - அந்தமேகங்கள் முழங்குவதுபோல முழங்கி, அது என செந்நீர் சோர - அம்மேகங்கள்பொழி[illegible]தாரைகள்போல உதிரத்தாரைகள்பொழிய, பொன் அவாம் அகன்ற மார்[illegible]வார்கள் - திருமகள்விரும்பும் பரந்தமார்பையுடைய வீரர்கள் அவற்றை[illegible]புரிவிப்பார்கள்.

அன்ன சுட்டுத்திரிபு. (எசு)

தூண்டுவாருளமுந்தங்கள்பின்னிடத்துவக்குண்டுர்த்துத்
தாண்டுமாறெற்றையாழித்தேரினுந்தள்ளித்துள்ளப்
பாண்டில்வாய்ப்பசும்பொன்றேயப்பார்மகண்முதுகுகீண்டு
சேண்டிசைபோய்மடங்கச்செல்வத்தேர்நடத்துவார்கள்.

(இ-ள்.) தூண்டுவார் உளமும் தங்கள்பின்னிட துவக்குண்டு ஈர்த்து தாண்டுமான்-செலுத்தும் பாகருடைய மனவேகமுந் தங்கள்வேகத்துக்குப் பிற்பட்டொழிய நுகத்திற்கட்டுப்பட்டு இழுத்துச்செல்லும் குதிரைகள், ஒற்றை ஆழி தேரினும் தள்ளி துள்ள-சூரியனுடைய ஒருருள்பூண்ட தேரிற்பூட்டிய குதிரைகளைப்பார்க்கிலும் விரைந்து துள்ளவும், பாணடில்வாய் பசுமபொன் தேய-உருளிற்பொருந்திய பொற்கட்டுத்தேயவும், பார்மகள் முதுகு கீண்டு சேண் திசை போய் மடங்க-நிலமகள் முதுகுகிழிபடத் திக்கின் அந்தமட்டுஞ்சென்று திரும்பவும், செல்வம் தேர் நடத்துவார்கள்-எல்லாச்சிறப்பும்வாய்ந்ததேர்களை (ஒருபால்)அரசர்கள் செலுத்துவார்கள்.

சேண் தூரமாகையால் திசையினந்தமென்றும். தேர்குதிரைகளைவிடாதுநிற்றலின் விடாத ஆகுபெயர். கீண்டு செயவெனெச்சத்திரிபு. (எஎ)

மைந்தர்தந்நெருக்கிற்சிந்துகலவையுமகளிர்கொங்கைச்
சந்தமுங்கூந்தல்சோர்ந்ததாமமுஞ்சிவிறிவீசுஞ
சிந்துரப்பொடியுநாறத்தேனொடுமெழுந்துசெந்தூ
ளந்தரவயிறுதூர்ப்பவடுபரிநடத்துவார்கள்.

(இ-ள்.) மைந்தர்தம் நெருக்கில் சிந்து கலவையும் - (ஒதுக்கிடம்பெறாது) நெருங்கிய ஆடவர்களது நெருக்கத்திறசிந்திய கூட்டுவாக்கங்களும், மகளிர் கொங்கை சந்தமும் கூந்தல் சோர்ந்ததாமமும் - பெணகளது கொங்கையினின்றும் புலர்ந்துசிநதிய சந்தனமும் அவரது கூந்தலினின்று சோர்ந்தமாலையின்மகரந்தங்களும், சிவிறிவீசும் சிந்துரப்பொடியும - துருத்தியால் நீரொடுகலந்துவீசிய சிந்தூரப்பொடிகளும்ஆகிய, செந்தூள் தேனொடும நாற எழுந்து-செந்தூளகள் தேனொடுங்கமழ மேலெழுந்து, அந்தரம் வயிறுதூர்ப்ப அடுபரி நடத்துவார்கள - ஆகாயத்தின்வயிற்றை நிரம்பத்தூர்க்கும்படி பகைவரைக்கொல்லுங் குதிரைகளை இளைஞர்கள் நடத்துவார்கள்.

அரசர்வீதிகளிலுள்ள புழுதிகள் கலவைமுதலியனவெனபார- கலவைமுதலியனவற்றைச் செநதூள் என்றார், மாலை தன்பொருளின்வேறல்லாத பொருளாகிய மகரந்தத்தின்மேனிறறலால விடாத ஆகுபெயர். (எஅ)

தம்முயிர்க்கிரங்காராகித்தருக்கொடுமானமீர்ப்பத்
தெம்முனையெதிர்ந்தாராற்றுஞ்செருவெனக்குருதிசெங்கேழ்க்
கொய்ம்மலர்க்குடுமிசசேவல்கோழிளந்தகர்போர்மூட்டி
வெம்முனைநோக்கிநிற்பார்வேறவற்றூறுநோக்கார்.

(இ-ள்.) தம் உயிர்க்கு இரங்கார் ஆகி - தமது உயிர்மேல் இரக்கமிலராகி, தருக்கு ஒடு மானம் ஈர்ப்ப - வீரச்செருக்கோடு மானமும் நின்றுதள்ள, தெவ் முனை எதிர்ந்தார் [illegible] செருவென - பகைவர்செய்யும் போரிலெதிர்ந்த வீரர்கள் செய்யும்போர்போல, [illegible] குருதி செம் கேழ் மலர் குடுமி சேவல் - கொய்த உதிரம்போலும் செந்நிற[illegible]ய்ந்த பூங்கொத்துப்போன்ற சூட்டையையுடைய சேவற்கோழிகளையும், கோழ் இளம் தகர் - கொழுமையும் இளமையுமுடைய ஆட்டுக்கடாக்களையும், போர் மூட்டி - சண்டைசெய்யப்பொருத்தி, அவற்று ஊறும் வேறும் நோக்கார்-அச்சண்டையால் அவைகளுக்கு விளையும் இடையூற்றையும் உயிர்ச்சேதத்தையும் நோக்காமல், வெம்முனை நோக்கிநிற்பார் - (அவைகள்செய்யும்) கொடியபோர்த்தொழில்களை (இளைஞர்) பார்த்து நிற்பார்கள்.

போர்பெறுதவிடத்து வாடிநின்று பேரர்பெற்றவழி, யாவர் தப்பிலும் இல்லாராதலால் தம்முயிர்க்கிரங்காராகி எனவும், போர்பெறினும் தமது முகத்திலும் மார்பிலும் புண்படாத நாளைப் போர்பெறுதநாளில் வைத்தெண்ணுதல் வீரத்தின்மிகுதியாதலால் செருக்கெனவும், செஞ்சோற்றுக்கடன் கழித்தற்குத் தாம் கூறின வஞ்சினந்தப்பாமல் சாவவல்லோராதலால் மானமெனவும், அவர்போல இச்சேவல்களுந் தகர்களும் தம்முயிர்க்கிரங்காமலும் செருக்கும் மானமும் மேற்கொண்டமையால் ஊறும் வேறும் எனவுங்கூறினர்.

செருக்கு-மறமிகுதி. வேறு-பெரியகாயங்களுக்கு அயலாயுள்ள சாவு.(சு)

பெண்முத்தமனையபேதைச்சிறுமியர்பெருநீர்வையை
வெண்முத்தமிழைத்தசிற்றில்சிதைபடவெகுண்டுநோக்கிக்
கண்முத்தஞ்சிதறசிந்துங்கதிர்முத்தமாலைதட்பத்
தெண்முத்தினகைத்துச்செல்வச்சிறாருகடேருருட்டுவார்கள்.

(இ-ள்.) பெண்முத்தம அனையபேதை சிறுமியர் - கன்னிப்பெண்களுள் முத்தினையொத்த பேதைப்பருவத்தையுடைய அரசச்சிறுமியர்கள், பெருநீர்வையை வெண்முத்தம் இழைத்த சிறறில் சிதைபட-பெரிய நீர்மயமாகிய வையையிற்றோன்றிய வெள்ளியமுத்துகளால் கோலிய சிறுவீடுகளைச்சிதைத்தலால், வெகுண்டுநோக்கி கண்முத்தம் சிதற சிந்தும் கதிர்முத்த மாலைதட்ப - அவர்கள் கோபித்துப்பார்த்துக்கண்கள் முத்துப்போனறநீர்த்துளிகளைச்சிந்த அறுத்தெறிய முத்துமாலைகள் இடையேவிழுந்து தமது சிறுதேரச்செலவைத்தடைசெய்ய, செல்வச்சிறார்கள்-பெருஞ்செல்வத்தையும் பாலபருவத்தையுமுடைய அரசச்சிறுவர்கள் ( அதனைநோக்கி ) தெண்முத்தினகைத்து-தெள்ளியமுத்தைப்போலப் புன்னகையரும்பி, தேர் உருட்டுவார்கள்-சிறு தேரையுருட்டிச் செலுத்துவார்கள்.

சிறுமியர்கோலிய சிற்றிலினையழித்த சிறுவர்கள் சிறுதேருருட்டிச்செல்ல அச்சிறுமியர் கோபித்தறுத்தெறிந்த முத்துமாலை இடையேவிழுந்து தடைசெய்ததைநோக்கிப் புன்னகையரும்பிமீளவுஞ்செலுத்துவார்களென இதனாற்கூறப்பட்டது.

பெண்களுள் சிறந்தவடிவினரென்பதுதோன்றப் பெண்முத்தமனைய எனவும், அவர்பேதைப்பருவத்தினரென்பது தோன்றப் பேதைச்சிறுமியர் எனவும், அவர்கள் அரசச்சிறுமியர்களென்பதும் விளையாட்டு இஃதென்பதுந்தோன்ற வெண்முத்தமிழைத்த சிற்றில் எனவும், பருவத்தின் அறியாமை மிகுதிதோன்ற வெகுண்டுநோக்கிக் கண்முத்தஞ்சிந்தும் கதிர்முத்தமாலை எனவும், அரசர்கள் சிறுவரென்பதும் பாலபருவத்தை யுடையவரென்பதுந்தோன்றச் செல்வச்சிறார்கள் எனவும்; அப்பருவத்திற்குரிய அறியாமைமிகுதிதோன்றத் தெண்முத்தினகைத்துத் தேருருட்டுவார்கள் எனவுங்கூறினர். சிறுமியரென்னாது பேதைச்சிறுமியர் எனறமையால் "ஒருமொழியொழிதன்னினங்கொளற்குறித்தே" என்ற சூத்திரத்தால் [illegible]சிறார் என்றும். பெண்களின்பருவங்கள் ஏழாதல்போல ஆடவர்பருவங்க[illegible] பாலன், மீளி, மறவோன், திறலோன், காளை, விடலை, முதுமகன் என [illegible] பெண்கள் பேதைப்பருவத்திற்கும் ஆடவர் பாலபருவத்திறகும் விளையாட்டிவையென்றல். தொ - பொ- புறத்திணையியல். " குழவிமருங்கினுங் கிழவதாகும் " என்றபுறனடைச்சூத்திரத்திற்குக் "குழவியைப்பற்றிக் கடவுள்காக்க எனவும் பாராட்டுமிடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும், வரவுரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும்" என நச்சினியார்க்கினியர் உரையிருத்தல்காண்க. (அ0)

கொடிமுகிறுழாவுமிஞ்சிக்கோநகர்வடகீழ்ஞாங்கர்
முடிமிசைவேம்புநாறமுருகவிழாரும்போந்து
மடிமிசைநாறந்தென்னர்வழிவழியரசுசெய்யு
மிடிமுரசுறங்காவாயிலெழுநிலைமாடக்கோயில்.

(இ-ள்.) முகில் துழாவும் கொடி இஞ்சி கோநகர் வடகீழ் ஞாங்கர்-மேகமண்டலத்தை இடைவிடாது தடவுங்கொடிகளையுடைய மதில்சூழ்ந்த (நகரங்களெல்லாவற்றிற்கும்) அரசாகிய மதுரைநகரத்தின் வடகிழக்குத்திசையின் பக்கத்தில், முடிமிசை வேம்புநாற-தமதுகிரீடத்தின்மேல் வேப்பமலர்மாலைகமழவும், முருகு அவிழ் ஆரும் போந்தும் அடிமிசைநாற-சோழசேராகள் தமது கிரீடத்தினமேலணிந்த வாசமோலடர்ந்த ஆத்திமாலையும் பனம்பூமாலையும் தமதுபாதங்களின் மேற்கமழவும், தென்னர் வழிவழி அரசுசெய்யும் இடிமுரசு உறங்காவாயில் எழுநிலைமாடம் கோயில் - பாண்டியர்கள் பாரம்பரியமாய் அரசியல்செய்துவரும் இடிபோலு முரசொலிகண்படாத எழுநிலைமாடங்களையுடைய கோயிலுள்ளது.

பாண்டியர்மரபிற்கு வேப்பமலர்மாலையுரியதாதலால் முடிமிசைவேம்புநாற எனவும், திறைகொணடிறுக்கவநத சோழசேரர்கள் தமதுமுடிகள்தோய வணங்குதலால் அடிமிசை ஆரும்போந்து நாற எனவும், காடழித்து நாடாக்கிய குலசேகர பாண்டியன் தானிருந்து அரசுசெய்தறகமைநதகோயில் அவன்வழிவநத பாண்டியர்கள் அரசியல்செய்யும் இடம் அதுவாயிருததலின் வழிவழி எனவும், முரசு எனறும் ஒலித்தலால் முரசுறங்கா எனவுங்கூறினா.

உள்ளது-தோன்றுப பயனிலை. முரசுறங்கா என அஃறிணைப்பொருளுக்கு உறங்கா என உயர்திணைததொழில்தந்து கூறியது புனைந்துரை. ஒலிததலை உறஙகாவென்றது குணவணி. (அக)

மறையவர்வீதி.

ஆத்திகருண்டென்றோதுமறமுதல்பொருள்களுனகு
நாத்திகம்பேசும்வஞ்சர்நாவரிகருவியாக
வாததனுரைத்தவேதவளவுகண்டுள்ளந்தேறித்
தீர்த்தராயமுத்தீவேட்குஞ்செல்வர்தம்மிருக்கைசொல்வாம்.

(இ-ள்.) ஆத்திகர் உண்டென்று ஓதும் அறமுதல் பொருள்கள் நான்கும்-ஆத்திகர் உண்டென்று கூறும் அறமுதலிய உறுதிப்பொருள்கள் நான்கினையும், நாத்திகம் பேசும் வஞ்சர் நா அரிகருவியாக - இல்லையென்றுகூறும் உலகாயதன்முதலிய வஞ்சகருடைய நாக்களை அரியுங்கருவிகளாக, ஆத்தனால் உரைத்த வேதம் அளவுகண்டு உள்ளநதேறி தீர்த்தராய் - சிவபெருமானால் உரைத்தருளிய வேதங்களின் எல்லையைக்கண்டு மனந்தெளிந்து பரிசுத்தமுடையவர்களாய், முத்தீவேட்கும் செல்வர்தம் இருக்கை சொல்வாம் - ஆகவனீயமுதலிய முத்தீக்களையும் ஓம்புதலாகிய பெருஞ்செல்வத்தையுடைய அந்தணர்களது இல்லங்களின் பெருமையை இனிக்கூறுவாம்.

முத்தீவேட்குமெனப் பாடங்கூறுவாருமுளர். அது வேட்குமென்பதனோடு பொருந்தாமையறிக.

ஆத்திகராவார் - ஒருவனொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் தோன்றிநின்றழிதல் யாவராலுங் கண்கூடாகக்காணப்படுதலின் அதனை இயக்கும்

(இ-ள்.) முஞ்சிநாண் மருங்கில் மின்ன - முஞ்சிப்புல்லாலாகிய அரைஞாண் இடையில்விளங்கவும், பொன் செய்த முளரிவேய்ந்த குஞ்சி நான்று அசைய-பொன் னாற்செய்ததையொத்த தாமரைமலர் சூடிய சிகை தொங்கியசையவும், தானை சொருக்கு முன்கொய்து தூங்க-வஸ்திரத்தின் சொருக்கானது முன்புறத்திற் கொய்சகமாய்த்தொங்கவும், கலைத்தோல் பஞ்சின் நாண் மார்பும் பலாசக்கோல் கையுந்தாங்கி-மான்றோல்கட்டிய பருத்தியாலியன்ற உடவீதத்தை மார்பிலும் முண்முருக்கந் தண்டைக்கையிலும் ஏந்தி, எஞ்சில் நான்மறைநூல் கற்போர் இடைகளே இல்லம் எல்லாம் - குறைவில்லாத நான்கு வேதங்களையும் ஆறங்கங்களையும் கற்கும் பிரமசாரியர்களிருக்கும் வேதபாடசாலைகளே அந்தணர் வீடுகளெல்லாம்.

முஞ்சி - ஒருவகை நாணற்புல். அந்தணர் மரபிற்குரிய மலர் தாமரையாதலால் பொன்செய்த முளரிவேய்ந்த எனச் சாதியடைதந்து கூறினர். அன்றிப் பிரமசரிய நிலையுடையோர் சிவார்ச்சனைக்குரியராதலால் அர்ச்சித்த தாமரை மலரைச் சூடியதெனலும் ஒன்று. முஞ்சிப்புல் நாணை அரைஞாணாகக்கொள்ளுதலும் மான்றோல் கட்டிய உபவீதத்தையும் முண்முருக்கந்தண்டை ஏந்துதலும் பிரமசரிய நிலையையுடையோர்க்கு விதியாகையால் முஞ்சிநாண்மருங்கில் மின்னப்பஞ்சி னாண்கலைத்தோல் மார்பும் பலாசக்கோல் கையுந்தாங்கி எனக் கூறினர். சூதசங்கிதை - ஞானயோககாண்டம். பிரமசரிய விதியுரைத்த அத்தியாயத்தில்.

> "தேற்றருமுறைநூல்லுபாயனஞ்செய்துகொண்டமறைச்சிறவ
> னாற்றன்மிகவுந்தருபவேதகூத்தியயனமொருவானுய்ப்
> போற்றும்பலாசேகூ விளமேபோதியேயிம்மூவகையுட்
> சாற்றுங்கேசாந்தத்தளவோர் தண்டுதாங்கல்விதியாமால்."

"நகமேர்முஞ்சிமேகலையான் றோறங்குபவீதந்தரித்து" எனவும், அவர்கள் சிவார்ச்சனைக்குரியராதல் ஷெ அத்தியாயத்தில்.

> "குற்றமகன்றமனத்தினனுய்க் கூடாரணநீறுக
> செற்றபாசனையுமையோடு நியாணம்புரிந்தபூவாதி
> மற்றவுபகரணங்களெல்லாம் வாய்ப்பத்தேடியப்பரமன்
> பொற்றபாதமருச்சித்துப் போற்றிவணங்கவேண்டுமால்" எனவும் வருஞ்

செய்யுள்களாலுணர்க. (௮௧)

> தீவினையந்தணாளர்சிறார்பயில்தெய்வவேத
> நாவுருவேறக்கேட்டுக்கிளிகளோநவிலுபவேற்றுப்
> பூவையுட்பயின்றுபுத்தேளுலகுறைபுதுமந்தாரக்
> காவுறைகிளிகட்கெல்லாங்கசடறப்பயிற்றுமன்றே.

(இ-ள்.) தீவினை அந்தணாளர் சிறார் பயில் தெய்வ வேதம் நா உருவேற்றக் கேட்டு கிளிகளோ நவிலும் - முத்தீவளர்க்குந் தொழிலையுடைய மறையவர் சிறுவர்கள் கற்றற்குரிய தெய்வத்தன்மையையுடைய வேதங்களைத் தமது நாவால் உருப்போடுதலைக்கேட்டு அங்குள்ள கிளிகளோ சொல்லாநிற்கும், வேறுபூவையும் பயின்று - அக்கிளிகளுக்கு வேறாயுள்ள நாகணவாய்ப் புட்களுங்கற்று, புத்தேள் உலகு உறை புது மந்தாரக்கா உறை கிளிகட்கு எல்லாம் கசடு அற பயிற்றும் - தேவருலகிற்பொருந்திய அன்றலர்ந்த மலர்களையுடைய மந்தாரச்சோலையில் வசிக்குங் கிளிகளுக்கெல்லாங் குற்றமறக் கற்பிக்கும்.

செங்காவியிற்றோய்த்த ஆடையை யுடையவரும், உயிர்க்கு ஊறு அஞ்சும் நடையி னர் - (நிலவுலகில் வரும்) எறும்புமுதலிய உயிர்களுக்குவரும் இடையூற்றுக்கஞ்சி (பொறுத்தி நடக்கும்) நடையையுடையவரும், அவிச்சைமான எதிகடர் மழுவாஞ் என்ன கோவணம் ஆர்த்த கோலர் - அஞ்ஞானமென்னும் விருட்சத்தெடுத் துண்டு படுத்தும் விளக்கத்தையுடைய மழுவாயுதம்போலக் கோவணங் கொய்துகட்டிய தண்டமுடையவருமாகிய, மறை முடிவு அன்றி தேறு மாதவர் மடங்கள் எங் கும்-உபநிடதங்களையன்றி மற்றொன்றை ஆராய்ந்தறியாத பெருந்தவத்தினையுடைய முனிவர்களது மடங்களே அந்தணர்கள் வீதிகளிலெங்குமுள்ளன. -

மறைமுடிவு என்றது - ஏகமே எனக்கூறும் பிரமம் அத்துவிதமாயிருக்கு மென்றது. அம்முடிவன்றித் தேறுமென்றது - ஏகமே என்ற சொல்லானே பிரமப் பொருள் ஒன்றே எனவும், அங்ஙனம் ஒன்றென்ற கட்டும் பாசபந்தியாகிய ஆன் மா அப்பிரமத்தின் வேறெனவும், அத்துவிதமென்ற சொல்லானே ஒன்றிரண்டெ ன்பதின்றி அந்நியமாய் அகாவுயிரன்றி அக்கரங்களில்லை என்னுமுறைபோல ஒன் றாய் வேறாய் உடனாய் நிற்கும் பிரமப்பொருளன்றி இருகூற்றுப் பிரபஞ்சங்களும் இல்லை எனவும், அவ்வேத மகாவாக்கிய சிரவண மனனங்களால் முறைப்படி யாரா ய்ந்து நிதித்தியாசனத்திற்றெளிந்து சமாதிபராயிருத்தலன்றிப் பரமார்த்தத்தில் ஒன்றென்றும், விவகாரத்தில் இரண்டுபோல்வதென்றும் வாளாமுன்னொடு பின் மலைவு பெறக்கூறும் மாயாவாதிகள் கூற்றுட்படாதவராதலின் மறைமுடிவன்றித் தேறுமாதவர் எனக் கூறினார். (௮௧)

அட்டில்வாய்ப்புகையுமாடத் தகிலெழு புகையும்வேள்வி
விட்டெழுபுகையுமொன்றி விரிசுடர் விழுங்கக்கங்குல்
பட்டதுபலரும்தத்தம் பயில்வினை யிழக்கநங்கை
பட்டவிழ்கடுக்கையான்கண் புதைத்தநாண்மாலுமன்றே

(இ-ள்.) அட்டில் வாய் புகையும் மாடத்து அகில்படு புகையும் வேள்வி விட்டு எழு புகையும் ஒன்றி விரிசுடர் விழுங்க - சமையல் வீட்டிலெழுந்த புகையும் உபரிகைகளில் (பெண்கள் தமது கூந்தலினீரமபுலர்த்த எரித்த) அகிற்கட்டைகளி னின்றெழுந்த புகையும் யாகத்தினின்றெழுந்த புகையும் தம்முட்கலந்து எங்கும் பரந்த வெயிலை விழுங்குதலால், பலரும் தத்தம் பயில்வினை இழக்க கங்குல்பட் டது - யாவரும் தத்தமக்குரிய தொழில்களைக் கைவிட்டிருக்க இருள் பரந்தினம், நங்கை பட்டு அவிழ் கடுக்கையான் கண் புதைத்த நாள் மானும் - பிராட்டியார் வாச மொடு மலர்ந்த கொன்றை மலர்மாலையையணிந்த சிவபிரானுடைய திருக்கண் புதைத்த தினத்தை யொக்கும்.

ஓர் காலத்துத் திருக்கைலையிலுள்ள ஓர் வனமாச்சோலையினடுவில் விளங்கும் ஓர் பொன்மண்டபத்தில் சிவபிரானும் பிராட்டியாரும் எழுந்தருளி யிருக்குங்கால த்து அப்பிராட்டியார் ஓர் திருவிளையாடலைக்கருதி அச்சிவபிரான் பின்வந்து இரண்டு திருக்கண்களையும் புதைக்க, அத்திருக்கண்கள் சூரியசந்திரர்களாதலால் எல்லாவுயிர களும் தத்தமக்குரிய தொழிலைக் கைவிட்டுவருந்த இருளெங்கும் பரக்க அதனை நோக்கி உயிர்கள்மேல் அருள்கூர்ந்து நுதற்கண்திறந்தனர். காந்தபுராணம் - தக்ஷ காண்டம் - ததீசியுத்தரப்படலத்தில்.

"ஈசனையொருஞான்றம்மை யெழில்பெறுகயிலைக்காவிற்
பேசலளாடலுன்னிப பின்வராவிழியிரண்டுந்
தேசுறுகரத்தாற்பொத்தச் செறிதருபுவனம்யாவு
மாசிருள்பரந்ததெல்லா வுயிர்களும்வருந்தல்கொள்ள."

(இ-ள்.) ஈசனைப் பூசைசெய்து இகபரம் அடைவார் எங்கும் - (ஆன்மாக்கள் நியானித்துய்தற்பொருட்டுச் சகளீகரித்த) சிவபெருமானை விதிவழாமற்பூசித்து இகபோகத்தையும் பரபோகத்தையும் அடைபவர்கள் எங்குமுள்ளார், அன்பரை பூசை செய்து எழுபிறப்பு அறுப்பார் எங்கும் - (சிவனுருவேயெனக்கூறும்) அடியாரைப் பூசித்து எழுபிறப்புகளையும் வேரொடுகளையவல்லவர்கள் எங்கும் உள்ளார், ஆகமம் செவி மடுத்து எதிர்வினை தடுப்பார் எங்கும் - ஆகமங்களைக் காதிற்கேட்டு மேல்வரும் ஆகாமியவினையைத் தடுப்பவர்கள் எங்கும் உள்ளார், நாயகன் வடிவுணர்ந்து இருள்மலம் களைவார் எங்கும் - சிவபெருமான் றிருவுருவைச்சிந்தித்து ஆணவமலங்களைப்போக்குவோர் எங்குமுள்ளார்.

ஈசனைப்பூசைசெய்து இகபரமடைவார் என்பதற்கு-சிவதருமோத்தரம் பரமதருமாதியியல். "எனதுதிருவியம்பும்பதத்தர்க இடனிம்மையினுஞ்செய்வன்" என்பதனாலும், அன்பரைப்பூசைசெய்து எழுபிறப்பறுப்பார் என்பதற்குச் சிவஞானசித்தியார்.

"அறிவரியான்றனை யறியலாக்கையாகி யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்தருளாற், செறிதலினாற்றிருவேடஞ் சிவனுருவேயாகுஞ் சிவோகம்பாவிக்குமத்தாற் சிவனுமாவர், குறியதனுலிதையத்தே யரனைக்கூடுங் கொள்கையினாலவனுவர்குறியொடுதாமழியு, நெறியதனுர் சிவமேயாய் நின்றிடுவொன்றேனைசத்தாற் றொழுதெழுமின்பாசத்தான்விடவே." என்பதனாலும்,

ஆகமஞ்செவிமடுத்து எதிர்வினைதடுப்பாரென்பதற்கு வாதவூடத்திற்காண்க.

நாயகன் வடிவுணர்ந்து இருண்மலங்களைவாரென்பதற்கு,

"கண்ட சிவன்றனைக் காட்டியுயிருங்காட்டிக் கண்ணுகிக்காணங்கள் காணுவிற்பன், கொண்டானையுளதிற்கண் டடிகூடிற்பாசங்கூடாது" எனபதனாலுமுணர்க.

உள்ளார-தோன்றுட்பயனிலை (௮௧)

அழிவிலா னுரையாகமமிலக்கமாய்ந்தவற்றுள்
விழுமிதாகியவிதியினுமவிலக்கினுமடியைத்
தழுவுதொண்டர்கண்மைந்தர்களசாதகர்பாசங
கழுவிவீடருள்போதகக்காட்சியர்பலரால்.

(இ-ள்.) அழிவிலான் உரை ஆகமம் இலக்கம் ஆய்ந்து - என்றும் உள்ளனாகிய சிவபெருமானுரைத்தருளிய ஆகமங்களுள் இலட்சம் சுலோகம் ஆராய்ந்து, அவற்றுள் விழுமிது ஆகிய விதியினும் விலக்கினும் - அவைகளுள் மேம்பட்ட விதிகளாலும் விலக்குகளாலும், அடியை தழுவுதொண்டர்கள் மைந்தர்கள் சாதகர் - தமது திருவடியைவிடாது சிந்திக்கும் அடியவர்கள் மைந்தர்கள் சாதகர்களாகிய இவர்களுடைய, பாசம் கழுவி வீடு அருள் போதகக் காட்சியர் பலர் - மலங்களைப்போக்கி மோட்சத்தைத்தந்தருளும் ஆசிரியத் திருக்கோலத்தை யுடையவர்கள் அங்குப் பலரிருக்கின்றார்கள்.

ஆசிரியத்திருக்கோலம் சுந்தரவேடந்தரித்தல். அடியைத்தழுவு தொண்டர்கள்-சரியைவழிநிற்போர். மைந்தர் - கிரியைவழிநிற்போர். சாதகர் - யோகத்தின்வழிநிற்போர். விதி - இன்னவை செய்யவேண்டுமென விதித்தல், விலக்கு - இன்னவை செய்யத்தகாதனவெனவிலக்கல். ஞானாசிரியன் இவ்விரண்டினையும் எடுத்துக்காட்டிப்பாசம்போக்கவேண்டுவோனாதலால் விதியினும் விலக்கினும் பாசங்கழுவி வீடருள் போதகக்காட்சியரெனவும், ஆகமங்கள் - இலட்சம் சுலோகம் ஆராய்தல் உத்தம

தேசிகர்க்குரிய இலக்கணமாதலால் ஆகமம் இலக்கமாய்ந்து எனவுங் கூறினர். இலட்சம் சுலோகம் ஆராய்ந்தவன் உத்தமதேசிகனென்றது செவுண்ணியத்தெளிவு.

"ஆகமத்திலிருபத்தையாயிர சுத்தலோகம் தறிந்ததேசிகன் கட்டனேம்பதினுயிரந்தான், மோகமறவாராய்ந்த தேசிகன் மத்திமனே முறையினுலோரிலக்கமுமென்றவனுத்தமனே யோகையலேசனுமன் காமிகமுன்னுக வியம்பியமிருபத்தெட்டாகமத்துமிலதே, பாகமிகுசாரசாரம்மெனவோரியலைப படித்துணர்தோனியல்கவே லவரம்படித்துணர் பண்டிதனே" என்பதனுலும், தொண்டாகன் மைந்தர்கள் சாதகா இவர்கள் சரியை கிரியை யோகத்தை வழிந்ப்பாரென்றது. இப்புராணம் வாதவூரடிகளுக் குபதேசித்தபடலத்தில்.

> "சரியைவல்லமெய்த்தொண்டருஞ்சற்புவிக்கினிய
> கிரியைசெய்யுமைந்தருமினிச்சிவயோகந்
> தெரியுஞ்சாதகக்கேளிரும்." என்பதனுலுணர்க. (க0)

> மறைகளாகமம்பொதுச்சிறப்பெனச்சிவனருத்து
> முறையினேதியவிதிவிலக்குரைகளுமுடிவி
> லறையும்வீடுமொன்றிரண்டெனும்பிணக்கறவமைந்த
> குறைவிலாச்சிவயோகியர்குழாங்களும்பலவால.

(இ-ள்.) சிவன் மறைகள் ஆகமம் பொது சிறப்பு என வருத்து - சிவபெருமான் வேதங்களைப் பொது எனவும் ஆகமங்களைச் சிறப்பெனவும் வகுத்தருளி, முறையின் ஓதிய விதி விலக்கு உரைகளும் - அவற்றுள் முறையாகக்கூறியருளிய விதிவிலக்குவாக்கியங்களும், முடிவில் அறையும் வீடும் - அவற்றின் முடிவிற்கூறிய மோட்சமும், ஒன்று இரண்டு என்னும் பிணக்கு அற அமைந்த - ஒன்றென்னுந்தன்மையும் இரண்டென்னுந்தன்மையுமாகிய மாறுபாடு நீங்க திருவருளானுணர்ந்தமைதி பெற்ற, குறைவு இலா சிவயோகியர் குழாங்களும் பல - நிறைந்த சிவயோகத்தையுடையோர் கூட்டங்களும் அங்குப் பலவுள்ளன.

பலபட வுணர்த்திடுஞ்செய்யுஞ் சூத்திரம்போல் நிற்றலின் வேதம் பொது எனவும், அவ்வாறன்றி உண்மைப்பொருளைத் தெள்ளிதி னுணர்த்திடுஞ்செய்யும் பாடியம்போல்நிற்றலின் ஆகமம் சிறப்பெனவும், இவற்றை இந்திரன் முதலியோர் பதங்களில் விருப்புடையோர்களுய்தற் பொருட்டும், சத்திநிபாதருய்தற் பொருட்டும் சிவபெருமான் வகுத்தருளினமையால் வகுத்து எனவும், வேதத்தில் அல்லே அல்லேயெனக்கூறும் வாக்கியத்தில எஞ்சிநிற்கும் ஆமென்னும் விதியுரைகளையும், அல்லே அல்லே எனக்கூறும் விலக்குரைகளையும், சிவாகமங்களில் பாதமுத்திகாலத்தும் அநாதிநித்தியமாயுள்ள முப்பொருளும் உண்டெனக்கொள்ளும் விதியுரைகளையும், இவற்றின்வேருய்ப் பிறர்கூறும் பக்ஷ விலக்கும் விலக்குரைகளையும் முறையாகக்கூறினமையால் முறையினேதிய எனவும், வேதாந்தப்பொருளாகிய தத்துவமசிவாக்கியத்தில் சித்தாந்தப்பொருளையும் தெரம்றனக்காணக்கிடத்தலின் வீடுபேற்றின்கண் ஒன்றென்றும் இரண்டென்றும் விகற்பித்துக்கூற வழக்கின்மையால் பிணக்கற வமைந்த எனவுங்கூறினர். திருக்களிற்றுப்படியார்.

> "அதுவிதுவென்றமலனேயென்ற
> மதுநீயேயாகின்றுயென்றும்-அதுவானே
> னென்றத்தன்மையுணர்த்தோரெல்லாமிரண்டாக
> வொன்றாகச்சொல்வரோவற்று" என்பதனுலுணர்க. (கக)

குழலுந் தும்புரு நாரதர் பாடலுங் குனித்துச்
சுழலுங் கொம்பனா ராடன்மூவர்வாய்த் துதியும்
விழவின் செல்வமுஞ் சுருதியுந் திசையெலாம் விழுங்கு
முழவுங் கண்டுயி லாததுமுன்னவன் கோயில்.

(இ-ள்.) குழலும் - வேய்ங்குழலினோசையும், தும்புரு நாரதர்பாடலும் - தும்புரு நாரதர்களின்பாடும் இசைப்பாட்டும், கொம்பனார் குனித்துச்சுழலும் ஆடலும் - பூங்கொம்பையொத்த பெண்கள்சுழன்றாடும் நடனமும், மூவர்வாய்த் துதியும் - திருஞானசம்பந்தர்முதலிய மூவர்முதலிகள் திருவாய்மலர்ந்த தமிழ்வேதங்களின் ஓசையும், விழவின் செல்வமும் - மகோற்சவத்தின் சிறப்பும், சுருதியும் - நான்குவேதங்களின் ஓசையும், திசை எல்லாம் விழுங்கும் முழவும் - எட்டுத்திக்கையுந் தன்வசப்படுத்தும் முழவத்தினோசையும், கண் துயிலாதது முன்னவன் கோயில் - இரவும்பகலும் இடைவிடா தொலித்துக்கொண்டிருக்கும் இடமானது சொக்கலிங்கவீதியினருகிருக்கும் சிவபெருமானெழுந்தருளியிருக்குந் திருக்கோயிலாம்.

குனித்தல்-உடம்பைவளைத்தல். கண்டுயிலாதது என்னும் வினைமுற்று இடப்பொருளின்மேனின்ற பெயராயிற்று. தன்வசப்படுத்துமென்றதை விழுங்குமென்றார். என்று மொலிப்பதைக்கண் டுயிலாதது என முக்கியப்பொருளின் வினையை ஒப்புடைப்பொருளின்மேல்தந்து கூறியது குணவணி. (கய)

மடங்கலின் றிவிண் பிளந்துமேல் வளர்ந்துவெள் ளேற்று
விடங்கர் வெள்ளிமன் றிமைத்தெழு வெண்சுடர் நீட்ட
முடங்கல்வெண் பிறைக் கண்ணியான் கைலைமூ வுலகு
மொடுங்குகின்றநா ளோங்கிய வோக்கமே யொக்கும்.

(இ-ள்.) வெள்ஏறு விடங்கர் வெள்ளிமன்று இமைத்து - வெள்ளியதரும விடையைநடத்தும் பேரழகராகிய சிவபெருமானார் நடனஞ்செய்தருளும் வெள்ளியம்பலத்தில் விளங்கி, மடங்கல் இன்றி விண் பிளந்து மேல் வளர்ந்து எழு வெண் சுடர் நீட்டம் - தடைபட்டு மடங்காது ஆகாயமுகட்டைப்பிளந்து அதன்மேலுஞ் சென்றெழுந்த வெள்ளியகிரணத்தின் நீளம், முடங்கல் வெண் பிறை கண்ணியான் கைலை - முடங்கிய வெள்ளிய பிறையாலையணிந்த சோமசுந்தரக்கடவுள் வீற்றிருக்குங்கைலையானது, மூவுலகும் ஒடுங்குகின்ற நாள் ஓங்கிய ஓக்கமே ஒக்கும் - சுவர்க்கமத்திய பாதலமென்னும் மூன்றுலகங்களும் அழிகின்றகாலத்து மேன்மேலும் வளர்ந்தோங்கும் ஓக்கத்தை ஒத்துத்தோன்றும்.

எல்லாவுலகங்களும் நிலைகெட்டழியும் பேரூழிக்காலத்துக் கைலைமலை சிறந்துவளர்தலின் கைலைமூவுலகும் ஒடுங்குகின்றநாள் ஓங்கிய ஓக்கமேயொக்கும் என்றார். "ஊழிதோறூழிமுற்றும் உயர்பொன்னொடிந்தானமலையே" என ஆளுடையநம்பிகளருளிய திருப்பாசுரத்தாலறிக. (கக)

சுரந்துதேன் றுளித்தலர்களுஞ் சொரிந்துவண் டரற்ற
நிரந்துசுந்தரற் கொருசிறை நின்றபூங் கடம்பு
பரந்தகட்புல னுகப்பலமலர்கடேய்ப் பழிச்சி
யிரந்துநின் றருச்சனை செயுமிந்திரனிகரும்.

(இ-ள்.) தேன் சுரந்து துளித்து அலர்களும் சொரிந்து வண்டு அரற்ற நிரந்து - தேன் ஊற்றெடுத்துத்துளித்து மலர்களையுஞ் சொரிந்து வண்டுகள் இசைபாட

கைம வந்த பால்வழுவமைதியன்று. கடல் முதலிய பொருள்களை அகழ்முதலிய பொருள்களின் விஷய சம்பந்தத்தினால் அவையல்லவெனத் தெரிந்திருந்தும் அப்பொருள்களாக அத்தியவசயித்தலால் தற்குறிப்பணி. (கசு)

வேதவந்தமுந்துளக்கறமெய்ப்பொருள்விளங்கு
நாதவந்தமுங்கடந்ததோர்நடுநிலைப்பொருளின்
பாதவந்தனைப்பத்தியின்பாலராய்ப்பயில்வோர
மாதவந்தருபயனெனத்தழைத்தபல்வளனும்.

(இ-ள்.) வேதம் அந்தமும்-வேதங்களின் முடிவையும், துளக்கு அற மெய்ப்பொருள் விளங்கும் நாதம் அந்தமும்-கலக்கமற உண்மைப்பொருள் விளங்கும் நாத தத்துவத்தின் முடிவையும், கடந்தது ஓர் நடுநிலை பொருளின்-கடந்த வொப்பில்லாத நடுநிலைப்பொருளாகிய பரமசிவத்தின், பாதம் வந்தனை பத்தியின் பாலர் ஆய் பயில்வோர் - திருவடிக்கீழ்வழிபட்டொழுகும் பத்தியின் பகுதியையுடையவர்களாய்ப் பயிலும் ஒழுக்கத்தை யுடையோருடைய, மாதவம் தரு பயன் என - பெரிய தவம் (தன்னைத்தேடியவர்க்குக்) கொடுக்கும் (என்றும் அழியாத) பயன்போல, பல்வளனும் தழைத்த - பலவளங்களும் (மதுரையில்) என்றும் நிலைபெற்றுள்ளன.

உபநிடதங்களை - வேத வந்தமெனவும், தத்துவவிகற்பங்களை விளக்கஞ்செய்யும் விந்துதத்துவத்தின் செயலறுதியை - துளக்கற எனவும், தத்துவநீக்கத்தில் தலைப்பட்டு விளங்கும் உண்மைப்பொருளாகிய அது நானென்று சடுதியிற்றோன்றற் கிடஞ்செய்துநிற்கும் அறிவாகிய நாததத்துவத்தின முடிவை - நாதவந்தமெனவும், இவற்றிற்கு மேற்பட்டு நிற்றலால் கடந்ததெனவும், கீழ்நாடற்குரிய பாசத்தையும் மேல் நான் பிரமமென நாடற்குரிய பசுவையும் வினைவழி கூட்டவும் பாகம் வந்துழி நீக்கவும் செய்தருளும் ஊனநடன ஞானநடனங்கட்கியல இடையேநின்று நடிக்கும் சோதிப்பொருளை நடுநிலைப்பொருளெனவுங் கூறினார். (கஎ)

பொறிகளைந்தினுக்கூட்டுபல்போகமுமிதப்பச
செறிகொணீரவாலுவபபவதிருநகாமாகக
ணெறிகொள்செஞ்சடைப்பிறைமுடிநிருமலக்கொழுந்தின்
வெறிகொளுண்மலரடிதழீஇவீடுபெற்றார்போல்.

(இ-ள்.) நெறி கொள் செஞ்சடை பிறைமுடி நிருமலக் கொழுந்தின் - நெறிந்த செவந்த சடையில் சந்திரனைத் தரித்த நின்மலக்கொழுந்தாகிய சிவபெருமானுடைய, வெறிகொள் நாள மலர் அடிதழுவி வீடு பெற்றார்போல்-வாசமிக்க அன்றலர்ந்த தாமரைமலரையொத்த திருவடியை இடைவிடாது சிந்தித்து மோட்சானந்தம்பெற்ற முத்தரைப்போல, அத்திருநகர் மாக்கள் - அந்த மதுரைத்திருநகரில் வசிக்கும் மக்கள். (பலவளங்களுந் தழைத்தலின்) பொறிகொள் ஐந்தினுக்கு ஊட்டு பல்போகமும் - தமது ஐம்பொறிகளுக்கும் உண்பிக்கும் பலபோகங்களும், மிதப்ப செறிகொள் நீர உவப்ப - மீதூரச் செறிந்ததன்மையையுடையனவா யிருத்தலால் என்றும் மகிழ்வார்கள்.

அடிதழுவல்-முத்தியின்பத்திற்குக்காரணமாதல்போலப் பலவளங்களும் போகத்திற்குக்காரணமாதலும் அவ்வின்பம் அடைந்தோரை விழுங்கிநிற்றல்போல அப்போகங்கள் மீதூர்ந்து செறிந்து நிற்றலும் எனக் கூட்டிப் பொருள் கொள்க. எல்லாப்போகங்களும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்துவகைப்படுதலால் பொறிகளைந்தினுக் கூட்டுபல்போகமென்றார் - ஆயிருத்தல் செய்யுள் விகாரத்தாற்

சிறைத்தனிற்றலின் வருவிக்கப்பட்டன. ஐந்தினுக்கு என்பதன் இறுதியில் இன்றைத் தென அறிபொருளில் வந்த முற்றும்மைதொகுத்தல். ஆல் - அசை. (௯௮)

மன்னவன்னரசிருக்கையாலந்நகர்முளரிப்
பொன்னையீன்றதாலதுபலபொருணிறைசெல்வந்
தன்னையீன்றதாலதுபலதருமமென்றுரைக்கு
மின்னையீன்றதஃதீன்றதால்விழுத்தகுபுகழே.

(இ-ள்.) மன்னவன் அரசு இருக்கையால் - எல்லோர்க்கும் முற்பட்ட சிவபெருமான் பாண்டியராய் அரசுசெய்திருக்கையால், அந்நகர் - அந்த மதுரைமாநகரம், முளரி பொன்னை ஈன்றது - தாமரையில் வசிக்கும் திருமகளைப்பெற்றது, அது - அத்திருமகள், பல பொருள் நிறை செல்வம் தன்னை ஈன்றது - மணிபொன்முதலிய பலபொருள்களாக நிறைந்த செல்வமென்னும் பெண்ணைப்பெற்றாள், அது - அப்பெண், பலதருமம் என்று உரைக்கும் மின்னை ஈன்றது - பலவகைப்பட்ட தருமமென்று சொல்லும்பெண்ணைப்பெற்றாள், அஃது - அப்பெண், விழுத்தகு புகழ் ஈன்றது - மேன்மை மிக்க புகழென்னும் மகளைப்பெற்றாள்.

பின்பின்னாக வருவனவற்றிற்கு முன்முன்னாகவருவன காரணங்களாக இருத்தலால் காரணமாலையணி. (௯௯)

ஏழ்கடந்ததோளுருத்திரவுலகமென்றியாரும்
வழுத்தநின்றவிந்நகரவயினும்பரின்மாண்ட
விழுத்தகும்பலசெல்வமுமவியந்துபார்த்துள்ளத்
தழுக்கறுமையாலின்னமுமமரர்கண்ணுறங்கார்.

(இ-ள்.) ஏழ் கடந்த தோள் உருத்திர உலகம் என்று யாரும் வழுத்த நின்ற இந்நகர் வயின் - ஏழை வென்ற தோளையுடைய உருத்திரருக்கும் உலகமென்று எவரும் துதிக்கநின்ற இந்த மதுரைநகரிலுள்ள, உம்பரின் மாண்ட விழுத்தகும் பல செல்வமும் - தேவருலகின் செல்வத்திலும் மாட்சிமைப்பட்ட மேன்மை மிக்க பலசெல்வங்களையும், அமரர் வியந்து பார்த்து உள்ளத்து அழுக்கறுமையால் - தேவர்கள் அதிசயித்துப் பார்த்துத் தமது மனத்திற்கொண்ட பொறாமையால், இன்னமும் கண் உறங்கார் - இன்னமுங் கண்டுயில்கொள்ளாதிருக்கின்றார்கள்.

இந்நகரிற்குச் சிவலோகமென்பது ஓர் திருநாமமாதலால் உருத்திர வுலகம் எனவும், இம்மதுரையாகிய சிவலோகத்திலுள்ள செல்வங்கள் தேவருலகிலுள்ள செல்வங்களின் மேம்பட்டனவாதலால் உம்பரின் மாண்ட விழுத்தகு செல்வமெனவும், என்றுங் கண்டறியாதனவாதலால் வியந்து எனவும், இவை தமதகத்தின்மையால் உள்ளத்தழுக்கறுமையால் எனவும், அழுக்காறுடையார்க்குக் கண்ணுறக்கமில்லாமையால் இன்னமும் அமரர் கண்ணுறங்கார் எனவும் கூறினார். தேவர்கட்கியல்பாய கண்ணுறக்கமின்மையைப் பொறாமையால் வந்ததெனக் கவி பெயர் பொருண்மேலேற்றிக் கூறுதல் தற்குறிப்பேற்றவணி. (௪௦௦)

விரையவிழ்ந்ததார்மீனவர்வாகைவேல்விடுத்துத்
திரையைவென்றதுமுடிதகர்த்திந்திரன்செருக்குக்
கரையவென்றதுங்கார்தளையிட்டதுங்கனக
வரையைவென்றதுமிந்நகர்வயினலன்றே.

(இ-ள்.) விரை அவிழ்ந்த தார் மீனவர் - வாசனையோடு மலர்ந்த மாலையையணிந்த உக்கிரகுமாரபாண்டியர், வாகை வேல் விடுத்து திரையை வென்றதும் - வெற்றிமாலையையணிந்த வேலையெறிந்து கடலை வெற்றிகொண்டதும், இந்திரன்முடி

தகர்த்து செருக்கு களைய வென்றதும்-தேவேந்திரனுடைய கிரீடத்தைச் சிதைத்து அவனுடைய இறுமாப்புக்கெட வெற்றிகொண்டதும், கார் தளை இட்டதும்-மேகங்களை விலங்கிலிட்டதும், கனகவரையை வென்றதும் - மேருவை வெற்றிகொண்டதும், இந்நகர் வலியினால் அன்றோ-இந்தமதுரைமாநகரத்தின் வலிமையினாலல்லவா.

உக்கிரகுமாரபாண்டியன் கடல்சுவறவேல்விட்டதும், இந்திரன்முடி தகர்த்ததும், மேகங்களைத் தளையிலிட்டதும், மேருவைச் செண்டாலடித்ததும் பின்னர்க் காண்க. நகரின்சிறப்பைச் சொல்லவந்தவராதலால் ஆதாரத்தைப் பெரிதாகக்கூறியது பெருமையணி. (௪0௪)

எங்குநாவுமாயெங்கணுங்கண்ணுமாயெங்குந்
தங்குபேரொளியல்லதித்தனிநகர்சசெல்வஞ்
செங்கணாயிரநாவினன்செப்பவுமெதிர்கண்
டங்கணாயிரமுடையவனளக்கவும்படுமோ.

(இ-ள்.) இத்தனி நகர் செல்வம்-ஒப்பற்ற இம்மதுரைநகரத்தின் செல்வமிகுதியை, எங்கும் நாவுமாய் - எவ்விடத்தும நாவுகளுமாகி, எங்கணும் கண்ணுமாய்-எவ்விடத்துங் கண்களுமாகி, எங்கும் தங்கு பேர் ஒளி அல்லது - எவ்விடத்தும் வியாபித்திராநின்ற பேரொளியாகிய பரசிவமன்றி, செம் கண் ஆயிரம நாவினன் செப்பவும் - செவநத கண்களையும் ஆயிரம் நாவுகளையும் உடைய ஆதிசேடன் வரையறுத்துச் சொல்லவும், அம் கண் ஆயிரம் உடையவன் - அழகிய ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரன், எதிர் கண்டு அளக்கவும படுமோ-நேரே பார்த்து இவ்வளவிற்றென அளவுபடுத்தவுங் கூடுமோ (கூடாது என்றபடி.)

காரிய முற்றச்செய்தல் இவரால் ஆகா - பரசிவத்தாலாகுமென யுக்தித்துக் கூறுதலின் இது உய்த்துணர்வைப்பணி. (௪0௨)

புண்ணியம்புரிபூமியாரதில்வருபோக
நண்ணியின்புறுபூமிவானெனபநாளும்
புண்ணியம்புரிபூமியுமதிலவருபோக
நண்ணியின்புறுபூமியுமதுரைமாநகரம்.

(இ-ள்.) புண்ணியம் புரி பூமியார் - புண்ணியத்தைச் செய்கின்ற நிலவுலகிலுள்ளவர்கள், அதில் வரு போகம் நண்ணி இன்புறு பூமி வானுடு என்ப - அப்புண்ணியத்தால் வரும் போகததை யடைந்து இன்பநுகரும் உலகம் விண்ணுலகென்று சொல்லுவார், நாளும் புண்ணியம் புரி பூமியும் - எந்நாளும் புண்ணியஞ் செய்தற்குரிய உலகமும், அதில் வரு போகம் நண்ணி இன்புறு பூமியும் - அப்புண்ணியத்தால் வருகின்ற போகங்களை யடைநது இன்பநுகர்தற்குரிய பூமியும், மதுரைமாநகரம் - மதுரைமாநகரமேயாம்.

போகமாவன - பெண், ஆடை, அணிகலம், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி என எண்வகைப்படும். ஏனையதலங்களினும் இத்தலம் விசேடமுடையதென்பார் புண்ணியம்புரிபூமியும் அதில்வருபோகம் நண்ணியின்புறுபூமியும் மதுரைமாநகரம் என்றார். புண்ணியம், போகம் சாதியொருமைகள். (௪0௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கனிந்தனையசொல்லார்நரப்பிசைப்பாணிதேவ
ருண்கனியமுதுங்கைப்பச்செவிதொளைத்தூட்டவுண்டும்

பெண்களினமுதமன்னார்பெருமிதநடைமுன்னாக்
கண்களைவிடுத்துங்காலங்கழிப்பவரளவிலாதார்.

(இ-ள்.) பண் கனிந்தால் அனைய சொல்லார் - இசைபழுத்தாலொத்த சொல்லையுடையபெண்கள் (வாசிக்கும்) நரம்பு இசை பாணி - வீணையினிசையோசை, தேவர் உண் கனி அமுதம் கைப்ப செவி தொளைத்து ஊட்ட உண்டும் - தேவருண்ணும் சுவைகனிந்த அமிர்தத்தையும் வெறுக்கும்படி காதினைத் தொளைத்து இன்பத்தை உண்பிக்க நுகர்ந்தும், பெண்களின் அமுதம் அனையார் - பெண்களுள் சுவைபயக்கும் அமுதம்போன்றபெண்கள், பெருமிதம் நடை முன்னா கண்களை விடுத்தும் - பாதநூல் விதிவழாதநடை யின்பத்தை நுகரத் தமது பார்வைகளைச் செலுத்தியும், காலம் கழிப்பவர் எண் இலாதார் - அம்மதுரைநகரத்தில் காலம்போக்கும் விளையாட்டினையுடையவர் அனேகர். (௧0௪)

கலவிவிச்சாகவூடிக்கட்புனல்குளிக்குநல்லார்
புலவிநீர்செவ்விநோக்கிப்புணர்முலைபோகந்துய்த்து
நிலைநிலையாமைநோக்கிநெறிபடுதருமதானங்
கலைஞர்கைப்பெய்துங்காலங்கழிப்பவரெண்ணிலாதார்.

(இ-ள்.) கலவி விச்சாக ஊடி கட்புனல் குளிக்கும் நல்லார் - (தத்தங்கணவர்களுக்குப்) புணர்ச்சி இன்பங் காரணமாகப்பிணக்குற்றுக் கண்களினின்றுஞ் சிந்தும் நீரிற்குளிக்கும் மகளிருடைய, புலவி நீர் செவ்வி நோக்கி புணர் முலை போகம் துய்த்தும் - ஊடல்நீங்குஞ் சமயம்நோக்கி நெருங்கிய தனபோகத்தை நுகர்ந்தும், நிலை நிலையாமை நோக்கி - தோற்றக்கேடின்றி நித்தியமாயுள்ள வீட்டின்பத்தையும் தோற்றக் கேடுகளுளவாய் அநித்தியமாயுள்ள ஏனையின்பங்களையும் (ஐயந்திரிபற) ஆராய்ந்துநோக்கி, நெறி படு தருமம் தானம் கலைஞர் கை பெய்தும் - நன்னெறிப்பட்ட தருமதானங்களைப் பலநூல்களையுங் கற்றுணர்ந்த பெரியோர்கையிற்கொடுத்தும், காலம் கழிப்பவர் எண் இலாதார் - காலம்போக்குவோர் அம்மதுரையில் அனேகர்.

புலவி, முதிர்ந்தவழி; இன்பந்தருதலாலும் அப்புலவிமுதிராதவழிக் கலவி, இன்பந்தாராமையாலும் இரண்டுமற்ற இடையாய்ச்சமயம்நோக்கிப் புணரவேண்டுதலின் புலவிநீர் செவ்விநோக்கிப் போகந்துய்த்தும் எனவும், நிலை நிலையாமை நோக்கிய வழியன்றிப் பொருள்களிற் பற்றுவிடுதல் அரிதாதலின் நிலை நிலையாமை நோக்கி எனவுங் கூறினார். (௧0௫)

சந்தித்துமீனைநோக்கிதலைவனைமூன்றுபோதும்
வந்தித்துமீசன்பூசைமரபுளிமுடித்தும்வேத
மந்தித்துமறியான்செய்ததிருவிளையாடல்கேட்டுஞ்
சிந்தித்துமன்பர்பூசைசெய்துநாள்கழிப்பார்பல்லோர்.

(இ-ள்.) மீனை நோக்கி தலைவனை மூன்று போதும் சந்தித்து வந்தித்தும் - அங்கயற்கண்ணியார்தலைவனாகிய (சோமசுந்தரக்கடவுள்சந்நிதியில்) காலை உச்சி மாலை என்னும் மூன்றுபோதும் அடைந்து வணங்கியும், ஈசன் பூசை மரபு உளி முடித்தும் - சிவபெருமான் பூசையை ஆகமமுறைமையாற் செய்து முடித்தும், வேதம் அந்தித்தும் அறியான் செய்த திருவிளையாடல் கேட்டும் சிந்தித்தும் - வேதங்கள் சபித்தும் உணர்தற்கரிய அச்சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடல்களைக் கற்றோர் சொல்லக்கேட்டும் அவ்வாறே மனனஞ் செய்தும், அன்பர் பூசை செய்தும் நாள் கழிப்பார் பல்லோர் - திருத்தொண்டர்பூசையை முறையாற் செய்தும் காலம் போக்குவோர் அம்மதுரையில் அனேகர்.

சிவபூசையினும் அடியார்பூசை அதிகமாதலின்இறுதியில்வைத்தார். சூதசங்கிதை - சிவமான்மியகாண்டம் - அடியார் பூசாவிதியும் அவரைப் போற்றினோர் பேறும் உரைத்த அத்தியாயத்தில்—

“படியினூலின்படியிப்படியிடை, முடிவிலன்புமுதிருபுனற்றும்வெண்
பொடிகொண்மேனியன்பூசையினுமமவ, னடியர்பூசையதிகமதிகமே.”

எனவருஞ் செய்யுளானுணர்க. (௧0௬)

கற்பவைகற்றுங்கேட்டுங்கேட்பவைகருத்தூறச் [து
சொற்பொருணினைந்துங்கேட்போர்க்குணர்த்தியுட்டுளக்கந்தீர்த்
தெறபகலிரவுநீஙகுமிடத்துமெய்யறிவானந்த
வறபுதவெள்ளத்தாழாதாழ்ந்துநாள்கழிப்பார்சில்லோர்.

(இ-ள்.) கற்பவை கற்றும் - கற்கத்தகும் நூல்களைக்கற்றும், கேட்டும்-கேட்கப்படும் பொருள்களைக் கற்றறிந்தோர் சொல்லக்கேட்டும், கேட்பவை கருத்தூற சொற் பொருள் நினைந்தும் - கேட்கும்பொருள் தமதுகருத்தூள் பதிய சொல்லையும் பொருளையும் பலகால் சிந்தித்தும, கேட்போர்க்கு உணர்த்தி உள் துளக்கம் தீர்த்தும் - (தம்மைவந்தடைந்து) கேட்போர்க்குமெய்மைப்பொருளைவிளக்கி அவர்கள் மனத்தின்கண்ணுள்ள மயக்கையொழித்தும், எறபகல் இரவுநீங்கும் இடத்து-இரவும் பகலும் நீங்கியவிடத்தில், மெய் அறிவு ஆனந்த அறபுத வெள்ளத்து ஆழாது ஆழ்ந்தும்-மெய்ஞ்ஞானானந்தமயமாகிய அறபுத பிரவாகத்தில் ஆழாமல் ஆழ்ந்தும், நாள் கழிப்பார் சில்லோர் - நாளபோக்குவோர் அமமதுவாயிற சில்லோர்.

ஞானவேள்வி ஐந்தனுள் தமது மதிநுட்பத்தால் ஞானநூலின்கண் அதிகாரமுடையராய் ஓதியுணர்தலை, கற்பவைகற்றும எனவும், அந்நூலுணர்ச்சி மாத்திரையானே ஞானநிகழாமையால் ஞானாசிரியனை வழிபட்டுச் சொற்பொருள்விளங்க ஐயவுணர்விறகிடமின்றி நான்முறைபறறிச் சிரவணஞ்செய்தலைக்கேட்டெனவும், அங்ஙனங்கேட்பதுகொண்டு சொன்மாத்திரையிற் றம்செல்லாது திரிவுக்கிடமின்றிப் பொருண்மாத்திரையிற் றம்மைச்செலுத்தி உள்ளூறமனனஞ் செய்தலைக்கேட்பவை கருத்தூறச் சொற்பொருள் நினைநதும் எனவும், ஆசிரியன்மாட்டுத் தாம் கேட்டவாறு நூறகலபபாலும சிந்தனையினாலும் அதிகாரமுடையராய்த் தம்மை வினாயினார்க்கு நான்முறைவேண்டாது தமது நிட்டையான் அறியாமைக்கிடமின்றித தெளிவித்தலைக்கேட்போர்க்கு உணர்த்தியுட்டுளக்கந்தீர்த்தும் எனவும், கருவித்தொடர்பால்அறிநதவாறறிநது அதுவதுவாயநிற்கும் அறிகருவியின்விகற்பமாம் சகலமும், அக்கருவிநீக்கத்து அங்ஙனமாவதினறி அறிவின்மைமாததிரையாம் கேவலமும் நீங்கிநிற்கும்அருளாதாரததை-எற்பகலிரவுநீங்குமிடமெனவும்,அவ்வருட்சத்தியாற் சத்தனைக்கூடிச் சின்மாத்திரமாய்ப் பேரின்பத்துள்மூழ்கி அதுவாதலும் வேறாதலும் செய்யாமல் நிட்டைகூடியிருத்தலை மெய்யறிவானந்த அற்புதவெள்ளத்து ஆழாதாழ்ந்தும் எனவும், இவ்வாறு அறிந்துநிற்பவர் அரியராதலிற் சிலரெனவுங்கூறினார்.

திரிவு-என்றது குற்றியை மகனெனவும், இப்பியை வெள்ளி எனவும் இவ்வாறாக ஒன்றனை மற்றொன்றாகத் துணிதல். (௧0௭)

தன்னிகருயர்ச்சியில்லான்காப்பியத்தலைவனாக
முன்னவர்மொழிந்ததேனோர்தமக்கெலாமுகமனன்றோ
வன்னதுதனதேயாகுமண்ணலேபாண்டிவேந்தா
யிந்நகர்க்கரசனாவானிக்கவிக்கிறைவனாவான்.

(இ-ள்.) தன் நிகர் உயர்ச்சி இல்லான் - தனக்கு ஒப்பாவோரும் தன்னின் உயர்ந்தோரும் இல்லாதவொருவன், காப்பியத் தலைவன் ஆக முன்னவர் மொழிந்தது - காப்பியத்திற்குத் தலைவனெனப் பண்டுள்ள இலக்கணிகள் கூறியது, ஏனோர் தமக்கு எல்லாம் முகமன் அன்றோ - (காப்பியங்கட்குத் தலைவராம்) அஃதொழிந்த மற்றையோர்க்கு உபசாரவார்த்தை யல்லவா (ஆம் என்றபடி) அன்னது தனதே ஆகும் அண்ணலே - தன்னிகர் உயர்ச்சி இன்மை தன்னதாகக்கொண்ட சிவபெருமானே, பாண்டிவேந்தாய் இந்நகர்க்கு அரசன் ஆவான் - பாண்டியனாகி இம்மதுரை நகருக் கரசனாயுள்ளவன், இக்கவிக்கு இறைவன் ஆவான் - அவனே யிக்காப்பியத்திற்கும் தலைவனாயுள்ளவன் (ஆதலால் இது முகமன் அன்று)

"பெருங்காப்பிய நிலை பேசுங்காலை-வாழ்த்துவணக்கம் வருபொருளிவற்றி னொன், றேற்புடைத்தாகிமுன் வரவியன்று,நாற்பொருள்பயக்கு நடைநெறித்தாகித் தன்னிகரில்லாத் தலைவனையுடைத்தாய்" எனக்கூறியது காப்பியத்திற் கிலக்கணமாதலால் தனனிகருயர்ச்சியில்லான காப்பியத்தலைவனாக முன்னவர்மொழிந்ததெனவும், அவை இல்லாதாவா புடையோராகக் கவிகள் கூறுவது புனைந்துரையாதலால் ஏனோர்தமக்கெலா முகமனன்றோ எனவும், அவற்றையுடையவன் சிவபெருமான் ஒருவனேயாதலால் தேறப்போந்தது அன்னது தனதேயாகும் அண்ணலே எனவும், அவனே பாண்டியனாய் வந்தருளினமையால் இந்நகர்க்கரசனாவான் எனவும், அச்சிவபெருமானே இக்காப்பியத்திற்குத் தலைவனாதலின் முகமனன்றென்பது தோன்ற இக்கவிக்கிறைவனாவான் எனவுங் கூறினார். தொடர்நிலைச் செய்யுள் பெருங்காப்பியமெனவும், காப்பியமெனவும் இருவகைப்படும். அவற்றுள் இந்நூல் பெருங்காப்பியமாதலால் தன்னிகரில்லாக் காப்பியத்தலைவனாவான் இவனென இதனுற் கூறப்பட்டது. "பெருங்காப்பியநிலை பேசுங்காலை" எனவும் "அறமுதனான்கும் குறைபாடுடையது" எனவும் வருஞ் சூத்திரங்களால் காப்பியங்களி னிலக்கணங்களையுணர்க. இந்நூலிற்கு பெருகும். கவியாற்புனையப்படுவது காப்பியமாதலால் கவி,தன்னுறு புனையப்படுவ காப்பியத்தின்மேனிற்றலிற் கருவியாகுபெயர். (௧௦அ)

என்னென வுரைப்பேனந்த விறைமகன்பணைபையினை
மன்னவர் வானோர்போல மதித்துரை விரிக்கற்பாற்றோ
வன்னவனாணையாற்றானடப்பதெவ்வுலகமென்றால்
முன்னவன்செய்தவாடல்வரவினை முறையிற்சொல்வேன்.

(இ-ள்.) எவ்வுலகமும் அன்னவன் ஆணையாற்றான் நடப்பது என்றால் - எவ்வுலகமும் பாண்டியர் திருக்கோலங்கொண்ட அச்சிவபெருமானுடைய ஆணையின்வழியாய் நடப்பதாயின், அந்த இறைமகன் பணைபை என் என உரைப்பேன்-அந்த இறைவனது தன்மையை என்னவென்று எடுத்துச்சொல்லப்போகின்றேன், ஏனை மன்னவர் வானோர் போல மதித்து உரைவிரிக்கற்பாற்றோ - ஏனையரசர்களது தன்மையையும் தேவர்களதுதன்மையையும்போல (அவனது தன்மையை) அளவறுத்துச்சொல்லும் பகுதியதோ அன்று (ஆதலால்அதனையொழித்து) முன்னவன்செய்த ஆடல் வரவினை முறையில் சொல்வேன்-அவ்விறைவன் செய்தருளிய திருவிளையாடல்களை வடநூலிற்கூறிய முறைப்படிச்சொல்லுகின்றேன்.

இவ்வுலகமென்று பாடங்கூறுவாருமுளர். இதரச்சுட்டு நிலவுலகொன்றன் மேனிற்றலின் ஆணையாற்றானென்ற சொல்லாற்றலுக்கும் ஏனைமன்னவர் என்றொழியாது வானோர் என்றுகூறியதற்கும் பொருந்தாமையால் எவ்வுலகமெனப்பாடங் கொண்டாம். இறைவனது தன்மையை யளவறுத்துச்சொல்லப்புகின் அச்சொல்ல

ளவையிலடங்காத பலபடவிரிந்து பயன்படுதலின்றி மிகைபடக்கூறலென்னுங்குற்றந்தங்குதல்தோன்ற உரைசெய்தற்பாற்றேவென்றது, உரைவிரிக்கற்பாற்றே என்றார். முன்னவன் என்பதன்முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். வாவு என்னுந் தொழிற்பெயர் பன்மைப்பொருண்மேனின்றது. முற்றும்மைதொகுத்தல். (கoக)

திருநகரப்படல முற்றிற்று.

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கககூ.

## திருக்கைலாயப்புகழ்ச்சி.

கலிநிலைத்துறை.

வரங்கடந்தருளென முதுவானவர் முனிவோர்
கரங்கடந்தலை முகிழ்த்திடக்கருணைசெய்தவிச்சை
யுரங்கடந்துரையுணர்வெலாங்கடந்தருமறையின்
சிரங்கடந்தவனிருப்பதுதிருக்கயிலாயம்.

(இ-ள்.) முதுவானவர் முனிவோர்-அயன்முதலிய பெரியதேவர்களும் முனிவர்களும், வரங்கள் தந்து அருள் என கரங்கள் தம தலை முகிழ்த்திட கருணைசெய்து-(யாங்கள்கருதிய) நன்மைகளைத் தந்தருளாய் என்று கைகளைத் தமது தலைமேல் கூப்ப (அவரவர்வேண்டுகோளுக்குத் தக்கவாறு) திருவருள்செய்து, அவிச்சை உரம் கடந்து -(இயல்பாகவே) பாசவன்மையினின்றுநீங்கி, உரை உணர்வு எலாம் கடந்து - சொல்லும்பொருளுமாகிய யாவையுங்கடந்து, அருமறையின் சிரம் கடந்தவன் - அரியவேதத்தின் முடிவையையுங்கடந்த சிவபெருமான், இருப்பது திருக்கயிலாயம் - எழுந்தருளியிருக்குமிடம் திருக்கயிலாயமென்னுந் திருமலையாம்.

அவிச்சை, காண்டலளவை மாத்திரையிற் கட்டுணர்வுக்கேதுசெய்து நிற்பதாகலாலும் அவ்விறைவன் அவ்வுணர்வுக்கெட்டாச் சுயஞ்சோதியாயிருப்பவனாகலாலும் அவிச்சை யுரங்கடந்தவனெனவும், அவ்வாறுதிமலமுதத்தன மலபோதத்தானிகழும் வாக்குமனங்கள் பற்றியறியும் சொல்லளவையாலும் கருதலளவையாலும் உணரப்படாதவனாதலின் உரையுணர்வெல்லாங்கடந்தவன் எனவும், அப்பரமபரனைப் பரஞானத்தாற்காண்பதல்லது விந்து சத்தியின்காரியமான வேதமுடிவாயுள்ள உபநிடதங்களை யாராய்வதனால் உண்டாகும் அபரஞானத்தால் காண்டல் செல்லாதவனாதலின் வேதச்சிரங்கடந்தவன எனவுங்கூறினார். உணர்தலென்னுந் தொழினிகழ்ச்சியால் பொருள் என்பது தோன்ற உபசரித்தார். (க)

புரந்தராதிவானவர்பதம்போதுறைபுத்தேள்
பரந்தவான்பதஞ்சக்கரப்படையுடைப்பகவன்
வரந்தவாதுவாழ்பதமெலாநிலைகெடவருநா
ளுரந்தவாதுநின்றோழிதோற்றுங்குமவ்வோங்கல்.

(இ-ள்.) அவ் ஓங்கல் - அத்திருக்கைலாயமலை, புரந்தராதி வானவர் பதம்- இந்திரன்முதலிய தேவர்கள்பதங்களும், போது உறை புத்தேள் பரந்தவான் பதம்- தாமரைமலரில்வசிக்கும் பிரமனுடைய இடம் பரந்த பெரியசத்தியலோகமும், சக்கரப்படை உடை பகவன் வரம் தவாது வாழ் பதம் எலாம் - சக்கராயுதத்தையேந்திய திருமால் தம்மையடைந்தோர் பெறும்பேறு கெடாமல் வாழும் வைகுந்தமும்

ஆகிய நிலைகளெல்லாம், நிலை கெடவரும் என் உரம் தனது நின்ற வழிநெ றம் ஒன்றும் தத்தமக்குரியநிலை கெட்டு அழியவரும் பேரூழிக்காலத்திலும் தனது வலிமைகெடாது நின்று அவ்வூழிக்காலந்தோறும் வளர்ந்தோங்காநிற்கும்.

ஊழியின்முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். உம்மை தொக்குநின்ற தோ றம் என்னும் இடைச்சொல் காலப்பன்மைமேனின்றது. இந்திரன் முதலியோர் பத ங்கள் பொன்றுங்காலம் தனது வளர்ச்சிக்குரிய காலமாதலால் நிலைகெடவருநாள் அவ்வோக்கல் ஒக்குமெனக்கூறினர். ஒக்கும் என்றற்கு மூவரும் ஒடுக்குகின்ற நாள் ஓங்கிய வெழுக்கம் பொக்கும் என்னுமிடத்திற் காட்டிய தேவாரத்தா லுணர்க. (உ)

அரம்பைமாதாராடலினரவமும்பாட
னரம்பினோசையுமுழவதிர்சும்மையுகால்வாய்
வரம்பிலோதையுமருவிவீழொலியுமாறாது
நிரம்பிவானமுந்திசைகளுநிமிர்வனமாதோ.

(இ-ள்.) அரம்பை மாதரார் ஆடலின் அரவமும்-அரம்பைப்பெண்கள் ஆடு கின்ற ஆடலினுண்டாகிய ஓசையும், பாடல் நரம்பின் ஓசையும் - அவர்கள்பாடும் பாடலினோசையும் வீணையினோசையும், முழவு அதிர் சும்மையும் - தண்ணுமையொ லிக்கும் ஓசையும், கால் வாய் வரம்பு இல் ஓதையும் - யானையினது அளவில்லாத வோசையும், வீழ் அருவி ஒலியும் - (அத்திருமலையினின்று) வீழாநின்ற அருவியின் ஓசையும், மாறாது நிரம்பி-தம்முள் மாறுபடுதலில்லாமல் ஒருபால் நிறைந்து, வான மும் திசைகளும் நிமிர்வன-ஆகாயத்திலுந் திக்குகளிலும் நிறைந்து பரவாநிற்கும்.

கால்வாய் தொங்கியவசையும் வாயையுடைய தெனப்பொருள் மேனிற்றலால் வினைத்தொகைநிலைக் களத்துட்பிறந்த அன்மொழித்தொகை நிலைத்தொடர். நரம்பு வீணைமேனிற்றலால் தானியாகுபெயர். (௩)

வெந்தநீற்றொளிவெண்மையும்விமலனையகங்கொண்
டந்தமின்றியேயசைவறவிருக்கையுமருவி
வந்தகண்களுங்கொண்டவணிருக்குமாதவர்க்குத்
தந்ததாலரன்கைலையுந்தனதுசாரூபம்.

(இ-ள்.) அரன் கைலையும்-சிவபெருமான் எழுந்தருளிய திருக்கைலைமலையும், வெந்த நீறு ஒளி வெண்மையும் - நீறிய திருநீற்றின் ஒளிபோன்ற வெள்ளொளியை யும், விமலனை அகம் கொண்டு அந்தம் இன்றி ஏ அசைவு அற இருக்கையும் - அச்சி வபெருமானை தனதிடத்துக்கொண்டு என்றுந் தனக்கோர் இறுதியில்லாமல் சலன மற்றிருத்தலையும், அருவி வந்த கண்களும் கொண்டு - (தன்முகடுதொறுந்து) அருவி கள் இழிந்துவாராநின்ற பலவிடங்களையுங்கொண்டு, (வெந்த நீறு ஒளி வெண்மை யும்-நீறியதிருநீற்றின் வெள்ளொளியையும், விமலனை அகம் கொண்டு அந்தம் இன்றி ஏ அசைவு அற இருக்கையும் - சிவபெருமானைத் தனது மனத்திற்பதித்துத் தமக் கோரிறுதியில்லாமல் சலனமற்றச் சிவயோகத்திருத்தலையும், அருவிவந்த கண்க ளும் கொண்டு - அருவிபோலும் ஆனந்தபாஷ்பம் இடையுறாதுவரும் கண்களையுங் கொண்டு) அவண் இருக்கும் மாதவர்க்கு தனது சாரூபம் தந்தது - தனதிடத்திருக் கும் பெரியதவத்தினர்க்குத் தனது சாரூபத்தைக்கொடுத்தது.

சிவபெருமான் தன்னைச்சிந்தித்து அடைந்தோர்க்குச் சடாமுடியும் திரிநேத்தி ரமும் காளகண்டமும் மான்மழுமுதலியவையும் பெறுதலாகிய தனது திருவுருவத்

தைத்தருதல்போலத் தானுந்தருதலில் உம்மை இறந்தது தழுவிய உயர்வுசிறப்பும்மை. சாரூபம் - சமானமான ரூபம். இயல்பாகவே பாசங்களினின்ற நீங்கினோன் தன்னையடைந்தோர்க்கும் பாசம்போக்கவோனாதலால் விமலன் அரன் எனக்கூறினார். வெந்த நீறு நோற்றநோன்பென்பதுபோல வந்தன. அகம் - மனத்தின்மேலும், இடத்தின்மேலும். கண் - கண்களின்மேலும் இடத்தின்மேலும் நின்றன. அவண் - அவ்விடம். அகரச்சுட்டு உயர்வின்மேல் நின்றது. (ச)

ஆங்குவெண்டுகில்விரித்தெனக்கல்லெனவார்த்து
வீங்குகாலருவித்திரள்வெள்ளமேயன்றி
யோங்குநான்மறைக்குடுமியினுள்ளொளிநோக்கித்
தூங்குமாதவர்கண்களுஞ்சொரிவனவெள்ளம்.

(இ-ள்.) ஆங்கு - அத்திருக்கைலையில், வெண்துகில் விரித்தால் என்ன - வெள்ளியவஸ்திரத்தை விரித்தாற்போல, கல் என ஆர்த்து வீங்கு கால் அருவி திரள்வெள்ளமே அன்றி-கல்லென்னும் ஒலிக்குறிப்போடு ஒலித்துப் பருத்திழியும் காலையுடைய அருவியாகிய திரண்டவெள்ளமுமேயல்லாமல், ஓங்கு நான் மறை குடுமியின் உள் ஒளி நோக்கி - சாகைகளாற்பரந்த நான்கு வேதங்களின் சிகையாகிய உபநிடதத்துள் விளங்கும் ஒளியாகிய பரசிவத்தை உள்ளக்கண்ணால்நோக்கி, தூங்குமாதவர் கண்களும் சொரிவன வெள்ளம் - அப்பரசிவத்தி லழுந்திய பெரியதவத்தினையுடையோர்கண்களுஞ் சொரியும் ஆனந்தபாஷ்பவெள்ளமும் பெருகாநிற்கும்.

தூங்கல் - நேயத்தழுந்தல். பெருகாநிற்கும் - தோன்றாப்பயனிலை. விரித்தென தொகுத்தல். சொரிவன என்னும் வினைமுற்றுப் பெயரெச்சமாய்நின்றது. (ரு)

கோட்டுமாமலர்நிலமலர்குண்டுநீரொடுத்துக்
காட்டுமாமலர்கொடிமலர்கொண்டுமுட்களைந்த
பாட்டுமாமலர்கொண்டுநம்பரஞ்சுடரடியிற்
சூட்டுமாதவர்தொகுதியுஞ்சூழ்வனவொருபால்.

(இ-ள்.) ஒருபால் - அத்திருக்கைலையினொருபுறம், மா கோட்டுமலர் - பெரிய கோட்டுப்பூவும், நிலமலர் - நிலப்பூவும், குண்டு நீர் எடுத்து காட்டு மாமலர் - சுனையிலுள்ள நீர் எடுத்துக்காட்டும் பெரியநீர்ப்பூவும், கொடிமலர் கொண்டும் - கொடிப்பூவுமாகிய இந்நால்வகைப்பூக்களைக்கொண்டும், உட் களைந்த பாட்டு மாமலர் கொண்டும் - மனத்தைத்தகளைவிக்கும் பாடலாகிய சிறந்தமலரைக்கொண்டும், நம் பரஞ்சுடர் அடியில் சூட்டுமாதவர் தொகுதியும் சூழ்வன - நமது சிவபெருமான் திருவடியில் சூட்டுகின்ற பெரியதவத்தினையுடைய திருத்தொண்டர்கள் கூட்டங்களாலுஞ்சூழப்படுவன.

நீரிற்பூத்தமலரை நீரொடுத்துக்காட்டுமலரென்றது குணவணி. எதிர்காலத்தாற் கூறவேண்டியதனைக்களைந்த என - இறந்தகாலத்தாற் கூறியது தெளிவுபற்றி வந்த காலவழுவமைதி. களைந்த முதனிலைதிரியாது வந்தபிறவினைப் பெயரெச்சம். சூழ்வன - படுவிகுதிதொக்குவந்த செயப்பாட்டு வினைமுற்று. உம்மை - இறந்தது தழீஇய உயர்வு சிறப்புப்பொருட்டு.

கையராகமுங்காய்சினவழுக்குமுங்கடுவாய்ப்
பையராகமுநந்தினைபரவியழுக்க
வையனுகமெய்யருந்தவர்தமையடைந்தன்பு
செய்யராகமும்வையமும்புகழ்வதச்சிலம்பு.

(இ-ள்.) கைய நாகமும் - துதிக்கையையுடைய யானைகளும், காய்சின வுழுவையும் - வருத்துகின்ற கோபத்தையுடைய புலிகளும், கடுவாய் பையநாகமும் - விஷம்பொருந்திய வாயையும் படத்தையுமுடைய பாம்புகளும், மெய் அருந்தவர் தம்மை - மெய்யுணர்ச்சியையுடைய அரியதவத்தையுடைய முனிவர்களை, தம் இனே பரவிய முக்கண் ஐயனுக்கு அடைந்து அன்பு செய்ய - தமது சுற்றங்களால் முன்பு வணங்கப்பட்ட மூன்று கண்களையுடைய சிவபெருமானுக்கருகிச் சரணடைந்து அன்புசெய்து வழிபட, அச்சிலம்பு - அத்திருக்கைலை, நாகமும் வையமும் புகழ்வது - விண்ணுலகத்தாராலும் மண்ணுலகத்தாராலும் புகழப்படாநிற்கும்.

இடத்தினிகழ் பொருளின்சிறப்பு இடத்தின்மேலேற்றி நாகமும் வையமும் புகழ்வது என்றார். யானை வழிபட்டது - திருவானைக்காவில் வடமேற்றிசையிலுள்ள வோர் சுவேதமலையில்வசிக்கும் சுவேதயானை ஆகூழ்வசத்தால் அங்குநின்று அத்திருவானைக்காவின் புறம்புள்ள காட்டிற்புகுந்து வெண்ணாவலின் அருகுவந்து அங்கெழுந்தருளிய சிவலிங்கப்பெருமானைநோக்கி வியப்படைந்து ஆ கெட்டேன் எம்பெருமான் இங்கெழுந்தருளியது என்னையாட்கொள்ளக்கருதியோ என்று ஆராமை எய்தி வழிபட்டுப்பூசித்துச் சிவகணங்களுக்குத் தலைமைபூண்டது என்பது - திருவானைக்காப்புராணம் - கஜாரணிய படலத்திலும், திருக்கைலையில் சிவபெருமானார் ஓர்கால் திருவோலக்கத் தெழுந்தருளுதற்பொருட்டு ஆடை அணிமுதலியவற்றைப் புனையுங்கால் காளன் என்னும் பாம்பு காமத்திற் கிழிப்புண்டு வாராதிருத்தலையுணர்ந்து நீ தென்கைலையில் பாம்பாய்ப்பிறந்து எம்மைப் பூசிப்பாயென்றருள, அவ்வாறே பிறந்து பூசித்து முத்தியடைந்தது. சீகாளத்திபுராணத்தில் சிலம்பிமுதலிய முத்தரைச் சருக்கத்திலும், புலிபூசித்தது கோயிற்புராணம் வியாக்கிரபாதச் சருக்கத்திலும் காண்க.

நாகமென்னும் பலபொருள் ஒருசொல் பொதுமைநீங்கி யானையையும் பாம்பையும் உணர்த்தற்கு - கை, கடுவாய்பை எனச் சிறப்படைகள் தந்து கூறினார். நோற்றநோன்பு, பொருதபோர் என்றாற்போலக் காய்சினம் என நின்றன. (எ)

திருக்கைலாயப்படலம் முற்றிற்று.

பாயிரம் உள்பட திருவிருத்தம்—உ0௯.

---

## புராணவரலாறு

:o:

கலிவிருத்தம்.

அளக்கிடற்கரிதாயவக் குன்றின்மேற்
களங்கறுத்தவிண்ணாதவன்கோயின்முன்
விளம்பருஞ்சிவதீர்த்தங்களின்மிக்கதாய்
வளம்பெறுஞ்சிவதீர்த்தத்தின்மாட்டது.

(இ-ள்.) அளக்கிடற்கு அரிது ஆய அக் குன்றின் மேல் - அளவுசெய்தற்கரிய சிறப்புவாய்ந்த அத்திருக்கைலையில், களம் கறுத்த விண் நாதவன் கோயில்முன் - கண்டங்கறுத்து விண்ணுலகிலுள்ள பிரமன் முதலிய தேவர்களைக்காத்த சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயிலின்முன்னுள்ள, விளம்பு அரும் சிவதீர்த்தங்களின் மிக்கது ஆய் - ஏனைத்தலங்களில் சொல்லுதற்கரிய மாகிமையையுடைய சிவதீர்த்தங்களினும் மேம்பட்டு, வளம்பெறும் சிவதீர்த்தத்தின் மாட்டது - என்றுஞ்சிறந்த சிவதீர்த்தத்தின் பக்கத்திலுள்ளது.

களங்கறுத்த விண்காத்தமை - "செற்றாலமுயிரனைத்தும் உண்டிடவெழுமிர்ந்தெழுஞ்சிற்றைமேற்கொள், பற்றாலங்கறுகர்ந்து நான்முகனேமுதலோர்தம் பாவைமார்தம், பொற்றாலிதனையளித்தோன்" எனக் காந்தம் அசுரகாண்டம் திருக்குற்றாலப்படலத்தில் வருஞ் செய்யுளாலுணர்க. (௪)

தண்டருங்கதிர்ச்சந்திரகாந்தத்திற்
பண்டயங்கநவமணிபத்திசெய்
தண்டர்தச்சனனேகதவஞ்செய்து
கண்டதாயிரக்கான்மண்டபமரோ.

(இ-ள்.) அனேகதவம் செய்து - பலதவங்களைச்செய்து, (அவற்றின்பலத்தால்) அண்டர் தச்சன் - தேவதச்சனால், தண் தரும் கதிர் சந்திர காந்தத்தில் - குளிர்ச்சிமிக்க கிரணத்தையுடைய சந்திரகாந்தக்கல்லால், பண் நயங்க நவமணி பத்தி செய்து - நண்ணியதொழில்கள் விளங்க ஒன்பதுவகை இரத்தினங்களை வரிசைப்படப் பதிப்பித்து, கண்டது ஆயிரக்கால் மண்டபம் - நிருமிக்கப்பட்டுளது ஆயிரக்கால்மண்டபம். (௫)

ஆனபான்மையினாலந்தமண்டப
ஞானநாயகனாண்மலர்த்தாடொழ
வானமீதேறிவந்துபதங்குறித்
தூனமின்மதிவைகுவதொத்ததே.

(இ-ள்.) அந்த மண்டபம் ஆன பான்மையினால் - அந்தவாயிரக்கால்மண்டபஞ் சந்திரகாந்தக்கல் முதலியவற்றாலமைந்த தன்மையால், ஊனம் இல் மதி - களங்கமில்லாத சந்திரன், வானம் மீதேறி வந்து - ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களோடு வந்து, ஞான நாயகன் நாள் மலர் தாள் தொழ - ஞானவடிவாகிய விறைவனது அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடியை வணங்க, பதம் குறித்து வைகுவது ஒத்தது - சமயம்பார்த்திருந்ததை யொத்திருந்தது.
இதனால் இதனை யொக்குமெனக் கூறினமையால் எது உவமையணி. (௬)

அன்னமண்டபந்தன்னுளருந்தவ
மென்னவேங்கையதன்மேலிருந்தனன்
பன்னுகேள்விப்பதினெண்புராணமுஞ்
சொன்னமாதவச்சூதமுனிவனே.

(இ-ள்.) பன்னு கேள்வி - சொல்லப்பட்ட நூற்கேள்வியால், பதினெண்புராணமும் சொன்ன மாதவம் சூத முனிவன் - பதினெண்புராணங்களையுஞ்சொல்லிய பெரியதவத்தையுடைய சூதமுனிவன், அன்ன மண்டபம் தன்னுள் - அவ்வாயிரக்கால் மண்டபத்தில், அருந்தவம் என்ன - அரியதவம் ஒருருவு கொண்டிருந்தாற்போல, வேங்கை அதன் மேல் இருந்தனன் - புலியின் தோலின் மேலிருந்தனன்.
வியாதன்பாற் கற்றுணர்ந்தவன் என்பார் பன்னு கேள்விப் பதினெண்புராணமுஞ் சொன்ன என்றார். (௭)

அங்கேதவலையிலச்சிவதீர்த்தத்தில்
வந்துமூழ்கியம்மண்டபத்தேறியே
சந்தியாதிதவமுடித்தீறிலா
விந்துசேகரன்றாணினைந்தேத்தியே.

(இ-ள்.) அந்த வேலையில் | வந்து - அக்காலத்தில்வந்து. அச்சிவதீர்த்தத்தில் மூழ்கி - அந்தச்சிவதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அம்மண்டபத்து எதி சந்தி ஆதி நவம் முடித்து - அம்மண்டபத்தின் வேறுவேறு நித்திய கடன் முதலிய தவங்களை முடித்து, ஈறு இல்லாத இந்து சேகரன் தாள் நினைந்து ஏத்தி - தனக்கோரிறுதி யில்லாத சந்திரசேகரனாகிய சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்துத்துதித்து. (௫)

சம்புபத்தன்சதானந்தனுத்தம
னம்புயத்தனனையமகோதர
னும்பரஞ்சியவுக்கிரவீரிய
னம்புகேள்விப்பிரசண்டநற்றவன்.

(இ-ள்.) சம்புபத்தன் சதானந்தன் உத்தமன் - சம்புபத்தனும், சதானந்தனும், உத்தமனும், அம்புயத்தன் அனையமகோதரன் - பிரமனை யொத்த மகோதரனும், உம்பர் அஞ்சிய உக்கிரவீரியன் - தேவர்கள் அஞ்சும் பெருந்தவத்தை யுடைய உக்கிரவீரியனும், நம்பு கேள்வி பிரசண்ட நற்றவன் - கேட்டோர் நம்பும் வேத முதலியநூற் கேள்வியில் வல்ல பிரசண்டனென்னு நல்ல தபோதனனும். (௬)

ஆதிமாதவர்யாவருமன்புமை
பாதியாய்முற்றுமாகும்பராபரச்
சோதிபால்வைத்தசூதனைத்தோத்திர
மோதியஞ்சலித்தொன்றுவினவினர்.

(இ-ள்.) ஆதிமாதவர் யாவரும் - இவர்கள் முதலிய பெரியதவத்தினர் யாவரும், உமைபாதியாய் முற்றும் ஆகும் பராபரச் சோதிபால் - உமையிடத்துப் பாதியாகி யெல்லாவிடத்து முழுதுமான சிவபெருமானிடத்து, அன்புவைத்த சூதனை தோத்திரம் ஓதி அஞ்சலித்து - நேயம் வைத்த சூதமுனிவனைத் தோத்திரஞ் செய்து கைகுவித்து, ஒன்று வினவினர் - ஒன்று வினவத்தொடங்கினார்கள்.

உமைபாதியாய் முற்றுமாகும் என்றது பொருள்முரணணி. (௭)

கலித்துறை.

வேதவாகமபுராணமேமிருதியேமுதலா
வோதுநூல்களின்றுணிபொருளுலகெலாம்பயந்த
பேதைபாகனேபரமெனத்தேர்ந்துணர்பெரிய
போதமாதவவுனக்கியாம்புகல்வதொன்றுளதால்.

(இ-ள்.) வேதமே ஆகமமே புராணமே மிருதியே முதலா ஓதும் நூல்களின் துணிபொருள் - வேதங்களே ஆகமங்களே புராணங்களே மிருதிகளே முதலாகச் சொல்லப்பட்ட நூல்களின் றுணிந்த பொருள், உலகு எல்லாம் பயந்த பேதை பாகன் பரம் என தேர்ந்து உணர் பெரிய - எல்லாவுலகங்களையும் பெற்றருளிய உமாதேவியை யிடப்பாகத்தி லுடையவனாகிய சிவபெருமானே என்று ஐயந்திரிபறத்தெரிந்துணர்ந்த பெரியவனே, போதமாதவ - ஞானத்தையுடைய பெரிய தபோதனனே, உனக்குயாம் புகல்வது ஒன்று உளது - உனக்கு நாங்கள் சொல்வதொன்றுள்ளது.

வேதம் ஆகமம் என்பவற்றி னிறுதியில் எண்ணேகாரம் தொக்குநின்றன. "எண்ணேகாரம் இடையிட்டுக்கொளினும - எண்ணுக்குறித்தியலு மென்மனார் புலவர்." என்ற - தொ - சொ - இடையியல் சூத்திரத்தால் உணர்க. (௮)

மேருமந்தரங்கைலைபர்ப்பதமுதல்விடைமே
லூருமந்தராடவனுறைபதியனந்த
மாருமந்தமில்போகம்வீடடைவதென்றவற்றின்
காரணங்களோடுரைத்தனைகருத்தினுக்கிசைய.

(இ-ள்.) மேரு மந்தரம் கைலை பர்ப்பதம் முதல் - மேரு, மந்தரம், திருக்கயிலை, ஸ்ரீபர்வதமுதலாகிய, விடைமேல் ஊரும் அந்தராடவன் உறைபதி அனந்தம் - தரு மவிடைமேலேறி நடத்தியருளும் சிவலோகநாதனெழுந்தருளிய திருப்பதிகளனந்த மும், ஆரும் அந்தம் இல் போகம் வீடு அடைவது என்று - எவரும் முடிவில்லாதபோ கத்தையும் மோட்சத்தையும் அடைதற்குரியனவென்று, அவற்றின் காரணங்களோ டு கருத்தினுக்கு இசைய உரைத்தனை - அவ்வத்திருப்பதிகளின் காரணங்களோடு எங் கள் கருத்துக்கும் பொருந்தக் கூறியருளினாய். (௯)

ஐயமாதிமுக்குற்றமுமகலநீயருளிச்
செய்யவுந்தெளிந்திலேங்கள்யாஞ்சிற்றறிவுடையேம்
மையனெஞ்சினேமாகையான்மயக்கறவின்னு
முய்யுமாறருள்செய்தியென்றுரைத்தனர்மன்னோ.

(இ-ள்.) ஐயம் ஆதி முக்குற்றமும் அகல நீ அருளிச் செய்யவும் - ஐயந்திரிபு அறியாமை என்னும் முக்குற்றங்களும் யாங்கள் நீங்க நீ திருவாய் மலர்ந்தருளிச் செய்யவும், சிற்றறிவுடையேம் மையல் நெஞ்சினேம் - சிற்றறிவினையுடையே மும் மயக்கமிக்க மனத்தினையுடையே மும், யாம் ஆகையால் தெளிந்திலேங்கள் - யாங் களாதலால் சிறிதுந் தெளியாதிருக்கின்றோம், மயக்கு அற உய்யுமாறு இன்னம் அருள் செய்தி என்று உரைத்தனர் - அம்மயக்கம் நீங்க யாங்கள் பிழைக்கும் வண் ணம் இன்னமுஞ் சொல்லியருள்வாய் என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

விகுதிமேல் விகுதியாகவந்த கள் விகுதி இடவழுவமைதி. செய்தி - முன் னிலை யொருமை எதிர்கால வினைமுற்று. ஐயமாவது - மறுபிறப்பும், இருவினைப்ப யனும், கடவுளும், உளவோ, இலவோ என்று ஒன்றிற்றுணிவு பெறாது நிற்றல். திரிபாவது - குற்றியை மகனெனவும், இப்பியை வெள்ளி எனவும் இவ்வாறாக ஒன் றினை மற்றொன்றாகத் துணிதல். அறியாமையாவது, குற்றியை மகனே எனவும், இப்பியை வெள்ளியே எனவுந் துணிதல் (௧௦)

தலங்கடம்மின்மிக்குள்ளதாய்த்தகுதிசாதீர்த்தக்
குலங்கடம்மின்மிக்குடையதாய்க்குறையிரந்தோர்க்கு
நலங்கடந்தருண்மூர்த்தியாய்நாதவேதாந்தப்
புலங்கடந்தபேரொளியுறைதலமொன்றுபுகலாய்.

(இ-ள்.) தலங்கள் தம்மில் மிக்கு உள்ளது ஆய் - தலங்களில் மேம்பட்டுள்ள தலமாகியும், தகுதிசால் தீர்த்தம் குலங்கள் தம்மில் மிக்கது உடையது ஆய் - தகு தியமைந்த பலதீர்த்தங்களில் மேம்பட்டுள்ள தீர்த்தத்தையுடையதாகியும் உள்ள, குறை இரந்தோர்க்கு நலங்கள் தந்து அருள் மூர்த்தியாய் - தமது குறை கூறிவந்த டைந்த வடியாருக்குப் பல நன்மைகளையுந்தந்தருளும் மூர்த்தியாகி, நாத வேதாந்த புலம் கடந்த பேர் ஒளி உறை தலம் ஒன்று புகலாய் - நாதத்தத்துவத்தி னிறுதியா கிய விடத்தையும் வேதத்தினிறுதியாகிய இடத்தையுங் கடந்த வொளிப்பிழம்பாகிய சிவபெருமான் எழுந்தருளிய வொருதலத்தைச்சொல்லியருளாய்.

ஞானங்களை விளக்கும் அறிவையும், வைகரியாதிவாக்கு கண்மேற்கும் தற்போதத்தையும் கடந்ததாதலின் - நாதவேதாந்தப்புலங்கடந்த பேரொளி எனக் கூறினர்.

மிக்கதென்னும் வினைமுற்றுப் பெயர் ஈறுதொக்குநின்றது.

என்றபோதெதிர்முகமலர்ந்திருண்மலவலியை
வென்றசூதனுந்தலங்களின்விசேடமாய்ந்தம்பொற்
குன்றவார்சிலையானிடங்கொண்டுறைபதியு
ளொன்றுகேட்கவீடளிப்பதாயுளதுமற்றதுதான்.

(இ-ள்.) என்றபோது - என்று வினவியபோது, எதிர் முகம் மலர்ந்து இருள் மல வலியை வென்ற சூதனும் - எதிரே முகமலர்ச்சிகொண்டு ஆணவமலத்தின்வலிமையை வெற்றிகொண்ட சூதமுனிவனும், தலங்களின் விசேடம் ஆய்ந்து அம்பொன் குன்றம் வார் சிலையான் இடம் கொண்டு உறை பதியுள் ஒன்று - தலங்களின் மேன்மைகளையெல்லாம் (தமக்குள்) ஆராய்ந்து அழகிய பொன்மலையாகிய நீண்டவில்லையேந்திய சிவபெருமான் தனக்குத் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்குந்தலங்களுள் ஒருதலம் உள்ளது, அது கேட்க வீடு அளிப்பது ஆய் உள்ளது - அத்தலம் காதாற் கேட்கவும் மோக்ஷத்தைத் தருவதாயுள்ளது. (சஉ)

முற்றவோதியபுராணமூவாறினுட்காந்தம்
பெற்றதாறுசங்கிதையவையாறுந்தம்பெயராற்
சொற்றபேர்சனற்குமாரமாமுனிவரன்சூதன்
கற்றைவார்சடைச்சங்கரன்மாலயன்கதிரோன்.

(இ-ள்.) முற்ற ஓதிய புராணம் மூவாறினுள் - முடிவுபெற யாவையும் எடுத்துக்கூறும் பதினெண்புராணங்களுள், காந்தம் ஆறு சங்கிதை பெற்றது - காந்தபுராணம் ஆறுசங்கிதைகளை யுடையது, அவை ஆறும் தம் பெயரால் சொற்றபேர் - அவையாறையுந் தமது பெயரால் சொன்னவர்கள், மாசனற் குமார முனிவரன் சூதன் கற்றை வார் சடை சங்கரன் மால் அயன் கதிரோன் - பெருமை பொருந்திய சனற்குமாரமுனிவனும் சூதமுனிவனும் நெருங்கிய நீண்ட சடையையுடைய சங்கரனும் விட்டுணுவும் பிரமனும் சூரியனுமாவார்.

பேர் பன்மைப் பொருளில் வந்த வோரிடைச்சொல். (சங)

இன்னவாறனுட்சங்கரசங்கிதையென்று
சொன்னநூலினையுணர்த்தினான்சங்கரன்றுணைவிக்
கன்னபோமவன்மடியினிலிருந்துகேட்டதனை
மினுவேல்பணிகொண்டவேள்வெளிப்படவுணர்ந்தான்.

(இ-ள்.) இன்ன ஆறனுள் - இந்த வாறு சங்கிதையுள், சங்கர சங்கிதை என்று சொன்ன நூலினை - சங்காசங்கிதையென்றுசொல்லப்பட்ட நூலை, சங்கரன் துணைவிக்கு உணர்த்தினன் - சங்கரன் தனது துணைவியாகிய வுமாதேவிக்குணர்த்தினன், அன்ன போது அவன் மடியினில் மின்னு வேல் பணி கொண்ட வேள் இருந்து கேட்டு அதனை வெளிப்பட உணர்ந்தான் - அப்போது அவ்வுமாதேவியின் திருமடியில் விளங்கும் வேல் தன்னேவல்வழி நிற்கக் கொண்டருளிய முருகக்கடவுளிருந்து அச்சங்கிதையைச் சிறிது ஐயமின்றி உணர்ந்தருளினன்.

இன்ன அன்ன சுட்டுத்திரிபுகள். (சச)

குன்றெறிந்தவேள்வழிபடுகுறுமுனிக்குரைத்தா
னன்றுதொட்டஃதகத்தியசங்கிதையாகி
நின்றதன்னதுகேட்பவர்க்கரனடிநீழ
லொன்றுமின்பவீடளிப்பதாவொருதலனுரைக்கும்.

(இ-ள்.) குன்று எறிந்த வேள் வழிபடு குறுமுனிக்கு உரைத்தான் - கிரவுஞ்சகிரியைத் தகர்த்தெறிந்த அம்முருகவேள் தன்னை வழிபட்ட அகத்தியமுனிவனுக்குத் திருவாய்மலர்ந்தருளினன், அன்று தொட்டு அஃது அகத்திய சங்கிதையாகி நின்றது - அக்காலந்தொட்டு அச்சங்காரசங்கிதை அகத்தியசங்கிதையெனப் பெயர் பெற்று நிலைபெற்றது, அன்னது கேட்பவர்க்கு அரன் அடி நீழல் ஒன்றும் இன்பம் வீடு அளிப்பது ஆ ஒருதலன் உரைக்கும் - அவ்வகத்தியசங்கிதை கேட்போர்க்குச்சிவபெருமான் திருவடி நீழலில் கலத்தலாகிய பேரின்பமுத்தியைத் தருவதாக ஒருதலத்தை விதந்து கூறுநிற்கும்.

ஒன்றும் என்னும் பெயரெச்சம் - தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு நின்றது.

அதிகவப்பதியாதெனிலாலவாய்கேட்கக்
கதியளிப்பதென்றோதியசூதனைக்கதியின்
மதியைவைத்தவரன்னதைப்பகரெனவந்த
விதியினிற்புகல்கின்றனன்வியாதன்மாணாக்கன்.

(இ-ள்.) அதிக அப்பதி யாது எனில் ஆலவாய் - மேம்பாடுள்ள அத்தலம் யாதென்று வினவில்திருவாலவாயாம், கேட்க கதி அளிப்பது என்று ஓதிய சூதனை கதியின் மதியை வைத்தவர் அன்னதை பகர் என - காதாற்கேட்டளவில் மோக்ஷத்தைத் தரவல்லதென்று சொல்லிய சூதமுனிவனைநோக்கி அம்மோக்ஷத்தில் தமது சிந்தையைப்பதித்த முனிவர்கள் அத்தலமான்மியத்தைச் சொல்லாய் என்றுவினவ, வியாதன் மாணாக்கன் வந்த விதியினில் புகல்கின்றனன் - வியாதன் மாணாக்கனாகிய சூதமுனிவன் தொன்றுதொட்டு வழங்கிவந்த முறைப்படிச் சொல்லாநின்றான். (கசு)

புதியதாமரைமேவியபழமறைப்புத்தேள்
விதியினாற்கடுநடைப்பரிமகஞ்செய்வான்வேண்டிக்
கதியைமாய்ந்தவர்க்குதவுதண்டுறைகெழுகாசிப்
பதியின்மைந்தரோடெய்தினன்பண்டொருவைகல்.

(இ-ள்.) புதிய தாமரை மேவிய பழமறை புத்தேள் - அன்றலர்ந்த தாமரை மலரில் வசிக்கும் படைப்புத் தொட்டுள்ள வேதங்களின்றலைவனாகிய பிரமன், விதியினால் கடு நடை பரி மகம் செய் வான் வேண்டி - அவ்வேதவிதிப்படி வேகமிக்க நடையையுடைய அசுவமேதயாகஞ் செய்ய விரும்பி, மாய்ந்தவர்க்கு கதியை உதவும் தண் துறை கெழு காசிப்பதியில் - தன்னிடத்தில் இறந்தவர்க்கு மோக்ஷத்தைத்தாராநின்ற தண்ணிய நீர்த்துறை மிக்க காசித்திருப்பதியில், பண்டு ஒரு வைகல் மைந்தரோடு எய்தினன் - முன்னொருகாலத்துத் தன்புத்திரரோடு சென்றான். (கஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அகத்தியன்வியாதனூரதன்சனகனுநிகான்முனிவர்கோதமனூற்
சிகைத்தெளிவுணர்ந்தபராசரன்வாமதேவன்வான்மீகியேவசிட்டன்
சகத்தியல்கடந்தசுகன்முதன்முனிவர்தம்மொடும்பத்துவெம்பரிமா
மகத்தொழின்முடித்துமற்றவர்க்குள்ளமகிழ்வுறவழங்குவழங்கா,

(இ-ள்.) அகத்தியன் வியாதன் நாரதன் சனகன் ஆதி நால்முனிவர் கௌதமன் - அகத்தியரும் வியாசரும் நாரதரும் சனகர் முதலாகிய நால்வகை முனிவர்களும் கௌதமரும், நூல் நிலை தெளிவு உணர்ந்த பராசரன் வாமதேவன் வான்மீகி ஏ வசிட்டன் - வேதநூல் முடிவின் துணிபொருளாகிய பரசிவத்தை புணர்ந்த பராசரரும் வாமதேவரும் வான்மீகியும் வசிட்டரும், சகத்து இயல் கடந்த சுகன் முதல் முனிவர் தம்மொடும்-பிரபஞ்சத்தியல்பைக்கடந்த சுகர் முதலாகிய முனிவர்களும் ஆகிய இவர்களோடும், பத்து வெம் பரிமா மகத்தொழில் முடித்து-பத்து அசுவமேதயாகங்களைச் செய்து முடித்து, அயர்க்கு உள்ளம் மகிழ்வு உற வழங்குக வழங்கா - அம்முனிவர்களுக்கு மனம் மகிழக்கொடுக்குந் தக்கணைகளைக் கொடுத்து.

சனகனாதி நான்முனிவர்-சனகர், சநந்தனர், சனத்தனர், சனற்குமாரர். வான்மீகி, எனபதனிறுதியி லிருக்கும் ஏகாரம் எண்ணேகாரம் ஆகையால் அதனைப் பிரித்து வேறாயெடுத்துக் கூட்டுக. சகம்-தோன்றியழிவதென்னும் பொருட்டு, ஆதலால் பிரபஞ்சமெனவும். வெம் பரிமா-கடுநடையை யுடைய குதிரை. (கஅ)

சத்தியவுலகிற்சரோருகக்கிழவன்சார்ந்தபின்புலப்பகைசாய்த்த
வத்திருமுனிவரனைவருங்காசியடிகளையடைந்தனர்பணிந்து
முத்திமண்டபத்தினறமுதனான்குமொழிக்கருண்மூர்த்திசந்நிதியிற்
பத்தியாயிருந்துநாரதமுனிவனைப்பார்த்தொருவினவுரைபகர்வார்.

(இ-ள்.) சரோருகம் கிழவன் சத்திய உலகில் சார்ந்தபின்-தாமரையில் வசிக்கும் பிரமன் சத்தியலோகத்தை யடைந்தபின், புலப்பகை சாய்த்த அத்திருமுனிவர் அனைவரும் - இந்திரியப்பகையைப் புறங்கண்ட தவச்செல்வத்தை யுடைய அம்முனிவர்களெல்லாரும், காசி அடிகளை அடைந்தனர் பணிந்து - காசியி லெழுந்தருளிய சிவபெருமானை யடைந்து வணங்கி, முத்தி மண்டபத்தின் அறம் முதல் நான்கும் மொழிந்தருள் மூர்த்தி சந்நிதியில் பத்தியாய் இருந்து - முத்திமண்டபத்தினகத்தே தருமமுதலிய நான்கு பொருள்களையும் (சனகர்முதலாகிய நான்கு முனிவர்களுக்கு)க் கூறியருளிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் அன்பாய வரிசைபட விருந்து, நாரதமுனிவனைப் பார்த்து ஒரு வினவு உரை பகர்வார் - நாரதமுனிவனைப் பார்த்து ஒன்று வினவுகின்றார்கள்.

அறம் முதல் நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு. அடைந்தனர் - முற்றெச்சமாய் நின்றது. (கக)

தலமுதன்மூன்றுஞ்சிறந்ததோர்சைவதலமுரையென்னநாரதன்றான்
கலைமுழுதுணர்ந்தசனற்குமாரன்பாற்கற்றவன்வியாதனுமவன்பா
னலமுறக்கேண்மினெனவவன்கதிர்வேனம்பியான்மறைமுதலனைத்து
மலமறவுணர்ந்தோன்குறுமுனியாகுமவனிடைக்கேண்மெனவிடுத்தான்.

(இ-ள்.) தலமுதல் மூன்றும் சிறந்தது ஓர் சைவதலம் உரை என்ன - தலமுதலிய மூன்றுபொருள்களானும் மேம்பட்ட ஒரு சிவதலத்தைச்சொல்லாயென்று வினவ, நாரதன் தான் - நாரதமுனிவன், கலைமுழுதும் உணர்ந்த சனற்குமாரன்பால் கற்றவன் வியாதனும் அவன்பால் நலம் உற கேண்மின் என - நூல்முற்றும் ஆராய்ந்துணர்ந்த சனற்குமாரமுனிவனிடத்துக் கற்றுணர்ந்தவன் வியாதமுனிவனும் அவனிடத்து நன்மைமிகக்கேளுங்கள் என்றுகூற, அவன்-அவ்வியாதமுனிவன், கதிர்வேல் நம்பியால் - ஒளிமிக்க வேலையேந்திய முருகக்கடவுளிடத்து, மறைமுதல் அனைத்தும் அலம் அற உணர்ந்தோன் குறுமுனி ஆகும் அவன் இடை கேண்மெ

கன்

னவிடுத்தான் - வேதமுதலிய நூல்முற்றும் சுழற்சிநீங்கக் கற்றுணர்ந்தவர் அகத்தியமுனிவராம் அவரிடத்துச்சென்று கேளுங்களென்று கூறினன்.

சுழற்சியாவது - ஐயம், திரிபு. தலமுதன்மூன்று - தலம், தீர்த்தம், மூர்த்தி. விடுத்தல் - விடைதரல், ஆதலால் கூறினான் என்றும். சிறந்தது வினைமுற்றுப்பெயரெச்சமாய்நின்றது. முழுதென்பதனிறுதியில் முற்றும்மைதொகுத்தல். (உO)

மலயமாதவனையடைந்துகைதொழுதுவாழ்த்திவாதாவிவில்வலனைக்
கொலைபுரிதருமமூர்த்தியேவிந்தக்குன்றடக்கியதவக்குன்றே
யலைகடல்குடித்தவருட்பெருங்கடலேயருந்தமிழ்க்கொண்டலேதென்பா
றுலைபெறநிறுத்தகளைகணேயென்றுசுருதியாயிரமெனத்துதித்தார்.

(இ-ள்.) மலயம் மாதவனை அடைந்து கைதொழுது வாழ்த்தி-பொதியமலையிலெழுந்தருளிய அகத்தியமுனிவரை யடைந்து கைகூப்பித் துதிசெய்து, வாதாவி வில்வலனை கொலைபுரி தருமமூர்த்தியே - வாதாவி வில்வலன் என்னும் அசுரர்களைக் கொலைசெய்த தருமவடிவாயுள்ளவனே, விந்தக்குன்று அடக்கிய தவக்குன்றே - விந்தபருவதத்தையடக்கிய தவபருவதமே, அலைகடல் குடித்த அருள் பெரும் கடலே - கரையை அலைக்கும் அலையையுடைய சமுத்திரத்தைப்பருகிய பெரியகருணைசமுத்திரமே, அருந்தமிழ் கொண்டலே - அரியதமிழ்சுரக்கும் மேகமே, தென்பால் துலைபெற நிறுத்த களைகணே என்று-(உயர்ந்த) தென்திசை துலாக்கோல்போலச் சமனுறநிறுத்திய பற்றுக்கோடே என்று, ஆயிரம் சுருதி என துதித்தார் - அளவில்லாதவேதங்கள்திரண்டு நின்று துதித்தாற்போல, திரண்டுநின்று துதித்தார்கள்.

அசமுகி என்னும் பெயரையுடைய வோரசுரப்பெண், நாரதமுனிவரைவலிந்துதழுவி வில்வலன் வாதாவி என்னும் இரண்டுபிள்ளைகளைப்பெற்றுள், அவர்கள் இருவரும் தமது தாயினிடத்து விடைபெற்று ஓர்வனத்திற்சென்று கொடியவோர் யாகஞ்செய்து தாங்கள்வேண்டிய வரங்களைப் பிரமனுற்பெற்று மேற்றிசையில் நான்குவழியுங்கூடும் ஓரிடத்தில்வரும் முனிவர்களைக்கொல்ல வோர் பன்னசாலையையமைத்து வாதாவியை ஓர் ஆடாக்கித் தான் தவவேடத்தை மேற்கொண்டு விருந்துசெய்து முனிவர்களைக்கொன்றுதின்று வாழும் நாள்களில், அகத்தியமுனிவர் அந்நெறியேவர அவரைநோக்கி நம் குலத்தினரைக்கொல்லும் இவரை நாம்கொல்லவேண்டுமென்றுகருதி எதிர்சென்று தமதுசாலைக்கழைத்துவந்து ஆடாய்நின்ற வாதாவியைக்கொன்று கறிசமைத்து ஊட்ட உண்டு இருந்தபின, வில்வலன்தம்பிவருகவென்றழைக்க வயிற்றுட்சென்ற வாதாவி ஆட்டுவடிவங்கொண்டு முழங்க, அதனையுணர்ந்த அகத்தியமுனிவர் கோபங்கொண்டு இவன்முடியக்கடவன் என்று வயிற்றைத்தடவ மடிந்தான், அதனைக்கண்ட வில்வலன்கோபத்தோடு ஓர் தண்டாயுதங்கொண்டு போர்செய்யவர அம்முனிவர் ஓர் தருப்பையைப் பாசுபதாஸ்திரமாகப் பாவனைசெய்து பிரயோகஞ்செய்ய அவனும் மடிந்தனன். என்பது காந்தம் அசுரகாண்டம்-வில்வலன் வாதாவிவதைப்படலத்தில்.

"ஊன்கொண்டகறியாகிநுகர்வுற்றவாதாவியுயிர்போகியுண்டவியல்பே
தான்கொண்டுமுடிகென்றுசடரத்தையொருகாலைதமிழ்வல்லமுனிதடவலும்
கான்கொண்டவெரிமண்டுசிறுபுன்புதற்போன்றுகடியோனுமுடிவாகவே
வான்கொண்டலெனவங்கண்முன்னின்றவன்தம்பிமாய்வுற்றதுன்னிவருவான்."

"மெய்க்கொண்டதொன்னுளுருக்கொண்டுமுனிதன்னைவெகுளுற்றோர்தண்டமதனைக், கைக்கொண்டுகொலையுனனி வருபோதிதின்முனிவன்கரத்திற்றருப்பை

வந்து இறக்கும் சேவல்கள் தமையும் - முத்திமண்டபத்தின்கண் நான்கென்னுந் தொகைபெற்று வந்திறந்தகோழிகளையும், ஐங்கரன் தனையும் சேவலங்கொடி வடி வேல் உடை காவலன் தனையும் வடநிழல் அமர்ந்த கண்ணுதல் பரனையும் பணியா - ஐந்துதிருக்கரங்களையுடைய மூத்தபிள்ளையாரையும் சேவற்கொடியையும் வடித்த வேலையுமுடைய முருகக்கடவுளையும் கல்லாலநிழலின்கீழ் எழுந்தருளிய தக்ஷிணா மூர்த்தியையும்வணங்கி.

காசிநகரத்தில் மூன்றாம்யுகத்தில் பலநூல்களையுங்கற்றுணர்ந்த மாகனந்த னென்னும் ஓர்மறையவன் கொடுந்தொழிலுடையவனாய்த் திரிதருங்காலத்து, அங் கோர் நீசன் தானமாகக்கொடுத்த பொருளையேற்றதனால் ஏனைமறையவர்கள் இவ னுஞ் சண்டாளனே என்று அந்நகரினின்றும் அகற்ற, தன்மனைவிமக்களோடு கீகட தேயம் நோக்கிச்செல்லுவோன் கங்கையாடிக் காவடிகொண்டு செல்லுவோரைத் துணையாகக்கருதி அவர்கள்பின் கரந்துசெல்லும்போது, வேடர்கள் எதிர்ந்து அவ னிடத்துள்ள பொருளைச் சூறையாடி மனைவிமக்களோடு அவனையும்கொலைசெய்தார் கள், உயிர்விடுங்கால் அம்மாகனந்தன் காசிநகரத்தை மனத்திலெண்ணி உயிர்விட்ட புண்ணியவசத்தால் அக்கீகடதேயத்தில் முற்பவவுணர்ச்சியோடு சேவலாய்ப்பிறந் து தன்மக்களிருவருங் குஞ்சுகளாகவும் தனமனைவி பெடையாகவும், அங்குச்சில நாள்வசித்துக் காசிக்குச்செலலுவாரோடு தொடர்ந்து சென்று முத்திமண்டபத் தையடைந்து அங்குவசித்து இறந்தமையால் சிவபதத்தையடைந்தனன. என்பது காசிகாண்டம்-முத்திமண்டபத்தின கதையுரைத்த அத்தியாயத்தில்.

> "கருமபுகுதட்டிச்சாறெழுதுங்கடைவாய்மேதிகண்படுக்கு
> மிருந்தண்புனல்சூழ்காசிதனையிதயத்தெண்ணியிறந்தனால்
> வரம்பிறசாலிமுந்துயிர்க்கும்வயற்கீகடத்தில்முற்பவத்தற
> றிருந்துமுணர்வோடவனரதத்தச்சூட்டுச்சேவலாயினனால்."

> "மக்களிருவர்பார்ப்பாகமடமாதேனுக்கிபேடாக
> வொக்கவுறையுநாளதனிற்காசிக்கேகுமவரோடு
> செக்கர்நிறத்தகூர்வாயசூட்டுச்சேவல்பெடைதொடர்த
> தொக்கபார்ப்பினொடுங்காசிதொலலைநகரிற்சென்றனனே."

> "செங்கட்கயவாய்மோட்டெருமைசெழுநீக்குவளைப்போதருந்திய
> பங்கப்பழனத்துலைநதுழக்கப்பணிலமுழங்குகாசியினிற
> றிங்கடவழ்ந்துவிளிம்புரிஞ்சமுத்திமாடத்திடைச்சேர
> வங்கணிறந்துபடுமேற்றுறகயிலைவரையினடையுமால்."

சேவல்-கோழியின்பரியாயப்பெயர். (உஉ)

அங்கயற்கண்ணிதன்னையுமெந்தையாலவாயானையுமிதய
பங்கயத்திருத்திச்சமாதியிலிருந்துபரவசமடைந்துபார்ப்பதிக்குச்
சங்கரனருளிச்செய்தசங்கிதையைததாரகனுடலிரண்டாகச்
**செங்கைவேல்விடுத்தசேவகனெனக்குத்தெருட்டினனையசங்கிதையில்.**

(இ-ள்.) அங்கயற்கண்ணி தன்னையும் எந்தை ஆலவாயானையும் - அங்கயற்க ண்மையையும் எனதந்தையாகிய திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்க டவுளையும், இதயபங்கயத்து இருத்தி - தனது இருதயதாமரையில் இருத்தி, சமாதி யில் இருந்து பரவசம் அடைந்து-சமாதிகூடிப் பரவசப்பட்டு, பார்ப்பதிக்குச் சங்க ரன் அருளிச்செய்த சங்கிதையை - உமாதேவியாருக்குச் சிவபெருமான் அருளிச் செய்த சங்கிதையினை, தாரகன் உடல் இரண்டாகச் செம் கை வேல் விடுத்த சேவ

கன் எனக்கு தெருட்டினன்-தாரகாசுரன் உடலம் இரண்டுதுண்டாகத் தமதுசெ
ந்திருக்கரத்திலேந்தியவேலை யெறிந்த முருகக்கடவுள் எனக்குத்தெளிவுபெற அரு
ளிச்செய்தார், அனையசன்னிதையில் - அந்தச்சந்நிதையில்.

சமாதிகூடல் - அசைவறவிருத்தல். பரவசமடைதல் - சூரியனொளியும் கண்
ணொளியும்போல முதல்வன் வியாபகவறிவில் ஆன்மவறிவு வியாப்பியமடைந்து
"அவனிவனாய்" நின்றமுறைப்படி நேயத்தழுந்தல். தாரகன்-சூரனுக்கு இளையோன்.
பிரமன்முதலியதேவர்கள் இடுக்கணீங்கவும் தேவர்கள் முதலிய படைவீரர்கள்
புடைசூழவும் சூரனூர்நோக்கிச்செல்லுங் குமாரக்கடவுள் கிரவுஞ்சகிரியைய
டைந்தருள, நாரதமுனிவன் திருவடிவணங்கி எமதுபெருமானே இம்மலை கிரவுஞ்
சன் என்னும் ஓர்பேரையுடைய ஓரசுரன் இவன் இங்கிருந்து வழிவருமுனிவர்பல
ருக்குந் துன்பஞ்செய்து வருநாள், அகத்தியமுனிவரும் ஓர்கால் இவ்வழிவருகையில்
அம்முனிவருக்குந் தனது மாயையால் பலதுன்பங்களைப் புரிவித்தனன்; அவற்றை
நோக்கி இவையோர் அவுணனசெயலெனக்கருதி இம்மலைவடிவாகியேநின்று எம்பி
றைவன திருக்கரத்துவேலால் நாசமடைகவெனச் சபிக்க, அன்றுதொட்டு இம்மலைவ
டிவாகியேநின்று இந்நெறிவருமுனிவர்களை அலைத்து நிற்கின்றனன்; இம்மலையி
னொருபாலுள்ள மாயாபுரத்தில் சூரனுக்கிளைய தாரகனென்பவன் வசித்துப் பிர
மன்முதலியோருக்கு இடையூறுசெய்கின்றனன்; இவனைவெற்றிகொள்ளில் சூரனை
வெல்லுதல் எளிதெனக்கூற, அவ்வாறே செய்குவோமென்று கருணைகூர்ந்து வீர
வாகுமுதலிய படைவீரரை விடுத்தருளினர், வீரவாகு, படைவீரரோடு சென்று
அத்தாரகனோடு போர்செய்யத் தொலைவுற்றவனை கிரவுஞ்சகிரியிலுள்ள வோர்
முழைபிற்புகுந்த அவன்பின்சென்ற வீரவாகுமுதலியோர் அம்முழையிற்சென்று ம
யங்கிக்கிடத்தலை நாரதமுனிவர் சொல்ல, அக்குமாரக்கடவுள் தமது திருக்கரத்து
வேலெறிந்து அத்தாரகனை மாயையுடன்கிழித்துக் கிரவுஞ்சகிரியையுஞ் சிதைத்தனர்.
என்பது கந்த-உற்பத்திகாண்டம் - தாரகனவதைப்படலத்தில்.

> "தாரகன்மார்பமெனனுமோ ரிடம்பெருவரைமெய்கீண்டு
> பேரியகிரவுஞ்சத்திறமுமோர்துகளடுருவிச்சென்று
> வீரமும்புகழுங்கொண்டுவிசும்பியங்கியசெவ்வேள்கை
> சோரியுந்துகளுமாடித்துண்ணெனமீண்டதன்றே."

எனவருஞ்செய்யுளாலுணர்க. (உ௯)

பெறற்கருந்தவஞ்செய்தகந்தெளிந்தரிதிற்பெருங்கதிகேட்பவர்க்கெளிதா
யுறப்படுந்தலநீர்விருப்பமுச்சிறப்புமுள்ளதெத்தலத்தினுங்கழிந்த
சிறப்பினுங்கண்ணெண்டிருவிளையாடல்செய்தருள்வடிவெடுத்தென்று
மறைப்பொருள்விளங்குமாலவாயதனைமண்ணின்மேற்சிவனுலகென்னும்.

(இ-ள்) பெறற்கு அரும் தவம் செய்து அகம் தெளிந்து அரிதில் பெரும்
கதி கேட்பவர்க்கு எளிதாய் உறப்படும் தலம் நீர் விருப்ப முச்சிறப்பும் உள்ளது-
அடைதற்கரிய தவங்களைச்செய்து மனந்தெளிந்து அரிதாகப்பெறும் மோட்சம் வே
ட்பவர்க்கு எளிதாகக்கிடைக்குந்தலமாய நீங்கள்வினவிய தலச்சிறப்புமுதலிய மூ
ன்றுசிறப்பும் உள்ளது, எத்தலத்தினும் கழிந்த சிறப்பினது - எவ்வகைப்பட்ட சை
வதலங்களிலும் மேம்பட்ட சிறப்பினையுடையது, அருள்வடிவெடுத்து எண்ணெண்
திருவிளையாடல் செய்து என்றும் மறைப்பொருள் விளங்கும் ஆலவாய் - திருவரு
ளே திருமேனியாகக்கொண்டு அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச்செய்து எப்

பொழுதும் வேதத்தின்பொருளாகிய சிவபெருமான்விளங்கும் திருவாலவாயாம், அதனை மண்ணினமேல் சிவன் உலகு எனனும் - அத்தலத்தைப் பூவுலகில் சிவலோகமென்று சொல்லாநிறகும்.

சிறப்பினது - ஈறுதொக்குநின்றது. முச்சிறப்பு - பன்மையில் ஒருமைவந்த பால்வழுவமைதி. ஆய - வினையெச்சததிரிபு. உறப்படும் - உட்கப்படார் என்றாற்போலப் படுசொறகுப் படுபொருளினறிவந்த பெயரெச்சம். ஆங்கு-அசைநிலை.(உ௪)

அத்தலத்தனையமூவகைசசிறப்புமளவிலாவுயிர்க்கெலாங்கருணை
வைத்தவன்செயததிருவிளையாடடும்வரையுரங்கிழியவேலெடுத்த
வித்தகனெனக்குவிளம்பியவாறேவிளம்புவனுயகனென்வந்த
வுத்தமமுனிவாயாவருங்கேட்கவுணர்த்துவான்கடலெலாமுண்டான்.

(இ-ள்.) அத்தலதது அனைய மூவகைச் சிறப்பும் - அநதத்தலததில் அத்தன்மையையுடைய மூவகைச்சிறபபுகளையும், அளவு இல்லா உயிர்க்கு எல்லாம் கருணை வைத்தவன் செய்த திருவிளையாட்டும்-அளவிறநத எல்லா ஆன்மகோடிகளிடத்தும் கிருபைவைத்த சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடல்களையும், வரை உரம் கிழிய வேல் எடுத்த விததகன எனக்கு விளம்பிய ஆறே உமக்கு விளமபுவன் என்ன - கிரவுஞ்சகிரியின மார்பங்கிழிபட வேலைத்தொட்டருளிய முருகக்கடவுள் எனக்குச் சொல்லியவண்ணமே உஙகளுக்குச் சொல்வேன என்று, கடல் எல்லாம உண்டான்-கடல் முறறும்பருகிய அகததியா, வந்த உத்தம முனிவர் யாவரும் கேட்க உணர்த்துவான - தம்பால்வநத முதன்மைபெற்ற முனிவாகளெல்லோருங் கேட்கச் சொல்லததொடஙகினார்.

பாவசமடைந்து என்பவற்றிலுள்ள வினையெச்சம் உணர்த்துவான் என்னும் வினைமுற்றின முதனிலைகொணடது. (உ௫)

புராணவரலாறு முற்றிறறு.

ஆகப்பாயிரம் உளபடத திருவிருததம் - உ௬௧.

## தலவிசேடம்.

அறுசீரடி பாசிரியவிருததம.

நாட்டமொருமூன்றுடையநாயகனுக்கன்புடையீரநயந்துநீவிர்
கேட்டதலமீண்டுரைதததிருவாலவாயதனுட்கிளைத்துபபொன்னங்
தோடடலர்தாமரைமுளைத்தொருதடமுஞ்சுந்தரசசெஞ்சோதிஞான
வீட்டமெனமுளைத்தசிவலிஙகமுமொன்றுளவின்னுமிசைப்பககேண்மின்.

(இ-ள்.) நாட்டம் ஒரு மூன்று உடைய நாயகனுக்கு அன்புடையீர-திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானிடதது அனபுநிறைந்தமுனிவர்களே, நயந்து நீவிர் கேட்டதலம் ஈணடு உரைத்த திருவாலவாய்-விரும்பிநீஙகள்கேட்டதலம் இப்போது யாம்கூறிய திருவாலவாயாம, அதனுள் கிளைதது பொன்னம் தோடு அலா தாமரை முளைதது ஒருதடமும்-அத்தலத்தில் நிறைந்து பொன்னிறம்வாய்ந்த இதழ் அலர்ந்த தாமரைமுளைத்த ஒருதடாகமும்,சுந்தரம் செம சோதி ஞானம் ஈட்டமென முளைத்த சிவலிங்கம் ஒன்றும் உள்ள - அழகிய செவந்த சோதிமயமாகிய ஞானக்கூட்டம் போலத்தோன்றியருளிய சிவலிஙகமொன்றும் இருக்கின்றன, இன்னும் இசைப்ப கேண்மின் - இன்னமுஞ் சொல்லக் கேளுங்கள்.

சிவலிங்கம் என்பதன் இறுதியில்நின்ற உம்மையைப்பிரித்து ஒன்றென்பதனோடு கூட்டிப் பொருள்கொளக. (௧)

## தலவிசேடம்.

திருவாலவாய்க்கிணையா மொருதலமுந் தெய்வமணஞ் செய்யப்பூத்த
மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமுமத் தீர்த்தத்தின் மருங்கின் ஞான
வுருவாகி யுறைசோம சுந்தரன்போ லிகபரந்த் தருவலவாவீடு
தருவானு முப்புவனத் தினுமில்லை யுண்மையிது சாற்றின் மன்னோ.

(இ-ள்.) சாற்றின்-சொன்னால், திருவாலவாய்க்கு இணையாம் ஒருதலமும்- திருவாலவாய்க்கு ஒக்கும் ஒருதலமும், தெய்வம் மணம் செய்ய பூத்த மரு ஆர் பொன் கமலம் நிகர் தீர்த்தமும்- தெய்வத்தன்மையையுடைய வாசம்கமழ மலர்ந்த மணம்நிறைந்த பொற்றாமரைத்தீர்த்தத்தை யொத்த தீர்த்தமும், அ தீர்த்தத்தின் மருங்கில் ஞான உருவாகி உறை சோமசுந்தரனைப்போல இகபரம் தந்து அலவா வீடு தருவானும் - அந்தப்பொற்றாமரைத் தீர்த்தத்தின் பக்கத்தில் ஞானசொரூபமா யெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளைப்போல அடைந்தோர்க்கு இகலோகத்தையும் பரலோகத்தையுந் தந்து என்றும் அழியாத மோக்ஷத்தையுந் தந்தருளுங் கடவுளும், முப்புவனத்தினும் இல்லை-சுவர்க்கமுதலிய மூன்று உலகங்களிலும் இல்லை, இது உண்மை - இது சத்தியம். (உ)

அவ்வகைய மூன்றின் முதற் றலப்பெருமை தனைச் சுருக்கி யறையக் கேண்மி
னெவ்வகைய வுலகத்துந் தருமதல மிகமேவு மிறப்பில்லாத
சைவதல மிகமேவு மறுபத்தெட்ட திகமவை தம்மி லொட்டுத்
தெய்வதல மிகமேவு மற்றதனிற் றலநான்கவற்றைச் செப்பக் கேண்மின்.

(இ-ள்.) அவ்வகைய மூன்றில் - அத்தன்மைபட்ட தலமுதலிய மூன்றில், முதல் தலப்பெருமைதனை சுருக்கி அறைய கேண்மின் - முன்னுள்ள தலவிசேடத்தைச் சுருக்கிச்சொல்லக் கேளுங்கள், எவ்வகைய உலகத்தும் தருமதலம் அதிகம் - பலவகைப்பட்ட வுலகங்களிலும் புண்ணியக்ஷேத்திரங்கள் மேம்பட்டனவாம், அவற்றுள் இறப்பில்லாத சைவதலம் அதிகம் - அவைகளில் அழிவில்லாத சைவதலங்கள் அதிகமாம், அவற்றுள் அறுபத்து எட்டு அதிகம் - அச்சைவதலங்களுள் அறுபத்தெட்டுத் திருத்தலங்கள் மேம்பட்டனவாம், அவை தம்மில் ஒட்டு தெய்வதலம் அதிகம் - அத்திருத்தலங்களுள் பொருந்தும் தெய்வத்தன்மையுடைய திருத்தலங்கள் மேம்பட்டனவாம், அவற்றுள் அதிகம் தலம் நான்கு - அவற்றுள் மேம்பட்ட திருத்தலங்கள் நான்காம், அவற்றை செப்ப கேண்மின் - அத்திருத்தலங்கள் நான்கினையுஞ் சொல்லக் கேளுங்கள். (௩)

அன்னமலி வயற்புலியூர் காசிநகர் காளத்தி யாலவாயா
மின்னவளம் பதிநான்கி னிற்றிருவாலவாயதிக மெவ்வாறென்னின்
மின்னவிர மபலங்காணக் காசிநகர் வதிந்திறக்க வியன்காளத்திப்
பொன்னகரம் பத்தியினால் வழிபாடு செயவளிக்கும் போகம் வீடு.

(இ-ள்.) அன்னம் மலி வயல் புலியூர் காசிநகர் காளத்தி ஆலவாய் ஆம் இன்ன வளம்பதி நான்கில் - அன்னப்பறவைகள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த சிதம்பரம் காசி திருக்காளத்தி திருவாலவாய் என்னும் இந்நான்கு திருத்தலங்களிலும், திருவாலவாய் அதிகம் - திருவாலவாய் மேம்பட்டதாம், எவ்வாறு எனின் - எவ்வகையால் என்று வினவில், மின் அவிர் அம்பலம் காண - ஒளிவிளங்கிய அச்சிதம்பரம், தன்னைத்தரிசித்தலால், காசிநகர் வதிந்து இறக்க-காசிநகர், தன்னிடத்தில்வசித்து இறத்தலால், வியன் காளத்தி பொன் நகரம் பத்தியினால் வழிபாடு செய-பெரு

மைமிக்க திருக்காளத்தி என்னும் அழகிய நகரம், அன்பால் தனக்குவழிபாடுசெய்து பூசித்தலால், போகம் வீடு அளிக்கும் - (ஆன்மாக்களுக்கு) போகத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்காநிற்கும்.

ஏழனுருபு, கூட்டிப் பிரித்தற்பொருளில் வந்தது. காண முதலிய அகரவீற்று வினை எச்சங்கள் காரணப்பொருளில் வந்தன. (ரு)

அறந்தழையுந்திருவாலவாய்கேட்டவுடன்போகமளிக்குமீண்டு
பிறந்திறவாப்பேரின்பக்கதியளிக்குமிதுவன்றிப்பிறழாதெங்கு
நிறைந்தபரனெத்தலமும்படைப்பானித்தலத்தைமுதனிருமித்திங்க
ணுறைந்தருளினனன்றியின்னமுளநிதன்பெருமையுரைப்பக்கேண்மின்.

(இ-ள்.) அறந்தழையும் திருவாலவாய் கேட்டவுடன் போகம் அளிக்கும் மீண்டு பிறந்து இறவா பேர் இன்பம் கதி அளிக்கும் - தருமங்கள் தழைத்தோங்குந் திருவாலவாய் கேட்ட அப்பொழுதே முன்பு போகத்தைத் தராநிற்கும், மீளப்பிறந்திறவாமல் பேரின்பமோக்ஷத்தையுந் தராநிற்கும், இது அன்றி - இதுவுமல்லாமல், பிறழாது எங்கும் நிறைந்த பரன - சஞ்சலமற எவ்விடத்தும் நிறைந்த சிவபெருமான், எத்தலமும் படைப்பான் இத்தலத்தை முதல் நிருமித்து இங்கண் உறைந்தருளினன்-எல்லாத்தலங்களையுஞ் சிருட்டிக்கும்பொருட்டு இத்தலத்தை முன்பு சிருட்டித்து இவ்விடத்தெழுந்தருளியிருந்தனர், அன்றி இதன பெருமை இன்னம உளது-இதுவுமன்றி இத்தலப்பெருமை இன்னமு முளது, உரைப்ப கேண்மின - யாம் சொல்லக் கேளுங்கள்.

உடன் என்னும் இடைச்சொல்-அப்பொழுது என்னும்பொருள்மேலும், எகர வினாவிடைச்சொல்-எல்லாம் என்னும் பொருண்மேலும் நின்றன. மீண்டு செயவெனெச்சததிரிபு. இகரச்சுட்டோடு பொருந்தாமையால் இங்கண், இதன எனப்பாடங் கொண்டாம். (சு)

திருவாலவாயென்றுகேட்டவரேயறம்பெறுவர்செல்வமோங்குந்
திருவாலவாயென்றுநினைத்தவரேபொருளடைவார்தேவதேவைத்
திருவாலவாயிடத்துக்கண்டவரேயின்பநலஞ்சேர்வரொன்றுந்
திருவாலவாயிடத்துவதிந்தவரேவீட்டுநெறிசேர்வரன்றே.

(இ-ள்.) திருவாலவாய் என்று கேட்டவர் ஏ அறம் பெறுவர்-திருவாலவாய் என்று ஒருவர் சொல்லக்கேட்டவர்களே தருமப்பயனை அடைவார்கள், செல்வம் ஓங்கும் திருவாலவாய் என்று நினைந்தவர் ஏ பொருள் அடைவர்-பலசெல்வங்களும் நிறைந்தோங்குந் திருவாலவாய் என்று சிந்தித்தவர்களே பொருட்பயனை யடைவார்கள், தேவ தேவைத் திருவாலவாயிடத்து - அயனமுதலிய தேவர்களுக்குத் தேவனுயுள்ள சோமசுந்தரக்கடவுளை திருவாலவாயிடத்தில், கண்டவரே என்றும் இன்ப நலம்சேர்வர் - தரிசித்தவர்களே எப்பொழுதும் இன்பப்பயனை யடைவார்கள், திருவாலவாய் இடத்து வதிந்தவர் ஏ வீடு நெறி சேர்வர் - திருவாலவாயில் வாசஞ்செய்பவர்களே மோக்ஷநெறியை அடைவார்கள்.

ஏகாரம் பிரிநிலைப் பொருள்மேனின்றது. (எ)

சீரதிரூழ்காசிமுதல்பதிமறுமைக்கதியளிக்குந்தூநீர்வையை
வாரதிரூழ்திருவாலவாய்சிவன்முத்திதரும்வதிவோர்க்கீது
நிரனதிகம்பரகதியும்பின்கொடுக்குமாதலினிச்சிவன்முத்தி
புரனதிகமென்பதெவனதற்கதுவேயொப்பாமெப்புவனத்துள்ளும்.

(இ-ள்.) சுரநதி சூழ் காசிமுதல் பதி மறுமை கதி அளிக்கும் - தேவ[illegible]ிய கங்கைசூழ்ந்த காசிமுதலிய சிவதலங்கள் மறுமையில் மோக்ஷத்தைத் தராநிற்கும், அந் நீர் வையை வாரநதி சூழ் திருவாலவாய் வதிவோர்க்கு சீவன்முத்திதரும்- பரிசுத்தமாகிய நீர்நிறைந்த வையை என்னும் மேன்மைபொருந்திய நதிசூழ்ந்த திருவாலவாய், தன்னிடத்துவசிப்பவர்க்குச் சீவன்முத்தியைத் தராநிற்கும், ஈது அதிசயம் திரன் - இம்மொழிமிகவும் நிச்சயம், பின் பரகதியும் கொடுக்கும் - பின்பு மறுமையிற் பரகதியையுந்தராநிற்கும், ஆதலின் - ஆதலால், இச்சீவன் முத்திபுரம் அதிகம் என்பது என்-இச்சீவன்முத்திபுரமாகிய திருவாலவாய் (காசிமுதலிய திருப்பதிகளுள்)மேம்பாடுள்ளதென்று கூறுதலால் வரும்பயன் என்ன, எப்புவனத்து உள்ளும்- எல்லாப்புவனங்களுள்ளும் (தனக்கொப்பதோர் தலமில்லாமையால்) அதற்கு அதுவே ஒப்பாம்-அதற்கதுவே நிகராம். (எ)

ஆதலினிப்பதிவிட்டுப் பிறபதிபோய்த் தோற்போரங்கைகொண்ட
சீதளவானமுதேய்ப்பத் தித்திக்கத் தேம்பெய்துசெய்த நிம்பா
லோதனத்தைக் கைவிட்டுப் புறங்கையை நக்குவாரொப்பாரிந்த
மாதலத்தின் பெருமைதனை யாவரே யளவிட்டு வழுத்தற்பாலார்.

(இ-ள்.) ஆதலின்-ஆதலால், இப்பதி விட்டு பிறபதியில் போய் நோற்போர்- இந்தத்தலத்தில் தவஞ்செய்யாது ஏனையதலங்களிலேபோய்த் தவஞ்செய்வோர், அங்கை கொண்ட சீதளம் வான் அமுது எய்ப்ப தித்திக்க தேம் பெய்து செய்த நிம்பால் ஓதனத்தை கைவிட்டு - உள்ளங்கையிலுள்ள குளிர்ந்த தேவாமுதை யொப்பத் தித்திக்கும்படி இனிய தேனைப்பெய்து சமைத்த இனிய பாற்சோற்றை யுண்ணாமல், புறம் கையை நக்குவார் ஒப்பார் - புறங்கையை நக்குவாரை யொப்பாவார், இந்த மாதலத்தின் பெருமைதனை யாவரே அளவிட்டு வழுத்தற்பாலார் - இந்த மகத்தாகிய தலத்தின்பெருமையை எவர்தான் அளவிட்டுச் சொல்லும் தகுதியையுடையோர் (ஒருவருமில்லை யென்றபடி.) (அ)

வேறு

மறைபயில் தலங்கடம்மிற் பரிமகம் வாசபேய
மறமில்சோடசமக்கினிட்டோமம் யார்க்கு
முறற்கருமிராசசூயமுதன்மக முடித்தபேறுஞ்
செற்றமில்தெரிசபூரண முதலிட்டிசெய்த பேறும்.

(இ-ள்.) மறை பயில் தலங்கள் தம்மில் - ஏனையதலங்களில், பரிமகம் வாசபேயம் அறம் இல் சோடசம் அக்கினிட்டோமம் யார்க்கும் உறற்கு அரும் இராசசூயம் முதல் மகம் முடித்த பேறும் - அசுவமேதமும் வாசபேயமும் குற்றமில்லாதசோடசிகமும் அக்கினிட்டோமமும் எவராலுஞ்செய்து முடித்தற்கரிய இராசசூயமும் ஆகிய இவைமுதலிய யாகங்களைச் செய்துமுடித்தலால் வரும் பயனும், செற்றம் இல் தெரிசபூரணமுதல இட்டிசெய்த பேறும் - வருத்துதலில்லாத தெரிசபூர்ணமுதலிய இட்டிகளைச் செய்தலால் வரும்பயனும்.

சோடசிகமெனப் பாடங்கொள்க. செற்றம் - கொல்லுதல் வருத்துதல்மேனின்றது. "கொல்லச்சுரப்பதாங்கீழ்" எனவருதல் காண்க.

வாசபேயமாவது அந்தணர்கள் - (கஉ) தினத்தில் (உ௰) மேடங்களால் சிவபெருமானுக்குப் பிரீதியுண்டாகச்செய்யும் யாகம். சோடசிகம் (ரு) தினத்தில் (௯) மேடங்களால் செய்யும் யாகம். அக்கினிட்டோமமும் அதுவே. இராசசூயம் - எல்லா

அரசர்களையும்வென்று அவர்கள் ஏவல்வழிநிற்ப (ரு) தினத்தில் அல்லது (எ-கூ-கஉ) தினத்தில் நான்கு மேடங்களால் க்ஷத்திரியர்களால் செய்யப்படும்யாகம். தரிசபூர் ணம்-அமாவாசை-பௌர்ணைகளில் சிவபெருமானுக்கு ப்பிரீதி யுண்டுபண்ணச்செய் யும் ஸ்தாலீபாகக்கிரியை. ஆதலால் இதற்கு இஷ்டியெனப் பெயர்வழங்கும்.

முடித்த - செய்த காரணப்பொருளில்வந்த பெயரெச்சங்கள். (கூ)

எள்ளிழுதன்னங்கன்னியிவுளிதேரியானையில்லம்
வெள்ளியான்பொன்பூணுடை விளைவொடுபழனமுன்னுத்
தள்ளருமடிமையாதிதானங்கள்செய்தபேறும்
வள்ளறன்காசியாதிபதிகளில்வதிந்தபேறும்.

(இ-ள்.) எள் இழுது அன்னம் கன்னி இவுளி தேர் யானை இல்லம் - எண் ணெயும் அன்னமுங் கன்னியுங் குதிரையும் தேரும் யானையும வீடும், வெள்ளி ஆன் பொன் பூண் ஆடை விளைவொடு பழனம் - வெள்ளியும் பசுவும் பொனனும் ஆபரணமும் வஸ்திரமும் விளைச்சலோடு வயலும், முனனுதள்ளரும் அடிமையாதி தானங்கள் செய்த பேறும்-நினைத்து நீக்குதற்கரிய அடிமை முதலாகவுள்ள தான ங்களைச்செய்தலால் வரும்பயனும், வள்ளல் தனகாசி ஆதிபதிகளில் வதிந்தபேறும்- சிவபெருமான் எழுந்தருளிய காசிமுதலாகிய திருப்பதிகளில் வசித்தலால் வரும் பயனும்.

முன்னு செய்யாவென்னு வாய்பாட்டு வினையெச்சம. (கo)

கங்கைகாளிந்திவாணிகாவிரிகண்ணவேணி
துங்கபத்திரிதீம்பாலிதூயதண்பொருனைமுன்னுச
சங்கையினதிகண்முற்றுமாடியதவத்தின்பேறு
மங்கலமதுரைதன்னில்வைகலும்வதிவோர்க்கெய்தும்.

(இ-ள்.) கங்கை காளிந்தி வாணி காவிரி கண்ணவேணி துங்கபத்திரி தீம் பா லிதூய தண் பொருனை முன்னு-கங்கையுங் காளிந்தியும் சரஸ்வதியும் காவிரியும கண் ணவேணியும் துங்கபதத்திரியும் இனிய நீர்மயமாகிய பாலியும் குற்றமில்லாத குளிர் ந்த தாமிரபர்ணியும் முதலாக,சங்கையில் நதிகள் முற்றும் ஆடிய தவத்தின்பேறும்- அளவிறந்த நதிகள்முழுதுஞ் சென்றாடிய தவத்தால் வரும் பயனும் (ஆகிய இவை கள்) மங்கலம் மதுரைதன்னில் வைகலும வதிவோர்க்கு எய்தும் - மங்களகரத் தையுடைய மதுரையில் எந்நாளும் வாசஞ்செய்வோர்க்கு எளிதில்வந்து சேரும்.

காளிந்தி - கரியநிறத்தையுடையது. கண்ணவேணி - சையபருவதத்தினின் றும் இந்திரநீலபருவதத்தினருகில்வருவது. தீர்த்தயாத்திரை தவத்தில் ஒருகூறுத லால் ஆடியதவமெனவும, முதலும சினையும் ஒற்றுமையுண்மையால் சினையடை யை முதன்மேலேற்றித் தீம்பாலி எனவுங்கூறினார். (கக)

அன்னியதலங்கடம்மிலாற்றியபிரமகத்தி
பொன்னினைக்களவுசெய்தல்கள்ளுண்டல்புனிதவாசான்
பன்னியைப்புணர்தலின்னபாதகமனைத்துமென்றுங்
தன்னிகராலவாயில்வதிபவாதமைவிட்டேகும்.

(இ-ள்.) அன்னிய தலங்கள் தம்மில் ஆற்றிய பிரமகத்தி - ஏனையதலங்களி ற்செய்த பிரமகத்தியும், பொன்னினை களவு செய்தல்-பிறர்பொருளைத்திருடுதலும், கள் உண்டல் - கள்ளுண்ணுதலும், புனித ஆசான் பன்னியை புணர்தல்-குற்றமில்

லாத குருபத்தினியைப் புணர்தலுமாகிய, இன்னபாதகம் அனைத்தும் - இப்பெரும் பாதகங்களெல்லாம், தன் நிகர் ஆலவாயில் என்றும் வதிபவர்தமை விட்டு ஏகும்- மற்றொன்றும் நிகரில்லாமையால் தனக்குத்தானேயொத்த திருவாலவாயில் எக்காலும் வாசஞ்செய்பவர்களை விட்டுநீங்கும்.

பிரமகத்திமுதலிய பாதகங்கள் எல்லாப்பாதகங்களிலும் பெரியபாதகமாதலால் பெரும்பாதகமென்றும். சூதசங்கிதை - ஞானயோககாண்டம் - கழுவாயுரைத்தவத்தியாயத்தில்.

“மறையவர்ச்செகுத்ததோன்கடிமதுநுகர்ந்தோன்வயங்குசெம்பொற்களவாண்டோ
னிறையருட்குரவன்பன்னியைப்புணர்ந்தோனிகரிலிக்கொடியரையாரு
மறைவரான்மாபாதகரெனவிவரையடுத்தொருவருடனட்டவரு
முறைதவிர்மாபாதகர்களேயென்னமொழிவதற்கையமொன்றின்றே.”

நகரின்புறம்பு நெருப்பைவளர்த்துச் சிவபெருமானைத்தியானித்து அதில் விழுந்து உயிர்விடல் தீரும் பிரமகத்தியின்பாவமும், இரும்பால் ஓர் தண்டத்தைச் செய்து அரசனைக்கையிற்கொடுத்துத் தான்செய்தகுற்றத்தையெடுத்துக்கூறி இதனால் என்தலையில் ஓர் அடி அடிக்கவென அவன் அடிக்க உயிர்விட்டால் தீரும்பொற்களவின்பாவமும், கள்ளைக்கொதிக்கக்காய்ச்சிச் சிவபெருமானைச்சிந்தித்து உண்டு உயிர்விட்டால் தீரும் கள்ளுண்டலின்பாவமும், இரும்பினால் அவள் போல் ஓர் உருவஞ்செய்து நெருப்பிற் பொரியெழக்காய்ச்சிச் சிவபெருமானைச் சிந்தித்துத்தழுவி உயிர்விடில் நீங்கும் குருபத்தினியைப்புணர்ந்தபாவமும், என்றும் வசிப்போர்க்கு இத்தண்டமில்லாமல் நீங்குதல் இத்தலத்தின்மகிமையாமென்பார் தன்னிகர் ஆலவாய் என்றார். (கஉ)

மற்றையதலத்திற்சாந்திராயணமதியந்தோறு
முற்றபேறிங்குகங்குலுண் டியாலடைபேறாகு
மற்றையதலத்தின்மாதப்பட்டினிப்பலத்தின்பேறிங்
குறவொருவைகலுண் டியொழித்தவர்பெறும்பேறாகும்.

(இ-ள்.) மற்றையதலத்தில் மதியந்தோறும் சாந்திராயணம் உற்றபேறு - ஏனையதலங்களில் மாதந்தோறுஞ் சாந்திராயணவிரதத்தை அனுட்டித்தலால்வரும் பயன், இங்கு கங்குல உண்டியால் அடைபேறு ஆகும் - இந்தத்தலத்தில் இரவிலுண்ணுதலாகிய விரதத்தால் வரும்பயனாகும், மற்றைய தலத்தில் மாதப்பட்டினி பலத்தின்பேறு - ஏனையதலங்களில் மாதவுபவாசவிரதத்தால்வரும்பயன், இங்கு ஒரு வைகல் உற்று உண்டி ஒழிந்தவர் பெறும்பேறு ஆகும் - இந்தத்தலத்தில் ஒருநாள் வசித்து உணவொழிந்து விரதம் அனுட்டிப்பவர் அடையும்பயனாகும்.

சாந்திராயணம்-சந்திரன்கலை யுயரும்போது ஒவ்வொருகவளம் உயருதலும், குறையும்போது ஒவ்வொருகவளங்குறைதலும் ஆகச்செய்யும்விரதம். இதற்குச் சந்திரசம்பந்தமுள்ளது என்னும்பொருள். விரதத்தைப் பலனெனக் காரியத்தைக் காரணமாகவுபசரித்தார். (கங)

அயனகரடைந்துநான்குதிங்களோன்பாற்றும்பேறிவ்
வியனகரடைந்துநோற்கும்மட்டமிவிரதநல்கு
மயனகரொப்பதியாறுதிங்களோன்பாற்றும்பேறிவ்
வியன்காசசோமவாரவிரதமேயளிக்குமன்றே.

(இ-ள்.) அயல் நகர் அடைந்து நான்கு திங்கள் நோன்பு ஆற்றும்பேறு-ஏனைய தலங்களைச்சேர்ந்து நான்குமாதம் விரதம் அனுட்டித்தலால் வரும்பயன், இவ்வியன் நகர் அடைந்து நோற்கும் அட்டமி விரதம் நல்கும்-இந்தப்பெருமை மிக்கதிருவாலவாயையடைந்து அனுட்டிக்கும் அட்டமிவிரதந்தராநிற்கும், அயல் நகர் எய்தி ஆறுதிங்கள் நோன்பு ஆற்றும் பேறு - ஏனையதலங்களையடைந்து ஆறுமாதம் விரதம் அனுட்டித்தலால் வரும்பயன், இவ்வியன் நகர் சோமவார விரதமே அளிக்கும் - இந்தப் பெருமைமிக்க திருவாலவாயில் அனுட்டிக்குஞ் சோமவாரவிரதமே தராநிற்கும்.

அட்டமிவிரதம்-சிவபிரானைக்குறித்து நோற்கும் விரதம். (கச)

ஏனையதலத்திலோராண்டுணவொழிந்தியற்றுநோன்பா
லானபேறிங்குநோற்குஞ்சிவனிராவளிக்குமிங்கே
யூனவைம்பொறியும்வென்றோன்முப்பொழுதுண்டுவைகித்
தானமர்ந்தாலுங்காலுண்டியற்றுமாதவத்தோனாகும்.

(இ-ள்.) ஏனையதலத்தில் ஓர் ஆண்டு உணவு ஒழிந்து இயற்றும் நோன்பால் ஆனபேறு - ஏனையதலங்களில் ஒருவருடம் உணவைவிட்டு அனுட்டிக்கும்விரதத்தால் உண்டாகும்பயன், இங்கு நோற்கும் சிவன் இரா அளிக்கும் - இத்தலத்தில் அனுட்டிக்குஞ் சிவராத்திரிவிரதமொன்றே தராநிற்கும், ஊனம் ஐம் பொறியும் வென்றோன் முப்பொழுதும் உண்டு இங்கு வைகி அமர்ந்தாலும் - குற்றமுள்ள பஞ்சேந்திரியங்களையும்வென்ற ஓர்தபசி மூன்றுகாலமும் நிரம்பவுண்டு இத்தலத்திலே வசித்திருந்தாலும், கால் உண்டு இயற்றும் மாதவத்தோன் ஆகும்-அவன் வாயுபக்ஷணஞ்செய்து தவஞ்செய்யும் பெரியதவத்தினனாவான்.

முற்றும்மை-தொகுத்தல். (கரு)

இந்தநான்மாடமோங்குமாலவாயிடத்தியாரே னு
மந்தணர்தமக்கோர்முட்டியருந்தவர்தமக்கோர்பிச்சை
தந்தவர்புறம்புசெய்தசோடசதானந்தம்மால்
வந்தபேறடைவர்பல்வேறுரைப்பதென்மதியான்மிக்கீர்.

(இ-ள்.) மதியால் மிக்கீர் - அறிவின்மிக்கமுனிவர்களே, நால் மாடம் ஓங்கும் இந்த ஆலவாய் இடத்து - நான்மாடமெனப் பெயர்பெற்று ஓங்கும் இந்தத்திருவாலவாயினிடத்தில், யார் ஏனும் அந்தணர் தமக்கு ஓர்முட்டி அருந்தவர் தமக்கு ஓர் பிச்சை தந்தவர்-எவராயினும் பிராமணர்களுக்கு ஒருபிடி அரிசியாவது செய்தற்கரிய பெரியதவத்தினருக்கு ஓர்பிச்சையாவது கொடுத்தவர்கள், புறம்பு செய்த சோடசதானம் தம்மால்வந்தபேறு அடைவர் - ஏனையதலங்களிற்செய்த சோடசதானங்களால்வந்த பயன்களை அடைவராதலால், பல்வேறு உரைப்பது என், பலவாகவெவ்வேறுவகைப்பட யாம் சொல்வதால் வரும்பயன்யாது (ஒன்றுமில்லையென்றபடி.) (கசு)

பல்வகைத்தலங்களெல்லாம்வைகியபயனுமென்றும்
பல்வகைத்தீர்த்தமெல்லாமாடியபயனுமென்றும்
பல்வகைத்தானமெல்லாநல்கியபயனுமென்றும்
பல்வகைத்தானபூசைபண்ணியதவத்தின்பேறும்.

(இ-ள்.) பல்வகை தலங்கள் எல்லாம் வைகிய பயனும் - பலவகைப்பட்ட தலங்களிலெல்லாம் வசித்தலால்வரும் பயன்களையும், என்றும் பல்வகை தீர்த்தும்

எல்லாம் ஆடிய பயனும்-எந்நாளும் பலவகைப்பட்ட தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நான ஞ்செய்தலால்வரும் பயன்களையும், என்றும் பல்வகை தானம் எல்லாம் நல்கிய பயனும்-(அந்தவிடங்களில்) எந்நாளும் பலவகைப்பட்ட தானங்களையெல்லாங் கொடுத்தலால்வரும் பயன்களையும், என்றும் பல்வகை ஆன பூசைபண்ணிய தவத்தின்பேறும்-எந்நாளும் பலவகைப்பட்ட பூசைகளைச்செய்ததவத்தால் வரும்பயன்களையும்.

வகைத்து-து-பகுதிப்பொருள்விகுதி. (௧எ)

பல்வகைத்தவங்களெல்லாமுற்றியபயனுந்தூய
பல்வகைமந்திரத்திலெய்தியபயனுநூலின்
பல்வகைக்கேள்வியெல்லாமாய்ந்துணர்பயனும்யோகம்
பல்வகைஞானமெல்லாம்பயின்றுணர்ந்தடங்கும்பேறும்.

(இ-ள்.) பல்வகை தவங்கள் எல்லாம் முற்றியபயனும் - பலவகைப்பட்ட தவங்களையெல்லாஞ்செய்து முடித்தலால் வரும்பயன்களையும், தூய பல்வகை மந்திரத்தில் எய்தியபயனும் - பரிசுத்தமாகிய பலவகைப்பட்ட திருமந்திரங்களைச்செபித்தலால் வரும்பயன்களையும், பல்வகை நூலின எல்லாம் கேள்வி ஆய்ந்து உணர்பயனும் - பலவகைப்பட்ட நூல்களையெல்லாங் கேள்வியால் ஆராய்ந்தறிதலால் வரும்பயன்களையும், பல்வகை யோகம் எல்லாம் பயின்று ஞானம் உணர்ந்து அடங்கும் பேறும் - பலவகைப்பட்ட யோகங்களையெல்லாம் பயின்று ஞானநிலையறிந்து அடங்குதலால்வரும் பயனகளையும்.

சாதனசாத்திய முறைப்படி யோகம் ஞானம் என்றார். (௧அ)

அனையதொல்பதியிலென்றும்வைகுவோரடைவரென்று
மினையதொல்பதிக்குநேர்வேறில்லையிப்பதியின்மேன்மை
தனையறிபவராரீசனென்றறியாதலாலே
வினையைவெல்பவனங்கெய்திவதிவதேவேண்டுமாதோ.

(இ-ள்.) அனையதொல் பதியில் என்றும் வைகுவோர் அடைவர் என்றால்- அந்தத் தொன்றுதொட்டுள்ள திருவாலவாயில் எந்நாளும் வசிப்போர் அடைவராகுல், இனையதொல் பதிக்கு நேர் வேறு இல்லை-இத்தன்மையாகிய தொன்றுதொட்டுள்ள திருவாலவாய்க்கு ஒத்ததலம் வேறு எங்கும் இல்லை, இப்பதியின் மேன்மை தனை அறிபவர் ஆர் ஈசன் என்றே அறிமின் - இந்தத்திருவாலவாயின் பெருமையை வரையறுத்துணர்வோர் எவர், சிவபெருமானெனறே யறியுங்கள், ஆதலால் - ஆகையால், வினையை வெல்பவன் அங்கு எய்தி வதி வது வேண்டும்-பிறவிக்கு வித்தாகிய இருவினைகளையும் வெல்லக்கருதினேன் அத்திருவாலவாயையடைந்து வாசஞ்செய்தல்வேண்டும்.

அனைய-சுட்டுத்திரிபு. இனைய-சுட்டிடைச்சொல்லடியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம். ஆதலால், என்பதனிறுதியிலுள்ள ஏகாரத்தைப்பிரித்து என்று என்பதனோடு கூட்டிப்பொருள்கொள்க. அறிமின் என்னும் முன்னிலைப்பன்மை ஏவல்வினைமுற்று ஈறுதொக்குநின்றது. தொ-சொ-எச்சவியல். "செய்யாவென்னு முன்னிலைவினைச்சொல் செய்யென்கிளவி யாகிடனுடைத்தே" என்றசூத்திரத்தில் ஒன்றெனமுடித்தல் என்பதனுல். (௧௯)

கைத்தலநான்கிரண்டுடையமலர்க்கடவுண்மேலொருநாட்கயிலையாதி
யெத்தலமுமொருதுலையிட்டித்தலமுமொருதுலையிட்டிரண்டுந்தூக்க

வுத்தமமாந்திருவாலவாய்மிகவுங்கனத்ததுகண்டுலகின்மேலா
வைத்ததலமிதுவென்றுலிதன்பெருமையாவரோவழுத்தற்பாலார்.

(இ-ள்.) நான்கிரண்டு கைத்தலம் உடைய மலர் கடவுள் - எட்டுத்திருக்கர ங்களையுடைய தாமரைமலரில்வசிக்கும் பிரமன், மேல் ஒருநாள் - முன்னொருநா ளில், கயிலை ஆதி எத்தலமும் ஒருதலை இட்டு - திருக்கயிலைமுதலிய எல்லாத்தலங் களையும் ஒருதராசின் தட்டிலிட்டு, இத்தலமும ஒருதலை இட்டு - இந்தத்திருவால வாயையும் ஒருதட்டிலிட்டு, இரண்டும் தூக்க - இரண்டையுந்தூக்க, உத்தமம் ஆம் திருவாலவாய் மிகவும் கனத்தது கண்டு-உத்தமதலமாகிய திருவாலவாய் மிகவு ங் கனத்திருத்தலைநோக்கி, உலகில் மேலாவைத்த தலம் இது என்றால்-(அப்பிரமன்) மூன்றுலகங்களிலு மேம்பட்ட தலமாக நிச்சயித்ததலம இதுவானால், இதன் பெரு மை யாவரோ வழுத்தற் பாலார் - இத்திருத்தலத்தினபெருமையை எவர்தாம் வரை யறுத்துச்சொல்லும பகுதியையுடையார.

“கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமறறதுமீதுசெல்ல
நிச்சயமுறுகிததாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வுரை
இச்சகதூர்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.”

எனக் காஞ்சிப்புராணத்திற கூறியிருத்தலால முதலாகுபெயராகக்கொண்டு தலை யைத் தராசினதட்டெனறும். (உ0)

அத்திருமாநகரின்பேர்சிவநகரங்கடம்பவனமமர்ந்தோர்சீவன்
முத்திபுரங்கன்னிபுரந்திருவால்வாய்மதுரைமுடியாஞானம்
புத்திதரும்பூவுலகிற்சிவலோகஞ்சமட்டிவிச்சாபுரந்தென்கூடல்
பத்திதருதுவாதசாந்தத்தலமென்றேதுவினாற்பகர்வர்நல்லோர்.

(இ-ள்.) அத்திருமா நகரின் பேர் சிவ நகரம் கடம்பவனம் - அந்தச்செல் வமிக்க நகரினபெயா சிவநகரமென்றும கடம்பவனமெனறும், அமாநதோர் சீவன முத்திபுரம கன்னிபுரம் திருவாலவாய் மதுரை - வாசஞ்செய்வோர் சீவன்முத்தி யை யடையததருதலால் சீவனமுததிபுரமெனறும் கன்னிபுரமென்றும் திருவால வாய் என்றும மதுரை எனறும், முடியாஞானம புத்திதரும பூவுலகில் சிவலோகம் சமட்டி விச்சாபுரம - அழியாதஞானத்தையும சிவபோகததையுநதருதலால் பூவுல கில் சிவலோகமென்றும சமட்டி விச்சாபுரமென்றும், தென கூடல் பத்திதரும் து வாதசாந்தத்தலம என்று - தெனறிசையிலுள்ள கூடல என்றும வாசஞ்செய்வோ ாக்கு சிவநேயநதருந துவாதசாந்ததல'மனறும், ஏதுவினால் பகர்வா நல்லோர்- ஒவ்வோர்காரணங்களால் பெரியோர் சொல்வார்கள்.

சீவன்முத்தியாவது - யான் எனதென்னும் விகற்பம்பறறிப் பசுகரணமாய்ப் பயில்வதின்றிச் சிவகரணமாயுடையானுடைமைப்பொருளுமாய்த் தன்செயலற்றுச் சாக்கிரத்தே யதீததததைப்புரிநதுநிற்றல். முடியாஞானமாவது-அபரஞானம்போல முிவின்றி நித்தியசுகத்தை விளைவிப்பதாகிய சிவஞானம. புத்தியாவது - அபரமுத் திப்பதப்பிரயோசனம்போலல்லாமல் அந் நித்தியஞானமுடையார்க்கு “அம்மையும் இம்மையேயாம்” என்றபடி அனுபவிததற்குரிய சிவபோகம். சமட்டிவிச்சாபுரமா வது-சிவஞானமுதலிய எல்லாஞானங்களையுந் தரும்நகரம். துவாதசாந்தத்தலமாவ து-பிரமரந்திரத்துக்குமேல் உன்மனிசத்திக்கதீதமாய் விளங்கும் நிராமயஸ்தானம்.

சிவநகரம், பூவுலகில் சிவலோகம் என்பன-ஒருபொருட்கிளவிகள். இவற் றின் காரணங்கள் இப்புராணத்தில் ஆங்காங்கு வருமிடந்தோறுங்காண்க. என்று-

எண்ணிடைச்சொல்லாதலால் ஏனையிடங்கள்தோறும் பிரிந்துசென்றது. தொ-சொ-இடையியல். "எனறுமெனவுமொடுவுந்தோன்றி, யொன்றுவழியுடையவெண்ணி னுட்பிரிந்தே" என்னுஞ்சூத்திரத்தாலுணர்க.

முடியாஞானம் புத்திதரும்பூவுலகிற் சிவலோகம் சமட்டிவிச்சாபுரம் என்றலைப் புத்திதரும் பூவுலகிற் சிவலோகமெனவும், முடியாஞானந்தரும் சமட்டிவிச்சாபுரமெனவும், எதிர்நிறைநிறைப்பொருளாகக்கொள்க. சிவஞானமுதலியன-சிவஞானம், அடியாரைப்பேணுஞானம், ஆகமஞானம, மெய்ஞ்ஞானம். இவற்றின் பாகுபாட்டை ஆளுடையபிள்ளையார் புராணத்தில்.

"சிவனடியேசிந்திக்குந்திருப்பெருகுசிவஞானம், பவமதனையறமாற்றும்பாங்கினிலோங்கியஞானம்,உவமையிலாக்கலைஞானமுணர்வரியமெய்ஞ்ஞானம்" எனவும், இப்புராணத்துள் "எங்குமீசனைப்பூசைசெய்திகபரமடைவார்,எங்குமன்பரைப்பூசைசெய்தெழுபிறப்பறுப்பார், எங்குமாகமஞ்செவிமடுத்தெதிர்வினைதடுப்பார், எங்குநாயகன்வடிவுணர்ந்திருண்மலங்களைவார்" எனவும்வருஞ் செய்யுள்களாலுணர்க.(உக)

என்றுதலசிறப்புரைத்தகுறுமுனிவனெதிரறவோரிறும்பூதெய்தி
நன்றுதலப்பெருமையருள்செய்தனைகேட்டுடலெடுத்தநயப்பாடெல்லா
மின்றடைந்தேமினிசுவணபுண்டரிகசிறப்பதனையிசைத்தியென்னக்
குன்றமடக்கியகருணைக்குன்றனையான்வரன்முறையாற்கூறுகின்றான்.

(இ-ள்.) என்று தலச்சிறப்பு உரைத்த குறு முனிவன் எதிர் - என்று தலவிசேடத்தைக் கூறியருளிய அகத்தியமுனிவர் எதிரே, அறவோர் இறும்பூது எய்தி தலப் பெருமை அருள் செய்தனை நன்று கேட்டு உடல் எடுத்த நயப்பாடு எல்லாம் இன்று அடைந்தேம் - முனிவர்யாவரும வியப்படைந்து தலமான்மியத்தைக் கூறியருளினீர் அதனை மிகவுங் கேட்டுச் சரீரமெடுத்தாலடையும பயனெவையோ அவைகளையெல்லாம் இப்பொழுதே யடைநதோம், இனி சுவண புண்டரிகச்சிறப்பு அதனை இசைததி என்ன - இனிப் பொறறாமரைதீர்த்தத்தின் விசேடத்தைச்சொல்வாய் என்று வினவ, குன்றம் அடக்கிய கருணைக்குன்று அனையான் வரன் முறையால் கூறுகின்றான் - விந்தபருவததைத யடக்கிய கிருபாபருவதத்தையொத்த அகத்தியமுனிவர் வரலாற்று முறையால் சொல்லுகின்றார். (உஉ)

வேறு.

விரதமாதவத்தீர்காணின்வெவ்வினையெல்லாம்வீட்டிச்
சரதமாப்போகநல்குந்தமனியமுளரிவந்த
வரவுமக்கனகக்கஞ்சப்பெருமையும்வளனுநன்கா
வுரைசெய்துங்கேண்மினென்றுமுனிவரனுரைக்குமன்றே.

(இ-ள்.) விரத மா தவத்தீர் - விரதங்களைப் பெரிய தவங்களாகக் கொண்ட முனிவர்களே, காணின் வெவ்வினை எல்லாம வீட்டி சரதம் ஆக போகம் நல்குந்தமனிய முளரி வந்த வரவும் - தரிசித்தால் கொடியவினைகளையெல்லாம் அழித்துச் சத்தியமாகப் போகங்களைக்கொடுக்கும் பொற்றாமரை தோன்றிய வரவையும், அக்கனகக் கஞ்சப் பெருமையும் வளனும் - அந்தப் பொற்றாமரைத்தீர்த்தத்தின் மான்மியத்தையும் வளப்பத்தையும், நன்கு ஆக உரை செய்தும் கேண்மின் என்று முனிவரன் உரைக்கும் - விளங்கச் சொல்லுகின்றோம் கேளுங்கள் என்று முனிவருள் சிரேஷ்டராகிய அகத்தியமுனிவர் சொல்லுகின்றார். (உ௩)

தலவிசேடம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உ௫௪.

## தீர்த்தவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணகன்குடுமிமாடக்கடிபொழிலாலவாயி
னண்ணலம்பெருமையாரேயளப்பவரவிர்தண்முத்த
வெண்ணகையுமையாளன்புவிளைமுகசெவ்விபோலத்
தண்ணறுங்கமலம்பூத்ததடப்பெருந்தகைமைசொல்வாம்.

(இ-ள்.) கண் அகன் குடுமி மாடம் கடி பொழில் ஆலவாயின் அண்ணல் பெருமை யார் ஏ அளப்பவர் - இடம்பரந்த சிகரங்களையுடைய மாடங்கள்நெருங்கிய வாசமிக் சோலைகள்சூழ்ந்த திருவாலவாயி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் பெருமையை எவர் வரையறுத்துச்சொல்ல வல்லவர், அவிர் தண் முத்தம் வெள் நகை உமையாள்-விளங்கிய முத்தினையொத்த வெள்ளிய முறுவலினையுடைய பிராட்டியாரது, அன்பு விளைமுகம் செவ்விபோல - அன்பு சுரக்குந் திருமுகத்தின் பொலிவுபோல, தண் நறும் கமலம் பூத்த தடம் பெரும் தகைமை சொல்வாம்-தண்ணிய நல்லவாசம்மிக்க பொற்றாமரைமலர்ந்த தீர்த்தத்தின் பெருஞ்சிறப்பினை இனி எடுத்துச்சொல்வாம்.

கண் அகன - ஒருபொருட்பன்மொழிகள். யார் என்னும் வினைக்குறிப்பு முற்றின் யாவிறு இன்மைப்பொருண்மே னின்றது. அம் சாரியையிடைச்சொல். (௧)

ஆற்றினுக்கரசாங்கங்கைகாவிரியாதியாறும்
வேற்றுருவாயமுந்நீர்வேலையும்பிறவுங்காருந்
தோற்றுமுன்றன்னையாட்டசுந்தரமூர்த்திசெங்க
ணேற்றினன்கண்டதீர்த்தமாகுமீதெவ்வாறென்னின்.

(இ-ள்.) ஈது - இத்தீர்த்தம், ஆற்றினுக்கு அரசு ஆம் கங்கை காவிரி ஆதி ஆறும்-நதிகளுக்கரசாகிய கங்கை காவிரிமுதலியநதிகளும், வேறு உருவு ஆய முந்நீர் வேலையும் பிறவும் காரும் - வேறுபட்ட வடிவாகிய மூன்றுவகை நீரையுடைய சமுத்திரமும் மற்றுள்ளனவும் மேகங்களும், தோற்று முன் தன்னை ஆட்ட-தோன்றுதற்குமுன் தன்னைத் திருமஞ்சனஞ் செய்விக்க, சுந்தரமூர்த்தி செங்கண் ஏற்றினன் கண்டதீர்த்தம் ஆகும் - சோமசுந்தரமூர்த்தியாகிய சிவந்தகண்களையுடைய இடபவாகனத்தையுடைய சிவபெருமான் தோற்றுவித்த தீர்த்தமாம், எவ்வாறு என்னில்-அது எவ்வகையென்று வினவில்.

முந்நீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், மேகநீர் என்று மூன்றுவகை நீர்களையுடையதெனவும், சிருட்டி திதி சங்காரங்களாகிய மூன்று தொழிற் குணங்களை யுடையதெனவும், பண்புத்தொகைக்கள்த்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்க் கடற்கோர் காரணக்குறியாக வந்த பெயராதலால் முந்நீரிய வேலையெனப் பொருள் கொண்டு இருபெயரொட்டுப் பண்புத்தொகை யெனினும் இழுக்காது. (௨)

அகளமாயுலகமெல்லாமொடுக்கியங்கெறியேயார்க்கு
நிகளமாம்விருத்திதோன்றநினைவறநினைந்துநிற்குந்
துகளிலாவறிவானந்தசுந்தரசோதிமேனாட்
சகளமாமுருவங்கொண்டுதாநின்றிருவிளையாட்டாலே.

(இ-ள்.) அகளமாய் உலகம் எல்லாம் ஒடுக்கி - நிட்கள வடிவாய் எல்லாவுலகங்களையும் ஒடுக்கி, அந்நெறியே யார்க்கும் நிகளமாம் விருத்தி தோன்ற நினைவு அற நினைந்து நிற்கும் - அம்முறைப்படியே எவர்க்கும் பந்தமாகிய விருத்திதோன்றநினைப்பற நினைந்து நிற்கும், துகள் இலா அறிவு ஆனந்தம் சுந்தரம் சோதி - குற்றமில்லாத போதானந்தவடிவாகிய சிவபெருமான், மேல் நாள் சகளமாம் உருவம் கொண்டு தான் ஒரு விளையாட்டால்-முன்னளில் சகளவடிவங்கொண்டு தானொரு திருவிளையாடலைக்கருதி.

சிவதத்துவம் ஐந்தனுள் சத்திதத்துவத்தை யதிக்கிரமித்துநின்ற ஞானசொரூபமாகிய சிவதத்துவத்தில் அதிக்கிராந்த விந்துக பரசிவமாய் அதிஷ்டித்துச் சுத்தசிவமாய்த்தான் நிற்றலின்-அகளமாய் எனவும், விந்து மோகினி மான் என்னும் மூவகையுபாதானங்களால் முறையே தோற்றுவித்த சுத்தம் அசுத்தம் மிச்சிரமமாகிய அகிலங்களனைத்தையும் அவ்வுபாதானத் திரயங்களி லொடுக்கி அம்முறையே வழிநாளில் மலசேடத்தால் அவ்வகிலங்களை உதிப்பித்தலின் உலகமெல்லாம் ஒடுக்கி அந்நெறியே ஆக்கும் எனவும், தநுகரணமுதலிய பந்தவிகற்பங்களில் தலைப்பட ஞானகிரியைகளை விளங்கச்செய்தலின் நிகளமாம் விருத்திதோன்ற எனவும், தனக்கென வோர் சங்கற்பமிலனாகிய இறைவன் ஆன்மாக்களது இச்சாஞானக்கிரியைகளுக்கீடாய்த் தனது சத்தியின்வழி சங்கற்பித்து நிற்பவனாதலின் நினைவற நினைந்து நிற்கும் எனவும், மலக்குற்றத்தை நீக்கி அறிவித்தாலறியும் ஆன்மவறிவுபோலன்றி மேலொருவனறிவிக்கவேண்டாது தானேஅறியும் பேரறிவையும்,அவ்வறிவிற் பிறிது சிறிதும் அறியாத ஆனந்தத்தையும் உடைய நிஷ்கள சுயஞ்சித்தாய்த்தான் நிற்றலின்-துகளிலாவறிவானந்த சுந்தரச்சோதி எனவும் "ஆரணமாகமங்களருளினலுருவு கொண்டு, காரணனருளானுகில் கதிப்பவரில்லையாகும" என்றிருத்தலின் சகளமாம் உருவங்கொண்டு எனவுங் கூறினர்.

நிகளம் - பந்தம். (அ)

முக்கணனரவப்பூணநூலினன்முகிழ்வெண்டிங்கட்
செக்கரஞ்சடையான்சூலகபாலத்தன்செங்கணேற்றன்
மைக்கருங்கயலுண்கண்ணிவாமத்தன்முன்னும்பின்னும்
பக்கமுநந்தியாதிகணதிபர்பரவிசூழ.

(இ-ள்.) முக்கணன்-திரிநேத்திரங்களையுடையவனும், அரவம் பூண நூலினன்-சர்ப்பத்தை உபவீதமாக உடையவனும், முகிழ் வெண் திங்கள் செக்கர் அம் சடையான்-அரும்பிய வெள்ளிய பிறைக்கீற்றையணிந்த செவந்தசடையையுடையவனும், சூலம் கபாலத்தன் - சூலத்தையும் கபாலத்தையும் ஏந்தினவனும், செங்கண் ஏற்றன் - சிவந்த கண்களையுடைய தருமவிடையையுடையவனும், மை கரும் கயல் உண் கண்ணி வாமத்தன் - மையெழுதிய கரியகயலைவென்ற கண்களையுடைய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடையவனும் (ஆகிய சிவபெருமான்) முன்னும் பின்னும் பக்கமும் - முன்னும் பின்னும் இரண்டுபக்கமுமாகிய இடங்களில், நந்தி ஆதி கணதிபர் பரவி சூழ - நந்திநாயனர் முதலிய கணதிபர்கள் வாழ்த்திச் சூழ்ந்துவரவும். (௯)

சென்றுதன்மேனித்தேசாற்றிசையெலாம்விளங்கச்செங்கண்
வென்றிகொளுரகவேந்தனகரமும்விபுதர்வேந்தன்
பொன்றிகழ்நகரும்வேதன்புரமுமால்புரமுமேலைத்
தன்றிருநகருஞ்சென்றுசஞ்சரித்தாடிமீள்வான்.

(இ-ள்.) தன் மேனி தேசால் திசை எலாம் விளங்க சென்று - தனது திருமே னியின் பிரகாசத்தால் எல்லாத்திசைகளும் விளங்கவும் சென்றருளி, செம் கண் வென்றி கொள் உரக வேந்தன் நகரமும் - சிவந்தகண்களையுடைய வெற்றிமிக்கஆதி சேடனுடைய நகரத்திலும், விபுதர் வேந்தன் பொன் திகழ் நகரும் - தேவர்களுக்கு அரசனாகிய தேவேந்திரனுடைய விளங்காநின்ற பொன்னுலகத்திலும், வேதன் புர மும் மால் புரமும் - பிரமனுடைய வுலகத்திலும் திருமாலினுடைய வுலகத்திலும், மேலை தன் திருநகரும் சென்று சஞ்சரித்து ஆடி மீள்வான் - இவைகளுக்குமேலுள் ளதனது ஞானச்செல்வமிக்க சிவலோகத்திலுஞ் சென்று சஞ்சரித்துத் திருவிளை யாடல்செய்து திரும்பியருளுவான்.

உரகவேந்தன் - சர்ப்பங்களுக்கு அரசன். (ரு)

அன்னபோதயனுந்தேவர்க்கரசனுமாழிவேந்து
முன்னர்வந்திறைஞ்சியேத்தமுனிவருபேறுநல்கித்
தன்னகரடைந்துநீங்காத்தனிப்பெருங்கணத்தினோடு
மின்னருள்சுரந்துநோக்கியிலிங்கத்திற்புகுதுமெல்லை.

(இ-ள்.) அன்னபோது அயனும் தேவர்க்கு அரசனும் ஆழி வேந்தும் முன் னர் வந்து இறைஞ்சி ஏத்த - அப்போது பிரமனுந் தேவேந்திரனுஞ் சக்கரத்தையேந் திய திருமாலுந் திருமுன்வந்து வணங்கி வாழ்த்த, முனிவு அரும் பேறு நல்கி-உவப் போடு அவர்கள் வேண்டிய வரங்களைத்தந்தருளி, தன் நகர் அடைந்து நீங்கா தனி பெரும் கணத்தினோடு இன் அருள் சுரந்து நோக்கி - தன்னுடையநகரமாகிய திரு வாலவாயை யடைந்து தன்னினின்று நீங்காத ஒப்பில்லாதபெரியகணதிபரோ இனி யதிருவருள்சுரந்து பார்த்து, இலிங்கத்தில் புகுதும் எல்லை - சிவலிங்கத்தில் சென் றருளுங்காலையில்.

இலிங்கம்-பிரகாசகம். முன்னர் - அர் பகுதிப்பொருள்விகுதி. அருமை-இன் மைமே னிற்றலால் உவப்போடென்றும். "அருங்கேடன்" என்பதனாலறிக. (சு)

வேத்திரப்படையோனாதிகணதிபர்வீழ்ந்துபால
நேத்திரவன்பர்க்கன்பநிரஞ்சனநிருத்தானந்த
சாத்திரமுடிவுந்தேறாத்தனிமுதலொருவவென்னாத்
தோத்திரவகையாலேத்தித்தொழுதொன்றுவினவல்செய்வார்.

(இ-ள்.) வேத்திரப் படையோன் ஆதி கணதிபர் வீழ்ந்து-பிரம்பாகிய திருப் படையை யேந்திய நந்திநாயனார் முதலிய கணதிபர்கள் தண்டாகாரமாக விழுந்து, பாலநேத்திர - நெற்றிக்கண்ணையுடையவனே, அன்பர்க்கு அன்ப - அடியார்க்கடிய வனே, நிரஞ்சன - களங்கமில்லாதவனே, நிருத்தானந்த - ஆனந்த நடனமு டையவனே, சாத்திர முடிவும் தேறா தனி முதல் ஒருவ என்னா - வேதமுடிவன்றிச் சாத்திரமுடிவும் உணர்தற்கரிய ஒப்பில்லாத ஒருமுதல்வனே என்றுகூறி, தோத்திர வகையால் ஏத்தி தொழுது ஒன்று வினவல் செய்வார் - தோத்திரரூபத்தால் துதி செய்து வணங்கி ஒன்று வினவுகின்றார். (எ)

ஐயவிவ்விலிங்கமூர்த்திக்காட்டவுமடியேமூழ்கி
யுய்பவுங்கங்கையாதிநதிகளு மூலகத்துள்ளோர்
மையறுதடாகநீருமற்றிலையிருமைப்பேறுஞ்
செய்யவேர்தீர்த்தமிங்குண்டாக்கெனச்செப்பலோடும்.

(இ-ள்.) ஐய இ இலிங்க மூர்த்திக்கு ஆட்டவும் அடியேம் மூழ்கி உய்ய வும் - ஐயனே இச்சிவலிங்கப்பெருமானுக்கு அபிஷேகஞ் செய்யவும் அடியேங்கள் ஸ்நானஞ்செய்து கடைத்தேறவும், கங்கை ஆதி நதிகளும் உலகத்து உள்ளோர் மை அறு தடாக நீரும் இல்லை - கங்கைமுதலிய நதிகளும் உலகத்திலுள்ளவர்கள் குற்ற ங்களையொழிக்குந் தடாகதீர்த்தங்களுமில்லை, இருமை பேறும் செய்ய ஓர் தீர்த்தம் இங்கு உண்டாக்க என செப்பலோடும் - இம்மை மறுமைப்பயன்களையுந் தரும் வண்ணம் ஓர்தீர்த்தத்தை யுண்டாக்குக என்று சொல்லவும்.

ஒடுருபு-வினையெச்சப் பொருளின்மேல் வந்தது. (அ)

அத்தகையிலிங்கமூர்த்திக்கடுத்ததென்கீழ்சாராக
முத்தலைவேலைவாங்கிநாட்டினன்முதுபார்கீண்டு
மைத்தலைப்பாந்தள்வேந்தன்பாதலங்கீண்டுபோயெண்
கைத்தலப்பிரமனண்டகடாகமுங்கீண்டதவ்வேல்.

(இ-ள்.) அத்தகை இலிங்கமூர்த்திக்கு அடுத்த தென் கீழ் சாராக முத்தலை வேலை வாங்கி நாட்டினன்-அத்தன்மையையுடையசிவலிங்கப்பெருமானுக்கு அடுத்த தென்கீழ்த்திசையினபக்கமாகச் சூலத்தையெடுத்து நிலவுலகில் நாட்டியருளினன்; அவ் வேல் முது பார் கீண்டு மை தலை பாந்தள் வேந்தன் பாதலம் கீண்டுபோய்-அந் தச்சூலம் தொன்றுதொட்டுள்ள நிலவுலகத்தை யூடுருவிப் படம்பொருந்திய தலை யையுடைய ஆதிசேடனிருக்கும் பாதலத்தைய மூடுருவிச்சென்று, எண் கைத்தலம் பிரமன் அண்டகடாகமும் கீண்டது - எட்டுத்திருக்கரங்களையுடைய பிரமனுடைய அண்டகடாகத்தையுங் கிழித்தது. (க)

அவ்வழிப்புறம்புசூழ்ந்துகிடந்தபேராழியூழிப்
பௌவநீரென்னவோங்கப்பாணியாலமைத்துவேணித்
தெய்வநன்னீரைத்தூவிக்கலந்துமாதீர்த்தமாக்கிக்
கைவளைகபாலிநந்திகணத்தினைநோக்கிக்கூறும்.

(இ-ள்.) அவ்வழி புறம்பு சூழ்ந்து கிடந்த பேர் ஆழி என்ன - அவ்விடத்தி லிருக்கும் நீரானது (சக்கரவாளகிரியின்) புறம்புசூழ்ந்துகிடந்த பெரும்புறக்கடல் போலவும், ஊழி பௌவம் நீர் என்ன ஓங்க-ஊழிக்காலத்தில் நிலைகடந்து திரண்ட கடல்நீரைப்போலவும் பெருக்கெடுத்துமேலோங்க, பாணியால் அமைத்து- (அப்பெ ருக்கு அமைகவெனத்) திருக்கரத்தாலமைத்து, வேணி தெய்வ நல் நீரை தூவி கல ந்து மாதீர்த்தம் ஆக்கி - தனது சடாமுடியிலுள்ள தெய்வத்தன்மையையுடைய நல் ல கங்கைநீரைத்தெளித்துக் கலப்புறப் பெரிய தீர்த்தமாகச் செய்து, கைவளை கபாலி நந்திகணத்தினை நோக்கி கூறும் - திருக்கரத்திலேந்திய கபாலத்தையுடைய சிவபெருமான் நந்திநாயகனையும் கணதிபரையும் பார்த்துச் சொல்லுகின்றான்.

கலந்து - செயவெனெச்சத்திரிபு. (௧0)

இன்னமாதீர்த்தந்தன்னையெனைப்பலதீர்த்தங்கட்கு
முன்னம்யாமிங்குக்கண்டமுதன்மையாலாதிதீர்த்த
மென்னலாமினியுண்டாக்குந்தீர்த்தங்களெவைக்குமேலாய்
மன்னலாற்பரமதீர்த்தமெனப்பெயர்வழங்கலாகும்.

(இ-ள்.)இன்ன மா தீர்த்தம் தன்னை எனை பல தீர்த்தங்கட்கும் முன்னம் யாம் இங்கு கண்ட முதன்மையால் - இந்த மகத்தாகிய தீர்த்தத்தை மற்றைப்பலதீர்த்தங் களுக்கும், முன்பு யாம் இவ்விடத்துண்டாக்கிய முதன்மையினால், ஆதி தீர்த்தம் என்னலாம் - ஆதிதீர்த்தமென்று சொல்லலாம், இனி உண்டாக்கும் தீர்த்தங்கள் எவைக்கும் மேலாய் மன்னலால்-இனிநாம் உண்டாக்கும் எல்லாதீர்த்தங்களுக்கும் இது மேலாகநிலைபெறுதலால், பரமதீர்த்தம் என பெயர் வழங்கல் ஆகும்-பரமதீர் த்தம் என்று பெயர்பெறும்.

ஆய் - வினையெச்சத்திரிபு. (கக)

மருட்கெடமூழ்கினோர்நன்மங்கலம்பெறலானாம
மருட்சிவதீர்த்தமாகும்புன்னெறியகற்றியுள்ளத்
திருட்கெடஞானந்தன்னையீதலான்ஞானதீர்த்தந்
தெருடகதிதரலான்முத்திதீர்த்தமென்றிதற்குநாமம்.

(இ-ள்.) மருள் கெட மூழ்கினோர் நல் மங்கலம் பெறலால் - அஞ்ஞானங் கெடஸ்நானஞ்செய்தோர்கள் நல்லநன்மைகளை முற்றும்பெறுதலால், நாமம் அருள் சிவதீர்த்தம் ஆகும் - இத்திர்த்தத்தின் பெயர் அருளையுடைய சிவதீர்த்தமாம், புல் நெறி அகற்றி உள்ளத்து இருள்கெட ஞானம் தன்னை ஈதலால் ஞானதீர்த்தம் என்று - புல்லிய வழிப்பட்டொழுகுந் தீச்செயல்களை யொழித்து மனத்திற் பொதிந்த அஞ்ஞானவிருள்கெட ஞானவொளியைத் தருதலால் ஞானதீர்த்த மெனவும், தெருள் கதி தரலால் முத்தி தீர்த்தம் என்று இதற்கு நாமம்-மயக்கமொழிந்த மோக்ஷத் தைத் தருதலால் மோக்ஷதீர்த்தமெனவும் இததீர்த்தத்துக்குத் திருநாமங்களாம். ()

குடைந்துதர்ப்பணமுஞ்செய்துதானமுங்கொடுத்தம்மாடே
யடைந்தெழுத்தைந்துமெண்ணியுச்சரித்தன்பாலெம்மைத் [தோர
தொடர்ந்துவந்திறைஞ்சிச்சூழ்ந்துதுதித்தெமையுவப்பசெய்
ருடம்பெடுத்ததனாலெந்தவுறுதியுண்டதனைசசேர்வார்.

(இ-ள்.) குடைந்து தர்ப்பணமும் செய்து தானமும் கொடுத்து அம்மாடே அடைந்து - ஸ்நானஞ்செய்து விதிப்படி தர்ப்பணத்தையுஞ்செய்து அந்தணர்கையில் தானங்களையுங்கொடுத்து அத்தீர்த்தத்தின்அருகேசேர்ந்து, எழுத்து ஐந்தும் எண்ணி உச்சரித்து-ஸ்ரீபஞ்சாக்ஷரத்தையு முறைப்படி யுச்சரித்து, அன்பால் எம்மை தொடர்ந்து வந்து இறைஞ்சி சூழ்ந்து துதித்து எம்மை உவப்ப செய்தோர் - அன்பினால் எம்மை வழிபட்டு விரும்பிவணங்கி வலஞ்செய்து துதித்து எம்மை மகிழச்செய்த வர்கள், உடம்பு எடுத்ததனால் எந்த உறுதி உண்டு அதனை சேர்வார் - உடலெடுத் ததனால் எந்தப்பயனை யடையவேண்டுமோ அந்தப்பயனை யடைவார்கள்.

உடம்பாலடையும் பயன் மோக்ஷமாதலால் எந்த உறுதிஉண்டு அதனைச்சேர் வார். என்றார். (கஙு)

இந்தநீரெம்மையாட்டினேழிரண்டுலகின்மிக்க
வந்தமிழ்தீர்த்தமெல்லாமாட்டியபயன்வந்தெய்தும்
வந்திதின்மூழ்கியிங்குவைகுநங்குறியையுங்கள்
சிந்தையிலார்வம்பொங்கப்பூசனைசெய்யுமினென்னா.

(இ-ள்.) இந்த நீர் எம்மை ஆட்டின் - இந்தத்தீர்த்தநீரால் எம்மை அபிஷேகஞ்செய்தால், ஏழ் இரண்டு உலகில் மிக்க அந்தம் இல் தீர்த்தம் எல்லாம் ஆட்டியபயன் வந்து எய்தும் - பதினான்குலகங்களிலு மேம்பட்ட முடிவில்லாத தீர்த்தங்கள் யாவையும் அபிஷேகஞ்செய்தலால் வரும்பயன்கள் முற்றுமவந்துகைகூடும் (ஆகையால்) வந்து இதின் மூழ்கி இங்கு வைகும் நம் குறியை - வந்து இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இவ்விடத்தெழுந்தருளிய நமது அருட்குறியாகிய சிவலிங்கத்தை, உங்கள் சிந்தையில் ஆர்வம் பொங்க பூசனை செய்மின் என்று - உங்கள் மனத்தில் ஆசைமிக்கூரப் பூசைசெய்யுங்கள் என்று கூறியருளி. (கச)

விண்ணவர்தம்மின்மேலாம்வேதியனாகிநின்ற
பண்ணவன்றானந்நீரிற்படிந்துதன்னனுஞையாலே
யண்ணலங்கணத்தினோைமூழ்குவித்தநாதியாய
புண்ணியவிலிங்கந்தன்னுட்புகுந்தினிருந்தான்மன்னோ.

(இ-ள்.) விண்ணவர் தம்மில் மேலாம் வேதியன் ஆகிநின்ற பண்ணவன் தான் அந்நீரில் படிந்து-தேவர்களுள் மேலானவனாகிய வந்தணனாகிநின்ற சிவபெருமான அத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து,தன ஆனுஞையால் அண்ணல் கணத்தினோை மூழ்குவித்து-தன்கட்டளையால் பெருமைபொருந்தியகணநாதரையும் ஸ்நானஞ்செய்வித்து, அநாதியாய புண்ணிய இலிங்கம் தன்னுள் புகுந்து இனிது இருந்தான் - அநாதியாயுள்ள பரிசுத்தமாகிய சிவலிங்கத்துட்சென்று வீற்றிருந்தருளினான்.

அநாதி - தனக்கோர்முதலில்லாதது. தேவருள் பிராமணன் சிவபெருமான் என்றற்குக் காஞ்சிப்புராணத்துள் - காரோணப்படலத்தில்,

"பிராமணனீயேகடவுளர்தம்முட்பிஞ்ஞகாவேனோயோர்தம்முட்
பிராமணன்யானேபிராமணன்றனக்குப்பிராமணன்கதியுனையிகழ்வோன்
பிராமணனல்லன்றனகுலதெய்வம்விண்டுபின்னென்றனைத்தொழுமப்
பிராமணற்கிரண்டுமபயப்படாநிவையம்புகுவனென்றுயர்மறைபேசும்."

எனவருதல்காண்க. (கரு)

அந்தமாநீரானந்தியாதியோர்விதியாற்சோம
சுந்தரன்முடிமேலாட்டித்துகளறப்பூசையாற்றிச்
சிந்தையில்விழைந்தவெல்லாமடைந்தனர்செம்பொற்கஞ்சம்
வந்தவாறிதுவததீர்த்தமகிமையுமுரைப்பக்கேண்மின்.

(இ-ள்.) அந்த மா நீரால் - அந்த மகத்தாகியதீர்த்தத்தால், நந்தியாதியோர் விதியால் சோமசுந்தரன் முடிமேல் ஆட்டி - நந்திநாயனார் முதலிய கணநாதர்கள் விதிவழியால் சோமசுந்தரக்கடவுளுடைய திருமுடிமேல்அபிஷேகஞ்செய்து, துகள் அற பூசை ஆற்றி - குற்றமறப்பூசித்து, சிந்தையில் விழைந்த எல்லாம் அடைந்தனர் - மனத்தால் விரும்பிய எல்லாப் பயன்களையும் அடைந்தார்கள், செம் பொன் கஞ்சம் வந்தவாறு இது - செவந்த பொற்றாமரைத்தீர்த்தம் வந்த முறை யிதுவாம், அத்தீர்த்த மகிமையும் உரைப்ப கேண்மின் - அத்தீர்த்தத்தின் மான்மியத்தையுஞ் சொல்லக்கேளுங்கள். (கசு)

வளையெறிதரங்கஞானவாவியைநோக்கிற்பாவத்
தளையறுமூழ்கின்வேண்டுங்காமியமெல்லாஞ்சாரு

மூளமுறமூழ்குமெல்லைமுழுக்கொன்றற்குலகத்துள்ள
வளவறுதீர்த்தமெல்லாமாடியபயன்வந்தெய்தும்.

(இ-ள்.) வளை எறி தரங்கம் ஞான வாவியை நோக்கில் பாவம் தளை அறும் - சங்குகளை யெறியாநின்ற அலைகளையுடைய ஞானமயமாகிய பொற்றாமரைத்தடத்தைத்தரிசித்தால் பாவத்தொடக்கு நீங்கும், மூழ்கின் வேண்டும் காமியம் எல்லாம் சாரும் - ஸ்நானஞ்செய்தால் விரும்பும் எல்லாப்பொருள்களும் வந்துகைகூடும், உளம் உற மூழ்கும் எல்லை - மனமொருசேர ஸ்நானஞ்செய்யுங்கால், முழுக்கு ஒன்றற்கு உலகத்து உள்ள அளவறு தீர்த்தம் எல்லாம் ஆடிய பயன் வந்து எய்தும் - ஒவ்வொருமுழுக்குக்கும் உலகத்திலுள்ள வரம்பில்லாத எல்லாத்தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்தலால் வரும் பயன்கள் யாவும் வந்து கைகூடும். (கஎ)

மெய்யைமண்ணாதிகொண்டுவிதிவழிசுத்திசெய்து
மையறுவருணசூக்கமந்திரநவின்றுமூழ்கிற்
றுய்யமாதீர்த்தமெல்லாந்தோய்ந்துநான்மறையுமாய்ந்தோர்
கையிலெப்பொருளுமீந்தகாசறுபேறுநல்கும்.

(இ-ள்.) மெய்யை மண் ஆதி கொண்டு விதிவழி சுத்தி செய்து - சரீரத்தை மிருத்திகை முதலானவைகளால் ஆகமத்தில்விதித்தவழியே சுத்தஞ்செய்து, மை அறு வருண சூக்க மந்திரம் நவின்று மூழ்கில்-குற்றமற்ற வருணசூக்கமந்திரத்தையுச்சரித்து ஸ்நானஞ் செய்தால், (அந்தஸ்நானம்) துய்ய மா தீர்த்தம் எல்லாம் தோய்ந்து-பரிசுத்தமாகிய பெரிய தீர்த்தங்களெல்லாவற்றிலும் ஸ்நானஞ்செய்து, நான் மறையும் ஆய்ந்தோர் கையில் எப்பொருளும் ஈந்த காசு அறு பேறு நல்கும் - நான்குவேதங்களையும் ஆராய்ந்துணர்ந்த அந்தணர்கையில் எல்லாப்பொருள்களையுங்கொடுத்தலால் வரும் குற்றமற்றபயன்களைத் தராநிற்கும்.

மண்முதலியவையாவன - ஒன்பதுவகைமண்களும், எழுவகைத்தளிர்களும், பஞ்சகவ்வியங்களுமாம. திருவானைக்காப்புராணம் - நானவிதிப்படலத்தில்.

"அரசுகூவிளந்துழாய்புளியால்சம்புமூலம்
புரசைமால்கரிக்கூடம்புரவிமந்திரமுந்
கரிசிலானிரைத்தொழுவமுங்கல்விநூல்விதியின்
வரிசையாலெடுத்திடப்படுமண்களொன்பதுமே."

"தளிர்துழாய்புளிசம்புகூவிளம்வடமரசு
விளரிலாவறுகென்பனவிளம்புகவ்வியங்க
ளளவில்சீர்தருமங்கலமறிகபாறயிர்நெய்
வளரிலாவியகோசலமயமிவையாகும்"எனவருஞ்செய்யுள்களாலுணர்க.

வருணசூக்கமந்திரம் - வருணதேவன் அநுக்கிரகத்துக்குரிய தோத்திரரூபமான மந்திரம். (கஅ)

தெய்வவித்தீர்த்தந்தன்னைநினைவின்றித்தீண்டினாலு
மவ்வியவினையினீந்தியரும்பெறல்வீடுசேர்வ
ரிவ்வுரைமெய்யேயாகுமென்னெனின்மனத்தாறன்றி
வெவ்வழறீண்டினாலுஞ்சுடுமன்றிவிடுமோவம்மா.

(இ-ள்.) தெய்வ இத்தீர்த்தம் தன்னை நினைவு இன்றி தீண்டினும் - தெய்வத்தன்மையையுடைய இந்தத்தீர்த்தத்தை நினைப்பின்றிப் பரிசித்தாலும், அவ்வியம் வினையில் நீந்தி அரும் பெறல் வீடுசேர்வர் - பொறாமைமுதலிய தீக்குணங்களால் வந்த தீவினையாகிய கடலினின்றுநீந்திப் பெறுதற்கரிய மோக்ஷமாகிய கரையையடைவார், இவ்வுரை மெய்யே ஆகும் - இந்தவார்த்தை சத்தியமேயாம், என் எனில்- எப்படியென்றால், மனத்து ஆறு அன்றி வெவ் அழல் தீண்டினும் சுடும் அன்றி விடுமோ - நினைப்பில்லாமல் வெய்யநெருப்பைப்பரிசித்தால் அதுசுடுமேயல்லாமல் சுடாதுபோமா. (சுடும் என்றபடி)

மனத்தாறு-மனத்தின்வழி. நீந்திச்சேர்வர் என்றமையால் கடலையுங் கரையையும், மனத்தின்வழி என்றமையால் நினைப்பையும் என உரையிறகொண்டாம். உம்மை-அசைநிலை. (கசு)

ஆருமங்நீரிலென்றுமாடினா சீவன்முத்தி
சேருவரங்நீராடுஞசிறப்புறுபயனுக்கொவ்வா
வாருணமாக்கினேயமந்திரமிவைமுன்னான
பேருணர்வளிக்குநானஞ்செய்தவர்பெறும்பேறெல்லாம்.

(இ-ள்.) ஆரும் அங்நீரில் என்றும் ஆடினார் சீவன்முத்தி சேருவர்-நிறைந்த அந்தத்தீர்த்தத்தில் எப்பொழுதுஞ் ஸ்நானஞ்செய்தோர் சீவன்முத்தியை அடைவார்கள், அங்நீர் ஆடும் சிறப்புறு பயனுக்கு-அததீாதநத்தில் ஸ்நானஞ்செய்தலால்வரும் சிறப்பு மிக்கபயன்களுக்கு, வாருணமந்திரம் ஆக்கினேயமந்திரம இவை முன ஆன- வருணமந்திரஸ்நானம் ஆக்னேயமந்திரஸ்நானம ஆகிய இவைமுதலான, பேர் உணர்வு அளிக்கும் நானம் செய்தவர் பெறும பேறு எல்லாம் ஒவ்வா - ஞானத்தைத்தரும் ஸ்நானஞ்செய்தவர்கள் அடையும் பயன்களெல்லாஞ் சிறிதும் ஒப்பாகா.

பேருணர்வு என்றமையால் - ஞானம் என்றும். முன்னர்ப்பாட்டில் - நினைவின்றித் தீண்டினும் எனறமையால் ஆரும என்றதற்கு யாராயினும் எனப்பொருள்கொள்ளாதுவிட்டனம். (உ0)

அன்னநீர்தனையுமாடியாலவாயுடையநாதன்
றன்னையும்பணிவோன்மேலைப்பரகதிதன்னைசாரு
மென்னநன்னூலிறசொன்னபவித்திரமெவைக்குமேலாய்ப்
பன்னரும்புனிதமானபவித்திரமாகிநிற்கும்.

(இ-ள்.) அனன நீா தனையும் ஆடி - அந்தந்தீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து, ஆலவாய் உடைய நாதன் தன்னையும பணிவோன் - திருவாலவாயையுடைய சோமசுந்தரக்கடவுளையும் வணங்குவோன், மேலை பரகதி தன்னை சாரும்-மறுமையில்மேலாகிய மோக்ஷத்தையடைவான், என்ன நல் நூலில் சொன்னபவித்திரம் எவைக்கும் மேலாய் - எந்தநல்லநூலும் எடுத்துக்கூறிய (அநதத்தீர்த்தமானது) பரிசுத்தமுடைய எல்லாத்தீர்த்தங்களுக்கு மேம்பட்டு, பன்னரும புனிதம் ஆன பவித்திரமாகிநிற்கும்-சொல்லுதற்கரிய புனிதமாகிய பரிசுத்தத்தீர்த்தமாய் நிலைபெறும்.

பவித்திரம் - பாவத்தைநீக்கி மோக்ஷத்தைத்தருவது. என்ன - வினைத்திரிபு- பரகதி என்பதற்கு-பரமுத்தி என்பதற்குக் கூறியபொருள்கொள்க. (உக)

ஆதரவிலனையங்நீராடினேன்சுவர்க்கஞ்சேரு
மாதரவுளனய்மூழ்கிவனனவராதியானோர்க்

காதரவரிசியெள்ளுத்தருப்பணமமையச்செய்தோ
ஞதரவேள்விமுற்றுமாற்றியபயனைசசேரும்.

(இ-ள்.) ஆதரவு இலன் ஆய் அ நீர் ஆடினேன் சுவர்க்கம் சேரும்-(சுவர்க்காதிபோகங்களைப்பெற) விருப்பமில்லாதவனுய் அந்தப்பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தோன் சுவர்க்கபோகத்தையடைவான், ஆதரம் உளன் ஆய் மூழ்கினவர் ஆதி ஆனோர்க்கு-(அப்போகஙகளில்) விருப்பமுடையவனுய் அத்தீர்த்தத்தில் ஸநானஞ்செய்து தேவர்முதலானவருக்கு, ஆதரவு அரிசி எள்ளு தருப்பணம் அமைய செயதோன - விருப்பத்தோடு அரிசியையும் எள்ளையுங்கொண்டு தருப்பணத்தை விதிப்படிசெய்து முடித்தவன், ஆதரம் வேள்வி முறறும் ஆற்றிய பயனை சேரும-விருப்பத்தோடு அசுவமேதமுதலிய யாகஙகளனைத்தையுஞ்செய்தலால் வரும்பயன்களையடைவான். (உஉ)

ஏனைமாதலஙகடம்மிலிருந்துசெய்விரதம்பூசை
தானமாதருமமோமந்தவஞ்செபந்தியானந்தம்மா
லானமாபயனிற்கோடியதிகமாமடைந்துமூழ்கி
ஞானமாதீர்த்தஞாங்கரிருந்தவைநயாந்துசெய்யின்.

(இ-ள்.) ஏனை மாதலங்கள் தம்மில் இருந்து செய் விரதம் பூசை - மற்றைய பெரியதலங்களிலிருநது செய்யும் விரதங்களும் பூசையும்,தானம் மா தருமம் ஓமம் தவம் செபம் தியானம் தம்மால் ஆன மா பயனில் - தானமும் பெரியதருமமும் ஓமமும் தவமும் செபமும் தியானமுமாகிய இவைகளால் உண்டாகிய பெரியபயனைப்பார்க்கிலும, அடைநது மூழ்கி ஞானம் மா தீரததம ஞாங்கர் இருந்து அவை நயந்து செய்யின் கோடி அதிகம் ஆம் - அடைந்து ஸ்நானஞ்செய்து ஞானவடிவாகிய பெரியபொற்றாமரைத்தீர்த்தத்தின் கரையிலிருந்து விரதமுதலியவற்றை விரும்பிச்செய்தால் வரும்பயன் கோடியதிகமாம். (உரு)

பிறந்தநாளந்நீர்மூழ்கின்மேலைவெம்பிறவிப்பௌவ
மறிந்திடுமறிதேள்கும்பமதிகளின்மூழ்கித்தென்பா
லுறைந்தவர்பொருட்டுப்பிண்டமுதவினுலவாதாமாழ்ந்து
நிறைந்திடுபிறவிபபௌவநின்றுமேலெழுவரன்றே.

(இ-ள்.) பிறந்தநாள் அந்நீர்மூழ்கில் மேலை வெம் பிறவி பௌவம் மறிந்திடும் - சனனநக்ஷத்திரத்தில் அததீர்த்தத்தில் ஸநானஞ்செய்தால் தொன்றுதொட்டு வரும் பெரியபிறவிக்கடல்வறறும், மறி தேள் கும்பம் மதிகளில் மூழ்கி தென்பால் உறைந்தவர் பொருட்டு பிண்டம் உதவினுல் - சித்திரை கார்த்திகை மாசி என்னும் மாசங்களில் ஸ்நானஞ்செய்து பிதிரர்கள்பொருட்டுப் பிண்டங்கொடுத்தால், அவர் தாம் ஆழ்ந்து நிறைந்திடும் பிறவி பௌவம் நின்று மேல் எழுவர் - அவர்கள் ஆழ்ந்தழுந்திய பிறவிக்கடலினின்று நீஙகி மோக்ஷக்கரையையடைவார்கள்.

நிறைந்திடு எனனுங் காலங் கரந்தபெயரெச்சம் - பௌவமென்னும் எல்லைப் பொருள்கொண்டது. (உச)

அத்தடமருங்கின்யாவர்தென்புலமடைந்தோர்தங்கள்
சித்தமாசகற்றவேண்டிச்செய்கடன்முடிக்கினன்னோ
ரொத்தனையெண்ணோர்ந்தாலுமெள்ளுக்காயிரமாண்டாக
வத்தனையாண்டுமட்டுமவாவிண்ணுறைவைப்பார்.

(இ-ள்.) தென் புலம் அடைந்தோர் தங்கள் சித்தம் மாசு அகற்றவேண்டி பிதிரர்கள் தங்கள் மனமுதலிய திரிகரணங்களால் தேடியபாவங்களை நீக்கக் கருதி, அத்தடம் மருங்கின் செய் கடன் முடிக்கின் - அந்தத்தீர்த்தக்கரையில் செய்யுங் கடன்களை செய்து முடிக்க, அன்னோர்க்கு எத்தனை எள் யாவர் நேர்ந்தாலும் - அப்பிதிரர்கள் பொருட்டு எத்தனை எள்ளை எவர் நேர்ந்தாலும், எள்ளுக்கு ஆயிரம் ஆண்டு ஆக அத்தனை ஆண்டு மட்டும் அவரை விண் ஆள வைப்பார் - ஓரெள்ளுக்கு ஓராயிரம்வருடமாக அவ்வளவு வருடங்காறும் (சித்தமாசு ஒழித்து) அப்பிதிரர்களைச் சுவர்க்கலோகமாள நிறுத்துவார்கள். (உரு)

"சொற்றிரியினும் பொருடிரியா வினைக்குறை" என்ற சூத்திரத்தில் சொற்றிரியினும் எனப் பொதுப்படக் கூறினமையால் அகரவீறு வினையெச்சம் இன் ஈற்று வினையெச்சமாகத் திரிந்துநின்றது. வாக்கு முதலியவற்றால் தேடியபாவங்களையுங் கொள்ளுதல். "ஒருமொழியொழிதன் னினங்கொளற்குரித்தே" என்ற சூத்திரத்தால், அனனோர்க்கு எனத் திருத்திப்பாடங்கொள்க.

மூவகையுலகிலுள்ளதீர்த்தமுமுறையாலென்றுஞ்
சேவகஞ்செயயுமிநதநீர்த்தமெந்நாளுமூழ்கி
யேவரந்நீராலென்றுமீசனைபபூசைசெய்வோ
ராவரிபபிறவிதன்னிலவர்கதிக்கரையைசசார்வார்.

(இ-ள்.) மூவகை உலகில் உள்ள தீர்த்தமும் - சுவர்க்கமுதலிய திரிலோகங்களிலும் உள்ளதீர்த்தங்கள்யாவும, முறையால் என்றும் சேவகம் செய்யும் இந்ததீர்த்தம - முறைப்படி எந்நாளும் சேவிதது ஏவல்வழிநிற்கும் இந்தப் பொற்றாமரைத் தீர்த்தத்தில், எந்நாளும மூழ்கி ஏவர் அந்நீரால் என்றும் ஈசனை பூசைசெய்வோர் ஆவா - எந்நாளும் ஸ்நானஞ்செய்து எவர் அந்தத்தீர்த்தநீரால் எப்பொழுதுஞ் சிவபெருமானைபபூசைசெய்வாரோ, அவர் இப்பிறவி தன்னில் கதி கரையை சார்வார் - அவா இநதப பிறவியிலேதானே மோக்ஷககரையையடைவார். (உசு)

விடுததிடலரியநித்தவேள்விமாவிரதம்வேதந்
தடுததிடலரியதானந்தவமிவைதருமபேறெலலா
மடுததுதனகரையிலவைகியீசனையருசசிப்போர்க்குக்
கொடுததிடுபுண்ணியத்திற்கோடியிலொன்றுக்கொவ்வா.

(இ-ள்.) விடுத்திடல் அரிய நித்த வேள்வி மா விரதம் வேதம்-விடுத்தற்கரிய நித்திய ஆகுதியும் பெரியவிரதமும வேதமோதுதலும், தடுத்து இடல் அரியதானம் தவம் இவை தரும் பேறு எல்லாம - தடுத்தற்கரிய தானமும் தவமும் ஆகிய இவைகள் தரும்பயன்கள் எல்லாம், அடுத்து அதன்கரையில் வைகி ஈசனை அருச்சிப்போர்க்கு - சென்று அத்தீர்த்தததின்கரையிலிருந்து சிவபெருமானை அருச்சனைசெய்பவருககு, கொடுததிடு புண்ணியத்தில் கோடியில் ஒன்றுக்கு ஒவ்வா - தானங்கொடுக்கும் புண்ணியப்பயன்களில் கோடியில் ஒருகூறுக்கேனும் ஒப்பாகாவாம்.

உம்மையிற்பிறவிதோறுநியமநல்லொழுக்கம்பூண்டு
பொய்ம்மையில்விரதந்தானந்தவஞ்செய்துபுனிதராகிச்

செம்மைநன்னெறியினின்றசித்தருக்கலதித்தீர்த்த
மிம்மையிலடைந்துநித்தமாடுதற்கெய்தாதன்றே.

(இ-ள்.) உம்மையில் பிறவிதோறும் நியமம் நல் ஒழுக்கம் பூண்டு - முற்சனனங்களிற் பிறவிகள்தோறும் நியமமாக நல்லொழுக்கங்களை மேற்கொண்டு, பொய்ம்மை இல் விரதம் தானம் தவம் செய்து புனிதர் ஆகி செம்மை நல் நெறியில் நின்ற சித்தருக்கு அல்லது - உண்மையாகியவிரதத்தையுந் தானத்தையுந் தவத்தையுஞ் செய்து பரிசுத்தமுடையவர்களாகி நடுநிலையாகிய நல்லொழுக்கத்தினின்றசித்தர்களுக்கு நித்தமுஞ்சென்று ஸ்நானஞ்செய்தல்கூடுமேயன்றி, இத்தீர்த்தம் இம்மையில் அடைந்து நித்தம் ஆடுதற்கு எய்தாது- இந்தத்தீர்த்தமானது (ஏனையோர்)இப்பிறப்பிலடைந்து நித்தமும் ஸ்நானஞ்செய்தற்குக்கிட்டாது.

ஏழனுருபு-கூட்டிப் பிரித்தற்பொருளில்வந்தது. எய்துதல்-சொல்லெச்சம்.

வேறு.

மதிகதிரோனிடத்தொடுங்குதினந்திங்கட்பிறப்பரவம்வாயங்காந்து
கதிர்கடமைவிழுங்குதினம்விதிபாதமிந்நாளிற்கருதிமூழ்கித்
துதிகடருப்பணந்தானம்புரிதன்மநுவோதுதலத்தொகையொன்றற்கொ
றதிகபலனம்முறைநூறாயிரநூறாயிரமோரனந்தமாகும். [ன்

(இ-ள்.) மதி கதிரோன் இடத்து ஒடுங்கு தினம் - சந்திரன் சூரியனிடத்து ஒடுங்குந்தினமாகிய அமாவாசையும், திங்கள் பிறப்பு - மாசப்பிறப்பும், அரவம் வாய் அங்காந்து கதிர்கள் தமை விழுங்கு தினம் விதிபாதம்-இராகுகேதுக்கள் வாயைத்திறந்து சந்திரசூரியர்களை விழுங்குங் கிரகணகாலமும்விதிபாதமுமாகிய, இந் நாளில் கருதி மூழ்கி - இந்தப்புண்ணியதினங்களில் இனையபயனை யடையவேண்டுமென வெண்ணி ஸ்நானஞ்செய்து, துதிகள் தருப்பணம் தானம் புரிதல் மநு ஓதுதல்-துதித்தலுந் தருப்பணஞ்செய்தலுந் தானங்கொடுத்தலும் மந்திரஞ்செபித்தலுமாகிய, அத்தொகை ஒன்றற்கு ஒன்று அதிகபலன் - அத்தொகையுள் ஒன்றுக்கொன்று அதிகபயன்றருவதாம், (அது எவ்வாறென்னில்) அம்முறை நூறு ஆயிரம் நூறாயிரம் ஓர் அனந்தம் ஆகும்-அங்ஙனவைத்த முறைப்படி ஒன்றுக்கு நூறும் ஒன்றுக்கு ஆயிரமும் ஒன்றுக்கு நூறாயிரமும் ஒன்றுக்கு ஒரு அனநதமுமாம்.

துதிசெய்தல், தருப்பணஞ்செய்தல், தானங்கொடுத்தல், மந்திரமோதல், இவை நான்காதலால் தொகையெனறார். ஏனையிடங்களில் - செய்தல் என்னும் பொருள்மேனின்ற புரிதல் என்னுந் தொழில் நிகழ்ச்சியால் கொடுத்தலென்னும் பொருள்நிகழ்ச்சிதோன்ற அதனை உபசரித்தார். விதிபாதம்-மாதந்தோறும் வரப்பட்ட யோகங்கள். இருபத்தேழி லொன்றாய்ப் பிதிர்கர்ம விசேடங்களுக்குரிய சிரார்த்த வகை தொண்ணூற்றாறி லொன்றாய்வருவது. (உகூ)

பொருவரியதகர்த்திங்கடுலாத்திங்களிவையுதிக்கும்போதுமூழ்கி
னொருபதினாயிரமடங்காஞ்சுறவுகவைத்தாளலவனுதிப்பின்மூழ்கி
னிருபதினாயிரமடங்காமிந்திரவியிடத்தொடுங்குமிந்துவாரம்
வருவதறிந்தாடிமநுவோதன்முதல்செயினனந்தமடங்குண்டாகும்.

(இ-ள்.) பொருவு அரிய தகர் திங்கள் துலா திங்கள் இவை உதிக்கும் போது மூழ்கின் - ஒப்பில்லாத மேடமாசந் துலாமாசம் ஆகிய இம்மாசங்கள் பிறக்கும் பு

ண்ணியகாலங்களில் ஸ்நானஞ்செய்தால், ஒருபதினுயிர மடங்கு ஆம் - (ஏனைமாசங்களில் வரும்பயன்களில்) ஒருபதினுயிரம்பங்கு அதிகபலனும், சுறவு கவை தாள் அலவன் உதிப்பில் மூழ்கின் இருபதினுயிர மடங்கு ஆம்-மகரமாசம் கற்கடகமாசம் ஆகிய இவைகள் பிறக்குங்காலங்களில் ஸ்நானஞ்செய்தால் இருபதினுயிரம்பங்கு அதிகமாம், இந்து இரவி இடத்து ஒடுங்கும் இந்துவாரம் வருவது அறிந்து ஆடி-சந்திரன சூரியனிடத்து ஒடுங்கும் அமாவாசை சோமவாரத்தில் வருதலையறிந்து ஸ்நானஞ்செய்து, மநு ஓதல் முதல் செயின் அனந்தம் மடங்கு உண்டாகும் - மந்திரமுதலியவற்றைச்ஜெபித்தால் அனந்தம்பங்கு அதிகபலன் உண்டாம்.

கவைத்தாள் அலவன் - பிளவுபட்ட காலையுடையகற்கடகம். (கூ0)

பிரயாகைதனின்மகரமதிநாண்முப்பதுங்குடைந்துபெறும்பேறிந்தத்
திரையார்பைந்தடத்தொருநாண்மூழ்குவோன்பெறும்விரதசீலம்பூண்டு
வரையாமலொருவருடம்படிந்துமையையமரர்சிகாமணியாம்வேத
வுரையானைவழிபடுமேன்மலடிக்குநன்மகப்பேறுண்டாமன்றே.

(இ-ள்.) பிரயாகைதனின் மகரமதி நாள் முப்பதும் குடைந்து பெறும் பேறு - பிரயாகையில் தைமாதம் நாள்முப்பதும் ஸ்நானஞ்செய்தடையும்பயன், இந்த திரை ஆர் பைம் தடத்து ஒருநாள் மூழ்குவோன் பெறும் - இந்த அலைகள்நிறைந்த பசிய பொற்றாமரைத்தடத்தில் ஒருநாள் ஸ்நானஞ்செய்வோன் அடைவான், விரதம்சீலம் பூண்டு வரையாமல் ஒரு வருடம் பணிந்து உமையை அமரர் சிகாமணியாம் வேதவுரையானை வழிபடுமேல் - விரதமாகிய ஒழுக்கத்தைமேற்கொண்டு இடையே நீங்காமல் ஒருவருடம் ஸ்நானஞ்செய்து மீனுக்ஷியம்மையையும் தேவர்கள் சிகாமணியாகிய வேதமருளிய திருவாக்கையுடைய சோமசுந்தரக்கடவுளையும் பூசிப்பாளானல், மலடிகரு நல் மகப்பேறு உணடாம் - மலடிக்குஞ் சற்புத்திரப்பயனுண்டாகும்.

உம்மை - இறந்தது தழீஇய எச்சம் (கூக)

எண்டிசையநதிவாவிவடிவானமாதீர்த்தமெல்லாமிப்பொற்
புண்டரிகத்தடத்திலொருகோடியிலோர்கூறுநிகாபோதாவீது
கண்டதனலறந்தீண்டப்பெற்றதனைற்பொருளங்கையாலளளிக்
கொண்டதனலின்பநலங்குடைந்ததனற்பேரின்பங்கொடுக்குமன்றே.

(இ-ள்.) ஈது கண்டதனல் அறம் - இந்ததீர்த்தம் தரிசித்தலால் தருமத்தையும், தீண்ட பெற்றதனல் நல் பொருள் - பரிசித்தலால் மிக்கதிரவியத்தையும, அங்கையால் அளளிக் கொண்டதனல் இன்பம் நலம் - உள்ளங்கையால் அள்ளிக் கொள்ளுதலால் இன்பப்பயனையும், குடைநததனல் பேரின்பம் கொடுக்கும்-மூழ்குதலால் மோக்ஷ இன்பத்தையுங் கொடுக்காநிற்கும், (ஆதலால்) எண் திசைய நதி வாவி வடி வான மா தீர்த்தம் எல்லாம்-எட்டுத்திக்கிலுமுள்ள நதிவடிவமுந் தடாக வடிவமுமான மகத்தாகிய தீர்த்தங்கள்யாவும், இப் பொன் புண்டரிகத் தடத்தில்-இப்பொற்றாமரைத்தடத்தால்வரும், ஒருகோடியில் ஓர் கூறு நிகர் போதா-ஒருகோடிப்பேற்றினுள் ஒருபங்குப்பேற்றுக்கு ஒப்பாகாவாம்.

இல் உருபு இரண்டனுள் - முன்னது ஏதுப்பொருளில்வந்த ஐந்தனுருபு, பின்னது கூட்டிப்பிரித்தற்பொருளில்வந்த ஏழனுருபு. கணடது முதலியன இடைநிலை பெற்ற தொழிற்பெயர்கள். (கூஉ)

௸ வேறு.

முன்னவனருளிச்செய்தகாரணமுறையாலன்றி
யின்னமிப்புனிதவாவிக்கேதுவாலெய்துநாம
மின்னவிர்சடையான்சென்னிமேவியகங்கைநீரிற்
பின்னதுகலந்தநீராற்பெறுஞ்சிவகங்கையென்றும்.

(இ-ள்.) முன்னவன் அருளிச்செய்த காரண முறையால் அன்றி - சிவபெருமானருளிய ஏதுவின் முறையாலல்லாமலும், இன்னம இப்புனிதம் வாவிக்கு ஏதுவால் எய்தும் நாமம்-இன்னமும் இப்பரிசுத்தமாகிய பொற்றாமரைத்தடத்துக்குக் காரணத்தால் வரும் பெயர், மின் அவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரில் பின் அது கலந்த நீரால் சிவகங்கை என்றும் பெறும் - மின்னலைப்போலும் விளங்கும் சடையையுடைய சிவபெருமான் திருமுடியிற் பொருந்திய கங்கைநீரில் பின்பு அந்தத்தீர்த்தங்கலந்ததன்மையால் சிவதீர்த்தம் எனவும் பெறும். (௩௩)

அலகிலாத்தீர்த்தந்தம்முளதிகவுத்தமமாய்த்தோன்றி
யிலகலாலிதனைத்தீர்த்தவுத்தமமென்பாராய்ந்தோர்
பலவிதழ்விரித்துச்செமபொற்பங்கயமலர்ந்தநீரா
லுலகவர்யாரும்பொற்றாமரையெனவுரைப்பரன்றே.

(இ-ள்.) அலகு இலா தீர்த்தம் தம்முள் அதிகம் உத்தமம் ஆய் தோன்றி இலகலால் - அளவில்லாத தீர்த்தங்களுள் மேலான உத்தமமாகத்தோன்றி விளங்குதலால், ஆய்ந்தோர் இதனை உத்தம தீர்த்தம் என்பர் - நூல்களையாராய்ந்தபெரியோர் இந்தத்தீர்த்தத்தை உத்தமதீர்த்தமெனவுங் கூறுவர், பல இதழ் விரிந்த செம்பொன் பங்கயம் மலர்ந்த நீரால் - பலவிதழ்களையும் விரிந்துச் செவந்த பொற்றாமரை மலர்ந்ததன்மையால், உலகவர் யாரும் பொன் தாமரை என உரைப்பர்-உலகிலுள்ளவர் எவரும் பொற்றாமரை எனவுங்கூறுவர். (௩௪)

தருமமுன்னூருநான்குந்தருதலாற்றருமதீர்த்த
மருமைசாலருத்ததீர்த்தமரும்பெறறகாமதீர்த்த
மிருமைசேர்முத்திதீர்த்தமென்பதாமினையதீர்த்தம்
வெருவருபாவமென்னும்விறகினுக்கெரியாமன்றே.

(இ-ள்.) தருமம் முன் ஆகும் நான்கும் தருதலால் தருமதீர்த்தம் என்பதாம்—தருமமுதலாகிய நான்கு உறுதிப்பொருள்களையுங் கொடுத்தலால் தருமதீர்த்தமெனவுங்கூறப்படுவதாம், அருமை சால் அருத்ததீர்த்தம் என்பதாம் - அருமைமிக்க அர்த்ததீர்த்தமெனவுங் கூறப்படுவதாம், அரும் பெறல் காமதீர்த்தம் என்பதாம- பெறுதற்கரிய காமதீர்த்தமெனவுங் கூறப்படுவதாம், இருமை சேர் முத்தி தீர்த்தம் என்பதாம் - பெருமைபொருந்திய முத்திதீர்த்தமெனவுங் கூறப்படுவதாம், இனைய தீர்த்தம் வெருவரு பாவம் என்னும விறகினுக்கு எரியாம் - இத்தன்மையையுடைய தீர்த்தமானது அச்சத்தைத்தரும் பாவமாகிய விறகினுக்குப் பெருநெருப்பாம்.

வெரு - ஈறுகெட்டுநின்ற முதனிலைத்தொழிற்பெயர். (௩௫)

இவ்வருந்தலத்தினன்றபெருமையுமெரிகால்செம்பொற்
றெய்வதபதுமதீர்த்தப்பெருமையுஞ்செப்பக்கேட்டோ

ஒவ்வமில்போகம்வீடுபெறுவரென்றிசைத்தான்மூந்நீர்ப்
பௌவமுண்டமரர்வேந்தன்பரிபவவிழுமந்தீர்த்தோன்.

(இ-ள்.) மூந்நீர் பௌவம் உண்டு அமரர்வேந்தன் பரிபவம் விழுமந்தீர்த்தோன் - மூந்நீராகிய கடலையுண்டு தேவேந்திரனுடைய துன்பத்தைத்தீர்த்த அகத்தியமுனிவர், இ அரும் தலத்தின் ஆன்ற பெருமையும்-இந்த அரியதலத்தினது மிக்க பெருமையையும், எரிகால் தெய்வதம செம் பொன்பதுமதீர்த்தம் பெருமையும்-ஒளிவீசுந்தெய்வத்தன்மையையுடைய செவந்த பொற்றாமரைத்தீர்த்தத்தின் பெருமையையும், செப்ப கேட்டோர் எவ்வம் இல் போகம் வீடு பெறுவர் என்று இசைத்தான்-ஒருவர்சொல்லக்கேட்டவர்கள் துன்பமில்லாத போகத்தையும் மோக்ஷத்தையும் அடைவார்களென்று கூறியருளினார். (௩௧)

திர்த்தவிசேடம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உ௧௦.

---

## மூர்த்திவிசேடம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆலவாயலர்ந்தசெம்பொனம்புயப்பெருந்தீர்த்தத்தின்
மேலவாம்பெருமைதன்னைவிளம்புவாரெவரோயங்க
ணீலமாமிடற்றுமுக்கணிராமயனறிவானந்த
மூலமாவிலிங்கமேன்மைமுறையினாலறையலுற்றாம்.

(இ-ள் ) ஆலவாய் அலர்ந்த செம் பொன் அம்புயம் பெரும் தீர்தத்தின் மேல் அவாம் பெருமை தன்னை விளம்புவார் எவர் - திருவாலவாயில்மலர்ந்த செவந்த பொற்றாமரையாகிய பெரிய தீர்த்தத்தினுடைய விண்ணுலகிலுள்ளோர் விரும்பும் மான்மியத்தைச் சொல்வோர் யாவர், அங் கண் நீலம் மா மிடறு முக்கண் நிராமயன் அறிவு ஆனந்த மூலமா இலிங்கம் மேன்மை முறையினால் அறையல் உற்றாம் - அத்திருவாலவாயில் வீற்றிருந்தருளும் காளகண்டத்தையுந் திரிநேத்திரங்களையுமுடைய சோமசுந்தரக்கடவுளாகிய போதானந்த சொரூபமான மகத்தான மூலவிலிங்கத்தின் மான்மியத்தை முறைப்படி சொல்லுகின்றோம்.

நீலம் மா - ஒருபொருட்கிளவிகள். நிராமயன் - நோயில்லாதவன். (௧)

பொன்னெடுமேருவெள்ளிப்பொருப்புமந்தரங்கேதாரம்
வன்னெடும்புரிசைசூழ்ந்தவாரணவாசியாதிப்
பன்னருந்தலங்கடம்மிற்பராபரவிலிங்கந்தோன்று
முன்னரிக்கடம்பின்மாடேமுளைத்ததிசசைவலிங்கம்.

(இ-ள்.) நெடு பொன் மேரு வெள்ளி பொருப்பு மந்தரம் கேதாரம் வல் நெடும் புரிசை சூழ்ந்த வாரணவாசி ஆதி பன்னரும் தலங்கள் தம்மில் - நெடிய பொன்னாகிய மேருவும் வெள்ளிமலையாகிய திருக்கைலையும் மந்தரமும் திருக்கேதாரமும் வலிய நெடியமதில்சூழ்ந்த காசியும் ஆகிய இவைகள்முதலாகவுள்ள சொல்

யாதற்கரிய சைவதலங்களில், பராபர இலிங்கம் தோன்று முன்னர் இகடம்பின் மாடு இச்சைவ லிங்கம் முளைத்தது-சிவலிங்கங்கள் தோன்றுதற்குமுன்னே இக்கடம்பமரத்தின்கீழ் இந்தச் சைவலிங்கந் தோன்றியருளியது.

காசிக்குக் குக்குடநகரம் என ஓர்திருநாமம் வாரணவாசி கோழிவசிப்பது என்னும்பொருட்டு. பராபரன் - பரைக்குநாயகன். (உ)

அப்பதியிலிங்கமெல்லாமருட்குறியிதனிற்பின்பு
கப்புவிட் டெழுந்தவிந்தக்காரணமிரண்டினாலு
மொப்பரிதானஞானவொளிதிரண்டன்னவிந்தத்
திப்பியவிலிங்கமூலவிலிங்கமாய்ச்சிறக்குமன்றே.

(இ-ள்.) அப்பதி இலிங்கம் எல்லாம் அருட்குறி இதனில் பின்பு கப்புவிட்டு எழுந்த-மகமேருமுதலிய திருப்பதிகளிலுள்ள சிவலிங்கங்கள்யாவும்இந்தச்சிவலிங்கமாகிய மூலத்தினின்றுங் கப்புவிட்டுத் தோன்றின, இந்த காரணம் இரண்டினாலும் - இந்த இரண்டேதுக்களாலும், ஒப்பு அரிது ஆன ஞான ஒளி திரண்டால் அன்ன இந்த திப்பிய இலிங்கம்-ஒப்பில்லாத ஞானவொளி திரண்டாலொத்த இந்தத் திவ்விய சிவலிங்கமானது, மூல இலிங்கமாய் சிறக்கும் - மூலலிங்கமெனப்பெயர் பெற்றுச் சிறந்து விளங்கும். (௩)

இந்தமாவிலிங்கத்தெண்ணான்கிலக்கணவிச்சைமேனி
யந்தமிலழகன்பாகத்துமையொடுமழகுசெய்து
சந்ததம்விளக்கஞ்செய்யுந்தகைமையைநோக்கிசோம
சுந்தரனென்றுநாமஞ்சாத்தினார்துறக்கவாணர்.

(இ-ள்.) இந்த மா இலிங்கதது இச்சை எண்ணான்கு இலக்கண மேனி அந்தம் இல் அழகன் - இந்தப் பெரிய இலிங்கத்தில் தனது இச்சையா லெடுத்தருளிய முப்பத்திரண்டிலக்கணம் வாய்ந்த திருமேனியையுடைய முடிவில்லாத பேரழகினையுடைய சிவபெருமான், பாகத்து உமையொடும் அழகு செய்து சந்ததம் விளக்கம் செய்யும் தகைமையை நோக்கி - தனது இடப்பாகத்தில் உமாதேவியாரோடும் அழகுசெய்து எந்நாளும் பிரகாசஞ் செய்தருளுந்தன்மையைப்பார்த்து, துறக்க வாணர் சோம சுந்தரன் என்று நாமம் சாத்தினார் - தேவர்கள் சோமசுந்தரன் எனறுபெயர் கூறினார்கள்.

சோமசுந்தரன் - உமையோடுகூடி அழகுசெய்பவன். (௪)

திறப்படுமுலகமெங்கும்வியாபியாய்ச்சிறந்துநிற்கு
மறப்பெருங்கடவுள்சோமசுந்தரனதனாலன்றே
கறைக்கதிர்வடிவேற்றென்னன்கையிற்பொற்பிரம்புபட்டுப்
புறத்தடித்தழும்புமூன்றுபுவனமும்பட்டதன்றே.

(இ-ள்.) திறப்படும் உலகம் எங்கும் வியாபியாய் சிறந்து நிற்கும் அறப் பெருங் கடவுள் சோம சுந்தரன் - நிலைபெற்ற எல்லாவுலகங்களிலும் வியாபியாய்ச் சிறந்துவிளங்குந் தருமவடிவாகிய கடவுள் சோமசுந்தரக்கடவுளாம்,அதனால் அன்றே - அதனாலல்லவா, கறை கதிர் வடிவேல் தென்னன் கையில் பொன் பிரம்பு புற

த்த பட்ட அடி தழும்பு மூன்று புவனமும் பட்டது - உதிரந்தோய்ந்த ஒளியையுடைய வடித்த வேலையேந்திய பாண்டியன்கையிலுள்ள பொற்கட்டியையுடைய பிரம்பால் மொதுகிற்பட்ட அடியின்தழும்பு மூன்றுலகங்களிலுமுள்ள சராசரங்கள் மேலும் பட்டது.

இதனால் சிவபிரான் எங்கும் வியாபகனென்னும் உண்மை உணர்த்தப்பட்டது. (ரு)

சொற்றவிச்சமட்டியானசோமசுந்தரனைக்காணப்
பெற்றவர்வியட்டியானபிறபதிலிங்கங்காண
லுற்றவராவரென்னென்றுரைக்கின்வேரூட்டுநீர்போய்
மற்றையசினைகளெல்லாந்தழைவிக்குமரத்தின்மாதோ.

(இ-ள்.) சொற்ற இச்சமட்டி ஆன சோமசுந்தரனை காண பெற்றவர்-சொல்லிய இந்தச் சமஷ்டிமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்கப்பெற்றோர், வியட்டி ஆன பிறபதி இலிங்கம் காணல் உற்றவர் ஆவர்-வியஷ்டிமூர்த்திகளாகிய ஏனைய தலங்களிலுள்ள சிவலிங்கங்களைத் தெரிசித்தவர்களாவார்கள், என் என்று உரைக்கின்-யாதுபற்றி யென்றுவினவில், வேர் ஊட்டும் நீர் மரத்தில் மற்றைய சினைகள் எல்லாம் போய் தழைவிக்கும் - வேரிலூட்டியநீர் மரத்திலுள்ள ஏனைய கிளைகளிலெல்லாம் பரந்து தழையச்செய்யும். (அதுபோலெனவுணர்க.)

இவற்றை ஏதுக்களிரண்டென முன்னர்க் கூறிய செய்யுள்களாலுணர்க. வேர் - சோமசுந்தரக்கடவுள், சினைகள் - ஏனையதலங்களிலுள்ள சிவலிங்கங்கள், நீர் - தரிசனை எனக்கூட்டிப் பொருள்கொள்க. (சு)

எத்தலத்தியாவனெண்ணெண்டிருவிளையாடல்செய்தா
னத்தலந்தவனுக்கொப்புமதிகமாஞ்சிறப்பும்பெற்ற
வுத்தமனென்றுமெந்தவுலகினுமில்லையந்த
வித்தகனதிகத்தன்மையெனைத்தெனின்விளம்பக்கேண்மின்.

(இ-ள்.) எந்தலத்து யாவன் எண்ணெண் திருவிளையாடல் செய்தான் - எந்தத்தலத்தில் சோமசுந்தரக்கடவுளைப்போல எந்தக்கடவுள் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தருளினன், (ஆதலால்) அத்தலத்து அவனுக்கு ஒப்பும் அதிகமாம் சிறப்பும் பெற்ற உத்தமன் என்றும் எந்த உலகினும் இல்லை - அத்திருவாலவாயிடத்து வீற்றிருந்தருளும் அச்சோமசுந்தரக்கடவுளுக்கு ஒப்பாதலையும் மேம்பட்ட சிறப்பையும் பொருந்திய உத்தமக்கடவுள் எக்காலத்திலும் எந்தவுலகத்திலும் இல்லையாம், அந்த வித்தகன் அதிகத் தன்மை எனைத்து எனின் விளம்ப கேண்மின்- அந்த ஞானமூர்த்தியின் தலைமைத்தன்மை எத்தன்மையதென்று வினவில் யாம் சொல்லக்கேளுங்கள். (எ)

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குடுமிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு
விருப்புறுவேள்விதம்முண்மேம்படும்பரவிமேத
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம்.

(இ-ள்.) பொருப்பினுள் நெடுங் குடுமி பொன் மேரு தலைமை எய்தும்-மலைகளுள் நீண்ட சிகரங்களையுடைய பொன்னாகிய மேரு தலைமைபெற்றுள்ளது, தருக்களி

ல் தண் நறும் தெய்வதாரு தலைமை சாரும்-மரங்களுள் தண்ணிய நல்லமணமுள்ள கற்பகமரந் தலைமை பெறுமுளது, விருப்புறு வேள்வி தம்முள் புரவி மேதம் மேம்படும்-சுவர்க்காதிபோகங்களை விரும்பிச் செய்யும் யாகங்களில் அசுவமேதயாகந் தலைமைபெற்றுள்ளது,அருள் படும் தானம் தம்முள் அன்னதானம் விழுமிது-கருணையாற்கொடுக்குந் தானங்களுள் அன்னதானந் தலைமைபெற்றுள்ளது.

ஆம் - அசைநிலை. (அ)

மனிதரிலுயர்ந்தோராதிமறையவர்தேவர்தம்மிற்
பனிதருதிங்கள்வேணிபகவனேயுயர்ந்தோன்வேட்டோர்க்
கினிதருள்விரதந்தம்முளதிகமாமிந்துவாரம்
புனிதமந்திரங்கடம்முட்போதவைந்தெழுத்துமேலாம்.

(இ-ள்.) மனிதரில் ஆதி மறையவர் உயர்ந்தோர் - மனிதருள் முதல்வருணத்தராகிய அந்தணர்கள் தலைமைபெற்றுள்ளவர்கள், தேவர் தம்மில் பனி தரு திங்கள் வேணி பகவனே உயர்ந்தோன் - அயன்முதலிய தேவர்களில் குளிர்ச்சி பொருந்திய சந்திரனையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானே தலைமைபெற்றுள்ளவன், வேட்டோர்க்கு இனிது அருள் விரதம் தம்முள் இந்து வாரம் அதிகமாம்-இம்மைமறுமைப்பயன்களை விரும்பினவர்களுக்கு அப்பயன்களை முட்டின்றிக் கொடுக்கும் விரதங்களுள் சோமவாரவிரதந் தலைமை பெற்றுள்ளது, புனிதம் மந்திரங்கள் தம்முள் போதம் ஐந்து எழுத்தும் மேலாம் - பரிசுத்தமாகிய மந்திரங்களுள் ஞானத்தைத்தரும் ஸ்ரீபஞ்சாக்கரந் தலைமைபெற்றுள்ளது. (கூ)

மின்மைசான்மணியிற்சிந்தாமணிவரம்விழுப்பநல்குந்
தன்மைசாலறங்கடம்மின்மிகுஞ்சிவதருமமென்ப
வின்மைசானெறிநின்றோருக்கேற்குநற்றவங்கடம்மி
னன்மைசான்றவரோமுக்கணுதனுக்கன்புபூண்டோர்.

(இ-ள்.) மின்மை சால் மணியில் சிந்தாமணி - ஒளிமிக்க இரத்தினங்களுள் சிந்தாமணி தலைமைபெற்றுள்ளது, வரம் விழுப்பம் நல்கும் தன்மை சால் அறங்கள் தம்மில் சிவதருமம் மிகும் - கருதியவரங்களை மிகவுந்தரும்தன்மைமிக்க தருமங்களுள் சிவதருமந் தலைமைபெற்றுள்ளது, சால் இன்மை நெறி நின்றோருக்கு ஏற்கும் நல் தவங்கள் தம்மில் முக்கணுதனுக்கு அன்பு பூண்டோர் நன்மை சான்றவர்-தருமமிக்க இல்லறநெறியில் நிற்பவருக்கு விதித்த நல்ல தவமுடையோருள் திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானிடத்து அன்புவைத்தவர் தலைமைபெற்றுள்ளவர்.

இதனால் துறவறத்தினரன்றி இல்லறத்தினருஞ் சிவபெருமானிடத்து அன்புவைக்கவேண்டுமென்பது கூறப்பட்டது. இன்மை குணியைக் குணமாகக்கூறியது-மரபுவழுவமைதி, தவம் குணியாகக் கூறியது - குணவாகுபெயர். கு - உருபுமயக்கம். என்பது அசைநிலை. மின்மைசால் மணியில் சிந்தாமணி என்றவிடத்து தலைமைபெற்றுள்ளது என்றது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. (கO)

தீயவாஞ்சுவைப்பாலாவிற்றேவராவதிகம்பல்வே
றுயமாதீர்த்தந்தம்முளதிகமாஞ்சுவணகஞ்ச
மாயமாசறுக்கவெல்லாத்தலத்திலும்வதிந்துமன்னுந்
தூயவானவரிற்சோமசுந்தரன்சிறந்தோனாகும்.

(இ-ள்.) தீ அவாம் சுவை பால் ஆவின் தேவர் ஆ அதிகம்-இனிமைவிரும்புஞ் சுவையையுடைய பாலையுடைய பசுக்களுள்காமதேனு தலைமைபெற்றுள்ளது, (அது போல) பல் வேறு ஆய மா தீர்த்தம் தம்முள் சுவணகஞ்சம் அதிகமாம் - பல் வேறு வகைப்பட்ட மகத்தாகிய தீர்த்தங்களுள் பொற்றாமரைத்தீர்த்தம் தலைமை பெற்றுள்ளது, மாயம் மாசு அறுக்க எல்லாத் தலத்தினும் மன்னி வதியும் தூய வானவரில் சோமசுந்தரன் சிறந்தோன் ஆகும்-பந்தமாகிய குற்றத்தை அடியார்க்கு வேரோடறுத்தருள எல்லாச் சைவதலங்களினும் நிலைபெற்று வீற்றிருக்கும் பரிசுத்தமாகிய கடவுளரில் சோமசுந்தரக்கடவுள் சிறந்தவனுவான்.

தீமை - இனிமை. மன்னும், என்னும் பெயரெச்சத்தினின்ற விகுதியைப்பிரித்து வதிந்து என்பதனோடும், அவ்வினையெச்சவிகுதியைப்பிரித்து மன்னும் என்பதனோடுங்கூட்டிப் பொருள்கொள்க. (கக)

அந்தமுமுதலுமில்லாவகண்டபூரணமாயார்க்கும்
பந்தமும்வீடுநல்கும்பராபரசோதிதானே
வந்தனைபுரிவோர்க்கிம்மைமறுமைவீடளிப்பானிந்தச்
சுந்தரவிலிங்கத்தென்றும்விளங்குவான்சுருதியேத்த.

(இ-ள்.) அந்தமும் முதலும் இல்லா அகண்ட பூரணம் ஆய்-தனக்கோர் இறுதியு முதலுமில்லாது அகண்டபரிபூரணமாகி, யார்க்கும் பந்தமும் வீடும் நல்கும் பராபரச் சோதிதானே - ஈறுமுதலுமுள்ள எல்லா ஆன்மகோடிகளுக்கும் பந்தத்தையும் மோக்ஷத்தையும் தரும் சிவபெருமானே, வந்தனை புரிவோர்க்கு இம்மை மறுமை வீடு அளிப்பான் - தன்னை வந்தனைசெய்வோர்க்கு இகபோகத்தையும் பரபோகத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கும்பொருட்டு, இந்த சுந்தர இலிங்கத்து சுருதி ஏத்த என்றும் விளங்குவான்-இநதப் பேரழகுவாய்ந்த சிவலிங்கத்தில் வேதங்கள் துதிசெய்ய எந்நாளும் நிலைபெற்றுவிளங்கி அருள்வான். (கஉ)

இத்தகுசயம்புதன்னையேனையசயம்புவெல்லா
நித்தமுந்தெரிசித்தேகுநிருமலவொளியாமிந்த
வுத்தமவிலிங்கங்கண்டோருணர்வொடுங்கவுள்ளே
சித்தமாசொழியத்தோன்றுஞ்சிவபரஞ்சுடரைக்கண்டோர்.

(இ-ள்.) இத்தகு சயம்பு தன்னை ஏனைய சயமபு எல்லாம் நித்தமும் தெரிசித்து ஏகும் - இந்தச்சயம்புமூர்த்தியை மற்றையசயமபுமூர்த்திகளெல்லாம் நாள்தோறும்வந்து தெரிசனைசெயது செல்லாநிற்கும், இந்த நிருமல ஒளி ஆம் உத்தம இலிங்கம் கண்டோர் - இந்த நின்மலவொளிப்பிழம்பாகிய வுத்தமவிலிங்கத்தைப் புறத்திற் கண்டு தெரிசித்தவர்கள், உணர்வு உரை ஒடுங்க சித்தம் மாசு ஒழிய உள்ளே தோன்றும் சிவபரஞ் சுடரைக்கண்டோர் - மனவாக்குகளொடுங்கவும் மனக்குற்ற மொழியவும் அகத்தே தோன்றும் மேலான வொளிப்பிழம்பாகிய சிவத்தைத் தெரிசித்தவராவார்கள்.

சயம்பு வடசொல்லாதலால் ஈறுகெடாது நின்றது. (கங)

இத்தனிச்சுடரைநேர்கண்டிறைஞ்சினோர்பாவமெல்லாங்
கொத்தழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோற்கோபமூள
மெய்த்தவஞ்சிதையுமாபோன்மருந்தினல்வீயுநோய்போ
லுத்தமகுணங்களெல்லாமூலோபத்தாலழியுமாபோல்.

(இ-ள்.) இத் தனி சுடரை நேர் கண்டு இறைஞ்சினோர் பாவம் எல்லாம்-இத் தவொப்பில்லாத சிவலிங்கப்பெருமானை நேரே தரிசித்துவணங்கினோர் பாவங்கள் யாவும், கொத்து அழல் பொறிவாய் பட்ட பஞ்சுபோல்-திரண்டதீப்பொறியின்வா யிற்பட்ட பஞ்சுபோலவும், கோபம் மூள மெய தவம் சிதையும் ஆறுபோல்-கோப மிக்கூர உண்மையாகிய தவம் அழியும் வகைபோலவும், மருந்தினால் வீயும் நோய் போல் - மருந்தினால்நீங்கும் நோயைப்போலவும், உலோபத்தால் உத்தம குணங் கள் எல்லாம் அழியும் ஆறுபோல் - உலோபகுணமொன்றால் உத்தமகுணங்கள் யா வும் அழியும் வகைபோலவும்.

உலோபகுணமொன்றால் அழியுமென்றற்கு "உளப்பரும்பிணிப்புறா வுலோ பமொன்றுமே, அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோல்" எனப் பிறர்கூறுதலுங் காண்க. (கச)

கலிகடலிரவிதோன்றக்கருகிருளுடையுமாபோ
லொலிகெழுபெருங்காறள்ளவுடைபடுமேகம்போல
வலிகெழுமடங்கல்சீறமாயுமால்யானைபோலக்
குலிசவல்லேறுதாக்கப்பொடிபடுகுன்றம்போல.

(இ-ள்.) கலி கடல் இரவி தோன்ற கருகு இருள் உடையும் ஆறுபோல்-ஒலி க்குங்கடல்முகட்டில் சூரியனுதிக்கக் கருகியநிறத்தையுடைய விருள் அழியும்வகை போலவும், ஒலி கெழு பெரும் கால் தள்ள உடைபடும மேகம்போல - ஒலிமிக்கபெ ருங்காற்றுவீச நிலைகெட்டுச் சிதறிச்செல்லும் மேகமபோலவும், வலிகெழு மடங் கல் சீற மாயும் மால் யானைபோல - வலிமைமிக்க சிங்கம கெர்ச்சிக்க அழியும மய க்கங்கொண்ட யானைகள்போலவும், குலிசம் வல் ஏறு தாக்க பொடிபடு குன்றம போல - வச்சிராயுதமாகிய இடியேறுதாக்கத் துகள்படும மலைகளபோலவும்.

தோனற, தள்ள, சீற, தாக்க காரணபபொருளில்வநத வினையெச்சங்கள். (கரு)

மருட்சிசெயகாமநோயான்மதிகெடுமாறுபோல
வருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிசசைபோலத்
தருக்குறுமுவணஞ்சீறத்தழலராவிளியுமாபோற்
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிதையுமன்றே.

(இ-ள்.) மருட்சி செய் காமநோயால் மதிகெடும் ஆறுபோல - மயக்கஞ்செ ய்யுங் காமமாகிய நோயால் நுண்ணறிவுகெடும் வகையைபபோலவும், அருள சிவ ஞான நோக்கால் வலிகெடும் அவிச்சைபோல - அருளையுடைய சிவஞானப்பார்வை யால்வலிகெட்டோடும்அஞ்ஞானத்தைப்போலவும, தருக்கு உறும உவணம் சீற தழல் அரா விளியும் ஆறுபோல்-செருக்குமிக்க கருடனகோபிக்க விஷநெருப்பையுடைய சர்ப்பம் அழியும் வகையைப்போலவும்,செருக்கு உற அழியும் கற்ற கல்விபோல்- அகங்கரிக்கச்சிதையுங் கற்றகல்வியைப்போலவும், சிதையும்-அழியாநிற்கும்.

பஞ்சுமுதலியபொருள்கள் தீப்பொறிமுதலியவற்றால் அக்கணமே அழிதல் போலவும், தவமுதலியபொருள்கள் கோபமுதலியவற்றால் அக்கணமே அழிதல் போலவும், வணங்கினோர்பாவங்களெல்லாம் அவ்வணங்குகையால் அழியுமென இத் தனிச்சுடரை நேர்கண்டிறைஞ்சினோர் என்னுஞ்செய்யுண்முதல், மருட்சிசெய்காம நோயால் என்னுஞ்செய்யுளிறுதியாகவுள்ள செய்யுள்களால் கூறப்பட்டன. (கசு)

புலரியிற்சிவன்முத்திபுரோசனைக்காணப்பெற்றா
லலைகடனன்குட்பட்டவவனிமாதானஞ்செய்த
பலனுறுங்கதிர்காலுச்சிவைகலிற்பணியப்பெற்றாற்
கலைஞர்பானூற்றுப்பத்துக்கபிலைமாதானப்பேறாம்.

(இ-ள்.) புலரியில் சிவன் முத்தி புரோசனை காண பெற்றால் - விடியற்போதில் சிவன்முத்திபுரோசனாகிய சோமசுந்தரக்கடவுளைத் தெரிசிக்கப்பெற்றால், அலை நான்கு கடலுள் பட்டமா அவனி தானம் செய்த பலன் உறும் - அலைக்கும் நாற்றிசைக்கடலுட்பட்ட பெரிய பூதானஞ்செய்தபலன் கைகூடும், கதிர் கால் உச்சிவைகலில் பணிய பெற்றால் - சூரியன்கிரணத்தைவீசும் உச்சிப்போதில் அச்சோமசுந்தரக்கடவுளை வணங்கப்பெற்றால், கலைஞர் பால் மா நூற்றுப் பத்து கபிலை தானப் பேறு ஆம் - வேதமுதலியநூல்களை யுணர்ந்த அந்தணர்க்குக்கொடுத்த பெரிய ஆயிரங் கோதானப்பலன் கைகூடும். (கஎ)

விண்ணிடைப்பரிதிப்புத்தேண்மேலைநீர்குளிக்குமெல்லை
யண்ணலைவணங்கிற்கோடியானினத்தானப்பேறாம்
பண்ணவர்பரவுமபாதியிருள்வயிற்பணியப்பெற்றால்
வண்ணவெம்புரவிமேதமகம்புரிபெரும்பேறெய்தும்.

(இ-ள்.) விண் இடை பரிதி புத்தேள் மேலை நீர் குளிக்கும் எல்லை - ஆகாயத்திற் செல்லுஞ் சூரியன் மேலைக்கடலின் முகட்டில் மூழ்கும் அந்திப்பொழுதில், அண்ணலைவணங்கில் கோடி ஆன் இனம் தானம் பேறு ஆம்-சோமசுந்தரக்கடவுளை வணங்கினால் கோடிப்பசுக்கூட்டங்களைக்கொடுக்கும் பலன்வந்து கைகூடும், பண்ணவா பரவும் பாதி இருள்வயின் பணியப்பெற்றால்-தேவர்கள் வணங்கும் அர்த்தசாமத்தில் (அச்சோமசுந்தரக்கடவுளை) வணங்கப்பெற்றால், வண்ணம் வெம்புரவி மேதம் மகம்புரி பெரும்பேறு எய்தும் - நிறம்பொருந்திய கடுநடையையுடைய அசுவமேதயாகஞ்செய்தலால்வரும் பெரியபயன்கைகூடும்.

புரி-காரணப்பொருளில்வந்த காலங்கரந்தபெயரெச்சம். (கஅ)

இன்னனவதிகமாம்பேறறிந்துபோயெத்தேவர்க்கு
முன்னவன்சமட்டிவிச்சாபுரமுறைமுதல்வன்றன்னைச்
சொன்னவக்காலந்தோறுமிறைஞ்சியுந்தொழுதுஞ்சூழ்ந்தும்
பொன்னடிக்கன்பராகிவழிபடும்புனிதசீலர்.

(இ-ள்.) இன்னன அதிகமாம் பேறு அறிந்து போய் - இவைபோல்வனவாகிய அதிகபலனை யறிந்துசென்று, எத்தேவர்க்கு முன்னவன் சமட்டி விச்சாபுரம் உறை முதல்வன் தன்னை - அயன்முதலிய எல்லாத்தேவர்களுக்கு முற்பட்டவனாகிய சமட்டிவிச்சாபுரம் என்னும் மதுரையிலெழுந்தருளிய முதல்வனாகிய சோமசுந்தரக்கடவுளை, சொன்ன அக்காலந்தோறும் இறைஞ்சியும் தொழுதும் சூழ்ந்தும் பொன் அடிக்கு அன்பராகி வழிபடும் புனித சீலர் - மேற்கூறிய புலரிமுதலியகாலங்கள்தோறும் வணங்கியும் கைகூப்பியும் பிரதக்ஷணஞ்செய்தும் பொன்போலும் அரியதிருவடிக்கு அன்புபூண்டவராகி வழிபட்டொழுகும் நல்லொழுக்கமுடையோர்.

உம்மையில்வினைகளொன்னும்பிணியவிழ்ந்தொருவித்தூய
செம்மையராகியாண்டுத்திருவொடுசெல்வமோங்க

வெம்மையில்போகமூழ்கிமலவிருள்வீக்கநீந்தி
மைம்மலிகண்டத்தெங்கோன்மலரடிநீழல்வாழ்வார்.

(இ-ள்.) உம்மையில் வினைகள் என்னும் பிணி அவிழ்ந்து ஒருவி-முற்பிறப்பிற்செய்த வினைகளாகிய கட்டினின்றுநீங்கி, தூய செம்மையர் ஆகி-புனிதமாகியநல்நிலையையுடையவராகி, ஆறு திருவொடு செல்வம் ஓங்க - நீங்காத பொருட்செல்வத்தோடு கல்விச்செல்வமும் மிக்குயர்ந்துவிளங்க, வெம்மையில் போகம் மூழ்கி-விரும்பத்தக்க போகங்களை முட்டின்றிநுகர்ந்து, மலம் இருள் வீக்கம் நீந்தி-ஆணவமலமாகிய விருட்பெருக்கைக்கடந்து, மை மலி கண்டத்து எங்கோன் மலர் அடி நீழல் வாழ்வார் - கருமைநிறமிக்க கண்டத்தையுடைய எமது இறைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடையதாமரைமலர்போன்றதிருவடிநிழலில் கலந்துவாழ்வார்கள்.

இதனால் இம்மைப்பயனும் மறுமைப்பயனும் கூறப்பட்டன. இன்னனவென்னும் செய்யுளும் இச்செய்யுளும் ஒருதொடராதலால் புனிதசீலர் வாழ்வார் என முடிக்க. (உ0)

வேறு.

அறவுருவனாலவாயானமஞ்செவிமடுத்தாலடைந்தபத்துப்
பிறவிவினையறுநினைந்தானூறுபெரும்பவப்பாவப்பிணிபோங்கூட
லிறைவனையின்றிறைஞ்சுதுமென் றெழுந்துமனைப்புறம்போந்தா லீரைஞ்
மறமுறுவெம்பவத்திழைத்தபாதகவல்வினையனைத்துமாயுமன்றே.[னூறு

(இ-ள்.) அறம் உருவன் ஆலவாயான் நாமம் செவிமடுத்தால் - தருமசொருபியாகிய திருவாலவாயி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருநாமத்தைக் காதில் கேட்டால், அடைந்த பத்து பிறவி வினை அறும் - முன்னடைந்தபத்துப்பிறவிகளிற்செய்த தீவினைகள் வேரோடு அறும், நினைந்தால் நூறு பெரும்பவம் பாவம் பிணிபோம்-சிந்தித்தால் முன்னடைந்த நூறுபிறப்பிறறேடிய பெரியபாவக்கட்டறும், கூடல் இறைவனை இன்று இறைஞ்சுதும் என்று மனை எழுந்து புறம் போந்தால் - மதுரையிலெழுந்தருளிய அச்சோமசுந்தரக்கடவுளை இப்போதேசென்று வணங்குவோமென்று வீட்டினினறும எழுந்து புறத்துவந்தால்,மறம் உறு ஈரைஞ்ஞூறு வெம்பவத்து இழைத்த பாதகம் வல்வினை அனைத்தும் மாயும-தீமைமிக்க ஆயிரங்கொடிய சனனத்திற்செய்த பாதகங்களாகிய வலியவினைகளெல்லாம்கெடும். (உக)

புழைக்கைவரைதொலைத்தானைத்தெரிசித்தோராயிரவாம்புரவிவேள்வி
தழைத்தபெரும்பயன்பெறுவருருத்திரசூத்தம்மதனாற்றவவானோரக
டொழற்கரியான்றனைத்துதித்தோர்கணத்துக்காயிரராசசூயயாக
மிழைத்தபெரும்பயன்பெறுவர்சமட்டிவடிவாகியவவ்விலிங்கந்தன்னை.

(இ-ள்.) புழைக்கை வரை தொலைத்தானை தெரிசித்தோர்-யானையாகியமலையைத்தொலைத்த சோமசுந்தரக்கடவுளைத் தெரிசித்தவர்கள், ஆயிரம் வாம் புரவி வேள்வி தழைத்த பெரும்பயன் பெறுவர்-ஆயிரம் அசுவமேதயாகஞ்செய்தலால் வரும் பெரியபயனை அடைவார்கள், உருத்திர சூத்தம் அதனால்-உருத்திரசூத்தமந்திரத்தினால், தவவானோர்கள் தொழற்கு அரியான்றனை துதித்தோர் - மிகவும் தேவர்கள் தொழுதற்கரிய அச்சோமசுந்தரக்கடவுளைத் துதித்தவர்கள், கணத்துக்கு ஆயிரம் ராசசூயயாகம் இழைத்த பெரும்பயன் பெறுவர் - ஓர்கணப்பொழுதுக்கு ஆயிரம்

ராசசூயயாகங்களைச்செய்தலால் வரும்பெரியபயனை யடைவார்கள், சமட்டிவடி வாகிய அவ் இலிங்கம் தன்னை - சமட்டிவடிவாகிய அச்சிவலிங்கப்பெருமானை.

தழைத்த, இழைத்த காரணப்பொருளில்வந்த இறந்தகாலப்பெயரெச்சங்க ள். சூத்தம் - சூக்தமென்னும் வடசொற்றிரிபு, நல்லவாக்கியம் என்பது பொ ருள். புழைக்கை-துவாரத்தையுடைய கையையுடையது என உருபும் பயனுந்தொ க்க இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகை யாய் யானைக்குக்காரணப்பெயராய்வந்தது. யானையைவென்றது- இப்புராணத்தில் யானையெய்தபடலத்திற்காண்க. வாம்புரவி - தாவுங்குதிரை. (உஉ)

அங்கையளவாகியநன்னீராட்டிப்பூசித்தோரளவிலேனைத்
துங்கதலத்துறையிலிங்கமூர்த்திகளைச்சிவாகமநூல்சொன்னவாற்றான்
மங்கலமாகியமுகமனீரெட்டும்வழுவாதுவாசந்தோய்ந்த
செங்கனகமணிக்கலசப்புனலாட்டிமாபூசைசெய்தோராவார்.

(இ-ள்.) அங்கை அளவு ஆகிய நல் நீர் ஆட்டி பூசித்தோர் - உள்ளங்கைய ளவான நல்லநீர்கொண்டு அபிஷேகஞ்செய்து பூசைசெய்தவர்களே, அளவில் ஏனை துங்கதலத்து உறை இலிங்கமூர்த்திகளை - வரம்பில்லாத மற்றமேலானதலங்களில் எழுந்தருளிய சிவலிங்கமூர்த்திகளை, சிவாகமநூல் சொன்ன ஆறுல் - சிவாகம ங்களிற் கூறியவழியால், மங்கலமாகிய ஈரெட்டு முகமனும் வழுவாது - நன்மை யாகிய சோடசவுபசாரங்களும் வழுவாமல், செம் கனகம் மணி கலசம் வாசம்தோ ய்ந்த புனல் ஆட்டி - செவந்த பொன்னாற்செய்த இரத்தினங்கள் வரிசைபடப்பதித் த கலசத்தில் நிறைந்த வாசமூட்டியநீரால் அபிஷேகஞ்செய்து, மா பூசை செய் தோர் ஆவார் - பெரியபூசைசெய்தவர்கள் அடையும்பயனை யடைவார்கள்.

இதனால் உள்ளங்கையளவான நல்லநீர்கொண்டு பூசைசெய்வோர் ஏனைய தலங்களில் சோடசவுபசாரங்கள வழுவாமல் பூசைசெய்தோரடையும்பயன் கூற ப்பட்டது. மங்கலமேமுகமன் ஆதலால் ஆகிய-வினையிடைச்சொல்.

சோடசவுபசாரங்களாவன - ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோ தனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்ப தானம், தூபம், தீபம், நைவேத்தியம், பானீயம், ஆராத்திரிகை, ஜபசமர்ப்பணை. இதனோடு தசோபசாரம், பஞ்சோபசாரம், எனக்கூட்டி உபசாரங்கள் மூன்று என் பர். தசோபசாரங்களாவன - ஆவாகனம, தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம், பஞ்சோபசாரங்களாவன - பிரிதிவிசம்பந்தமான கந்தமூலபலாதிகள், கந்தகுசுமா திகள், அன்னாதிகள். அப்புசம்பந்தமானவாரி, பால் தயிர், வஸ்திராதிகள். அக்கினி சம்பந்தமான உலோகாதியாபரணங்கள், தீபங்கள். வாயுசம்பந்தமான தூபம், சா மரம், மயில்விசிறியாதிகள். ஆகாயசம்பந்தமான - மணியோசை, தோத்திராதிகள்.

அவ்வண்ணஞ்சுந்தரனையைந்தமுதமானுதவுமைந்துதீந்தேன்
செவ்வண்ணக்கனிசாந்தச்சேறுமுதன்மட்டித்துத்தேவர்தேறு
மெய்வ்வண்ணங்குளிரவிளைப்புனலாட்டிமாபூசைவிதியாற்செய்தோர்
மைவ்வண்ணவினைநீந்தியறமுதனாற்பொருளடைந்துமன்னிவாழ்வார்.

(இ-ள்.) அவ்வண்ணம் சுந்தரனை - அவ்வாகமத்திற்கூறிய வண்ணம் சோம சுந்தரக்கடவுளை, ஐந்து அமுதம் ஆன் உதவும் ஐந்து தீம் தேன் செவ்வண்ணம் கனி

சாந்தச்சேறு முதல் மட்டித்து - பஞ்சாமிர்தமும் பசுத்தரும் பஞ்சகவ்வியமும் இனியதேனும் செந்நிறம்வாய்ந்த வாழை பலா மாங்கனிகளும் சந்தனக்குழம்புமுதலிய திரவியங்களுமாகிய இவைகளைத்திமிர்ந்து, தேவர் தேரு மெய் வண்ணம குளிர விரை புனல் ஆட்டி மாபூசைவிதியால் செய்தோர்-தேவர்களும் அறிதற்கரிய திருமேனிகுளிரும் வண்ணம் வாசனையூட்டிய நீரால் அபிஷேகஞ்செய்து பெரிய பூசையை விதிப்படி செய்தவர்கள், மைவண்ணம் வினைநீந்தி அறமுதல் நாற்பொருள் அடைந்து மன்னிவாழ்வார் - கரியநிறத்தையுடைய தீவினைக்கடலைக்கடந்து அறமுதலிய நால்வகைப்பொருளையும் அடைநது நிலைபெற்று வாழ்வார்கள்.

பஞ்சாமிர்தம் - பால், நெய், தேன், சர்க்கரை, பழம். பால்நீக்கித் தேங்காய்த்திருகல் கூட்டி ஐந்துவகையாக் கொள்ளுதலும்; தேங்காய்த்திருகல்நீக்கி நீர்கூட்டி ஐந்தென்று கொள்ளுதலும்; பழவர்க்கஙகள் ஒன்று, நெய், தயிர், பால் இனம் பற்றி ஒன்று; இவ்விரண்டோடு தேன், சருக்கரை, நீர்கூட்டி ஐந்தென்று கொள்ளுதலும் உண்டு. கவ்வியம் - கோசம் பந்தமாயுள்ளன. பால், தயிர், நெய், கோமயம், கோசலம். கோரோசனமுங்கூட்டி கவ்வியம் ஆறு எனவுங் கூறுதலுமுண்டு. (உ௪)

நல்லவகைமுகமனீரொட்டுள்ளும்வடித்தவிரைநன்னீராட்ட
வல்லவர்நூறுயிரமாமேதமகபயன்பெறுவர்வாசநான
மெல்லவிர்குங்குமஞ்சாந்தமிவைபலவுமட்டித்தோரொழிலார்தெய்வ
முல்லைநகையாரோடுமவிரைக்கலவைகுளித்தின்பமூழ்கிவாழ்வார்.

(இ-ள்.) நல்லவகை ஈர் எட்டு முகமன் உள்ளும் வடித்தவிரை நல் நீர் ஆட்ட வல்லவர் - நல்லவகையாயுள்ள சோடசவுபசாரங்களோடும் வடித்தவாசமிக்க நல்லபனிநீரால் சோமசுந்தரக்கடவுளுக்கு அபிஷேகஞ்செய்யவல்லவர்கள், நூறுயிரம் மாமேத மகம் பயன் பெறுவர்-இலக்ஷம் அசுவமேதயாகஞ் செய்தலால்வரும் பயனையடைவார்கள், வாசம் நானம் மெல் அவிர் குங்குமம் சாந்தம் இவைபலவும் மட்டித்தோர் - வாசமிக்ககஸ்தூரியும் மெதநென்று விளங்கும் குங்குமப்பூவும் சந்தனமும் ஆகிய இவைமுதலிய வாசனைப்பொருள்கள் பலவற்றையுங்கலந்து அச்சோமசுந்தரக்கடவுளுக்குப்பூசினோர், எழில் ஆர் தெய்வ முல்லை நகையார் ஓடும் விரை கலவை குளிதது இன்பம் மூழ்கி வாழ்வார் - அழகுமிக்க முல்லையரும்பையொத்த பல்லையுடைய தெய்வமகளிரோடும வாசனைத்திரவியங்கள்கலந்த சந்தனக்குழம்புபூசி இன்பத்தில்மூழ்கிச் சுவர்க்கலோகத்தில் வாழ்வார்கள்.

உள் உருபு மயக்கம். (உரு)

நன்மலரொன்றாலவாயான்முடிமேற்சாத்தினனயந்துநூறு
பொன்மலர்கொண்டயற்பதியிற்பூசித்தபயனெய்துமபுனிதபோகத்
தன்மைதருசுந்தரற்குத்தூபமொருகாற்கொடுப்போர்தமக்குத்தாங்கள்
சொன்மனமெய்யுறசெய்தகுற்றமாயிரம்பொறுப்பன்சுருதிநாதன்.

(இ-ள்.) ஆலவாயான் முடிமேல் நல் மலர் ஒன்று சாத்தினல் - திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருமுடியின்மேல் நல்லமலரொன்றைச்சாத்தினல், நயந்து பொன் நூறு மலர்கொண்டு அயல் பதியில் பூசித்தபயன் எய்தும் - விரும்பிப் பொன்னாற்செய்த நூறுமலர்களால் ஏனையதலங்களிலுள்ள சிவலிங்கமூர்த்திகளை அருச்சித்தலால்வரும் பயன்களை அடைவார்கள், புனிதபோகம் தன்மைதரு சுந்தரற்கு - சிவபோகத்தைத்தந்தருளும் அச்சோமசுந்தரக்கடவுளுக்

கு, தூபம் ஒருகால் கொடுப்போர் தமக்கு - பஞ்சதூபங்களுள் ஒருதூபமேனும் ஒருதரங்கொடுப்பவருக்கு, தாங்கள் மனம் மெய் சொல் உற செய்த ஆயிரம் குற்றம் சுருதி நாதன் பொறுப்பன் - அவர்கள் மனவாக்குக்காயங்களினாற் பொருந்தச்செய்த ஆயிரங்குற்றங்களையும் வேதநாயகனாகிய அக்கடவுள் பொறுத்தருளுவான்.

பஞ்சதூபங்களாவன-குந்துருக்கம், பச்சைக்கர்ப்பூரம், அகில், சந்தனம், கருஞ்சீதாரி. (உசு)

திருவமுதுநிவேதிப்போரவிழொன்றற்குகமொன்றாச்சிவலோகத்தின்
மருவிநிறைபோகமுடன்வைகுவர்தாம்பூலமுகவாசமீந்தோர்
பொருவரியகடவுளராண்டொருநூறுகோடிசிவபுரத்துவாழ்வா
ரொருபளிதவிளக்கிடுவோர்வெண்ணிறமுங்கண்ணுதலுமுடையராவார்.

(இ-ள்.) திரு அமுது நிவேதிப்போர்-சோமசுந்தரக்கடவுளுக்குத் திருவமுது நிவேதனஞ்செய்வோர்கள், அவிழ் ஒன்றுக்கு உகம் ஒன்றாக சிவலோகத்தின் மருவி நிறை போகம் உடன் வைகுவர்-ஒரு அவிழுக்கு ஒருயுகமாகச் சிவலோகத்தினைப் பொருந்திக் குறைவில்லாத போகத்தோடு வாழ்ந்திருப்பார்கள், தாம்பூலம் முகவாசம் ஈந்தோர் - தாம்பூலத்தையும் முகவாச மைந்தினையும் அக்கடவுளுக்குத் தந்தவர்கள், பொரு அரிய ஒருநூறு கோடி கடவுளர் ஆண்டு சிவபுரத்து வாழ்வார்-ஒப்பில்லாத ஒருநூறுகோடித் தேவவருடங்காறும் அச்சிவலோகத்தில் வாழ்வார்கள், ஒருபளிதம் விளக்கு இடுவோர் வெள் நிறமும் கண்ணுதலும் உடையராவார்-ஒருகர்ப்பூரதீபத்தை யிடுவோர்கள் வெண்ணிறத்தையும் நெற்றிக்கண்ணையும் உடைய சிவசாரூபத்தையும் பெறுவார்கள்.

முகவாசம் ஐந்தாவன "தக்கோலமேலம் தகைசாலிலவங்கம், கர்ப்பூரஞ்சாதியோடைந்து." (உஎ)

நறுந்திருமஞ்சனமெடுக்கக்குடமாட்டமணிக்கலசநல்லவாசம், பெறுந்
தகையதூபக்காறீபக்கான்மணியின்னபிறவுங்கங்குற், றெறுங்கதிர்கான்ம
ணிமாடமதுரைநாயகற்கீந்தோர்செய்தபாவம், வெறுந்துகள்செய்தைம்
பொறிக்கும்விருந்தூட்டும்பெருங்காமவெள்ளத்தாழ்வார்.

(இ-ள்.) கங்குல் தெறும் கதிர் கால் மணி மாடம் மதுரைநாயகன் கு-இருளையோட்டும் ஒளியை வீசாநின்ற இரத்தினங்களழுத்திய மாடங்கள்நெருங்கிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு,நறும் திருமஞ்சனம் எடுக்க குடம் ஆட்ட மணி கலசம் - நல்லவாசம் ஊட்டிய திருமஞ்சனம் எடுக்கக் குடமும் அபிஷேகஞ்செய்ய இரத்தினகலசமும், நல்லவாசம் பெறும் தகையதூபக்கால் தீபக்கால் மணி - நல்லவாசந்தரும் தூபக்காலும் தீபக்காலும் மணியும் ஆகிய, இன்ன பிறவும் ஈந்தோர் - இவைபோல்வன பிறவற்றையும் கொடுத்தவர்கள், செய்தபாவம் வெறும் துகள் செய்து ஐம்பொறிக்கும் விருந்து ஊட்டும் பெரும் காமவெள்ளத்து ஆழ்வார் - தாம்செய்தபாவங்களைப் பொடிபடுத்திப் பஞ்சேந்திரியங்களுக்கும் விருந்தளிக்கும் பெரியபோகவெள்ளத்து ளழுந்துவார்கள்.

துகள்செய்தென்றது - வெறுந்துகள் செய்தென்பது - சிதிதாந்தலையெடுக்காது செய்தல் என்பது பொருள். (உஅ)

கயலிசையுங்கண்ணுமைகோன்றிருமுன்னர்ப்பல்லியமுங்கல்லென்றார்ப்ப
வியலிசையபாட்டினொடாடலினைவசெய்விப்போரிறுமாப்பெய்திப்

புயலிசையவியங்கலிப்பமூவுலகுந்தொழவரசாய்ப்பொலங்கொம்பாடுஞ்
செயலிசையவணங்கனையாரரங்குகண்டின்பச்செல்வத்தாழ்வார்.

(இ-ள்.) கயல் இசையும் கண் உமை கோன் திருமுன்னர் - சேற்கண்டையையொத்த கண்களையுடைய மீனாக்ஷியம்மையினாயகனாகிய சோமசுந்தரக்கடவுளின் சந்நிதியில், பல் இயமும் கல் என்று ஆர்ப்ப - பலவாத்தியங்களுங் கல்லென்று ஒலிக்க, இயல் இசைய பாடலினோடு ஆடல் இவை செய்விப்போர் - இலக்கணவிதிவழாத இசைக்கூறுபாடுகளமைந்தபாடலும் ஆடல்களும் ஆகிய இவற்றைச் செய்விப்பவர்கள், இறுமாப்பு எய்தி-இறுமாந்து, புயல் இசைய இயங்கலிப்ப மூவுலகும்தொழ அரசாய் - மேகத்தையொப்பப் பலவாத்தியங்கள் ஒலிக்கவும் மூவுலகும் வணங்கவும் அரசராகி, பொலம் கொம்பு ஆடும் செயல் இசைய அணங்கு அனையார் அரங்கு ஆடு கண்டு இன்பச்செல்வத்து ஆழ்வார் - பொற்கொம்பாடுஞ் செயலுக்கொப்பத் தெய்வப்பெண்களையொத்த பெண்கள் நாடகசாலையில் ஆடுதலைக்கண்டு இன்பநுகர்தற்குரிய செல்வக்கடலில் அழுந்துவார்கள்.

இசைய என்பவற்றுள் ஒன்று இசையை யுடையவெனப் பெயரெச்சத்தின் மேலும், ஏனைய உவம உருபிடைச்சொல்லடியாய்ப்பிறந்த வினையெச்சங்களின்மேலும் நின்றன. ஓடு எண்ணிடைச்சொல். (உகூ)

ஒருகாலட்டாங்கமுடன்பஞ்சாங்கமுடனாதலொண்செங்கால்வெண்
குருகாலும்மலர்த்தடஞ்சூழ்கூடனாயகற்பணிவோர்கோலொன்றோச்சிப்
பொருகாலின்வருபரித்தேர்மன்னவராயாவருந்தம்புடைவந்தெய்தி
யிருகாலுந்தலைவருடவெக்காலுந்தமைவணங்கவிருப்பரன்றே.

(இ-ள்.) ஒள் செம் கால் வெள் குருகு ஆலும் மலர் தடம் சூழ் கூடல் நாயகன் - ஒள்ளிய செவந்தகால்களையுடைய வெள்ளிய அன்னங்கள் ஒலிக்குந் தாமரைமலர்களையுடைய நீர்நிலைகள்சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, ஒருகால் அட்டாங்கமுடன் ஆதல் பஞ்சாங்கமுடன் ஆதல் பணிவோர்-ஒருதரம் அட்டாங்கத்தோடாவது பஞ்சாங்கத்தோடாவது வணங்குவோர், கோல் ஒன்று ஓச்சி பொரு காலின் வரு பரி, தேர் மன்னவராய்- செங்கோலொன்றுசெலுத்தி மோதாநின்ற காற்றைப்போலும் விரைந்துசெல்லுங் குதிரைபூண்ட தேரையுடைய அரசர்களாகி, யாவரும் தம் புடை வந்து எய்தி இருகாலும் தலைவருட எக்காலும் தமைவணங்க இருப்பர் - எவ்வரசருந் தம்பக்கலடைந்து தமது இரண்டுபாதங்களையும் தலை தோயும்படி அவர்கள் வணங்க வீற்றிருப்பார்கள்.

செங்கோலொன்றோச்சி என்றமையால் யாவரும் என்ற இடத்து எவ்வரசரும் என்றும். ஒருகால் இருகால் எக்கால் சொல்முரண். அட்டாங்கம்-எட்டுறுப்புக்கள் நிலத்தில்தோயப்பணிதல். எட்டுறுப்புக்கள், தலை, இரண்டுகை, இரண்டுசெவி, மோவாய், இரண்டுதோள். இதனைச் சாஷ்டாங்கம் எனவுங் கூறுவர்.

பஞ்சாங்கம்-ஐந்துறுப்புக்கள் நிலத்தில்தோயப் பணிதல். ஐந்துறுப்புக்கள் தலை, இரண்டுகை, இரண்டுமுழந்தாள். சிவதருமோத்தரம்-சிவஞானதானவியலில்.

"வலஞ்செய்துதண்டதனைமானவிதிவழிதழுவத்
தலந்தன்னிற்பணிந்தெழுகதலைகரமற்றிருகன்னந்
துலங்குமோவாய்புயங்களெனுமெட்டுந்தோயமயி
ரிலங்குசிரங்கரமுழந்தாளெனுமைந்துமிசைந்திடவே."

எனவருஞ் செய்யுளாலுணர்க. (௩௦)

இத்தகையதிருவாலவாயுடையான்திருமுன்னரியற்றுமோம
மெய்த்தவமந்திரந்தானமின்னவணுவளவெனினுமேருவாகு
முத்தமமாமிவ்விலிங்கப்பெருமையெலாம்யாவரளந்துரைப்பார்வேத
வித்தகரேசிறிதறிந்தவாறுரைத்தேமினிப்பலகால்விளம்புமாறென்.

(இ-ள்.) இத்தகைய திருவாலவாய் உடையான் திருமுன்னர் இயற்றும் ஓமம் மெய் தவம் மந்திரம் தானம் இன்ன - இத்தன்மையையுடைய திருவாலவாயையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய சந்நிதியிற்செய்யும் ஓமங்களும் உண்மையாகிய தவங்களும் மந்திரங்களும் தானங்களும் இவைபோல்வனபிறவும், அணுவளவெனினும் மேருவாகும் - அணுவளவினவாயினும் மகமேருவளவினவாகும், உத்தமமாம் இ இலிங்கம் பெருமையெலாம் அளந்து உரைப்பார் யாவர் - உத்தமமாகிய இவ்விலிங்க மூர்த்தியின் பெருமைகள் யாவையும் வரையறுத்துச் சொல்லுவோர் எவர்,(ஒருவருமில்லையென்றபடி) வேதவித்தகரே சிறிது அறிந்த ஆறு உரைத்தேம் - வேதங்களில் வல்ல முனிவர்களே சிறிது தெரிந்தவண்ணங் கூறினோம், இனி பலகால் விளம்பும் ஆறு என்-இனிப்பலதரமும் எடுத்துக்கூறுவது யாதுபயன், (ஒன்றுமில்லையென்றபடி.)

அளந்துரைப்பார்யாவர் என்றமையால் சிறிது அறிந்தவாறு உரைத்தேம் எனவும், மீட்டுங்கூறப்புகின கூறியது கூறுவதேயாமாதலால் இனிப்பலகால் விளம்புமாறென்னெனவுங்கூறினார். (கூக)

இத்தலத்துக்கொப்பாகவொருதலமும்பொற்கமலமென்னுமிந்த
வுத்தமமாதீர்த்தத்துக்கொப்பதொருதீர்த்தமுமெய்புணர்வானந்த
வித்தனையவிலிங்கமிதற்கொப்பாவோரிலிங்கமும்பார்விண்மேலென்னு
மூத்தலத்துமில்லையந்தமூர்த்திதிருநாமங்கண்மொழியக்கேண்மின்.

(இ-ள்.) இத்தலத்துக்கு ஒப்பாக ஒருதலமும் - இந்தத்தலத்துக்கு நிகராகவொருதலமும், பொன் கமலம் என்னும் இந்த மா உத்தமம் தீர்த்தத்துக்கு ஒப்பது ஒருதீர்த்தமும்-பொற்றாமரையென்னும் இந்தப் பெரிய உத்தமதீர்த்தத்துக்கு நிகராயுள்ள வொருதீர்த்தமும், மெய் உணர்வு ஆனந்த வித்து அனைய இலிங்கம் இதற்கு ஒப்பாக ஓர் இலிங்கமும் - உண்மையறிவானந்தங்கள் தோன்றுதற்கு ஓர் விதைபோன்ற இந்த இலிங்கமூர்த்திக்கொப்பாக வோர் இலிங்கமூர்த்தியும், பார் விண் மேல் என்னும் மூத்தலத்தும் இல்லை - பூமி அந்தரம் சுவர்க்கம் என்னும் மூன்றுலகங்களிலுமில்லை, அந்த மூர்த்தி திருநாமங்கள் மொழிய கேண்மின் - அந்தமூர்த்தியினது திருநாமங்களைச் சொல்லக்கேளுங்கள்.

அடியார்க்குச் சச்சிதானந்தம் விளைத்தலால் - மெய்யுணர்வானந்த வித்தென்றார். தலத்தின் மான்மியத்தையும் தீர்த்தத்தின்மான்மியத்தையும் இங்கும் அனுவதித்தார் ஒப்பில்லர்தன என்னும் பயன் நோக்கி. அனுவாதமாவது - முன்புபெறப்பட்டதொன்றை வேறொன்று எடுத்துக்கூறுதற்பொருட்டுப்பின்னும் எடுத்துக்கூறல்

கருப்பூரசுந்தரன்பூங்கடம்பவனசுந்தரனுட்கரவாத்தொண்டர்
விருப்பூருங்கலியாணசுந்தரனல்லறவடிவாய்விளங்குமேற்றுப்
பொருப்பூருமபிராமசுந்தரன்றேன்புடைகவிழப்பொன்னிற்பூத்த
மருப்பூசண்பகசுந்தரன்மகுடசுந்தரன்றன்வாழிமன்றோ.

(இ-ள்.) கருப்பூர சுந்தரன் என - கருப்பூரசுந்தரன் என்றும், பூங்கடம்ப வன சுந்தரன் என - பூக்களையுடைய கடம்பவனசுந்தரனென்றும், தொண்டர் உள் கரவா விருப்பு ஊறும் கலியாண சுந்தரன் என - அடியார் இதையத்திலொளிக்காத விருப்பமிக்க கலியாணசுந்தரனென்றும், நல் அறவடிவாய் விளங்கும் ஏறு பொருப்பு ஊரும் அபிராம சுந்தரன் என-நல்லதருமசொரூபமாய்விளங்கும் இடபமாகியமலையைநடத்தியருளும் அபிராமசுந்தரனென்றும், தேன்புடை கவிழ பொன்னிற் பூத்த மரு பூசு சண்பகசுந்தரன் என - தேன் புறத்திற்சிந்தப் பொன்னைப்போல மலர்ந்த வாசம்வீசும் சண்பகசுந்தரன் என்றும், மகுடசுந்தரன் தான் என - மகுடசுந்தரன் என்றும் திருநாமங்கள்வாய்ந்த சிவலிங்கமூர்த்தி, வாழி - வாழ்க்கடவன்.

வாழி - ஈறு தொக்குநின்ற வியங்கோள் வினைமுற்று. (௩௩)

மான்மதசுந்தரன்கொடியபழியஞ்சுசுந்தரனோர்மருங்கின்ஞானத்
தேன்மருவியுறைசோமசுந்தரன்றேன்செவ்வழியாழ்செய்யப்பூத்த
கான்மருவுதடம்பொழிலசூழாலவாய்சசுந்தரன்மீன்கணங்கள்சூழப்
பான்மதிசூழ்நான்மாடக்கூடனாயகன்மதுராபதிக்குவேந்தன்.

(இ-ள்.) மான்மத சுந்தரன் என - மான்மத சுந்தரன் என்றும், கொடிய பழி அஞ்சு சுந்தரன் - கொடியபழியஞ்சிய சுந்தரன என்றும், ஓர் மருங்கில் ஞான தேன் மருவி உறைசோமசுந்தரன் என - ஒருபாகத்தில் உமாதேவியார்பிரியாது வசிக்குஞ் சோமசுந்தரன என்றும், தேன் செவ்வழியாழ் செய்ய பூதத கான்மருவு தடம் பொழில் சூழ் ஆலவாய் சுந்தரன என - வண்டுகள் செய்ந வ்விலப் பண் பாட மலர்கள்பூத்த வாசனைபொருந்திய பெரியசோலைசூழ்ந்த திருவாலவாய்ச்சுந்தரன் என்றும், மீன்கணங்கள்சூழ பால் மதிசூழ் நானமாடககூடல் நாயகன என - நக்ஷத்திரக்கூட்டங்கள்சூழ வெள்ளியசந்திரன வலஞ்சூழும நானமாடககூடல் நாயகன் என்றும், மதுராபதிக்கு வேந்தன் என - மதுராபதிக்கு வேந்தன் என்றும்.

ஞானதேன் - உவமையாகுபெயர். யாழ் பண்மேனிற்றலால் கருவியாகு பெயர். (௩௪)

சிரநாலோன்பரவரியசமட்டிவிச்சாபுரநாதன்சீவன்முத்தி
புரநாதன்பூவுலகசிவலோகாதிபன்கன்னிபுரேசன்யாக்கும்
வரநாளுந்தருமூலவிலிங்கமெனவிவைமுதலாமாடககூட
லரனாமமின்னமளப்பிலவாகுமுலகுய்யவவ்விலிங்கம்.

(இ-ள்.) சிரம் நாலோன் பரவு அரிய சமட்டி விச்சாபுர நாதன் என -நான்குசிரங்களையுடையபிரமன் வணங்குதற்கரிய சமட்டி விச்சாபுரநாதன் என்றும், சீவன் முத்திபுர நாதன் என - சீவன்முத்திபுர நாதன் என்றும், பூ உலக சிவலோகாதிபன் என - பூவுலக சிவலோகாதிபன் என்றும், கன்னிபுரேசன் என - கன்னிபுரேசன் என்றும, யார்க்கும் நாளும வரம் தரும் மூல இலிங்கம் என - எவர்க்கும் எந்நாளும் வரத்தைத்தாராநின்ற மூலவிலிங்கமென்றும், இவை முதலாக - இத்திருநாமங்கள்முதலாக, மாடக்கூடல் அரன் நாமம் இன்னம் அளப்பில ஆகும் - நான் மாடக்கூடலில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருநாமங்கள் இன்னமும் அளவில்லாதனவாம், உலகு உய்ய அ இலிங்கம் - உலகிலுள்ள உயிர்கள் கடைத்தேற அச்சிவலிங்கமூர்த்தி.

இன்னம் - இனியென்னு மிடைச்சொற்றிரிபு. என என்பது எண்ணிடைச் சொல்லாதலால் பிரிந்து முன்னுஞ்சென்றது. (௩௫)

பாதாளமேழுருவமுளைத்தெழுந்ததவ்விலிங்கப்படிவந்தன்னு
ளாதாரமாகவமர்ந்தறுபத்துநாலுவிளையாடல்செய்த
போதானந்தன்பெருமைநங்குரவன்மொழிப்படியேபுகன்றேமென்றான்
வேதாதிகலைதெரிந்தமலயமுனிகேட்டறவோர்வினவுதல்செய்வார்.

(இ-ள்.) பாதாளம் ஏழ் உருவ முளைத்து எழுந்தது - பாதாளம் இறுதியாகவுள்ள கீழுலகமேழினும் ஊடுருவ முளைத்துத் தோன்றியது, அ இலிங்கம் படிவம் தன்னுள் ஆதாரமாக அமர்ந்து - அச்சிவலிங்கமூர்த்தியில் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகவெழுந்தருளி, அறுபத்துநாலு விளையாடல்செய்த போதானந்தன்பெருமை- அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச்செய்தருளிய ஞானானந்தத்திருவுருவத்தையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய மான்மியத்தை, நம் குரவன் மொழிப்படியே - நமது ஆசிரியனாகிய குமாரக்கடவுள் அருளிச்செய்த வண்ணமே, வேதம் ஆதி கலைதெரிந்த மலயமுனி புகன்றேம் என்றான் - வேதமுதலியநூல்களை யாராய்ந்தறிந்துணர்ந்த அகத்தியமுனிவர் கூறினேம் என்று சொன்னார், கேட்ட அறவோர் வினவுதல் செய்தார் - அதனைக்கேட்டமுனிவர்கள் ஒன்று வினவத்தொடங்கினார்கள்

கீழ உலகாவன - அதலம், விதலம், சுதலம், தராதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம். கேட்ட அகரவீறுதொகுத்தல். (௯௪)

அருட்கடலேயிறைவிளையாட்டறுபத்து நான்கென்றாயவையானந்தப்,
பொருட்கடவுளெக்காலத்தியாவர்பொருட் டாடினனெம்போதந்தேறித்,
தெருட்படரவரன்முறையாற்செப்புகெனக் கரங்குவித்தார்தென்பால்வெற்பி, லிருப்பவனும்வினயபடிக்கிறைநிரம்பத்தொகுத்துவிரித்தியம்புகின்றான்.

(இ-ள்.) அருள் கடலே இறை விளையாட்டு அறுபத்து நான்கு என்றாய்- கிருபாசமுத்திரம்போல்வாய் சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடல் அறுபத்துநான்கு என்று கூறியருளினாய், அவ்வை ஆனந்தப் பொருள் கடவுள் எக்காலத்து யாவர்பொருட்டு ஆடினன் - அத்திருவிளையாடல்களை ஆனந்தப்பொருளாகிய அச்சோமசுந்தரக்கடவுள் எக்காலத்தில் யாவர்நிமித்தம் செய்தருளினார், எம்போதம் தேறி தெருள்படர - கலங்கிய எமது அறிவுதேறித்தெளிய, வரன்முறையால் செப்புக என கரம் குவித்தார் - வரன்முறைப்படி சொல்லக்கடவாயென்று கைகூப்பினார்கள், தென்பால் வெற்பில் இருப்பவனும் வினயபடிக்கு இறை நிரம்ப தொகுத்துவிரித்து இயம்புகின்றான் - பொதியமலையிலெழுந்தருளிய அகத்தியமுனிவரும் அம்முனிவர்கள் வினவியவகைக்கு உத்தரம் முட்டின்றி நிரம்பத்தொகுத்தும்விரித்தும் சொல்லத்தொடங்கினார்.

தேறித்தெருட்படர என்றமையால் கலங்கிய என்றாம். (௯௫)

மூர்த்திவிசேடம் முற்றிற்று.

பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௯௭.

## ப தி க ம்.

பதிகமாவது - பல்வகைப்பொருளையுந் தொகுத்துக்கூறுவது. இங்குப் பலவகைத்திருவிளையாடல்களையுந் தொகுத்துக்கூறியதனால் பதிகம் எனப் பெயர்வந்தது எனவறிக.

"பதிகக்கிளவிபல்வகைப்பொருளைத்
தொகுதியாகத்தொகுத்துரைப்பதுவே.'
என்பது சூத்திரம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

**வானவர்கோன்பழிதொலைத்தவிளையாட்டுங்கரிசாபமாய்த்தவாறு
மீனவர்கோன்காடெறிந்துபுரங்கண்டபெருஞ்சிறப்புமீனநோக்கி
யானதடாதகையழல்வாயவதரித்துப்பாராண்டவருளுமீசன்
றானவளைமணஞ்செய்துமுடிதரித்துமண்காத்ததகைமைப்பாடும்.**

(இ-ள்.) வானவர்கோன் பழிதொலைத்த விளையாட்டும் - தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரனுடைய பிரமகத்திதோஷத்தைத்தீர்த்த திருவிளையாடலும், கரி சாபம் மாய்த்த ஆறும் - வெள்ளையானைக்குத் துருவாசமுனிவரால்வந்த சாபத்தைத்தீர்த்த திருவிளையாடலும், மீனவர்கோன் காடு எறிந்து புரம் கண்ட பெரும் சிறப்பும்-மீனக்கொடியையுடைய பாண்டியர்களுள் அரசனாகியகுலசேகரபாண்டியன் காடுவெட்டி நகரமாக்கியதிருவிளையாடலும், மீன நோக்கி ஆன தடாதகை அழல் வாய் அவதரித்து பார் ஆண்ட அருளும் - மீனாக்ஷியம்மை திருவருள்மிக்க தடாதகைப்பிராட்டியாராக மலயத்துவசபாண்டியன்செய்த வேள்வியில் அவதாரஞ்செய்து உலகமுழுதும் ஆண்ட திருவிளையாடலும், ஈசன் தான் அவளை மணம் செய்து முடிதரித்து மண்காத்த தகைமைப்பாடும் - சிவபெருமான் சவுந்தரபாண்டியனாய் அந்தத்தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்து மகுடஞ்சூடிப் பூபாலனுஞ்செய்த திருவிளையாடலும். (க)

**புலிமுனியும்பணிமுனியுந்தொழவெள்ளிமன்றுணடம்புரிந்தவாறும்
வலிகெழுதோட்குண்டகட்டுக்குறட்கன்னக்குன்றளித்தவகையும்பின்னு
நலிபசிநோய்கெடவன்னக்குழியழைத்துக்கொடுத்துநீர்நசைக்குவையை
யலைபுனல்கூயருத்தியதும்பொன்மாலைக்கெழுகடலுமழைத்தவாறும்.**

(இ-ள்.) புலி முனியும் பணிமுனியும் தொழ வெள்ளி மன்றுள் நடம்புரிந்த ஆறும் - திருமணந்தெரிசிக்கவந்த வியாக்கிரபாதமுனிவரும் பதஞ்சலிமுனிவரும் வணங்க வெள்ளியம்பலத்துள் திருநடனஞ்செய்தருளிய திருவிளையாடலும், வலி கெழு தோள் குண்டு அகடு குறட்கு அன்னம் குன்று அளித்தவகையும் - பலம்பொருந்தியதோளையும் ஆழ்ந்தவயிற்றையுமுடைய குண்டோதரனுக்கு அன்னமாகிய மலையைத்தந்தருளிய திருவிளையாடலும், பின்னும் நலிபசி நோய்கெட அன்னக்குழி அழைத்து கொடுத்து-பற்றாமையால் பின்னும் மிகவும்வருத்தும்பசிப்பிணிநீங்கஅன்னக்குழியைவருவித்துத்தந்து,நீர் நசைக்கு அலைபுனல் வையை கூய் அருத்தியதும்- அப்பூதத்தின் தண்ணீர்வேட்கைதீர்த்தற்காக அலைக்கும்நீர்மயமாகியவையைநதியை

அழைத்துப்பருகுவித்தருளியதிருவிளையாடலும், பொன்மாலைக்கு எழுகடலும் அழைத்த ஆறும்-கடலாடக் காஞ்சனமாலையார்பொருட்டு எழுகடலழைத்ததிருவிளையாடலும்.

குண்டோதரன் ஆழ்ந்தவயிற்றையுடையவன் ஆதலால், குண்டகட்டுக்குறட்கு என்றார். (உ)

அந்தரர்கோனுதனத்திலுறைமலயத்துவசனை மீண்டழைத்தவாறுஞ்
சுந்தரவுக்கிரகுமரனவதரித்தவாறும்வளைசுடர்வேல்செண்டு
தந்தையிடத்தவன்பெற்றவாறுமவனவ்வடிவேல்சலதிவீறு
சிந்தவிடுத்ததுமகவான்முடியைவளையெறிந்திறைவன்சிதைத்தவீறும்.

(இ-ள்.) அந்தரர்கோன் ஆதனத்தில் உறைமலயத்துவசனை மீண்டு அழைத்த ஆறும் - தேவேந்திரனுடைய ஆசனத்திலிருந்த மலயத்துவசபாண்டியனைப் பூவுலகில் மீளவும் வரும்படி அழைத்த திருவிளையாடலும், சுந்தர உக்கிர குமரன் அவதரித்த ஆறும் - அழகிய உக்கிரகுமரபாண்டியன் அவதரித்ததிருவிளையாடலும், வளை சுடர் வேல் செண்டு தந்தையிடத்து அவன் பெற்ற ஆறும் - சக்கரத்தையும் விளங்கும்வேலையுஞ் செண்டையுந் தனதுபிதாவினிடத்து அவ்வுக்கிரகுமரன்பெற்ற திருவிளையாடலும், அவன் அவ்வடிவேல் சலதி வீறுசிந்த விடுத்ததும் - அவ்வுக்கிரகுமரன் அந்தவடித்தவேலைச் சமுத்திரத்தின் செருக்குச்சிந்த எறிந்ததிருவிளையாடலும், இறைவன் வளை எறிந்து மகவான்முடியை சிதைத்தவீறும்-அவ்வுக்கிரகுமரன் சக்கரத்தையெறிந்து தேவேந்திரனுடைய கிரீடத்தை அழித்ததிருவிளையாடலும்.

வளை - சக்கரமென்றது, பின்னர் வரும் இப்படலத்தில் - "இந்திரண்டனையகூர்ம்பல்லிருள்வளைநெஞ்சுபோழ்ந்த, மைந்தனில்வலியகாளை வளைந்தெறிநேமி சென்னி, சிந்திடாதாகிநம்பொன்மணிமுடிசிதறச்சோம, சுந்தரநாதன்பூசைத்தொழிற்பயனளித்ததென்று" எனவருஞ் செய்யுளாலுணர்க. மீண்டுசெயவெனெச்சத்திரிபு. (௩)

பொன்னசலந்தனைச்செண்டாற்புடைத்துநிதியெடுத்ததுவும்புனிதர்க்கீசன்
பன்னரியமறைப்பொருளைப்பகர்ந்ததுவுமாணிக்கம்பகர்ந்தவாறுந்
தொன்னகர்மேனீர்க்கிழவன்வரவிடுத்தகடல்சுவறத்தொலைத்தவாறு
மன்னதனித்தொன்மதுரைநான்மாடக்கூடனகரானவாறும்.

(இ-ள்.) பொன் அசலம் தனை செண்டால் புடைத்து நிதி எடுத்தது உம்-செருக்கிநின்ற மகமேருவைச்செண்டாயுதத்தாலடித்துப்பொனனறைதிறந்துவேண்டியவளவு பொன்னெடுத்துப் பின்புமுடித்தன்பெயரையும் இலச்சினையுமிட்டு மீண்டதிருவிளையாடலும், புனிதர்க்கு ஈசன் பன்னரிய மறை பொருளை பகர்ந்தது உம்- ஒருழிக்காலத்தில் முனிவர்களுக்குச் சிவபெருமான் வேதத்தின்பொருளை விரித்தருளியதிருவிளையாடலும், மாணிக்கம் பகர்ந்த ஆறும் - வீரபாண்டியன்புத்திரனுக்கு மகுடஞ்சூட்டுதற்பொருட்டு மாணிக்கம்விற்ற திருவிளையாடலும், தொல் நகர்மேல் நீர் கிழவன் வரவிடுத்த கடல்சுவற தொலைத்த ஆறும், தொன்றுதொட்டுள்ள மதுரைநகரின்மேல் சிவபெருமான் திருவருளைச்சோதித்தற்பொருட்டு வருணன் அனுப்பியகடல்வற்றத்தன்சடையிலணிந்த மேகங்களால் பருகுவித்ததிருவிளையாடலும், தனி அன்ன தொல்மதுரை நான்மாடக் கூடல் நகர் ஆன ஆறும்-ஒப்பில்லாதஅந்தத் தொன்றுதொட்டுள்ள மதுரை நகரம் அச்சிவபெருமான் அனுப்பிய நான்குமேகங்களும் நான்குமாடங்களாகக்கூடுதலால் நான்மாடக்கூடல் நகரான திருவிளையாடலும். (௪)

வட்டங்கொள்சடையுடையசித்தர்விளையாடியதோர்வனப்புங்கையிற்
கட்டங்கந்தரித்தபிரான்கல்லானைகரும்பருந்தக்காட்டுமாறு
மூட்டங்குவஞ்சனையாலமணர்விடுவாரணத்தையொழித்தவாறு
மிட்டங்கொள்கௌரிமுனம்விருத்தனிளையோன்குழவியானவாறும்.

(இ-ள்.) வட்டம் கொள் சடை உடைய சித்தர் விளையாடியது ஓர் வனப்பும் - வட்டமாகக்கட்டிய சடையையுடைய சித்தமூர்த்திகள் அபிடேகபாண்டியன் காலத்தில் ஆடியதிருவிளையாடலும், கையில் கட்டங்கம தரித்தபிரான் கல் லானை கரும்பு அருந்த காட்டும் ஆறும் - கையில் மழுவைத்தரித்த சோமசுந்தரக்கடவுளாகிய அந்தச்சித்தமூர்த்திகள் அந்த அபிடேகபாண்டியன்காணக் கல்லானை கரும்புதின்னக்காட்டிய திருவிளையாடலும், உள் தங்கு வஞ்சனை ஆல் அமணர் விடு வாரணத்தை ஒழித்த ஆறும - மனத்தில் நிறைந்த வஞ்சனையால் தமது அரசனாகிய சோழன்சொற்படி சமணர்கள் அனுப்பிய யானையைக்கொன்ற திருவிளையாடலும், இட்டம் கொள் கௌரி முனம் விருத்தன் இளையோன் குழவி ஆன ஆறும் - தனதிடத்து அன்புமிகக கௌரி என்னும் பார்ப்பனியினமுன விருத்தனுங் குமாரனும் பாலனுமாகிய திருவிளையாடலும்.

கட்டங்கம்-கடங்கமெனபதன் திரிபு, இதனைத் திருக்கோவையாரில்- "சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கஞ்சூழ்சடையோன்" எனவருஞ்செய்யுளானியிற் காண்க. (ரு)

செய்யதாண்மாறிநடமாடியதுமபழியஞ்சுதிறனுந்தாயை
மையலாற்புணர்ந்தமகன்பாதகத்தைமாற்றியதுமதியாதாசான்
றையலாடனைவிரும்புமாணவனைவாளமரிற்றடிந்தவாறும்
பையராவெய்ததுவும்படிற்றமணர்விடுத்தபசுப்படுத்தவாறும்.

(இ-ள்.) செய்ய தாள் மாறி நடம் ஆடியதும்-இராஜசேகரபாண்டியனபொருட்டுசெவநதகால்மாறிநடமாடியதிருவிளையாடலும், பழி அஞ்சு திறனும்-குலோத்துங்கபாண்டியன்பொருட்டுப்பழியஞ்சியதிருவிளையாடலும்,தாயை மையலாற்புணர்ந்தமகன் பாதகத்தை மாற்றியதும் - தனதுதாயைக் காமமயக்கத்தாற்சேர்ந்த புத்திரனுடைய மாபாதகத்தைததீாதத திருவிளையாடலும், மதியாது ஆசான் தையலாள தனைவிரும்பும் மாணவனை வாள் அமரில் தடிநத ஆறும - மதிக்காமல் குருபத்தினியைவிரும்பிய மாணாக்கனாகிய சிததனை அவனது ஆசிரியன்போல வெளிப்பட்டு வாளேந்திப் போர்செய்யும் போர்க்களத்தில் அங்கம்வெட்டின திருவிளையாடலும், படிறு அமணர் விடுத்த பை அரா எய்தது உம்-அனநதகுணபாண்டியனைக்கொல்லுதற்பொருட்டு வஞ்சகத்தையுடைய எண்ணாயிரம சமணர்களும ஏவியபடத்தையுடைய நாகமெய்ததிருவிளையாடலும், பசு படுத்த ஆறும் - மீணடும் அச்சமணர்கள் அனுப்பிய மாயப்பசுவைவதைத்த திருவிளையாடலும். (சு)

அறவேற்றுப்புரியுகைத்துமெய்க்காட்டுக்கொடுத்தவிளையாட்டுங்காட்டுச்
சுறவேற்றுக்கொடியரசன்றனக்குலவாக்கிழிகொடுத்ததொடர்புநாய்கர்
நறவேறறமலர்க்குழலார்மனங்கவர்ந்துவளைபகர்ந்தநலனுமாறு
மறவேற்கண்மாதரார்கட்டமாசித்தியுபமதித்தவாறும்.

(இ-ள்.) அறம் ஏறு பரி உகைத்து மெய்க் காட்டு கொடுத்த விளையாட்டும்- தருமவிடையைக் குதிரையாகக்குலபூஷணன் சேனைத்தலைவராகிய சாமந்திரர்பொ

ருட்டுச் செலுத்தி மெய்க்காட்டிட்ட திருவிளையாடலும், சுறவு ஏறு காட்டு கொடி அரசன் தனக்கு உலவா கிழி கொடுத்த தொடர்பும் - ஆண்சுறவைக் காட்டுதலையுடைய கொடியேந்திய குலபூஷணபாண்டியனுக்கு உலவாக்கிழியருளிய திருவிளையாடலும், நாய்கர் நறவு ஏற்ற மலர் குழலார் மனங்கவர்ந்து வளைபகர்ந்த நலனும் - வணிகருருவுடைய தேன்பொருந்திய மலரையணிந்த கூந்தலையுடைய பெண்களது மனத்தைக்கொள்ளைகொண்டு வளையல்விற்ற திருவிளையாடலும், மறம் வேல் கண் ஆறு மாதரார்க்கு அட்டமாசித்தி உற மதித்த ஆறும் - கொலைத்தொழிலையுடையவேல்போன்ற கண்களையுடைய அறுவகைப்பெணகளுக்கு அட்டமாசித்தியைப் பொருந்த உபதேசித்ததிருவிளையாடலும்.

மீனக்கொடியை யுடையவனாதலால், சுறவேற்றுக்கொடியரசன் என்றார் பிரமன்முதலிய பல்லுயிரும் அழியுந்தேயுப் பிரளயத்தில் தரும்தெய்வதம் நமக்கும் முடிவு வந்துவிட்டதே யென்று தனுக்குற்று அம்முடிவைத்தடுக்க ஆலோசித்துச் சிவபெருமானுக்கு விடைவடிவாய் வந்தது என்பது காந்தம் - தக்ஷகாண்டம் ததீசியுத்தரப்படலத்தில்.

"பெருகுதேயுப்பிரளயமன்னதிற், தருமம்யாவினுக்குந்தனித்தெய்வதம்
வெருவியாமிவண்வீடுதுமேலினிப், புரிவதேதெனப்புந்தியிற்சூழ்ந்ததே."
"ஆறுலாஞ்சடையண்ணலைச்சேர்வனே, லீறிலாதென்றுமுற்றிடுவேனெனாத்
தேறியேயறதெய்வதஞ்செங்கணா, னேறதாயொரொழிலுருக்கொண்டதே."
எனவருஞ் செய்யுள்களாலுணர்க. (எ)

சென்னிபொருட்டெயில்வாயிறிறந்தடைத்து விடைபொறித்தசெயலுஞ்சென்னி, மன்னிகலிட்டமர்விளைப்பமீனவற்குநீர்ப்பந்தர்வைத்தவாறும், பொன்னனையாள்பொருட்டிரதவாதவினை முடித்ததுவும்புகார்க்குவேந்தன், றன்னையகன்குழிவீட்டித்தென்னவற்குமறவாகைதந்தவாறும்.

(இ-ள்.) சென்னி பொருட்டு எயில் வாயில் திறந்து அடைத்து விடைபொறித்த செயலும் - காடுவெட்டியசோழன்பொருட்டு மதில்வாயிலைத்திறந்து அடைத்து விடையிலச்சினையிட்ட திருவிளையாடலும், சென்னி மன் இகல்இட்டு அமர்விளைப்ப மீனவன் கு நீர் பந்தர் வைத்த ஆறும் - அச்சோழராசன் நிலைபெற்றபகைகொண்டு போர்செய்ய ராசபுரந்தரபாண்டியன்பொருட்டுத தண்ணீர்ப்பந்தல்வைத்ததிருவிளையாடலும், பொன் அனையாள் பொருட்டு இரதவாத வினை முடித்தது உம் - திருப்பூவணத்திலுள்ள பொன்னனையாள்நிமித்தம் தனது திருவுருககாண இரசவாதஞ்செய்ததிருவிளையாடலும், புகார்க்கு வேந்தன் தன்னை அகன் குழிவீட்டி தென்னவன் கு மறம் வாகைதந்த ஆறும்-காவிரிப்பூம்பட்டினத்துக்கு அரசனாகிய ஆயிரங்குதிரைக்கோர்சேவகனென்னுஞ்சோழனை இடம் (அகன்ற)மடுவில்வீழ்த்திச் சுந்தரேசபாதசேகரபாண்டியனுக்கு வெற்றிமாலைதந்த திருவிளையாடலும்.

காவிரிப்பூம் பட்டினமுஞ் சோழனுக்கு இராஜதானியாதல், சிலப்பதிகாரத்துட்காண்க. (அ)

மனக்கவலைகெடவுலவாக்கோட்டையடியார்க்களித்தவகையுமர்ம
னெனக்கருணைவடிவாகிவழக்குரைத்துப்பொருள்வணிகற்கீந்தவாறுஞ்
சினக்கதிர்வேல்வரகுணற்குச்சிவலோகங்காட்டியதுந்திவவுக்கோலான்
றனக்கடிமையெனவிறகுதிருமுடிமேற்சுமந்துபகைதணித்தவாறும்.

(இ-ள்.) மனக்கவலைகெட உலவாக்கோட்டை அடியார்க்கு அளித்த வகையும் - மனத்துன்பங்கெட உலவாக்கோட்டையை அடியார்க்கு நல்லாராகிய வேளாடியார்க்குக்கொடுத்த திருவிளையாடலும், மாமன் என கருணை வடிவாகி வழக்கு உரைத்து வணிகன் கு பொருள் ஈந்த ஆறும் - இவன்மாமனாகிய தனபதியென்று கண்டோர்கூறத் தனது திருவருளால்திருவுருக்கொண்டு வழக்குப்பேசியிழந்தவணிகனுக்குப் பொருள்தந்த திருவிளையாடலும், சினம் கதிர்வேல் வரகுணன் கு சிவலோகம் காட்டியதும்-கோபத்தையுடைய ஒளிமிக்க வேலையேந்திய வரகுணபாண்டியனுக்குச் சிவலோகங்காட்டிய திருவிளையாடலும், திவவு கோலான் தனக்கு அடிமை என திரு முடிமேல் விறகு சுமந்து பகைதணித்த ஆறும் - நரம்பின்கட்டமைந்த வீணையையுடைய பாணபத்திரருக்கு நான் அடிமையென்று சிவபெருமான் தனது திருமுடியின்மேல் விறகுசுமந்து அவரது பகைவனாகிய ஏமநாதனை யோட்டிய திருவிளையாடலும்.

திவவுகோலான்-நரம்பின்கட்டமைந்த வீணையையுடையவன். (௯)

அப்பாணற்கிருநிதியருசேரனிடைதிருமுகமீந்தளித்தவாறு
மப்பாணன்பாடமழையாயிரவிற்பொற்பலகையளித்தவாறு
மப்பாணன்மனைவியிசைப்பகைவெல்லவண்ணலவையடைந்தவாறு
மப்பாணனென்றேன்முலையருத்திப்பன்றியுயிரளித்தவாறும்.

(இ-ள்.) அப்பாணன் கு சேரன் இடை திருமுகம் ஈந்து இருநிதியம் அளித்த ஆறும் - அந்தப்பாணபத்திரருக்குத்திருவஞ்சைககளத்திலுள்ள சேரராஜனிடத்துச் செல்லத் திருமுகந்தந்தருளி அவ்வரசனால் மிக்கதிரவியத்தைக்கொடுப்பித்த திருவிளையாடலும், அப்பாணன்பாட மழை அரா இரவில் பொன பலகை அளித்த ஆறும் - அப்பாணபத்திரர் யாழ் வாசிக்க மழைபெய்யும் அர்த்தராத்திரியில் பொற்பலகைதந்த திருவிளையாடலும், அப்பாணன் மனைவி இசைப் பகை வெல்ல அண்ணல் அவை அடைந்த ஆறும் - அப்பாணபத்திரர் மனைவியானை வெல்ல இராஜராஜபாண்டியன் காமக்கிழத்தியருள் ஒருத்தி ஈழநாட்டிலிருந்து வருவித்த பாடினியை இசையில் வெல்ல அரசசபையிற் சென்றருளிய திருவிளையாடலும், அப்பாணன் ஆள் என்றேன் முலை அருத்தி பன்றி உயிர் அளித்த ஆறும் - அப்பாணபத்திரர் அடிமையென்று கூறிய சோமசுந்தரக்கடவுள் முலையூட்டிப் பன்றிக்குட்டிகளின் உயிரைக்காத்தருளிய திருவிளையாடலும். (௧௦).

வயவேனக்குருளைகளைமந்திரிகளாக்கியதும்வலியுண்டாகக்
கயவாய்க்குக்குருமொழிவைத்தருளியதுநாரைக்குக்கருணைநாட்டந்
துயவால்வைத்தருண்முத்திநல்கியதுங்கூடனகர்தன்னைச்சித்தர்
புயநாகம்போய்வளைந்துதிருவாலவாயாக்கிப்போந்தவாறும்.

(இ-ள்.) வயம் ஏனம் குருளைகளை மந்திரிகள் ஆக்கியதும்-வெற்றியையுடையபன்றிக்குட்டிகளை இராஜராஜபாண்டியன் மந்திரிகளாக்கிய திருவிளையாடலும், கயவாய்க்கு வலி உண்டாக குரு மொழி வைத்து அருளியதும் - ஏனைப்பறவைகளால் மெலிவுற்ற கரிக்குருவிக்கு அப்பறவைகளினும் வலிமையுண்டாகவுபதேசித்த

திருவிளையாடலும், ஏனைக்கு கருணை நாட்டம் தயவால் வைத்து அருள் முத்தி நல்கியதும் - ஏனைக்குக் கிருபாநோக்கத்தைக் கருணையோடுவைத்தருளி முத்தி கொடுத்தருளிய திருவிளையாடலும், கூடல் நகர் தன்னை சித்தர் புயாகம் போய் வளைத்து திருவாலவாய் ஆக்கி போந்த ஆறும் - ஓர் ஊழிக்காலத்தில் வங்கியசேகரபாண்டியன் வேண்டுகோளால் சித்தராய்வந்த சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கரத்திலணிந்த நாககங்கணஞ்சென்று நான்மாடக்கூடலை வளைந்து திருவாலவாயாக்கிய திருவிளையாடலும்.

வைத்தருள் முதனிலைத் தனிவினை வினையெச்சப்பொருளின்மேனின்றது. (கக)

சுந்தரனென்றெழுதியகூரம்பெய்துசெம்பியன்போர்தொலைந்தவாறுஞ்
செந்தமிழோர்க்கியற்பலகையருளியதுந்தருமிக்குச்செம்பொன்பாடித்
தந்ததுவுமாறுபடுகீரற்குக்கரையேற்றந்தந்தவாறும்
விந்தமடக்கியமுனியாற்கீரனியற்றமிழ்தெளியவிடுத்தவாறும்.

(இ-ள்.) சுந்தரன் என்று எழுதிய கூர் அம்பு எய்து செம்பியன் போர் தொலைத்த ஆறும் - சுந்தரனென்றெழுதிய கூரிய அம்பினைப்பிரயோகஞ்செய்து வங்கிய சேகரபாண்டியன்மேற் போர்க்கெழுந்த விக்கிரமச்சோழன் செய்யும் போர்முனையையொழித்த திருவிளையாடலும், செம் தமிழோர்க்கு இயற் பலகை அருளியதும் - சங்கப்புலவர்களுக்கு அவர்களோடு வாதுசெய்யும் ஏனைப்புலவர்கள் கல்வியினியல்பைச் சீர்தூக்கச் சங்கப்பலகைதந்த திருவிளையாடலும், பாடி தருமிக்கு செம் பொன் தந்ததுவும் - "கொங்குதேர்வாழ்க்கை" என்னும் திருப்பாசுரத்தைப்பாடியருளித் தன்னைச் சரணடைந்த தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடலும், மாறு படு கீரன் கு கரை ஏற்றம் தந்த ஆறும்-தன்னொடுமாறுபட்டுப் பொற்றாமரைத்தடத்திலழுந்திய நக்கீரனைக் கபிலர் பரணர் முதலிய ஏனைப்புலவர்கள் வேண்டுகோளாற் கரையேற்றியதிருவிளையாடலும், விந்தம் அடக்கிய முனியால் கீரன் இயற்றமிழ்தெளிய விடுத்த ஆறும் - விந்தகிரியை யடக்கிய அகத்தியமுனிவரால் நக்கீரன் இயற்றமிழ் ஆராய்ந்து தெளிய விடைதந்தருளிய திருவிளையாடலும்.

கு உருபுமயக்கம். (கஉ)

ஊமனாற்புலவரிகலகற்றியதுமிடைக்காடனுடன்போய்க்கொன்றைத்
தாமனார்வடவாலவாயமர்ந்தபரிசும்வலைசலதிவீசிப்
பூமனாய்க்குழலியைவேட்டருளியதும்வாதவூர்ப்புனிதர்க்கேறத்
தேமனுண்மலரடிகண்முடிசூட்டியுபதேசஞ்செய்தவாறும்.

(இ-ள்.) ஊமனால் புலவர் இகல் அகற்றியதும் - வணிகர்குலத்திற்றோன்றிய ஊமராகிய பெரும்புலவரால் நாற்பத்தெண்மராகிய சங்கப்புலவர் கலகந்தீர்த்த திருவிளையாடலும், கொன்றை தாமனார் இடைக்காடன் உடன் போய் வட ஆலவாய் அமர்ந்த பரிசும் - கொன்றைமாலையையணிந்த சோமசுந்தரக்கடவுள் குலேசபாண்டியனோடு பிணங்கிய இடைக்காட்டுப் புலவரோடு சென்று வடவாலவாயிலெழுந்தருளிய திருவிளையாடலும், சலதி வலை வீசி பூமன் ஆய் குழலியை வேட்டு அருளியதும்-கடலில்வலைவீசிநெய்தனிலத்தலைவன் திருமகளாய் வழுந்தருளிய மலர்கள்போ

ருந்திய ஆய்ந்துவகிர்ந்த கூந்தலையுடைய உமாதேவியாரைத் திருமணஞ்செய்தவிரு விளையாடலும், வாதவூர் புனிதர்க்கு ஏத-திருவாதவூரில் திருவவதாரஞ்செய்த புனிதராகிய வாதவூரடிகளுக்குத் திருவருள்பொருந்த, தேம் மன் கான் மலர் அடிகள் முடி சூட்டி உபதேசம் செய்த ஆறும்-வாசம்பொருந்திய அன்றலர்ந்த தாமரைமலரையொத்ததிருவடிகளைச் சிரத்திற்சூட்டியுபதேசித்தருளிய திருவிளையாடலும். (௬௩)

நரிகள்பரியாக்கியதும்பரிகணரியாக்கியதுநாகம்பூண்டோ
னரியதிருமேனியின்மேலடிசுமந்துமண்சுமந்தவருளுந்தென்ன
னெரியடுவெஞ்சுரந்தணித்தவாறுமமணரைக்கழுவிலிட்டவாறும்
கரியெனவன்னிகிணறிலிங்கங்கூய்வணிகமகட்காத்தவாறும்.

(இ-ள்.) நரிகள் பரி ஆக்கியதும் - வாதவூரர்பொருட்டு நரிகளைப் பரிகளாக்கிய திருவிளையாடலும், பரிகள் நரி ஆக்கியதும் - அரிமர்த்தனபாண்டியன் கவலைபடப் பரிகளை நரிகளாக்கிய திருவிளையாடலும், நாகம் பூண்டோன் அரிய திரு மேனியின் மேல் அடி சுமந்து மண் சுமந்த அருளும் - சர்ப்பாபரணத்தைப்பூண்ட சோமசுந்தரக்கடவுள் தேவர் காணுதற்கரிய தனது திருமேனியின்மேல் அப்பாண்டியன் பிரம்படியேற்று மண்சுமந்த திருவிளையாடலும், தென்னன் எரி அடு வெம் சுரம் தணித்த ஆறும் - சமணர்கள் புன்னெறி வழிப்பட்டொழுகிய கூன்பாண்டியனுடைய தீப்போலவருத்தும் கொடிய சுரநோயைத்தீர்த்த திருவிளையாடலும், அமணரை கழுவில் இட்ட ஆறும்-வாதில் புறங்கொடுத்துத் தோற்ற சமணர்களைக் கழுவிலேற்றிய திருவிளையாடலும், கரி ஆது என வன்னி கிணறு இலிங்கம் கூய் வணிக மகள் காத்த ஆறும் - சாக்ஷியாகத் திருப்புறம்பயத்திலின்ற வன்னியும் கிணறும் சிவலிங்கமும் ஆகிய இம்மூன்றையுமழைத்து ஒருவணிகப்பெண்ணைக்காத்த திருவிளையாடலும்.

எனத்தொகையாலறுபத்துநான்கிவற்றைநிறுத்தமுறையீறிலாத
வினைத்தொகையாறகன்றீரெக்காலமெவர்பொருட்டெனநீர்வினவவாற்றுன்
மனத்தளவிலன்புமடையுடைத்தொழுகத்திருவாலவாயான்றாளை
நினைத்தளவிலானந்தம்பெருகவிரித்துரைப்பலெனநெறியாற்கூறும்.

(இ-ள்.) என தொகையால் அறுபத்து நான்கு - என்று தொகையால் அறுபத்துநான்கு திருவிளையாடல்களாம், ஈறு இலாத வினை தொகை ஆறு அகன்றீர் - முடிவில்லாத இருவினைக்கூட்டங்களின்வழியினின்றுநீங்கிய முனிவர்களே, எக்காலம் எவர் பொருட்டு என நீர் வினவிய ஆற்றால் - எக்காலத்தில் எவர்நிமித்தமென்று நீர் வினவியபடியால், இவற்றை நிறுத்த முறை விரித்து உரைப்பல் என - இத்திருவிளையாடல்களை இங்குவைத்த முறைப்படி விரித்துச்சொல்லுவேனென்று, மனத்து அளவில் அன்பு மடை உடைத்து ஒழுக திருவாலவாயான் தாளை நினைத்து - தமதுமனமாகிய தடத்தினின்று அளவில்லாத அன்பாகியவெள்ளம் மடையுடைத்துப்பாயத் திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளைச்சிந்தித்து, அளவில் ஆனந்தம் பெருக நெறியால் கூறும் - அளவில்லாத சிவானந்தம் மேலிட முறையாற் சொல்லுகின்றோம். (௬௪)

பதிகம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௩௪௨.

சிவமயம்.

# முதலாவது

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பயில்குலிசப்புத்தேள்விருத்திராசுரனைக்கொன்ற
வன்பழிவிடாதுபற்றக்கடம்பமாவனத்திலெய்தி
யென்பரவாரம்பூண்டவிறைவனையருச்சித்தேத்திப்
பின்பதுகழிந்துபெற்றபேற்றினையெடுத்துச்சொல்வாம்.

(இ-ள்.) மின் பயில் குலிசம் புத்தேள் - பிரகாசத்தை வீசுகின்ற வச்சிராயுதத்தையுடைய தேவேந்திரன், விருத்திராசுரனைக் கொன்ற வன்பழி விடாதுபற்ற - விருத்திராசுரனைக் கொலைசெய்த வலியபழி விடாமற் பற்ற, மா கடம்ப வனத்தில் எய்தி - (அதுநீங்கும்வண்ணம்) பெரிய கடம்பவனத்தை யடைந்து, என்பு அரவு ஆரம் பூண்ட இறைவனை அருச்சித்து ஏத்தி - எலும்பையும் சர்ப்பத்தையும் ஆபரணமாகப்பூண்ட சோமசுந்தரக்கடவுளை அருச்சனைசெய்து துதித்து, பின்பு அது கழிந்து பெற்ற பேற்றினை எடுத்து சொல்வாம் - பின்பு அத்தேவேந்திரன் அப்பழியினின்று நீங்கிப் பெற்றநன்மையை எடுத்துச் சொல்லுகின்றோம்.

தேவேந்திரன் பூசித்தகாலத்துக் கடம்பவனமாயிருத்தலால் கடம்பமாவனமென்றார். சர்வசங்காரகாலத்தில் ஒடுங்கிய பிரமன்முதலியோர் எலும்பினை அக்காலத்து எஞ்சிநின்ற பொருள் தானேயென்று அப்பிரமன் முதலியோர் உணர்ந்துவழிபட்டு முத்தியடைதற்கு ஆபரணமாக அணிந்தார் என்பது. காந்தம் - தக்ஷகாண்டம்- ததீசியுத்தரப்படலத்தில்.

"பரமனிவ்வகையடர்தொறுமடர்தொறும்பலவாய்ப்
பிரமனாதியோரென்பினைத்தரிக்குமப்பெரியோர்
சிரமெலாந்தொடுத்தணியலாவணிந்திடுஞ்சிகைதன்
னூரமலாவுமுந்நூலெனவேயணிந்துறையும்."

"ஆதலாற்றனையியாப்பதிற்கன்றலையணிதல்
வீதலாதொருநிறமுளதியாவருமெமர்க்கு
நாதனேயிவனென்றுன்பாங்கரோகண்ணித்
தீதெலாமொரீஇமுத்திபெற்றுய்ந்திடுஞ்செயலே."

எனவருஞ் செய்யுள்களாலுணர்க. (௧)

முன்னதாமுகத்தில்வண்டுமூசுமந்தாரநீழற்
பொன்னவிர்சுணங்குண்கொங்கைப்புலோமசைமணாளன்பொற்பூண்
மின்னவிர்ந்திமைப்பச்சிங்கஞ்சுமந்தமெல்லணைமேன்மேவி
யன்னமென்னடையாராடுமாடன்மேலார்வம்வைத்தான்.

(இ-ள்.) முன்னது ஆம் உகத்தில் - யுகங்களில் முற்பட்ட கிரேதாயுகத்தில், வண்டு மூசும் மந்தார நீழல் சிங்கம் சுமந்த மெல் அணைமேல் - வண்டுகள்மொய்க்கும் மந்தாரவிருக்ஷத்தின் நிழற்கீழ் உள்ள சிங்கங்கள் தாங்கியமெத்தென்ற ஆசனத்தின்மேல், பொன் அவிர் சுணங்கு உண் கொங்கை புலோமசைமணாளன் பொன்

பூண் மின் அவிர்ந்து இமைப்ப மேவி - பொற்பிதிர்போல விளங்குந் தேமல்பொருந்திய தனங்களையுடைய இந்திராணியின் தலைவனாகிய தேவேந்திரன் பொன்னாலாகிய ஆபரணங்கள் மின்னல்போல்விளங்கிப்பிரகாசிக்க வீற்றிருந்து, அன்னம் மெல்லடையார் ஆடும் ஆடல் மேல் ஆர்வம் வைத்தான் - அன்னம்போலும் மெத்தென நடக்கும் நடையையுடைய அரம்பைமாதர்கள் ஆடும் ஆடலின்மேல் விருப்பம் வைத்தான்.

முற்பட்ட கிரேதாயுகம் என்றதை ஆலாஸ்யமகத்துவத்தில்,

"[illegible]
[illegible]"

எனவரும் சுலோகத்தாற்காண்க.

மந்தாரம்-பஞ்சதருக்களில் ஒன்று. பொதுவகையால் வண்டுமூசுமந்தாரமெனவும், "எக்காலம் எவர்பொருட்டு" என்றமையால் முன்னதாமுகத்தில் எனவுங்கூறினர். முன்னதாமுகத்தில் எனபதற்கு முன்னதாம்முகத்தில் என்று சொல்வகைசெய்து தனக்கு முன்னிடத்தில் எனப்பொருள் கூறுவாருமுளர். உண்ணுதற்குரிய பொருள்களல்லாதனவற்றை உண்ணுதல்போலக்கூறுதல் மரபாதலால் சுணங்குண்கொங்கையென்றார். தொ-பொ-பொருளியலில் "உண்டற்குரியவல்லாப்பொருளை, யுண்டனபோலக்கூறலுமரபே" என்ற சூத்திரத்தாலுணர்க. (உ)

மூவகைமலரும்பூத்துவண்டுளேமுழங்கத்தெய்வப்
பூவலர்கொடிபோர்ந்தன்னபொன்னனார்கூத்துமன்னார்
நாவலரமுதமன்னபாடலுநாகநாட்டுக்
காவலன்கண்டுகேட்டுக்களிமதுக்கடலுளாழ்ந்தான்.

(இ-ள்.) மூவகை மலரும் பூத்து வண்டு உள்ளே முழங்க பூ அலர் தெய்வம் கொடி போர்ந்தால் அன்ன - கோட்டுப்பூ நிலப்பூ நீர்ப்பூ என்னும் மூவகைமலர்களையும் பூத்து வண்டுகள் அம்மலர்களுள்ளே இசைபாட மலர்கள் அலர்ந்த தெய்வத்தன்மையையுடைய கொடிகளாடினாற்போல, பொன் அன்னார் கூத்தும் அன்னார் நா அலர் அமுதம் அன்ன பாடலும் - இலக்குமியையொத்த அரம்பைமாதர்கள் ஆடிய நடனத்தையும் அவர்களுடையநாவிற்றோன்றிய அமுதம்போலும் சுவைதரும்பாடல்களையும், நாக நாடு காவலன் கண்டு கேட்டு களி மது கடல் உள் ஆழ்ந்தான் - விண்ணுலகிற்கு அரசனாகிய தேவேந்திரன் கண்டும் கேட்டும் களிப்பாகிய மதுக்கடலுள் அழுந்தினான்.

கொடிகள் எல்லாமலர்களையும் பூத்திருத்தல் தெய்வத்தன்மையதாதலால் தெய்வக்கொடி எனவும், தன்னைமறந்தனனாதலால் களிமதுக்கடலுளாழ்ந்தான் எனவுங்கூறினர். கூத்துக்கண்டு, பாட்டுக்கேட்டு எனமுறை நிரனிறைப்பொருள்கோளாகக்கொள்க. (௩)

பையராவணிந்தவேணிப்பகவனையனையதங்க
ளையனும்வியாழப்புத்தேளாயிடையடைந்தானாகச்
செய்யதாள்வழிபாடின்றித்தேவர்கோனிருந்தானந்தோ
வையலார்மயலிற்பட்டோர்தமக்கொருமதியுண்டாமோ.

(இ-ள்.) பை அரா அணிந்த வேணி பகவனை அனையதங்கள் ஐயன் ஆம் வியாழப்புத்தேள் ஆ இடை அடைந்தான் ஆக - படத்தையுடைய சர்ப்பாபரணத்தை

த்தரித்த சடையையுடைய சிவபெருமானையேயொத்த தங்கள் ஆசிரியனாகிய பிரக ஸ்பதி அவ்விடத்துவர, செய்ய தாள் வழிபாடு இன்றி தேவர்கோன் இருந்தான்- அவனது செவ்வந்தபாதங்களுக்கு வழிபாடில்லாமல் தேவேந்திரன் வாளாவிருந்தன ன், அந்தோ தையலார் மயலில் பட்டோர் தமக்கு ஒரு மதியுண்டாமோ-ஐயோபெ ண்கள் மயலில் சிமிழ்ப்புண்டவருக்கு நல்லறிவு உண்டாகுமா, (இல்லையென்றபடி)

ஐஸ்வரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் ஆகிய இவ்வாறுகு ணங்களுக்கும் பக-என்னும் பேர் உண்மையால் பகவன்என்பதற்கு இவ்வாறுகுணங் களையும் உடையவனெனப் பொருள்கொள்க. வழிபாடு - பூசித்தல். ஆகவென்னுமி டைச்சொல்இருந்தானென்னும் வினைமுற்றையடுத்துச் செயவென்னும்வினையெச்சப் பொருள் தந்தது. தொ-சொ-இடையியல். "ஆகவாகவெலன்பதென்னு-மாவயின்மூன் றும் பிரிவிலசைநிலை" என்னுஞ்சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையா லுணர்க. முன்புகூறியதைகமுடித்தற்கு "தையலார்மயலிற்பட்டோர்தமக்கொருமதியு ண்டாமோ" என வுலகவழக்கைப் பின்னர்க்கூறியது வேற்றுப்பொருள்வைப்பணி.

ஒல்லெனக்குரவனேகவும்பர்கோன்றிருவினாக்கம்
புல்லெனச்சிறிதுகுன்றப்புரந்தரனறிந்திக்கேடு
நல்லதொல்குரவற்பேணநவையினால்விளைந்ததென்று
வல்லலுற்றறிவனாறன்னைத்தேடுவானாயினானே.

(இ-ள்.) குரவன் ஒல்லென ஏக-தன்னை அவன் அவமதித்தலைக்கண்ட ஆசிரியன் விரைந்துபோய்விட, உம்பர் கோன் திருவின் ஆக்கம் புல் என சிறிது குன்ற - தேவே ந்திரனுடைய செல்வத்தின்மிகுதிபொலிவழிந்து சிறிது குறைபடுதலால், புரந்தரன் அறிந்து இக்கேடு நல்ல தொல் குரவன் பேணு நவையினால் விளைந்தது என்று அல் லல் உற்று-அத்தேவேந்திரன் அதனையுணர்ந்து இந்தக்கெடுதி தொன்றுதொட்டுள்ள நமது நல்ல ஆசிரியனை வழிபடாதகுற்றத்தினால் விளைந்ததென்று துன்பங்கொண்டு, அறிவன் தன்னை தேடுவான் ஆயினன்-பிரகஸ்பதியைத் தேடத்தொடங்கினான்.

ஆசிரியனை யவமதித்தலால் வரும் பாவகருமபலன் இன்னதென்பதைச் சூத சங்கிதை ஞானயோககாண்டம் பாவகருமபலமுரைத்த அத்தியாயத்தில்.

" அண்ணலம்பரனையாசாரியன் றனையவமதித்தோர்
எண்ணருங்காலம்பவ்வீயிலுடைத்துளைகிருமியாவர்
தண்ணமாரிவனாவெண்ணுநிழிவுரைசாற்றினோர்கள்
திண்ணமண்ணவர்வெறுக்கதீமுயலகநோய்கொள்வார்.

எனவருஞ் செய்யுளாலுணர்க. (௫)

அங்கவனிருக்கைபுக்கான்கண்டிலனவித்தபாசப்
புங்கவருலகுமேனோர்பதவியும்புவனமூன்றி
லெங்கணுந்துருவிக்காணானெங்குற்றான்குரவனென்னுஞ்
சங்கைகொண்மனத்தனாகிச்சதுமுகனிருக்கைசார்ந்தான்.

(இ-ள்.) அவன் இருக்கை புக்கான் அங்கு கண்டிலன் - அப்பிரகஸ்பதி யிருக்குமிடத்திற்சென்று அவ்விடத்திற்காணாமையால், பாசம் அவித்த புங்கவர் உல கிலும் மேனோர் பதவியிலும் புவனம் மூன்றிலும் எங்கணும் துருவி காணான் - பாசங்க ளைக்கெடுத்தமுனிவர்களுலகத்திலும் அவரொழிந்த ஏனையோருலகத்திலும் திரிலோ கங்களிலும்எவ்விடத்துஞ்சென்றுங்காணாமல், குரவன் எங்கு உற்றான் என்னும் சங் கைகொள் மனத்தன் ஆகி - நமதாசிரியன் எங்குற்றானோவென்னும் ஐயங்கொண்ட

மனத்தனுமி, சதுமுகன் இருக்கை சார்ந்தான் - நான்கு திருமுகங்களையுடைய பிரமனுடைய உலகத்தையடைந்தான். (௬)

துருவினனங்குங்காணான் றிசைமுகற்றொழுது தாழ்ந்து
பரவிமுன்பட்டவெல்லாம் பகர்ந்தனன் பகரக்கேட்டுக்
குரவனையிகழ்ந்தபாவங்கொழுந்துபட்டருந்துஞ்செவ்வி
வருவதுநோக்கிச்சூழ்ந்துமலர்மகனிதனைச்சொன்னான்.

(இ-ள்.) அங்கும் துருவினன் காணான்-அவ்விடத்துந்தேடிக்காணாமையால், திசைமுகன் தாழ்ந்து தொழுது பரவி முன்பட்ட எல்லாம் பகர்ந்தனன் - பிரமனைவணங்கித் தொழுதுதுதித்து முன்னடந்தனவற்றை எல்லாம் சிறிதும் வழுவாதுசொல்லினான், பகர மலர் மகன் கேட்டு - அவன் சொல்லப் பிரமன்கேட்டு, குரவனை இகழ்ந்த பாவம் கொழுந்து பட்டு அருந்தும் செவ்வி வருவது நோக்கி - ஆசிரியனை அவமதித்த பாவங் கொழுந்துவிட்டோங்கி அத்தேவேந்திரனைத் தனது வயிற்றிலொடுக்குங்காலம்வருதலையறிந்து, சூழ்ந்து இதனை சொன்னான் - ஆலோசித்து இந்தவார்த்தையைச்சொல்லத்தொடங்கினான். (௭)

அனையதொல்குரவற்காணுமளவுநீதுவட்டாவீன்ற
தனையன்முச்சென்னியுள்ளான்றானவர்குலத்தில்வந்தும்
வினையினாலறிவான்மேலான்விச்சுவவுருவனென்னு
மினையனைக்குருவாக்கோடியென்னலுமதற்குநேர்ந்தான்.

(இ-ள்.) நீ அனைய தொல் குரவன் காணும் அளவும்-நீ அந்தத் தொன்றுதொட்டுள்ள ஆசிரியனைக்காணுங்காறும், துவட்டா ஈன்ற தனையன் முச்சென்னி உள்ளான் தானவர் குலத்தில் வந்தும் வினையினால் அறிவால் மேலான் - துவட்டா என்பவன்பெற்ற புத்திரன் மூன்றுதலையுள்ளவன் இவன் அசுரகுலத்திற்பிறந்துஞ்செய்கையினாலும் அறிவினாலும் மேம்பட்டவன், விச்சுவ உருவன் என்னும் இனையனை குருவாக கோடி என்னலும் - விச்சுவ உருவனென்னு மியற்பெயரையுடைய இவனைக் குருவாகவைத்துக்கொள்வாய் என்று சொல்ல, அதற்கு நேர்ந்தான் - அந்தவார்த்தைக்குடன்பட்டு.

நேர்ந்தான் வினைமுற்று எச்சமாய்நின்றது. (௮)

அழலவிர்ந்தனையசெங்கேழடுக்கிதழ்முளரிவாழ்க்கைத்
தொழுதகுசெம்மறன்னைத்தொழுதுமீண்டகன்றுநீங்கா
விழைதகுகாதல்கூரவிச்சுவவுருவன்றன்னை
வழிபடுகுருவாக்கொண்டான்மலர்மகன்சூழ்ச்சிதேறான்.

(இ-ள்.) அழல் அவிர்ந்தால் அனைய செம் கேழ் அடுக்கு இதழ் முளரிவாழ்க்கை தொழுதகு செம்மல் தன்னை - தீவிளங்கினாலொத்த செந்நிறத்தையுடைய அடுக்குவாய்ந்த இதழ்களையுடைய தாமரையில்வாழும் வாழ்க்கையையுடைய யாவரும் வணங்கும்பிரமனை, மீண்டு தொழுது அகன்று நீங்கா - மீளவுந்தொழுதுநீங்கி, மலர்மகன் சூழ்ச்சி தேறான்-அப்பிரமன் ஆலோசனையையுணராமல், விழைதகு காதல் கூர - விரும்பத்தக்க ஆசைமிக்கூர, விச்சுவ உருவன் தன்னை வழிபடு குருவா கொண்டான் - அவ்விச்சுவவுருவனை வழிபட்டொழுகும் ஆசிரியனாகக்கொண்டான். (௯)

கைதவக்குரவன்மாயங்கருதிலன்வேள்வியொன்று
செய்திடலடிகளென்னத்தேவர்கட்காக்கங்கூறி
வெய்தழல்வளர்ப்பானுள்ளபவேறுபட்டவுணர்க்கெல்லா
முய்திறநினைந்துவேட்டான்றனக்குமேலுறுவதோரான்.

(இ-ள்.) கைதவம் குரவன் மாயம் கருதிலன் - வஞ்சனையையுடைய ஆசிரியனாகிய அவ்விச்சுவவுருவனுடைய கெட்ட வெண்ணத்தையுணராமல், அடிகள் வேள்வி ஒன்று செய்திடல் என்ன - சுவாமிகளே ஒருயாகஞ் செய்க வென்று தேவேந்திரன் இரக்க, தேவர்கட்கு ஆக்கம் கூறி வெய்தழல் வளர்ப்பான் - (அதற்குடன்பட்டு) தேவர்களுக்குச் செல்வமுண்டாகுக என்று வாக்காற்சொல்லி வெவ்வியவேள்வித் தீயை வளர்ப்பவன், உள்ளம் வேறுபட்டு தனக்கு மேல் உறுவது ஓரான்-மனந்திரிந்து தனக்கு இனிவருங்கெடுதியை உணராமல், அவுணர்க்கு எல்லாம் உய்திறன் நினைந்து வேட்டான் - அசுரர்களுக்கெல்லாம் பிழைக்குந்திறம் உண்டாகுக என்று மனத்தாற் சிந்தித்துச்செய்தான்.

செய்திடல் அல்விகுதிவியங்கோட்பொருட்டு "மக்கட்பதடியெனல்" என்பதனுலுணர்க.

வாக்கினன்மனத்தால்வேறாய்மகஞ்செய்வான்செயலையாக்கை
நோக்கினனோதிதன்னானோக்கினன்குலிசவேலாற்
றாக்கினன்றலைகண்மூன்றுந்தனித்தனிப்பறவையாகப்
போக்கினனலகைவாயிற்புகட்டினன்புலவுச்சோரி.

(இ-ள்.) வாக்கினல் வேறாய் மனத்தால் வேறாய் மகம் செய்வான் செயலை-வாக்கினல் வேறுபட்டும் மனத்தால் வேறுபட்டும் வேள்விசெய்யும் விச்சுவவுருவனுடைய செய்கையை, யாக்கை நோக்கினன் ஓதி தன்னால் நோக்கினன் குலிச வேலால் தாக்கினன் - சரீரத்தில கண்களையுடைய தேவேந்திரன் ஞானப்பார்வையால்பார்த்து வச்சிராயுதத்தால் சிதைத்தான், தலைகள் மூன்றும் தனி தனி பறவையாக போக்கினன் - மூன்றுதலைகளுந் தனித்தனியே யொவ்வொரு பறவைகளாகப்போக்கி, புலவு சோரி அலகை வாயில் புகட்டினன் - வுணிற்பொருந்திய உதிரத்தைப் பேய்களின் வாய்களில் நிறைவித்தான்.

தன்பன்னியைக் காவிற்புணர்ந்து பிழைத்த தேவேந்திரனுக்குத் தனது சபத்தால் உடலில் நேரிட்ட குறிகளைத் தேவர்கள் வேண்டுகோளால் ஆயிரங் கண்களாகக் கௌதமமுனிவன் அருளினன் என்பதைக் கம்பராமாயணம் பாலகாண்டம் அகலிகைப்படலத்தில்.

"அந்தவித்திரனைக்கண்டவமரர்கள்பிரமன்முன்னா
வந்துகோதமனைவேண்டமற்றவைதவிர்த்துமாறாச்
சிந்தையின்முனிவுதீர்ந்துசிறந்தவாயிரங்கண்ணாக்கத்
தந்தமதுலகுபுக்கார்வதபலுங்கிடந்தாள்கல்லாய்."

எனவருஞ் செய்யுளாலுணர்க.

சோமபானஞ்செய்கின்றமுகம்-காடையாகவும், சுராபானஞ்செய்கின்றமுகம்-வூர்க்குருவியாகவும், அன்னபானஞ்செய்கின்றமுகம்-சிச்சிலியாகவும் பறந்தன என இதன் முதனூலாகிய ஆலாஸ்ய மகத்துவத்தில்,

"[illegible]
[illegible]॥

அநுஜ்ஞா நம்ஸ்ய அக்ஞாயதே தஸ்மிந் தத்க்ஷணாத் ஸ்திரீ!

வைவம்பரீக்ஷ ராணித யோஷாபுஷ ப்ரஹ்ம ஹத்யை வைஷ்ணவீ”

எனவரும் சுலோகத்தாலுணர்க.

வாக்கினால் வேறுபடுதலாவது - தேவர்களுக்கு ஆக்கங்கூறல். மனத்தால் வேறுபடுதலாவது - அசுரர்கள் ஆக்கமாகச்சிந்தித்தல். ஆக்கமாவது - விருத்தி என்னும் வடசொல்லுக்குத் தமிழில்வந்த பிரதிபதம். நீக்கினான், போக்கினான் வினைமுற்றுகள் எச்சமாயின. (கக)

தெற்றெனப்பிரமபாவஞ் சீறிவந்தமரர்வேந்தைப்
பற்றலுமதனைத்தீர்ப்பான் பண்ணவர்மரமேன்மண்மேற்
பொற்றொடியார்மேனீர்மேல்வேண்டினர்புகுத்தலோடு
மற்றவரிஃதியாந்தீர்க்கும்வண்ணம்யாதென்னவிண்ணோர்.

(இ-ள்.) பிரமபாவம் சீறிவந்து அமரர் வேந்தை தெற்றென பற்றலும் - பிரமகத்திகோபித்துவந்து தேவேந்திரனைவிரைந்துபற்றுதலால், அதனை தீர்ப்பான் வேண்டினர் பண்ணவர்-அப்பிரமகத்தியைத்தீர்க்க விரும்பியதேவர்கள், மரமேல் மண்மேல் பொன் தொடியார் மேல் நீர்மேல் புகுத்தலோடும் - மரத்தினிடத்தும் மண்ணினிடத்தும் பெண்களினிடத்தும் நீரினிடத்தும் (அப்பிரமகத்தியைக்) கூறுசெய்துசெலுத்த, அவர் இஃது யாம் தீர்க்கும் வண்ணம் யாது என்ன - அவர்கள் இப்பிரமகத்தியைப்போக்கும் வகை எவ்வாறென்றுவினவ, விண்ணோர்-தேவர்கள்.

மரம், மண், பெண்கள், நீர் என அஃறிணையையும், உயர்திணையையும் விரவிச்சிறப்பினால் இவர் என உயர்திணை முடிபுதந்து கூறியது திணைவழுவமைதி. (கஉ)

அப்பிடைநுரையாய்மண்ணிலருவருப்புவராயம்பொற்
செப்பிளங்கொங்கையார்பானீண்டுதற்கரியபூப்பாய்க்
கப்பிணர்மரத்திற்காலும்பயினதாய்க்கழிகவென்றா
ரிப்பழிசுமந்தவெங்கட்கெந்நலமென்றார்பின்னும்.

(இ-ள்.) அப்பு இடை நுரையாய் - நீரினிடத்தில் நுரையாகியும், மண்ணில் அருவருப்பு உவராய் - மண்ணினிடத்தில் அருவருப்பையுடைய உவராகியும், அம் பொன் செப்பு இளம் கொங்கையார் பால் தீண்டுதற்கு அரிய பூப்பு ஆய்-அழகிய பொன்னாலாகிய கரண்டகச்செப்பையொத்த இளமைதங்கிய தனங்களையுடையபெண்களிடத்துத் தீண்டவொண்ணாத பூப்பாகியும், கப்பு இணர் மரத்தில் காலும் பயின் ஆய் கழிக என்றார் - கிளைகளையும் பூங்கொத்துகளையும் உடையமரங்களில் கசிந்தொழுகும் பிசினியாகியும் அப்பிரமகத்தி கழியக்கடவன என்றார்கள், பின்னும் இப்பழி சுமந்த எங்கட்கு எ நலம் என்றார் - மீளவும் இந்தப் பிரமகத்தியைத்தாங்கிய எங்களுக்குப்பயன் யாது பயனென்று வினவினார்கள்.

அது பகுதிப்பொருள்விகுதி. (கங)

வேறு,

கருவின்மாதர்கருவுயிர்க்குமளவும்முறையாற்கணவர்தோண்
மருவிவாழ்கமண்ணகழ்ந்தகுழியுமதனால்வடுவொழிக
பொருவினீருமிறைதோறுமேறிப்பொலிகமரங்குறைபட்
டொருவினாலுந்தழைகவெனவொழியர்நலனுமுதவினார்.

(இ-ள்.) கருவின் மாதர் கரு உயிர்க்கும் அளவும் முறையால் கணவர் தோள் மருவி வாழ்க என - கருப்பமுள்ள பெண்கள் அக்கருப்பம் பெறுமளவும் முறைப்படி தத்தமது கணவர்களுடைய புயங்களைச் சேர்ந்து வாழக்கடவர் என்றும், மண் அகழ்ந்த குழியும் அதனால் வடு ஒழிக என - மண்ணைத்தோண்டியகுழியும் அம்மண்ணாலே அவ்வடுவொழியக் கடவது என்றும், பொருவில் நீரும் இறைதோறும் ஊறி பொலிக என - ஒப்பில்லாத நீரும் இறைக்குந்தோறும் ஊற்றெடுத்து விளங்கக் கடவதென்றும், மரம் குறைபட்டு ஒருவினாலும் தழைக என - (வாளால்) மரங்கள் வெட்டப்படினுந் தழையக்கடவதென்றும், ஒழியா நலனும் உதவினர் - என்றும் நீங்காதபலனையும் அருளிச்செய்தார்கள். (கசு)

மாசிற்கழிந்தமணியேபோல்வந்தபழிதீர்ந்திந்திரனுந்
தேசிற்றிகழத்துவட்டாதன்செல்வன்றன்னைத்தேவர்பிரான்
வீசிக்குலிசததுயிருண்டவிழுமங்கேடடுவெகுண்டுயிர்த்துக்
கூசிபபழிகோளகருதியொருகொடியவேள்விகடிதமைத்தான்.

(இ-ள்.) மாசு இல் கழிந்த மணியே போல் வந்த பழிதீர்ந்து இந்திரனும் தேசில் திகழ-(சாணைபிடிததலால்)மாசினின்றுநீங்கியஇரத்தினம்போலப்(பெண்கள் முதலியோர்க்குப பகுத்துத்தந்ததால்) நேரிட்ட பிரமகத்தியினின்றுநீங்கித்தேவேந்திரனும் ஒளிபெற்று விளங்க, துவட்டா தன் செல்வன் தனனை தேவர் பிரான் வீசி குலிசத்து உயிர் உண்ட விழுமம கேட்டு - துவட்டா என்பவன் தன்புத்திரனாகிய விச்சுவவுருவனைத் தேவேநதிரன் ஓச்சி வச்சிராயுதத்தால் அவனுயிரைப்பருகிய அன்பச்செய்தியைக்கேட்டு,வெகுண்டு உயிாத்து கூசி-கோபித்துப் பெருமூச்செறிந்து மனங்கூசி, பழி கோள கருதி ஒரு கொடிய வேள்வி கடிது அமைத்தான் - பழிக்குப்பழிவாங்கவெண்ணி ஒருகொடியயாகததை விரைநது செய்தான். (கரு)

அந்தக்குண்டத்தெரிசிகைபோலழலுங்குஞ்சியண்டமுக
டுந்தக்கொடியதூமம்போலுயிர்த்துசசெஙகண்சினச்செந்தீச்
சிந்தப்பிறைவாளெயிறதுக்கித்திசைவான்செவிடுபடநகைத்து
வந்தக்கொடியவிடம்போலவெழுந்தானொருவாண்மறவீரன்.

(இ-ள்.) அந்த குண்டத்து ஏரிசிகைபோல் அழலும் குஞ்சி அண்டமுகடு உந்த-அநதயாககுண்டததில் தீக்கொழுநதுபோலச்செந்நிறம்பெற்றுவிளங்குஞ் சிகையானது அண்டத்தினுச்சியிறருக்க, கொடிய தூமம் போல் உயிர்த்து-கொடிய புகைபோலப் பெருமூச்செறிநது, செம கண் சினம் செம் தீ சிந்த-சிவந்த கண்கள் கோபாக்கினியைவீச, பிறை வாள் எயிறு அதுக்கி - மூன்றாம்பிறைபோலவளைந்த வெள்ளியபற்களை அதுக்கி, திசை வான் செவிடு பட நகைத்து - எட்டுத் திக்கும் விண்ணுலகமும் செவிடுபடும்படி அட்டகாசஞ்செய்து,வந்த அ கொடிய விடம்போல எழுந்தான் வாள் ஒரு மற வீரன்-கடலிற்றோன்றிய அந்தக்கொடியவிடம்போல வாளேந்திய ஒருமறவீரன் தோன்றினான்.

செம்மை-இரண்டனுள் முன்னது கோபக் குறிப்பின்மேலும் பின்னது செந்நிறத்தின்மேலும் நின்றன. வந்த-அகரவீறுதொகுததல். அகரச்சுட்டு மிகுதிமேல் நின்றது.

கலிவிருத்தம்.

ஈங்குவன்விருத்திரனென்பவாரழற்
றூஙகுவன்கணைவிடுனாநீண்டிநீண்

டோங்குவனோங்குதற்கொப்பவைகலும்
வீங்குவனறனிலார்வினையினென்பவே.

(இ-ள்.) ஈங்கு உவன் விருத்திரன் என்ப-இந்தயாகத்திற் றோன்றிய இவனை விருத்திராசுரன் என்று சொல்லுவார்கள், ஆர் அழல் தூங்கு வன் கணை விடு தூரம் வைகலும் நீண்டு நீண்டு ஓங்குவன் - நிறைந்த கோபாக்கினிநீங்காத வலியஅம்பினை விடுந் தூரமளவும் எந்நாளும் நீண்டு நீண்டு உயர்வான், ஓங்குதற்கு ஒப்ப அறன் இலார் வினையின் வீங்குவன் என்ப-நீளுதற்குச் சமமாகத் தருமச்செயல்க ளில்லாதவர்கள் தேடும் பாவம்போலப் பருப்பான் என்றுசொல்லுவர்ர்கள்.

உகரச்சுட்டு - அகர இகரச்சுட்டுகளுக்கு இடையதாதலால் இவன் என்றும் காஞ்சிப்புராணம் - சிறப்புப்பாயிரத்தில் - "ஒருமணத்தைச்சிதைவுசெய்துவல்வழக்கிட்டாட்கொண்டவுவனைக்கொண்டே" எனவருமிடத்து உகரச்சுட்டு அகரச்சுட்டின்மேனிற்பதுணர்க. ஆர் அரிய எனப் பொருள்கொண்டு நீண்டுதற்கரிய எனினும் அமையும். (௧எ)

வீங்குடல்விருத்திரன்றன்னை விண்ணவ
ரேங்குறவருதுவட்டாவெனும்பெயர்த்
தீங்குறுமனத்தினோன்றேவாகோனுயிர்
வாங்குதிபொருதெனவரவிட்டானரோ.

(இ-ள்.) வீங்கு உடல் விருத்திரன் தன்னை - பருத்த வுடலையுடைய விருத்திராசுரனை, விண்ணவர் ஏங்குற வரு துவட்டா என்னும் பெயர் தீங்கு உறு மனத்தினோன்-தேவர்கள் வருந்த வந்த துவட்டா வென்னும் பெயரையுடைய தீமைமிக்க மனத்தினையுடையவன்,பொருது தேவர் கோன் உயிர் வாங்குதி என வரவிட்டான்-போர்செய்து தேவேந்திரனுடைய உயிரைவாங்குவாய் என்று ஏவினான். (௧அ)

மதித்துணியெயிற்றினோன்வடவைபோற்சினை இக்
கொதித்தெதிர்குறுகினான்கொண்டலூர்தியு
மெதிர்த்தனன்களிற்றின்மேலிமயத்துசசிமே
லுதித்ததோர்கருங்கதிரொக்குமென்னவே.

(இ-ள்.) துணி மதி எயிற்றினோன் வடவை போல் சினவி கொதித்து எதிர் குறுகினான் - அர்த்தசந்திரனையொதத வக்கிரதந்தங்களை யுடைய விருத்திராசுரன் வடவாமுகாக்கினியைப்போலக் கோபித்துப்பொங்கிப் போர்க்கு எதிரில்வந்தனன், கொண்டல் ஊர்தியும்-மேகவாகனனாகிய தேவேந்திரனும், இமயத்து உச்சிமேல் உதித்தது ஓர் கரும் கதிர் ஒக்கும் என்ன - இமயமலையினுச்சியின்மேல் தோன்றிய ஒரு கருஞ்சூரியனை யொக்குமென்று சொல்ல, களிறறின் மேல் எதிர்த்தனன்-வெள்ளையானையின்மேலேறிப் போரிலெதிர்த்தான்.

வடவாமுகம் - பெண்குதிரைமுகம்போலிருக்கும் ஊழித்தீ, அதுபின்மொழி கெட்ட முன்மொழியீற்றில் பொருள்நின்றது. வீமசேனன் வீமன் என வருதல்காண்க. இதுபோல இந்திரகோபம் கோபம் எனவும் வரும், இது முன்மொழிகெட்ட பின்மொழியீற்றில் பொருள் சிறந்து நிற்கும். இதனை வடநூலார் நாமைகதேச நாமக்கிரகணமென்பர். இமோற்பருவதத்தி னுச்சியில் ஓர் கருஞ்சூரியன் உதித்தாற்போலத் தேவேந்திரன் வெள்ளிய யானையின்மேல் வந்தானென்பது இல் பொருள் உவமையணி. சினவி என்னும் வினையெச்சம் செய்யுளிசை நிறைத்தற்பொருட்டு அளபெடையில் விகாரப்பட்டு நின்றது. (௧௯)

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.

அறத்தொடுபாவநேர்ந்தென்னவார்த்திரு
திறத்தருமுண்டமர்செய்யக்கற்சிறை
குறைத்தவன்றருவன்மேற்குலிசவேலெடுத்
துறைத்திடவீசினனுடன்றுகள்வனும்.

(இ-ள்.) அறம் பாவம் நேர்ந்தால் என்ன ஆர்த்து இருதிறத்தரும் முண்டு அமர் செய்ய-தருமமும் பாவமும் தம்முட்போர்செய்ய எதிர்ந்தாற்போல ஆரவார ஞ்செய்து அவ்விரண்டுதிறத்தினரும் கோபமுண்டுபோர்செய்ய, கல் சிறை குறைத் தவன் தருவன் மேல் குலிசவேல் எடுத்து உறைத்திட வீசினன்-(அவருள்) மலையினது சிறகுகளை அறுத்தவனாகிய தேவேந்திரன் விருத்திராசுரன்மேல் வச்சிராயுதத்தை யெடுத்து உறைக்கும்படி வீசினன், கள்வனும் உடன்று - அவ்வசுரனுங் கோபித்து.

அத்து - வேண்டாவழிச்சாரியை. ஒடு - எண்ணிடைச்சொல். (உ0)

இடித்தனன்கையிலோரிருப்புலக்கையைப்
பிடித்தனன்வரையெனப்பெயர்ந்துதீயெனத்
துடித்தனன்சசிமுலைசுவடுதோய்புயத்
தடித்தனனிந்திரனவசமாயினன்.

(இ-ள்.) இடித்தனன் கையில் ஓர் இருப்பு உலக்கையை பிடித்தனன் - ஆரவாரித்துக்கையில் ஒருஇருப்புலக்கையை ஏந்தி, வரை என பெயர்ந்து தீ என துடித்தனன்-மலையைப்போல அடிபெயர்ந்து தீயைப்போலக்கோபித்து, சசி முலை சுவடு தோய் புயத்து அடித்தனன் - இந்திராணியின் முலைச்சுவடுபொருந்திய புயத்தின் மேல் அடித்தான், இந்திரன் அவசம் ஆயினன - தேவேந்திரன் மூர்ச்சித்தான்.

இடித்தனன், பிடித்தனன், துடித்தனன், என்னும் வினைமுற்றுகள் எச்சமாய் அடித்தனன் என்னும் வினைமுற்றின் முதனிலையை முறையே கொண்டன.

அண்டரேறனையவனவசமாறிப்பின்
கண்டகன்கைதவநினைந்திக்கள்வனேர்
மண்டமராற்றுவான்வலியிலோமெனப்
புண்டரீகத்தவனுலகிற்போயினன்.

(இ-ள்.) அண்டர் ஏறு அனையவன் அவசம் மாறி-தேவர்களுள் ஆண்சிங்கம் போன்றவனாகிய தேவேந்திரன் மூர்ச்சையினின்றுநீங்கி, பின் கண்டகன் கைதவம் நினைந்து - பின்பு விருத்திராசுரனுடைய வஞ்சகத்தைத் தெரிந்து, இக் கள்வன் நேர் மண்டு அமர் ஆற்று வான் வலி இல் லோம என - இக்கள்வனுக்கு நேர்நின்று நெருங்கிய போர் செய்ய வன்மையில்லோ மென்று கருதி, புண்டரீகத்தவன் உலகில் போயினன் - தாமரைமலரில் வசிக்கும் பிரமனுலகிற்சென்றான்.

தன்பரிசனமாகிய தேவரையும் உளப்படுத்தி வலியிலோம் என்றமையால் வழுவாகிலை. (உஉ)

தாழ்ந்துதான்படுதுயர்விளம்பத்தாமரை
வாழ்ந்தவன்வலாரியோடணைந்துமாமகள்
வீழ்ந்தமார்பினனடிவீழ்ந்துசெப்பமால்
சூழ்ந்துவானுடனைநோக்கிச்சொல்லுவான்.

(இ-ள்.) தாழ்ந்து தான் படுதுயர் விளம்ப - வணங்கித் தான் விருத்திராசுரனால் படுந்துன்பங்களை எடுத்துச்சொல்ல, தாமரை வாழ்ந்தவன் வலாரியோடு அ

ளைந்து - தாமரைமலரில் வசிக்கும் பிரமன் அத்தேவேந்திரனோடு வைகுந்தத்திற் சென்று, மாமகள் வீழ்ந்த மார்பினன் அடி வீழ்ந்து செப்ப - திருமகள்விரும்பி வசிக்கும் மார்பினையுடைய திருமாலினுடைய திருவடியில்வீழ்ந்து கூற, மால் சூழ்ந்து வானுடனை நோக்கி சொலலுவான - அத்திருமால் ஆலோசித்துத் தேவேந்திரனை நோக்கிச் சொல்லுகிறான். (௨௩)

ஆற்றவும்பழையதுன்னங்கைவச்சிர
மாற்றவருயிருணவலியின்றுதலால்
வேற்றொருபுதியதுவேண்டுமாலினிச
சாற்றுதுமதுபெறுந்தகைமைகேட்டியால்.

(இ-ள்.) உன் அங்கை வச்சிரம் ஆற்றவும் பழையது - தேவேந்திரனே உன் கையிலுள்ள வச்சிராயுதமானது மிகவும பழையது, (அதனால்) மாற்றவர் உயிர் உண வலி இன்று - பகைவர் உயிருண்ண வலிமையில்லா திருக்கின்றது, ஆதலால் வேறு ஒரு புதி யது வேண்டும்-ஆகையால் வேறேயொரு புதிய ஆயுதமவேண்டும், அது பெறும் தகைமை இனி சாறறுதும கேட்டி- அவவாயுதம் பெறுந்தன்மையை இனிச்சொல்லுகின்றோம் கேட்பாய. (௨௪)

தொடையகன்மார்பநாந்தூயபாற்கடல்
கடையுநாளசுரருஞ்சுரருங்கையிலவெம்
படையொடுமடையன்மின்பழுதென்றப்படை
யடையவுந்ததீசிபாலடைவித்தாமரோ.

(இ-ள்.) தொடை அகல் மார்ப - கற்பகமலர்மாலையையணிந்த பரந்தமார் பையுடையதேவேநதிரனே, நாம் தூய பால் கடல் கடையும நாள்- நாம வெள்ளிய நிறத்தையுடைய திருப்பாறகடலைக்கடையுஙகாலத்தில், அசுரரும சுரரும கையில் வெம் படையொடும் அடையன மின் பழுது எனறு - அசுராகளுந் தேவர்களுங் கை களிலேநதிய வெவ்வியஆயுதங்களோடும வருதல் ஒழியுங்கள் (அவவாயுதங்களோடு வருகை) குற்றமாய் முடியுமென்று, அப்படை அடையவும் ததீசிபால் அடைவிததாம் - அந்த ஆயுதஙகள்யாவையும் ததீசிமுனிவரிடததில் சோப்பிததோம்.

அசுரர்-அமுதபானம் ஒழிநதவர். சுரர்-அமுதபானம் உடையவர். (௨௫)

சேட்படுநாணனிசெல்லத்தேவரா
வாட்படையவுணராவந்துகேட்டிலர்
ஞாட்படைபடையெலாஞானநோககினால்
வேட்படைவென்றவன்விழுங்கினனரோ.

(இ-ள்.) சேண் படு நாள் நனி செல்ல - நீடித்தநாள் மிகவுங்கழிய, தேவரா வாள் படை அவுணரா வந்து கேட்டிலர் - தேவரா வாளாயுதத்தையேநதிய அசுரரா எவரும்வந்து கேட்ட லொழிந்தனர், வேள்படை வென்றவன் ஞான நோக்கினால் ஞாட்பு அடை படை எலாம் விழுங்கினன் - மன்மதபாணத்தைவென்ற அத்த தீசிமுனிவர் ஞானப்பார்வையால் போாசெய்தற்குத்தக்க அவ்வாயுதங்களையெல் லாம் விழுங்கினார்.

விகற்பப்பொருளில்வரும் ஆவது என்னும் இடைச்சொல் ஈறு தொக்குத் தேவரா, அவுணரா என நின்றது. (௨௬)

விழுங்கியபடையெலாம்வேறறத்திரண்
டொழுங்கியதான்முதுகந்தண்டொன்றியே
யெழுங்கதிர்க்குலிசமாமதனையெய்துமுன்
வழங்குவன்கருணையோர்வடிவமாயினான்.

(இ-ள்.) விழுங்கிய படை எல்லாம் வேறு அற திரண்டு முதுகந்தண்டு ஒன்றிஒழுங்கியது-அம்முனிவர்விழுங்கிய ஆயுதங்களெல்லாம் ஒன்றுபடத்திரண்டு வீணாதண்டம்போன்ற அவருடைய முதுகந்தண்டெலும்போடுபொருந்தி ஒழுங்குபட்டுள்ளது, கதிர் எழும் குலிசமாம்-அது ஒளிவீசும் வச்சிராயுதமாம், எய்து முன் கருணை ஓர் வடிவம் ஆயினான் அதனை வழங்குவன்-நீ அவனை அடைந்து கேட்பதற்குமுன் கிருபையே ஒருவடிவங்கொண்டாற்போன்ற அம்முனிவர் அதனைக்கொடுப்பார்.(உஎ)

ஷை வேறு.

என்றுமாதவனியம்பவும்பர்கோ
னொன்றும்வானவர்தமமொடொல்லெனச
சென்றுமாயையின்செயலைநோன்பினால
வென்றமாதவனிருக்கைமேவினான்.

(இ-ள்.) என்று மாதவன் இயம்ப - என்று திருமால்கூற, உம்பர் கோன் ஒன்றும் வானவர் தம்மொடு ஒல் என சென்று - தேவேந்திரன் தன்னினின்று நீங்காத தேவர்களோடு விரைந்துசென்று, மாயையின் செயலை நோன்பினால் வென்ற மாதவன் இருக்கை மேவினான் - மாயையின் விகாரங்களை விரதங்களால்வெற்றிகொண்ட பெரியதவத்தையுடைய ததீசிமுனிவர் ஆச்சிரமத்தைச்சேர்ந்தான்.

மாதவன் என்னும் இரண்டனுள்-முன்னதை மா, தவன் எனச் சொல்வகை செய்து இலக்குமிநாயகன் எனவும், பின்னதை பெரியதவத்தினையுடையவன் எனவுங்கொள்க. (உஅ)

அகமலர்ந்தருந்தவனமரர்க்கன்புகூர
முகமலர்ந்தின்னுரைமுகமன்கூறிநீர்
மிகமெலிந்தெய்தினீர்விளைந்ததியாதது
தகமொழிநதிடலெனவலாரிசாற்றுவான்.

(இ-ள்.) அரும் தவன் அகமலர்ந்து - அரியதவத்தையுடைய ததீசிமுனிவர் மனங்களிகூர்ந்து, அமரர்க்கு அன்புகூர் முகமலர்ந்து இன் உரை முகமன் கூறி-தேவர்களைநோக்கி அன்புமிக்க முகமலர்ச்சிகாட்டி உபசாரங்களாக இனியவசனங்களைச்சொல்லி, நீர் மிகமெலிந்து எய்தினீர் விளைநதது யாது - நீங்கள் மிகவும் மெலிந்து வந்தீர்கள் நடந்தகாரியமென்ன, அது தகமொழிந்திடல் என்ன - அதனைப் பொருந்தச் சொல்லக்கடவீர் என்று கூற, வலாரி சாற்றுவான் - தேவேந்திரன்சொல்லுவான்.

அல்லீறு வியங்கோள் பொருட்டாதலால் சொல்லக்கடவீர் எனப்பொருள் கொண்டாம், "மக்கட்பதடி" என்பதனால் அறிக. விருந்தினரைச் சேய்மைக்கண்கண்ட வழிமுகமலர்ச்சிகாட்டலும், சமீபித்தவழி இன்னுரை கூறுதலும் விருந்தோம்புவார்க்கு இயல்பாதலால் முகமலர்ந்தின்னுரை முகமன் கூறி என்றார். (உகூ)

அடிகணீர்மருததொன்றதனைவேண்டியிம்
முடிகொள்வானவரொடுமுந்தினேனது

செடிகொள்காரிருளுடலவுணர்த்தேய்த்தெமர்
குடியெலாம்புரப்பதோர்கொள்கைத்தாயது.

(இ-ள்.) அடிகள் நீர் மறுதரு ஒன்று - சுவாமிகளே நீர் தடை செய்யாமல் கொடுக்கும்பொருள் ஒன்று (உங்களிடத்துள்ளது) அதனைவேண்டி இம்முடிகொள் வானவரொடு மூந்தினேன் - அப்பொருளைவிரும்பி இந்தக்கிரீடத்தைத்தரித்த தேவர்களோடு இங்குவந்தேன், அது-அப்பொருள், செடி கொள் கார் இருள உடல் அவுணர் தேய்த்து - முடைநாற்றம்வீசும் கரிய இருள்போன்ற சரீரத்தையுடைய அசுரர்களையெல்லாம் வேரோடழித்து, எமர் குடி எலாம புரப்பது ஓர் கொள்கைத்து ஆயது-எம்முடையவர் குடிகளை எல்லாம் பாதுகாக்கும் ஓர்கொள்கையை யுள்ளது.

யாதெனினினையதுன்யாக்கையுள்ளதென்
றோதலும்யாவையுமுணர்ந்தமாதவ
னாதவற்கண்டதாமரையினானனப்
போதலர்ந்தின்னனபுகல்வதாயினான்.

(இ-ள்.) இனையது யாது எனின்-இத்தன்மையுள்ள பொருள் யாதென்றால், உன் யாக்கை உள்ளது என்று ஓதலும - உன்சரீரத்தில் உள்ளதென்றுகூறவும், யாவையும் உணர்ந்த மாதவன்-(திரிகாலங்களில் நிகழும்) எல்லாவற்றையும் ஞானநோக்கினால் அறிந்த ததீசிமுனிவர், ஆதவன் கண்ட தாமரையின் - சூரியனைக்கண்ட தாமரையைப்போல, ஆனனம் போது அலர்ந்து இன்னன புகல்வது ஆயினான்-முகமலர்ச்சிகொண்டு இததன்மையனவற்றைச் சொல்லத்தொடங்கினான்.

திரிகாலங்களினு நிகழ்வனவற்றை அப்போதப்போதே விரைந்துணருந்தன்மையராதலின உணருமெனறது உணர்ந்த என்றார். இது விரைவுபற்றிவந்த காலவழுவமைதி. (௩௧)

நாய்நமதெனநரிநமதெனப்பிதா
தாய்நமதெனநமன்றனதெனப்பிணி
பேய்நமதெனமனமதிக்கும்பெற்றிபோ
லாயநமதெனப்படும்யாக்கையாரதே.

(இ-ள்.) நாய் நமது என - நாய் நம்முடையதெனவும், நரி நமது என - நரி நம்முடையதெனவும, பிதா தாய நமது என - தகப்பனும் தாயும் நம்முடைய தெனவும், நமன் தனது என-இயமன் தன்னுடையதெனவும், பிணி பேய் நமது என - பிணியும் பேயும நம்முடைய தெனவும், மன மதிக்கும பெற்றி போல் ஆய் - மனத்திற் கருதுந்தன்மைபோலாகி, நமது எனப்படும் யாக்கை யாரது-நாமும் நம்முடையதென்று கருதப்படுஞ்சரீரம் யாவர்க்கு உரியது. (உரியது அன்றென்றபடி.)

விடம்பயிலெயிற்றரவுரியும்வீறுழை
குடம்பையுநானெனுங்கொள்கைத்தேகொலா
நடம்பயில்கூத்தரினடிக்குமைவர்வா
ழுடம்பையும்யானெனவுரைக்கற்பாலதோ.

(இ-ள்.) நடம் பயில் கூத்தரின் - ஆடுகின்ற கூத்தர்களைப்போல, நடிக்கும் ஐவர் வாழ் உடம்பையும் யான் என உரைக்கற்பாலது - விடயங்களிற்சென்று நடிக்கும் பஞ்சேந்திரியங்கள் வாழாநின்ற சரீரத்தையும் யானென்று உயிர்சொல்லுந் தன்மையது, விடம் பயில் எயிற்று அரவு உரியும் - விஷம்பொருந்திய பற்களையு

—ய சர்ப்பந் தனதுதோலையும், வீறுழை குடம்பையும் - பக்ஷி,தான் றுழையுடட்டிலையும், நான் என்னும் கொள்கைத்தே ஆம் - நானென்று தனித்தனிச் சொல்லும் கொள்கையையுடையதேயாம்.

சர்ப்பம உரியாகாததுபோலவும், பறவை தானுழையுங் கூடாகாததுபோலவும், உயிர் தானிருக்கும் உடம்பு தானாகாதென்பது கருத்து. “பாணன்பறையன் கடம்பன் துடியன் என்-றந்நான்கல்லது குடியுமில்லை” பாணன்குடி, பறையன்குடி, கடம்பன்குடி, துடியன்குடி என்று அந்நான்கன்றியெனவழாநிலையாகப்பொருள்கொள்ளுதல்போல அரவு உரி நான் என்னுங் கொள்கைத்தெனவும், வீகுடம்பை நானென்னுங் கொள்கைத்தெனவும் வழாநிலையாகப் பொருள்கொள்க. ஐவர் என்னுந் தொகைச்சொல் உடம்புஎன்னுங் குறிப்பால் பஞ்சேந்திரியத்தின்மேல்நின்றது.

நடுத்தயாவிலார்தமைநலியத்துன்பநோ
யடுத்தயாவருந்திருவடையயாக்கையைக்
கொடுத்தயாவறம்புகழ்கொள்வனேயெனி
னெடுத்தயாக்கையின்பயனிதனின்யாவதே.

(இ-ள்.) ஐயா - தேவேந்திரனே, நடு தயா இலார் தம்மை நலிய - நடுநிலையுங் கருணையுஞ் சிறிதுமில்லாதஅசுரர்கள் தம்மைவருத்துதலால், துன்பம் நோய் அடுத்த யாவரும் திருவடைய - துன்பநோயைப் பொருந்திய தேவர்களெல்லோருஞ் செல்வமடைய, யாக்கை கொடுத்து அறம் புகழ் கொள் வனே எனில்-என்சரீரத்தைக் கொடுத்துத் தருமத்தையுங் கீர்த்தியையுங் கொள்வனேயானால், எடுத்த யாக்கையின் பயன் இதனின் யாவது - நானெடுத்த சரீரத்தால் ஆகியபயன் இதைப்பார்க்கிலும் வேறு யாதுளது.

ஈகையால்வரும் பயன்கள் அறமும் புகழுமாதலால் அறம்புகழென்றார். புகழுடம்பு பெறுவேனாயின் பூதவுடம்பால் பயனில்லை என்பார். கொள்வனேல் எடுத்தயாக்கையின்பயன இதனினயாவதே எனக் கூறினார். யாவது- வகரமெய் தோன்றல் விகாரம். அரும்புகழ் எனப் பாடங்கூறி, பெறுதற்கரிய புகழ் எனப் பொருள் கூறுதலும் ஒன்று. (௩௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றனன்கரணமொன்றியெழுகருத்தறிவையீர்ப்ப
நின்றனன்பிரமநாடிநெறிகொடுகபாலங்கீண்டு
சென்றனன்விமானமேறிசசேர்ந்தனனுலகைநோன்பால்
வென்றவன்றுறக்கம்புக்குவீற்றினிதிருந்தானம்மா.

(இ-ள்.) என்றனன் - என்றுகூறி, உலகை அன்பால் வென்றவன் - பாசத்தைச் சிவநேயத்தால் வென்ற ததீசிமுனிவர், கரணம் ஒன்றி எழுகருத்து அறிவையீர்ப்ப நின்றனன்-அந்தக்கரணங்கள் ஒன்றுபட்டு அந்நிலையில்நானென்று எழும் போதவிருத்தி மெய்யறிவைப்பற்றிப் பின்செல்லச் சிவயோகங்கூடி, பிரமநாடி நெறிகொடு கபாலம் கீண்டு சென்றனன்-பிரமநாடியின் வழிக்கொண்டு கபாலத்தைக் கிழித்துப்போய், விமானம் ஏறி சுவர்க்கம் புக்கு சேர்ந்தனன்-விமானமேறிச்சிவலோகஞ்சென்று சேர்ந்து, இனிது வீற்றிருந்தான் - இடையூறின்றி வீற்றிருந்தான்.

தேகேந்திரிய பிராணாந்தக்கரணங்கள் ஒருப்பட்ட அவதரத்திலும் வாசனைபற்றிச் சுட்டுணர்வினதா யெழும் உள்ளமானது அருட்பணிமிகுதியால் திருவடிஞானத்தைப்பற்[illegible]ற்பதுண்மையால் - கரணமொன்றியெழுகருத்தறிவையீர்ப்ப நின்றனன் எனவும், கலாபேதரூபங்களிற் பயின்று ஆதாரயோகத்தைக் கடந்து நிராதாரயோகத்தைக் கூடிக் கழன்றும் மீதானத்தெய்தலால் - பிரமநாடி நெறி

கொடு சுயாலம் கின்று எனவும், ஞானயோகத்தால் சிவயோகத்துய்த்தற்கண்வரு தலாத இன்பத்தழுழ்ந்தழ்ந்து இருந்தபடியேயிருத்தல் கூடுதலால் துறக்கம் புக்குவீற்றினி திருந்தான் எனவுங் கூறினர். பிரமநாடி என்றது-பிரமரந்திரத்தின் சம்பந்தமாயுள்ள சுழிமுனைநாடி. சூதசங்கிதை - ஞானயோககாண்டம் - நாடிசக்கரநிலையுரைத்த அத்தியாயத்தில் " கொனபடுநலஞ்சேர் சுழிமுனைநாடி கோதறுமந்த நாடியையே, தென்பொலிபிரமநாடி யென்றுரைப்பர்" எனவருஞ் செய்யுளாலுணர்க. (௬௫)

அம்முனிவள்ளலீந்தவடுபடைமுதுகந்தண்டைத்
தெம்முனையடுபோர்சாய்க்குந்திறல்கெழுகுலிசஞ்செய்து
கம்மியப்புலவனுக்கங்கனைந்துகைகொடுப்பவாங்கி
மைம்முகிலூர்தியேந்திமினவிடுமழைபோனின்றான்.

(இ-ள்.) வள்ளல் அம்முனி ஈந்த அடுபடை முதுகந் தண்டை-இல்லையென்னாது கொடுக்குந் தன்மையையுடைய அந்தத் ததீசிமுனிவர்கொடுத்த கொல்லுதற்குரிய ஆயுதங்கள் திரண்ட முதுகந்தண்டெலும்பினை, தெவ் முனை அடுபோர் சாய்க்கும் திறல்கெழு குலிசம் செய்து-பகைவர்முனையும் கொல்லுதற்குரிய போரைப் பின்னிடச்செய்யும் வெற்றிமிக்க வச்சிராயுதஞ்செய்து, கம்மியப் புலவன் ஆக்கம் கனைந்து கை கொடுப்பவாங்கி-தேவதச்சன் வெற்றிதரக்கடவதென்று சொல்லிக் கையிற்கொடுக்க வாங்கி, மை முகில் ஊர்தி ஏந்தி மின் விடு மழை போல் நின்றான்-கரிய மேகவாகனனாகிய தேவேந்திரன் (அவ்வச்சிராயுதத்தை) ஏந்தி மினவீசும் மேகம்போல் நின்றான்.

கரியநிறமுடையவனாதலால் தேவேந்திரன்மேகமாகவும், வச்சிராயுதமமின்னலாகவுங்கொண்டு கூட்டி ஒப்புமைக்கூட்ட வுவமையணியாகக் கொள்க. தெவ்-என்னும் நிலைமொழியீறு வகரமெய் வருமொழிமுதல் மகரமாகத்திரிதல். தொல்காப்பியம் எழுத்ததிகாரம் புள்ளிமயங்கியலில " ஏனைவகரந்தொழிற்பெயரியற்றே " என்னுஞ் சூத்திரவுரையிற் காண்க. (௬௬)

மறுத்தவாவஞ்சப்போரால்வஞ்சித்துவென்றுபோன
கறுத்தவாளவுணற்கொல்வான்கடும்பரிநெடுந்தேர்நீழல்
வெறுத்தமால்யானைமள்ளர்வேலைபுக்கெழுந்துகுன்ற
மறுத்தவானவர்கோனந்தவவுணர்கோமகனைச்சூழ்ந்தான்.

(இ-ள்.) மறு தவா வஞ்சம் போரால் வஞ்சித்து வென்று போன கறுத்த வாள் அவுணனை கொல்வான் - குற்றத்தினின்று நீங்காத வஞ்சத்தையுடைய போரினால் வஞ்சனைசெய்து வென்றுபோன கோபத்தையுடைய வாளையேந்திய விருத்திராசுரனைக்கொல்ல, குன்றம் அறுத்த வானவர் கோன் - மலைகளின் சிறகை யறுத்த தேவர்களுக்கு அரசனாகிய தேவேந்திரன, கடும் பரி நெடும் தேர் நீழல் வெறுத்த மால் யானை மள்ளர் வேலை புக்கு எழுந்து - கடுநடையையுடைய குதிரைகள் கட்டிய தேர்களும் தமது தேகநிழலைக் கோபிக்கும மதமயக்கங்கொண்ட யானைகளும் காலாள்களுமாகிய நால்வகையாகிய சேனைசமுத்திரம் தன்னைப் புடைசூழ்ந்துவரச் சென்று, அந்த அவுணர் கோ மகனை சூழ்ந்தான் - அந்த அசுரர்கள்தலைவனை முற்றுகைசெய்தான். (௬௭)

வானவர்சேனைமூண்டுவளைத்தலும்வடவைசெந்தீ
யானதுவரையின்ஞெங்கியழன்றுருத்தெழுந்தாலென்னத்
தானவர்கோனுமானந்தலைக்கொளவெழுந்துபொங்கிச
சேனையுந்தானுமூண்டுசீறிநின்றடுபோர்செய்வான்.

(இ-ள்.) வானவர் சேனை மூண்டு வளைத்தலும் - தேவ சேனை கோபமூண்டு முற்றுகைசெய்ய, வடவை செந்தீ ஆனது வரையின் ஓங்கி அழன்று உருத்து எழுந்தால் என்ன - வடவாமுகாக்கினிமலையைப்போல வோங்கிக் கொதித்துக்கோபித்து எழுந்தாற்போல, தானவர் கோனும் மானம் தலை கொள எழுந்து பொங்கி - அசுரர்கள் தலைவனாகிய அவ்விருத்திராசுரனும் மானமீதூரப் போர்க்கெழுந்து கொதித்து, தானும் சேனையு மூண்டு சீறி நின்று அடுபோர் செய் வான் - தானும்சேனையுங் கோபமூண்டு சீறிப் போர்செய்யத் தொடங்கினான்.

சீறிநின்று-நின்று கட்டுரைச்சுவைப்பொருள்பட நின்ற இடைச்சொல். தானும் - சேனையும் எனத்திணைவிரவிச் சிறப்பினால் செய்வான் என உயர்திணையொருமை முடிபேறறுதிறலால் திணைவழுவமைதி. அடுபோர் கொலைத்தொழிற்குரிய போர். ஒருசொல். (கஅ)

அடுத்தனரிடியேறென்னவார்த்தனராக்கங்கூறி
யெடுத்தனாகையிற்சாபமெறிந்தனர்சிறுநாணோசை
தொடுத்தனர்மீளிவாளிதூர்த்தனர்குந்தநேமி
விடுத்தனர்வானோர்சேனைவீரர்மேலவுணவீரர்.

(இ-ள்.) அவுணர்வீரர் வானோர் சேனை வீரர் மேல் அடுத்தனர் - அசுரவீரர்கள் தேவசேனைவீரர்மேல் அடுத்து, இடி ஏறு என்ன ஆர்த்தனர் ஆக்கம் கூறி சாபம் கையில் எடுத்தனர் - இடியேறுறைப்போல ஆரவாரஞ்செய்து வெற்றியுண்டாக வெனக்கூறி வில்லைக் கையிலேந்தி, சிறு நாண் ஓசை எறிந்தனர் - சிறியகுணத்தொனியுண்டாக நாணெறிந்து, மீளி வாளி தொடுத்தனர் தூர்த்தனர் - பலம்பொருந்திய பாணங்களைப்பிரயோகஞ்செய்துதூர்த்தார்கள், குந்தம் நேமி விடுத்தனர்-(அவருள்) சிலர் கைவேலையும சக்கராயுதத்தையும எறிந்தார்கள்.

அடுத்தனர், ஆர்த்தனர், எடுத்தனர், எறிந்தனர், தொடுத்தனர் என்னும்வினைமுற்றுகள எச்சமாய ஒன்றனை யொன்றுகொண்டு தூர்த்தனர் என்னும் வினைமுற்றின முதனிலையைக்கொண்டன. அவுணவீரர் "சிலவிகாரமாமுயர்திணை" என்றவிதியால் ஈறுகெட்டுநின்றது. (கக)

கிட்டினாகடகக்கையாற்கிளர்வரையனையதிண்டோள்
கொட்டினாசாரிமாறிக்குதித்தனர்பலகைநீட்டி
முட்டினரண்டம்விள்ளமுழங்கினர்வடிவாளோச்சி
வெட்டினரவுணசசேனைவீரரைவானவீரர்.

(இ-ள்.) அவுணச்சேனை வீரரை வானவீரர் கிட்டினர்-அசுரசேனைவீரர்களைத் தேவசேனைவீரர்கள்நெருங்கி, கடகம் கையால் கிளர்வரை அனைய திண் தோள் கொட்டினா-கடகமணிந்தகைகளால்விளங்கு மலைகளையொத்த திண்ணியபுயங்களைத்தட்டினார்கள், சாரிமாறி குதித்தனர்-வலசாரி யிடசாரியாகமாறி (அவருள்) சிலர் குதித்தார்கள், பலகை நீட்டி முட்டினர்-அவர்கேடகங்களோடு தமது கேடகங்கள் தாக்க நீட்டிச் சிலர் மோதினார்கள், அண்டம் விள்ள முழங்கினர் - அண்டமுகடு பிளவுபடச் சிலர் ஆரவாரஞ்செய்தார்கள், வடிவாள் ஓச்சி வெட்டினர் - வடித்த வாளையோச்சிச் சிலர் வெட்டினார்கள். (உ0)

வீழ்ந்தனர்தோளுந்தாளும்விண்டனர்சோரிவெள்ளத்
தாழ்ந்தனர்போருந்தாருமகன்றனரகன்றமார்பம்

போழ்ந்தனர்சிரங்களெங்கும்புரண்டனர்கூற்றூர்புக்கு
வாழ்ந்தனரடுபோராற்றிவஞ்சகன்சேனைமள்ளர்.

(இ-ள்.) வஞ்சகன் சேனைமள்ளர் - விருத்திராசுரனுடைய சேனாவீரர்கள், அடுபோர் ஆற்றி தோளும் தாளும் வீழ்ந்தனர் - போர்செய்து புயங்களுங் கால்களும் அறுபட்டார்கள், சோரி விண்டனர் - சிலர் உதிரஞ்சொரிந்தார்கள், வெள்ளத்து ஆழ்ந்தனர் - அவ்வுதிரவெள்ளத்தில் சிலர் அழுந்தினார்கள், போரும் தாரும் அகன்றனர் - போரினின்றும் வெற்றிமாலையினின்றுஞ் சிலர் நீங்கினார்கள், அகன்ற மார்பம் போழ்ந்தனர் - சிலர் பரந்தமார்பு பிளக்கப்பட்டார்கள், எங்கும் சிரங்கள் புரண்டனர் - எவ்விடத்துந் தலைகள் புரளப்பட்டார்கள், கூற்று ஊர் புக்கு வாழ்ந்தனர் - பலர் யமபுரத்தில் குடியேறி வாழ்ந்தார்கள்.

தோளும் தாளும் வீழ்ந்தனர், சோரிவிண்டனர் உயர்திணையோடு அஃறிணைச்சினைப்பெயர்களைக்கூட்டி உயர்திணைமுடிபுகொடுத்தல் திணைவழுவமைதி. (சக)

தாளொடுகழலுமற்றார்தலையொடுமுடியுமற்றார்
தோளொடுவீரமற்றார்தும்பையோடமருமற்றார்
வாளொடுகரமுமற்றார்மார்பொடுகவசமற்றார்
கோளொடுமாண்மையற்றார்குறைபடக்குறையாமெய்யர்.

(இ-ள்.) குறைபட குறையா மெய்யர்- (ஆயுதங்களால்) சிதைவுபடினுஞ் சிதைவுபடாத சரீரத்தையுடையதேவர் சேனாவீரருட்சிலர், தாளும் கழலும் அற்றார்- (அசுரசேனாவீரர்களால்) காலும் வீரகண்டையும் அறுபட்டார்கள், தலையும் முடியும் அறறார்-சிலர் தலையும்கிரீடமும்அறுபட்டார்கள்,தோளும் வீரமும் அற்றார்- சிலர் புயமும் வீரமும் நீங்கினார்கள், தும்பையும் அமரும் அறறார் - சிலர் தும்பைமாலையும் போரும் நீங்கினார்கள், வாளும் கரமும அற்றார் - சிலர்பிடித்த வாள்களுங் கைகளும் அறுபட்டார்கள், மார்பும் கவசமும அறறார் - சிலர் மார்புங்கவசமும் பிளக்கப்பட்டார்கள், கோளும் ஆண்மையும் அற்றார் - சிலர்வலிமையும் ஆண்தன்மையும்நீங்கினார்கள்.

ஆண்தன்மை - போரில் நிலைகலங்காமை. இவர்கள இறக்காத தன்மையராதலால் குறைபடக் குறையாமெய்யர் எனறார். இறததல் இல்லாதவர் என்பதை அமரர் என்னும் காரணப்பெயரால் அறிக. ஒடு - எண்ணிடைச்சொல். (சஉ)

தொக்கனகழுகுசேனஞ்சொரிகுடர்பிடுங்கியீர்ப்ப
வுக்கனகுருதிமாந்தியொட்டல்வாய்நெட்டைப்பேய்க
ணக்கனபாடலசெய்யஞாடபினுட்கவந்தமாடப்
புக்கனபிணத்தின்குன்றம்புதைத்தபார்சிதைத்ததண்டம்.

(இ-ள்.) கழுகு சேனம் ஞாட்பினுள் தொக்கன - கழுகுகளும் பருந்துகளும் போர்க்களத்தில் (ஒருபால்) நெருங்கி, சொரி குடர் பிடுங்கி ஈர்ப்ப - சரியுங் குடர்களைப்பிடுங்கி யிழுக்காநிற்பன, ஒட்டல் வாய் நெட்டை பேய்கள் - ஒட்டியவாயையுடைய நீண்டபேய்கள், உக்கன குருதி மாந்தி நக்கன பாடல் செய்ய - சிந்தின வுதிரங்களைப் பருகிச்சிரித்துப் பாடல்களைப்பாட, கவந்தம் ஆட புக்கன - தலையிழந்தவுடல்கள் (ஒருபால்) ஆடத்தொடங்கின, பிணத்தின் குன்றும் பார் புதைத்தது- பிணமலை நிலவுலகத்தைமறைத்தது, அண்டம் சிதைந்தது - (அம்மலையால்) வானுலகஞ் சிதைவுபட்டது.

தொக்கன, நக்கன வினைமுற்றுகள் எச்சங்களாய் நின்றன. புரைத்தது-ஒன்றன்பால் விகுதி தொக்கது. சிதைத்தது வலித்தல்விகாரம். (சங)

இவ்வகைமயங்கிப்போர்செய்திறந்தவரொழியப்பின்னுங்
கைவ்வகையடுபோராற்றிக்களையிறந்தார்கண்மாண்டா
ரவ்வகையறிந்துவானத்தரசனுமவுணர்வேந்துந்
தெய்வதப்படைகள்வீசிச்சீறிநின்றடுபோர்செய்வார்.

(இ-ள்.) இவ்வகை மயங்கி போர்செய்து இறந்தவர் ஒழிய - (இருவகைச் சேனையிலுள்ளோரும) இவவாறு தம்முட்கலநது போர்செய்து இறந்தவர்கள் ஒழிய, களை இறந்தார்கள் பின்னும் கைவகை அடு போர் ஆற்றி மாண்டார் - (எஞ்சிய) அளவில்லாதபோகள மீளவும கைவரிசையின வகைகளால் கொல்லுதற்குரிய மற்போர்செய்து இறநதார்கள், வானதது அரசனும் அவுணர் வேந்தும் அவ்வகை அறிந்து - தேவேந்திரனும அசுரர்கள தலைவனாகிய விருத்திராசுரனுந் தத்தஞ்சேனையிலுள்ளோர் அவவாறு மடிதலையுணர்நது, சீறி நின்று தெய்வதம் படைகள் வீசி அடு போர் செய்வார் - (தம்முட்) சீறிநின்று தேவாஸ்திரங்களைத்தொடுத்துப் போர் செயயத்தொடங்கினார்கள. (சச)

அனற்படைவிடுத்தான்விண்ணோராண்டகையதனைக்கள்வன்
புனற்படைவிடுத்துசீற்றந்தணித்தனன்புனிதன்காற்றின்
முனைப்படைவிடுத்தான்வெய்யோன்முழங்குகால்விழுங்குநாகச்
சினப்படைதொடுத்துவீசிவிலக்கினான்றேவரஞ்ச.

(இ-ள்.) விண்ணோர் ஆண்டகை அனல் படை விடுத்தான்-தேவேந்திரன் ஆக்கினேயாஸதிரத்தைததொடுததான, அதனை கள்வன் புனல் படை விடுத்து சீற்றம் தணிததனன - அநத அஸ்திரததை வஞ்சத்தையுடைய அவ்வசுரன் வாருணாஸ்திரத்தைத்தொடுத்துக கோபம ஆறினன, புனிதன் காற்றின் முனைப்படை விடுத்தான் - அததேவேநதிரன கூரியவாயவியாஸ்திரததைததொடுத்தான், வெய்யோன்-கொடியனாகிய அவ்வசுரன, முழஙகு கால் விழுங்கும் நாகம் சினம் படை தொடுத்து வீசி-ஒலிக்கும அக்காறறினைவிழுங்குங் கோபத்தையுடையநாகாஸ்திரத்தை வில்லிற்பூட்டிப் பிரயோகஞ்செய்து,தேவர் அஞ்ச விலக்கினான்-தேவர்கள் பயப்பட (அந்த அஸ்திரததை) மாறறினன.

ஆககினேயம், வாருணம், வாயவியம், அக்கினிசம்பந்தமுள்ளது, வருணசமபந்தமுள்ளது, வாயுசம்பநதமுள்ளது, எனஙிற்றலால் தத்திதாந்த பதங்கள், சிந்ததுணித்தனன எனப்பாடஙகொணடு துண்டுபடத் துணித்தான் எனப்பொருள் கொளளினும் அமையும். தணிததனன் தணித்தனன் வலித்தல்விகாரம். (சரு)

நாகமாப்படைவிட்டார்த்தானாகாகோனுவணச்செல்வன்
வேகமாப்படையைவீசிவிலக்கினன்றருவர்வேந்தன்
மோகமாப்படையைத்தொட்டுமுடுக்கினான்முனைவனன்ன
தேகமாப்படிறன்ஞானப்படைவிடுத்திருள்போனின்றான்.

(இ-ள்.) மா நாகம் படை விட்டு ஆர்த்தான் - அவ்வசுரன் பெரியநாகாஸ்திரத்தைத்தொடுத்து வீரகோஷஞ்செய்ய, நாகர் கோன் - தேவேந்திரன், வேகம் மா உவணச் செல்வன் படையை வீசி விலக்கினான் - வேகத்தையும் பெருமையையுமு

டைய கருடாஸ்திரத்தைத்தொடுத்து மாற்றினான், தருவர் வேந்தன் மா மோகப்படையை தொட்டு முடுக்கினான் - அசுரர்வேந்தனாகிய விருத்திராசுரன் கரியமோகாஸ்திரத்தை யெடுத்துவிரைந்து தூண்டினான், முனைவன் - அத்தேவேந்திரன், மாபடிறன் அன்னது ஏக - பெரிய வஞ்சத்தையுடைய அந்த அசுரன் (தொடுத்த அம்மோகாஸ்திரம்) பின்னிட்டோட, ஞானப்படை விடுத்து இருள்போல் நின்றான் - ஞானாஸ்திரத்தைத்தொடுத்துக் கரியமேகம்போல் நின்றான்.

இருள் - கருமை பண்பாகுபெயராய் மேகத்தின்மேனின்றது. அடியில்வருஞ்செய்யுளால் மாறுவிட்டு எனறமையால் தேவேந்திரனும் நாகாஸ்திரத்தைவிட்டானெனப் பொருள்கொள்ளாது நாகப்படைவிட்டு அசுரனார்க்க எனப்பொருள் கொண்டாம். (௬௬)

மட்டிடுதாரான்விட்டவானவப்படைக்குமாறு
விட்டுடன்விலக்கிவேறும்விடுத்திடக்கனன்றுவஞ்சன்
முட்டிடமானவெங்கான்மூட்டிடக்கோபசெந்தீச
சுட்டிடப்பொறாதுபொங்கிச்சுராதிபனிதனைச்செய்தான்.

(இ-ள்.) மட்டு இடு தாரான் விட்ட வானவப்படைக்கு - தேனைச்சொரிகின்ற வெற்றிமாலையையணிந்த அத்தேவேந்திரன் றொடுத்த தேவாஸ்திரங்களுக்கு, மாறு விட்டு உடன் விலக்கி வேறும் விடுத்திட - மாறாகிய தேவாஸ்திரங்களைத்தொடுத்து உடனேமாற்றி வேறு ஆயுதங்களையுமெறிய, வஞ்சன் கனன்று முட்டிட - வஞ்சத்தையுடைய அவ்வசுரன் கோபித்து நெருங்க, மானம் வெம் கால் மூட்டிட கோபம் செம் தீ சுட்டிட பொறாது பொங்கி - மானமாகிய கடுங்காற்று மூட்டக் கோபமாகிய செவந்த தீமூண்டு சுடுதலால் ஆற்றாது சீறி, சுராதிபன் இதனை செய்தான் - அத்தேவேந்திரன் இதனைச்செய்யத்தொடங்கினான். (௬௭)

வீங்கிருளொதுங்கமேகமின்விதிர்த்தென்னக்கையி
லோங்கிருங்குலிசவேலையொல்லெனவிதிர்த்தலோடுந்
தீங்குளம்போன்றிருண்டதிணியுடற்கள்வனஞ்சி
வாங்கிருங்கடலில்வீழ்ந்தான்மறைந்தமைநாகமொத்தான்.

(இ-ள்.) வீங்கு இருள் ஒதுங்க மேகம் மின் விதிர்த்தால் என்ன - மிக்க இருளானது புடைபெயர்ந்தோட மேகம மின்னலையசைத்தாறபோல (கக்கினாற்போல என்றபடி) கையில் ஓங்கு இரும் குலிசவேலை ஒல் என விதிர்த்தலோடும் - கையிலேந்திய பெரியவச்சிராயுதத்தை விரைந்து அசைக்க (அதைககண்டு) தீங்கு உளம் போன்று இருண்ட திணி உடல் கள்வன் - தீங்குநிறைநத தனதுமனம்போலக் கரியநிறம் படைத்த திண்ணிய சரீரத்தையுடைய விருத்திராசுரன், அஞ்சி வாங்கு இரும கடலில் வீழ்ந்தான் - அச்சமுற்று (உலகினை) வளைந்த பெரியகடலில்வீழ்ந்து மறைந்தவன், மறைந்த மைநாகம் ஒத்தான் (அத்தேவேந்திரனுக்கஞ்சிக் கடலில்) வீழ்ந்து மறைந்த மைநாகபருவதத்தையொத்தான்.

மேகம் மின்விதிர்த்தலென்றது குணவணி. போன்று செயவெனெச்சத்திரிபு.

ஒக்கவிந்திரனும்வீழ்ந்தானுடல்சினவுருமேறன்னான்
புக்கிடந்தேடிக்காணான்புண்ணியமுளரியண்ணல்
பக்கம்வந்தனையசெய்திபகர்ந்தனன்பதகன்மாளத்
தக்கதோர்சூழ்ச்சிமுன்னிச்சராசரமீன்றதாதை.

(இ-ள்) ஒக்க இந்திரனும் வீழ்ந்தான் - அவனோடுகூடத் தேவேந்திரனும் வீழ்ந்து, உடல் சினம் உரும் ஏறு அன்னான் புக்க இடம் தேடி காணான் - கோபத்தையுடைய இடியேற்றையொத்த விருத்திராசுரன் புகுந்தொளித்த விடத்தைத்தேடி அவனைக்காணமல், புண்ணியம் முளரி அண்ணல் பக்கம் வந்து அனைய செய்தி பகர்ந்தனன் - களங்கமில்லாத தாமரைமலரில்வசிக்கும் பிரமன்பக்கலில்வந்து அந்தச் செய்தியைச்சொன்னான், சராசரம் ஈன்றதாதை - சரமும் அசரமுமாகிய எல்லாவுயிர்களையுஞ் சிருட்டித்த அப்பிரமன், பாதகன் மாள தக்கது ஓர் சூழ்ச்சிமுன்னி- (அதனைக்கேட்டு) பாதகனாகிய அவ்வசுரன் இறக்கத்தக்க ஒருபாயத்தைக்கருதி.

உடல்சினம்-பொருபோர் எனுமாற்போலநின்றது. உடலுதல்-கோபித்தல். ()

விந்தவெற்படக்கினாற்கீதுரையெனவிடுப்பமீண்டு
சந்தவெற்படைந்தான்வானோர்தலைவனைமுகமன்கூறிப்
பந்தவெற்பறுத்தான்வந்ததெவனெனப்பறைகளெல்லாஞ்
சிந்தவெற்பறுத்தான்வந்தசெயலெலாமுறையாற்சொல்வான்.

(இ-ள்.) விந்தம் வெற்பு அடக்கினான் கு ஈது உரை என விடுப்ப-விந்தபருவதத்தையடக்கிய அகத்தியமுனிவருக்கு இச்செய்தியைச்சொல்லென்றுவிடுக்க, மீண்டு சந்தம் வெற்பு அடைந்தான் - அங்குநின்றுந்திரும்பிச் சந்தனமரங்கள் நெருங்கிய பொதியமலையையடைந்தான், பந்தம் வெற்பு அறுத்தான் - பந்தமாகியமலையைத்தொலைத்த அவ்வகத்தியர், வானோர் தலைவனை முகமன்கூறி வந்தது எவன் என - (தம்பக்கல்வந்த) அத்தேவேந்திரனைநோக்கி உபசாரங்கூறி வந்தகாரணம் யாதென்று வினவ, வெற்பு பறைகள் எல்லாம் சிந்த அறுத்தான் - மலைகளின்சிறகுகளெல்லாஞ்சிந்த அறுத்த அத்தேவேந்திரன், வந்த செயல் எல்லாம் முறையால் சொல்வான்-தான்வந்தசெய்திகளையெல்லா முறையாகச்சொல்லத்தொடங்கினான்.

செப்பபுகுந்தனம் எனமுடிக்கில் - இடையில்வருதல் பொருந்தாமையால் சொல்வான் எனப்பாடங்கொண்டாம். (ருo)

யாவையுமுணர்ந்தவெந்தைக்கியானெடுத்துணர்த்துகின்ற
தாவதென்னமருக்காற்றாதாழிபுக்கொளித்தானாவி
வீவதுமவனாலவந்தவிழுமநோயெல்லாமின்று
போவதுங்கருதிநும்பாற்புகுந்தனமடிகளென்றான்.

(இ-ள்.) யாவையும் உணர்ந்த எந்தைக்கு யான் எடுத்து உணர்த்துகின்றது ஆவது என் - எல்லாவற்றையுமுணர்ந்த வெனது தந்தையாராகிய தேவரீருக்கு யான் தெரிவிக்கின்ற செய்தியாவது யாது, அமருக்கு ஆற்றாது ஆழிபுக்கு ஒளித்தான் - (என்னோடு)போர்செய்தற்கு ஆற்றாது கடலிற் புகுந்து விருத்திராசுரன் ஒளித்தான், ஆவி வீவதும - அவனுடையவுயிரகழிதலையும், அவனால் வந்த விழுமம் நோய் எல்லாம் இன்று போவதும் கருதி - அவ்வசுரனால்வந்த துன்பநோய்களெல்லாம் இப்பொழுதே எங்களினின்று கழிதலையுங்கருதி, அடிகள் நும்பால புகுந்தனம் என்றான் - சுவாமிகளே உம்மிடத்து யாங்கள் வந்தோம் என்று கூறினான்.

தேவர்களையுந் தன்னொடுபடுத்திக்கூறினமையால் புகுந்தனமெனத் தன்மைப்பன்மை வினைமுற்றாகக்கூறியது வழாநிலை. (ருக)

என்றவனிடுக்கண்டீர்ப்பானிகல்புரிபுலன்களைந்தும்
வென்றவனடியோன்றன்னைவிடையவன்வடிவமாக்கி
நின்றவனறிவானந்தமெய்ம்மையாய்நிறைந்தவெள்ளி
மன்றவனூழிசசெந்தீவழுவினைமனத்துட்கொண்டான்.

(இ-ள்.) என்றவன் இடுக்கண் தீர்ப்பான்என்றுகூறிய தேவேந்திரனுடைய துன்பத்தைத் தீர்க்கும்பொருட்டு, இகல் புரி புலன்கள் ஐந்தும் வென்றவன் - (தம் முடன்) போர்செய்யும் ஐம்புலன்களையும வென்றவரும், நெடியோன் தன்னை விடையவன் வடிவம் ஆக்கி நின்றவன் - திருமாலைச் சிவபெருமான் திருவுருவமாகச்செய்து நின்றவருமாகிய அகத்தியமுனிவர், மெய்மை அறிவு ஆனந்தமாய் நிறைந்த வெள்ளி மன்றவன் - உண்மையறிவானந்தமே திருவுருவமாய் நிறைந்துநின்ற வெள்ளியம்பலத்தையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய, ஊழிச்செந்தீ வடிவினை மனத்துள்கொண்டான் - செவந்த ஊழித்தீயையொத்த செவந்த திருவுருவத்தை மனத்தில்சிந்தித்தார்.

தமது வழிப்படாது விடயங்களின் வழிப்படுதலால் இகல்புரி புலன்கள் என்றும், கடல்நீர்சுவறக் கருதினவராதலால் ஊழிச்செந்தீவடிவினை மனத்துட்கொண்டார் எனவுங் கூறினர். இக்குறிப்புப்பற்றியே - இதன்முதனூலாகிய ஆலாஸ்யமகத்துவத்திலும் "காலாக்நிஸத்ருஸம் ஸாக்ஷாத் ஸ்வாமினம் நாயகம்" என வருதல் காண்க. பொதியமலைக்குச்செல்லும் அகத்தியமுனிவர் திருக்குற்றாலமென்னும் நகரிலுள்ள திருமுற்றமென்னுந் திருப்பதியினவழியே செல்லுங்கால் அங்குள்ளவந்தணர்கள் அவரது சைவதவவேடப்பொலிவைநோக்கி மனங்கொதித்து இந்நெறியே நீர்வந்தது தக்கதன்று ஆதலால் இந்நகரினின்று நீங்குக என விகழ்ந்து கூற, அம்முனிவர் உமது தன்மையையுணராதுவந்தோம் நீங்கள் பொறுக்கக்கடவீர் என்று சொல்லித் திரும்பிச்செல்லுகின்ற அவ்வகத்தியமுனிவர் மனம்பொறுதவராய் அவ்வந்தணரகந்தையைக் களைதற்பொருட்டு ஓர் பாகவதவடிவங்கொண்டு அத்திருப்பதியின்வழியே வரக்கண்ட அவ்வந்தணாகள்வணங்கி யுபசரிக்க, அழகர் திருமலையினின்று அததகிரித்திருப்பதிக்கு நாம்செல்லுகின்றோம் இங்கு நமதுபெருமான் எழுந்தருளியிருக்குந திருப்பதியொன்றுளதென்று சொல்லக்கேள்வியுற்று வணங்கவந்தோம் எனறுகூற, அவ்வந்தணர்கள் திருமால்திருககோயிலை விரலால் சுட்டிக்காட்டவும் சந்நிதியையடைந்து கண்ணபிரான் திருவடியைவணங்கிப் பூசித்தற்குரிய திரவியங்கள் வேண்டுமென்றுகூறிப பெற்றுப்பூசித்தற்குச் சென்ற அம்முனிவர் அக்கண்ணபிரானைச் சிவலிங்கவடிவங்கண்டனர் என்பதை - காந்தம்-அசுரகாண்டம் - திருக்குற்றாலப்படலத்தில்.

"அறுகுமதிநதிபுனையுஞ்செஞ்சடையெம்பெருமானையகத்துட்கொண்டு
சிறுகுமுருவுடையமுனிநாரணனார்திருமுடிமேற்செங்கையோச்சிக
குறுகுகுறுகெனவிருத்தியொள்ளரக்கிற்புனைபாவைக்கோலமீது
மறுகுதழலுற்றென்னக்குழைவித்தோர்சிவலிங்கவடிவஞ்செய்தான்."

எனவருஞ்செய்யுளிற்காண்க. (௫உ)

கைதவன்கரந்துவைகுங்கடலைவெற்படக்குங்கையிற்
பெய்துழுந்தெல்லைத்தாக்கிப்பருகினன்பிறைசேர்சென்னி
யையனதருளைப்பெற்றார்க்கரிசயமிதென்கொன்மூன்று
வையமுந்தொழிலுஞ்செய்யவல்லவரவரேயன்றோ.

(இ-ள்.) கைதவன் கரந்து வைகும் கடலை - வஞ்சகனாகிய அவ்வசுரன் ஒளித்துவசிக்குங்கடலை, உழுந்து எல்லைத்து ஆக்கி - உழுந்தினளவினதாகச்செய்து, வெற்பு அடக்கும் கையில் பெய்து பருகினன் - விந்தகிரியை அடக்கியகையால் அள்ளிப்பருகினார், பிறை சேர் சென்னி ஐயனது அருளை பெற்றார்க்கு - சந்திரனையணிந்த

திருமுடியையுடைய சிவபெருமானது திருவருளையடைந்தவர்க்கு, இது அதிசயம் என் - ஈதோரதிசயமென்று சொல்லுவதுயாது, மூன்று வையம் முத்தொழிலும் செய்ய வல்லவர் அவரே அன்றே - மூன்றுலகங்களிலும் சிருட்டி திதி சங்கார மென்னு முத்தொழிலையுஞ் செய்யவல்லோர் அவனடியார்களேயல்லவா.

இது வேற்றுப்பொருள்வைப்பணி. (௫௩)

அறந்துறந்தீட்டுவார்தமரும்பெறற்செல்வம்போல
வறந்தனபடுநீர்ப்பௌவம்வடவைகட் புலப்பட்டாங்கு
நிறைந்தசெம்மணியுமத்தீநீண்டெரிசிகைபோனீண்டு
சிறந்தெழுபவளக்காடுந்திணியிருள்விழுங்குமன்றே.

(இ-ள்.) படுநீர் பௌவம் - வளமிக்க நீர்மயமாகிய கடல்கள், அறம் துறந்து ஈட்டுவார் தம் பெறல் அரும் செல்வம்போல வறந்தன - தருமத்தைக் கைவிட்டுப் பொருள்தேடுவோருடைய பெறுதற்கரிய செல்வம் நிலைநில்லாது கெடுதல்போல வற்றிப்போயின, வடவைகண் புலப்பட்டால் ஆங்கு - அங்குள்ள வடவாமுகாக்கினி கண்களுக்குப் புலப்பட்டாற்போல, நிறைந்த செம் மணியும் - ஒளிநிறைந்த செவந்தமாணிக்கமும், அத்தீ நீணடு எரி சிகைபோல் - அவ்வக்கினியினின்றோங்கி எரிகின்ற கொழுந்துபோல, நீண்டு சிறந்து எழு பவளம் காடும் - நீண்டு சிறந்து விளங்கி எழுகின்ற பவளககாடும், திணி இருள் விழுங்கும் - மிக்கவிருளை விழுங்கா நிற்கும்.

செம்மணி பவளக்காடு என்றமையால் விழுங்கிற்றென்னும் ஒருமைப்பயனிலைபொருந்தாமைபற்றி விழுங்குமன்றே எனப்பாடங்கொண்டாம. (௫௪)

பணிகளின்மகுடகோடிபபரப்பெனவிளஙகிப்பல்கா
சணிகலப்பேழைபேழ்வாய்திறந்தனைத்தாகியொன்பான்
மணிகிடந்திமைக்குநீரான்மகபதிவேள்விக்காவாய்த்
திணியுடலவுணன்பட்டசெங்களமனையதன்றே.

(இ-ள்.) பணிகளின் மகுடகோடி பரப்பு என விளங்கி - (கடலானது பாதலத்திலுள்ள வாதிசேடன்முதலிய) சர்ப்பங்களின் மகுடகோடிகளினுடைய பரப்பினைப்போல ஒளிவீசி, பல் காசு அணிகலம் பேழை பேழ் வாய் திறந்தது அனைத்து ஆகி - பலஇரத்தினங்களைப்பதித்த ஆபரணங்களைவைத்த பெட்டியினது பிளந்தவாயைத்திறந்து வைததததையொத்ததாகி, ஒன் பான் மணிகிடந்து இமைக்கும் நீரால் - நவமணிகளும் இருந்து விளங்குந்தன்மையால், மகபதி வேள்விக்கு ஆவாய் திணி உடல் அவுணன் பட்ட செம களம் அனையது - தேவேந்திரனுடைய யாகத்துக்குப் பசுவாய்வந்த திண்ணியசரீரத்தையுடைய வலாசுரன் இறந்த போர்க்களத்தையொத்தது.

செம்மை என்னுங் குறிப்பால் செங்களம் என்பதற்குப் போர்க்களம் என்றும்.

வறந்தநீர்தன்னின்மின்னுவாள்விதிர்த்தென்னப்பன்மீ
னெறிந்தனநெளிந்தநாகமிமைத்தனவளையுழுந்துஞ்
செறிந்தனகரந்தயாமைசேர்ந்தபல்பண்டஞ்சிந்தி
முறிந்தனவங்கங்கங்கமுக்கினசிறுமீனெல்லாம்.

(இ-ள்.) வறந்த நீர் தன்னில் - வற்றிய நீருள்ள இடத்தில், மின்னு வாள் வீசிற்றால் என்ன - விளங்குகின்ற வாளினையசைத்தாற்போல, பல் மீன் எறிந்தன- பல்மீன்களும் வெடித்தன, நாகம் நெளிந்த - சர்ப்பங்கள் நெளிந்தன, வளையும் முத்தும் இமைத்தன - சங்குகளும் முத்துகளும் விளங்கின; யாமை செறிந்தன கரந்த - ஆமைகள் நெருங்கி ஒளித்தன, சேர்ந்த பல் பண்டம் சிந்தி வங்கம் முறிந்தன- பொருந்தியபலபண்டங்களையுஞ்சிந்திக் கப்பல்களுடைந்தன, கங்கம் சிறுமீன் எல்லாம் முக்கின - பருந்துகள் சிறியமீன்களையெல்லாம் விழுங்கின.

செறிந்தன என்னும் முற்று எச்சமாய் நின்றது. (ருசு)

செருவினிலுடைந்துபோனசெங்கண்வாளவுணனங்கோ
ரருவரைமுதுகிற்கார்போலடைந்துவானவர்செய்த
வுருகெழுபாவந்தானோருருவெடுத்திருந்துநோற்கும்
பரிசெனநோற்றானின்னமபரிபவவிளைவுபாரான்.

(இ-ள்.) செருவினில் உடைந்துபோன செம் கண் வாள் அவுணன் - போரில் தோற்றுப்போன சிவந்த கண்களையுடைய வாளேந்திய அசுரன், இன்னம் விளைவு பரிபவம் பாரான - இன்னமும் தனக்கு விளையுந் துன்பத்தை யாராயாதவனாகி, அங்கு ஓர் அருவரை முதுகில் - அக்கடலிலுள்ள ஒரு பெரிய மலையின் முதுகில், கார் போல் அடைந்து - மேகம்போலச் சேர்ந்து, வானவர் செய்த உரு கெழு பாவம் தான் - தேவர்கள் செய்த அச்சமிக்க பாவமானது, ஓர் உருவு எடுத்து இருந்து நோற்கும் பரிசு என நோற்றான - ஓர் வடிவங்கொண்டிருந்து தவஞ்செய்யுந் தன்மைபோலத் தவஞ்செய்தான்.

முதுகென்றது-மலையின் நடுப்பாகத்தை. மலையைமேகம் அடைந்தாற்போல் அடைந்தான் எனவும், பாவம் நோற்றாற்போல நோற்றானெனவும் பொருள்கொண்டு உவமைக்குவமைவந்த குற்றம் அன்றெனக்கொள்க. உருஅச்சம் "உருவுட்காகும் புரையுயர்வாகும்" என்ற தொல்காப்பியம் உரியியற்சூத்திரத்தாலுணர்க. (ருஎ)

கைதவநோன்புநோற்குங்கள்வனைக்கண்டுவானோர்
செய்தவமனையான்யாணர்வச்சிரஞ்சிரிப்பான்போற்
பொய்தவன்றலையைக்கொய்தான்புணரிவாய்நிறையச்சோரி
பெய்ததுவலாரிதன்னைப்பிடித்ததுபிரமசாயை.

(இ-ள்.) வானோர் செய்தவம் அனையான் - தேவர்கள் செய்ததவம் ஒருருக்கொண்டாலொத்த தன்மையையுடைய தேவேந்திரன், கைதவம் நோன்பு நோற்கும் கள் வனை கண்டு - வஞ்சனை சொரூபமாகிய தவத்தினைச் செய்யும் அசுரனைக் கண்டு, யாணர் வச்சிரம் சிரிப்பான்போல் - புதிய வச்சிராயுதத்தைப் பரீக்ஷிப்பவனைப்போல், பொய் தவன் தலையை கொய்தான - பொய்த்தவத்தையுடைய அவ்வசுரன் தலையை யறுக்க, புணரிவாய் நிறைய சோரி பெய்தது - (அறுபட்ட அவனுடல்) வற்றிய சமுத்திரத்தின் வாய் நிறைய வுதிரத்தைச் சிந்தியது, வலாரி தன்னை பிரமசாயை பிடித்தது - அத்தேவேந்திரனைப் பிரமகத்தி பிடித்தது.

பொய்தவன் - "நீங்கிய நாணொடு" என்றாற்போலத் தவஞ்செய்துந் தவனில்லானெனப் பொருள் பயந்துநின்றது. பிறவுயிர்க்கோரிடையூறு செய்யாமையே தவமாதலால் தேவர்களுக்கு இடையூறு கருதிச்செய்யுந் தவமாதலின் அதனைக் கைதவ நோன்பென்றார். கொய்தான் முற்று எச்சமாய் நின்றது. போரிலழிந்து

**புறங்கொடுத்தவன்மேல் படைவிடாதொழிதல் போர்க்குரிய வறம். அவ்வறத்தி னின்று வழுவிப் போரிலழிந்து தவத்தினின்ற அசுரனைக் கொன்றமையால் பிர மகத்தி பிடித்ததெனக்கொள்க. போரிலழிந்து நின்ற இலங்கையர் வேந்தனை மேற் செல்லாது இன்றுபோய் நாளைவாவென்று அயோத்தியர்வேந்தன் விட்டானென் பது.** கம்பராமாயணம், உயுத்தகாண்டம், முதற்போர்ப்படலத்தில்,

“ நின்றவன்னிலைநோக்கிய நெடுந்தகையிவனைக்
கொன்றலென்பயனவெறுங் கைநின்றானெனக்கொள்ளா
இன்றவிந்ததுபோலுமுன் சிறுமையென்றிசையோ
டொன்றவந்தனவாசக மினையனவுரைத்தான் ”

“ஆளையாயுனக்கமைந்தனமாருதமறைந்த
பூளையாயினகண்டனையின்றுபோய்ப்போர்க்கு
நாளைவாவெனநல்கினனுகிளங்கமுகின்
வாளைதாவுறுங்கோசலநாடுடைவள்ளல்.”

எனவருஞ்செய்யுள்களானுணர்க. இது தழிஞ்சி யென்னுந் துறை. (௫௮)

உம்மெனுமளவைத்தட்டுமுருத்தெழுமதிர்க்கும்போர்க்கு
வம்மெனும்வாய்மடிக்கும்வாளெயிறதுக்கும்வீழுங்
கொம்மெனவோடுமீளுங்கொதித்தழுஞ்சிரிக்குஞ்சீறு
மிம்மெனுமளவுநீங்காதென்செய்வானருசினானே.

(இ-ள்.) இம் மெனுமளவும் நீங்காது உம் என்னும்- (அப்பிரமகத்தி) இம் மெனனும் காலவளவும் அவனினின்று நீங்காது உம்மெனறதட்டும், மார்பை தட் டும் - தனது மார்பில் அடித்திடும், உருத்து எழும் - கோபித்துப் போர்க்கு எழும், அதிர்க்கும் - ஆரவாரிக்கும், போர்க்கு வம்மின என்னும் - சண்டைக்கு வாருங்கள் என்று அழைக்கும், வாய் மடிக்கும் - வாயை மடிக்கும், வாள் எயிறு அதுக்கும் - வாள்போன்ற பற்களை யதுக்கும், வீழும் - குப்புறறுவீழும், கொம் என ஓடும்-(எழு ந்து) விரைந்து ஓடும், மீளும் - திரும்பிவரும், கொதித்து அழும் - பொங்கி அழா நிற்கும், சிரிக்கும் - அட்டகாசஞ்செய்யும், சீறும் - சீறுகிறது, (இவ்வாறிருத்தலா ல்) என் செய்வான் அருசினன் - தான் செய்வது இன்னதெனத் தோன்றாமையால் தேவேந்திரன் அச்சமுற்றான்.

வம்மின என்னும் முன்னிலைப்பன்மை ஏவல்வினைமுற்று ஈறுதொக்கு நி ன்றது. (௫௯)

விரைந்தரனதிசையோர்வாவிவீழ்ந்தொருகமலநாலுட்
கரந்தனன்மகவானிப்பாற்கற்பகநாடுபுலலென்
றிருந்ததாலிருக்குமெல்லையிம்பரினகுடனென்போ
னரும்பரிமேதவேள்வியாற்றிநூறுறுமெல்லை.

(இ-ள்.) மகவான் விரைந்து - (அஞ்சிய) தேவேந்திரன் விரைந்து சென்று, அரன் திசை ஓர் வாவி வீழ்ந்து ஒருகமலம் நாலுள் கரந்தனன்-ஈசானதிசையிலுள் ள ஒரு தடாகத்தில் விழுந்து ஒருதாமரை நாளத்திலுள்ள நூலில் ஒளித்தனன், இப்பால் கற்பக நாடு புலல் என்று இருந்தது - இப்புறம் பொன்னுலகம் பொலிவழிந் திருந்தது, இருக்கும் எல்லை - அவ்வாறு இருக்குங்காலையில், இம்பரில் நகுடன் என்

போன் அரும் பரி மேதம் வேள்வி ஆற்றினன் - இக்கிலவுலகில் நகுஷ னென்னும் ஒரு அரசன் செய்தற்கரிய அசுவமேதயாகஞ் செய்துவந்தான், ஆறறும் எல்லை - (அவன்) செய்துவருங்காலத்து. (சுo)

அரசிலாவறுமைநோக்கியவனைவானாடர்யாரும்
விரைசெய்தார்மகுடஞ்சூட்டிவேந்தனக்கொண்டார்வேந்தாய்
வருபவன்சசியையீண்டுத்தருகெனமருங்குளாரபோய்த்
திரைசெய்நீரமுதனாட்குசசெப்பவக்கற்பின்மிக்காள்.

(இ-ள்.) வானாடர் யாரும் அரசு இல்லா வறுமை நோக்கி - தேவர்களெல்லோரும் தங்களுக்கு அரசனில்லாத வறுமையை நோக்கி, அவனை விரை செய் தார் மகுடம் சூட்டி வேந்தன் ஆக கொண்டார் - அந்த நகுஷனை வாசம் வீசும் மாலை புனைந்த கிரீடஞ்சூட்டி அரசனாகக்கொண்டார்கள், வேந்து ஆய் வருபவன் - தேவர்களுக்கு அரசனாய் வந்தவன், சசியை ஈண்டு தருக என - இந்திராணியை யிவ்விடத்தில் அழைக்கக்கடவீர் என்று கூற, மருங்கு உள்ளார் போய் திரை செய் நீர் அமுது அன்னாட்கு செப்ப - பக்கத்திலுள்ளோர் சென்று அலைவீசுங்கடலிற் றோன்றிய வமுதையொத்த அவ்விந்திராணிக்குச் சொல்ல, அ கற்பின் மிக்காள் - அந்தக் கற்பின் மேம்பட்டவள்.

அரசு - வேந்து இறைவன்மேனிறறலால் பண்பாகுபெயர்கள். பகரவிடைநிலை இறந்தகாலத்தின்மேல் நின்றது. (சுக)

பொன்னுயிர்த்தனையகாட்சிப்புண்ணியக்குரவன்முன்போய்
மின்னுயிர்த்தனையாணின்றுவிளம்புவாளிதென்கொல்கெட்டே
னென்னுயிர்த்துணைவனுங்கேயிருககமற்றொருவனென்னைத்
தன்னுயிர்த்துணையாகக்கொள்கைதருமமோவடிகளென்றாள்.

(இ-ள்.) மின் உயிர்ததது அனையாள் - மின்னல் ஓர உருவங்கொண்டதையொத்த இந்திராணி, பொன் உயிர்த்தது அனைய காட்சி புண்ணியம் குரவன் முன் போய் நின்று விளம்புவாள - பொனனேர் வடிவங்கொணடதையொத்த தோறறத்தையுடைய தருமசொரூபியாகிய தனது ஆசிரியன் முன்போய் நின்று சொல்லுகிறாள், அடிகள் இது என கெட்டேன் - சுவாமிகளே இதென்ன வாச்சரியம், என் உயிர்த்துணைவன் ஆங்கே இருகக - எனதுயிர்க்கேள்வன் அவ்விடத்தே யுயிரோடிருக்க, மற்று ஒருவன் - வேறொருவன (வந்து) என்னை தன் உயிர்த்துணை ஆக கொள்கை தருமமோ என்றாள் - என்னைத தனதுயிர்த்துணைவியாகக் கொள்ளுதல் தருமமா என்று சொன்னாள்.

கெட்டேன் - வியப்பிடைச்சொல் திருவாசகம், திருவண்டப்பகுதியில் - "ஆற்றேன்காண்கவந்தோகெடுவேன்" எனபதனாலுணர்க. கொல்-அசைநிலை. உயிர்த்தது ஈறுதொக்குநின்றது. என்னுயிர் தன்னுயிர் ஒற்றுமைககிழமைப் பொருளில்வந்த ஆறனுருபுதொக்க தொடர்கள். வந்து சொல்லெச்சம். (சுஉ)

மாதவரொழுவர்தாங்கமாமணிச்சிவிகைமீது
போதரினவனேவானோர்புரந்தரனவனேயுன்றன்
காதலனுகுமென்றுன்கைதொழுததற்குநோக்கம்
மேதகுசிறப்பாலிங்குவருகெனவிடுத்தாடே.

(இ-ள்.) மாதவர் எழுவர் தாங்க - சத்தரிஷிகள் சுமந்துவர, மாமணி சிவிகை மீது போதரின் - பெரிய இரத்தினங்களழுத்திய சிவிகையின்மேல் வந்தால், அவனே வானோர் புரந்தரன் - அவனே தேவர்களுக்கரசனாவான், அவனே உன்றன் காதலன் ஆகும் என்றான் - அவனே உன்னுடைய கணவனுமாவானென்று பிரகஸ்பதி சொன்னான், அதற்கு நேர்ந்து கைதொழுது-அவ்வார்த்தைக்குடன்பட்டு வணங்கிச்சென்று, அம்மேதகு சிறப்பால் இங்கு வருக என தூது விடுத்தாள் - அந்த மேம்பட்ட சிறப்போடுகூடி இங்கு வரக்கடவாயென்று தூதனுப்பினாள்.

சத்தரிஷிகள் ஆவார் - அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்பவர். (௬௩)

மனிதரின்மகவானாகிவருபவன்சிவிகைதாங்கும்
புனிதமாதவரையெண்ணான்புன்கணோயவிளைவுபாரான்
கனிதருகாமந்துய்க்குங்காதலால்விரையசசெல்வா
னினிதயிராணிபாற்கொண்டேகுமின்சர்ப்பவென்றான்.

(இ-ள்.) மனிதரில் மகவானாகி வருபவன் - மனிதர்களுள் இந்திரனாகிவருகின்ற நகுஷன், சிவிகை தாங்கும புனிதம் மாதவரை எண்ணான் - சிவிகையைச்சுமந்துசெல்லுங் களங்கமில்லாத சத்தரிஷிகளின்தன்மையை அறியாமலும், விளைவு புன் கண் நோய் பாரான்-(தனக்குஇனி) இவர்களால் விளையுந் துன்பநோயை ஆராயாமலும், கனிதரு காமம துய்க்கும் காதலால் விரைய செல்வான்-இன்பம்பழுத்த காமததை யனுபவிக்கும் ஆசையால் விரைந்து செல்லும்பொருட்டு, இனிது அயிராணி பால் கொண்டு சாப்ப ஏகுமின என்றான் - இனிதாக இந்திராணியினிடத்துக்கொண்டு விரைந்து செலலுங்கள் என்று சொன்னான்.

தானமுனபு புணரப்போவோனாதலால் மங்களமுண்டாகச்சுமந்து செல்லுங்கள் எனபான, இனிதுகொண்டேகுமின் எனவும், காமததால் பினனர்விளைவதை நோக்காதிருத்தலின் சாபப எனவுங் கூறினான். சாப்ப-விரைந்துசெல்லுக என ஏவுதல்.

பகரவிடைநிலை நிகழ்காலத்தின்மேல் நின்றது. (௬௪)

சர்ப்பமாகெனமுற்கொமபுதாஙகிமுன்னடக்குந்தென்றல்
வெறபனுமுனிவன்சாபம்விளைத்தனன்விளைத்தலோடும்
பொற்பமாசுணமேயாகிப்போயினனறிவிலாத
வற்பரானவாக்குசசெல்வமலலதுபகைவேறுண்டோ.

(இ-ள.) முன் கொம்பு தாங்கி முன நடககும் தென்றல் வெற்பனும் முனிவன்-சிவிகையின்முன கொமபுசுமநது முன்புநடக்குந தெனறலுக்குப பிறப்பிடமாகிய பொதியமலையையுடையவராகிய அகததியமுனிவர், சர்பபம் ஆக என சாபம் விளைததனன்-சாப்பமாககடவாயெனறு சாபங்கொடுததார், விளைத்தல் ஒடும்-அவ்வாறு சாபங்கொடுத்தவப்பொழுதே, பொற்ப மாசுணமே ஆகி போயினன்-பொலிவுபெறப் பெருமபாம்பாய்ப்போயினான், அறிவு இல்லாத அறபரானவர்க்கு செல்வம் அல்லது வேறு பகை உண்டோ - அறிவில்லாத கீழ்மக்களுக்குச் செல்வமல்லாமல் துன்பம்விளைக்கும் வேறுபகையுளதோ.

மாசுணம் ஆனது - பெருஞ்செல்வக்களிப்பாலாதலால் அதனை முடித்தற்கு அறிவிலாத அற்பரானவர்க்குச் செல்வமல்லது பகைவேறுண்டோ என்றது-வேற்றுப்பொருள்வைப்பணி. (௬௫)

பின்னர்தங்குரவனானபிரானடிபணிந்துவானோர்
பொன்னகர்வேந்தனின்றிப்புலம்படைகின்றதைய
வென்னலுங்குரவன்போயவ்விலஞ்சியுளொளித்தாற்கூவித்
தன்னுரையறிந்துபோந்தசதமகற்கொண்டுமீண்டான்.

(இ-ள்.) வானோர் பின்னர் தம் குரவன் ஆன பிரான் அடி பணிந்து - தேவர்கள் பின்பு தமது ஆசிரியனாகிய பிரகஸ்பதியின் திருவடிகளைவணங்கி, ஐய பொன் நகர் வேந்தன் இன்றி புலம்பு அடைகின்றது என்னலும் - ஐயனே பொன்னுலகம் அரசனில்லாமல் வருத்தமடைகின்றதென்று வருந்திக்கூற, குரவன் போய் அ இலஞ்சியுள் ஒளித்தான் கூவி - (பின்பு) தமது ஆசிரியன்சென்று ஈசானதிசையிலுள்ள அத்தடாகத்தில் தாமரைநாளத்திலுள்ள நூலில் ஒளித்திருந்த இந்திரனைக்கூவி, தன் உரை அறிந்துபோந்த சதமகன் கொண்டு மீண்டான் - தனது சொற்குறிப்பையறிந்து வெளியில்வந்த அத்தேவேந்திரனைக்கொண்டு அவ்விடத்தினின்று திரும்பினான்.

ஒளித்தான் சதமகன் இவையிரண்டாம் வேற்றுமைத் தொகையாதலால் ஈறுதிரிந்தன. (௬௬)

கொடும்பழிகோட்பட்டான்றன்குரவனைவணங்கியென்னைச
சுடும்பழிகழிவதெங்ஙன்சொல்லெனத்தொலைவதோர்ந்தா
னடும்பழிமண்மேலன்றியகலாதுநீவேட்டைக்கென்னப்
படும்பழியதனைத்தீர்ப்பான்பார்மிசைவருதியென்றான்.

(இ-ள்.) கொடும் பழி கோட் பட்டான் தன குரவனை வணங்கி - கொடியபழியால் விழுங்கப்பட்ட இந்திரன் தனது ஆசிரியனாகிய பிரகஸ்பதியைவணங்கி, என்னை சுடும் பழி கழிவது எங்ஙன் சொல் என - என்னைவருத்தும் பழி என்னினின்றுங்கழிவது எத்தலத்திலென்று இரக்க, தொலைவது ஓர்ந்தான் - அப்பழிநீருந்திறத்தையுணர்ந்த அப்பிரகஸ்பதி, அடும்பழி மண்மேல் அன்றி அகலாது - கொலைசெய்தலால்வந்தபழி நிலவுலகின்மேலன்றி நீங்காது (ஆதலால்) நீ வேட்டைக்கு என்னபடும்பழி அதனை தீர்ப்பான் - நீ வேட்டைக்கென்று பெயர்வைத்தனக்கு உண்டாகிய அப்பிரமகத்தியைத்தீர்க்க, பார் மிசை வருதி என்றான் - இந்நிலவுலகின்மேல் வருவாயென்று அருளினான்.

பழிகோட்பட்டான் வினைமுதற்பொருளில்வந்த மூன்றாம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடராதலால் வருமுதல வல்லெழுத்து இயல்பாயிற்று. அடும்பழி "உண்டவிளைப்பு" என்னுந் தொடர்போனிற்றலில் காரணப்பொருளில்வந்த பெயரெச்சம். (௬௭)

ஈசனுக்கிழைத்தகுற்றந்தேசிகனெண்ணித்தீர்க்குந்
தேசிகற்கிழைத்தகுற்றங்குரவனேதீர்ப்பதன்றிப்
பேசுவதெவனோதன்பாற்பிழைத்தகாரணத்தால்வந்த
வாசவன்பழியைத்தீர்ப்பான்குரவனேவழியுங்கூற.

(இ-ள்.) ஈசனுக்கு இழைத்த குற்றம் - சிவபெருமானுக்குச்செய்த அபசாரத்தை, தேசிகன் எண்ணி தீர்க்கும் - ஆசிரியனேதீர்க்கு முறையைக்கருதித்தீர்ப்பான், தேசிகன் கு இழைத்த குற்றம் குரவனே தீர்ப்பது அன்றி - ஆசிரியனுக்குச்செ

ய்த அபராதத்தை அவ்வாசிரியனே தீர்ப்பதல்லாமல், பேசுவது எவன் - வேறொருவர்கருதித் தீர்ப்பரெனச்சொல்லுவது என்ன இருந்தது, தன்பால் பிழைத்த காரணத்தால் வந்த வாசவன் பழியை தீர்ப்பான் - தன்னிடத்துத் தவறுசெய்தகாரணத்தால் நேரிட்ட இந்திரனுடைய பழியைநீக்கக்கருதி, குரவனே வழியும் கூற-ஆசிரியனேயுபாயமுஞ்சொல்ல.

உபாயமாவது - மாபாதகமெனையவற்றால் ஒழியாதெனவும், சிவார்ச்சனையொன்றினாலேயே யொழியுமெனவும்வருதல். இதனை ஆலாஸ்யமகத்துவத்தில்-பஞ்சமோதயாயத்தில்-"[illegible]" எனவருதல்காண்க. (௬௮)

வாம்பரியுகைந்துதன்னாலவழிபடுகுரவன்வானோர்
தாமபரிவோடுசூழத்தாரதலத்திழிந்துசெம்பொற்
காம்பரிதோளிபங்கன்கயிலைமாலவரையைத்தாழ்ந்து
தேம்பரியலங்கன்மாபன்றென்றிசைநோக்கிச்செல்வான்.

(இ-ள்.) தேம பரி அலங்கல் மாபன் - தேனைச்சுமந்த கற்பகப்பூமாலையையணிந்த மார்பையுடைய தேவேந்திரன், வாம்பரி உகைத்து - தாவிச்செல்லும் உச்சைச்சிரவமென்னுங் குதிரையைச் செலுத்தி, தன்னால் வழிபடு குரவன் வானோர் தாமும் பரிவோடு சூழ தாரதலத்து இழிந்து - தன்னால்வழிபட்டுபசரிக்கப்படும் பிரகஸ்பதியும் தேவர்களும் அன்போடு சூழ்ந்துவர நிலவுலகில் இழிந்து, செம் பொன் காம்பு அரி தோளி பங்கன் மாலை கயிலை வரையை தாழ்ந்து - செவந்த பொன்னிறமுள்ள மூங்கிலைப்போன்ற தோள்களையுடைய உமாதேவியை யிடப்பாகத்திலுடைய சிவபெருமானெழுந்தருளிய பெரியதிருக்கைலைமலையைவணங்கி, தென் திசை நோக்கிச் செல்வான் - தென்றிசையை நோக்கிச்செல்லுகின்றவனாயினான்.

காம்பு அரி - ஒருபொருட்பலபெயர் உம்மையைப்பிரித்துக் குரவன் வானோர் தாம் எனபவற்றோடு கூட்டிக்கொள்க. (௬௯)

வேறு-வேறு.

கங்கைமுதலளவிறந்ததீர்த்தமெல்லாம்போய்ப்படிந்துகாசிகாஞ்சி
யங்கனககேதாரமுதலபதிகளபலபணிந்தரவுணற்கொன்ற
பொங்குபழிவிடாதழுங்கியரவுண்ணமாசுண்டுபொலிவுமாழ்குந்
திங்களனையான்கடம்பவனத்தெல்லையணித்தாகச்செல்லுமெல்லை.

(இ-ள்) கங்கை முதல அளவு இறந்த தீர்த்தம் எல்லாம் போய் படிந்து - கங்கைமுதலிய எல்லையில்லாத தீர்த்தங்களையாவுஞ்சென்று நீராடி, காசி காஞ்சி அம் கனக கேதாரமுதல் பதிகள் பல பணிந்தும் - காசியுங் காஞ்சியும் அழகியபொன்மயமாகிய திருக்கேதார முதலிய திருப்பதிகள் பலவற்றை வணங்கியும், அவுணன் கொன்ற பொங்கு பழி விடாது அழுங்கி - அசுரனைக்கொன்ற மிக்கபிரமகத்தி விழுங்குதலால் பொலிவிழந்து, அரா உண்ண மாசு உண்டு பொலிவு மாழ்கும் திங்கள் அனையான் - சர்ப்பமுண்ண மாசுபடிந்து பொலிவிழக்குஞ் சந்திரனையொத்த இந்திரன், கடம்ப வனத்து எல்லை அணித்து ஆக செல்லும் எல்லை - கடம்பவனத்தின் எல்லைக்குச் சமீபமாகச் செல்லுங்காலையில்

உவமைக்கும் பொருளுக்கும் ஒற்றுமை யுண்மையால் உவமையின்றொழிலை விடாதழுங்கி என்னும் பொருளின்றொழிலுக்கேற்றிக் கூறினும். (௭௰)

தொடுத்தபழிவேறாகிவிடுத்தகன்றதிந்திரன்றான்சுமந்தபாரம்
விடுத்தவனொத்தளவிறந்தமகிழ்வெய்தித்தேசிகன்பால்விளம்பப்பாசங்
கெடுத்தவன்மாதலம்புனிததீர்த்தமுளவிவணமக்குக்கிடைத்தல்வேண்டு
மடுத்தறிகவெனச்சிலனைவிடுத்தவ்வேறாநிலைநின்றப்பாற்செல்வான்.

(இ-ள்.) தொடுத்தபழி வேறாகி விடுத்து அகன்றது - விடாதுபற்றிய பிரமகத்தியானது தன்னினின்றும் புறம்பாய்நீங்கியொழிய, இந்திரன் தான் சுமந்த பாரம் விடுத்தவன் ஒத்து அளவு இறந்த மகிழ்வு எய்தி - தேவேந்திரன்சுமந்த பாரத்தை இறக்கினவனொத்து அளவில்லாத மகிழ்கூர்ந்து, தேசிகன் பால் விளம்ப- தனது ஆசிரியனிடத்துச்சொல்ல, பாசம் கெடுத்தவன் - பந்தத்தை வேரோடு அறுத்த அவ்வாசிரியன், இவண் மாதலம் புனிதம் தீர்த்தம் உள - இவ்விடத்து மகத்தாகிய தலமும் பரிசுத்தமாகியதீர்த்தமும் உள்ளன, நமக்கு கிடைத்தல் வேண்டும் - நமக்கு அவை கிடைக்கவேண்டும, அடுத்து அறிக என-அவற்றைச்சென்று அறியக்கடவாயென்றுசொல்ல, சிலரை விடுத்து அ வேறு ஆம் நிலை நின்று அப்பால் செல்வான் - சில தூதுவரை ஏவித தன்னினின்றும் பழிநீங்கிய அவ்விடத்தினின்று அப்புறஞ்செல்லும் இந்திரன்.

அருவி படிந்தென்று பின்னர்வருதலால் ஏறும நிலையென்று சொல்வகைசெய்து இடபமலை யென்று பொருள் கூறுவாருமுண்டு - இதற்கு முதநூலாகிய ஆலாஸ்ய மகத்துவத்தில் - மலையென்றாவது கூறாமையாலும், இடபமலையானது பினனிகழ்ந்த திருவிளையாடலாதலாலும அவ்வாறு நாம் பொருள்கொள்ளாதுவிட்டனம். அகன்றது எனனும் வினைமுற்று எச்சமாய்நின்றது. (எக)

அருவிபடிந்தருவியெறிமணியெடுத்துப்பாறையிலிட்டருவிநீர்தூய்க்
கருவிரல்கொய்தலர்சூட்டிக்கனியூட்டிவழிபடுவகல்லாமந்தி
யொருதுறையில்யாளிகரி புழைக்கைமுகந்தொன்றற்கொன்றூட்டியூட்டி
பருகுவனபுலிமுலைப்பால்புல்வாய்க்கன்றருந்தியிடும்பசிநோய்தீர. [ப்

(இ-ள்.) கல்லாமந்தி - அறிவில்லாத குரங்குகள், அருவிபடிந்து - அருவியில் நீராடி, அருவி எறிமணி எடுதது பாறையில் இட்டு - அவ்வருவி வீசிய மாணிக்கத்தை யெடுத்துக கற்பாறையின்மேல் வைத்து, அருவி நீர்தூய் - அவ்வருவி நீரால் அபிஷேகஞ்செய்து, கரு விரல் கொய்த அலர் சூட்டி - தமது கரியவிரல்களால் கொய்தமலர்களைச் சூட்டி, கனி ஊட்டி வழிபடுவ - கனிகளைவைதது நிவேதித்து வழிபட்டு ஆராதிப்பன, (ஒருபால்) யாளி கரி-யாளியும் யானைகளும, ஒரு துறையில் புழைக்கைமுகந்து ஒன்றன் கு ஒன்று ஊட்டி ஊட்டி பருகுவன-ஒருதீர்த்தத்துறையில் தமது துவாரமபொருந்திய கைகளால நீரைமுகந்து ஒன்றறகொன்று உண்பித்துப் பருகாநிற்பன, புலி முலை பால் புல்வாய கன்று பசிநோய் தீர அருந்தியிடும் - (ஒருபால்) புலிகள் தமதுமுலைப்பாலை மானகன்றுகள் பசிநோய்நீங்க வுண்பிக்கும்.

கல்லாததனாலாகிய அறியாமையைக் கல்லாவெனக் காரணமாக வுபசரித்தார். (எஉ)

நெளியராக்குருளைவெயில்வெள்ளிடையிற்கிடந்துயங்கிநெளியப்புள்ளே
றொளியறாச்சிறைவிரித்துநிழல்பரப்பப்பறவைநோயுற்றதேகொ
லளியவாவச்சோவென்றேதியயன்மடமந்தியருவியூற்றுந்
துளியநீர்வளைத்தசும்பின்முகந்தெடுத்துக்கருங்கையினூற்சொரிவமாதோ

(இ-ள்.) நெளி அரா குருளை வெயில் வெள்ளிடையில் கிடந்து உயங்கி நெளிய-நெளியும் பாம்பின் குட்டிகள் வெயில்பரந்த வெளியிடங்களில் கிடந்து மயங்கி வருந்தி நெளிய, புள் ஏறு ஒளி அரு சிறை விரித்து நிழல் பரப்ப-கருடன், ஒளியுற்ற சிறகை மேலேவிரித்து நிழல்செய்ய, அயல் மட மந்தி-பக்கத்திலுள்ள அறியாமையையுடைய குரங்குகள், பறவை நோய் உற்றதே கொல் - அக்கருடப்பக்ஷி வெயிலால் வருத்தமுற்றதோ (என்றுகருதி) அளியவா - கருணையுடையனவாகி, அச்சோ என்று ஓதி - ஐயோவென இரங்கிச்சொல்லி, அருவி ஊற்றும் துளிய நீர் வளைந்த கும்பின முகந்து எடுத்து - அருவியாறுகள் சிந்தும் துளியையுடைய நீரைச் சங்காகிய குடத்தால் முகந்தெடுத்து, கரும கையினால் சொரிவ - தமது கரியகைகளால் அப்பறவையின்மேற் சொரியாநிற்பன.

அச்சோ-இரக்கக்குறிப்பையுணர்த்தும் இடைச்சொல். (எங)

படவரவமணியீன்றுநொச்சிப்பாசிலையன்னபைந்தாண் மஞ்ஞை,
பெடைதழுவிமணஞ்செய்யமணவறையில்விளக்கிடுவ பெருந்தண்கானத்,
தடர்சிறைமென்குயிலோமென்றார்ப்பமடக்கிள்ளை யெழுத்தைந்துமோ
சைத், தொடர்புபெறவுச்சரிப்பக்குருமொழிகேட்டாங்குவப்பதொடிக்க
டபூவை.

(இ-ள்.) நொச்சி பாசு இலை அன்ன பைம் தாள் மஞ்ஞை பெடை தழுவி மணம் செய்ய-(ஓர்பால்) நொச்சியினது (பிளவுபட்ட) பசியவிலையையொத்த பசியகால்களையுடைய மயில்கள் தத்தமக்கிசைந்த பெண்மயில்களைத்தழுவி மணஞ் செய்யாநிற்க, படம் அரவம் மணி ஈன்று மண அறையில் விளக்கு இடுவ - படங்களையுடைய சர்ப்பங்கள் மாணிக்கங்களை வெளிப்படுத்தி மணவறையில் விளக்கேற்றுகிறதும், அடர் மென் சிறை குயில் பெரும் தண் கானத்து ஓம் என்று ஆர்ப்ப-(ஓர்பால்) நெருங்கிய மென்மையையுடைய சிறகுகளையுடைய குயில்கள் பெரிய குளிர்ந்தகாட்டில் ஓமென்று ஒலிக்காநிற்கவும், மடம் கிள்ளை எழுத்து ஐந்தும் ஓசை தொடர்பு பெற உச்சரிப்ப - இளமைபொருந்திய கிளிகள் பஞ்சாக்ஷரத்தையும் ஓசையின் றொடர்புபொருந்த வுச்சரியாநிற்கவும், தொடி கண் பூவை-கைவளை போலும் வட்டமாகிய கண்களையுடைய நாகணவாய்ப்பறவைகள், குருமொழி கேட்டால் ஆங்கு உவப்ப - (அவற்றைக்) குருவின் உபதேசமொழியைக் கேட்டாற்போலக்கேட்டு மகிழாநிற்கும்.

உம்மை உயர்வு சிறப்புப்பொருட்டு. (எச)

இன்னவிலங்கொடுபுள்ளின்செயற்கரியசெயனோக்கியிறும்பூதெய்தி
ப், பொன்னகரான்புளகமுடல் புதைப்பநிறைமகிழ்ச்சியுள்ம் புதைப்பப்
போவா, னன்னபொழுதொற்றுவாமீண்டடிவணங்கியின்சுவைப்பாலருந்
துவான்முன், பின்னரியதேன்சொரிந்தாங்குவகைமேற்பேருவகைபெருக
ச்சொல்வார்.

(இ-ள்.) பொன் நகரான் இன்ன விலங்கொடு புள்ளின் செயற்கு அரிய செயல் நோக்கி-தேவேந்திரன் இந்த மிருகங்களும் பறவைகளுமாகிய இவைகளின் பிறர் செய்தற்கரிய செயல்களைப்பார்த்து; இறும்பூது எய்தி - அதிசயித்து, புளகம் உடல் புதைப்ப நிறை மகிழ்ச்சி உள்ளம் புதைப்ப போவான்-புளகம் தனதுடல் மூற்

றும் போர்க்கவும் நிறைந்தமகிழ்ச்சி தனது மனத்தைத் தூர்க்கவும் போகின்றவனாயினான், அன்ன பொழுது - அப்பொழுதில், ஒற்றுவர் மீண்டு அடி வணங்கி இன்சுவை பால் அருந்துவான் முன் - தூதுவர் திரும்பிப் பாதத்தைவணங்கி யினிய சுவையமைந்தபாலைப் பருகுவோன் முன்பு, பின் அரிய தேன் சொரிந்தால் ஆங்கு - பின்பு கிடைத்தற்கரிய தேனைவார்க்கின்றதுபோல, உவகைமேல் பேர் உவகை பெருக சொல்வார் - களிப்பின்மேல் பெருங் களிப்பு மிக்கூரச் சொல்லத்தொடங்கினர்.

இன்ன அன்ன சுட்டுத்திரிபுகள். ஒடு - எண்ணிடைச்சொல். (௭௫)

எப்புவனத்திலுமென்றுங்கண்டறியாவதிசயமுமெண்ணுக்கெய்தாத்
திப்பியமுமிக்கடம்பவனத்தின்றுகண்டுவகைதிளைத்தேமங்கண்
வைப்பனையவொருபுனிதவாவிமருங்கொருகடம்பவனத்தினீழ [டான்
லொப்பிலொளியாய்முளைத்த சிவலிங்கமொன்றுளதென்றுரைப்பக்கேட்

(இ-ள்.) எப்புவனத்திலும் என்றும் கண்டு அறியா அதிசயமும் - எவ்வுலகத்திலும் எக்காலத்திலும் பார்த்தறியாத அதிசயமும், எண்ணுக்கு எய்தாத திப்பியமும் - கருதலளவைக்கெட்டாத தெய்வத்தன்மையும், இ கடம்பவனத்து இன்று கண்டு உவகை திளைத்தேம் - இந்தக் கடம்பவனத்தில் இப்பொழுது பார்த்து ஆராமகிழ்ச்சியடைந்தோம், (என்னவெனில்) அங்கண் வைப்பு அனைய ஒரு புனிதம் வாவி மருங்கு - அக்கடம்பவனத்தில் வைப்புத்திரவியத்தையொத்த வொருபரிசுத்தமாகிய தடாகத்தின் பக்கத்தில், ஒரு கடம்ப வனத்தின் நீழல் ஒப்பில் ஒளியாய் முளைத்த சிவலிங்கம் ஒன்று உளது என்று உரைப்ப கேட்டான் - ஒருகடம்பமரத்து நீழலில் தனக்கு நிகரில்லாத ஒளிப்பிழம்பாய் முளைத்தெழுந்த சிவலிங்கமொன்று இருக்கின்றதென்று சொல்லக்கேட்டான்.

ஒன்றென்னும் எண்ணுக்குறிப்பால் வனமென்னுஞ் சமுதாயத்தினின்று ஓர் மரம் என்றும். (௭௬)

செவித்தொளையிலமுதொழுக்குமுழையரொடும்வழிக்கொண்டுசெ
ன்னிமேற்கை, குவித்துளமெய்ம்மொழிகரணங்குணமூன்றுமொன்றித்த
ன்கொடியபாச, மவித்துளயாவொழிக்கமுளைத்தருட்குறிமேலன்பீர்ப்பவ
டைவான்கானங், கவித்துளபூந்தடம்படிந்துகடம்பவனத்துழைநுழைந்
தான்கவலைதீர்வான்.

(இ-ள்.) கவலை தீர்வான் - தன்னைப்பற்றிய பழியினின்று நீங்குமிந்திரன், செவி தொளையில் அமுது ஒழுக்கும் உழையரொடும் வழி கொண்டு - தனது செவித்தொளையினிடத்துச் சந்தோஷமாகிய அமுதத்தை வார்க்கிற ஒற்றர்களோடுஞ் சென்று, சென்னி மேல் கை குவித்து - தனது சிரத்தின்மேல் கைகளைக்கூப்பி; உளம் மெய் மொழி - மனம் வாக்குக் காயங்களும், கரணம் - மனமுதலிய அந்தக்கரணங்களும், குணம் மூன்றும் ஒன்றி - சாத்துவித முதலிய மூன்று குணங்களும் ஒருவழிப்பட, தன் கொடிய பாசம் அவித்து உள அயாவு ஒழிக்க முளைத்த அருள் குறி மேல் அன்பு ஈர்ப்ப அடைவான் - தனது கொடியபாசத்தைக் கெடுத்து மனத்துயரமொழிக்க முளைத்தருளிய சிவலிங்கத்தின்மேல் அன்பானது இழுக்கச்செல்லுகின்றவன், கானம் கவித்து உள்ள பூம் தடம் படிந்து கடம்ப வனத்து உழை நுழைந்தான் - காட்டாற் கவியப்பட்டுள்ள பொற்றாமரைத்தீர்த்தத்தி னீராடிக் கடம்பவனத்துட் புகுந்தான்.

ஒன்றி செயவெ ளெச்சத்திரிபு. மனம் வாக்கு முதலிய திரிகரணங்களும், மனம் புத்தி முதலிய அந்தக்கரணங்களும், சாத்துவிதமுதலிய முக்குணங்களும், ஆதித்தன் சந்நிதியில் விளக்குப்போலத் தத்தமக்குரிய போதங்களின்வழிப்படாது ஒடுங்கி அன்பிற்றலைப்பட்டு நின்றன என்பார். ஒன்றி அன்பீர்ப்ப எனக்கூறினர் அந்தக்கரணம்-மனம், புத்தி, சித்தம், அகங்காரம். முக்குணம்-சாத்துவிதம், இராசதம், தாமதம். (எ௭)

அருவாகியுருவாகியருவுருவங்கடந்துண்மையறிவானந்த
யுருவாகியளவிறந்தவுயிராகியவ்வுயிர்க்கோருணர்வாய்ப்பூவின்
மருவாகிசசராசரங்களகிலமுந்தன்னிடையுதித்துமடங்கநின்ற
கருவாகிமுளைத்தசிவக்கொழுந்தையாயிரங்கண்ணுங்களிப்பக்கண்டான்.

(இ-ள்.) அருவாகி உருவாகி அருவுருவம் ஆகி - அருவமாகியும் உருவமாகியும் அருவுருவமாகியும, கடந்து - இவைகளைக்கடந்து, உண்மை அறிவு ஆனந்த உருவாகி - உண்மையறிவானநத வுருவமாகியும், அளவு இறந்த உயிராகி - எல்லையில்லாத பல்லுயிர்களாகியும், அ உயிர்க்கு ஓர் உணர்வாய் - அவ்வுயிர்களறிவுக்கோரறிவாகியும், பூவில் மருவு ஆகி - (அவ்வாறுநிற்றலின்) பூவினிடத்துள்ள வாசம் போலாகியும, சராசரங்கள் அகிலமும் தன்னிடை உதித்து மடங்கநின்ற கருவாகி-சராசரஙகள் யாவுந் தன்னிடத்தத தோன்றியொடுங்கநின்ற காரணமாகியும், முளைததசிவக்கொழுந்தை ஆயிரம் கண்ணும் களிப்ப கண்டான் - முளைத்தருளிய சிவலிங்கப்பெருமானைத தனது ஆயிரங்கணகளுங்களிப்பில் மூழ்கத்தரிசித்தான்.

சிவம், சத்தி, நாதம், விந்து என நிற்றலால் அருவாகி எனவும், மகேசுரன், உருத்திரன், திருமால், அயன என உருவாகி நிற்றலால் உருவாகி எனவும், சதாசிவம் என நிற்றலால் அருவுருவாகி எனவும், இந்நவவிதபேதமுந் தோற்றுவித்தல் முதலியவற்றிற்கு ஏதுவாய் நாடகமாத்திரையானடிக்கும் இறைவனுகலின் கடந்தவனெனவும், ஆன்மாவின் பவத்தொடர்பு நீங்குமுகத்து ஆன்மசுத்திக்கு மேலாகும் சிவரூப சிவதெரிசன சிவபோகானுபவங்களை விளைவித்தல் காரணமாய் அங்ஙனம் அகோசரமாய்நின்ற சிவம கோசரிக்குமிடதது சத்து சித்து ஆனந்தங்களை முறையே தூல சூக்கும காரணரூபமாகக்கொண்டு விளங்கிநிற்றலால் உண்மையறிவானந்த வுருவாகி எனவும், இறைவன், உயிர்களைப் புனருற்பவஞ்செய்விக்குங்கால் பொதுமையில் உடலுயிர்போன்று சத்திரூபமாய் நிற்றலால் அளவிறந்தவுயிராகி எனவும, கண்ணருக்கன்போல் அவ்வுயிர்களின் வேருய் வியஞ்சகவறிவாய்நின்று தனதாணையால் இருவினையின்வழிநடததும பதிப்பொருளாதலால் அவ்வுயிர்க்கோருணர்வாய் எனவும், அறிவொளிபோல பிரிவற்று உடனுய் அத்துவிதமாய் அவைகளினிற்றலால் பூவின்மருவாகி எனவும், அணுவோரண்டமாஞ்சிறுமைகொண்டும் "அண்டமோரணுவாமபெருமைகொண்டும்" என்னுந் திருவாக்கின்படி தோற்றக்கேடுகளின் காரணங்களுககெல்லாம் காரணமாய்நிற்றலால் சராசரங்களகிலமுந் தன்னிடையுதித்துமடஙகநின்ற கருவாகி எனவும் கூறினர். (எ௮)

கண்டுவிழுந்தெழுந்தாவிழிதுளிப்பவெழுகளிப்பென்னுங்கடலிலாழ்ந்து
விண்டுமொழிதழுதழுப்பவுடல்பனிப்பவன்புருவாய்விண்ணோர்வேந்த
னண்டர்பிரானருசசனைக்குவேண்டுமுபகரணமெலாமகல்வானெய்திக்
கொண்டுவரச்சிலரைவிடுத்தவரேகப்பின்னுமொருகுறைவுதீர்ப்பான்.

(இ-ள்.) விண்ணோர் வேந்தன் அன்பு உருவாய் கண்டு விழுந்து எழுந்து விழிதுளிப்ப - தேவர்களுக்கரசனாகிய இந்திரன் அன்பே ஒருவடிவமாய்த்தெரிசித்துப் பணிந்தெழுந்து கண்கள் ஆனந்தபாஷ்பஞ்சிந்த, எழு களிப்பு என்னும் கடலில் ஆழ்ந்து-கரைகடந்தெழாநின்ற களிப்பென்னுங்கடலிலழுந்தி, தழு தழுப்ப உடல் பனிப்ப மொழிவிண்டு - தனதுநாத் தழுதழுக்கவும் உடல்வேர்வரும்பவும் தோத்திரஞ்சொல்லி, அண்டர் பிரான் அருச்சனைக்கு வேண்டும் உபகரணம் எல்லாம்- தேவர்கள் தேவனாகிய சிவபெருமான் அருச்சனைக்குவேண்டிய வுபகரணங்கள்யாவையும், அகல்வான எய்தி கொண்டுவர சிலரைவிடுத்து - அகன்ற விண்ணுலகத்திற்சென்று கொண்டுவரச்சிலரையேவி, அவர் ஏக பின்னும் ஒரு குறைவு தீர்ப்பான்- அவர்கள் கொண்டுவரச்செல்லப் பின்னும் ஒருகுறைவுதீர்க்கக்கருதினான்.

தழுதழுத்தல்-நாப்பின்னுதல். குறைவாவது-சிவலிங்கபெருமான் விமானமின்றியிருத்தல். (௭௯)

தங்குடிமைத்தச்சனையோர்விமானமமைத்திட விடுத்தத்தடத்தின்பாற்போ, யங்கணனைக்கடி தருச்சித்திட நறியமலர்கிடையாதயர்வானந்தச், சங்கெறிதண்டிரைத்தடத்திலரனருளாற்பலபரிதிசலதியொன்றிற், பொங்குகதிர்பரப்பிமுளைத்தாலென்னப்பொற்கமலம்பூப்பக்கண்டான்.

(இ-ள்.) தம் குடிமை தச்சனை ஓர் விமானம் அமைத்திட விடுத்து - தமதுகுடிக்குரிய தேவதச்சனை (வருவித்து) ஓர் விமானஞ்செய்கவென ஏவி, அ தடத்தின்பால் போய் - அப்பொற்றாமரைத் தீர்த்தத்தினருகிற்சென்று, அங்கணனை கடிது அருச்சித்திட நறிய மலர் கிடையாது அயர்வான் - அழகிய கருணைநோக்கத்தையுடைய சிவபெருமானை விரைந்து அருச்சனைசெய்ய நல்லமலர்கிடையாமல் சோருகின்றவன், சங்கு எறி தண் திரை அந்த தடத்தில் - சங்குகளைவீசுந தண்ணிய அலைகளையுடைய அந்தத்தடாகத்தில், பல பரிதி சலதி ஒன்றில் பொங்கு கதிர் பரப்பி முளைத்தால் என்ன - பலசூரியர்கள் ஒருசமுத்திரத்தில்விளங்கும் கிரணத்தைப்பரப்பி உதயஞ்செய்தாற்போல, அரன் அருளால் பொன் கமலம் பூப்ப கண்டான்- சிவபெருமான் திருவருளால் பொற்றாமரைமலர்கள் மலர்ந்திருக்கப்பார்த்தான். ()

அன்புதலைசிறப்பமகிழ்ந்தாடினான் காரணத்தாலிதற்குநாம, மென்பது பொற்றாமரையென்றேழுலகும்பொலிகவெனவிசைத்துப்பின்னு, மின்பதுமத்தடங்குடைந்துபொற்கமலங்கொய்தெடுத்துமீண்டுநீங்காத், தன்பிணிநோய்தணியமுளைத்தெழுந்தமுழுமுதன்மருந்தின்றன்பால்வந்து.

(இ-ள்.) அன்பு தலை சிறப்ப மகிழ்ந்து ஆடினான் - அன்பு தன்னைவிழுங்கி மேலெழுந்தோங்கமகிழ்ந்து கூத்தாடி, காரணத்தால் - (பொற்றாமரைபூத்த) காரணத்தினால், இதற்கு நாமம் பொற்றாமரை என்று ஏழுலகும் பொலிக என இசைத்து - இதற்குத்திருநாமம் பொற்றாமரையென்று ஏழுலகிலும் விளங்கக்கடவதென்றுகூறி, பின்னும் மின் பதுமம் தடம் குடைந்து பொன் கமலம் கொய்து எடுத்து மீண்டு-மீளவும் விளங்கும் பொற்றாமரைத்தடாகத்தில் நீராடி (அங்குள்ள) பொற்றாமரைமலர்களைப் பறித்தெடுத்துத்திரும்பி, நீங்கா தன் பிணி நோய் தணிய முளைத்து எழுந்த முழுமுதல் மருந்தின் தன்பால் வந்து - நீங்காத தனதுபழிநோய்பற்றற முளைத்தெழுந்தருளிய முழுமுதலென்னும் ஓர்திருநாமத்தையுடைய பிறவிப்பிணிநீக்கும் மருந்தினிடத்துவந்து.

என்பது-இடைச்சொல். (௮௧)

மொய்த்தபுனக்காடெறிந் துநிலந்திருத்திவருமளவின்முளைத்தஞான
வித்தனையசிவக்கொழுந்தின் றிருமுடிமேற்பரிதிகரமெல்லத்தீண்டச்
சித்தநெகிழ்ந்திந்திரன்றன்வெண்கவிகைத்திங்கணிழல்செய்வானுள்ளம்
வைத்தனனப்போதிரவிமண்டிலம்போலிழிந்ததொருமணிவிமானம்.

(இ-ள்.) மொய்த்த புனம் காடு எறிந்து நிலம் திருத்தி வரும் அளவில் - நெருங்கியபுனங்களையுடைய காடுவெட்டி நிலந்திருத்திவரும்பொழுதில், முளைத்த ஞானம் வித்து அனைய சிவம் கொழுந்தின் திருமுடிமேல் பரிதி கரம் மெல்ல தீண்ட-முளைத்தருளிய சிவஞானவித்தையொத்த சிவக்கொழுந்தினுடைய திருமுடியின்மேல் சூரியனுடையகிரணம் மெல்லப்பரிசிக்கக்கண்டு, இந்திரன் சித்தம் நெகிழ்ந்து - தேவேந்திரன் மனமுடைந்து, தன் திங்கள் வெண் கவிகை நிழல் செய்வான் உள்ளம் வைத்தனன்-தனது சந்திரனையொத்த வெள்ளியகுடை நிழல்செய்யக்கருதினான், அப்போது ஒரு மணி விமானம் இரவி மண்டிலம் போல் இழிந்தது - அப்பொழுது ஒரு இரத்தின விமானம் (ஆகாயத்தினின்று) சூரியமண்டிலம் நிலவுலகி லிறங்கியதுபோல இறங்கியது.

சிவஞானமுதலிய நான்குஞானங்களும் அங்குரித்தற்கு ஓர்விதையாயிருத்தலால் ஞானவித்தென்றார். கரம் - சொல்லெச்சம். வித்து - கொழுந்து என்றது பொருள் முரணணி. (அஉ)

கிரியெட்டுமெனமழையைக்கிழித்தெட்டும் புழைக்கைமதிக்கீறுக்கோட
கரியெட்டுஞ்சினமடங்கலெட்டுமெட்டெட்டுக்கணமுந்தாங்க [டுக்
விரியெட்டுத்திசைபரப்பமயனிருமித்துதவியவவ்விமானஞ்சாத்தி
யரியெட்டுத்திருவுருவப்பரஞ்சுடரையருச்சிப்பானாயினானே.

(இ-ள்.) எட்டு கிரியும் என - அட்டகுலபருவதங்களின் றோற்றம்போல, மழையை கிழித்து எட்டும் - மேகமண்டலத்தைக்கிழித்து எட்டுந் தோற்றத்தையுடைய, புழைக்கை மதிக்கீறு கோடு கரி எட்டும் - துவாரம்பொருந்திய துதிக்கையையும் ஆத்தசந்திரனையொத்த கொம்புகளையுமுடைய அஷ்டகெசங்களும், சினம் நாலெட்டு மடங்கலும் - கோபத்தையுடைய முப்பத்திரண்டுசிங்கங்களும், எட்டெட்டு கணமும் தாங்க - அறுபத்துநாலு சிவகணங்களுஞ் சுமக்க, விரி எட்டு திசை பரப்ப-பரந்த எட்டுத்திசைகளிலும் பரவியிருக்கும்படி, மயன் நிருமித்து உதவிய அ விமானம் அரிசாத்தி-தேவதச்சன் நிருமித்துத்தந்த அவ்விமானத்தை யிந்திரன்சாத்தி, எட்டு திருவுருவம் பரஞ்சுடரை அருச்சிப்பான் ஆயினான்-எட்டுத்திருமூர்த்தத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை அருச்சிக்கத்தொடங்கினான்.

எட்டுத்திருவுருவம் பஞ்சபூதம், சந்திரசூரியர்கள், ஆன்மா எட்டும் என்னும் பெயரெச்சம். கரி என்றும் வினைமுதற்பொருள்கொண்டது. இடையிலுள்ளன-இடைப்பிறவரலாய்நின்ற சினையடைகள். இது தொழிற்பற்றிய வுவமையணி. (அ௩)

முந்தவமருலகடைந்துபூசனைக்குவேண்டுவனமுழுதுந்தேர்வார்
வந்துதருவைந்தீன்றபொன்னுடைமின்னுமிழுமணிப்பூண்வாசச்
சந்தனமந்தாகினிமஞ்சனந்தூமந்திருப்பள்ளித்தாமந்தீப
மந்தமிலானைந்துநறுங்கனிதீந்தேன்றிருவமுதமனைத்துந்தந்தார்.

(இ-ள்.) முந்த அமரர் உலகு அடைந்து பூசனைக்கு வேண்டுவன முழுதும் தேர்வார் வந்து - முற்பட விண்ணுலகிற் சென்று பூசைக்கு வேண்டும் உபகரணங

கள்யாண்வயுங் கொண்டுவரச்சென்றவர்வந்து, ஐந்து தரு ஈன்ற பொன் ஆடை மின் உமிழும் மணி பூண் வாசம் சந்தனம் - பஞ்சதருக்கள்கொடுத்த பீதாம்பரமும் பிரகாசத்தைவீசும் இரத்தினம்பதித்த ஆபரணமும் வாசத்தையுடைய சந்தனமும், மந்தாகினி மஞ்சனம் தூமம் திருப்பள்ளித் தாமம் தீபம் - கங்கைநீராகிய திருமஞ்சனமுந் தூபமுந் திருப்பள்ளித்தாமமுந் தீபமும். அமுதம் இல ஆன் ஐந்து நறும் கனி தீம் தேன் திருவமுதம் - அழிவில்லாத பஞ்சகவ்வியமும நறியகனியும் இனியதேனும் திருவமுதமுமாகிய, அனைத்தும் தந்தார் - யாவையுமகொடுத்தார்கள்.

அமரருலகு - அமருலகு தொகுத்தல்விகாரம். திருப்பளளித்தாமம் - பத்திர புஷ்பமாலைகள். (அ௪)

தெய்வத்தாமரைமுளைத்ததடமபடிந்துபவந்தொலைக்குந்திருநீறுடிச
சைவத்தாழ்வடந்தாங்கியன்புருவாயருளுருவந்தானுயததோனறும
பைவைத்தாடரவார்த்தபசுபதியையவனுரைததபனுவலாறறின
மெய்வைத்தாதரம்பெருகவருச்சனைசெயதானநதவெளளததாழந்தான்.

(இ-ள்.) தெய்வம் தாமரை முளைத்த தடம் படிநது - தெயவத்தனமையை யுடைய பொற்றாமரைமுளைத்த தடாகததில் ஸநானஞ்செயது, பவம தொலைக்கும் திருநீறு ஆடி - பிறப்பினையொழிக்குந் திருநீறுதரிந்து, சைவம தாழ்வடம தாங்கி - சைவவேடத்துக்குரிய வுருததிராககவடமணிநது, அன்பு உருவாய-தான் அன்பே வடிவாய்நின்று, அருளுருவம தானுய தோனறும பைவைதது ஆடு அரவு ஆர்த்த பசுபதியை - திருவருளே திருவுருவமாககொணடருளிய படததை விரித்தாடும் சர்ப்பத்தைக்கச்சாக இடையிறகட்டிய சோமசுநதரககடவுளை, அவனுரைதத பனுவல் ஆற்றின் - அவனருளிய ஆகமததினவழியே, மெய வைதத ஆதரமபெருக-உண்மையாகிய அன்புபெருக, அருச்சனை செய்து ஆனநத வெள்ளநது ஆழநதான-அருச்சித்து ஆனந்தவெள்ளத்தி லழுந்தினன்.

பசுபதி-பிரமன்முதலிய பசுககளுக்கு இறைவன். சைவம்-எனனுங்குறிப்பால் தாழ்வடம் - உருத்திராக்கததினமே னின்றது. வைதத - அகரவீறுதொகுததல்.()

பாராரவட்டாங்கபஞ்சாஙகவிதிமுறையாற்பணிந்துள்வாயமெய்
நேராகச்சூழ்ந்துடலங்கம்பிததுகுமபிட்டுநிருததஞ்செயது
தாராருந்தொடைமிதப்பவானந்தககண்ணருவிததுமபநின்றன்
பாராமைமீக்கொள்ளவஞ்சலிததுத்துதிககின்றனமராகோமான்.

(இ-ள்.) அமரர் கோமான் - தேவாகள் தலைவனுகிய இநதிரன், பார் ஆர அட்டாங்க பஞ்சாங்க விதிமுறையால் பணிந்து - நிலவுலகிற்பொருநத அஷ்டாங்க பஞ்சாங்க விதிமுறைப்படிவணங்கி, உள் வாய் மெய நேராக சூழ்ந்து - மனவாக்குக்காயங்கள் ஒன்றுபடப் பிரதக்ஷணஞ்செயது, உடலம கம்பிதது குமபிட்டு நிருத்தஞ்செய்து - பரவசத்தால் சரீரமநடுங்கிக் கைகூப்பி ஆனந்தக்கூத்தாடி, தார் ஆரும் தொடை மிதப்ப ஆனந்தம கண அருவி ததுமப நின்று - மார்பிலணிந்த மலராற்றொடுத்த மாலைமிதக்கும்படி ஆனந்தக்கண்ணருவியானது பெருக்கெடுக்க நின்று, ஆராமை அன்பு மீக்கொள்ள - சிவானந்த தெவிட்டாமையால் அன்பு மேலுமேலும் எழுந்தோங்க, அஞ்சலித்துத் துதிக்கின்றான் - அஞ்சலிசெய்து துதிக்கின்றவனாயினன்.

அட்டாங்க பஞ்சாங்கவிதிகளை முன்னர்க்கூறியதனுலுணர்க. (அ௬)

மேற்படி வேறு.

அங்கணாபோற்றிவாய்மையாரணாபோற்றிநாக
கங்கணாபோற்றிமூலகாரணாபோற்றிசெற்றிச
செங்கணாபோற்றியாதிசிவபரஞ்சுடரேபோற்றி
யெங்கணாயகனேபோற்றியீறிலாமுதலேபோற்றி.

(இ-ள்) அம் கண போற்றி-அழகியகிருபாநோக்கமுடையவனே வந்தனம், வாய்மை ஆரணா போற்றி — உண்மையாகிய வேதங்களை அருளிச்செய்தவனே வந்தனம், நாககங்கணா போற்றி - சர்ப்பகங்கணனே வந்தனம், மூலகாரணா போற்றி-மூலகாரணனே வந்தனம், செற்றி செங்கண போற்றி - நெற்றியினகண் செவந்த கண்களையுடையவனே வந்தனம், ஆதி சிவபரம் சுடரேபோற்றி - எல்லாவற்றிற்கு முதலாயுள்ளவனே நன்மையைத்தரும மேலான ஒளிப்பிழம்பே வந்தனம், எங்கள் நாயகனே போற்றி-எங்களிறைவனே வந்தனம், ஈறு இல்லா முதலே போற்றி-தனக் கோர் இறுதியில்லாத முதலே வந்தனம்

அன்றகண் ஆதலால-செங்கண் எனவும், முன்னர் ஆதி என்றமையால அழி வில்லாதவனென்றற்கு ஈறிலாமுதல் எனவுங்கூறினார் ஆதி-அணமையினி போற்றி-போற்றுதலென்னும் பொருண்மேனிற்றலால இகரவிகுதியொடு புணர்ந்துநின்ற தொழிற்பெயர் அன்றி வியங்கோட்பொருளிலவந்த யகரவீறுகெட்டுநின்ற வியங் கோள்முற்றெனக்கொள்ளுதலு மொன்று ஆதிக்கக்கடவேனென்றுபொருள்.தொ-எ-உயிர்மயங்கியல "வாழியவென்னுஞ் சேயெனகிளவி, யிறுதியகரங்கெடுதலுமுரித் தே" என்ற சூத்திரத்தால ஒன்றொன்முடித்தலாறகொள்க (அ௭)

யாவையும்படைப்பாய்போற்றியாவையுந்துடைப்பாய்போற்றி
யாவையுமானாய்போற்றியாவையுமல்லாய்போற்றி
யாவையுமறிந்தாய்போற்றியாவையுமறந்தாய்போற்றி
யாவையும்புணர்ந்தாய்போற்றியாவையும்பிரிந்தாய்போற்றி.

(இ-ள்.) யாவையும படைப்பாய போற்றி - எல்லாவற்றையுஞ் சிருட்டித்த வனேவந்தனம், யாவையும துடைப்பாய போற்றி - எல்லாவற்றையும அழிப்பவ னே வந்தனம், யாவையும ஆனாய போற்றி - எல்லாப்பொருள்களுமாயினவனே வ ந்தனம், யாவையும் அல்லாய போற்றி - எல்லாப்பொருள்களும் அல்லாதவனே வந் தனம், யாவையும அறிந்தாய போற்றி-எல்லாவற்றையும உணர்ந்தவனே வந்தனம், யாவையு மறந்தாய போற்றி - எல்லாவற்றையும அறியாதவனே வந்தனம், யாவை யும புணர்ந்தாய போற்றி - எல்லாவற்றிலும பிரியாதவனே வந்தனம், யாவையும் பிரிந்தாய போற்றி - எல்லாவற்றிலும பிரிந்தவனே வந்தனம

திருவருளே திருமேனியாகக்கொண்டு படைத்தலுந்துடைத்தலு மியற்றித்து யவுடம்பினனாய் நிற்றலால - யாவையும படைப்பாய யாவையுந் துடைப்பாய் என வும், யாவுந் தானாயவழி அவற்றின்வசத்தனாகாது தன்வசத்தனாய் நிற்றலால் யா வையுமானாய் எனவும, அவ்வவற்றினுணர்வாகாது இயற்கையுணர்வினனாய்நிற்ற லால் யாவையுமல்லாய் எனவும, முற்றுமுணர்தற்றன்மையால் யாவையும் அறி ந்தாய் எனவும, பேரருளுடையனாதற்றன்மையால யாவையுமறந்தாய் எனவும், யாவும்புணர்ந் தினபநுகர்விப்பான் எவற்றுள்ளும்புகுந்து நிற்கும் முடிவிலாற்றலு ம் வரம்பிலின்பமுடைமையும உடையனாய் நிற்றலால் யாவையும புணர்ந்தாய் என

வும், இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்றலால் யாவையும் பிரித்தாய் எனவும் கூறி ஞர். (அஅ)

இடருறப்பிணித்தவிந்தப்பழியினின்றென்னையீர்த்துன்
னடியிணைக்கன்பனுக்குமருட்கடல்போற்றிசேற்கண்
மடவரன்மணுளபோற்றிகடம்பமாவனத்தாய்போற்றி
சுடர்விடுவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி.

(இ-ள்.) என்னை இடர் உற பிணித்த இந்த பழியில் நின்று ஈர்த்து-என்னைத் துன்பமிக விடாதுபற்றிய இந்தப்பிரமகத்தியினின்றுவிடுவித்து, உன் அடியிணைக்கு அன்பன் ஆக்கும் அருள் கடல் போற்றி-உனது இரண்டுதிருவடிகளுக்கும் அன்பனுக்கிய கிருபாசமுத்திரமே வந்தனம், சேல் கண் மடவரல் மணுளபோற்றி-மீனுக்ஷியம்மையின் மணவாளனேவந்தனம், மா கடம்ப வனத்தாய் போற்றி - பெரியகடம்பவனத்தி லெழுந்தருளினவனே வந்தனம், சுடர்விடு விமானம் மேய சுந்தர விடங்க போற்றி - ஒளிவீசும் விமானத்தில் வீற்றிருக்கும் சோமசுந்தர விடங்கனே வந்தனம்.

விடங்கன்-உளிநீக்கமுள்ளவன். டங்கம் - உளி - இனைத்தெனவறிபொருளில் வந்த முற்றும்மைதொகுததல் (அக)

பூசையும்பூசைக்கேற்றபொருள்களும்பூசைசெய்யு
நேசனும்பூசைகொண்டுநியதியிற்பேறுநல்கு
மீசனுமாகிப்பூசையான்செய்தேனெனுமென்போத
வாசனையதுவுமானமறைமுதலடிகளபோறறி.

(இ-ள்.) பூசையும்-பூசனையும, பூசைக்கு எற்ற பொருள்களும் - அப்பூசைக்குத்தக்க திரவியங்களும, பூசை செயயும் நேசனும - அபபூசனைசெய்கின்ற அன்பனும், பூசைகொண்டு நியதியில் பேறு நல்கும் ஈசனும ஆகி-அப்பூசையைக் கைக்கொண்டு அதற்குத்தக்க பயனையுங்கொடுக்கும் இறைவனுமாகி, யான் பூசை செய்தேன் என்னும் என் போத வாசனை அதுவும ஆன-நான் பூசனை செய்தேனென்று கருதும் எனது தறபோதவாசனையுமாகிய, மறை முதல் அடிகள போறறி - வேதத்திற்குவித்தாகிய சுவாமிகளேவநதனம்.

ஆகமவிதி அறிநதுசெய்யும பூசனையும், அவற்றிறகுரிய வுபகரணங்களும், சார்புபற்றிய பத்திபோலாது மெயசசார்போடியைந்த பததியுடைமையும், அப்பத்திவழிபாடேற்றுப் பேறுநல்கும் ஈசனும், திருவருளாலன்றி யமையாவாகலான்-பூசையும் பூசைக்கேறறபொருள்களும் பூசைசெய்யநேசனும் பூசைகொண்டு நியதியிற் பேறுநல்கும் ஈசனுமாகி எனவும், அவ்வருட்பணியினே டொற்றுமைப்பட்டு நிற்கும் ஆன்மபோதத்தின்றன்மை அவனன்றிவேறன்மையான் என்போதவாசனையதுவும் ஆன அடிகள் எனவுங்கூறினா. (கூ0)

என்னநின்றேத்தினுனையின்னகைசிறிதுதோன்ற
முன்னவனடியாரெண்ணமுடிப்பவனருட்கணுேக்கா
லுன்னதுவேட்கையாதிங்குரையெனவிளையத்தாழ்ந்து
சென்னிமேற்செங்கைகூப்பித்தேவர்கோனிதனைவேண்டும்.

(இ-ள்.) என்ன நின்று ஏத்தினுனை - என்றுசொல்லி நின்றுதுதித்த இந்திரன்மேல், முன்னவன் - (எல்லாத்தேவர்களுக்கும்) முன்னவனும், அடியார் எண்

னம் முடிப்பவன் - அடியார்வேண்டி யாங்கு அருள்பவனுமாகிய சோமசுந்தரக்க டவுள், இன் நகை சிறிது தோன்ற-இனியபுன்னகை சிறிதரும்ப, அருட்கண் நோக் கால் - கிருபாநோக்கங்கொண்டு, உன்னது வேட்கை யாது இங்கு உரை என - உன து விருப்பம் யாது இங்குக்கூறுவாயென்றருள, தேவர்கோன் விரைய தாழ்ந்து செ ன்னிமேல் செங்கை கூப்பி இதனை வேண்டும் - தேவர்கட்கு அரசனாகிய இந்திர ன்விரைந்துபணிந்து சிரத்தின்மேல் தனது செவ்வந்தைகைகளைக்குவித்து இதனை வே ண்டாநிற்பான்.

ஐ-உருபுமயக்கம (கக)

ஐயநின்னிருக்கையெல்லைக்கணியனுமளவினீங்கா
வெய்யவென்பழியினோடுமேலைநாளடியேன்செய்த
மையல்வல்வினையுமாய்ந்துன்மலரடிவழுத்திப்பூசை
செய்யவுமுரியனானேன்சிறந்தபேறிதனைமேல்யாதோ.

(இ-ள்) ஐய நின் இருக்கை எல்லைக்கு அடியேன் அணியனும் அளவில்-ஐய னே உனது இருக்கையாகிய இந்தத்திருத்தலத்தின் எல்லைக்கு அடியேனாகிய யான் சமீபித்தவளவில், என் நீங்கா வெய்ய பழியும் - என்னினின்று நீங்காத கொடியபி ரமகத்தியும், மேலை நாள் செய்த மையல் வல் வினையு மாய்ந்து - முற்பிறப்பிற்செ ய்த மயக்கத்தைத்தரும் வலியதீவினையுங்கெட்டு, உன மலர் அடி வழுத்தி பூசை செய்யவும் உரியன் ஆனேன-உனது தாமரை மலர்போன்ற திருவடியை துதித்துப் பூசைசெய்யவும் உரியவனாயினேன, இதன மேல சிறந்தபேறு உண்டோ - இதற்கு மேல் சிறந்தபயன்யாதுளது, (இல்லையென்றபடி)

இத்தலத்தின் எல்லைக்கு அருகனுயவந்த அன்றே - பழியும் வினையும்நீங்கிய ஆராமையின் மேலீட்டால் கூறினவனாதலால் இதன் மேல்சிறந்தபேறுண்டோ என் ருன். ஓடு இசைநிறைத்தலிலவந்த இடைச்சொல. உம்மை வியப்புப்பொருள்மேல் நின்றது. (கஉ)

இன்னநின்பாதப்போதேயிவ்வாறேயென்றும்பூசித
துன்னடியாருளயாறுமோரடித்தொண்டனாவே
னன்னதேயடியேன்வேண்டத்தக்கதென்றடியில்வீழ்ந்த
மன்னவன்றனக்குமுக்கண்வரதனுங்கருணைபூத்து.

(இ-ள்.) இவ்வாறே இன்ன நின் பாதம போது என்றும பூசித்து - இப்படி யே இந்த வுனது திருவடித்தாமரைகளையே எப்பொழுதும்பூசனைசெய்து, உன் அடி யாருள யானும ஓர் அடித்தொண்டன் ஆவேன - உனது அடியவருள் நானும் ஒரு தாழ்ந்ததொண்டனாவேன், அன்னதே அடியேன வேண்டத்தக்கது என்று அடியில் வீழ்ந்த மன்னவன் தனக்கு-அதுவே அடியேன் குறையிரக்கததக்கது என்று தன து திருவடியில்விழுந்த இந்திரனுக்கு, முக்கண் வரதனும் கருணைபூத்து - திரிநேத்தி ரங்களையுடைய சிவபெருமானும கருணைகூர்ந்து.

வரதன்-அருட்கொடையையுடையவன். அடி-தாழ்மை-தாழ்ந்தகடைக்கு அ டிக்கடையென உலகவழக்கிலும், திருவாசகம், திருவண்டப்பகுதியில் - "அருட்பெ ருந்தீயிலடியோமடிக்குடில்" எனச்செய்யுள்வழக்கிலும்வருதல்காண்க. (கங)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இருதுவிற்சிறந்தவேனிலுமதியாறிரண்டினிற்சிறந்தவான்றகரும்
பொருவிறாளகையிற்சிறந்தசித்திரையுக்திதியினிற்சிறந்தபூரணையு

மருவுசித்திரையிற்சித்திரைதோறுமவந்துவந்தருச்சியோர்வருடந்
தெரியுநாண்முந்நூற்றறுபதுமைந்துஞ்செய்தவர்ச்சனைப்பயனெய்தும்.

(இ-ள்.) இருது வில் சிறந்த வேனிலும் - ஆறுபருவங்களுள் மேம்பட்ட வேனிற்பருவமும், ஆறிரண்டு மதியில் சிறந்த வான் தகரும் - பன்னிரண்டு மாதங்களுள் மேம்பட்ட பெருமை பொருந்திய மேடமாதமும, பொருவில தார கையில் சிறந்த சித்திரையும் - ஒப்பில்லாத நக்ஷத்திரங்களுள மேமபட்ட சித்திரை நக்ஷத்திரமும், திதியினில் சிறந்த பூரணையும - திதிகளுள மேமபட்ட பௌர்ணமி திதியும், (ஆகிய இவைகள்) மருவு சித்திரையில் சித்திரைதோறும வந்து வந்து அருச்சி-பொருந்திய அந்தச் சித்திரைமாதத்தில் சித்திரை நக்ஷத்திரந்தோறும வந்து வந்து அருச்சனைசெய், ஓர் வருடம் தெரியும முந்நூறும அறுபதும் ஐந்தும நாள் செய்த அர்ச்சனை பயன எய்தும - ஓர் வருடத்துக்கு வரையறுத்த முந்நூற்றறுபத்தைந்துநாளுஞ் செய்த வர்ச்சனைப பயனவந்து கைகூடும.

மருவும் நாள தோறும எனறது - சித்திரையிற் சித்திரைதோறும எனப் பின்னும் அனுவதித்தது - அந்நாட்பெருமையை வறபுறுத்தறகென அறிக. முந்நூற்றறுபத்தைந்து உம்மைத்தொகையாதலால முந்நூறுமென உம்மையைவிரித்தாம். செய்யுள் விகாரமெனினும அமையம (௩௪)

துறக்கநாடணைந்துசுத்தபல போகந்துய்த்துமேனமலபரிபாகம
பிறக்கநான்முகன்மாலமுதலபெருந்தேவர்பெருமபதத்தாசையும்பிறவு
மறக்கநாம்வீடுவழங்குதுமெனனவாயமலரந்தருளிவான்கருணை
சிறக்கநால்வேதசசிகையெழுமசோதிசிவபரஞ்சுடர்விடைகொடுத்தான்.

(இ-ள்.) துறக்கம நாடு அணைந்து-(உனக்குரிய) சுவர்க்க நாட்டிற் சென்று, சுத்த பல் போகம் துய்த்து - புனிதமாகிய பலபோகங்களையு நுகர்ந்து, மேல் - அதற்குமேல், மலபரி பாகம் பிறகக - மலபரிபாகம் வர, நானமுகன் மால் முதல் பெரும் தேவர் பெரும பதத்து ஆசையும பிறவும் மறகக-பிரமன திருமால் முதலிய பெரிய தேவர்களுடைய பெரிய பதஙகளிலுள்ள போகங்களையும் மற்றப்போகங்களையும் மறக்கும்படி, நாம் வீடு வழங்குதும என்ன வாயமலர்ந்தருளி-நாம மோக்ஷந் தருவோமென்று திருவாயமலர்ந்தருளி, நாலவேதம சிகை எழும் சோதி சிவபரஞ் சுடர் - நான்கு வேதங்களினுச்சியில் விளங்கும சோதியாகிய சோமசுந்தரக்கடவுள், வான் கருணை சிறகக விடை கொடுத்தான - பெருங்கருணை மீதூர விடை கொடுத்தருளினன். (௩௫)

மூடினன்புளகப்போர்வையால்யாக்கைமுடிமிசையஞ்சலிகமலஞ்
சூடினன்வீழ்ந்தானெழுந்துகண்ணருவி துளும்பினன்பன்முறைதுதிசெய்
தாடினனையனடிபிரிவாற்றாதஞ்சினனவனருளாணை
நாடினன்பிரியாவிடைகொடுதுறக்கநண்ணினன்விண்ணவர்நாதன்.

(இ-ள்.) விண்ணவர் நாதன் - தேவர்கள் தலைவனாகிய இந்திரன், புளகப் போர்வையால் யாக்கை மூடினன் - புளகமாகிய போர்வையினால் உடல் முழுதும் போர்க்கப்பட்டான், முடி மிசை அஞ்சலி கமலம் சூடினன்-(தனது) முடியின்மேற் கைகளைக் கூப்பினன், வீழ்ந்தான்-(ஆராமையால்) தண்டாகாரமாய் விழுந்து பணிந்தான், எழுந்து கண் அருவி துளும்பினன் - புணிந்தெழுந்து கண்ணினின்று ஆனந்த வெள்ளஞ் சொரிந்தான், பல் முறை துதி செய்து ஆடினன்-பலதரந் துதிசெய்து

**ஆனந்தக்கூத்தாடினான், ஐயன் அடி பிரிவு ஆற்றாது அஞ்சினான் - சோமசுந்தரக் கடவுளுடைய திருவடி பிறழப் பிரிவுக்கு ஆற்றாமல் அஞ்சினான், அவன் அருள் ஆணை நாடினான் - அச்சோமசுந்தரக்கடவுள் தனக்கருளிய திருவாணையை மனத்திற்கருதி, பிரியா விடை கொடு துறக்கம் நண்ணினான் - (அதைக் கடக்கக் கூடாமையால்) பிரியாவிடைகொண்டு சுவர்க்கலோகத்தை யடைந்தான்.**

திருவாணையாவது - முன்னுள்ள செய்யுளிற் கூறியது. பிரியாவிடைகொண்டென்றது - பலபோகம் நுகரும் இடத்தும், சிவபோகம் நுகரும் இடத்தும் அவனது திருவருளின் வழியே நின்று நுகராவதாதலால் பிரியாவிடை கொடு நண்ணினான் என்றார். இவ்விரண்டுள் முன்னுள்ளதைப் பின்னர் வருஞ் செய்யுளிற்காண்க. (கசு)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

வந்தரமங்கையர்கவரிமருங்குவீசமந்தாரங்கற்பகம்பூமாரிதூற்ற, வந்தரநாட்டவர்முடிகளடிகள்சூடவயிராணிமுலைத்தடந்தோய்ந்தகலந் திண்டோள், விந்தமெனச்செம்மாந்துவிம்முகாமவெள்ளத்துளுடலழுந்தவுள்ளஞ்சென்று, சுந்தரநாயகன்கருணைவெள்ளத்தாழ்ந்துதொன்முறையின் முறைசெய்தான்றுறக்கநாடன்.

(இ-ள்) அரமங்கையர் மருங்கு வந்து கவரி வீச - அரம்பைமாதர்கள் தனது பக்கத்தில் வந்து சாமரை யிரட்டவும், மந்தாரம் கற்பகம் பூமாரி தூற்ற - மந்தாரமுங் கற்பகமும் புஷ்பவருஷஞ் சொரியவும், அந்தர நாட்டவர் முடிகள் அடிகள் சூட - (தன்னைத் தெரிசிக்கவந்த) தேவர்கள் முடிகள் தனது பாதங்களைச் சூடவும், அயிராணி தடம் முலை தோய்ந்து அகலம் திண் தோள் விந்தம் என செம்மாந்து - இந்திராணியினுடைய பெரிய தனங்களிலழுந்தி மார்பமும் திணிய தோள்களும் விந்த பருவதம்போல இறுமாப்படைய, விம்மு காம வெள்ளத்துள் உடல் அழுந்த - அளவிறந்த காமப்பெருக்கில் தனது உடலழுந்தவும், உள்ளம் சென்று சுந்தரநாயகன் கருணை வெள்ளத்து ஆழ்ந்து - தனது மனஞ்சென்று சோமசுந்தரக் கடவுளுடைய திருவருள் வெள்ளத்திலழுந்தவும், துறக்க நாடன் தொல் முறையில் முறை செய்தான் - தேவேந்திரன் முன்பு நடத்திய முறைப்படியே அரசியல் நடத்திவந்தான்.

செம்மாந்து ஆழ்ந்து - செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சத்திரிபுகள். மந்தாரம் கற்பகம் என்றமையால் இனம்பற்றிய சந்தானம், அரிசந்தனம், பாரிசாத மென்னும் மூன்றுதேவதருக்களும் பூமாரி தூற்றின எனக்கொள்க. (கஎ)

இந்திரன்பழிதீர்த்தபடலம் முற்றிற்று.



ஆகப்பாயிரம் உட்பட திருவிருத்தம் - உஙக

## இரண்டாவது

# வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

மட்டவிழுங்கொன்றைச்சடையான்மகவானைத்
தொட்டபழியின்றொடக்கறுத்தவாறோதிப்
பட்டமதவேழம்பரனைப்பராய்முனிவ
னிட்டகொடுஞ்சாபநீத்தேகியவாறோதுவாம்.

(இ-ள்.) மட்டு அவிழும் கொன்றை சடையான் - தேனொடுமலர்ந்த கொன்றைமலர்மாலையை யணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள், மகவானை தொட்ட பழியின் தொடக்கு அறுத்த ஆறு ஓதி - இந்திரனை விடாதுபற்றிய பிரமகத்தியின் கட்டினை முற்று மொழித்த வகையை யெடுத்துக்கூறி, பட்டம் மதம் வேழம் - நெற்றிப்பட்டத்தையும் மதத்தையும் உடைய ஐராவதமாகிய வெள்ளையானை, பரனை பராய் - அச்சோமசுந்தரக்கடவுளை வணங்கி, முனிவன் இட்ட கொடும் சாபம் நீத்து ஏகிய ஆறு ஓதுவாம் - துருவாசமுனிவரிட்ட கொடிய சாபத்தை யொழித்து (தனதுஉலகில்) சென்ற சரிததிரமாகிய திருவிளையாடலைச் சொல்லுவோம்.

மட்டவிழுங்கொன்றை - முதல் சினைக்கு ஒற்றுமையுண்மையால் சினைவினையை முதன்மேலேற்றி மட்டவிழுங் கொன்றையென்றார். (க)

கருவாசனைகழிக்குங்காசிநகர் தன்னிற்
றுருவாசவேதமுனிதொல்லாகமத்தின்
பெருவாய்மையாற்றன்பெயர்விளங்கவீச
னொருவாவிலிங்கவொளியுருவங்கண்டான.

(இ-ள்.) கருவாசனை கழிக்கும் காசி நகர் தன்னில் - சனனவாசனையாகிய இருவினையை யொழிக்குங் காசிக்ஷேத்திரததில், வேதம துருவாசமுனி - வேதங்களை யுணர்ந்த துருவாசமுனிவர், தொல் ஆகமததின் பெருவாய்மையால - தொன்று தொட்டுள்ள ஆகமத்தின் பெரிய வுண்மைவாக்கியததால், தன் பெயர் விளங்க-தமது பெயர்விளங்கும்படி, ஈசன் ஒருவா ஒளி இலிங்க உருவம கண்டான்-சிவபெருமான் சிறிதும் நீங்காத ஒளிவடிவமாகிய சிவலிங்கப்பிரதிஷ்டை யொன்று செய்தார்.

கருப்பவாசனை - துருவாசமெனப் புஷ்பாஞ்சலியில்வந்த காரணம்பற்றித் துருவாசனெனப் பெயர்வந்ததுஎன அறிக. ஆகமம பதிவாக்கியமாகலின் - பெருவாய்மை என்றார். (உ)

இன்புற்றருச்சனைசெய்தேத்துவானவ்வேலை
யன்புக்கெளியனருளாற்றிருமுடிமேன்
மின்பொற்கடிக்கமலப்போதொன்றுவீழ்ந்திடலுந்
தன்பொற்கரகமலப்போதலர்த்தித்தாங்கினான்.

(இ-ள்.) இன் புற்று அருச்சனை செய்து ஏத்துவான் - மகிழ்ந்து (தாம் பிரதிஷ்டை செய்த சிவலிங்கப்பெருமானை) அருச்சித்துத் துதிக்கத் தொடங்கினார், அ வேலை - அப்பொழுது, அன்புக்கு எளியன் அருளால் திருமுடிமேல் மின் பொன் கடி கமலம் போது ஒன்று வீழ்ந்திடலும் - அடியவரன்புக் கெளியவனாகிய சிவபெ

குமாறுடைய திருவருளினுல் (அவனது) திருமுடியினின்று விளங்கும் பொன்னிறத்தையும் வாசனையையுமுடைய தாமரைமலரொன்று வீழ, தன் பொன் காகமலம் போது அலர்த்தி தாங்கினுன் - தமது பொன்மயமாகிய கைத்தாமரைகளை விரித்து ஏந்தினர்.

அடியார் அன்பின் வலையி லகப்படுவோனுதலால் - அன்புக்கெளியன் என்றார். திருவாசகம் திருவண்டபபகுதியில் - " பத்திவலையிற் படுவோன்காண்க " என வருதல் காண்க. மேல் உருபுமயக்கம். (௩)

தாங்கிக்கண்சென்னிதடமார்பணைத்துடலம்
வீங்கித்தலைசிறந்தமெய்யுவகைமேறகொள்ள
நீங்கிக்கழிந்தகருணைநிதியனையான்
பூங்கறபகநாட்டிறபோகின்றனவ்வேலை.

(இ-ள்.) தாஙகி கண சென்னி தடம மார்பு அணைதது உடலம் வீங்கி-(கரகமலத்தில்) ஏந்தித் தமது கண்களிலுஞ் சிரத்திலும பரந்த மார்பிலும் ஒற்றிச் சரீரம் பூரிதது, தலை சிறந்த மெய் உவகை மேல் கொள்ள நீங்கி - மேலெழுந்தோங்கிய உண்மையாகிய மகிழ்ச்சி மீதூர (அவ்விடததினின்று) நீங்கி, கழிந்த கருணை நிதி அனையான - மிககதிருபையால் சங்கநிதியை யொதத அருவாசா, பூ கற்பகம் நாட்டில் போகின்றுன - பொலிவையுடைய கறபக விருக்ஷம்பொருநதிய விண்ணுலகத்தில் செல்லுகின்றவராயினுா, அவ்வேலை - அக்காலையில்.

முதல்சினைக்கு ஒற்றுமையுண்மையால் வீங்கியென்னுஞ் சினைவினை நீங்கியென்னும் முதலவினையின முதனிலையோடு முடிநதது. (௪)

சஙகலறசசெங்களததுத்தானவரைத்தேய்ததுவிறற்
கொஙகலாதார்வேயந்தமராகோமான்றன்கோநகரிற்
செஙகணமராபெருஞசேனைக்கடல்கலிப்ப
மஙகலபபலலாண்டுமறைமுழங்கவந்தணைவான்.

(இ-ள் ) அமரர் கோமான் - இநதிரன், சஙகு அலற செம் களத்து தானவரை தேய்த்து - வெறறிச்சங்கமுழஙகப் போர்க்களததில் அசுரரைச் சிதைத்து, கொங்கு அலர் விறல தாா வேயநது - மகரந்தததொடு மலாநத வெறறிமாலையைச் சூடி, பெரு செம கண அமரா சேனை கடல் கலிப்ப - அளவிறநத கோபக்கண்களையுடைய தேவசேனுசமுத்திரம (ஒருபால்) முழங்கவும், மங்கலம் பல்லாண்டு மறை முழஙக - மங்கலப்பாட்டாகிய வாழ்த்தும வேதமும (ஒருபால்) முழங்கவும், தன் கோ நகரில்வந்து அணைவான-தனது அரசததனமையுடைய நகரத்தில்வந்து அடைகின்றவன.

ஏனை நகரஙகளுட்சிறந்த நகராதலில் கோநகர் என்றார். (௫)

எத்திக்குங்கல்லென்றியஙகலிப்பவேந்திழையார்
தித்திததமுதொழுகுஙகீதஞ்செவிமடுப்பப்
பத்திக்கவரிகிளாதானைப்படுகடலிற்
றத்திப்புரளுந்திரைபோற்றலைபனிப்ப.

(இ-ள்.) எத்திக்கும் கல் என்று இயம் கலிப்ப - எல்லாத் திக்குகளிலும் கல்லென்கிற ஒலிக்குறிப்போடு வாச்சியங்கள் (ஒருபால்) முழங்கவும், ஏந்திழையார் தித்தித்த அமுது ஒழுகும் கீதம் செவிமடுப்ப - தேவமாதர் பாடும் மதுரித்த வமுத

ஞ் சிந்தும் இசையானது (ஒருபால்) தனது காதில் மடுக்கவும், பத்தி கவரி நிரை - (ஒருபால்) வரிசையாகச் சாமரைக்கூட்டங்கள், தானை படு கடலில் தத்தி புரளும் திரைபோல் தலை பனிப்ப - சேனையாகிய வளப்ப மிக்க கடலுள் தவழ்ந்து புரளா நின்ற அலைகளைப்போல அசையவும்.

தித்தித்த அகரவீறுதொகுத்தல். (சு)

அங்கட்கடலினெடுங்கூம்புநிமிர்ந்த
வங்கத்தலையுய்க்குமீகான்றனைமானத்
திங்கட்குடைநிழறறத்தீந்தேமதங்கவிழ்க்கும்
வெங்கட்களிற்றின்மிசைப்பவனிபோந்தணைந்தான்.

(இ-ள்.) அம் கண் கடலில் - அழகிய இடததையுடைய கடலில், அகம் நெடும் கூம்பு நிமிர்ந்த வங்கம் தலை உய்க்கும் மீகான் தனை மான - தன்னிடத்து நெடிய பாய்மரம் ஓங்கிய மரக்கலத்தின தலையினின்று செலுததும் மாலுமியை யொப்ப, திங்கள் குடை நிழற்ற-சநதிரனையொதத வெள்ளிய குடை நீழல்செய்ய, தீம் தேம் மதம் கவிழ்க்கும் வெமகண் களிறறின மிசை பவனி போந்து அணைந்தான் - இனியமதத்தைக் கவிழ்க்கும் அஞ்சாமையையுடைய வெள்ளையானையின்மேல் பவனிவந்தனன்.

பவனிபோதல் - உலாப்போதல். தீம் தேம - ஒருபொருட்பன்மொழி. இனிய வாசனையையுடைய - எனப்பொருள கொள்ளுதலுமொன்று. வெம கண - சினையுடையாகிய வெம்மை தாக்ஷணியம் இன்மைமேனிறறலால் அஞ்சாமை என்றும். கூம்பினை - வெண்குடையாகவும், வங்கம் - வெள்ளையானையாகவும, அதன் தலை - அவ்வானையின் பிடராகவும கூட்டி ஒபபுமைக்கூடட வணியாகக்கொளக. (எ)

அத்தலைவிண்ணோடாருகணைந்துவெவ்வேறு
தத்தமனக்கிசைந்தகையுறைகடாஙகொடுத்துக
கைத்தலங்கள்கூப்பினாகண்டான்கட வுளரி
லுத்தமனையர்சசித்துபபோந்தமுனியுததமனும்.

(இ-ள்.) அ தலை-அவ்விடததில், விண்ணோடர் அருகு அணைந்து தத்தம் மனக்கு இசைந்த வெவ்வேறு கையுறைகள தாம கொடுதது கைத்தலங்கள கூப்பினர் - தேவர்கள் இந்திரனருகில் வநது தங்கள தங்கள் மனத்துககிசைந்த வெவ்வேறு வகைப்பட்ட கையுறைகளைக் கொடுததுத் தமது கைகளைக் கூப்பிததொழுதார்கள், கடவுளரில் உத்தமனை அர்ச்சிதது போநத முனி உததமனும் கணடான் - தேவர்களுள் சிரேஷ்டனாகிய சிவபெருமானை யருச்சனை செய்துவந்த முனிவருள சிரேஷ்டராகிய துருவாசமுனிவரும் (அப்பெருமகிழச்சி யாரவாரத்தைப) பார்ததார்.(அ)

தீங்கரியவாசிமொழிசெபபிததன்செஙகரத்தி
னீங்கரியதாமரையைநீட்டினான்மற்றதனைத்
தாங்கரியசெலவத்தருக்காலோர்கையோசசி
வாங்கிமதயானையின்மேல்வைத்தான்மதியில்லான்.

(இ-ள்.) தீங்கு அரிய ஆசி மொழி செப்பி - தீங்கில்லாத வாழ்த்து வசனங் கூறி, தன் செம் கரத்தில் நீங்கு அரிய தாமரையை நீட்டினான் - தமது செவந்த கரத்தினின்று நீங்காத தாமரைமலரைக் கொடுத்தார், அதனை - அக்கையுறையாகிய தாமரைமலரை, தாங்கு அரிய செல்வம் தருக்கால் - பெறுதற்கரிய பெருஞ் செல்

வச்செருக்கினால், மதியில்லான் ஓர் கை யோச்சி வாங்கி மதம் யானையின் மேல் வைத்தான் - அறிவில்லாதவனாகிய தேவேந்திரன் ஒருகையை நீட்டி வாங்கி மதத்தையுடைய வெள்ளையானையின்மேல் வைத்தான்.

அரிய என்னும் பெயரெச்சத்தின் முதனிலையாகிய அருமை - இன்மைமேனின்றது. சிவபெருமானை அருச்சித்துப்பெற்றமலராதலால் செங்கரத்தில் நீங்கரிய எனவும், தேவர்கள் கையுறைகொடுத்ததுபோலாது தமது கையுறை அவனதுசெல்வம் மேன்மேலும் பெருகச்செய்விப்பதாதலால தாமரையைநீட்டினான் எனவுங்கூறினர். (௯)

கீறிக்கிடந்தமதியனையகிம்புரிக்கோட்
டேறிக்கடங்கவிழுகக்குமாலயானையுச்சியினமே
னாறிக்கிடந்தநறுமலரைவீழ்த்தியுரற
சீறிக்கிடந்தநெடுந்தாளாற்சிதைத்ததன்றே.

(இ-ள்.) கீறி கிடந்த மதி அனைய கிம்புரி கோடு - பிளவுபடுத்திய சந்திரனையொத்த பூணணிந்த கொம்புகளையுடைய, ஊறி கடம கவிழ்க்கும் மால் யானை - ஊற்றெடுத்து மதத்தைககவிழ்க்கும மயக்கங்கொண்ட அந்தவெள்ளையானை, உச்சியினமேல் நாறி கிடந்த நறுமலரை வீழ்த்தி - தனது தலையின்மேல் மணம்வீசிக்கொண்டிருந்த நல்லதாமரைமலரைக்கீழேதள்ளி, உரல் சீறி கிடந்த நெடும் தாளால் சிதைத்தன்று - உரலொடுமாறுபட்ட தனது நெடியகாலால் தேய்த்தது. (௧௦)

கண்டான்முனிகாமறகாய்ந்தானுதற்கண்போல்
விண்டாரழல்சிதறநோக்கினான்வெங்கோபங்
கொண்டானமரரொதுங்ககொதித்தால
முண்டானெனநின்றுருத்தானுரைக்கின்றான்.

(இ-ள்) முனிகண்டான் - (யானைதேய்த்ததை) துருவாசமுனிவர்பார்த்து, காமன் காய்ந்தான நுதல் கண் போல ஆர் அழல விண்டு சிதற நோக்கினான் வெம் கோபம் கொண்டான் - மன்மதனையெரித்த சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிலுள்ள தீபோல அரியதீப்பொறிகள் சிந்தப்பார்த்துக் கொடியகோபங்கொண்டார், அமரர் ஒதுங்க கொதித்து - தேவர்கள் பயந்து ஒதுங்கப் பொங்கி, ஆலம் உண்டான் என நின்று உருத்தான் உரைக்கின்றான் - விடமுண்ட உருத்திரமூர்த்திபோல நின்றுகோபித்துச்சொல்லுகின்றார்.

கண்டான், நோக்கினான், உருத்தான என்னு முற்றுகள் எச்சமாய்நின்றன.

புள்ளியதோலாடைபுனைந்தரவப்பூணணிந்த
வெள்ளியசெங்கண்விடையானடிக்கமல
முள்ளியமெய்யன்புடையாரருவருக்கத்
தள்ளியசெல்வந்தருக்கினையென்செய்தாய்.

(இ-ள்.) புள்ளிய தோல் ஆடை புனைந்து அரவம் பூண் அணிந்த செம் கண் வெள்ளிய விடையான் - புள்ளிகளையுடைய புலித்தோலாகிய ஆடையையுடுத்துச் சர்ப்பாபரணங்களையணிந்த சிவந்தகண்களையுடைய வெள்ளிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது, அடி கமலம் உள்ளிய மெய் அன்புடையார் - பாததாமரையைக்கருதிய உண்மையாகிய அன்பினையுடைய அடியார்கள், அருவருத்து தள்ளிய செல்வம் தருக்கினாய் என் செய்தாய் - வாந்தியசனம்போலக் கருதிக்களைந்த செல்வச்செருக்கினையுடைய பேதையே நீ என்ன காரியஞ்செய்தாய்.

அழிவில்லாத சிவபோகம் றுகரும் மெய்யன்பர்க்கு-அழியுந்தன்மையதாகிய இந்திரபோகம் பொய்ப்போகமாக முடிதலின் மெய்யன்பர் அருவருத்துத்தள்ளிய செல்வம் என்றார். திருவாசகம் - திருச்சதகம் - ஆனந்தத்தழுந்தல்.

"போகம்வேண்டிவேண்டிலேன்புரந்தராதியின்பமு
மேகநின்கழலிணையலாதிலேனெனெம்பிரா
னாகம்விண்டுகம்பம்வந்துகுஞ்சியஞ்சலிக்கணே
யாகவென்கைகண்கடாரையாறதாகவையனே."

எனவருந் திருப்பாசுரத்தானுணர்க. (௧உ)

கதிர்த்தார்முடியமரர்கையுறையேநன்கு
மதித்தாயெம்மீசன்மதிமுடிமேற்சாத்தும்
பொதித்தாதவிழ்மலரைப்போற்றாதுவாங்கி
மிதித்தானைசிந்தவதன்மேலவைத்தாய்பேதாய்.

(இ-ள்.) பேதாய் - அறிவில்லாதவனே, கதிர் தார் முடி அமரர் கையுறையே நன்கு மதித்தாய் - விளங்குதலையுடைய மாலைபுனைந்த மகுடந்தரித்த தேவர்கள்கொடுத்த கையுறைகளையே நன்குமதித்து, எம் ஈசன் மதிமுடிமேல் சாத்தும் பொதி தாது அவிழ்மலரை போற்றாதுவாங்கி - எமதுபெருமானுடைய சந்திரனையணிந்த திருமுடிமேல் சாத்திய பொதிதலையுடைய மகரந்தத்தோடு மலர்ந்ததாமரைமலரை நன்குமதியாதுவாங்கி, ஆனை மிதித்து சிந்த அதன்மேல் வைத்தாய்-வெள்ளையானை காலால்மிதித்துத் தேய்க்கும்படி அதன்மேல்வைத்தாய்.

கையுறை - கையில்வரப்பெறுவதென்னும் பொருண்மேனிறறலால் செயப்படுபொருளில்வந்த தொழிற்பெயர். (௧௩)

வண்டுளருந்தண்டுழாயமாயோனிறுமாப்பும்
புண்டரிகப்போதுறையும்புத்தேளிறுமாப்பு
மண்டர்தொழவாழுன்னிறுமாப்புமாலால
முண்டவனைப்பூசித்தபேறென்றுணர்ந்திலையால்.

(இ-ள்.) வண்டு உளரும் தண் துழாய் மாயோன் இறுமாப்பும் - வண்டுகள் கிளரும் தண்ணியதுழாய்மாலையையணிந்த திருமாலினுடைய செல்வக்களிப்பும், புண்டரிகம் போது உறையும் புத்தேள் இறுமாப்பும் - தாமரைமலரில்வசிக்கும் பிரமனுடைய செல்வக்களிப்பும், அண்டர் தொழ வாழ் உன் இறுமாப்பும்-தேவர்கள் வணங்கவாழும் உன்னுடையசெல்வக்களிப்பும், ஆலாலம் உண்டவனை பூசித்தபேறு என்று உணர்ந்திலை - விடத்தையுண்டருளிய சிவபெருமானை அருச்சித்தலால்வந்தபயனென்று நீ சிறிதும் அறியாது போயினாய்.

இறுமாப்பு - மிக்கமகிழ்ச்சி. பிரமன்முதலியோர் சுதந்திரமில்லாத பசுக்கூட்டங்களுள் அடங்கினவராதலால் பதியினருள் வழிநின்று தத்தமக்குரிய அதிகாரசத்திமுதலிய பேறுகளைப்பெறப்பூசித்து அடைந்தவராதலால் ஆலாலமுண்டவனைப்பூசித்தபேறு என்றார். திருவாசகம் - திருச்சதகம்-அறிவுறுத்தலில் - "வாழ்த்துவதும்வானவர்க டாம்வாழ்வான்மனநின்பாற், றாழ்த்துவதுந்தாமுயர்ந்து தம்மையெல்லாந்தொழவேண்டி" எனவருந் திருப்பாசுரத்தானுணர்க. (௧௪)

சேட்டானைவானவநின்சென்னிசெழியரிலோர்
வாட்டானைவீரன்வளையாற்சிதறுகநின்
கோட்டானைநாற்கோட்டவெண்ணிறத்தகுஞ்சரமுங்
காட்டானையாகவெனவிட்டான்கீடுஞ்சாபம்.

# வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

(இ-ள்.) சேடு ஆனை வானவ-பெரியவெள்ளையானையையுடைய இந்திரனே, நின் சென்னி செழியரில் ஓர் வான் தானை வீரன் வளையால் சிதறுக என - உனது தலை பாண்டியர்மரபில்வரும் ஒப்பில்லாத வானோங்கிய சேனையையுடைய வீரனது சக்கரத்தால் சிதறக்கடவது எனவும், நின் கோள தானம் நால் கோட்ட வெள் நிறத்த குஞ்சரமும்-உன்னுடையவலிமையும் மதத்தையும் நான்குகொம்புகளையும் வெள்ளியநிறத்தையுமுடைய யானையும், காட்டானை ஆக என கடும் சாபம் இட்டான்-காட்டானையாகக்கடவதெனவும் கொடியசாபம் இட்டார்.

வேறுபலவடுக்கிய நாற்கோட்டவெண்ணிறத்த என்னுங்குறிப்பு வினைப்பெயரெச்சங்கள் குஞ்சரமென்னு முடிபுகொண்டு நாற்கோட்ட குஞ்சரம் வெண்ணிறத்தகுஞ்சரம் என நின்றன உம்மை-இறந்ததுதழீஇய வெச்சப்பொருட்டு. (கரு)

சவித்தமுனிபாதந் தலைக்கொண்டு செங்கை
குவித்தமரர் தங்கோன் குறைவிரப்பா ரைய
வவித்தபொறியா யெம்மரசுங் காறளுஞ்
செவித்தறுகண் வேழமு நீங் குடையரன்றே.

(இ-ள்) அமரர் - தேவர்கள், சவித்தமுனிபாதம் தலைக்கொண்டு செம் கை குவித்து - சபித்த துருவாசமுனிவருடைய பாதங்களைத் தமது தலைமேற்கொண்டு சிவந்தகைகளைக்கூப்பி, தம் கோன் குறை இரப்பார் - தமது அரசனாகிய இந்திரன்செய்த குறைகளைச்சொல்லி யிரப்பவர், ஐய-ஐயனே, பொறி அவித்தாய் - ஐம்பொறிகளைக்கெடுத்தவனே, எம் அரசும் - எங்களுடைய அரசனும், கால் தளும் செவி தறுகண் வேழமும் - காற்றைவீசுங்காதையும் அஞ்சாமையையுமுடைய வெள்ளையானையும், (அபசாரஞ்செய்தமையால்) நீங்கு உடையர் அன்றே - குற்றமுடையரல்லவர்.

தணியுகூறப்புகுவோர் தமது குற்றத்தை முன்பு கூறுவாராதலால் எம்மரசும் வேழமும் நீங்குடையரன்றே எனக்கூறினார் ஆய - என்னு முன்னிலையொருமை விகுதியைப்பிரித்து அவித்த என்பதனோடு கூட்டுக அரசு சொல்லால் அஃறிணையாயினும், பொருளால் உயர்திணையாதலால் திணைவிரவிச் சிறப்பினால் உயர்திணைமுடிபு தந்தார். (கசு)

அத்தகையநீரால் சபித்தீரடிகேள் மற்
றித்தகைய சாபமினி விடுமினென் றிரந்து
கைத்தலங்கள் கூப்பிக்கரைந்தார்க் கிரங்கியருள்
வைத்தமுனி பிறிது சாபம் வகுக்கின்றான்.

(இ-ள்.) அடிகேள் - சுவாமிகளே, அத்தகையநீரால் சபித்தீர் - அத்தன்மையான குற்றங்களால் சபித்தருளினீர், இனி இத்தகைய சாபம் விடுமின் என்று - இப்பொழுதே இத்தன்மையையுடைய சாபங்களை யொழித்தருளுமென்று, இரந்து கைத்தலங்கள் கூப்பி கரைந்தார்க்கு - குறைகூறிக் கைகளைக்குவித்து முறையிட்ட அத்தேவர்களின்பொருட்டு, இரங்கி அருள்வைத்த முனி-மனமிரங்கிக் கிருபைகூர்ந்த அத்துருவாசமுனிவர், பிறிது சாபம் வகுக்கின்றான்-வேறுசாபம் வகுக்கின்றார்.

குற்றமும் பண்புளடங்குதலால் நீராலென்றார். இனி என்னும் இடைச்சொல் இப்பொழுது என்னும் பொருள்மேல் நின்றது. "இன்னினியேநின்றான்" எனவருதலால் உணர்க. (கஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்

சிந்தனைவாக்கிற்கெட்டாச்சிவனருளளித்தசேட
நிந்தனைபரிகாரத்தானீங்காதுதலைமட்டாக
வந்ததுமுடிமட்டாகமத்தமாவனமாவாகி
யைந்திருபஃதாண்டெல்லையகன்றபின்பண்டைத்தாக.

(இ-ள்.) சிந்தனை வாக்கிற்கு எட்டாத சிவன் அருள் - மனவாக்குக்கெட்டாத சிவபெருமானுடைய திருவருள், அளித்த சேட நிந்தனை பரிகாரத்தால் நீங்காது - கொடுத்தருளிய சேடத்திலுள்ள அவமதிப்பு மற்றொருபரிகாரத்தினால் ஒழியமாட்டாது, (ஆகையால்) தலைமட்டாக வந்தது முடிமட்டு ஆக-தலையளவாகவந்த தீங்கு மகுடத்தினளவாகமுடியக்கடவது, மத்தம் மா - மத்தத்தையுடையவெள்ளை யானை, ஐந்து இருபஃது ஆண்டு எல்லை - நூறுவருடங்காறும், வனம் மா ஆகி- காட்டானையாகத்திரிந்து, அகன்றபின் - அந்த அளவு ஒழிந்தபின், பண்டைத்து ஆக-முன்னுள்ளதெய்வத்தன்மையை யடையக்கடவது

பரிகாரம்-என்றது நூல்களிற்கூறிய பிராயச்சித்தத்தின்வழிநின்று பரிகரித்தல் ஆக வென்னும் மூன்றனுள் - முன்னது வினையெச்சம் பின்னவை வியங்கோள் முற்றுகள். (க௮)

என்றனன்பிறிதுசாபமிந்திரன்மகுடபங்க
மொன்றியசெய்கைபின்னருரைத்துமற்றஃதுநிற்க
நின்றவெள்ளானைவானீத்தறிவிழந்துநீலக்
குன்றெனவனத்துவேழக்குழாத்தொடுகுழீஇயதன்றே.

(இ-ள்) என்றனன் பிறிது சாபம் - என்று பிறிதுசாபம் வகுத்தருளினார், இந்திரன் மகுட பங்கம் ஒன்றிய செய்கை பின்னர் உரைத்தும் அஃது நிற்க-தேவேந்திரன்மகுடம் பங்கப்பட்டசெய்தியைப் பின்பு சொல்லுவாம் அச்சரித்திரம்நிற்க, நின்ற வெள்ளானை - ஒழிந்தவெள்ளையானை, வானம் நீத்து அறிவு இழந்து - (அன்றே) விண்ணுலகத்தினின்று நீங்கித் தேவ அறிவொழிந்து, நீலம் குன்று என வனத்து வேழம் குழாத்தொடு குழீஇயது-நீலமலையைப்போலக் கரியநிறம்படைத்துக் காட்டிற்சஞ்சரிக்கும் யானைக்கூட்டங்களோடுகூடிச் சஞ்சரித்தது (க௯)

மாவொடுமயங்கிச்செங்கண்மறம்பயில்காடுமுல்லைப்
பூவொடுவழங்குநீத்தப்புறவமுங்குறவர்தங்கள்
தேவொடுபயிலுங்கல்லுந்திரிந்துநூறாண்டுஞ்செல்லக்
காவொடுபயிலுந்தெய்வக்கடம்பமாவனம்புக்கன்றே.

(இ-ள்.) மா ஒடு மயங்கி - காட்டானைகளோடுகூடி, செம் கண் மறம் பயில் காடும் - சிவந்தகண்களையுடைய மறவர்கள் சஞ்சரிக்கின்ற பாலைநிலங்களிலும், முல்லைப்பூ ஒடு வழங்கும் நீத்தம் புறவமும் - முல்லைமலரையும் ஒடுவிருக்ஷத்தையும் பெருக்கெடுத்தோடுங் காட்டாறுகளையுமுடைய முல்லைநிலங்களிலும், குறவர் தங்கள் தேவொடு பயிலும் கல்லும் திரிந்து - குறவர்கள் தங்களுக்குரிய தெய்வமாகிய முருகக்கடவுளோடுவசிக்குங் குறிஞ்சிநிலங்களிலுந்திரிந்து, நூறு ஆண்டும் செல்ல - நூறுவருடமும் (இவ்வண்ணம்) கழிய, கா ஒடு பயிலும் தெய்வம் மா கடம்பவனம் புக்கன்று - (புறத்திற்) சோலைகளால்விளங்குந் தெய்வத்தன்மையையுடைய கடம்பவனத்திற்புகுந்தது.

மறம் - கொலை. அது உடையார்மேனின்றதால் பண்பாகுபெயர். (௨௦)

புக்குரல்வட்டத்திண்காற்பொருவிறேவியலிற்றீர்ந்த
மைக்கருங்களிறுமுக்கண்மாதவனருள்வந்தெய்தத்
தக்கதோரமையஞ்சாரமரகதந்தழைத்துமின்னு
நக்கபொன்முளரிபூத்தநளிர்கயந்தலைகண்டன்றே.

(இ-ள்) புக்க உரல் வட்டம் திண் கால் பொருவு இல் தேவு இயலில் தீர்ந்த மை கரும் களிறு - (கடம்பவனத்தில்) புகுந்த உரல்போலும் வட்டவடிவாகிய திண்ணியகால்களையுடைய ஒப்பில்லாத தெய்வத்தன்மையினின்று நீங்கிய கரியயானை, முக்கண் மாதவன் அருள் வந்து எய்த தக்கது ஓர் அமையம் சார - திரிநேத்திரங்களையும் பெரியதவவினையுமுடைய சிவபெருமானது திருவருள் வந்து கிடைக்கத்தக்க ஒப்பில்லாதகாலந்தனக்குக்கிடைக்க, மரகதம் தழைத்து மின் நு நக்க பொன் முளரி பூத்த நளிர் கயந்தலை கண்டன்று - மரகதம்போலும் (இலைகள்) தழைத்து மின்னலைப்போலும் விளங்கின பொற்றாமரைமலர்கள் அலர்ந்த குளிர்ந்த தடாகத்தைக்கண்டது.

சிவபெருமானை - மாதவனென்றது பொன்வண்ணத்தந்தாதியில்.

"பரமனையே பயந்தாருஞ்சுடைத்தபன்மலர்சேர்
பிரமனையேசிரங்கொண்டதொடுப்பதுபோருவாரு
சரமனையேயுடம்பட்டுமுடம்பொடுமாறிடமாம
வாமனையேயங்கையாக்குமுக்கணுடைமாதவனே."

எனவருதலகாணக. மின்-உகரச்சாரியை பெறாநின்ற தொழிற்பெயர். அகரவிகுதி தொக்குநின்ற புக்க என்னும் பெயரெச்சம் மைக்கருங்களிறு என்னும் வினைமுதற்பொருள்கொண்டது. இடையிலுள்ள இடைப்பிறவரல். கயந்தலை - குளமாகிய இடம். இது ஆயன் சாத்தன் என்பதுபோல நின்ற இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கய தலைகண்டது - இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து இயல்பாயிற்று. (உக)

கண்டபோதறிவுதோன்றக்கயந்தலைகுடைந்தபோது
பண்டையவடிவந்தோன்றப்பரஞ்சுடரருட்கண்டோன்றக்
கொண்டதோர்பரமானந்தக்குறியெதிர்தோன்றக்கும்பிட்
டண்டர்நாயகனைப்பூசைசெய்வதற்கன்புதோன்ற.

(இ-ள்) கண்ட போது அறிவு தோன்ற - (அந்தத் தீர்த்தத்தைத்) தரிசித்தபோது (முன்னுள்ள) அறிவுதோன்றவும், கயந்தலை குடைந்த போது பண்டைய வடிவம் தோன்ற - அத்தீர்த்தத்திலே நீராடியகாலத்து முன்னுள்ளவடிவந்தோன்றவும், (மகிழ்கூர்ந்து) பரம் சுடர் அருள் கண் தோன்ற - சிவபெருமானுடைய திருவருட்பார்வை தோன்றுதலால், பரமானந்தம் கொண்டது ஓர் குறி எதிர் தோன்ற கும்பிட்டு - மேலான ஆனந்தமே திருவுருவமாகக்கொண்ட ஒப்பில்லாத சொக்கலிங்கமூர்த்தி (தனக்கு) நேரே தரிசனமாக வணங்கி, அண்டர் நாயகனை பூசை செய்வதற்கு அன்பு தோன்ற - தேவர்கள் தலைவனாகிய அச்சொக்கலிங்கமூர்த்தியைப் பூசித்தற்குத் (தன்மனத்தில்) அன்புதோன்றுகிறக.

முன்னுள்ள தோன்ற என்னும் இரண்டு வினையெச்சங்களும் சொல்லெச்சமாய் நின்ற மகிழ்கூர்ந்து என்னும் எச்சத்தைத் தனித்தனி கொண்டன, அவ்வெச்சம் கும்பிட்டு என்னும் எச்சத்தின் முதனிலைகொண்டது. (உ௨)

தூம்புடைக்கையான்மொண்டுமஞ்சனத்தூநீராட்டித்
தேம்புடையொழுகப்பள்ளித்தாமமுந்தெரிந்துசாத்திப்
பாம்புடைத்தாயவேணிப்பரனையர்ச்சிக்கவுள்ளத்
தாம்புடையறிந்தவெந்தையானையைநோக்கிக்கூறும்.

(இ-ள்.) தூம்பு உடை கையால் மொண்டு - துவாரம்பொருந்திய துதிக்கையால் முகந்து, மஞ்சனம் தூ நீர் ஆட்டி - திருமஞ்சனமான பரிசுத்தமாகிய நீரால் அபிஷேகஞ்செய்து, தேம் புடை ஒழுக - தேன்புறத்திற் சிந்த, பள்ளித் தாமமும் தெரிந்து சாத்தி - திருப்பள்ளித்தாமத்தையும் குற்றமற வாராய்ந்துசாத்தி, பாம்பு உடைத்து ஆய வேணி பரனை அர்ச்சிக்க - சர்ப்பத்தையணிந்த சடையையுடைய சோமசுந்தரக்கடவுளை யர்ச்சிக்க, உள்ளத்து ஆம்புடை அறிந்த எந்தை-(அதன்)மனத்திற்றோன்றிய (அன்பின்) விகற்பத்தை யறிந்த வச்சோமசுந்தரக்கடவுள், யானையை நோக்கி கூறும் - அவ்வெள்ளையானையைக் கடைக்கணித்துத் திருவாய்மலர்ந்தருளுவான்.

உம்மை-உயர்வுசிறப்பு. புடைமுதனிலைத் தொழிற்பெயர். இச்செய்யுள் குளகமாதலால் தோன்ற என்னும் எச்சம் நீராட்டி என்னும் எச்சத்தின் முதனிலையையும், அவ்வெச்சம் சாத்தி என்னும் எச்சத்தின் முதனிலையையும் அவ்வெச்சம் அர்ச்சிக்க வென்னும் எச்சத்தின் முதனிலையையுந் தனித்தனிகொண்டன. (உங)

வந்ததென்னவெவன்வேண்டும்வரமெவனுரைத்தியென்னச்
சிந்தையிலன்புகூர்ந்தசெய்யவதுவேழந்தாழ்ந்து
முந்தையில்விளைவும்வந்தமுறைமையுமுறையாற்கூறி
யெந்தையையடையப்பெற்றேற்கினியொருகுறையுண்டாமோ.

(இ-ள்.) நீ வந்தது எவன் - நீ யிங்குவந்தகாரணம் என்ன, வேண்டும் வரம் எவன் - உனக்கு வேண்டிய வரமென்ன, உரைத்தி என்ன - நீ கூறுவாயென்றருள, சிந்தையில் அன்பு கூர்ந்த செய்யவது வேழம் தாழ்ந்து - மனத்தில் அன்புமிக்க வெள்ளை யானை வணங்கி, முந்தையில் விளைவும் வந்த முறைமையும் முறையால் கூறி - முன்னடந்த செய்தியையும் (அதுகாரணமாகத்தான்)வந்த முறைமையையும் முறைப்படிச் சொல்லி, எந்தையை அடைய பெற்றேற்கு இனி ஒரு குறை உண்டாமோ- என் தந்தையாராகிய தேவரீரைச் சரணடையப்பெற்ற அடியேனுக்கு இனி யொரு குறையுண்டோ. (இல்லையென்றபடி.)

ஐ - சாரியை. (உச)

என்பராவாரம்பூண்டவெந்தையிக்கரிகளெட்டோ
டொன்பதாயடியனேனுமுன்னடிபிரியாதுன்றன்
முன்பதாயிவ்விமானமுதுகுறச்சுமப்பலென்றோ
ரன்பதாயொன்றென்னுள்ளத்தடுத்தலாலிதேவேண்டும்.

(இ-ள்.) என்பு அரா ஆரம் பூண்ட எந்தை - எலும்பையும் சர்ப்பத்தையும் ஆரமாகப்பூண்டருளிய என் தந்தையே, அடியனேனும் இ கரிகள் எட்டோடு ஒன்பது ஆய்-அடியேனாகிய யானும் விமானத்தைச்சுமக்கும் இந்த அஷ்டகசங்களோடு ஒன்பதாகி, உன் அடி பிரியாது உன்றன் முன்பு ஆய் இ விமானம் முதுகு உற சுமப்பல் என்று - உன் திருவடியைப் பிரியாமல் உன்முன்புநின்று இவ்விமானத்தை முதுகிற் பொருந்தச் சுமப்பேனென்று, ஓர் அன்பு ஒன்று ஆய் என் உள்ளத்து அடுத்தலால்-

ஒப்பில்லாத அன்பொன்றுண்டாகி என்மனத்தில் பொருந்துதலால், அஃதே வேண்டும் - அச்சமத்தற்றொழிலே (எனக்கு) வேண்டும்.

முதல் சினைக்கு ஒற்றுமையுண்மையால் சினையின் றொழிலாகிய சமப்பல் என்னும் வினைமுற்றை முதலுக்குங்கொள்க. சினை அன்பு - முன்பது அன்பது அது பகுதிப் பொருள் விகுதிகள். (௨௫)

இடையறாவன்பின் வேழமியம்பலங் கூறவிண்ணா
டுடையவனம்பான் மெய்யன்புடையவனவனைத் தாங்கி
யடைவதே நமக்கு வேண்டுமகமகிழ்வென்றுப் பின்னும்
விடையவன் வரங்களல்கி விடைகொடுத் தருளினானே.

(இ-ள்.) இடை அறா அன்பின் வேழம் இயம்பலும் கூற - என்றும் நீங்காத அன்பினையுடைய வெள்ளையானை யிவ்வாறு சொல்ல, விடையவன்-இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், விண் நாடு உடையவன் - தேவேந்திரன், நம்பால் மெய் அன்பு உடையவன் - நம்மிடத்தில் மெய்யன்புடையான், அவனைத் தாங்கி அடைவதே-அவனைச் சுமந்து செல்வதே, நமக்கு வேண்டும் அகமகிழ்வு என்று-நமக்குவேண்டிய அகமகிழ்ச்சியென்று, பின்னும் வரங்கள் நல்கி விடை கொடுத்து அருளினான் - மீண்டும் வரங்களருளி விடைகொடுத்தருளினார். (௨௬)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

விடைகொடுவணங்கிப் போகுமவெள்ளானைமேற்றிசையடைந்துதன்
பெயரால், றடமுறு மரனாலயமுங் கணேசன் றன்னையுங்கண்டருச்ச
னைசெய், திடையறாவன்புந்தானுமங்கிருக்குமெல்லையிச்செய்திகேட்டரு
ள்கூர், கடவுளார்பெருமானுழையரைவிளித்தெங்களிற்றினைக்கொணர்கெ
னவிடுத்தான்.

(இ-ள்.) விடை கொடு வணங்கி ஏகும் வெள்ளானை மேல் திசை அடைந்து - விடைபெற்றுப் பணிந்துசெல்லும் வெள்ளையானையானது மேலைத்திசையை யடைந்து, தன்பெயரால் தடமும் அரன் ஆலயமும் கணேசன் தன்னையும் கண்டு-தன்னுடையபேரால் ஓர் தீர்த்தத்தையும் அத்தீர்த்தக்கரையில் சிவலிங்கமூர்த்தியையும் மூத்தபிள்ளையாரையும் பிரதிட்டைசெய்து, அருச்சனை செய்து இடை அறா அன்பும் தானும் அங்கு இருக்கும் எல்லை-அருச்சித்து என்றும்நீங்காத அன்புந்தானுமாக அவ்விடத்திலிருக்குங் காலத்து, அருள் கூர் கடவுளார் பெருமான் இச்செய்தி கேட்டு - கருணைமிக்க இந்திரன் இச்செய்தியைக் கேள்வியுற்று, உழையரை விளித்து எம் களிற்றினை கொணர்க என விடுத்தான்-ஏவல்செய்வோரை அழைத்து எமது யானையைக் கொண்டுவரக்கடவீர் என்று அனுப்பினான்.

பரவசமுற்ற முதலையுஞ் சினையையும் வேறுவைத்துக் கூறுதல் நெறியாதலால் அன்புந்தானும் அங்கு இருக்கும் எல்லை என்றார். "நானுமென்சிந்தையுநாயகனுக்கெவ்விடத்தோம்" என்ற பெரியோர் திருவாக்காலு முணர்க. (௨௭)

வல்லைவந்தழைத்தார்தம்மைமுன்போக்கி வருவலென்றெழுந்துகீழ்
த்திசையோ, னொல்லைவந்தோரூர்தனதுபேராற்கண்டிந்திரேச்சரமெனவி
றைவன், றொல்லைவண்பெயராலொன்றுகண்டரனைத்தூயபூசனைசெய்தங்
கிருப்பக், கல்லைவன்சிறகுதடிந்தவனின்னுங்களிறுவந்திலதெனப்பின்னும்

(இ-ள்.) வல்லை வந்து அழைத்தார் தம்மை வருவல் என்று முன் போக்கி - விரைந்துவந்தழைத்தவரை நான் வருகின்றேன் நீங்கள் முன்னேசெல்லுங்களென்

றனுப்பி, எழுந்து கீழ்த்திசை ஓர் எல்லை வந்து - (அங்குநின்று) எழுந்து கீழைத்தி சையில் ஓரிடத்தில்வந்து, தன் பேரால் ஓர் ஊர் கண்டு - தனது பேரால் (ஐராவதீ ச்சரமென) ஒருதலத்தை யேற்படுத்தியும், இறைவன் தொல்லை வண் பெயரால் இந் திரேச்சரம் என ஒன்று கண்டு-(தனது) தலைவனுடைய தொன்றுதொட்டுள்ள நல் லபெயரால் இந்திரேச்சரமென ஒருதலத்தை யேற்படுத்தியும், அரனை தூய பூசனை செய்து அங்கு இருப்ப - சிவபெருமானைப் புனிதமாகிய பூசனைசெய்து அங்குஇரு ப்ப, கல்லை வன்சிறகு தடிந்தவன் இன்றும் களிறு வந்திலது என பின்னும் - மலைக ளை வலியசிறகறுத்த தேவேந்திரன் இன்னமும யானை வரவில்லை யென்றுமீளவும்.

கடவுளை யடிதொழுது என்றற்போல - கல்லை வன்சிறகு தடிந்தவன் என, உருபு நோக்கியசொல் இரண்டுவேந்தன. முதற்பொருள் ஐ உருபு ஏற்று நின்றமை யால் சினைப்பொருளாகிய சிறகிற்கு ஏழனுருபுவிரித்துக் கல்லைச்சிறகில்வெட்டினான் எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. (உஅ)

மனத்தினுங்கடியதூதனைவிடுப்பவானடைந்திறைவனைவணங்கிப்
புனத்தினுங்கடியகல்லினும்பன்னாட்புன்கணோயுறவருசாபங்
கனத்தினுங்கரியகண்டனைக்கண்டுகளைந்ததுங்கிளந்துதிக்கயத்தி
னினத்தினுங்கழிந்ததெய்வதவேழமினிதுவீற்றிருந்ததுமாதோ.

(இ-ள்.) மனத்தினும் கடிய தூதனை விடுப்ப - மனவேகத்திலும் விரைந்து செல்லும் வேகத்தையுடைய தூதவனை (அழைத்துவரும்படி) அனுப்ப, (அவர்க ளோடு) வான் அடைந்து இறைவனை வணங்கி - சுவர்க்கலோகத்தையடைந்து தன துதலைவனாகிய இந்திரனைப்பணிந்து, புனத்தினும் கடிய கல்லினும் பல் நாள் புன் கண் நோய் உறவரு சாபம் - காடுகளிலும் அச்சத்தைத்தரும்மலைகளிலும் பலநாள் துன்பநோயை நுகரும்படி வந்தசாபத்தை, கனத்திலும் கரிய கண்டனை கண்டு களைந்ததும் கிளந்து - மேகத்திலுங் கரிய ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கட வுளைத் தரிசித்து நீக்கிக்கொண்டதையும் (மறறைச் செய்திகளையும்) சொல்லி, திக்க யத்தின் இனத்தினும் கழிந்த தெய்வத வேழம் இனிது வீற்றிருநதது - எட்டுத் திக குயானைகளினும் மேம்பட்ட தெய்வத்தன்மைபொருந்திய வெள்ளையானை குறைவி ன்றி வீற்றிருந்தது.

திக்கசங்களோடு அது ஒன்றுயினும் ஏனையவற்றுள் அது சிவபிரானருளால் மேம்பட்டமையால் திக்கயத்தினினறுங் கழிநத எனறார். உம்மையால் மற்றைச் செய்திகளையும் எனக்கொண்டாம். (உகூ)

குடவயினைராவதப்பெருந்தீர்த்தங்குடைந்தயிராவதகணேசக்
கடவுளைத்தொழுதைராவதேச்சரத்துக்கடவுளைப்பணிந்தவர்சாபத் [போ
தொடர்பினும்பாவத் தொடர்பினுங் கழிவர் சுராதிபன்களிறுசென்னெறி
யிடர்கெடவையைபடிந்துதென்கரையிலிந்திரேச்சரனடிபணிவோர்.

(இ-ள்.) குடவயின் ஐராவதப் பெரும் தீர்த்தம் குடைந்து - மேலைத்திசை யிலுள்ள பெரிய ஐராவததீர்த்தத்தில் நீராடி, அயிராவத கணேசக்கடவுளைததொ ழுது - ஐராவதகணபதியைவணங்கி, ஐராவதேச்சரத்து கடவுளைபணிந்தவர் சாபத் தொடர்பினும் பாவதொடர்பினும் கழிவர் - ஐராவதேச்சரருடைய திருவடிகளை வணங்கினவர்கள் சாபக்கட்டினின்றும் பாவக்கட்டினின்றும் நீங்குவார், சுராதிப ன் களிறு செல் நெறி போய் - (இதுவுமன்றி) இந்திரனுடைய யானைசென்றவழி யேசென்று, இடர் கெட வையை படிந்து தென் கரையில் இந்திரேச்சரன் அடிபணி

வோர் - பிறவித்துன்பங்கெட வைகையில் கீராடி (அதன்) தென்கரையிலெழுந்தருளிய இறைவனுடைய திருவடிகளை வணங்குவோர். (௩0)

வேறு.

இம்மையிலறமுன்மூன்றாலெய்தியபயனையெய்தி
யம்மையின்மகவானீரேழரும்பதமளவும்வானில்
வெம்மையில்போகமூழ்கிவெறுப்புவந்தடையவுள்ளச்
செம்மையில்வினைபேரின்பச்சிவகதிசெல்வராவார்.

(இ-ள்.) இம்மையில் அறமுன் மூன்றால் எய்திய பயனை எய்தி-இப்பிறப்பில் தருமமுதலிய மூன்றுபொருள்களால்வரும் பயனை நுகர்ந்து, அம்மையில் ஈர் ஏழ் மகவான் அரும்பதம் அளவும்-மறுமையில் (கிடைத்தற்கரிய) பதினாலு தேவேந்திர பட்டங்காறும், வானில் வெம்மையில் போகமூழ்கி வெறுப்பு வந்து அடைய-சுவர்க்கலோகத்தில் விருப்பைத்தரும் போகவெள்ளத்தில் அழுந்தி (அதில்) வெறுப்புவர, உள்ளச்செம்மையில் வினைபேர் இன்பம்-சிவகதி செல்வர் ஆவார் (அதனால்விளைந்த) இருவினையொப்பால் உண்டாகும் பேரின்பத்தைத்தரும சிவசாயுச்சியச் செல்வமுடையவராவார். (௩௧)

வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௪௰0.

மூன்றாவது

# திருநகரங்கண்டபடலம்.

கலித்துறை.

தானவாறிழிபுகர்முகத்தமிகரிசாபம்
போனவாறுரைசெய்துமேற்புதுமதிமுடிமேல்
வானவாறினன்கடம்பமாவனமுதுநகர
மானவாறதுதனைசிறிதறிந்தவாறிசைப்பாம்.

(இ-ள்.) தானம் ஆறு இழி புகர் முகத்து அமிகரி சாபம் போன ஆறு உரை செய்தும் - மதமாகியவெள்ளம் பெருக்கெடுத்தோடும் புள்ளிதங்கிய முகத்தையுடைய (பகைவரைக்) கொல்லும் வெள்ளையானையின் சாபநீங்கிய திருவிளையாடலைச் சொன்னோம், மேல் புதுமதிமுடிமேல் வான ஆறினன் மா கடம்பவனம் - இளம்பிறையணிந்த சடாமுடியின்மேல் ஆகாயகங்கையையணிந்த சோமசுந்தரக்கடவுளுடைய பெரியகடம்பவனம், முது நகரம் ஆன ஆறுதுதனை சிறிது அறிந்த ஆறு இசைப்பாம் - பழையசிற்பநூலின்வழித் திருநகரமான திருவிளையாடலைச் சிறிது தெரிந்தவண்ணம் (எடுத்துச்) சொல்லுவாம்.

பிறை-தோன்றும் இளஞ்சந்திரன்மேனிற்றலால் புதுமதி என்றற்குப் பிறை என்றும். முதுமை என்னும் பண்பு நூன்மேனிற்றலால் பண்பாகுபெயர். அது பகுதிப்பொருள்விகுதி. (௧)

இன்னரம்புளரேழிசையெழான்மிடற்றளிகள்
கின்னரம்பயில்கடம்பமாவனத்தினின்கீழ்சார்த்
தென்னர்சேகரனெனுங்குலசேகரனுலக
மன்னர்சேகரனரசுசெய்திருப்பதுமணலூர்.

(இ-ள்.) இன் நரம்பு உளர் ஏழ் இசை எழால் மிடறு அளிகள் - இனியநரம்புகளைத் தடவுமிடத்துண்டாகிய ஏழிசைபோலுங் கண்டத்தொனியையுடைய வண்டுகள், கின்னரம் பயில் மா கடம்பவனத்தினின் கீழ்சார்-வீணையிசையைப்போல இசையைப்பாடும் பெரியகடம்பவனத்தின் கீழ்ப்பக்கத்தில், தென்னர் சேகரன் எனும் குலசேகரன் உலகம் மன்னர் சேகரன் - பாண்டியர்மரபிற் கோர்மகுடம் போன்றவனாகிய குலசேகரனென்னும் இயற்பெயரையுடைய பாண்டியன் உலகிலுள்ள ஏனை மன்னவர்களுக்கும் மகுடம்போல்பவன், அரசு செய்து இருப்பது மணலூர் - அவன் அரசியல் நடத்தியிருக்கும் ஊர் மணலூராம்.

கின்னரம் வீணை இது இசைமேனிற்றலால் கருவியாகுபெயர். இருப்பது-தொழிற்பெயர் இது இடத்தின்மேனின்றது. இன உருபிற்கு இன் சாரியை இல்லையேனும் பாம்பினிற்கடிது தேள் என வழக்கினகண்ணும், கற்பினின்வழாஅ எனச் செய்யுளின்கண்ணும் பயின்றுவருதலால் வந்தது. (உ)

குலவுமப்பெரும்பதியிளங்கோக்களிலொருவ
னிலவுமாநிதிபோலருச்சனைமுதனியதி
பலவுமாஞ்சிவதருமமுந்தேடுவான்பரன்பாற்
றலைமைசான்றமெய்யன்பினுன்றனஞ்சயனென்பான்.

(இ-ள்.) குலவும் அ பெரும்பதி இளம் கோக்களில் - விளங்காநின்ற அந்தப்பெரியநகரத்திலுள்ள வணிகர்மரபில், நிலவு மாநிதிபோல் அருச்சனைமுதல் நியதி பலவும் ஆம் சிவ தருமமும் தேடுவான் - விளங்காநின்ற பெரியதிரவியங்களைத் தேடுதல்போல அருச்சனைமுதலிய செய்கடன்கள் பலவாகிய சிவதருமங்களைத் தேடுகின்றவனும், பரன்பால் தலைமை சான்ற மெய் அன்பினன் - சிவபெருமானிடத்து முதன்மைபெற்ற மெய்யன்பினனுமாகிய, தனஞ்சயன் என்பான் ஒருவன் - தனஞ்சயனென்னும் இயற்பெயரையுடைய வொருவன். (௩)

செல்வமாநகரிருந்துமேற்றிசைப்புலஞ்சென்று
மல்லல்வாணிகஞ்செய்துதன்வளம்பதிமீள்வான்
றொல்லையேழ்பவக்கடற்கரைதோன்றுவித்தடியா
ரல்லறீர்ப்பவன்கடம்பமாவனம்புகுமளவில்.

(இ-ள்.) செல்வம் மா நகர் இருந்து மேல் திசை புலம் சென்று-பலசெல்வங்களுமுள்ள (தனது) பெரியநகரினின்றும் நீங்கி மேற்றிசைகளிலுள்ள நாடுகளிற் சென்று, மல்லல் வாணிகம் செய்து தன் வளம்பதி மீள்வான் - ஊதியமிக்கவர்த்தகஞ்செய்து தனதுவளப்பம்பொருந்திய நகரத்திற்குத் திரும்புகின்றவன், அடியார் தொல்லை ஏழ்பவம் கடல் கரை தோன்றுவித்து அல்லல் தீர்ப்பவன் - அடியாருக்குத் தொன்றுதொட்டுவரும் எழுபிறப்பாகிய கடலினகரையாகிய மோக்ஷத்தைக் காட்டி அப்பிறவித்துன்பங்களையொழிக்கும் சோமசுந்தரக்கடவுளுடைய, மா கடம்பவனம் புகும் அளவில் - பெரிய கடம்பவனத்திற்செல்லுங் காலையில்.

பிறவியைக்கடலாகவுருவகஞ்செய்து மோக்ஷத்தைக் கரையாக வுருவகஞ் செய்யாமையால் இது ஏகதேசவுருவகவணி. (௪)

இரவிகண்மறைந்தேழ்பரியிரதமுந்தானு
முரவுநீர்க்கருங்கடலில்வீழ்ந்தொளித்தனனாக
விரவுநீண்மயங்கிருள்வயிற்றமியனாய்மெலியு
மரவுநீர்ச்சடையண்ணலுக்கன்பினோனங்கண்.

பார்வதிதலைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய தாமரைமலர்போலமலர்ந்த விருப்பந்தரும் செவ்வந்த திருவடிகளைவணங்கி, அவன் கங்குல் போல் கருதி - அவ்விரவைச்சிவராத்திரிபோலநினைத்து, யாமம் நான்கினும் இன்பு உற அருச்சனை புரிவார் - நான்குசாமத்திலு மகிழ்ச்சிமீதூர அருச்சனைசெய்வார்கள்.

காமமருவு என்பது காமா என ஒருசொனீர்மையவாய்த் தொக்குநின்றன. சோமவாரத்தின் இரவாதலால அவன் கங்குல்போல்கருதி என்றார். அவன் கங்குல் அவனுக்குரிய கங்குலென நிற்றலால சிவராத்திரி என்றும். (௮)

ஆண்டர்வந்ததுமருச்சனைபுரிவதுமனைத்துந்
தொண்டரன்பிறகெளியவன்சுராதொழக்கறுத்த
கண்டனின்னருட்கண்ணினாற்கண்டனனுதலிற
புண்டரமபயிலன்புடைபபுண்ணியவணிகன்.

(இ-ள்.) அண்டர்வந்ததும் அருச்சனைபுரிவதும அனைத்தும் - தேவர்கள்வந்ததும் சோமசுந்தரக்கடவுளை யருச்சிப்பதும ஆகிய இச்செயல்களெல்லாம், தொண்டர் அன்பிற்கு எளியவன் சுரர்தொழ கறுத்த கண்டன் இன் அருள் கண்ணினால் - அடியவரன்புக் கெளியவனும் தேவர்கள் முறையிட்டு வணங்கக் கறுத்த ஸ்ரீகண்டத்தை யுடையவனுமாகிய சோமசுந்தரக்கடவுளுடைய இனியகிருபாநோக்கத்தால், நுதலில் புண்டரம் பயில அன்பு புண்ணியம் உடைவணிகன் கண்டனன் - நெற்றியில் திரிபுண்டரமாகவணிந்த விபூதியையும மிக்க அன்பையுஞ் சிவபுண்ணியத்தையுமுடைய தனஞ்சயனென்னும வைசியன் கண்டான்.

இவன் சோமவாரவிரதம நோற்பவனாதலால புண்ணியவணிகனென்றார். இதனை - ஆலாஸ்யமஹாத்மியத்தில், —

யதாநிஶிவஹஸ்தேஷ்வராப்ருக்ஷாஸ்தாஜிஷ்டாநிவ।
ஶிவப்ரேதஷ்வஸ்வேஷுவேவாஶேவா ஶ்ருதவிப்ரியம்॥

எனவருஞ் சுலோகத்தாலுணர்க. (௯)

நானமென்பனிநறுமபுனனாயகன்பூசைக
கானநலவிரைவருக்கமுமமராகைககொடுத்து
ஞானவெண்மதிச்சடையவனகோயிலினாங்கர்த்
தானமர்ந்தருச்சனைசெயவான்றங்கணாயகனை.

(இ-ள்.) நானம் மென் பனி நறுமபுனல் நாயகன் பூசைக்கு ஆன நல் விரை வருக்கமும - கஸ்தூரியையும் மெத்தென்ற நல்ல வாசனையையுடைய நல்ல பனிநீரையும சோமசுந்தரக் கடவுளுடைய பூசைக்குத்தக்க நல்ல வாசனை வர்க்கங்களையும், அமரர் கைக்கொடுத்து - தேவர்கள் கையிற் கொடுத்து, ஞானம் வெண் மதி சடையவன் கோயிலின் ஞாங்கர் தான அமர்ந்து - ஞானசொரூபியாகிய வெள்ளிய சந்திரனையணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலின்பக்கத்தில் தானுமிருந்து, தங்கள் நாயகனை அருச்சனை செய்வான் - தங்கள் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுளை அருச்சனை செய்யத் தொடங்கினான்.

இயற்றுவோன் றொழிலைச் செய்வித்தலால் தான் அருச்சனை செய்வானெனவும், அவன் குடிமுழுவதும் சோமசுந்தரக்கடவுளுக்குக் கொத்தடிமையாயிருந்தலால் வழாநிலையாகத் தங்கள் நாயகனெனவுங் கூறினார். (௧௦)

வள்ளறன்னைமெய்யன்பினலருச்சிசெய்வானே
ருள்ளவல்வினையீட்டமுங்கங்குலுமொதுங்கக்
கள்ளமில்லவன்யாரையுங்கண்டிலன்கண்டான்
றள்ளருஞ்சுடர்விமானமேற்றனித்துறைதனியை.

(இ-ள்.) வள்ளல் தன்னை மெய் அன்பினல் அருச்சி செய்வான் - சோமசுந்தரக் கடவுளை மெய்யன்பினால் அருச்சித்தலைச் செய்யுந் தனஞ்சயன், ஓர் உள்ள வல் வினை ஈட்டமும் கங்குலும் ஒதுங்க - ஒப்பில்லாத தொன்றுதொட்டுள்ள வலிய பாசக்கூட்டங்களும் இராப்போதும் நீங்க, கள்ளம இல்லவன் யாரையும் கண்டிலன் - மெய்ம்மையையுடைய வத்தனஞ்சயன் (பூசிக்கவந்த தேவர்களுள்) ஒருவரையுங்காணது, தள் அரும் சுடர் விமானம் மேல் தனித்து உறை தனியை கண்டான் - நீங்காத வொளியையுடைய விமானத்தின்கண் ஒப்பில்லாது வீற்றிருந்தருளுந் தனிமுதலாகிய அச்சோமசுந்தரக்கடவுளை மட்டுங் கண்டான்.

பாசம் பிறவிக்கு வித்தாதலின் ஓர் எனவும், அநாதியே யுள்ளதாதலின் உள்ள எனவும், சிவபெருமான் றிருவருளொக்காலன்றி யொழியவற்றுலொழியாதாதலின் வல் எனவும், பாசங்களால் விளைவது கருமமாதலால் வினையெனக் காரியத்தைக் காரணமாகவுங் கூறினா. கண்டிலனென்பது முற்று எச்சமாய் நின்றது. பாசமும் இருளும் குணத்தால் ஒருதன்மையவாதலால் வினையீட்டமுங் கங்குலுமென உடனெண்ணினார். அருச்சி முதனிலைத்தொழிற்பெயர். (௧௧)

ஆழ்ந்தசிந்தையனதிசயமடைந்துசேவடிக்கீழ்த்
தாழ்ந்தெழுந்திருகைகளுந்தலைமிசைக்கூப்பிச்
சூழ்ந்துதன்பதிக்கேகுவானொருதலைதுணிந்து
வாழ்ந்தவன்பினன்விடைகொடுவழிக்கொடுவந்தான்.

(இ-ள்.) ஆழந்த சிந்தையன் அதிசயம அடைந்து - (அன்பில்) அழுந்திய மனத்தையுடைய தனஞ்சயன் அதிசயங் கூர்ந்து, சேவடி கீழ் தாழ்ந்து எழுந்து இரு கைகளும் தலை மிசை கூப்பி சூழ்ந்து - (சோமசுந்தரக்கடவுளுடைய) செவ்வந்த திருவடியின் கீழ்ப்பணிந்தெழுந்து இரண்டு கைகளையுந் தலைமேற்குவித்துப் பிரதக்ஷணஞ்செய்து, தன் பதிக்கு ஒருதலை துணிந்து ஏகுவான் - தன்னுடைய நகருக்கு ஒருபக்ஷந் துணிந்து செல்ல, வாழ்ந்த அன்பினன் விடை கொடு வழிக்கொடு வந்தான் - இடைவிடாத அன்பின் வாழ்வையுடைய அத்தனஞ்சயன் விடைபெற்று வழிக்கொண்டு தன்னகர் வந்து சேர்ந்தான்.

தன்னகர்க்குச் செல்லுங் கருத்திலனென்பார் ஒருதலை துணிந்தெனவும், சிவநேயமே வாழ்வாகவுடையவ னென்பார் வாழ்ந்தவனெனவுங் கூறினார். அன்பினன் என்பதனிறுதியிலுள்ள ஆன விகுதியைப்பிரித்து ஆழ்ந்த என்பதனோடு கூட்டுக. (௧௨)

முக்கடம்படுகளிற்றினன்முகிறவழ்கோயில்
புக்கடங்கலாச்சிங்கமன்றனெதிர்புகல்வான்
றிக்கடங்கலுங்கடந்தவெந்திகிரியாய்நெருந
லக்கடம்பமாவனத்திலோரதிசயங்கண்டேன்.

(இ-ள்.) முக்கடம் படு களிற்றினன் முகில் தவழ் கோயில் புக்கு - மும்மதங்களைச் சொரியும் யானைச்சேனையையுடைய பாண்டியனது மேகம் தவழுங் கோ

திறுப்புகுந்து, அடங்கலர் சிங்கம் அன்னான் எதிர் புகல்வான் - பகைவராகிய யானைகளுக்குச் சிங்கமொத்த அப்பாண்டியனெதிர் நின்று சொல்லுவான், திக்கு அடங்கலும் கடந்த வெம் திகிரியாய் - எட்டுத்திக்கிலும் உள்ள பகைவரை வென்ற வெய்ய சக்கரத்தை யுடையவனே, நெருநல் மா அக்கடம்ப வனத்தில் ஓர் அதிசயம் கண்டேன்-நேற்றுப் பெரிய அந்தக் கடம்பவனத்தில் ஒரு அதிசயம் பார்த்தேன்.

மும்மதம் - கைமதம், இரண்டு கபோலமதம். (கங)

வல்லைவாணிகஞ்செய்துநான்வருவழிமேலை
கல்லடைந்ததுவெங்கதிர்கன்றலும்பிறப்பு
மெல்லைகாணியகண்டனனிரவிமண்டிலம்போ
லல்லடுஞ்சுடர்விமானமுமதிற்சிவக்குறியும்.

(இ-ள்.) வாணிகம் செய்து நான் வல்லை வருவழி - வர்த்தகஞ்செய்து நான் விரைந்து வருங்காலை, வெம் கதிர் மேலை கல் அடைந்தது - சூரியன் அஸ்தமனகிரியைச் சேர்ந்தான், கன்றலும் பிறப்பும் எல்லை காணிய - இராபபோதின் எல்லையையும் பிறப்பின் எல்லையையுங்காண, இரவி மண்டிலம் போல் அல் அடும் சுடர் விமானமும் அதில் சிவக்குறியும் கண்டேன் - சூரியமண்டிலம்போல் இருளைப்போக்கும் ஒளியையுடைய விமானத்தையும் அவ்விமானத்தில் எழுந்தருளிய சிவலிங்கமூர்த்தியையும் பார்த்தேன்.

இங்கும் குணம்பற்றிக் கன்றலும் பிறப்பு மென உடனெண்ணினார். (கச)

மாவலம்புதார்மணிமுடிக்கடவுளர்வந்த
தேவதேவனையிரவெலாமருச்சனைசெய்து
போவதாயினர்யானுமப்பொன்னெடுங்கோயின்
மேவுபூசனைவிடைகொடுமீண்டனனென்றான்.

(இ-ள்.) மா அலம்பு தார் மணிமுடி கடவுளர் வந்து - வண்டுகள (தேனுண்டு) ஒலிக்கும் கற்பக மலர்மாலையையணிந்த இரத்தினங்களழுத்திய கிரீடங்களையுடைய தேவர்கள் வந்து, அ தேவ தேவனை இரவு எல்லாம அருச்சனை செய்து போவதாயினர் - அந்தத் தேவர்களுக்குத் தேவனாகிய சோமசுந்தரக்கடவுளை நேற்று இராப்பொழுதெல்லாம் அருச்சித்து (விடைபெற்றுச்) சென்றார்கள், யானும் அப்பொன் நெடும் கோயில் மேவும் பூசனை விடைகொடு மீண்டனன் என்றான் -யானும் அப்பொன்னாலாகிய நெடிய திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் (அச்சோமசுந்தரக் கடவுளை வணங்கி) விடைபெற்றுத் திரும்பினேனென்று கூறினான்.

மா - என்னும் பலபொருள் ஒருசொல - ஈண்டுச் சார்பால் வண்டின்மேனின்றது. (கரு)

மூளுமன்பினன்மொழிந்திடமுக்கணெம்பெருமான்
றாளுமஞ்சலிகரங்களுந்தலையில்வைத்துள்ள
நீளுமன்புமற்புதமுமேலிரம்பநீராலை
மாளுமன்னவனிருந்தனன்போயினனருக்கன்.

(இ-ள்.) மூளும் அன்பினன் மொழிந்திட-மேன்மேல் எழுந்தோங்கும் அன்பினையுடைய தனஞ்சயன் கூற, நீர் ஞாலம் ஆளும் மன்னவன் - கடல்சூழ்ந்த வுலகினையாளுங் குலசேகரபாண்டியன், முக்கண் எம் பெருமான் தாளும் அஞ்சலி கர

ங்களும் தலையில் வைத்து - திரிகேத்திரங்களையுடைய எமது பெருமானுடைய சோம சுந்தரக்கடவுளுடைய திருவடிகளையும் கூப்பிய கைகளையுந் தனது தலையின்மேல் வைத்து, உள்ளம் மீளும் அன்பும் அற்புதமுமே நிரம்ப இருந்தனன்-மனத்தில் எழுந்தோறும் அன்பும் அதிசயமுமே மீக்கூரவிருந்தான், அருக்கன் போயினன் - (அப்போது) சூரியன் அஸ்தமித்தான்.

அன்பும் அற்புதமுமே நிரம்ப என்றதனால் தன் அரசியற் செயலொழித்து அவன் கூறிய சொல்லைத் தனுப்பின்றுமென்பது தோன்றுதலின் குறிப்பெச்சம். அஞ்சலி கரங்கள் வினைத்தொகை நிலைத்தொடராதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து மியல்பாய் நின்றது. (கசு)

ஈட்டுவார்வினையொத்தபோதிருண்மலங்கருக
வாட்டுவாரவர்சென்னிமென்மலரடிக்கமலஞ்
சூட்டுவார்மறைகடந்ததந்தொல்லுருவிளங்கக்
காட்டுவாரொருசித்தராய்த்தோன்றினார்கனவில்.

(இ-ள்.) ஈட்டுவார் வினை ஒத்த போது - இருவினைப்போகங்களையுந் தேடுகின்றவருடைய இருவினைப்பயன்களும் தம்முள் ஒப்பு வந்தபோது, இருள் மலம் கருக வாட்டுவார் - (ஆசிரிய மூர்த்தமாயெழுந்தருளி) அவர்களுடைய ஆணவ மலங் கருகும்படி வாட்டி, அவர் சென்னிமேல் மலர் அடி கமலம் சூட்டுவார் - அவர்களுடைய சென்னிமேல் தமது திருவடித்தாமரையைச் சூட்டி, மறை கடந்த தம் தொல் உரு விளங்க காட்டுவார் - மறை வேதங்களையுங் கடந்த தமது உண்மைத் திருவுரு விளங்கக் காட்டுஞ் சோமசுந்தரக்கடவுள், ஒரு சித்தராய் கனவில் தோன்றினார் - ஒரு சித்தராகி அப்பாண்டியனது கனவில் தரிசனங் கொடுத்தார்.

தொன்மையையுள்ளது உண்மையாதலால்-தொன்மை என்பதற்கு உண்மை என்றார், ஆன்மாக்கள் முயன்று தேடுஞ் சிவன் செயலால் யாவும் வருமென்று தாம் கருதாது அவனையுளது செய்ந்நன்றி கட்டுணர்வுபட்டு இரவிகிதங்களால் மாறி மாறிவரும் இருவினைப்போகம் ஆதலால் ஈட்டுவார் வினை எனவும், அப்போகநுகர்ச்சியிற் றோன்றும் விருப்பு வெறுப்பு வியனொப்பாதலால் வினையொத்த போது எனவும், அவ்வினையொப்பு வாய்ந்தபோது ஆசிரியத் திருக்கோலங்கொண்டெழுந்தருளி அவ்வுருபாசர்கட்டினை யெழுதற்போதுச் செயலில் அவற்றின் செயலினைக் காட்டுதலால் இருண்மலங் கருகவாட்டுவார் எனவும், அங்ஙனம் வாசனை பற்றிப் போதப் நானென்னு மறைத்தெழாது அருளை நாடும்வண்ணம் சத்தி பதிவித்தலால் - மலரடிக்கமலஞ் சூட்டுவார் எனவும், அவ்வருளாதாரத்தினின்று விளங்குவது சிவமாதலால் - தொல்லுருவிளங்கக் காட்டுவாரெனவும் கூறினார்.

ஆசிரியத் திருக்கோலங் கொண்டெழுந்தருளி இருண்மலங்கருக வாட்டுவார் என்றது - திருவாசகம் கீர்த்தித் திருவகவல். "நீற்றுக்கோடிநிமிர்ந்துகாட்டியும்" என்றதனாலும், தற்சிவமென்றது - சிவப்பிரகாசம். "நிலவுமருவுருவின்றிக்குணங்களின்றி நின்மலமாயேகமாய்நித்தமாகி, வலகிலுயிர்க்குணர்வாகியசலமாகி யகண்டிதமாயானந்தவுருவாயன்றிச், செலவரிதாய்ச்செல்கதியாய்ச்சிறிதாகிப்பெரிதாயத்திகழ்வதுதற்சிவம்" என்றதனாலும் உணர்க. (கஎ)

வடிகொள்வேலினய்கடம்பமாவனத்தினைத்திருந்தக்
கடிகொள்காடகழ்ந்தணிநகர்காண்கெனவுணர்த்தி

வடிகளைகினுர்கவுரியராண்டகைகங்குல்
விடியும்வேலைகண்விழித்தனன்பரிதியும்விழித்தான்.

(இ-ள்.) வடிகொள் வேலினய் - வடித்த வேலினையேந்திய பாண்டியனே, மா கடம்ப வனத்தினை திருந்த கடி கொள் காடு அகழ்ந்து அணி நகா காணக என - பெரிய கடம்பவனத்தைத் திருந்தும்படி அச்சத்தைத்தரும் காட்டை வேரொடுங் கல்லி அழகிய நகரமாகச் செய்யக்கடவாயென்று, அடிகள் உணாத்தி ஏகினுர் - சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிமறைந்தார், கவுரியா ஆணடகை கங்குல் விடியும் வேலை கண விழித்தனன - பாண்டியா மரபுட்சிறந்த ஆண் தன்மையையுடைய குலசேகரபாண்டியன் இராப்போது கழியும் விடியற்போதில் துயிலொழிந்தான், பரிதியும் விழித்தான - சூரியனுந் துயிலொழிந்தான. (உதயமானு னென்றபடி.)

காண்க - அகரவீறு தொகுத்தல். பரிதி உதயமானுன என்றதற்கு விழித்தா னென்றது குணவணி. (௧௯)

கனவிற்றீர்ந்தவனியதியின்கடன்முடித்தமைசசா
சினவிற்றீர்ந்தமாதவாக்குந்தன்கனுத்திறஞ்செப்பி
நனவிற்கேட்டதுங்கனவினிறகண்டதுநயப்ப
வினவித்தேர்ந்துகொண்டெழுந்தனனமேற்றிசைசெலவான.

(இ-ள்.) கன வில் தீாந்தவன நியதியின கடன முடித்து - கனவில் நின்று நீங்கிய பாண்டியன் செய்தற்குரிய நித்திய கடன்களைச்செய்து முடித்து, அமைச்சர் சினவில் தீாந்த மாதவாக்கும தன கனு திறம செப்பி - மந்திரிகளுக்குங் கோபித்தலினின்று நீங்கிய பெரிய தவத்தையுடைய முனிவர்களுக்குந்தான கண்ட கனவின் வகையைக்கூறி, நனவில் கேட்டதும கனவினில கண்டதும நயப்ப வினவி தேர்ந்து கொண்டு - நனவில் ஓா வணிகனுல கேள்வியுற்ற செய்தியையும் கனவில தான் கண்ட செயதியையும் பயன்பட அவர்களிடத்து வினவித் தெளிந்து, மேல் திசை செல்வான எழுந்தனன - மேலைத்திசைக்குப்போக எழுந்தான.

சினவு - தொழிற்பெயர். (௧௰)

அமைச்சரோடுமநீபமாவனமபுகுந்தமபொன்
சமைத்தவிழ்ந்தபொற்றாமரைத்தடம்படிந்தொளிவிட
டிமைத்தலர்ந்தபொனவிமானமீதினிதுவீற்றிருந்தோா
தமைச்சரண்பணிந்தஞ்சலிதலையினமேன்முகிழ்த்தான.

(இ-ள்.) அமைச்ச ரோடும அ நீப மாவனம புகுந்து - மந்திரிகளோடும் பெரிய அக்கடம்பவனத்தில சென்று. அம பொன சமைத்து அவிழ்ந்தது பொன் தாமரை தடம் படிந்து - அழகிய பொன்னாற சமைக்கப்பட்டு மலர்ந்ததுபோலும் உள்ள பொற்றாமரைத் தடத்தில் நீராடி, ஒளி விட்டு இமைத்து அலர்ந்த பொன் விமானம மீது இனிது வீற்றிருந்தோர் தமை சரண் பணிந்து அஞ்சலி தலையின் மேல் முகிழ்த்தான் - ஒளிவீசி விளங்கிப் பரந்த பொன்னாலாகிய விமானத்தின்கண் மகிழ்கூர்ந்து வீற்றிருந்த சோமசுந்தரக்கடவுள் திருவடிகளை வணங்கி அஞ்சலியாகத் தனது கைகளைத் தலையின்மேல் கூப்பினுன்.

அவிழ்ந்த என்னும் வினைமுற்றுப்பெயர் ஈறுதொக்கு நின்றது. (௨௰)

அன்புபின்றள்ளமுன்புவந்தருட்கணீர்த்தேக
வென்புநெக்கிடவேகிவீழ்ந்திணையடிக்கமலம்
பொன்புனைந்ததார்மௌலியிற்புனைந்தெழுந்திறைவன்
முன்புநின்றுசொற்பதங்களாற்றோத்திரமொழிவான்.

(இ-ள்.) அன்பு பின்தள்ள - அன்பானது பின்னேநின்றுதள்ளவும், அருட்கண் முன்பு வந்து ஈர்த்து ஏக - (சோமசுந்தரக்கடவுளுடைய) திருவருட்பார்வையானது முன்னேநின்று இழுத்துச்செல்லவும், என்பு நெக்கிட - எலும்புகள்குழைந்துருகவும், இறைவன் ஏகி வீழ்ந்து - பாண்டியன்சென்று (தண்டாகாரம்போல) வீழ்ந்து, இணை அடி கமலம் பொன் புனைந்த தார் மௌலியில் புனைந்து எழுந்து - இரண்டு திருவடித்தாமரைகளையும் பொன்னாலிழைத்துச்செய்த மாலையை யணிந்த தனது மகுடத்திற்சூடியெழுந்து, முன்பு நின்று சொற்பதங்களால் தோத்திரம் மொழிவான் - திருமுன்னேநின்று வாக்கியரூபங்களாகத் தோத்திரங்கூறுகின்றான்.

சொல் பதம்-ஒருபொருட்பன்மொழி. சிவபெருமான் திருவடியைவணங்குதல் அவனது திருவருளாலாதலால் - அருட்கணீர்த்தேக என்றார். "அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்ற பெரியோர்திருவாக்காலுணர்க. (உக)

சரணமங்கையோர்பங்குறைசங்கரசரணஞ்
சரணமங்கலமாகியதனிமுதல்சரணஞ்
சரணமந்திரவடிவமாஞ்சதாசிவசரணஞ்
சரணமும்பர்நாயகபசுபதிசரணம்.

(இ-ள்.) சரணம் - உனக்கு அடைக்கலம், மங்கை ஓர் பங்கு உறை சங்கர சரணம்-உமையாளொருபாகத்தில் வீற்றிருக்கப்பெற்ற சங்கரனேசரணம், சரணம் மங்கல மாகிய தனிமுதல் சரணம்-சரணம்—மங்கலமே ஓர்திருவுருவாகக்கொண்ட தனிமுதலே சரணம், சரணம் மந்திர வடிவமாம் சதாசிவ சரணம்-சரணம்—மந்திரமே திருவுருவமாகக்கொண்ட சதாசிவமூர்த்தியே சரணம், உம்பர்கள் நாயக சரணம்-தெய்வநாயகனேசரணம், பசு பதி சரணம் - பிரமன்முதலிய பசுக்களுக்குத்தலைவனேசரணம்.

தான் போகியாயிருந்து ஆன்மாக்களுக்குப் போகந்தந்தருளிப் பின்னர்முத்தி நன்மையைத்தருவோனாதலால், மங்கையோர்பங்குறை சங்கர எனவும், பிரமன்முதலிய பல்லுயிர்களுக்குந் தானே முன்னுள்ளவனாதலின் தனிமுதல் எனவும், மந்திரங்கட்கெல்லாம் முற்படத்தோன்றிய பஞ்சப்பிரம மந்திரங்களைச் சிவபெருமான் முற்பட்டவடிவமாகக்கொண்டமையின், மந்திரவடிவமாஞ் சதாசிவ எனவும்; அவனே பிரமன்முதலிய தேவர்கட்கும் ஏனைய வுயிர்கட்கும் தலைவனாயுள்ளவனாதலால், உம்பர்கள் நாயக பசுபதி எனவும், இவ்வாறு நின்ற வொருவனை அடைக்கலம் புகுந்த யான் யாதொரு குறைபாடுமில்லேன் என்னுந் துணிவுபற்றிக் கூறினவனாதலால், முன்னும் பின்னும் சரணம் சரணம் எனவும் கூறினான்.

சிவம் என்னும் பதத்திற்கு மங்கலமென்பது பொருளாதலால் மங்கலமாகிய வென்றார். (உஉ)

ஆழிஞாலமேலாசையுமமரர்வான்பதமேல்
வீழுமாசையும்வெறுத்தவர்க்கன்றிமண்ணுண்டு

பீழைமூழ்கிவானரகொடுபிணிபடச்சுழலு
மேழையேங்களுக்காவதோவெந்தைநின்கருணை.

(இ-ள்.) ஆழிஞாலம் மேல் ஆசையும் - கடல்சூழ்ந்த நிலவுலகிலுள்ள போகவிருப்பையும், அமரர் வான் பதமேல் வீழும் ஆசையும் வெறுத்தவர்க்கு அன்றி- தேவர்கள் வாழும சுவாக்கலோகததிலுள்ள விரும்பத்தக்க போகவிருப்பையும் அருவருத்துத் தள்ளினவர்க்கல்லாமல், மண் ஆண்டு பீழை மூழ்கி வான் நரகு பிணி பட சுழலும் ஏழையேங்களுக்கு-மண்ணுலகினையாண்டு துன்பத்தில்மூழ்கிச் சுவர்க்க நரகம் என்னும் இரணடிடததுங் கட்டுபபட்டு (போக்குவரவாகச்) சுழன்றுதிரியும் ஏழையாகிய வெங்களுக்கு, எந்தைநின் கருணை ஆவதோ - என்தந்தையாகிய பெருமானே நின்திருவருள் எளிதாகக்கிடைப்பதோ (கிடைக்காதென்றபடி)

ஒடு-எண்ணிடைச்சொல். (௨௩)

சூளதாமறைசசென்னியுந்தொடத்தொடநீண்ட
நீளநீயுனக்கன்பிலமாயினுநீயே
மூளவன்புதந்தெமகுடிமுழுவதும்பணிகொண்
டாளவேகொலிககானகத்தமர்ந்தனையென்று.

(இ-ள்.) நீ சூளது ஆ மறை செனனியும் தொட தொட நீண்ட நீள - எட்டுவேனென்னும் பிரதிககினையுடையதாகி வேதத்தின் உச்சியும் தொடுந்தோறுந்தொடுந்தோறும் அப்பாற் பட்டுநீண்ட நீட்சியையுடையாய, உனக்கு அன்பு இலம் ஆயினும் - உன்னிடத்த அன்பில்லோமாயினும், நீயே அன்பு மூள தந்து எங்குடி முழுவதும் பணிகொண்டு ஆளவே கொல் - நீயே அன்புமீதூரக் கொடுத்தருளி எமது குடிமுழுவதையும ஏவல்கொண்டாளவா, இககானகத்து அமர்ந்தனை என்று - இக்காட்டினிடத்து எழுநதருளினையென்று. (௨௪)

சுரந்தவன்பிருகண்வழிச்சொரிவபோற்சொரிந்து
பரந்தவாறுடுசிவானநதபபரவையுட்படிந்து
வரந்தவாதமெய்யன்பினால்வலங்கொடுபுறம்போந்
தரந்தைதீர்ந்தவனொருசிறையமைசசரோடிருந்தான்.

(இ-ள்.) சுரநத அனபு இருகண்வழி சொரிவதுபோல் சொரிந்து-ஊற்றெடுத்த அன்பானது இரண்டு கண்களின்வழியே சிநதுவதுபோல ஆனநதபாஷ்பஞ்சிந்தி, பரந்த ஆறுடு சிவானநதம பரவையுள் படிநது - (அதனுற) பரவிய வெள்ளத்தோடு சிவானந்தமாகிய கடலுளமூழ்கி, வரம தவாத மெய் அனபினால் வலம் கொடு புறம் போநது அரநதை தீரநது - நனமையினீங்காத உண்மையாகிய அன்பினால் பிரதக்ஷணஞ்செய்து (அஙகுநின்று) புறததில்வந்து - (என்று தரிசிப்போமென்று கொண்ட) மனக்கவலையினின்று நீங்கி, அவன் ஒருசிறை அமைச்சரோடு இருந்தான் - அவ்விடத்தில் ஒருபக்கததில் மந்திரிகளுடன சூழ்ச்சிசெய்திருந்தான்.

இது பெருங்காப்பியமாதலின அதன் உறுப்புகளுள் ஒன்றாகிய மந்திரந்தோன்ற அமைச்சரோடிருந்தானென்றார். சொரிவது என்னுந் தொழிற்பெயர்ஈறு தொக்குநின்றது. (௨௫)

ஆயவேலையின்மன்னவனாணையாலமைசசா
மேயவேவலர்துறைதுறைமேவினர்விடுப்பப்

பாயவேலையினார்த்தனர்வழிக்கொடுபடர்ந்தார்
சேயகாடெறிக்தணிகர்செய்தொழின்மாக்கள்.

(இ-ள்.) ஆயவேலையில் - அவ்வாருகியசமையத்தில், மன்னவன் ஆணையால் அமைச்சர் மேய ஏவலர் துறை துறை மேவினர் விம்ப - அரசனுடைய ஆணையினால் மந்திரிகள் தமது அருகிலுள்ள ஏவலர்களை இடங்கள்தோறும் இடங்கள்தோறுஞ்சென்று (தொழில்செய்வோரைக்கொண்டுவர) அனுப்ப, சேய காடு எறிந்து அணிகர் செய்தொழில் மாக்கள் - நெடியகாடுவெட்டி அழகியநகரமாக்குந் தொழின்மக்கள், பாயவேலையின் ஆர்த்தனர் வழி கொடு படர்ந்தார் - (அரசன் ஏவலை மேற்கொண்டு) பரந்தகடல்போலொலித்து (காடிருந்த) வழிசெய்துகொண்டுசென்றார்கள். (உசு)

வட்டவாய்மதிப்பிளவின்வெள்வாய்க்குயநவிய
மிட்டதோளினாயாப்புடைக்கசசினரிரும்பின்
விட்டகாரொளிமெய்யினர்விசிகொள்வார்வன்றோற்
றொட்டகாலினர்வனமெறிதொழிலினராஞர்.

(இ-ள்.) இரும்பின் கார் ஒளி விட்ட மெய்யினர் - இரும்பின் ஒளிபோலுங் கரிய ஒளிவீசுஞ் சரீரத்தையுடைய தொழின்மக்கள், வட்டம் வாய் மதி பிளவின் வெள் வாய் குயம் நவியம் இட்ட தோளினர் - வட்டமாகிய வாயையுடைய சந்திரனது பிளவையொத்த வெள்ளியவாயையுடைய கொடுவாளையுங் கோடரியையும் வைத்த தோளினராகியும், யாப்பு உடை கச்சினர் - அரையிற்கட்டிய கச்சினையுடையவராகியும், விசி கொள்வார் வன் தோல் தொட்ட காலினர் - வாரால்கட்டிய வலியசெருப்புக்காலினையுடையவராகியும், வனம் எறி தொழிலினர் ஆஞர் - காடுவெட்டுந்தொழிலையுடையவராஞர்கள். (உஎ)

மறியுமோதைவண்டரற்றிடமரந்தலைபனிப்ப
வெறியுமோதையுமெறிபவரோதையுமிரங்கி
முறியுமோதையுமுறிந்துவீழோதையுமுகிலவாய்ச்
செறியுமோதையுங்கீழ்ப்படமேற்படச்செறியும்.

(இ-ள்.) மறியும் ஓதையும் - (கிளைகள்) மடங்கிவீழும் ஓசையும், வண்டு அரற்றிட மரம் தலைபனிப்ப எறியும் ஓதையும் - வண்டுகள் ஒலிக்கவும் மரங்கள் தலைநடுங்கவும் வெட்டும் ஓசையும், எறிபவர் ஓதையும் - வெட்டுகின்றவரோசையும், இரங்கி முறியும் ஓதையும் - சததித்து மரங்கள்முறிகின்ற வோசையும், முறிந்து வீழ் ஓதையும் - முறிந்து கீழேவிழும் ஓசையும் (ஆகிய இவ்வோசைகள்) முகில் வாய் செறியும் ஓதையும் கீழ்ப்பட மேற்பட செறியும் - மேகத்தினிடத்துப்பொருந்திய ஓசையுங் கீழ்ப்படும்படி மேற்பட்டொலிக்கும்.

மறியும் ஓதை என்பதனிறுதியில் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. "யாழுமெழுதியெழில்முத்தெழுதி இருளின்மென்பூச்சூழுமெழுதியோர்தொண்டையுந் தீட்டி" எனவருந் திருக்கோவையார்செய்யுளில் நச்சினார்க்கினியர் உரையானும், செறியும் ஓதை யென்பதனிறுதியினின்ற உம்மை உயர்வுசிறப்புப்பொருட்டு. "செங்கடலுந்தன்னீர்மைகுன்றும்", என்னுந் திருக்குறளினின்ற உம்மை - உயர்வுசிறப்பும்மை எனப்பரிமேலழகர் எழுதிய உரையாலுமுணர்க. (உஅ)

ஒளிறுதாதொடுபோதுசெந்தேனுகவொலித்து
வெளிறில்வன்மரஞ்சினையிறவீழ்வசெங்களத்துப்
பிளிறுவாயவாய்நிணத்தொடுகுருதிநீர்பெருகக்
களிறுகோடிறமாய்ந்துவீழ்காட்சியவனைய.

(இ-ள்.) வெளிறு இல் வன்மரம்-சேகுபற்றிய வன்மரங்கள், ஒளிறு தாதொடு போது செம் தேன் உக ஒலித்து சினை இற வீழ்வன - விளங்குகின்ற மகரந்தத்தோடு மலர்களுஞ் செந்தேனுஞ்சிந்த ஒலித்துக் கொம்புகள் முறியும்படிவிழுஞ்செயல்கள், களிறு - யானைகள், செம் களத்து பிளிறு வாயவாய் நிணத்தொடு குருதி நீர்பெருக-போர்க்களத்தில் ஒலிக்கும் வாயினையுடையனவாகி நிணத்துடன் உதிரநீர் பெருக்கெடுக்க, கோடு இற மாய்ந்து வீழ் காட்சிய அனைய - தந்தங்கள்முறிய இறந்துவீழுந் தோற்றங்களையொத்தன.

வீழ்வ காட்சிய என்னும் வினைமுற்றுப்பெயர்கள் தொழில்கண்மேனின்றன வன்மரம்-ஒருவகைச்சாதிமரம வன்மரம் யானையாகவும்,தாது நிணமாகவும், செந்தேன் - குருதிநீராகவும், சினை-கொம்பாகவும், கூட்டி ஒப்புமைக்கூட்டவணியாகக் கொள்க. (உகூ)

பூவடைந்தவண்டினமயற்புறவொடும்பழனக்
காவடைந்தனபறவைவான்கற்பகமடைந்த
கோவடைந்திடவொதுங்குறுங்குறும்புபோற்செறிந்து
மாவடைந்தனமாடுளவரைகளுங்காடும்.

(இ-ள்.) பூ அடைந்த வண்டு இனம் - பூக்களில்மொய்த்த வண்டின்கூட்டங்கள், அயல் புறவும் பழனம காவும் அடைநதன-பக்கததிலுள்ள முல்லைநிலங்களிலும் மருதநிலங்களிலுள்ள சோலைகளிலுஞ் சென்றுசேர்ந்தன, பறவை வான் கற்பகம் அடைநத - பறவைகள் சுவர்க்கலோகத்திலுள்ள கற்பகச்சோலையில் சென்றடைந்தன, கோ அடைந்திட ஒதுங்குறும் குறும்புபோல் - பேரரசர்கள்வர (தமது சிற்றூரைவிட்டோடும்) குறுநிலமன்னரைப்போல, மா செறிநது மாடு உள வரைகளும் காடும் அடைநதன - மிருகங்கள் கூட்டங்கூட்டமாக நெருங்கிப் பக்கத்திலுள்ள மலைகளிலும் காடுகளிலும் அடைந்தன.

ஒடு-இசைநிறைத்தறபொருளில்வந்த விடைச்சொல். கா என்பதனிறுதியில் எண்ணும்மைதொகுதல். ஒதுங்குறும-ஒருசொல். (௩0)

இருணிரம்பியவனமெலாமெறிந்துமெய்யுணர்ந்தோர்
தெருணிறைந்தசிந்தையின்வெளிசெய்துபல்லுயிர்க்கு
மருணிறைந்துபற்றறுத்தரனடிநிழலடைந்த
கருணையன்பர்தம்பிறப்பெனவேரொடுங்களைந்தார்.

(இ-ள்.) இருள் நிரம்பிய வனம எலலாம எறிந்து - (செறிவால்) இருள்நிறைந்த காட்டையெல்லாம்வெட்டி, மெய் உணர்ந்தோர் தெருள் நிறைந்த சிந்தையின் வெளிசெய்து - தத்துவஞானத்தையுணர்ந்த பெரியோருடைய கலங்காதமனம்போல வெளிசெய்து, பல் உயிர்க்கும் அருள் நிறைந்து பற்று அறுத்து அரன் அடி நிழல் அடைந்த கருணை அன்பர்தம் பிறப்பு என - பலவுயிர்களிடத்துங் கருணைவைத்து இருவகைப்பற்றையும் அறுத்துச் சிவபெருமானுடைய திருவடியாகிய நிழ

வினையடைந்த திருவருள்வசத்தராகிய அடியார் தமதுபிறப்பை வேரோடுங்களை தல்போல, வேரொடுங்களைந்தார்-(தொழில்செய்வோர்காட்டினை) வேரோடுங்களைந் தார்கள்.

தத்துவஞான முணர்ந்தோர் ஆதலால், மெய்யுணர்ந்தோர் எனவும்; அவர்க ள்சிந்தை சகலகேவலங்களிற் கூடுதலும் வாடுதலுஞ் செய்யாது ஒரு நீர்மையதாய்க் குழைந்து நின்று அறிவறியாமை யகன்ற அறிவால் நிறையப்பட்டதாதலால்,தெ ருணிறைந்தசிந்தையினவெளிசெய்து எனவும், சிவநேயமுடையோர் எல்லாவுயிர்க ளிடத்தும் அன்புடையோர் ஆதலால், பல்லுயிர்க்கும் அருணிறைந்து எனவும், அ க்காரணத்தால் பற்றறுதல் கூடும் ஆதலால் பற்றறுத்த எனவும்; அப்பற்றறுதலோ டு அச்சிவநேயமே வாயிலாகக்கொண்டு அவன் றருணிலையினின்று பிறப்பறுத்தல் கூடும் ஆதலால் கருணையன்பர்தம் பிறப்பென எனவும், அதுபோலச் சிறிதுமிலதாக அகழ்ந்தனராதலால் வேரோடுங்களைந்தார் எனவுங்கூறினார். தத்துவஞானமாவது பிறப்புவீடுகளையும் அவற்றின்காரணங்களையும் விபரீதமின்றி உண்மையால்அறிதல். இருவகைப்பற்று-அகப்பற்று, புறப்பற்று. (௩௧)

களைந்துநீணிலந்திருத்திச்செந்நெறிபடக்கண்டு
வளைந்துநன்னகரெடுப்பதெவ்வாறெனத்தேறல்
விளைந்ததாருந்தார்முடிவேந்தன்மந்திரரோ
டளைந்தளாவியசிந்தையோடிருந்தனனாங்கண்.

(இ-ள்.) தேறல் விளைந்த தாருந் தார்முடி வேந்தன்-தேனூறி மகரந்தஞ் சிந்தும் வேப்பமலர்மாலையைச்சூடிய மகுடத்தையுடைய பாண்டியன், களைந்து நீள் நிலம் திருத்தி செந்நெறிபடக் கண்டு - காடழிந்து நெடியநிலத்தை ஒழுங்கு படத்திருத்தி முட்டில்லாதுசெல்லும் வழியுண்டாகச்செய்து, வளைந்து நல் நகர் எடுப்பது எவ்வாறு என - வளைவுபட நல்லநகராக்குதல் எவ்வகையென்று, மந்தி ரரோடு அளைந்து அளாவிய சிந்தையோடு இருந்தனன் - மந்திரிகளோடுகலந்து சூழ்ச்சிசெய்யும் மனத்தோடிருந்தான், ஆங்கண் - (அவ்வாறிருக்கும்) அக்காலையில்.

இதுவும் மந்திரமென்னும் உறுப்பு. (௩௨)

மெய்யன்புதோய்சேவடியினிலந்தீண்டப்
பொய்யகன்றவெண்ணீறணிமேனியர்பூதிப்
பையர்நள்ளிருட்கனவில்வந்தருளியபடியே
யையர்வல்லைவந்தருளினாரரசுளங்களிப்ப.

(இ-ள்.) ஐயர் - பிரமன் முதலியோர்க்கு மேலானவராகிய சோமசுந்தரக் கடவுள், மெய்யன்பு தோய் சேவடி வியன் நிலம் தீண்ட - மெய்யன்பினையு டைய அடியாரன்பிறழுஞ் செவ்வந்திருவடிகளை அகன்ற நிலவுலகமானது சூட, பொய் அகன்ற வெள் நீறு அணி மேனியர்-உண்மையாகிய வெள்ளியநீற்றையணி ந்த திருமேனியை யுடையவராகியும், பூதிப் பையர் - விபூதிப்பையையுடையவரா கியும், நள் இருள் கனவில் வந்தருளியபடியே அரசு உளம் களிப்ப வல்லை வந்து அ ருளினார் - (கடந்த)நடுராத்திரியில் கனவில்வந்தருளியவண்ணமே பாண்டியன் மன ங்களிகூர விரைந்து (நனவிலும்) வந்தருளினார்.

பாசத்தை நீற்றுவதென்பது வேதவளவையாதலால் பொய்யகன்ற வெண் ணீறென்றார். நீறெனவந்த காரணக்குறியானுமுணர்க. (௩௩

கனவிலும்பெருங்கடவுளர்காண்பதற்கரியார்
நனவிலும்வெளிவந்தவர்தமையெதிர்நண்ணி
நினைவினின்றதாளிறைஞ்சிநேர்நின்றுநல்வரவு
வினவியாதனங்கொடுத்தனன்மெய்யுணர்வேந்தன்.

(இ-ள்.) மெய் உணர் வேந்தன் - மெய்யுணர்ச்சியிற்றலைப்பட்ட குலசேகர பாண்டியன், பெரும் கடவுளர் கனவிலும் காண்பதற்கு அரியார்-(பிரமன்முதலிய) பெரியகடவுளருங் கனவிலுங்காண்பதற்கு அரியராயுள்ளவர், நனவிலும் வெளிவந்தவர் தமை எதிர் நண்ணி-நனவிலும் (தான்காண) சித்தமூர்த்தியாய் வெளிவந்தவரையெதிர்கொண்டு, நினைவில் நின்றதாள் இறைஞ்சி நேர் நின்று நல்வரவு வினவி-(தனது) நினைவில் விடாதுநின்ற திருவடிகளைவணங்கித (திருமுன்னே)நேரேநின்று நல்லவரவைவினவி, ஆதனம் கொடுத்தனன - (எழுந்தருள) ஆசனங்கொடுத்தான்.

தென்னரன்பினிலகப்படுசித்தர்தாமுன்னர்ச
சொன்னவாதிநூல்வழிவருசார்புநூற்றொடர்பா
னன்னராலயமண்டபங்கோபுரநகர
மின்னவாறுசெய்யெனவகுத்திம்மெனமறைந்தார்.

(இ-ள்.) தென்னர் அன்பினில் அகப்படு சித்தர் - பாண்டியரன்பின்வலையி லகப்படுகின்ற சித்தமூர்த்திகள், தாம முன்னர் சொன்ன ஆதி நூல் - தாம் முன்னர்க்கூறிய முதனூலும, வழிவரு சார்புநூல் தொடர்பால் - வழிநூலும் (இவ் விருவகைநூலையும் ஒருபுடை தழுவி) வருஞ் சார்புநூலும் (ஆகியநூல்கள சொல்ல ப்பட்ட) முறையால், நன்னர் ஆலயம மணடபம் கோபுரம் நகரம இன்ன ஆறு செய் என வகுதது இம்மென மறைநதார்- வழுவாமல் ஆலயமும் மணடபமுங் கோபு ரமும் நகரமும் இவ்வகையாகச்செய்வாயென்று கூறி விரைந்து மறைந்தருளினர்.

முதனூல்-ஆகமம். வழிநூல்-சிற்பநூல. சார்புநூல்-இவவிரண்டையு மொரு புடைதழுவிக் கூறும் ஏனையநூல்கள. இந்நூல்களின்முறை - முன்னர்ஆலயமும் பி ன்னர்மண்டபமுங் கோபுரமும் நகரமுங காணவேணடுவதாதலால் இன்னவாறு என்றார். இம்முறையைப் பின்னர்க்காண்க. (௫௩)

மறைந்தெவற்றிலுநிறைந்தவாமலரடிக்கன்பு
நிறைந்தநெஞ்சுடைபஞ்சவனிலத்துமேம்பட்டுச்
சிறந்தசிற்பநூற்புலவராற்சிவபரஞ்சுடர்வந்
தறைந்துவைத்தவாறாலயமணிநகர்காண்பான்.

(இ-ள்.) எவற்றிலு மறைந்து நிறைந்தவர் மலர் அடிக்கு அன்பு நிறைந்த நெஞ்சு உடை பஞ்சவன் - எப்பொருள்களிலும் மறைந்து நிறைந்த சோமசுந்தரக் கடவுளுடைய தாமரைமலர்போன்ற திருவடியில் அன்புநிறைந்த மனத்தையுடைய குலசேகரபாண்டியன், நிலத்து மேம்பட்டு சிறந்த சிற்பநூல் புலவரால் - நிலவுல கில் மேம்பட்டுச்சிறப்புற்ற சிற்பநூற்புலமையின் வல்லவரால், சிவபரம் சுடர்வந்து அறைந்து வைத்த ஆறு - சோமசுந்தரக்கடவுள் (சித்தமூர்த்தியாய்) வந்தருளிச் சொல்லித் தெரிவித்தவண்ணம், ஆலயம் அணிநகர் காண்பான் - ஆலயமும் அழகி ய நகரமும் காணத்தொடங்கினன்.

விறகிற்றீயைப்போலும் பாலில் நெய்யைப்போலும் மறைந்து எவ்விடத்தும் நிறைந்திருத்தலின், மறைந்தெவற்றிலு நிறைந்தவர் என்று கூறினர். — மறைந்தென்றதற்கு - "விறகிற்றீயினிற்பாலிற் படு நெய்போல், மறையநின்றுளன் மாமணிச்சோதியான்" எனவருந் தேவாரத்தாலுணர்க. ஆலயம் நகரம் என்றமையால்-மண்டபமுங் கோபுரமுங்கொள்க. கு உருபு மயக்கம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மறைபயில்பதுமமண்டபமருத்தமண்டபமழைநுழைவளைவாய்ப்
பிறைபயில்சிகைமாமண்டபமறுகாற்பீடிகைதிசையெலாம்பிளக்கும்
பறைபயினிருத்தமண்டபமவிழாக்கொள்பன்மணிமண்டபம்வேள்வித்
துறைபயில்சாலைதிருமடைப்பள்ளிசூழுறைதேவர்தங்கோயில்.

(இ-ள்.) மறை பயில் பதும மண்டபம - வேதங்களோதும் பதுமமண்டபமும், அருத்த மண்டபம் - அர்த்தமண்டபமும், மழை நுழை வளைவாய் பிறை பயில் சிகைமா மண்டபம் அறுகாற் பீடிகை - மேகநுழைதலுறையும் வளைந்தமுகத்தையுடைய பிறைதவழுஞ் சிகரத்தையுடைய மகாமண்டபமும் அறுகாற்பீடிகையும், திசை எல்லாம பிளக்கும பறை பயில் நிருத்தமண்டபம் - எட்டுத்திக்குகளையும் பிளக்கும் ஒலியையுடைய வாச்சியங்கள் ஒலிக்கும் நிருத்தமண்டபமும், விழா கொள் பல்மணி மண்டபம் - (சோமசுந்தரக்கடவுள்) திருவிழாக்கோலங்கொண்டருளும் பலமணிகளழுத்திய மண்டபங்களும், வேள்வி துறைபயில் சாலை-வேள்வியின் முறையை வழுவாதுசெய்யும் யாகசாலைகளும், திருமடைப்பள்ளி - திருமடைப்பள்ளியையும், சூழ் உறை தேவா தமகோயில - ஆலயத்தைச்சூழ்ந்து வசிக்கும்பரிவார தேவர்கள் கோயிலும. (கள)

வலவயினிமயவல்லிபொற்கோயின்மாளிகையடுக்கியமதில்வா
னிலவியகொடியநெடியசூளிகைவானிலாவிரிதவளமாளிகைமீன்
குலவியகுடுமிக்குன்றிவர்செம்பொற்கோபுரங்கொண்டல்கண்படுக்குஞ்
சுலவெயிலகழிகிடங்குகம்மியநூற்றொல்வரம்பெல்லைகண்டமைத்தான்.

(இ-ள்.) வலவயின் இமயவல்லி பொன்கோயில் - சோமசுந்தரக்கடவுளின் வலப்பாகத்தில் மீனாக்ஷியம்மை வீற்றிருக்கும் பொன்னாலாகிய திருக்கோயிலும், மாளிகை அடுக்கிய மதில் - திருமாளிகைப் பத்திகளையுடைய மதிலும், வான் நிலவிய கொடி நெடிய சூளிகைய வால் நிலாவிரி தவளம மாளிகை - மேகத்தைத்தடவும் கொடிகளையும நெடிய இறப்புகளையுமுடைய வெள்ளியசந்திரன்போலும் (கிரணத்தை) விரிக்கும் தவளமாளிகைகளும, மீன குலவிய குடுமி குன்று இவர் செம்பொன் கோபுரம - நக்ஷத்திரங்கள் சஞ்சரிக்கின்ற சிகரத்தையுடைய மலையையொத்த செவந்தபொன்னாலாகிய கோபுரங்களும், கொண்டல் கண் படுக்கும் சுலவு எயில் - மேகங்கள் கண்ணுறங்கும் சுற்றியமதில்களும், அகழிக்கிடங்கு - அகழிக்கிடங்குமாகிய இவைகளை, கம்மியநூல் தொல்வரம்பு எல்லைகண்டு அமைத்தான்- சிற்பநூலிலுள்ள பழமையாகிய வரம்பினையாராய்ந்து செய்வித்தான்.

மதிலிரண்டனுள் - முன்னது ஆலயத்தைச் சூழ்ந்தமதில், பின்னது - நகரத்தைச்சூழ்ந்தமதில் - வரம்பு எல்லை - ஒருபொருட் பன்மொழி. கொடிய என்பதனிறுதியிலுள்ள அகரவிகுதியை சூளிகை என்பதனிறுதியில் கூட்டுக. (கஅ)

சித்திரநிரைத்தபீடிகைமறுகுதெற்றிகள்வாணிலாத்தெளிக்கு
நித்திலநிரைத்தவிழாவருவீதிநிழன்மணிச்சாளரவொழுக்கப்
பித்திகைமாடப்பெருந்தெருக்கவலைபீடுசால்சதுக்கநற்பொதியில்
பத்தியிற்குயின்றமன்றுசெய்குன்றுபருமணிமேடையாடரங்கு.

(இ-ள்.) சித்திரம் நிரைத்த பீடிகை மறுகு - சித்திரங்களை வரிசைபடச்செய்த கடைத்தெருக்களும், தெற்றிகள் - சித்திரகூடங்களும், வாள் நிலா தெளிக்கும் நித்திலம் நிரைத்த விழாவரு வீதி - ஒள்ளியநிலவைவீசும் முத்துகளை வரிசைபடத் தொடுத்த திருவிழாவரும்வீதிகளும், நிழல் மணி சாளர ஒழுக்கப்பித்திகை மாடம் பெருந்தெரு-ஒளி மிக்க இரத்தினங்கள் பதித்த சாளரவரிசைகள்பொருந்திய சுவர்த்தலங்களையுடைய வீடுகள் நெருங்கிய பெரியதெருக்களும், கவலை-முத்தெருக்கள்கூடுமிடமும், பீடு சால் சதுக்கம் - பெருமையமைந்த நாற்றெருகள்கூடுமிடமும், நல் பொதியில் - நல்ல அம்பலங்களும், பத்தியில் குயின்ற மன்று - பத்திபடச்செய்த சபைகளும், செய்குன்று பருமணி மேடை ஆடு அரங்கு-செய்குன்றமும் பருத்தமணிகளிழைத்த மேடைகளும் ஆடும் நாடகசாலைகளும். (௯௯)

அருந்தவரிருக்கையந்தணருறையுளரசராவணங்குலவணிகப்
பெருந்தெருநல்வேளாளர்பேரறஞ்சாலபெருங்குடியேனையகரிதேர்
திருந்தியபரிமாநிலைக்களங்கழகந்தீஞ்சுவையாறுநான்குண்டி
யிரந்தவர்க்கருத்துநல்லறச்சாலையினையனபிறவுநன்கமைத்தான்.

(இ-ள்.) அரும் தவர் இருக்கை-அரியமுனிவர்கள் மடங்களும், அந்தணர் உறையுள்-மறையவர் வீடுகளும், அரசர் ஆவணம-இராஜவீதிகளும், குலவணிகர் பெரும் தெரு-வைசியமரபினர் பெரியதெருககளும, பேர் அறம் சால் நல் வேளாளர் பெருங்குடி-பெரியதருமமமைந்த நல்லவேளாளராகிய பெரியகுடிகளின்வீதிகளும், ஏனைய கரி தேர் திருந்திய பரிமா நிலைக்களம்-இவையொழிந்தயானைகளுந் தேர்களும் நல்லசுழிகளையுடைய குதிரைகளுமாகிய இவைகளிருக்குங் கூடங்களும், கழகம-கல்விச்சாலைகளும், தீம் சுவை ஆறு நான்கு உண்டி இரநதவர்க்கு அருததும் நல் அறச்சாலை - இனிய அறுசுவையமைந்த நான்குணவுகளையும இரபபோர்க்கு ஊட்டும் நல்ல அறச்சாலையும் (ஆகிய) இனையன பிறவும் நன்கு அமைததான - இவைபோல்வன பிறவற்றையும் வரிசைபடச்செயவித்தான்.

நான்குண்டியாவன-உண்ணல், தின்னல், நக்கல். பருகல். உண்ணல் - சோறுமுதலியன. தின்னல் - கறிமுதலியன. நக்கல் - தேனமுதலியன. பருகல் - நீர்முதலியன. (௱)

துணிகயங்கீழ்நீர்க்கூவல்பூவோடைதொடுகுளம்பொய்கைநந்தவனந்
திணிமலர்ச்சோலைதடவையுய்யானந்திருநகர்க்கணிபெறசசெய்து
மணிமலர்த்தாரோன்மாளிகைதனக்கம்மாநகாவடகுணபாற்கண்
டணிநகர்சாந்திசெய்வதுகுறித்தானண்ணலாரறிந்திதுசெய்வார்.

(இ-ள்.) துணி கயம் - வெட்டியகயங்களையும், கீழ் நீர் கூவல் - கீழிடத்தில் நீரையுடைய கிணறுகளையும், பூ ஓடை - மலர்கள் நெருங்கிய வோடைகளையும், தொடுகுளம் பொய்கை-தோண்டப்பட்ட குளங்களையும் பொய்கைகளையும், நந்தவ

ளம் திணிமலர் சோலை-கந்தனவனங்களையும் மலர்கள் செருங்கிய சோலைகளையும், தடலைவ உய்யானம்-பூந்தோட்டங்களையும், திருநகர்க்கு அணிபெற செய்து - செல்வமிகுந்த நகரத்துக்கு அலங்காரமாகச் (சூழச்) செய்து, மணிமலர் தாரோன் தனக்கு மாளிகை - அழகிய மலராற் றொடுத்த மாலையையணிந்த பாண்டியன் தனக்கு மாளிகையையும், அ மாநகர் வடகுண பால் கண்டு - அந்தப்பெரியநகரத்தின் வடகீழ்த்திசையில் செய்வித்து, அணிநகர் சாந்தி செய்வது குறித்தான்-அழகிய அந்நகரத்திற்குச் சாந்திசெய்தலைக்கருதினான், அண்ணலார் அறிந்து இது செய்வார்-சோமசுந்தரக்கடவுளறிந்து இதனைச்செய்யத்தொடங்கினர். (௪௧)

பொன்மயமானசடைமதிக்கலையின்புத்தமுதுகுத்தனரதுபோய்ச்
சின்மயமானதம்மடியடைந்தார்சசிவமயமாக்கியசெயல்போற்
றன்மயமாக்கியந்நகர்முழுதுஞ்சாந்திசெய்ததுவதுமதுர
நன்மயமானதன்மையான்மதுராநகரெனவுரைத்தனர்நாமம்.

(இ-ள்.) பொன் மயமான சடை மதி கலையின் புத்து அமுது உகுத்தனர்-பொன்மயமாகிய தமது சடையிலுள்ள சந்திரகலையின புதிய அமுதத்தைச் சிந்தினர், அதுபோய் - அவ்வமுதஞ்சென்று, சின்மயம் ஆன தம் அடி அடைந்தார் சிவமயம் ஆக்கிய செயல்போல் - ஞானமயமாகிய தமது திருவடிகள் தம்மையடைந்தவரைச் சிவமயமாக்குஞ் செயல்போல, அந்நகர் முழுதும் தன்மயமாக்கி சாந்தி செய்தது - அந்நகர்முழுமையுந் தன்மயமாகச்செய்து சாந்திசெய்தது, அது மதுரம் நன் மயம் ஆன தன்மையால் - அந்நகரம் மதுரமயமாகிய தன்மையினாலே, நாமம் மதுரா நகர் என உரைததனர் - (அன்றுதொட்டு) அந்நகரத்திற்கு நாமம் மதுராநகரமென்று கூறினார்கள். (௪௨)

கீட்டிசைக்கரியசாத்தனுந்தென்சார்கீற்றுவெண்பிறைநுதற்களிற்றுக்
கோட்டிளங்களபக்கொங்கையன்னையருங்குடவயின்மதுமடையுடைக்குந்
தோட்டிளந்தண்ணந்துழாயணிமௌலிதோன்றலும்வடவயிற்றோடு
நீட்டிரும்போந்தினிமிர்குழலெண்டோணீலியுங்காவலாநிறுவி.

(இ-ள்.) கீழ் திசை கரிய சாத்தனும்-கீழைத்திசையில் கரியநிறத்தையுடைய ஐயனாரையும், தென் சார் கீற்று வெண் பிறை நுதல் களிறு கோடு இளம் களபம் கொங்கை அன்னையரும் - தென்திசைக்கண் வெள்ளிய பாதிச்சந்திரனையொத்த நெற்றியையும் யானைக்கொம்புபோன்ற இளமைதங்கிய கலவையையணிந்த தனங்களையுமுடைய சததமாதரையும், குடவயின் - மேலைத்திசையின்கண், மது மடை உடைக்கும் தோடு இளம் தண்ணம் துழாய் அணி மௌலி தோன்றலும் - தேன் மடையுடைக்கும் இதழலர்நத முதிராத தண்ணிய துழாய்மாலையையணிந்த கிரீடத்தையுடைய திருமாலையும், வடவயின் - வடதிசையின்கண், நீடு இரும்போந்தின் தோடு நிமிர் குழல் எண் தோள் நீலியும் காவலா நிறுவி - நீண்ட பெரியபனையினது மலரிதழணிந்த கூந்தலையும் எட்டுத்தோள்களையுமுடைய காளியையுங்காவலாக நிறுத்தி.

நீண்ட நீட்ட வலித்தல்விகாரம் அதன் அகரவீறு தொகுத்தல். தண்ணந்துழாய் - அம் விரித்தல்விகாரம்

**கைவரையெருத்திற்கனவரைகிடந்தகாட்சியிற்பொலிந்தொளிர்கோயின்**
**மைவரைமிடற்றுமதுரைநாயகரைமரபுளியருச்சனைபுரிவான்**
**பொய்வரைமறையாகமநெறியொழுகும்புண்ணியமுனிவரையாதிச்**
**சைவரைக்காசிப்பதியினிற்கொணர்ந்துதலத்தினிற்றாபனஞ்செய்தான்.**

(இ-ள்.) கைவரை எருத்தில் கனகவரை கிடந்த காட்சியில் பொலிந்து ஒளிர் கோயில் - யானையினது பிடரியில் பொன்மலைகிடந்த காட்சி போலும் விளங்கி ஒளிவீசுந்திருக்கோயிலில் (எழுந்தருளிய) மைவரை மிடறு மதுரை நாயகரை மரபு உளி அருச்சனை புரிவான் - கருமைதங்கிய கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை (ஆகமமுறையால்) அருச்சனைசெய்ய, பொய் வரை மறை ஆகமம் நெறி ஒழுகும் புண்ணிய முனிவரை ஆதிசைவரை - பொய்யினின்றும் நீங்கிய வேதாகமவழியினின்றொழுகும் புண்ணி வடிவமாகிய முனிவரையும் ஆதிசைவராகிய அந்தணரையும், காசிப்பதியினில் கொணர்ந்து - காசிப்பதியினின்றுங்கொண்டுவந்து, தலத்தினில் தாபனம் செய்தான் - அத்தலத்தில் தாபனஞ்செய்தான்.

மரபுளி உளி - மூன்றனுருபு. கனகம்-இடைக்குறை. (௪௪)

**உத்தமகுலத்துநாற்பெருங்குடியுமுயர்ந்தவுமிழிந்தவுமயங்க**
**வைத்தவுமானபுறக்குடிமூன்றுமறைவழுக்காமநுவகுத்த**
**தத்தமநெறிநின்றொழுகவைதிகமுஞ்சைவமுந்தருமமுந்தழைப்பப்**
**பைத்தெழுதிரைநீர்ஞாலமேற்றிலகம்பதித்தெனநகர்வளம்படுத்தான்.**

(இ-ள்.) உத்தம குலத்து நாற் பெருங்குடியும் - உத்தமகுலமாகிய மறையவர்முதலிய நால்வகைப்பெரிய குடிகளும், உயர்ந்தவும் இழிந்தவும் மயங்க வைத்தவும் ஆன புறக்குடி மூன்றும் - உயர்ந்தனவும் இழிந்தனவும் இவவிரண்டின்கூட்டத்தால் ஆனவும் ஆகிய புறக்குடிகள்மூன்றும், மறை வழுக்கா மநு வகுத்த தத்தம நெறிநின்று ஒழுக - வேதத்தினின்றும் வழுவாத மநுவால் முறைப்படுத்திய தங்கள் தங்களுக்குரிய வொழுக்கத்தினின்று நடக்கவும், வைதிகமும் சைவமும் தருமமும் தழைப்ப - வைதிகநெறியும் சைவநெறியும் தருமமும் மேலெழுந்தோங்கவும், பைத்து எழு திரை நீர் ஞாலம் மேல் திலகம் பதித்தால் என-பரந்தெழுந்த அலைகளையுடைய கடல் சூழ்ந்த வுலகின்கண் (பாண்டிநாட்டிற்கு) ஓர்திலகம்பதித்தாற் போல, நகர் வளம் படுத்தான் - நகரைவளம்படச்செய்தான்.

உத்தமகுலத்து - அத்துவேண்டா வழிச்சாரியை. உயர்ந்தன, இழிந்தன, மயங்க வைத்தனவாகிய மூன்றுபுறக்குடி என்றது உயர்வு, இழிவு, விரவுஎன்னு மூவகைக்குடிகளையும். உயர்வு-உயர்குலத்தாணும் இழிகுலப் பெண்ணுங்கூடிப்பெற்ற அநுலோமரும், உயர்குலப்பெண்ணும் இழிகுலத்தாணுங் கூடிப்பெற்ற பிரதிலோமருமாம்.

(அநுலோமர்) "பார்ப்பா ரரசர் வணிகர் வேளாளரென, நாற்குலத்தவருந் தங்குலநடையினும், உயர்ந்தவாணினு மிழிந்தபெண்ணினும், வியந்தகூட்டத்தவ ரநுலோமர்" என்றசூத்திரத்தாலுணர்க. அநுலோமர் அறுவகையர்-பிராமணனுக்கு க்ஷத்திரியப்பெண்ணினிடத்துப்பிறந்தவன்-சவர்ணன்; வசியப்பெண்ணினிடத்துப் பிறந்தவன்-அம்பட்டன்; சூத்திரப்பெண்ணினிடத்துப்பிறந்தவன்-பாரசவன்; ஆகப் பிராமணனிடத்துப்பிறந்தமூவரும்; க்ஷத்திரியனுக்கு வசியப்பெண்ணினிடத்துப்பி

றந்தவன்-மற்குரு; சூத்திரப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் - உக்கிரன்; ஆக க்ஷத்திரியனிடத்துப்பிறந்த இருவரும்; வசியனுக்குச் சூத்திரப்பெண்ணினிடத்துப்பிறந்த சூசகனுமாம்.

(பிரதிலோமர்) "இழிந்தவாணினு முயர்ந்தபெண்ணினும் - வியந்தகூட்டத்தவர் பிரதிலோமர்" என்றசூத்திரத்தானுணர்க. பிரதிலோமர் ஆறுவகையர்-க்ஷத்திரியனுக்குப் பிராமணப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் சூதன்; வசியனுக்கு க்ஷத்திரியப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் மாகதன்; பிராமணப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் வைதேகன்; ஆக வசியனுக்குப்பிறந்த இருவரும். சூத்திரனுக்கு வசியப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் ஆயோகவதன்; க்ஷத்திரியப்பெண்ணினிடத்துப்பிறந்தவன் க்ஷத்தா; பிராமணப்பெண்ணினிடத்துப்பிறந்தவன சண்டாளன்; ஆகச் சூத்திரனுக்குப்பிறந்தவர் மூவருமாம். இழிவு - அநுலோமத்தானும் பிரதிலோமப்பெண்ணுங்கூடிப்பெற்ற அந்தராளனும், அநுலோமப்பெண்ணும், பிரதிலோமத்தானுங் கூடிப்பெற்ற விராத்தியனுமாம். விரவு-மேற்கூறிய இருவகைக்குடிகளின் கூட்டத்தாலானவர்கள்.

பசுசாத்திரங்களைப் பற்றுதுவிட்டுச் சிவசாத்திரங்களைப்பற்றிப் பயின்று ஆசிரியராகும் இலக்கணமுடையராதலால் - உத்தமகுலத்து நாற்பெருங்குடியெனவும், "அந்தணர்முன்னொருநால்வர்சிவதிக்கைக்கருகரவர், சிந்தைமகிழ்வுறப்பூசை செய்கசிவன்றிருவடியில், புநிதமகிழ்வுறப்பூசையநுலோமரும்புரிக, தந்தமக்குத்தக்கவெல்லைமண்டபத்திற்றனித்தனியே" என்றதனாலும், பிரதிலோமர் ஆசிரியனிடத்தே தங்கள் தங்களுக்குரிய தீக்ஷைபெற்று அவன்கறபித்தபடியே பிரதக்ஷிணநமஸ்காரம்பண்ணிக்கொண்டிருப்பதே சிவபூசைஎன்றதனாலும், நாற்பெருங்குடியும் புறக்குடிமூன்றுந் தத்தமநெறிநின்றொழுக எனவும், சிவபெருமான் உலகம் உய்தற்பொருட்டருளிய வேதமோதல் முதலிய வேள்விப்பயன்களை வைதிகமெனவும், சத்திநிபாதருய்தற்பொருட்டருளிய சரியை கிரியை யோக ஞானங்களாகிய ஆகமநெறியைச் சைவம் எனவும், அவ்வவற்றிற்குரிய தருமங்களைத் தருமமெனவும், நாற்பெருங்குடியும் புறக்குடிமூன்றுந் தத்தமநெறிநின்றொழுகவே வைதிகமும் சைவமுந் தருமமுந் தழைத்தற்குக் காரணமாதலால் தழைப்ப எனவுங்கூறினர். (சரு)

**அன்றுதொட்டரசனந்நகரெய்தியணிகெழுமங்கலமியம்ப, வென்று**
**தொட்டிமைக்குமனையின்மங்கலநாளெய்தினனிருந்துமுப்புரமுங், குன்று**
**தொட்டெய்தான்கோயின்மூன்றுறுப்புங்குறைவில்பூசனைவழாதோங்கக்,**
**கன்றுதொட்டெறிந்துகனியுகுத்தான்போற்கலிதுரந்தரசுசெய்நாளில்.**

(இ-ள்.) அரசன் அன்று தொட்டு அந்நகர் எய்தி - பாண்டியன் அந்நாள் தொட்டு அந்நகரத்தில் சென்று, அணி கெழு மங்கலம் இயம்ப - அழகுமிக்க மங்கலவாத்தியங்கள் ஒலிக்க, என்று தொட்டு இமைக்கும் மனையில் மங்கல நாள் எய்தினன் இருந்து, சூரியனை அளாவி யொளிவிளங்கும் மாளிகையில் நல்ல முகூர்த்தநாளில் குடியேறியிருந்து, முப்புரமும் குன்று தொட்டு எய்தான் கோயில் மூன்று உறுப்பும் குறைவில் பூசனை வழாது ஓங்க - திரிபுரங்களையும் மகமேருவை வில்லாக வளைத்து எய்தெரித்த சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலில் நித்தியமுதலிய மூன்றங்கங்களும் குறைவின்றி நிறைந்த பூசனை வழாமல் நிலைபெற்றோங்க-கன்றுதொட்டு எறிந்து கனி உகுத்தான் போல் கலிதுரந்து அரசு செய்நாளில் - கன்றினையெடுத்துவீசி விளாங்கனியை யுகுத்ததிருமால்போலக் (குடிகளுக்கு) வருந்துன்பத்தை யோட்டிஅரசுசெய்துவீற்றிருக்குங் காலத்தில்,

மூன்றுறுப்பாவன - நித்தியம், நைமித்திகம், பிராயச்சித்தம். மாதுருவாய் நின்று உலகங்காத்தலால் - கன்றுதொட்டெறிந்து கனியுகுத்தான்போல் என்றார். இதனை.

திருவாய்மொழி.

" திருவுடைமன்னரைக்காணிற்றிருமாலைக்கண்டேனேயென்னு
முருவுடைவண்ணங்கள்காணினுலகளந்தானென்றுதுள்ளும்
கருவுடைத்தேவிற்களெல்லாங்கடல்வண்ணனகோயிலேயென்னும்
வெருவிலும்வீழ்விலுமோவாள்கண்ணனைகழல்கள்விரும்புமே"
என்னுந்திருவாக்காலுணர்க. (சசு)

பவநெறிகடக்கும்பார்த்திவன்கிரணம்பரப்பிளம்பரிதிபோன்மலயத்
துவசனைப்பயந்துமைந்தன்மேன்ஞாலஞ்சுமத்திநாள்பலகழித்தொருநா
ணவவடிவிறந்தோனாலயத்தெய்திநாதனைப்பணிந்துமூவலஞ்செய்
துவமையிலின்பவருணிழலெய்தியொன்றியொன்றாநிலைநின்றான்.

(இ-ள்.) பவம் நெறி கடக்கும் பார்த்திவன் - பிறவித் தொடர்ச்சியினின்று நீங்கும் பாண்டியன், கிரணம் பரப்பு இளம் பரிதிபோல் மலயத்துவசனை பயந்து மைந்தன்மேல் ஞாலம் சுமத்தி பல நாள் கழித்து ஒருநாள் - கிரணங்களைப்பரப்பும் இளஞ் சூரியனைப்போல மலயத்துவசனென்னும் மைந்தனைப்பெற்று அம்மைந்த னுக்குத்தன் அரசியல்தந்து பலநாள்கழித்து ஒருநாள், நவ வடிவு இறந்தோன் ஆலயத்துஎய்தி நாதனை பணிந்து மூவலம்செய்து - ஒன்பது திருவுருவங்களையுங் கடந்துஅப்பாற்பட்ட சோமசுந்தரக்கடவுளுடைய திருக்கோயிலையடைந்து அக்கடவுளை வணங்கி மூன்றுபிரதக்ஷிணஞ்செய்து, உவமை இல் இன்பம் அருள் நிழல் எய்தி ஒன்றி ஒன்றா நிலை நின்றான் - ஒப்பில்லாத பேரின்பமாகிய திருவருள்நிழலை யடைந்து கலந்துங் கலவாத நிலையினின்றான்.

நவவடிவமாவன-உருவம் நான்கு, அருவம் நான்கு, உருவாருபம் ஒன்று. உருவம் பிரமன், திருமால், உருத்திரன், மகேஸ்வரன். அருவம் நாதம், விந்து, சத்தி, சிவம். உருவாருபம் சதாசிவம்.—அருவும் உருவும் அருவுருவுமாகிய நவபேதங்களுங்கடந்த பராபரவடிவமாய் நின்றவனாதலின் நவவடிவிறந்தோன் எனவும், அழிதலையடையும் பதமுத்தியின்பங்கள்போலாது நிற்றலின் உவமையிலின்பம் எனவும், நித்தியானந்தத்தைத்தரும் பரமுத்தியே திருவடிப்பேறாதலால் அருணிழல் எனவும், எடுத்தசரீரத்தோடே முத்தியடைந்தவனாதலால் - மூவலஞ்செய்து எய்தி எனவும், அநனியமாய், இருந்தபடி யிருந்தனனாதலின் ஒன்றியொன்றா நிலைநின்றான். எனவுங்கூறினார். எடுத்தசரீரத்தோடடைந்தானென்பது-ஆலாஸ்யமகத்துவத்தில் - "[Grantha script – illegible] । [Grantha script – illegible]" எனவருஞ் சுலோகத்தாலுணர்க. (சஎ)

திருநகரங்கண்டபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ருசஎ.

# தடாதகைப்பிராட்டியார்

## திருவவதாரப்படலம்.

---

கலிவிருத்தம்.

கன்னியொருபங்கினர்கடம்பவனமெல்லா
நன்னகரமானதுநவின்றாமுலகீன்ற
வன்னைமகளாகிமலயத்துவசனுக்குத்
தென்னனிடைவந்துமுறைசெய்ததுரைசெய்வாம்.

(இ-ள்.) கன்னி ஒரு பங்கினர் கடம்பவனம் எல்லாம் நல் நகரமானது நவின்றாம்-உமையவளை யொருபாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுள் (வீற்றிருக்கும்) கடம்பவனமுற்றும் நல்லநகரமாகிய திருவிளையாடலைச்சொன்னோம், உலகு ஈன்ற அன்னை மகளாகி மலயத்துவசனுக்குத் தென்னன் இடை வந்து முறை செய்தது உரை செய்வாம் - உலகங்களியாவையும் பெற்றருளிய தாயாகிய அவ்வுமையவளே புத்திரியாய் மலயத்துவசனாகிய பாண்டியனிடத்து வந்தருளி (மனுநூல்) முறைப்படி அரசியல்செய்த திருவிளையாடலைச்சொல்லுவாம். (க)

மனுவறமுவந்துதன்வழிச்செலநடத்தும்
புனிதன்மலயத்துவசன்வென்றிபுனைபூணான்
கனியமுதமன்னகருணைக்குறையுள்காட்சிக்
கினியன்வடசொற்கடறமிழ்க்கடலிகந்தோன்.

(இ-ள்.) மனு அறம் உவந்து தன்வழி செல நடாத்தும் புனிதன்-மனுநூலுட் கூறிய தருமமானது மகிழ்கூர்ந்து தன் செங்கோல்வழிச்செல்ல நடத்தும் நல்லொழுக்கமுடையவன், மலயத்துவசன் - மலயத்துவசனென்னும் இயற்பெயரையுடையவன், வென்றி புனை பூணான் - வெற்றியையே ஆபரணமாகப்பூண்டவன், கனி அமுதம் அன்ன கருணைக்கு உறையுள் - சுவைமுதிர்ந்த அமிர்தத்தையொத்த கிருபைக்கு இருப்பிடமாயுள்ளவன், காட்சிக்கு இனியன் - (குறைவேண்டினோர்க்கு) காணுதற்கெளிய சமயத்தன், வடசொல் கடல் தமிழ்க்கடல் இகந்தோன் - வடமொழிக்கடலையும் தென்மொழிக்கடலையும் (அறிவென்னும் புணையால்) கடந்தவன்.

மனுவறத்தின் வழிநடத்தும் ஏனையரசர் செங்கோல்போலாது அறந்தனது செங்கோல் வழிப்படநடத்துதலால் - புனிதன் எனவும், எல்லாவரசரையுந் தன்னடிப்படநடத்தும் திறலுடையனாதலால் - வென்றிபுனைபூணான் எனவும், தேவர்களுக்குப் பசிபிணிமுதலியவற்றையொழிக்கும் அமிர்தம்போலத் தான்கொண்டகருணை உயிர்களின் பசிபிணிமுதலியவற்றை யொழித்தலால் அமுதமன்ன கருணை எனவும், அக்கருணை யேனையரசரிடத்து இருத்தல்போலாது இவனிடத்து முற்றுங் குடியிருத்தலால் கருணைக்குறையுள் எனவும், வறுமையினால் நலிவெய்தினவர்க்கும் வறுமையுறநிரந்தவர்க்கும் அமைச்சருள்ளிட்டோரோடு செவ்வியுடையனாயிருத்தலால் காட்சிக்கினியன் எனவும், இவை நிலைபெறுதற்குக் கல்வித்தேர்ச்சி வேண்டுமாதலால் - வடசொற்கடல் தமிழ்க்கடலிகந்தோன் எனவுங்கூறினார். இனிமை என்னும் பண்பு எளிமை என்னும் பண்பின் பொருணிகழ்ச்சிதோன்ற வுபசரித்தார். இகந்தோன் என்றமையால் அறிவென்னும் புணையென்றும். (உ)

வேனில்விறல்வேள்வடிவன்வேட்கைவிளைபூமி
யானமடவார்கள்பதினாயிரவருள்ளான்
வானொழுகுபானுவழிவந்தொழுகுசூர
சேனன்மகள்காஞ்சனையைமன்றல்வினைசெய்தான்.

(இ-ள்.) வேனில் விறல் வேள் வடிவன் - வேனிற்காலத்தில் காமுகனை வெற்றிகொள்ளும் மன்மதன்போலும் அழகுவாய்ந்தவன், வேட்கை விளைபூமி ஆன பதினாயிரவர் மடவார்கள் உள்ளான் - காமப்பயிர் விளைநிலம்போன்ற பதினாயிரம் காமக்கிழத்தியருள்ளவன், வான் ஒழுகு பானு வழி வந்து ஒழுகு சூரசேனன் மகள் காஞ்சனையை - ஆகாயத்தில் சஞ்சரிக்குஞ் சூரியன் மரபில்வந்துபிறந்து (மநுநூல்வழிச்) செல்லும் சூரசேனனென்னுஞ் சோழனுடைய புத்திரியாகிய காஞ்சனமாலையை, மன்றல் வினை செய்தான் - வேதவிதிப்படி விவாகஞ்செய்து முடித்தவன்.

வேட்கை விளைபூமியான மடவார் பதினாயிரவருள்ளான் என்பதால்-சூரசேனன் மகளாகிய காஞ்சனமாலையை மன்றல்வினைசெய்தான் என்றார். காமக்கிழத்தியரை விளைபூமி என்றமையால் காமம் என்றதைக் காமப்பயிரென்றும். இது ஏகதேசவுருவகவணி. (௩)

கண்ணுதலைமுப்பொழுதும்வந்துபணிகற்றோ
னெண்ணில்பலநாண்மகவிலாவறுமையெய்திப்
பண்ணரியதானதருமம்பலவுமாற்றிப்
புண்ணியநிரம்புபரிவேள்விபுரிகுற்றான்.

(இ-ள்.) கண்ணுதலை முப்பொழுதும் வந்து பணி கற்றோன் - சோமசுந்தரக் கடவுளைத் திரிகாலமும் வந்து பணிதலையேகற்றுணர்ந்தவன், எண் இல் பலநாள் மகவிலாத வறுமை எய்தி - அளவில்லாத பலநாளும் புத்திரப்பேறில்லாத நல்குரவையடைந்து (அந்நல்குரவையொழிக்க) பண் அரிய தானம் தருமம் பலவும் ஆற்றி (பிறர்) செய்தற்கரிய தானதருமங்கள் பலவற்றையும் செய்து, புண்ணியம் நிரம்பு பரி வேள்வி புரி குற்றான் - புண்ணியமிக்க அசுவமேதயாகஞ் செய்யத்தொடங்கினான்.

நூல்களைக்கற்றதற்குப் பயன் சிவபெருமான்திருவடியை வணங்குதலேயாதலால் காரணமாகிய நூலைககூறாது காரியமாகிய பணிதலைக்கற்றோனெனவும், எல்லாப்பேற்றுள்ளும் புத்திரப்பேறே பெரும்பேறு, அஃதின்மை பெரியவறுமையாதலின் - மகவிலாவறுமை யெய்தினனெனவும், அதனையொழிப்பது தானதருமமாதலால் - தானதருமம் பலவும் ஆற்றினன் எனவும், அவற்றாலும் ஒழிந்திலதாதலால முடிந்தசெயலாய்ப் புண்ணியநிரம்புபரி வேள்வி புரிகுற்றான் எனவுங்கூறினார். (௪)

ஈறின்மறைகூறுமுறைமெண்ணியொருதொண்ணூற்
றாறினொடுமூன்றுமகமாற்றவமரேச
னூறுமகமும்புரியினென்பதனொடிப்பின்
மாறுமெனமற்றதனைமாற்றியிதுசாற்றும்.

(இ-ள்.) ஈறு இல் மறை கூறும் முறை எண்ணி - அழிவில்லாத வேதங்கூறும் விதிவழுவாமல், ஒரு தொண்ணூற்றாறின் ஒடு மூன்று மகம் ஆற்ற - தொண்ணூற்றொன்பது யாகஞ்செய்து முடிக்க, அமரேசன் நூறு மகமும் புரியின் - (அதனையுணர்ந்த) தேவேந்திரன் (இப்பாண்டியன்) நூறுயாகமுஞ்செய்து முடிப்பின்,

னை பதம் கொடிப்பில் மாறும் என - என்னுடைய இந்திரபட்டம் கொடிப்பொழுதில் மாறுமேயென்று கருதி, அதனை மாற்றி இது சாற்றும் - அந்த யாகத்தை விலக்கி இதனைச் சொல்லுகின்றான்.

தொண்ணூற்றுறொடு மூன்று என்பதில் - ஒடு உடனிகழ்ச்சிப் பொருளதாதலால் தொண்ணூற்றுறொடு கலந்த மூன்று எனப் பொருள்படும். அதனாற் றொண்ணூற்றொன்பதென்றும (௫)

நன்பொருள்விரும்பினையதற்கிசையஞால
மின்புறுமகப்பெறுமாக்கினையியற்றி
னன்புறுமகப்பெறுதியென்றமரர்நாடன்
றன்புலமடைந்திடலுநிம்பந்தாரான்.

(இ-ள்.) நன் பொருள் விரும்பினை - நீ நல்ல புத்திரப்பேற்றை விரும்பினாய், அதற்கு இசைய ஞாலம் இன்பு உறு மக பெறும் மகத்தினை இயற்றின் அன்பு உறு மக பெறுதி என்று - அப்பேற்றிற்கிசையும்படி உலகம் விரும்பும் புத்திரப்பேற்றைக் கொடுத்தற்குரிய யாகத்தைச் செய்வையாயின் அன்பு மிக்க புத்திரப்பேற்றை யடைவாயென்றுகூறி, அமரர் நாடன் தன் புலம் அடைந்திடலும் - தேவேந்திரன் றன்னுடைய லோகத்தை யடையவும், நிம்ப தாரான் - வேப்பமலர் விளங்கும் மாலையையுடைய பாண்டியன்

புத்திரனைப் பொருளென்றது - அவர் செய்த பொருள் தம்மை நோக்கிச் செய்யும் வினையால் வந்தடைதலில் காரணப்பெயர். "தம்பொருளென்பதம்மக்க ளவர்பொருடந்தம்வினையான் வரும்" என்னுந் திருக்குறளாலுணர்க. (௬)

மிக்கமகவேள்விசெய்விருப்புடையனாகி
யக்கணமதற்குரியயாவையுமமைத்துத்
தக்கநியமத்துரியதேவியொடுசாலை
புக்கனனிருந்துமகவேள்விபுரிகிற்பான்.

(இ-ள்.) மிக்க மக வேள்வி செய் விருப்பு உடையன் ஆகி - நன்மை மிக்க புத்திரகாமேஷ்டியாகஞ் செய்யும் விருப்பத்தை யுடையவனாகி, அக்கணம் அதற்கு உரிய யாவையும் அமைத்து - அப்பொழுதே அந்த யாகத்திற்குரிய (உபகரணங்கள்) யாவையுந் தேடி, தக்க நியமத்து உரிய தேவியொடு சாலை புக்கனன் இருந்து - அதற்குத்தக்க நியமத்தோடு (தன்னில்வாழ்க்கைக்கு) உரியமனைவியோடு யாகசாலையிற் புகுந்திருந்து, மக வேள்வி புரிகிற்பான் - அப்புத்திரகாமேஷ்டியாகத்தைச் செய்யத் தொடங்கினான். (௭)

ஆசறுமறைப்புலவராசிரியர்காட்டு
மாசறுசடங்கின்வழிமந்திரமுதாத்த
வோசையனுதாத்தசொரிதந்தழுவவோதி
வாசவனிருக்கையிலிருந்தெரிவளர்ப்பான்.

(இ-ள்.) ஆசு அற மறைப் புலவர் ஆசிரியர் காட்டும் மாசு அறு சடங்கின் வழி - குற்றமற்ற வேதநூற் புலமையின் வல்லவராகிய ஆசிரியர் காட்டுகின்ற குற்றமற்ற விதமாகிய சடங்கின் வழியே, மந்திரம் உதாத்தம் அனுதாத்தம் சொரிதம் ஓசை தழுவ ஓதி - மந்திரங்களை உதாத்தமும் அனுதாத்தமும் சொரிதமும் என்னும் ஓசை தழுவ வுச்சரித்து, வாசவன் இருக்கையில் இருந்து எரி வளர்ப்பான் - இந்திரன் இருக்கையிலிருந்து யாகஞ்செய்யத் தொடங்கினான்.

உதாத்தம் - எடுத்தல், அனுதாத்தம் - படுத்தல், சொரிதம் - கலிதல். இவ்வோசைகளின் வேறுபாடு பொருந்த உச்சரித்தல் முறையாதலால் - தழுவ வோதி என்றார். (அ)

விசும்புநிலனுந்திசையும்வேள்வியடுசாலைப்
பசும்புகைபடர்ந்தொருபடாமெனமறைப்பத்
தசும்புபடுநெய்பொரிசமித்திறொடுவானோர்க்
கசும்புபடுமின்னமுதினுகுதிமடுத்தான்.

(இ-ள்.) வேள்வி அடு சாலை பசும் புகை படர்ந்து - யாகசாலையி லெழுந்த பசிய புகையானது பரவி, விசும்பும் நிலனும் திசையும் ஒரு படாம் என மறைப்ப - ஆகாயத்தையும் பூமியையும் எட்டுத்திக்கையும் ஒரு போர்வைபோல மறைக்க, தசும்பு படு நெய் பொரி சமித்து - குடங்களில் நிறைந்த நெய்யையும் பொரியையும் சமித்துகளையும், வானோர்க்கு அசும்பு படும் இன் அமுதின் ஆகுதி மடுத்தான் - தேவர்களுக்கு ஊற்றெடுக்கும் இனிமையையுடைய அமுதம்போல ஆகுதியாகக் கொடுத்தான்.

ஒடு - எண்ணிடைச்சொல். (கூ)

ஐம்முகனநாதிபரமாத்தனுரையாற்று
னெய்ம்முகநிறைத்தழனிமிர்ந்துவருமெல்லை
பைம்முகவராவணிபரஞ்சுடர்தனிப்ப
மைம்முகநெடுங்கணிமவான்மனைவிநாண.

(இ-ள்.) ஐ முகன் அநாதி பரமாத்தன் உரை ஆறு - ஐந்து திருமுகங்களையுடையவனும் அநாதியானவனும் பரமாத்தனுமாகிய சிவபெருமானுடைய திருவாக்காகிய வேதவழியால், நெய் முகம் நிறைத்து - நெய்யை யாகமுகத்தில் நிறைக்க, அழல் நிமிர்ந்து வரும் எல்லை - அவ்வேள்வித்தீ சிகைவிட்டு வலஞ்சுழித்து எழும்போது, பை முக அரா அணி பரஞ்சுடர் தனிப்ப - படத்தையுடைய சர்ப்பாபரணத்தையணிந்த சிவபெருமான் தனிக்கவும், மை முக நெடும் கண் இமவான் மனைவி நாண - மையெழுதிய நீண்ட கண்களையுடைய மலையரையன்மனைவியாகிய மேனை நாணவும்.

ஐம்முகம் - ஐந்து திருமுகங்கள். ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம். முகமே படமாதலின் பைம்முகம் எனவும், மையைத் தமதிடத்துடைமையால்-மைம்முகம் எனவுங் கூறினார். நிறைத்து செயவெனெச்சத்திரிபு.(கo)

வள்ளன்மலயத்துவசமீனவன்வலத்தோ
டுள்ளமனைகாஞ்சனைசுருங்கியமருங்கு
றள்ளவெழுகொங்கைகடதும்பநிமிர்தீம்பால்
வெள்ளமொழுகக்கரியவேற்கணிடனாட.

(இ-ள்.) வள்ளல் மலயத்துவசன் மீனவன் வலத்தோள் துள்ள - வள்ளற்றன்மையையுடைய மலயத்துவசபாண்டியன் வலத்தோள் துடிக்கவும், மனை காஞ்சனை சுருங்கிய மருங்குல் தள்ள எழு கொங்கைகள் ததும்ப நிமிர் தீம்பால் வெள்ளம் ஒழுக - (அவனது) மனைவியாகியகாஞ்சனையினுடைய சுருங்கிய இடையானது ஒசியப்பருத்த கொங்கைகளினின்று ததும்ப நிமிர்ந்த பால் வெள்ளம் ஒழுகவும், வேல் கரிய இடக் கண் ஆட - வேல்போன்ற கரிய இடக்கண் துடிக்கவும். (கக)

இவ்வுலகமன்றியுலகேழுமகிழ்வெய்தச்
சைவமுதலாயினதவத்துறைநிவப்ப
வெளவியமறங்கெடவறங்குதுகலிப்பத்
தெய்வமறைதுந்துபிதிசைப்புலனிசைப்ப.

(இ-ள்.) இவ்வுலகம் அன்றி உலகு ஏழும் மகிழ்வு எய்த - இந்நிலவுலகத்திலுள்ளாரன்றிப் பூலோகமுதலிய வேழுலகங்களிலுள்ளவரும் மகிழ்வு கூரவும், சைவம் முதலாயின தவத்துறை நிவப்ப - சைவ முதலாயுள்ள தவநெறிக்குரிய உட்சமயம் ஆறும் எழுந்தோங்கவும், ஔவியம மறம் கெட - பொறாமை நிறைந்த பாவங் கெடவும், அறம் குது கலிப்ப-தருமங் களிகூரவும், தெய்வம் மறை துந்துபி திசை புலன் இசைப்ப - தெய்வத்தன்மையையுடைய வேதங்களும் தேவதுந்துபிகளும் பத்துத்திக்குகளிலும ஒலிக்கவும்.

பொறாமையால் எல்லாபபாவமும் விளைதலால் ஔவிய மறம் என்றார். ஏழுலகமாவன - பூலோகம, புவலோகம, சுவலோகம, தவலோகம், மகாலோகம், சனலோகம், சத்தியலோகம எனபவைகள. உட்சமயங்களாறுவன - சைவம், பாசுபதம், மாவிரதம, காளாமுகம, வைரவம, வாமம் எனபவைகளாம். பத்துத்திசைகளாவன - எண திககோடு மேலுங்கீழுமாம. (கஉ)

மைம்மலாநெடுங்கணரமங்கையர்நடிப்ப
மெய்மமனமொழிசெயலின்வேறுபாடின்றி
யம்மதுரைமாநகருளாரகமகிழ்சசி
தம்மையறியாதனதலைததலைசிறப்ப.

(இ-ள்.) மை மலா நெடும் கண அரமங்கையர் நடிப்ப-மையெழுதிய நீண்ட கண்களையுடைய அரம்பையா நடனஞ் செய்யவும், அ மா மதுரை நகரில் உள்ளார்-அந்தப பெரியமதுரைநகரததிலுளளவருககு, மனம மொழி மெய் செயலின் வேறுபடல இன்றி - மனவாககுக காயங்களின செயல்கள தமமுளொப்ப, அகமகிழ்ச்சி தமமை அறியாதன தலை தலை சிறபப - (எழுநத) மனமகிழ்ச்சி தம்மைவிழுங்கத் தனிததனி மேலெழுநதோஙகவும.

வேறுபடலின்றி ஒருசொல்-மகிழச்சிக்கடலுளமூழ்கியும் மனவாக்குக்காயங்களின் செயல்கள் ஒருபபட்டுநிறறலால செயலின வேறுபடலின்றி என்றார்.(கங)

மாந்தர்பயின்மூவறுசொன்மாநிலவரைபபிற்
றீந்தமிழ்வழங்குதிருநாடதுசிறப்ப
வாய்ந்ததமிழநாடரசளித்துமுறைசெய்யும்
வேந்தர்களின்மீனவர்விழுத்தகைமையெய்த.

(இ-ள்.) மாந்தர் பயில் மூ அறு சொல் மா நில வரைப்பில் - அறிவுடையோராராயும் பதினெண பாஷைகள வழங்கும பதினெட்டு நிலங்களுள், தீம் தமிழ் வழங்கு திருநாடு சிறப்ப - இனிய தமிழ் வழங்கும அழகிய நாடானது சிறந்தோங்கவும், ஆய்ந்த தமிழ் நாடு அரசு அளித்து முறை செயயும் வேந்தர்களில் - ஆராய்ந்த அத்தமிழ்நாடுகளை யரசாண்டு மநுநூன்முறை வழுவாது நடத்துஞ் சேரசோழபாண்டியருள, மீனவர் விழு தகைமை எய்த-பாண்டியர்கள் மேன்மைத்தன்மையை யடையவும்.

ஈட்டு-அது பகுதிப்பொருள் விகுதி. ஆய்ந்த தமிழ்நாடென்றது - முன்னர்க்கூறிய மூன்று சங்கத்தாராலும் ஆய்ந்த தமிழ் எனக் கொள்க. இதனைத் திருநகரப்படலத்திலுணர்க. மநுநூல்முறை என்றது-முன்னர்க்காட்டிய "மாநிலங்காவலனாவான் மன்னுயிர்காக்குங்கால" என்னுஞ் செய்யுளாலுணர்க. வேந்தர்கள் என்பதனிறுதியிலுள்ள எழனுருபுகூட்டிப் பிரித்தற்பொருளில் வந்தது. (௧௪)

நொய்தழலெரிக்கடவுணோற்றபயனெய்தக்
கொய்தளிரொனத்தழல்கொழுந்துபடுகுண்டத்
தைதவிழ்கழக்கமலமப்பொழுதலர்ந்தோர்
மொய்தளிர்விரைக்கொடிமுளைத்தெழுவதென்ன.

(இ-ள்) அழல் எரிக் கடவுள் நோற்ற பயன் நொய்து எய்த - தீக்கடவுளானவன் (தான்செய்த) தவப்பயனை யெளிதில் அடையவும், தழல் கொய் தளிர் என கொழுந்து படு குண்டத்து - நெருப்புக் கொய்த தளிர்போல (செந்நிறமுடையதாய்க்) கொழுந்துவிட்டெரியும் யாககுண்டத்தில், ஐது அவிழ் இதழ் கமலம் அப்பொழுது அலர்ந்து - அழகிதாக இதழவிழ்ந்த தாமரை அன்றலர்ந்து, மொய் தளிர் விரை ஓர் கொடி முளைத்து எழுவது என்ன - நெருங்கிய தளிர்களும் மணமும் (நிறைந்த) ஒருகொடி முளைத்தெழுதல்போலவும்.

அலர்ந்து என்னும் பெயரெச்சம் அகரவீறு தொகுத்தது. (௧௫)

விட்டிலகுசூழியமவிழுங்குசிறுகொண்டை
வட்டமதிவாய்க்குறுமுயற்கறையைமானக்
கட்டியதிறற்றியகதிர்த்தரளமாலை
சுட்டியதில்விட்டொழுகுசூழ்கிரணமொப்ப.

(இ-ள்.) விட்டு இலகு சூழியம் விழுங்கு சிறு கொண்டை - ஒளிவீசி விளங்கும் முத்துச்சூழியத்துட்பட்ட சிறியஉச்சிக்கொண்டையானது, வட்ட மதி வாய் குறு முயல் கறையை மான-வட்டவடிவாய்ந்த சந்திரனிடத்துள்ள சிறிய முயற்களங்கத்தையொத்துத்தோன்றவும், அதில் கட்டி நாற்றிய கதிர் தரள மாலை சுட்டி-அச்சூழியத்திற்கட்டித் தொங்கவிட்ட கிரணத்தையுடைய முத்துச்சரத்தோடு கூடியசுட்டியானது, அதில் விட்டு ஒழுகு சூழ் கிரணம் ஒப்ப - அச்சூழியமாகிய சந்திரனில் நின்று பரந்து சூழ்ந்த கிரணத்தை யொக்கவும்.

சூழி உச்சிக்கொண்டை அணி அம் பகுதிப்பொருள்விகுதி முயற்கறை இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (௧௬)

தீங்குதலையின்னமுதமார்பின்வழிசிந்தி
யாங்கிளநிலாவொழுகுமாரவடமின்ன
வீங்குடலிளம்பரிதிவெஞ்சுடர்விழுங்கி
வாங்குகடல்வித்துருமமாலையொளிகால.

(இ-ள்.) தீம் குதலை இன் அமுதம் மார்பின் வழி சிந்தியது ஆங்கு-இனிய குதலைச்சொல்லாகிய இனிய அமுதமானது மார்பினிடத்து ஒழுகினதுபோல, இளநிலா ஒழுகும் ஆர வடம் மின்ன - இளநிலவு சிந்தும் முத்துவடம் விளங்கவும், வீங்கு உடல் இளம் பரிதி வெம் சுடர் விழுங்கி - ஒளிமிக்க வடிவத்தையுடைய இளஞ்சூரியனது வெவ்விய கிரணத்தைத் தன் தகப்படுத்தி, வாங்கு கடல் வித்துரும மாலை ஒளி கால-வளைந்தகடலிற்றோன்றிய பவளமாலை (ஒருபால்)ஒளிவீசவும். (௧௭)

சிற்றிடைவளைந்தசிறுமென்றுகில்புறஞ்சூழ்
பொற்றிருமணிச்சிறியமேகலைபுலம்ப
விற்றிருமணிக்குழைவிழுங்கியகுதம்பை
சுற்றிருள்கடிந்துசிறுதோள்வருடியாட.

(இ-ள்.) சிறு இடை வளைந்த மென் சிறு துகில் புறம் சூழ் - சிறிய இடையைச்சூழ்ந்த மெல்லிய சிற்றுடையின்புறத்து வளைந்து சூழ்ந்த, பொன் திரு மணி சிறிய மேகலை புலம்ப - பொன்னாலாகிய அழகிய இரத்தினம் பதித்த சிறிய மேகலை யொலிக்கவும், வில் திரு மணி குழை விழுங்கிய குதம்பை - ஒளியையுடைய அழகிய இரத்தின குண்டலத்தைத் தனதகப்படுத்திய குதம்பையானது, சுற்று இருள் கடிந்து சிறு தோள் வருடி ஆட - (உலகினைச்) சூழ்ந்த இருளைத்துரந்து சிறிய தோளினைத்தடவி யாடவும்.

மேகலை - எண்கோவையணி. எழுகோவையணி யெனலும் ஒன்று. (௧௮)

தெள்ளமுதமென்மழலைசிந்தவிளமூரன்
முள்ளெயிறரும்பமுலைமூன்றுடையதோர்பெண்
பிள்ளையெனமூவொருபிராயமொடுநின்று
ளெள்ளரியபல்லுயிருமெவ்வுலகுமீன்றாள்.

(இ-ள்.) எள் அரிய பல் உயிரும் எவ்வுலகும் ஈன்றாள்-இகழ்தலில்லாத பலவுயிர்களையும் எல்லா வுலகங்களையும் பெற்றருளிய வுமையவள், தெள் அமுதம் மெல் மழலை சிந்த - தெள்ளிய அமுதம்போன்ற மெல்லிய மழலைச்சொல் தோன்றவும், இள மூரல் முள் எயிறு அரும்ப - புன்னகை யரும்பும் கூரிய பற்கள் விளங்கவும், மூன்று முலை உடையது ஓர் பெண் பிள்ளை என - மூன்று முலையையுடைய ஓர் பெண்மகவாக, மூ ஒரு பிராயம் ஒடு நின்றாள்-மூன்று பிராயத்தோடு நின்றாள்,

மழலை - பொருள் நிரம்பாத சொல். (௧௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குறுந்தளிர்மெல்லடிகிடந்தசிறுமணிநூபுரமுஞ்சதங்கைகுழறியேங்க [றப்
நறுந்தளிர்போலசைந்துதளர்நடை யொதுங்கிமழலையிளநகையுந்தோன்
பிறந்தபெரும்பயன்பெறுபொன்மாலைமடியிருந்தொருபெண்பிள்ளையாகு
ளறந்தழுவுநெறிநின்றோர்க்கிகம்போகம்வீடளிக்குமம்மையம்மா.

(இ-ள்.) தளிர் மெல் குறும அடி கிடந்த மணி சிறு நூபுரம் சதங்கை குழறி ஏங்க - தளிர்போன்ற மெல்லிய சிற்றடியின்மேல் சூழ்ந்துகிடந்த இரத்தினங்களழுத்திய சிறு சிலம்புஞ் சதங்கைகளும் தம்முள் விரவி ஒலிக்கவும், நறும் தளிர் போல் அசைந்து தளர் நடை ஒதுங்கி மழலை இள நகையும் தோன்ற - நறிய தளிர் அசைவதுபோலத் தளர்ந்த நடை நடந்து மழலைச்சொல்லும் புன்னகையுந் தோன்றவும், அறம் தழுவும் நெறி நின்றோர்க்கு இகம் போகம் வீடு அளிக்கும் அம்மை - தருமந்தழுவிய நன்னெறியில் நின்றவருக்கு இகபோகத்தையும் சுவர்க்காதி போகத்தையும் மோக்ஷத்தையுந் தந்தருளும் மீனாக்ஷியம்மையானவள், பிறந்த பெரும் பயன் பெறும் பொன் மாலை மடி ஒரு பெண் பிள்ளையாய் இருந்தாள் - பிறந்ததனாலடையும் பெரிய பயனை (இப்பிறப்பிலேயே) பெற்ற காஞ்சனமாலையினுடைய மடியில் ஒரு பெண்மகவா யிருந்தருளினாள்.

ஆனாள் என்னும் வினைமுற்றிறுதியினின்ற விகுதி.—இருந்தென்னும் எச்சத்தோடும் அவ்வெச்ச விகுதியை அவ்வினைமுற்றோடும் கூட்டுக. நூபுரமும் சதங்கை

யும் தம்முள் ஒலி வேற்றுமையுண்மையால் குழறியேங்க எனவும், தன்னை மகவாய்ப்பெற்றவட்கு மகிழ்ச்சிதோன்ற வந்தனள் என்பதுதோன்றத் தளிர்போலசைந்து தளர்நடை யொதுங்கி மழலை யிளநகையுந்தோன்ற எனவும், தன்னை யடைந்தோர்க்கு இகபோக பரபோகங்களனைத்தையும் மோக்ஷத்தையுங் கொடுப்பவள் தன்னைப் புத்திரியாக யடைந்தவளடையும் பயன் பெரிதென்பது தோன்ற பெறும்பயன் பெரிதென்றுங் கூறினார். (உ0)

செய்யவாய்வெளிறாது துணைமுலைக்கண்கருகாதுசேல்போனீண்ட
மையவாய்மதர்த்தகருங்கண்பசவாதையிரண்டுமதியந்தாங்கா
தையவாலிலைவருந்தப்பெறாதுபெறுமகவையெடுத்தணைத்தாண்மோந்தா
டுய்யவாய்முத்தங்கொண்டின்புற்றாண் முன்பெற்றதோகையன்னாள்.

(இ-ள்.) செய்ய வாய் வெளிறாது - செவந்த வாய் விளர்க்காமலும், துணை முலைகண் கருகாது - இரண்டு தனங்களின் சூசுகங்கள கருகாமலும், சேல் போல் நீண்ட மை அ வாய் மதர்த்த கரும் கண் பசவாது-சேலைப்போல் காதளவும் நீண்ட மையெழுதி மதர்த்த கரிய கண்கள் பசவாமலும், ஐ யிரண்டு மதியம் தாங்காது-பத்துமாதஞ் சமவாமலும், ஐய ஆலிலை வருநத பெறாது - அழகிய ஆலிலைபோன்ற வயிறு நோவப் பெறாமலும், பெறு மகவை - பெறற பிள்ளையை, முன் பெற்ற தோகை அன்னாள் - முன்பு உமையை மகவாகப்பெறற மயில்போலுஞ் சாயலையுடைய மேனையையொத்த காஞ்சனமாலையாா, எடுதது அணைததாள் மோந்தாள் துய்யவாய் முத்தங்கொண்டு இன்புற்றாள - வாரியெடுதது மாாபோடணைத்து உச்சி மோந்து புனிதமானவாயால் முததமிட்டு இனபத்தி லழுந்தினார்.

மேனையுங்கருப்பக்குறிபெறாது உமையை மகவாகப்பெற்று மகிழ்ந்தவராதலால் முன்பெற்ற தோகையன்னாள என்றார். பசத்தல் நிறம் வேறுபடுதல். அணைத்தாள் மோந்தாள் என்னும் முற்றுகள் எச்சமாய்நின்றன. திருக்கைலையில் திருவோலக்கத்தில் சிவபெருமான் இடப்பாகததிலெழுந்தருளியிருந்தபிராட்டியார் எழுந்து அச்சிவபெருமானைவணங்கித் தாம் தக்கனுக்குப்புததிரியாய்வளர்ந்த இச்சரீரததைச் சுமக்ககில்லேம் அதற்கஞ்சினேம் என்றுகூறியருள அதனை யச்சிவபெருமான் திருவுளத்தோர்ந்து நம்பா லனபுடைய இமையபாவதராஜனும் நின்னைப்புத்திரியாகப்பெறுதற்பொருட்டு அவ்விமையமலையிலுள்ள வோர்தடாகத்தினருகில் பெரியதவஞ்செய்கின்றனன். அவன்பால் செல்கவெனவிடுக்க, அப்பிராட்டியார்சென்று அத்தடத்தில் அலர்ந்த ஓர் தாமரைத்தவிசின்மேல் பிள்ளைமைததிருக்கோலங்கொண்டெழுந்தருளியிருந்தனர். அதைக்கண்ட அவ்விமையபாவதராஜன் ஆராமகிழ்ச்சிகொண்டு பாடியாடிவணங்கித் தனது செஙகையிலேநதித் தனது மனைவியாகிய மேனகையார்பால்கொடுக்க அவர் பெருமகிழ்வுகூர்ந்து கவலையொழித்தனர். என்பதைக் காந்தம்-உற்பத்திகாண்டம்-பார்ப்பதிப்படலத்தில்.—

"கொடுத்தலுநதொழுதுவாங்கிக்கொற்றவவிவ்ணின்பாங்க
ரடுத்ததெங்கெவனோவென்னவரசனுங்கழ்ந்தவெல்லா
மெடுத்துரைசெய்யககேளாவீசனதருளோவென்று
வடுத்தவிர்கற்பின்மேனைமனமுறமகிழ்ச்சிகொண்டாள்."

"சுரந்தனகொங்கைபாலுந்தண்ணெனவொழுகிற்றெங்கும்
பரந்தனபொடிப்பின்போர்வைபரைதனதருளேயுள்ள
நிரந்தனகவலையாவுநீங்கினபவமுன்னுள்ள
கரந்தனவிமையத்தண்ணல்காதலிதனக்குமாதோ."

எனவருஞ்செய்யுள்களாலுணர்க. (உக)

பனையாதிவிருப்பறிவுதொழிலாகியுலகமெலாம்படைத்துக்காத்து
வனையாதுதுடைத்துமறைத்தருளியவைநின்றுந்தன்வடிவுவேறு
புனையாதிமறைகடந்தவொருமுதல்வி திருமகளாயுதித்தற்கித்தத்
தனையாளுமன்னவன்செய்தவமிதுவோவதற்குரியதவந்தான்மன்னோ.

(இ-ள்) பனை ஆதி விருப்பு அறிவு தொழில் ஆகி - பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி எனப்பஞ்சசத்திகளாகி, உலகம் எல்லாம் படைத்து காத்து - எல்லாவுயிர்களையுஞ் சிருட்டித்துங்காத்தும், வனையாது துடைத்து மறைத்து அருளி - முற்றும் சங்கரித்தும் திரோபவித்தும் அனுக்கிரகித்தும், அவை நின்றும் தன்வடிவு வேறாய - அச்சத்திகளினின்றும் தனது திருமேனிவேறாகி, உனை ஆதி மறைகடந்த ஒருமுதல்வி - மனவாக்குக்காயங்களையும் வேதங்களையுங்கடந்தப்பாற்பட்ட ஒப்பில்லாத முதல்வியானவள், திருமகளாய் உதித்தற்கு - தனக்குத் திருமகளாயவதரிக்க, இந்த தனை ஆளும் மன்னவன் செய் தவம் இதுவோ - இந்நிலவுலகையாளும் மலயத்துவசபாண்டியன் செய்த தவம் இவ்வளவிலுள்ள தென்வரையறுத்தல் கூடுமோ, அதற்கு உரிய தவம் தான் - அவ்வுமையவள் அவதரித்தற்குரிய தவம் அம்மலயத்துவசபாண்டியன் வடிவமேயன்றி வேறன்று.

வனையாது என்பதற்கு-நீக்காது என்பதுபொருள். பாண்டியன் அருந்தவப் பேற்றின் வடிவினனாய நிற்றலின்-அதற்குரிய தவம் தான் என்றார். கிரியாசத்தியாயப்படைத்தும், ஞானசத்தியாயக்காத்தும், இச்சாசத்தியாய்ச்சங்கரித்தும், ஆதிசத்தியாய்த்திரோபவித்தும், பராசத்தியாய அனுக்கிரகித்தும் என எதிர்நிரனிறைப் பொருள் கோளாகக்கொள்க. உருவும் அருவுருவுங் கடந்து பரவிந்துவை யதிட்டித்துநின்ற அருவத்திருவுருவின்மேலாகிய பரபோகமுங்கடந்து பேரொளியாய் நிற்றலின்-அவை நின்றுந் தன்வடிவுவேறாய எனவும், வைகரியாதி நால்வகைக்காரிய வொலிபிறத்தற்கேதுவாகிய விந்துநாத காரணவிகற்பங்களை வரைசெய்து அவை முற்றும் வியாபகமாய் நிறைந்துங்குடிலாந்த சத்தியாய்நிற்றலின் - மறைகடந்த வொருமுதல்வி எனவுங்கூறினார். (௨௨)

கள்ளமர்நெறியொழுகும்பொறிகடந்துகரணமெலாங்கடந்தானந்த
வெள்ளமாம்பரஞானவடிவுடையாடன்னன்பின்வெளிவந்தின்றோர்
பிள்ளையாயவதரித்தகருணையுந்தன்மணாட்டிதவம்பேறுந்தேறான்
பள்ளமாகடற்றானைப்பஞ்சவர்கோனெஞ்சத்துட்பரிவுகூர்ந்தான்.

(இ-ள்.) கள்ளம் ஆம் நெறி ஒழுகும் பொறிகடந்து உம்-வஞ்சமாகியவழியிற்செல்லும் ஐம்பொறியுணர்ச்சிக்கும் அப்பாற்பட்டும், கரணம் எல்லாம் கடந்து உம்- அந்தக்கரணங்கள் யாவையுங்கடந்தும், ஆனந்த வெள்ளம் ஆம் பரஞான வடிவு உடையாள் - பேரின்பப்பெருக்குமயமாய்நின்ற பரஞானமே திருவுருவமாகவுடைய உமையாள், தன் அன்பின் வெளிவந்து - தன்னுடைய அன்பின்மிகையால் (தனக்கோர் திருமகளா யாவாகனைகளுக்கும்) புலப்படவந்து, இன்று ஓர் பிள்ளையாய் அவதரித்த கருணையும் - இப்பொழுது ஓர் பிள்ளைமைத் திருவுருவாய் அவதரித்தருளிய திருவருளையும், தன் மணாட்டி தவம் பேறும் தேறான்-தன்னுடைய மனைவியாராகிய காஞ்சனமாலையாருடைய தவப்பயனையுந் தெளியாதவனாகி, பள்ளம் மா கடல் தானை பஞ்சவர் கோன்-பள்ளமாகிய பெரியகடல்போலப் (பரந்த) சேனையையுடைய பாண்டியன், நெஞ்சத்துள் பரிவுகூர்ந்தான்-தன்மனத்தில் துன்பங்கூர்ந்தான்.

பொறியும் கரணமும் தெய்வமெனக்கூறும் உலகாயதன் முதலிய மதங்களை மறுத்தற்குப்பொறிகடந்து கரணமெலாங் கடந்து என்றார். மணவாட்டி - மனைவாட்டி எனனின்றது மரூஉ. எண்ணும்மைதொகுத்தல். மனத்திற் பரிவுகூர்ந்ததைப் பின்வருஞ் செய்யுளாலுணர்க.

மாகடல் உரிச்சொற்றொடராதலால் வருமொழி வல்லெழுத்து இயல்பாய் நின்றது. (௨௩)

மகவின்றிப்பலபகல்யான்வருந்தியருந்தவம்புரிந்தேன்மைந்தற்பேறு
தகவிந்தமகஞ்செய்தேனதுவுமொருபெண்மகவைத்தந்ததந்தோ
முகவிந்துநிலவொழுகவருபெண்ணுமுலைமூன்றாய்முகிழ்த்துமாற்றார்
நகவந்ததென்னேயோவென்றுவகையிலஞுகிநலியுமெல்லை.

(இ-ள்.) மகவு இன்றி யான் பலபகல் வருந்தி அரும் தவம் புரிந்தேன்-பிள்ளையில்லாமல் நான் பலநாள்வருந்திச் செய்தற்கரிய தவத்தைச்செய்துமுடித்தேன் (அதுதராமையால்) மைந்தன் பேறு தக இந்த மகம் செய்தேன் - புத்திரப்பேறுதர இந்தப்புத்திரகாமேஷ்டியாகஞ்செய்தேன், அதுவும் ஒரு பெண்மகவை தந்தது - அந்தயாகமும் ஒருபெண்பிள்ளையைக்கொடுத்தது, முக இந்து நிலவு ஒழுக வரு பெண்ணும்-முகமாகிய சந்திரனிடத்து நின்று (புன்னகையாகிய) நிலவுசிந்த அவதரித்த இந்தப்பெண்ணும், அந்தோ - ஐயோ, முலை மூன்றாய் முகிழ்த்து மாற்றார் நக வந்தது - தனங்கள் மூன்றாகவரும்பப்பகைவர்சிரிக்க அவதரித்தது, என்னேயோ என்று-(நாம்செய்த தவத்தினும்யாகத்தினும்வந்தகுறைபாடு) யாதோவென்று, உவகை இலஞுகி நலியும் எல்லை - சந்தோஷமில்லாதவனாய் வருந்துங்காலத்தில்.

உலகியற்கைக்கு மாறுபட்ட தென்பான்முலைமூன்றாய் முகிழ்த்து என்றான். முகிழ்த்து செயவெனெச்சத்திரிபு. அந்தோ, ஓ இரக்கக்குறிப்பிடைச்சொற்கள். ஏ ஐயப்பொருள்மேல்நின்றது. (௨௪)

மன்னவநின்றிருமகட்குமைந்தர்போற்சடங்கனைத்தும்வழாதுவேதஞ்
சொன்னமுறைசெய்துபெயர்தடாதகையென்றிட்டுமுடிசூட்டுவாயிப்[கே
பொன்னனையாடனக்கிறைவன்வரும்பொழுதோர்முலைமறையும்புந்திமாழ்
லென்னவரனருளாலோர்திருவாக்குவிசும்பிடைநின்றெழுந்ததன்றே.

(இ-ள்.) மன்னவ நின திருமகட்கு மைந்தர்போல் சடங்கு அனைத்தும் வழாது - பாண்டியனே உன்னுடைய திருமகளுக்குப் புத்திரர்களுக்குச்செய்யும் சடங்குபோலச் சடங்குகள் யாவையுஞ் சிறிதும்வழுவாமல், வேதம சொன்ன முறைசெய்து தடாதகை என்று பெயர் இட்டு முடி சூட்டுவாய - வேதங்கூறியமுறைப்படி செய்து தடாதகை என்று பெயர் இட்டு முடிசூட்டுவாய், இ பொன் அனையாள் தனக்கு இறைவன் வருமபொழுது ஓர் முலைமறையும புநதி மாழ்கேல் என்ன-இந்தப் பொன்போலும் அரிய திருவுருவாய்நத இப்பெணணிற்குத் தலைவன் வருங்காலையில் ஒருதனம் மறையும் (அதுகாறும்) மனங்கலங்காதே யென்று, அரன் அருளால் ஓர் திருவாக்கு விசும்பு இடை நினறு எழுந்தது-சிவபெருமான் திருவருளால் ஓர் அசரீரி ஆகாயத்தில் நின்றுண்டாகியது. (௨௫)

அவ்வாக்குச்செவிநிரம்பவன்புவகையகநிரம்பவகலமெல்லா
மெய்வாக்குமனமொன்றவிழிவாக்கும்புனனிரம்பவிமலற்போற்றி
செய்வாக்குமகநிரப்பியெழுந்துமனையொடுஞ்சாலைநீத்திரண்டு
கைவாக்குமியங்கலிப்பக்கடிமாடமனைபுகுந்தான்கழற்கால்வேந்தன்.

(இ-ள்.) அ வாக்கு செவி நிரம்ப - அவ்வசரீரி தனது காதில் நிரம்பவும், அன்பு உவகை அகம் நிரம்ப - அன்புஞ் சந்தோஷமும் மனத்தில் நிரம்பவும், மனம் வாக்கு மெய் ஒன்ற - மனவாக்குக்காயங்கள் ஒருவழிப்படவும், விழி வார்க்கும் புனல் அகலம் எல்லாம் நிரம்ப - கண்கள் சொரியும் ஆனந்தபாஷ்பம் மார்புமுற்றும் நிரம்பவும், கழல் கால் வேந்தன் விமலன் போற்றி - வீரகண்டையணிந்த பாண்டியன் சோமசுந்தரக்கடவுளைத் துதித்து, நெய் வாக்கு மகம் நிரப்பி மனையொடும் எழுந்து சாலை நீத்து - நெய்சொரிந்து செய்யும் பூரணாகுதிசெய்துமுடித்துத் தன்மனைவியாராகிய காஞ்சனமாலையாரோடும் எழுந்து யாகசாலையினின்றும் நீங்கி, இரண்டு ஈக வாக்கும் இயம் கலிப்ப - இரண்டுகைகளால் தாக்கப்படும் பலவாச்சியங்கள் ஒலிக்க, கடி மாடம் மனை புகுந்தான் - காவல்பூண்ட தனதுகோயிலுள் புகுந்தான்.

முரசதிர்ப்பமங்கலங்கொண்டெதிர்வருவார்முகத்துவகைமுறுவல்பூப்ப
வரசிருக்குமண்டபம்புக்கினிதமர்ந்துகனகமழையான்றகேள்வி
விரசிருக்குமறையவர்கைபெய்தெவர்க்குமம்முறையால்வெறுப்பகல்வித்
பரசிருக்குங்கரதலத்தெம்பரன்கோயினனிசிறப்புப்பல்கல்கா.

(இ-ள்.) முரசு அதிர்ப்ப-பேரிகைகள் ஒலிக்கவும், மங்கலம் கொண்டு எதிர் வருவார் முகத்து உவகை முறுவல் பூப்ப - அஷ்டமங்கலங்களைக்கொண்டு எதிரே வரும் பார்ப்பன மகளிர்களுடைய முகத்தில் சந்தோஷ நகையாகிய புன்னகையரும்பவும், அரசு இருக்கும் மண்டபம் புக்கு இனிது அமர்ந்து - அரசியலிருக்குங் கொலுமண்டபத்தில் புகுந்து குறைவின்றிவீற்றிருந்து, ஆன்ற கேள்வி விரசிருக்கும் மறையவர் கை கனகமழை பெய்து - நிறைந்தகேள்வியமைந்த அந்தணர்களது கைகளாகிய விளைநிலங்களில் சுவர்னமழையைச்சொரிந்து, எவர்க்கும் அம்முறையால் வெறுப்பு அகற்றி - அவரொழிந்தயாவர்க்கும் அம்முறையே மனவெறுப்படையக்கொடுத்து, பரசு இருக்கும் கரதலத்து எம்பரன் கோயில் நனி சிறப்பு பல் நல்கா - மழுவாயுதம் ஏந்திய கைகளையுடைய எமது இறைவனாகிய சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோயிலில் செல்வமிக்க திருவிழாமுதலியவை அதிகமாய்நடக்க, வேண்டியபொருள்களைத் தந்து.

அஷ்டமங்கலங்களாவன - சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல். தோட்டி, முரசு, கொடி, இணைக்கயல் விலக்கி இடபம், ஸ்ரீவற்சம், சங்கு, சுவத்திகங்கூட்டி எட்டெனக்கொள்ளுதலும் ஒன்று. ஸ்ரீவற்சம் குழந்தையை யிடையில் வைத்திருக்கும் ஓர்பெண்வடிவம். சுவத்திகம் மண்டபவடிவம். (௨௭)

சிறைவிடுமின்சிறைக்களமுஞ்சீத்திடுமினேழாண்டுதேயத்தீட்டு
மிறைவிடுமினயல்வேந்தர்திறைவிடுமினிறைநிதியமீட்டுமாயத்
துறைவிடுமினுலயமுமறப்புறமும்பெருக்குமெனத்தொழாரைக்காய்ந்த
கறைவிடுமின்னயில்வேலான்வள்ளுவனைக்கூய்முரசங்கறங்கச்சாற்றி.

(இ-ள்.) சிறை விடுமின் - சிறைசெய்திருக்கிறவர்களை விட்டுவிடுங்கள், சிறைக்களமும் சீத்திடுமின் - சிறைச்சாலையையும் அழித்துவிடுங்கள், தேயத்து ஈட்டும் ஏழாண்டு இறைவிடுமின்-குடிகளிடத்துவாங்கும் வரிப்பணங்களை ஏழுவருடம் வாங்காது விடுங்கள், அயல்வேந்தர் திறைவிடுமின் - மறுபுலத்தரசர்களிடத்துத் திறையை வாங்காதுவிடுங்கள், நிறை நிதியம் ஈட்டும் ஆயத்துறை விடுமின் - நிறைத்

தம்பெருளைச் சேகரிக்கும் சுங்கத்துறையை நீக்கிவிடுங்கள், ஆலயமும் அறப்புறமும் பெருக்கும் என - ஆலயங்களையும் அறச்சாலைகளையும் விருத்திசெய்யுங்களென்று, தொழுநரை காய்ந்த கறை மின் விடு அயில் வேலான் - பகைவரைக்கொன்ற உதிரந் தோய்ந்த ஒளிவீசுங் கூரியவேலையேந்திய பாண்டியன், வள்ளுவனை கூய் முரசம் கறங்க சாற்றி - பறைசாற்றித் தெரிவிப்போனை யழைப்பித்துப் பேரிகைசாற்றும் படி கட்டளையிட்டு.

சீத்திடுமின் - சீ பகுதி, து சாரியை, தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இடு பகுதிப்பொருள் விகுதி, அனைத்தும் ஒருபகுதி, மின முன்னிலைப்பன்மை யேவல்விகுதி. தேயம் இடவாகுபெயர். (உஎ)

கல்யாணமணிமௌலிவேந்தரையுங்கால்யாப்புக்கழலநீத்துக் [ப்
கொல்யானைபரிநெடுந்தேரரசுரிமைதொன்முறையாற்கொடுத்துப்போக்கி
பல்லாருங்கொள்கவெனப்பண்டாரந்தனைதிறந்துபசும்பொன்னுடை [சி
வில்லாருமணிக்கொடும்பூண் வெறுக்கைமுதலெனைபலவும்வெறுப்பவீ

(இ-ள்.) கல்யாணம் மணிமௌலி வேந்தரையும கால்யாப்பு கழலநீத்து - பொன்னாற்செய்து இரத்தினங்களழுத்திய கிரீடந்தரித்த பகை அரசரையும் விலங்குகளைத்தறித்து, கொல் யானை பரி நெடும் தேர் அரசு உரிமை தொல் முறையால் கொடுத்து போக்கி - கொல்லும்யானைகளையும் குதிரைகளையும் நெடியதேர்களையும் அவரவர்க்குரிய அரசியவுரிமைகளையும் முன்னுள்ளபடிகொடுத்து (அவரவர்க்குரிய தேசங்களுக்குச்) செல்ல விடைதந்து, பல்லாரும் கொள்க என - பலரும் எளிதிற் கொள்ளக்கடவரென்று, பண்டாரந் தனை திறநது பசும பொன் ஆடை வில் ஆரும் மணி கொடும் பூண் வெறுக்கைமுதல் எனை பலவும வெறுப்ப வீசி - பொக்கிஷத்தைத்திறந்து பசியபீதாம்பரங்களும் ஒளிநிறைநத இரததினங்களும வளைந்தவடிவாகச்செய்த ஆபரணங்களும் பொற்குவைகளும் முதலாகிய மறறைப்பல பொருள்களையும் (அவரவர்கள்) மனம் வெறுப்பகொடுதது.

கழலநீத்து - ஒருசொல். வளைந்தவடிவாகசசெய்த ஆபரணங்கள் - சந்திராரம் முதலாயின. வீசுதலென்னுந தொழில்நிகழ்ச்சியால் கொடுத்தலென்னும பொருணிகழ்ச்சிதோன்ற உபசரிததார். (உகூ)

தூமரபின்வருபெருமங்கலகவிகட்கிருநிதியந்துகில்பூண்பாய்மா
காமர்கரிபரித்தடந்தேர்முதலாயபலபொருளுங்களிப்பநல்கிக்
கோமறுகுகளிதூங்கசசுண்ணமொடுமெணணெய்விழாக்குளிப்பநல்கி
மாமதுராநகரன்றிமற்றுமுளநகரெங்குமகிழ்சசிதூஙக.

(இ-ள்.) தூமரபின் வருபெரு மஙகல கவிகட்கு - நல்லமரபில்வந்த பெரிய மங்கலப்பாடகர்களுக்கு, இருநிதியம் துகில் பூண் பாய்மா காமர் கரி பரி தடம் தேர் முதலாய பலபொருளும் களிப்ப நல்கி - பெரியசெல்வமும் ஆடையும் ஆபரணமுங் குதிரையும் அழகியயானையுங் குதிரைபூண்ட அகன்றதேரும் ஆகிய இவை முதலிய பலபொருள்களையும் களிப்புமிகத்தந்து, கோமறுகு களிதூங்க சுண்ணம் ஒடும் எண்ணெய் விழா குளிப்ப நல்கி - இராஜவீதிகளில் களிப்புமிக்கூர வாசனைப் பொடிகளோடும் எண்ணெய்ச்சிறப்பையுங் குளிக்கும்படிகொடுத்து, மா மதுராநகர் அன்றி மற்றும் உள நகர் எங்கும் மகிழ்ச்சி தூங்க - பெரியமதுரைநகரில் இவ்வாறு நிகழ்தலுமல்லாமல் அது வொழிந்த வேறுமுள்ள எல்லாநகரங்களிலும் (இவ்வாறு நிகழ்தலால்) களிப்புமிக்கூரவும். (கூ0)

**இவ்வண்ண நகர்களிப்பவிறைமகனுங்களிப்பெய்திமிறைவர்சொன்ன**
**வவ்வண்ணஞ்சாதமுதல்வினைநிரப்பித்தடாதகையென்றழைத்துத்தேவி**
**மெய்வ்வண்ணமறையுணராவிறைவிதனைமேனைபோன்மேனூற்ற**
**கைவ்வண்ணத்தளிர்தீண்டிவளர்ப்பவிமவான்போலக்களிக்குநாளில்.**

(இ-ள்.) இ வண்ணம் நகர் களிப்ப இறைமகனும் களிப்பு எய்தி - இவ்வாறு நகரிலுள்ளோர் களிகூர மலயத்துவசபாண்டியனுங் களிகூர்ந்து, இறைவர் சொன்ன அ வண்ணம் சாதமுதல் வினை நிரப்பி தடாதகை என்று அழைத்து-சோமசுந்தரக்கடவுளருளிய அத்திருவாக்கின்படி சாதகருமமுதலிய சடங்குகள்யாவையுஞ்செய்துமுடித்துத் தடாதகையெனத் திருப்பெயருமிட்டழைத்து, தேவி-காஞ்சனமாலையார், மெய் வண்ணம் மறை உணரா இறைவிதனை - உண்மையாகிய சாதவிகற்பங்களையுடைய வேதங்களுமறியாத உமையவளை, மேனைபோல் - இமவான்மனைவியாராகிய மேனையென்பவர் முன்புவளர்த்ததுபோல, மேல் நாள் நோற்ற கைவண்ணம் தளிர்தீண்டிவளர்ப்ப - (பரிசிப்பதற்கு) முனனாளில் தவஞ்செய்த கைகளாகிய நிறம்வாய்ந்ததளிர்களால் பரிசித்து வளர்க்க, இமவானபோல களிக்குநாளில்-மலயரசனைப்போலக் களிகூருங்காலத்தில்.

தடாதகைவளர்ப்ப இறைமகன் களிக்குநாளில் எனக்கூட்டுக. சாதம் - சனனம். உம்மை - இறந்ததுதழீஇய உயர்வுசிறப்பு. (௬௧)

**திருந்தாதவிளங்குதலையாயமொடுபுறம்போந்துசிறூர்க்குச்சிற்றில்**
**விருந்தாக்மணற்சிறுசோறட்டும்வரையுரங்கிழித்தவேளும்வாய்வைத்**
**தருந்தாதவிளமுலைவாயவைததருந்தபபாவைதனக்களித்தும்போதில்[ள்.**
**வருந்தாதையண்டமெலாஞ் சிறறிலிழைபபாளாய்க்கு மகிழ்ச்சிசெய்தா**

(இ-ள்.) திருந்தாத இளம் குதலை ஆயம் ஒடு புறம் போந்து சிற்றில் - பொருள் நிரம்பாத இளமையாகிய குதலைசசொறகளையுடைய பெண்கள்கூட்டத்தோடு வீதியிற்சென்று சிறுவீடு(கோலி), சிறூாக்கு விருநதாக மணல் சிறு சோறு அட்டும்-அந்தச்சிறுமியர்க்கு விருந்தாக மணலாகிய சிறுசோறறைச்சமைத்தும், வரை உரம் கிழித்த வேளும் வாய வைதது அருந்தாத இளமுலை - கிரவுஞ்சகிரியின் மார்பைக் கிணட முருகக்கடவுளும்வாயவைததுணணாத இளமுலையில், வாய் வைத்து அருந்த பாவைதனக்கு அளிததும் - வாயவைததுணணப பதுமைக்குககொடுத்தும், போதில் வரும் தாதை அண்டம் எல்லாம் சிறறில் இழைப்பாள - தாமரையில் வசிக்கும் பிரமன் (வகுக்கும) அணடஙகள் யாவையும (நினைப்புமாத்திரையில்) சிறுவீடாகச் சமைக்கும் பிராட்டியார், ஆயக்கு மகிழச்சி செயதாள் - தமது தாயாகிய காஞ்சனமாலையாருக்கு மகிழ்ச்சிமிகச் சிறுவிளையாட்டுச் செயதருளினார்.

இளங்குதலை ஆயம எனறமையால் சிறூர் என்பதின் முதலில் அகரச்சுட்டுத் தொகுததல். முருகக்கடவுளை யீனறருளியும் கன்னியாயிருத்தலின் இளமுலையென்றூர். கிரவுஞ்சன் எனனும ஓரசுரன் மலைவடிவாகி, வழிவரு முனிவர்பலருக்குந்துன்பஞ்செய்துவருநாள் அகத்தியமுனிவரு மவ்வழிவருகையில், தனதுமாயையால் பலதுன்பங்களையும் விளைத்தனன் அவற்றைநோக்கி இவை ஓரசுரன்செயல்களென்றுணர்ந்து நீயிம்மலைவடிவாகியேநின்று எமதுமுருகக்கடவுள் திருக்கரத்துவேலால் அழிவடைவாயெனச்சபிக்க அவ்வாறே முருகக்கடவுள் அம்மலைவடிவாய் நின்ற அசுரனைக்கொன்றூர் என்பது நூல்வரலாறு. (௬௨)

**தீட்டுவாளிரண்டனையகண்களிப்பத்தோழியர்க்குத்தெரியவாடிக்**
**காட்டுவாளெனக்கழங்குபந்துபயின்றம்மனையுங்கற்றுப்பாசம்**
**வீட்டுவாண்மேலொடுகீழ்தள்ளவெமைவினைக்கயிறுவீக்கியூச**
**லாட்டுவாள்காட்டுதல்போலாடினாணித்திலத்தாம்பசைத்தவூசல்.**

(இ-ள்.) பாசம் வீட்டுவாள் ( அடியார்க்கு ) பாசத்தைப்போக்கும் பிராட்டியார், தீட்டு இரண்டு வாள் அனைய கண் களிப்ப தோழியர்க்கு தெரிய ஆடி காட்டுவாள் என-தீட்டியஇரண்டுவாள்களையொதத இரண்டுகணகளுங்களிகூரத் தோழிமார்களுக்கு ஆடிக்காட்டுவாளைப்போல, கழங்கு பநது பயின்று அம்மனையுங் கற்று - கழங்காடலையும் பந்தாடலையும் பழகி அம்மனையாடலையுங் கற்று, மேல் கீழ் தள்ள எம்மை வினைக்கயிறு வீககி ஊசல ஆட்டுவாள் காட்டுதல் போல் - மேலுங்கீழும் போக்குவரவுசெய்ய எங்களை இருவினைகளாகியகயிறுகளால்கட்டி ஊசலாட்டும் அப்பிராட்டியார் (இங்கு அதனை) ஆடிககாட்டுவார்போல, நித்திலம் தாம்பு அசைத்த ஊசல் ஆடினாள் - முத்துவடம்பூட்டிய ஊசல் ஆடினார்.

ஒடு - எண்ணிடைச்சொல். உமமை - இறநதது தழீஇய எச்சம். (கக)

இம்முறையாற்றாயர்க்குந்தோழியர்க்குமகதது வகையீந்தாளாகி
யம்முறையாற்றாதைக்குமகததுவகையீவாளாயாத்தவாய்மைச்
செம்மறையாரணமுதனாலீரொட்டுககலைமுழுதுந்தெளிந்தாளந்த
மெய்ம்மறையார்கலையனைத்துமேகலையாமருஙகசைத்தவிமலையம்மா.

(இ-ள்.) இ முறையால் தாயர்க்கும் தோழியர்ககும் அகத்து உவகை ஈந்தாள் ஆகி - இவ்வாறு காஞ்சனமாலையாருக்குந தோழிமாருக்கும மனத்தில் ஆராமகிழ்ச்சி கொடுத்தருளி, அம்முறையால் தாதைக்கும் அகதது உவகை ஈவாள் ஆய் - அவ்வாறாகப் பிதாவாகிய மலயத்துவசபாணடியனுககும மனத்தில் ஆராமகிழ்ச்சி கொடுத்தருள, ஆத்தம வாய்மை செம்மை மறை ஆரணம் முதல் நால் ஈரொட்டுகலை முழுதும் தெளிநதாள்-உணமைவாக்கியமாகிய திரிபில்லாத வேதமுதலிய அறுபத்துநான்கு கலைகளையும் முற்றும் ஐயமற உணாநதாா, அந்த மெய் மறை ஆர் கலை அனைத்தும் மேகலையாக மருங்கு அசைத்த விமலை-அநத வுண்மையாகிய வேதமுதலியநிறைந்த வறுபததுநான்கு கலைகள்யாவையும் மேகலாபரணமாக இடையிற்கட்டிய அப்பிராட்டியார்.

அம்மா - வியப்பிடைச்சொல் - ஆரணம்-வேதத்தின் பாகுபாடு, வாக்கியம்-வாக்கால் நிகழ்வதாதலால வாய்மை எனக காரியததைக் காரணமாகவுபசரித்தார். ஈந்தாளாகி - ஈவாளாய். ஒருசொனீர்மையன. பின்னது செயவெனெச்சத்திரிபு.

சொல்வாய்மைக்கலைத்தெளிவு முழுமதியைப்பிளந்திருபாற்சொருகியன்
பல்வாய்மைக்கடகரிதேர்பரியுகைக்குந்திறனுமழற்பகழிதூர்க்கும் [ன
வில்வாள்வச்சிரமுதல்பல்படைத்தொழிலுங் கண்டிளமைவிழுங்குமுப்பி
செல்வாய்மைத்திறலரசன்றிருமகட்குமுடிசூட்டுஞ்செய்கைபூண்டான்[ற்

(இ-ள்.) வாய்மை சொல் கலை தெளிவும்-உண்மைச்சொற்களா லமைந்தநூலின் தெளிவையும், முழு மதியை பிளந்து இருபால் சொருகியது அன்ன பல் வாய்மை கடகரி தேர் பரி உகைக்கும் திறனும் - பூரணசந்திரனை இருகூறுசெய்து இரண்டுபக்கங்களிலும் சொருகிவைத்ததையொத்த தந்தங்களையும் பொருந்திய கரியதிற

த்தையும் மத்தத்தையுமுடைய யானையையுந் தேரையுங் குதிரையையும் காலாட்
பாகுபாட்டையும், அழல் பகழி தூர்க்கும் வில் வாள் வச்சிரம் முதல் படைப் பெருந்
திறமும் கண்டு-தீப்போலச் சுட்டெரிக்கும் அம்புகளைச்சொரியும் வில்லும் வாளும் வச்
சிராயுதமுமுதலிய பல ஆயுததசேர்ச்சியையும் பார்த்து, இளமை விழுங்கு மூப்பில்
செல் வாய்மை திறல் அரசன் திருமகட்கு முடி சூட்டும் செய்கை பூண்டான்-இள
மைகழிந்த மூப்புப்பருவத்திற் செல்லும் உண்மையாகிய வெற்றிவாய்ந்த மலயத்து
வசபாண்டியன், (தனது) புத்திரியார்க்கு மகுடஞ்சூட்டுஞ் செய்கையிலமைந்தான்.

போர்த்தொழில் செய்யுமிடத்தும் நடுவுநிலைமை தவறாது செய்வோனென்
பார் வாய்மைத்திறலரசன் என்றார். (௩௫)

முடிகவிக்குமங்கலநாள்வரையறுத்துத்திசைதோறுமுடங்கல்போக்கிக்
கடிகெழுதார்மணிமௌலிக்காவலரைவருவித்துக்காவல்சூழ்ந்த
கொடியணிமாநகரெங்குமவிழாவெடுப்பவழகமைத்துக்குன்றமன்ன [ன்.
தொடிகெழுதோட்சுமதிதிருமணத்திறைக்குவேண்டுவனசூழ்ந்துசெய்தா

(இ-ள்.) குன்றம் அன்ன தொடி கெழு தோள் சுமதி - மலையையொத்த வா
குவலயமணிந்த தோளையுடைய சுமதி என்னுமந்திரி, முடி கவிக்கும் மங்கல நாள்
வரை அறுத்து - மகுடஞ் சூட்டுஞ் சுபதினத்தை நிச்சயித்து, திசை தோறு முடங்
கல் போக்கி கடி கெழு தார் மணி மௌலி காவலரை வருவித்து-திக்குகள்தோறும்
ஓலையையனுப்பி வாசமிக்க மாலையை யணிந்த இரத்தினகிரீடந்தரித்த அரசர்களை
அழைப்பித்து, காவல் சூழ்ந்த கொடி அணி மா நகர் எங்கும் விழா எடுப்ப அழகு
அமைத்து - மலையரண்முதலியன புடைசூழ்ந்த கொடிகட்டிய பெரிய மதுரைநகரி
லுள்ளோர்யாவரும் (தத்தம்மனைகள்தோறும்) சிறப்புச்செய்ய அலங்காரஞ்செய்
வித்து, திருமணத்திறைக்கு வேண்டுவன சூழ்ந்து செய்தான் - மகுடாபிஷேகம
கோற்சவத்துக்கு வேண்டிய உபகரணங்கள் இனவின்னவென்று ஆலோசித்துக்
குறைவின்றித்தேடினான்.

மலையரண்முதலியன-மலை, காடு, மதில், கடல். நகர்-இடவாகுபெயர். (௩௬)

மங்கலதூரியமுழங்கமாலயானையுச்சிமிசைவந்தபூத
கங்கைமுதலொன்பதுதீர்த்தமுநிரப்பிக்கதிர்விடுபொற்கடம்பூசித்துப்
புங்கவர்மந்திரத்தீவளர்த்தமுதமருத்திஎரிபொன்னாற்செய்த
சிங்கமணியாதனத்தைநேசித்துப்பூசித்துத்தெய்வமேத்தி.

(இ-ள்.) மங்கல தூரியம் முழங்க மால் யானை உச்சி மிசை வந்த பூதம் கங்
கை முதல் ஒன்பது தீர்த்தமு நிரப்பி - (மலயத்துவசபாண்டியன்) மங்கலவாச்சி
யங்கள் ஒலிக்க மதமயக்கத்தையுடைய யானையினது மத்தகத்தின்மேல் வைத்துக்
கொண்டுவந்த பரிசுத்தமாகிய கங்கைமுதலிய நவதீர்த்தங்களையும் நிறைத்து, கதிர்
விடு பொன் கடம் பூசித்து - ஒளிவீசும பொன்னாலாகிய குடத்தைப்பூசனைசெய்து,
மந்திரம் தீவளர்த்து புங்கவர் அமுதம் அருத்தி - மந்திரவிதி வழாத வேள்விசெ
ய்து தேவர்களை அவியுண வுண்பித்து, எரி பொன்னால் செய்த மணி சிங்கம் ஆதன
த்தை நேசித்து பூசித்து தெய்வம் ஏத்தி-விளங்கும் பொன்னாற்செய்தமைத்த இரத்
தினமிழைத்த சிங்காதனத்தை அன்புகூர்ந்து பூசனைசெய்து அவ்வாதனத்திற்குரிய
தெய்வத்தை வணங்கி.

ஒன்பது தீர்த்தங்களாவன - கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி,
குமரி, கோதாவரி, துங்கபத்திரி, தாமிரபர்ணி. (௩௭)

திருமுடியைமதயானைமிசைவைத்துநகரைவலஞ்செய்துபூசித்
தருமணியாற்சுடிகையிழைத்தாடகத்தாற்குயிற்றியதோரைவாய்நாகம்
பெருமணிநீள்படம்பரப்பிமிசைகவிப்பவச்சிங்கபீடத்தேற்றிக்
குருமணிவானகைமயிலைக்கும்பத்துப்புண்ணியநீர்குளிரவாட்டி.

(இ-ள்.) திரு முடியை மத யானை மிசை வைத்து நகரை வலம் செய்து பூசித்து-அழகியகிரீடத்தை மதமயக்கத்தையுடைய யானையின்மேல்வைத்து நகரைப் பிரதக்ஷிணஞ் செய்து பூசனைசெய்து, அரு மணி யால் சுடிகை இழைத்து ஆடகத்தால் குயிற்றியது ஓர் ஐவாய் நாகம் பெரு மணி நீள் படம மிசை பரப்பி கவிப்ப-பெறுதற்கரிய இரத்தினங்களால் சூட்டுச்செய்து ஆடகமென்னும பொன்னாற்செய்தமைத்த ஒருவைந்தலைநாகமானது பெரியமணிகள்பதிந்த நீண்டபடங்களை மேலே பரப்பி நிழலைச்செய்ய, குரு மணி வால் நகை மயிலை - நிறந்தங்கியமுத்தையொத்த வெள்ளியபற்களையுடைய பிராட்டியாரை, அ சிங்கபீடத்து ஏற்றி - அந்தச்சிங்காதனத்தில் எழுந்தருளச்செய்து, கும்பதது புண்ணிய நீர் குளிர ஆட்டி-குடங்களில் நிறைத்த புண்ணியதீரத்தங்களாகிய நவதீர்த்தங்களால் (பிராட்டியார் திருமேனி குளிரும்படி) திருமஞ்சனஞ்செய்வித்து.

குயிற்றியது - வினைமுற்றுப் பெயரெச்சத்தில் வந்தது. ஆடகம்-நால்வகைப் பொன்களில் ஒன்று. நால்வகையாவன - ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புநதம். மயில் - உவமையாகுபெயர். (௯௮)

புங்கவர்மந்தாரமழைபொழியவருந்தவராக்கம்புகலத்தெய்வப்
பங்கயமென்கொம்பனையாராடமுனிபன்னியர்பலலாண்டுபாட
மங்கலதூரியமுழங்கமறைதழங்கமாணிக்கமகுடஞ்சூட்டி
யெங்கருணைப்பெருமாட்டிக்கரசமைசசர்பணியுந்தன்னிறைமைநல்கா.

(இ-ள்.) புங்கவர் மந்தாரம் மழை பொழிய - தேவர்கள் மந்தாரபுஷ்ப வருஷஞ்சொரியவும், அரும் தவர் ஆக்கம் புகல - அரியமுனிவர்கள் (ஒருபால்) ஆசீர்வசனஞ்சொல்லவும், தெய்வம் பங்கயம் மென் கொம்பு அனையார் ஆட - தெய்வத்தன்மையையுடைய தாமரைமலர்ந்த மெல்லிய பூஙகொம்பையொத்தஅரம்பையர்கள் (ஒருபால்) நடனஞ்செயயவும், முனி பன்னியர் பல்லாண்டு பாட-அம்முனிவர்கள் பத்தினிகள் (ஒருபால்) பல்லாணடுபாடவும், மங்கல தூரியம் முழங்க - மங்கலவாச்சியங்கள் (ஒருபால்) முழங்கவும், மறை தழங்க - வேதங்கள் (ஒருபால்) ஒலிக்கவும், எம் கருணை பெருமாட்டி கு மாணிககம் மகுடம் சூட்டி - எமது கருணையையுடைய பிராட்டியாருக்கு இரத்தினம்பதித்த கிரீடஞ்சூட்டி, அரசு அமைச்சர் பணியும் தன் இறைமை நல்கா - வேற்றரசர்களும் மந்திரிகளும் வணங்கும் தன்னரசுரிமையைத்தந்து.

பொழிய, புகல, ஆட, பாட, முழங்க, தழங்க என வேறுபலவடுக்கியவினையெச்சங்கள் தனித்தனி சூட்டி என்னும வினையெச்சததின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. (௯௯)

பாலனையமதிக்கவிகைமிசைநிழற்றமதிகிரணம்பரப்பியன்ன
கோலமணிக்கவரிபுடையிரட்டமலர்மழைதேவர்குழாங்கடேற்றக்
காலையிளங்கதிர்கயிலையுதித்தெனவெண்கடாயானைக்கழுத்தில்வேப்ப
மாலைமுடிப்பெண்ணரசைமங்கலதூரியமுழங்கவலஞ்செய்வித்தான்.

(இ-ள்.) பால் அனைய மதி கவிகை மிசை நிழற்ற - பாலையொத்த வெள்ளிய சந்திரவட்டக்குடை (ஒருபால்) மேலே நிழல்செய்யவும், மதி கிரணம் பரப்பியது அன்னகோலம் மணி கவரி புடை இரட்ட - (அக்குடையாகிய) சந்திரன் (இருபாலும்) கிரணங்களைப் பரப்பியதுபோல அழகிய வெண்கவரி இருபுறத்தும் வீசவும், தேவர் குழாங்கள் மலர் மழை தூற்ற - தேவர்கூட்டங்கள் புஷ்பவருஷஞ் சிந்தவும், காலை இளங்கதிர் கயிலை உதித்தது என்ன - உதயகாலத்திற் றோன்றிய இளஞ்சூரியன வெள்ளிமலையில் உதயஞ்செய்ததுபோல, வேப்பம் மாலை முடி பெண் அரசை - வேப்பமலர்மாலையையணிந்த கிரீடத்தையுடைய பெண்ணரசியாரை, கடா வெள்ளானை கழுத்தில் - மதத்தையுடைய வெள்ளையானையின் பிடரியில் (எழுந்தருளச்செய்து) மங்கலம் தூரியம் முழங்க வலம் செய் வித்தான் - மங்கலவாச்சியங்கள் ஒலிக்க (நகரை) பிரதக்ஷிணஞ் செய்வித்தான்.

பரப்பியன்ன, உதித்தென்ன, தொகுத்தல் விகாரங்கள். நிழற்ற, இரட்ட, நிகழ்காலவினையெச்சங்கள். (௪௦)

விண்ணாடுமொழிகேட்டமகிழ்ச்சியினுந்திருமகடன்விளக்கநோக்கி
யுண்ணாடுபெருங்களிப்புத்தலைசிறப்பச்சிலபகல்சென்றொழியமேனாட்
புண்ணாடுவேன்மங்கைகுருதிகவிழ்த்துநடிப்பத்தன்புயமேல்வைத்த
மண்ணாடுமகட்களித்துவானாடுபெற்றனமமகவுபெற்றான்.

(இ-ள்.) விண் நாடு மொழி கேட்ட மகிழ்ச்சியினும் - ஆகாயத்திலுண்டாகிய அசரீரியைக்கேட்ட (அன்றுண்டாகிய) மகிழ்ச்சியைப் பார்க்கிலும், திருமகள் தன் விளக்கம் நோக்கி - (தனது) செல்வப்புத்திரியாரின்பொலிவைப்பார்த்து, உள் நாடு பெருங் களிப்பு தலை சிறப்ப சில பகல் சென்று ஒழிய - (தனது) உள்ளத்தி லெழுந்த பெருமகிழ்ச்சி மேன்மேலோங்கப் (பரவசத்தனாய்ச்) சிலநாள்கழிந்தபின், அம் மகவு பெற்றான் - அப்புத்திரியாரைப்பெற்ற மலயத்துவசபாண்டியன், புண் நாடு வேல் மங்கை குருதி கவிழ்த்து நடிப்ப (பகைவருடலில்) புண்படுத்தலை நோக்கித்திரியும் வேலையேந்திய வீரலக்ஷ்மி களிகூர்ந்து நடனஞ்செய்ய, மேல் நாள் தன் புய மேல் வைத்த மண்ணாடு மகட்கு அளித்து வானாடு பெற்றான் - சென்ற நாள்காறும் தன்புயத்தில் வைத்தாற்றிய மண்ணுலகைத் (தனது) புத்திரியாருக்குக்கொடுத்து (அவரால்) சுவர்க்கலோகத்தைப்பெற்றான்.

பகைவர் யாவரையுந் தனதடிக்கீழ்ப்படுத்தினான் என்பது தோன்ற - வேல் மங்கை குருதிகவிழ்த்துநடிப்பத் தன்புயமேல்வைத்த என்றார். வேல்மங்கை என்றமையால் - வீரலக்ஷ்மி என்றும். உடையவன் தொழிலை உடைமைமேல் ஏற்றிப் புண்ணாடு வேல் என்றது குணவணி. மண்ணாடுமகட்களித்து வானாடுபெற்றான் என்பது பரிவருத்தனையணி. (௪௧)

விரதநெறியடைந்திறமுக்கடன்பிறவுந்தாதைக்குவிதியாலாற்றி [னாள்
யரதனமெல்லணைமேற்கொண்டுலகமெலாமொருகுடைக்கீழாள்வாள
சரதமறையாய்மறையின்பொருளாயப்பொருண்முடிவுதானாயத்தேனி
விரதமெனப்பூவின்மணமெனப்பரமனிடமபிரியாவெம்பிராட்டி.

(இ-ள்.) சரதமறை தான் ஆய் - பொய்மையில்லாத வேதமேதானாகியும், மறையின் பொருள் தான் ஆய் - அவ்வேதத்தின்பொருள் தானாகியும், அப்பொருள் முடிவுதான் ஆய் - அவ்வேதத்தின்பொருண் முடிவுதானாகியும், தேனின் இர

தம் என - தேனினுள்ளசுவைபோலவும், பூவின் மணம் என - பூவினுள்ள மணம் போலவும், பரமன் இடம்பிரியாத எம்பிராட்டி - சிவபெருமானிடத்தினின்று பிரியாத எமதுபிராட்டியார், விரதநெறி அடைந்து - (தமதுபிதா சுவர்க்கலோகஞ் சென்றநாள் தொட்டு) விரதநெறியை யநுட்டித்து, ஈறு கடன் பிறவும் - அந்தியேஷ்டிமுதலிய மற்றைக்கடன்களையும், தாதைக்கு விதியால் ஆற்றி - அப்பிதாவுக்கு வேதவிதிவழாதுசெய்து முடித்து, மெல் அரதனம் அணை மேற் கொண்டு உலகம் எல்லாம் ஒருகுடைக்கீழ் ஆள்வாள் ஆனாள் - நுண்ணியதொழிலமைந்த இரத்தினங்ளிபதித்த சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்து எல்லாவுலகங்களையும் (தமது) ஒருகுடையின்கீழ் ஆள்கின்றவராயினார்.

பொதுக்கடிந்தாண்டார் என்பார்-ஒருகுடைக்கீழ் ஆள்வாளானாள் என்றார். பொய்மைத்தன்மை சிறிதுமின்றி உண்மைத்தன்மையேமுற்றும் உடையவரென்பார். சாதமறையாய் எனவும், அவ்வுண்மைவாக்கியத்தின் பயனாகிய அறவடிவினரென்பார். மறையின்பொருளாய் எனவும், அவ்வறத்தின்பயனாய் நிகமாந்தவபரமுத்திநீக்கத்தில் தேற்றமாயவிளங்குஞ் சித்தாநத பரமுததிவடிவாக நிற்பவரென்பார் அம்மறை முடிவுதானாய் எனவும், அச்சித்தாநத முத்தியின்பத்தை ஆன்மாக்கள் நுகருமிடத்துச் சிவத்தினினறும் பிரியாதவர் எனபார் தேனினிரதமெனப் பூவின்மணமெனப் பரமனிடமபிரியா எம்பிராட்டி எனவுங்கூறினார். (௬௨),

ஷ - வேறு.

மண்ணரசிறைஞ்சஞாலமறுவழிபுரந்துமாறன்
விண்ணரசிருக்கையெய்தப்பெற்றபின்விடையோனுள்ளத்
தெண்ணரசன்னமென்னத்தென்னவனீன்றகன்னிப்
பெண்ணரசிருந்துநேமியுருட்டியபெருமைசொல்வாம்.

(இ-ள்.) மண் அரசு இறைஞ்ச ஞாலம் மறுவழி புரந்து - நிலவுலகையாளும் அரசர்கள்வணங்க இவ்வுலகினை மநுநூல்முறையாற்காத்து, மாறன் விண்ணரசு இருக்கை எய்த பெற்றபின் - மலயத்துவசபாண்டியன் சுவர்க்கலோகத்தில் இந்திரனுடைய ஆதனத்தைச்சேரப்பெற்றபின்பு, விடையோன் உள்ளத்து எண அரசு அன்னம் என்ன - இடபவாகனத்தையுடைய சிவபெருமான் (தனது) உள்ளத்தில் கருதும் அரச அன்னத்தைப்போல, தென்னவன் ஈன்ற கன்னிப்பெண் அரசு இருந்து நேமி உருட்டிய பெருமை சொல்வாம் - அப்பாண்டியன்பெற்ற கன்னிப்பெண்களுளரசியார் (சிங்காதனத்தி) லிருந்து ஆக்கினைசக்கரத்தைச்செலுத்திய பெருமையை இனி யெடுத்துச்சொல்லுவாம்.

விண்ணரசிருக்கையெய்தப் பெற்றபின் எனபதனை "அலையத்திரியட்டவனுதனைநீத்து" எனப்பின்னர்வருதலாலும், இதன்முதனூலாகிய ஆலாஸ்யமகத்துவத்தில் - " [illegible]
[illegible] " எனவருஞ்சுலோகத்தாலும் உணர்க. (௬௩)

இன்னியமியம்புமாக்களெழுப்பவானிரவிதோன்றக்
கன்னலைத்தென்னப்பள்ளித்துயிலெழீஇக்கடிநீராடித
தன்னிறைமரபுக்கேற்றநியதிமாதானமன்பு
துன்னியகடவுட்பூசைத்தொழின்முதலனைத்துமுற்று.

(இ-ள்.) இன் இயம் இயம்பு மாக்கள் எழுப்ப - இனியவீணைவாசித்தலில் வல்லவர்கள் எழுப்ப, வான் இரவி தோன்ற ஐந்து கன்னல் என்ன பள்ளிநின் எழுந்து - ஆகாயத்திலசூரியன் உதயமாக ஐந்துநாழிகையென்னும்போது சயனத்தினின்று நித்திரைதெளிந்து, கடிநீர் ஆடி - வாசனையூட்டிய திருமஞ்சனம் ஆடி, தன் இறை மரபுக்கு ஏற்ற நியதி மாதானம்-தன்னுடைய க்ஷத்திரியமரபுக்குத்தக்க கடன்களையும் பெரியசோடசதானங்களையும், அன்பு துன்னிய கடவுள்பூசை முதல் தொழில் அனைத்தும் முற்று - அன்பினமிகுதியால சிவபூசைமுதலிய செய்கைகள் யாவையுஞ்செய்துமுடித்து.

துன்னிய காரணப்பொருளில்வந்த இறந்தகாலப்பெயரெச்சம். (௬௬)

திடம்படு மறிஞர் சூழச் சிவபரன் கோயின் முன்னிக்
கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை மறைவண் டார்க்கும்
விடம்பொதி கண்டத் தேனை விதிமுறை வணங்கி மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்பொற் குருமணிக் கோயி னண்ணி.

(இ-ள்.) திடம் படும் அறிஞர் சூழ - உறுதிமிக்க அறிவினையுடைய மந்திரிகள் புடைசூழ, சிவபரன் கோயில் முன்னி - சோமசுந்தரக்கடவுள் (எழுந்தருளிய) திருக்கோயிலையடைந்து, கடம்பு அடி முளைத்த முக்கண் கரும்பினை - கடம்பவிருக்ஷத்தினடியில் முளைத்தருளிய மூன்றுகண்களையுடைய கரும்பும், மறைவண்டு ஆர்க்கும் விடம் பொதி கண்டம் தேனை - வேதங்களாகிய வண்டுகள் (புடைசூழ்ந்து) ஒலிக்கும் விஷம்பொதிந்த கண்டத்தையுடைய தேனும்போல்பவராகிய அக்கடவுளை விதிமுறை வணங்கி மீண்டு - ஆகமவிதியால் வணங்கி (அங்குநின்றும்) மீண்டு, குடம் பயில் குடுமி செம்பொன் குருமணி கோயில் நண்ணி - கலசங்கள்விளங்கும் சிகரத்தையுடைய செவ்விய பொன்னாலாகிய நிறந்தங்கிய மாணிக்கங்கள் பதித்த தமது திருக்கோயிலையடைந்து.

கரும்பு, தேன் சொன்முரணணி. விடம்பொதிந்திருப்பினும் மிக்கமதுரமுள்ளதென்பார் மறைவண்டார்க்கும் என்றார். (௬௭)

அரசிறை கொள்ளுஞ் செம்பொ னத்தாணி யிருக்கை யெய்தி
நிரைசெறி மடங்க லாறு முடங்கினி நிமிர்ந்து தாங்க
விரைசெறி மலர்மீப் பெய்த வியன்மணித் தவிசின் மேவித்
திரைசெறி யமுதிற் செய்த பாவைபோற் சிறந்து மாதோ.

(இ-ள்.) அரசு இறை கொள்ளும் செம்பொன் அத்தாணி இருக்கை எய்தி - அரசர்கள் வீற்றிருக்கும் செவ்விய பொன்னாலாகிய கொலுமண்டபமாகிய அரசிருக்கையைச்சேர்ந்து, நிரை செறி மடங்கல் ஆறு முடங்கின நிமிர்ந்து தாங்க - வரிசையாக நெருங்கிய ஆறுசிங்கங்கள்வளைந்த கழுத்தைநிமிர்த்துத்தாங்க, விரை செறி மலர் மீ பெய்த வியன் மணி தவிசில் மேவி - வாசமிக்க மலர்களை மேலேபரப்பிய பெரிய இரத்தினங்கள்(பதித்த) ஆசனத்தின்மேல் வீற்றிருந்து, திரை செறி அமுதில் செய்த பாவைபோல சிறந்து - கடலிற்றோன்றிய அமுதத்தாற்செய்த பதுமைபோலப்பொலிந்து விளங்கி.

திரை கடலினமேனிற்றலால் தானியாகுபெயர். அத்தாணி-கொலுமண்டபம்.

அணிந்திதையமுதின்சாயற்கமலினியணங்குகாதற்
கனிந்தபார்மகளிராய்வந்தடைப்பைபொற்களாஞ்சியேந்த
வினந்திரிபதுமக்கோயிலிருவருமனையராகிப்
புனைந்தவெண்கவரிக்கற்றைபிருபுடைபுரட்டிவீச.

(இ-ள்.) அனிந்திதை அமுதின் சாயல் கமலினி அணங்கு - (திருக்கைலையில் அகம்படித்தொண்டுசெய்யும்) அனிந்திதையும் அமுதம்போலும் மென்மைத்தன்மையையுடைய கமலினியுமாகிய தெய்வப்பெண்கள், காதல் கனிந்த பார் மகளிராய் வந்து அடைப்பை பொன் களாஞ்சி ஏந்த (பிரிவாற்றாமையால்) அன்புமுதிர்ந்தமானிடப்பெண்களாய்வந்து (ஒருபால்) அடைப்பையையும் பொன்னாலாகியகளாஞ்சியையும் ஏந்திநிற்கவும், இனம் திரி பதுமம் கோயில் இருவரும் அனையராகி - இனப்பொருளாய் (நிறத்தால்வேறுபட்ட) செந்தாமரை வெண்டாமரையென்னுங் கோயில்களில் (வசிக்குந்) திருமகளும் கலைமகளும் அம்மானிடப்பெண்களாகி, புனைந்த கற்றை வெண் கவரி இருபுடை புரட்டி வீச - அலங்கரித்த கற்றைகளாகிய வெள்ளியசாமரைகளை இரண்டுபாலும் நின்று புரட்டிவீசவும்.

செம்மை வெண்மைகள் பிறிதினியைபு நீக்கிய விசேடணங்களாதலால் இனந்திரிபதுமம் என்றார். சாமரைவீசும்போது முன்னர்ப்புரட்டுதல் இயல்பாதலால் புரட்டிவீச என்றார். சாயல்மென்மை எனபது, "சாயன்மெனமை" என்னுந்தொல்காப்பியச்சூத்திரத்தால் உணர்க. (௬௭)

செடியுடலெயினச்செல்வன்சென்னிமேற்சுமந்துசாத்துங்
கடியவிழ்மலரிற்பொன்னிக்காவலன்குடக்கோனேனை
முடிகெழுவேந்தருள்ளார்முடிமிசைமிலைந்ததாம
மடிமிசைச்சாத்திநங்கையாணையாறேவல்செய்ய.

(இ-ள்.) செடி உடல் எயினச்செல்வன் சென்னிமேல் சுமந்து சாத்தும் கடி அவிழ் மலரின் - முடைநாற்றம்பொருந்திய சரீரத்தையுடைய வேடுவர்குலத்திற்றோன்றிய கண்ணப்பநாயனார் சிகையிற் சுமந்துசாத்திய வாசமோடலர்ந்த திருப்பள்ளித்தாமம்போல, பொன்னி காவலன் குடக்கோன் ஏனை முடி கெழு வேந்தர் உள்ளார் முடி மிசை மிலைந்த தாமம - காவிரிக்கரசனாகிய சோழனும் மேற்றிசைக்கரசனாகிய சேரனும் அவரொழிந்த கிரீடந்தரித்த அரசராயுள்ளவரும் தமதுமுடிமேற்சுமந்த மாலையை, அடிமிசை சாத்தி நங்கை ஆணை ஆறு ஏவல் செய்ய - திருவடியிற்சாத்தித் தடாதகைப்பிராட்டியார் ஆணையின் வழிநின்று (ஒருபால்) ஏவல் செய்துநிற்கவும்.

நண்ணி, சிறந்து என்னும் தன்வினைமுதல் வினையெச்சங்கள் ஏவல்செய்வாரொன்னும் பிறவினைமுற்றோடு முடியாவாதலால் ஏவல்செயய எனப்பாடங்கொள்க. பின்னர்வரும் ஏனையவற்றிற்கும் இவ்விதியேகொள்க. (௬௮)

வையுடைவாளராகிமார்புறப்பின்னியாத்த
கையினராகியன்னையென்றுதங்கருணைநோக்கஞ்
செய்யுமென்றிமையார்நோக்கிநோக்குமேற்செங்கைகூப்பி
யய்சுநமெனவாய்பொத்தியமையர்கம்பணிகேட்டிய்ய.

(இ-ள்.) உழையர் - தமதருகிலுள்ள ஏவல்செய்வோர், மை உடை வாளர் ஆகி மார்பு உற பின்னி யாத்த கையினர் ஆகி - கூர்மைபொருந்திய வாள்களையேந்தினவராகியும் மார்பிற்பொருந்தப் பின்னிக்கட்டிய கைகளையுடையவராகியும், அன்னை என்று தன் கருணை நோக்கம் செய்யும் என்று இமையார் நோக்கி - தடாதகைப் பிராட்டியார் எப்போது தமது திருபாகாட்டஞ் செய்வாரோ வென்று கண்களிமை கொட்டாமற் பார்த்துநின்றும், நோக்கு மேல் செங் கை கூப்பி உய்குநம் என வாய் பொத்தி - (தங்கள்மேல்) கருணைநோக்கம் செய்வாராகில் செவந்தகைகளைக்குவித்து காம்பிழைத்தோமென்று வாய்பொதகியும், தம் பணி கேட்டு உய்ய (ஒருபால் நின்று) தமக்குரிய ஏவல்களைக்கேட்டு உய்யாநிற்கவும்.

தனித்தனி ஏவல்செய்வோர் ஒவ்வொருவரும் பிராட்டி அருள் கூர்ந்து தம்பால் எப்போது ஏவல்வைபபாரோ வென்று பார்ததிருப்பார்களென்பார் - தன் கருணைநோக்கம் செய்யுமென்றிமையாநோக்கி என்றூர். உய்கு நம்-எதிர்காலத்துநின்ற இடைநிலை - இறந்தகாலததின்மேனின்றது. (௬௯)

ஆங்கவன்மராடர்வேந்தனவன்கருநாடர்வேந்த
னீங்கிவன்விராடர்வேந்தனிவன்குருநாடாவேந்த
னூங்குவன்சேரன்சென்னியுவனெனக்கோலாற்சுட்டிப்
பாங்கிருமருங்குங்காட்டக்கஞ்சுகப்படிவமாக்கள்.

(இ-ள்.) கஞ்சுகம் படிவம் மாக்கள் - சட்டைதரித்த வுருவத்தினையுடைய கஞ்சுகமாக்கள், (ஒருபால்நின்று) ஆங்கு அவன் மராடர் வேந்தன்-(திறை அளக்க) அவ்விடத்தினிற்கும் அவ்வரசன் மராடநாட்டாரரசன், அவன் கரு நாடர் வேந்தன் - அவ்விடத்தில் நிற்போன் கருநாட்டாரரசன், ஈங்கு இவன் விராடர் வேந்தன் - இவவிடததில் நிற்கும இவவரசன் விராடநாட்டாரரசன், இவன் குருநாடர் வேந்தன் - இவ்விடத்தில் நிறபோன் குருநாட்டாரரசன், ஊங்கு உவன் சேரன் - இவ்விரண்டிற்கும் இடையில் நிறகும அரசன சேரன், உவன் சென்னி என- உவ்விடத்தில் நிற்போன் சோழனென, இரு மருங்கும் கோலாற்சுட்டி பாங்கு காட்ட - இருபாலுநின்று பிரம்பால் சுட்டி வரிசையாய்ககாட்டவும்.

அவன் இவன் உவன் என்னுஞ் சொறகளின முதலில் சேய்மை அண்மை இவற்றின் இடையென்னும பொருள்களின்மேனின்ற அகர இகர உகரசுட்டுகள் அவவவ்விடங்களின்மேலும், ஆங்கு ஈங்கு ஊங்கு எனனுஞ் சுட்டுததிரிபுகளும் அப்பொருள்கள்மேலும் நின்றன (௭0)

செந்தமிழ்வடநூலெலலலைதெரிந்தவர்மறைநூலாதி
யந்தமிலெண்ணெண்கேள்வியளந்தவர்சமயமாறும்
வந்தவர்துறந்தோர்சைவமாதவர்போதமாண்ட
சிந்தனையுணர்வான்மாயைவலிகெடசசெற்றவீரர்.

(இ-ள்.) செம் தமிழ் வடநூல் எல்லை தெரிந்தவர் - செந்தமிழ்நூல்வரம்பையும் வடநூல்வரம்பையும் உணர்ந்தவர்களும், மறை நூல் ஆதி அந்தம் இல் எண்ணெண் கேள்வி அளந்தவர் - வேதநூல்முதலிய அளவில்லாத அறுபத்துநான்குகலைகளையும் வரையறுத்துணர்ந்தவர்களும், ஆறு சமயமும் வந்தவர்-(உட்சமயங்களாகிய) ஆறுசமயநூல்களையுங் கற்றுணர்ந்தவர்களும், துறந்தோர் சைவ மாதவர்-இருவகைப்பற்றையுங் கைவிட்ட சைவமாதவர்களும், போதம் மாண்ட சிந்தனையுணர்

வால் மாயை வலி கெட செற்ற வீரர் - தற்போத வுணர்ச்சிகெட்ட மெய்யுணர்ச்சி யாகிய கருவியால் மாயையின் வலிமைகெடச் செயித்தமெய்ஞ்ஞானிகளும்.

ஸ்ரீபஞ்சாக்கரம் செபிக்குமுணர்ச்சி - மெய்யுணர்ச்சியாதலின் சிந்தையுணர்வென்றதற்கு மெய்யுணர்ச்சி யென்றும். இங்குவிருந்தபாண்டம்போலக் கெட்டதற்போதமீட்டு நிகழாவண்ணஞ்செய்வது அச்சாதனமாதலால் போதமாண்ட சிந்தையுணர்வெனவும். வலிகெடச்சென்றமையால் மெய்ஞ்ஞானிகளை வீரரெனவுங்கூறினர். "நினைவித்துத்தன்னையென்னெஞ்சத்திருத்திநின்றம்பலத்துப் - புனைவித்தவீசன்" எனவருந் திருக்கோவையாரானுமுணர்க. (ருக)

முன்னிருந்தினியதேற்றுமூத்தவரெண்ணியெண்ணிப்
பன்னுமைந்துறுப்பிற்காலமளந்தறிபனுவன்மாந்தர்
பின்னுமுன்னோக்குஞ்சூழ்ச்சிப்பெருந்தகைச்சுமதியோடு
மின்னமுதனையகேள்விமந்திரர்யாருஞ்சூழ.

(இ-ள்.) முன் இருந்து இனிய தேற்று மூத்தவர் - தம்முன்னிருந்து குணமுள்ளனவற்றைத் தெளியக்கூறும் மூத்தோர்களும், எண்ணி எண்ணி பன்னும் ஐந்து உறுப்பில் காலம் அளந்து அறி பநுவல் மாந்தர் - வரையறுத்துக் கூறும் ஐந்துறுப்புக்களால் காலங்களை நியதிசெய்தறியுஞ் சோதிடநூலுணர்ச்சியில்வல்லவரும்,பின்னும் முன்னும் நோக்கும் சூழ்ச்சி பெரும் தகை சுமதியோடும்-மேல்வருங்காரியங்களையும் முன்னிகழ்ந்தகாரியங்களையும் ஆராய்ந்துணரும் சூழ்ச்சியில் பெருந்தகைமையையுடைய சுமதியென்னும் முதன்மந்திரியோடும்,இன் அமுது அனைய கேள்வி மந்திரர் யாரும் சூழ - இனிய அமுதத்தையொத்த நூற்கேள்வியில்வல்ல மந்திரிகளெல்லோரும் (ஒருபால்) சூழாநிற்கவும்.

சுமதி - முதன் மந்திரியின பட்டப்பெயர். ஐந்துறுப்பாவன - திதி, வாரம், நக்ஷத்திரம், கரணம், யோகம். குடிகளுக்கு உறுதிபயத்தலால் இன்னமுதனையகேள்வி யென்றார். (ருஉ)

கற்றறியந்தணாளர்விருத்திகள்கடவுட்டானத்
தற்றமில்பூசைசெல்வமறப்புறநடக்கையேனைச்
செற்றமில்குடிகண்மற்றுமமைச்சராற்றெளிந்தும்வெவ்வே [ம்
றொற்றுவிட்டுணர்ந்தும்வேறுகுறையுண்டேலொறுத்துத்தீர்த்து

(இ-ள்.) கற்று அறி அந்தணாளர் விருத்திகள் - (வேத முதலிய நூல்களைக்) கற்றுணர்ந்த அந்தணர்களுடைய ஓதல் முதலிய அறுவகைத்தொழில்களையும், கடவுள் தானத்து அற்றம் இல் பூசை செல்வம் - தேவாலயங்களில் நடக்கும் குற்றமில்லாத பூசைச்சிறப்புகளையும, அறப்புறம் நடக்கை-தருமசாலையில் நடக்கும் செய்திகளையும், ஏனை செற்றம இல் குடிகள் - அவையொழிந்த தமது செங்கோலின் கீழ்ப்பட்ட குடிகளின் (வாழ்க்கைகளையும்,) மற்றும் - மற்றுள்ள காரியங்களையும், அமைச்சரால் தெளிந்தும - மந்திரிகளைக்கொண்டு தமது செவிகளாற் பார்த்தும், வெவ்வேறு ஒற்றுவிட்டு உணர்ந்தும் - (அவர்கள் கூறுதலாலமையாது) வேறு வேறு தூதுவரை விட்டறிந்தும், வேறு குறை உண்டேல் ஒறுத்து தீர்த்தும்-அவைகளுள் வேறு யாதாயினுங் குறைகள் உளவாயின் தண்டித்து அக்குறைகளைப் போக்கியும்.

அவ்வவ்வறங்களை நிறுத்தற்பொருட்டாதலால் ஒறுத்துத்தீர்த்தும் என்றார். அந்தணர் அறுதொழில் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்

றல். அரசன் கொடுங்கோலனாயின் குடிகள் அவனொடு முரணுவாதலால் செங்கோ மில்-என்றதற்கு செங்கோலின் கீழ்ப்பட்ட எனப் பொருள் கொண்டாம். ([illegible])

ஆதியுத்தேசத்தானுமிலக்கணவமைதியானுஞ்
சோதனைவகைமையானுஞ்சொன்னநூலநுவாதித்து
நீதியினவற்றுற்கண்டித்தவ்வழிநிறுத்தித்தம்மில்
வாதிகள்வாதஞ்செய்யுங்கோட்டிமேன்மகிழ்ச்சிகூர்ந்தும்.

(இ-ள்.) ஆதி உத்தேசத்தானும் - முதலாயுள்ள உத்தேசத்தினாலும், இலக்கண அமைதியானும்-இலக்கண வமைதியினாலும், சோதனை வகைமையானும், பரீட்சை வகையினாலும், சொன்ன நூல் அநுவாதித்து (பிறர்) கூறிய பொருள்களை அநுவாதஞ்செய்து, நீதியின் அவற்றுற் கண்டித்து - முறையினையுடைய மேற்கூறிய வகைகளாற் பரிகரித்து, அவ்வழி நிறுத்தி - அந்த வழியிலேயே தாபனஞ்செய்து, வாதிகள் தம்மில் வாதஞ்செய்யும் கோட்டிமேல் மகிழ்ச்சி கூர்ந்தும் - தருக்கநூலில் வல்லோர் தம்முள் வாதஞ்செய்யும் வாக்கியமுடிவில் மகிழ்வுகொண்டும்.

வாதிகள்-பிறர்மதம் மறுத்துத் தம்மதம் நிறுத்துவோர். உத்தேசம் ஆவது-தான் விவகரிக்கும் பொருளைப் பெயர்மாத்திரங் கூறல். அதாவது இலக்கியம். இலக்கணம் ஆவது-அவ்வியாப்தி முதலிய மூன்று குற்றங்களுமில்லாத தருமம். சோதனை ஆவது-தான் விவகரிக்கும் அப்பொருளில் இவ்விலக்கணமுளதோ விலதோவெனப் பார்த்தல். அநுவாதம் ஆவது-பிறர் கூறுங் கூற்றைத் தானெடுத்துக்கூறுதல். கண்டித்தலாவது-இலக்கிய இலக்கண உபந்யாச விசேஷணங்களாற் பரிகரித்தல். அவ்வழி நிறுத்தலாவது-உத்தேசமாகிய ஆரம்பத்தினின்று விபக்ஷாதிகளைச்சார்ந்து பக்ஷபோலிகளுக்கு இடஞ்செய்யாது லக்ஷண நிறைவாம் எதுப்பொருள் ஒருமருங்குஞ் சாய்தலின்றித் தம்மதம் நிறுத்தல். உத்தேசம், இலக்கணம், சோதனை இம்மூன்றையும் போதப்பிரகாரம் என்பர். அவ்வியாப்தி முதலிய மூன்று குற்றங்கள் அவ்வியாப்தி, அதிவியாப்தி, அசம்பவம் அவற்றை யிங்கு விரிப்பிற் பெருகும். (௯௪)

பையுள்பகுவாய்நாகப்பள்ளியோனாதிவானோர்
கையுள்வலியாலட்டகடலமுதனைத்தும்வாரிப்
பொய்யுளமகலக்கற்றபுனிதநூற்புலவர்நாவிற்
செய்யுளின்விளைவித்தூட்டத்திருச்செவிதெவிட்டவுண்டும்.

(இ-ள்.) பை உள பகுவாய் நாகம் பள்ளியோன் ஆதிவானோர் - படத்தின் கண்ணுள்ள பிளந்த வாயையுடைய சர்ப்ப சயனத்தையுடைய திருமால் முதலிய தேவர்கள், கை உள வலியால் கடல் அட்ட அமுது அனைத்தும் வாரி - தமது கையின் வலிமையால் கடல் கடைந்து தந்த அமிர்த முழுமையும் வாரியெடுத்து, பொய் உளம் அகல கற்ற புனிதநூல் புலவர் - அறியாமையான மனத்தினின்றும் நீங்கக் கற்றுணர்ந்த குற்றமற்ற நூலுணர்ச்சியின் வல்லவர், நாவில் செய்யுளின் விளைவித்து ஊட்ட திருச்செவி தெவிட்ட உண்டும் - (தமது) நாவின் (வன்மையால்) செய்யுளுள் அமைவித்து உண்பிக்க (தமது) திருச்செவிகள் தெக்கெடுக்க நுகர்ந்தும்.

அடுதலாகிய தொழில் நிகழ்ச்சியால் கடைதலென்னும் பொருணிகழ்ச்சி தோன்ற அட்டு என உபசரித்தார். செய்யுளுள் அமைவித்தலாவது. வீரமுதலிய வெண்சுவைகளின் அமைதி. இது பெருங்காப்பியத்தி னுறுப்புகளுள் ஒன்றாகிய பாவம். நாகப்பள்ளியோனாதி வானோர் - புலவராகவும், கையின் வன்மை - நாவின்

வன்மையாகவும் கொண்டு கூட்டி ஒப்புமைக்கூட்ட வணியாகக்கொள்க. கையுளவ லியால் - நாவின் வலியால் என்றது. விரோதவணி. (ருரு)

தொல்லைநான்மறையோர்சைவர்துறந்தவர்யார்க்குமின்பம்
புல்லவானமுதுங்கைப்பபாகநூற்புலவரட்ட
முல்லைவான்முகையினன்னவறுசுவைமுரியாமூர
னல்லவூணருத்தியன்னோர்நாவிருந்தமுதுசெய்தும்

(இ-ள்.) தொல்லை நால் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கும் - தொன்றுதொட்டுள்ள நான்குவேதங்களையும் உணர்ந்த அந்தணர்களுஞ் சைவர்களும் துறவிகளுமாகிய எல்லோர்க்கும், இன்பம் புல்ல - மகிழ்ச்சிமிக, வான் அமுதும் கைப்ப பாக நூல் புலவர் அட்ட முல்லை வால் முகையின் அன்ன முரியா மூரல் அறுசுவை நல்ல ஊண் அருத்தி - தேவாமிர்தமுங் கசப்பாக நூலுணர்ச்சியின் வல்லவரால் சமைத்த முல்லையினது வெள்ளிய அரும்பினையொத்த முனை முரியாத அரிசியால் சமைந்த அன்னமும் அறுசுவையமைந்த கறிகளும் ஆகிய நல்ல உணவை உண்பித்து, அன்னோர் நாவிருந்து அமுதுசெய்தும் - அவ்வந்தணர் முதலியோர் நாவாற்செய்து ஊட்டிய வாழ்த்து மொழியாகிய அமுது செய்தருளியும்.

அறுசுவை கறிமேனிற்றலால் அடையடுத்த பண்பாகுபெயர். உம்மை உயர்வுசிறப்பு. (ருசு)

எல்லவனுச்சிநீந்துமெல்லையிநான்குமாறும்
வல்லவர்சூதனோதிவகுத்தமூவாறுகேள்வி
சொல்லவுண்மலர்ந்துமேனைமறுமுதற்றுறைமாண்கேள்வி
நல்லனநயந்துகேட்டுநண்பகற்போதுநீத்தும்.

(இ-ள்) எல்லவன் உச்சி நீந்தும எல்லையில்-சூரியன் ஆகாயத்தினுச்சியினின்று கடந்து மேற்கே செல்லுங்காலையில், நான்கும் ஆறும் வல்லவர் சூதன் ஓதி வகுத்த மூவாறு கேள்வி சொல்ல உள் மலர்ந்தும-நான்கு வேதங்களிலும ஆறங்கங்களிலும் வல்ல புலவர்கள் சூதமுனிவர் கூறிப பாகுபாடுசெய்த பதினெண்புராணங்களைச் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்தும, ஏனை மறு முதல் துறை மாண் கேள்வி நல்லன நயந்து கேட்டும் - அதுவொழிந்த மறுநூல் முதலிய நீதியின மாண்பமைந்த நூல்களுள் (குடிகளுக்கு நன்மை பயக்கும) நீதியின் பாகுபாடுகளை விரும்பிக்கேட்டும், நண்பகல் போது நீத்தும் - (இவ்வாறு) நடுப்பகற்காலத்தைக் கழித்தும்.

கேள்வி கேட்டற்குக்காரணமாகிய நூன்மேனிற்றலால் காரியவாகுபெயர்.

கலைக்குரைவிரிப்பாரொன்னவறுமையிற்கல்விபோலப்
புலப்படாமருங்குனல்லாரெந்திரப்புலவன்பூட்டி
யலைத்திடுபாவைபோனின்றாடலசெய்யாடற்கண்ணு
நலத்தகுபாடற்கண்ணுநல்லருணோட்டஞசெய்தும்.

(இ-ள்.) வறுமையிற் கல்விபோல புலப்படா மருங்குல் நல்லார் - வறுமையிற்கற்ற கல்வி புலப்படாததுபோலப் (பிறர் கண்களுக்குப்) புலப்படாத இடையையுடைய ஆடன் மகளிர், எந்திரப் புலவன் பூட்டி அலைத்திடு பாவைபோல் நின்று - சூத்திரப்பாவையாட்டும் உணர்ச்சியில் வல்லவன் சூத்திரம் பூட்டியாட்டும் பதுமைபோல நின்று, கலைக்கு உரை விரிப்பார் என்ன ஆடல் செய் ஆடல் கண்ணும் - பரதநூற்பொருளை விரிப்பாரைப்போல ஆடும் ஆடலிடத்தும், நலத்தகு பாடல் கண்ணு

ம் - பண்சுவை மிக்க பாடலிடத்தும், நல் அருள் நாட்டம் செய்தும் - நல்ல திரு பார்வைக்கம் வைத்தருளியும்.

அபிநயத்தால் - பாடலின்பொருளைத் தெரிவித்தலால். கலைக்குரை விரிப்பாரென்ன ஆடல்செய் ஆடலென்றார். வறுமையிற்கற்ற கல்வி பயன்படாதென்பது. "ஏழைக்குப்பகரார்நூலே" என்பதனானுணர்க. வறுமையிற் கல்விபோலப் புலப்படா மருங்குலெனவும், கலைக்குரை விரிப்பாரென்ன ஆடல்செய் ஆடற்கண்ணும் எனப் பொருள் கொள்ளப்படுதலால் எதிர்நிரனிறைப்பொருள்கோள். (௫௮)

இன்னிலையொழுகுந்தொல்லோரியற்றியதருமம்வேறு
மந்நிலைநிறுத்தும்வேள்வியறம்பலவாக்கஞ்செய்ய
நன்னிதியளிந்தும்வேள்விநடத்தியுஞ்செல்வங்கல்வி
தன்னிருகண்களாகத்தழைந்திடவளர்க்குநாளும்.

(இ-ள்.) இல் நிலை ஒழுகும் தொல்லோர் இயற்றிய தருமமும்-இல்லற ஆச்சிரமத்தில் வழுவாதுநடக்கும் முன்னோர்செய்ததருமங்களும், வேறும் - அதுவொழிந்த பிரமசரியமுதலிய மூவகை ஆச்சிரமங்களின் தருமங்களும், அந்நிலை நிறுத்தும் வேள்வி பல அறம்-(ஆகிய) அவ்வவ்வாச்சிரமங்களுக்குரிய தருமங்களை நிலைநிறுத்தும் யாகமுதலிய பலதருமங்களை, ஆக்கம் செய்ய நல் நிதி அளித்தும் - விருத்தி செய்யும்பொருட்டு மிக்கதிரவியங்களைக்கொடுத்தும், வேள்வி நடத்தியும் - (தாமே) அசுவமேதமுதலிய யாகங்களைச்செய்தும், செல்வம் கல்வி தன் இரு கண்கள் ஆக-செல்வமுங் கல்வியுந் தமது இரண்டுகண்களாக, நாளும் தழைந்திட வளர்க்கும்-எந்நாளும் உயர்ந்தோங்கத் தடாதகைப்பிராட்டியார் வளர்த்தருளுவார்.

திடம்படு அறிஞர் என்னுஞ் செய்யுண்முதல், இன்னிலையொழுகும் என்னுஞ் செய்யுளீறும் ஒருதொடராதலால் குளகம். நண்ணி, சிறந்து, உணர்ந்து, ஒறுததுத்தீர்த்து, மகிழ்ச்சிகூர்ந்து, உனடு, அமுதுசெய்து என்னும் வினையெச்சங்கள் ஒன்றனையொன்றுகொண்டு வளர்க்கும் என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டன. ஏந்த, வீச, ஏவல்செய்ய, உய்ய, காட்ட, சூழ என வேறுபல வடுக்கியவினையெச்சங்கள் தனித்தனி தெளிநதென்னும வினையெச்சத்தின் முதனிலைகொண்டன. விருத்திசெய்தற்குப் பொருளும நடாததற்குக்கல்வியறிவும் வேண்டுதலால் செல்வங் கல்வி தன்னிருகண்களாக என்றார்.

இல்வாழ்க்கை நிலையில்நிறவோர் இயற்றும்வேள்விகள் ஐவகைப்படும். அவை பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகமுமாம். அவற்றுள்-பிரமயாகம் - வேதமோதல். தேவயாகம்-ஓமம்வளர்த்தல். மானுடயாகம் - விருந்தோம்பல். பிதிர்யாகம்-நீர்க்கடனாற்றல். பூதயாகம்-பலியிடுதல். பிரமசரியநிலையினிற்போர்செய்யும் வேள்விகள் பிரமயாகம், தேவயாகம், பிதிர்யாகங்களுமாம். வானப்பிரதத நிலையினிறபோர்செய்யும வேளவிகள் முன்னர்க்கூறிய ஐவகையுமாம். சந்நியாசநிலையி னிறபோர்செய்யும் வேள்விகள் ஐவகைப்படும். அவையாவன-கருமயாகம், தவயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகங்களுமாம். அவற்றுள் கருமயாகமாவது-சிவார்ச்சனை முதலியனசெய்தல். தவயாகமாவது - சரீரம் வாடச் சாந்திராயணமுதலிய விரதங்களையநுட்டித்தல். செபயாகமாவது-திருமந்திரஞ்செபித்தல். தியானயாகமாவது மனம் வேறுவிடயங்களிற் பொருந்தாவண்ணம் தாரணையினிறுத்தி அஞ்ஞானவிகற்பமற்றுச் சதாசிவாதி விக்கிரகங்களில் ஒன்றை அன்பினாலேசிந்தித்தல். ஞானயாகம் ஐந்துவகைப்படும், அவையாவன-ஓதல், ஓதுவித்தல், தெளிதல், தெளிவித்தல், சிந்தித்தல். (௫௯)

ஒப்புருமுதலீறில்லாவொருத்திதன்சத்திபெற்ற
மூப்பெருந்தேவராலேமுத்தொழினடத்துமென்று
செப்பலும்புகழன்றென்னிற்றென்னவன்கன்னியாகி
யிப்புவிமநுவிற்காக்குமென்பதென்பேதைமைத்தே.

(இ-ள்.) ஒப்பு உரு முதல் ஈறு இல்லா ஒருத்தி - உவமையும் உருவமும் முதலும் ஈறுமில்லாத சிவசத்தி, தன் சத்திபெற்ற மூப்பெரும் தேவராலே மு த்தொழில் நடத்தும் என்று செப்பலும் புகழ் அன்று என்னில் - தன்னுடைய சத்திகளிடத்திலுண்டான பெரியதிரிமூர்த்திகளாலே முத்தொழிலையும் நடத்தி நுமென்று சொல்லுதலும் (அவருக்குப்) புகழல்லவென்று (வேதமுதலியன) எடு த்துக்கூறில், தென்னவன் கன்னியாகி இப்புவி மநுவில் காக்கும் என்பது என் பேதைமைத்து - மலயத்துவசபாண்டியன் புத்திரியாராகி இந்நிலவுலகை மநுநூலின் வழி காக்கின்றாரென்று (எடுத்து) கூறுதல் என்னுடைய மடமையுளடங்கும்.

வேதமுதலியன அவ்வாறெடுத்துக்கூறுதலைத் தானுணர்ந்தும் இந்நிலவுல கைக்காக்கின்றனரென்று தானெடுத்துக்கூறல் அறியாமை யாதலால் என்பேதை மைத்தென்றார். இது கவிகூற்றுத்துறை. ஒப்புருமுதலீறில்லா வொருத்தி என்ற து-நவாதீதநிலையினின்ற ஒளியுருவாகிய அருட்சத்தி. தன்சத்தியென்றது அவ்வருட் சத்தியினின்றுந்தோன்றிய மகேசை முதலியோர். (௬௦)

கலிநிலைத்துறை.

வரைசெய்பூண்முலைத்தடாதகைமடவரற்பிராட்டி
விரைசெய்தார்முடிவேய்ந்துதண்குடைமநுவேந்தன்
கரைசெய்நூல்வழிகோல்செலக்கன்னியாம்பருவத்
தரசுசெய்தலாற்கன்னிநாடாயதந்நாடு.

(இ-ள்.) வரை செய் பூண் முலை தடாதகை மடவரல் பிராட்டி - மலையை யொத்த ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய தடாதகையென்னுந் திருப்பெய ரையும் மடவரற்றன்மையையும் உடைய எமதுபிராட்டியார், விரைசெய் தார்முடி வேய்ந்து தண்குடை - வாசம்வீசும் மலர்மாலையையணிந்த கிரீடந்தரித்துத் தண் ணியகுடைநிழலின் (கீழிருந்து,) மநு வேந்தன் கரை செய் நூல்வழி கோல் செல கன்னியாம் பருவத்து அரசு செய்தலால் - மநுவரசன் வரையறுத்தமைத்த நீதிநூ லின்வழி செங்கோல்செல்லக் கன்னிப்பருவத்தில் அரசியல் நடத்தலால், அந்நாடு கன்னி நாடு ஆயது - அப்பாண்டிநாடு கன்னிநாடெனப் பெயர்பெற்றது.

கற்பினபகுப்புகளாகிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களுள் மடம்-என்பது ஓர்குணம் அகருணத்தின் வருகையுடைமையால் மட வரலென்றது பெண்களுக்கோர் பரியாயநாமம். (௬௧)

இன்னவாறுமையவதரித்திருந்தனளென்றுப்
பொன்னவாவினர்பெறவெறிபொருனைகால்பொருப்பன்
சொன்னவாய்மைகேட்டகங்களிதூங்கினர்தொழுது
மின்னுவார்சடைமுனிவரோர்வினவுரைசெய்வார்.

(இ-ள்.) இன்ன ஆறு உமை அவதரித்திருந்தனள் என்று-இவ்வகைஉமைய வள் (மலயத்துவசபாண்டியனிடத்துத்) திருவவதாரஞ்செய்திருந்தாரென்று, பொ ன் அவாவினர் பெற எறி பொருனை கால் பொருப்பன் சொன்ன வாய்மை - பொன்

லைவிரும்பினோர் பெறவீசும் அலைகளையுடைய தாமிரபருணிநதியைத்தந்த பொதியமலையில்வசிக்கும் அகத்தியமுனிவர் கூறியருளிய உண்மைச்சொல்லை, மின்னு வார்சடைமுனிவர் கேட்டு தொழுது அகம் களி தூங்கினர்-மின்னலையொத்த நீண்டசடையினையுடைய முனிவர்கள்கேட்டு வணங்கி மனங்களிகூர்ந்து, ஓர் வினவுரை செய்வார் - ஒரு வினவுரை கூறுகின்றார்கள்.

பாண்டிநாட்டிலுள்ளோர், பலர்க்கும் கொடுக்குந்தொழில் பூண்டவர் என்பதையுணர்த்த பொன்னவாவினர் பெறவெறி பொருனைகால பொருப்பன் எனக் குறிஞ்சிக் கருப்பொருள்மேலேற்றிக் கூறியது இறைச்சிப்பொருள். தூங்கினர் வினைமுற்று எச்சமாய்நின்றது. (கஉ)

திருந்துநான்மறைச்சென்னியுந்தீண்டுதற்கரிதா
யிருந்தநாயகியாவையுமீன்றவெம்பிராட்டி
விரிந்தவன்புகூர்தக்கனும்வெற்பனுமன்னாள்
வருந்திநோற்றலாலவர்க்கொருமதலையாய்வந்தாள்.

(இ-ள்.) திருந்து நான் மறை சென்னியும் தீண்டுதற்கு அரிதாய் இருந்த நாயகி யாவையும் ஈன்ற எம்பிராட்டி-திருந்திய நான்குவேதங்களின் சிகைகளுந்தொடுதற்கரிய இயல்பினையுடையவரா யிருந்தருளிய இறைவியாராகிய அகிலசராசரங்களையும்பெற்றருளிய எமதுபிராட்டியார், விரிந்த அன்பு கூர் தக்கனும் வெற்பனும் பல்நாள் வருந்தி நோற்றலால் அவர்க்கு ஒருமதலையாய் வந்தாள்-எல்லைகடந்த அன்புமிக்க தக்கனும் மலையரையனும் பலநாள்வருந்தித் தவஞ்செய்தலால் அவர்களுக்கு (முன்னுள்ள) ஒருகுழந்தையாயவதரித்தார்.

அரிது குறிப்பு வினைமுற்று லினையும் பெயராதலால் வழாநிலையாக இயல்பென்ப பொருள்கொண்டாம். அரியவளென்ப பொருள்கொள்ளில் வழுவாமென்க. தக்கனும் வெற்பனும் தேவராயிருந்தும் அவர்கள் அம்மையாரைப் புதல்வியாராகப் பெறுதற்குச் செய்தற்கரிய தவஞ்செய்தனரென்பார். தக்கனும் வெற்பனும் பன்னாள்வருந்திநோற்றலால் என்றார் இவ்வேறுபாடுணர்த்தற்பொருட்டே பின்வருஞ்செய்யுளில் மனித்தனாகிய பூழியன் என்றார். (கங)

மனித்தனாகியபூழியன்மகளெனவீங்குத்
தனித்தகாரணம்யாதெனத்தமனியப்பொதுவிற்
குனித்தசேவடிக்கன்புடைக்குறுமுனியருள்கூர்ந்
தினித்ததோர்கதைகேண்மினென்றெடுத்துரைசெய்வான்.

(இ-ள்.) மனித்தன் ஆகிய பூழியன் மகள் என ஈங்கு தனித்த காரணம் யாது என-மானிடனாகிய பாண்டியன் புத்திரியாராக இந்நிலவுலகில் சிவபிரானினின்று தனித்து வந்த காரணம் யாதென்று வினவ, தமனியம் பொது வில் குனித்த சேவடிக்கு அன்பு உடை குறு முனி அருள் கூர்ந்து-பொற்சபையில் நடனஞ்செய்தருளிய செவ்விய திருவடிக்கீழ் அன்பினையுடைய அகத்தியமுனிவர் கருணைகூர்ந்து, இனித்தது ஓர் கதை கேண்மின் என்று எடுத்து உரை செய்வார்-இன்பஞ்செய்யும் ஒருகதையுளது (அதனைக்) கேளுங்களென்று எடுத்துச் சொல்லுகின்றார்.

கு-உருபுமயக்கம். மனிதன்-மனித்தன் விரித்தல் விகாரம். "மனித்தப்பிறவியும் வேண்டுவதே" என்ப பெரியோர் கூறிய திருவாக்கானுணர்க. ஈங்கு படர்க்கைக்கண் வந்தமையால் இடவழுவமைதி. குனித்தசேவடி என்றது சிவபிரான்மேல் நின்றது. "இல்லைமூதூராடியதிருவடி" என்றருளிய திருவண்டப்பகுதியிற்காண்க.

விச்சுவாவசுவெனுமொருவிச்சையன்பயந்த
நச்சுவாள்விழிமடந்தைவிச்சாவதிநாம
மச்சுவாகதமொழியினளம்பிகைக்கன்பு
வைச்சுவாழ்வுறுமனத்தினடாதையைவணங்கா.

(இ-ள்.) விச்சுவாவசு என்னும் ஓர் விச்சையன் பயந்த - விச்சுவாவசு என்னும் ஒரு கந்தருவன் பெற்ற, நச்சுவாள் விழி மடந்தை விச்சாவதி நாமம் அச்சுவாகத மொழியினள் - நஞ்சு பூசிய வாளையொத்த கண்களையுடைய மகளாகிய விச்சாவதி என்னும் பெயரையுடைய அந்தக்கிளிபோலும் மொழியை யுடையவள், அம்பிகைக்கு அன்பு வைச்சு வாழ்வுறு மனத்தினள் தாதையை வணங்கா - உமையவளிடத்து அன்புவைத்து வாழும மனத்தினையுடையவளாய்த் தனது பிதாவை வணங்கி.

கந்தருவனென்றது. " ... ..." எனவரும் அமரகோசமகத்துவத்தாலுணர்க. விச்சையன் இசைநூலில வல்லவன். நஞ்சு நச்சு-வலித்தல் விகாரம். அகரச்சுட்டு வுயாவின்மேனின்றது. ரு - உருபுமயக்கம். வைச்சு - மரூஉ. (௬௫)

ஐயவம்பிகைதன்னையானன்பினால்வழிபட்
டுய்யவேண்டுமென்றனளவனுலகெலாமபயந்த
தையன்மந்திரந்தனைமகடனக்குபதேசஞ்
செய்யவந்நெறியொழுகுவாளசெப்புவாள்பின்னும்.

(இ-ள்.) ஐய அம்பிகை தனனை யான் அன்பினால வழிபட்டு உய்ய வேண்டும் என்றனள்-என் தந்தையே உமையவளை நான் அன்பினால் வழிபடடொழுகிக் கடைத்தேற வேண்டுமென்று கூறினள், அவன்-அவ்விச்சுவாவசு, உலகு எல்லாம பயந்த தையல் மந்திரம் தன்னை மகள தனக்கு உபதேசஞ் செய்ய-எல்லாவுலகங்களையும் பெற்றருளிய உமையவள் திருமந்திரத்தைத தன புத்திரிக்கு உபதேசஞ்செய்ய, அந்நெறி ஒழுகுவாள் பின்னும செப்புவாள-அத்திருமந்திரத்தின் வழிபபட்டொழுகும் விச்சாவதி பின்னும் தன் தந்தையை நோக்கிக கூறுகின்றனள. (௬௬)

இறைவிதன்னையாதரிப்பதற்கிம்பரிற்சிறந்த
குறைவினன்னகர்யாதெனக்கூறுவான்கேள்வித்
துறைவிளங்கினோர்பயில்வதுதுவாதசமுடிவென்
றறைவளம்பதியவனிமேற்சிவபுரமாமால்.

(இ-ள்.) இறைவி தன்னை ஆதரிப்பதற்கு இமபரில் சிறந்த குறைவில் நல் நகர் யாது என-உமையவளை விரும்பி வழிபட்டொழுகுவதற்கு இவவுலகில் மேம்பட்ட குறைவில்லாத நல்ல நகரமானது யாதென்று வினவ, கூறுவான் - சொல்லுகின்ற விச்சுவாவசு, துவாதசம் முடிவு என்று அறை வளம் பதி - துவாதசாந்தமென்று கூறப்படும் வளப்பத்தையுடைய க்ஷேத்திரம் (ஒன்று உளது,) கேள்வித்துறை விளங்கினோர் பயில்வது - (அது) கேர்ச்சியையுடையோர் வாசஞ்செய்யு மிடமாய், அவனி மேல் சிவபுரம் ஆம் - பூவுலகிற் சிவலோகமாம்.

பயில்வதென்னும் இடைநிலைபெற்ற தொழிற்பெயர்-இடத்தின்மேனின்றது. வளம்பதி உரிச்சொல்லாதலால் நிலைமொழி யீறுகெடாய் நின்றது. (௬௭)

பீடமும், காளஞ்சரத்திலுள்ள காளிபீடமும், சங்குகர்ணத்திலுள்ள தொனிபீடமும், தூலகேஸ்வரத்திலுள்ள தூலபீடமும், ஞானிகளிதயகமலத்திலுள்ள பரமேஸ்வரி பீடமுமாம். இவற்றை வடமொழியிலுள்ள தேவிபாகவதத்திற்காண்க. (சுஅ)

அல்லுமெல்லும்வானகர்க்கதவடைப்பின்றிசுவர்க்கச்
செல்வரங்கடைந்துமையருள்சித்தியால்வினையை
வெல்லுவாரதான்றெந்தையோடைவர்கள்வேண்டி
நல்வரம்பலவடைந்தனர்நமர்களந்நகரில்.

(இ-ள்.) சுவர்க்கச் செல்வர்-சுவர்க்கவாழ்க்கையராகிய தேவர்கள், அல்லும் எல்லும் வான் நகர் கதவு அடைப்பு இன்றி அங்கு அடைந்து உமை அருள் சித்தியால் வினையை வெல்லுவார் - இரவிலும் பகலிலும் சுவர்க்கலோகத்தின் கதவை மூடுதலில்லாமல் அத்தலத்தை யடைந்து மீனாக்ஷியம்மை யருளிய சித்தியால் (தமது) வினையை வெல்லுவார்கள், அதான்று - அதுவுமன்றி, எந்தையோடு நமர்கள் ஐவர்கள் - என் தந்தையோடு நம்முடையவர்களில் ஐந்துபேர்கள், அந்நகரில் வேண்டி-அந்நகரத்திற் (சென்று அவ்வுமையை) வணங்கி, பல நல்வரம் அடைந்தனர்-பல நல்ல வரங்களைப் பெற்றார்கள். (சுகூ)

எம்மையாரையும்யாவையுமீன்றவங்கயற்க
ணம்மையாவரோயாயினுமனபினதரிபபோ
ரிம்மையாகியபோகமவீடெண்ணியாங்கெய்தச
செம்மையாகியவினனருளசெயதுவீற்றிருக்கும்.

(இ-ள்.) எம்மையும் யாரையும் யாவையும் ஈன்ற அங்கயற்கணம்மை - நம்மையும் (மற்ற) எல்லாரையும் எல்லாவற்றையும் பெற்றருளிய மீனாக்ஷியம்மையானவள், அன்பின் அர்ச்சிப்பவர் யாவரோ ஆயினும்-(தன்னை) அன்பாற் பூசிப்பவர்கள் எவராயினும் (அவர்கள்,) இம்மையாகிய போகம் வீடு எண்ணிய ஆங்கு எய்த செம்மையாகிய இன் அருள் செய்து வீற்றிருக்கும் - இம்மைப்பயனாகிய போகத்தையும் மறுமைப்பயனாகிய மோக்ஷத்தையும் எண்ணியபடி அடையக் கோடுதலில்லாத இனிய கருணைசெய்து வீற்றிருக்கின்றாள்.

யாரையும் யாவையும் என்றது சராசரங்களை. யாவரோயாயினுமென்றது-தேவரேயன்றி மனிதர்முதலோரையும். கோடுதலின்றியென்பது-யாவரிடத்தும் ஒரு தன்மையாய் நிற்றல். இம்மை பயனமேனிற்றலால் கருவியாகுபெயர். (எ0)

என்றதாதையையிறைஞ்சினளறுதைகொண்டெழுந்தாள்
மன்றன்மாமலர்வல்லிபோலவழிகொடுகானங்
குன்றமாறுபின்கிடப்பமுன்குறுகினளன்பி
னின்றவாதியெம்பணையருணிறைந்தவந்நகரில்.

(இ-ள்.) என்ற தாதையை இறைஞ்சினள் அறுதை கொண்டு எழுந்தாள் மா மன்றல் மலர் வல்லிபோல் வழிகொடு - என்றுகூறிய தனது பிதாவை வணங்கி விடைபெற்று (அங்குநின்றும்) எழுந்து வண்டுகள்சூழ்ந்த வாசமிக்க பூங்கொடி நடத்தல்போல நடந்து, அன்பில் நின்ற ஆதி எம் பணை அருள் நிறைந்த அந்நகரில் - அடியாரன்பில் குடிகொண்ட (திருமகள்முதலியதெய்வப்பெண்களுக்கு)

முதலாயுள்ள ஏமது உமையவள் திருவருள்கிறைந்த அம்மதவைகளில், காளைடிரு ன்றாம் ஆறு பின் இடப்ப முன் குறிஞன் - காடும் மலையும் ஆறும் (தனக்குப்) பின் கழிய முன்சென்றான்.

இறைஞ்சினன், எழுந்தான் என்னும் வினைமுற்றுகள் எச்சங்களாய்நின்றன. மா என்னும் பலபொருள் ஒருசொல் சார்புபற்றி வண்டின்மேனின்றது. (௬௧)

அடைந்திளம்பிடியாடல்போலாடககமலங்
குடைந்துநான்மறைக்கொழுந்திடங்கொண்டுறைகுறிப்பாற்
படர்ந்தபொன்மலைவல்லியைப்பணிந்துவெங்கதிரோன்
றொடர்ந்தவான்சுறாமதியமேயாதியாத்தொடங்கா.

(இ-ள்.) அடைந்து இளம்பிடி ஆடல் போல் ஆடகம் கமலம் குடைந்து-(அத்திருககை) அடைந்து இளமையாகிய பெண்யானை நீராடுதல்போலப் பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி, நால் மறை கொழுந்து இடம் கொண்டு உறை குறிப்பால் படர்ந்த பொன்மலை வல்லியை பணிந்து - நான்குவேதங்களின் கொழுந்தாகிய (பரசிவத்தின்) இடப்பாகத்தைத் தனக்கிடமாகக்கொண்டு வசிக்குங்குறிப்போடு (ஒருபாற்படர்ந்த) இமயவல்லியாகிய மீனாக்ஷியம்மையைவணங்கி, வெங்கதிரோன் வான்சுறாத் தொடர்ந்த மதியம்ஏ ஆதியாத் தொடங்கா-சூரியன்பெரியமகரராசியிற்சேர்ந்த தை மாதமேமுதலாகத்தொடங்கி.

கொழுந்து-கொடிக்குடைமையால் கொழுந்திடங்கொண்டுறை குறிப்பால் படர்ந்த பொன்மலைவல்லி என்றார். ஏ-பிரிநிலை. (௬௨)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பெரும்பகனல்லூண்கங்குலூணுதவப்பெற்றவூணிலைமுதல்பல்லூ
ணரும்பொடியெள்ளூண்சாந்திராயணமானைந்துபானறியநீர்தருப்பை
யிரும்புதனுனிநீர்காலிவைநுகர்ந்துமியற்றரும்பட்டினியுற்றும்
வரம்புறவீராறுதிங்களுநோற்றுவாடிமேல்வருஞ்சுறாமதியில்.

(இ-ள்.) பெரும பகல் நல் ஊண் நுகர்ந்தும் -(தொடங்கியமகரவியில்) பகற்போதில் நல்லவுணவுண்டும், கங்குல் ஊண் நுகர்ந்தும் -(கும்பரவியில்) இரவில் உண்டும், உதவ பெற்ற ஊண் நுகர்ந்தும் (மீனரவியில்) அங்கியதியில்லாமல் கிடைத்தபோதுண்டும், இலை முதல் பல் ஊண் நுகர்ந்தும் (மேடரவியில்) இலைமுதலிய காய்கனிகளை உண்டும், எள் அரும் பொடி ஊண் நுகர்ந்தும் (இடபரவியில்) நுண்ணிய எள்ளுப்பொடியை உண்டும், சாந்திராயணம் நுகர்ந்தும் - (மிதுனரவியில்) சாந்திராயணநோன்புநோற்றும், ஆனைந்தும் நுகர்ந்தும் - (கடகரவியில்) பஞ்சகவ்வியம் உண்டும், பால் நுகர்ந்தும் - (சிங்கரவியில்) பாலுண்டும், நறியநீர் நுகர்ந்தும் - (கன்னிரவியில்) நல்லநீரை உண்டும், தருப்பை இரும் புதல் நுனி நீர் நுகர்ந்தும் - (துலாரவியில்) தருப்பையாகிய பெரியபுல்லினுனியிலுள்ள நீரைஉண்டும், கால் நுகர்ந்தும் - (விருச்சிகரவியில்) வாயுவையுண்டும், இயற்றரும்பட்டினி உற்றும் - (தனுரவியில்) செய்தற்கரிய பட்டினியாயிருந்தும, இவை வரம்பு உற-இந்நுகர்ச்சிகள் (அம்மாதங்கள்தோறும்) வரம்புபட, ஈராறு திங்களும் நோற்று வாடி - (இவ்வாறு) பன்னிரண்டுமாதமுந் தவஞ்செய்து (உடல்) மெலிந்து, மேல்வரும் சுறாமதியில் - அவற்றின்மேல்வரும் மகரரவியில்.

நகர்ந்தென்பதைக் கடைநிலைத்தீவகவணியாகக்கொண்டு எல்லாவற்றோடு மொட்டுக. சாந்திராயணநுகர்தலாவது-சந்திரகலை ஒவ்வொன்றுயருந்தோறும் ஒவ்வொருகவளமுயர்ந்தும், அக்கலைகுறையுந்தோறும் ஒவ்வொருகவளங்குறைந்தும் நோற்பதாதலின் சாந்திராயணநுகர்ந்தும் என்றார். (எக)

சந்நிதியடைந்துதாழ்ந்துநின்றிளமாந்தளிரடிக்காஞ்சிசூழ்கிடந்த
மின்னிகர்மருங்குலிழையிடைநுழையாவெம்முலைசசெம்மலர்க்காந்தட்
பொன்னிரைவளைக்கைமங்கலக்கழுத்திற்பூரணமதிக்கலைமுகத்தி
னின்னிசையளிசூழிருட்குழற்கற்றையிறைவியையிம்முறைநினையா.

(இ-ள்.) சந்நிதி அடைந்து தாழ்ந்து நின்று - சந்நிதியையடைந்துவணங்கி நின்று, மா இளம் தளிர் அடி-மாவினது இளந்தளிரின் மென்மைபோன்ற மெல்லிய திருவடியினையும், காஞ்சி சூழ் கிடந்த மின் நிகர் மருங்குல்-காஞ்சியென்னும் ஆபரணம் புறத்திற்சூழ்ந்த மினலையொத்த இடையையும், இழை இடை நுழையா வெம்முலை - நூலிழை யிடைபுகாமல் நெருங்கிய விருப்பந்தருந் தனத்தையும், செம்பொன் வளை நிரை காந்தள் மலர் கை - செவந்த பொன்னாலாகிய வளையலின் வரிசைகளையுடைய காந்தள்மலரையொத்ததிருக்கைகளையும், மங்கலம் கழுத்து-மங்கலம்பொருந்திய திருக்கழுத்தினையும், பூரணம் கலைமதி முகத்தின் - நிறைந்தகலைகளையுடைய சந்திரனையொத்த முகத்தினையும, இன் இசை அளிசூழ் இருள் கற்றை குழல் இறைவியை - இனிய இசையையுடைய வண்டுகள்சூழ்ந்த அநதகாரத்தையொத்த நெருங்கிய அளகத்தையுமுடைய இறைவியாகிய மீனாக்ஷியம்மையை, இம்முறை நினையா - இப்பாதாதிகேசங்காறும் மனத்தில் தியானிதது.

காஞ்சி-இருகோவையணி. (எஉ)

கோலயாழ்த்தெய்வம்பராய்க்கரங்குவித்துக்கொழுஞ்சுடர்ப்பசுங்கதிர்
விளக்கம், போலநூற்பொல்லம்பொத்துபொன்னிறத்தபோர்வைநீத்தவி
ழ்கடிமுல்லை, மாலைமேல்வீககிப்பத்தர்பின்கிடப்பமலர்க்குழறோய்சுவற்கி
டத்தி, சேலைநேர்விழியாண்மாடகந்திரித்துத்தெறித்தனள்பண்ணறிந்தி
சைப்பாள்.

(இ-ள்.) சேலை நேர் விழியாள் - சேலையொத்த கண்களையுடைய விச்சாவதி, கோலம் யாழ் தெய்வம பராய் கரம் குவித்து - அழகிய வீணைக்குரிய அதிதேவதையை வணங்கிக் கைகூப்பி (வீணையை எடுதது) கொழும் சுடர் பசும் கதிர் விளக்கம்போல - கொழுவியகிரணத்தையுடைய இளஞ்சூரியனது ஒளிபோல விளங்கும், நூல்பொல்லம் பொத்து பொன்னிறத்த போர்வை நீதது-நூற்சரட்டாற் பொத்திய பொன்னிறததையுடைய உறையைநீக்கி, அவிழ்கடி முல்லை மாலை மேல் வீக்கி-இதழவிழ்ந்த வாசமிகக முல்லைமாலையை (அதன்)மேற்சூட்டி, பத்தர்பின் கிடப்ப மலர் குழல் தோய் சுவல் கிடத்தி-பத்தர் பினபுறத்திலிருகக மலரணிந்த கூந்தல் தோய்ந்த பிடரியிற் சார்தது, மாடகம் திரித்து தெறித்தனள் பண அறிந்து இசைப்பாள் - முறுக்காணியை முறுக்கி நரம்பைத் தெரித்துப் பண்வகைதெரிந்து பாடுகின்றாள்.

பண்-பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என நான்குவகைப்படும். வகை-அவற்றின்றிறங்கள். அறிந்து என்றது-பண்ணல், பரிவட்டனை, ஆராய்தல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் எட்டுவகைக் கலைத்தொழில்களாலிசைகளையெழுப்பி வார்தல், வடித்தல், உறழ்தல், உந்தல், உருட்டல், தெருட்டல்,

ன்னாஸ், பட்டடை என்னும் பண்ணின்கிரியைகளை புணர்தல். இசைப்பாண் என்ற து-இசையும்பண்ணும் வேறன்மையால். "பாலோடணைதலிசையென்றார் பண்ணென் ன்றார்" என்பதனாலுணர்க. இவற்றைச் சிலப்பதிகாரம் கானல்வரியில், "சித்திரப்ப டத்துட்புக்கு" என்னுங் கட்டுரையிற்காண்க. (௭௰)

இடைமடக்காய்வந்த அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஒளியாலுலகீன் றுயிரனைத்துமீன்போற்செவ்வியுறநோக்கி
யளியால்வளர்க்குமங்கயற்கணன்னேகன்னியன்னமே
யளியாலிமவான்றிருமகளாயாவியன்னமயில்பூவை
தெளியாமழலைக்கிளிவளர்த்துவிளையாட்டயருஞ்செயலென்னே.

(இ-ள்.) ஒளியால் உலகு ஈன்று உயிர் அனைத்தும் மீன்போல் செவ்வி உற நோக்கி அளியால் வளர்க்கும் அம் கயல் கண் அன்னே கன்னி அன்னமே-(தனது) ஒளியால் எல்லா வுயிர்களையும் பெற்றருளி அவ்வுயிர்கள் யாவையும் மீனைப்போலப் பக்குவமுறப் பார்த்தருளிக் கிருபையோடு பாதுகாக்கும் அங்கயற்கண்ணியாகிய தாயே கன்னித்தன்மையையுடைய பெண்ணன்னமே, அளியால் இமவான் திருமக ளாய்-கிருபையால் இமய மலையரசன் திருமகளாய் (அவதரித்து) ஆவி அன்ன மயி ல் பூவை தெளியா மழலை கிளி வளர்த்து விளையாட்டு அயரும் செயல் என்னே - உயிர்போன்ற மயிலையும் நாகணவாய்ப்புளையும் பொருள் விரம்பாத மழலைச்சொல் லையுடைய கிள்ளையையும் வளர்த்து விளையாடுஞ் செய்கை யாதுகாரணங்குறித்து.

ஆவி அன்னம் எனச்சொல்வகைசெய்து உயிரையொத்த அன்னத்தையும் எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று.

மீன்கள் முட்டையிட்டுச்சென்று திரும்பிப்பார்க்குங்கால் அம்முட்டை மு ற்றுங் குஞ்சாதல்போலத் தான் சிருட்டித்தருளிய ஆன்மகோடிகளை உமையவள் திருக்கடைக்கண்செய்து பக்குவமுறப் பார்த்தருளுங் காரணம்பற்றி அங்கயற்கண் ணி எனத் திருநாமம வந்ததென்பாள். உயிரனைததும் மீன்போற் செவ்வியுற நோக் கி அளியால் வளர்க்கும் அங்கயற்கண்ணன்னே எனவும், காரணததின்றன்மை கா ரியததிலுள்ளதுபோலத தனதியற்கையை அவதரித்தருளிய மானிடத் திருவுருவத் திலும் காட்டியருளினுய் என்பாள், பாதுகாத்தலே வளர்த்து விளையாட்டயருஞ் செ யலென்னே எனவுங்கூறினுள். இங்ஙுக்கூறிய காரணத்தின்றன்மை காரியத்திலுள் ளதென்பது அடியில்வரும இரண்டு செய்யுளுக்குங் கொள்க. (௭௧)

அண்டக்குவைவெண்மணற்சிறுசோறாக்கித்தனியேவிளையாடுங்
கொண்டற்கோதாய்படியெழுதலாகாவுருவக்கோகிலமே
கொண்டற்குடுமியிமயவரையருவிகொழிக்குங்குளிர்முத்தால்
வண்டற்குதலைமகளிரொடும்விளையாட்டயரும்வனப்பென்னே.

(இ-ள்.) அண்டக்குவை வெள் மணல் சிறு சோறு ஆக்கி தனியே விளை ஆ டும் கொண்டல் ஓதாய்-பல்லாயிர அண்டகோடியின் கூட்டங்கள்யாவையும் வெ ள்ளிய மணற் சிறுசோறுபோலச் சிருட்டிசெய்து தனக்கோர் துணைவேண்டாது வி ளையாடியருளும் மேகம்போலுங் கூந்தலையுடைய அன்னையே, படி எழுதலாகா உரு வம் கோகிலமே - ஒப்புமைப்படுத்தக்கூடாத திருவுருவத்தையுடைய குயிலே, கொண்டல் குடுமி இமய வரை அருவி கொழிக்கும் குளிர் முத்தால் வண்டல் குதலை மகளிரொ டும் விளையாட்டு அயரும் வனப்பு என்னே - மேகந்தவழும் சிகரத்தையுடைய இம

யமலையிறைவன் அருவி கொழிக்கும் குளிர்ந்த முத்தினால் விளையாட்டையுங் குதலைச் சொல்லையுமுடைய சிறுமியரோடு சிற்றில் (கோலி) விளையாடும் அழகுயாதெனுதித்தனர்.

படி எழுதலாகாத என்பதற்கு உலகினரெழுதவொண்ணாத எனப்பொருள் கொள்ளுதலும் ஒன்று.

ஈங்குச் சிருட்டி கூறுவாள் - முத்தால் விளையாட்டயருஞ் செயலென்னே எனவும், சிவபெருமான் தன்னைத் துணையாகக்கொள்ளின் யாதும் அவனுக்கு முட்டின்றிமுடிதல்போலத் தான் முட்டின்றிமுடித்தற்குத்தனக்கோர் துணைவேண்டாய் என்பாள். தனியே விளையாடும் எனவுங் கூறினள். "சிவமெனும்பொருளுமாதி சத்தியொடுசேரி னெத்தொழிலும்வல்லதாம், இவள்பிரிந்திடினியங்குதற்கு மரிதரிதெனுமறையிளைக்குமால்" எனவருஞ் செய்யுளாலுணர்க. (எ)

> வேதமுடிமேலானந்தவுருவாய்நிறைந்துவிளையாடும்
> மாதரரசேமுத்தநகைமானேயிமயமடமயிலே
> மாதரிமவான்றேவிமணிவடந்தோய்மார்புந்தடந்தோளும்
> பாதமலர்சேப்புறமிதித்துவிளையாட்டயரும்பரிசென்னே.

(இ-ள்.) வேதம் முடி மேல் ஆனந்தம் உருவாய் நிறைந்து விளையாடும் மாதர் அரசே - வேதத்தினுச்சியில் ஆனந்தத்தையே ஓர் திருமேனியாகக்கொண்டு சிறிதும் நீக்கமின்றி விளையாடும் பெண்ணரசியே, முத்தம் நகை மானே-முத்தம்போலுந் தந்தவரிசைகளையுடைய மான்போல்பவளே, இமய மட மயிலே-இமயமலையிற்றோன்றிய இளமையாகிய மயில்போலுஞ் சாயலையுடையவளே, மாதர் இமவான் தேவிமணி வடம் தோய் மார்பும் தடம் தோளும்-அழகிய இமய பர்வத அரசன் தேவியாராகிய மேனையாருடைய முத்துவடந்தாங்கியமார்பிலும் (மூங்கில்போலப) பணைத்ததோள்களிலும், பாதம் மலர் சேப்பு உற மிதித்து விளையாட்டு அயரும் பரிசு என்னே-(தனது) திருவடித்தாமரை செவப்புறக்குதித்து விளையாடுந்தன்மை யாதுகுறித்து.

முன்னுள்ள திருவிளையாடல் இங்கும் நிகழ்ந்ததென்பாள்-மார்புந்தடந்தோளும் பாதமலர் சேப்புறமிதித்து விளையாட்டயரும் பரிசென்னே எனவுங்கூறினாள்.

> யாழியன்மொழியாலிவ்வழிபாடியேத்தினளாகமெய்யுள்ளத்
> தாழியவன்பின்வலைப்படுகருணையங்கயற்கண்மடமானோர்
> சூழியநுழைமெல்லிளங்குழற்குதலைத்தொண்டைவாயகவைமூன்றெய்தி
> வாழிளங்குழவியாகியாலயத்துவந்துநின்றாள்வரங்கொடுப்பாள்.

(இ-ள்.) யாழ் இயல் மொழியால் இவ்வழி பாடி ஏத்தினள் ஆக - வீணையினரம்பிலெழுந்த இசைவாக்கியங்களால் இவவாறுகப பாடித்துதிக்க, மெய் உள்ளத்து ஆழிய அன்பின் வலைப்படு கருணை அங்கயற்கண் மடமான் - பொய்மையொழிந்த அடியாருள்ளத்தில் அளவின்றி நிறைந்த அன்பாகிய வலையிலகப்படும் கிருபைமிக்க அங்கயற்கண்ணியாகிய மீனாக்ஷியம்மை, ஓர் சூழியம் நுழை மெல் இளம் குழல் குதலை தொண்டை வாய் அகவை மூன்று எய்தி - ஒப்பில்லாத சூட்டணியணிந்த மெத்தென்னுஞ் சிறிய கூந்தலையும் குதலைச்சொல்லையும் கொவ்வைக்கனிபோன்ற வாயையும் மூன்று வயதையும் பொருந்தி, வாழ் இளம் குழவி ஆகி-விளங்குஞ் சிறிய பெண்மகவின் திருவுருவங்கொண்டு, வரம் கொடுப்பாள் ஆலயத்து வந்து நின்றாள் - (அவ்விச்சாவதி கருதிய) வரங்கொடுத்தற்பொருட்டுத் திருக்கோயிலின்கண் வந்து நின்றருளினள்.

...வுத்திறன் ஆக - ஆகவென்னும் இடைச்சொல்லீற்றின்கண் என்னும் விதியோடு புணர்ந்து வினையெச்சப்பொருளைத் தந்தது, கூத்தற்கு மெத்தென்றிருத்தல் இலக்கணமாதலின் மெல்லினக்குழல் என்றார். (௭௯)

இறைஞ்சியஞ்சலித்தாடன்னையெம்மன்னையாதுவேண்டினையெனவென்று
நிறைந்தபேரன்புநின்னடிப்போதினீங்கலாநிலைமைதந்தருளென்
றறைந்தனளின்னும்வேண்டுவதேதென்றருளவிம்மகவுருவாகிச்
சிறந்துவந்தென்பாலருள்சுரந்திருக்கத்திருவுளஞ்செய்யெனப்பணிந்தாள.

(இ-ள்.) இறைஞ்சி அஞ்சலித்தாள் தன்னை எம் அன்னை யாது வேண்டினை என-வணங்கிக்கைகூப்பித (துதித்த) அவ்விச்சாவதியை (நோக்கி) எமது தாயாகிய மீனாக்ஷியம்மை நீ எதனை விரும்பி நோற்றாயென்று வினவியருள, நின் அடிப் போதில் என்றும் நிறைந்தபேரன்பு நீங்கலா நிலைமை தந்தருள் என்று அறைந்தனள்-உனது திருவடித்தாமரையில் எந்நாளும் குறைவின்றி நிறைந்த பேரன்பு நீங்காத நிலைமை தந்தருளாயென்று விண்ணப்பஞ் செய்தனள், இன்னும் வேண்டுவது ஏது என்று அருள - (பின்னுங் கருணைகூர்ந்து) இன்னமும் நீ விரும்பியது யாதென்று வினவியருள, இ மகஉருவாகி என்பால் சிறந்து வந்து அருள் சுரந்து இருக்க திருவுளஞ் செய் என பணிந்தாள் - (இங்குக்காக்ஷிதந்தருளிய) இப்பிள்ளைமைத்திருவுருவங்கொண்டு என்னிடத்துச் சிறக்க வந்து கருணைசெய்திருக்கத் திருவுளஞ் செய்யாயென்று (மீட்டும்) வணங்கினாள்.

சிறந்து - செயவெனெச்சத்திரிபு. (௮0)

சிவபரம்பரையுமதற்குநேர்ந்தருள்வாடென்னவர்மன்னனாய்மலயத்
துவசனென்றொருவனவருமவன்கற்பின்றுணைவியாய்வருதியப்போதுன்
றவமகவாகவருவலெனறன்புதந்தனளவந்தவாறிதுவென்
றுவமையில்பொதியத்தமிழ்முனிமுனிவர்க்கோதினானுள்ளவாறுணர்ந்தார்.

(இ-ள்.) சிவ பரம்பரையும் அதற்கு நேர்ந்து அருள் வாள் - சிவசத்தியாகிய மீனாக்ஷியம்மை அவள் வேண்டுகோளுக்குடன்பட்டு அருள செய்கின்றவள், தென்னவர் மன்னனாய் மலயத்துவச னென்று ஒருவன வரும் - பாண்டியர் மரபில் அரசனாக மலயத்துவசனென்னும் ஒரு பாண்டியன் அவதரிப்பான், அவன் கற்பின் துணைவியாய் வருதி-நீ அவன் (இல்வாழ்க்கைக்குரிய) கற்பினையுடைய மனைவியாய் வருவாய், அப்போது உன் தவம் மகவாக வருவல் என்று அன்பு தந்தனள் - அக்காலையில் உனனுடைய தவப்பயனால் ஓர் புத்திரியாக வருவேனென்று கருணை செய்தனள், வந்த ஆறு இது என்று - பாண்டியனுக்கு அவதரித்த வகையிதுவாமென்று, உவமை இல் பொதியம் தமிழ் முனி முனிவர்க்கு ஓதினான்-ஒப்பில்லாத பொதிய மலையிலமர்ந்த அகத்திய முனிவர் வசிட்டர் முதலிய முனிவர்களுக்குக் கூறியருளினார், உள்ள ஆறு உணர்ந்தார் - அம்முனிவர்கள் உள்ளபடி தெரிந்தார்கள்.

ஆய் - செயவெனெச்சத்திரிபு. (௮௧)

தடாதகைப்பிராட்டியார் திருவவதாரப்படலம் முற்றிற்று.

---

ஆக்கப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௫௬௪.

---

## ஐந்தாவது

# திருமணப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தரைபுகழ்தென்னன்செல்வத்தடாதகைப்பிராட்டிதானே
திரைசெய்நீர்ஞாலங்காத்தசெயல்சிறிதுரைத்தேன்தெய்வ
விரைசெய்பூங்கோதைமாதைவிடையவன்மணந்துபாராண்
டரசுசெய்திருந்ததோற்றமறிந்தவாறியம்பலுற்றேன்.

(இ-ள்.) தரைபுகழ் தென்னன் செல்வம் தடாதகை பிராட்டிதானே திரை செய் நீர் ஞாலம் காத்த செயல் சிறிது உரைத்தேன - உலகினர்புகழும் மலயத்துவசபாண்டியன் புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியார் அலைவீசுங் கடல்சூழ்ந்த நிலவுலகங்காத்தருளிய திருவிளையாடலைச் சற்றுத்தெரிந்தமட்டுங் கூறினேன், தெய்வம் விரைசெய் பூங்கோதை மாதை விடையவன் மணந்து பார் ஆண்டு அரசு செய்து இருந்த தோற்றம் - தெய்வமணம் வீசும மலரணிந்த கூந்தலையுடைய அத்தடாதகைப்பிராட்டியாரை இடபவாகனத்தையுடைய சிவபெருமான் திருக்கலியாணஞ்செய்து நிலவுலகையாண்டு அரசியல் நடத்தியருளிய திருவிளையாடலை, அறிந்த ஆறு இயம்பலுற்றேன் - தெரிந்தமட்டில் சொல்லுகின்றேன். (க)

காயிரும்பரிதிப்புத்தேள்கலியிருடுமிப்பச்சோதி
பாயிருங்குடைவெண்டிங்கட்படரொளிநீழல்செய்ய
மாயிரும்புவனமெல்லாமநுமுறையுலகமீன்ற
தாயிளங்குமரியாகித்தனியரசிருக்குநாளில.

(இ-ள்.) காய் இரும் பரிதி புத்தேள கலி இருள துமிப்ப - ஒளிவீசும்பெரிய ஆக்கிஞசக்கரமாகிய சூரியன துன்பமாகிய இருளை ஒருபால் ஓட்டவும், சோதிபாய் இரும் குடை வெண் திங்கள் படர் ஒளி நீழல் செய்ய - கிரணம்பரவிய பெரிய வெள்ளைவட்டக்குடையாகிய வெளளியசந்திரன்பரந்த வொளியாகியநிழலை (ஒருபால்) செய்யவும், உலகம ஈன்ற தாய இளங் குமரி ஆகி - எல்லாவுலகங்களையும் பெற்றருளிய மாதாவாகிய (உமையவள்) இளங்கன்னியாயவதரித்து, மா இரும் புவனம் எல்லாம் மநுமுறை தனி அரசு இருக்கும் நாளில் - பெரியவுலகங்களையெல்லாம் மநுநூல் முறையால் பொதுக்கடிந்து அரசியல் நடத்திவருங்காலத்தில்.

காய்-இருளைக்கோபிக்கும் என்னும் பொருணமேனிற்றலால் ஒளிவீசும் எனப்பொருள்கொண்டாம். (உ)

மருங்குறேய்ந்தொளிப்பச்செம்பொன்வனமுலையிறுமாப்பெய்தக்
கருங்குழற்கற்றைபாரட்கஙகுலைவெளிறுசெய்ய
விரங்குநல்யாழ்மென்றீஞ்சொலின்னகையெம்பிராட்டிக
கருங்கடிமன்றல்செய்யுஞ்செவ்விவந்தடுத்ததாக.

(இ-ள்.) இரங்கும் நல் யாழ் மென் தீம் சொல் இன் நகை எம்பிராட்டிக்கு- ஒலிக்கும் நல்லவீணையினது இசை போன்ற மென்மைத்தன்மையையுடைய இனிய சொல்லையும் இனியபுன்முறுவலையுமுடைய தடாதகையென்னும் பெயருடைய எம்அபிராட்டியாருக்கு, மருங்குல் தேய்ந்து ஒளிப்ப செம்பொன் வனம் முலை இறுமாப்பு எய்த-இடைதேய்ந்துமறையும்படி செவந்த பொன்னிறம்வாய்ந்த சந்தனக்கோ

மேன்மைந்த தளங்கள்மேலெழுந்தோங்கவும், கரும் குழல் கற்றை பால் காள் கந்து வெளிது செய்ய - கரியகூந்தற்கற்றை கடுராத்திரியைவெண்ணிறஞ் செய்யும், அருங்கடி மன்றல் செய்யும் செவ்வி வந்து அடுத்ததாக - அரியதிருக்கலியாணஞ் செய்யும் பருவம்வந்தடுக்க.

ஒளிப்ப என்னும் வினையெச்சம் காரியப்பொருளிலும், இறுமாப்பெய்த, வெளிறுசெய்ய என்னும் வினையெச்சங்கள் காரணப்பொருளிலும் வந்தன. (உ)

பனிதருமதிக்கொம்பன்னபாவையைப்பயந்தாணோக்கிக்
குனிதரநிறையப்பூத்தகொம்பனையகின்னுங்கன்னி
கனிதருசெவ்வித்தாயுங்கடிமணப்பேறின்றென்னாத்
துனிதருநீரளாகிச்சொல்லினாள்சொல்லக்கேட்டாள்.

(இ-ள்.) பனிதரு மதி கொம்பு அனனபாவையை - குளிர்ந்தசந்திரனுதயஞ்செய்த பூங்கொமபையொதத தடாதகைபபிராட்டியாரை, பயந்தாள் நோக்கி - பெற்றகாஞ்சனமாலையார்பார்த்து, குனிதர நிறைய பூசத கொம்பு அன்னாய்க்கு - வளையும்படி நிரம்பமலர்ந்த பூங்கொமபையொதத வுனக்கு, கன்னி கனிதரு செவ்வித்து ஆயும் - கனனிப்பருவமுதிர்ந்தகாலமவநதும, இன்னும கடிமணம் பேறு இன்று எனறு - இனனமும் விவாகப்பலன்கிட்டவிலலையே யென்று, துனிதரு நீரள் ஆகி சொல்லினாள் - வருந்துந்தன்மையராகிக்கூறினார், சொல்ல கேட்டாள் - கூறக்கேட்டபிராட்டியார்.

குனிதரநிறையப்பூத்த - என்பது எல்லாவுறுப்புகளுங்குறைவின்றி நிறைந்தன வெனனுங் குறிப்பினமேனின்றது. பாவை-உவமையாகுபெயராய்க் காரணப் பெயராய்நிற்றலால் கொம்பனன எனறா. செவவித்து து பகுதிப்பொருள்விகுதி.

அன்னைநீநினைந்தவெண்ணமாம்பொழுதாகும்வேறு
பின்னைநீயிரங்கல்யான்போய்த்திசைகளும்பெருநீர்வைப்பு
மெனனதுகொற்றநாட்டிமீள்வலிங்கிருத்தியென்றுப் [ள்.
பொன்னவிரமலர்க்கொம்பன்னாள்பொருக்கெனவெழுந்துபோந்தா

(இ-ள்.) அன்னை நீ நினைநத எணணம ஆம் பொழுது ஆகும்-தாயே நீநினைந்தவெண்ணம் முற்றும் பொழுதுமுற்றும், பின்னை நீ வேறு இரங்கல்-பின்பு நீ வேறுபடக்கருதிவருநதுதலொழிக, யான போய் திசைகளும் பெருநீர் வைப்பும் என்னது கொற்றம நாட்டி மீள்வல் - நான்சென்று எட்டுத்திக்கிலும் கடல்சூழ்ந்த இந்நிலவுலகிலும் எனனுடைய வெறறியைநாட்டிவருகின்றேன, இங்கு இருத்தி என்று - (அதுகாறும்) நீ இஙகிருப்பாயென று, பொன அவிர் மலர்க்கொம்பு அன்னாள் பொருக்கென எழுநதுபோநதாள்-பொன்னிறங்கொண்டு விளங்கும் பூங்கொம்பை யொதத அப்பிராட்டியாா விரைநதெழுந்து (போர்க்கோலங்கொள்ளப்புறத்தில்) சென்றார்.

இரங்கல்-எதிர்மறைப்பொருளில்வந்த வியங்கோள்வினைமுற்று. அல்-விகுதி. எதிர்மறை வியங்கோட் பொருளில்வருதல். மகனெனல் - என்னுந் திருக்குறளாலுணர்க. (ஙு)

தேம்பரிகோதைமாதின்றிருவுளசசெய்திநோக்கி
யாம்பரிசுணர்ந்தவேந்தரமைசசரும்பிறரும்போந்தார்
வாம்பரிகடாவித்திண்டேர்வலவனுங்கொணர்ந்தான்வையந்
தாம்பரிவகலவந்தாளேறினள்சங்கமார்ப்ப.

(இ-ள்.) தேம்பரி கோதை மாதின் திருவுளச் செய்தி நோக்கி - வாசமிக்க கூந்தலையுடைய பிராட்டியாருடைய திருவுள்ளக்குறிப்பையுணர்ந்து, ஆம் பரிசு உணர்ந்த வேந்தரும் அமைச்சரும் பிறரும் போந்தார் - போர்க்குரிய தன்மைகளை யுணர்ந்த அரசர்களும் மந்திரிகளும் அவரொழிந்த சேனைக்காவலரும் வந்தார்கள்; வாம்பரி கடாவி திண் தேர் வலவனும் கொணர்ந்தான் - தாவிச்செல்லுங்குதிரைகளைச் செலுத்தித் திண்ணியதேர்ப் பாகனுங் கொண்டுவந்தான், வையம் தாம்பரிவு அகல வந்தாள் சங்கம் ஆர்ப்ப ஏறினாள் - இவ்வுலகம் துன்பத்தினின்றும் நீங்க அவதரித்த அப்பிராட்டியார் சங்குகள்கோஷிக்கத் தேரிலேறினார். (௬)

ஆர்த்தனதடாரிபேரியார்த்தனமுருடுமொந்தை
யார்த்தனவுடுக்கைதக்கையார்த்தனபடகம்பம்பை
யார்த்தனமுழவந்தட்டையார்த்தனசின்னந்தாரை
யார்த்தனகாளந்தாளமார்த்தனதிசைகளெங்கும்.

(இ-ள்.) தடாரி பேரி ஆர்த்தன - தடாரியும்பேரியும் ஒலித்தன, முருடு மொந்தை ஆர்த்தன - முருடும் மொந்தையும் முழங்கின, உடுக்கை தக்கை ஆர்த்தன- உடுக்கையுந்தக்கையும் ஆரவாரித்தன, படகம் பம்பை ஆர்த்தன - படகமும்பம்பையுங்கோஷித்தன, முழவந்தட்டை ஆர்த்தன - மத்தளமுந் தட்டையும் இசைத்தன, சின்னம் தாரை ஆர்த்தன - சின்னமுந்தாரையும் அதிர்ந்தன, காளம் தாளம் ஆர்த்தன - காளமும் தாளமும் இரங்கின, திசைகள் எங்கும் ஆர்த்தன - (இவைகளால்) அஷ்டதிசைகளுஞ் சத்தித்தன.

மொந்தை, படகம், ஒருகட்பறைகள். தட்டை, கற்கடிப்பறை. சின்னம், தாரையிலொருவகை. தடாரி, முருடு, தக்கை ஒருவகைவாச்சியங்கள். இவ்வொலிகளின்மயமாய் எட்டுத்திக்குகளும் இருந்தனவென்பார், திசைகளெங்கும் ஆர்த்தன வென்றார். (௭)

வீங்கியகொங்கையார்த்தகச்சினர்விழிபோற்றைப்ப
வாங்கியசிலையேறிட்டகணையினர்வட்டத்தோல்வா
டாங்கியகையர்வைவேற்றளிர்க்கையர்பிணாத்தெய்வம்போ
லோங்கியவாயத்தாருமேறினாருடனத்திண்டேர்.

(இ-ள்.) பிணா தெய்வம் போல் ஓங்கிய ஆயத்தார் - பெண்தெய்வம்போல அழகில்மிக்க ஆயத்தாராகிய மெய்க்காவலருள், வீங்கிய கொங்கை ஆர்த்த கச்சினர்-(சிலர்) பருத்ததனத்தைவீக்கிய கச்சினையுடையவராகியும், விழிபோல் தைப்ப வாங்கிய சிலை ஏறிட்ட கணையினர் - (சிலர்) தங்கள்கண்கள்போலத் தைக்க வளைந்த வில்லிற்பூட்டிய அம்புகளையுடையவராகியும், வட்டத்தோல் வாள் தாங்கிய கையர் - (சிலர்) கேடகத்தையும் வாளையுந்தாங்கிய கையையுடையவராகியும், வை வேல் தளிர்க்கையர் - (சிலர்) கூரியவேலையேந்திய தளிர்போலச் செந்நிறம்வாய்ந்த கையையுடையவராகியும், உடன் அத் திண் தேர் ஏறினார் - அத்தடாதகைப்பிராட்டியாரோடு அந்தத்திண்ணிய தேரில் ஏறினார்கள்.

ஆயம் - பெண்கள்கூட்டம். உம்மை உயர்வுசிறப்பு. (௮)

கிடைப்பனவருளாற்பாரைக்கீண்டுபாதலத்தினெல்லை
யடைப்பனபரந்ததட்டாலடையவான்றிசைகளெட்டு
முடைப்பனவண்டமுட்டியொற்றிவான்கங்கைநீரைத்
துடைப்பனகொடியாற்சாரிசுற்றுவபொற்றிண்டேர்கள்.

(இ-ள்.) சரி சுற்றுவ பொன் திண் தேர்கள் - இடசாரி வலசாரியாகச் சுற்றிவரும் பொன்னாலாகிய திண்ணிய தேர்கள், கிடைப்பன உருளால் பரவை நிலம் பாதலத்தின் எல்லை அடைப்பன-பூண்ட வுருள்களால் நிலவுலகத்தைக் கிழித்துப் பாதலத்தி னெல்லையை அடைக்கா நின்றன, பரந்த தட்டால் வான் திசைகள் எட்டும் அடைய உடைப்பன - இடம்பரந்த தட்டினாற் பெரிய திசைகளெட்டையும் ஒருசேர உடைக்கா நின்றன, கொடியால் அண்டம் முட்டி வான் கங்கை நீரை ஒற்றி துடைப்பன -கொடிகளால் ஆகாயத்தைத் தோய்ந்து அவ்வாகாயகங்கை நீரைப்பொருந்திச் சுவற்ச்செய்கின்றன.

சுற்றுவ, கிடைப்பன - வினைமுற்றெச்சங்கள். (௯)

செருவின்மாதண்டந்தாங்கிச்செல்லும்வெங்கூற்றமென்ன
வருவிமாமதநீர்காலவரத்தவெங்குருதிக்கோட்டாற்
கருவிவான்வயிறுகீண்டுகவிழுநீர்வாயங்காந்து
பருகிமால்வரைபோற்செல்வபரூஉபபெருந்தடக்கையானை.

(இ-ள்.) பரூஉ பெரும் தடக்கை யானை - பருத்தலையுடைய பெரிய கைகளையுடைய யானைகள், அருவி மாமத நீர் கால - அருவியாறுபோல பெரிய மதநீர் சிந்த, அரத்தம் குருதி வெம் கோடு ஆல் கருவி வான் வயிறு கீண்டு கவிழு நீர் வாய் அங்காந்து பருகி-செவந்த உதிரந்தோய்ந்த கொடியகொம்புகளால் (உலகிற்குத்) துணைக்காரணமாகிய மேகத்தின் வயிற்றைககிழித்து (அதினின்றுங்) கவிழு நீரை வாயைத்திறந்து பருகி, செருவில் மாதண்டம் தாங்கி செல்லும் வெங்கூற்றம் என்ன-போரில் பெரிய தண்டாயுததைத்தாங்கிச்செல்லுங் கொடிய யமனைப்போலவும், மால்வரை போல் செல்வ - பெரியமலைகள் செல்லுதல்போலவும் (ஒருபால்) செல்லாநின்றன.

“ முகரவுகரநீடிடனுடைத்தே - உகரமவருதலாவயினான ” என்ற தொல்காப்பியம் எழுத்து-உயிர்மயங்கியலில் வருஞ் சூததிரத்தால் “ ரகவுகரநீடிடனுடைத்தே ” என உபலக்கணமாகக்கொண்டு பண்படியாக வந்த பரு என்னு முதனிலைத் தொழிற்பெயர்ந்தி நீண்டு உகரம பெற்றதெனக் கொள்க. பயங்கரமான தோற்றத் தோடுந் துதிக்கை வீசிச்செல்லுதலால் மாதண்டந்தாங்கிச்செல்லும் வெங்கூற்றம் என்ன எனவும், மதப்பெருக்கையுடைய உவமைனதத்தோற்றததால் அருவிப்பெருக்கையுடைய மால்வரைபோல எனவுங் கூறினர். இது தொழிற்றன்மையணி. மால்வரைபோல்செல்வ இது இல்பொருளுவமையணி. (௧0)

ஒலியவார்திரையினன்னவொழுங்கினயோகமாககள்
வலியகாலடக்கிசசெல்லுமனமெனக்கதியிற்செலவ
கலியநீர்ஞாலங்காப்பானகடையுகமுடிவிற்றோற்றம்
பொலியும்வாம்புரவியொன்றேபோலவனபுரவிவெள்ளம்.

(இ-ள்.) கலிய நீர் ஞாலம காப்பான் - ஒலியையுடைய கடல்சூழ்ந்த உலகினைப் (பாபத்தினின்று நீககிப்) பாதுகாத்தற்பொருட்டு, கடையுகம் முடிவில் தோற்றம் பொலியும் வாம் புரவி ஒன்றே போல்வன புரவி வெள்ளம் - கலியுகமுடிவில் அவதரிக்குத் தாவிச்செல்லுங் குதிரையொன்றே (பலநிறங்கொண்டுவந்தா) லொத்த குதிரையின் கூட்டங்கள், ஒலிய வார் திரையின் அன்ன ஒழுங்கின - ஒலியையுடைய நீண்ட அலையையொத்த வொழுங்கினையுடையன, யோக மாக்கள் வலியகால் அடக்கி செல்லும் மனம் என கதியில் செல்வ - யோகசாதனஞ் செய்வோர்களுடைய வலிய காற்றையடக்கி ஒருவழிப்பட்டுச் சிவத்திற்செல்லு மனம்போல ஒரு வழிப்பட்டு விரைந்து செல்லும் நடையினையுடையன.

தத்தமக்குரிய பாகர்கள் வழிப்பட்டுச்செல்லும் செலவினையுடையன வெ ன்பார். யோகமாக்கள் வலிய காலடக்கிச்செல்லு மனமென என்றார். இது குணத் தன்மையணி. (கக)

காலினுங்கடிதுசெல்லுஞ்செலவினர்கடுங்கட்கூற்ற
மேலினுமிகையுண்டாயின்வெகுண்டுவெங்கண்டுமீளும்
பாலினர்பகுவாய்நாகப்பல்லினும்பில்குமால
வேலினர்வீயாவென்றிவீக்கியகழற்கால்வீரர்.

(இ-ள்.) வீடா வென்றி கழல் வீக்கிய கால் வீரர் - கெடாதவெற்றியால் வீர கண்டையையணிந்த காலையுடையவீரர்கள், காலினும் கடிது செல்லும் செலவினர்- காற்றினும்விரைந்துசெல்லும் நடையையுடையவர்கள், கடுங்கண் கூற்றம் மேலி னும் மிகை உண்டாயின் வெகுண்டு வெங் கண்டு மீளும் பாலினர்-கோபக்கண்களை யுடைய யமன்மேலுங் குற்றமுளதாயின் அவனைக்கோபித்து முதுகுபார்த்துத்திரு ம்புந்தன்மையையுடையவர்கள, பகுவாய் நாகப் பல்லினும் பில்கும் ஆலம் வேலி னர்-பிளந்தவாயையுடைய சர்ப்பத்தினது (விஷஞ்சிந்தும்) பல்லைப்பார்க்கிலும் சிந் தும் விஷத்தையுடைய வேலையேந்தினவர்கள்.

இன் உருபு, உறழ்வுபொருளில்வந்தது. வெரி ந் வெந் என்றது இடைக்குறை. இதுவும் அவ்வணி. (கஉ)

எண்புதைத்தெழுந்தவீரரிவுளிதேர்யானைவெள்ள
மண்புதைத்தனபதாகைமாலைவெண்கவிகைபீலி
விண்புதைத்தனநுண்டூளிவெயில்விடுபரிதிப்புத்தேள்
கண்புதைத்தனபேரோதைகடலொலிபுதைத்ததன்றே.

(இ-ள்.) எண் புதைத்து எழுந்த வீரர் இவுளி தேர் யானை வெள்ளம் மண் புதைத்தன - எண்ணையளவையைக்கடந்து (இவ்வாறு) எழுந்தவீரருங் குதிரைக ளுந தேர்களும் யானைகளும் (ஆகிய) கூட்டங்கள் நிலவுலகைச் (சிறிதுமிடமின்றி) மறைத்தன, பதாகை மாலை வெண் கவிகை பீலி விண் புதைததன - கொடிகளும் மாலைசூட்டிய வெள்ளிய குடைகளும் மயிறகுஞ்சங்களும ஆகாயத்தைச் சிறிதும் இடமின்றி மறைத்தன, நுண் தூளி - (இவறறுலெழுநத நுண்ணிய தூசிப்படலம், வெயில் விடு பரிதி புததேள் கணபுதைததன-கிரணததைவீசுஞ் சூரியனுடைய கண் களைமறைத்தன, பேர் ஓதை கடல் ஒலி புதைத்தது - (இவறறுலெழுநத) பெரிய ஓசையானது சமுத்திரத்தினொலியைகீழ்ப்படுததியது.

புத்தேள்-தேவன். வெள்ளம என்பது பிரிந்து வீரர்முதலியவற்றோடுகூடி வீ ரர்க்கூட்டம் இவுளிக்கூட்டம் தேர்க்கூட்டம் யானைக்கூட்டம் என நிற்றலால் புதைத்தன என்னும் அஃறிணைப்பனமை முற்றுப்பயனிலைகொண்டது. (கங)

தேரொலிகலினப்பாய்மான்செலவொலிகொலைவெண்கோட்டுக்
காரொலிவீரரார்க்குங்கனையொலிபுனைதார்க்குஞ்சி
வாரொலிகழற்காற்செஙகண்மள்ளர்வன்றிண்டோள்கொட்டும்
பேரொலியண்டமெல்லாம்பிளந்திடப்பெருத்தவன்றே.

(இ-ள்.) தேர் ஒலி - தேர்செல்லுகின்ற ஒலியும், கலினம் பாய் மான் செலவு ஒலி-கடிவாளத்தையுடைய குதிரைகள் செல்லுகின்ற ஆரவாரமும், கொலை வெள் கோடு கார் ஒலி - கொலைத்தொழிலமைந்த வெள்ளியகொம்புகளையுடைய

மேகம்போன்ற யானைகளினுடைய ஒலியும், வீரர் ஆர்க்கும் கனையொலி - வீரர்கள் கோஷிக்கும் மிக்க ஆர்ப்பும், தார் புனை குஞ்சி - வெற்றிமாலையணிந்த சிகையையும், வார் ஒலி கழல் கால் - நீண்டவொலியையுடைய வீரகண்டையணிந்த கால்களையும், செங்கண் - சிவந்தகண்களையுமுடைய, மன்னர் - வீரர்கள், வன் திண் தோள் கொட்டும் பேரொலி - (தமது) வலியதோள்களைக் கொட்டியதிர்க்கும் பெரிய அதிர்ப்பும், அண்டம் எல்லாம் பிளந்திடப் பெருத்த - எல்லா அண்டங்களும் பிளவுபட அதிகரித்தன.

வன்திண் - ஒருபொருட்பன்மொழி. உரிச்சொல்லாதலால் முன்னர்க்கூறிய விதிபெற்று ஈற்றுலகரம் இனவெழுத்தாய்த்திரிந்துநின்றது. (சஎ)

பார்தெழுபுழுதிபோர்ப்பப்பகலவன்மறைந்துமுந்நீர்
கரந்தவன்போன்றுனாகக்கங்குல்வந்திறுத்ததேய்ப்பச்
சூரந்திருணிறையமுத்தின்சோதிவெண்குடையும்வேந்தர்
நிரந்தபூண்வயிரவாளுநிறைநிலாவெறிக்குமன்றே.

(இ-ள்.) பார்த்து எழு புழுதி போர்ப்ப - (இவற்றாலெங்கும்) பார்தெழுந்த புழுதிபோர்த்தலால், பகலவன் மறைந்து - சூரியன்மறைந்து, முந்நீர் கரந்தவன் போன்றான் ஆக - கடலில் ஒளித்தவன்போல மறைய, கங்குல் வந்து இறுத்தது எய்ப்ப -- இருள்வந்துகுடியிருந்ததையொப்ப, இருள் சுரந்து நிறைய - இருளெங்கும் நிறைந்துநிறைய, முத்தின் சோதி வெண்குடையும் - முத்தால் அலங்கரித்த பிரகாசத்தையுடைய வெள்ளைக்குடைகளும், வேந்தர் பூண் நிரந்த வயிரம் வாளும் - அரசர்களேந்திய பூணமைந்த வயிரத்தாற்செய்த வாளாயுதங்களும், நிறை நிலா வெறிக்கும் - (அவ்விருளைப்போக்க) நிறைந்தநிலாவை வீசாநிற்கும்.

முந்நீர் படைத்தலுங் காத்தலும் அழித்தலுமாகிய மூன்றுதன்மையையுடையது எனப்பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகைநிலையாய்க்கடலுக்குக் காரணகுறியாய்வந்த பரியாயப்பெயர். இதனை "முந்நீர்ப்பிறந்தவளைத்தொடு" எனவரும் சிந்தாமணிச்செய்யுளுக்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானுணர்க. ஆற்றுநீர், ஊற்றுநீர், மேகநீர் என்று மூன்றுநீரையுடையது எனப்பொருள்கொண்டு அத்தொகைநிலையிலடக்குதலுமொன்று. புழுதிபோர்த்தலால் சூரியனத்தமித்து இருட்போதுவந்ததெனவும், அவ்விருட்போது சுக்கிலபட்சமாக வெண்குடையும் வயிரவாளும் நிலவுவீசுமெனவுங் கூறியது குணவதிசயவணி. (சஅ)

தேர்நிரைகலனாய்ச்செலலப்பரிநிரைதிரையாய்த்துள்ள
வார்முரசொலியாய்க்கல்லவாட்கலன்மீனாய்க்கொட்பத்
தார்நிரைகவரிக்காடுநுரைகளாய்த்ததும்பவேழங்
கார்நிரையாகத்தானைகடல்வழிக்கொண்டதன்றே.

(இ-ள்.) தேர் நிரை கலன் ஆய் செலல - தேரின்பந்திகள் மரக்கலங்களாய்ச்செல்லவும், பரி நிரை திரையாய் துள்ள - குதிரைகளின்பந்திகள் அலைகளாய்த்துள்ளவும், வார் முரசு ஒலியாய் கல்ல - வார்கட்டிய முரசின்றொனி பேரொலியாய்க் கல்லென்றொலிக்கவும், வாள் கலன் மீனாய் கொட்ப - வாளாயுதங்கள் மீனாய்ச்சுழன்றுவிளங்கவும், தார் நிரை கவரி காடு நுரைகளாய் ததும்ப - (வெள்ளிய) மலர்மாலை வரிசைகளைப்போலவிளங்கும் சாமரைக்காடுகள் நுரைகளாய் மேலெழுந்தோங்கவும், வேழம் கார் நிரை ஆக - யானைகள் (கடனீருண்ணவரும்) மேகங்க

ளின் வரிசைகளாய்நெருங்கவும், தானை கடல் வழி கொண்டது - சேனையாகியகடல் வழிநடந்துசென்றது.

அவயவ வயவிகளை யேற்றவற்றோடு முற்றவுருவகஞ்செய்தமையால் முற்றுருவகவணி. அவயவிகள் சேனையுங்கடலும் அவயவங்கள் தேர்களாமுதலியனவும் மரக்கலமுதலியனவுமாம். (௧௬)

கள்ளவிழ்கோதைமாதரெடுத்தெறிகவரிக்காடு
துள்ளவந்தணர்வாயாசியொருபுறந்துவன்றியார்ப்பத்
தெள்ளிளியமுதகீதமொருபுறந்திரண்டுவிம்ம
வள்ளைவார்குழையெம்மன்னைமணித்திண்டேர்நடந்ததன்றே.

(இ-ள்.) கள் அவிழ் கோதை மாதர் - தேனொடுமலர்ந்த மலர்மாலையையணிந்தபெண்கள், எடுத்து எறி கவரி காடு துள்ள - எடுத்துவீசும் சாமரைக்காடு ஒருபால் துள்ளவும், அந்தணர் வாய் ஆசி - மறையவர்கள் (தமது) வாயாற்கூறும் ஆசிர்வசனம், ஒருபுறம் துவன்றி ஆர்ப்ப - ஒருபால் மிகுந்து ஒலிக்கவும், தெள் அமுத விளி கீதம் - தெள்ளிய அமுதம்போன்ற இசைப்பாட்டுகள், ஒருபுறம் திரண்டு விம்ம - ஒருபால் திரண்டொலிக்கவும், வள்ளை வார் குழை எம் அன்னை - வள்ளைத்தண்டையொத்த நீண்டகாதையுடைய எம்முடையதாயாகிய தடாதகைப்பிராட்டியாருடைய, மணி திண் தேர் நடந்தது - இரத்தினமழுத்திய திண்ணியதேர் நடந்தது.

குழை காதின்மேனிற்றலால் தானியாகுபெயர். (௧௭)

மீனவன்கொடியுங்கானவெம்புலிக்கொடியுஞ்செம்பொன்
மானவிற்கொடியும்வண்ணமயிற்றழைக்காடுந்தோட்டு
பானலங்கருங்கட்செவ்வாய்வெண்ணகைப்பசுந்தோணிம்பத்
தேனலம்பலங்கல்வேய்ந்தசெல்விதேர்மருங்கிற்செல்ல.

(இ-ள்.) வல் மீனக்கொடியும் - வலியமீனக்கொடியும், கானம் வெம் புலிக்கொடியும் - காட்டிற் (சஞ்சரிக்கும்) கொடியபுலியெழுதியகொடியும், செம் பொன் மானம் வில் கொடியும் - செவந்தபொன்னாலாகிய பெரியவிற்கொடியும், வண்ணம் மயில் தழை காடும் - அழகிய மயிலிறகாலமைந்த புஞ்சக்காடுகளும் (ஆகிய இவைகள்) தோடு பானல் அம் கரும் கண் - இதழையுடைய நீலோற்பலம்போன்ற அழகிய கரியகண்களையும், செவ்வாய் - செவந்தவாயையும், வெள் நகை - வெள்ளியபுன்முறுவலையும், பசும் தோள் - (மூங்கிலையொத்த) பசியதோள்களையும் உடைய, தேன் அலம்பு நிம்ப அலங்கல் வேய்ந்த செல்வி தேர் மருங்கில் செல்ல - வண்டுகள் ஒலிக்கும் வேப்பமலர்மாலையையணிந்த தடாதகைப்பிராட்டியார் தேரின் இருபாலுஞ்செல்லவும்.

புலிக்கொடிக்கு எழுதியவாறு ஏனையகொடிகளுக்குங்கொள்க. தழை - மயிலிறகு. புலிக்கொடி - சோழனுடையது. விற்கொடி-சேரனுடையது. (௧௮)

மறைபலமுகங்கொண்டேத்திவாய்தடுமாறியெய்ப்ப
நிறைபரம்பரைநீயெங்கணிருபர்கோன்மகளாய்வைய
முறைசெய்துமாசுதீர்ப்பாயடியனேன்முகத்துமாசுங்
குறையெனநிழற்றுந்திங்கள்கொள்கைபோற்கவிகைகாப்ப.

(இ-ள்.) நீ மறை பல முகம் கொண்டு ஏத்தி - நீ வேதங்கள் பலமுகங்கொண்டு துதிசெய்து, வாய் தடுமாறி எய்ப்ப - (தமது உணர்ச்சிக்கெட்டாமையால்) வாய்தடுமாறி இளைக்கும்படி, நிறை பரம்பரை - எங்கும் நிறைந்த சிவசத்தியாயுள்ளாய், எங்கள் நிருபர் கோன் மகளாய் - (அவ்வாறுள்ள நீ) எங்களுடைய அரசர்க்கரசனாகிய மலயத்துவசபாண்டியன் புத்திரியாய் அவதரித்து) முறை செய்து வையம் மாசு தீர்ப்பாய் - செங்கோல் செலுத்தி உலகிலுள்ள குற்றத்தையொழிப்பாய், அடியனேன் முகத்து மாசும் குறை என நிழற்றும் - அடியேன்முகத்திலுள்ள குற்றத்தையும் ஒழியாயென்றுவந்து நிழல்செய்யும், திங்கள் கொள்கைபோல் - சந்திரனுடைய் கொள்கைபோல, கவிகை காப்ப - (ஒருபால்) வெண்கொற்றக்குடை நிழல் செய்யவும்.

சந்திரன் தான் பாண்டியர்மரபிற்கு முதல்வனாகையால் எங்கள் நிருபர்கோன் என்றான். குடைநிழல்செய்தல் சந்திரன் தன்குறையொழிக்கக் குறையிரந்து நிழல் செய்ததையொக்குமென அதன்மேலேற்றிக்கூறுதலால் தற்குறிப்பேற்றவணி. (கக)

அங்கயனேக்கமான்றேர்க்கணித்தொருதடங்தேரூர்ந்து
வெங்கதிர்வியாழச்சூழ்ச்சிமேம்படுசுமதியென்போ
னங்கைதன்குறிப்புநோக்கிநாற்பெரும்படையுஞ்செல்லச்
செங்கையிற்பிரம்புநீட்டிச்சேவகஞ்செலுத்திச்செல்ல.

(இ-ள்.) வெம் கதிர் வியாழச் சூழ்ச்சி மேம்படு சுமதி என்போன் - விரும்புங்கிரணத்தையுடைய பிரகஸ்பதியினுடைய சூழ்ச்சியினும் மேம்பட்ட (சூழ்ச்சியையுடைய) முதலமைச்சன், அம கயல் நோக்கி மான் தேர்க்கு - அழகிய கயல்போலுங் கண்களையுடைய தடாதகைப்பிராட்டியாருடைய குதிரைகட்டிய தேருக்கு, அணித்து ஒரு தடம் தேர் ஊர்ந்து - சமீபமாக ஒப்பில்லாத பெரியதேரைத் (தான்) செலுத்தி, நங்கைதன் குறிப்பு நோக்கி - அப்பிராட்டியாருடைய உள்ளக்குறிப்பை யாராய்ந்து, பெரு நால் படையும் செல்ல - பெரியநான்குசேனைகளும் (விரைந்து) செல்ல, செங்கையில் பிரம்பு நீட்டி - (தனது) செவ்வந்தகையிலேந்திய பிரம்பினை நீட்டி, சேவகம் செலுத்தி செல்ல சேவகத்தினைச்செலுத்தி (ஒருபால்) செல்லவும்.

பிராட்டியார்குறிப்பு - போர்கருதிவிரைந்தெழல் ஆதலால் நாற்பெரும்படையும்செல்லச் சேவகஞ்செலுத்தி என்றார். செல்ல, காப்ப என்னும் வினையெச்சங்களின் முடிபு. சுமதி என்னும் வினைமுதற்பயனிலையின் முடிபன்றாதலால் செல்வான் என்னும் வினைமுற்றைச்செல்ல எனப்பாடங்கொண்டாம். (உ0)

அலகிறொற்கருவிச்சேனையாழ்கடலனைத்துந்தன்போல்
மலர்தலையுலகமன்றிமகபதியுலகமாதி
யுலகமும்பிறவுஞ்செல்லவுவப்பிலாவலியவாக்கித்
திலகவாணுதலாண்மன்னர்திருவெலாங்கவரச்செல்வாள்.

(இ-ள்.) அலகு இல் நால் கருவி சேனை - அளவில்லாத நான்குசேனைகளாகிய, ஆழ்கடல் அனைத்தும் - ஆழ்ந்தகடல் முற்றும், தன் போல் - தம்மைப்போல, மலர்தலை உலகம் அன்றி - பரந்த இடத்தையுடைய இந்நிலவுலகமன்றி, மகபதி உலகம் ஆதி உலகமும் - இந்திரலோகமுதலிய உலகங்களிலும், பிறவும் செல்ல - ஏனையிடங்களிலுஞ்செல்ல, உவப்பு இல்லா வலிய ஆக்கி - கெடாதவலிமையுடையனவாகச்செய்து, திலகவாள் நுதலாள் -, திலகமணிந்த ஒள்ளியநெற்றியையுடைய தடா

தகைப்பிராட்டியார், மன்னர் திரு எல்லாம் - அரசர்களுடைய பொருள்களையெல்லாம், கவர செல்வாள் - கொள்ளைகொள்ளச்சென்றருளினார்.

கருவி-என்பது சேனைக்கோர் காரணப்பெயராதலால் கருவித்தானை என்பதனை இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலையாகக்கொள்க. "பொருள்கருவிகாலம் வினையிடனொடைந்தும், இருடீரவெண்ணிச்செயல்" என்பதில் கருவிசேனைமேனிற்றல்காண்க. சேனை - போர்க்குத்துணைக்கருவியாய் நிற்றலில் பண்பாகுபெயர். பொருள் - மணிபொன் முதலியன. (உக)

கயபதியாதியாயவடபுலக்காவல்வேந்தர்
புயவலியடங்கவென்றுபுழைக்கைமான்புரவிமான்றேர்
பயன்மதிநுதலவேலுண்கட்பாவையராயமோடு
நயமலிதிறையுங்கொண்டுதிசையின்மேனாட்டம்வைத்தாள்.

(இ-ள்.) கயபதி ஆதியாய வடபுலம் காவல் வேந்தர் - கஜபதிமுதலாகிய வடதேசங்களைக் காவல்பூண்ட அரசர்களுடைய, புயம் வலி அடங்க வென்று - தோளின்வலிமையையடங்கவென்று, புழைக்கைமான் - துவாரம்பொருந்திய துதிக்கையையுடைய யானைகள், புரவி மான் தேர் - குதிரைகள் தேர்கள் (ஆகிய இவைகளையும்) பயல் மதி நுதல் வேல் உண் கண் - அர்த்தசந்திரனையொத்த நெற்றியையும் வேலைவென்ற கண்களையுமுடைய, பாவையர் ஆயமோடு - பெண்கள்கூட்டங்களோடு, நயம் மலி திறையும் கொண்டு - இன்பமிக்க திறைப்பொருளையும் (அவர்கள்கொடுக்கக்) கொண்டு, திசையின்மேல் நாட்டம் வைத்தாள் - திக்குபாலகர்மேல் போர்செய எண்ணங்கொண்டார்.

கயபதிமுதலியோர்-கஜபதி, துரகபதி, நரபதி. பயல்-பாதி (உஉ)

வார்கழல்வலவன்றேரைவலியகாலுதைப்பமுந்நீ
ரூர்கலனொப்பத்தூண்டவும்பர்கோனனிகத்தெய்திப்
போர்விளையாடுமுன்னர்ப்புரந்தரன்மிலைந்ததும்பைத்
தார்விழவாற்றல்சிந்தத்தருக்கழிந்தகன்றுபோனான்

(இ-ள்.) வார்கழல் வலவன் - நீண்ட வீரகண்டையையணிந்த தேர்ப்பாகன், வலிய கால் உதைப்ப - வலிய காற்றடிக்க, முந்நீர் ஊர் கலன் ஒப்ப கடல்மேல் விரைந்து செல்லும் மரக்கலம்போல, தேரை தூண்ட - தேரை விரைந்து செலுத்த, உம்பர்கோன் அனிகத்து எய்தி - இந்திரனுடைய சேனையோடு கலந்து, போர் விளையாடு முன்னர் - போர்செய்யத் தொடங்குமுன், புரந்தரன் மிலைந்த தும்பை தார் விழ - (போர் செய்ய வந்த) தேவேந்திரன் (தான்) அணிந்துவந்த தும்பைமாலை விழவும், ஆற்றல் சிந்த - தனது வீரங் கெடவும், தருக்கு அழிந்து - (போர்ச்) செருக்கொழிந்து, அகன்று போனான்-(புறங்கொடுத்து) யுத்தகளத்தினின்று ஓடினான்.

தும்பைமாலை - போர்செய்தற்கு அணிந்துவருமாலை. "அதிரப்பொருவது தும்பையாம்" என்பதனாலுணர்க. தடாதகைப்பிராட்டியார் ஆற்றல் மிகுதி தோன்றவும், தேவேந்திரன் ஆற்றலின்மை தோன்றவும், போர் விளையாடு முன்னர் எனவும், புரந்தரன் அகன்று போனானெனவுங் கூறினார். முன்னர் என்றதில் - அர் பகுதிப்பொருள் விகுதி. (உ௩)

இழையிடைநுழையாவண்ணமிடையிறவீங்குகொங்கைக்
குழையிடைகடந்துமீளுங்கொலைக்கணார்குழுவுந்தானை
மழைகவிழ்கடாத்துவெள்ளைவாரணமாவுங்கோவுந்
தழைகதிர்மணிப்புட்டெய்வதருக்களுங்கவர்ந்துமீண்டாள்.

(இ-ள்.) இழை இடை நுழையா வண்ணம் இடை இற வீங்கு கொங்கை - (இவ்வகை புறங்கொடுத்த இந்திரனுடைய பொன்னுலகிலிருக்கும்) நூலிழை இடையில் நுழையாதபடி இடைமுறியப் பருத்த தனங்களையும், குழை இடை கடந்து மீளும் கொலை கணார் குழுவும் - குண்டலத்தையணிந்த காதுமட்டுஞ்சென்று திரும்புங் கொலைத்தொழிலமைந்த கண்களையுமுடைய தெய்வப்பெண்கள் கூட்டங்களையும், தானம் மழை கவிழ் கடாத்த வெள்ளை வாரண மாவும் - மதநீரை மேகம்போலக் கவிழ்க்கும் மதச்சுவட்டினையுடைய வெள்ளையானையினையும், கோவுங் - காமதேனுவையும், தழை கதிர் மணியும் - மிக்க கிரணத்தையுடைய சிந்தாமணியையும், தெய்வ தருக்களும் - தெய்வத்தன்மையையுடைய பஞ்சதருக்களையும், கவர்ந்து மீண்டான் - கவர்ந்துகொண்டு (அங்குநின்றுந்) திரும்பினார்.

கோ - என்பது குதிரை-பசு என்னும் பலபொருளுணர்த்தும் ஒரு சொல்லாதலால் உச்சைச்சிரவமென்னும் குதிரையும் எனப் பொருள்கொள்ளுதலுமொன்று. (உச)

கலிநிலைத்துறை.

இவ்வாறுமற்றைத்திசைக்காவலர்யாரையும்போய்த்
தெவ்வாண்மைசிந்தச்செருச்செய்துதிறையுங்கைக்கொண்
டவ்வாறுவெல்வாளெனமூன்றரணட்டமேருக்
கைவார்சிலையான்கைலைகிரிநோக்கிச்செல்வாள்.

(இ-ள்.) இவ்வாறு போய் மற்றை திசை காவலர் யாரையும் - இவ்வகையாக ஏனைத்திசைகளிலுஞ்சென்று அங்குள்ள திக்குப்பாலகர் எல்லோரையும், தெவ் ஆண்மை சிந்த செரு செய்து - பகையின் வலிமை சிந்தப் போர்செய்து, திறையுங் கைக்கொண்டு - அவர்கள் கொடுக்குந் திறையையும் பெற்றுக்கொண்டு, அவ்வாறு வெல்வாள் என - அவ்வகையாக வெல்வாளைப்போல, மூன்று அரணும் அட்டவர் மேரு சிலை கையான் - மும்மதிலையும் வென்ற நீண்ட மேருவாகிய வில்லையேந்திய திருக்கரத்தையுடைய சிவபெருமான் (வீற்றிருக்கும்,) கைலைக்கிரி நோக்கி செல்வாள் - கைலைமலையை நோக்கிச் சென்றருளினார்.

அங்குப் பெண்மைத்தன்மை வந்தமையால் அவ்வாறு வெல்வாள் என்றார். சிலையான் என்பதனிறுதியிலுள்ள விகுதியைப் பிரித்துக் கையென்பதனோடு கூட்டுக. முற்றும்மை தொகுத்தல். (உரு)

சலிக்கும்புரவித்தடந்தேருடைத்தம்பிராட்டி
கலிக்கும்பலதூரியங்கைவரைதெய்வத்திண்டேர்
வலிக்கும்பரிமன்னர்வழங்கொலிவாங்கிநேரே
யொலிக்கும்படிகிட்டினளூழிதோறோங்குமோங்கல்.

(இ-ள்.) சலிக்கும் புரவி தடம் தேர் உடை தம் பிராட்டி - செல்லுகின்ற குதிரைகட்டிய பெரிய தேரினையுடைய தடாதகைப்பிராட்டியார், கலிக்கும் பல தூரியம் - ஒலிக்கும் பல வாத்தியங்களும், கைவரை - யானைகளும், தெய்வம் திண் தேர் - தெய்வத்தன்மையுந் திண்மையுமுடைய தேர்களும், வலிக்கும் பரி - செல்லும் வண்ணஞ்செல்லுங் குதிரைகளும், மன்னர் - வீரர்களும், வழங்கு ஒலி - கோஷிக்குங் கோஷத்தை, ஊழிதோறும் ஓங்கும் ஓங்கல் - ஊழிதோறுஞ் சற்றுயருந் திருக்கைலைமலை, வாங்கி நேரே ஒலிக்கும்படி கிட்டினள் - கவர்ந்து அவ்வகையேயொலிக்க அடைந்தனர்.

ஒலிக்கும்படி-படி அகரவீற்று வினையெச்சத்தை யுணர்த்தும் ஓரிடைச்சொல். தோறு - தொழிற்பயில்வு பொருளில் வந்த பண்மை யிடைச்சொல். (உசு)

வானார்கயிலைமலையான்மகடன்னைநீத்துப்
போனாள்வந்தாளென்றருவிக்கட் புனலுக்கநீ
ராளுெலியாலன்னைவாவென்றழைஇத்தன்றேசு
தானாநகையாற்றழீஇயெதிரேற்பச்சென்றான்.

(இ-ள்.) வான் ஆர் கயிலை - மிகவும் உயர்ந்த திருக்கயிலை, மலையான் மகள் - மலையரசன் புத்திரியாராகிய பார்வதியார், தன்னை நீத்து போனாள் - (முன்பு) தன்னைவிட்டுப்பிரிந்து சென்றார், வந்தாள் என்று - (இப்போது) வந்தனரென்று, அருவி கண் புனல் உக்கு - அருவியாகிய கண்ணீர் சிந்தி, ஆறு அந்நீர் ஒலியால் - நீங்காத அந்நீரினொலியால், அன்னைவா என்று அழைத்து - தாயே வாவென்றழைத்து, தன் தேசு தானும் நகையால் - தனது வெள்ளொளியாகிய புன்முறுவலால், தழீஇ எதிர் ஏற்ப சென்றான் - தழுவி எதிர்கொள்ளச் சென்றருளினார்.

புன்னகையரும் புதலும் - கையாற் றழுவுதலோ டொக்குமென்பார். நகையாற்றழீஇ என்றார். இது தற்குறிப்பேற்றவணி. (உஎ)

கிட்டிப்பொருப்பைக்கிரியோடுகிரிகடாக்கி
முட்டிப்பொருதாலெனவேழமுழங்கிப்பாயப்
புட்டிற்புறத்தார்மறத்தார்கணைபூட்டுவில்லார்
வட்டித்துருமேறெனவார்த்துவளைந்துகொண்டார்.

(இ-ள்.) பொருப்பை கிட்டி - (தடாதகைப்பிராட்டியாரோடு சென்ற வீரர்கள்) திருக்கைலையை நெருங்கி, கிரியோடு கிரிகள் தாக்கி - மலைகளோடு மலைகள் தாக்கி, முட்டி பொருதால் என்ன - (ஒன்றோடொன்று) முட்டிப் போர்செய்தாற்போல, வேழ முழங்கி பாய - யானைகள் முழங்கி (ஒருபால்) பாய, புட்டில புறத்தார் - அம்பறாத்தூணிதாங்கிய முதுகினையுடையவரும், மறத்தார் - வீரத்தையுடையவரும், கணைபூட்டு வில்லார் - அம்பேறிட்ட வில்லினையுடையவருமாய், வட்டித்து - (வெல்லுவோமெனச்) சபதங்கூறி, உரும் ஏறு என - இடியேற்றைப்போல, ஆர்த்து வளைத்து கொண்டார் - வீரகோஷஞ்செய்து சூழ்ந்துகொண்டார்கள்.

புறத்தார், மறத்தார், வில்லார் என்னுங் குறிப்பு வினைமுற்றுகள் எச்சமாகி - வட்டித்து என்னும் வினையெச்சத்தின் முதனிலையைத் தனித்தனி கொண்டன (உஅ)

ஓடித்திருமாமலைகாவலரும்பரார்க்கு
நாடிப்பணிதற்கரிதாகியநந்திபாதங்
கூடிப்பணிந்தித்திறங்கூறலுங்கொற்றவேனந்
தேடிக்கிடையானுளந்தேர்ந்தனனந்தியெந்தை.

(இ-ள்.) திருமாமலை காவலர் ஓடி - பெரிய திருக்கயிலைமலை காப்போர் (சேனை முற்றுகை செய்ததை யுணர்ந்து) ஓடி, உம்பரார்க்கும - தேவர்களுக்கும், நாடி பணிதற்கு அரிதாகிய - காலந்தெரிந்து வணங்குதற்கரிய, நந்தி பாதம் கூடி பணிந்து - நந்திநாயனார் திருவடியை அடைந்து வணங்கி, இத்திறம் கூறலும் - இச்செய்தியைச்சொல்ல, எந்தை நந்தி - என் தந்தையாராகிய நந்திநாயனார், கொற்றம் ஏனம் - வெற்றியையுடைய பன்றிவடிவாகச்சென்ற திருமால், தேடி கிடையான் - தேடியுங் கிடைத்தற்கரியவனாய் நின்ற சிவபெருமான், உளந்தேர்ந்தனன் - திருவுள்ளக் குறிப்பை யறிந்தனர்.

உம்பரார் - மேலிடத்திலுள்ளவரென்று பொருள் உம்பர்-மேலிடம். அரிதாகிய என்னும்பெயரெச்சம் பாதம் என்னும் பெயரோடுமுடிந்தது. (உகூ)

வென்றிக்கணத்தைவிடுத்தான்கணமீதுபெய்த
குன்றிக்கணம்போற்கழல்கண்ணழல்கொப்புளிப்பச்
சென்றிக்கனையமொழியாள்பெருஞ்சேனையோடு
மொன்றிக்கடலுங்கடலும்பொருதொத்ததன்றே.

(இ-ள்.) வென்றி கணத்தை விடுத்தான் - வெற்றியையுடைய பூதகணங்களை ஏவினர், (அக்கணம்) கணம் மீது பெய்த குன்றி கணம் போல் - மேகத்தினிடத்து வைத்த குன்றிமணிகளின் கூட்டம்போல, கழல் கண் அழல் கொப்புளிப்ப சென்று - கழலும் கண்கள் கோபாக்கினியுமிழப்போய், கடலும் கடலும் பொருதது ஒத்தது - கடலும் கடலும் தம்முள் போர்செய்ததை யொப்ப, இக்கு அனைய மொழியாள் - கரும்பின் சுவையை யொத்த இனிய சொற்களையுடைய தடாதகைப்பிராட்டியாருடைய, பெரும் சேனையோடும் ஒன்றி - பெரிய சேனையோடுங் கலந்து (போர் செய்தது.)

ஒத்தது என்னும் ஒருமை வினைமுற்று வினையெச்சத்தின்மேல்நின்றது. பொருதது இடைநிலைபெற்றுவந்த தொழிற்பெயர். கணம் சாதியொருமை. உவமையும் பொருளும் ஒற்றுமையுண்மையால் உவமையின்றொழிலை பொருட்குங்கொள்க. ()

சூலங்கண்மழுப்படைதோமரநேமிபிண்டி
பாலங்கள்கழுக்கடைவாட்படைதண்டநாஞ்சி
லாலங்கவிழ்க்கின்றவயிற்படைவீசியூழிக்
காலங்கலிக்குங்கடல்போன்றகளமரார்ப்பு.

(இ-ள்.) சூலங்கள் - சூலாயுதங்களையும், மழுப்படை - மழுவாயுதங்களையும், தோமரம் - பெரிய ஈட்டிகளையும், நேமி - சக்கராயுதங்களையும், பிண்டி பாலங்கள் - எறியாயுதங்களையும், கழுக்கடை - சிறிய ஈட்டிகளையும், வாள் படை - வாளாயுதங்களையும், தண்டம் - தண்டங்களையும், நாஞ்சில் - கலப்பைகளையும், ஆலம் கவிழ்க்கின்ற அயில் படை - விஷத்தைச்சிந்தும் வேல்களையும், வீசி - (ஒருவர்மேலொருவர்) வீசி, களமர் ஆர்ப்பு - வீரர்கள் கோஷிக்கும் வீரகோஷம், ஊழிக் காலம் கலிக்கும் கடல்போன்ற - ஊழிக்காலத்தில் (நிலைபெயர்ந்து) ஒலிக்கும் கடலொலிபோன்றன.

கடல் தன் பொருளினின்று நீங்காது நிலைமறு தனக்கு வேறல்லாத பொருளோடு விடாது நிற்றலின் - விடாத ஆகுபெயர் (௬)

எறிகின்றனவோச்சுவவெய்வனவாதியாகச்
செறிகின்றனபல்படைசெக்கிறப்புண்ணீர்மூழ்கிப்
பறிகின்றனவும்பிழைக்கின்றனவும்பட்டுத்தாக்கி
முறிகின்றனவுமுயன்றார்வினைப்போகமொத்த

(இ-ள்.) எறிகின்றன - எறிகின்றனவும், ஓச்சுவ - ஓச்சுவனவும், எய்வன - எய்வனவும், ஆதி ஆக செறிகின்றன பல் படை - முதலாகப்பொருந்திய பல ஆயுதங்கள், செக்கர் நிறம் புண் நீர் மூழ்கி - செவ்விய நிறத்தையுடைய உதிரநீரில் மூழ்கி, பறிகின்றனவும் - அப்புறப்படுவனவும், பிழைக்கின்றனவும் - மேலே தாக்காது போகின்றனவும், பட்டு தாக்கி முறிகின்றனவும் - மேலே பட்டுத்தாக்கி (இடையில்) முறிகின்றனவுமாயிருத்தல், வினை முயன்றார் போகம் ஒத்த - இருவினையில் முயன்றோர்க்கு வரும் போகங்களை யொத்தன.*

முற்பிறப்பிற்செய்த நல்வினைக்கீடாகப் போகம் சிலகாள் நிற்றலும் தீவினைக்கீடாகவரு நன்மை கழிதலும் நெறியாதலால், ஆயுதங்கள் முயன்றூர் வினைப்போகம் ஒத்த என்றூர். இருத்தல் - சொல்லெச்சம். எறிகின்றன, ஒச்சுவ, எய்வன வினையாலணையும் பெயர். செறிகின்றன - வினைமுற்றுப் பெயரெச்சமாய் நின்றது.

தெரிசிக்கவந்தசிலதேவர்சிறைப்புளூர்தி
வெருவிப்பறந்தவொழிந்தோர்விலங்கூர்திமானங்
கருவிப்படையாற்சிதைபட்டனகாலனூர்தி
குருதிப்புனலுக்கதுகொற்றவையுண்டதென்ன.

(இ-ள்.) தெரிசிக்க வந்த சில தேவர் - (போர் நிகழும்போது அங்கு) தெரிசனஞ்செய்யவந்த (தேவர்களுள்) சில தேவர்களுடைய, சிறை புள் ஊர்தி வெருவி பறந்த - கருடன் முதலிய பறவையூர்திகள் அஞ்சிப்பறந்தன, ஒழிந்தோர் விலங்கு ஊர்தி - அவரொழிந்த மற்றைத்தேவர்களுடைய மிருகமாகிய வாகனங்களும், மானம் - விமானங்களும், கருவி படையால் சிதை பட்டன - ஆயுதங்களால் உருவழிந்தன, கொற்றவை உண்டது என்ன - (முன்னங்) காளி உபிருண்ட மகிடாசுரன் உதிரங் கக்கியதுபோல, காலன் ஊர்தி - எமனுடைய வாகனமாகிய எருமைக்கடா, குருதி புனல் உக்கது - உதிரநீரைக்கக்கியது.

விலங்கூர்தி - ஐராவத யானை முதலிய மிருகங்கள். ஊர்தி - நடத்தப்படும் பொருள்மேனிற்றலால், செயப்படுபொருளில் வந்த தொழிற்பெயர். (கூசு)

பொருகின்றதுகண்டுவிச்சாதரர்போகம்வீடு
தருகின்றவனைத்தொழவானெறிசார்ந்துநேரே
வருகின்றவர்வேறுவழிக்கொடுபோவரன்புக்
குருகின்றளிர்மெல்லடியாரொடுமேற்றமஞ்சா.

(இ-ள்.) போகம் வீடு தருகின்றவனை தொழ - போகத்தையும் மோக்ஷத்தையும் (ஆன்மகோடிகளுக்குத்) தருகின்றவனாகிய சிவபெருமானை வணங்க, வான் நெறி நேரே சார்ந்து வருகின்றவர் விச்சாதரர் - ஆகாயமார்க்கமாக நேரே திருக்கயிலைமலையையடைய வருகின்ற வித்தியாதரர்கள், பொருகின்றது கண்டு - (அங்குப்) போர் செய்தலைப்பார்த்து, ஏற்றம் அஞ்சா - (தங்களுக்கு நேரிடும்) இடையூற்றுக்கஞ்சி, அன்புக்கு உருகு இன் தளிர் மெல் அடியாரொடும் - (தம்மேலன்பு கொண்ட) அன்பால் மனமுருகும் இனியதளிர்போன்ற, மெல்லியபாதங்களையுடைய ஸ்திரீகளோடும், வேறு வழிக்கொடு போவர் - வேறு வழிக்கொண்டு அத்திருக்கைலைக்குச் செல்வார்கள்.

இருவினையொப்புவந்தகூடப போகத்தையும் மலபரிபாகத்தில் மோக்ஷத்தையுந் தருவோனாதலால், போகம் வீடு தருகின்றவனென்றூர். பொருகின்றது - நிகழ்கால விடைநிலை பெற்றுவந்த தொழிற்பெயர். வருகின்றவர் என்னும் வினைமுற்று பெயரெச்சத்தில் வந்தது. (கூஎ)

திங்கட்படைசெங்கதிரோன்படைசீற்றமேற்ற
வங்கிப்படைதீம்புனலான்படைகாரசிங்க
துங்கப்படைசிம்புணெடும்படைசூறைச்செல்வன்
வெங்கட்படைபன்னகவெம்படைமாறிவிட்டார்.

(இ-ள்.) திங்கள் படை - சந்திராஸ்திரத்துக்கு, செம் கதிரோன் படை - சூரியாஸ்திரமும், சீற்றம் ஏற்ற அங்கி படை - கோபமிக்க ஆக்கினேயாஸ்திரத்துக்கு,

தீம்புனலான் படை-இனிய வாருணாஸ்திரமும், துங்கம் நாரசிங்கம் படை - உயர்ந்த நரசிம்மாஸ்திரத்துக்கு, நெடும் சீபுள் படை - நெடிய கருடாஸ்திரமும், வெம் கண் குறை செல்வன் படை - கொடிய முனையையுடைய வாயவியாஸ்திரத்துக்கு, வெம் பன்னகம் படை - கொடிய சர்ப்பாஸ்திரமும், மாறி விட்டார் - (ஒருவர்மேலொருவர்) மாறித் தொடுத்தார்கள். (கூ)

கொட்புற்றமராடுமிக்கொள்கையர் தம்மினந்தி
நட்புற்றவர்கைப்படைதூட்பட ஞானமூர்த்தி
பெட்புற்றருளவருமெங்கள் பிராட்டி வெய்ய
கட்புற்றரவிற்கணைமாரிகடூற்றி நின்றாள்.

(இ-ள்.) கொட்புற்ற அமராடும் இக் கொள்கையர் தம்மில் - (இவ்வாறு இடசாரி வலசாரியாகச்) சுழன்று போர்செய்யும் இக்கொள்கையையுடைய வீரர் கூட்டத்துள், நந்தி நட்புற்றவர் - நந்திநாயனாருடைய சேனைவீரர்கள், கை படை தூள் பட - கையிலேந்திய ஆயுதங்கள் தூளாக, ஞானமூர்த்தி பெட்புற்றருள வரும் - சிவபெருமான் விருப்பங்கூர வந்தருளும், எங்கள் பிராட்டி - எங்கள் முதல்வியாராகிய தடாதகைப்பிராட்டியார், புற்று வெய்ய கண் அரவின் கணை மாரிகள் - புற்றினின்று (விஷத்தீ கொப்புளிக்கும்) கொடிய கண்களையுடைய சர்ப்பங்கள் வெளிப்படுதல்போலத் (தூணியினின்று வாங்கி) சரவருஷங்களை, தூற்றி நின்றாள் - சொரிந்து நின்றார்.

கோடுமை என்னும் பண்பீறம் கற்றயலுகரமுங்கெட்டுப் பெயர்விகுதி யேற்றுக் கொட்பு என நின்றது. பெட்பு என்பதற்குப் பகுதி - பேணென்பதன் விகாரமெனக் கொள்க. (கல)

கையிற்படையற்றனர்கற்படைதொட்டுவீரர்
மெய்யிற்படுகென்றனர்டு குழுமைவீரககன்னி
பொய்யிற்படுநெஞ்சுடையார்தவம்போலமாய
செய்யிற்படுவச்சிரவேலைநிமிர்த்துவீசி.

(இ-ள்.) கையில் படை அற்றனர் - கையிலேந்திய ஆயுதங்கள் தூள்படநின்ற சிவகண வீரர்கள், வீரர் மெய்யில் படுக என்று - (தடாதகைப்பிராட்டியார்) சேனைவீரர்கள் உடம்பிற்படுக என்று, கற்படை தொட்டு விடுக்கு முன் - கற்களாகிய ஆயுதங்களைத் தொட்டு வீசுமுன், பொய்யில் படு நெஞ்சு உடையார் தவம் போல மாய - பொய்க்கேறியிற் றலைப்பட்ட மனமுடையார் (மேற்கொண்ட) தவத்தைப் போல (அக்கற்படைகள்) சிதையும்படி, வீரக்கன்னி - அத்தடாதகைப்பிராட்டியார், செய்யில் படு வச்சிர வேலை - செய்பூசிய வச்சிராயுதத்தை, நிமிர்த்து வீசி - ஓங்கிவீசி.

தண்டப்படைவேதுணிந்தக்கணவீரர்தம்மைத்
தண்டங்கொடுதாக்கினன்சாய்ந்தவர்சாம்பிப்போனா
ரண்டங்கள்சராசரம்யாவையுந்தாமேயாகிக்
கொண்டெங்குநின்றவலிகூறவராயபிற்றோ.

(இ-ள்.) தண்டம் படவே துணித்து - துண்டு துண்டாக (அவற்றை) அறுத்து, அக் கண வீரர் தம்மை - அந்தச் சிவகண வீரர்களை, தண்டம் கொடு தாக்கினள் - தண்டாயுதத்தா லடித்தனர், அவர் சாய்ந்து சாம்பி போனார் - அவ்வீரர்கள் புறங்கொடுத்துச் சோர்ந்து போனார்கள், அண்டங்கள் சராசரம் யாவையும் - அண்டம்

களையும் (அவற்றிலுள்ள) எல்லாச் சராசரங்களையும், தானே ஆக்கிக் கொண்டு தானே நிறுத்திக் கொண்டு, என்றும் நின்றான் வலி - (அவனது) என்றும் நிறைந்திருக்கும் சைதன்னியனது வன்மை, கூற வரம்பிற்றோ - (ஒருவர்) எடுத்துக்கூற அளவுபடுமோ. (படாதென்றபடி.)

முன்னர்த்தொடர்மொழியை முடித்தற்குப் பின்னர் இதனை எடுத்துக்கூறலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (க0)

படையற்றவிமானமும்பற்றறவற்றச்சுற்றுந்
தொடையற்றிகன்மூண்டெழுதோள்வலியற்றுச்செற்ற
மிடையற்றுவீரநகையற்றடலேறுபோது
நடையற்றடைவார்நிலைகண்டனனந்தியண்ணல்

(இ-ள்.) படை அற்று - (தாங்களேந்திய) ஆயுதங்கள் துண்டுபட்டும், விமானமும் பற்று அற அற்று - (ஏறிவந்த) விமானங்களும் சிறிதுமின்றித் துகள்பட்டும், சுற்றும் தொடை அற்று - (போர்செய்தற்கு மிலைந்த) தும்பைமாலை நீங்கியும், மூண்டு இகல் எழு தோள் வலி அற்று - மூண்டு போர்செழும் தோளாண்மை சிந்தியும், செற்றம் இடை அற்று - (இயற்கையாயுள்ள) கோபம் இடையிலொழிந்தும், வீர நகை அற்று - வீரநகை யொழிந்தும், அடல் ஏறு போது நடை அற்று - கொலைத்தொழிலையுடைய சிங்க ஏறுபோலுமுள்ள பெருமித நடை யொழிந்தும், அடை வார் நிலை - வருகின்ற (தமது சேனைவீரர்கள்) நிலைமையை, நந்தி அண்ணல் - நந்திநாயனார், கண்டனன் - பார்த்தருளினார்.

என்றும் கோபமே பொருளாயுள்ள வீரரென்பார். செற்றம் இடையற்றென்றார். படை முதலிய அஃறிணைப்பெயர்கள் அற்று என்னும் உயர்திணைப் பயனிலை பெற்று நிற்றலால் திணைவழுவமைதி. (கக)

உடையானடிதாழ்ந்திவையோதலுமோதநீத்தச்
சடையானிளவாணகைசெய்துதருமச்செங்கண்
விடையான்சிலையாளிகல்வென்றிவிளைக்குந்தெய்வப்
படையானெழுந்தானமராடியபாரிற்சென்றான்.

(இ-ள்.) உடையான் அடி தாழ்ந்து - தம்மை ஆளாகவுடைய சிவபெருமான் திருவடியை வணங்கி, இவை ஓதலும் - இச்செய்திகளை யெடுத்துக்கூற, ஓதம் நீத்தம் சடையான் - அலைகளையுடைய கங்கையையணிந்த சடாபாரத்தையுடைய அச்சிவபெருமான், இள் வாள் நகை செய்து - புன்முறுவல் செய்து, செம் கண் தரும விடையான் - சிவந்த கண்களையுடைய தருமவிடையை யுடையவனும், சிலையான் - பினாகமென்னும் வில்லினால், இகல் வென்றி விளைக்கும் - போரில் வெற்றியை விளைவிக்கும், தெய்வப் படையான் - தெய்வத்தன்மையையுடைய பாசுபதாஸ்திரத்தையுடையவனும் ஆகிய அச்சிவபெருமான், எழுந்தான் - போர்க்கெழுந்து, அமர் ஆடிய பாரில் சென்றான் - போர்க்களத்திற் சென்றருளினான். (கஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மேவியாகவப்பாரிடைப்பாரிடவீரரையமராடி
யோவிலாவலிகவர்ந்துமன்றினியுருத்தெயவொதிர்ந்தாலுந்
தாவிலாவலிகவரவுமடங்கலின்றனிப்பிணுவெனைநிற்குந்
தேவியார்திருவுருவமுஞ்சேவகச்செய்கையுமெதிர்கண்டான்,

(இ-ள்.) மேவி - அடைந்தருளி, ஆகவம் பாரிடை - போர்க்களத்தில், பாரிட வீரரை அமராடி - பூதகண வீரர்களோடு போர்செய்து, ஓவிலா வலி சோர்ந்தும் அன்று (அச்சிவகண வீரர்களினின்று) நீங்காத வீரங்கள் முற்றுங் கொள்ளைகொண்டதுமல்லாமல், இனி உருத்து எவர் எதிர்க்காதும் - இனிப் போர்க்குக் கோபித்து யாரெதிர்ப்பினும், தாவிலா வலியும் கொ - (அவர்களது) கெடாத வீரத்தையுங் கொள்ளைகொள்ள, தனி பிணு மடங்கலின் என நிற்கும் - ஒப்பில்லாத பெண்சிங்கத்தைப்போல நின்றருளிய, தேவியார் திருவுருவமும் - (தனது) தேவியாருடைய திருவுருவப் பொலிவையும், செகச் செய்கையும் எதிர்கண்டான் நடத்தியருளிய வீரச்செய்தியின் மிகுதியையும் பார்த்தருளினான்.

கொவும் என்றதின் இறுதியினின்ற உம்மையை வலியென்பதனோடு கூட்டுக.

ஒற்றைவார்கழற்சரணமும்பாம்பசைத்துடுத்தவெம்புலித்தோலுங்
கொற்றவாண்மழுக்கரமும்வெண்ணீறணிகோலமுந்நூன்மார்புங்
கற்றைவேணியுந்தன்னையேநோக்கியகருணைசெய்திருநோக்கும்
பெற்றதன்வலப்பாதியைத்தடாதகைப்பிராட்டியுமெதிர்கண்டாள்.

(இ-ள்.) வார் ஒற்றை கழல் சரணமும் - நீண்ட (வெற்றிமிக்க) ஒரு வீரகண்டை கட்டிய திருவடியும், பாம்பு அசைத்து உடுத்த வெம் புலித்தோலும - சர்ப்பக்கச்சாலிறுக உடுத்திய கொடிய புலித்தோலாடையும், கொற்றம் மழு வாள் கரமும் - வெற்றியையுடைய மழுவாயுதத்தையேந்திய திருக்கரமும், வெண் நீறு அணி கோலம் - வெள்ளிய திருநீற்றையணிந்த திருக்கோலத்தையுடைய, முந்நூல் மார்பும் - உபவீதத்தையணிந்த திருமார்பமும், கற்றை வேணியும் - நெருங்கிய சடாமுடியும், தன்னையே நோக்கிய - தம்மையே என்றும் நோக்குகின்ற, கருணைசெய் திரு நோக்கும் - கிருபைசெய்யுந் திருக்கண்களும், பெற்ற தன் வலபாதியை - (ஆகிய இவைகளை) உடைய தமது வலபாகமாகிய சிவபெருமானை, தடாதகைப்பிராட்டியும் எதிர் கண்டாள் - தடாதகைபபிராட்டியாரும் எதிரே பார்த்தருளினார்.

உமையவள் திருவுருவம் இடப்பாகமாதலின் - சிவபெருமான் திருவுருவம் வலப்பாகமென்றார்.

கண்டவெல்லையிலொருமுலைமறைந்ததுகருத்திலுண்மடனச்சங்
கொண்டமைந்திடக்குனிதரமலர்ந்தபூங்கொம்பர்போலொசிந்தொல்கிப்
பண்டையன்புவந்திறைகொளக்கருங்குழற்பாரமும்பிடர்தாழக்
கெண்டையுண்கணும்புறவடிநோக்கமண்ணினைத்துமின்னெனநின்றாள்.

(இ-ள்.) கண்ட எல்லையில் - (சிவபெருமானைக்) கண்ட வப்பொழுதே, ஒரு முலை மறைந்தது - ஒரு தனம் மறைதலால், கருத்தில் நாண் மடன் அச்சம் கொண்டமைந்திட - மனத்தில் நாணமும் மடமும் அச்சமுங் குடிகொள்ள, குனிதரமலர்ந்த பூம் கொம்பர் போல் ஒசிந்து ஒல்கி - வளையும்படி மலர்ந்த பூங்கொம்புபோல் ஒசிந்து துவண்டு, பண்டை அன்பு வந்து இறைகொள - (சிவபெருமானிடத்துத்) தான் முன்புகொண்ட அன்புவந்து (ஒருபால்) குடிகொள்ளவும், கரும் குழல் பாரமும் பிடர் தாழ - கரிய அளகபாரமும் பிடரியிற்சரிந்து தாழவும், கெண்டை உண் கணும் புறவடி நோக்க - சேற்கெண்டையை வென்ற கண்களும் புறவடியை நோக்கி நிற்கவும், மண் கிளைத்து மின் என நின்றாள் - நிலத்தைத் திருவிரலாற்கிளறி மின்னல்போல நின்றருளினார்.

மறைந்தது என்னும் வினைமுற்றினின்றுபிரிந்த முதனிலை தொழிற்பெயராய் மூன்றனுருபேற்றது. (௪௧)

நின்றமென்கொடிக்கல்விசும்பிடையாணிகழ்த்தியதிருமாற்ற
மன்றறிந்தமூதறிவனுஞ்சுமதிசீறடிபணிந்தனனாய்க்
கொன்றையஞ்சடைக்குழகனேநின்மணக்குழகனென்றனுமன்பு
துன்றநின்றவடபார்க்கருட்சிவபரஞ்சோதிமற்றிதுகூறும்.

(இ-ள்.) நின்ற மென் கொடிக்கு - இவ்வாறு நின்றருளிய மெல்லிய பூங் கொம்பையொத்த பிராட்டியாருக்கு, அல் விசும்பு இடை அறாது அரன் நிகழ்த்திய திருமாற்றம் - அகாசத்தில் முன்னொளிய சிவபெருமான் அருள் செய்த திருவார்த்தையை, அறிந்த மூது அறிவனும் சுமதி - அறிந்த பேரறிவினையுடைய சுமதி என்பவன், சீறு அடி பணிந்து - பிராட்டியாருடைய) சிறிய திருவடிகளை வணங்கி, அன்னாய் இக்கொன்றையஞ் சடை குழகன் ஏ - தாயே இங்குநின்ற கொன்றைமாலையையணிந்த சடாமுடியையுடைய பெருமானே, நின் மணக் குழகன் என்றனும் - நினது மணவாளனென்று கூற, அன்பு துன்ற நின்றவள் பார்த்து - அன்பு மிகவுற நின்றருளிய அப்பிராட்டியாரைப்பார்த்து, அருள் சிவபரஞ்சோதி - கருணை வடிவமாகிய அச்சிவபெருமான், இது கூறும் - இது சொல்லுகின்றான்.

குழகன் - பேரழகன். (௪௨)

என்றுதொட்டுநீதிசையின்மேற்சயங்குறித்தெழுந்துபோந்தனையாமு
மன்றுதொட்டுநமதுரைவிட்டுனைவிடாதடுத்துவந்தனமுனைத்
தொன்றுதொட்டநான்மறைபுரைவழிவருஞ்சோமவாரநல்லோரை
நன்றுதொட்டநாண்மணஞ்செயவருதுநின்னகர்க்குநீயேகென்றான்.

(இ-ள்.) என்று தொட்டு - எக்காலந்தொட்டு, திசையின் மேல் சயம் குறித்து - எட்டுத்திசைகளிலுஞ்சென்று போர்செய்து வெற்றிபெறக்கருதி, நீ எழுந்து போந்தனை - நீ எழுந்து வந்தாயோ, அன்று தொட்டு நம் மதுரை விட்டு - அக்காலந் தொட்டு நமது மதுரையைவிட்டு, உனை விடாது யாமும் அடுத்து வந்தனம் - உன்னைச் சற்றும் பிரியாது நாமும் அடுத்து வந்தோம், தொன்று தொட்ட நான் மறை உரை வழி - அநாதிதொட்டுள்ள நான்கு வேதங்கள் கூறிய முறைப்படி, வரு சோமவாரத்து - வருகின்றசோமவாரத்தில், நன்று ஓரை தொட்ட நாள் - நல்ல முகூர்த்தங்கூடிய காலத்தில், உன்னை மணம் செய வருதும் - உன்னைத் திருக்கலியாணஞ் செய்ய வருகின்றோம், நின் நகர்க்கு நீ ஏகு என்றான் - உன்னுடைய நகரமாகிய மதுரைக்குச் செல்லாயென்று திருவாய்மலர்ந்தருளினார்.

சத்தனுயுள்ளதமக்குத் தாதான்மிய சத்தியாய் நிற்றலின் உனை விடாதடுத்து வந்தனம் என்றார். (௪௩)

என்றநாதன்மேலன்பையுமுயிரையுமிருத்தியாயஞ்சூழக்
குன்றமன்னதேர்மேற்கொடுதூரிடங்குறைகடலென்வார்ப்ப
நின்றதெய்வமாலையரைகளுபுண்ணியநீத்தமூழ்ந்தெழுந்தென
மன்றன்மாமதுராபுரியடைந்தனண்மதிக்குலவிளக்கன்னாள்.

(இ-ள்.) என்ற நாதன் மேல் - என்றருளிய சிவபெருமான்மேல், மதிக் குல விளக்கு அன்னாள் - சந்திரகுலத்துக்கு ஓர் தீபம்போன்ற பிராட்டியார், அன்பையும் உயிரையும் இருத்தி - அன்பையுந் (தமது) உயிரையும் நிலைபெற வைத்து, ஆயம் சூழ - மெய்க்காவலராகிய தோழிமார் கூட்டம் புடைசூழ, குன்றம் அன்ன தேர்

கோதைபொரும்பரிசந்தனக்குப்பைகளைந்தனர்வீசுவார்
சீதமென்பனிநீர்கடோய்ச்சிந்தினபூழியடக்குவார்
மாதருமைந்தருமிறைமகண்மன்றன்மகிழ்ச்சிமயக்கினாற்
காதணிகுழைதொடிகண்டிகைகழல்வனதெரிகிலர்தொழில்செய்வார்.

(இ-ள்.) பரி கோதை சந்தனம் குப்பை களைந்தனர் - தம்மினின்று நீங்கிய பூமாலைகளும் சந்தனங்களுமாகிய குப்பைகளைக்களைந்து, வீசுவார் - (புறத்திற்கொண்டுபோய்) எறிவார், சீதம் மென்பனி நீர்கள் தோய் - குளிர்ந்த மெல்லிய பனிநீர்களைத்தூவி, சிந்தின பூழி அடக்குவார் - சிந்தி மேலெழும் புழுதிகளை யடக்குவார்கள், மாதரும் மைந்தரும் - பெண்டிரும் ஆடவரும், இறை மகள் மன்றல் மகிழ்ச்சி மயக்கினால் - பிராட்டியார் திருமணத்தின்மேலெழுந்த களிப்பு மயக்கத்தால், காது அணி குழை - காதிலணிந்த குண்டலங்களும், தொடி - வளையல்களும், கண்டிகை - கண்டிகைகளும், கழல்வன தெரிகிலர் - பூட்டுவிட்டுக் கழலுதலைத் தெரியாராகி, தொழில் செய்வார் - அலங்கரித்தலைச் செய்யத்தொடங்கினார்கள். (௩௯)

மங்கலமென்றெனவினவுவார்வருமதிநாளெனவுரைசெய்வார்
தங்களையொல்லைதழீஇக்கொள்வார்தாங்கருமோகைதலைக்கொள்வார்
திங்களினெல்லையுமாறுநாளாறுகமென்றுசெலுத்துவார்
நங்கையருங்கடிகாணவோதுடித்தனதோள்கணமக்கென்பார்.

(இ-ள்.) மங்கலம் என்று என வினவுவார் - திருமணம் எப்பொழுதென்று (ஒருவரையொருவர்) வினவுவார்கள், வருமதி நாள் என உரைசெய்வார் தங்களை - வரும் சோமவாரதினமென்று கூறுவார்களை, ஒல்லை தழீஇ கொள்வார் - விரைந்து தழுவிக்கொள்வார்கள், தாங்கு அரும் ஓகை தலைக்கொள்வார் - தாங்குதற்கரிய மகிழ்ச்சிமீக்கொள்வார்கள், திங்களின் எல்லையும் ஆறு நாள் - சோமவாரதினம் வரும் அளவும் ஆறுநாள் (ஆயினும்) ஆறு உகம் என்று செலுத்துவார் - (செல்லும் அவ்வாறு நாளும்) ஆறுயுகம்போலுள்ளதென்று (கருதி) கழிப்பார்கள், நங்கை அரும் கடி காணவோ - பிராட்டியாருடைய காணுதற்கரிய திருக்கலியாணத்தைக் கண்டு களிக்கவோ, நமக்கு தோள்கள் துடித்தன என்பார் - நமக்குத் தோள்கள் துடித்தனவென்று கூறுவார்கள். (௪௦)

பித்திகைவெள்ளைபுதுக்குவார்பெட்புறுவார்களும்பெட்புறச்
சித்திரபந்திநிறுத்துவார்தெற்றிகள்குங்குமநீவுவார்
வித்தியபாலிகைமென்றழைவிரிதலைநீர்நிறைபொற்குடம்
பத்தியின்வேதிநிரப்புவார்தோரணவாயில்பரப்புவார்.

(இ-ள்.) பித்திகை - சுவர்த்தலங்களை, வெள்ளை புதுக்குவார் - சங்குச் சாந்தினால் புதுக்குவார்கள், பெட்புறுவார்களும் பெட்பு உற - (யாவராலும்விரும்பப்பட்ட) சிற்பத்தொழில் வல்லோரும் விரும்ப, சித்திர பந்தி நிறுத்துவார் - சித்திரங்களை வரிசையாக அமைப்பார்கள், தெற்றிகள் குங்குமம் நீவுவார் - திண்ணைகளின் வெளிப்புறங்களில் குங்குமக்குழம்புகளைப் பூசுவார்கள், வேதி - (பூசிய அத்திண்ணைகளில், வித்திய பாலிகை - முளையெழும்பிய பாலிகைகளையும், மென் தழை விரி தலை நீர் நிறை பொன் குடம் - மெல்லிய தழைவிரிந்த தலையையுடைய நீர்நிறைந்த பொன்னாலாகிய பூரணகும்பங்களையும், பத்தியின் நிரப்புவார் - வரிசைபட நிரப்புவார்கள், தோரண வாயில் பரப்புவார் - தோரணங்களை வாயிலிற்கட்டுவார்கள். (௪௧)

நீளிடைமணிமறுகெங்கணுநெடுநடைக்காவணநாட்டுவார்
பாளைகொள்கமுகுகழைபழுக்குலைவாழையொழுக்குவார்
கோளிறைகொண்டெனவாடிகள்கோத்தணிவார்மிசைகொடிநிரை
வாளரியெழுபரியடிபடமத்திகைநிரையெனவைப்பரால்.

(இ-ள்.) நீள் இடை மணி மறுகு எங்கணும் - அகன்ற இடங்களையுடைய அழகிய வீதிகளெங்கும், நெடு நடை காவணம் நாட்டுவார் - நெடிய நடைப்பந்தல்களைப் போடுவார்கள், பாளை கொள் கமுகு - பாளைகள் நிறைந்த கமுகமரங்களையும், கழை - கணுமுதிர்ந்த கரும்புகளையும், பழுக் குலை வாழை - பழுத்தலையுடைய குலைகளையுடைய வாழைமரங்களையும், ஒழுக்குவார் - வரிசைப்படக்கட்டுவார்கள், கோள் இறை கொண்டது என்ன - சூரியன்முதலிய கோள்கள் குடிகொண்டிருப்பதுபோல, ஆடிகள் கோத்து அணி வார் - கண்ணாடிகளைக் கோத்து (வரிசைபடக்) கட்டுவார்கள், மிசை கொடி நிரை - மேலே கொடிகள் வரிசையாக, வாள் அரி எழு பரி அடிபட - ஒளியையுடைய சூரியனுடைய எழுகுதிரைகள் மேலும் அடிபடும்படி, மத்திகை நிரை என வைப்பர் - சம்மட்டியின் வரிசைகள்போலக் கட்டுவார்கள். ([illegible])

பூவொடுதண்பனிசிந்துவார்பொரியொடுபொற்சுண்ணம்வீசுவார்
பாவைவிளக்குநிறுத்துவார்பைந்தொடைபந்தரினாற்றுவா
ராவணமென்னவயிர்ப்புறவணிமறுகெங்கணுமரதனக்
கோவையுமரகதமாலையுங்கோப்பமையாரமுந்தூக்குவார்.

(இ-ள்.) பூ ஒடு தண் பனி சிந்துவார் - மலர்களோடு தண்ணிய பனிநீரைச் சிந்துவார்கள், பொரி ஒடு பொன் சுண்ணம் வீசுவார் - பொரிகளோடு பொன்னிறமமைந்த சந்தப்பொடிகளை வாரியிறைப்பார்கள், பாவை விளக்கு நிறுத்துவார் - பாவைவிளக்குத் தீபங்களை வரிசைபடவைப்பார்கள், பைந் தொடை - பசிய மலர் மாலைகளை, பந்தரில் நாற்றுவார் - பந்தல்களில் தொங்கக் கட்டுவார்கள், ஆவணம் என்ன அயிர்ப்பு உற - கடைவீதியென்று (கண்டோர் யாவரும்) ஐயங்கொள்ள, அணி மறுகு எங்கணும் - அழகிய வீதிகளெங்கும், அரதனக் கோவையும் - இரத்தினக்கோவைகளையும், மரகதமாலையும் - மரகதத்தாற்புனைந்த மாலைகளையும், கோப்பு அமை ஆரமும் - கோவையாக வமைந்த முத்தாரங்களையும், தூக்குவார் - தொங்கக் கட்டுவார்கள். ([illegible])

அடுகரிசிந்துரமப்புவாரழன்மணியோடைமிலைச்சுவார்
கடுநடையிவுளிகழுத்தணிகாலணிகலனந்திருத்துவார்
சுடர்விடுதேர்பரிபூட்டுவார்தொடையொடுகவரிகடூக்குவார்
வடுவறுபொற்கலசமணிமங்கலதீபமியற்றுவார்.

(இ-ள்.) அடு கரி சிந்துரம் அப்புவார் - (பகைவரைக்) கொல்லும் யானையின் (நெற்றியில்) சிந்தூரம் பூசுவார்கள், அழல் மணி ஓடை மிலைச்சுவார் - நெருப்பைப் போல ஒளிவீசும் இரத்தினங்கள்பதித்த பட்டங்களைக் கட்டுவார்கள், கடு நடை இவுளி - விரைந்து செல்லும் நடையையுடைய குதிரைகளுக்கு, கழுத்தணி காலணி கலனம் திருத்துவார் - கழுத்தணிகளையுங் காலணிகளையுஞ் சேணத்தையும் ஒழுங்குபட அணிவார்கள், சுடர் விடு தேர் பரி பூட்டுவார் - ஒளிவீசுந் தேரில் குதிரைகளைப் பூட்டுவார்கள், தொடை ஒடு - மாலைகளையும், கவரிகள் - சாமரைகளையும், தூக்குவார் - (அத்தேர்களில்) தொங்கக் கட்டுவார்கள், வடு அறு பொன் கலசம் - குற்

ர்க்கிய பிராட்டியாரை வணங்குவார்கள், கடி மணம் எய்து களிப்பினை - விளக்க மமைந்த திருமணம் நிகழும் சந்தோஷத்தால், யாழ் இன் இசையோடு பாடுவார் - வீணையிலெழுந்த இனிய இசையோடு (வேறுபடாமற்) பாடுவார்கள், ஈந்தன துகில் விரித்து ஏந்துவார் - (அப்போது) கொடுக்கும் பொருளை வஸ்திரம் விரித்து ஏந்துவார்கள், சென்னியின் மீது கொண்டு ஆடுவார் - சிரசின்மேற்கொண்டு ஆடுவார்கள், தேறலை உண்டு செருக்குவார் - மதுவையுண்டு களிப்பார்கள்.

கிளைகெழு பாணொடு என்பதற்கு உரிமைச் சுற்றமாகவமைந்த தத்தமக்குரிய பாணர்களோடு எனப்பொருள்கொள்ளுதலு மொன்று.

மிதுனராசி பாடுதற்றொழிலுடையாள். அதனைக் கூர்மபுராணம் அகத்தியன் இராவணன்மரபுரைத்த அத்தியாயத்தில் - "பாழியந்தடந்தோண் மதுவுடன் சூழ்ந்த பலகிளைப்பரப்புடனரக்கன், மாழைமென்னோக்கிப் புலோமசைகணவன் மாநகர்தனதடிப்படுத்தி, வீழியங்கனிவா யியக்கியரமரர் கின்னரர்மிதுனம்வீற்றிருக்கும், சூழ்சுடர்ப்பரிதி போக்கறிவந்த கயிலையைத்துனைவின்வந்தடைந்தான்." என வருஞ் செய்யுளாலுணர்க. (௩௭)

மன்னவர்மகளிருமறையவர்மகளிரும்வந்துபொன்மாலையைத்
துன்னினர்சோபனம்வினவுவார்தோகைதன்மணவணிநோக்குவார்
கன்னிதனேவலர்வீசியகாசறைகர்ப்புரவாசமென்
பொன்னறுங்கலவையின்மெய்யெலாம்புதைபடவளனொடும்போவரால்.

(இ-ள்.) மன்னவர் மகளிரும் - அரசர்மகளிரும், மறையவர் மகளிரும் அந்தணர்மகளிரும், வந்து பொன் மாலையை துன்னினர் - வந்து காஞ்சனமாலையடைந்து, சோபனம் வினவுவார் - திருக்கல்யாணமகோற்சவத்தை வினவுவார்கள், தோகை தன் மணவணி நோக்குவார் - பிராட்டியாருடைய திருமணக்கோலங்களைப்பார்த்துக் களிகூருவார்கள், கன்னி தன் ஏவலர் வீசிய காசறை - அப்பிராட்டியாரேவல்செய்வோர் வீசியமயிர்ச்சாந்தினாலும், கர்ப்புர வாசம் மெல் பொன் நறுங்கலவையின் - பச்சைக்கர்ப்பூரவாசங்கலந்த மெல்லிய பொன்னிறமுள்ள நறியகலவைகளாலும், மெய் எல்லாம புதைபட - தமதுசரீரமெல்லாம் மறைபட, வளனொடும் போவர் - அவ்வளப்பத்தோடும் (தத்தம்மனைகளுக்குப்) போவார்கள்.

அங்கனகஞ்செய்தசும்பினவாடைபொதிந்தனதோடவிழ்
தொங்கல்வளைந்தனமங்கையர்துள்ளியகவரியினுள்ளன
கங்கையும்வாணியும்யமுனையுங்காவிரியும்பலதுறைதொறு
மங்கலதூரியமார்ப்பனமதமலைமேலனவருவன.

(இ-ள்.) கங்கையும் - கங்காதீர்த்தமும், வாணியும் - சரஸ்வதி தீர்த்தமும், யமுனையும் - யமுனாதீர்த்தமும், காவிரியும் - காவிரிதீர்த்தமும், பலதுறை தொறும் - பலதுறைகளிலுமிருந்து, அம் கனகம் செய் தசும்பின - அழகியபொன்னாற்செய்யப்பட்ட குடங்களில் நிறைக்கப்பட்டனவும், ஆடை பொதிந்தன - (அவற்றின்மேல்) வஸ்திரங்களால் பொதியப்பட்டனவும், தோடு அவிழ் தொங்கல் வளைந்தன - இதழவிழ்ந்த பூமாலைகளால் வளைந்தணியப்பட்டனவும், மங்கையர் துள்ளிய கவரியின் உள்ளன-பெண்கள் வீசும் கவரியினுள் அடங்கினவும், மதமலைமேலன-மதத்தையுடையயானையின் மத்தகத்தின்மேலுள்ளனவுமாகி, மங்கல தூரியம் ஆர்ப்பன வருவன - மங்கலவாச்சியங்கள் ஒலிக்க (ஒருபால்) வாராநிற்பன. (௩௮)

அங்கவர்மனைதொறுமணவினையனுகியதுழனியரெனமறைப்
புங்கவரினிதுணவறுசுவைப்போனகமடுவினைபுரிகுவா
ரிங்கடுவனபலியடிகளுக்கெனயதிகளையெதிர்பணிகுவார்
சங்கரனடியரையெதிர்கொள்வார்சபரியைவிதிமுறைபுரிகுவார்.

(இ-ள்.) அங்கு அவர் மனை தொறும் - அந்நகரிலுள்ள அவரவர்கள் வீடுகள் தோறும், மணவினை அனுகிய துழனியர் என - திருமணச்செய்கை வந்ததுபோல ஆரவாரச்செய்கையையுடையவராய், மறை புங்கவர் இனிது உண, வேதவுணர்ச்சியில் உயர்ந்த அந்தணர்கள் குறைவின்றி உண்ண, அறுசுவை போனகம் - அறுசுவையமைந்த கறிகளையும் அன்னங்களையும், அடுவினை புரிகுவார் - சமைக்குந்தொழிலைச்செய்வார்கள், அடிகளுக்கு பலி இங்கு அடுவன என - சுவாமிகளுக்குப் பிக்ஷை இவ்விடத்திற் சமைக்கின்றேமென்று, யதிகளை எதிர் பணிகுவார் - யதிகளையெதிர்சென்று (தடுத்து) வணங்குவார்கள், சங்கரன் அடியரை எதிர் கொள்வார்-சிவபெருமான் அடியவர்களை எதிர்கொண்டு (அவர்களுக்கு) விதிமுறை சபரியை புரிகுவார் - ஆகமவிதிப்படி பூசனைசெய்வார்கள்.

எதிர்கொள்வாரென்னும் வினைமுற்று எச்சமாய் நின்றது. நால்வகையாச்சிரமங்களில் யதியாச்சிரமம் மேம்பாடுள்ளதாதலின் பொதுவியலால் யாவராலும் வணங்கப்படுவாரென்பார் - யதிகளை யெதிர்பணிகுவாரெனவும், நால்வகை ஆச்சிரமங்களையும், சாந்திராயணமுதலிய விரதங்களையும், இயமாதியோகங்களையும், பசுபாசஞானங்களையுங்கடந்து, சரியை கிரியா யோகங்களிற் சரிப்பவரும், பதிஞானச்செல்வரும், திருவேடத்தருமாய் நிற்றலின், சிறப்பியலால் அவர் சிவனெனவே வழிபடற்பாலரென்பார். சங்கரனடியரை யெதிர்கொள்வார் சபரியை விதிமுறை புரிகுவார் எனவுங்கூறினர். (௬௦)

இன்னணநகர்செயலணிசெயவிணையிலிமணமகன்மணவினைக்
கன்னியுமனையவளென்னினிககடிநகர்செயுமெழில்வளையா
மென்னவரியநகர்செயலெழிலிணையெனவுரைசெய்வதெவனிதன்
முன்னிறைமகடமர்மணவணிமண்டபவினைசெயுமுறைசொல்வாம்.

(இ-ள்.) இன்னணம் - இவ்வாறு, நகர் அணி செயல் செய்ய - நகரை அலங்கரித்தலால், மணவினை மணமகன் - இத்திருமணத்துக்குரிய மணவாளனே, இணையிலி - ஒப்பில்லாதவன், கன்னியும் - தடாதகைப்பிராட்டியாரும், அனையவள் என்னின் - அத்தன்மையளென்றால், இககடி நகர் செய்யும எழில வளை - இக்காவல் பூண்ட அம்மதுரை நகரத்தின் அலங்காரப்பொலிவுக்கு, என்ன அரிய நகர் செயல் எழில் - எந்த அரியநகரத்தின் அலங்காரப்பொலிவை, இணை என யாம் உரைசெய்வது எவன் - ஒப்பு என்று நாமெடுத்துச்சொல்வது என்னவிருக்கது, (சிறிதும் இல்லை என்றபடி) இதன்முன் இறைமகள் தமா - இநகரை அலங்கரித்தற்குமுன்னே தடாதகைப்பிராட்டியாருடைய சுற்றத்தார், மண அணி மண்டப வினை செயும் முறைசொல்வாம் - திருக்கலியாணமண்டபத்தை அலங்கரிக்கும் முறைமையை இனி எடுத்துச்சொல்லுவாம்.

மணவாளனும், மணவாட்டியும் ஒப்பிகந்தோராதலின் அவர்கள்வசிக்கு நகரும் ஒப்பிகந்ததென்பார், என்ன வரியநகர் செயலெழிலிணையெனவுரைசெய்வது எவனென்றார். என்ன விஞத்திரிபிடைச்சொல். செய என்னும் இறந்தகால வினையெச்சம். உரைசெய்வது எனனும் தொழிற்பெயர்கொண்டது. எழில் என்பதன் முதலில் அகரச்சுட்டுத்தொகுத்தல். ஐ உருபுமயக்கம். (௬௧)

௸ வேறு.

கருவிவான்முகிலூர்தியைப்பொருதநாட்கலைமதிமருமாட்டி
செருவில்வாங்கியவிமானமாலைகளெனத்தெய்வதவரையெல்லா
மருவியந்நகர்வைகியதம்மிறைமடமகடனைக்காண்பான்
றருவிநின்றெனநட்டனரெட்டிவான்றொடுநிலைநெடுந்தேர்கள்.

(இ-ள்.) கருவி வான் முகில் ஊர்தியை பொருத நாள் - உலகிற்குத் துணைக்காரணமாகிய மேகவாகனனாகிய இந்திரனைப் போரில்வென்றகாலத்தில், கலைமதி மருமாட்டி - சந்திரவம்சத்திற்பிறந்த பிராட்டியார், செருவில் வாங்கிய விமானமாலைகள் என - போரிற்கவர்ந்த விமானங்களை வரிசைபடவைத்ததுபோலவும், தெய்வத வரை எல்லாம் மருவி - தெய்வதன்மையையுடைய மலைகளெல்லாம்வந்து, அந்நகர் வைகிய தம் இறை மடமகள் தன்னை காண்பான் தருவி நின்றது என - அம்மதுரைநகரி லெழுந்தருளிய தங்கள் தலைவனாகிய மலையரையன் புத்திரியாரைக் காணச் சமையநேடி (வரிசைபட) நிற்பதுபோலவும், எட்டி வான் தொடு நெடு நிலை தேர்கள் நட்டனர் - எட்டி ஆகாயத்தையளாவும் நெடியநிலைத்தேர்களை (வரிசைபட) நிறுத்தினார்கள். (௩௨)

பளிக்கினேழுயர்களிறுசெய்தமைத்தபொற்படியதுபசுஞ்சோதி
தெளிக்குநீலத்திருளிகணிரைமணித்தெற்றியதுற்றோர்சாய்
வெளிக்குளாடியவோவியப்பாவைபோன்மிளிர்பளிங்காற்சோதி
தளிர்க்கும்பித்தியதிடையிடைமரகதச்சாளரத்ததுமாதோ.

(இ-ள்.) ஏழ் உயர் களிறு - ஏழுமுழமுயர்ந்த அரசயானைகளை, பளிக்கின் செய்து அமைத்த பொன்படியது - (இருபாலும்) பளிங்கினாற்செய்து (அதன்மேல்) அமைத்த பொன்னாலாகிய படிகளையுடையதும், பசும் சோதி தெளிக்கு நீலத்தின் - பசியகிரணத்தைவீசும நீலரத்தினங்களினால், ஆளி கள் நிரைமணி தெற்றியது - ஆளிகளைவரிசைபடச்செய்தமைத்த இரத்தினங்கள்பதித்த திண்ணைகளையுடையதும், உற்றோர் சாய் வெளிக்குள் ஆடிய ஓவியப் பாவைபோல் - சமீபத்தில்வந்தவர் சாயல்கள் வெளிப்புறத்தில் அசைவாடிநிற்கும் சித்திரப்பதுமைகள்போல, மிளிர் பளிங்கால் சோதி தளிர்க்கும் பித்தியது - ஒளிவிளங்கும் பளிங்கினாற்செய்த கிரணம்வீசும் சுவர்த்தலங்களையுடையதும், இடை இடை மரகதச் சாளரத்தது - இடையிடையில் மரகதத்தினாற்செய்த சாளரங்களையுடையதும்.

"காலோர்நான்குந்தனிக்கையுங்கோசமும், வாலுறப்போடேழும் மாநிலந் தோயப், பாலுஞ்சங்குமபோலுங்காலுகிரது, காலினும்ஞான்றவொருதனிக்கையினும், வாயினும்வாலினுமருப்பினுங்கோறல், வல்லதுமதில்மூன்றுமுழச்சுற்றுடைத்தாகி, ஏழுமுழமுயர்ந்தொன்பதுமுழநீணடது, நீயுமிழ்சிறுகண்ணுஞ் செம்புகருமுடைத்தாய், முன்புயர்ந்து பின்பணிந்ததாயின், அவ்வியல்யானையை அரசுவாவென்ப" எனத்திவாகரநிகண்டுள்வருஞ் சூத்திரத்தால் ஏழுமுழமுயர்தல் அரசயானையிலக்கணமெனவுணர்க. (௩௩)

பல்லுருச்செய்தபவளக்காலாயிரம்படைத்ததிந்திரநீலக்
கல்லுருத்தலைப்போதியதாடகக்கவின்கொளுத்தரமேல
தல்லுருக்கியசெம்மணித்துலாத்ததாலமுதுடற்பசுந்திங்கள்
வில்லுருக்குகன்மாடமதாகியவேள்விமண்டபஞ்செய்தார்.

(இ-ள்.) பல் உரு செய்த ஆயிரம் பவளக்கால் படைத்தது - பற்பலவடிவ மாகச்செய்தமைத்த ஆயிரம்பவளத்தூண்களையுடையதும், தலை - அவற்றிற்குமேல், இந்திரநீலக்கல் உரு போதியது - இந்திரநீலரத்தினத்தினால் வடிவமையச்செய்த மைத்த போதிகைகளையுடையதும், ஆடகம் கவின் கொள் உத்தரமேலது - பொன் னாற்செய்த அழகுமிக்க உத்தரங்களை மேலேயுடையதும், அல்லுருக்கிய செம்மணி துலாத்தது - இருளையோட்டும் செவந்த மாணிக்கங்களாற்செய்த துலாங்களையுடை யதும், அமுது உடல் பசும் திங்கள் வில் உருக்கு கல் மாடமது ஆகிய-அமுதநிறை ந்தசரீரத்தையுடைய தண்ணியசந்திரனது கிரணங்கள் உருக்குதற கெல்லையாகிய சந்திரகாந்தக்கல்லால்செய்த மேனிலையையுடையதும் ஆகிய, வேள்விமண்டபம் செய்தார் - திருக்கலியாணமண்டபஞ் செய்தமைத்தார்கள்.

துலாம் - குமிழ். உருக்கு-காலங்கரந்தபெயரெச்சமாதலால் கல் மாடம் என் னும் எல்லைப்பொருள்கொண்டது. (௬௪)

முத்திற்பாளைசெய்தவிர்மரகதத்தினன்மொய்த்தபாசிலைதுப்பின்
கொத்திற்றீம்பழம்வெண்பொனாற்கோழரைகுயின்றபூகமுந்துப்பின்
றொத்திற்றூங்குபூச்செம்பொனாற்பழுக்குலைதூக்கிப்பொன்னாற்றண்டு
வைத்துப்பாசொளிமரகதநெட்டிலைவாழையுநிரைவித்தார்.

(இ-ள்.) முத்தில் பாளை செய்து - முத்தினால்பாளைகளமைத்து, அவிர் மர கதத்தினால் மொய்த்த பாசிலை - விளங்காநின்ற மரகதத்தினால் நெருங்கிய பசிய இலைகளையும், துப்பின் கொத்தில் தீம்பழம்-பவளக்கொத்தினால் இனியபழங்களையும், வெண் பொன்னாற் கோழ் அரை குயின்ற பூகமும் - வெள்ளியினால் கொழுவியதா ருகளையும் செய்தமைதத கமுகுகளையும், துப்பின் தொத்தில் தூங்கு பூ - பவளக் கொத்தினால் தொங்குகின்ற பூக்களோடு, செம பொனால் பழுக்குலை தூக்கி-செவந் தபொன்னால் பழுத்தகுலைகளைத்தொங்கவிட்டும், பொன்னால் தண்டு வைத்து-பொ ன்னால் தண்டுசெய்தமைத்தும், பாசு ஒளி மரகத நெட்டிலை வாழையும் - பசிய வொளியையுடைய மரகதத்தினால் நீண்ட இலைகளையும் (அமைத்த) வாழைகளையும், நிரைவித்தார் - (அததிருக்கலியாணமண்டபத்தில்) வரிசைபடக்கட்டினாகள்.

தூக்கி, வைத்து என வேறுபலவடுக்கிய வினையெசசங்கள். இசையெச்சமா ய்நின்ற அமைத்தஎன்னும் பெயரெச்சத்தின் முதனிலையைத்தனிததனிகொண்டன.

பித்திமாதவிசண்பகம்பாதிரிபிறவுமண்டபஞ்சூழப்
பத்தியாவளர்த்தளிகள்வாய்திறந்துபண்பாடவின்மதுக்காலத்
தத்தியாய்மணங்கவர்ந்துசாளரந்தொறுந்தவழ்ந்தொழுகிளந்தென்ற
றித்தியாநிற்குமதுத்துளிதெளித்திடசசெய்தனருய்யானம்.

(இ-ள்.) பித்தி மாதவி சண்பகம் பாதிரி பிறவும் - சிறுசண்பகமும் குருக்க த்தியும் சண்பகமும் பாதிரியும் மற்றுள்ளமரங்களும, மண்டபம் சூழ பத்தியாவளர் த்து - திருமண்டபத்தைச்சூழப் பத்திபடவளர்த்து, அளிகள் வாய்திறந்து பண் பாட - வண்டுகள் வாய்திறந்து இசைபாடவும், இன் மது கால - (மலர்கள்) இனிய தேன்துளி சிந்தவும், தத்தி ஆய் மணம் கவர்ந்து - அவற்றுட் சென்று ஆராய்ந்து நறுமணங்களைக் கொள்ளைகொண்டு, சாளரம் தொறும் தவழ்ந்து ஒழுகு - சாளரங் கள்தோறும் தவழ்ந்துசெல்லும், இளம் தென்றல் தித்தியாநிற்கும் மதுத்துளி தெ ளித்திட-இளமையாகிய தென்றல் தித்திக்குந் தேன்துளிகளைச் சிந்தவும், உய்யான ம் செய்தனர் - பூந்தோட்டங்களைச்செய்து அமைத்தார்கள்.

பித்திகை - பித்தி யெனநின்றலால் கடைக்குறை. உய்யானம்-இடைக்குறை.

வேள்விச்சாலையும்வேதியுங்குண்டமுமேகலையொடுதொன்னூற்
கேள்விச்சார்பினாற்கண்டுகண்ணடிவிடைகிளர்சுடர்சீவற்ச
நீள்விற்சாமரம்வலம்புரிசுவத்திகநிறைகுடமெனவெட்டு
வாள்விட்டோங்குமங்கலத்தொழில்செய்பொறிவகையினானிருமித்தார்.

(இ-ள்.) வேள்வி சாலையும் - யாகசாலைகளையும், வேதியும் - வேதிகைகளையும், குண்டமும் - ஓமகுண்டங்களையும், மேகலை ஒடு - மேகலைகளோடு, தொல் நூல் கேள்வி சார்பினால் கண்டு - தொன்றுதொட்டுள்ள ஆகமவிதியின் சார்பினால் வகுத்து, கண்ணடி விடை கிளர் சுடர் சீவற்சம் நீள வில் சாமரம் வலம்புரி சுவத்திகம் நிறை குடம் என-கண்ணாடியும் இடபமும் விளங்கும் தீபமும் சீவற்சமும் மிக்க கிரணங்களையுடைய சாமரமும் சங்கும் சுவத்திகமும் நிறைகுடமும் என்று சொல்லப்பட்ட, வாள் விட்டு ஓங்கும் எட்டு மங்கலம் - கிரணம்வீசிப்பொலியும் அஷ்டமங்கலங்களையும், பொறி தொழில் செய் வகையினால் நிருமித்தார் - சித்திரமாகத் தொழில்செய்வகையினால் செய்தமைத்தார்கள்.

மேகலை-ஓமகுண்டத்தின் வரம்புகள். சீவற்சம், சுவத்திகம், முன்னர்க்கூறியிருக்கின்றனம். (௬௭)

மணங்கொள்சாந்தொடுகுங்குமப்போதளாய்மான்மதம்பனிநீர்தோய்த்
திணங்குசேறுசெய்திருநிலந்தடவிவானிரவிமண்டலநாணப்
பணங்கொளுகமாமணிவிளக்கிருகையும்பாவைகளெடுத்தேந்தக்
கணங்கொடாரகையெனநவமணிகுயில்கம்பலம்விதானித்தார்.

(இ-ள்.) மணங்கொள் சாந்தொடு - வாசமிக்க சந்தனத்தோடு, குங்குமப் போது மான் மதம் அளாய் - குங்குமமலரையு மிருகமதத்தையுங்கலந்து, பனி நீர் தோய்த்து இணங்கு சேறு செய்து-பனிநீரில் கரைத்து ஒன்றுபடக்குழம்பாக்கி, இரு நிலம் தடவி - பெரியதரைமெழுகி, வான் இரவி மண்டலம் நாண - விண்ணிலுள்ள சூரியமண்டலம் வெட்கும்படி, பணங்கொள் நாகம் மாமணி விளக்கு - படத்தையுடைய சர்ப்பங்களின் பெரியரத்தினங்களாகிய தீபங்களை, இருகையும் பாவைகள் எடுத்து ஏந்த - இரண்டுகைகளிலும் பதுமைகள் எடுத்து ஏந்திநிற்க, கணங்கொள் தாரகை என - கூட்டங்கொண்ட நக்ஷத்திரங்கள் உதையஞ்செய்ததுபோல,நவமணி குயில் கம்பலம் விதானித்தார் - நவமணிகளை யிடையிடையே கோவைசெய்தமைத்த கம்பலங்களை மேலேவிரித்துக்கட்டினார்கள். (௬௮)

செம்பொற்கோயின்முன்சேண்டொடு காவணந்திசையெலாம் விழுங்கச்
தம்பொற்பாலிகைபாண்டில்வாயமுளைதெளித்தம்புயத்தவனாதி [செய்
யும்பர்க்கேற்றபொற்கம்பலமேல்விரித்துள்ளுறத்தவிசிட்டுத்
தும்பைத்தாழ்சடையான்றமர்க்காதனஞ்சூழவிட்டதனுப்பண்.

(இ-ள்.) செம் பொன் கோயில் முன் - செவந்தபொன்னாலாகிய திருக்கலியாண மண்டபத்தின்முன்னர், சேண் தொடு காவணம் திசை எல்லாம விழுங்க செய்து-ஆகாயத்தையளாவியபந்தல் எட்டுத்திக்குகளையும் விழுங்கப்போடுவித்து, அம் பொன் பாண்டில் பாலிகை வாய் முளை தெளித்து - அழகிய பொன்னாற்செய்த வட்டமாகிய பாலிகையில் முளைகளைத்தெளித்து, அம்புயத்தவன் ஆதி உம்பர்க்கு ஏற்ற பொன் கம்பலம் மேல் விரித்து - பிரமன்முதலிய தேவர்களுக்குத்தக்க பொன்னாலாகிய கம்பலத்தை மேலேவிரித்து, உள்ளுற தவிசு இட்டு - அதனுள்ளே பொரு

ந்த ஆதனமிட்டு, தும்பை தாழ்சடையான் தமர்க்கு ஆதனம் சூழ இட்டு - தும்பை மாலையையணிந்த சடாமுடியையுடைய சிவபிரான் தமராகிய அடியாருக்கு ஆசனங்களைச்சுற்றுமிட்டு, அதன் நாப்பண் - அதன்மத்தியில். (௬௯)

கற்பகந்தருவயிரவாளரிப்பிடர்கதுவப்பொற்குறடேற்றி
யெற்படுந்துகிராற்குடஞ்சதுரமாவியற்றியவெருத்தத்தூண்
விற்படும்பளிக்குத்தரந்துப்பினால்விடங்கமேனிலமூன்றுப்
பொற்பநூல்வழிவிமானம்பன்மணிகளாற்பொலியச்செய்துள்ளாக.

(இ-ள்.) கற்பகம் தரு வயிரவாள் அரி பிடர் கதுவ - கற்பகவிருக்ஷத்தாற்செய்த வயிரத்தால்செய்த வொளிபொருந்திய சிங்கத்தின்பிடரியில் பொருந்த, பொன் குறடு ஏற்றி - பொன்னாற்குறடெழுப்பி, எல் படும துகிரால் சதுரம் ஆ குடம் இயற்றிய எருத்தம் தூண்-ஒளிவீசும்பவளத்தால் சதுரமாகக் குடஞ்செய்தமைத்த கழுத்தையுடையதூண்களை (நிறுத்தி) வில் படும் பளிங்கு உத்தரம் - ஒளிவீசும் பளிங்கால் அமைத்த உத்தரங்களையும், துப்பினால் விடங்கம்- பவளங்களால்செய்த கொடுங்கைகளையும் (பரப்பி) மேல் நிலம் மூன்றுக பொற்ப - (இவ்வாறு) மேனிலம்மூன்றுக அழகுசெய்ய, நூல் வழி பல்மணிகளால் விமானம் பொலிய செய்து உள்ளாக - சிற்பநூல்வழி பல இரத்தினங்களால் விமானத்தைவிளங்கச்செய்து அதனுள்ளாக. (௭0)

அங்கமாறுமேகால்களாய்முதலெழுந்தம்பொற்பீடிகையாகித்
துங்கநான்மறைநூலகளேநிந்நிலநதொடுத்தசைதாம்பாகி
யெங்கணாயகனெமபெருமாட்டியோடிருப்பதற்குருக்கொண்டு
தங்கினாலெனநவமணிகுயின்றபொறறவிசநுசமைத்திட்டார்.

(இ-ள்.) அங்கம் ஆறும் கால்களாய்-ஆறங்கங்களுமே கால்களாகியும், முதல் எழுத்து அம்பொன் பீடிகை ஆகி - பிரணவமே அழகிய பொற்பீடமாகியும், துங்கம் நான் மறை நூல்களே நித்திலம் தொடுத்து அசை தாமபாகி-உயர்ந்த நான்குவேதங்களாகிய நூல்களே முத்தினால் தொடுத்தமைத்த அசைகின்ற வடங்களாகியும், எங்கள் நாயகன் எம்பெருமாட்டி யோடு இருப்பதற்கு - எங்கள் இறைவனாகிய சிவபெருமான் எமதுபிராட்டியாரோடு வீற்றிருந்தருளுவதற்கு, உருக்கொண்டு தங்கினால் என - (அவைகள்) அவ்வடிவங்கொண்டு தங்கினாற்போல, நவமணி குயின்ற பொன் தவிசு அது சமைத்திட்டார் - நவரத்தினஙகள்பதித்த பொன்னாலாகிய ஆசனம் ஒன்றைச்செய்து அமைத்தார்கள்.

தவிசது அது பகுதிப்பொருள் விகுதி. (௭௧)

புரந்தரன்றருகற்பகம்பொலநதுகில்பூண்முதலியநல்கச்
சுரந்தரும்பெறலமுதமைஐவகையறுசுவையுணாமுதலாகப்
பரந்ததெய்வவான்பயப்பசிந்தாமணிபற்பலவுஞ்சிந்தித்
திரந்துவேண்டுவதரத்தரவீட்டினிந்திரநகர்நாண.

(இ-ள்.) புரந்தரன் தரு கற்பகம் - இந்திரன் திறையாகக்கொடுத்த கற்பக விருக்ஷம், பொலம் துகில் பூண் முதலிய நல்க-பீதாம்பரங்கள் ஆபரணங்கள் முதலிய பலபொருள்களையும் கொடுக்கவும், தெய்வ ஆன்-காமதேனு, சுரந்து அரும் பெறல் அமுதம் - சுரந்து பெறுதற்கரிய அமுதம், அறு சுவை ஐவகை உணா - அறுசுவையமைந்த ஐவகையுணவுகள், முதலாக பரந்த பயப்ப - முதலாக மிக்கவுணவு

ச்சினைக்கொடுக்கவும், சிந்தித்து இரந்து வேண்டுவ பல் பலவும் - நினைத்து யாசித்து வேண்டிக்கொள்ளும் பலபலபொருள்களையும், சிந்தாமணி தரத்தர-சிந்தாமணிகொடுக்கவும், இந்திரன் நகர் நாண-இந்திரனுடைய பொன்னுலகமும் நாணும்படி, ஈட்டினர் - (வாங்கிச்) சேகரித்தார்கள்.

ஐவகையுணவாவன-பருகுதல் முதலாகிய நால்வகையுணவோடு உறிஞ்சுதலுமாம். கற்பகம்முதலியன - பிராட்டியாருடைய திருவருளைப்பெறுதற்பொருட்டு அமையம் நோக்கிக்கொடுத்து நிற்றலின் இந்திரநகர் நாண என்றார். (௭௨)

தென்னர்சேகரன்றிருமகடிருமணத்திருமுகம்வரவேற்று
மன்னர்வந்தெதிர்தொழுதுகைக்கொண்டுதம்மணிமுடிமிசையேற்றி
யன்னவாசகங்கேட்டனர்கொணர்ந்தவர்க்கருங்கலந்துகினல்கி
முன்னரீர்த்தெழுகளிப்புறமனத்தினுமுந்தினர்வழிகொள்வார்.

(இ-ள்.) தென்னர் சேகரன் திருமகள் - பாண்டியர்மரபுக் கோகிரீடமாய் விளங்கும் மலயத்துவசபாண்டியன் புத்திரியாராகிய பிராட்டியார், திருமணம் திருமுகம் வரவு மன்னர் வந்து எதிரேற்று - திருமணச்செய்திவரைந்த திருமுகத்தின்வரவை அரசர்கள்வந்து எதிரேற்று, தொழுது கை கொண்டு தம் மணி முடிமிசை ஏற்றி - (அதனை) வணங்கிக் கையில்வாங்கித் தமது இரத்தினம்பதித்த கிரீடத்தின்மேல் சூட்டி, அன்னவாசகம் கேட்டனர் - அத்திருமுகத்திலவரைந்த வாசகத்தைக்கேட்டு, கொணர்ந்தவர்க்கு அரும் கலம் துகில் நல்கி - கொணர்ந்தவர்களுக்கு அரிய ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் கொடுத்து, முன்னர் ஈர்த்து எழு களிப்பு உற - (தம்மை) முன்னே யிழுத்துக்கொண்டு செல்லுங்களிப்பு மீக்கொள்ள, மனத்தினும் முந்தினர் வழிகொள்வார் - மனவேகத்தினும்விரைந்து வழிக்கொண்டுசென்றார்கள்.

கேட்டனர், முந்தினர் என்னும் வினைமுற்றுகள் எச்சங்களாய்நின்றன.(௭௩)

கொங்கர்சிங்களர்பல்லவர்வில்லவர்கோசலர்பாஞ்சாலர்
வங்கர்சோனகர்சீனர்களசாருவர்மாளவர்காம்போச
ரங்கர்மாகதராரியர்நேரியரவந்தியர்வைதர்ப்பர்
கங்கர்கொங்கணர்விராடர்கண்மராடர்களகருநடர்குருநாடர்.

(இ-ள்.) கொங்கர்—குருநாடர் - (திருமணத்திருமுகவரவேற்ற) கொங்குநாட்டினரும், சிங்களநாட்டினரும், பல்லவநாட்டினரும், வில்லவநாட்டினரும், கோசலநாட்டினரும், பாஞ்சாலநாட்டினரும், வங்கநாட்டினரும், சோனகநாட்டினரும், சீனநாட்டினரும், சாருவநாட்டினரும், மாளவநாட்டினரும், காம்போசநாட்டினரும், அங்கநாட்டினரும், மாகதநாட்டினரும், ஆரியநாட்டினரும், நேரியநாட்டினரும், அவந்திநாட்டினரும், வைதர்ப்பநாட்டினரும், கங்கநாட்டினரும், கொங்கணநாட்டினரும், விராடநாட்டினரும், மராடநாட்டினரும், கருநடநாட்டினரும், குருநாட்டினரும். (௭௪)

கலிங்கர்சாவகர்கூவிளரொட்டியர்கடாரர்கள்காந்தாரர்
குலிங்கர்கேகயர்விதேகர்கள்பௌரவர்கொல்லர்கள்கல்யாணர்
தெலுங்கர்கூர்ச்சரர்மச்சர்கண்மிலேச்சர்கள்செஞ்சையர்முதலேனைப்
புலங்கொண்மன்னருந்துறைதொறுமிடைந்துபார்புதைபடவருகின்றார்.

(இ-ள்.) கலிங்கர்—செஞ்சையர்முதல் - கலிங்கநாட்டினரும், சாவகநாட்டினரும், கூவிளநாட்டினரும், ஒட்டியநாட்டினரும், கடாரநாட்டினரும், காந்தாரநாட்டினரும், குலிங்கநாட்டினரும், கேகயநாட்டினரும், விதேகநாட்டினரும், பௌரவநாட்டினரும், கொல்லநாட்டினரும், கலியாணநாட்டினரும், தெலுங்கநாட்டினரும், கூர்ச்சரநாட்டினரும், மச்சநாட்டினரும், மிலேச்சநாட்டினரும், செஞ்சைநாட்டினரும் முதலாகிய, ஏனைபுலங்கள் மன்னரும்—மற்றநாட்டிலுள்ள வரசர்களும், துறைதொறு மிடைந்து பார் புதைபட வருகின்றார் - வழிகள்தோறும் நெருங்கி நிலவுலகமும் மறையும்படி வரத்தொடங்கினார்கள். (எ௫)

இத்தகைப்பலதேயமன்னவர்களுமெண்ணிடம்பெறாதீண்டிப்
பைத்தவாழிபோனிலமகண்முதுகிறப்பரந்ததானையராகித்
தத்தநாட்டுளபலவகைவளனுடுந்தழீஇப்பலநெறிதோறு
மொய்த்துவந்தனர்செழியர்கோன்றிருமகண்முரசதிர்மணமூதூர்.

(இ-ள்.) இத்தகை பல தேய மன்னவர்களும் - இத்தன்மையையுடைய பல நாட்டரசர்களும், எண் இடம் பெறாது ஈண்டி - எள்ளிட இடமில்லாமல் நெருங்கி பைதத ஆழிபோல் நிலமகள் முதுகு இற பரந்த தானையர் ஆகி - பரந்தகடல்போலப் பூமிதேவியினது முதுகுமுறிய (எங்கும்) பரந்த சேனையையுடையவராகி, தத்தம் நாடு உள பல வகை வளனொடும் தழுவி - தங்கள் தங்கள் நாட்டிலுள்ள பலவகைப்பொருள்களையும் கைக்கொண்டு, பல நெறி தோறு மொய்த்து - பலவழிதோறும் நெருங்கி, செழியர் கோன் திருமகள் மண முரசு அதிர் மூதூர் வந்தனர் - பாண்டியர்களுக் கரசனாகிய மலயத்துவசபாண்டியன் புத்திரியாராகிய பிராட்டியாருடைய திருமணமுரசு ஒலிக்கும் தொன்று தொட்டுள்ள மதுரைநகரை வந்தடைந்தனர்.

ஒடு உருபுமயக்கம். எண் எள். (எ௬)

வந்தகாவலருழையர்சென்றுணர்த்தினர்வருகெனவருகுய்ப்பச்
சந்தவாளரிப்பிடரணைமீதறந்தழைத்தருள்பழுத்தோங்குங்
கந்தநாண்மலர்க்கொம்பினைக்கண்டுகண்களிப்புறமுடித்தாமஞ்
சிந்தவீழ்ந்தருள்சுரந்திடத்தொழுதுபோய்த்திருந்துதம்மிடம்புக்கார்.

(இ-ள்.) வந்த காவலர் உழையர் சென்று உணர்த்தினர் - (இவ்வாறு) வந்த அரசர்களுடைய (வரவை) வாயில்காப்போர் சென்று (பிராட்டியாருக்குத்) தெரிவித்தார்கள், வருக என அருகு உய்ப்ப - வரக்கடவர்களெனக் கட்டளையிட (அதனை மேற்கொண்டு சென்று அவ்வரசர்களை அப்பிராட்டியார்) அருகிற்செலுத்த, சந்தம் வாள் அரி பிடர் அணை மீது-அழகிய ஒள்ளிய சிங்கங்களின் பிடரியின்மேலுள்ள ஆசனத்தின்மேல், (எழுந்தருளிய) அறம் தழைத்து அருள் பழுத்து ஓங்கும் கந்தம் நாண் மலர் கொம்பினை - தருமந்தழைத்து அருள் கனிந்து விளங்கும் (அன்பாகிய) வாசனையுடைய அன்றலர்ந்த மலர்களையுடைய பூங்கொம்புபோன்ற அப்பிராட்டியாரை, கண் களிப்புற கண்டு - (தமது) கண்கள் களிப்புறத் தெரிசித்து, முடித்தாமம் சிந்த வீழ்ந்து தொழுது அருள் சுரந்திட போய் - (தமது) மகுடங்களிலணிந்த மாலைகள் (நிலத்தில்) வீழத் (தாமும்) தண்டாகாரமாக (வீழ்ந்து) வணங்கி (அப்பிராட்டியார்) திருவருள் செய்யச் சென்று, தம் திருந்து இடம் புக்கார் - தத்தமக்கு (விதித்த) திருந்திய வீடுகளை அடைந்தார்கள்.

உயிர்களின்பொருட்டு அறம் வளர்த்தலும் அவற்றின்மேலருளும் அன்பு முன்னரே யுடைமைபோல மநுநூல்வழிச் செங்கோல்செலுத்தலும், குடிகளுக்கு எளி

ய சமையத்தாயிருத்தலும், முகமலர்ச்சி உடைமையும் உடையராயிருத்தலால் அறந்தழைத்தருள்பழுத்தோங்குங் கந்தகாண்மலர்க்கொம்பு என்றார். அறத்தைத் தளிர்களாகவும், அருளைக் கனிகளாகவும் உருவகஞ்செய்து அன்பை உருவகஞ்செய்யாமையின் இது ஏகதேசவுருவகவணி. (எஎ)

வரைவளங்களும்புறவினில்வளங்களுமருதத்தண்பணைவேலித்
தலைவளங்களுஞ்சலதிவாய்நடைக்கலந்தருவளங்களுமீண்டி
யுரைவரம்பறமங்கலம்பொலிந்ததிவ்வூரினிநால்வேதக்
கலைகடந்தவன்றிருமணஞ்செயவருகாட்சியைப்பகர்கின்றேன்.

(இ-ள்.) வரை வளங்களும் - மலையிலுள்ள பொருள்களாலும், புறவினில்வளங்களும் - முல்லை நிலங்களிலுள்ள பொருள்களாலும், தண் மருதம் பணை வேலி தலை வளங்களும - தண்ணிய மருதநிலத்திலுள்ள பொருள்களாலும், சலதி வாய் நடைக்கலம் தரு வளங்களும - கடலிற் செல்லும் மரக்கலங்கள்தரும் பொருள்களாலும், இவ்வூர் உரை வரம்பு அற ஈண்டி - இம்மதுரைநகர் சொல்லளவையிற்படாது நெருங்கி, மங்கலம் பொலிந்தது - அஷ்டமங்கலங்களாலும் விளங்கியது, நால் வேதம் கலை கடந்தவன் திருமணம் செய வரு காட்சியை இனி பகர்கின்றேன்-நால்வேதங்களின் எல்லைகடந்த சிவபெருமான் திருமணஞ்செய்ய வருந் தோற்றத்தை இனி எடுத்துச்சொல்லுகின்றேன்.

சொல்லளவைக்கெட்டாதவ னென்பார். நால்வேதக் கலைகடந்தவனென்றார். இது நுதலிப்புகுதலென்னுமுத்தி. மருதப்பணை, வேலித்தலை, ஒருபொருட் பன்மொழிகள். (எஅ)

ஏகநாயகிமீண்டபின்ஞாட்பிகந்திரசிதகிரியெய்தி
நாகநாயகமணியணிசுந்தரநாயகனுயிர்கட்கெல்லாம்
போகநாயகனாகிப்போகம்புரிபுணர்ப்பறிந்தருணந்தி
மாகநாயகன்மாலயனுருத்திரர்வரவின்மேன்மனம்வைத்தான்.

(இ-ள்.) ஏகநாயகி மீண்டபின் - ஒப்பில்லாத அருட்சத்தியாகிய தடாதகைப்பிராட்டியார் (மதுரைக்குச்) சென்றபின்பு, நாகம் நாயகம் அணி அணி சுந்தரநாயகன் - சர்ப்பங்களுக்கெல்லாம் இறைமைத்தன்மையையுடைய ஆதிசேடனாகிய ஆபரணத்தையணிந்த சோமசுந்தரக்கடவுள், ஞாட்பு இகந்து இரசித கிரி எய்தி - யுத்தகளத்தினின்று நீங்கி வெள்ளியங்கிரியையடைந்து, போகநாயகனாகி உயிர்க்கெல்லாம் போகம் புரி புணர்ப்பு - போகநாயகனாய் எல்லாவுயிர்களுக்கும் போகத்தைத்தந்தருளும் திருக்குறிப்பை, அருள் நந்தி அறிந்து - கருணையையுடைய நந்திநாயனார்தெரிந்து, மாக நாயகன் மால் அயன் உருத்திரர் வரவின்மேல் மனம் வைத்தான் - விண்ணுலகிற்கு நாயகனாகிய இந்திரனும் திருமாலும் பிரமனும் உருத்திரர்களும் ஆகிய இவர்கள் வருகையின்மேல் திருவுளங்கொண்டருளி.

ஏகம்-ஒப்பின்மை. தனக்கோர்பற்றிலனாகியும் உயிர்கள்கடைத்தேறப் போகவடிவினனாயிருந்து போகந்தருவோனாதலால் போகநாயகனாகி யெனக்கூறினார். "பந்தமும்வீடும் படைப்போன்காண்க" என்றருளினார் பெரியோரும். (எகூ)

சங்குகன்னனையாதியகணதிபர்தமைவிடுத்தனனன்னார்
செங்கணேற்றவர்மாலயன்முதல்பெருந்தேவர்வான்பதமெய்தி

வெங்கணாயகன் றிருமணச்சோபன மியம்பினா ரதுகேட்டுப்
பொங்குகின்றபேரன்புபின்றள்ளுறப்பொள்ளென வருகின்றார்.

(இ-ள்.) சங்கு கன்னனை ஆதிய கணாதிபர் தமை விடுத்தனன் - சங்குகன்னனை முதலாகவுள்ள கணாதிபர்களை அனுப்பினார், அன்னார்-அவர்கள், செம் கண் ஏற்றவர் மால் அயன் முதல் பெருந் தேவர் வான் பதம் எய்தி - சிவந்த கண்களையுடைய உருத்திரரும் திருமாலும் பிரமனும் முதலிய பெரியதேவர்கள்வசிக்கும் பெரியபதவிகளையடைந்து, எங்கள் நாயகன் திருமணச் சோபனம் இயம்பினார் - எங்கள் இறைவனாகிய சிவபெருமானுடைய திருக்கலியாணமஹோற்சவத்தைச் சொன்னார்கள், அதுகேட்டு - அந்தச்செய்தியைக்கேட்டு, பொங்குகின்ற பேர் அன்பு பின் தள்ளுற- (தம்மை) மேற்கொண்டு விழுங்குகின்ற பெரிய அன்பு பின்னே நின்றுதள்ள, பொள்ளென வருகின்றார்-விரைந்துவரத் தொடங்கினார்கள்.

அழிக்குந்தொழிலினராதலின் - செங்கணேற்றவரென்றார். (௮௦)

அஞ்சுகோடியோசனைபுகைந்திருமடங்கழன்றவர்தமைப்போலீ
ரஞ்சுதீயுருத்திரர்புடையுடுத்தவரழறகணாற்பூதங்க
ளஞ்சுநூறுருத்திரரண்டத்துசசியரரியயன்முதற்றேவ
ரஞ்சுமாணையுமாற்றலும்படைத்தவரடுகுறட்படைவீரர்.

(இ-ள்.) அஞ்சு கோடி யோசனை புகைந்து இருமடங்கு அழன்றவர் - அஞ்சுகோடி யோசனைதூரம் புகைந்து பத்துகோடி யோசனைதூரந் தீக்கொழுந்துவிட்டெரியும் காலாக்கினி உருத்திராயவரும், தமைப்போல் ஈரஞ்சு தீ உருத்திரர்- அவரைப்போல (அவரைச்சூழ்ந்துள்ள) பத்துக் காலாக்கினி உருத்திரர்களும், புடை உடுத்தவர் - (அப்பதின்மருள் ஒவ்வொருவரையும்) புடைசூழ்ந்து சேவித்துநிற்கும் ஒவ்வொருகோடி யுருத்திரர்களும், அழல் கண் நால் பூதங்கள் - தீப்பொறியைச் சிந்துகின்ற கண்களையுடைய நால்வகைப் பூதங்களும், அண்டத்து உச்சியர் அஞ்சு நூறு உருத்திரர் - அண்டத்தினுச்சியில் வசிப்பவராகியயாவரும் அஞ்சத்தக்க நூறு உருத்திரர்களும், அரி அயன் முதல் தேவர் அஞ்சும் ஆணையும் ஆற்றலும் படைத்தவர் - திருமாலும் பிரமனும் முதலியதேவர்களஞ்சும் ஆணையையும் வலிமையையும்படைத்த, அடுகுறள் படைவீரர் - (போரில் எதிர்த்தவர்களைக்) கொல்லும் பூதப் படைவீரர்களும்.

கீழண்டகடாகத்தில் காலாக்கினி உருத்திரனாவார் கோடியோசனையுள்ள கனகமயமான ஆலயத்தில், ஆயிரயோசனையுயரமும், இரண்டாயிரயோசனை விஸ்தாரமுமுள்ள சிங்காதனத்தில் தமது திருமேனியில் அக்கினிச்சுவாலை பத்துக்கோடியோசனையும் அந்த சுவாலையின் புகையைந்துகோடி யோசனையும உடையவராய் வீற்றிருப்பர். இந்தக் காலாக்கினி உருத்திரதேவ நாயனாரைச்சூழ்ந்து அவரைப்போல் பத்து உருத்திரர்கள் இருப்பார்கள். அப்பத்து உருத்திரருள் ஒவ்வொருவரையும் ஒவ்வொருகோடி உருத்திரர்கள் பரிவாரமாகச்சூழ்ந்து சேவித்திருப்பார்கள். இவற்றைச் சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

“ அண்டகடாகக்கனமுண்டொருகோடியதனடியுட்
கண்டிடுககாலாங்கியுருத்திரர்க்குக்கனகமலை
யுண்டதற்குன்னதங்கோடியோசனையீரைங்கோடி
மண்டியமெய்த்தழற்கொழுந்தைங்கோடியுறும்வளர்புகையும்.”

" யோசனையாயிரமனையுளரியனையினுயரந்தான்
யோசனையீராயிரமெனறதன்விரிவையுணர்ந்திடுக
தேசுடையகாலாங்கியுருத்திரர்தந்திருமேனி
யோசனையுமுண்டமுலாலயு மெனவுன்னுகவே."

" தரித்துடையர்வலக்கரத்திற்றயங்கொளிவாள்சரத்தினையும்
பரித்துடையரிடக்கரத்திற்பலகையினைத்தனுவினையு
முருத்திரர்களொருபதின்மருறைவரவருமையவர்போ
லுருத்திராகளோய்வொருவர்க்கொருகோடிபரிச்சிதமே."

எனவருஞ் செய்யுள்களாலுணர்க. அண்டத்துச்சியிலுள்ள நூறு உருத்திரா வார். பொனமயமான அண்டகடாகப் புறம்பே இந்திரதிக்கு முதலிய பத்துத்திக்கு களுள் இந்திரதிக்கில் - கபாலீசன், அசன், புத்தன், வச்சிரதேகன், பிரமர்த்தனன், விபூதி, அவ்வியன, சாத்தா, பினாகி, திரிதசாதிபன் எனப் பதின்மர். அக்கினிதிக்கில்- உருத்திரன், உதாசனன், பிங்கலன், காதகன், அயன், சுவலன், தகனன், வெப்பு ரு, பிரமாந்தகன, க்ஷயாந்தகன் எனப் பதின்மா. இயமதிக்கில் - யாமியன், மிருத்தியு, அரன், தாதா, விதாதா, கத்திரு, காலன், தன்மன், சங்யோத்தா, வியோக்கிருதன எனப் பதின்மர். நிருதிதிக்கில் - நிருதி, மாரணன், அரந்தா, குரூரதிருட்டி, பயாந்தகன், ஊர்த்துவகாயன், விருபாக்ஷன், தூமிரு, லோகிதன், தெங்கிட்டிருண ன் எனப் பதின்மர். வருணதிக்கில் - பெலன, அதிபெலன், பாச அத்தன், மகாபெல ன், சுவேதா, செயபத்திரன், திர்க்கவாகு, செலாந்தகன், வடவாமுகன், தீமான்என ப் பதின்மர். வாயுதிக்கில் - சீக்கிரன, லகு, வாயுவேகன், தீக்ஷணன், சூக்குமன், க்ஷயாந்தகன, பஞ்சாந்தகன், பஞ்சசிகன, கபர்தி, மேகவாகனன் எனப் பதின்மர். குபேரதிக்கில் - நிதிசன், ரூபவான், தன்னியன, செளமியன், செளமியதேகன், பிரமத்தனன், சுப்பிரகடன, பிரகாசன, இலக்குமிவரன், சோமேசன் எனப் பதின்மர். ஈசானதிக்கில் - வித்தியாதிபன, ஞானபுகன, சருவன், வேதபாரகன், மாத்துருவிருத்தன, பிங்கலாக்ஷன, பூதபாலன், பெலிப்பிரியன், சருவவித்தியாதிபன், தாதா எனப் பதின்மா. அண்டகடாகவோட்டுக்குக்கீழே விஷ்ணுதிக்கில் - அனந்தன், பாலகன, வீரன், பாதாளாதிபதி, விபு, இடபத்துவசன், உக்கிரன், சுப்பிரன், உலோகிதன், சருவன் எனப் பதின்மா. அண்டகடாகத்தினமேலே பிரமதிக்கில் - சம்பு, விபு, கெளரு, ரியெசுவன, பிரியக்ஷன, ஸ்ரீதேசகவாகன், சன்வாகன், விவாகன், ரபன், லிபர், விலக்ஷணன எனப் பதின்மரும் ஆம். (அக)

புத்தியட்டகர்நாலிருகோடிமேற்புகப்பெய்தநரகங்கள்
பத்திரட்டியுங்காப்பவர்பாரிடப்படையுடைகூர்மாண்டர்
சத்தியசிவபரஞ்சுடருதவியசதவுருத்திரரன்னு
ருய்த்தளித்தவீரைம்பதுகோடியருருத்திரர்கணநாதர்.

(இ-ள்.) புத்தி அட்டகர் - அஷ்டவித்தியேசுவரர்களும், நால் இருகோடி மேல் புக பெய்த பதிரட்டி நரகங்களும் காப்பவர் - இருபத்தெட்டுக்கோடி நரகங்களையுங் காப்பவர்களும், பாரிடம் படை உடை கூர் மாண்டர் - பூதப்படையையுடைய கூர்மாண்டரும், சத்தியம் சிவபரஞ்சுடர் உதவிய சதவுருத்திரர்-உண்மை வடிவாயுள்ள சிவபெருமானருளிய நூறுருத்திரர்களும், அன்னூர் உய்த்து அளித்த ஈரைம்பதுகோடியர் உருத்திரர் - அவ்வுருத்திரர் தந்தருளிய நூறுகோடியராகிய உருத்திரர்களும், கணநாதர் - கணநாதர்களும்.

நாலிருகோடி மேற்புகப்பெய்த பத்திரட்டியாவது - எட்டுக்கோடி என்னுந் தொகையை முதலிற்கொண்ட இருபது என்னும எண்.

புத்தியட்டகராவார் - சூக்குமபுவன மெட்டின் அதிபதிகளாம், அவர்கள்- அனந்தர், சூக்ஷமர், சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி. சூக்குமபுவனமாவன - பைசாசம், ராக்ஷசம், யாக்ஷம், காந்தர்வம், மாகேந்திரம், சௌமியம், பிராசேசுவரம், பிராமம் ஆம். நாலிருகோடி மேற்புகப் பெய்த நரகங்களென்றவை - காலாக்கினி உருத்திரதேவநாயனர் புவனத்திற்குமே லுள்ளன. அவை அதிபாதகமுதலிய பாவங்களைச் செய்தோர் வசித்தற்கு இருபத் தெட்டுத் தளங்களாகக்கட்டின நிலைமாடங்கள்போல ஒன்றின்மேலொன்று யிருக்கும். அதனைச் சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

" இனையபுரிமிசைநிரயமெழுநான்குகோடியுறு
நினையினவையெழுநான்குநிலைமடமேயெனநிலவுந்
துனியுறுவரவைதன்னிறுநிசரவற்றினுக்களவு
முனிலிருநூறுயிரமுமுப்பஃதுகோடியுமே."

எனவருஞ் செய்யுளாலும். அவற்றைக்காப்போர - பிரளயகாலாக்கினியையும், பிரளயகாலத்துச் சூரியனும்போன்ற திருவுருவமும் கறுத்தமுகமும் மழுவேந்திய கையுமுடைய கூர்மாண்ட தேவ நாயனரைப் புடைசூழ்ந்து அவரைத் துதித்து அவரைப்போலும் உருவாய்ந்த அனேக உருத்திரர்கள். அக்கூர்மாண்ட தேவநாயனர் அந்நிரயங்களின் மேற்பாகமாகிய கநகபூமியில் அந்நரகங்களுக்கும் அவற்றைக் காப்போருக்கும் அதிபராயுள்ளவர். இவற்றை ஷை இயலில்.

" மேலாயகநகபுரிவீற்றிருப்பர்கூர்மாண்டர்
காலவழலிரவியுருக்காளமுகமழுவுங்கை
கோலமுறுவட்டவிழிகொண்டுடையரவர்தம்மைப்
போலுமுருத்திரர்பலரும்புடையடைவர்போற்றிசைத்தே."

எனவருஞ் செய்யுளாலுமுணர்க. சதவுருத்திரராவார் - மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை ஆகிய ஆறத்துவாக்களில் முறையா யமர்ந்துள்ளவர். ஈரைம்பதுகோடி யுருத்திரர்கள் பிரமாணடதர உருத்திரர்களுக்கு உள்ளிட்டவர்கள். (அஉ)

பட்டகாரிவாயரவணிபவர்பசுபதியுருத்திரராதி
யட்டமூர்த்திகண்மேருவினவிர்சுடராடசர்கோடேந்து
மட்டறுமலர்மகன்செருக்கடங்கிடமயங்கியவிதிதேற்ற
நிட்டையாலவனெற்றியிற்றோன்றியநீலலோகிதநாதர்.

(இ-ள்.) காரி பட்ட வாய் அரவணி பவர் பசு பதி உருத்திரர் ஆதி அட்டமூர்த்திகள் - விஷம்பொருந்திய வாயையுடைய சர்ப்பாபரணங்களையணிந்த பவர் பசுபதி உருத்திரர்முதலாகிய அட்டமூர்த்திகளும், மேருவின் அவிர் சுடர் ஆடகர் - மேருமயமாய் விளங்குங் கிரணத்தையுடைய ஆடகேசுரர்களும், தோடு ஏந்தும் மட்டு அறு மலர்மகன் செருக்கு அடங்கிட - இதழ்களையேந்திய தேனொழுக்கறாத தாமரையில் வசிக்கும் பிரமன்செருக்கடங்க, மயங்கிய விதி தேற்ற - அவன்மறந்த சிருட்டித்தொழிலைத் தெளிவிக்க, நிட்டையால் அவன் நெற்றியில்தோன்றிய நீல லோகித நாதர் - நிட்டையினால் அவன்நெற்றியில் உதித்த நீலலோகித உருத்திரரும்.

பவர் முதலிய உருத்திராதி அட்டமூர்த்திகள் ஆவார் - பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், மாதேவன், உருத்திரனுமாம். இதனைக் கூர்மபுராணம் அட்டமூர்த்தி யியல்புரைத்த அத்தியாயத்தில்,

"எய்துநாமமென்னெனிற்பவன்சருவனீசானன்
வைதிகந்தருபசுபதிவீமனமாதேவ
னெய்திளம்பிறையணிந்திடுமுருத்திரனென்ப
வுமதிகழ்ந்தொளிர்கண்டனெண்வடிவமும்வகுப்பாம்"

எனவருஞ் செய்யுளாலும். ஆடகேசுரர் பாதாளத்துக்கு மேலுள்ள புவனத்தில் ஆயிரம்யோசனை உயரமுள்ள பொன்மயமான திருக்கோயிலுள் அசுரரும், நாகரும், அரக்கரும் சேவிக்க வீற்றிருப்பர். சிவதருமோத்தரம் கோபுரவியலில்.

"அதன்மேலேநவலக்கமாடகநாயகர்புரிதான
புதுமைதிகழ்மணிபொனனுல்யோசனையாயிரம்புகலிற்
கதமுடையசயித்தியர்களகட்டாவர்வெட்டரகர்
விதிமுறையிறைபதமபணியவீற்றிருப்பாராடகரே."

எனவருஞ் செய்யுளாலும். முனனொருகற்பத்தில் பிரமனானவன் மூன்று உலகங்களையுஞ் சிருட்டித்துத் தானேபரமெனறகங்காரங்கொண்டு சிவபெருமானைமறந்து சராசரங்களைச் சிருட்டிக்க, அவை பெருகாமையால் வருந்தி நிற்கும்போது திருமால் வந்து எமது முதல்வனாகிய சிவபெருமானை மறந்தமையால் அவை பெருகவொழிந்தன ஆதலின், இனியேனும அவனது திருவருளைப்பெறத தவம்புரிக என்றனன். அவ்வாறு தவம்புரிந்தும் சிவபெருமான் வெளிப்படாமையால் வருந்தி அழும்போது கண்ணீர்த்துளிகள் பசாசுகளாய் நெருங்க, அதனைக்கண்டு இறந்தவன்போல மூர்ச்சிக்க, அச்சிவபெருமான் கனவில் வந்தருளி உனனைப் பரமெனறு மதித்தமையால் சிருட்டித்தொழில் உனக்குக் கைகூடாமற்போயிற்று; அது கைகூடுமவண்ணம் நமது பததிலுள்ள உருத்திரகணத்தை அனுப்புவோம என்றருளி மறைந்தனன். அக்கனவுணர்ந்தெழுந்த அப்பிரமன் நல்லொழுக்கம பூண்டு மனந்தெளிந்து அச்சிவபெருமானை நிட்டைகூடிச்சிந்திக்க அச்சிவபெருமான் திருவருளால் பதினொரு உருத்திரர்கள் அவனெற்றியினின்றும வெளிப்பட்டுவந்து நிற்க, அவர்களை அப்பிரமன பார்த்து என்னெற்றியினின்று நீங்கள் வந்தகாரணம் யாதென்று வினவ உன் சிருட்டித்தொழில் முடித்தற்பொருட்டுச் சிவபெருமான எங்களையேவினன என்பதைக் காந்தபுராணம-அசுரகாண்டம,உருத்திரர்கேள்விப்படலத்தாலுமஉணர்க. நீலலோகிதநாதராவார அப்பதினொருவருள ஒருவர். அவாகள் திருநாமங்கள் முறையே பின்னர் வருதலைக்காண்க. (அ௩)

பாலமேற்றசெந்தழல்விழியுருத்திராபதினொருபெயாவாகைச
சூலமேற்றகங்காளகபாலியர்துரகதநெடுங்காரி
நீலமேற்றபைங்கஞ்சுகப்போர்வையினெடியவர்திருவாணைக்
கோலமேற்றவரொண்மர்ஞாளிப்புறங்கொண்ட.கேத்திரபாலர்.

(இ-ள்.) பாலம் செம் தழல் விழி ஏற்ற உருத்திரர் பதினொரு பெயர் - நெற்றியில் செவந்த தீக்கண்ணையுடைய ஏகாதச உருத்திரர்களும், வாகை சூலம் ஏற்ற கங்காளர் கபாலியர்-வெற்றியையுடைய சூலத்தையேந்திய முழுவெலும்பைத் தரித்தவரும் கபாலத்தைத் தரித்தவருமாகிய சிவகணத்தலைவர்களும், துரகத நெடும் காரி - குதிரையையுடையநெடியசாத்தனும், நீலம் ஏற்ற பைம் கஞ்சுகம் போர்வை

யின் நெடியவர் - கரிய பசிய சட்டையைத் தரித்த சிவகணத்தலைவரும், திருவாண கோலம் ஏற்றவர் - திருவாணகோலமுடையவராய், ஞாளி புறம் கொண்ட எண்மர் க்ஷேத்திர பாலர்-சுவானத்தின்மேற்கொண்ட எண்வகையராகிய க்ஷேத்திரபாலரும்.

உருத்திரர்கள் பதினொருவராவார்-மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசையன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமிய ன் இப்பதினோருருத்திரர்களும் ஒருங்கே தோற்றினவராகக் கூறியிருப்பினும் பிர மனுக்கு மயங்கிய சிருட்டியைத் தேற்றுவித்தற்பொருட்டு ஒவ்வொரு கற்பத்திலும் அவன் நெற்றியிலிருந்து தோன்றினவராகக்கொள்க. க்ஷேத்திரபாலராவார் - அசி தாங்கர், ருரு, சண்டர், குரோதனர், உன்மத்தர், கபாலி, பீஷணர், சங்கரர் ஆம்.

செய்யதாமரைக்கண்ணுடைக்கரியவன்செம்மலர்மணிப்பீடத்
தையன்வாசவனாதியெண்டிசைப்புலத்தமரரெண்வசுதேவர்
மையில்கேள்விசாலேழெழுமருத்துகண்மருத்துவரிருவோர்வான்
வெய்யவாள்வழங்காறிரண்டருக்கரோர்வெண்சுடர்மதிச்செல்வன்.

(இ-ள்.) செய்ய தாமரை கண் உடை கரியவன் - செவந்ததாமரைமலர்போ ன்ற கண்களையுடைய திருமாலும், செம் மலர் மணி பீடத்து ஐயன் - செந்தாமரை யாகிய அழகியபீடத்தில் வசிக்கும்பிரமனும், வாசவன் ஆதி எண் திசை புலத்து அமரர்-இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களும், எண் வசுதேவர்-அஷ்டவசுக் களும், மை இல் கேள்விசால் ஏழ் எழு மருத்துகள் - குற்றமற்ற நூற்கேள்வியில் மிக்க ஏழ் என்னுந்தொகைபெற்ற எழுமருத்துக்களும், மருத்துவர் இருவோர் - அச் சுவனிதேவர் இருவரும், வான் வெய்ய வாள் வழங்கு ஆறு இரண்டு அருக்கர்-ஆகா யத்தில் நின்று வெவ்வியகிரணத்தைவீசும் பனிரண்டு சூரியர்களும், வெண் சுடர் ஓர் மதி செல்வன்-வெள்ளியகிரணத்தையுடைய ஒருசந்திரனும். (அ௫)

கையுங்காலகளுங்கண்பெற்றுக்கதிபெறுகடும்புலிமுனிச்செல்வன்
பையராமுடிபதஞ்சலிபாற்கடல்பருகிமாதவன்சென்னி
செய்யதாள்வைத்தசிறுமுனிகுறுமுனிசிவமுணர்சனகாதி
மெய்யுணர்சியோராவாமதேவன்சுகன்வியாதனாரதன்மன்னோ.

(இ-ள்.) கையும் கால் களும் கண் பெற்று - கைகளிலும் கால்களிலும் கண் களைப்பெற்று, கதிபெற்ற கடும்புலி முனி செல்வன் - முத்தியடைந்த விளக்கத் தையுடைய வியாக்கிரபாதரும், அரா பை முடி பதஞ்சலி - பாம்பின்பணாமுடியை யுடைய பதஞ்சலிமுனிவரும், பால் கடல் பருகி - பாற்கடலைக்குடித்து, மாதவன் சென்னி-கண்ணமூர்த்தியின்சிரசில், செய்யதாள் வைத்த சிறுமுனி-தமது செவந்த திருவடிசூட்டிய உபமன்னியுமுனிவரும், குறுமுனி-அகத்தியரும், சிவம் உணர் சன காதிமெய்யுணர்ச்சியோர்-சிவத்தையுள்ளவாறுணர்ந்தசனகர்முதலியமெய்ஞ்ஞானத் தையுடைய நால்வகைமுனிவர்களும், வாமதேவன் சுகன் வியாதன் நாரதன்-வாம தேவமுனிவரும் சுகமுனிவரும் வியாதமுனிவரும் நாரதமுனிவரும்.

மத்தியந்தன முனிவர் தவத்தால் அவதரித்த மழமுனிவர் தமது தந்தையா ல் உணர்ந்து திருத்தில்லையடைந்து சிவபெருமானை வணங்கி அர்ச்சித்தற்கு வண்டு படுதல் முதலிய குற்றங்கள் ஒழிந்த மலர் கொய்தற்கு விடிதற்குமுன் சென்று மர ங்களேறிற் பனியால் கைகளுங் கால்களும் வழுக்குமே, இரவில் கண்டெரியாதே எ ன்று மனம்வருந்தும் அம்முனிவர்பால், சிவபெருமான் எழுந்தருளி நீ வேண்டிய வ

ரங் கூறுகவென்றருளக், கையுங் காலும் புலிபோலப்பெற்று அவைகளிற் கண்களும் உளவாக என இரந்துகேட்க, அவ்வாறே சிவபெருமான் தந்தருளி மறைந்தனன். புடைசூழ்ந்துவந்த சிவகணவீரர்கள் வியாக்கிரபாதனென் றழைத்தனர். அதுமுதல் வியாக்கிரபாதனெனப் பெயர்பெற்றனனென்பது. கோயிற்புராணம் வியாக்கிரபாத சருக்கத்தாலும், பாற்கடலுள் பள்ளிகொள்ளுந் திருமால் ஒருநாள் துணுக்கென த் துயிலுணர்ந்து அரகரவென்று தலைமேல் அஞ்சலிகூப்பிக் கண்கள் ஆனந்தபாஷ் பஞ்சிந்த அணைவற்றிருத்தலை அணையாயிருந்த ஆதிசேடர் கண்ணுற்றுத் தேவரீர் து யிலுணர்ந்து இவ்வாறிருத்தற்குக் காரணம் யாதுகொல் என்று வினவ, எமதிறைவ ன் தாருகாவனத்தில்ஆடியருளிய திருக்கூத்தைத் தரிசித்த இன்பத்தழுந்தினேனென் றுதிருவாய்மலர்ந்தருள; அத்திருமாலடால்விடைபெற்றுத திருக்கைலையி லொருபா ல்சென்றுதவஞ்செய்து காட்சிதந்தருளிய சிவபெருமானால் அத்திரி அனசூயை இய ற்றிய தவத்தால் அவ்வனசூயையின் அஞ்சலியிற்றோன்றிப் பாதத்தில் விழுந்த கார ணத்தால் பதஞ்சலி எனப்பெயர்வந்த நாமத்தோடு திருத்தில்லையிற்சென்று சிவபெ ருமானை வியாக்கிரபாதரோடு திருநடனதரிசனஞ் செய்தருளினனென்பது. ஷை புரா ணம் பதஞ்சலி சருக்கத்தாலும், தமது பிதாவாகிய மத்தியந்தன முனிவரனுஞையா ல் வியாக்கிரபாதர் வசிட்டமுனிவர் சகோதரியைத் திருமணஞ்செய்து பெற்ற உபம ன்னியுமுனிவர் வசிட்டர் பன்னியராகிய அருந்ததியார்பால் காமதேனுவின்பால் உ ண்டுவளர்ந்து, தமது தந்தையார் பன்னசாலைக்குவந்து அவர்கள் கொடுக்கும் உண வு காமதேனுகொடுக்கும் பால்போலில்லாமையால் அழுது சிவபெருமான் தந்தருளி ய திருப்பாற்கடலைப்பெற்று உண்டு களித்தனனென்பது. ஷை புராணம் வியாக்கிரபா தசருக்கத்தாலும், உபமன்னிய முனிவரிடத்தில் சிவதீக்கைபெற்றுப் பாசுபதவிரத ம் கண்ணன்பூண்டானென்பது. இலிங்கபுராணம், கண்ணன பாசுபதவிரதமுற்றாத்த வத்தியாயத்தில்.

> "பன்முறைக்கண்ணன்கன்றுநற்சாமிபூசனைபாற்படவாற்றிச்
> சொன்னநற்பாசுபதவிரதத்தைத்தூகளறவடைந்திடல்வேண்டி
> யென்னவரோனுமேத்திடச்சிவனையேத்துபமன்னியுவைகி
> மனனியசாலையடைந்தவன்றன்னைவலங்கொடுபணிந்தனனின்றான்."

> "நின்றவக்கண்ணனுளத்தினைத்தன்றுநிலவியவுளத்தினாலுணர்ந்து
> துன்றியவினைபோம்படியுறநோக்கித்தூயவெண்ணீறெடுத்தணியா
> வன்றவனுணர்ந்தவழியிலாப்பாசுபதவிரதத்தினையறைந்தான
> மன்றனனகுணாநறுமற்றவனீங்காப்பிறவிவாரிதியினைக்கடந்தான்."

எனவருஞ் செய்யுள்களாலும். அக்கண்ணன் அம்முனிவரிடத்தில் சிவதீக் கைபெற்றுத் தேகசுத்தி பெற்றானென்பது-காஞ்சிப்புராணம், தான்றோன்றீச்சரப் படலத்திலும் காணக. (அசு)

எழுவரன்னையர்சித்தர்விச்சாதரரியக்கர்கின்னரர்வேத
முழுவரம்புணர்முனிவர்யோகியர்மணிமுடித்தலைப்பலநாகர்
வழுவில்வான்றவவலியுடைநிருதர்வாள்வலியுடையசுரோசர்
குழுவொடும்பயில்பூதவேதாளர்வெங்கூளிகளரமாதர்.

(இ-ள்.) எழுவர் அன்னையர் - சத்தமாதரும், சித்தர்-சித்தரும், விச்சாதரர்- வித்தியாதரரும், இயக்கர் - இயக்கரும், கின்னரர்-கின்னரரும், வேதவரம்பு முழு து உணர் முனிவர் யோகியர் - வேதத்தின் எல்லைமுற்றுமுணர்ந்த முனிவர்களும்

யோகிகளும், மணிமுடி தலை பல நாகர் - மாணிக்கம்விளங்கும் பணாமுடியையுடைய நாகலோகத்திலுள்ள பலவுரகர்களும், வழுவில் வான் தவ வலியுடை நிருதர்- குற்றமில்லாத பெரியதவவலிமையையுடைய ராக்ஷதரும், வாள் வலியுடை அசுரேசர் - வாளின்வன்மையையுடைய அசுரேசரும், குழுவொடும் பயில் பூதவேதாளர் - கூட்டங்களோடு சஞ்சரிக்கும் பூதவேதாளர்களும், வெங்கூளிகள் - வெய்ய கூளிகளும், அரமாதர் - அரம்பைமாதர்களும். (௮௭)

ஆண்டிரேடயனம்பருவந்திங்களாறிரண்டிருபக்க
மீண்டுமைம்பொழுதியோகங்கள்கரணங்களிராப்பகலிவற்றேடும்
பூண்டநாழிகைகணமுதல்காலங்கள்பொருகடனதிதிக்கு
நீண்டமால்வரைதிக்கயமேகமின்னிமிர்ந்தவைம்பெரும்பூதம்.

(இ-ள்.) ஆண்டு அயனம் பருவம திங்கள் ஆறு இரண்டு இருபக்கம் - அறுபதுவருஷங்களும் இரண்டயனங்களும் ஆறுருதுக்களும் பன்னிரண்டுமாதங்களும் இரண்டுபக்ஷங்களும், ஈண்டும் ஐம்பொழுது யோகங்கள் கரணங்கள் இரா பகல் இவற்றேடும் - நெருங்கிய ஐம்பொழுதுகளும் யோகங்களும் கரணங்களும் இரவும் பகலுமாகிய இவைகளோடும், பூண்ட நாழிகை கணமுதல் காலங்கள் - பொருந்தியநாழிகைகளும் கணமுதலியகாலங்களும், பொருகடல் நதி திக்கு நீண்ட மால் வரை திக்கயம் மேகம் மின் நிமிர்ந்த ஐம் பெரும் பூதம் - (கரையோடு) மோதும் ஏழுகடல்களும் ஏழுநதிகளும் அஷ்டதிக்குகளும் நெடிய பெரிய அஷ்டகுலபருவதங்களும் அஷ்டகெஜங்களும் சத்தமேகங்களும் மின்னல்களும் உயர்ந்த பெரிய பிரிதிவிமுதலிய பஞ்சபூதங்களும். (௮௮)

மந்திரம்புவனங்கடத்துவங்கலைவருணங்கள்பதம்வேதந்
தந்திரம்பலசமயநூல்புறந்தழீஇச்சார்ந்தநூறருமாதி
முந்திரங்கியசதுவிதஞ்சரியையேமுதலியசதுட்பாத
மிந்திரங்குநீர்முடியவரடியவரிச்சியாவெண்சித்தி.

(இ-ள்.) மந்திரம்-சததகோடி மகாமந்திரங்களும், புவனங்கள் - இருநூற்றிருபத்துநான்கு புவனங்களும, தத்துவம்-முப்பத்தாறு தத்துவங்களும், கலை-பஞ்சகலைகளும், வருணங்கள் - ஐம்பத்தோரக்ஷரங்களும், பதம் - எண்பத்தொரு பதங்களும், வேதம் - நான்குவேதங்களும், தந்திரம்-இருபத்தெட்டாகமங்களும், பலசமயநூல் - அகச்சமயநூல்களும் அகப்புறச்சமய நூல்களுமாகிய பலசமயநூல்களும், புறம் தழுவி சார்ந்தநூல் - புறச்சமயநூல்களும் புறப்புறச்சமயநூல்களும், முந்து தருமாதி இரங்கிய சதுவிதம் - முதன்மையாயுள்ள தருமமுதலாகச்சொல்லப்பட்ட நான்கு உறுதிப்பொருள்களும், சரியையே முதலிய சதுட்பாதம் - சரியை முதலிய நான்குபாதங்களும், இந்து இரங்கு நீர் முடியவர் அடியவர் இச்சியா எண் சித்தி - சந்திரனையும் ஒலிக்குங் கங்கையுமணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானுடைய அடியவர்கள் விரும்பாத அஷ்டமாசித்திகளும்.

பலசமயநூல என்றதனால் அகமும், அகப்புறமும். புறந்தழீஇச்சார்ந்தநூல் என்றதனால் புறமும, புறப்புறமும் எனபபொருள்கொண்டாம். (௮௯)

ஆயிரங்கடலனையவாய்ப்பரந்தெழுமாயிரமனிகத்து
ளாயிரங்கதிரனையராயுருத்திரராந்தரத்தவரண்ட
மாயிரந்தகர்பட்டெனத்துந்துபியாயிரங்கலந்தார்ப்ப
வாயிரஞ்சதகோடியோசனைவழியளாக்கணத்திடைச்செல்வார்.

(இ-ள்.) ஆயிரம் கடல் அனையவாய் பரந்து எழும் - எண்ணிறந்த கடல்களொப்பனவாகிப் பரந்தெழுந்த, ஆயிரம் அனிகத்தர்கள் - எல்லையில்லாதசேனைகளுள், ஆயிரம் கதிர் அனையராய் — (உதித்த) வரம்பில்லாத சூரியர்களை யொத்தவராய், உருத்திரர் அக்தரத்தவர் - உருத்திரர்களுந் தேவர்களும், ஆயிரம் அண்டம் தகர்பட்டன என - பல்லாயிரவண்டங்களும் உடைபட்டன வென்றுசொல்ல, ஆயிரம் துந்துபி கலந்து ஆர்ப்ப - அனேகவாச்சியங்கள் தம்முட்கலந்து ஒலிக்க, ஆயிரம் சதகோடி யோசனை வழி அரை கணத்திடை செல்வார் - இலக்ஷங்கோடி யோசனைவழியை அரைக்ஷணப்பொழுதில் செல்லத்தொடங்கினார்கள்.

ஆயிரம் சதம். பண்புத்தொகைநிலைத்தொடராதலால் இலக்ஷம் என்றும். கூ0

சித்தந்தேர்முனிவேந்தருந்தேவருஞ்சிவனுருத்தரித்தோருந்
தத்தந்தேர்முதலூர்தியர்வார்திகழ்சந்தனமணிகொங்கைக்
கொத்தந்தேமலர்க்குழன்மனையாரொடுங்குளிர்விசும்பாறுச்சென்
றத்தந்தேரிடையாள்பங்கனணிவரைக்கணியராய்வருகின்றார்.

(இ-ள்.) சித்தம் தேர்முனி வேந்தரும் - மனந்தெளிந்த முனிசிரேஷ்டர்களும், தேவரும் - தேவர்களும், சிவன் உரு தரித்தோரும் - உருத்திரர்களும், தத்தம் தேர் முதல் ஊர்தியர் - தத்தமக்குரிய தேர்முதலிய வாகனங்களையுடையவராய், வார் திகழ் சந்தனம் அணி கொங்கை - கச்சுவிளங்கும் சந்தனக்குழம்பணிந்த அழகியதனங்களையும், அம் தேமலர் கொத்து குழல் மனையாரொடும் - அழகியதேன் சிந்தும் பூங்கொத்தையணிந்த கூந்தலையுமுடைய (தத்தம) மனைவியர்களோடும், குளிர் விசும்பு ஆறாக சென்று - குளிர்ந்தவாகாயமே வழியாகச்சென்று, அத்தந்தேர் இடையாள் பங்கன் அணிவரைக்கு - அந்த நூலிழையையொத்த இடையையுடைய உமாதேவியை யிடப்பாகத்திலுடைய சிவபெருமான் வீற்றிருக்கும் அழகிய கயிலைமலைக்கு, அணியராய்வருகின்றார் - சமீபித்தவர்களாகி வருகின்றார்கள்.

சிவனுருத்தரித்தோர் சிவபெருமான்றந்த உருத்திரர். (கூக)

இழிந்தவூர்தியர்பணிந்தெழும்யாக்கையரிறைபுகழ்திருநாம
மொழிந்தநாவினர்பொடிப்பெழுமெய்யினர்முகிழ்த்தகைமுடியேறக்
கழிந்தவன்பினர்கண்முதல்புலன்கட்குங்கருணைவான்சுவையூறப்
பொழிந்தவானந்தத்தேனுறைதிருமலைப்புறத்துவண்டெனமொய்த்தார்.

(இ-ள்.) இழிந்த ஊர்தியர் - (இவவாறுவந்தவர்கள் தத்தமக்குரிய) வாகனத்தினின்றும் இறங்கினவர்களாய், பணிந்து எழும் யாக்கையர் - (தண்டாகாரமாகப்) பணிந்து எழும் சரீரத்தையுடையவர்களாய், இறை புகழ் திருநாமம் மொழிந்த நாவினர் - சிவபெருமானுடைய புகழையும் திருநாமங்களையும் எடுத்துக்கூறும் நாவினையுடையவர்களாய், பொடிப்பு எழும் மெய்யினர் - புளகரும்பும் உடலையுடையவர்களாய், முகிழ்த்த கைமுடி ஏற கழிந்த அன்பினர் - கூப்பியகைகள் தமதுசிரத்தின்மேலேற மிக்க அன்பினையுடையவர்களாது, கண்முதல் புலன்கட்கும் கருணைவான் சுவை ஊற - கண்முதலிய பஞ்சேந்திரியங்கட்குங் கிருபை என்னும் பெரிய சுவை ஊறும்படி, பொழிந்த ஆனந்தத்தேன் உறைதிரு மலைப்புறத்து - பொழிந்த ஆனந்தத்தேனாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கைலைமலையின் சாரலில்வந்து, வண்டு என மொய்த்தார் - வண்டுகள்போல ஆரவாரித்து நெருங்கினார்கள்.

எப்பொருள்களும் சிவபெருமான் வசத்தனவாக்கும் கட்டுப்பாடுடையரென் பார் - கழிந்தவன்பினர் எனவும், அங்ஙனநின்ற அன்பர்களது கண்முதலியபுலன் கள் அவனது திருவருட்சுவைப்பெருக்கில் இடைவிடாது அழுந்திநிற்பனவென் பார், கருணைவான்சுவையூற எனவும், முதிர்சுவையைத்தருவது தேனுதல்போல அருட்சுவையைத் தருவோனவனுதலின் தேனுகவும் கூறினர். சிவபெருமானைத் தே னுக உருவகஞ்செய்தமையின் - அன்பினரை வண்டுகளாகவும், கருணையைச் சுவை யாகவும் உருவகஞ்செய்தார். தேன்மலைக்குரிய கருப்பொருளாதலின் தேனுறை திருமலை என்றார். ஊர்தியர் முதலிய குறிப்புவினைமுற்றுகள் எச்சமாய் வேறுபல வுடுக்கி அன்பினர் என்னுங் குறிப்புவினைமுற்றைத் தனித்தனிகொண்டன. (௬௨)

விரவுவானவர்நெருக்கறவொதுக்குவான்வேத்திரப்படையோச்சி
யரவுவார்சடைநந்தியெம்பிரானவரணிமணிமுடிதாக்கப்
பரவுதூளியிற்புதைபடுகயிலையம்பருப்பதம்பகல்காலு
மிரவிமண்டிலத்தொடுங்குநாளொடுங்கியவிந்துமண்டிலமானும்.

(இ-ள்.) விரவுவானவர் நெருக்கு அற ஒதுக்குவான் - (தெரிசனத்துக்குவந் து) கலந்துநெருங்கியதேவர்கள் நெருக்கமற வொதுக்கும்பொருட்டு, அரவு வார் சடை எம்பிரான் நந்தி - சர்ப்பமணிந்த நீண்டசடையையுடைய எமதுகடவுளாகிய நந்திநாயனர், வேத்திரப்படை ஓச்சி - வேத்திரப்படையைவீசி, அவர் அணி மணி முடிதாக்க - அந்தத்தேவர்களணிந்த இரத்திநக்கிரீடங்களில் தாக்குதலால், பரவு தூளியில் புதைபடு கயிலையம் பருப்பதம் - (உதிர்ந்து) பரவிய இரத்தினத்துகளிற் புதைபட்ட திருக்கைலைமலை, பகல் காலும் இரவி மண்டிலத்து ஒடுங்குநாள் - ஒளி வீசுஞ் சூரியமண்டிலத்தில் அமாவாசையில், ஒடுங்கிய இந்துமண்டிலம் மானும் - ஒடுங்கிய சந்திரமண்டிலத்தையொக்கும்.

இரத்தினத்துகள் - இரவிமண்டிலமாகவும், திருக்கயிலை - சந்திரமண்டிலமா கவுங்கூட்டி ஒப்புமைக்கூட்ட வணியாகக்கொள்க. வேத்திரம்-பிரம்பு. (௬௩)

வந்தவானவர்புறநிற்பநந்தியெம்வள்ளலங்குள்ளெய்தி
யெந்தைதாள்பணிந்தையவிண்ணவரெலாமீண்டினுரெனவீண்டுத்
தந்திடென்னவந்தழைத்துவேத்திரத்தினூற்றராதரந்தெரிந்துய்ப்ப
முந்திமுந்திவந்திறைஞ்சினர்சேவடிமுண்டகமுடிசூடி.

(இ-ள்.) வந்த வானவர் புறம் நிற்ப - வந்ததேவர்கள்புறத்தில் நிற்க, எம் வள்ளல் நந்தி அங்கு உள் எய்தி - எமது வள்ளலாகிய நந்திநாயனர் அங்கு உள் ளேசென்று, எந்தை தாள் பணிந்து ஐய விண்ணவர் எல்லாம் ஈண்டினுர் என-எமது தந்தையாகிய சிவபெருமான் திருவடிகளைவணங்கி ஐயனே தேவர்களெல்லாம் வந்து நெருங்கினுர்கள் என்றுகூற, ஈண்டு தந்திடு என்ன - அவர்களை இவ்விடத் துத்தருகவெனக் கட்டளையிட, வந்து அழைத்து வேத்திரத்தினுல் தராதரம் தெரி ந்து உய்ப்ப - (அந்தத்தேவர்களை) வந்தழைத்துத் (தமதுகையிலேந்திய) வேத்திர ப்படையினுல் (அவரவர்கள்) தாரதம்மியந்தெரிந்து குறித்துச்செலுத்த, சேவடி முண்டகம் முடி சூடி - (அச்சிவபெருமான்) செவந்ததிருவடித்தாமரைகளை (தமது) முடிகள்சூட, முந்தி முந்தி வந்து இறைஞ்சினர் - (அததேவர்கள்) ஒருவர்பின் ஒரு வர்வந்து வணங்கினுர்கள்.

சூடி செயவெனெச்சத்திரிபு. (௬௪)

*தீர்த்தன்முன்பணிந்தேத்துகின்றோர்களிற்சிலர்க்குத்தன்றிருவாயின்*
*வார்த்தைநல்கியுஞ்சிலர்க்கருண்முகிழ்நகைவழங்கியுஞ்சிலர்க்குக்கண்*
*பார்த்துநீண்முடிதுளக்கியுஞ்சிலர்க்கருட்பரிசிறந்தெழுந்தண்டங்*
*காத்தகண்டனோர்மண்டபத்திடைபுக்குக்கடிமணக்கவின்கொள்வான்.*

(இ-ள்.) தீர்த்தன் முன் பணிந்து ஏத்துகின்றோர்களில் சிலர்க்கு - சிவபெருமான் திருமுன்வணங்கித் துதிக்கின்றவர்களுள் சிலருக்கு, தன் திருவாயின் வார்த்தை நல்கியும் - தனது திருவாக்கினால் வார்த்தையருளியும், சிலர்க்கு அருள் முகிழ் நகை வழங்கியும் - சிலர்க்குக் கருணையோடு புன்னகையரும்பியும், சிலர்க்குக் கண் பார்த்தும் - சிலர்க்குத் திருநோக்கருளியும், சிலர்க்கு நீள்முடி துளக்கியும் - சிலர்க்கு எட்டுதற்கரிய திருமுடியை அசைத்தும், அண்டம் காத்த கண்டன் - (பல்லாயிரகோடி) அண்டங்களையும் விஷத்தாற்பொன்றுதகாத்தருளிய ஸ்ரீகண்டத்தையுடைய அப்பெருமான், அருள் பரிசில் தந்து எழுந்து - (இவ்வாறு) அருட்கொடைதந்து (அங்குநின்றும்) எழுந்து, ஓர் மண்டபத்து இடை புக்கு - ஒருமண்டபத்தின்கண் எழுந்தருளி, கடிமணம் கவின் கொள்வான் - திருக்கலியாணக்கோலங்கொண்டருளக்கருத.

கொள்வான்-வான்விகுதி நிகழ்காலவினையெச்சப்பொருளில்வந்தது. (௧௫)

*ஆண்டநாயகன்றிருவுளக்குறிப்புணர்ந்தளகைநாயகனுள்ளம்*
*பூண்டகாதன்மேற்கொண்டெழுமன்புந்தன்புனிதமெய்த்தவப்பேறு*
*மீண்டவாங்கணைந்தெண்ணிலாமறைகளுமிருவருமுனிவோருந்*
*தீண்டருந்திருமேனியைத்தன்கையாற்றீண்டிமங்கலஞ்செய்வான்.*

(இ-ள்.) ஆண்ட நாயகன் திருவுளக்குறிப்புணர்ந்து - பல்லுயிர்களையும் அடிமைகொண்டருளிய சிவபெருமான் றிருவுள்ளக்குறிப்புணர்ந்து, அளகை நாயகன் - குபேரன், உள்ளம் பூண்ட காதல் மேற்கொண்டு எழும் அன்பும் - மனத்திலுள்ள ஆசை மீக்கொள்ளுதலால் எழுந்தவன்பும், தன் புனித மெய் தவப் பேறும் - தனது புனிதமாகிய மெய்த்தவப்பயனும், ஈண்ட ஆங்கு அணைந்து - வந்துகைகூட அத்திருமண்டபத்திற்சென்று, எண் இலா மறைகளும் - அளவில்லாத வேதங்களும், இருவரும் - பிரமனுந் திருமாலும், முனிவோரும் - முனிவர்களும், தீண்டு அரும் திருமேனியை - பரிசித்தற்கரியதிருமேனியை, தன்கையால் தீண்டி மங்கலம் செய்வான் - தனதுகைகளாற்பரிசித்துத் திருமணக்கோலஞ்செய்யத்தொடங்கினான். (௧௬)

*பூந்துகிற்படாங்கொய்சகத்தானைபின்போக்குகோவணஞ்சாத்தி*
*யேந்திரட்டைஞாண்பட்டிகையிறுக்கிவண்டினர்க்குநாண்மலர்க்குஞ்சி*
*வேய்ந்துகற்பகப்புதுமலர்ச்சிகழிகைமிலைந்துநீறணிமெய்யிற்*
*சாந்தமான்மதந்தண்பனிநீரளாயத்தடக்கையான்மட்டித்தான்.*

(இ-ள்.) பூ துகில் படாம் - அழகியவஸ்திரத்தை, கொய் சகத்தானை - கொய்சகத்தானையாகவும், பின் போக்கு கோவணம் சாத்தி - பின்புறத்திற் போக்குகின்ற கோவணமாகவுஞ்சாத்தி, ஏந்து இரட்டை ஞாண் பட்டிகை இறுக்கி - (அதன்மேல்) அழகுமிக்க இரட்டையாயுள்ள அரை ஞாணோடு பட்டிகையையும் இறுக்கிச் சாத்தி, வண்டு இரைக்கும் நாள் மலர் குஞ்சி வேய்ந்து - வண்டுகளொலிக்கும் அ

ன்றலர்ந்த மலர்களையணிந்த சிகையைக் கொண்டையாகப்புனைந்து, கற்பகம் புது மலர் சிகழிகை மிலைந்து - கற்பகத்தினது புதியமலரால்தொடுத்த மாலையை (அதன்மேற்) சூட்டி, நீறு அணி மெய்யில் - விபூதியையணிந்த திருமேனியில், சாந்தம் மான்மதம் தண்பனி நீர் அளாய் - சந்தனத்தோடு மிருகமதத்தையுந் தண்ணிய பனிநீரையுங்கலந்து, தடக்கையால் மட்டித்தான்-(தனது) நீண்டகையினால்பூசினான்

இரண்டுசெஞ்சுடர்நுழைந்திருந்தாலென்னவிணைமணிக்குழைக்காதிற்
சுருண்டதோடுபொற்குண்டலந்திணியிருடுரந்துதோட்புறந்துள்ள
மருண்டதேவரைப்பரமெனமதிப்பவர்மையல்வல்லிருண்மான
விருண்டகண்டமேன்முழுமதிகோத்தெனவிணைத்தகண்டிகைசாத்தி.

(இ-ள்.) மணி குழை - அழகிய சங்ககுண்டலம் (அணிந்த) இணை காதில்- இரண்டுதிருச்செவியிலும், இரண்டு செம் சுடர் நுழைநது இருந்தால் என்ன - இரண்டு செந்நிறம்வாய்ந்த சூரியர்கள் குடிகொண்டிருந்தாற்போல, சுருண்ட பொன் தோடு குண்டலம் - சுருண்டவடிவாகச்செய்த பொற்றோடும் பொற்குண்டலமும், திணி இருள் துரந்து தோள் புறம் துள்ள - செறிந்த இருளையோட்டித் தோட்புறத்திலசைந்தாடத் (தரித்தும்) மருண்ட தேவரை பரம் என மதிப்பவர் மையல் வல் இருள் மான - (மலமயக்கத்தால் நாம்பரமென) மருட்சியடைந்த தேவர்களைப்பரமென்று மதிப்பவர்களுடைய மயக்கமாகிய வலிய இருளை ஒப்ப, இருண்ட கண்ட மேல் முழுமதி கோத்தால் என்ன - கறுத்தகண்டத்தின்மேல் பூரணசந்திரனைக்கோவைசெய்தாற்போல, இணைத்தகண்டிகை சாததி - இணைந்துச்செய்த முத்துக்கண்டிகையைத்தரித்தும்.

தம்மை ஒடுக்கி மீட்டருளும் இறைவனை அதிகாரத்தால் தம்மோடொருசேரவைத்தெண்ணுந் தன்மையராதலின் மருண்டதேவர் எனவும், அதுபற்றிவிரிந்த நூல்களைக்கொண்டு அவர்களைப்பரமென்று கருதுவோர் அறிவு மயக்க அறிவாதலின் அவர்களறிவை மையல் வல்லிருள் எனவுங்கூறினார்.

"சாவமுன்னாட்டக்கன்வேள்வித்தகர்தின்றுநஞ்சமஞ்சி
யாவவெந்தாயென்றவிதாவிடுநம்மவரவரோ
மூவரொன்றேயெம்பிரானொடுமெண்ணிவிண்ணாண்டுமண்மேற்
றேவரொன்றேயிறுமாந்தென்னபாவந்திரிதவரே."
எனவருந்திருவாசகம் - திருச்சதகத்தானும்.

"முளரியோன்முதலாஞ்சுரரெலாம்பூதமுதலவற்றேடுதித்துள்ளோ
ரளவிடுந்தலைமையாளரென்றவரையகறறிமால்விடையவனினையே
வளமுறுமெல்லாத்தலைமையுமுடையோன்வருமுதற்காரணனல்லோ
ருளமுறுதியானப்பொருளெனச்சிகைதேர்ந்துரைப்பவுமயங்குவர்சிலரே."
எனவருஞ்சிவதத்துவவிவேகத்தானுமுணர்க. (கூஅ)

வலங்கிடந்தமுந்நூல்வரையருவியின்வயங்குமார்பிடைச்சென்னித்
தலங்கிடந்தவெண்டிங்களுற்றமுதெனத்தரளமாலிகைசாத்தி
யிலங்கிடந்தமாலிகைப்பரப்பிடையியைத்திருண்மூகம்பிளந்தாரங்
கலங்கிடந்தபாற்கடன்முளைத்தெழுமிளங்கதிரொனக்கவின்செய்து.

(இ-ள்.) வலம் கிடந்த முந்நூல் - வலப்புறத்திற்கிடந்தசையும் முந்நூலானது, வரை அருவியின் வயங்குமார்பு இடை - மலையினின்றிழியும் அருவிபோலவிள

க்கும் மார்பினிடத்து, சென்னி தலம் கிடந்த வெண் திங்கள் - சடாமுடியிற்குடி கொண்ட வெள்ளியசந்திரன், ஊற்று அமுது என தரள மாலிகை சாத்தி-ஊற்றும் அமுதம்போல முத்துமாலையைச்சாத்தியும், இலங்கிடு அந்தமாலிகை பரப்பு இடை-அத்திருமார்பில்விளங்கும் அந்த முத்துமாலைப்பரப்பின்மத்தியில், இருள் முகம் பிளந்த ஆரம் - இருள்முகத்தைபோட்டிய மாணிக்கவடத்தை, கலம் கிடந்த பால் கடல் முளைத்து எழும் இளம் கதிர் என இயைத்து - மரக்கலங்களேந்திய திருப்பாற்கடலில் முளைத்தெழுந்த இளஞ்சூரியனைப்போலத்தரித்து, கவின் செய்து - அழகு செய்தும்.

பிறந்த-அகரவீறுதொகுத்தல். இனம்பற்றிக்கலங்கிடந்த பாற்கடல் என்றார்: ஒருதொடரின்கண்வந்த உவமைதோறும் உவமைச்சொற்றேன்றப் புணர்த்திக்கூறுதலால் பலவயிற்போலியணி. (௯௯)

திசைகடந்தநாற்புயங்களிற்பட்டிகைசேர்த்துவாளெறிக்குந்தோ
ணசைகடந்தநல்லார்மனங்கவர்ந்துயிர்நக்கவங்கதஞ்சாத்தி
யசைகடங்கலுழ்வாரணவுரிவைநீத்தணிகொளுத்தரீயம்பெய்
திசைகடந்தமந்திரபவித்திரமெடுத்தெழில்விரனுழைவித்து.

(இ-ள்.) திசை கடந்த நால் புயங்களில் பட்டிகை சேர்த்து - திசைகளைக்கடந்த நான்குதிருப்புயங்களிலும் பட்டிகைகளைத்தரித்தும், வாள் எறிக்கும் தோள்-ஒளிவீசும் அத்திருத்தோள்களில், நசைகள் தந்த நல்லார் மனம் கவர்ந்து - காமவிருப்பமிக்க பெண்களின் மனத்தைக்கொள்ளைகொண்டு, உயிர் நக்க அங்கதம் சாத்தி - அவருயிர்களைப்பருகும் வாகுவலயங்களைத்தரித்தும், கடம் கலுழ் அசை வாரணம் உரிவை நீத்து - மதத்தைச்சிந்தும் அசைவாடிநிற்கும் யானையின்போர்வையை நீக்கி, அணிகொள் உத்தரீயம் பெய்து - அழகுசெய்யும் உத்தரீயத்தைச் சாத்தியும், இசைகடந்த மந்திரபவித்திரம் எடுத்து - சொல்லளவைக்கெட்டாத மந்திரவடிவாகிய பவித்திரத்தையெடுத்து, எழில் விரல் நுழைவித்து - அழகியவிரலில் தரித்தும்.

உயிர்நக்க எனத் தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாகக் கூறியது காலவழுவமைதி. (௧00)

உடுத்தகோவணமிசைப்பொலந்துகிலசைத்துரகமைந்தலைநால
விடுத்தபோல்வெயின்மணித்தலைகொடுக்குமின்விடவிருபுறந்தூக்கித்
தொடுத்ததார்புயந்தூக்கிநூபுரங்கழல்சொற்பதங்கடந்தன்பர்க்
கடுத்ததாளிலிட்டிருநிதிக்கோமகனருந்தவப்பயன்பெற்றான்.

(இ-ள்.) உடுத்த கோவணம் மிசை பொலம் துகில் அசைத்து - உடுத்தகோவண உடையின்மேல் பீதாம்பரத்தை யிறுகக்கட்டி, உரகம் ஐந்தலை நால விடுத்த போல் - சர்ப்பமானது ஐந்துதலைகளையுந்தொங்கவிட்டதுபோல, வெயில் மணி தலை கொடுக்கு மின் விட - ஒளிவீசும் மாணிக்கத்தாற்செய்த தலைக்கொடுக்குகளைப் பிரகாசிக்கும்படி (அப்பீதாம்பரத்தின்மேல்,) இரு புறம் தூக்கி - இருபுறத்திலுந்தொங்கவிட்டும், தொடுத்த தார் புயம் தூக்கி - மலராற்றொடுத்த பூமாலைகளைப் புயங்களில் அசையச் சாத்தியும், சொல் பதம் கடந்து அன்பர்க்கு அடுத்த தாளில்-சொல்லளவையைக் கடந்து அடியார்களுக்குச் சமீபித்ததிருவடியில், நூபுரம் கழல் இட்டு-

சிலம்பையும் வீரகண்டையும் தரித்தும், இரு நிதி கோமகன் - சங்கநிதிக்கும் பதும நிதிக்கும் இறைவனாகிய குபேரன், அரும் தவப் பயன் பெற்றான் - செய்தற்கரிய தவங்களாலாகிய பயன்களை (ஒருசேரப்) பெற்றான்.

கொடுக்கு ஞிருவகையாபரணம். பதம் அளவு "சொற்பதங்கடந்த தொல்லோன்காண்க" எனத்திருவண்டப்பகுதித்திருவகவலுள் வருதல்காண்க. (௧0௧)

செங்கண்மாலயனிந்திரன்முதல்பெருந்தேவர்க்கும்யாவர்க்கு
மங்கலந்தருகடைக்கணாயகனொருமங்கலம்புனைந்தான்போற்
சங்கைகொண்டுகும்போதரன்முதுகின்மேற்சரணம்வைத்தெதிர்போந்த
துங்கமால்விடைமேற்கொடுநடந்தனன்சுரர்கள்பூமழைதூர்த்தார்.

(இ-ள்.) செங்கண் மால் அயன் இந்திரன் முதல் பெரும் தேவர்க்கும் யாவர்க்கும் - சிவந்தகண்களையுடைய திருமால் பிரமன் இந்திரன்முதலிய பெரியதேவர்களுக்கும் ஏனையோர்களுக்கும், மங்கலம் தரு கடைக் கண் நாயகன் - மங்கலந்தருகின்ற கடைக்கண்ணையுடைய சிவபெருமான், தான் ஒரு மங் கலம் புனைந்தான்போல் சங்கை கொண்டு-தானொரு மங்கலங் கொண்டருளினவனைப்போல எண்ணங்கொண்டு, கும்போதரன் முதுகின்மேல் சரணம் வைத்து - கும்போதரனது முதுகின்மேல் திருவடியைவைத்து, எதிர் போந்த துங்கம் மால் விடைமேற் கொண்டு நடந்தனன் - எதிரேவந்த உயர்ந்த மால்விடைமேல் ஆரோகணித்து நடந்தருளினான், சுரர்கள் பூமழை தூர்த்தார் - தேவர்கள் புஷ்பவருஷம் பொழிந்தார்கள்.

பிரமன் முதலிய எல்லாவுயிர்களுக்கும் மங்கலந்தருவோன் தனக்கொருமங்கலம் வேண்டாமையின் மங்கலம் புனைந்தானபோல் சங்கைகொண்டு எனக்கூறினார். (௧0௨)

அந்தரத்தவரந்தரதுந்துபியைந்துமார்த்தனர்சூழ
வந்தரக்கருமியக்கரும்பூதருமங்கலவியங்கல்லக்
கொந்தலர்க்கருங்குழலரமடந்தையர்கொளைவல்விஞ்சையர்தாளந்
தந்தசைத்திடமலர்ந்தபூங்கொம்பர்போற்சாய்ந்தசைந்தனராட.

(இ-ள்.) அந்தரத்தவர் அந்தர துந்துபி ஐந்தும் ஆர்த்தனர் சூழ- தேவர்கள் தேவதுந்துபி யைந்தையும் முழக்கிச் சூழ்ந்துவரவும், அரக்கரும் இயக்கரும் பூதரும் வந்து மங்கல இயம் கல்ல - அரக்கரும் இயக்கரும் பூதர்களும் வந்து மங்கல வாத்தியங்களைக் கல்லென்று முழக்கவும், கொளை வல் விஞ்சையர் தாளம் தந்து அசைத்திட - இசையில்வல்ல வித்தியாதரர்கள் தாளம்போட்டாட்டுவிக்க, மலர்ந்த பூங் கொம்பர் போல் - கொத்தலர்ந்த பூங்கொம்பைப்போல, கொந்து அலர் கரும் குழல் அரமடந்தையர் - பூங்கொத்தையணிந்த கரியகூந்தலையுடைய தெய்வப்பெண்கள், சாய்ந்து அசைந்தனர் ஆட - சாய்ந்தசைந்து (ஒருபால்) ஆடவும்.

ஆர்த்தனர், அசைந்தனர் என்னும் வினைமுற்றுகள் எச்சங்களாய் நின்றன. கொம்பர் - இறுதிநிலைப்போலி. அசைத்த என்னுந்தொழில் நிகழ்ச்சியாலாடவென்னும் பொருணிகழ்ச்சிதோன்ற உபசரித்தார். (௧0௩)

துங்கமாயிரங்கருவியாயிரமலைத்தூங்கிருண்முழைதோறுஞ்
சிங்கமாயிரம்வாய்திறந்தார்த்தெனச்சிரங்களாயிரந்திண்டோ

சிங்கமாயிரமாயிரமுடையவனுயிரமுகந்தோறுஞ்
சங்கமாயிரமாயிரமாயிரந்தடக்கையும்பிடித்தூத.

(இ-ள்.) துங்கமாய் இரங்கு அருவி மலை யிருள் தூங்கு ஆயிரம் முழை தொறும் - பரவி ஒலிக்கும் அருவிகளையுடைய மலையிலுள்ள இருள்குடிகொண்ட ஆயிரங் குகைகள்தோறும், ஆயிரம் சிங்கம் வாய் திறந்து ஆர்த்தால் என்ன - ஆயிரஞ் சிங்கங்கள் வாய்திறந்து ஒலித்தாற்போல, ஆயிரம் சிரங்கள் ஆயிரம் ஆயிரம் திண்தோள் அங்கம் உடையவன் - ஆயிரஞ் சிரங்களையும் இரண்டாயிரம் திண்ணிய புயங்களையும் உடைய பாணுகம்பன், ஆயிர முகந் தோறும் ஆயிரம் சங்கம் ஆயிரம் ஆயிரம் தடக்கையும் பிடித்து ஊத - ஆயிரம் வாய்கள்தோறும் ஆயிரஞ்சங்குகளைவைத்து நீண்ட இரண்டாயிரங்கைகளாலும் பிடித்து ஒருபால் ஊதிவரவும். (௧௦௪)

போக்குமாயவன்புணர்ப்பையுமிருண் மலப்புணர்ப்பையுங்கடந்தெம்மை
காக்குநாயகனருச்சனைவிடாதருட்கதியடைந்துளவாணன் [க்
றாக்குநேர்படவாயிரங்கரங்களாற்றொம்மெனமுகந்தோறுந்
தாக்கவேறுவேறெழுகுடமுழாவொலிதடங்கடலொலிசாய்ப்ப.

(இ-ள்.) போக்கு மாயம் வன் புணர்ப் பையும்-ஒழிக்கத்தக்க மாயையின் வலியதொடக்கையும், இருள் மலப் புணர்ப்பையும் கடந்து - ஆணவ மலத்தொடக்கையுநீக்கி, எம்மை காக்கு நாயகன் - எம்மைப் பாதுகாக்குஞ் சிவபெருமானை, அருச்சனை விடாது அருள் கதி அடைந்துள வாணன் - அருச்சிக்கும் பூசனைத்தொழிலைக் கைவிடாமல் (அவனது) திருவருளால் முத்தியடைந்த வாணனானவன், தூக்கு நேர்பட ஆயிரம் கரங்களால் - பாடலுக்கு ஒக்க (தனது) ஆயிரங்கைகளினால், முகம் தோறும் தாக்க-முகங்கள்தோறும் மோத, தொம் என வேறு வேறு எழு குடமுழா ஒலி - தொம்மென்று வெவ் வேறு வோசையா யெழும் குடமுழாவினது வொலி, தடங் கடல் ஒலி சாய்ப்ப - (ஒருபால்) பெரிய கடலினது ஒலியைக்கீழ்ப்படுத்தவும்.

ஆயிரங்கரங்கள் என்றமையால் - குடமுழாவும் ஆயிரமுகங்களை யுடையதென்பார் - முகந்தொறும் என்றார். அஞ்ஞானம், பொய், அயர்வு, மோகம், சூனியம், ஆச்சரியம், பயம் ஆகிய மாயைத்தொடக்கையும், சங்கற்பம், விகற்பம், குரோதம், மோகம், கொலை, அஞர், மதம், நகை ஆகிய இருண்மலத் தொடக்கையும் இயல்பாகவே நீங்கி நிற்குமிறைவன் அறுதியே அம்மலங்களாற் சிமிழ்ப்புண்டு கிடக்கும் ஆன்மாக்களை மீளாவடிமையாக்கிக்கொள்ளும் இயல்பினனென்பார் - போக்குமாயவன்புணர்ப்பையும் இருண்மலப் புணர்ப்பையுங் கடந்து எம்மைக் காக்குநாயகன் என்றார். (௧௦௫)

முனிவரஞ்சலிமுகிழ்த்தசெங்கையினர்மொழியுமாசியருள்ளங்
கனிவரும்பியவன்பினர்பரவுட்கருத்தொடுவழிக்கொண்டோர்
துனிவருங்கணநாதர்கொட்டதிர்கரத்துணையினர்மழைபோலப்
பணிவருங்கணராடியதாளினர்பாடுநாவினரோத்த.

(இ-ள்.) முனிவர் அஞ்சலி முகிழ்த்த செம் கையினர் - முனிவர்கள் அஞ்சலித்துக் கூப்பிய செவந்த கைகளையுடையவர்களாகியும், மொழியும் ஆசியர்-சொல்லுகின்ற ஆசீர்வசனங்களையுடையவர்களாகியும், உள்ளம் கனிவு அரும்பிய அன்பினர் பரவ - மனத்திற் கனிந்துதோன்றிய அன்பினராகியும் (ஒருபால்) துதித்துவர

வும், உள் கருத்தொடு வழிக் கொண்டோர் துனிவு அரும் கண நாதர் - இணங்கிய மனத்தோடு வழிக்கொண்டு நடக்கின்ற துன்பமில்லாத கணநாதர்கள், கொட்டு அதிர் கரத் துணையினர் - கொட்டி அதிர்க்கும் இரண்டு கைகளை யுடையவர்களாகியும், மழைபோல் பனிவரும் கண்ணர் - மழைபோல ஆனந்தபாஷ்பங்களைச் சிந்துங் கண்களையுடையவர்களாகியும், ஆடிய தாளினர் - ஆடுகின்ற கால்களை யுடையவர்களாகியும், பாடு நாவினர் - பாடுகின்ற நாவினை யுடையவர்களாகியும், எத்த - (ஒருபால்) துதித்துவரவும்.

செங்கையர், ஆசியர், அன்பினர் என்னுங் குறிப்புவினைமுற்றுகள் வேறுபல வடுக்கிய வினையெச்சங்களாய்ப் பரவ என்னும் வினையெச்சத்தின் முதனிலையையும், கரதுணையினர், கண்ணர், தாளினர், நாவினர் என்னும் அவ்வினைமுற்றுகள் வேறு பலவடுக்கிய அவ்வினையெச்சங்களாய் எத்த என்னும்வினையெச்சத்தின் முதனிலையையுந் தனித்தனிகொண்டன. (௧௦௬)

இந்திரன்மணிக்களாஞ்சிகொண்டொருமருங்கெய்தமெல்லிலைவாசந்
தந்திலங்குபொன்னடைப்பைகொண்டீசனோர்சார்வரமருத்துக்கோ
வந்திரங்கொலியாலவட்டம்பணிமாறவாரழறாபந்
தந்துநேரநீர்க்கடவுள்பொற்கோடிகந்தாமரைக்கரந்தூக்க.

(இ-ள்.) இந்திரன் மணிக் களாஞ்சி கொண்டு ஒரு மருங்கு எய்த - தேவேந்திரன் இரத்தினம்பதித்த களாஞ்சியை ஏந்தி ஒருபால் வரவும், ஈசன் மெல் இலை வாசம் தந்து இலங்கு பொன் அடைப்பை கொண்டு ஓர் சார் வர - ஈசானமூர்த்தி மெல்லிய வெற்றிலைச்சுருளையும் வாசனைத்திரவியமுந் தந்து விளங்காநின்ற பொன்னாலாகிய அடைப்பையை ஏந்தி ஒருபால் வரவும், மருத்துக்கோ வந்து இரங்கு ஒலி ஆலவட்டம் பணிமாற - வாயுதேவன் (ஒருபால்) வந்து ஒலிக்கும் ஒலியையுடைய ஆலவட்டம் வீசிவரவும், ஆர் அழல் தாபம் தந்து நேர - நிறைந்த அக்கினிதேவன் தாபத்தைத்தந்து (ஒருபால்) வரவும், நீர்க்கடவுள் பொன் கோடிகம் தாமரை கரம் தூக்க - வருணதேவன் அழகிய பூந்தட்டைத் தாமரைபோன்ற தனது கரங்களில் (ஒருபால்) ஏந்திவரவும். (௧௦௭)

நிருதியாடிகொண்டெதிர்வரவடிக்கடிநிதிமுகந்தளகைக்கோன்
கருதியாயிரஞ்சிதறிடத்தண்டிநன்காஞ்சுகர்வினைசெய்யப்
பரிதியாயிரம்பணாடவியுரகரும்பன்மணிவிளக்கேந்தச
சுருதிநாயகன்றிருவடிமுடியின்மேற்சுமந்துபின்புறஞ்செல்ல.

(இ-ள்.) நிருதி எதிர் ஆடி கொண்டு வர - நிருதியானவன் எதிரே கண்ணாடி கொண்டு (ஒருபால்) வரவும், அளகை கோன் நிதி அடிக் கடி முகந்து கருதி ஆயிரம் சிதறிட - குபேரன் திரவியத்தை அடிக்கடி அள்ளி (திருக்கலியாணப் பெருக்கத்தை) எண்ணி அளவில்லாது (ஒருபால்) விரிவாவும், தண்டி நன் காஞ்சுகர் வினை செய்ய - தண்டாயுதத்தை யுடைய இயமன் கஞ்சுகமாக்கள்போல நெருக்கத்தை (ஒருபால்) விலக்கிவரவும், பரிதி ஆயிரம் பணா டவி உரகரும் பல் மணி விளக்கு ஏந்த - சூரியனைப்போல் விளங்கும் ஆயிரம்பணாடவியை யுடைய நாகர்களும் பல இரத்தினதீபங்களை யேந்தி (ஒருபால்) வரவும், சுருதி நாயகன் திருவடி முடியின் மேல் சுமந்து பின்புறம் செல்ல - வேதபுருஷன இறைவனது திருவடியைத் தனது முடியின்மேல் சுமந்து பின்புறத்தில் வரவும்.

பணாடவி - பண அடவி எனப்பிரித்துப் படக்காடெனப் பொருள்கொள்க.

*கங்கைகாவிரியாதியநவநதிக்கன்னியர்குளிர்தூங்கப்*
*பொங்குவார்திரைக்கொழுந்தெனக்கவரிகள் புரட்டவெண்பிறைக்கீற்றுத்*
*தூங்கவாளெயிற்றிருளுடற்குழிவிழிச்சுடரழற்செம்பங்கிச்*
*சங்கவார்குழைக்குறியகுண்டோதரன்றண்மதிக்குடைதாங்க.*

(இ-ள்.) கங்கை காவிரி ஆதிய நவநதி கன்னியர் - கங்கைகாவிரிமுதலிய ஒன்பது தீர்த்தங்களாகிய பெண்கள், குளிர்தூங்க - குளிர்ச்சிமிக, பொங்குவார் திரை கொழுந்து என கவரிகள் புரட்ட-(தமரிடத்து) விளங்கும் நீண்ட அலைகளின் கொழுந்துபோலச் சாமரங்களை (ஒருபால்) வீசவும், வெண் பிறைக்கீறு தூங்கவாள் எயிறு - வெள்ளிய பிறைக்கீற்றையொத்த உயர்ந்த வெள்ளியபற்களையும், இருள் உடல் - இருள்போன்ற வுடலையும், குழிவிழி - குழிந்தகண்களையும், சுடர் அழல் செம்பங்கி - விளங்கும் நெருப்புப்போன்ற செந்நிறம்வாய்ந்த மயிர்களையும், சங்கம் வார்குழை - சங்காலாகிய நீண்டகுண்டலத்தையுமுடைய, குறிய குண்டோதரன்- குறியவடிவத்தையுடையவனாகிய குண்டோதரன், தண்மதி குடை தாங்க-தண்ணியசந்திரனையொத்த குடையை (ஒருபால்) தாங்கிவரவும்.

பிறைக்கீறு பிறையாகியபிளவு எனநிற்றலால் இருபெயரொட்டுப்பண்புத் தொகை. (௧0௯)

*இடிக்கும்வானுருமேறுயர்நெடுங்கொடியெகினவெண்கொடிஞால*
*முடிககுமூழிநாளுளர்கடுங்காலெனமுசசெறிவிடநாகந்*
*துடிக்கவாயிடுமுவணவன்கொடிமுதல்சூழ்ந்துசேவகஞ்செய்யுங்*
*கொடிக்குழாத்திடையுடைகொடியரசாய்விடைக்கொடிபுடைபெயர்ந்தாட.*

(இ-ள்.) இடிக்கும் வான் உருமேறு உயர் நெடும் கொடி - இடிக்கின்ற பெரிய இடியேறாகிய உயர்ந்தநெடியகொடியும், வெள் எகினம் கொடி - வெள்ளிய அன்னக்கொடியும், ஞாலம் முடிக்கும் ஊழி நாள் - உலகத்தை அழிக்கும் ஊழிக் காலத்தில், உளர்கிடும் கால் என முச்சு எறிவிடம் நாகம் - வீசுகின்ற சண்டமாருதம்போல பெருமூச்சுவிடும் விஷத்தையுடைய சர்ப்பங்கள், துடிக்க வாய் இடும் வல் உவணம் கொடிமுதல் - துடிக்கவாயாற்கவ்வும் வன்மையையுடைய கருடக்கொடியுமாகிய இவைமுதலியகொடிகள், சூழ்ந்து சேவகம் செய்யும் கொடி குழாத்திடையுள் - புறத்துச்சூழ்ந்து சேவகஞ்செய்யும் அந்தவசக்கூட்டங்களுள், விடைக்கொடி கொடி அரசாய்புடைபெயர்ந்து ஆட-இடபக்கொடியானது அக்கொடிகளுக்கரசாய் (ஒருபால்) அசைந்தாடவும்.

முதல் என்னும் பெயர் வினைப்பகுதியாய் முற்றாய் நின்று எழுவாயுருபேற்றுப் பெயராயிற்று. (௧௧0)

*கண்ணுதற்பிரான்மருங்கிருகடவுளர்கப்புவிட்டெனத்தோன்றும்*
*வண்ணமுத்தலைப்படையெடுத்தொருகுடவயிறுடைப்பெரும்பூதம்*
*பண்ணவப்பதினெண்படைக்கலமுந்தன்பக்கமாச்சேவிப்ப*
*வண்ணன்முசசுடர்முளைத்தொருவரைநடந்தனையதோர்மருங்கெய்த.*

(இ-ள்.) கண்ணுதல் பிரான் மருங்கு - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் இரண்டுபக்கங்களிலும், இருகடவுளர் கப்பு விட்டால் என - இரண்டுகடவுளராகிய பிரமனுந் திருமாலுங் கப்புவிட்டுக் கிளைத்தாற்போல, தோன்றும் வண்ணம் முத்தலைப்படை - விளங்கித்தோன்றும் செந்நிறம்வாய்ந்த மூன்றுகவராயுள்ள சூல

த்தை, குடம் வயிறு உடை ஒரு பெரும் பூதம் எடுத்து - குடம்போலும் வயிற்றையுடைய ஒரு பெரிய கும்போதரனென்னும் பூதம் ஏந்தி, பண்ணவப் பதினெண் படைக்கலமும் தன் பக்கமா சேவிப்ப - தெய்வத்தன்மையையுடைய பதினெண் வகைப்பட்ட ஆயுதங்களும் தன்பக்கமாகச்சேவித்துவரவும், அண்ணல் முச்சுடர் முளைத்த ஒருவரை நடந்தது அனையது ஒருமருங்கு எய்த - பெருமையையுடைய சோமசூரிய அக்கினிகள் உதித்த வொருமலை நடந்துவருதல்போலவும் ஒருபால் வரவும்.

சிவபிரான் வலப்பாலிலும் இடப்பாலிலும் பிரமன் திருமால் தோன்றினார்களென்பது கூர்மபுராணம் அட்டமூர்த்தியியல்புரைத்த அத்தியாயத்தில் "மைந்தனின்னையென்வலப்புறத்தீன்றனனறிய, பைந்துழாய்முடிவண்ணனையெனதிடப்பாலிற், றந்தளித்தனனீவிர்வெங்கரிமுகன்றழல்வேற், கந்தனேயெனக்கருணையினுச்சிமோந்துரைப்பான்." எனவருஞ்செய்யுளாலுணர்க.

முளைத்த என்னும் பெயரெச்சத்தின் ஈறும் நடந்தது என்னும் வினைமுற்றின் ஈறும் தொகுத்தல். அனையது என்னுங் குறிப்புவினைமுற்று வினையெச்சத்தில் வந்தது. (௧௧௧)

பந்தநான்மறைப்பொருட்டிரட்டெனவடபாடல்செய்தெதிர்புட்ப
தந்தனேத்தவானுயிருணவுருத்தெழுதழல்விடத்தெதிர்நோக்கு
மந்தமாதியிலானிழல்வடிவமாயாடியினிழலபோல
வந்தசுந்தரன்சாத்துநீறொடுதிருமாலையுமெடுத்தேந்த.

(இ-ள்.) பந்தம் நான்மறை பொருள் திரட்டு என - பந்தத்தையுடைய நான்குவேதங்களின் பொருள்களை (ஒருசேரத்திரட்டிய) திரட்டைப்போல, வட பாடல் செய்து எதிர் புட்பதந்தன் ஏத்த - வடமொழியில் பாடல்செய்து எதிரே புட்பதந்தன் துதித்துவரவும், வான் உயிர் உண உருத்து எழு தழல் விடத்து எதிர்நோக்கும் - தேவர்கள் உயிருண்ணக் கோபித்தெழுந்த காலாக்கினிபோன்ற விடத்தினெதிரே சென்ற, அந்தம் ஆதி இலான் வடிவ நிழலாய் ஆடியின் நிழல்போல வந்த சுந்தரன் - இறுதியு முதலுமில்லாத சிவபெருமானுடைய திருமேனியினிழலாய்க் கண்ணாடியின் நிழல்போலவந்த சுந்தரமூர்த்திகள், சாத்து நீறொடு திருமாலையும் எடுத்து ஏந்த - சாத்தியருளுந் திருநீற்றோடு திருப்பள்ளித்தாமத்தையும் எடுத்து ஏந்தி ஒருபால் வரவும்.

பந்தம் வேதத்தின் ஒருறுப்பு. சிவபெருமான் ஓர்கால் கண்ணாடியிற் பிரதிபிம்பித்த தனது திருவுருவத்தைநோக்கி வாவென்றருள வந்தசுந்தரவடிவமாதலின் ஆடியினிழல்போல்வந்த சுந்தரனெனவும், அவர் திருக்கயிலையில் திருநீறுந் திருப்பள்ளித்தாமமும் எடுத்தேந்தும் அகம்படித்தொண்டினராதலின் சாத்துநீறொடு திருமாலையு மெடுத்தேந்த எனவும், விடந்தோன்றியகாலத்துப் பிரமன்முதலியதேவர்கள் திருக்கயிலையையடைந்து ஓலமிடச் சுந்தரமூர்த்தியால் வருவித்தருளினதலின் தழல்விடத்தெதிர் நோக்கும் எனவுங்கூறினார். (௧௧௨)

அன்னத்தேரினனயன்வலப்பாங்கருமராவலிகவர்சேன
வன்னத்தேரினன்மாலிடப்பாங்கருமலர்க்கரங்குவித்தேத்தப்
பொன்னத்தேமலர்க்கொன்றையான்வெள்ளியம்பொருப்பொடுமெழீஇப்
பென்னத்தேரணிமதுரைமாநகர்ப்புறத்தெய்துவானவ்வேலை. [போந்தா

(இ-ள்.) அன்னத்தேரினன் அயன்வலப்பாங்கரும் - அன்னத்தைத் தேராக வுடையபிரமன் வலப்புறத்திலும், அராவலி கவர் சேனம் வன்னம் தேரினன் மால் இடப்பாங்கரும் - பாம்பின்வலியைக் கொள்ளைகொள்ளும் கருடனை நிறம் அமைந்ததேராகவுடைய திருமால் இடப்புறத்திலும், மலர் கரம் குவித்து ஏத்த - (தமது) தாமரைமலர்போன்ற கைகளைக்கூட்பித்துதிசெய்து வரவும், ந பொன்னம் தேமலர் கொன்றையான் - சிறந்தபொன்னிறமமைந்த தேன்பொதிந்த கொன்றைமலர்மாலையையணிந்த சிவபெருமான், வெள்ளியம் பொருப்பொடும் எழுந்து போந்தால் என்ன - வெள்ளிமலையோடு எழுந்துவந்தாற்போல (இடபவாகனத்தின்மேல்) தேர் அணி மறுகாமா நகர்புறத்து எயதுவான் - நிலைத்தேரின்வரிசையையுடைய பெரிய மதுராநகரத்தின்புறத்து எழுந்தருளுகின்றான், அவ்வேலை-அக்காலையில்.

பிரமனுந் திருமாலும் தோன்றியமுறையால் வந்தார்களென்பார் - அன்னத்தேரினனயன்வலப்பாங்கரு மராவலிகவர்சேன, வன்னத்தேரினன் மாலிடப்பாங்கரும் என்றார். வாகனங்களிற்சிறந்தன தேரும் குதிரையும் யானையுமாதலால் ஏனை வாகனங்களோடு கூட்டிக்கூறுதல் செய்யுள்வழக்கென்க. "கார்மாமிசைக்காலன்வரிற்கலபநம் நேர்மாமிசைவந்தெதிரப்படுவாய" எனவருஞ் செய்யுளாற்காண்க. ந-என்பது சிறப்பென்னும் பொருள்மேல்வரும் இடைச்சொல். நக்கீரர் எனவருதல்காண்க.

வேறு.

தேவர்கடேவன்வந்தான்செங்கண்மால்விடையான்வந்தான்
மூவர்கண்முதல்வனவந்தான்முக்கணெம்பெருமான்வந்தான்
பூவலரயன்மால்காணாப்பூரணபுராணன்வந்தான்
யாவையும்படைப்பானவந்தானென்றுபொற்சின்னமார்ப்ப.

(இ-ள்.) தேவர்கள் தேவன வந்தான் - பிரமன்முதலிய தேவர்களுக்குத்தேவனுயுள்ளவன் வந்தருளினான், செங்கண்மால் விடையான் வந்தான் - செவந்தகண்களையுடைய திருமாலாகிய இடபவாகனத்தை யுடையவன்வந்தருளினான், மூவர்கள் முதல்வன் வந்தான் - திரிமூர்த்திகளுக்கு முதல்வனுயுள்ளவன் வந்தருளினான், முக்கண் எம்பெருமான் வந்தான் - சோமசூரியாக்கினிகளாகிய மூன்றுகண்களையுடைய எமதுபெருமான் வந்தருளினான், பூ அலர் அயன்மால் காணாத பூரண புராணன் வந்தான் - தாமரைமலரிலுதிக்கும் பிரமனும் திருமாலும் காணுதற்கரிய எங்கும் நிறைந்த தொல்லோன் வந்தருளினான், யாவையும் படைப்பான் வந்தான் - எல்லாவற்றையுஞ்சிருட்டித்தவன வந்தருளினான், என்று பொன் சின்னம் ஆர்ப்ப - என்று பொன்னாலாகிய சின்னங்கள் (ஒருபால்) ஒலித்துவரவும்.

அடியார்கள்வேண்டி யாங்குவிரைந்துசென்றருள ஏரடியால் மூவுலகளந்து விடைகொண்டான என்பார் - செங்கண்மால் விடையான் எனவும், பரதந்திரராகிய பிரமன் திருமாலோடு சுத்ததத்துவச் சுதந்தரனாகிய தானொருவனுய் நின்று அவர்களைக்காலாந்தரத்திலொடுக்கி மீட்டும் உதிப்பிபபவன் என்பார் - கூட்டிப் பிரித்தற் பொருளில்வந்த ஏழனுருபுதந்து மூவரின்முதல்வன் எனவும், தன்னையடைந்த ஆன்மாக்களின் மும்மலங்களையும் நீக்கி யருள்செய்பவனென்பார். முக்கணென்னும் விசேஷணங்கூட்டி எம்பெருமான் எனவும், திருவருட்கண்ணால் அறியாதறிந்துநிற்கும் அடியார்க்கன்றி உருவமும் அருவமும் அருவுருவமுங்கடந்து யாங்கணும் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிறையும அநாதிமுத்த சித்துருவினனென்பார் - பூவலரயன்மால்காணாப் பூரணபுராணன்வந்தான் எனவுங்கூறினார். (௧௧௪)

**பெண்ணினுக்கரசிவாயிற்பெருந்தகையமைச்சரோனை**
**மண்ணினுக்கரசர்சேனைமன்னவர்பிறருமீண்டிக்**
**கண்ணினுக்கினியான்றன்னைக்கண்டெதிர்கொண்டுதாழ**
**விண்ணினுக்கரசனூரின்வியத்தகுநகரிற்புக்கான். ௬**

(இ-ள்.) பெண்ணினுக்கு அரசிவாயில் பெரும் தகை அமைச்சர் - கலைமகள் முதலிய பெண்களுக்கரசியாராகிய பிராட்டியார் வாயிலிலுள்ள பெருந்தன்மையையுடைய சுமதி முதலிய மந்திரிகளும், ஏனை மண்ணினுக்கு அரசர் சேனை மன்னவர் பிறரும் ஈண்டி - ஏனை நாடுகளுக்கு அரசராயுள்ளவர்களும் சேனாதிபதிகளும்மற்றையோரும் (மதிலின்வாயிலின) நெருங்கி, கண்ணினுக்கு இனி யான் தனை கண்டு எதிர்கொண்டு தாழ - கட்புலங்களுக்கு இனியதிருமணக்கோலங்கொண்டருளிய பெருமானைத் தரிசித்து எதிர்கொண்டு வணங்க, விண்ணினுக்கு அரசன் ஊரின் வியத்தகு நகரில்புக்கான் - (எதிர்கொள்ளவந்த அவரோடு) இந்திரனுடைய பொன்னுலகத்தினும் வியக்கத்தக்க செல்வத்தையுடைய மதுரைநகரிற்புகுந்தருளினான்.

இன் உறழ் பொருவில்வந்த ஐந்தனுருபு. (௧௪௫)

முகிறவழ்புரிசைமூதூர்முகப்பெருவாயினீந்தி
யகிறவழ்மாடவீதிவலம்படவணைவானாக
நகிறழைபொலங்கொம்பன்னநன்னகர்மகளிரமபொற்
றுகிறழைமருங்குலாயத்தொகைபுறந்தழுவச்சூழ்ந்தார்.

(இ-ள்.) முகில் தவழ் புரிசை மூதூர் முகப்பெரு வாயில் நீந்தி - மேகந்தவழும் மதில்சூழ்ந்த தொன்றுதொட்டுள்ள மதுரைநகரத்தின முகத்திலுள்ள பெரிய கோபுரவாயிலைக்கடந்து, அகில் தவழ் மாடம் வீதி வலம்பட அணைவான் ஆக-அகிற்புகைதவழும் மாடங்களையுடைய வீதியில் வலமாக எழுந்தருள, நல் நகர் நகில் தழைபொலங் கொம்பு அன்ன மகளிர் - அந்நல்ல நகரிலுள்ள தனங்களாகிய அரும்புகளரும்பிய பொற்கொம்பையொந்த பெண்கள், அமபொன் துகில் தழை மருங்குல் ஆயம் தொகைபுறம் தழுவ சூழ்ந்தார் - அழகிய பீதாம்பரமுடுத்த இடையையுடைய தோழியர்கூட்டம் புறத்தில் நெருங்கிவரச் சூழ்ந்தார்கள்.

பேதைமுதல் எழுவகைப்பருவபெண்களுள் பேதை நீங்கலாக ஏனை அறுவகைப்பருவப்பெண்களென்பார் நகில்தழை பொலங்கொமபன்ன மகளிர் எனவும் குழமகன் மங்கலத்தால் இன்றுனென்பது தோன்ற வீதியிடத்துப்பவனிவருதலைத் தொழப்போந்தார் என்பார் ஆயத்தொகைபுறந்தழுவச் சூழ்ந்தார் எனவுங்கூறினார். எழுவகைப்பருவப்பெண்கள் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண். தொழப்போந்தார் என்பது - "குழகனைக் கலிவெண்பாக்கொண்டு, விழைதொல்குழ முதல்விளங்கவுரைத்தாங், கிழைபுனை நல்லாரிவர்மணிமறுகின், மற்றவன்பவனிவரவேழ்பருவம், உற்றமாதர்தொழப போந்ததுலாவாம்" என வரும் இலக்கணவிளக்கப்பாட்டியலால் காண்க. (௧௪௬)

தமிழ்முதல்பதினெண்டேத்துமகளிருந்தாருநாட்டி
னமிழ்தமன்னவருமுல்லையம்புயங்குமுதநீலங்
குமிழ்நறுங்கோங்குகாந்தள்கோழிணரசோகம்வாச
முமிழ்தரமலர்ந்தநந்தவனமெனவொருங்குமொய்த்தார்.

(இ-ள்.) தமிழ் முதல் பதினெண் தேத்து மகளிரும் - தமிழ்நாடுமுதலிய பதினெட்டுநாட்டிலுமுள்ள பெண்களும், தாருநாட்டில் அமிழ்தம் அன்னவரும் - கற்பகநாடாகிய பொன்னுலகிலுள்ள அமிழ்தமொத்தபெண்களும், முல்லை அம்புயம் குமுதம் நீலம் குமிழ் நறும் கோங்கு காந்தள் கோழ் இணர் அசோகம் வாசம் உமிழ்தர மலர்ந்த நந்தவனம் என - முல்லையுந் தாமரையும் அல்லியும் நீலோற்பலமும் குமிழும் நறியமணமுடைய கோங்கும் காந்தளும் கொழுவிய பூங்கொத்தையுடைய அசோகமும் வாசம்வீச மலர்ந்து மல்கிய நந்தவனம்போல, ஒருங்கு மொய்த்தார் - ஒருசேர நெருங்கினார்கள்.

தாமரை முகமாகவும், முல்லை தந்தங்களாகவும், ஆம்பல் வாயாகவும், நீலம் கண்களாகவும், குமிழ் நாசியாகவும், கோங்கரும்பு தனங்களாகவும், காந்தள் கைகளாகவும், அசோகு மேனிநிறமாகவுங்கொண்டு பெண்கள்கூட்டத்தை நந்தவனமாகக் குறிப்புருவகஞ்செய்து அவைமலர்ந்த நந்தனவனமென்றார். மண்ணுலகமாதரும் விண்ணுலகமாதரும் தம்முள் வேறுபாடின்றிக் கலந்தவரென்பார் - ஒருங்குமொய்த்தாரென்றார். (கதஎ)

> எம்மைநீர்விடுதிரோயோவென்பபோற்கலையுஞ்சங்கும்
> விம்மநாண்மடனுமுங்கணெஞ்சுடைவெளியாருக
> வும்மைநீத்தோடுமேந்தோவுரைத்தனமுரைத்தோமென்று
> தம்மைநூபுரங்கால்பற்றித்தடுப்பபோலார்ப்பச்சென்றார்.

(இ-ள்.) எம்மை நீர் விடுதிரோயே என்பபோல் - எங்களை நீங்கள் கைவிடுகின்றீர்களோ என்று முறையிடுதல்போல, கலையும் சங்கும் விம்ம - (சோரும்) மேகலையும் வளையலும் ஒலிக்கவும், நாணும் மடனும் உங்கள் நெஞ்சு உடை வெளி ஆறு ஆக அந்தோ உம்மை நீத்து ஒடும் - நாணமும் மடமையும் உங்கள்மனத்தைப்பரந்த வெளியாகக்கொண்டு ஐயோ உங்களைக்கைவிட்டோடும், உரைத்தனம் உரைத்தோம் என்று - (அதனை) நாங்கள்சொன்னோம் சொன்னோமென்று, நூபுரம் தம்மை கால் பற்றி தடுப்பபோல் ஆர்ப்ப சென்றார் - சிலம்புகள் தம்மைக் கால்களைப்பற்றித் தடுத்தல்போல ஒலிக்கவும வீதியிற் சென்றார்கள்.

மேகலை - கலை எனவந்தது முதற்குறையாகிய செய்யுள் மரூஉ. நீங்கள் சென்றாலருளான் அதனால் யாவுமிழப்பீர் என்றுங் குறிப்புத் தோன்ற நிற்றலின் எதிர்வினைவிலக்கணி. (கஅஅ)

> கடியவிழ்கமலக்காடுபூத்ததோர்கருணைவாரி
> யடிமுதன்முடியீறாகவலர்விழிக்குவளைசாத்திக்
> கொடியசெம்பதுமப்போதுகுழன்மிசைசூடுவார்போற்
> றொடியணிகரங்கள்கூப்பித்துதியெனவினையசொல்வார்.

(இ-ள்.) கடி அவிழ் கமலம் காடு பூத்தது ஓர் கருணை வாரி - வாசமொடுமலர்ந்த தாமரைக்காடுபூத்த ஓர் கருணைக்கடலாகிய சிவபெருமானுடைய, அடி முதல் முடி ஈறாக - திருவடிமுதல் திருமுடியந்தமாக, விழி குவளை அலர் சாத்தி - (தமது) கண்களாகிய குவளைமலர்களைச்சூட்டி, கொடிய செம் பதுமம் போது குழல் மிசை சூடுவார் போல் - கொடியையுடைய செந்தாமரைமலர்களைத் (தமது) கூந்தலின்மேலே சூடுகின்றவர்களைப்போல, தொடி அணி கரங்கள் கூப்பி - வளையலையணிந்த தமதுகைகளைக்குவித்து, துதி என இனைய சொல்வார் - துதிசெய்கின்றவர்களைப்போல இத்தன்மையான வார்த்தைகளைக் கூறுகின்றார்கள்.

கருணைவாரி என்றது - சிவபெருமானையும், தாமரைக்காடென்றது - திருமுகத்தையும், திருக்கண்களையும், திருவாயையும், திருக்கரங்களையும், திருவுந்தியையும், திருவடியுமெனக்கொள்க. இது குறிப்புருவகவணி. குவளைசாத்தி - பதுமப்போது சூடுவதென்றது விரோதவணி. பெண்களிடத்து நிகழ்ந்த ஒருதலைக் காமமாதலால் இது பெண்பாற் கூற்றுக்கைக்கிளைத்திணை - துறை காட்சி. (௧௧௯)

நங்கையென்னோற்றாள்கொல்லோநம்பியைத்திளைத்தற்கென்பார்
மங்கையைமணப்பானென்னோவள்ளலுநோற்றானென்பா
ரங்கடிமதுரையென்னோவாற்றியதவந்தானென்பா
ரிங்கிவர்வதுவைகாண்பானென்னநாநோற்றோமென்பார்.

(இ-ள்.) நங்கை நம்பியை திளைத்தற்கு என் நோற்றாள் கொல்லோ என்பார்-பிராட்டியார் இச்சிறந்த புருஷனை அநுபவித்தற்கு என்னதவஞ்செய்தாரோவென்று (சிலர்) சொல்லுவார், வள்ளலும் மங்கையை மணப்பான் என் நோற்றான் என்பார்-வள்ளற்றன்மையையுடைய இம்மகாபுருஷனும் இப்பிராட்டியாரைச் சேர என்ன தவஞ்செய்தானோ என்று (சிலர்) சொல்லுவார், அம் கடி மதுரை ஆற்றிய தவந்தான் என்னோ என்பார் - அழகிய விளக்கமமைந்த மதுரைநகரம் (இவர்கள் அணுகச்) செய்ததவம் யாதோ என்று (சிலர்) சொல்லுவார், இங்கு இவர் வதுவை காண்பான் நாம் என்னநோற்றோம் என்பார் - இந்நகரில் இவர்கள் திருக்கலியாணமகோற்சவத்தைக்காண நாமென்ன (அரிய) தவம் செய்தோமோ என்று (சிலர்) சொல்லுவார்கள்.

மங்கை வள்ளல இவற்றின் முதலில் இகரச்சுட்டுத் தொகுத்தல். (௧௨௦)

தென்னவன்வருந்திமேனாட்செய்தவப்பேற்றாற்பெற்ற
தன்மகள்வதுவைகாணத்தவஞ்செய்தானிலனேயென்பார்
கன்னிதனழகுக்கேற்றவழகனிக்காளையென்பார்
மன்னவனிவனேயன்றிவேறிலைமதுரைக்கென்பார்.

(இ-ள்.) தென்னவன் மேல் நாள் வருந்தி செய் தவப் பேறால் பெற்ற தன் மகள் வதுவைகாண - மலயத்துவசபாண்டியன் முன்னாளிற் உடல்மெலிந்துசெய்த தவப்பயனாற்பெற்ற தனது புத்திரியினது திருமணத்தைக்காண, தவம் செய்தான் இலனே என்பார்-தவஞ்செய்யாமற்போயினானேயென்று (சிலர்) சொல்லுவார்கள், கன்னிதன் அழகுக்கு ஏற்ற அழகன் இக்காளை என்பார் - (நமது) கன்னியாராகிய பிராட்டியாருடைய திருவழகுக்கு ஏற்ற பேரழகனிப்பருடனென்று (சிலர்) சொல்லுவார்கள், மதுரைக்கு இவனே மன்னவன் அன்றி வேறு இலை என்பார்-மதுரைக்கு இப்பேரழகனே இறைவனல்லாமல் வேறொருவரும் இல்லை என்று (சிலர்) சொல்லுவார்கள். (௧௨௧)

நங்கைதன்னலனுக்கேற்பநம்பியைத்தந்ததிந்தத்
துங்கமாமதிநூல்வல்லசுமதிதன்சூழ்ச்சியென்பா
ரங்கவடவப்பேறென்பாரன்னைதன்கன்னிக்கன்றி
யிங்கிவன்மருகனாகவெந்தவமுடையாளென்பார்.

(இ-ள்.) நங்கை தன் நலனுக்கு ஏற்ப நம்பியை தந்தது - பெண்களுட் சிறந்த பிராட்டியாருடைய அழகுக்குத் தக்க ஆடவர்களுட்சிறந்த புருடனைக் கொடுத்தது, துங்கம் மா மதிநூல் வல்ல இந்த சுமதி தன் சூழ்ச்சி என்பார்-உயர்ந்த மதிநூலில்வல்ல இந்தச் சுமதியினது ஆலோசனையேயென்று (சிலர்) சொல்லுவார்கள்,

அங்கு அவன் தவப் பேறு என்பார் - அப்பிராட்டியாருடைய தவப்பயனே இப்புருடன்வடிவு என்று சிலர் சொல்லுவார்கள், அன்னை தன் கன்னிக்கு அன்றி இங்கு இவன் மருகனுக எத்தவம் உடையாள் என்பார் - காஞ்சனமாலையார் தம் புத்திரியாரைப் பெறுதற்குத் தவஞ்செய்ததுமன்றி இங்கு இப்புருடனை மருகனுகப்பெற யாது தவஞ்செய்தனரோ என்று சிலர் சொல்லுவார்கள்.

நங்கை யென்னோற்றுள்கொல்லோ என்னுஞ் செய்யுள் முதல் இச்செய்யுள் காறும் கயத்தீற்றுறை. (௧௨௨)

பூந்துகினெகிழ்ப்பர்சூழ்வர்புணர்முலேயலேப்பர்பூசு
சாந்தினையுகுப்பர்நாணந்தலைக்கொண்டார்போலச்சாய்வர்
கூந்தலையவிழ்ப்பர்வாரிக்கூட்டுவர்முடிப்பர்மேனி
மாந்தளிரெங்குமாரன்வாளிகள்புதையச்சோர்வார்.

(இ-ள்.) பூந் துகில் நெகிழ்ப்பர் சூழ்வர் - அழகிய துகில்சரியச்செய்து (பின்பு சிலர்) தரிப்பார்கள், புணர் முலை அலைப்பர் - நெருங்கிய தனங்களை (சிலர்) வருத்துவார்கள், பூசு சாந்தினை உகுப்பர் - பூசிய சந்தனக்குழம்பை (சிலர்) உதிர்ப்பார்கள், நாணம் தலைக் கொண்டார் போல சாய்வர் - நாணம் மீக்கொண்டவரைப்போல (சிலர்) தலையிறக்குவார்கள், கூந்தலை அவிழ்ப்பர் வாரிக் கூட்டுவர் முடிப்பர் - முடித்த கூந்தலை அவிழ்த்து வாரிக் கூட்டிப் பின்பு (சிலர்) முடிப்பார்கள், மேனி மாந்தளிர் எங்கும் மாரன் வாளிகள் புதைய சோர்வார் - (தத்தம்) மேனிகளாகிய மாந்தளிர்கடோறும் மன்மதபாணங்கள் தைக்க (அறிவு) சோர்ந்து மயங்குவார்கள்.

மெலிவாற்றுத அரிவைப் பருவப்பெண்கள் செயல்களிவையாதலில் மெலிதற்றுறை. (௧௨௩)

தண்ணளியொழுக்கஞ்சார்ந்தகுணத்தினைச்சார்ந்துமிந்த
வண்ணமென்மலர்களென்னேவாளியாய்த்தைத்தவென்பார்
கண்ணறுங்கூந்தல்வேய்ந்தகடியவிழ்நீலத்தாரும்
வெண்ணகையரும்புமுல்லைத்தாமமும்வெறுத்துவீழ்ப்பார்.

(இ-ள்.) தண் அளி ஒழுக்கம் சார்ந்த குணத்தினைச் சார்ந்தும்- குளிர்ச்சியாகிய ஒழுக்கத்தைப்பொருந்திய பண்பினையடுத்தும் (தண்ணியவண்டுகளாகிய நேரோயுள்ளமன்மதனது வில்லினாணினை அடுத்தும்) இந்த வண்ணம் மெல் மலர்கள் வாளியாய் தைத்த என்னே என்பார்-இந்தநிறம்வாய்ந்த மெல்லியமலர்கள் பாணங்களாய்த்தைத்தன என்ன அதிசயமென்று (சிலர்) சொல்லுவார்கள், கள் நறும் கூந்தல் வேய்ந்த கடி அவிழ் நீலம் தாரும் - தேனின் நறியமணங்கமழும் (தமது) கூந்தலில்தரித்த வாசமொடு மலர்ந்த நீலோற்பலமாலையும், வெள் நகை அரும்பு முல்லை தாமமும் வெறுத்து வீழ்ப்பார்-வெள்ளிய (தமது) தந்தங்கள்போல அரும்பிய முல்லைமாலையையும் வெறுத்து நீக்குவார்கள்.

நீலமும் முல்லையும் மன்மதபாணங்களாதலால் வெறுத்து வீழ்ப்பாரென்றார். மெலிவாற்றுத பேதும்பைப் பருவப் பெண்கள் செயல்களிவையாதலால் இதுவும் அத்துறை. (௧௨௪)

விம்மிச்செம்மாந்தகொங்கைமின்னனார்சிலர்விற்காமன்
கைம்மிக்ககணையேறுண்டுகலங்கியமயக்காற்றங்கண்
மைம்மிக்கநெடுங்கண்மூரல்வதனமுமவனம்பென்றே
தம்மிற்றம்முகத்தைநோக்கார்தலையிறக்கிட்டுச்செல்வார்.

(இ-ள்.) விம்மி செம் மாந்த கொங்கை மின் அன்னார் சிலர்-பெருத்திறுமாந்த தனங்களையுடைய மின்னலையொத்த பெண்களுட் சிலர், வில் காமன் கை மிக்க கணை எறுண்டு கலங்கிய மயக்கால் - கருப்புவில்லை யேந்திய மன்மதனது கையினின்று நீங்கிய மணமிக்கபாணங்களால் அடிபட்டு அறிவுகலங்கியகாமமயக்கத்தால், தங்கள் மை மிக்க நெடுங் கண் மூரல் வதனமும் அவன் அம்பு என்று - தத்தம் மைக்கோலமிக்க நெடியகணைகளையும் பற்களையும் முகங்களையும் அவன் பாணங்களென்றுகருதி, தம்மில் தம் முகத்தை நோக்கார் - அப்பெண்கள் கூட்டத்துள் ஒருவர்முகத்தை ஒருவர்பாராராகி, தலை இறக்கிட்டு செல்வார்-தலையிறக்கிச் செல்வார்கள்.

மன்மதபாணமாவன - தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலங்களாம். இவற்றுள் கண் - நீலமாகவும், பறகள் - முல்லை அரும்பாகவும், முகம் - தாமரையுமாகவிருத்தலின் இவையும் அவனது அம்புகளென்று மயங்கினமையின் இதுமயக்கவணி. மெலிவாற்றாத மங்கைப்பருவப் பெண்கள் செயல்களிவையாதலால் இதுவும் அத்துறை. (கஉ௫)

> பற்றியபைம்பொன்மேனிப்பசப்பதுதேறாரண்ண [ப்
> லொற்றைமால்விடையின் மேற்கொண்டிருந்துநம்முளத்துமேவ
> பெற்றனமிதன்கொன்மாயப்பேதைமீர்பெருமானீண்ட
> கற்றைவார்சடைப்பூங்கொன்றையிதுவன்றேகாண்மினென்பார்.

(இ-ள்.) பைம் பொன் மேனி பற்றிய பசப்பு தேறார் - பசிய பொன்னிறம்போலத் தத்தம் மேனிகள் பசத்தலைத் (தாம்கொண்டமயக்கத்தால் சிறிதும்) தெளியாராகி, அண்ணல் ஒற்றை மால் விடையின் மேற் கொண்டு இருந்தும்-சிவபெருமான் ஒருபெரியவிடைமேலேறியிருந்தருளியும், நம் உளத்தும் மேவப் பெற்றனம்-நமது மனத்திலும் வந்தருளப்பெற்றோம், பேதைமீர் இது என் மாயம் - பெண்காள் இது என்னமாயம், பெருமான் கற்றை நீண்ட வார் சடை பூங் கொன்றை-அச்சிவபெருமான் (நம்முள்ளத்திலும் மேவினனென்பதற்குக்குறி) நெருங்கிய நீண்டசடையிலுள்ள கொன்றைமலர், இது அன்றோ காண் மின என்பார் - இம்மேனியிற்றோன்றிய பசப்பல்லவா (அதனை நீங்களே) காணுங்களென்று சொல்லுவார்கள்.

அது பகுதிப்பொருள்விகுதி. சிவ்பெருமான் விடையின்மேலிருந்தும் தமது உள்ளத்திலும் மேவப்பெற்றோ ராதலால் இதென்னமாயம என்றார். மெலிவாற்றாத மடந்தைப்பருவப்பெண்கள் பசப்படைந்ததைக் குறித்தலால் இதுவும் அததுறை. ()

> திங்களென்றெழுந்துநம்மைச்சுடுவதென்செந்தீயென்பார்
> புங்கவன்சென்னிமீதுங்கிடப்பதேபோலுமென்பா
> ரங்கவற்கிந்தவெப்பமில்லைகொலென்றயிர்ப்பாராற்றக்
> கங்கைநீர்சுமந்தானென்பாரதனையுங்காண்மினென்பார்.

(இ-ள்.) திங்கள் என்று எழுந்து நம்மை சுடுவது என் - சந்திரனென்றுபெயரிட்டெழுந்து இது நம்மைச் சுட்டுவருத்துவது என்னகாரணம், (ஆதலால்) செந்தீ என்பார் - (சந்திரனன்று) செந்நெருப்பே என்று (சிலர்) சொல்லுவார்கள், புங்கவன் சென்னி மீதும் கிடப்பதே போலும் என்பார் - (நீங்கள் கூறியசெந்நெருப்பு) இந்தச்சிவபிரான் சடைமுடியின்மேலும் இருக்கின்றதென்று (சிலர்) சொல்லுவார்கள், அவன்கு இந்த வெப்பம் இல்லை கொல் என்று அயிர்ப்பார் - அவனுக்கு (நமக்குள்ளதுபோல் அச்செந்தீயால்) இந்த வெப்பம் இல்லைபோலும் என்று சிலர் ஐயுறு

வார்கள், ஆற்ற கங்கை நீர் சுமந்தான் என்பார் - (அதனை) ஆற்றுதற்பொருட்டே கங்கைநீரைத் திருமுடியிற் சுமந்திருக்கின்றானென்று (சிலர்) சொல்லுவார்கள், அதனையும் காண் மின் என் பார் - அக்கங்கைநீரையும் (கண்கூடாகக்) காணுங்களென்று (சிலர்) சொல்லுவார்கள்.

அங்கு - அசைநிலை இரவில் வருந்துங் காமநோயைக் குறித்தலால் இது இரவுநீடு பருவரல் என்னுந்துறை. (௧௨௭)

கலையொடுநாணம்போக்கிக்கருத்தொடுவண்ணம்வேறா
யுலையொடுமெழுகிட்டென்னவுருகுகண்ணீரராகிக்
கொலையொடுபயில்வேற்கண்ணார்குரிசிறன்பவனிநோக்கி
யலையொடுமதியஞ்சூடுமையன்மெய்யன்பரொத்தார்.

(இ-ள்.) கொலை யொடு பயில் வேல் கண்ணார் குரிசில் தன் பவனி நோக்கி - கொலைத்தொழில் பயிலும் வேல்போன்ற கண்களையுடையபெண்கள் சிவபெருமான் வந்தருளும் பவனியைப்பார்த்து, கலை யொடு நாணம் போக்கி - தமது வஸ்திரத்தோடு நாணுங்கழன்று, கருத்து ஒடு வண்ணம் வேறாய் - தம்மனத்தோடு நிறமும் வேறுபட்டு, உலை யொடு இட்ட மெழுகு என்ன - உலையிலிட்ட மெழுகு உருகியோடுவதுபோல, உருகு கண்ணீரர் ஆகி - மனமுருகி உவட்டெடுக்குங் கண்ணீருடையவராகி, அலை யொடு மதியம் சூடும் ஐயன் மெய்யன்பர் ஒத்தார் - கங்கையோடு சந்திரனைச் (சடாமுடியிற்) சூடிய அச்சிவபெருமானது மெய்யன்பரை யொத்தார்.

சிவபெருமான் திருமுன் மீண்டுதாக்கும் மலவாசனை கழலுதலும், மனம்நெக்குடைதலும், உடம்பு பனித்தலும், ஆனந்த மேலீட்டால் பாஷ்பஞ் சிந்துதலும் மெய்யன்பருடைமையால் அவரை யொத்தாரென்றார். கலை யொடு, கருத் தொடு, ஒடு உருபு வேறுவினை உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. அலை யொடு - ஒடு-உருபு மயக்கம். கொலை யொடு - ஒடு - இசைநிறைத்தற் பொருளில் வந்தது. (௧௨௮)

நட்டவர்க்கிடுக்கணெய்தநன்றிகொன்றவர்போற்கையில்
வட்டவாயதொடியுஞ்சங்குமருங்குசூழ்கலையுநீங்க
விட்டபொற்சிலம்பிட்டாங்கேநன்றியினிகவார்போற்கா
லொட்டியேகிடப்பநின்றாருகுத்தபூங்கொம்பரன்னார்.

(இ-ள்.) நட்டவர்க்கு இடுக்கண் எய்த நன்றி கொன்றவர் போல் - (தமக்கு முன நன்றி செய்துள்ள) சினேகருக்கு வறுமைவர (அவரைவிட்டுநீங்கும்) நன்றிமறந்தவர்போல, கையில் வட்டம் வாய் தொடியும் சங்கும் மருங்கு சூழ் கலையும் நீங்க - (தமது) கையிலணிந்த வட்டமாகிய வாயையுடைய தொடியும் வளையலும் இடையிலணிந்த வஸ்திரமுஞ் சோரவும், நன்றியின் இகவார்போல் - (சிநேகருக்கு வறுமைவந்தபோது) அவர்செய்த நன்றியைக்கருதி அவரினின்று நீங்காதார்போல, இட்ட பொன் சிலம்பு இட்ட ஆங்கே கால் ஒட்டியே கிடப்ப - இட்ட பொன்னாலாகிய சிலம்பு இட்டபடியே காலையொட்டிக்கிடக்க, பூ உகுத்த கொம்பர் அன்னார் நின்றார் - மலர்ந்த பூவைச் சிந்திநிற்கும் கொம்பையொத்தவராய் நின்றார்கள்.

இட்ட - அகரவீறு தொகுத்தல். உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுண்மையால் நீங்க, ஒட்டியே கிடப்ப என்னும் பொருள்களின் தொழில்களை யுவமைக்கேற்றிக் கூறப்பட்டன. (௧௨௯)

மின்னகுவேற்கண்ணாளோர்விளங்கிழைவிடைமேலையன்
புன்னகைப்போதுநோக்கப்போதுமுப்புரமும்வேனின்
மன்னவன்புரமுஞ்சுட்டவல்லவோகெட்டேன்வாளா
வின்னவைசுடாதுபோமோவேழையேன்புரமுமென்றாள்.

(இ-ள்.) மின் நகு வேல் கண்ணாள் ஓர் விளங்கு இழை - ஒளிவீசும் வேல் போன்ற கண்களையுடைய ஒருபெண், விடை மேல் ஐயன் புன் நகை போதும் - இடபத்தின்மேலாரோகணித்தருளிய சிவபெருமானுடைய புன்னகையாகிய முல்லைப் போதும், நோக்கப் போதும் - திருக்கண்ணாகிய போதும், முப்புரமும் வேனில் மன்னவன் புரமும் சுட்ட அல்லவோ - திரிபுரங்களையும் வேனிற் றலைவனாகிய மன்மதனது உடம்பாகிய புரத்தையும் சுட்டனவல்லவா, கெட்டேன் - ஆ, கெட்டேனே, இன்னவை ஏழையேன் புரமும் சுடாது வாளா போமோ என்றாள் - இவை ஏழையேனாகிய என்னுடைய உடம்பாகிய புரத்தையும் சுடாமல் வாளாப்போகுமா என்று ஒருத்திகூறினாள்.

போது-கிண்கிணிவாய்க்கொள்ளும் அரும்பு. சிலையொடு நாணமபோசகி யென்னுஞ் செய்யுள் முதலிச்செய்யுள்காறும் பேரிளம் பெண்பருவத்தையுடையார் செயல்களாதலால் மெலிதற்றுறை, கெட்டேன் வியப்புப்பொருள்மேல் நின்ற இடைச்சொல். (௩௦)

உழைவிழியொருத்திதன்கண்ணுருவெளியாகித்தோன்றுங்
குழகனையிரண்டுசெம்பொற்கொங்கையுமொன்றாய்வீங்கத்
தழுவுவாளூற்றங்காணாடமுலையிரண்டேயாகி
யிழையிடைகிடக்கநீங்கியிருக்கைகண்டிடைபோலெய்தாள்.

(இ-ள்.) உழை விழி ஒருத்தி - மான்பார்வையையொத்த பார்வையையுடைய ஒருபெண், தன் கண் உரு வெளியாகி தோன்றும் குழகனை - தனது கண்களுக்கு உரு வெளியாகிப் புலப்படும் சிவபெருமானை, செம் பொன் இரண்டு கொங்கையும் ஒன்றாய் வீங்க தழுவுவாள் - செவந்த பொன்னிறம் வாய்ந்த இரண்டுதனங்களும் (காமப்பெருக்கால்) ஒன்றாய் விம்மத் தழுவுகின்றவள், ஊற்றம் காணாள் - (தனதுகைகளுக்குப்) பரிசங்கிட்டாமையால், தடம் முலை இழை இடை கிடக்க நீங்கி - (தனது) இடம்பரந்த முலைகள் (மெலிந்து) நூலிழை இடையே கிடக்கப் பிரிந்து, இரண்டே ஆகி இருக்கைகண்டு - (ஒன்றாய்விம்மியன) இரண்டாயிருத்தலைப்பார்த்து (விரும்பியபொருளைப் பெறாது போனேமே என) இடைபோல் எய்தாள் - (தனது) இடை மெலிந்திருப்பதைப்போல உடல்மெலிந்தாள்.

காணாள் என்னும் வினைமுற்றினின்று பிரிந்தொழிற்பெயர் மூன்றனுருபேற்றுநின்றது. மடந்தைப்பருவப்பெண் செயலாதலால் இதுவும் அத்துறை. (௩௧)

வாரிருங்கொங்கையாளோர்மாதராள்வாணெருய்யக்
காரிருள்விடமுண்டன்றுகறுத்ததேய்ன்றுகொன்றைத்
தாரிருஞ்சடையார்கண்டந்தையன்மீர்தமதுநெஞ்சங்
காரிரும்பென்றேகாட்டக்குறியிட்டகறுப்பேயென்றாள்.

(இ-ள்.) வார் இரும் கொங்கையாள் ஓர்மாதராள் - கச்சணிந்த பெரியகொங்கையையுடைய ஓர்பெண், தையன் மீர் - பெண்காள், கொன்றை தார் இரும் சடை

யார் கண்டம் - கொன்றைமாலையையணிந்த பெரியசடாமுடியையுடைய சிவபெருமானுடைய ஸ்ரீகண்டம், அன்று வானோர் உய்ய கார் இருள் விடம் உண்டு கறுத்ததேயன்று-(கடல்கடைந்த) அப்பொழுது தேவர்களுய்யவெழுந்த கரியவிருள்போன்ற விடத்தையுண்டு கறுத்ததேயல்ல, தமது நெஞ்சம் கார் இரும்பு என்றேகாட்ட குறியிட்ட கறுப்பே என்றாள் - (நம்பால்) தமது இதையம் கரிய இரும்புபோலக் கடினம் உடையதென்றேகாட்ட அடையாளமாக இட்டகருமையேயாமென்று கூறினாள்.

ஐயன்மார் ஐயன்மீர் எனவந்தது விளியுருபு. (கஙஉ)

> பொன்னவிர்சடையான்முன்னேபோனதென்னெஞ்சந்தூதா
> யன்னதுதாழ்த்ததென்னென்றழுங்குவாளொருத்திகெட்டே
> னென்னதுநெஞ்சம்போனதென்றனளொருத்திகேட்ட
> மின்னனாளவேற்கண்சேந்தாளவிளைத்தனளவளும்பூசல்.

(இ-ள்.) என் நெஞ்சம் தூது ஆய் - என்னுடையமனந்தூதாக, பொன் அவிர் சடையான் முன்னே போனது - பொன்னிறம்போல விளங்கும் சடாமுடியையுடைய சிவபெருமான் திருமுன்னே தூதாகச்சென்றது, அன்னது தாழ்த்தது என் என்று ஒருத்தி அழுங்குவாள்-(தூதாகச்சென்ற)அம்மனம் (மீண்டும்என்பால்வரத்) தாமதித்தது என்னகாரணமென்று ஒருத்தி துன்பங்கூர்வாள், ஒருத்தி கெட்டேன் என்னது நெஞ்சம் போனது என்றனள்-(அதுகேட்ட) மற்றொருத்தி ஆ, கெட்டேன் என்னுடையமனமுந் தூதாகச்சென்றது (அது என்பால் மீட்டும்வரவில்லை) என்று கூறினாள், கேட்டமின் அன்னாள்-(அதனை)கேட்ட மின்னலையொத்தஅப்பெண்,வேல் கண் சேந்தாள் - (எனக்கே உரியகணவனிடத்து நீவிர் எண்ணங்கொண்டது யாது காரணமென்று) வேலையொத்த தனது கண்கள்செவந்து, அவளும் பூசல் விளைத்தனள் - அவளும் அயலோடு போர்செய்தனள்.

ஆய் செயவெனெச்சத்திரிபு. சேந்தாள் வினைமுற்றெச்சமாய்நின்றது. ()

> செப்பிளங்கொங்கையாளோர்தெரிவைநீர்திருநோக்கெம்பால்
> வைப்பதென்மதன்போலெம்மைச்சுடுவதேமதனுக்காவி
> யப்பொழுதளித்தாற்போலெம்மாவியுமளித்தாலின்று
> மெய்ப்புகழுமக்குண்டின்றேற்பெண்பழிவிளையுமென்றாள்.

(இ-ள்.) செப்பு இளம் கொங்கையாள் ஓர் தெரிவை - கரண்டகச் செப்பையொத்த முதிராததனத்தையுடைய ஓர்பெண், எம் பால் நீர் திரு நோக்கு வைப்பது என்-எம்மிடத்து உமது திருநோக்கத்தை வைப்பது யாது, மதன் போல் எம்மை சுடுவதே-மன்மதனைச் சுட்டெரித்ததுபோல எம்மையும் சுட்டெரித்தற்கா, மதனுக்கு அப்பொழுதே ஆவி அளித்தால்போல-(அந்த) மன்மதனுக்கு அப்போதே உயிர்கொடுத்தாற்போல, இன்று எம் ஆவியும் அளித்தால்-இப்பொழுதே எமது பிராணனையுங் கொடுத்தால், மெய்ப் புகழ் உமக்கு உண்டு - உண்மையாகிய புகழ் உமக்குண்டு, இன்றேல் பெண் பழி விளையும் என்றாள் - இல்லையாயின் பெண்பழி உமக்கு விடாதுநேரிடும் என்று கூறினாள்.

காத்தற்றொழிலில் வினையோர்க்குக் கூறும் பொய்ப்புகழ்போலாது முற்றும் உமக்கே உண்டென்பாள் - மெய்ப்புகழுமக்குண்டென்றாள். வாரிருங்கொங்கையாள் என்னுஞ்செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் மெலிதற்றுறை. பிரிநிலை ஏ தொகுத்தல்.

கவனமால்விடையான்றன்னைக்கடைக்கணித்திலனென்றங்கோர்
சுவணவான்கொடியோரோவத்தொழில்வல்லான்குறுகநோக்கி
யிவனைநீயெழுதித்தந்தால்வேண்டுவவீவனென்று
ளவனையாரெழுதவல்லாரென்றனனாவிசோர்ந்தாள்.

(இ-ள்.) ஓர் வான் சுவணம் கொடி - ஒரு பெரிய பொற்கொடிபோன்ற ஒருத்தி, கவனம் மால் விடையான் தன்னை கடைக் கணித்திலன் என்று-விரைந்துசெல்லும் திருமால்விடையையுடைய சிவபெருமான் தன்னைச் சிறிதுங்கடைக்கணிக்காது சென்றனன் என்று, அங்கு ஓர் ஓவத் தொழில் வல்லான் குறுக - அவ்விடத்துச்சித்திரத்தொழிலில் கைபோய வல்லான் ஒருவன்வர, நோக்கி (அவனைப்) பார்த்து, நீ இவனை எழுதி தந்தால் வேண்டுவ ஈவன என்றாள்-நீ இந்தப் பேரழகனை எழுதித் தந்தால் (உனக்கு) வேண்டும்பொருள் வெறுப்பக் கொடுப்பேன் என்று கூறினாள், யார் அவனை எழுத வல்லார் என்றனன் - யார் அவனை யெழுதித்தரவல்லவர் என்றான், ஆவிசோர்ந்தாள் - (அதுகேட்டு) உயிர்சோர்ந்து (அழிந்தாள்.)

இவன் உறுப்பு முற்றும் எழுத வமையினும அழகுமட்டும் எழுத அமையாதென்பான் யாரெழுதவல்லாரெனவும், படத்திலாயினும் தன்னை நோக்கி யருளுதல்போல எழுதுவித்துப் பார்க்கும் விருப்புடையள் என்பார் ஆவிசோர்ந்தாளெனவுங் கூறினார். இது மெலிவொடு வைகற்றுறை. (௧௫)

வலத்தயன்வரவுகாணாண்மாலிடங்காணாள்விண்ணோர்
குலத்தையுங்காணாண்மண்ணோர்குழாத்தையுங்காணாண்ஞானப்
புலத்தவர்போலக்கண்டபொருளெலாமழுமான்செங்கைத்
தலத்தவன்வடிவாக்கண்டாளொருதனித்தையன்மாது.

(இ-ள்.) தனி ஒரு தையல் மாது - ஒபபில்லாத வொருபெண், ஞானப் புலத்தவர்போல - மெய்யுணர்ச்சியுடையவர்போல, வலத்து அயன் வரவு காணாள் - வலப்பால் பிரமன்வருதலையும் பாராமல், மால் இடங் காணாள - திருமால் இடப்பால் வருதலையும் பாராமல், விண்ணோர் குழாத்தையும காணாள பொன்னுலகிலுள்ள தேவர்கூட்டத்தையும் பாராமல், மண்ணோர் குலத்தையுங் காணாள - மணணுலகிலுள்ள மனிதர்கூட்டத்தையும் பாராமல், கண்ட பொருள் எல்லாம்-(தான்) பார்த்தபொருள்களையெல்லாம், மழு மான் செங் கைத் தலத் தவன் வடிவா கண்டாள் - மழுவையும் மானையும் ஏந்திய செவந்த திருக்கரங்களையுடைய சிவபெருமான் திருவுருவமாகவே பார்த்தாள்.

காமமேலீட்டால் தான்கண்ட குழமகன்வடிவமாகவே யேனையோரையுங் கண்டமையால் காண்டல்துறை. (௧௬)

முன்பெற்றங்காலிற்செல்லவண்ணலைமுன் போய்க்காண்பான்
பின்பற்றியாசைப்பாசம்பிணித்தெழவோடுவாளோர்
பொன்பெற்றமுலையாள்கொம்பருகுமலர்போலத்தாளின்
மின்பெற்றகாஞ்சிதட்பவிலங்கொடுநடப்பாளொத்தாள்.

(இ-ள்.) பெற்றம் காலில் முன் செல்ல-இடபவூர்தியானது காற்றைப்போல முன்னே செல்லுதலால், அண்ணலை முன்போய் காண்பான்- சிவபெருமானை முன்னேபோய்த் தெரிசிக்க, பின் ஆசை பாசம் பற்றி பிணித்து எழ-பின் நின்று ஆசையா

கிய கயிறானது கட்டிக்கொண்டுசெல்ல (முன்னே)ஓடுவாள்-ஓடுகின்றவளாகிய,பொன் பெற்ற ஓர் முலையாள் - தேமல்பூத்த முலையையுடைய ஒருபெண், கொம்பர் உகு மலர் போல மின் பெற்ற காஞ்சி - கொம்பினின்று உகுகின்ற மலர்போல (இடையினின்றுஞ்சோர்ந்த) ஒளிமிக்க காஞ்சியானது, தாளில் தட்ப - தனது காலின் (மேல்விழுந்து)தடுக்க, விலங்கு ஒடு நடப்பாள் ஒத்தாள் - (அதனால்) விலங்கோடு நடக்கும் ஒருத்தியை யொத்தாள்.

கொம்பர் உகும் என்றமையால் இடையினின்றுஞ் சோர்ந்த எனப் பொருள் கொண்டாம். தான் செல்லுதலைக் காஞ்சிதடுக்கவும் மீட்டுஞ் செல்ல வலித்தமையால் தாண்உல் வலித்தலென்னுந்துறை. (கஉஎ)

விதுக்கலையிலைந்துசெங்கண்விடையின்மேல்வருமானந்த
மதுக்கடறனைக்கண்வாயான்முகந்துண்டுமகளிரெல்லாம்
புதுக்கலைசரிவதோரார்புரிவளைகழல்வதோரார்
முதுக்குறையகல்வதோரார்மூழ்கினார்காமவெள்ளம்.

(இ-ள்.) விது கலை மிலைந்த செங் கண் விடையின் மேல் வரும் ஆனந்தமது கடல்தனை - சந்திரனது கலையையணிந்த சிவந்தகண்களையுடைய இடபத்தின்மேல் வந்தருளும் பேரின்பமாகிய தேன்கடலை, மகளிர் எல்லாம் கண் வாயால் முகந்து உண்டு-பெண்களெல்லாம் கண்ணாகிய தமது வாயால் மொண்டு பருகி, புது கலை சரிவது ஓரார் - (தமது இடையிலுடுத்த) புதியவாடைகள் சோர்தலையுணராமலும்,புரிவளைகழல்வது ஓரார் - விரும்புங் கைவளையல்கள கழல்வதையுணராமலும், முதுக்குறைவு அகல் வது ஓரார்-பேரறிவு தம்மினின்றும் நீங்குதலையுணராமலும், காம வெள்ள மூழ்கினார் - காமமாகிய வெள்ளப்பெருக்கில் அழுந்தினார்கள்.

மது உண்டோன் அம்மதுமயக்கில் தன்பொருளும் அறிவும் சோர்தலை உணராது அழுந்துதல்போல, ஆனந்த மதுவுண்டெழுந்த காமமயக்கில் கலைமுதலியனவும் அறிவுஞ் சோர்ந்து அழுந்தினார் எனக்கூறியது தொழிற்றன்மையணி. பருகுதல் வாயால் ஆதலால் கண் வாயால் என்றார். (கஉஅ)

பைத்தழகெறிக்குமாடப்பந்திமேனின்றுகாண்பார்
கைத்தலங்கூப்பியாங்கேகண்களுநோக்கியாங்கே
சித்தமுங்குடிபோய்சசொல்லுஞ்செயலுமாண்டங்கண்மாண
வைத்தமண்பாவையோடுவடிவுவேறற்றுநின்றார்.

(இ-ள்.) பைத்து அழகு எறிக்கும் மாடப் பந்தி மேல் நின்று காண்பார்-ஒளி பரந்து அழகுவீசும் மாடவரிசைகள்மேல் நின்று காணும்பெண்கள், கைத் தலங் கூப்பிய ஆங்கே கண்களும் நோக்கிய ஆங்கே - (தமது) கைகளுங் குவித்தவண்ணமே கண்களும் பார்த்தவண்ணமே (நின்று,) சித்தமும் குடிபோய் சொல்லும் செயலும் மாண்டு - (தமது) மனமும் (அவர்பால்) குடிபோகச்சொல்லுஞ் செயலுமிழந்து, அங்கண் மாண வைத்த மண் பாவை யோடு -அவ்விடத்து மாட்சிமைப்படவைத்த சுதையால் செய்த பாவையோடு, வடிவு வேறு அற்று நின்றார் - (தம்) உருவு வேறுபாடு அற நின்றார்கள்.

"மண்மாண்புனைபாவையற்று" என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரையால் மண் - சுதை யென்றதை யுணர்க. இவ்விரண்டும் மெலிவொடுவைகற்றுறை. (கஉக)

அன்பட்டபுரமுங்காமனாகமுஞ்சுட்டதீயிம்
மின்பட்டசடிலத்தண்ணன்மெய்யென்பதறியார்நோக்கிப்
பொன்பட்டகலனுமெய்யும்பொரிகின்றாரவனைப்புல்லி
னென்பட்டிவிடுமோவையவேழையராவியம்மா.

(இ-ள்.) அன்பு அட்ட புரமும் காமன் ஆகமும் சுட்ட தீ - சிவநேசமொழித்த திரிபுரத்தோரையும் மன்மதனது சரீரத்தையுஞ்சுட்டெரித்தநெருப்பு, இ மின் பட்ட சடிலத்து அண்ணல் மெய் என்பது அறியார் - இந்த மின்னலையொத்த சடாமுடியையுடைய சிவபெருமானது திருமேனியே என்பது சற்றும் அறியாராகி, நோக்கி - (விரும்பிப்) பார்த்து, பொன்பட்ட கலனும் மெய்யும் பொரிகின்றார் - பொன்னாலாகிய வாபரணமும் (தமது) சரீரமும் பொரிகின்றவர்கள், அவனை புல்லின் ஏழையர் ஆவி என் பட்டு விடுமோ - அச்சிவபெருமான் திருமேனியைத்தழுவின் பெண்களது உயிர்கள் என்னபாடுபடுமோ (நாமறியோம் என்பர்.)

ஐய என்னு மிடைச்சொல் இங்கு இரக்கக் குறிப்பின்மேனின்றது. ஏழையராதலின் அறியாரென்றார். இது கவிகூற்றுத்துறை. (௧௪௦)

கொடிகள்பூத்துதிர்ந்தபோதிற்கொம்பனார்கலையுஞ்சங்குந்
தொடிகளுஞ்சுண்ணத்தூளுஞ்சுரர்பொழிமலருநந்தி
யடிகள்கைப்பிரம்புதாக்கசிந்தியவண்டவாண
முடிகளின்மணியுந்தாருங்குப்பையாய்மொய்த்தவீதி.

(இ-ள்.) கொடி கள் பூத்து உதிர்ந்த போதில் - கொடிகள்மலர்ந்து உதிர்ந்த பூக்களைப்போல, கொம்பனார் கலையும் சங்கும் தொடிகளும் சுண்ணம் தூளும்- பூங்கொம்பையொத்த பெண்களது (சோர்ந்த) கலையும் வளையலும் தொடியும் சுண்ணப்பொடியும், சுரர் பொழி மலரும் - தேவர்கள் சொரியும் புஷ்பவருஷமும், நந்தி அடிகள் கை பிரம்பு தாக்க - நந்திநாயனார் திருக்கரத்திலுள்ள பிரம்படிபட, சிந்திய அண்ட வாணர் முடிகளின் மணியும் தாரும் - சிதறிய தேவர்களுடைய மகுடத்தினின்றுதிர்ந்த இரத்தினங்களும் கற்பகமாலைகளும், வீதி குப்பையாய் மொய்த்த - வீதிகளில் குப்பைகளாக நெருங்கின.

தொடிவளையலுள் ஒருவகைக்கைவணி. தொடிவளைவு இது பண்பாகுபெயராய் அணியின்மேல் நின்றது. (௧௪௧)

துன்னியதருப்பைகூடவரசிலைதுழாவித்தோய்த்துப
பொனனியல்கலசநன்னீர்பூசுரர்வீசவன்னார்
பன்னியர்வட்டமாகவானவிற்பதித்தாலென்ன
மின்னியமணிசெய்நீராஞ்சனக்கலம்விதியாற்சுற்ற.

(இ-ள்.) பூசுரர் - அந்தணர்கள், பொன் இயல் கலச நல் நீர் - பொன்னாற்செய்த கலசத்திலுள்ள நல்லநீரில், துன்னிய தருப்பை கூட அரசு இலை துழாவி தோய்த்து வீச - நெருங்கிய தருப்பையோடுகூட அரசிலையைச் சேர்த்துத் தோய்த்து (ஒருபால்) வீசவும், அன்னார் பன்னியர் - அவ்வந்தணரது பத்தினிமார், வான் வில் வட்டமாக பதித்தால் என்ன - இந்திரதனுசை வட்டமாக வைத்தாற்போல, மின்னிய மணி செய் நீராஞ்சனக் கலம் விதியால் சுற்ற-விளங்காநின்ற இரத்தினங்களை வட்டமாகவைத்த நீராஞ்சனத்தட்டினையேந்தி முறைப்படி (ஒருபால்) சுற்றவும். (௧௪௨)

கொடிமுரசாடிசெம்பொற்குடமணிநெய்யிற்பூத்த
கடிமலரனையதீபமங்குசங்கவரியென்னும்
படிவமங்கலங்களெட்டும்பரித்துநேர்பதுமக்கொம்பர்
வடிவினார்வந்துகாட்டமாளிகைமருங்கிற்செல்வான்.

(இ-ள்.) கொடி - கொடியும், முரசு - பேரிகையும், ஆடி-கண்ணடியும், செம்பொன்குடம்-செவந்தபொன்னாலாகிய கலசமும், மணி - மணியும், நெய்யில் பூத்த கடிமலர் அனைய தீபம் - நெய்யிலேற்றிய வாசமபொருந்திய மலரையொத்ததீபமும், அங்குசம்-தோட்டியும், கவரி என்னும் படிவ மங்கலங்கள் எட்டும்-சாமரை என்னும் இவைகளினவடிவமாகச்செய்த அட்டமங்கலங்களையும், பதுமம் கொம்பர் நேர் வடிவினார் பரித்து வந்து காட்ட - தாமரைமலர்ந்த பூங்கொம்பையொத்த வடிவத்தையுடைய பெண்கள் ஏந்திவந்து (ஒருபால்) காட்டவும், மாளிகை மருங்கில் செல்வான்-திருக்கோயிலின்பக்கத்தில் செல்லுகின்றான். (கஎங)

செப்புரங்கவர்ந்தகொங்கையரம்பையாதீபங்காட்டுந்
துப்புரவன்பினார்க்குத்தூயமெய்ஞ்ஞானநல்கு
முப்புரங்கடந்தான்றன்னைமும்முறையியங்களேங்கக்
கப்புரவிளக்கந்தாங்கிவலஞ்செயக்கருணைபூத்தான்.

(இ-ள்.) தீபம் காட்டும் துப்புரவு அன்பினார்க்கு - தீபத்தொண்டுசெய்யும் உறுதியாகிய அன்பினையுடைய அடியார்களுக்கு, தூயமெய்ஞ் ஞானம் நல்கும் முப்புரம் கடந்தான் - பரிசுத்தமாகிய மெய்ஞ்ஞானத்தைத்தந்தருளுந் திரிபுரங்களையெரித்த சிவபெருமான், செப்பு உரம் கவர்ந்த கொங்கை அரம்பையர் - கரண்டகச்செப்பின் வன்மையைக் கொள்ளைகொண்ட தனங்களையுடைய தெய்வப்பெண்கள், கப்புர விளக்கம் தாங்கி - கர்ப்புரவிளக்கினையேந்தி, இயங்கள் ஏங்க - வாச்சியங்கள் ஒலிக்கும்படி, தன்னை மும்முறை வலம் செய - தன்னை மூன்றுபிரதக்ஷிணஞ்செய்ய, கருணைபூத்தான் - கிருபைசெய்தருளினான்.

தீபங்காட்டுந்துப்புரவன்பினார்க்குத் தூயமெய்ஞ்ஞானநல்கும் என்றது.

“விளக்கினார்பெற்றவின்பமெழுக்கினாற்பதிற்றியாகுந்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ந்நெறிஞானமாகு
மளப்பிலகீதஞ்சொன்னார்கடிகடாமருளுமாறே”

என ஆளுடையவரசுகளருளிய தேவாரத்தாலுணர்க. (கஎச)

கோயின்முன்குறுகலோடுமைம்புலக்குறும்புதேய்த்த
தூயநால்வேதசெல்வர்சுவத்திகளோதநந்தி
சேயிருந்தடக்கைபற்றிசெங்கணேறிழிந்துநேர்ந்து
மாயனுமயனுநீட்டுமலர்க்கரமிருபாற்பற்றி.

(இ-ள்.) கோயில் முன் குறுகலோடும் - திருக்கோயிலின்முன் சென்றருள, ஐம்புலம் குறும்பு தேய்த்த தூய நால் வேதம் செல்வர் - பஞ்சேந்திரியங்களாகிய குறும்புகளைச்சிதைத்த புனிதமாகிய நான்குவேத வாழ்க்கையையுடைய அந்தணர்கள், சுவத்திகள் ஓத - மங்கலவசனங்கூற, நந்திசேயிரும் தடக்கைபற்றி - நந்திநாயனாருடைய செவந்த நீண்டதிருக்கரங்களைப்பற்றி, செங்கண் ஏறு இழிந்து-சிவ

ந்தகண்டனையுடைய இடபவூர்தியினின்றும் இறங்கி, மாயனும் அயனும் சேர்ந்து-திருமாலும் பிரமனும் சேரவந்து, இருபால் நீட்டும் மலர்க்கரம் பற்றி - இரண்டுபக்கத்திலும் நீட்டிய தாமரைமலர்போன்ற கைகளைப்பற்றிக்கொண்டு. (௧௬௫)

எதிர்ந்தருமறைகள்காணாதிளைத்தடிசுமந்துகாணு
முதிர்ந்தவன்புருவமானபாதுகைமுடிமேற்சாத்தி
பதிந்தவர்தலைமேற்கொண்டுபாசவல்வினைதீர்த்துள்ளம்
பொதிந்தபேரின்பநல்கும்பொன்னடிப்போதுசாத்தி.

(இ-ள்.) அருமறைகள் எதிர்ந்து காணாது இளைத்து - அரியவேதங்கள்தேடிக் கண்கூடாகக்காணாமல் மெலிந்து, அடி சுமந்து காணும் முதிர்ந்த அன்பு உருவம் ஆன பாதுகை முடிமேல் - திருவடிகளைச்சுமந்தாயினும் இனிக்காணவேண்டுமென்னும் முதிர்ந்த அன்போடு வடிவங்கொண்டுவந்த திருப்பாதுகையின்முடியில், தலைமேல் கொண்டு சாத்தி பதிந்தவர்-(தங்கள்) சிரசுகளின் மேல்கொண்டு சூட்டித் திருவருட்பதிவினையடைந்தவருடைய, பாசம் வல் வினை தீர்த்து உள்ளம் பொதிந்து-ஆணவமலமாகிய வலியதொடக்கையொழித்து (அவர்களுடைய) இதயத்தைவிட்டு நீங்காது, பேரின்பம் நல்கும் பொன் அடி போது சாத்தி - பேரின்பந்தருளும் பொன்போலும் அரியதிருவடிகளைச்சாத்தியருளி.

பொருட்பிரபஞ்சத்துக் கியலத்தோன்றிய சொற்பிரபஞ்சத்துருவாம் வேதம் பலசமயங்களையும் அச்சமயக்கடவுளரையும் தமதாற்றல்கொண்டு கற்பித்த இலக்கணங்களால்ஒருதலையானுரைத்ததுபோலத் தமதுருக்குமவுருவாம் விந்துவையுங் காரணவுருவாம் நாதத்தையும் இவற்றின் காரியமாய்க்கிளந்துள்ள தொகைவகைவிரியாம் விதிவாத மந்திரவாத அருத்தவாதங்களையுங்கடந்து நின்ற இறைவனது இலக்கணங்களினுண்மை யுணர்ந்து கூறவொண்ணு வருமைநோக்கி அன்மைமொழியால் ஓவென்று மீண்டமையின் - எதிர்ந்தருமறைகள் காணாதிளைத்தெனவும், அன்பிற்கே யெளியனென்று அடிஞானததாலுணர்ந்து அடிபேணிநின்றமையின்-முதிர்ந்தவன்பு எனவும்,சிரமேற்கோடலால் சத்திபதிவும், அவ்வருட்பதிவால்-பாசநீக்கமும், அந்நீக்கத்தால் முத்தியின்பமும் ஒருசேரச்செய்வது திருவடியாதலின் - பதிந்தவர்தலைமேற்கொண்டு பாசவல்வினைதீர்த் துள்ளம்பொதிந்து பேரின்பநல்கும் பொன்னடி எனவுங் கூறினர். வேதமே பாதுகை என்பது இந்நூலுள் பின்வரும் "மறையேநமதுபீடிகையாமறையேநமதுபாதுகையாம்" என்னுஞ் செய்யுளாலுணர்க (௧௬௬)

பையரவுரியினன்னநடைப்படாம்பரப்பிப்பெய்த
கொய்யவிழ்போதுநீத்தங்குரைகழலடிநனைப்பத்
தெய்வமந்தாரமாரிதிருமுடிநனைப்பத்தென்ன
ருய்யவந்தருளுமையனுள்ளெழுந்தருளுமெல்லை.

(இ-ள்.) பை அரவு உரியின் அன்ன நடைப்படாம் பரப்பி-படத்தினையுடைய பாம்பின்றோலையொத்த (வெண்மையும் நுண்மையும்வாய்ந்த) நடைப்பாவாடையை விரித்து, பெய்த கொய் அவிழ் போது நீத்தம்-(அதன்மேல்) பரப்பிய காம்புகளைந்த இதழ்விரிந்த மலர்கள் (சிந்தும்) தேன்வெள்ளம், குரைகழல் அடி நனைப்ப-ஒலிக்கும் வீரகண்டையணிந்த திருவடிகளை நனைக்கவும், தெய்வம் மந்தாரமாரி திருமுடி நனைப்ப - (தேவர்கள்சொரியும்) தெய்வத்தன்மையையுடைய மந்தாரபுஷ்பவருஷம் திருமுடியைநனைக்கவும், தென்னர் உய்யவந்தருளும் ஐயன் - பாண்டியர்கள் ஈடேற

வந்த சிவபெருமான், உள் எழுந்தருளும் எல்லை - திருக்கோயிலுள் எழுந்தருளுங் காலையில். (கஎஎ)

மங்கலமகளிரோடுங்காஞ்சனமாலைவந்து
கங்கையின்முகந்தசெம்பொற்கரகநீரனையார்வாக்கத்
திங்களங்கண்ணிவேய்ந்தசிவபரஞ்சோதிபாத
பங்கயம்விளக்கியந்நீர்தலைபெய்துபருகிநின்ருள்.

(இ-ள்.) மங்கலம் மகளிரோடும் காஞ்சனமாலைவந்து - மங்கல நாணணிந்த பெண்களோடுங் காஞ்சனமாலையார்வந்து, கங்கையில் முகந்த செம்பொன் கரகநீர்-கங்கையில்முகந்துவந்த செவந்தபொன்னுலாகிய கரகத்தில் (நிரப்பிய) தீர்த்தத்தை, அனையார்வாக்க-(தம்மோடுவந்த) அப்பெண்கள்வாக்க, திங்கள் அம் கண்ணிவேய்ந்த சிவபரம சோதி பாத பங்கயம் விளக்கி - சந்திரனை அழகிய மாலையாகத்தரித்த சிவபெருமானுடைய திருவடித்தாமரைகளைவிளக்கி, அந்நீர் தலை பெய்து பருகிநின்ருள் - அத்தீர்த்தத்தைச் சிரசின்மேற்றெளித்துப் பருகிநின்று.

நின்ருள்-வினைமுற்று எச்சமாய்நின்றது. (கஎஅ)

பாதநாண்மலர்மேலீரம்புலரவெண்பட்டானீவிச்
சீதமென்பனிநீராட்டிமான்மதச்சேறுபூசித்
தாதவிழ்புதுமந்தாரபபொன்மலர்சாத்திச்சென்னி
மீதிருகரங்கள்கூப்பிவேறுநின்றிதனைச்சொன்னுள்.

(இ-ள்.) நாள் மலர் பாதமேல் ஈரம் புலர வெண் பட்டால் நீவி - அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடிமேல் ஈரமபுலர வெள்ளியபட்டாடையால் துடைத்து, சீதம மெல் பனி நீர் ஆட்டி - குளிர்ந்த மெல்லியபனிநீரால் திருமஞ்சனஞ்செய்து, மான் மதம் சேறுபூசி - மிருகமதங்கலந்த சாதனக்குழம்புபூசி, தாது அவிழ் புதுமந்தாரம் பொன் மலா சாத்தி-மகரந்தத்தோடலர்ந்த புதியமந்தாரத்தினது பொன்னிறம்வாய்ந்த மலர்களைச்சாத்தி, வேறு நின்று-(ஒருபால்) ஒதுங்கிநின்று, சென்னிமீது இருகரங்கள் உம் கூப்பி இதனை சொன்னுள்-(தமது) சிரத்தின்மேல் இரண்டுகைகளையுங்குவித்து இதனைச்சொல்லுகின்ருர்.

கரங்கள் என்பதனிறுதியில்•முற்றுமமைதொகுத்தல். (கஎகூ)

அருமையாலடியேன்பெற்றவணங்கினை வதுவைசெய்தித்
திருநகர்த்திருவுங்கன்னித்தேயமுங்கைக்கொண்டாள்கென்
றுரைசெய்தாளதற்குநேர்வாருண்ணகையுடையராகி
மருகனுரியங்களார்ப்பவதுவைமண்டபத்தைச்சேர்ந்தார்.

(இ-ள்.) அருமையால் அடியேன் பெற்ற அணங்கினை - அரியதவப்பேற்ருல் அடியேனுகியயான்பெற்ற தெய்வவடிவுவாய்ந்த (என்) கன்னியை, வதுவைசெய்து-திருக்கலியாணஞ்செய்து, இ திருநகர் திருவும் கன்னி தேயமும் - இந்தச்சிறப்புவாய்ந்த நகரத்திலுள்ள செல்வத்தையும் கன்னிநாடாகிய பாண்டிநாட்டையும், கைக்கொண்டு ஆள்க என்று உரை செய்தாள் - கைக்கொண்டு அரசாள்கவென்று கூறினுர், அதற்கு நேர்வார் மருகனுர் - அதற்குடன்பட்டமருகனுர், உள் நகை உடையராகி - புன்னகையுடையவராய், இயங்கள் ஆர்ப்ப வதுவை மண்டபத்தை சேர்ந்தார்-வாச்சியங்களொலிக்கத் திருக்கலியாணமண்டபத்தைச்சேர்ந்தருளினுர்.

உடம்படுதற்குறிப்பை உணர்த்தினுரென்பார் - புன்னகையுடையராகி என்ருர். சேர்வார் என்னும் வினைமுற்றுப் பெயரெச்சத்தின்மேல் நின்றது. மருகனுர் மருகன் என்னும் ஒருமைப்பெயரோடு ஆர் என்னும் இடைச்சொல்வந்து ஒருமை சிதையாமல் பலர்பால் வினைமுற்றைக்கொண்டு முடிந்தமையில் பால்வழுவமைதி. "இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி பலர்க்குரியெழுத்தின் வினையொடுமுடிமே" எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தாலுணர்க. (கடுO)

அருத்தநான்மறைகளார்ப்பவரிமணித்தவிசிலேறி
நிருத்தனுங்கிருந்துசூழநின்றமாலயனையேனை
யுருத்திராதியரைப்பின்னுமொழிந்தவானவரைத்தத்தந்
திருத்தகுதவிசின்மேவத்திருக்கடைநாட்டம்வைத்தான்.

(இ-ள்.) நிருத்தன் - சிவபெருமான், அருத்தம் நானமறைகள் ஆர்ப்ப-பொருளமைந்த நான்குவேதங்களும் கோஷிக்க, மணி அரி தவிசில் ஏறி ஆங்கு இருந்து-இரத்தினம்பதித்த சிங்காதனத்தின்மேலேறி அங்குவீற்றிருந்து, சூழ நின்ற மால் அயனை-தன்னைச்சூழநின்ற திருமாலையும் பிரமனையும், ஏனை உருத்திரர் ஆதியரை-அவரொழிந்த உருத்திரர்முதலியோரையும், பின்னும் ஒழிந்தவானவரை - பின்னும் அவரொழிந்ததேவர்களையும், தத்தம் திருத்தகு தவிசில் மேவ - அவரவர் தமக்கிட்ட சிறப்புமிக்க ஆசனங்களிலிருக்க, திருக்கடை நாட்டம் வைத்தான் - திருக்கடைக்கண்செய்தருளினுன். (கடுக)

விண்டலவாஞேரேஞேர்மிடைதலான்ஞாலச்செல்வி
பண்டையளன்றியின்றுபரித்தனள்பௌவமேழு
முண்டவன்றன்னைத்தானின்றுத்தரத்திருத்தினுஞே
வண்டர்நாயகன்றனுணைவலியிஞேவறியேமம்மா.

(இ-ள்.) விண்தலம் வாஞேர் ஏஞேர் மிடைதலால்-விண்ணுலகத்திலுள்ள தேவர்களும் அவரொழிந்த ஏனை உலகங்களிலுள்ளவர்களும் நெருங்குதலால், ஞாலம் செல்வி பண்டையளன்றி இன்று பரித்தனள் - பூதேவியு முன்போல் ஒருபால்சாய்ந்ததுபோலச் சாயாது இன்று சமமாய்ச் சுமந்திருந்தாள், பௌவம் ஏழும் உண்டவன் தன்னை தான் இன்று உத்தரத்து இருத்தினுஞே - ஏழுகடலையும் உண்டருளிய அகத்தியமுனிவரையே முன்தென்திசையிலிருத்தியதுபோல)தான்இப்பொழுதுவடதிசையிலிருத்தினுஞே, அண்டர் நாயகன் தன் ஆணைவலியிஞே-(அன்றித்) தேவர்நாயகனுகிய சிவபெருமானுடைய ஆக்கினையின் வலிமையாலோ, அறியேம் - (நாம்) அறியோம்.

மலையரையன்புத்திரியாராகிய உமாதேவியாரை இமையமலையினகண் திருக்கல்யாணஞ்செய்யச் சிவபெருமான் முன்னர் எழுந்தருளிய காலத்துத் தேவர் முதலியோர் அங்குவந்து நெருங்கினமையால் தென்பால் தாழ்ந்து நிற்றலின் ஞாலச்செல்வி பண்டையளன்றி எனவும், அவற்றை யறிதற்கு அவன் திருவருள்வேண்டுதலால் அறியோம் எனவுங் கூறினுர். (கடுஉ)

மாமணித்தவிசில்வைகிமணவினைக்கடுத்தவோரை
தாம்வருமளவும்வானத்தமனியமலர்க்கொம்புன்னுர்
காமருநடனநோக்கிக்கருணைசெய்திருந்தானிப்பாற்
கோமகள்வதுவைக்கோலம்புனைதிறங்கூறலுற்றேன்.

(இ-ள்.) மாமணி தவிசில் வைகி - பெரிய இரத்தினங்கள்பதித்த சிம்மாதனத்தில் வீற்றிருந்தருளி, மண விளைக்கு அடுத்த ஓரை தாம் வரும் அளவும் - திருக்கலியாணச்சடங்குக்கு வகுத்தமுகூர்த்தம் வருங்காறும், வானம் தமனியம் மலர்க் கொம்பு அன்னார் - விண்ணுலகிலுள்ள பொற்பூங்கொம்பையொத்த அரம்பையர்கள் (செய்யும்) காமரு நடனம் நோக்கி கருணைசெய்து இருந்தான் - விருப்பம் செய்யும் ஆடலைநோக்கிக் கருணைசெய்திருந்தருளினான், இப்பால் - இப்புறம், கோமகள் வதுவை கோலம் புனைதிறம் கூறலுற்றேன் - தடாதகைப்பிராட்டியார் திருமணக்கோலம்புனைகின்றவகையினைச் சொல்லத்தொடங்குகின்றேன். (கஅ)

மாசறுத்தெமையானந்தவாரிநீராட்டிப்பண்டைத்
தேசுருவிளக்கவல்லசிவபரம்பரையைச்செம்பொ
னாசனத்திருத்திநானமணிந்துகுங்குமசேறப்பி
வாசநீராட்டினார்கண்மதிமுகக்கொம்பரன்னார்.

(இ-ள்.) மாசு அறுத்து எம்மை ஆனந்தவாரி நீர் ஆட்டி-மலக்குற்றத்தையொழித்து எம்மைப் பேரின்பவெள்ளப்பெருக்கில்மூழ்குவித்து,பண்டை தேசு உரு விளக்கவல்ல சிவபரம் பரையை-அநாதியிலுள்ள ஒளிவடிவமாகச்செய்யவல்ல சிவசத்தியாகிய பிராட்டியாரை, மதிமுகம் கொம்பர் அன்னார்-சந்திரன்போன்ற முகத்தையுடைய பூங்கொம்புபோன்ற வண்ணப்பெண்கள், செம் பொன் ஆசனத்து இருத்தி-செவந்தபொன்னாலாகிய ஆசனத்தில் எழுந்தருளச்செய்து, நானம் அணிந்து குங்குமம் சேறு அப்பி - கஸ்தூரிதிமிர்ந்து குங்குமக்குழம்பையப்பி - வாசநீர் ஆட்டினார்கள் - வாசமூட்டியநீரால் ஸ்நானஞ்செய்வித்தார்கள்.

அத்துவாவிற் கட்டுண்ட எனதுஞானத்தைமறைத்த ஆணவாதிகுற்றங்களை - மாசு எனவும், தீக்கைமுறைப்படி கலாசோதனையால் அக்குற்றங்களினின்றும் எடுத்தொழித்தலை - அறுத்தெனவும், வாதனைபற்றியெழும் மலபோதநீக்கத்தில் அறிவானந்தத்து மூழ்கச்செய்தலை, ஆனந்தவாரி நீராட்டி எனவும், என்னிற்பிரிவற்று என்பருவத்துக்கியல உபகரித்துவந்த சிவந்தோடு தாதான்மியப்படுத்தி யச்சிவமேயாய் யான் நிற்கச்செய்தலை - பண்டைத்தேசுரு விளக்கவல்ல எனவும் கூறினார்.()

முரசொடுசங்கமேங்கமூழ்கிநுண்டுகிலசாத்தி
யரசியலறத்திற்கேற்பவந்தணர்க்குரியதானம்
விரைசெறிதளிர்க்கையாரவேண்டுவவெறுப்பத்தந்து
திரைசெய்நீரமுதமன்னாடிருமணக்கோலங்கொள்வாள்.

(இ-ள்.) முரசொடு சங்கம் ஏங்க மூழ்கி - பேரிகையோடு சங்கமொலிக்கத் திருமஞ்சனமாடி, நுண் துகில் சாத்தி-மெல்லிய ஆடையுடுத்து, அரசியல் அறத்திற்கு ஏற்ப - (தமது) க்ஷத்திரியதருமத்துக்குப்பொருந்த, அந்தணர்க்கு உரியதானம் வேண்டுவ வெறுப்ப-பிராமணர்களுக்குரிய தானங்களாக (அவர்கள்) வேண்டும்பொருள்களை அவாவற, விரை செறி தளிர் கை ஆர தந்து - வாசமிக்க தளிர்போன்ற திருக்கரங்களால் நிரம்பத்தந்து, திரை செய் நீர் அமுதம் அன்னாள் திருமணம் கோலம் கொள்வாள் - கடலிற்றோன்றிய அமுதம்போன்ற பிராட்டியார் திருமணக்கோலங்கொள்ளத்தொடங்கினார். (கஅ)

செம்மலர்த்திருவும்வெள்ளைச்செழுமலர்த்திருவுந்தங்கள்
கைம்மலர்த்தவப்பேறின்றுகாட்டுவார்போலநங்கை
யம்மலரனிச்சமஞ்சுமடியிற்செம்பஞ்சுதீட்டி
மைம்மலர்க்குழன்மேல்வாசககாசறைவழியப்பெய்து.

(இ-ள்.) செம்மலர் திருவும் - செந்தாமரைமலரில் வசிக்கும் திருமகளும், செழுமலர் வெள்ளை திருவும் - அன்றலர்ந்த வெண்டாமரைமலரில் வசிக்குங் கலைமகளும், தங்கள் கைமலர் தவம் பேறு - தங்கள்கைத்தாமரைமலர்கள் செய்த தவப்பயனை, இன்றுகாட்டுவார்போல - இப்பொழுது (கைபுனைதொழிலாற்) காட்டுவார்போல, நங்கை அம் அனிச்சமலர் அஞ்சும் அடியில் - பிராட்டியாருடைய அழகிய அனிச்சமலர்களை மிதிக்க அஞ்சும் திருவடியில், செம்பஞ்சு தீட்டி - செம்பஞ்சுக்குழம்புதீட்டி, மை மலர் குழல் மேல் - மேகம்போன்ற மலரையணிந்த கூந்தலின்மேல், வாசம் காசறை வழிய பெய்து - வாசமிக்க மயிர்ச்சாந்து வழிய அப்பி.

திரு-என்பது கண்டோரால் விரும்புந்தன்மையுடையாமேல் நிறமலின் செம்மலர்த்திருவும் வெள்ளைத் செழுமலர்த்திருவும் என்றார். திருக்கோவையாருள்- "திருவளர்தாமரை" என்னும் பாசுரத்தில் திரு என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதியவுரையாலுணர்க. (௩௫௬)

கொங்கையின்முகட்டிற்சாந்தங்குளிர்பனிநீர்தோய்த்தட்டிப்
பங்கயமலர்மேலன்னம்பவளச்செவ்வாய்விட்டார்ப்பத்
தங்கியவென்னவாரநூபுரந்ததும்பசெங்கே
ழங்கதிர்ப்பாதசாலங்கிண்கிணியலம்பப்பெய்து.

(இ-ள்.) கொங்கையின் முகட்டில்-திருத்தனங்களினுச்சியில், சாந்தம் குளிர் பனிநீர் தோய்த்து அட்டி - சந்தனத்தைப் பனிநீரிற் குழைத்துத் திமிர்ந்து, பங்கயம் மலர்மேல் - தாமரைமலரின்மேல், அன்னம் பவளம் செவ்வாய் விட்டு ஆர்ப்ப தங்கிய என்ன - அன்னங்கள் பவளம்போன்ற செவந்த வாயைத்திறந்து ஒலிக்கத் தங்கியிருத்தல்போல, ஆர நூபுரம் ததும்ப - பொருந்தச் சிலம்புகளொலிக்கவும், செம் கேழ் அங்கதிர் பாதசாலம் கிண்கிணி அலம்ப - செவந்த நிறத்தையுடைய அழகிய கிரணத்தையுடைய பரியகமும் கிண்கிணியும் சத்திக்கவும், பெய்து-திருவடிகளின்மேல் சூட்டி.

பரியகம் ஆவது "பொன்னிதழ்பொதிந்த பன்னிறமணிவடம், பின்னிய தொடரிற் பெருவிரன்மோதிரம், தன்னொடுதொடக்கித் தமனியச்சிலம்பின், புறவாய்ச்சூழ்ந்து புணரவைப்பதுவே." என்னுஞ் சூத்திரத்தால் உணர்க. தங்கிய என்னும் வினைமுற்றுத் தொழிலின்மேல் நின்றது. (௩௫௭)

எண்ணிரண்டிரட்டிகோத்தவிரிசிகையிருபத்தொன்றிற்
பண்ணியகலாபமீரேழ்பருமநாலிரண்டிற்செய்த
வண்ணமேகலையிரண்டிற்காஞ்சியிவ்வகையோரைந்தும்
புண்ணியக்கொடிவண்டார்ப்பப்பூத்தபோற்புலம்பப்பூட்டி.

(இ-ள்.) எண் இரண்டு இரட்டி கோத்த விரிசிகை - முப்பத்திரண்டு கோவையாகக்கோத்த விரிசிகையும், இருபது ஒன்றில் பண்ணிய கலாபம் - இருபத்தொரு கோவையாகச்செய்த கலாபமும், ஈரேழ் பருமம் - பதினான்கு கோவையாகக்கோத்த பருமமும், நாலிரண்டில் செய்த வண்ணம் மேகலை - எட்டுக்கோவையா

கக்கோத்த அழகியமேகலையும், இரண்டில் காஞ்சி - இரண்டுகோவையாகக்கோத்த காஞ்சியும் (ஆகிய) இவ்வகை ஓரைந்தும் - இவ்வகைப்பட்ட ஐந்தாபரணங்களையும், வண்டு ஆர்ப்ப புணரியம் கொடி பூத்தது போல்-வண்டுகளொலிக்கப் புணரியக் கொடியொன்று பூத்திருத்தல்போல, புலம்ப பூட்டி-இடையில் ஒலிக்கப்பூட்டி.

இடைநிலைபெற்றுவந்த தொழிற்பெயரினீறுதொக்குநின்றது. (௧௫௮)

> பொருன்மணிவண்டுவீழ்ந்தகாந்தளம்போதுபோல
> மின்மணியாழிகோத்துமெல்விரற்செங்கைக்கேற்ப
> வன்மணிவைரயாப்புகடகமுந்தொடியும்வானத
> தென்மணிக்கரங்கள்கூப்பவிருதடந்தோளிலேற்றி.

(இ-ள்.) பொன் மணி வண்டு வீழ்ந்த அம் காந்தள் போது போல-பொன்னிறமும் நீலமணிநிறமும (வாயந்த) வணடுகள்வீழநத அழகிய காநதளமலரினிதழ்போல, மெல் விரல் மின் மணி யாழி கோதது - மெல்லிய விரலில் விளங்கும் நீலமணி பதிதத பொன்மோதிரத்தையிட்டு, செங்கைக்கு ஏறப வல்மணி வைரயாப்பு கடகமும்-செவந்தகைகளுக்குப பொருநத வலியவைரமணியாறசெயத தலைப்பூட்டுள்ள கடகங்களையும், தொடியும்-தொடியையும, தடம் இரு தோளில் - பணைத்த இரண்டு திருத்தோள்களில், வானத்து எல் மணி கரங்கள் கூப்ப ஏற்றி - ஆகாயத்திலுலவுஞ் சூரியன் (தனது) கிரணங்களாகிய கைகள் கூப்பிவணங்க அணிநது.

கடகம், தொடி இவற்றின் ஒளிகளுக்குத தனது ஒளிமழுங்கிற்றென்பது தோன்ற - எல்மணிககரங்கள் கூப்ப என்றார். (௧௫௯)

> மரகதமாலையமபொன்மாலைவித்துருமமாலை
> நிரைபட்வானவில்லினிழலபடவாரத்தாமம
> விரைபடுகளபசேறுமெழுகியபுளககொஙகை
> வரைபடுமருவியனறிவனபபுநீறுரையுமான.

(இ-ள்.) விரைபடு களபம சேறு மெழுகிய புளகம் கொங்கை - வாசமிக்க கலவைககுழமபுதிமிாநத புளகரும்பிய திருததனஙகில, மரகதமாலை - மரகதமாலையும், அம் பொன மாலை - (அழகிய) பொனமாலையும, வித்துருமமாலை - பவளமாலையும், வான விலலின நிழல பட நிரை பட - இந்திர [illegible] ஒளிவீச வரிசைவரிசையாகவும, ஆரம தாமம - முதது மாலை [illegible] அன்றி - மலையினினறிழியும அருவியை [illegible] நுரையும் மான - அழகியவெள்ளிய நுரை எழுநத [illegible] (௧௬௦)

> உருவமுத்துடுவாயமமுதுபடுமபலகாசுகோளாய
> மருவவக்காசுசூழநதமாமணி [illegible]
> வெருவவிட்டிமைக்குமாரம் [illegible] சூழ்ந்தாடுந
> துருவசககரமபோறகொஙகைதுடலவரவணியகசசூட்டி.

(இ-ள்.) உருவம் முத்து உடுவாய் - தோற்றத்தையுடைய முததுகள் நக்ஷத்திரங்களாகவும, அம முததுடுதத பல் காசு கோளாய் மருவ - அம்முத்துகளைச்சூழ்ந்த பலவகை இரத்தினங்கள் கோள்களாகவும் பொருநதவும, அககாசு சூழ்ந்த மாமணி கதிராய் - அவ்விரத்தினங்கள்சூழ்நத பெரியநாயகமணி சூரியனாகவும், கங்குல் வெருவ விட்டு இமைக்கும் ஆரம் - (இவ்வாறுகைபுனைநத) இருளஞ்சியோடவொளிவிளங்கும் பதக்கமானது, மேருவின் புறம் சூழ்ந்து ஆடும் துருவசக்கரம் போல் - மேருவின்புறத்தைச்சூழ்ந்துசெல்லுந் துருவசக்கரத்தைப்போல, கொங்

கை துயல்வர - திருத்தனத்தின்மேல் தொங்கியசைய, விளங்க சூட்டி - (மாகதமாலைமுதலிய) அணிகள் விளங்க அணிந்து.

நிலைபட, மான, துயல்வர என்னும் வேறுபலவடுக்கிய வினையெச்சங்கள் சூட்டி என்னும் வினையெச்சத்தின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. ஆய் என்னும் வினையெச்சங்கள் செயவெனெச்சத்திரிபுகள். துருவசக்கரம் ஆரமாகக்கூறி அத்துருவசக்கரத்துளமைந்த நக்ஷத்திரங்களை முத்தாகவும், சந்திரன்முதலிய கோள்களை வயிரமுதலிய இரத்தினங்களாகவும்,சூரியனை அவ்விரத்தினங்களின்நடுவில் வாய்ந்த மாணிக்கமாகவும், உருவகஞ்செய்தமையால் உவம உருவகவணி. (ககூக)

கொடிக்கயலினமாய்நின்றகோட்சுறுவேறும்வீறுந்
தொடிக்கலைமதியுந்தங்கோன்றொல்குலவிளக்காய்த்தோன்றும்
பிடிக்கிருகாதினூடுமந்தணம்பேசுமாபோல்
வடிக்குழைமகரத்தோடுபரிதிவாண்மழுங்கச்சேர்த்து.

(இ-ள்.) கொடிக்கயல் இனம் ஆய் நின்ற கோள் சுறு ஏறும் - கொடியிலெழுதியகயலுக்கு இனமாகநின்ற வலிய ஆண்மகரமும், வீறும் கலை தொடி மதியும்- நாளுக்குநாள் உயர்ந்துதோன்றும கலைகளையுடைய வட்டமாகிய சந்திரனும், தம் கோன் தொல்குல விளக்கு ஆய் தோன்றும் பிடிக்கு - தமது தலைவனாகிய மலயத்துவசபாண்டியனது தொன்றுதொட்டுள்ள மரபுக்கு ஓர்தீபமாக அவதரித்த பிராட்டியாருடைய, இருகாதின் ஊடும் - இரண்டு திருச்செவியின்கண்ணும் (வந்து தம்முட்கலந்து,)மந்தணம் பேசும் ஆறுபோல்-இரகசியம்பேசும் வகைபோல, வடி மகரம் குழை தோடு - நீட்சியமைந்த மகரகுண்டலம் பூட்டியதோடு, பரிதி வாள் மழுங்க சேர்த்து - சூரியனது ஒளிமழுங்கும்படி அணிந்து.

மலயத்துவசபாண்டியன் உமாதேவியாரைப்பெறும் பெருந்தவத்தினனுதலின் அவன்மரபிற்கு முதல்வனாகிய சந்திரனிலும் சிறந்தோனென்பார் - கலைமதியுந் தங்கோன் எனக்கூறினர். பாண்டியர்மரபிற்குக் கயற்கொடியாதலில் அக்கயலுக்கினமாகிய சுறவும், அவன்குலத்துமுதல்வனாகிய சந்திரனும் தம்முட்கலந்து காதிற் குடிகொண்டிருந்ததுபோல மகரகுண்டலம் அமைந்த தோடுபுனைந்தமையால் சுறவைமகரகுண்டலமாகவும், மதியைததோடாகவும் கூட்டி ஒப்புமைக்கூட்டவணியாகக்கொள்க. (ககூ௨)

மழைக்குமாமதிக்குநாப்பண்வானவிற்கிடந்தாலொப்ப
விழைக்குமாமணிசூழ்பட்டமிலம்பகமிலங்கப்பெய்து
தழைக்குமாமுகிலைமைந்தன்றளையிடல்காட்டுமாபோற்
குழைக்குநீர்த்தகரஞாழற்கோதைமேற்கோதையார்த்து.

(இ-ள்.) மழைக்கும் மாமதிக்கும் நாப்பண் - மேகத்திற்கும பூரணசந்திரனுக்கும் நடுவில், வான வில் கிடந்தால் ஒப்ப - இந்திரதனுசு கிடந்தாற்போல, மாமணி இழைக்கும் சூழ் பட்டம் இலம்பகம் - பெரிய இரத்தினங்கள்பதித்த ஒளிசூழ்ந்தபட்டத்தையும் நுதலணிமாலையையும, இலங்க பெய்து-நெற்றியில் விளங்கத்தரித்து, தழைக்கு மாமுகிலை-கருப்பங்கொண்ட பெரியமேகத்தை, மைந்தன்-(அவரது) புத்திரராகிய (உக்கிரகுமாரபாண்டியர்) தளை யிடல் காட்டும் ஆறுபோல-(பின்பு) விலங்கு பூட்டுதலைக்காட்டும் வகைபோல, நீர் குழைக்கும் தகர ஞாழல் கோதை மேல்-பனிநீரிற்குழைத்த மயிர்ச்சாந்தையணிந்த கூந்தலின்புறத்து, கோதை ஆர்த்து-பூமாலையைச்சூட்டி. (ககூ௩)

கற்பகங்கொடுத்தவிந்தக்காமருகலன்களெல்லாம்
பொற்பமெய்ப்படுத்துமுக்கட்புனிதனுக்கீறிலாத
வற்புதமகிழ்ச்சிதோன்றவழகுசெய்தமையந்தோன்றச்
சொற்கலையாளும்பூவின்கிழத்தியுந்தொழுதுநோக்கி.

(இ-ள்.) கற்பகம் கொடுத்த இந்த காமரு கலன்கள் எல்லாம் - கற்பகவிருக்ஷந்தந்த இந்தவிருப்பஞ்செயயும் ஆபரணங்களையெல்லாம், பொற்பமெய்ப்படுத்து-அழகுசெய்யத் திருமேனியிலுள்ள உறுப்புகளில்பூட்டி, முக்கண் புனிதனுக்கு-திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானுக்கு, ஈறு இலாத அற்புதம் மகிழ்ச்சிதோன்ற - முடிவில்லாத அற்புதமும் மகிழ்ச்சியும்தோன்ற, அழகு செய்து - அலங்காரஞ்செய்து, அமையம் தோன்ற - முகூர்த்தகாலம்வர, சொல் கலை யாளும் பூவின் கிழத்தியும் தொழுது நோக்கி - புகழமைந்தநாவின்கிழத்தியும் பூவின்கிழத்தியும் வணங்கி (தமதுகைபுனை தொழிலைமுறைப்படப்) பார்த்து. (௧௩௪)

சுந்தரவல்லிதன்னைசசோபனமென்றுவாழ்த்தி
வந்திருகையுந்தங்கண்மாந்தளிர்க்கைகணீட்டக்
கொந்தவிழ்கோதைமாதுமறமெலாங்குடிகொண்டேறு
மந்தளிர்ச்செங்கைபற்றுவெழுந்தனண்மறைகளார்ப்ப.

(இ-ள்.) சுந்தர வல்லி தன்னை சோபனம் என்று வாழ்த்தி-சுந்தரவல்லியாகிய பிராட்டியாரைச் சோபனம் என்று வாழ்த்துப்பாட்டுப்பாடி, இருகையும்வந்து-இரண்டுபக்கத்திலும்வந்து, தங்கள் மாந்தளிர் கைகள் உம் நீட்ட - தங்களுடைய மாந்தளிர்போல (மென்மைவாய்ந்த) இரண்டுகைகளையும் நீட்ட, கொந்து அவிழ் கோதைமாதும்-பூங்கொத்தலர்ந்த கூந்தலையுடைய பிராட்டியாரும், அறம் எல்லாம் குடிகொண்டு ஏறும்-முப்பத்திரண்டறங்களுங் குடிகொண்டேறிய, அம் தளிர் செங்கை பற்று-அழகியதளிர்போலச் செந்நிறம்வாய்ந்த திருக்கைகளாற்பற்றி, மறைகள் ஆர்ப்ப எழுந்தனள்-வேதங்கள்கோஷிக்க (அங்குநின்றும்) எழுந்தருளினார். (௧௩௫)

கலிவிருத்தம்.

அறைந்தனதூரியமார்த்தனசங்க
நிறைந்தனவானவர்நீண்மலர்மாரி
யெறிந்தனசாமரையேந்திழையார்வாய்ச்
சிறந்தனமங்கலவாழ்த்தெழுசெல்வம்.

(இ-ள்.) தூரியம் அறைந்தன - திருமணவாச்சியங்கள் (ஒருபால்) ஒலித்தன, சங்கம் ஆர்த்தன - திருமணச்சங்கம் (ஒருபால்) ஒலித்தன, வானவர் நீள் மலர் மாரிநிறைந்தன - தேவர்கள் (சொரியும) மணமிக்க புஷ்பவருஷம் எங்கும் நிறைந்தன, சாமரை எறிந்தன - சாமரை (எங்கும் ஒருபால்) வீசப்பட்டன, மங்கலவாழ்த்து எழு செல்வம் - மங்கலவாழ்த்தாயெழுந்த பொலிவு, ஏந்திழையார் வாய் சிறந்தன - பெண்களது வாயினின்று (ஒருபால்) சிறந்து விளங்கின. (௧௩௬)

அடுத்தனள்சுந்தரியம்பொனடைப்பை
யெடுத்தனளாடிதிலோத்தமையேந்திப்
பிடித்தனள்விந்தைபிடித்தனள்பொற்கோ
லுடுத்தநெருக்கையொதுக்கிடடந்தாள்.

(இ-ள்) சுந்தரி அடுத்தனள் - இந்திராணி (ஒருபால்) அடுத்து, அம் பொன் அடைப்பை எடுத்தனள் - அழகியபொன்னாலாகிய அடைப்பையை எடுத்துவரவும், திலோத்தமை ஆடி பிடித்து ஏந்தினள் - திலோத்தமைகண்ணாடிபிடித்து (ஒருபால்)ஏந்திவரவும், விந்தை பொன் கோல் பிடித்தனள் - வீரலக்ஷுமிபொற்கட்டளைத் த பிரம்பேந்தி, உடுத்த நெருக்கை ஒதுக்கிநடந்தாள் - சூழ்ந்தநெருக்கினையொது க்கி (ஒருபால்) நடக்கவும்.

அடுத்தனள், எடுத்தனள், ஏந்தினள், பிடித்தனள், நடந்தாளென்னும் வினை முற்றுகள் எச்சங்களாய்நின்றன. ஏந்து என்றும் வினையெச்சத்தினிறுதியில் பிடித் தனளென்னும் வினைமுற்றின் விகுதியைப் பிரித்துக் கூட்டுக. (௧௬௭)

கட்டவிழ்கோதையரம்பைகளாஞ்சி
தொட்டனளூர்ப்பசிதூமணியால
வட்டமசைத்தனளவன்னமணிக்கா
சிட்டிழைகோடிகமேனகைகொண்டாள்.

(இ-ள்.) கட்டு அவிழ் கோதை அரம்பை - முறுக்கவிழ்ந்த மலர்மாலை யணிந்த அரம்பையானவள், காளாஞ்சி தொட்டனள் - காளாஞ்சியை (ஒருபால்) ஏந்திவரவும், ஊர்ப்பசி - ஊர்வசியானவள், தூமணி ஆலவட்டம் அசைத்தனள், களங்கமில்லாத இரத்தினங்கள் பதித்த ஆலவட்டத்தை (ஒருபால்) வீசிவரவும், மேனகை- மேனகையானவள், வன்னம் மணிக் காசு இட்டு இழை கோடிகம் கொண்டாள் - பல நிறங்களையுடைய இரத்தினங்களை (வரிசைபட) வைத்துப் பதித்த பூந்தட்டை (ஒருபால்) ஏந்திவரவும்.

தொட்டனள், அசைத்தனள், கொண்டாளென்னும் வினைமுற்றுகள் எச்சங் களாய நின்றன. ஊர்ப்பசி ஊர்வசி என்னும் வடசொற்றிரிபு. பிரமன் தொடையிற்றோன்றினவள் என்னும் பொருள். (௧௬௮)

கொடிகளெனக்குளிர்போதொடுசிந்தும்
வடிபனிநீரினர்வீசுபொன்வண்ணப்
பொடியினரேந்தியபூமபுகைதீபத்
தொடியணிகையினர்தோகையர்சூழ்ந்தார்.

(இ-ள்.) கொடிகள் என - கொடிகள்போல, குளிர் போது ஒடு சிந்தும் - குளிர்ந்த மலரோடு சிந்தும், வடி பனி நீரினர் - வடித்த பனிநீரை யேந்தினவரும், வீசு பொன் வண்ணம் பொடியினர் - சிந்துகின்ற பொன்னிறம் வாய்ந்த கந்தப்பொடியை யேந்தினவரும், பூம் புகை தீபம் ஏந்திய தொடி அணி கையினர் - வாசமிக்க புகையுந் தீபமும் ஏந்திய வளையலணிந்த கைகளையுடையவருமாகிய, தோகையர் சூழ்ந்தார் - பெண்கள் (ஒருபால்) சூழவும்

சூழ்ந்தாரென்னும் வினைமுற்று எச்சமாய் நின்றது. (௧௬௯)

தோடவிழோதியர்சோபனகீதம்
பாடவிரைப்பனிநீரொடுசாந்த
மேடவிழ்மென்மலரிட்டபடத்திற்
பாடகமெல்லடியைப்பையவையா.

(இ-ள்.) தோடு அவிழ் ஓதியர் - இதழ் அவிழ்ந்த கூந்தலையுடைய பெண்கள், சோபன கீதம் பாட - சோபனங்கள் பாடிவரவும், விரை பனிநீரொடு சாந்தம்-வா

 

சமிக்க பனிநீரொடு கலந்த சந்தனக்குழம்பைத் (தெளித்து) ஏடு அவிழ் மெல் மலர் இட்ட படத்தில்-இதழவிழ்ந்த மெல்லிய மலர் பரப்பிய நடைப்பாவாடையின்மேல், பாடகம் மெல் அடி ஒப்ப வையா - பாடகத்தையணிந்த மெல்லிய திருவடிகளை (பரப்பிய அம்மலருக்கஞ்சி) மெல்ல வைத்தொதுங்கி.

எச்சங்களாய் நின்ற வேறு பல வடுக்கிய வினைமுற்றுகள் தனித்தனி வையா என்னும் வினையெச்சத்தின் முதனிலைகொண்டன. (கஎ௦)

செம்மலராளொடுநாமகடேவி
கைம்மலர்பற்றினகல்வியொடாக்க
மிமையிலேபெறுவார்க்கிதுபோதென்
றம்மணிநூபுரமார்ப்பநடந்தாள்.

(இ-ள்.) செம் மலராளொடு நாமகள் தேவி - பூவின் கிழத்தியோடு நாவின் கிழத்தியினுடைய, கை மலர் பற்றின - தாமரைமலர்போன்ற திருக்கைகளை (தமது திருக்கரங்களால்) பற்றுதலால், கல்வியொடு ஆக்கம் - கல்விப்பொருளோடு செல்வப்பொருளையும் (ஒருங்கே,) இமையிலே பெறுவார்க்கு - இப்பிறப்பிலே பெறக்கருதுவோருக்கு, இது போது என்று-இதுதான அமையமென்று, அம் மணி நூபுரம் ஆர்ப்ப நடந்தாள்-அழகிய ரத்தினங்கள் பதித்த சிலம்புகளொலிக்க நடந்தருளினார்.

வையா என்னும் வினையெச்சம-நடந்தாளென்னும் வினைமுற்றின்முதனிலை கொண்டு முடிதலால் அறைந்தன எனனும் செயயுண்முதல் செம்மலராளென்னும் செய்யுளகாறும ஒருதொடர். பற்றின என்னும் வினைமுற்றினின்று தொழிற்பெயர் பிரிந்து மூனறனுருபேற்றுநின்றது. (கஎக)

ஒல்கினண்மெல்லவொதுங்கினளன்பு
பில்கியிருந்தபிரானருகெய்தி
மெல்கியெருத்தமிசைத்தலைதூக்கிப்
புலகியகாஞ்சிபுலம்பவிருந்தாள்.

(இ-ள்.) ஒல்கினள் மெல்ல ஒதுங்கினள் - துவண்டுமெல்லவொதுங்கி, அன்பு பில்கி இருந்தபிரான் - (தன்மேல்) அன்புநிறைந்திருநத சிவபெருமான், அருகு எய்தி - பக்கலில் அடைநது, மெல்கி - மெனமைக்குணநிரம்பி, எருத்தமிசை தலை தூக்கி - பிடரின்மேல் (தமது) திருச்சிரமவைதது, புல்கிய காஞ்சி புலம்ப - இடையிலணிந்த காஞ்சியென்னும் ஓராபரணம் ஒலிக்குமபடி, இருந்தாள் - இருந்தருளினார்.

இருந்தருளும்போது காஞ்சி ஒலிக்குமாதலின் புலம்பவிருந்தாளெனவும், அரசுநடாததுந தனமையொழிநது இல்வாழ்க்கைக்குரிய பெண்தன்மையடைந்தமையின் மெல்கி எனவுங்கூறினர். (கஎஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அற்பகவிமைக்குஞ்செம்பொனரதனபீடத்தும்பர்ப்
பொற்பகலாதகாட்சிப்புனிதனோடிருந்தநங்கை
யெற்பகல்வலங்கொண்டேகுமெரிகதிர்வரையினுச்சிக்
கற்பகமருங்கிற்பூத்தகாமருவல்லியொத்தாள்.

(இ-ள்.) அல் பக இமைக்கும் - இருள்கெடவிளங்கும், செம்பொன் அரத ன பீடத்து உம்பர் - செவந்தபொன்னாலாகிய இரத்தினமிழைத்த பீடத்தின்மேல், பொற்பு அகலாத காட்சி புனிதனோடு - பொலிவுநீங்காத தோற்றத்தையுடைய சிவபெருமானோடு, இருந்த நங்கை - எழுந்தருளியிருந்தபிராட்டியார், எல் பகல் வலங்கொண்டு ஏகும் - சூரியன் பிரதக்ஷிணஞ்செய்து செல்லும், எரிகதிர் வரையி ன் உச்சி-விளங்குங் கிரணத்தையுடைய மகமேருவின்முகட்டில், கற்பகம் மருங்கில் பூத்த - கற்பகவிருக்ஷத்தின் பக்கத்தில் பூத்தப்பட்டர்ந்த, காமரு வல்லி ஒத்தாள்-வி ருப்பந்தருங் காமவல்லிக்கொடியை யொத்திருந்தார்.

பொற்பீடம் மகமேருவாகவும், சிவபெருமான் கற்பகமாகவும், பிராட்டியார் காமவல்லிக்கொடியாகவும்கொண்டு கூட்டி ஒப்புமைக்கூட்டவணியாகக்கொள்க.()

பண்ணுமின்னிசையுநீருந்தண்மையும்பாலும்பாலி
னண்ணுமின்சுவையும்பூவுநாற்றமுமணியுமங்கேழ்
வண்ணமும்வேறுவேறுவடிவுகொண்டிருந்தாலொத்த
தண்ணலுமுலகமீன்றவம்மையுமிருந்ததம்மா.

(இ-ள்.) அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் இருந்தது-சிவபெருமானும் உலகத்தைப்பெற்ற பிராட்டியாரும் (வெவ்வேறு) யிருந்தருளிய திருக்காட்சி, பண் ணும் நண்ணும் இன் இசையும்-பண்ணும் அதனோடபேதமாய்ப்பொருந்திய இசையும், நீரும் நண்ணும் தண்மையும்-நீரும் அந்நீரிலுள்ள குளிர்ச்சியும், பாலும் பாலில் நண் ணும் இன்சுவையும் - பாலும் அப்பாலிலுள்ள இனியசுவையும், பூவும் நண்ணும் நாற்றமும் - மலரும் அம்மலரிலுள்ள மணமும், மணியும் நண்ணும் அம் கேழ் வண் ணமும் - மாணிக்கமும் அம்மாணிக்கத்திறபொருந்திய அழகியநிறமும், வேறு வேறு வடிவுகொண்டு இருந்தால் ஒத்தது - வெவ்வேறுவடிவங்கொண்டிருந்த தோற்றத் தையொத்திருந்தது.

தம்மின் நின்று ஒருபோதும் நீங்காத பிரானும பிராட்டியாரும் ஒருகாரண ம்பற்றிப் பிரிந்திருப்பினும் தம்முட் பிரியாரென்பார் - ஒன்றினின்றொன்றுபிரியாத பொருள்கள் தம்முட் பிரிதலின்மைதோன்ற வேறுவேறு வடிவுகொண்டிருந்தாலெ னக்கூறி, அவற்றை உவமையாகக்கூறினார். (௧௭௪)

விண்ணுளார்திசையினுள்ளார்வேறுளார்பிலத்தினுள்ளார்
மண்ணுளார்பிறரும்வேள்விமண்டபத்தடங்கியென்றும்
பண்ணுளாரோசைபோலப்பரந்தெங்குநிறைந்தமூன்று
கண்ணுளாரருளினீழல்கலந்துளார்தம்மையொத்தார்.

(இ-ள்.) விண் உள்ளார் திசையின் உள்ளார் - வானுலகிலுள்ளவர்களும் எட்டுத்திக்கிலுள்ளவர்களும், வேறு உள்ளார் - இவையொழிந்த ஏனையிடங்களிலு ள்ளவர்களும், பிலத்தின் உள்ளார் - பாதலத்திலுள்ளவர்களும், மண் உள்ளார் பிறரும் - நிலவுலகிலுள்ளவர்களும் அவரொழிந்த ஏனையோரும், வேள்வி மண்டப த்து அடங்கி - திருக்கலியாணமகோற்சவ மண்டபத்துள் (தம்முட்பேதமின்றி ஒரு சேர) அடங்கி, பண் உள் என்றும் ஆர் ஓசைபோல பரந்து - பண்ணில் எப்பொழு தும் (நீங்காது) நிறைந்தவோசைபோலப்பரவி, எங்கும் நிறைந்த மூன்றுகண் உள் ளார் அடியின் நீழல் - எங்குநிறைந்த மூன்றுகண்களையுடைய பெருமானாது திருவ

டிநீழலில், கலந்து உள்ளார் தம்மை ஒத்தார் - (தம்முட்பேதமின்றிக்) கலந்தவடியவரை யொத்திருந்தார்கள்.

பண்ணுள் இசைபரவி இருத்தல்போலச் சிவபெருமான் எங்கும் அத்துவிதமாயிருத்தலின் புரந்தெனவும், தேவர் முதலியோர்முதல் நிலவுலகினுள்ளோர்காறும் பேதமின்றி ஒருசேரவிருத்தலின் அடியின்நீழல் கலந்துளார்தம்மை ஒத்தார் எனவும் கூறினார். "பண்ணையுமோசையும்போலப்பழமதுவு - மெண்ணுஞ்சுவையும் போலெங்குமாம் - அண்ணலருளத்துவிதமாதல்" என வருஞ் சிவஞானபோதத்தா லுணர்க. (௧௭௫)

ஆயபோதாழியங்கையண்ணல்பொற்கரகநீராற்
சேயவான்சோதியாடற்சேவடிவிளக்கிச்சாந்தந்
தூயபோதவிழசசாத்தித்தூபமுஞசுடருங்கோட்டி
நேயமோடருசசித்தையனிறையருள்பெற்றுநின்றான்.

(இ-ள்.) ஆயபோது - இவ்வாறுள்ளகாலத்தில், ஆழி அங்கை அண்ணல்-சக்கரத்தையேந்திய அழகியகையையுடையதிருமால், பொன் கரக நீரால் - பொன்னுலாகிய கரகததில்நிறைநத நீரினால், சேய வான் சோதி ஆடல் சேவடி விளக்கி - செவந்தபெரியவொளிப்பிழம்பாகிய சிவபெருமானது நடனம்புரியும் செவந்ததிருவடிகளைவிளக்கி, சாந்தம் தூயபோது அவிழ சாத்தி - சந்தனத்தையும் குற்றமற ஆராய்ந்தமலரையும் மணம்வீசச்சாததி, தூபமும் சுடரும் கோட்டி நேய மோடு அருச்சித்து - தூபத்தையும் தீபத்தையும (விதிமுறை) சுற்றி அன்போடருச்சனைசெய்து, ஐயன் நிறை அருள் பெற்று நின்றான்-அச்சிவபெருமானுடைய நிறைந்ததிருவருளை அடைந்துநின்றார். (௧௭௬)

விண்டலத்தவருளாதிவேதியன்பாததீர்த்த
முண்டகத்தவனுமாலுமுனிவரும்புரந்தராதி
யண்டருநந்திதேவுமடிகணத்தவருமேனைத்
தொண்டரும்புறம்புமுள்ளுநனைத்தனர்சுத்திசெய்தார்.

(இ-ள்.) விண் தலத்தவருள் - வைகுந்தமுதலிய விண்ணுலகினுள்ளவருள், ஆதி வேதியன் பாத தீர்த்தம் - முதலாயுள்ள பிராமணனாகிய சிவபெருமானது திருவடியைவிளக்கிய (பாத)தீர்த்தததால், முண்டகத்தவனும் மாலும் முனிவரும்-தாமரையில்வசிக்கும் பிரமனும் திருமாலும முனிவர்களும், புரந்தரன் ஆதி அண்டரும்-இந்திரன்முதலாகிய தேவர்களும, நந்திதேவும் அடிகணத்தவரும் - நந்திநாயனாரும் அவரையடுத்த சிவகணத்தவரும், ஏனைத்தொண்டரும்-மற்றை அடியாரகளும், புறம்பும் உள்ளும் நனைத்தனர் - (தமது) புறம்பும் உள்ளும் நனைத்து, சுத்திசெய்தார்-தம்மைப்புனிதமாகினார்கள். (௧௭௭)

அத்தலைநின்றமாயோனாதிசெங்கரத்துநங்கை
கைத்தலங்கமலப்போதுபூத்ததோர்காந்தளொப்ப
வைத்தருமனுவாயோதக்காகநீர்மாரிபெய்தான்
றொத்தலர்கண்ணிவிண்ணோர்தொழுதுபூமாரிபெய்தார்.

(இ-ள்.) அத்தலை நின்ற மாயோன்-அவ்விடத்தினின்ற திருமால், ஆதி செம் கரத்து - சிவபெருமான் செவந்ததிருக்கரத்தில், கமலப்போது பூத்தது ஓர் காந்த

ள் ஒப்ப - தாமரைமலரில்மலர்ந்த ஒருகாந்தள்மலரையொப்ப, நங்கை கைத்தலம் வைத்து - பிராட்டியார் திருக்கரங்களைவைத்து, வாய் அரு மறை ஓத - தமது திருவாய்மந்திரம்ஓத, கரகநீர் மாரி பெய்தான் - தாரைவார்த்தார், தொத்து அலர் கண்ணி விண்ணோர் தொழுது பூமாரி பெய்தார் - பூங்கொத்தலர்ந்த மாலையையணிந்த தேவர்கள் வணங்கிப் புஷ்பதாரைசொரிந்தார்கள்.

கரகநீர் மாரிபெய்தான் என்பதற்கு கரகத்திலுள்ளநீரை வார்த்தானென்பது பொருள். (௧௭௮)

ஆடினாரரம்பைமாதர்விஞ்சையரமுதகீதம்
பாடினாரரவென்றார்த்துப்பரவினார்முனிவர்வானோர்
மூடினார்புளகப்போர்வைகணத்தவர்முடிமேற்செங்கை
சூடினார்பலருமன்றற்றொடுகடலின்பதாழ்ந்தார்.

(இ-ள்.) அரம்பை மாதர் ஆடினார் - அரம்பைப்பெண்கள் (ஒருபால்) ஆடினார்கள், விஞ்சையர் அமுத கீதம் பாடினார் - வித்தியாதரர்கள் அமுதம்போன்ற இசையை (ஒருபால்) பாடினார்கள், முனிவர் அர என்று ஆர்த்துபரவினார் - முனிவர்கள் அரகரவென்று கோஷித்துத்துதித்தார்கள, வானோர் புளகம் போர்வைமூடினார் தேவர்கள் புளகமாகிய போர்வையிற்பொதிந்தார்கள், கணத்தவர் முடிமேல் செங்கை சூடினார் - சிவகணத்தவர்கள் தமதுசிரங்களின்மேல் செவந்தகைகளைக்கூப்பி அஞ்சலித்தார்கள், பலரும் மன்றல் இன்பம் தொடு கடல் ஆழ்ந்தார் - (இவரொழிந்த) தேவரும் மானிடரும் திருக்கலியாணமகோற்சவமாகிய இன்பக்கடலில் அழுந்தினார்கள்.

தொடுகடல் என்பதற்கு - சகரர்தோண்டிய கடலெனப்பொருள்கொள்க. ()

புத்தனாெறிந்தகல்லும்போதெனமிலைந்தவேத
வித்தனாடிக்கீழ்வீழ விண்ணவர்முனிவரோனோ
சுத்தநாவாசிகூறக்குங்குமத்தோயந்தோய்ந்த
முத்தவாலரிசிவீசிமூழ்கினார்போகவெள்ளம்.

(இ-ள்.) புத்தனார் எறிந்த கல்லும் - சாக்கியநாயனாரெறிந்தகல்லையும், போது என மிலைந்த வேத வித்தனார் - மலராகச்சூடியருளிய சிவபெருமானாருடைய, அடிக்கீழ்வீழ - திருவடியின்கீழ்வீழ, விண்ணவர் முனிவர் ஏனோர் சுத்தநா ஆசிகூற, தேவர்களும் முனிவர்களும் அவரொழிந்தோரும் (தமது) புனிதமாகிய நாவால் ஆசீர்வசனங்கூற, குங்குமம் தோயம் தோய்ந்த முத்தம் வால் அரிசி வீசி-குங்கும நீரிற்கலந்த முத்தினையொத்த வெள்ளிய அரிசியைவீசி, போகவெள்ளமூழ்கினார்- இன்பவெள்ளத்தில் மூழ்கினார்கள்.

சாக்கியநாயனார் அன்பால் தனது திருமுடிமேலெறிந்த கல்லுக்குக் கருணைகூர்ந்து முத்தியளித்த சிவபெருமான் தனது திருவடிக்கீழ் முன்பால் தேவர்முதலியோர்வீசிய அக்கதைக்கு இன்பம் அளித்தது அருமையன்றென்பதுதோன்றத் தம் வினை முதல்வினைகொடுத்து வீசி மூழ்கினார் என்றார். (௧௮௦)

அம்மையோடப்பனென்னவலர்மணம்போலநீங்கார்
தம்மருள்விளையாட்டாலேயாற்றநாட்டமியர்போல
நம்மனோர்காணத்தோன்றிநன்மணம்புணரானால
மும்மையுமுய்ந்தவென்னாத்தத்தமின்மொழியலுற்றார்.

(இ-ள்.) அம்மை அப்பன் என்ன - அம்மையப்பனென்று, அலர் மணம் போல நீங்கார் - மலரும் மணமும்போலத் தம்முள்பிரியாதவர், தம் அருள் விளையாட்டால் - தமது திருவருளாகிய விளையாட்டினுல், ஆற்ற நாள் தமியர் போல - அனேகநாளாய்ப் பிரிந்தவர்போல, நம்மனோர் காண தோன்றி-நம்போலியர் தரிசிக்கப்புலப்பட்டு, நல் மணம் புணர - நல்லதிருமணஞ்செய்தருள, மும்மை ஞாலமும் உய்ந்த என்று - மூன்றுலகங்களும் கடைத்தேறினவென்று, தத்தமில் மொழியல் உற்றார் -(பிரமன்முதலியோர்பலரும்) தங்கள் தங்களுள் சொல்லித்துதித்தார்கள்.

மூவகையணுக்களுக்கிடான தனுவாதிகளை முறைப்படி விரித்துக்கூட்டி உபகரிக்கும்பொருட்டுச் சிவசத்தியாகியும்,அம்முறைப்படி சத்தியின்வழியொடுக்கி அச்சத்தியையும் தன்னின் வேறின்றிச் சத்திசிவமாகியும் தான நிற்றலால் அம்மையும் அப்பனும் எனப்பலசொல்லாய்நின்று பலபொருள் தருவதன் றென்பார் - பன்மையீறுதராது ஒருமையீறுதந்து அம்மையப்பன் எனவும், பொருள் வேறுபாடின்றிச் சொல் வேறுபாடுடைய என்பார் - அலர் மணம் போல எனவும், சொல்வேறுபாடன்றிப் பொருள்வேறுபாடு இன்றென்பார். நீங்கார் எனவும், இவ்வாறுள்ளோர் தம்முள்பிரிந்தது ஆன்மாக்கள் உய்தற்பொருட்டென்பார் தம்மருள்விளையாட்டால் எனவுங்கூறினுர். ஒடு-இசைநிறை இடைச்சொல். இதனைப் பின்வருஞ்செய்யுளானுணர்க. (௧௮௬)

> காமருசுரபித்தீம்பால்கற்பகக்கனிநெய்கன்ன
> ஞமருசுவையவின்னநறுமதுபருக்கஞ்செம்பொ
> ஞமணிவட்டத்திண்காற்பாசனத்தமையப்பெய்து
> தேமருகொன்றையானைத்திருக்கைதொட்டருள்கவென்றார்.

(இ-ள்.) காமரு சுரபி தீம்பால் - விருப்பஞ்செய்யுங் காமதேனுவின் இனிய பாலும், கற்பகம் கனி - கற்பகந்தந்த வாழைக்கனியும், நெய் கன்னல் - நெய்யும் சருக்கரையும், (கலந்த) நாமருவு சுவைய இன்ன நறு மது பருக்கம் - நாவிற்குச் சுவையைத்தரும் இந்த நறுமணங்கமழும் மதுபர்க்கத்தை, செம் பொன் ஆம் மணி வட்டம் திண் கால் பாசனத்து-செவந்தபொன்னுலாகிய ரத்தினமழுத்தியவட்டமாகிய திண்ணியகால் அமைந்தகலத்தில்,அமைய பெய்து-பொருந்தவைத்து, தேமருவு கொன்றையானை-தேனிறைந்தகொன்றைமாலையையணிந்த சிவபெருமானை, திருக்கைதொட்டு அருள்க என்றார - திருக்கைதொட்டு அருள்கவென்று கூறினுர்கள்.

காமரு, தேமரு என்பதனிறுதியில் உகரவீறுதொகுத்தல். திருக்கைதொட்டருள்க என்றது - சைவபரிபாஷை. (௧௮௭)

> அங்கைவைத்தமுதுசெய்தாங்ககமகிழ்ந்தட்டமூர்த்தி
> கொங்கவிழ்குமுதச்செவ்வாய்கோட்டிவாண்முறுவல்பூத்தான்
> புங்கவர்முனிவர்கற்பின்மகளிரும்போதின்மேய
> மங்கையரிருவரோடுமங்கலம்பாடலுற்றார்.

(இ-ள்.) அம் கை வைத்து அமுது செய்து ஆங்கு-திருக்கைதொட்டு அமுது செய்தருளினுற்போல, அட்ட மூர்த்தி அக மகிழ்ந்து - அட்டமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் மனமகிழ்ந்து, கொங்கு அவிழ் குமுதம் செவ்வாய் கோட்டி - வாசனையொடு மலர்ந்த ஆம்பல்போன்ற செவந்தவாயைக்குவித்து, வாள் முறுவல் பூத்தான் - ஒள்ளிய புன்னகை செய்தருளினுர், புங்கவர் - தவத்தாலுயர்ந்தவராகிய,

முனிவர் கற்பின் மகளிரும் - சத்தவிருடிகளின் பத்தினிமாரும், போதில் மேய மங்கையர் இருவரும் - செந்தாமரை வெண்டாமரை மலர்களில் வசிக்கும் திருமகளும் கலைமகளும் ஆகிய இருவரும், மங்கலம் பாட லுற்றார் - மங்கலவாழ்த்துப் பாடல் பாடத்தொடங்கினார்கள்.

எல்லாந் தானாய்நிற்பவன் என்பார் - அட்டமூர்த்தி என்றார். அட்டமூர்த்தமாவன - நிலம், நீர, நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன, சந்திரன், ஆன்மா. ௧௮௩

மாக்கடி முளரிவாணன் மைந்தரோடொருங்குவைகி
நாக்களிடுநாவாரத் துடுவையானறுநெயார்த்தி
வாக்கிடவாரமாந்தி வலஞ்சுழித்தகடுவீங்கித்
தேக்கிடுமொலியினார்த்து நிமிர்ந்தது தெய்வச்செந்தீ.

(இ-ள்.) மா கடி முளரி வாணன் - மலர்களிற் சிறந்த வாசனைமிக்க தாமரையில் வசிக்கும் பிரமன், மைந்தரோடு ஒருங்கு வைகி - (தனது) புத்திரர்களாகிய சனகர் முதலியவர்களோடு ஒருசேரவிருந்து, நாக்களில் நடுநா ஆர-ஏழுநாக்களினிடையிலுள்ள நாவாற் சுவைபார்க்கும்படி, துடுவை யால் நறு நெய் ஆர்த்தி வாக்கிட- சிருக்குசிரவங்களால் நறுமணங்கமழும் நெய்யை நிரப்பிவாக்க, தெய் வம் செந் தீ ஆர மாந்தி-செவந்த அக்கினிதேவன் நிரம்பவுண்டு, வலஞ் சுழித்து அகடுவீங்கி- வலஞ்சுழித்த தோங்கி வயிறு மேடிட்டு, தேக்கிடும் ஒலியின் - தேககெறியும் ஓசையைப்போல, ஆர்த்து நிமிர்நதது-சடசடவென்று ஒலித்து ஓங்கி எழுந்தான்.(௧௮௪)

சுற்றுநான்மறைகளார்ப்பத் தூரியஞ்சங்கமேங்கக்
கற்றநான்முகத்தோன்வேள்விச்சடங்குநூல்கரைந்தவாற்றான்
முற்றமங்கலநாண்சாத்தி முழுதுலகீன்றாள்செங்கை
பற்றினன்பற்றிலார்க்கே வீடருள்பரமயோகி.

(இ-ள்) சுற்றும் நான் மறைகள் ஆர்ப்ப - நான்குபுறத்திலும் நான்குவேதங்களும் ஒலிக்கவும், தூரியம் சங்கம் ஏங்க - பலவாச்சியங்களும் சங்கங்களும்முழங்கவும, கறற நான்முகத்தோன்-சிருட்டிமுறைகளைத் தேர்ந்த பிரமன், நூல் கரைந்த ஆற்றால் - வேதங்கூறிய முறையால், வேள்வி சடங்கு முற்ற-திருக்கலியாணச் சடங்குகளைக் குறைவின்றி முடிக்க, பற்றிலார்க்கே வீடு அருள் பரமயோகி - இருவகைப்பற்றையும் இகந்த சிவயோகிகளுக்கே மோக்ஷமருளும் பரமயோகியாகிய சோமசுநதரக்கடவுள், மங்கல நாண் சாததி - மங்கலசூததிரஞ்சாததி, உலகம் முழுதும் ஈன்றாள் செங் கை பற்றினன் - எலலா அண்டங்களையும் பெறறருளிய பிராட்டியாருடைய செவந்த திருககரங்களைப் பறறியருளினார்.

பற்றிலார்க்கே வீடு அருள்வோன் பற்றினன் - என்பது விரோதவணி.௧௮௫

இணரெரித்தேவுந்தானேயெரிவளர்ப்பவனுந்தானே
யுணவுகொள்பவனுந்தானேயாகியவொருவன்வையம்
புணர்வுறுபோகமூழ்கப்புருடனும்பெண்ணுமாகி
மணவினைமுடித்தானன்னான்புணர்ப்பையார்மதிக்கவல்லார்.

(இ-ள்.) இணர் எரி தேவும் தானே - நெருங்கிய அக்கினித்தேவனுந்தானே, எரி வளர்ப்பவனும் தானே - அக்கினிவளர்ப்பவனுந் தானே, உணவு கொள்பவனும்

தானே ஆகிய ஒருவன் - அவிகொள்வோனுந் தானேயாகிய சோமசுந்தரக்கடவுள், வையம் புணர்வுறு போகம் மூழ்க-உலகத்திலுள்ளோர் கலத்தல்தொழிலுள்ள போகத்தில் மூழ்க, புருடனும் பெண்ணுமாகி மணவினை முடித்தான் - புருடவடிவமும் பெண்வடிவமுமாகித் திருக்கலியாணமுடித்தருளினார், அன்னான் புணர்ப்பை - அத்தன்மையையுடையவர் செய்யும் புணர்ப்புகளை, மதிக்க வல்லார் யார் - அளந்தறிய வல்லவர் எவர் (ஒருவருமில்லையென்றபடி.)

திருக்கலியாணத்துக்குச் சான்றாகிய அக்கினித்தேவனும், அக்கினியைவளர்க்கும் அந்தணனும், அந்தயாகத்தில் அவிகொள்ளும் தேவனும் தானேயுள்ளவனென்பார். தேற்றேகாரம தந்து இணைமொழிதந்தேவுந்தான், எரிவளர்ப்பவனுந்தான், உணவு கொள்பவனுந்தானேயாகிய வொருவனெனவும், அவனே புருடனும்பெண்ணுமாய் அக்கினி சான்றாக மணவினைமுடித்தது ஆன்மாக்கள் போகத்தில் அழுந்தற்பொருட்டென்பார் - வையம் போகமூழ்க மணவினை முடித்தான் எனவும், இவ்வாறு செய்ய வல்லோன் இறைவன் என்பார். அன்னான் புணர்ப்பை மதிக்கவல்லார்யார் எனவுங் கூறினார். காஞ்சிப்புராணம் - கச்சிமயானப்படலத்தில்.

> " வேள்வியுந்தானேவேள்விப்பொருள்களுந்தானேவெய்ய
> வேள்விவேட்பவனுந்தானேவேள்விகொளிறையுந்தானே
> வேள்வியின்பயனுந்தானேயென்பதுவிளக்கியெம்மான்
> வேள்விசெய்தீக்கையுற்றான்விளங்கருட்சத்தியோடும் "

எனவருஞ் செய்யுளாலுணர்க. (௧௮௬)

> பின்புதன்பன்னியோடுபிறைமுடிப்பெருமான்கையி
> னன்பொரிவாங்கிசெந்தீநாமடுத்தெனைத்துமான
> தன்படிவுணர்ந்தவேதமுனிவர்க்குத்தக்கதான
> மின்பகந்ததும்பநல்கியெரிவலமுறையால்வந்து.

(இ-ள்.) பின்பு தன் பன்னி யோடு - பின்பு தமது பத்தினியாராகிய பிராட்டியாரோடு, பிறை முடி பெருமான - இளஞ்சந்திரனையணிந்தசடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள், கையில் நல் பொரி வாங்கி செந் தீ நாமடுத்து - தமதுதிருக்கரத்தில் நல்ல நெற்பொரிகளைவாங்கி அக்கினிதேவன் நாவிற் பெய்து, எனைத்தும் ஆன தன் படிவம் உணர்ந்த - எல்லாந் தாமேயாகிய தமதுதிருவுருவத்தையுணர்ந்த, வேத முனிவர்க்கு - நான்கு வேதங்களை யுணர்ந்த முனிவர்களுக்கு, தக்க தானம்-(அவரவர்கள்தகுதிக்கு) ஏற்ற தானங்களை, அகம் இன்பு ததும்ப நல்கி - மனதில் மகிழ்ச்சிமிக்கூரக கொடுத்தருளி, எரி வலம் முறையால் வந்து - யாகத்தியை வலமாக முறைப்படி பிரதக்ஷிணஞ்செய்து.

படிவம் ஈறுதொகுத்தல். (௧௮௭)

> மங்கலம்புனைந்தசெம்பொனம்மிமேன்மணாட்டிபாத
> பங்கயமலரைக்கையாற்பரிபுரஞ்சிலம்பப்பற்றிப்
> புங்கவன்மனுவாலேற்றிப்புண்ணியவசிட்டன்றேவி
> யெங்கெனச்செங்கைகூப்பியெதிர்வரவருட்கண்சாத்தி.

(இ-ள்.) மங்கலம் புனைந்த செம் பொன் அம்மி மேல் - மங்கலத்தொழில்பட அலங்கரித்த செவந்தபொன்னாலாகிய அம்மியின்மேல், புங்கவன் - சோமசுந்தரக்கடவுள், மணாட்டி பாத பங்கய மலரை - (தமது) மணாட்டியாருடைய திருவடி

த்தாமரைமலரை, பரி புரம் சிலம்ப - சிலம்புகளொலிக்க, கையால் பற்றி மறுவால் ஏற்றி - திருக்கரத்தால்பற்றி மந்திரவிதியால்வைத்து, புண்ணிய வசிட்டன் தேவி எங்கு என - புண்ணியவடிவமாகிய வசிட்டமுனிவருடையபத்தினியாகிய அருந்ததி யெங்கேயென, செம் கை கூப்பி எதிர் வர - செவந்த தமது கைகளைக்கூப்பி யெதிரேவர, அருட் கண் சாத்தி - அவர்மேல் திருவருட்பார்வைசெய்தருளி. (௧௮௭)

விதிவழிவழாதுவேள்விவினையெலாநிரம்பவிங்ங
னதிர்கடலுலகந்தேறவாற்றிநான்மறைகளார்ப்பக்
கதிர்மணிநகையார்வாழ்த்தக்காமனைக்காய்ந்தநம்பி
மதிநுதன்மங்கையோடுமணவறைதன்னிற்புக்கான்.

(இ-ள்.) விதி வழி வழாது வேள்வி வினை எலாம் நிரம்ப - வேதம் விதித்த நெறியினின்று சிறிதுந்தவறாது திருக்கலியாணச் சடங்குகளெல்லாம் முடிவுபெற, இங்ஙன் - இவ்வாறாக, அதிர் கடல் உலகம் தேற ஆற்றி-ஒலிக்குங் கடல்சூழ்ந்த உலகத்திலுள்ளோர் தெளிந் துய்யச்செய்தருளி, நான்மறைகள் ஆர்ப்ப-நான்குவேதங்களும் ஒருங்கே கோஷிக்கவும், கதிர் மணி நகையார் வாழ்த்த - விளங்கும்முத்தினையொத்த பற்களையுடைய பெண்கள் (ஒருபால்) வாழ்த்துப்பாடல் பாடவும், காமனை காய்ந்த நம்பி - காமனையெரித்தருளிய சோமசுந்தரக்கடவுள், மதி நுதல் மங்கையோடு - அர்த்தசந்திரனையொத்த நெற்றியையுடையபிராட்டியாரோடு, மண அறை தன்னிற் புக்கான் - திருமணவறையில் புகுந்தருளினார்.

தாமியற்றிய வேதவழியை உலகினர் கைக்கொண்டு கடைத்தேறத் தாமே செய்து காட்டியருளினாரென்பார்-இங்ஙன அதிர்கட லுலகந்தேற ஆற்றி எனவும், தமக்கோர் விருப்பில ரென்பார் - காமனைக காய்ந்தநம்பி எனவும், ஆன்மாக்கள் விருப்பின்வழியே செய்தருளுவோ ரெனபார-மதிநுதன்மங்கையோடு மணவறை தன்னிற்புக்கான் எனவுங் கூறினார். இங்ஙனம் ஈறுதொகுத்தல். (௧௮௮)

மனிதருமிமையாதையன்மங்கலவனப்புநோக்கிப்
புனிதவானவரையொத்தாரவர்க்கதுபுகழோவெந்தை
கனிதருகருணைநாட்டம்பெற்றவர்கடவுளோராற்
பனிதருமலரிட்டேத்திவழிபடற்பாலரன்றே.

(இ-ள்.) மனிதரும் இமையாது - மனிதர்களும் இமை கொட்டாமல், ஐயன் மங்கலம் வனப்பு நோக்கி - சோமசுந்தரக்கடவுளுடைய திருமணக்கோலப் பொலிவைப்பார்த்து, புனிதம் வானவரை ஒத்தார் - (இமைத்தலில்லாத)களங்கமற்றதேவர்களை ஒத்திருந்தார், அது அவர்க்கு புகழோ - அவரை யொத்திருந்தாரென்று கூறுதல் அம்மனிதருக்கு ஒருபுகழ்ச்சியோ, எந்தை கனிதரு கருணை நாட்டம் பெற்றவர்- எமதுதந்தையாகிய அச்சோமசுந்தரக்கடவுளுடைய முதிர்ந்த கிருபாநோக்கத்தையடைந்தவர்கள, கடவுளோரால் - தேவர்களால், பனி தரும் மலர் இட்டு ஏத்தி வழிபடல் பாலர் அன்றே - குளிர்ந்தமலரா லருச்சித்துவணங்கி வழிபட்டு உபசரிக்குந் தன்மையையுடையவரல்லவா.

சிவபெருமான் கிருபாநோக்கம்பெற்ற சிறுதுரும்பும்-இந்திரன் பிரமன் திருமால் எறிந்த ஆயுதங்களும் வாய்மடியச் சற்றுஞ் சலியாது நின்றதெனில் அச்சிவபெருமான் கிருபாநோக்கம் பெற்ற மானிடர் - தேவர்களை யொத்திருந்தாரென்று கூறுதல் அவர்க்கோர் புகழ்ச்சியன்றாதலின் அவர்க்கது புகழோ என்றார்.

காஞ்சிப்புராணம் - அம்ரீசப்படலத்தில்.
"எவனேனுமாகவருநானுமாதுவலியின்றளக்குறுவேன்
றவளாதுநம்முனடுமித்தரும்புதணிசெய்யவல்லனெவனோ
வவனேதயித்தியனைவென்றமீளியறிகென்றுரைப்பமகவா
னிவராவெழுந்தகுலிசத்தைவீசிவறிதேயிளைத்தனனரோ."
எனவருஞ் செய்யுளா லுணர்க. (௧௧0)

மானிடரிமையோரொன்னும்வரம்பிலராகிவேள்வி
தானிடரகலநோக்கித்தலைத்தலைமயங்கினின்றார்
கானிடநடனஞ்செய்யுங்கண்ணுதலருட்கணோக்கா
லூனிடரகலுநாளிலுயர்ந்தவரிழிந்தோருண்டோ.

(இ-ள்.) மானிடர் இமையோர் என்னும் வரம்பு இலராகி - மனிதர்கள்தேவர்கள் என்னும் வரம்புகடந்தவராகி, வேள்வி இடர் அகல நோக்கி - திருக்கலியாணப்பொலிவைத் தம்மினின்றும் பிறவித்துன்பம் நீங்கப்பார்த்து, தலை தலை மயங்கி நின்றார் - இடங்கள்தோறும கலந்து நின்றார்கள், கான் இடம் நடனம் செய்யும் கண்ணுதல் அருள் கண் நோக்கால் - மயானத்தினிடத்து திருக்கூத்துச் செய்தருளும் சிவபெருமானது திருவருட்பார்வையால், ஊன் இடர் அகலும் நாளில்-முத்தியடையுங்காலத்து, உயர்ந்தவர் இழிந்தோர் உண்டோ - உயர்ந்தவனெனவும் இழிந்தவனெனவும் பாகுபாடு உண்டோ, (இல்லையென்றபடி.)

பிறப்பொழியும் நாள் முத்தியடையுங் காலமாதலின் - ஊனிடரகலுநாளில் என்பதற்கு - முத்தியடையுங்காலமெனப் பொருள்கூறினும். கீழ் மேல் என்னும் வரம்பிகந்துநிற்றலின் - மானிடரிமையோரொன்னும் வரம்பிலராகி எனவும், திருக்கலியாணமஹோற்சவக்களிப்பால் தத்தமக்கு விதித்த இடங்களினின்றும் வழுவிவிரவிநிற்றலின் தலைத்தலை மயங்கின்றாரெனவும், சர்வசங்கார காலத்தில் யாவும் மயானமாதலின் கானிடம் எனவும் கூறினார். (௧௧௧)

மணவறைத்தவிசினீங்கிமன்றன்மண்டபத்திற்போந்து
கணமணிசசேக்கைமேவிக்கருநெடுங்கண்ணன்வாணி
துணைவனேமுதல்வானோர்க்குஞ்சூழ்கணத்தொகைக்குமென்றுந்
தணவறுசெல்வந்தந்தோன்சாறுசால்சிறப்புநல்கி.

(இ-ள்.) கரு நெடும் கண்ணன் வாணி துணைவன் முதல் வானோர்க்கும்- கரிய நெடிய திருமால் சரஸ்வதிநாயகனாகிய பிரமன்முதலிய தேவர்களுக்கும், சூழ் கணத் தொகைக்கும் - தம்மைப் புறஞ்சூழ்ந்த சிவகணங்களுக்கும், என்றும் தணவு அறு செல்வம் தந்தோன - எந்நாளும அவர் தம்மினின்று நீங்காத செல்வந்தந்த சோமசுந்தரக்கடவுள், மண அறை தவிசில் நீங்கி - திருமணவறையிலிட்ட ஆசனத்தினின்றுநீங்கி, மன்றல் மண்டபத்தில் போந்து - கலியாணமண்டபத்தில்வந்து, மணி கணம் சேக்கைமேவி - நவரத்தினகூட்டங்களிழைத்த சிங்காதனத்தில்வீற்றிருந்து, சாறு சால் சிறப்பு நல்கி-திருக்கலியாணமஹோற்சவத்துக் கமைந்த வரிசைகளை (அவரவர்கள்) தகுதிக்கேற்பச்செய்தருளி. (௧௧௨)

ஏட்டுவாய்முளரியான்மாலேனைவானவருந்தத்த
நாட்டுவாழ்பதியிற்செல்லதல்விடைகொடுத்துவேந்தர்க்

காட்டுவானடிக்காட்டுந்தன்மைபோலரசுசெய்து
காட்டுவானுகியையன்றிருவுளக்கருணைபூத்தான்.

(இ-ள்.) ஏடு வாய் முளரியான் மால் ஏனை வானவரும் - இதழ்நிறைந்ததாமரை மலரில் வசிக்கும் பிரமனும் திருமாலும் அவரொழிந்த தேவர்களும், தம் தம் நாடு வாழ்பதியில் செல்ல - தங்கள்தங்களுக்குரிய நாடுகளாகிய செல்வமிக்க பதங்களில்செல்ல, ஐயன் நல்விடை கொடுத்து - சோமசுந்தரக்கடவுள் இனியதிருமுகத்தோடு விடைகொடுத்தருளி, ஆட்டுவான் ஆடி காட்டும் தன்மை போல் - பரதநூல் விதிப்படி ஆட்டுதலில்வல்லோன் (முன்னர்) ஆடிக்காட்டுந் தன்மைபோல், வேந்தர்க்கு அரசு செய்து காட்டுவானுகி - அரசர்களுக்கு அரசியல் நடத்திக்காட்டுவாராய், திருவுளக்கருணை பூத்தான் - (அரசியல் செலுத்தத் தமது) திருவுளத்தில் கருணைகூர்ந்தார்.

அரசுசெய்து காட்டுவானுகி என்றமையால் அரசியல்செலுத்த எனவருவித்தாம். வேதமுதலிய நூல்களைத் தாம் வகுத்திருப்பினும் அவற்றின்வழி ஆன்மாக்கள் நடக்க வியலாதாதலால் தாமே வந்தருளி அரசியல் செலுத்திக் காட்டினுரென்பார் - ஆட்டுவானடிக்காட்டுந் தன்மைபோலெனக்கூறினுர். (௧௧௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அதிர்விடைக்கொடியங்கயற்கொடியாகவராக்கலன்பொற்கலனுகப்
பொதியவிழ்கடுக்கைவேம்பலராகப்புலியதள்பொலந்துகிலாக
மதிமுடிவைரமணிமுடியாகமறைகிடந்தலம்புமாமதுரைப்
பதியுறைசோமசுந்தரக்கடவுள்பாண்டியனுகிவீற்றிருந்தான்.

(இ-ள்.) அதிர் விடை கொடி அங்கயல் கொடியாக-ஒலிக்கும் இடபக்கொடி அழகிய மீனக்கொடியாகவும், அரா கலன் பொன் கலன் ஆக-சர்ப்பாபரணம் பொன்னுலாகிய ஆபரணமாகவும், பொதி அவிழ் கடுக்கை வேம்பு அலர் ஆக - அரும்பவிழ்ந்த கொன்றைமலர்மாலை வேப்பமலர்மாலையாகவும், புலி அதள் பொலம் துகில் ஆக - புலித்தோல் பீதாம்பரமாகவும், மதி முடி மணி வைர முடியாக - சந்திரனையணிந்த சடாமுடி அழகிய வைரமுடியாகவும், மறை கிடந்து அலம்பு மா மதுரை பதி உறை சோமசுந்தரக்கடவுள் - வேதங்கள் அகலாது ஒலிக்கும் பெரிய மதுரையாகிய திருப்பதியில் வீற்றிருந்தருளும் சோமசுந்தரக்கடவுள், பாண்டியனுகி வீற்றிருந்தான் - சவுந்தரபாண்டியராய்த் திருக்கோலங்கொண்டு வீற்றிருந்து அரசுசெய்தருளினுர். (௧௧௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

விண்டவழ்மதியஞ்சூடுஞ்சுந்தரவிடங்கப்புத்தேள்
கொண்டதோர்வடிவுக்கேற்பக்குருதிகொப்புளிக்குஞ்சூலத்
திண்டிறற்சங்குகன்னன்முதல்கணத்தேவர்தாமும்
பண்டையவடிவமாறிப்பார்த்திபன்பணியினின்முர்.

(இ-ள்.) விண் தவழ் மதியம் சூடும் சுந்தரப் புத்தேள் - ஆகாயத்தில் தவழ்ந்துசெல்லுஞ் சந்திரனைச்சூடிய பேரழகுவாய்ந்த சோமசுந்தரக்கடவுள், கொண்டது ஓர் வடிவுக்கு ஏற்ப-தாம்கொண்டருளிய ஒப்பில்லாத அரசர் திருக்கோலத்துக்கேற்ப, குருதி கொப்புளிக்கும் சூலம்-உதிரத்தைக் கொப்புளிக்குஞ் சூலத்தை (ஏந்திய) திண் திறல் சங்கு கன்னன் முதல்கணத் தேவர்தாமும் - வன்மையை

யுடைய சங்குகன்னன்முதலிய சிவகணத்தேவர்களும், பண்டைய வடிவம் மாறி-அரசர்பணிசெய்தற்கேற்ற உருவங்கொண்டு, பார்த்திபன் பணியில் நின்றார் - அச் சோமசுந்தரக்கடவுளாகிய சவுந்தரபாண்டியர்பணித்தருளுந்தொழிலினின்றார்கள்.

அருளுதலென்னும் பொருண்மேனின்ற பணியென்னு' முதனிலைத்தொழிற் பெயர் அருளுந்தொழிலின்மேனின்றது. பண்டையவடிவம் என்றமையால் அரசர் பணிக்கேற்ற உருவங்கொண்டாரென்று பொருள்கொண்டாம். (௧௬௫)

> தென்னவர்வடிவங்கொண்டசிவபரனுலகங்காக்கு
> மன்னவர்சிவனைப்பூசைசெய்வதுமறையாறென்று
> சொன்னதுமன்னரெல்லாந்துணிவதுபொருட்டுத்தானு
> மந்நகர்நடுவூரொன்றோரணிநகர்சிறப்பக்கண்டான்.

(இ-ள்.) தென்னவர் வடிவம் கொண்ட சிவபரன் - பாண்டியர் திருக்கோலங்கொண்ட சோமசுந்தரக்கடவுள், உலகம் காக்கும் மன்னவர் - உலகம் காவல் பூண்ட வரசர்கள், சிவனை பூசைசெய்வது - சிவபெருமானை வழிபட்டுப் பூசித்தல், மறை ஆறென்று சொன்னது-வேதநெறியென்று தாம்திருவாய்மலர்ந்ததை,மன்னர் எல்லாம் துணிவது பொருட்டு-அம்மன்னர்களெல்லாம் ஐயமின்றிக்கைக்கொள்ளு தற்பொருட்டு, தானும் - அப்பாண்டியர் திருக்கோலங்கொண்ட சோமசுந்தரக்கடவு ளும், அந் நகர் நடு ஊர் என்று-அம்மதுரைநகருள் நடுவூரொன்று,ஓர் அணி நகர் சிறப் ப கண்டான் - ஒரு அழகிய திருநகரம் மேம்பட்டு விளங்க வகுத்தருளினார்.

மன்னவர் சிவனைப் பூசைசெய்வது மறையாறென்றது - அன்னோன் அந்த ணனாதலின். (௧௬௬)

> மெய்ம்மைநூல்வழியேகோயில்விதித்தருட்குறிநிறீஇப்பே
> ரிம்மையேநன்மைநல்குமிறையெனநிறுவிப்பூசை
> செம்மையாற்செய்துநீபவனத்துறைசிவனைக்கால
> மும்மையுந்தொழுதுவையமுழுவதுங்கோனடாத்தும்.

(இ-ள்.) மெய்மை நூல் வழியே - உண்மையாகிய சிற்பநூலின் வழியே, கோயில் விதித்து - திருக்கோயிலை வகுத்து, அருட் குறி நிறுவி (ஆன்மார்த்தமாகத் தமது) திருவருள்வடிவையே சிவலிங்கப்பெருமானாகத் தாபனஞ்செய்து, பேர்-திரு நாமம், இம்மையே - இப்பிறப்பிலேயே (வழிபடுவோர்க்கு வேண்டி யாங்கு அருளு தலால்) நன்மை நல்கும் இறை என நிறுவி - மஹாபீஷ்டபிரதேஸ்வரர்எனப்பெயர் தந்து, பூசை செம்மையால் செய்து - பூசனையை ஆகமவழியால் செய்து, நீப வன த்து உறை சிவனை - கடம்பவனத்தி லெழுந்தருளிய சிவபெருமானை,காலம் மும்மை யும் தொழுது - திரிகாலமும்வணங்கி,வையம் முழுவதும் கோல் நடாத்தும் - உலக முற்றும் தமது செங்கோல்செல்ல நடத்துவாராயினார்.

மஹாபீஷ்டபிரதேஸ்வரர் மஹாபீஷ்டத்தைக் கொடுக்கும் ஈஸ்வரர் என்பது பொருளாதலால் பேர் நன்மை நல்கு மிறை யென நிறுவி எனவும், அரசர்கள் சிவ பெருமானைப் பூசிக்கவேண்டுமெனத் தாம் விதித்தருளிய விதியை நிலைநிறுத்தற்குத் தாம் கைக்கொண்டருளினர் ஆதலால் பூசை செம்மையாற் செய்து எனவுங் கூறி னார். "மூலமூன்றனைந்தசிலைநுதற்றிருவினை-அருமறைவிதிக்கத்திருமணம்புணர்ந்து-மதிக்குலம்வாய்த்தமன்னவனாகி - மேதினிபுரக்கும்விதியுடைநன்னாள் - நடுவூர்நகர் செய் தடுபவந்துடைக்கும் - அருட்குறிநிறுவி யருச்சனைசெய்த - தேவர்நாயகன்" எனக் கல்லாடத்தில் வருதல்காண்க. செம்மை தானியாகுபெயர். (௧௬௭)

பூவருமயன்மாலாதிப்புனிதருமுனிவரேனோர்
யாவருந்தனையேபூசித்திகபரமடையநின்ற
மூவருண்மேலாமுக்கண்மூர்த்தியேபூசைசெய்த
தாவரவிலிங்கமேன்மைத்தகுதியாரளக்கவல்லார்.

(இ-ள்.) பூவரும் அயன் மால் ஆதி புனிதரும் - தாமரையில் வசிக்கும் பிரமன் திருமால் முதலிய தேவர்களும், முனிவர் ஏனோர் யாவரும் - முனிவர்களும் அவரொழிந்தோர் எல்லோரும், தன்னையே பூசித்து இகபரம் அடைய நின்ற - தன்னையே பூசனை செய்து இக பர வுரிமைகளை யடைய நின்றருளிய, மூவர் உள் - திரிமூர்த்திகளுள், மேலாம் முக்கண்மூர்த்தியே - மேலாகநின்ற திரிநேத்திரங்களுடைய உருத்திரமூர்த்தியே, பூசை செய்த தாவரம் இலிங்கம் மேன்மை தகுதி - பூசனைசெய்தருளிய நிலைபெற்ற மஹாபிஷ்டபிரதேஸ்வரருடைய மேன்மைத்தன்மையை, அளக்க வல்லார் யார் - அளவறுத்துக் கூறவல்லவர் எவர். (ஒருவருமில்லையென்றபடி).

"மூவரொன்றேயெம்பிரானொடுமெண்ணி" என்ற உண்மைத் திருவாக்கால் கூட்டிப் பிரித்தற்பொருளில்வந்த ஏழனுருபுதந்து மூவருண்முதலாமுக்கண்மூர்த்தி என்றார். நின்ற என்னும்பெயரெச்சம் முக்கண்மூர்த்தி என்னும் வினைமுதற்பொருள் கொண்டது. (௧௧௫)

வேறு.

மணித்தருக்கரசாகித்தெவ்வேந்தர்க்குமடங்கலாய்மடநல்லார்க்
கினித்தவைங்கணைக்காளையாய்நிலமகட்கிணர்த்துழாயணிமாலா
யனித்தநித்தமோர்ந்திகபரத்தாசைநீத்தகந்தெளிந்தவர்க்கொன்றாய்த்
தனித்தமெய்யறிவானந்தமாம்பரதத்துவமாய்நின்றான்.

(இ-ள்.) மணித்தருக்கு அரசு ஆகி - (தமது செங்கோற்கீழ்வாழும்) குடிகளுக்கு அரசராகியும், தெவ் வேந்தர்க்கு மடங்கலாய் - தம்மோடு மாறுபட்ட அரசர்களாகிய (யானைகளுக்குச்) சிங்கமாகியும், மடம் நல்லார்க்கு - மடமைக்குணம்வாய்ந்த பெண்களது கண்களுக்கு, இனித்த ஐங்கணைக் காளையாய் - இன்பந்தரும் பஞ்சபாணங்களையேந்திய மன்மதனுமாகியும், நிலமகட்கு இணர்த்துழாய் அணி மாலாய் - பூதேவிக்குப் பூங்கொத்துநிறைந்த துழாயணிந்ததிருமாலாகியும், அனித்தம் நித்தம் ஓர்ந்து - இது அநித்தியம் இது நித்தியம் என முன்னருணர்ந்து, இகபரத்து ஆசை நீத்து - இகபோக பரபோகங்களில் வெறுப்புவாய்ந்து, அகம் தெளிந்தவர்க்கு-(தமது) மனந்தெளிந்த மெய்ஞ்ஞானிகட்கு, ஒன்றாய் - அபேதமாகியும், தனித்த மெய் அறிவு ஆனந்தமாம் பரதத்துவமாய் - ஒப்பிகந்த உண்மையறிவானந்தமாகிய பரதத்துவமாகியும், நின்றான் - சோமசுந்தரக்கடவுளாகிய சவுந்தரபாண்டியர் நின்றருளினர்.

நிலங்காப்போன் உயிர்களுக்குத் தன்னாலும், தன்பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், ஏனை உயிர்களாலும் வரும் பயத்தையொழித்துக் காண்போர்க்கெளியசமயத்தனாய்த் தனது குறைசொல்வோர்க்கு இன்சொல்லையுடையனுமாகில் அவனே அரசனெனப்படுவனாதலின் - மணித்தருக்கரசாகி எனவும், பேரழகு வாய்ந்திருத்தலின் ஐங்கணைக்காளையாயெனவும், பகைவர்கள் கனவிலும் நினைக்கின் நெஞ்சுபறைகொட்டத் துண்ணெனநடுங்கும் வெந்திறலுடையராதலின் - தெவ்வேந்

தர்க்குமடங்கலாய் எனவும், நிலமகளைப்பொதுக்கடிந்து தமதுரிமையாக்கிக் கோடலின் - நிலமகட்கிணைர்த்துழாயணிமாலாய் எனவும், மாயாகாரியமாகிய உலகமெல்லாம் அழியுந்தன்மையுடையதாகலின் அநித்தமெனவும், மலங் காரணமாய் மாயையினின்றுந் தநுவாதிகளைத் தோற்றுவித்தலின் பாசமும், அக்காரியமும் ஆன்மாவின் பொருட்டாய் முடிதலிற் பசுவும், அங்ஙனமான சேதநாசேதனங்களைக் கூட்டி முடிப்பவன் ஒருவன் வேண்டுமாதலின் பதியும் ஆகிய இம்முப்பொருளும் பந்தமுத்திகாலத்தும் உள்பொருளாதலின் நித்தமெனவும், ஒன்றோடொன்றொவ்வாது முன்னொடு பின்மலைவுற முரணிக்கூறுவோர் கூற்றுப்படாது இவ்வாறு ஆராய்தலே முறையாதலின் ஓர்நதெனவும், முத்திக்குவிலக்காகிய இம்மை அம்மைப்பயன்களை மாறிமாறி நுகரச்செய்வதும அவாவறுதியின்பொருட்டென்றுணர்தலே அது நீங்குதற் கேதுவாதலின் இகபரத்தாசைநீத்தது எனவும்,இங்ஙனமென்றிச்சையிற்றீர்ந்த வழிப்பற்றற்றான் பற்றினைப்பற்றி ஆயந்தடங்கப்பெறுவதே தேட்டமாதலின் அகந்தெளிந்தெனவும், பெத்தத்திசையின்கண் இவனுட்கரநது இவனேயாய்நின்ற முறைபோல் வீடுபேற்றின்கண் இவன்றன்னுட்கரநது நிறபத்தானேயாய் நிற்குந்தன்மையனாதலின் ஒன்றாய் எனவும், ஒன்றாய நின்றும் ஒப்பிகநத சச்சிதானந்தவடிவமாகிய பரம்பொருளாய் நிற்றலின் தனிதத மெய்யறிவானந்தமாம் பரதத்துவமாய் நின்றான் எனவுங்கூறினார். (௧௧௧)

திருமணப்படலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத திருவிருததம - ௭௧௭.

## ஆறாவது

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உலகியனிறுத்துவான்வந்தொருபரஞ்சுடர்வான்றிங்கட்
குலமணிவிளக்கைவேட்டுக்கோமுடிகவித்துப்பாராண்
டிலகுறுதோற்றமீதான்முனிவரரிருவர்தேற
வலகிலானந்தக்கூத்துச்செய்தவாறறையலுற்றாம்.

(இ-ள்.) ஒரு பரம் சுடர் - ஒப்பில்லாத சோமசுந்தரக்கடவுள், உலகு இயல் நிறுத்துவான் வந்து-உலகியலை நிலைபெறுத்தற் பொருட்டுச் சவுந்தரபாண்டியனாய் வந்து, வான் திங்கள் குல மணி விளக்கை வேட்டு - ஆகாயத்தில் உலவும் சந்திரகுலத்திற்கு ஓர் இரத்தினதீபமாய்வந்த பிராட்டியாரைத்திருமணஞ்செய்து, கோமுடி கவித்து - அரசியலுக்குரிய மகுடஞ்சூடி, பார் ஆண்டு இலகுறும தோற்றம் ஈது - உலகினையாண்டு விளங்கும் சரித்திரமிது, முனிவரர் இருவர் தேற-பதஞ்சலி வியாக்கிரபாதரென்னும் இரண்டுமுனிவர்களும் தெரிசித்து உய்தற் பொருட்டு, அலகு இல் ஆனந்தம் கூத்து செய்த ஆறு - வரம்பிகந்த பேரின்பம் பெருக்கும் திருநடனத்தைச்செய்த சரித்திரத்தை, அறைய லுற்றாம் - இனிச் சொல்லத் தொடங்குவாம்.

என்றும் ஒளி குன்றுதல் இலனென்பார் - ஒரு எனவும், சோமசூரியாக்கினி முதலிய ஒளிகளுக்கு ஒளிதருவானென்பார் - பரஞ்சுடர் எனவும், உயர்ந்தோர்வழக்கைத் தழுவினனென்பார - புவிமுதலிய வென்னாது - உலகெனவும், அவர்கள்வகுத்தன - அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம் என அறுவகைப்படுமென்பார் - அவற்றைஇயலெனவும், மறுநூல்வழித்தத்தம்வருணங்களினின்று பிறழாது உயிர்கள்நிலைபெறப்பாதுகாத்தலும், கரந்தை சூடிப் பசு மீட்டுப் பகைவரைப் புறங்கண்டு செஞ்சோற்றுக்கடன் கழியாத வீரரை ஒறுத்து அவ்வழிநிறுத்தலும், விதிவழிநின்று முயன்று பொருள் பெறுதலும், பகைவர்பொருளும் திறைப்பொருளும் கோடலும், பருவமுங் குலமும் ஒழுக்கமுங் குணமும் ஒத்த கன்னிகையைத் திவேட்டில்லத்திருத்தலும், ஏறு தழுவியும் வில்லிற்றொடுத்த அம்பினுக்கமெய்து மணத்தலும், ஆகிய அவ்வறமும் பொருளும் இன்பமும் அவ்வுயிர்களுக்கு உறுதிபயப்பனவாதலால் அவை அருளுவான்வந்தானென்பார் - உலகியல்நிறுத்துவான் வந்து எனவும், வானினின்று விளக்கந்தரும் பொருள்களுள் தண்ணிய கதிர்பரப்பி உயிர்களுக்கின்பஞ்செய்வது-திங்களென்பார்-வான்திங்களெனவும், இருளையோட்டிக் கட்புலன்களுக்கு விடயமாகும்பொருளைவிளக்கும் விளக்குப்போலப் பகையிருளொதுக்கி அவ்வறநிலை முதலிய அறுவகைப் பொருள்களையும் என்றும் புலப்படுத்துவாள் என்பார் - விளக்கென்னாது மணிவிளக்கெனவும், தான் விதித்ததை உயிர்கள் கைக்கொள்ளச் செய்தருளினானென்பார் - வேட்டெனவும், உலகமுற்றும் பொதுக்கடிந்து தனதடிப்படுத்தினானென்பார்- முடியென்னாது கோ முடி எனவும், அரசர்க்குக்காட்டியருளவந்தோனாதலின் செங்கோல்கோடாது நடாத்தினானென்பார் - சூடி என்னாது முடிக்குரிய தொழில்தந்து கவித்தெனவும், தென்னாடன்றி ஏனைநாடுகள் முற்றும் ஆண்டானென்பார் அவை முற்றும் அடங்கற்பொருட்டுப் பாத்தற்றொழிலடியாக வந்தபார் எனவும், தானொறுத்த வழிச் சிறைப்பட்டகுடிகள், தமதுகுற்றம் தீர்தற்பொருட்டெனக்கருதி அரசன்மே

ற்பழிகூறாத அடங்கியின்றெழுக மறைமுறை நிறத்தினனென்பார் ஆண்டெனவும், தன்னால் முதலிய ஐவகையோராலும் உயிர்களுக்குவரும் துன்பத்தை யொழித்து அரசியல் நடாத்துவோனே அரசருள் மேம்பட்டு விளங்குவோனென்பார் அவ்வா றுண்டமைதோன்ற இலகுறு எனவும், சிவபெருமான்திருநடனம் யாவரும் எளிதிற் கண்டுணரச்செய்தனராதலின் முனிவருள் மேம்பட்டோ ரென்பார். முனிவர் என் றது முனிவரர் இருவர் எனவும், திருமால்முதலிய தேவர்கள் தெரிசித்த திருநட னத்தையே அவர்கள் தெரிசிக்கத் தவஞ்செய்து அத்திருநடனத்தையேதெரிசித்தா ரென்பார் அப்பொருளாற்றல் தோன்றத் தேற எனவும், கண்கள் முதலிய ஐம்புல ன்கட்கும் பேரின்பு விளைததென்பார் அலகிலானந்தமெனவுங் கூறினர். (க)

புண்ணியமலர்மென்கொம்பைவேட்டபின்புவனந்தாங்குங்
கண்ணுதன்மூர்த்தியாயகவுரியன்மணத்தில்வந்த
மண்ணியலவேந்தர்வானோர்மாதவர்பிறருமுண்ண
நண்ணுதிரென்னவேலோடுநண்ணுவார்விரைவினெய்த.

(இ-ள்.) புண்ணியம் மலர் மெல் கொம்பை வேட்ட பின் - புண்ணியமென் னும் மலர்களலர்ந்த மெல்லிய (திருவருளென்னும்) பூங்கொம்பாகிய பிராட்டியா ரைத்திருமணஞ்செய்தபின்பு, புவனம் தாங்கும் கண்ணுதல் மூர்த்தியாய கவுரியன்- உலகினைப்பாதுகாக்கும் சோமசுந்தரக்கடவுளாகியசவுந்தரபாண்டியர், மணத்தில் வந்த மண் இயல் வேநதர்வானோர் மாதவர் பிறரும் - திருமணத்துக்கு வந்த மண் ணுலகத்தையாளும் அரசாகளும் தேவாகளும் முனிவர்களும் அவரொழிந்த ஏனை யோரும், உண்ண நண்ணுதிர் எனனவேலோடும - அமுதுசெய்யக்கடவீர்களென்று கட் டளையிட்டருள, நண்ணுவார் விரைவின் எய்த - அமுதுசெய்ய வருவோர் விரைவில் வருதறபொருட்டு. (உ)

பொன்னவிர்கமலம்பூத்தபுனிதநீராடித்தத்த
நன்னெறிநியமமுற்றிநண்ணினர்புலிக்காலோனும்
பன்னகமுனியுந்தாழ்ந்துபரவியமபலத்துளாடு
நின்னருணடங்கண்டுண்பதடியேங்கணியமமென்றார்.

(இ-ள்.) அவிர பொன் கமலம் பூத்த புனிதம் நீராடி - விளங்காநின்ற பொற் றாமரையலர்நத பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் விதிவழிஸ்நானஞ்செய்து, நல் நெறி தத்தம் நியமமுற்றி நண்ணினார் - (வேதாகமங்களிறகூறிய) நல்லவிதிவழியே தத்த ம் நிலைக்கேற்ப விதித்தகடன்களை முடித்துவந்தார்கள், புலிக்காலோனும் பன்னக முனியும் தாழ்ந்து பரவி - வியாகரிபாதரும் பதஞ்சலிமுனிவரும் வணங்கித்துதித் து, அம்பலத்துள் ஆடும் நின் அருள் நடம் அடியேங்கள் கண்டு - பொன்னம்பலத் துள் நடித்தருளும் தேவரீர் திருநடனத்தை அடியேங்கள் தரிசித்து, உண்பது நிய மம் என்றார்-பின்னருண்ணுதல் (நாங்கள்) மேறகொண்டகடன் என்றுகூறினார்கள்.

என்னலுமந்தக்கூத்தையிங்குநாஞ்செய்துந்தில்லைப்
பொன்னகருலகமெல்லாமுருவமாம்புருடற்குள்ள
மின்னதாந்துவாதசாந்தமென்றிறையருளிச்செய்ய
மன்னவவேனையங்கம்யாதெனமன்னன்சொல்வான்.

(இ-ள்.) என்னலும் - என்றுகூற, இறை-சோமசுந்தரக்கடவுளாகிய சவுந்தரபாண்டியர், நாம் அந்தக் கூத்தை இங்கு செய்தும் - நாம் அந்த நடனத்தை இங்குச் செய்தருளுகின்றோம், தில்லை பொன் நகர் - தில்லையென்னும் அழகிய திருநகரமானது, எல்லாம் உருவமாம் உலகபுருடற்கு உள்ளம் - யாவுந்தனதுருவாய்நின்ற உலகபுருடனுக்கு இதயதானமாம், துவாதசாந்தம் இன்னதாம் என்று அருளிச்செய்ய-(இத்தலம்)துவாதசாந்தத்தானமாமென்று (சோமசுந்தரக்கடவுள்) திருவாய்மலர்ந்தருள, மன்னவ - பாண்டியர் திருக்கோலங்கொண்டருளிய பெருமானே, ஏனை அங்கம் யாவை என - (அவ்வுலகபுருடனுக்கு) அவையொழிந்த உறுப்புகள் எத்தலங்களென்று வினவ, மன்னன் சொல்வான் - சவுந்தரபாண்டியர் திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

உலகபுருடன்-விராட்புருடன்-துவாதசாந்தம் தலவிசேடம். உக-வது படலவுரையிற்காண்க. (௪)

அரைக்குமேலுலகேழென்றுமரைக்குக்கீழுலகேழென்று
முரைக்கலாலுலகமெல்லாமுருவமாம்புருடற்கிந்தத்
தரைக்குமேலனந்தந்தெய்வத்தானமுண்டனைத்துங்கூறின்
வரைக்குறுசிலதானங்கள்வகுத்துரைசெய்யக்கேண்மின்.

(இ-ள்.) எல்லாம் உருவமாம் உலகபுருடன்கு - யாவுந்தனதுருவாய் விளங்கும் உலகபுருடனுக்கு, அரைக்கு மேல் உலகு ஏழ் என்றும் - (அரையென்னும் எண்ணலளவையால்வந்த) இடைக்குமேல் ஏழுலகமென்றும், அரைக்கு கீழ் உலகு ஏழ் என்றும் உரைக்கலால் - அவ்வரைக்குக்கீழ் ஏழுலகமென்றும் நூல்கள்கூறுதலால், இந்த தரைக்குமேல் அனந்தம் தெய்வத்தானம் உண்டு - இந்த நிலவுலகில் (அப்புருடனுக்கு உறுப்புகளாக) அளவில்லாத தெய்வதானங்களுண்டு, அனைத்தும் கூறின் வரைக்கு உறு - அவைமுற்றும் எடுத்துச்சொல்லப்புகின் வரையறைப்படா, (ஆதலால்) சிலதானங்கள் வகுத்து உரை செய்ய கேண்மின் - (உறுப்புகளாகின்ற) சிலதெய்வத்தானங்களைமட்டும் யாம் வகுத்துக்கூறக் கேளுங்கள். (௫)

திருவளராரூர்மூலந்திருவானைக்காவேநாபி
மருவளர்பொழில்சூழண்ணாமலைமணிபூரநீவி
ரிருவருங்கண்டமன்றமிதயமாந்திருக்காளத்தி
பொருவருங்கண்டமாகும்புருவமத்தியமாங்காசி.

(இ-ள்.) திருவளர் ஆரூர் மூலம் ஆம் - செல்வமிக்க திருவாரூர் மூலாதாரத்தானமாம், திரு ஆனைக்கா நாபி ஆம் - திருவானைக்கா சுவாதிட்டானமாம், மருவளர் பொழில் சூழ் அண்ணாமலை மணிபூரம ஆம் - வாசமிக்கசோலைசூழ்ந்த திருவண்ணாமலை மணிபூரத்தானமாம், நீவிர் இருவரும் கண்டமன்றம் இதயம் ஆம்-நீங்களிருவருந் தரிசிக்குஞ்சிதம்பரம் அநாகததானமாம், திருக்காளத்தி பொருவரும் கண்டம் ஆகும்-திருக்காளத்தி ஒப்பில்லாத விசுத்திஸ்தானமாம், காசி புருவ மத்தியம் ஆம் - காசி ஆக்கினேயஸ்தானமாம். (௬)

பிறைதவழ்கயிலைக்குன்றம்பிரமரந்திரமாம்வேத
மறைதருதுவாதசாந்தமதுரையீதறிகமெந்த
முறையினுமெலன்னின்முன்னர்த்தோன்றியமுறையாலென்றக்
கறையறுதவத்தரோடுகவுரியன்கோயில்புக்கான்.

(இ-ள்.) பிறை தவழ் கயிலை குன்றம் பிரமரந்திரம் ஆம் - சந்திரன்றவழுங் குருவுக்கைலைமலை பிரமரந்திரத்தானமாம், மதுரை வேதம் அறைதரு துவாதசாந்தம் ஆம் - திருவாலவாய் வேதங்கூறுந் துவாதசாந்தஸ்தானமாம், ஈது அதிகம் - (ஆதலால்) இந்தத்தலம் (எல்லாத்தலத்திலும்) மேம்பட்டது, எந்த முறையினால் என்னில் - எந்தமுறையினாலென்று வினவில், முன்னர் தோன்றிய முறையால் என்று - (எல்லாத்தலங்களுக்கு) முன்புதோன்றிய முறையினாலென்று (கூறி) அது கறை அறு தவத்தரோடு - அந்தக்குற்றமற்ற தவத்தினரோடு, கவுரியன் கோயில் புக்கான் - சவுந்தரபாண்டியர் திருக்கோயிலுள் எழுந்தருளினார். (எ)

தன்னருளதனானீத்ததன்னையேதேடிப்போந்த
மின்னவிர்கயிலைதானோவிடையுருமாறிமன்றாய்
மன்னியதேயோதிங்கண்மண்டிலமேயோவென்னப்
பொன்னவிர்விமானக்கீழ்பால்வெள்ளியம்பொதுவுண்டாக.

(இ-ள்.) தன் அருள் அதனால் நீத்த தனையே - தனதுதிருவருளால் தன்னினின்று நீங்கிய சிவபெருமானையே, தேடி போந்த மின் அவிர் கயிலைதான் ஓ - தேடிவந்தடைந்த ஒளிவீசுந் திருக்கயிலைமலையோ, விடை உருமாறி மன்று ஆய் மன்னியதேயோ - இடபவூர்தியானது தனதுருவமாறி வெள்ளியம்பலமாய் நிலைபெற்று நின்றதோ, திங்கள் மண்டிலமேயோ - சந்திரமண்டிலமோ, என்ன - என்றுகண்டோர் கூற, பொன் அவிர் விமானம் கீழ்பால் - பொன்னாற்செய்யப்பட்டு விளங்கும் விமானத்தின் (பிரகாரத்தின்) கீழ்ப்புறத்தில், அம் வெள்ளியம் பொது உண்டாக - அழகிய வெள்ளியம்பலம ஒன்றுண்டாக. (அ)

மின்பயில்பரிதிப்புத்தேள்பாற்கடல்விளங்கியாங்குப்
பின்பதன்மிசைமாணிக்கப்பீடிகைதோன்றிற்றன்ன
தன்பர்தமுளமேயாகுமல்லதுவேதச்சென்னி
யென்பதாமஃதேயன்றியாதெனவிசைகற்பாற்றே.

(இ-ள்.) மின் பயில் பரிதி புத்தேள் - கிரணம் வீசுஞ்சூரியன், பால் கடல் விளங்கியது ஆங்கு - பாற்கடலிற்றோன்றி விளங்கியதுபோல, பின்பு அதன்மிசை - பினனர் அவ்வம்பலத்தின்மேல், மாணிக்கம் பீடிகை தோன்றிற்று - மணிப்பீடமொன்று தோனறியது, அன்னது - அப்பீடம், அன்பர்தம் உளமே ஆகும் - அடியாரது இதயதாமரையாகும், அல்லது வேதம் சென்னியாம் - வேறுகூறில் வேதத்தின் முடியாகும், அஃதே அன்றி - அவ்வாறு கூறுதலே அன்றி, யாது என இசைக்கல் பாற்று - யாதென்று அறிவுடையாரால் எடுத்துச்சொல்லும் பகுதியது.

என்பது - அசைநிலை. அடியாருளத்தில் என்றும் நீங்காதிருத்தலின் அன்பர்தமுளமேயாகும் என்றார் "துரியயோகியருளத்திற்றூங்குவனிருந்தெப்போதும்" எனவரும் செய்யுளாலுணர்க. (கூ)

அன்னதோர்தவிசினும்பராயிரங்கரத்தாலள்ளித்
துன்னிருள்விழுங்குங்கோடிசூரியரொருகாலத்து
மன்னினருதித்தாலொப்பமனமொழிபக்கங்கீழ்மேற்
பின்முதல்கடந்தஞானப்பேரொளிவடிவாய்த்தோன்றி.

(இ-ள்.) அன்னது ஓர் தவிசின் உம்பர் - அத்தன்மையதாகிய ஒப்பில்லாத மாணிக்கபீடத்தின்மேல், ஆயிரம் கரத்தால் அள்ளி - ஆயிரங்கரங்களாலள்ளி, துன் இருள் விழுங்கும் கோடி சூரியர் - நெருங்கிய இருளை வாரியுண்ணுங் கோடிசூரியர்,

ஒருகாலத்து மன்னினர் உதித்தால் ஒப்ப - ஒருகாலத்தில் நிலைபெற்று உதித்தாற் போல, மனம் மொழி பக்கம் கீழ் மேல் பின் முதல் கடந்த - மனமும் வாக்கும் சமீபமுங் கீழும்மேலும் பின்னும்முன்னும் ஆகிய இவைகளைக்கடந்த, ஞானம் பேர் ஒளி வடிவு ஆய் - மெய்ஞ்ஞானமாகிய பெரிய ஒளிவடிவமாய்ச் (சவுந்தரபாண்டியர்) தோன்றி - (கட்புலன்களுக்குக்) காணப்பட்டு.

சிந்தித்தற்கும் சொல்லுதற்கும் வரையறைப்படாமல் ஆணவத்திற் கட்டுண்டோர்க்குப் புலப்படாதிருத்தலிற் சமீபமின்றித் தனக்கோர் நிகர் பொருள் எவ்விடத்தும் எக்காலத்தும் இன்மையின் - மனமொழிபக்கம் கீழ்மேல் பின்முதல் கடந்த எனவும், அப்பொருள் இன்னது என்பதுதோன்ற வினைமுதற் பொருளீபட ஞானப்பேரொளி எனவுங்கூறினர். (௧0)

முந்துறுகணங்கண்மொந்தைதண்ணுமைமுழக்கஞ்செய்ய
நந்திமாமுழவந்தாக்கநாரணனிடக்கையார்ப்ப
வந்துகந்திருவநூலின்மரபுளியிருவர்பாட
வைந்துதுந்துபியுங்கல்லென்றார்கலிமுழக்கங்காட்ட.

(இ-ள்.) முந்து உறு கணங்கள் - (தேவர்கூட்டத்துள்) முற்பட்டுநிற்குஞ் சிவகணங்கள், மொந்தை தண்ணுமை முழக்கம் செய்ய - மொந்தை, தண்ணுமை என்னும் வாச்சியங்களை (ஒருபால்) முழக்கவும், நந்தி மா முழவம் தாக்க - நந்திநாயனார் பெரியமத்தளத்தை (ஒருபால்) தட்டவும், நாரணன் இடக்கை ஆர்ப்ப - திருமால் இடக்கை என்னும் வாச்சியத்தை (ஒருபால்) முழக்கவும், கந்திருவ நூலின் மரபு உளி இருவர் வந்து பாட - கந்திருவநூலின்படி தும்புருநாரதர் (ஒருபால்) வந்துபாடவும், துந்துபி ஐந்தும் கல் என்று ஆர்கலி முழக்கம் காட்ட - பஞ்சதுந்துபிகளுங் கல்லென்னும் ஒலிக்குறிப்போடு கடலின்முழக்கத்தை (ஒருபால்) காட்டவும்.

தண்ணுமையாவது - இரண்டுதலையுஞ் சுருங்கிய நெடியவுடலினையுமுடையது, முழவமாவது - பெரியவுடலின்மேல் தலைபெற்றுள்ள ஐந்துமுகமுடையது, பஞ்சதுந்துபிகளாவன - தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரப்புக்கருவி, மிடற்றுக்கருவிகளாம். கந்திருவநூல் இசைநூல். (௧௧)

மதுமுகத்தலர்ந்தவெண்டாமரைமகள்சுருதிகூட்டச்
சதுமுகத்தொருவன்சாமகீதயாழ்தடவிபாட
விதுமுகத்தருகுமொய்க்குமீனெனஞானவெள்ளிப்
பொதுமுகத்தமரர்தூற்றும்பூமழையெங்கும்போர்ப்ப.

(இ-ள்.) மது முகத்து அலர்ந்த வெள் தாமரை மகள் - தேன்சிந்துமுகத்தோடு அலர்ந்த வெள்ளிய தாமரைமலரில்வசிக்கும் கலைமகள், சுருதிகூட்ட - (ஒருபால்) சுருதிகூட்டவும், சதுமுகத்து ஒருவன் யாழ்தடவி சாமகீதம்பாட - நான்கு திருமுகங்களையுடைய பிரமன் வீணையின்கட்டமைந்த நரம்புகளைத்தடவி (ஒருபால்) சாமகீதம்பாடவும், விதுமுகத்து அருகுமொய்க்கும் மீன் என - சந்திரமண்டிலத்தினருகில் மொய்க்கும் நக்ஷத்திரங்களைப்போல, ஞானவெள்ளி பொது முகத்து - ஞானவடிவாகிய வெள்ளியம்பலத்தின், அமரர் தூற்றும் பூமழை எங்கும் போர்ப்ப - தேவர்கள் சிந்தும் மலர்மாரி எவ்விடத்தும் (ஒருபால்) போர்க்கவும். (௧௨)

பொருங்கடனிறத்தசெந்தீப்பொங்குளைக்குறளன்மீது
பெருங்கடல்வடவைச்செங்கண்பிதுங்கமேற்றிரிந்துநோக்கி
முருங்கடலெரியில்சீறமுதுகிறவலத்தாளூன்றிக்
கருங்கடல்முளைத்தவெய்யோன்காட்சியிற்பொலிந்துநின்று.

(இ-ள்.) பொரும் கடல் வடவை செங்கண் பிறங்க உம் - அலைபொருமோ தங் கடலிற்றோன்றிய வடவைபோலச் சிவந்தகண்கள் பிறங்கவும், மேல் திரித்து நோக்கி முருங்கு அடல் எரியில் சிற உம் - மேலேசுழன்றுபார்த்து (உலகினைக்) கெடுக்கும் வன்மையையுடைய அவ்வடவைபோலக்கோபிக்கவும், பெரும் கடல் செந்நிறத்த பொங்கு உளை குறளன் மீது - பெரியஅக்கடலிற்றோன்றிய செந்நிறம்வாய்ந்த அவ்வடவைபோல நிறமவாய்ந்து விளங்கும் புறமயிரினையுடைய முயலகன்மேல், முதுகு இற வலத்தாள் ஊன்றி - (அவன்) முதுகுநெரிந்துங்க வலக்காலூன்றி, கரும் கடல் முளைத்த வெய்யோன் காட்சியின் - கரியகடலிற்றோன்றிய சூரியன்தோற்றம் போல, பொலிந்து நின்று - விளங்கிநின்று.

முருக்கு-முருங்குமெலித்தல் விகாரம். எண்ணும்மை தொகுத்தல். (௧௩)

கொய்யுஞ்செங்கமலப்போதுகுவிந்தெனவெடுத்துக்கூத்துச்
செய்யும்புண்டரிகத்தாளுந்திசைகடந்துளவீரைந்து
கையுந்திண்படையுந்தெய்வமகளிர்மங்கலநாண்காத்த
மையுண்டமிடறுஞ்சங்கவார்குழைநுழைந்தகாதும்.

(இ-ள்.) கொய்யும் செம் கமலம் போது குவிந்தால் என்ன எடுத்து-கொய்தற்குரிய செந்தாமரைமலர் குவிந்தாற்போலத்தூக்கி, கூத்து செய்யும் புண்டரிகம் தாளும் - திருக்கூத்துச்செய்தருளும் தாமரைமலரையொத்த திருவடியும், திசைகடந்து உள்ள ஈரைந்து கையும் - திசைகளைக்கடந்த பத்துத்திருக்கரங்களும், திண் படையும் - (அத்திருக்கரங்களிலேந்திய) திண்ணிய ஆயுதங்களும், தெய்வ மகளிர் மங்கல நாண் காத்த மை உண்ட மிடறும்-திருமகள்முதலிய தெய்வப்பெண்கள் மங்கலநாண்காத்தருளிய கரியநிறம்பொருந்திய ஸ்ரீகண்டமும், வார் சங்கம் குழை நுழைந்த காதும் - நீண்ட சங்கக்குண்டலம் நுழைந்த திருச்செவியும்.

தனது நித்தியத்தன்மை காட்டியருளத் திருமால்முதலியோர் உய்யும்பொருட்டு விடமுண்டருளி யவ்வவர்மனைவியர்க்கு மங்கலநாணளித்தவன் என்பார் தெய்வமங்கலநாண்காத்தமையுண்டமிடறு என்றார். "செற்றுலவுயிரனைத்துமுண்டிடவேயிமிர்ந்தெழுஞ் சினத்தைமேற்கொள் - பற்றுலங்கதநுகர்ந்துநானமுகனே முதலோர்தம்பாவைமாராகருப் - பொற்றுலிதனையளித்தோன்" எனவரும் காந்தபுராணச்செய்யுளால் உணர்க. (௧௪)

செக்கரஞ்சடையுந்தேசார்வெண்டிருநீறுந்தெய்வ
முக்கணுமுரகக்கச்சுமுள்ளெயிறிமைக்குமார்பு
மைக்கருங்கயற்கணங்கைவல்லியினொதுங்கிநிற்கும்
பக்கமுமவண்மேல்வைத்தபார்வையுநகையுந்தோன்ற.

(இ-ள்.) செக்கர் அம் சடையும - செவந்த அழகியசடாமுடியும், தேசு ஆர் வெள் திருநீறும் - ஒளிநிறைந்த வெள்ளியதிருநீறும், தெய்வ முக்கண்ணும் - தெய்வத்தன்மையையுடைய திரிநேத்திரங்களும், உரகம் கச்சும் - பாம்பாகியகச்சும், முள் எயிறு இமைக்கும் மார்பும - முட்போன்ற கூரியவராகதந்தம் விளங்குந்திருமார்பும், கயல் மை கரும் கண் நங்கை - கயல்போன்ற மையெழுதிய கரியகண்களையுடைய உமாதேவியார், வல்லியின் ஒதுங்கி நிற்கும் பக்கமும் - காமவல்லிக்கொடிபோல (ஒருபால்) ஒதுங்கிநிற்கும் இடப்பக்கமும், அவள் மேல் வைத்த பார்வையும் நகையும் தோன்ற - அவ்வுமாதேவியார்மேல்வைத்த பார்வையும் புன்னகையுந்தோன்றவும். (௧௫)

கங்கையாறலம்புமோசைகடுக்கைவண்டிரங்குமோசை
மங்கலமுழவினோசைமந்திரவேதவோசை
செங்கையாடெரியுமோசைதிருவடிச்சிலம்பினோசை
யெங்கணுநிரம்பியன்பரிருசெவிக்கமுதமூற்ற.

(இ-ள்.) கங்கை ஆறு அலம்பும் ஓசை - (சடாபாரத்திற்சூடிய) கங்காநதி ஒலிக்கும் ஓசையும், கடுக்கை வண்டு இரங்கும் ஓசை - கொன்றைமாலையில் வண்டுகள் ஒலிக்கும் ஓசையும், மங்கலம் முழவின் ஓசை - மங்கலம்வாய்ந்த மத்தளத்தின் ஓசையும், மந்திர வேத ஓசை - மந்திரம்வாய்ந்த வேதங்களின் ஒலியும், செங்கை ஆடு எரியும் ஓசை - செவந்ததிருக்கரத்திற சிகைவிட்டெரியுந் தீயின்ஓசையும், திருவடி சிலம்பின் ஓசை - திருவடியிலணிந்த (வேதச்) சிலம்பினோசையும், எங்கணும் நிரம்பி-எத்திசைகளிலும் நிரம்பி, அன்பர் இரு செவிக்கும் அமுதம் ஊற்ற- அடியார்களுடைய இரண்டுசெவிகளுக்கும் பேரின்ப அமுதம ஊற்றவும்.
முற்றும்மை தொகுத்தல். (கசு)

ஆடினனமலமூர்த்தியஞ்சலிமுகிழ்த்துசசென்னி
சூடினாரடியில்வீழ்ந்தாாசுருதியாயிரநாவாரப்
பாடினார்பரமானந்தப்பரவையிற்படிந்தாரன்பு
நீடினார்நிருத்தானந்தங்காண்பதுநியமம்பூண்டார்.

(இ-ள்.) அமல மூர்த்தி ஆடினன் - அமலமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் ஆனந்தக்கூத்து ஆடியருளினார், ஆனந்த நிருத்தம காண்பது நியமம் பூண்டார் - ஆனந்தத்திருநடனத்தைத் தரிசிப்பதே நியமமாகப்பூண்ட முனிவா இருவர்களும், அஞ்சலி முகிழ்த்து சென்னி சூடினார் - (தமது இரண்டுகைகளையும) அஞ்சலியாகச் சிரத்தின்மேலேற்றிக் கூப்பினாகள், அடியில் வீழ்ந்தார் - திருவடியின்மேல் (தண்டாகாரமாக) வீழ்ந்தார்கள், ஆயிரம் சுருதி நாவாரப் பாடினா - அளவிறந்த சுருதிகளைத் தமது நாவாரப் பாடினார்கள், பரமானந்தப் பரவையில் படிந்தார்-பேரின்பமாகிய கடலில் அழுந்தினார்கள்,அன்பு நீடினா - அன்பின வசத்தராயினார்கள்.

முனிவர்கந்திருவர்வானோர்தானவாமோனயோகர்
புனிதகிம்புருடாதிப்புலவருமிறைஞ்சியன்பின்
கனிதருமின்பத்தாழ்ந்தாாதிருமணங்காணவந்த
மனிதருங்காணப்பெற்றார்மாதவாபொருட்டான்மன்னோ.

(இ-ள்.) மாதவர் பொருட்டால் - முனிவரிருவர்கணிமித்தத்தால், முனிவர்கள் இருவர் வானோா தானவர் மோன யோகா - முனிவருமகாதிருவரும தேவரும் அசுரரும் மவுனநிலையையுடைய யோகரும, புனித கிம்புருடா ஆதி புலவரும்-குற்றமில்லாத கிம்புருடர்முதலிய இசைநூலில்வல்ல தெய்வபபுலவர்களும், அன்பில் இறைஞ்சி - அன்பால்வணங்கி, கனிதரும் இன்பத்து ஆழ்ந்தார் - சுவைகனிந்தபேரின்பப்பெருக்கில் அழுந்தினார்கள், திருமணம் காணவந்த மனிதரும் - திருமணந்தெரிசிக்கவந்த மனிதர்களும், காண பெற்றார் - தெரிசிக்குமபேறு பெற்றார்கள். (கஎ)

அனந்தனுமுனிவர்வேந்தனளவிலானந்தமூறி
மனந்தனிநிரம்பிமேலும்வழிவதுபோலமார்பம்
புனைந்தபுண்ணியவெண்ணீறுகரைந்திடப்பொழிகண்ணீரு
நனைந்திருகரமுங்கூப்பிநாதனைப்பாடுகின்றான்.

(இ-ள்.) அனந்தன் ஆம் முனிவர் வேந்தன் - ஆதிசேடனாகிய முனிவர்களுக் கரசராகிய பதஞ்சலியார், அளவில் ஆனந்தம் ஊறி - எல்லையில்லாத பேரின்ப மூற்றெடுத்து, மனந்தனில் நிரம்பி மேலும் வழிவது போல-மனத்தில்நிரம்பி (அடங்காது) மேலேவழிவதுபோல, பொழி கண் நீரும் - சிந்தும்* ஆனந்தபாஷ்பமும், மார்பம் புனைந்த புண்ணிய வெண் நீறு கரைந்திட நனைந்து - மார்பிற்றரித்த புண் ணியமாகிய வெள்ளிய திருநீறுகரையநனைக்க, இருகரமும் கூப்பி - இரண்டுகை களையுங்கூப்பி, நாதனை பாடுகின்றான் - சோமசுந்தரக்கடவுளைத் துதிக்கின்றார்.

* நனைந்து செயவெனெச்சத்திரிபு. (௧௯)

பராபரமுதலேபோற்றிபத்தியில்விளைவாய்போற்றி
சராசரமாகிவேறாய்நின்றதற்பரனேபோற்றி.
கராசலவுரியாய்போற்றிகனகவம்பலத்துளாடு
நிராமயபரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) பராபர முதலே போற்றி - எல்லாக்கடவுளர்க்கும் முதற்கடவுளா ய்நிற்கின்ற பெருமானேவந்தனம், பத்தியில் விளைவாய் போற்றி - அடியார்பத்தி என்னும் பைங்கூழின்பயனாய் நிற்பவனேவந்தனம், சராசரம் ஆகி வேறு ஆய்நின்ற தற்பரனே போற்றி-சரமும் அசரமும் ஆகியும் அவற்றின்வேறாகியும் நிற்றலால் இ றைவனாய்நின்றவனேவந்தனம், கராசல உரியாய் போற்றி - யானையின்தோற்போர் வையையுடையவனே வந்தனம், கனகம் அம்பலத்துள் ஆடும்-பொன்னம்பலத்துள் நடனஞ்செய்தருளிய, நிராமய பரமானந்த நிருத்தனே போற்றி போற்றி-பிறவிப் பிணியொழிக்கும பேரின்பத் திருநடனத்தையுடையவனே வந்தனம்வந்தனம்.

சராசரமாகி வேறாய் நின்ற என்றது "யாவையுமா யல்லவுமாம் - சோதிய னே" என்ற பெரியோர் திருவாக்காலுணர்க. (௨௦)

ஒன்றாகியைந்தாயையைந்துருவாகிவருவாய்போற்றி
யின்றாகிசசென்றநாளாயெதிர்நாளாயெழுவாய்போற்றி
நன்றாகித்தீயதாகிநடுவாகிமுடிவாய்மன்று
ணின்றாடும்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) ஒன்றாகி ஐநதாகி ஐயைந்து உருவாகி வருவாய் போற்றி - ஒரே மூர்த்தமாகியும் ஐந்துமூர்த்தமாகியும் இருபத்தைந்துமூர்த்தமாகியும் (ஆன்மாக்கள் பொருட்டு) வந்தருள்வோய் வநதனம், இன்று ஆகி சென்ற நாளாய் எதிர் நா ளாய் எழுவாய் போறறி-நிகழ்காலமாகியும் இறந்தகாலமாகியும் எதிர்காலமாகியும் நிகழ்கின்றவனேவந்தனம், நன்றாகி தீயதாகி நடுவாகி முடிவாய் - நலமாகியும் நல மில்லாததாகியும நடுவுநிலைமையுடையதாகியும் முத்திமுடிவாகியும், மன்றுள் நின்று ஆடும் பரமானந்த நிருத்தனே போறறி போற்றி - பொன்னம்பலத்துள் நின்று நட னஞ்செய்தருளிய பேரின்பமயமாகிய திருக்கூத்துடையவனே வந்தனம் வந்தனம்.

சகளமும், சகளநிஷ்களமும், நிஷ்களமுங்கடந்துநின்ற சுத்தசிவமென் பார்-ஒன்றாய் எனவும், பரசிவன், அநாதசிவன், சதாசிவன், மகேசன், உருத்திரன் என்னும் ஐந்துருவாய் நின்றனனென்பார்-ஐந்தாய் எனவும், சந்திரசேகரர், உமாம கேசர், ரிஷபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, அந்தகாரி, திரிபுராரி, சலந்தராரி, விதித்துவம்சர், வீரபத்திரர், நாசிங்கரிபாதனர், அர்த்தநா ரீசர், விக்கிராதரர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதப்பிர

தர், சண்டேசானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், அனந்தசுகபிருது, தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்து மூர்த்தமாய் நின்றனனென்பார் - ஐயைந்துருவாகி எனவும், ஆன்மாக்களுக்குப் பாராத்துவம், சஞ்சிதம், ஆகாமியமாய் நின்று அவ்வவ்வினைப்பயன்களை யூட்டுதலால் இன்றாகிச்சென்றநாளா யெதிர்நாளாய் எழுவாய் எனவும், அவ்வான்மாக்களின் வினைப்பயன்களை யொழித்தற்குச் சுவர்க்கமும் நரகமுமாய்நிற்றலின் நன்றாகித் தீயதாகி எனவும், யாவர்பாலுங்கண்ணோடாது வினைப்பயன்களை யூட்டுவித்தலின் நடுவாகி எனவும், வினைப்பயனொழிந்தவழி முத்தியிற்கூட்டுதலின் முடிவாய் எனவுங்கூறினார்.

ஒன்று, ஐந்து, ஐயைந்து இவை சொன்முரணணி. (உ௧)

> அடியரேம்பொருட்டுவெள்ளியம்பலத்தாடல்போற்றி
> பொடியணிதடந்தோள்போற்றிபுரிசடைமகுடம்போற்றி
> கடியவிழ்மலர்மென்கூந்தற்கயல்விழிபாகம்போற்றி
> நெடியதற்பரமானந்தநிருத்தனேபோற்றிபோற்றி.

(இ-ள்.) அடியரேம் பொருட்டு - அடியேங்கணிமித்தம், வெள்ளி அம்பலத்து ஆடல் போற்றி - வெள்ளியம்பலத்துள் நடனஞ்செய்தருளிய திருக்கூத்துக்கு வந்தனம், பொடி அணி தடம் தோள் போற்றி - விபூதியணிந்த பணைத்ததிருத்தோள்களுக்கு வந்தனம், புரி சடை மகுடம் போற்றி - பொற்புரியொத்த சடாமகுடத்துக்கு வந்தனம், கடி அவிழ் மலர் மென் கூந்தல் - வாசமோடவிழ்ந்த மலரையணிந்த மெல்லிய கூந்தலையுடைய, கயல் விழி பாகம் போற்றி - அங்கயற்கண்ணியார் வாழும் இடப்பாகத்துக்கு வந்தனம், நெடிய தற்பர மானந்த நிருத்தனே போற்றி போற்றி - என்றும் அழியாத தற்பரமானந்தமயமாகிய திருநடனத்தை யுடையவனே வந்தனம் வந்தனம். (உஉ)

> என்றுநின்றேத்தினன்பின்னிருவரைநோக்கிவெள்ளி
> மன்றுணின்றாடாநின்றமறைமுதல்கருணைகூர்ந்து
> நன்றுநீர்வேட்டதென்னென்றருள்செயநாதன்பாதந்
> துன்றுமெய்யன்பிற்றாழ்ந்துதொழுதுநின்றிதனைச்சொல்வார்.

(இ-ள்.) என்று நின்று ஏத்தினன்-என்றுகூறி அன்புருவாய் நின்று பதஞ்சலியார் வணங்கினார், வெள்ளி மன்றுள் நின்று ஆடாநின்ற மறைமுதல்-வெள்ளியம்பலத்துணின்று ஆடியருளிய வேதத்தின் முதற்பொருளாயுள்ளசிவபெருமான்,பின் இருவரை நோக்கி கருணை கூர்ந்து - பின்பு பதஞ்சலியாரையும் வியாக்கிரபாதரையும் பார்த்தருளிக் கிருபைகூர்ந்து, நன்று நீர் வேட்டது என் என்று அருள் செய்ய-மிகவும் நீர்விரும்பியது யாதென்று திருவாய்மலர்ந்தருள, நாதன் பாதம் துன்று மெய் அன்பின் தாழ்ந்து தொழுது நின்று - அச்சிவபெருமான் திருவடியில் நிறைந்த அன்போடு பணிந்து துதித்து நின்று, இதனை சொல்வார் - இதனைச் சொல்லத் தொடங்கினார். (உ௩)

> எந்தையித்திருக்கூத்தென்றுமிந்நிலைநின்றியார்க்கும்
> பந்தவெம்பாசநீங்கப்பரிந்தருள்செய்தியென்னச்
> செந்தமிழ்க்கன்னிநாடுசெய்தமாதவப்பேறெய்தத்
> தந்தனமென்றான்வேதந்தலைதடுமாறநின்றான்.

(இ-ள்.) எந்தை இத்திருக்கூத்து - எமது தந்தையே இந்தத்திருநடனத்தோ டு, என்றும் இந்நிலை நின்று - எப்பொழுதும் இவ்வெள்ளியம்பலத்தின்கண் நின்றரு ளி, யார்க்கும் பந்தம் வெம் பாச நீங்க-எவர்க்கும் பந்தமாகிய வெய்ய தொடக்குநீ ங்க, பரிந்து அருள் செய்தி யென்ன - இரங்கி அருள்செய்வாயென்று குறையிரப்ப, வேதம் தலை தடுமாற நின்றான்-வேதங்கள் தட்டழிந்துமயங்கநின்றசிவபெருமான், செந்தமிழ் துன்னி நாடு - செந்தமிழ்க்குறையுளாகிய பாண்டிநாடு, செய்த மாதவப் பேறு எய்த தந்தனம் எனறான் - செய்த பெரியதவப்பயன் அதற்குக் கைகூடத் தந் தருளினம் என்று கருணைகூர்ந்தருளினார். (உச)

அராமுனியீதுவேண்டுமாதியெம்பெருமவிந்த
நிராமயபரமானந்தநிருத்தநேர்கண்டோரெல்லாந்
தராதலமிசைவந்தெய்தாத்தனிக்கதிபெறுதல்வேண்டும்
பராபரவென்றுதாழ்ந்தான்பகவனுமதற்குநேர்ந்தான்.

(இ-ள்.) அரா முனி ஈது வேண்டும் - பதஞ்சலிமுனிவர் இதனைக் குறையிர க்கின்றார், ஆதி எம் பெரும - ஆதியாகிய எமதுபெருமானே, இந்த நிராமய பரமா னந்த நிருத்தம்-இந்த நிராமயமாகியும் பேரின்பமாகியும் விளங்குந் திருநடனத்தை, நேர் கண்டோர் எல்லாம் - நேரே தெரிசித்தவர் யாவரும், தராதல மிசை வந்து எ ய்தா தனி கதி - நிலவுலகின்மேல் மீட்டுவந்து பிறவாத ஒப்பற்ற சிவகதியை, பரா பர பெறுதல் வேண்டும என்று தாழ்ந்தான்-பராபரனே பெறவேண்டுமென்றுவண ங்கினார், பகவனும் அதற்கு நேர்ந்தான் - சிவபெருமானும் அதற்குடன்பட்டுக் கரு ணைகூர்ந்தார். (உரு)

ஆர்த்தனர்கணத்தோர்கைகோத்தாடினரலர்பூமாரி
தூர்த்தனர்விண்ணோர்கண்ணீர்ததும்பினர்முனிவராகம்
போர்த்தனர்புளகமன்பிற்புதைந்தனர்விழுங்குவார்போற்
பார்த்தனர்புல்லிக்கொண்டார்பரவியவ்விருவர்தம்மை.

(இ-ள்.) கணத்தோர் ஆர்த்தனர் - சிவகணத்தோர் கோஷித்து, கை கோத் து ஆடினர்-கைகோத்துக்குரவையாடினார்கள், விண்ணோர் அலர் பூமாரி தூர்த்தனர்- தேவர்கள் மலர்ந்த புஷ்பவருஷஞ் சொரிந்தார்கள், முனிவர் கண் நீர் ததும்பி னர்-(ஏனைய)முனிவர்கள் கண்ணீர்ததும்பி, புளகம ஆகம் போர்த்தனர்-புளகம் உட ம்புபோர்த்து, அன்பில் புதைந்தனர் - அன்பென்னும் பெருக்கிலாழ்ந்து, அவ்விரு வர் தம்மையும் பரவி - அந்தமுனிவர் இருவரையும் வணங்கி, விழுங்குவார் போல் பார்த்தனர் - கண்களால் விழுங்குவாரைப்போலப் பார்த்து, புல்லிக் கொண்டார் - தழுவினார்கள். (உசு)

வேறு.

அனித்தமாகியபூதமைம்பொறிபுலனாதியாறாறுகி
யனித்தமாயையோடிருவினைத்தொடக்கினுமிருளினும்வேறாகித்
தனித்தயோகிகளகநிறைந்தாடியதனிப்பெருந்திருக்கூத்தைக்
குனித்தவண்ணமாக்கண்டவர்க்கிகபரங்கொடுத்தவனுறைகின்றான்.

(இ-ள்.) அனித்தம் ஆகிய பூதம் ஐம் பொறி புலன் ஆதி ஆறாறுகி - அனித்த மாயுள்ள ஐம்பூதங்களும் ஐம்பொறிகளும் ஐம்புலன்களுமுதலிய முப்பத்தாறு தத்

அவன்வளாய், இனித்த மாயை யோடு இரு வினை தொடக்கினும் இருளினும் வேருகி- உருவிப்பிக்கும் மாயையோடு இருவினைத்தொடக்கினின்றும் ஆணவத்தினின்றும் நீங்கி, தனித்த யோகிகள் அகம் நிறைந்து - ஒப்பில்லாத யோகிகள்மனத்தி னிறைந்து, ஆடிய தனி பெரும் திருக் கூத்தை - ஆடியருளிய ஒப்பில்லாத பெரியதிருநடனத்தை, குனித்த வண்ணம் ஆக கண்டவர்க்கு - ஆடியருளிய திருக்கோலமாகப்புறத்தினிற்றரிசித்தவர்க்கு, இக பரம் கொடுத்து அவண் உறைகின்றான் - இகபரசுகங்களைக் கொடுத்தருளி அவ்வெள்ளியம்பலத்துள் எழுந்தருளியிருக்கின்றார்.

பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகிய பூதம் ஐந்தும்; மெய், வாய், கண், மூக்கு, செவி, ஆகிய ஞானேந்திரியம் ஐந்தும்; சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய புலன ஐந்தும; வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தம் ஆகியகர்மேந்திரியம் ஐந்தும்; மனம், புத்தி, சித்தம, அகங்காரம் ஆகிய அந்தக்கரணம் நான்கும்கூடிய ஆன்மதத்துவம் இருபத்துநான்கும்; காலம்,நியதி,கலை,வித்தை,ராகம், புருடன்,மாயை ஆகிய வித்தியாதத்துவம் ஏழும்; சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆகிய சிவதத்துவம் ஐந்தும் என்பார். புலனுதி யாருருகி எனவும், பொருளல்லவற்றைப் பொருளாகக்கருதி இன்புறச்செய்யும மாயாமலம் என்பார். இனித்தமாயை எனவும், கன்மமலம் முன்பின் சங்கிலிபோற்றொடர்ந்துநிற்குமென்பார். இருவினைத்தொடக்கெனவும், ஆன்மாவின் சகசமலமாகிய ஆணவமென்பார். இருளெனவும், இவற்றில் நீங்கினிற்போரென்பார்-வேருகி எனவும், சகலகேவலங்களைப்பற்றி அலைந்துநின்ற சிற்றறிவுநீங்கி ஞானமிகுதியான் இறைவனடியைநாடிச் சுத்தத்தினிற்றலே யோகிகளியல்பென்பார. தனித்தயோகிகளெனவும், அங்ஙனநிறபவே அவரது உள்ளத்தின்கண் தனதுருவப்பரப்பை எல்லாங்கொண்டுபுகுந்து நின்று ஒப்பிகநது நடிப்பவரென்பார். அகநிறைந்தாடிய தனிப்பெருந்திருக்கூத்தை எனவுங்கூறினர். (உஎ)

> குனிவிலாதிரைத்தினந்தொடுத்தெதிர்வருகொடுவிலாதிரையெல்லை
> புனிதவாடகமுளரிதோய்ந்தத்தனிப்பொதுநடந்தரிசித்தங்
> கினிதமர்ந்துநூற்றெண்மடங்கைந்தெழுத்தெண்ணியிந்நிலைநிற்குங்
> கனியுமன்பினரெண்ணியாங்கெய்துவர்கருதியவரமெல்லாம்.

(இ-ள்.) குனிவில் ஆதிரை தினம் தொடுத்து - வளைந்த தனுமாசம் திருவாதிரைநக்ஷத்திரந்தொடங்கி, எதிர் வரு கொடு வில் ஆதிரை எல்லை - இனிவரும்வளைந்த தனுமாதம் திருவாதிரைநக்ஷத்திரங்காறும், புனிதம் ஆடக முளரி தோய்ந்து - களங்கமில்லாத பொற்றாமரையில் விதிப்படி ஸ்நானஞ்செய்து, அத் தனிப் பொது நடந்தரிசித்து - அந்த வொப்பில்லாத வெள்ளியம்பலத்தில் திருநடனந் தெரிசித்து, அங்கு இனிது அமர்ந்து - அத்திருமுன் இனிதினிருந்து, ஐந்து எழுத்து நூறு எண் மடங்கு எண்ணி - ஸ்ரீபஞ்சாக்கரத்தை நூற்றெட்டுமடங்கு விதிமுறையே எண்ணி, இந்நிலை நிற்கும் கனியும் அன்பினர் - இந்நிலையில் வழுவாது நிற்கும் முதிர்ந்த அன்பினையுடைய அடியார்கள், எண்ணியது ஆங்கு கருதிய வரம் எல்லாம் எய்துவர்- தாம் கருதியபடியே கருதியவரத்தையெல்லாம் ஒருசேர அடைவார்கள். (உஅ)

வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - அ௯௫.

ஏழாவது

# குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்.

கலிநிலைத்துறை.

பன்னகேசனுமடுபுலிப்பாதனும்பணிய
மின்னுவார்சடைமன்னவன்வெள்ளிமன்றாடல்
சொன்னவாறிதுபசித்தழல்சுடவொருபூத
மன்னமாமலைதொலைத்தவாறெடுத்தினியறைவாம்.

(இ-ள்.) மின்னு வார் சடை மன்னவன் - விளங்காநின்ற நீண்ட சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுளாகிய சவுந்தரபாண்டியர், பன்னகேசனும் அடு புலிப் பாதனும் பணிய - பதஞ்சலியாரும் கொல்லும் புலிக்காலையுடைய வியாக்கிர பாதரும் வணங்க, வெள்ளி மன்று ஆடல் சொன்ன ஆறு இது - வெள்ளியம்பலத்துள் திருநடனஞ்செய்தருளிய திருவிளையாடலைச் சொன்ன சரித்திரம் இதுவாகும், இனி ஒரு பூதம் பசி தழல் சுட - இனி, ஒரு பூதமானது பசியாகிய உதராக்கினி சுட்டுவருத்த, அன்னம் மா மலை தொலைத்த ஆறு எடுத்து அறைவாம் - அன்னக்குவியலாகிய பெரியமலையை உண்டொழித்த சரித்திரத்தை எடுத்துச்சொல்லுவாம். (க)

கன்னியர்க்கரசாயினாள்கடிமனைபுகுந்த
மின்னியற்சடைமாதவர்வேதியரேனோ
ரெந்நிலத்துளமன்னவர்யாவர்க்குமுறையே
பொன்னியற்கலத்தறுசுவைப்போனகமருத்தா

(இ-ள்.) கன்னியர்க்கு அரசு ஆயினாள்-கன்னிப்பெண்களுக்கு அரசியாராகிய பிராட்டியார், கடி மனை புகுந்த - கலியாண மகோற்சவத்துக்குத் (தமது) வீட்டில் வந்த, மின் இயல் சடை மாதவர் வேதியர் ஏனோர்-மின்போல விளங்கும் இயலமைந்த சடையையுடைய பெரியதவத்தினரும் அந்தணரும் அவரொழிந்த தேவர்களும், எந்நிலத்து உள்ள மன்னவர் யாவர்க்கும்-எந்நாட்டிலுமுள்ள அரசர்கள் எவர்க்கும், முறையே பொன் இயல் கலத்து-முறையாகப் பொன்னாற்செய் தமைத்தலையுடைய பாசனங்களில், அறு சுவை போனகம் அருத்தா - அறுசுவையமைந்த கறிகளோடு திருவமுதூட்டி.

இயல் முதனிலைத் தொழிற்பெயராதலால்-வருமொழி நோக்கித்திரிந்தது. (உ)

பூசுகின்றவுமுடுப்பவும்பூண்பவும்பழுக்காய்
வாசமெல்லிலையெனவுமம்முறைவழங்காத்
தேசமன்னவரேனையோர்செல்லுநர்ச்செலுத்தி
யீசனன்புறுகற்பினாளிருக்குமவ்வேலை.

(இ-ள்.) பூசுகின்றவும் உடுப்பவும் பூண்பவும் - பூசப்படுஞ் சாந்த முதலிய கலவைகளையும் உடுக்கப்படும் பீதாம்பர முதலியவைகளையும் அணியப்படும் ஆபரண முதலியவைகளையும், பழுக்காய் வாசம் மெல் இலை எனவும் - பாக்கையும் வாசனைத் திரவியங்களையும் வெற்றிலையையும் அவையொழிந்த பிறவற்றையும், அம்முறை வழங்கா - உண்பித்த அம்முறையே கொடுத்து, தேசமன்னவர் ஏனையோர் செல்லுநர்

செலுத்தி-பாராட்டியுமுள்ள அரசர்களுள்ளும் அவரொழிந்தோருள்ளும் (தத்தம்) இடங்களிற் செல்லக் கருதினவர் செல்ல விடைகொடுத்து, ஈசன் அன்புறு கற்பினுள் இருக்கும் அவ்வேலை-சோமசுந்தரக்கடவுளாகிய சவுந்தர பாண்டியரால் விரும்பப் பட்ட கற்பினையுடைய தடாதகைப் பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் அக்காலையில்.

வாசனைத் திரவியங்களாவன - "தக்கோலந்தீம்பூத்தகைசாலிலவங்கம் - கர்ப்பூரஞ்சாதியோடைந்து." எனவும் என்றது மலர் முதலியன. (௯)

மடைவளர்தொழிற்புலவர்வந்தடியிணைவணங்கி
யடியரேமட்டபோனகமாயிரத்தொன்றி
னிடையதாயினுந்தொலைந்திலதியாங்கண்மேற்செய்யக்
கடவதேதெனப்பிராட்டிதன்கணவர்முன்குறுகா.

(இ-ள்.) மடைவளத் தொழில் புலவர்வந்து-அன்னம் வளமபெறச்சமைக்குந் தொழிற் புலமையில் வல்லோர்வந்து, அடியிணை வணங்கி-இரண்டு திருவடியிணையும் வணங்கி, அடியரேம் அட்ட போனகம் - அடியேமாகிய யாம் சமைப்பித்த வுணவு, ஆயிரத்து ஒன்றின் இடையது ஆயினும் தொலைந்து இலது - ஆயிரத்துள் ஒரு பங்கில் பாதியதாயினும் கழிந்திலது, யாங்கள் மேல் செய்யக்கடவது ஏது என்ன - யாங்கள் இனிச் செய்யக்கடவது யாதென்று வினவ, பிராட்டி தன் கணவர் முன்குறுகா - பிராட்டியார் தமது கணவராகிய சவுந்தர பாண்டியர் முன்சென்று. (௰)

பணிந்தொதுங்கிநின்றடிகண்முப்பத்துமுக்கோடி
கணங்கடம்மொடுமிங்கெழுந்தருள்வதுகருதி
யிணங்குமின்சுவைப்போனகமெல்லையின்றாக்கி
யுணங்குகின்றதுண்டெஞ்சியதெனைத்தெனவுரைக்கின்.

(இ-ள்.) பணிந்து ஒதுங்கி நின்று - பணிந்து (ஒருபால்) ஒதுங்கிநின்று, அடிகள் - எமது சுவாமிகளே, முப்பத்து முக்கோடி கணங்கள் தம்மொடும் - முப்பத்து முக்கோடி தேவகணங்களோடும், இங்கு எழுந்து அருள்வது கருதி - இங்கு எழுந்தருளுதலைக்கருதி, இன் சுவை இணங்கு போனகம் எல்லை இன்று ஆக்கி உணங்குகின்றது - இனியசுவையமைந்த அமுது வரம்பின்றிச் சமைத்து உணங்காநின்றது, உண்டு எஞ்சியது எனைத்து என உரைக்கின் - உண்டு சேஷமாயுள்ளது எவ்வளவென்று சொல்லத்தொடங்கில்.

எத்தனைத்து-எனைத்து தொகுத்தல்விகாரம். (௧௧)

இமையக்குன்றமுமடைகலாயிதன்புறங்கிடந்த
சிமையக்குன்றுகட்டமுஞ்சேர்ந்தெனத்திமிரச்
சமையக்கொட்டியவாலரிப்புழுக்கலுஞ்சாதக்
கமையக்கொட்டியகறிகளின்வருக்கமுமனைய.

(இ-ள்.) இமையக் குன்றமும்-இமையமலையும், அடை கல்லாய் இதன்புறம் கிடந்த சிமையக் குன்றுகள் கட்டமும் சேர்ந்தால் என்ன - இவ்விமயமலையின் புறத்தில் சூழ்ந்துகிடந்த சிறுகுன்றுகளின் கூட்டமும் (ஒருபால் திரண்டு) சேர்ந்தாற் போல, திமிர சமையக் கொட்டிய வால் அரி புழுக்கலும் - (வானத்தை) அளாவப்

பொருந்தச்சமைத்துக்கொட்டிய வெள்ளிய அரிசியாலமைந்த அன்னமும், சாதக்கு அமைய கொட்டிய கறிகளின் வருக்கமும் - அவ்வமுதுக்கு ஏற்பச் சமைத்துக் கொட்டிய கறிகளின் கூட்டமும். அனைய - அவ்வளவின.

சாதத்துக்கு சாதக்குதொகுத்தல். (௬)

என்றபோ திறையெம்பிரான்றேவியாரிடத்தி
லொன்றுமன்பினுலொருவிளையாடலைநினைந்தோ
தன்றனிக்குடைப்பாரிடத்தலைவனதாற்ற
லன்றியாவருமறிந்திடக்காட்டவோவறியேம்.

(இ-ள்.) என்ற போது - என்று கூறியருளியகாலையில், இறை எம்பிரான் - இறைவராகிய எனது சவுந்தரபாண்டியர், தேவியார் இடத்தில் ஒன்றும் அன்பினுல் - (தமது) தேவியாரிடத்தில் ஒத்த அன்பினுல், ஒருவிளையாடலை நினைந்தோ - ஒருதிருவிளையாடலைச் செய்தருளத் திருவுளங்கொண்டோ, தன் தனிக்குடை பாரிடத்தலைவனது ஆற்றல் - தமது ஒப்பில்லாத வெள்ளைவட்டக்குடையை யேந்திய பூதகணத்தலைவனுகிய குண்டோதரனுடைய வன்மையை, அன்று யாவரும் அறிந்திட காட்டவோ - அப்பொழுது (திருமணத்துக்குவந்த) யாவரும் அறியக காட்டியருளவோ, அறியேம் - (யாம்) அறியோம் (௭)

சிறிதுவாணகைசெய்துமூவேந்தரிற்சிறந்த
மறுவின்மீனவனரும்பெறனமகளுனக்கரிதிற்
பெறுவதேதுவான்றருவுநின்பணிசெயப்பெற்றிங்
குறைவதேற்பிற திருவெலாமுன்னதேயன்றே.

(இ-ள்.) வாள் நகை சிறிது செய்து - ஒள்ளிய புன்னகை சிறிதரும்பி, மூவேந்தரில் சிறந்த மறுவில் மீனவன் - சேரசோழபாண்டியருள் மேம்பட்ட குற்றமில்லாத மலையத்துவச பாண்டியன், அரும் பெறல் மகள் - பெருது பெற்றமகளே, உனக்கு அரிதில் பெறுவது ஏது - உனக்கு அரிதாகப்பெறும் பொருளென்ன, வான் தருவும் நின்பணி செயபெற்று - வானிலுள்ள பஞ்சதருக்களும உனது (அருள் வழிநின்று) பணிசெயபபெற்று, இங்கு உறைவதேல் - இங்கிருந்தால், பிறர் திரு எல்லாம் உன்னதே அன்றே - பிறர் செல்வங்களெல்லாம் உன்னுடையதல்லவா.

மெய்ப்பாடு வியப்பின மேலதாதலால் - சிறிது வாணகை செய்து எனவும் மலையத்துவச பாண்டியன் யாகத்தில் பெற்றமையால் அரும்பெறல் எனவும், அவன் பெற்ற அருமைப் பேறு தோன்றக் கூட்டிப் பிரித்தற் பொருளில் வந்த எழுருபு தந்து மூவேந்தரில் சிறந்த மறுவில் மீனவன் எனவும், வான்தருவும் நின்பணிசெயப்பெற்று இங்குறைவதால் - உனக்கரிதின் பெறுவதேது எனவும், அதனுல் பிறர்திருவெலாம் உன்னுடையதாதலின் - பிறர திருவெலாம் உன்னதே எனவும் கூறினுர். அருமை - இன்மைமேனின்றது. உன்னது - பொருளடியாகப் பிறந்த பலவின்பாற் படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. மகள் அண்மைவிளி. (௮)

அளவிலாதநின்செல்வத்தின்பெருக்கைகாமறிய
விளைவுசெய்தனைபோலுநின்விருந்துணப்பசியாற்
களையடைந்தவராகங்களைத்திலுட்காணேக்
தளவமூரலாயாஞ்செயத்தக்கதேதென்றுன்.

(இ-ள்.) தளவம் மூரலாய் - முல்லையரும்பையொத்த தந்தபங்க்தியையுடையாய், அளவிலாத நின் செல்வத்தின் பெருக்கை - (அவ்வாறாய) வரம்பில்லாத நின் செல்வத்தின் பெருக்கத்தை, நாம் அறிய விருந்து செய்தனைபோலும் - நாமறியும்படி காட்டினாய்போலும், நம் கணத்தினுள் - நமது கணத்தினுள், நின் விருந்து உண்ண பசியால் களை அடைந்தவராக காணேம் - நீ செய்தமைத்த விருந்துண்ணப் பசியினால் களையடைந்தவராக ஒருவரையுங் கண்டிலேம், யாம் செய்ய தக்கது எது என்றான் - யாம் செய்யத்தக்கது என்னவிருக்கதென்று சவுந்தரபாண்டியர் திருவாய்மலர்ந்தருளினார்.

பசிப்பிணி இலாதலால் - நம் கணத்துட் பசியால் களையடைந்தவராகக் காணேமென்றார். (௯)

அடுக்கநின்றகுண்டோதரனகட்டிடைவடவை
மடுக்கவுன்னினனதுவந்துவயிற்றெரிபசியாய்த்
தொடுக்கவாலமுண்டாங்குடல்சோர்ந்துவேர்த்தாவி
யொடுக்கமுற்றையபசியினாலுயங்கினேனென்றான்.

(இ-ள்.) அடுக்க நின்ற குண்டோதரன் அகடு இடை - அயலில் நின்ற குண்டோதரனுடைய வயிற்றினிடத்து, வடவை மடுக்க உன்னினன் - வடவாமுகாக்கினியைக் குடிகொள்ளக் கருதினார், அது வந்து வயிறு எரி பசியாய் தொடுக்க - அத்தீயானது வந்து வயிற்றிலெரியும் பசியாய்மூள, ஆலம் உண்டால் ஆங்கு உடல் சோர்ந்து வேர்த்து ஆவி ஒடுக்கம் உற்று - விஷமுண்டால்போலத் தேகமெலிந்து வேர்த்துப் பிராணனொடுங்கி, ஐய பசியினால் உயங்கினேன் என்றான் - ஐயனே பசியினால் வருந்தினேனென்று அலறினான். (௧௦)

குடையெடுக்குமிக்குறியதாட்குறட்கொருபிடிசோ
றிடுமினப்புறஞ்சோறுமாலெனத்தொழுதெல்லா
முடையநாயகிபோயினள்குறியனுமுடனே
நடைதளர்ந்துகண்புதைந்துவாய்புலர்ந்திடநடந்தான்.

(இ-ள்.) குடை எடுக்கும் இக்குறிய தாள் குறட்கு - (நமது) குடைதாங்கிப் பின்வரும் குறிய காலையுடைய பூதத்திற்கு, ஒரு பிடி சோறு இடுமின் - ஒருபிடி சோறு கொடுங்கள், அப்புறம் சோறும் என - அப்பாற் சொல்லுவாமென்று கூறியருள, எல்லாம் உடைய நாயகி தொழுது போயினள் - எல்லா ஆன்மாக்களையும் ஆளாக உடைய பிராட்டியார் வணங்கிச் சென்றார், குறியனும் உடனே நடைதளர்ந்து கண்புதைந்து வாய்புலர்ந்திட நடந்தான் - அக்குண்டோதரனும் விரைந்து சோர்ந்த நடையினையுடையவனாகிக் கண்புதைந்து வாய்புலரப் பின்சென்றான்.

தளர்ந்து புதைந்து - சினைவினை யெச்சங்களாதலால் முதல்வினைக் கொற்றுமை யுண்மையின் நடந்தானென்னும் முதல் வினையின் முதலோடு முடிந்தது, சோறும் - எதிர்காலத் தன்மை வினை முற்றாதலால் முதனிலை திரிந்து நின்றது. (௧௧)

படைக்கணேவலரிறைமகள்பணியினாற்பசிநோய்
தொடுத்தவன்றனைக்கொண்டுபோய்ச்சொன்றிமுன்விடுத்தா
ரடுத்திருந்ததேகண்டனனன்னமாமலையை
யெடுத்தயின்றதுமடிசிலங்கிருந்ததுங்காணார்.

(இ-ள்) படைக் கண். ஏவலர்-படைத்தற் றொழிலினின்ற ஏவலர்கள், இறைமகள் பணியினுல்-மலயத்துவசபாண்டியன் புத்திரியார் ஏவலினுல், பசி நோய்தொலைத்த வன்றனை கொண்டுபோய் சொன்றிமுன் விடுத்தார் - பசிநோயால் வருந்தப் பட்ட குண்டோதரனைக்கொண்டு சென்று அன்னமலைமுன் விடுத்தார்கள், அடுத்து இருந்ததே கண்டனர் (அதனை அவன்) அடுத்தவின் றதைக் கண்டாரோ (அன்றி) மா அன்னமலையை எடுத்து அயின்றதும் - பெரிய அவ்வன்னமலையை வாரியுண்டதும், அங்கு அடிசில் இருந்ததும்-அவ்விடத்தில் அவ்வன்னமலை யிருந்ததும், கரணர்-காணராயினர்.

படைக்கண் ஏவலர் என்பதற்கு - வாள்போன்ற கண்களையுடைய பணிப் பெண்களெனினுமமையும். (௪௨)

சிலம்புநூபுரச்சிறடிச்சேடியர்சில்லோ
ரலம்புவால்வளைக்கைநெரித்ததிசயமடைந்தார்
புலம்புமேகலையார்சிலர்பொருக்கெனவெருண்டார்
கலம்பெய்பூண்முலையார்சிலர் கண்புதைத்திரிந்தார்

(இ-ள்.) சிலம்பு நூபுரம் சீறு அடி சேடியர் சில்லோர் - ஒலிக்குஞ் சிலம்பணிந்த சிற்றடியையுடைய பாங்கியரிற் சிலர், அலம்பு வால் வளை கைநெரித்து அதிசயம் அடைந்தார்-ஒலிக்கும் வெள்ளிய வளையலையணிந்த (தமது) கைகளை நெரித்து வியப்புற்றூர்கள், புலம்பு மேகலையார் சிலர் பொருக்கென வெருண்டார் - ஒலிக்கும் மேகலையணிந்த சிலர் விரைந்து மயங்கினூர்கள், கலம் பெய் பூண் முலையார் சிலர் கண்புதைத்து இரிந்தார் - ஆபரணமணிந்த தனங்களையுடைய சிலர் (மருட்சியாய்) கண்களை மூடிப் போயினூர்கள்.

பூண்முலையாரென்றது-பூண் சாதியுடையாதலால் - கலம் பெய்முலையாரெனப் பொருள்கொண்டாம். (௪௩)

மூரலைபோலியமுரிவில்வான்மூரல்பால்வறையல்
கருனைதீம்பயறடுதுவைபலவகைக்கறிகள்
விரவுதேம்படுபாறயிரிழுதுதேன்வெள்ளம்
வரைவிலாதனமிடாவொடுவாரிவாய்மடுத்தான்.

(இ-ள்.) மூரலை போலிய முரிவு இல் வால் மூரல் - தவிட்டினின்று நீங்கிய முனைமுரிதலில்லாத வெள்ளிய அரிசியாலாகிய அன்னத்தையும், பால் வறையல் கருனை - பால்வார்த்துச் சமைத்த துவட்டற்கறியும் பொரிக்கறியும், தீம்பயறு அடு துவை பலவகை கறிகள்-இனிய பயற்றோடுகலந்து சமைதத புளிக்கறியுமாகிய பலவகைக் கறிகளையும், விரவு தேம்படு பால் தயிர் இழுது தேன் வெள்ளம் - இனிமை கலந்த பாலும் தயிரும் வெண்ணெயும் தேனுமாகிய வெள்ளத்தையும், வரைவு இலா தன மிடா. வொடு வாரிவாய் மடுத்தான் - அளவில்லாத (எனைப்பொருள்களையும்) மிடாக்களோடு வாரிவாரி வாயிற்போட்டான். (௪௪)

பல்பழக்குவைவேற்றுருப்பண்ணியங்கன்னன
மெல்சுவைத்தண்டுதெங்கிளையன்றியும்வேவா
வல்சிகாய்களின்வருக்கமுநுகர்ந்துமாறும
லெல்லைதீர்கலபண்டமுமெடுத்துவாய்மடுத்தான்

(இ-ள்.) பல் பழக்குலை - பல பழக்குப்பல்களும், வேற்றுரு பண்ணியம் கன்னல் - வெவ்வேறு வடிவாக வமைந்த பலகாரங்களும் சருக்கரையும், மெல்சுவை தண்டு தெங்கு இளை அன்றியும் - மெல்லுதற்றொழிலமைந்த கரும்புந் தெங்கிளையும் ஆகிய இவைகளெல்லாமலும், வேவா வல்சி காய்களின் வருக்கமும் நுகர்ந்து மாறுமல் - வேதற்றொழில் நிரம்பாத சோற்றையும் காய்களின் கூட்டங்களையும் உண்டு பசி மாறுமையால், எல்லை தீர் நவமண்டமும் எடுத்து வாய் மடுத்தான் - அளவில்லாத நவதானியங்களையும் எடுத்து வாரி வாயிற் போட்டான். (௧௬)

பாரித்துள்ளவிப்பண்டமும்பரூஉக்குறுங்கையால்
வாரித்தன்பெருவயிற்றிடைவைப்பவுந்துடுவை
பூரித்தாகுதிபண்ணியதழலெனப்பொங்கிக்
கோரித்தொன்பதுவாயிலும்பசித்தழல்கொளுந்த.

(இ-ள்.) பாரித்து உள்ள இப்பண்டமும் - நிறைந்துள்ள இந்தவதானியங்களையும், பரு குறுங் கையால் வாரி தன் பெருவயிற்றிடை வைப்பவும் - பருத்தலையுடைய சிறிய கைகளால் வாரித் தனது பெரிய வயிற்றிற்போடவும், துடுவை பூரித்து ஆகுதி பண்ணிய தழல் என - சிருக்கு சிரவங்களால் நெய் நிறைத்து ஆகுதிசெய்த யாகாக்கினிபோல, பசி தழல் பொங்கி கோரித்து ஒன்பது வாயிலும் கொளுந்த - பசியாகிய அக்கினி சுவாலித்து அதிகரித்து நவத்துவாரங்களிலும் கொளுந்தாநிற்ப.

கோரித்து-கோரமென்னும் பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்.

அலங்கலோதிகண்டதிசயமடைந்துதன்னன்பி
னலங்கொணாயகன்முன்புபோய்நாணமுட்கிடப்ப
விலங்குபூங்குழல்சுவன்மிசையிறக்கியிட்டொல்கி
நிலங்கிளைத்துநின்றுணீலகண்டனனிருபன்.

(இ-ள்.) அலங்கல் ஓதி கண்டு அதிசயம் அடைந்து - மாலையணிந்த கூந்தலையுடைய பிராட்டியார்கண்டு (என்றும் பார்த்தறியாத) வியப்பெய்தி, தன் அன்பின் நலங்கொள் நாயகன் முன்புபோய் - தம்மை கொண்டருளிய அன்பால் ஆர்வங்கொண்ட (தமது) தலைவர்முன் சென்று, நாணம் உள்கிடப்ப இலங்கு பூங்குழல் சுவல் மிசை இறக்கி இட்டு ஒல்கி நிலம் கிளைத்து நின்றுள்-நாணம் (தமது) திருவுளத்திற் பொதிந்து கிடக்கவும் விளங்கும் மலரையணிந்த அளகபாரம் பிடரின்மேல் சரிந்து கிடக்கவுந் துவண்டு (தமதுபெருவிரலால்) நிலத்தைக் கிளைத்து நின்றார், நிருபன் நீலகண்டனன் - சவுந்தரபாண்டியா அந்நிலைமையைக்கண்டார்.

அன்பால் வருவது ஆர்வம் ஆதலால் நலங் கொள் என்றதற்கு - ஆர்வங்கொண்ட என்றும் "அன்பீனுமாவமுடைமையதவீனும்" என்ற திருக்குறளானுணர்க. முன்னர் உண்டெஞ்சியன மலைபோற் கிடக்கின்றனவெனக் கூறியது சிவபெருமானேடு வந்த ஒருவன் பசியும் ஆற்றக்கூடாமையால் நாணம் உட்கிடப்ப எனவும், நாணமிகுதியால் கூந்தல்சரிதல் இயல்பாதலின் சினைவினையை முதன்மேலேற்றிச் சுவன்மிசையிறக்கி யிட்டெனவும் கூறினர். (௧௭)

அஞ்சிலோதியைவினவுவானறிகலான்போலக்
குஞ்சியாரழலன்னவக்குடவயிற்றவனுண்

டெஞ்சியுள்ளவேற்பூதங்களின்னமும்விடுத்துன்
னெஞ்சுவப்பவேயருத்துதுமென்னனுங்கிமலே.

(இ-ள்.) அம் சில் ஓதி மை அறிகலான் போல வினவுவான் - அழகிய வட்டத் தக்கட்டணியணிந்த கூந்தலையுடைய பிராட்டியாரை அறிந்தும் அறியார்போல வினவுகின்ற சவுந்தரபாண்டியர், ஆர் அழல் அன்ன குஞ்சி அகடு வயிற்றவன் - நிறைந்த நெருப்பைப்போலும் செந்நிறம் வாய்ந்த சிகையையுடைய அந்தக் குண்டோதரன், உண்டு எஞ்சிய உள்ள வேல் - உண்டு மிகுந்த பொருள் உள்ளனவானால், இன்னமும் பூதங்கள் விடுத்து - இன்னமும் (நமது குற்றேவல் செய்யும்) கணங்களை விடுத்து, உன் நெஞ்சு உவப்ப அருத்துதும் என்னலும்-உனது மனம் களிகூர உண்பித்திடுவோமென்று திருவாய் மலர்ந்தருள, நிமலை - பிராட்டியார்.

எஞ்சிய வினைமுற்றுப் பெயர் ஈறுதொக்குநின்றது. (௧௮)

ஐயவின்னுமிக்குறட்பசியடங்கிடாவேறு
வெய்யபாரிடவீரரைவிடுத்தியேலெடுத்து
வையம்யாவையும்வயிற்றிடைவைப்பரேயிதனாற்
செய்யகாலருத்திரப்பெயர்தேற்றமாமுனக்கே.

(இ-ள்.) ஐய இன்னும் இக்குறள் பசி அடங்கிடா- ஐயனே இன்னும் இக்குண்டோதரனுடைய தீப்பசி யடங்கவில்லை, வெய்ய வேறு பாரிட வீரரை விடுத்தியேல் -கொடிய (உமது) வேறு கண வீரரை யேவி விடுப்பீரானால், வையம் யாவையும் எடுத்து வயிற்றிடை வைப்பர்-உலக முழுமையும் எடுத்துத் தமது வயிற்றினிடத்தில் வைப்பர், இதனால் - இக்காட்சி யளவையினால், உனக்கு செய்ய கால உருத்திரப்பெயர் தேற்றம் ஆம் - உமக்குச் செந்நிறம்பொருந்திய கால உருத்திரனென வாய்ந்த திருநாமம் நிச்சயமாம்.

தேவரீருக்குக் கால உருத்திரனெனப் பண்டுள்ள திருநாமத்தின் பொருள் இன்று பலருங்காணக் காட்சியளவையால் ஒரு பூதத்தால் விளக்கி நின்றனை என்பார். இதனால் செய்ய காலருத்திரப்பெயர் தேற்றமாமுனக்கே என்றார். (௧௯)

சங்கவார்குழைக்குறண்மகன்றன்செயற்றானே
யிங்குவந்துரைசெய்திடவறிதியென்றிறைமுன்
மங்கைநாயகிகுமுதவாய்மலர்பொழுதெயிற்றுத்
திங்கள்வாய்முழையான்பசித்தீச்சுடவந்தான்.

(இ-ள்) சங்கம் வார் குழை குறள் மகன்-சங்காலாகிய நீண்ட குண்டலத்தையுடைய குண்டோதரன், தன் செயல் தானே இங்கு வந்து உரை செய்திட அறிதி என்று (எல்லாம் உண்டும் மாறாத) தனது தீப்பசிச்செயலை அவனே இங்கு வந்து முறையிட அறிவாயென்று, இறைமுன் மங்கை நாயகி குமுதவாய் மலர் பொழுது- (தமது) இறைவர்முன் மங்கையர்க்கு அரசியாராகிய பிராட்டியார் தமது குமுதம் போன்ற திருவாய் மலர்ந்தருளும்பொழுது, எயிறு திங்கள் வாய் முழையான் தீப்பசி சுட வந்தான் - வக்கிரதந்தமாகிய அர்த்த சந்திரனையும் வாயாகிய மலைக்குகையையுமுடைய (அக்குண்டோதரன்) தீப்பசி சுட்டு வருத்த மெலிந்துவந்தான். (௨௰)

கட்டமாடியச்சுந்தரநங்கையெம்பிராட்டி
பட்டபோனகம்பனிவரைபனையவாய்க்கிடந்த

தொட்டுவாய்மடுத்திடவுமென்சுடுபசிதணியா
திட்டுணுதவர்வயிறுபோற்காந்துவதென்முன்.

(இ-ள்,) நட்டம் ஆடிய நந்தா - (பதஞ்சலி வியாக்கிரபாதர் பொருட்டுத்) திருநடனஞ் செய்தருளிய சோமசுந்திரக்கடவுளே, நங்கை எம்பிராட்டி - பெண்களுட்சிறந்தவராகிய எமது பிராட்டியார், அட்ட போனகம் பனிவரை அனையவாய் கிடந்த-சமைப்பித்தருளிய அன்னவகைகள் இமயமலையை யொத்தனவாகி (குப்பல் குப்பலாய்க்) கிடந்தன, தொட்டு வாய் மடுத்திடவும் - கைதொட்டு வாரி வாயிற் போடவும், என் சுடுபசி தணியாது - என்னைச் சுட்டு வருத்தும் பசி தணியாமல், இட்டு உணாதவர் வயிறுபோல் காந்துவது என்முன் - பிறருக்குக் கொடுத்துத் தாமுமுண்ணாமல் சேமித்தவர்கள் (அது இழந்தபொழுது அவர்) வயிறு எரிவதுபோல (என்வயிறு) எரியாநின்றதென்று அலறினன்.

இட்டுணாமற் சேமித்தவர் தாம் தேடிய பொருளிழத்தல். "உண்ணுனொளி நிறுவானுந்புகழ்செய்யான் - றன்னருகசேளிர் துயர்களையான் - கொன்னே-வழங்கான்பொருள்காத்திருப்பானேல்அ ஆ - இழந்தானென்றெண்ணப்படும்" எனவருஞ் செய்யுளானுணர்க. அட்ட முதனிலை திரியாது வந்த பிறவினைப் பெயரெச்சம். (௨௧)

கையாமுப்புரத்திட்டதீகடும்பசியுருவாய்ப்
பொய்யனேன்வயிற்றிடைக்குடிபுகுந்ததோவென்னுங்
கையெறிந்திடுமண்டங்கள்வெடிபடக்கதறு
மையகோவெனுமுயிர்த்திடுமாவிசோர்ந்தயரும்.

(இ-ள்.) கையா முப்புரத்து இட்ட தீ-ஒழுக்கமில்லாதவராது திரிபுரத்திலிட்ட தீயானது, கடும்பசி உருவாய பொய்யனேன் வயிற்றிடை குடி புகுந்ததோ என்னும்-கொடிய பசியின் வடிவாய பொய்மையேயுடைய வயிற்றில் குடியேறியதோ என்று அலறுவான், கை எறிந்திடும்-தனது கையை (எடுத்துஒன்றோடொன்று) தாக்குவான்; அண்டங்கள் வெடிபட கதறும் - பல்லாயிர அண்டங்களுக்கும் விள்ளும்படி வாய்திறந்து கதறுவான, ஐயகோ என்னும் - ஐயகோ வென்று புலம்புவான், உயிர்த்திடும் - பெருமூச்செறிவான, ஆவிசோர்ந்து அயரும் - உயிர் தளர்ந்து சோருவான்.

குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்பட திருவிருத்தம் - அ௬௭.

---

## எட்டாவது

# அன்னக்குழியும்வையையுமழைத்தபடலம்.

வேதநாயகன்பாரிடவேந்தனுக்கமையா
வோதனுதிகளருத்திய தன்மையீதவையும்
போதராமையாலமைவுறப்போனகக்குழிதந்
தோதமாநதியருத்தியசெய்தியுமுறைப்பாம்.

(இ-ள்.) வேதநாயகன் - வேதங்களுக்குத் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுள், பாரிடம் வேந்தனுக்கு - பூதகணங்களுக்குத் தலைவனாகிய குண்டோதரனுக்கு, அமையா ஓதன ஆதிகள் அருத்திய தன்மை ஈது - (வயிறு) நிரம்பாத அன்னமுதலியவைகளைத் (தம்மலையாட்டியாரால்) உண்பித்த திருவிளையாடல் இது, உலையும் போதாமையால் (உண்பித்த) அவ்வன்னமுதலியவைகளும் போதாமையால், அமைவு உற - (அவன்) வயிறுநிரம்ப, போனகம் குழி தந்து - அன்னக்குழிதந்தருளி, ஓதம் மாநதி அருத்திய செய்தியும் உரைப்பாம் - (நீர்வேட்கைதீர) வெள்ளமாகிய பெரிய நதியை (அழைப்பித்து) உண்பித்த திருவிளையாடலையும் இனி எடுத்துச் சொல்லுவாம்.

குண்டோதரன் குடைபிடித்துப் பின்செல்லுந் தொண்டுசெய்பவனாதலால் பாரிடவேந்தன் எனவும், தமது வன்மையைப் பிராட்டியாருக்குத் தெரிவித்தற்பொருட்டாதலால் அமையாவோதனாதிகள் எனவுங் கூறினார். உகரச்சுட்டு செய்மை அண்மை இரண்டிற்கும் இடையதாதலால் சேய்மைப்பொருளில் நின்றது. (௧)

கவனமால்விடையாளிபின்கடிகமழ்தென்றற்
பவனமாமலையாட்டியைப்பார்த்துளேநகைத்துத்
தவனமாபசியுடையவன்றன்பொருட்டன்ன
புவனமாதினைநினைத்தனனினைக்குமுன்போந்தாள்.

(இ-ள்.) கவனம் மால் விடை யாளி-விரைந்து செல்லுந் திருமாலையே இடபமாகவுடைய சோமசுந்தரக்கடவுள், பின் - பின்பு, கடி கமழ் தென்றல் பவனம் மாமலை யாட்டியை பார்த்து - நறுமணம்வீசுந் தென்றற்காற்றையுடைய பெரியபொதியமலை யரசியாராகிய தடாதகைப் பிராட்டியாரைப் பார்த்து, உள்ளே நகைத்து - (தமது) திருவாய்க்குள் புன்முறுவலரும்பி, தவனம் மா பசி உடையவன் தன்பொருட்டு - தாகத்தையும் பெரும்பசியையுமுடைய குண்டோதரனபொருட்டு, அன்ன புவன மாதினை நினைத்தனன் - அன்னந்தரும் பூமிதேவியை நினைத்தருளினார், நினைக்குமுன் போந்தாள் - நினைத்தருளுவதற்கு முன்னமே (அன்னவடிவமாய்) வந்தாள்.

தம்முளொத்தன வைத்தெண்ணவேண்டுதலால் பசிபோலொத்ததாகமு முடையவனென்பது தோன்ற மாபசியொடுகூட்டித் தவனமாபசியெனவும், புன்முறுவலாதலின் - உள்ளேநகைத்து எனவும், ஆன்மகோடிகளுக்குப் பல்லுணவுகளையும் பூதேவிகொடுப்பவளாதலால் அன்னபுவனமாதினை எனவுங்கூறினார். (௨)

நாற்றடந்திசைத்தயிர்க்கடனனந்தலைநிலங்கீண்
டூற்றெழுந்துநாற்கிடங்கராயுதித்தெழுந்தாங்கு
மாற்றருஞ்சுவைத்தீந்தயிர்வாலரிப்பதத்தோ
டேற்றெழுந்ததுநாற்குழியிடத்திலும்பொங்கி.

(இ-ள்.) தயிர் கடல் - தயிர்க்கடலானது, நிலம் நனந்தலை கீண்டு - பூமியின் மத்தியைக் கிழித்து, நான்கு தடம் திசை - நான்குபெரியதிசைகளிலும், ஊற்றெழுந்து நான்கு கிடங்கர் ஆய் உதித்து எழுந்தது ஆங்கு - ஊற்றெடுத் தோங்கி நான்குகுழிகளாய்த் தோன்றி எழுந்ததுபோல, மாற்று அரும் சுவை தீம் தயிர் - ஒழியாத சுவையையுடைய தயிரானது, வால் அரி பதத்தோடு - வெள்ளிய அரிசியாலமைந்த அன்னத்தோடு, நாற் குழி இடத்திலும் பொங்கி ஏற்று எழுந்தது - நான்குகுழிகளிலும் பொங்கி ஓங்கி எழுந்தது.

எழுந்தாங்கு தொகுத்தல் விகாரம்.

குருமதிக்குலமன்னவன்மருகனக்குண்டப்
பெருவயிற்றிருபிறையெயிற்றெரிசிகைப்பேழ்வா
யொருகுறட்குடைவீரனையுன்பசிதணியப்
பருகெனப்பணித்தருளலும்பாரிடத்தலைவன்.

(இ-ள்.) குரு மதி குலம் மன்னவன் மருகன் - வெண்ணிறம் வாய்ந்த சந்திரகுலத்தலைவனாகிய மலயத்துவசபாண்டியனுடையமருகராகிய சவுந்தரபாண்டியர், குண்டம் பெரு வயிறு இரு பிறை எயிறு எரிசிகை பேழ்வாய் குடை அ ஒரு குறள் வீரனை - ஆழ்ந்த பெரியவயிற்றினையும் இரண்டுபிறைகளையொத்த வக்கிரதந்தங்களையும் அக்கினிபோன்ற செந்நிறம்வாய்ந்தசிகையையும் பிளந்தவாயையுங்குடை பிடித்துப் (பின்வருதலையும்) உடைய அந்த வொப்பில்லாத குண்டோதரனை (நோக்கி) உன் பசி தணிய பருக என பணித்து அருளலும - உனது பசிநோய்நீங்க உண்ணென்று கட்டளையிட்டருள, பாரிடம் தலைவன் - பூதகணத் தலைவனாகிய அக்குண்டோதரன்.

எல்லாப்பொருளும் அடங்கும்வயிறு என்பார் பெருவயிறு என்றார். (ச)

அத்தயிர்ப்பதக்கிடங்கரிலலைகடல்கலக்கு
மத்தெனக்கரம்புதைத்தெடுத்தெடுத்துவாய்மடுத்துத்
துய்த்திடப்பசிவிடுத்ததுசுருதிநாயகன்றாட்
பத்திவைத்துவீடுணர்ந்தவர்பழவினைத்தொடர்போல்.

(இ-ள்.) அ தயிர் பதம் கிடங்கரில் - அந்தத் தயிர்ச்சோற்றுக் குழிகளில், அலை கடல் கலக்கும் மத்து என கரம் புதைத்து - அலைக்குங் கடலைக்கலக்கும் மத்தைப்போலத் (தனது) கைகளைச்செருகி, எடுத்து எடுத்து வாய் மடுத்து துய்த்திட - வாரி எடுத்து வாயிற்போட்டுண்ண, சுருதி நாயகன் தாள் பத்தி வைத்து - வேதங்களுக்குத் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிக்கீழ்ப் பத்திசெய்து, வீடு உணர்ந்தவர் பழவினை தொடர்போல் - பேரின்பத்தை யடைந்தவருடைய சஞ்சிதவினையின் தொடர்ச்சி விட்டொழிதல்போல, பசி விடுத்தது - பசிநோய்விட்டொழிந்தது.

வீடுணர்தல் அவனது அருளுக்கா ளாதலால் - பழ வினை என்றதற்குச் சஞ்சிதம் என்றும். ஆகாமியமும் பிறவிக்கு வித்தாதலால் ஆகாமியமும் ஒழிந்தவர்என்பார் சுருதிநாயகன்றாட்பத்திவைத்து வீடுணர்ந்தவர் என்றார். எடுத்தெடுத்து ஆராமைப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். (ரு)

வாங்கிவாங்கிவாயமடுத்தலுமுடம்பெலாம்வயிறாய்
வீங்கினன்றரைகிழிபடப்பொருப்பெனவீழ்ந்தா
னீங்குநீளுயிர்ப்பிலனுடல்புரண்டனனீர்வேட்
டாங்குநீர்நிலைதேடுவானுயினனெழுந்தான்.

(இ-ள்.) வாங்கி வாங்கி வாய் மடுத்தலும் - வாரி வாரி வாயில்போடவும், உடம்பு எல்லாம் வயிறு ஆய் வீங்கினன் - சரீரமெல்லாம் வயிறுபோலப் பருத்துவீங்கி, பொருப்பு என தரை கிழி பட வீழ்ந்தான் - மலைவிழுந்ததுபோலப் பூமிகிழிய (நிற்க ஆற்றாது) விழுந்து, நீங்கு நீள் உயிர்ப்பு இலன் உடல் புரண்டனன் - உசுவாசிக்கும் கெட்டுயிர்ப்பற்றுச் சரீரம்புரண்டு, நீர் வேட்டு - தண்ணீர்வேட்கையையுடை

யானும், ஆங்கு நீர் நிலை தேடுவோன் ஆயினன் எழுந்தான் - அவ்விடத்து நீர்நிலை யவற்றைத்தேட எழுந்திருந்தான்.

வீங்கினன், வீழ்ந்தான், இலன், புரண்டனன் என்னும் வினைமுற்றுகள் எச்சங்களாயின. தேடுவோனாயினன் ஒருசொல். (சா)

ஆவியன்னவர்ப்பிரிந்துறையணங்கனார்போலக்
காவிநாண்மலர்த்தாமரைக்கடிமலர்வாட
வாவியோடையுங்குளங்களும்வறப்பவாய்வைத்துக்
கூவநீணிலைநீர்களும்பசையறக்குடித்தான்.

(இ-ள்.) ஆவி அன்னவர் பிரிந்து உறை அணங்கு அன்னார் போல - (தமது) பிராணனையொத்த தலைவரைப் பிரிந்து வசிக்கும் அணங்கையொத்த பெண்கள்வாடுதல்போல, நாள் காவி மலர் - அன்றலர்ந்த நீலோற்பலமலரும், கடி தாமரை மலர் வாட - வாசமிக்க தாமரைமலரும் வாட்டமுற, வாவியும் ஓடையும் குளங்களும் வறப்ப - வாவிகளும் ஓடைகளும் குளங்களும் நீர்வறப்ப, வாய் வைத்து - வாய்வைத்துருஞ்சி, கூவமும் நீள் நீர் நிலைகளும் பசை அற குடித்தான் - கிணறுகளும் ஆழ்ந்த மடுக்களும் நீர்ப்பசையறப் பருகினான்.

வாவி - நடக்குங்கிணறு. தாம் உடலும் தலைவர் உயிருமாய் இருத்தலின் ஆவியன்னவர் என்றார். அணங்கு கொல்லியம்பாவை - இது சீவகசிந்தாமணியில்நச்சினார்க்கினியர் உரையில் கண்டது. அணங்கனார்போல வாட இதுதொழிலுவமையணி. நீர் நிலை - நிலை நீர் இலக்கணப்போலி. (எ)

அனையனாகியுநீர்நசையாற்றலன்வருந்தும்
வினையனாகிவானதிசசடைவேதியன்பாதத்
தினையநாதனுந்தன்றிருமுடியின்மீதிருக்கு
நனையநாண்மலரோதியைப்பார்த்தொன்றுநவில்வான்.

(இ-ள்.) அனையன் ஆகியும் நீர் நசை ஆற்றலன் - அத்தன்மையனாகியும் நீர் வேட்கை சற்றும் நீங்காது, வருந்தும் வினையன் ஆகி - வருந்துகின்ற செய்கையையுடையவனாகி, வான் நதி சடை வேதியன் பாதத்து இனைய - சுரநதியை யணிந்த சடையையுடைய அந்தணனாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிக்கீழ் வந்து வருந்த, நாதனும் - அச்சோமசுந்தரக்கடவுளும், தன் திருமுடியின் மீது இருக்கும் நனைய நாள் மலர் ஓதியைப் பார்த்து - தனது அழகிய சடாமுடியின்மீதிருக்கும் தேனையுடைய அன்றலர்ந்த மலரையணிந்த கூந்தலையுடைய கங்காதேவியைப் பார்த்து, ஒன்று நவில்வான் - ஒன்று கூறுவாள்.

நனையபொருளடியாகப் பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம், இது மலரென்னும்பொருள்கொண்டது. அவன் ஆராத நீர்வேட்கையை யுடையவனுதலின் அந்நீர்வேட்கையைத் தவிர்ப்பது சுரநதியன்றி வேறின்மைகருதி அவனபிப்பிராயத்தோடு பொருந்திய விசேடணந்தந்து - வானதிச்சடைவேதியன் என்றது கருத்துடையடையணி. (அ)

தேங்குநீர்த்திரைமாகிகைச்செல்விநீயிந்த
வாங்குநீர்த்தடம்புரிசைசூழ்மதுரையின்மாட்டோ
ரோங்குநீத்தமாயொல்லெனவருதியென்றுரைத்தா
னீங்குநீர்த்திருமாதவளொருமொழிநிகழ்த்தும்.

(இ-ள்.) தேங்கு நீர் திரை மாலிகை செல்வி - நிறைந்த நீரிற் சுருண்டெழும் அலைகளையே மாலையாகவுடைய கங்கையே, நீ இந்த வாங்கு நீர்த்தடம் புரிசை சூழ் மதுரையின் மாடு - நீயிந்த வளைந்த நீர்மயமாகிய பெரிய மதில்சூழ்ந்த மதுரையின்பக்கத்து, ஓர் ஓங்கு தீர்த்தமாய் ஒல்லென வருதி என்று உரைத்தான் - ஒரு பெருவெள்ளமாய் விரைந்து வருவாயென்று திருவாய்மலர்ந்தருளினார், நீங்கு நீர் இருமாது (அவரது) சடாமுடியினின்று நீங்கிய கங்காதேவி, அவன் ஒரு மொழி நிகழ்த்தும் - அவ்விடத்து ஒருவிண்ணப்பஞ் செய்துகொள்ளுவாள். (கூ)

*அன்றுமெம்பிரானாணையாற்பகீரதன்பொருட்டுச்*
*சென்றுநீயொருதீர்த்தமாய்த்திளைப்பவர்களங்க*
*மொன்றுதீவினைத்தொடக்கறுதவொழுகெனப்பணித்தா*
*யின்றுமோர்நதியாகெனப்பணித்தியேலென்னை.*

(இ-ள்.) எம் பிரான் - எமது பெருமானே, அன்றும் - அக்காலத்தும், ஆணையால் - உனது ஆணையின்வழியால், பகீரதன் பொருட்டு நீ சென்று - பகீரதனிமித்தமாக நீபோய், ஒரு தீர்த்தமாய் - ஒரு தீர்த்தவடிவமாய், திளைப்பவர் களங்கம் ஒன்று தீவினை தொடக்கு அறுத்து ஒழுகு என பணித்தாய் - ஸ்நானஞ்செய்வோருடைய குற்றம்பொருந்திய பாவத்தொடக்கினை யொழித்துச் செல்லாயென்று பணித்தருளினாய், என்னை இன்றும் ஓர் நதி ஆகு என பணித்தியேல் - என்னை இப்பொழுதும் ஓர் நதிவடிவமாய்ச் செல்லாயெனப் பணித்தாயாகில்.

எம்பிரான்-அண்மைவிளி.

நதி - மேற்றிசையிறன்றிக் கிழக்குத்திசையை நோக்கிச் செல்வது. நன்னைப்பரிசித்தோர் பாவத்தொடக் கொழித்தல் உனது ஆணைவழி என்பாள் - ஆணையால் தீவினைத்தொடக்கறுத்து ஒழுகெனப் பணித்தாயென்றாள். இதனால் பகீரதனவேண்டுகோளுக்கு முன்னரே கங்கையை யணிந்திருக்கின்றனன் என்னும் பொருள்போந்தது. ஓர்கால் திருக்கயிலையிலுள்ள மலர்க்காவில் சிவபெருமான் எழுந்தருளியிருக்குங்கால், உமாதேவியார் ஓர் திருவிளையாடலைக்கருதிப் பின்வந்து அச்சிவபெருமான் திருக்கண்களைத் தமது கரத்தால்மூட உலகமெல்லாம் இருண்டு வருத்தங்கூர்தலை நோக்கித், தனது நுதற்கண்டிறந்து இருளைமாற்றி ஒளிதந்தருளியதைநோக்கி அவ்வுமாதேவியார் அத்திருக்கரங்களை வாங்கி அச்சமடைந்து தமது திருக்கரங்களை விதிர்த்தலோடும், அவ்வச்சத்தால் பத்துவிரலிறன்றிய வியாப்புப் பத்துக்கங்கைகளாய்த்தோன்றி ஊழியினிலெயருங் கடலினுமிகப்பெருகி உலகமுழுதும் கோத்துக்கொள்ள, திருமாலும், பிரமனும், இந்திரனும் நடுக்கமெய்தித் திருக்கயிலையிற்சென்று சிவபெருமானையடைந்து விடத்தை ஸ்ரீகண்டத்தில் தாங்கியதுபோல இவற்றையுந்தாங்கி எங்களைப் பாதுகாவாயெனக் குறையிரந்தார்கள். சிவபெருமான் அருள்கூர்ந்து அவ்வெள்ளங்களையழைத்துத் தன்சடையிலுள்ள ஒருரோமத்திற்றங்கியருள, அதனைநோக்கிய திருமால்முதலிய மூவரும் அக்கங்கை உமாதேவியார் திருக்கரத்திற்றோன்றினமையாலும் தேவரீர் சடையின்மேல்தரித்த தன்மையாலும் அவை மிகவும் புனிதமுள்ளன, அவற்றில் எங்களுக்குச் சிறிது அருளவேண்டுமென்று வேண்டினர்கள், அவ்வேண்டுகோளுக்கு இரங்கிச் சிறிது அவர்கள்கையில் அருள அவற்றைப்பெற்றுத் தத்தம் உலகிலடைந்து செலுத்தினர்கள். அம்மூன்று நதிகளில் பிரமனுலகிலுள்ளகங்கைதான் சிறிது பகீரதன்றவத்தால் இந்நிலவுலகில் வந்தது.

அக்கதிமூன்றதன்விலயனைர்புகுத்தக்கை
தன்னருந்திறலின்மிக்கபகீரதன்றவத்தான்மீளப்
பின்னருமிமையாமுக்கட்பெருந்தகைமுடிமேற்றங்கி
இக்கிலவனைப்பிற்செல்லவிறையதிலிவிடுத்தல்செய்தான்."

இதனைக் காந்தபுராணம்-தக்ஷகாண்டம்-ததீசியுத்தரப்படலத்திற்காண்க. (௧௦)

தெரிசித்தோர்படிந்தாடினோர்செங்கையாலேனும்
பரிசித்தோர்பவத்தொடாசசியின்பற்றுவிட்டுள்ளத்
துருசித்தோர்வுறுபதியுமவிச்சையுமுணர்வாய்
விரிசித்தோர்வுறுமெய்யுணர்வாலவரும்வீடும.

இ-ள்.) தெரிசித்தோர படிந்து ஆடினோர் செங்கையாலேனும் பரிசித்தோர்- கட்புலன்களால கண்டவர்களும மூழ்கினோரும் செவந்த கையாலாயினும் தீண்டினோரும, பவத் தொடாசசியின பற்று விட்டு - (தமது) சனனத்தொடர்ச்சியின பற்று விடடொழிந்து, உள்ளத்து உருசித்து ஓர் வுறு பதியும் விச்சையும் - (தமது) மனத்தில் இன்ப ஊற்றெடுப்பச் சிந்தித்தலால வரும சிவலோகமும் சிவஞானமும், உணா வாய் விரி சித்து ஓர் வுறும மெய் உணா வால் வரும வீடும்-அறிவா யெங்கு நிறைந்த சிவபெருமானை உணராதுணரும ஞானத்தால் வருஞ் சிவகதியும்.

உணாவாய் விரிசித்தென்றது - "அகரவுயிர்போலறிவாகியெங்கு - நிகரிலிறைநிற்கு நிறைந்து" எனவருந்திருவருட்பயனுலுணாக. உருசித்து செயவெனெச் சத்திரிபு. ஓர் வுறு காரணப்பொருளிலவந்த காலமகரந்த பெயரெச்சமாய நிற்றலால் சிந்தித்தலால வரும் என்றும. (௧௧)

தந்திடப்பணித்தருளெனுந்தடம்புனற்செல்வி
சுந்தரப்பெருங்கடவுளைவரங்கொண்டுதொழுது
வந்தளப்பிலாவேகமோடெழுந்துமாநதியா
யந்தரத்துநின்றிழிபவளாமெனவருமால்.

(இ-ள்.) தடம புனல் செல்வி - பெரியநீரமயமாகிய கங்காதேவி தந்திட பணித்து அருளெனு - (யான்) தரப்பணித்தருளாயென்று, பெரும் சுந்தரக்கடவுளை தொழுது வரங்கொண்டு வந்து-(அளத்தற்கரிய) பெருமையையுடைய சோமசுந்தரக்கடவுளை வணங்கி வரமபெற்றுவந்து, மாநதியாய அளப்பு இலா வேகமோடு எழுந்து - பெரியநதிவடிவமாய அளவில்லாத வேகத்தோடு உவட்டெடுத்து, அந்தரத்து நின்று இழிபவள் ஆம் எனவரும் - (பகீரதன்பொருட்டு) ஆகாயத்தினின்று இறங்கினவளபோல வருகின்றாள். (௧௨)

கலிவிருத்தம்.

திரைவளையணிகரமுடையவளசெழுமணிநகையுடையா
ளுரைவளை துகிலுடையவளகொடிநுணுகிடையவளறனீள்
விரைவளைகுழலுடையவளகயல்விழியுடையவள்வருவாள்
வரைவளைசிலையவனமுடிமடவரனதிவடிவினுமே.

(இ-ள்.) வரைவளை சிலையவன் முடிமட வரல நதி வடிவினும் - மகாமேருவையே வளைந்தவில்லாகவுடைய சிவபெருமானது சடாமுடியிலுள்ள கங்கையாகிய மடவரல் நதிவடிவமாய்வரும்பொழுதும், திரைவளை அணிகரம உடையவள் - அலைகளையே வளையணிந்த கைகளாகவுடையவளாகியும், செழுமணி நகையுடையாள்-நன் முத்தியமுத்துகளையே தந்தபங்திகளாகவுடையவளாகியும், நுரை வளை துகிலுடையவள் - நுரையையேவளைந்த ஆடையாகவுடையவளாகியும், கொடி நுணு

நுடையவள் - பூங்கொடியையே சிறிய இடையாக வுடையவளாகியும், அறல்நீள் விரைவகை குழல் உடையவள் - கருமணலின் ஒளியையே நீண்டு இயல் மணங்கமழ்ந்து கடைவளைந்த கூந்தலாக வுடையவளாகியும், கயல் விழி உடையவள் - கயலையேகண்களாக உடையவளாகியும், வருவாள்-வருகின்றாள்.

கங்கை பெண்வடிவமாதலின் வெள்ளவடிவமாய் வரும்பொழுதும் அவ்வடிவு வேறுபடாது வந்தனள் என்பார் வருவாளெனப் பெண்பால் விகுதிதந்து அலைகளையும் முத்துகளையும் நுரையையுங் கொடிகளையும் கருமணலினொளியையும் கயலையும் கைகள்முதலாக உருவகஞ்செய்து கூறினார். (௧௩)

விரைபடுமகிலரைபொருதிமில்வெயில்விடுமணிவரையோ
டரைபடமுதுசினையலறிடவடியொடுகடிதகழாக்
குரைபடுகழலிறவுளர்சிறுகுடியடியொடுபறியாக்
கரைபடவெறிவதுவருவதுகடுவிசைவளியெனவே.

(இ-ள்.) விரைபடும் அகில் - (அந்நதியானது) வாசமிக்க அகிலும், பொரு அரை திமில் - பொருக்குப்பொருந்திய தூரையுடைய வேங்கையும், வெயில் விடு மணிவரையோடு அரைபட - ஒளிவீசும் இரத்தினங்களையுடைய மலைகளோடுதாக்கி அரைபடவும், முது சினை அலறிட - (அம்மரங்களின்) பெரியகிளைகள் சத்திக்கவும், அடியொடு கடிது அகழா - (அவைகளை) வேரோடு விரைந்து அகழ்ந்து, குரைபடு கழல் இறவுளர் சிறு குடி அடியொடு பறியா - ஒலிக்கும வீரகண்டையையுடைய குறிஞ்சிநிலமாக்களுடைய சிறுவீடுகளையும அடியோடுதோண்டி, கரைபட எறிவது - கரைகளிற்போய்வீழவீசி, கடுவிசை வளி என வருவது - மிக்கவேகத்தையுடைய சண்டமாருதம்போல விரைந்துவாராநின்றது. (௧௪)

பிணையொடுகலைபிடியொடுகரிபிரிவிலவொடுபழுவப்
பணையொடுகருமுசுவயிறணைபறழொடுதழுவியதன்
றுணையொடுகவிபயின்மரநிரைதொகையொடுமிறவுளர்வெங்
கணையொடுசிலையிதனொடுமெறிகவணொடுகொடுவருமால்.

(இ-ள்.) பிரிவில பிணையொடு கலை பிடியொடு கரி - (தம்முள்) பிரிதலில்லாத பெண்மானோடு ஆணமானையும பெணயானையோடு ஆண்யானையையும் (வாரி) பழுவம் ஒடு பணை - காட்டிலுளள ஒடுவிருக்ஷத்தை அதன்கொம்புகளோடும், கருமுசு - கரிய ஆண்முசுவை, வயிறு அணை பறழொடு தழுவிய தன் துணையொடு - வயிற்றில் இறுகப்பற்றிய குட்டியோடுதழுவிய அதனது பெண்முசுவோடும், கவி பயில் மரம் நிரை தொகையொடும் - குரங்குகள உலவும் மரங்களின்வரிசைகளை அவற்றின் தொகுதியோடும், இறவுளர் சிலை வெங்கணையொடும்-வேடர்கள் ஏந்திய வில்லைக் கொடிய அம்புகளோடும், இதணொடும எறிகவணொடும கொடுவருமால்-(தினைப்புனத்திலமைந்த) பரணோடும் கற்கோத்து எறியும் கவணோடும் அடித்துக்கொண்டு வாராநிற்கும்.

பிணையொடு துணையொடு தொகையொடு கணையொடு இதணொடு பிடியொடு பணையொடு கவணொடு என்பவற்றி னிறுதியிலுள்ள ஒடுக்களை எண்ணிடைச்சொற்களாக்கி இரண்டனுருபுதந்து எண்ணுமமை கூட்டிப் பொருள்கொள்ளினும் அமையும். (௧௫)

அடியிறநெடுவரையுதைவனவகழ்வனவகழ்மடுவைத்
திடரிடுவனமழைசெருகியசினைமரநிரைதலைகீழ்
படவிடிகரைதொறுநடுவனபடுகடலுடைமுதுபார்
நெடுமுதுகிருபிளவுறவருநெடுநதியினவலையே.

(இ-ள்.) படுகடல் உடைமுதுபார் நெடுமுதுகு இரு பிளவுற வரு நெடு நதியின அலை-(வளங்கள்) மிக்க கடல்சூழ்ந்த பெரியபூமியின் நெடியமுதுகு இரண்டுபிளவுபட்டுவாராநின்ற பெரியநதியின் இடத்தனவாகிய அலைகள், நெடுவரை அடி இற உதைவன அகழ்வன - நீண்டமலைகளினுடைய வேரிறமோதித் தோண்டாநின்றன; அகழ் மடுவை திடர் இடுவன - தோண்டியமடுக்களைத் திடர்செய்கின்றன, மழை செருகிய சினைமரம் நிரைதலை கீழ்பட இடி கரைதொறும் நடுவன - மேகங்கள் செருகிக்கிடக்கின்ற கிளைகளையுடைய மரங்களை வரிசையாய்த் தலைகீழாக இடிந்தகரைகள்தோறும் நடாநின்றன.

கடல்வளங்களாவன - "ஒக்கோலை சங்கம் ஒளிர்பவளம் வெண்முத்து-நீர்ப்படும் உப்பினோடைந்து" என்பதனாலுணர்க. நதியின - குறிப்புவினைமுற்றுப் பெயரெச்சமாய்நின்று அலையென்னும்பெயர்கொண்டது. (கஉ)

பிளிறொலியினமுதுமரமகழ்பெருவலியினவசையா
வெளிறடிவனவெறிமணியினவிரைசெலவினமதமோ
டொளிறளியினநுரைமுகபடமுடையனவெனவரலாற்
களிறனையதுமதுவிதழிகள்கவிழ்சடையணிகுடிலை.

(இ-ள்.) மது இதழிகள் கவிழ்சடை அணி குடிலை - சிவபெருமான் தேனொழுகும் கொன்றைமலராலாகிய மாலைகள்தொங்கிய சடையிலணிந்த கங்கையானது, பிளிறு ஒலியின என - ஒலிக்கும் பேரொலியையுடையதெனவும், முதுமரம் அகழ் பெருவலியின என - ஆலமரங்களை வேரொடுபறிக்கும் பெரியவலியினையுடையதெனவும், அசையா வெள்ளில தடிவன என-அசையாத விளாமரங்களை முறிக்கின்றது எனவும், எறிமணியின என (இரண்டுகரைகளிலும்வீசும்) முத்துகளையுடையதெனவும், விரை செல வின என வரலால்-விரைந்துசெல்லுங்கதியினையுடையதெனவும் வருதலால் (பிளிறொலியன - குமுறும் ஒலியினையுடையனவாகியும், முதுமரம் அகழ் பெருவலியின - பெரியமரங்களை வேரொடுபறிக்கும் மிக்கவன்மையையுடையனவாகியும், அசையாவெளில் தடிவன - அசையாத கட்டுத்தறியை முறிப்பனவாகியும், எறிமணியின -(ஒளி) வீசும் முத்துகளையுடைய கொம்புகளையுடையனவாகியும், விரைசெலவின - விரைந்துசெல்லுங் கதியையுடையனவாகியும், மதமொடு ஒளிறு அளியின - (கரடகங்களில் ஊற்றெடுக்கும்) மதங்களோடு (உண்ணவந்துவீழும்) விளங்கும் வண்டுகளையுடையனவாகியும், நுரைமுக படம் உடையன - நுரைபோல வெண்மைவாய்ந்த முகபடாங்களை யுடையனவாகியும் உள்ள) களிறு அனையது - யானைகளையொத்திருந்தது.

குடிலை - ஒருமையாதலால் உடையதெனப் பொருள்கொண்டாம். முத்து, கொம்பினிடத்து ஆதலால் முத்துகளையுடைய கொம்பையுடையன என்றும். வெளில் தொகுத்தல். இது செம்மொழிச்சிலேடையணி. (கங)

நீடியபிலமுற்றுநிலையினநிருமலன்மதிமுடிமீ
தாடியசெயலினவெயினுமிழருமணிதலையினநீள்

[illegible]டியகதியனதிரைதிரைகுறுகியபலகாலி
னோடியவலியினவளையுடலுரகமுமெனவருமால்.

(இ-ள்.) நீடிய பிலம் உறும் நிலையின - (நதியானது) ஆழ்ந்தபாதலத்திற் பொருந்தும் ஆழத்தையுடையதாகியும், நிருமலன் மதிமுடிமீது ஆடிய செயலின- சிவபெருமானுடைய பிறையணிந்தசடைமுடியின்மேல் தங்கும் செயலினையுடைய தாகியும், வெயில் உமிழ் அருமணி தலையின - கிரணத்தைவீசும் பெறுதற்கரிய இரத்தினங்களைத் தனதிடத்துடையதாகியும், நீள் கோடிய கதியின - மிகவும்வளைந்து செல்லும் வேகத்தையுடையதாகியும், திரைதிரைகுறுகிய பலகாலின் ஓடியவலியின - வரிசைவரிசையாக நெருங்கிய பலகால்களால் விரைந்துசெல்லும் வன்மையுடையதாகியும் செல்லுதலால் (நீடியபிலமுறும் நிலையின - ஆழ்ந்தபிலத்துவாரத்திற் பொருந்தும் நிலையையுடையனவாகியும், நிருமலன் மதிமுடிமீது ஆடியசெயலின- சிவபெருமானுடைய சந்திரனையணிந்த சடாமுடியின்மேலாடும் செயலினையுடையனவாகியும், வெயில் உமிழ் அருமணிதலையின - கிரணத்தைவீசும் பெறுதற்கரிய ரத்தினத்தைச் சுடிகையிலுடையனவாகியும், நீள்கோடிய கதியின - மிகவும்வளைந்துசெல்லும் நடையினையுடையனவாகியும், திரைதிரைகுறுகிய பலகாலின் ஓடியவலியின - வரிசைவரிசையாக நெருங்கிய பலகால்களால் விரைந்துசெல்லும் வன்மையையுடையனவாகியும் உள்ள) வளை உடல் உரகமும் எனவரும். வளைந்தசரீரத்தையுடைய சர்ப்பம்வருகைபோல வாராநிற்கும்.

கால்-கால்வாய், கால். இதுவும அவ்வணி. (கஅ)

மண்ணகழ்தலின்வளையணிகருமாவனையதுமிசைபோய்
விண்ணளவலினவுணர்களிறைவிடுபுனலொடுநெடுகு
மண்ணலையனையதுசுவையிழுதளையளைவுறுசெயலாற்
கண்ணனையனையதுநெடுகியகடுகியகதிநதியே.

(இ-ள்.) கடுகிய கதி-விரைந்துசெல்லும வேகத்தையுடைய, நெடுகியநதி-நெடியநதியானது, மண் அகழ்தலின - மண்ணுலகைததோண்டிச்செலலுதலால், வளை அணி கருமா அனையது - பாஞ்சசன்னியமென்னும சங்கினையணிந்த (செங்கையையுடைய) திருமாலாகிய வராகமூர்த்தியை யொததிருந்தது, மிசைபோய் விண் அளவலின் - மேலேசென்று விண்ணுலகத்தைத்தொடுதலால், அவுணர்கள் இறைவிடு புனலொடு நெடுகும் அண்ணலை அனையது - அசுரர்களுக்குததலைவனாகிய மாவலி என்பவன் தாரைவார்த்தநீரோடு திரிவிக்கிரம வடிவங்கொண்ட வாமனமூர்த்தியை ஒத்திருந்தது, சுவை இழுது அளை அளைவுறு செயலால் - மதுரமிக்க வெண்ணெயையும் தயிரையுங்கலந்துவருஞ்செயலால், கண்ணனை யனையது - கண்ணமூர்த்தியையொத்திருந்தது.

இது தொழிலுவமையணி. (கக)

திகழ்தருகரிபரிகவரிகள்செழுமணியொடுவருமா
றிகழ்தருகுடபுலவாசர்கணெறிசெய்துகவர்திருவே
டகழ்தருபதிபுகுமதிகுலவாசனையதையலதேற்
புகழ்தருதிறையிடவருகுடபுலவாசனுநிகரும்.

(இ-ள்.) திகழ்தரு கரிபரி கவரிகள் செழுமணியொடு வரும் ஆறு-விளங்காநின்ற யானைகளையுங் குதிரைகளையுஞ் சாமரைகளையும் உருநிறைந்த முத்துகளோடு

கொண்டு தென்றிசைநோக்கிவரும நதியானது, இகழ்தரு குட புலவரசர்களை வெ ன்றிசெய்து அவர்திருவோடு-(தம்மொடு) மாறுபட்ட மேற்றிசையிலுள்ள அரசர்களைத் தமது ஆணைவழிப்படுத்தி(அவர்களினின்றுங்) கொள்ளைகொண்ட செல்வங்களோடு, அகழ்தரு பதிபுகு மதிகுல அரச அனையது - அகழ்சூழ்ந்த மதுரைநகருட்செல்லும் சந்திரமரபிற்றோன்றிய பாண்டியனை ஒத்திருக்கது, அலது எல் - அவ்வரசனை, ஒத் தல் இலதாயின், புகழ்தரு திறை இட வரு குடபுல அரசனும் நிகருங் - புகழத்தக் கதிறை இறுக்கவரும் மேற்றிசைநாடாளும் அரசனையும் ஒத்துத்தோன்றும்.

அரசு பண்பாகுபெயராயப் பண்பிமேல நின்றது. அரசு அரசத்தன்மை, இஃது உகரவீற்றுப்பாவதத்திதன். இதுவும் அவ்வணி. (௨௦)

ஆரொடுமடலவிழ்பனையொடுமரநிகரிலைநிம்பத்
தாரொடுபுலியொடுசிலையொடுதருகயலொடுதழுவாப்
பாரொடுதிசைபரவியதமிழ்பயிலரசர்கள்குழுமிச்
சீரொடுபலதிருவொடுவருசெயலனையதுநதியே.

(இ-ள்.) நதி-ஆறானது, ஆரொடும்-ஆத்திமாலையோடும், மடல் அவிழ் பனை யொடும் - இதழவிழ்ந்த பனைமாலையோடும், அரம் நிகர் இலை நிம்பத்தாரொடும்-அ ரத்தையொத்த இலையையுடைய வேப்பமாலையோடும், புலியொடும் சிலையொடும் தருகயலொடும்-புலியோடும் விலலோடும் தக்ககயலோடும், தழுவா - தழுவி (வரு தல்) பாரொடுதிசை பரவியதமிழ் பயில் அரசர்கள குழுமி - மண்ணுலகோடு எட் டுத்திக்கிலும் பரவிச்சென்ற (புகழையுடைய) தமிழ்பயின்ற சோழசேரபாண்டியர் கள் தம்முளநெருங்கி, பல சீரொடு திருவொடு வருசெயல் அனையது - பலவரிசை யோடுஞ் செல்வததோடும் வராநின்ற செயலையொததிருந்தது.

தமிழிறகெல்லைகள கிழக்கேகடலும, தெறகே குமரியாறும், மேற்கே குடக நாடும், வடகசே திருவேஙகடமும ஆதலால் பாரொடுதிசைபரவிய என்றதற்குப் புகழையுடைய எனவருவித்தாம். ஆரும் பனையும் வேம்பும சோழ சேரபாண்டியர் களுக்கு உரியமாலைகளாதலாலும, புலியும சிலையும கயலும அவர்களுக்குரிய கொ டிகளாதலாலும் அவறறைததழுவி இநநதிவருகையால் அவ்வரசர்கள் இவற்றொடு நெருங்கிவருஞ செயலையொததென்றலும் அவவணி. (௨௧)

கவிநிலைத்துறை

கல்லார்கவிபோற்கலங்கிககலைமாண்டகேள்வி
வல்லார்கவிபோறபலவான்றுறைதோன்றவாய்த்துச்
செல்லாறுதோறும்பொருளாழ்ந்துதெளிந்துதேயத்
தெல்லாருமவிழ்ந்துபயன்கொள்ளவிறுத்ததன்றே.

(இ-ள்.) கல்லார் கவிபோல் கலங்கி -(நல்லாசிரியனைவழிப்பட்டு முறையே நூல்களைக) கல்லாதவர் (இயறறுஞ்) செய்யுள் தெறறெனப்பொருள்கொள்ளக்கிட க்காது கலங்கிநிற்றல்போல (புதுப்பெருக்காதலின் அந்நதி) கலங்கி, கலைமாண்ட கேள்வி வல்லார் கவிபோல் - (முறைப்படி) நூல்களில் மாட்சிமைப்பட்ட கேள் வியின்வல்லோர் இயறறுங் கவிகள் (பலதுறைகள தோன்றவும் செல்லச் செல்ல ஆழ்ந்த நுண்ணியபொருள்களை யுடையனவாய்ப் பின்னர்த் தெளியவும் உலகி லுள்ள பலரும்விரும்பி அறப்பயன்முதலிய நான்குபயன்களையுங் கொள்ளவும் இறுத்தல்) போல, வான் துறை பல தோன்ற வாய்த்து - பெரியநீர்த்துறைகள் பல்லிடங்களிலுந் தோன்றப்பொருந்தி, செல் ஆறு தோறும் பொருளாழ்ந்து தெ

சிந்து - செல்லும் இடந்தோறும் - மணிபொன் முதலிய பலபொருள்களையுடைய தாய் ஆழமுடைத்தாகிப் (பின்னர்த்) கலங்குதல் நீங்கி, தேயத்து எல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள - உலகிலுள்ள பலரும் விரும்பிப் பயனைக்கைக்கொள்ள, இருந்தது - நிலைபெற்றிருந்தது.

இறுத்தல்-நிலைபெறுதல். வல்லோரியற்றியகவிகள் பலதுறைதோன்ற நிலைபெறுவதாவது - அகப்பொருட்டுறைகளும் புறப்பொருட்டுறைகளுமாகிய பலது றைகளுந்தோன்றவருதல். செல்லச்செல்ல என்றது - சென்று தேய்ந்திறுதலென் னுங் குற்றந் தங்காது முடிவுகாறும் ஒருதன்மைத்தாயிருத்தல். ஆழ்ந்த என்றது- நோக்குந்தோறும் நுண்ணியபொருள் தோன்றுதல். "நவிறொறுநூனயம்போ லும்" என்றதிருக்குறளால் உணர்க. நுண்ணியபொருளென்றது-அவ்வகத்துறைப் பொருள்களும் புறத்துறைப்பொருள்களுமாம். தெளிய என்றது - இவ்வாராய்ச் சிகளால் ஐயந்திரிவு விபரீதம் ஒழிதல். அறமுதலிய நான்குபொருளென்றது-இவ் வாறுணர்ந்தோர் பெறுவது அறமுதலிய நான்குபொருள்களுமாம். உவமையும் பொருளும் ஒற்றுமையுணமையால் பொருள்களின்றொழில்களை உவமைக்குங்கொ ள்க. முறைப்படக் கல்லாரியற்றியகவி - ஏனையிலக்கணமுமின்றிப் பொருளிலக்க ணமும் சிதைந்து அறமுதலிய பயன்கொள்ளக் கிடக்காமையால் கல்லார்கவி போல் கலங்கி என்றார். பயன் நீர். அதனாலாகியவிளைவு. (உஉ)

வண்டோதைமாறுமலர்வேணியின்வந்தநீத்தங்
கண்டோதநஞ்சுண்டருள்கண்ணுதன்மூர்த்திபேழ்வாய்
விண்டோதணியாதென்விடாயெனவெம்பிவீழ்ந்த
குண்டோதரனைவிடுத்தானக்குடிஞைஞாங்கர்.

(இ-ள்.) வண்டு ஓதை மாறு - வண்டுகள் (தேனுண்டு) இசைபாடுதலொழி யாத, மலர் வேணியின் வந்த நீத்தம் - கொன்றைமலர்மாலையையணிந்த சடையி னின்றுவந்த வெள்ளத்தை, ஓதம் நஞ்சு உண்டருள் கண்ணுதல் மூர்த்தி கண்டு- கடலிற்றோன்றிய விடமுண்டருளிய சிவபெருமானார் நோக்கி, பேழ்வாய் விண்டு என்விடாய் ஓ தணியாது என வெம்பிவீழ்ந்த குண்டோதரனை - பிளந்தவாயைத்தி றந்து என்தாகவிடாய் ஐயகோதணியாதென்று வெதும்பிக் கீழ்விழுந்த குண்டோ தரனை, அ குடிஞை ஞாங்கர் விடுத்தான்-அந்நதியின்பக்கலில் ஏவியருளினார்.

குறையிரப்போர் குறை கொடிதாயினும் அதனைநோக்காது அன்றே யொழி ப்பவன் என்பார் நஞ்சுண்டருள் கண்ணுதல் என்றார். (உ௩)

அடுத்தானதியின்னிடைபுக்கிருந்தாற்றலோடு
மெடுத்தான்குறுங்கையிரண்டுங்கரையேறநீட்டித்
தடுத்தான்மலைபோனிமிர்தண்புனல்வாயங்காந்து
மடுத்தான்விடாயுங்கடலுண்ணுமழையுநாண.

(இ-ள்.) அடுத்தான் நதியின் இடைபுக்கிருந்து - அடுத்து அந்நதியினிடத்து ப்போயிருந்து, குறுங்கை இரண்டும் ஆற்றலோடும் எடுத்தான் - (தனது) சிறியகை களிரண்டையும் வன்மையோடெடுத்து, கரை ஏற நீட்டி தடுத்தான்-(அவ்விரண்டு கைகளையும்) இரண்டு கரைகளிலும் ஏறநீட்டி (அணைபோலத்) தடுத்து, மலைபோல் நிமிர் தண்புனல் - மலைபோலநிமிர்ந்த தண்ணியநீர்ப்பெருக்கை, விடாயும் கடல் உண்ணும் மழையும் நாண - தாகவிடாயும் கடல் குழிபட நீருண்ணும் மேகமும் நாண, வாய் அங்காந்து மடுத்தான் - வாயைத்திறந்துபருகினான்.

அடுத்தான், எடுத்தான், தடுத்தான் என்னுமுற்றுகள் எச்சங்களாய்நின்றன.

## அன்னக்குழியும்வையையுமழைத்தபடலம்.

தீர்த்தன்சடைநின்றிழிதீர்த்தமருந்திவாக்குக்
கூர்த்தின்புகொண்டுகுழகன்றிருமுன்னரெய்திப்
பார்த்தன்பணிந்தபதமுன்பணிந்தாடிப்பாடி
யார்த்தன்புருவாய்த்துதித்தானளவாதகீதம்.

(இ-ள்.) தீர்த்தன் சடைநின்று இழிதீர்த்தம் அருந்தி - சிவபெருமானுடைய சடையினின்றும் வந்ததீர்த்தத்தைப்பருகி, வாக்கு கூர்ந்து இன்பு கொண்டு-வாய்ச் சொற்கள் தடுமாறுதல் நிரம்ப மகிழ்கூர்ந்து, குழகன் திருமுன்னர் எய்தி-அப்பேரழகுடைய சிவபெருமான் திருமுன்னரடைந்து, பார்த்தன் பணிந்த பதம் முன்பணிந்து - அருச்சுனன்பணிந்த திருவடிகளைமுன்னேவணங்கி, ஆடி அளவாத கீதம் பாடி - ஆனந்தக்கூத்தாடி அளவறுத்தற்கரிய கீதங்கள்பாடி, ஆர்ந்த அன்புருவாய் துதித்தான் - நிறைந்த அன்பின் வடிவமாய் (நின்று) துதித்தான்.

பார்த்தன் - பிரதையின் புத்திரன் பார்த்தன். இது தத்திதாந்தபதம். கண்ணமூர்த்தியினேவலால் பாசுபதாத்திரம்பெற, அருச்சுனன் தவஞ்செய்த பெரும்பேற்றால் வேடுருவாய்வந்த சிவபெருமான் உண்மைத்திருவுருவத்தை வில்லடியால் பல்லுயிரும் அறியப் புலப்படுத்திவணங்கினனாதலால - பார்த்தன் பணிந்தபதம் என்றார். வில்லடியால் புலப்படுத்தினனென்றது.

"விண்ணினுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணினுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கண்முதலோர்களதலக்
கண்ணினுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகீபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ."

"வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டனவொராம்
பூதமடியுண்டனவிராழிகைமுதற்புகல்செய்பொழுதொடுசலிப்பில்பொருளின்
பேதமடியுண்டனபிறபபிலியிறபபிலிபிறங்கலரசன்றன்மகளரா
நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கையடியுண்டபொழுதே."

எனப்பாரதம் அருச்சுனன் றவநிலைச்சருக்கத்தில்வருஞ் செயயுள்களாலுணர்க.

கீதத்திலடங்கியபொருள்கள்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

என ஆலாஸ்யமகத்துவத்தில் வரும் அஷ்டகத்திற்காண்க.

கூர்த்து, ஆர்த்தவலித்தல் விகாரம். அகரவீறு தொகுத்தல். கூர்த்து செய்வெனெச்சத்திரிபு. (உ௫)

*பாட்டின்பொருளானவன்பாரிடவீரன்பாடல்*
*கேட்டின்பமெய்திக்கணங்கட்குக்கிழமைநல்கி*
*மோட்டின்புனன்மண்முறைசெய்திருந்தானளகக்*
*காட்டின்புறம்போய்மடங்குங்கயற்கண்ணியோடும்.*

(இ-ள்.) பாட்டின்பொருளானவன்-(குண்டோதரன் துதித்த) பாட்டின்பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுள், பாரிட வீரன் பாடல் கேட்டு இன்பம் எய்தி-பூதப்படை வீரனாகிய குண்டோதரனுடைய பாடலைக்கேட்டு மகிழ்கூர்ந்து, கணங்கட்கு கிழமைநல்கி-பூதகணங்களுக்குத் தலைவனாகும் உரிமைதந்தருளி, அளகம் காட்டின் புறம்போய் மடங்கும் கயல் கண்ணியோடும்-கூந்தலாகிய காட்டின்புறஞ் சென்று மீளுங்கயல்போன்ற கண்களையுடைய தடாதகைப்பிராட்டியாரோடும், மோட்டின் புனல் மண்முறைசெய்து இருந்தான்-நிறைந்திருந்தலையுடைய நீர் மயமாகிய கடல் சூழ்ந்த நிலவுலகை முறைசெய்து கோலோச்சி யிருந்தருளினார்.

சொல் - சத்திவடிவும் பொருள்வடிவுந்தானுமாதலின் பாட்டின் பொருளானவன் எனவும், மனுநூல்வழிச் செங்கோலோச்ச வேண்டுதலின் முறைசெய்தெனவுங் கூறினார். இன்பமெய்தி என்றது -

ஸர்வம்ஸௌந்த்ரஸம்தோஷ்ஸஹஸ்தாஸஸ்தநாயகஃ।
ஸ்ரீஸ்ஹம்ஜீவஷாயஸ்ரீஸஹ்வாணாஜ்யொ॥

எனவரும் ஆலாஸ்யமகத்துவத்திறகாணக. மோடு உயர்ச்சி (உசு)

அறுசீரடியாசிரியவிருத்தம்

*தீர்த்தனிதழிச்சடைநின்றுமிழிந்துவரலாற்சிவகங்கை*
*தீர்த்தனுருவந்தெளிவோர்க்குஞானந்தரலாற்சிவஞான*
*தீர்த்தங்காலிற்கடுகிவருஞ்செய்தியால்வேகவதி*
*தீர்த்தங்கிருதமாலையெனவையைநாமஞ்செப்புவரால்.*

(இ-ள்.) தீர்த்தன் இதழிச்சடைநின்றும் இழிந்துவரலால் சிவகங்கை-சிவபெருமானுடைய கொன்றைமாலையையணிந்த சடையினின்றும் இறங்கிவருதலால் சிவகங்கை எனவும், தீர்த்தன் உருவம் தெளிவோர்க்கு ஞானம் தரலால் சிவஞான தீர்த்தம் என - அச்சிவபெருமானுடைய திருவுருவத்தைத் தெளிந்து உணர்வோர்க்கு ஞானந்தருலால் சிவஞானதீர்த்தமெனவும், காலில் கடுகிவருசெய்தியால் வேகவதி தீர்த்தம் என - சண்டமாருதம்போல விரைந்துவரும் செய்தியால் வேகவதிதீர்த்தம் எனவும், கிருதமாலை என - கிருதமாலை எனவும், வையைநாமம் செப்புவர் - வையைக்குத் திருநாமங் கூறுவர். (உஎ)

அன்னக்குழியும் வையையுமழைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்ப்பட்ட திருவிருத்தம் - அஎச.

எழுகடலழைத்ததிருவிளையாடல்.



ஒன்பதாவது

# எழுகடலழைத்தபடலம்.

கொச்சகக்கலிப்பா

முடங்கன்மதிமுடிமறைத்தமுடித்தென்னன்குறட்கன்னக்
கிடங்கரொடுநதியழைத்தகிளர்கருணைத்திறனிதுமேன்
மடங்கல்வலிகவர்ந்தான்பொன்மாலைபடிந்தாடவெழு
தடங்கடலுமொருங்கழைத்ததன்மைதனைச்சாற்றுவாம்.

(இ-ள்.) முடங்கல் மதி முடி மறைத்த முடி தென்னன் - வளைந்தபிறையை யணிந்த சடாமுடியைமறைத்த கிரீடத்தையணிந்த சவுந்தரபாண்டியர், குறட்கு - குண்டோதரனுக்கு, அன்னம் கிடங்கர் ஒடு நதி அழைத்த கிளர் கருணை திறன் இது - அன்னக்குழியோடு வையைநதியையும் அழைத்தருளிய விளங்கும் திருவருளின்வரலாறு இத்திருவிளையாடலாம், மேல்-இனி, மடங்கல் வலி கவர்ந்தான் - நரசிம்மத்தின் வன்மையைக் கொள்ளைகொண்ட அப்பெருமானார், பொன் மாலை படிந்து ஆட - காஞ்சனமாலையார் திளைத்து நீராட, எழு தடம் கடலும் ஒருங்கு அழைத்த தன்மைதனை சாற்றுவாம் - பெரிய எழுகடலையும் ஒருசேர அழைத்த திருவிளையாடலைச் சொல்லுவாம்.

மடங்கல் வலிகவர்ந்தான் என்பதற்கு - யமனது வன்மையைத் தனது திருவடிப்பரிசத்தால் கவர்ந்த பெருமானாரது, எனப் பொருள்கொள்ளுதலு மொன்று. திருமால் நரசிங்கவடிவமாய் இரணியன் வலி கவர்ந்தகாலையில் செருக்குற்றிருக்க வீரபத்திரக்கடவுள் சரபவடிவாய்ச்சென்று செகுத்தாரென்பது புராணவரலாறு. கிடங்கு - கிடங்கர் இறுதிநிலைப்போலி - முடங்கலென்றுந் தொழிற்பெயர் பெயரெச்சப்பொருள்மேனின்றது. (௧)

ஓதவரும்பொருள்வழுதியுருவாகியுலகமெலாஞ்
சீதளவெண்குடைநிழற்றியறச்செங்கோல்செலுத்துநாள்
போதவரும்பொருளுணர்ந்தவிருடிகளும்புனிதமுனி
மாதவரும்வரன்முறையாற்சந்தித்துவருகின்றார்.

(இ-ள்.) ஓத அரும் பொருள் - சொல்லுதற்கரிய மெய்ப்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள், வழுதி உருவாகி - பாண்டியர்திருக்கோலங்கொண்டு, எல்லாம் உலகம் சீதளம் வெண் குடை நிழற்றி - எல்லாவுலகங்களுக்குந் தண்ணிய வெள்ளை வட்டக்குடையால் நிழல்செய்து, அறம் செங் கோல் செலுத்து நாள் - தருமநூல்வழியே செங்கோல்நடத்தும்நாளில், போதம் அரும் பொருள் உணர்ந்த இருடிகளும் - ஞானநூலின் அரியபொருளையுணர்ந்த சத்த இருடிகளும், புனிதம் முனி மாதவரும் - களங்கமில்லாத முனிவராகிய (ஏனைய) பெரிய தபோதனர்களும, வரன் முறையால் சந்தித்து வருகின்றார் - வரன்முறைப்படி தெரிசித்து வருகின்றவர்கள் ஆயினார்கள்.

சத்தவிருடிகளாவார். அகத்தியன், ஆங்கிரசன், கவுதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன். முனிவர் ஈறுதொக்குநின்றது. அறம் போதம் தான்மேனிற்றலால், தானியாகுபெயர்கள். நிழற்றி பெயரடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் - நிழற்று - பகுதி. (௨)

வேதமுனிகோதமனுந்தலைப்பட்டுமீள்வானோர்
போதளவில்கற்புடையபொன்மாலைமனைபுகுந்தான்
மாதவளும்வரவேற்றுமுகமனுரைவழங்கிப்பொன்
னாதனமிட்டஞ்சலிசெய்தரியதவத்திறங்கேட்பாள்.

(இ-ள்.) வேத முனி கோதமனும் தலைப்பட்டு மீள்வான் - வேதங்களை யுணர்ந்த முனிவராகிய கவுதமரும் சந்தித்து மீளுகின்றவர், ஓர் போது - ஓர்பகல், அளவு இல் கற்பு உடைய பொன்மாலை மனை புகுந்தான் - அளத்தற்கரிய கற்பினையுடைய காஞ்சனமாலையார் மனையுள் சென்றார், மாது அவளும் வரவு ஏற்று - அக் காஞ்சனமாலையாரும் அவர்வருகையை எதிர்ந்து, முகமன் உரை வழங்கி - உபசாரவார்த்தைகள் கூறி, பொன் ஆதனம் இட்டு அஞ்சலி செய்து - பொன்னாலாகிய ஆசனந்தந்து அஞ்சலித்து, அரிய தவத் திறம் கேட்பாள் - செய்தற்கரியதவத்தின் பாகுபாடுகளை வினவுகின்றார்.

கோதமனிறுதியில்நின்ற உம்மை - உயர்வுசிறப்புப்பொருட்டு. (௩)

கள்ளவினைப்பொறிகடந்துகரைகடந்தமறைச்சென்னி
யுள்ளபொருள்பரசிவமென்றுணர்ந்தபெருந்தகையடிகே
டள்ளரியபவமகற்றுந்தவமருள்செய்கெனக்கருணை
வெள்ளமெனமுகமலர்ந்துமுனிவேந்தன்விளம்புமால்.

(இ-ள்.) கள்ளம் வினை பொறி கடந்து-வஞ்சச் செயல்களையுடைய ஐம்பொறிகளைக் கடந்து, கரை கடந்த மறை சென்னி - அளவுகடந்த வேதத்தின் முடிவில், உள்ள பொருள் பர சிவம் ஏ என்று-நிலைபெற்ற உண்மைப்பொருள் பரசிவமே என்று, உணர்ந்த பெருந்தகை அடிகேள்-(உள்ளபடி) அறிந்த பெருந்தன்மையையுடைய அடிகளே, தள் அரிய பவம் அகற்றும் தவம் அருள் செய்க என - ஒழிதலில்லாத சனனத்தொடர்ச்சியை ஒழிக்கும் ஓர்தவநிலையைக் கூறுக என்று வினவ, கருணை வெள்ளம் என முக மலர்ந்து - கிருபை உவட்டெடுத்தாற்போலக் கருணைசுரந்து முகமலர்ச்சிகொண்டு, முனி வேந்தன் விளம்பும் - முனிவர்களுக் கரசராகிய கவுதமமுனிவர் சொல்லுகின்றார்.

வஞ்சகச்செயல்களாவன - தத்தமக்குரிய புலன்களில் சென்றுமயங்குதல். இந்திரியமே தெய்வமெனக் கூறுவோர் கூற்றைக்கடந்துநின்றவன் என்பார் - பொறிகடந்து எனவும், உபநிடதத்தின் மெய்ப்பொருளாயுள்ளான் சிவபெருமானேஎன்பார் - மறைச்சென்னியுள்ள பொருள் பரசிவமே எனவுங் கூறினார். தேற்றேகாரந் தொகுத்தல். (௪)

தவவலியாலுலகீன்றதடாதகைக்குத்தாயானாய்
சிவபெருமான்மருகனெனுஞ்சீர்பெற்றாய்திறன்மலயத்
துவசனருங்கற்புடையாய்நீயறியாத்தொல்விரத
மவனியிடத்தெவரறிவாரானாலுமியம்பக்கேள்.

(இ-ள்.) திறல் மலயத்துவசன் அரும் கற்புடையாய் - வெற்றிவாய்ந்த மலயத்துவசபாண்டியனுடைய இல்லறக்கிழமைபூண்ட பெறுதற்கரிய கற்பினையுடைய காஞ்சனமாலையாரே, தவ வலியால்-(முன்னர் நீர் இயற்றிய) தவத்தின் வன்மையால், உலகு ஈன்ற தடாதகைக்கு தாயானாய் - எல்லாவுலகங்களையும் ஈன்றருளிய உல

யோதாவாகிய தடாதகைப்பிராட்டியாருக்குத் தாயானீர், சிவபெருமான் மருகன் எனும் சீர் பெற்றாய் - (தனது ஆணைவழி நடக்கும் ஆன்மகோடிகளுக்கு நன்மையைத் தரும்) சிவபெருமானையே நல்ல மருகனென்றழைக்கும் பெருஞ்செல்வத்தைப்பெற்றீர், நீ அறியாத தொல் விரதம் அவனி இடத்து எவர் அறிவார் -(ஆதலால்) நீர்செய்து கழித்தறியாத தொன்றுதொட்டுள்ள விரதங்களை உலகின்கண் (எவபோலியர்) எவர் அறிந்திருக்கின்றார்கள், ஆனாலும் இயம்ப கேள் - ஆயினும் நீர் வினவினமையால் யான் சொல்லச் சிறிதுகேளும். (ரு)

மானதமேவாசிகமேகாயிகமேயெனவகுத்த
வீனமில்சீர்த்தவமூன்றாமிவற்றின்மானதந்தரும
தானமிசைமதிவைத்தறயவுபொறைமெய்சிவனை
மோனமுறத்தியானித்தலைந்தடக்கன்முதலனந்தம்.

(இ-ள்.) மானதமே என வாசிகமே என காயிகமே என - மானதமெனவும் வாசிகமெனவும் காயிகமெனவும், வகுத்த ஈனம இல் சீர் தவம் மூன்றாம் (நூல்களிற்) பகுத்துக்கூறிய குற்றமில்லாத சிறந்ததவங்கள் மூன்றுவகைபபடும், இவற்றில் மானதம்-இம்மூன்றனுள் மானதங்களானவை, தருமம் மிசை தானம் மிசை மதி வைத்தல்-தருமத்தின்மேலுந் தானத்தின்மேலும் அறிவைச் செலுத்துதலும், தயவு பொறை மெய் (எல்லாவான்மகோடிகளிடத்திலும்) கருணை வைத்தலும் (தமக்குப் பிறர்செய்ததீங்கைப்) பொறுத்தலும் (பிறவுயிர்களுக்குத்) தீங்குதராதசொற்களைக் கூறுதலும், மோனம் உற சிவனை தியானித்தல் - மௌனநிலையில் பொருந்தநின்று சிவபெருமானைச் சிந்தித்தலும், ஐந்து அடக்கல் முதல் அனந்தம் - பஞ்சேந்திரியங்களையடக்குதலும் ஆகிய இவைமுதலிய பலவாம.

பிரிநிலையேகாரந்தந்து எல்லாத்தவங்களும் திரிகரணங்களின் வழிப்பட்டனவாய் நிற்றலால் மானதம் வாசிகம காயிகம என எடுத்துக்கொணடார். மானதம் மனத்தாற் செய்யப்படும் தவம். இது தத்திதாந்தபதம. தருமம் - முப்பத்திரண்டறங்களாம். தானம் - சற்பாத்திரங்களாம. (சு)

வாசிகமைந்தெழுத்தோதன்மனுப்பஞ்சசாந்திமறை
பேசுசதவுருத்திரந்தோத்திரமுரைத்தலபெருந்தருமங்
காசகலவெடுத்தோதன்முதலனந்தங்காயிகங்க
ளீசனருச்சனைகோயில்வலஞ்செய்கையெதிர்வணங்கல்.

(இ-ள.) வாசிகம் ஐந்து எழுத்து ஓதல் - வாசிகங்களாவன ஸ்ரீபஞ்சாக்கரங்களை உச்சரித்தலும, மநு பஞ்ச சாந்தி - பஞ்சபிரமமந்திரங்களையும உபநிடதபாகங்களையும் ஓதுதலும், மறை பேசு சத வுருத்திரம உரைத்தல் - வேதங்கள் எடுத்துக்கூறும சதவுருத்திரமந்திரங்களை எடுத்து உச்சரித்தலும, தோத்திரம் உரைத்தல் - பத்தியுருபமாகவுள்ள தோத்திரங்களை எடுத்துக்கூறலும, காசு அகல பெரும் தருமம் எடுத்து ஓதல் முதல அனந்தம் - குற்றமகலப பெரியதருமநூல்களை எடுத்துக் கூறுதலுமாகிய இவைமுதலியபலவாம, காயிகங்கள் - காயிகங்களானவை, ஈசன் அருச்சனை - சிவபெருமானை யர்ச்சித்தலும், கோயில் வலம் செய்கை - அச்சிவபெருமான் எழுந்தருளியதிருக்கோயிலைப பிரதக்ஷிணஞ்செய்தலும், எதிர் வணங்கல் - சந்நிதியிற்சென்று வணங்கலும.

ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரித்தலாவது - அருளை முன்னாகக்கொண்டு திருவைந்தெழுத்தை விதிப்படி மாறிச் சூக்குமமாயோதல். பஞ்சசாந்தியாவது - சிவ

பெருமானே பொருளெனக்கூறும் உபநிடதபாகங்களை ஐந்துகாண்டமாக முறைப் படுத்தி யோதுதல். மறைபேசுசதவுருவுருத்திரமுரைத்தல் ஆவது - வேதங்கள் பிர மன்முதல் சதாசிவமீருக முறையே யேற்றங்கூறுவதால் அவற்றுள் நடுக்கண்ட மான சதவுருத்திரமனுக்களை யோகநாமத்தால் உருத்திரகணங்களைச் சங்காரக்கிரம த்தின்வைத்து அதிதசிவபரியந்தம் வரைப்படுத்திக் கூறுதல். எதிர்வணங்கல் - என் றதற்குச் சிவனடியாரை எதிர்கொண்டு வணங்கல் எனப் பொருள்கொள்ளினும் அ மையும். வாசிகம் - வாக்காற்செய்யப்படுவது. (எ)

திருத்தனுறைபதிபலபோய்ப்பணிதல்பணிநிறைவேற்ற
றிருத்தனமுடிநதியாதிதீர்த்தயாத்திரைபோய்மெய்
வருத்தமுறவாடலிவைமுதற்பலவவ்வகைமூன்றிற்
பொருத்தமுறுகாயிகங்கள்சிறந்தனவிப்புண்ணியத்துள்

(இ-ள்.) திருத்தன் உறை பல பதி போய் பணிதல் - சிவபெருமான் எழுந்த ருளிய பலதிருப்பதிகளிலுஞ் சென்று வணங்கலும், பணி நிறை வேற்றல் - சிவபெ ருமான் திருப்பணிகளை முடித்தலும், மெய் வருத்தம் உற திருத்தன் முடி நதி ஆதி தீர்த்தயாத்திரைபோய் ஆடல்-(தமது) சரீரம் இளைக்க அச்சிவபெருமான் சடாமுடி யிலணிந்தருளிய கங்கைமுதலிய தீர்த்தயாத்திரைசென்று நீராடுதலும்ஆகிய, இவை முதல் பல-இவைமுதலாகப்பலவாம, அவ்வகை மூன்றில்-(கூறிய) அமமூன்றுவகை யுள், பொருத்தம உறு காயிகங்கள் - தக்க காயிகங்களாவன, இப்புண்ணியததுள் சி றந்தன - (மானதவாசிகமாகிய) இநதப்புண்ணியங்களுள் மேமபட்டனவாம். (அ)

திருத்தயாத்திரையதிகமவற்றதிகஞ்சிவனுருவாந்
திருத்தமாயகஙகைமுதறிருநதிகடனித்தனிபோய்த்
திருத்தமாடுவதரிததிருநதிகளவைவந்து
திருத்தமாய்நிறைதலினுலவறறதிகந்திரைமுந்நீர்.

(இ-ள்.) திருத்த யாத்திரை அதிகம் - (ஏனைய) தீர்த்தங்களில் நீராடுதற்கு யாத்திரைசெய்தல் அதிகப் பேறும், அவறறு அதிகம் - அவ்வேனைய தீர்த்தங்களில் மேம்பட்ட, சிவன உருவாம் திருததமாம கஙகை முதல் திரு நதிகள் - சிவபெரு மான் திருவுருவமாகிய தீரததமாயுள்ள கங்கைமுதலிய தெய்வத்தன்மையையு டைய நதிகளுக்கு, தனி தனி போய் திருத்தம ஆடுவது அரிது - தனித்தனி சென்று நீராடுவது மேம்பட்டது, அத திரு நதிகள் அவை வநது திருத்தமாய் நிறைதலினு ல் - அநதத தெய்வததன்மையையுடைய நதிகள வந்து முட்டின்றி நிறைதலினுல், திரை முந் நீர் அவறறு அதிகம - அலையையுடைய கடலானது அந்நதிகளிலு மேம்ப ட்டது.

கங்கைமுதலிய நதிகளாவன - கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவே ரி, குமரி, கோதாவரி. இவறறோடு - சிந்து, தாமிரபரணி, துஙகபத்திரி, கிருட்டிணி கூட்டி ஏகாதசநதி எனவுங் கூறுவர். தீர்த்தம திருத்தம் வடசொற்றிரிபு. சிவபெரு மான் திருவுருவமென்றது - காசியிற்கங்கைவடிவமாகநின்று மரிக்கும் உயிர்களுக்கு முத்தியருளுதலால். (க)

என்றுமுனிவிளம்பக்கேட்டிருந்தகாஞ்சனமாலை
துன்றுதிரைக்கடலாடத்துணிவுடையவிரும்பினளாய்த்

தன்றிருமாமகட்குரைத்தாள்சிறிதுள்ளத்தளர்வெய்திச்
சென்றிறைவற்குரைப்பலெனச்செழியர்தவக்கொழுந்தனையாள்.

(இ-ள்.) என்று முனி விளம்பக் கேட்டிருந்த காஞ்சனமாலை - என்றகவுத்தமுனிவர் கூறக் கேட்டிருந்த காஞ்சனமாலையார், துன்று திரை கடல் ஆட அணிவுடைய விருப்பினளாய் - நெருங்கிய அலையையுடைய கடலில் நீராடத் துணிந்த விருப்பையுடையவராகி, தன் திரு மா மகட்கு உரைத்தாள் - தமது பெறுதற்கரிய செல்வமாயுள்ள பெரிய புத்திரியாருக்குக் கூறினார், உள்ளம் சிறிது தளர்வு எய்தி - (தமது) திருவுள்ளத்திற் சற்றுத் தளர்வுகூர்ந்து, இறைவற்கு சென்று உரைப்பல் என - (எனது) தலைவர்பாற் சென்று கூறுவேனென்று, செழியர் தவக் கொழுந்து அனையாள் - பாண்டியர்கள்செய்த தவத்திரட்சி ஓர் கொழுந்துவிட்டங்குரித்தாற் போலுமுள்ள பிராட்டியார்.

சிவபெருமானைத் தமக்கு மருகனாகப்பெற்றமையால் 'எப்பொருளும் தமக்கு எளியதென்னுங்கருத்தினராதலின் துணிவுடையவிருப்பினளாய் எனவும், சிவபெருமான் றிருவுள்ளக்கிடை எவ்வாறோவெனக் கருதினவராதலின் - உள்ளந்தளர்வெய்தி யிறைவற்குரைப்பல் எனவுங்கூறினார். உரைப்பல் - தன்மையொருமைவினைமுற்று. உரை - பகுதி. பகரமெய் சந்தி. பகரமெய் எதிர்காலவிடைநிலை. அல்-தன்மையொருமைவிகுதி. கேட்டிருந்த கேட்ட என்னும் பொருள்மேல் நிற்றலால் இருந்து அசைநிலையிடைச்சொல் (௧௦)

தன்றனையுடையபெருந்தகைவேந்தர்பெருமான்முன்
சென்றன்னமெனநின்றுசெப்புவாள்குறள்வீரற்
கன்றன்னக்குழியினொடுமாறழைத்தவருட்கடலே
யின்றன்னைகடலாடவேண்டினளென்றிரந்தாள்.

(இ-ள்) தன் தன்னை உடைய பெருந் தகை வேந்தர் பெருமான் முன் சென்று - தம்மால் தம்மைக்கிழத்தியராகவுடைய எல்லையில்லாத மாட்சிமைபொருந்திய அரசர்களுக்கு இறைவராகிய சவுந்தரபாண்டியர் முன்சென்று, அன்னம் என நின்று செப்புவாள் - அன்னம்போல நின்று கூறுகின்றார், குறள் வீரற்கு அன்று அன்னக்குழியினொடும் ஆறும் அழைத்த அருள் கடலே - குண்டோதரன்பொருட்டு (அருள்கூர்ந்து) அந்நாளில் அன்னக்குழியோடு வையைநதியையும் அழைத்தருளிய கிருபாசமுத்திரமே, இன்று அன்னை கடல் ஆட வேண்டினள்-இன்று என்தாய் கடல் நீராட விரும்பினள், என்று இரந்தாள் - என்று குறையிரந்தார்.

தாம்-பாண்டியனுக்கும் காஞ்சனமாலையாருக்கும் அவதரித்ததும், தம்மைத் திருமணமுடித்ததும், அவனிச்சையாதலால் தன் தன்னையுடைய என்றதற்கு-தம்மால் தம்மைக்கிழத்தியராகவுடைய எனப்பொருள்கூறினும். குழியினொடும் என்பதனிறுதியிலுள்ள உம்மையை ஆறு என்பதனோடுகூட்டுக. (௧௧)

தேவிதிருமொழிகேட்டுத்தென்னவராயநிலம்புரக்குங்
காவிதிகழ்மணிகண்டர்கடலொன்றோவெழுகடலுங்
கூவிவரவழைத்துமெனவுன்னினார்குணபாலோர்
வாவியிடையெழுவேறுவண்ணமொடுமவருவனவால்.

(இ-ள்.) தேவி திருமொழிகேட்டு - (தமது) தேவியார்திருமொழியைக்கேட்டு (மனங்குழைந்து) தென்னவராய் நிலம் புரக்கும் காவி திகழ் மணிகண்டர்

கடல் ஒன்றோ - பாண்டியர்திருக்கோலங்கொண்டு நிலவுலகைப் பாதுகாக்கும் நீலோற்பலம்போல விளங்கும் ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானார் (வேண்டுவது) ஒருகடல்தானோ, எழுகடலும் கூவி வரவழைத்தும் என உன்னினார் - எழுகடலையுங் கூவி வருவிப்போமென்று (தமது திருவுளத்தில்) கருதினார், குணபால் ஓர்வாவி இடை - கீழ்பாலுள்ள பொற்றாமரையிடத்து, வேறு எழு வண்ண மொடும் வருவன - வெவ்வேறுவகைப்பட்ட ஏழுநிறங்களோடும் ஏழுகடல்களும் வராநின்றன.

எழுகடல்களுள்—நாவலந்தீவில் உவர்க்கடலும், சாகத்தீவில் பாற்கடலும், குசைத்தீவில் தயிர்க்கடலும், கிரவுஞ்சதீவில் நெய்க்கடலும், சான்மலித்தீவில் கருப்பஞ்சாற்றுக்கடலும், கோமேதத்தீவில் மதுக்கடலும், புஷ்கரணிதீவில் நல்லதண்ணீர்க்கடலும் உள்ளன. இவை தம்மளவிற் சுருங்கிவிரைந்துவந்தமையின் முடிவிலாற்றலுடையனென்பார் உன்னினாரெனவும், குணபாலோர்வாவியிடைவருவன எனவுங்கூறினார். கடல்கள் ஏழாதலின்-ஏழுவண்ணம் என்றார். (௧௨)

துண்டமதித்திரளனையசுரிவளைவாயவிடவுதைந்து
வெண்டவளநுரைததும்பசுறுவேறுமிசைக்கொட்பத்
தண்டரளமணித்தொகுதியெடுத்தெறியுந்தரங்கநிரை
யண்டநெடுமுகடுரிஞ்சவார்த்தெழுந்தகடலேழும்.

(இ-ள்.) துண்டம் மதி திரள அனைய சுரிவளை உதைந்து வாய்விட - பிளவுபட்ட அர்த்தசந்திரக்கூட்டத்தையொத்த சுரிந்தமுகத்தையுடைய சங்குகள்முற்படச்சென்று சத்திக்கவும், வெள் தவளம நுரை ததும்ப - வெள்ளியநுரைகள்ததும்பவும், ஏறு சுறு மிசை கொட்ப - ஆண்சுறுக்கள மேலேசுழன்றுவரவும், தண் தரள மணி தொகுதி எடுத்து எறியும் - தண்ணியமுத்துக்கூட்டங்களை எடுத்துக்கொழிக்கும், தரங்கம் நிரை நெடு அண்டம முகடு உரிஞ்ச - அலைவரிசை நெடியவிண்ணுலகின்முகட்டை உரிஞ்சவும், ஏழு கடலும ஆர்த்து எழுந்த - ஏழுகடல்களும் ஒலித்து நிலைபெயர்ந்து எழுந்துவந்தன.

வெண்தவளம் - ஒருபொருட்பன்மொழி. மணித்தொகுதி - இருபெயரொட்டுப்பண்புத்தொகை. கொட்ப-கொடுமை என்னும் பண்படியாகப்பிறந்த வினையெச்சம். (௧௩)

காணுமாநகர்பணிப்பக்கலிமுடிவினயன்படைப்புக்
கோணுமாறெழுந்ததெனக்கொதித்தெழுந்தகடலரவம்
பூணுநாயகனகிலபுவனமெலாங்கடந்ததிரு
வாணையாலவனடிசென்றடைந்தார்போலடங்கியதால்.

(இ-ள்.) காணும் மா நகர் பணிப்ப-(வருகையைக்)கண்ட பெரியமதுரைநகரிலுள்ளோர் வருந்த, கலிமுடிவின் அயன் படைப்பு கோணும் ஆறு எழுந்தது என - கலியுகமுடிவில் பிரமனது சிருட்டிப் பொருள்கள் சிதையும்படி (நிலைபெயர்ந்து) எழுதல்போல, கொதித்து எழுந்த கடல் - பொங்கியெழுந்த (ஏழு) கடல்களும், அரவம் பூணு நாயகன்-சர்ப்பாபரணத்தைத்தரித்த சிவபெருமானுடைய, அகில புவனம் எல்லாம் கடந்த திரு ஆணையால் - வைகுந்தமுதலிய எல்லாவுலகங்களினுஞ் செல்லுஞ் சிறந்த ஆணையால், அவன் அடிசென்று அடைந்தார்போல் அடங்கியது - அச்சிவபெருமானுடைய திருவடிக்கீழ்ச்சென்று கலந்தவர்போலப் (பொற்றாமரைத் திருக்குளத்திற்சென்று கலந்து) ஒடுங்கின.

மலயத்துவசனையழைத்ததிருவிளையாடல்.







பனிப்ப நிகழ்காலவினையெச்சம். அது கொதித்தென்னும் வினையெச்சத்தின் முதனிலைகொண்டது. பனி பகுதி. பகரமெய் சந்தி. பகரமெய் விரித்தல்விகாரம். அ-விகுதி. (௪௪)

தன்வண்ணமெழுகடலின்றனிவண்ணமொடுகலந்து
பொன்வண்ணநறுமபொருட்டுப்பூமபொய்கைபொலிவெய்தி
மின்வண்ணசசடைதாழவெள்ளிமணிமன்றூடு
மன்வண்ணமெனவெட்டுவண்ணமொடும்வயங்கியதால்.

(இ-ள்.) பொன் வண்ணம் நறுமபொருட்டு பூம்பொய்கை - பொன்னிறம் வாய்ந்த நறுமணங்கமழும் பொருட்டையுடைய பொற்றாமரைப்பொய்கையானது, தன் வண்ணமொடு - தனது வெண்ணிறததோடு, எழுகடலின் தனிவண்ணம் கலந்து பொலிவு எய்தி - (தன்னிடததொடுங்கிய) எழுகடல்களின் ஒப்பற்ற நிறங்களைக்கலந்துவிளங்கி, மின்வண்ணம சடைதாழ - மின்போலும் நிறம்வாய்ந்த சடைகள் தாழ, மணி வெள்ளி மன்று ஆடும் மனவண்ணம் என - அழகியவெள்ளியம்பலத்துள திருநடனஞ்செயயும் சிவபெருமானது எட்டுவகைவண்ணங்கள்போல, எட்டு வண்ணமொடும வயங்கியது - எண்வகைநிறஙகளோடும் விளங்கியது.

சிவபெருமான்-அட்டமூர்த்தியாய் நிற்குங்கால், பிரிதிவிக்குரிய பொன்னிறமும, அப்புவிற்குரிய வெண்ணிறமும, தேயுவிற்குரிய செந்நிறமும், வாயுவிற்குரிய கருமைநிறமும, ஆகாயததிற்குரிய புகைநிறமும, சந்திரனுக்குரிய சுக்கிலநிறமும், சூரியனுக்குரிய ரக்தநிறமும, ஆதமாவிற்குரிய படிகநிறமும ;ஆகிய இந்நிறங்களை வாய்ந்த நிறறலின மன்வணணம எனறூா (௪௫)

எழுகடலழைததபடல முற்றிற்று.

ஆகபபாயிரம உள்படத் திருவிருததம - அஅசு.

---

பத்தாவது

# மலயத்துவசனை யழைத்தபடலம்.

---

கலிவிருததம.

எழுகடலழைததவாறியமபினுமினிச
செழுமதிமரபினேனசேணிழிநததன்
பழுதிலகறபிலலொடும்பரவைதோயந்தர
னழகியதிருவுருவடைநததோதுவாம.

(இ-ள.) எழுகடல் அழைதத ஆறு இயமபினும - எழுகடலையும் அழைத்த திருவிளையாடலைக்கூறினோம, இனி-இனிமேல, செழுமதி மரபினோன் சேண் இழிந்து - குறைவின்றிநிறைநத சநதிரகுலததிறறோனறிய மலயத்துவசபாண்டியன் விண்ணுலகினின்றும் இழிநது, தன பழுது இல் கறபு இல்லொடும் பரவைதோய்ந்து-தனது குறறமில்லாத கறபினையுடைய காஞ்சனமாலையாரோடும் கடலாடி, அரன் அழகிய திருவுருவு அடைநதது ஓதுவாம - சிவபெருமானது அழகியதிருவுருவத்தை யடைந்த திருவிளையாடலைச்சொல்லுவாம.

அரன்-தன்னையடைந்தோர் மலத்தொடக்கை வேரோடொழிப்பவன் "சேர்ந்தோர்மாயைவேர்முற்றுமரியுமாற்றுலரன்" என்பதனுலுணர்க. செழுமை-நிறைவு.

புரவலன்றடாதகைப்பூவையோடும்வந்
துரவுநீர்க்கடன்மருங்குடுத்தசந்தன
மரவமந்தாரமாவகுளம்பாடலம்
விரவுநந்தனத்தரியணையின்மேவினன்.

(இ-ள்.) புரவலன் பூவை தடாதகை யோடும் வந்து - சவுந்தரபாண்டியர் நாகணவாய்ப்பறவையின் இன்சொற்போலும் இன்சொல்லையுடைய தடாதகைப்பிராட்டியாரோடும் எழுந்தருளிவந்து, உரவு நீர் கடல் மருங்கு உடுத்த - (புடைபெயர்ந்துவந்த) பெரிய நீர்மயமாகிய எழுகடலின் பக்கத்திற் சூழ்ந்த, சந்தனம் மரவம் மந்தாரம் மா வகுளம் பாடலம் விரவு நந்தனத்து - சந்தனமரமுங் குங்குமமரமும் மந்தாரமரமும் மாமரமும் மகிழமரமும் பாதிரிமரமுங் கலந்து நெருங்கிய நந்தவனத்தில், அரி அணையில் மேவினன் - சிம்மாதனத்தில் வீற்றிருந்தார்.

நந்தவனம் என்பது - நந்தனம் என நின்றது. சந்தோஷத்தைத்தரு வனம் என்பது பொருள். (உ)

தாதவிழ்மல்லிகைமுல்லைசண்பகப்
போதுகொய்திளைஞருஞ்சேடிப்பொற்றொடி
மாதருங்கொடுத்திடவாங்கிமோந்துயிர்த்
தாதரமிரண்டறவமருமெல்லையில்.

(இ-ள்.) தாது அவிழ் மல்லிகை முல்லை சண்பகம் போது கொய்து - மகரந்தத்தோடு மலர்ந்த மல்லிகைமலரையும் முல்லைமலரையும் சண்பகமலரையும் கொய்து, இளைஞரும் பொன் தொடி சேடிமாதரும் கொடுத்திட - (ஏவல்வழிநிற்கும்) மங்கையரும் பொன்னலாகிய வளையலணிந்த தோழிப்பெண்களுங் கொடுக்க, வாங்கி மோந்து உயிர்த்து - (அம்மலர்களை) வாங்கி மோந்து சுவாசித்து, ஆதரம் இரண்டு அற அமரும் எல்லையில் - ஓர் விருப்போடும் எழுந்தருளியிருக்குங்காலத்தில்.

இருதலைப்புள்ளிற் கோருயிரேபோல வோருயிராயிருந்து, ஆவிற்கிரு கோடு தோன்றினற்போல ஒத்த அன்பினை உடையராயிருந்தலின ஆதரம இரண்டற எனக்கூறினர். இது திருச்சிற்றம்பலக் கோவையாருள் நசசினாக்கினி ப ருரையிற்கண்டது. (௩)

தன்னமர்காதலிதன்னைநோக்கியே
மன்னவனுன்பொருட்டேழுவாரியு
மிந்நகரழைத்தனமீண்டுப்போந்துநி
னன்னையையாடுவானழைத்தியாலென.

(இ-ள்.) மன்னவன் - சவுந்தரபாண்டியர், தன அமர் காதலி தன்னை நோக்கி - தம்மால் விரும்பப்பட்ட பிராட்டியாரை நோக்கியருளி, உன பொருட்டு ஏழு வாரியும் இந்நகர் அழைத்தனம் - உனதுபொருட்டாக ஏழுகடலையும் இந்நகரிலழைத்தோம், ஈண்டு போந்து நின் அன்னையை ஆடுவான் அழைத்தி என - இவ்விடத்தினின்றுஞ் சென்று உனது தாயை நீராட அழைப்பாயென்று திருவாய்மலர்ந்தருள.

காதலி - காதலையுடையவள். காதல் - பகுதி - இ - பெண்பால்விகுதி. அழைத்தி - முன்னிலை யொருமை எதிர்காலவினைமுற்று. அழை பகுதி. த் - சாரியை. தகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, இ - முன்னிலையொருமைவினைமுற்றுவிகுதி. (௪)

மடந்தையுமன்னையைக்கொணர்ந்துவாவிமா
டடைந்தனளாகமற்றவள்புராணநூற்
படர்ந்தகேள்வியர்தமைநோக்கிப்பௌவநீர்
குடைந்திடுமவிதியெவன்கூறுமென்னவே.

(இ-ள்.) மடந்தையும் அன்னையை கொணர்ந்து வாவி மாடு அடைந்தனள் ஆக - தடாதகைப்பிராட்டியாரும் (தமது) தாயாராகிய காஞ்சனமாலையாரை அழைத்துவந்து பொற்றாமரைத் தீர்த்தத்தின் பக்கத்து வந்தருள, அவள் - அக்காஞ்சனமாலையார், புராண நூல் படர்ந்த கேள்வியர் தமை நோக்கி - புராணமுதலிய வேதாகமநூல்களில் நுழைந்த கேள்வியை யுடைய முனிவர்களைப் பார்த்து, பௌவம் நீர் குடைந்திடும் விதி எவன் கூறும் என்ன - கடல் நீராடுதற்குரிய விதியாது சொல்லுங்களென்றுகூற.

கொணர்ந்து - இறந்தகால வினையெச்சம். கொணா - பகுதி - கொணாவென்னும்பகுதி ஈறுகுறுகி ரகரமெய்விரிந்து கொணர் என நின்றது. அடைந்தனளாக - அடைந்தனள் என்னும் வினைமுற்றோடு ஆகவென்னும் இடைச்சொல் புணர்ந்து வினையெச்சப்பொருள்தந்தது. தொல்காப்பியம், இடையியல். "ஆகவாகலென்பதென்னும - ஆவயின்மூன்றும் பிரிவிலசைநிலை" என்னுஞ் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதியவுரையிற்காண்க. நின்முகங்காணு மருந்தினேன். என்றதில்காணும் என்னும் பெயரெச்சம் காணுதல் என்னுந்தொழிற்பெயர்மேல் நின்றதுபோலக் குடைந்திடுமென்னும் பெயரெச்சம்-குடைந்திடுதலென்னுந்தொழிற்பெயர்ப் பொருண்மேல் நின்றது - குடை - பகுதி - ந் - சாரியை. நகரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி. இடு - பகுதிப்பொருள்விகுதி. அனைத்தும் ஓர்பகுதி. (௫)

கோதறுகற்பினாய்கொழுநன்கைத்தலங்
காதலன்கைத்தலமன்றிக்கன்றின்வா
லாதலிம்மூன்றிலொன்றங்கைபற்றியே
யோதநீராடுதன்மரபென்றோதினார்.

(இ-ள்.) கோது அறு கற்பினாய் - குற்றமற்ற கற்பினையுடையாய், கொழுநன் கைத்தலம் ஆதல் - (தனது) நாயகன்கைத்தலங்களையாவது, காதலன் கைத்தலம் ஆதல் - (தனது) புத்திரன் கைகளையாவது, அன்றி - அல்லாமல், கன்றின் வால் ஆதல் - கன்றின் வாலையாவது, இம் மூன்றில் ஒன்று - இம் மூன்றினுள் ஒன்றை, அங்கை பற்றியே ஓதம் நீர் ஆடுதல் மரபு என்று ஓதினார் - (தனது) அழகிய கைகளாற்பற்றிக் கடல்நீராடுதல் விதியென்றுகூறினார்.

கைத்தலம் வால் என்றமையால் - ஒன்றெனப் பொதுப்படக்கூறினார். ஆதலென்னும் இடைச்சொல் விகற்பப்பொருண்மேனின்றது. (௬)

மறையவர்வாய்மைபொன்மாலைகேட்டுமேற்
குறைவறத்தவஞ்செய்தகொடியபாவியெற்

இறைவனுஞ்சிறுவனுமில்லையேயினிப்
பெறுவதுகன்றலாற்பிறிதுண்டாகுமோ.

(இ-ள்.) மறையவர் வாய்மை பொன் மாலை கேட்டு - முனிவர்கள் உண்மை மொழியைக் காஞ்சனமாலையார் கேட்டு, மேல் குறைவு அற தவம் செயா கொடிய பாவி எற்கு - முற்பிறப்பில் நிரம்பத்தவஞ்செய்யாத கொடியபாவியாகிய எனக்கு, இறைவனும் சிறுவனும் இல்லையே - நாயகனும் புத்திரனுமில்லையே, இனி பெறுவது கன்று அலால் பிறிது உண்டாகுமோ - இனியான்பெறுவது கன்றின் வாலன்றி வேறொன்றுண்டாகுமா.

பாவியேற்கெனப் பாடமாயின் - பாவியேனாகிய எனக்கெனப் பொருள்கொள்க. பிராட்டியாரைப்பெறுதற்குரிய தவஞ்செய்தும், இன்று இறைவனுஞ் சிறுவனுமில்லாத வறுமையை நோக்கிக் கூறினவராதலின் - குறைவறத் தவஞ்செயாக் கொடியபாவியெற்கென்றார். (எ)

ஆதலாற்கன்றின்வால்பற்றியாடுகோ
மாதராயென்றுதன்மகட்குக்கூறலும்
வேதன்மால்பதவியும்வேண்டினோர்க்கரு
ளாதனாருயிர்த்துணையாயநாயகி.

(இ-ள்.) ஆதலால் - ஆகையால், மாதராய் - புத்திரியே, கன்றின் வால் பற்றி யாடுகு ஓ - கன்றின் வாலைப்பற்றிக் கடலாடுவேனோ, என்று தன் மகட்கு கூறலும் - எனத்தன்னுடைய புத்திரியாருக்குக்கூற, வேதன் மால் பதவியும் - பிரமன் பதவியும் விஷ்ணுவின்பதவியும், வேண்டினோர்க்கு அருள் நாதனார் உயிர்த்துணை ஆய நாயகி - தம்மை விரும்பி வழிபட்டவர்க்குத தந்தருளும் இறைவருடைய உயிர்த் துணையாயுள்ள பிராட்டியார்.

அண்டங்கள் யாவையும் தமது ஆணைவழிநடத்தும் உங்களைப்புத்திரியாகவும் மருகனாகவும் பெற்ற யான் ஏனையோர்போல எளியளோ என்பாள் - கன்றின் வால் பற்றி யாடு கோ எனவும், பிரமன்முதலியோர் தமது ஆணைவழிநிற்குங்கடவுளராதலின் சொல்லாற்றல்தோன்ற அருளுநாதனார் எனவுங்கூறினாள். ஆடு கு - எதிர்காலத்தன்மை யொருமை வினைமுற்று. ஆடு - பகுதி - கு - தன்மை யொருமை எதிர்காலவினைமுற்றுவிகுதி. "மடுகசோகடலின்" என்ற திருக்கோவையார் உரையிற் காண்க. ஓ என்னும் வினா எளியள் அல்லளெனனும் பொருள்மேனின்றது. கூறலும்-நிகழ்காலவினையெச்சம் - கூறு பகுதி. உகரகேடு சந்தி. அல் - சாரியை. உம் விகுதி. (அ)

தன்னுயிர்க்கிழவனையடைந்துதாழ்ந்துதன்
னன்னைதன்குறையுரையாடவாண்டகை
மன்னவன்வலாரியோடொருங்குவைகிய
தென்னவன்மேன்மனஞ்செலுத்தினாரோ.

(இ-ள்.) தன் உயிர் கிழவனை அடைந்து தாழ்ந்து - தமது உயிர்க்கு உரிமை பூண்ட இறைவரை யடைந்து வணங்கி, தன் அன்னை தன் குறை உரையாட - தமது தாயாகிய காஞ்சனமாலையாருடைய குறைபாட்டை எடுத்துக்கூற, ஆண் தகை மன்னவன் - ஆண்தன்மையையுடைய சவுந்தரபாண்டியர், வலாரி யோடு ஒருங்கு வைகிய தென்னவன் மேல் மனம் செலுத்தினான் - இந்திரனோடு ஒருசேரச் (சிம்மாதனத்தின்மேல்) வீற்றிருந்த மலயத்துவசபாண்டியன்மேல் மனஞ்செலுத்தினார்.

வலாரி - வலாசுரனையழித்தவன்-இது காரணப்பெயர். தன்னுயிர்க்குமுவன்-தனக்கொரு உயிராயுள்ளவர் என்னும் பொருண்மேனிற்றலால் தன்னுயிர்க்குரிமை பூண்ட இறைவரெனப் பொருள்கொண்டாம். (௯)

வேறு.

சிலையத்திரியார்திருவுள்ளமுணர்ந்
தலையத்திரியட்டவனாதனநீத்
துலையத்திரியொத்தவிமானமொடு
மலையத்துவசசசெழியன்வருமால்.

(இ-ள்.) சிலை அத்திரியார் திருவுள்ளம் உணர்ந்து - மகமேருவை வில்லாக வுடைய பெருமானார் திருவுள்ளக் குறிப்பை உணர்ந்து, அலை அத்திரி அட்டவன் ஆதனம் நீத்து - பறந்து திரியும் பர்வதங்களை வென்ற இந்திரனுடைய சிம்மாசனத்தி னின்று நீங்கி, உலை அத்திரி ஒத்த விமான மொடு - கொல்லன் உலை மூக்கி னுள்ள துருத்தியை யொத்த தெய்வ விமானத்தின் மேற் கொண்டு, மலயத்துவசச் செழியன் வரும் - மலயத்துவச பாண்டியன வருகின்றான்.

முற்காலத்தில் மலைகளெல்லாஞ் சிறகொடுபறந்து பற்பலதேசங்களிலுஞ்சென்றிருத்தலால் அங்குள்ள எவ்வுயிர்களும் மிகவுந் துக்கித்தலைத் தேவர்கள் நோக்கித்துக்கித்து இந்திரனுக்கு முறையிட, அப்பொழுது இந்திரன் அம்மலைகளுடைய சிறகுகளைச் சேதித்து வருங்கால் அச்சங் கூர்ந்து உவர்க்கடலில் பன்னிரண்டுமலைகள் பறந்து வந்து கிழக்குமுதலிய திக்குகளில் விழுந்தன. அவை - அக்கடலின் கீழ்த்திசையில் - இடபகிரியும், துந்துபிகிரியும், தூமிரகிரியும். தென்பால் - சக்ரகிரியும், மைநாககிரியும், வலாககிரியும். மேல்பால் - சோககிரியும், வராககிரியும், நந்தனகிரியும். வடபால் - கங்ககிரியும், சந்திரகிரியும், துரோணகிரியுமாம். இவைகள் அத்தேவேந்திரனுக்குப் புறங்கொடுத்தமையால் அலை யத்திரி யட்டவனென்றார்.

ஏழனுருபு நிற்கவேண்டிய விடத்து மூன்றனுருபு வந்தது உருபு மயக்கம். துருத்தி - பருத்தலுஞ் சுருங்கலும உடைமைபோலவிமானம் செல்லுதலும் இறங்குதலும் உடைமை பற்றி உலையத் திரியொத்த என்றார். (௧௦)

மண்பேறடைவான்வருமேழ்கடல்வா
யெண்பேறடையாவருளின்னமுதைப்
பெண்பேறதனாற்பெறுபேறிதெனாக்
கண்பேறடைவானெதிர்கண்டனனே.

(இ-ள்.) மண்பேறு அடைவான் வரும்-மண்ணுலகத்திலுள்ள ஆன்ம கோடிகள் (தத்தமக்குரியபெரும்), பயனையடைதற்பொருட்டுவருகின்ற, ஏழ்கடல் வாய் எண் பேறு அடையா அருள் இன் அமுதை - ஏழ்கடலிற்றோன்றிய அளவுபடுத்தற்கரிய கருணையாகிய இனிய அமுதம் போன்ற தன்மருகனை, பெண் பேறு அதனால் பெறு பேறு இது எனா - பிராட்டியாரைப் பெற்றதனை பெற்ற பயன் இதுவென்று, கண் பேறு அடைவான் எதிர் கண்டனன் - கண் பெற்றதனாற்றான்பெறும் பயன் யாதோ அதனையடைந்த மலயத்துவசபாண்டியன் எதிரேகண்டனன்.

ஏழுகடலின் அருகில் எழுந்தருளி யிருந்தமையால் - ஏழ் கடல் வாய் அருளின்னமு தென உவமை யாகுபெயராகச் சோமசுந்தரக் கடவுளைக் கூறினார். (௧௧)

வந்தான்மருகன்சரணம்பணிவான்
முந்தாமுனமாமனெனுமுறையா
லந்தாமரையங்கையமைத்துமக
டந்தானையெதிர்ந்துதழீயினனால்.

(இ-ள்.) வந்தான் - வந்து, மருகன் சரணம் பணிவான் முந்தா முன்னம் - (தனது) மருக ராகிய சவுந்திர பாண்டியர் திருவடிகளை வணங்க முற்படாத முன்னமே, மாமன் என்னும் முறையால்-(தமக்கு) மாமனென்னும் முறையினால், அம் தாமரை அங்கை அமைத்து - அழகிய தாமரை மலர்போன்ற திருக் கரங்களா லமைத்து, மகள் தந்தானை எதிர்ந்து தழீஇனன் - மகட் கொடை நேர்ந்த அப்பாண்டியனை எதிர் சென்று தழுவினார்.

வந்தான் பணிவான் என்னும் வினைமுற்றுகள் ஒன்றனை யொன்றுகொண்டு ஈறுகெட்டுநின்ற முந்தா என்னும் எதிர்மறைப்பெயரெச்சத்தின் முதனிலைகொண்டு நின்றன. (கஉ)

ஆத்தன்றிருவுள்ளமகிழ்ந்தருளாற
பார்த்தன்புமிரம்பியபன்னியொடுந்
தீர்த்தம்புகுந்தாடியசெல்கவெனாப்
பூத்தண்பொருனைப்புனனாடவனும்.

(இ-ள்.) ஆத்தன் திருவுள்ளம் மகிழ்ந்து - சவுந்தர பாண்டியர் திருவுள்ளங் களிகூர்ந்து, அருளால் பார்த்து-அருட் கண்ணால் நோக்கி, அன்புமிரம்பிய பன்னியொடும் தீர்த்தம் புகுந்து ஆடிய செல்க என்று - அன்பு மீதூர்ந்த (உமது) மனைவியோடும் தீர்த்தத்திற் சென்றாடச் செல்லக் கடவீர் என்று திருவாய் மலர்ந்தருளினார், பூ தண் பொருனை புனல் நாடவனும் - மலர்கள் நெருங்கிய தண்ணிய தாமிர பரணியின் நீர்வளமிக்க பாண்டிநாட்டையுடைய மலயத்துவசனும்.

ஆடிய செல்க செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்ச மீறாதலின் வருமொழி வல்லெழுத்து இயல்பாய் நின்றது. (கங)

முன்னைத்தவமெய்திமுயன்றுபெறு
மன்னப்பெடையன்னவள்வந்தெதிரா
தன்னைத்தழுவத்தழுவிக்கிரிவேந்
தென்னகுறையாமகிழ்வெய்தினனே.

(இ-ள்.) முன்னை தவம் எய்தி முயன்று பெறும் - முற்பிறப்புகளில் (விடாது) தவஞ்செய்து முயன்று (தான்) பெற்ற, பெடை அன்னம் அன்னவள் எதிரா வந்து - பெட்டை யன்னத்தின் நடைபோல நடை வாய்ந்த தடாதகைப் பிராட்டியார் எதிரே வந்து, தன்னை தழுவ தழுவி - தன்னைத்தழுவ அம்மலயத்துவசபாண்டியனுந் தழுவி, கிரிவேந்து என்ன குறையா மகிழ்வு எய்தினன் - மலையரையன்போல நிறைந்த மகிழ்ச்சி கூர்ந்தான். (கச)

தண்டேமொழிவேள்விதவக்குறையாற்
கண்டேனிலனென்றுகருத்தவல
முண்டேயஃதிவ்வுவகைக்களிதேன்
வண்டேயெனவுண்டுமறந்தனனால்.

(இ-ள்.) தண் தேமொழி வேள்வி - தண்ணிய தேன்போன்ற சொற்களையுடைய புத்திரியாரே (உமது) திருமணத்தை, தவம் குறையால் கண்டேன் இலன் என்று கருத்து அவலம் உண்டு - (செய்து முடித்த) தவத்தில் (சேர்ந்தசிறிது) குறைபாட்டால் காணு தொழிந்தேனே யென்று (என்) மனத்தில் கவலையுண்டு, அஃது - அக் கவலையை, இ உவகை களி தேன் வண்டு என உண்டு - இந்தச்சந்தோஷமாகிய களிப்பைத்தரும் மதுவை வண்டு போலுண்டு, மறந்தனன் - (யான்) மறந்தேன்.

உவகை என்றது - திருமணத்தில் உடனிருந்த திருக்கோலம் போல இங்கும் பெருமானும் பிராட்டியும் உடனிருந்த திருக்கோலம். உவகையை மது என உருவகஞ் செய்தமையால் தன்னை வண்டென உருவகஞ் செய்தார். அஃது - இயல்பு. அது ஏனவருதல் விகாரம். தேமொழி அன்மொழி. (௧௫)

சேணுற்றவனைச் சிலநாள் கழியக்
காணுற்றவள் போனிறை கற்புடையாள்
பூணுற்ற மலர்ந்ததோர் பொற்கொடி போ
னாணுற்றெதிர் நண்ணியிறைஞ் சினளால்.

(இ-ள்.) சேண் உற்றவனை சிலநாள் கழிய காணுற்றவள் போல் - (பொருண் முதலியவற்றை முன்னிட்டுச் சிலநாள் பிரிந்து) தூரத்திற் சென்ற தலைவனை அச்சிலநாள் கழியக் கண்டவள் போல, நிறை கற்பு உடையாள் - நிறைந்த கற்பினையுடைய காஞ்சனமாலையார் (கண்டு) பூண் உற்று மலர்ந்தது ஓர் பொன் கொடி போல் நாண் உற்று - ஆபரணங்களை அணிந்து மலர்ந்ததொரு பொற்கொடியைப்போல (விதிப்படி) மங்கலநாணணிந்து, எதிர் நண்ணி இறைஞ்சினள் - எதிர்சென்று வணங்கினார்.

மங்கலநாணின்றி மற்றையாபரணம் இன்மையால், மங்கலநாணும் உள்ளிட்ட பூணுற்று மலர்ந்ததோர் பொற்கொடிபோலென்றமையால் - நாணுற்று என்றதற்கு விதிப்படி மங்கலநாணணிந்தென்றும். "ஸோமநாதப்ரஸாதேந தஸ்யாஸ்ச புநராகதம் । ஸௌமங்கல்யம் மஹாபுண்யம் வ்ரதஸ்ய ப்ரபாவத:" என - ஆலாஸ்யமகத்துவத்திலும் வருதலகாணக சிவபெருமான திருவருளால்வந்த தமது கணவனைக் கைப்பற்றுதற்கு மங்கலநாண் பூண்டார் என்பார் - நாணுற்றெதிர் நண்ணியிறைஞ்சினள் என்றார். இடையிற் சிலநாள் மங்கலமின்றி மீட்டும் மங்கலம் பூணுதல் மரபோ எனில், ஆரியவார்த்தநாட்டில் அரசுபுரிந்த சித்திரவருமனென்னும் அரசன் தன்புத்திரிவாழ்வைச் சோதிடநூலவல்லார்பாற்கேட்க; ஒருவர் பதினாயிரவருடம் வாழ்ந்திருப்பள் என்றார், ஒருவர் - பதினான்காம்வருடத்தில் வாழ்விழப்பள் என்றார், இதனைக்கேட்டு அவ்வரசன் கவலைகூர்ந்திருந்தனன். இதனைத் தன்தோழிபாற் கேள்வியுற்ற சீமந்தினி என்பவள் தனது வாழ்வு நீடித்திருக்கும்பொருட்டுச் சோமவாரவிரதம் நோற்றுவருங்கால் தனது கணவனாகிய சந்திரசேன மகாராசன் என்பவன் தனது துணைவரோடு விளையாட்டாக யமுனையில் ஓடம் விடுங்கால் அவ்வோடங்கவிழ்ந்து தன் துணைவர்மரிக்கத் தான் தன்மனைவி நோற்றுவரும் அச்சோமவாரவிரத புண்ணியத்தால் நாகலோகத்திற்சென்று வசித்திருந்தனன். அவ்வோடங்கவிழ்ந்த செய்தியைக் கேள்வியுற்ற சீமந்தினி என்பவள் மங்கலநாணிழந்து தான்மேற்கொண்ட அவ்விரதத்தைக் கைவிடாது நடத்திவருங்கால் மூன்றுவருடங்கழித்துத் தன்னைப் பாதுகாத்துவந்த தக்ஷகன் விடையால் அச்சந்திரசேனன் அந்நாகலோகத்தினின்றும் நிலவுலகில்வந்து தன்மனைவியை மீட்டும் மணம்புரிந்தனனென்பது பிரமோத்தரகாண்டம் சோமவாரவிரதமுரைத்த வத்தியாயத்திற்காண்க. (௧௬)

மஞ்சோதியகாஞ்சனமாலைகையிற்
பைஞ்சோதிவிளங்குபவித்திரையாய்ச்
செஞ்சோதிமுடிச்சிவநாமமெழுத்
தஞ்சோதிநெடுங்கடலாடுமரோ.

(இ-ள்.) மஞ்சு ஓதிய காஞ்சன மாலை கையில் - மேகம்போன்ற கூந்தலையுடைய காஞ்சனமாலையார் (தமது) கையில், பைஞ்சோதி விளங்கு பவித்திரை ஆய் - பசியகிரணம்விளங்கும் பவித்திரமுடையவராய், செஞ்சோதி முடி சிவநாம எழுத்து அஞ்சு ஓதி - செவந்தகிரணத்தையுடைய சடாமுடியையுடைய சிவபெருமானை திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரித்து, நெடுங் கடல் ஆடும - நெடியகடலாடுவார்.

பவித்திரை-பவித்திரமுடையவர். பவித்திரம் பாபத்தை நீக்கி முத்தியையளிப்ப தென்னும்பொருட்டு. பைஞ்சோதி விளங்கு என்றமையால் - தருப்பையினாற் செய்த பவித்திரமெனக்கொள்க ஓதிய-சினையடியாகப்பிறந்த குறிப்பு வினைபெயரெச்சம். ஐந்து-அஞ்சுமரூஉ. சிவபெருமான திருநாமமே ஸ்ரீபஞ்சாக்கரமென்பது.

"காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி, யோதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது, நாதனாமநமச்சிவாயவே."

எனவருந்தேவாரத்தாலுணர்க. (௧௭)

துங்கக்கலைவேதியர்தொன்மறைநூற
சங்கற்பவிதிப்படிதன்றுணைகை
யங்கைத்தளிர்பற்றியகத்துவகை
பொங்கப்புணரிப்புனலாடினளே.

(இ-ள்.) துங்கம் கலை வேதியர் - உயர்ந்தவேதமுதலிய நூலையுணர்ந்தமுனிவர்கள், தொல் மறை நூல் சங்கற்ப விதிப்படி - தொன்றுதொட்டுள்ள வேதநூல்முறைப்படி வழாதுசெய்யுஞ் சங்கற்பவிதியின்படியே, தன் துணைகை அங்கை தளிர் பற்றி - தமது துணைவராகிய மலயத்துவசபாண்டியன்கைகளைத (தமது) அழகியகைகளாகிய தளிர்களாற்பற்றி, அகத்து உவகை பொங்க - மனத்தில மகிழ்ச்சி மீக்கூர, புணரிப் புனல் ஆடினள் - கடல நீராடினார். (௧௮)

குடைந்தார்கரையேறினர்கொன்றைமுடி
மிடைந்தார்கருணைக்கண்விழிக்கமல
முடைந்தாரனைமாருதரங்குறுகா
தடைந்தாருமைபாகரருட்படிவம்.

(இ-ள்.) குடைந்தார் கரை ஏறினர் - நீராடிக்கரையேறிய காஞ்சனமாலையாரும் மலையத்துவசபாண்டியரும், கொன்றை முடி மிடைந்தார் கருணை கண் விழி கமலம் உடைந்தார் - கொன்றைமாலையைச் சடாமுடியிற்றரித்த சோமசுந்தரக்கடவுளது கிருபாநோக்கால் பார்க்கப்பட்டு, அனைமார் உதரம் குறுகாத - தாய்மார்கள் கருப்பத்திலடையாத, உமைபாகர் அருட் படிவம் அடைந்தார் - உமாதேவியாரை யிடப்பாகத்திலுடைய அச்சோமசுந்தரக்கடவுளது அருளுருவத்தையடைந்தார்கள். (சிவசாரூப்பியம் அடைந்தனர் என்றபடி.)

உமைபாகர் அருட்படிவம் என்றமையால்-சிவபெருமான் திருவுருவத்தைப் பாண்டியரும், உமாதேவியார் திருவுருவத்தைக் காஞ்சனமாலையாரும் பெற்றனரெனக்கொள்க. இதனை யடியில்வருஞ் செய்யுளாற்காண்க. விழியைக் கமலமாகவுருவகஞ்செய்தலையால் உடைந்தாரென்றார். உடைந்தாரென்னும் வினைமுற்று எச்சமாய் ஏறினரென்னும் வினைமுற்றுப்பெயரின் முதனிலைகொண்டது. படுசொல்லற்றுப் படுபொருளாய்வந்த உடைந்தாரென்னும் செயப்பாட்டு வினைமுற்று எச்சமாய் அடைந்தாரென்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டது. குறுகாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தின் அகரவீறுதொக்கது. (௧௯)

ஒண்கொண்டன்மிடற்றொளியுமொருநா
லெண்கொண்டபுயத்தெழிலுமழல்சேர்
கண்கொண்டநுதற்கவினும்பொலியா
மண்கண்டுவியப்பவயங்கினனால்.

(இ-ள்.) ஒண் கொண்டல் மிடறு ஒளியும் - ஒள்ளியமேகம்போன்ற கரிய நிறம்வாய்ந்த கண்டத்தின் ஒளியோடும், ஒருநால் எண்கொண்ட புயத்து எழிலும்-ஒப்பில்லாத நாலென்னும் எணகொண்ட திருப்புயங்களின் தோற்றத்தோடும், அழல் சேர் கண் கொண்ட நுதல் கவினும் பொலியா - அக்கினிநேத்திரம்பொருந்திய நெற்றியின் பொலிவோடும் மலயத்துவசபாண்டியன் பொலிந்து, மண் கண்டு வியப்ப வயங்கினன் - மண்ணுலகிலுள்ளோர் பார்த்து அதிசயங்கூர விளங்கினான்.

எழில் தொழிற்பெயர்-எழு பகுதி, உகரக்கேடு சந்தி, இல் - தொழிற்பெயர் விகுதி. பொலியா செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம். (௨௦)

விண்ணின்றுவழுக்கிவிழுங்கதிர்போற்
கண்ணின்றநுதற்கருணாகரன்வா
ழெண்ணின்றபுரத்தினிழிந்திமையா
மண்ணின்றதொர்தெய்வவிமானமரோ.

(இ-ள்.) விண் நின்று வழுக்கி விழும கதிர்போல் - விண்ணுலகினின்றுவழுக்கி நிலவுலகில்வீழுஞ் சூரியனைப்போல, கண் நின்ற நுதல் கருணாகரன் வாழ்-விருபக்கண் நிலைபெற்ற நெற்றியையுடைய கிருபைகரு இருப்பிடமாகிய சிவபெருமான் வீற்றிருக்கும், எண் நின்ற புரத்தின்-(திருமாலமுதலியோர்) எண்ணத்தில் நிலைபெற்றுநின்ற சிவபுரத்தினினறும், ஓர் தெய்வ விமானம் இழிந்து இமையா - ஒருதெய்வவிமானமானது இழிந்துவிளங்கி, மண் நின்றது - நிலவுலகினின்றது.

விருபக்கண்-மேனோக்கியகண். (௨௧)

அத்தெய்வவிமானமடுத்திடலு
முத்தெய்வதமுக்கணவன்பணியா
னத்தெய்வதருககரனங்கையொடு
மெத்தெய்வதமுந்தொழவேறினனால்.

(இ-ள்.) அ தெய்வவிமானம் அடுத்திடலும் - அந்தத்தெய்வவிமானம்வர, முத்தெய்வத முக்கணவன் பணியால் - சோமசூரியாக்கினிகளென்னும் மூன்றுதெய்வங்களை மூன்றுகண்களாகவுடைய சோமசுந்தரக்கடவுளுடைய ஏவலால், கதெய்வதரு கரன் - சிறந்தகற்பகத்தருவைப்போலக் கொடுக்குங் கொடையையுடைய

கொண்டையுடைய மலயத்துவசபாண்டியன், நங்கை யொடும் - (தனதுமனைவியாராகிய) காஞ்சனமாலையாரோடும், எத்தெய்வதமும தொழ ஏறினன் - எல்லாத்தேவர்களுந்தொழ வாரோகணித்தான்.

நகரவிடைச்சொல்-சிறப்புப்பொருண்மேனின்றது. நக்கீரர் எனவருதல்காண்க. சிறந்த சொல்லையுடையவனென்பது பொருள். எ - என்னும்வினாவிடைச்சொல் எல்லாமென்னும் பொருண்மேனின்றது. (௨௨)

தேமாரியெனும்படிசிந்தநறும்
பூமாரிபொழிந்ததுபொன்னுலகந்
தூமாமறையந்தரதுந்துபிகா
ராமாமெனவெங்குமதிர்ந்தனவால்.

(இ-ள்.) பொன் உலகம - விண்ணுலகத்திலுள்ளோர், தேமாரி எனும்படி - இனியமழையென்று கண்டோர்சொல்ல, சிந்த நறும் பூ மாரிபொழிந்தது - (எங்கும்) சிதறப் புஷ்பவருஷம் பொழிந்தார்கள், தூமா மறை அந்தர துந்துபி - பரிசுத்தமாகிய பெரியவேதங்களும் அந்தரதுந்துபிகளும், கார் ஆம் ஆம் என - (கேட்டோர்) மேகத்தின்முழக்கமாம் முழக்கமாம என்று சொல்ல, எங்கும அதிர்ந்தன- எவ்விடத்தும் ஒலித்தன.

என்னும்படி - படி வினையெச்சப்பொருளில்வந்த ஓர்விகுதியிடைச்சொல். பொன்னுலகம் பொருளால் உயர்திணையேனும சொல்லால் அஃறிணையாதலால், பொழிந்ததென அஃறிணைமுடிபுதந்து கூறினர். அந்தரதுந்துபி - தெய்வவாத்தியம். (௨௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எழுந்ததுவிமானம்வானமெழுந்ததுந்துபியுநாணி
விழுந்ததுபோலுமென்னவரவொலியெங்கும்விம்மத்
தொழுந்தகைமுனிவரேத்தசுராதிகளபரவத்திங்கட்
கொழுந்தணிவேணிக்கூத்தர்கோநகர்குறித்துச்செல்வார்.

(இ-ள்.) விமானம் எழுந்தது - தெய்வவிமானமமேலெழுந்தது, வானம் எழுந்த துந்துபியும் - விண்ணுலகினின்றெழுந்த அந்தரதுந்துபிகளின் கோஷமும், நாணி விழுந்தது போலும் என்ன - வெட்கி (நிலவுலகில்)விழுந்ததுபோலு மென்று (கேட்டோர்கூற) அர ஒலி எங்கும் விம்ம - அரகரவெனனுமபேரொலி எங்கும் நிரம்பவும், தொழும் தகைமுனிவர் ஏத்த - (யாவரும) வணங்கும் தன்மையையுடையமுனிவர்கள் வாழ்த்தவும், சுராதிகள பரவ - தேவர்முதலியோர் துதிக்கவும், திங்கள் கொழுந்து அணி வேணி கூத்தர் கோ நகர் குறித்து செல்வார் - இளம்பிறையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானுடைய சிவபுரத்தைநோக்கிச் செல்லுகின்றவராயினர்.

அயன்பதமுதலிய பதங்களுக்குந் தலைமைபெறறுளதாதலிற் கோநகர் என்றார். (௨௪)

முன்புதன்னுருவாய்வையமுறைபுரிகோல்கைக்கொண்டு
பின்புதன்னுருவந்தமருகனும்பெருகுகேண்மை
யன்புதந்தருகுநின்றதடாதகையணங்குமீண்டு
பொன்புனைகுடுமிக்கோயில்புகுந்துநன்கிருப்பக்கண்டார்.

(இ-ள்.) முன்புதன் உருவாய் வையம் முறைபுரி கோல் கை கொண்டு - முன்பு தனதுவடிவமாய் நிலவுலகை மநுநூல்வழிப் பாதுகாக்குஞ் செங்கோலைத் (தனது) கையினின்றுங்கொண்டு, பின்பு தன் உருவம் தந்த மருகனும் - பின்பு தமது திருவுருவத்தைத்தந்தருளிய சவுந்தரபாண்டியரும், பெருகு கேண்மை அன்புந்து அருகு நின்ற தடாதகை அணங்கும - மிக்கநட்போடு அன்புசெய்து அவர்பக்கல் நின்ற தடாதகைப்பிராட்டியாரும், மீண்டு-(அந்நந்தவனத்தினின்றுந்)திரும்பி, பொன் புனை குடுமி கோயில் புகுந்து - பொன்னாற்செய்த சிகரத்தையுடைய திருக்கோயிலுட்புகுந்து, நன்கு இருப்ப கண்டார்-மகிழ்கூர்ந்திருக்கத் தரிசித்தார்கள்.

• தன்னுருவந்தந்த என்றதனை-தடாதகையணங்கும் என்பதனோடுங் கூட்டுக. முன்புதனதுருவென்றது பாண்டியர் திருவுருவம். பின்பு தன்னுருவென்றது - சிவபெருமான்றிருவுருவம். பாண்டியர்திருவுருவங்கொண்டு தமது திருவுருவந்தந்த என்றது பரிவருத்தனையணி. (உ௫)

முன்னைவல்வினையால்யாக்கைமுறைதடுமாறித்தோற்ற
மன்னியமனிதர்போலப்பண்டையவடிவமாறி
யன்னையேமகளாயீன்றவப்பனேமருகனாக
வென்னயாநோற்றேமியார்க்குமியற்றருந்தவந்தானென்னா.

(இ-ள்.) முன்னை வல் வினையால் - அநாதியேயுள்ள பாசவினையால், முறை யாக்கை தடுமாறி - பலவகைப்பட்ட சரீரங்களில் (செல்லுதல்) ஒழிந்து, தோற்ற மன்னிய மனிதர்போல - (மக்கட்பிறப்பில்) தோன்றியமனிதரைப்போல, பண்டையவடிவம் மாறி-(தமதிச்சையால்) முன்னுள்ள திருவுருவமாறி, அன்னையே மகளாய்-உலகமாதாவாகிய உமையே (தமக்குப்) புத்திரியாய, ஈன்ற அப்பனே மருகனாக-எல்லாவுயிர்களையுந்தந்தருளிய அப்பனே (தமக்கு) மருகனாக, யார்க்கும் இயற்றரும் என்ன தவம் தான யாம் நோற்றேம - எவர்க்கும் செய்தற்கரியதவங்களுள் என்னதவத்தை யாம்செய்துமுடித்தோமோ, என்னா - என்றுகருதி.

• ஆன்மாக்களுக்குச் சரீரம்வருதல் அநாதியாயுள்ள பாசவினையாலாதலால்-முன்னைவல்வினையாலெனவும், தோற்றம் எழுவகையாதலின் - முறையெனவும், அத்தோற்றங்களுள் தேவர் முதலியவுயிர்களின் சரீரங்களைப்பெறுதற்கு மனிதயாக்கையே காரணமாதலின் - தோற்றமன்னியமனிதர்போல எனவும், வேறுகாரணத்தாலன்றித் தமதிச்சையால் தாம் இத்திருவுருக்கொண்டார்களாதலின் தன்வினைந்து - பண்டையவடிவமாறி யன்னையேமகளாயீன்ற வப்பனேமருகனாக எனவும், இவர்களை யிவ்வாறுபெறுதற்குச் செயற்கரியதவங்களுள் தாம் செய்த அரியதவம் இன்னதெனத்தோன்றாமையால் - என்னயாநோற்றேம எனவுங்கூறினார்.

என்ன வினாவிடைச்சொல்லடியாகப்பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர். இது இடைக்குறையாய்நின்ற எவனென்னும வினாக்குறிப்பு வினைமுற்று அகரச்சாரியை ஏற்று நின்றது. முன்னைவல்வினையால்யாக்கை முறைதடுமாறி என்றது-"நீக்கி முன்னெனைத்தன்னொடுநிலாவகைகுரம்பையுட்புகப்பெய்து"என்றவுண்மைத்திருவாசகமும், எழுபிறப்பென்றது - "ஊர்வபதினொன்றுமொன்பதுமானுடம், நீர்ப்பறவைநாற்காலோர்பப்பத்தாம-சீரிய, பந்தமாநதேவர்பதினாலயன்படைத்த,வந்தமில்சீர்த்தாவரநாலைந்து" எனறசெய்யுளாலுமுணர்க. (உ௬)

கன்றகலான்போலேயன்கனைகழல்விடாதுபற்றி
யொன்றியவன்புபின்னின்றீர்த்தெழவுள்ளத்தோடுஞ்

சென்றிருகண்ணு முட்டியடிக்கடி திரும்பிநோக்கக்
குன்றுறழ்விமானந்தன்னையஞ்சலிகூப்பிச்செல்வார்.

(இ-ள்.) கன்று அகல் ஆனைபோல் இறையவன் கனைகழல் விடாதுபற்றி - கன்றை விட்டுநீங்கியபசு (தன்றுகன்றையன்பாலடிக்கடி திரும்பிநோக்குதல்)போலச் சோம சுந்தரக்கடவுளுடையவீரகண்டையணிந்ததிருவடியைவிடாமல் (பற்றுக்கோடாகப்) பற்றி, ஒன்றிய அன்பு பின்னின்று ஈர்த்து எழ - பொருந்தியஅன்பானது பின்னின்று இழுத்தலால், உள்ளத்தோடும இருகண்ணும் சென்று முட்டி அடிக்கடி திரும்பி நோக்க - (தமது) மனத்தோடும் இரண்டுகண்களுஞ்சென்று நெருங்கி அடிக்கடி திரும்பிப்பார்க்க, குன்று உறழ் விமானந்தன்னை கூப்பி அஞ்சலி செல்வார் - மக மேருவையொத்த விமானத்தைத் (தமது கரங்களைக) கூப்பி அஞ்சலித்துச்செல்லா நின்றார்.

ஈர்த்தெழ-காரணப்பொருளில்வந்த ஒருவினையெச்சமாதலால் இழுத்தலால் என்றும். அஞ்சலிவினைப்பகுதி வினையெச்சப்பொருளில்வந்தது. உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுணமையால் பொருளின்றொழிலையுவமைக்கு ஏற்றிக்கூறினும்.

வேறு.

புவலோகங்கடந்துபோய்ப்புண்ணியருக்கெண்ணிறந்தபோகமூட்டுஞ்
சுவலோகங்கடந்துபோய்மகலோகஞ்சனலோகந்துறந்துமேலைத்
தவலோகங்கடந்துபோய்ச்சத்தியலோகங்கடந்துதண்டுழாயோ
னவலோகங்கடந்துலகநாயகமாஞ்சிவலோகநண்ணினாரே.

(இ-ள்.) புவலோகம் கடந்து போய் - (பூலோகத்தினின்று) புவலோகத்தைக்கடந்து சென்று, புண்ணியருக்கு எண் இறந்த போகம் ஊட்டும் சுவலோகம் கடந்து போய்-புண்ணியமுதிர்ச்சியுடையோருக்கு அளவில்லாத போகங்களை யுணபிக்கும் சுவலோகத்தைக்கடந்துசென்று, மகலோகம் சனலோகம் துறந்து - அதன்மேலுள்ள மகாலோகத்தையும் சனலோகத்தையுங் கடந்துசென்று, மேலைத்தவலோகம் கடந்து போய்-அவற்றின்மேலுள்ள தவலோகத்தைக்கடந்துசென்று, சத்திய லோகம்கடந்து-சத்தியலோகத்தைக்கடந்துசென்று, தண் துழாயோன் நவலோகங்கடந்து-தண்ணியதுழாயமாலையணிந்த திருமாலுடைய நவலோகத்தைக்கடந்து சென்று, உலக நாயகமாம் சிவலோகம் நண்ணினார் - இவ்வுலகங்களுக்கு இறைமைத்தன்மைபூண்ட சிவலோகத்தையடைந்தார்கள்.

பூலோகத்தின்மேலுள்ள புவலோகம்-சந்திரசூரியர்முதலியோர்வசிக்கும்பதம்; இது பதினைந்துநூறாயிரயோசனையுயரமுள்ளது அதன்மேலுள்ள சுவலோகம்-தேவர்களும முனிவர்களுஞ்சேவித்து சிறப்ப இந்திரனிருக்கும்பதம், இது எண்பத்து நூறாயிரமயோசனையுயரமுள்ளது. அதனமேலுள்ள மகாலோகம-மரீசி, மார்க்கண்டர், சித்தர்முதலியோர்வசிக்கும்பதம, அது இரண்டுகோடியோசனையுயரமுள்ளது. அதன்மேலுள்ள சனலோகம-கவ்வியவாகனர், அனலர், சோமர், யமர், அரியமனர், அக்கினிவாக்கர்,பெரகிஷ், ஆசியபர், சோமபர் என்று சொல்லப்பட்டபிதிர்த்தேவர்களும, சங்கர்ஷணர், வாசுதேவர், பிரத்தியும்னர், அநிருத்தர்நால்வரும், அத்தியசாரமும் மதனமுதலாயினோரும இருக்கும்பதம்; இது எட்டுக்கோடியோசனையுயரமுள்ளது. அதனமேலுள்ள தவலோகம் - சனகர், சனந்தர், சனாதர், சனற்குமாரர், சங்கு, திரிசங்கு, ரிபு என்னும் எழுமுனிவர்களும் அரியதவஞ்செய்திருக்குமிடம்.இதுபனிரண்டுகோடியோசனையுயரமுள்ளது. அதன்மேலுள்ளசத்தியலோ

ம் - கிழக்கே இந்திரநீலநிறம்வாய்ந்தஇருக்குவேதமும், வடக்கேபடிகநிறம்வாய்ந்த யசுர்வேதமும், மேற்கே பதுமராகநிறம்வாய்ந்த சாமவேதமும், தெற்கே மரகதநிறம்வாய்ந்த அதர்வணவேதமுமிருக்க மத்தியில்பிரமனிருக்கும்பதம்; இதுபதினறு கோடியோசனையுயரமுள்ளது. நவலோகம் திருமாலிருக்கும்பதம்; அவரெல்லா ஆன்மகோடிகளையும் பாதுகாத்துக்கொண்டிருப்பர் அதநாலுகோடியோசனையுயரமுள்ளது. அதற்குமேலுள்ள - சிவலோகம் உமாதேவியாரோடு விஷ்ணுபிரமன்முதலிய தேவர்கள்சேவிக்க உருத்திரமூர்த்தி எழுந்தருளியிருக்கும்பதம்; அது ஆறுகோடியோசனையுயரமுள்ளது.

"'தனக்குமேற்புவலோகமதுதனி, லருக்கன்சோமனொடுமிவராதிய
ரிருப்பர்தத்தம்பலத்தினையெய்தியே, பரித்தநீணிம்பதிணைந்திலக்கமே.'

"அதற்குமேலமரேசனரும்புரி, யதற்குநீளமசீதியுமைந்துமா
மதற்குமேன்மகலோகமதுதனில், வதிப்பாமாதவராதிமரீசியும்."

"உயரநதானிருகோடியுறுமதற், குயருமெல்லைசெனதலமுன்னத
முயருநாலிருகோடியென்றுன்னுக, வுபருமாயிதிர்தேவருறைவரே."

"அதற்குமேற்றவலோகமருந்தவ, ரதற்குள்வாழ்வர்சனகனையாதிய
ரதற்குநீளமுமாறிருகோடியா, மதற்குமேலயன்றேயமென்றுய்கவே."

"அதற்குநீளமுமாறுடன்பத்தது, மதற்குமேலரிதேசமென்றுய்கவே
யதற்குநீளநாற்கோடியெனவுய்கவே, யதற்குமேற்சிவலோகமோராறும்."

எனச்சிவதருமோத்திரம்-கோபுரவியலில் வருதல்காண்க. (உ௯)

அறக்கொடிபின்னிறைமகனையடிபணிந்துதனையீன்றார்க்காதிவேத,மறைப்பொருடன்வடிவளித்தவருளின்மன நிறைமகிழ்ச்சிவாய்கொள்ளாமற், புறப்படுவதெனவிரண்டுதிருசசெவிக்குஞ்செங்குமுதம்பொதிந்ததீந்தே, னிறைப்பதெனப்பன்முறையாற்றுதிசெய்துதொழுதொன்றுநிகழ்த்தாநின்றாள்.

(இ-ள்.) அறக்கொடி - தருமவடிவாகியபிராட்டியார், பின் இறைமகனை அடிபணிந்து-பின்னர்த்தமதிறைவராகிய சவுந்திரபாண்டியர் திருவடிகளைவணங்கி, தனை ஈன்றார்க்கு ஆதிவேதம் மறைப் பொருள தன வடிவு அளித்த அருளின் மனம் நிறை மகிழ்ச்சி - தம்மைப்பெற்றவர்க்கு (அறுபத்துநாலு கலைமுதலிய நூல்களுக்கு) முதலாயுள்ள வேதங்களின் உட்பொருளாயுள்ள தமது திருவுருவங்கொடுத்தருளிய அருளால் (தமது) மனத்தில் நிறைந்த மகிழ்ச்சியானது, வாய் கொள்ளாமற் புறப்படுவது என - தமது திருவாயுளடங்காமல் (உவட்டெடுத்துப்) புறப்படுதல்போல, இரண்டு திருசசெவிக்கும -(அவரது) இரண்டுதிருச்செவிகளிலும், செம் குமுதம பொதிந்த தீம் தேன் நிறைபபது என - (தமதுதிருவாயாகிய) செவ்வாம்பலில் நிறைந்த இனியதேனை நிறைத்தல்போல, பல் முறையால் துதிசெய்து தொழுது - பலவகையாகத்துதிசெய்துவணங்கி, ஒன்று நிகழ்த்தாநின்றாள்-ஒன்றைக்கூறுகின்றார்.

எழுனுருபு நிற்குமிடத்து நான்கனுருபுவந்தது உருபுமயக்கம். (௩௰)

எண்ணிறந்ததேவர்க்கும்யாவர்க்கும்பயன்சுரக்குமிமையோர்காட்டுப், புண்ணியவான்றன்புனிற்றுத்கன்றுக்குக்குறைவேதென்பொருட்டென்

னீன்ற, ளெண்ணியதுகடலொன்றேயெழுகடலுமீண்டழைத்தாயீன்ற
ளாட, விண்ணிருந்தகணவனையும்விளித்துனருள்வடிவளித்துன்மேனாடீ
ந்தாய்.

(இ-ள்.) எண் இறந்த தேவர்க்கும் யாவர்க்கும் - அளவில்லாததேவர்களுக்கும் (அவரொழிந்த) பலர்க்கும், பயன் சுரக்கும் இமையோர் நாடு புண்ணிய ஆன் தன் - (வேண்டியாங்கு வேண்டிய) பயனைக்கொடுக்குந் தேவருலகிலுள்ள புண்ணிய வடிவமாகிய காமதேனுவினுடைய, புனிறு கன்றுகரு குறைவு எது - இளங்கன்றுக்குக்குறைவியாதுளது, என் ஈன்றாள் எண்ணியது கடல் ஒன்றே-என்னைப்பெற்ற தாய் நீராடக்கருதியது கடலொன்றே, என் பொருட்டு எழுகடலும் ஈண்டு அழைத்தாய்-என்னிமித்தமாக எழுகடலையும் இவ்விடத்திலழைத்தாய், ஈன்றாள் ஆட விண் இருந்தகணவனையும் விளித்து-என்னைப்பெற்றவள் (தன்கணவன்கைப்பற்றிக்) கடலாட விண்ணுலகிலிருந்த மலயத்துவசபாண்டியனையும் அழைத்து, உன் அருள் வடிவு அளித்து - உமது அருள்வடிவமாகிய சாரூப்பியத்தைத்தந்தருளி, உன் மேல் நாடு ஈந்தாய் - உமக்குரிய சிவலோகத்தையும் தந்தருளினீர். (௩0)

தென்னர்மரபிறந்ததெனப்படுபழியிலாழவருஞ்செவ்விநோக்கிப்
பொன்னவிர்தார்முடிபுனைந்துகோலோச்சிவருகின்றாய்போலுமேலு
மிந்நிலைமைக்கிடையூறுமினியின்றேயெனத்தலைவியியம்பலோடுந்
தன்னிறைவியுட்கோளையகங்கொண்டுமகிழ்ந்திருந்தான்றமிழர்கோமான்.

(இ-ள்.) தென்னர் மரபு இறந்தது என படுபழியில் - பாண்டியர்மரபு (மலயத்துவசபாண்டியனோடு) ஒழிந்ததென்று (பிறரால்) சொல்லப்படும்பழியில், ஆழ வரும் செவ்வி நோக்கி - அழுந்தவருங்காலத்தையோர்ந்து, பொன் அவிர் தார் முடி புனைந்து - பொன்னாற்செய்து விளங்கும் வெற்றிமாலையையணிந்த கிரீடஞ்சூடி, கோல் ஓச்சி வருகின்றாய் போலும் - செங்கோலோச்சி வாராநின்றாய்போலும், இனிமேலும் இந்நிலைமைக்கும் இடையூறு இன்றே என - இனிமேலும் அடியடியாய் வரும் இவ்வரசியல் நிலைமைக்கும் இடையூறு இல்லையேயென்று, தலைவி இயம்பலோடும் - (தமது) மனைவியார் கூற, தமிழர் கோமான் - பாண்டியர்களுக்கு இறைவராயுள்ள சவுந்தரபாண்டியர், தன் இறைவி உட்கோளை அகங்கொண்டு மகிழ்ந்து இருந்தான் - தமதுமனைவியாருட்கிடையைத் (தாம) திருவுளத்திலோர்ந்து அருள் கூர்ந்தார்.

இடையூறு-இடையுறுதல். இறுதியிலுள்ள உம்மையைப்பிரித்து இந்நிலைமைக்கு என்பதனிறுதியிலுள்ள நான்கனுருபோடுகூட்டுக. இந்நிலைமைக்கிடையூறும் இனியின்றே என - இவ்வரசியல்வழாமைக்குப் புத்திரப்பேறுவேண்டுமே எனனும் பொருளைக்குறிப்பாலுணர்த்துஞ் சொல்லாற்கூறுதலால - தன்னிறைவியுட்கோளென்றார். அகங்கொண்டு மகிழ்ந்திருந்தானென்பதும் அது. மகிழ்ந்தானென்பது பொருளாதலால் இருந்து என்பது அசைநிலை யிடைச்சொல். ஓடுருபு வினையெச்சப்பொருளில்வந்த ஓரிடைச்சொல். (௩௧)

மலயத்துவசனையழைத்தபடல முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௯௨0.

உக்கிரபாண்டியன்அவதரித்ததிருவிளையாடல்.



பதினோராவது

# உக்கிரகுமாரபாண்டியனது திருவவதாரப்படலம்.

கலிநிலைத்துறை.

மன்னவன்குலசேகரன்றிருமகன்மனைவி
தன்னொடுங்கடலாடியதகுதியீதகதத
தென்னவன்றனித்திருமகடிருவுளங்களிப்ப
வுன்னருந்திறலுக்கிரனுதித்தவாறுரைப்பாம்.

(இ-ள்.) மனனவன் குல சேகரன திருமகன் - அரசர்களுக்கரசனாகிய குலசேகரபாணடியனுடைய சிறநதபுததிரனாகிய மலயத்துவசபாண்டியன், தன்மனைவியொடுமே கடலாடிய தகுதி ஈது-தனது மனைவியராகிய காஞ்சனமாலையாரோடுங் கடலாடியசெய்தி இநதததிருவிளையாடல், அநத தென்னவன் தனி திருமகள்-அந்த மலயததுவசபாணடியனது ஒபபில்லாத (பெறுதறகரிய) பெருஞ் செல்வமாகிய பிராட்டியார், திருவுளம களிபப-திருவுளங்களிகூர, உன் அரும் திறல் உக்கிரன் உதித்த ஆறு உரைபபாம-(பகைவர) நினைததறகரிய வெற்றிவாய்ந்த உக்கிரகுமாரபாண்டியர் அவதரிதத திருவிளையாடலைச் சொல்லுவாம. (க)

தண்ணிலாமௌலிவேயந்தசுந்தரசாமிஞாலத்
தெண்ணிலாவைகறன்னதிணையடிநிழல்போல்யார்க்குந்
தெண்ணிலாக்கவிகைநீழலசெயதருட்செஙகோலோசசி
யுண்ணிலாவுயிராதாணுகிமுறைபுரிந்தொழுகுநாளில்.

(இ-ள.) தண் நிலா மௌலி வேய்நத சுந்தரசாமி -, தண்ணிய இளஞ்சந்திரனைச் சடாமுடியிறறரிதத சவுநதரபாணடியர், ஞாலத்து - நிலவுலகில், எண் இலா வைகல் - அளவில்லாதகாலம, தன்னது இணை அடி நிழல் போல்-(அயன்முதலிய பல்லுயிர்க்கும் நிழல்செல்புமம) தமது இரணடு திருவடியின் நிழல்போல, யார்க்கும்-தமது கோற்கீழ் வாழவாராககனறித தமமொடு முரணியபகைவர்க்கும, தெள் நிலா கவிகை நீழல் செயது-தெள்ளியசநதிரனையொதத வெளளைவட்டக்குடையால் நிழல்செயது, அருள செங்கோல் ஓசசி-அருளின்வழிப்பட்ட செங்கோல்நடாத்தி, உள் நிலா உயிர் ஆதாரு ஆகி - எல்லாவுடமபினுளளும விளங்கும உயிர்த்தொகைகளைத் தம் முயிர்போலககருதி, முறை புரிநது ஒழுகு நாளில் - முறைசெயது நடக்குமநாளில்.

செங்கோல் - செவ்வியகோல், அது நீதிமேனிற்றலின் உவமையாகுபெயர். பகைவரைத்தணடிததலும் அரசர் தணணருளாதலின யார்ககும தெண்ணிலாக்கவிகை நீழல்செயதெனவும், உயிர்களுக்கு வருந்தனபத்தைத் தமக்குவருந்துன்பமாக அரசர்கொள்ளவேண்டுதலின உயிராதாரு ஆகி எனவுங்கூறினார். செங்கோலும் முறையும் ஒருபொருள்தகது நிறறலால் ஒருபொருட்கிளவிகள். தம் கோற்கீழ்வாழ்வார் குற்றஞ்செய்யின் அக்குற்றத்தை யாராய்ந்து பகைவர் நட்பினர் அயலினர் என்னும் எவரிடத்தும் கண்ணோடாது நடுநின்று அக்குற்றத்துக்குவிதித்த தண்டத்தை மநுநூலோடுபொருந்த, ஆராய்ந்து செய்தலாம். "ஓர்ந்துகண்ணோடா திறைபுரிந்தி யார்மாட்டுந், தேர்ந்துசெய்வஃதேமுறை" என்னுந் திருக்குறளாலுணர்க. ஓன்

ஆம எனவும் வேறுபலவுமக்கிவந்த வினையெச்சங்கள் புரிந்தென்னும் வினையெச்சத்தின் முதனிலையைத் தனித்தனிகொண்டன. அறுபத்தாறுயிரவருடம் அரசுபுரிந்தமையால் - எண்ணிலாணவக்கல் என்றும்,

[illegible]

[illegible]

என ஆலாஸய மகத்துவத்தில் வருதல்காண்க. (உ)

கரியவன்கமலசெம்மன்மறைமுதல்கலைகள்காண்டற்
கரியவனன்பர்க்கென்றுமெளியவனருகுமேன்மை
தெரியவன்பகன்றசிந்தைத்தென்னவன்றனக்குங்கற்பிற்
குரியவடனக்குங்காதன்மகளெனவுமையைத்தந்தான்.

(இ-ள்.) கரியவன் கமலச் செம்மல் மறைமுதல் கலைகள் காண்டற்கு அரியவன் - கரியநிறத்தையுடைய திருமாலும தாமரையில் வசிக்கும் பிரமனும் வேத முதலிய நூல்களும் காணுதற்கரியவனும, அன்பர்க்கு என்றும எளியவன் ஆகும் மேன்மை தெரிய - அடியார்க்கு எபபொழுதும் (காணுதற்) கெளியவனும் ஆகிய (தமது) மேன்மை (பலரும) தெரிய, அன்பு அகன்ற சிநதை தென்னவன் தனக்கும்- அன்புநிறைந்த மனததையுடைய மலயததுவசபாணடியனுக்கும், கறபிற்கு உரியயவள் தனக்கும் - அவனது இலலறததிறகுரிய கறபின்கிழத்தியாராகிய காஞ்சனமாலையார்க்கும், காதல் மகள என உமையை தந்தான்-விருப்பமுதரும புத்திரியாராக உமாதேவியாரை முன்புதநதருளினா (௩)

மற்றதற்கிசையத்தானுமருமகனாகிவைய
முற்றும்வெண்குடைக்கீழ்வைகமுறைசெய்தாகைமூன்று
கொற்றவர்தம்மிற்றிங்கட்கோகுடிவிழுப்பமெய்தப்
பெற்றதுபோலுமின்னும்பெறுவதோர்குறைவுதீர்ப்பான்.

(இ-ள்.) அதற்கு இசைய-(உமாதேவியாரை அவர்க்குப் புத்திரியாராகத்தந்த) அக்கருத்துககிசைய, தானும் மருமகனாகி-சோமசுநதரக்கடவுளும் அவர்களுக்கு மருகராகி, வையம் முற்றும் வெண் குடைககீழ் வைக-நிலவுலகமுழுதும் (தமது) வெள்ளைவட்டக்குடையினகீழ் (வெப்பொழிநது) நிலைபெற, முறை செய்தான் ஆக-செங்கோலோச்சிவருதலால், மூன்று கொற்றவா தம்மில்-சேர சோழ பாண்டியருள், திங்கள் கோ குடி விழுப்பம் எயத பெற்றது - சநதிரன் வழிவந்த பாண்டியர் மரபு மேம்பாடு அடையப்பெற்றது, இன்னும பெறுவது ஓர் குறைவு தீர்ப்பான் - இன்னம் (அம்மரபு) பெறும ஓர்குறைவையதீர்க்க.

பாண்டியர் மரபுபெறும ஓர் குறையாவது - தமக்குப்பின் அரசின்மை. ஆகவென்னும் இடைச்சொல்லால் முறைசெய்தானென்னும் வினைமுற்றுக் காரணப்பொருளில்வந்த எச்சமாய் நிறறலில் - செங்கோலோச்சி வருதலா லென்றும். மூன்று கொற்றவர் - மூவராகிய கொற்றவர் என நிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. போலும் உரையசையிடைச்சொல் - தீர்ப்பான் பான் விகுதிபெற்ற வினையெச்சம். (௪)

ஒன்றினைச்செய்கைசெய்யாதொழிகைவேறொன்றுசெய்கை
யென்றிவையுடையோனாதியீறிலாப்பரமயோகி

ஒன்றுதீதிகழ்ச்சிவேட்கைகட்பிகல்விளைக்குமாயை
வென்றவன்செய்யுமாயைவிருத்தியாரளக்கவல்லார்.

(இ-ள்.) ஒன்றினை செய்கை - (ஆன்மாக்களின்பொருட்டு) ஒன்றைச் செய்தலும், செய்யாது ஒழிகை - (அதனைச்) செய்யாது விடுதலும், வேறு ஒன்று செய்கை - (கருதாத) மற்றொன்றைச் செய்தலும், என்ற இவை உடையோன் - என்று சொல்லப்பட்ட இவற்றையுடையோனாகிய, ஆதி ஈறு இலாத பரமயோகி - முதலும் இறுதியுமில்லாத பரமயோகியும், நன்று தீது இகழ்ச்சி வேட்கை நட்பு இகல் விளைக்கும் மாயை வென்றவன் - நன்மையுந் தீமையும் வெறுப்பும விருப்பும் நட்பும் பகையும் (ஆகிய இவற்றைச்) செய்யும் மாயையை (இயல்பாகவே) வென்றவனுமாகிய சோமசுந்தரக்கடவுள், செய்யும் மாயை விருத்தி அளக்க வல்லார் யார்-அவன் செய்யும் மாயாவிருத்தியைககண்டு அளவறுக்கவல்லவர் எவர்.

ஈஸ்வரன் பிரபுதவ சாமர்த்திய குணங்கள் மூன்றுள் ஒன்றினைச்செய்கை கர்த்தத்துவமும், செய்யாதொழிகை அகர்த்தத்துவமும, வேறொன்றுசெய்கை அன்னியதாகர்தத்துவமும ஆதலால் இம்முக்குணங்களையும ஒருங்கேயுடையவன் என்பார் என்றிவையுடையோன எனவும, அவனே தனக்கோர் முதலும் இறுதியும் இல்லாதவன் எனபார் ஆதியீறிலா எனவும், இம்மூன்றும் ஆன்மாக்களின் பொருட்டே என்பார் பரமயோகி எனவும், ஆன்மாக்களது தன்மை பந்தத்தின்கண் அதுவதுவாய் நிற்குந்தன்மையாலும, முத்தியின்கண மாயாகருவிகள்முற்றும் நீங்கி முதல்வனோடு ஒன்றாய்நிற்குந தன்மையாலும, இடையாயுள்ள சுத்தத்தில் அரிதிற்றெளியுமாபாயிருத்தலாலும, அவன்செயலை அறிவது அரியதிலரியதென்பார். அவன்செய்யுமாயை விருத்தியாரளக்கவல்லார எனவுங்கூறினார். "ஒன்றைநினைக்கினதுவொழிந்திட்டொன்றாகும், அன்றியதுவரினுமவந்தெய்தும் - ஒன்றை, நினையாதமுன் வந்துநிற்பினும்நிற்கும, எனையாளுமீசன்செயல்" எனவரும ஒளவையார் திருவாக்காலுமுணர்க. (ரு)

இந்திரசாலவிசசைகாட்டுவானென்னத்தன்பாற
செந்தழனாட்டமீன்றசெல்வனைக்கருப்பமெய்தா
தந்தமிலுயிருஞாலமனைத்தையுமீன்றதாயாஞ்
சுந்தரவல்லிதன்பாற்றோற்றுமாறுள்ளஞ்செய்தான்.

(இ-ள்) இந்திர சால விசசை காட்டுவான் என்ன - இந்திரஜாலவித்தையைக்காட்டுகின்றவனைப்போல, தன் பால செம் தழல் நாட்டம் ஈன்ற செல்வனை-தம்மிடத்துச் செவந்த நுதற்கண்திறந்தருளிய புத்திரனை, கருப்பம் எய்தாது - கருப்பத்திலடையாமல், அந்தம் இல் உயிரும் ஞாலம் அனைத்தையும் ஈன்ற தாயாம் சுந்தரவல்லி தன் பால் - அளவில்லாத பலவுயிர்களையும பலவுலகங்களையும பெற்றருளிய தாயாராகிய தடாதகைப்பிராட்டியாரிடத்து, தோற்றும் ஆறு உள்ளம் செய்தான்-தோற்றும்படி சவுந்தரபாண்டியர் திருவுள்ளங்கொண்டார்.

கனிஷ்டம் ஸோமஸுந்த்³ரா தாரகாரிஷ்ட நந்த³நம்।
வக்த்ராநநஷ்டம் ஜாதம் ஸ்ரீஹாலாஸ்யே ஜுகோப யா॥

என ஆலாஸ்யமகத்துவத்தில் ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுள் ஒரு திருமுகத்தோடு அவதரித்தார் என்றபடி கூறுது, செந்தழல்நாட்டமீன்ற செல்

வன் என்றமையால் நுதற்கண்ணினின்று வீரபத்திரக்கடவுளுந்தோன்றினமையான் உக்கிரனென்னும் பெயர்க் காரணம்பற்றி வீரபத்திரக்கடவு ளெனவுஞ் சிலர் கூறு வர். உமாதேவியார், திருவுதரத்தில் அழுடையபரமல மூத்தபிள்ளையார் முதலியோரை த்தந்தருளியும் என்றுங் கன்னியராதலின் கருப்பம் எய்தாதென்றனர். கருப்பத்தி ல் தோன்றுவதுபோலப் பிறர் கட்புலன்களுக்குக் காணப்பட்டு அவ்வாறு தோன்று மையால் - இந்திரஜால விச்சைகாட்டுவான் என்ன என்றார். (சு)

அங்கவன்வரவுக்கேற்பவாயமுமபிறருந்தாழ்ந்து
மங்கைநின்வடிவுக்கேற்பககருவுருவனப்புஞ்சீருந
திங்கடோறுற்றுமன்றற்செவ்வியுங்காணவாசை
பொங்கியதெங்கடகென்றாபுனிதையப்படிபோலானாள்.

(இ-ள்.) ஆயமும் பிறரும் அங்கு அவன் வரவுக்கு ஏறப தாழ்ந்து - தோழிய ரும் பிறரும அவ்விடத்து அப்புத்திரா வருகைக்கு மனமபொருந்தவணங்கி,மங்கை நின் வடிவுக்கு ஏறப - பிராட்டியாரே உமது திருவுருவத்துக்குத்தக்கதாக, கரு வுரு வனப்பும் சீரும - கருத்தோற்றத்தின் பொலிவையும் அப்பொலிவாலவரும அழகை யும், திஙகள் தோறும ஆறறும் மன்றல செவவியும - மாதந்தோறும செயதுவரும திருவிழாப்பொலிவையும, காண - கண்டுகளிக்க, எங்கட்கு ஆசை பொங்கியது என்றார் - எங்களுக்கு ஆசைமூணடதென்று இரந்தாாகள், புனிதை அப்படி போல ஆனாள - அப்பிராட்டியாரும அவ்வேணடுகோளுக்கு இசைந்தருளினா.

கருப்பம் அடைந்தவாபோலப் பிறா கணகளுக்குப புலப்பட்டனராதலின புனிதை யப்படிபோலானாள என்றா. (எ)

கருமணிச்சிகரச்செம்பொற்கனவரையனையகாட்சித்
திருமுலையமுதம்பெய்தசெப்பிரண்டனையவாக
வருமுலைசுமந்துமாயந்தமருங்கு‌லுமவந்துதோன்ற
வருளகனிந்தனையாளுவிறகினசுவையாாவமபொஙக

(இ-ள்.) கரு மணி சிகரம் செம பொன் கனகம் வரை அனைய காட்சி திரு முலை - சூசுகமாகிய சிகரத்தையுடைய செவ்வாத பொன்மலையையொத்த தோற்றத் தையுடைய அழகியதனங்கள், அமுதம பெய்த இரணடு செப்பு அனைய ஆக - அமு தம்நிரப்பிய இரணடு செப்புகளை யொப்பனவர்சத் சேர்ன்றவும, மாயந்த மருங்கு லும் வரு முலை சுமந்து வந்து தோன்ற - (கணகளுக்குப) புலப்படாத இடையும தோன்றிய தனபாரங்களைச் சுமந்து (கணகளுக்குப புலப்பட்டுத) தோன்றவும், அருள் கனிந்தால் அனையாள் நாவிற்கு இன சுவை ஆாவம பொஙக - அருள்பழுத் தாலொத்த பிராட்டியாாநாவினுக்கு இனிய சுவையினமேல விருப்பமெழவும.

கனகம கனிந்தால் ஈறுதொகுத்தல. (அ)

என்னவுமெளியவேனுமரியனவென்னவேட்டா
ளன்னவும்போகபூமியரும்பெறலுணவுநலகிப
பன்னகரமுதுந்திஙகட்படுசுவையமுதுநதெய்வப்
பொன்னகரமுதுமாசைபுதைபடககணங்கணல்க.

(இ-ள்.) என்னவும் எளிய வேனும - (விரும்பும்) எப்பொருளும் எளியனவா யிருக்கினும், அரியன என்ன வேட்டாள - (அவை) அரியபொருளென்று விரும்புவ

ரகில், அன்னவும் - அவ்வெளிய பொருள்களையும், போக பூமி அரும் பெறல் உணவும் நல்கி-(ஆதியரிவஞ்சமுதலிய) போகபூமியிலுள்ள பெறுதற்கரிய வுணவுகளையுந்தந்து, பல் நகர் அமுதம் - பலநகரிலுள்ள அமிர்தமொத்த வுணவுகளையும், திங்கள் படு சுவை அமுதம் - சந்திரமண்டிலத்திலுள்ள சுவைகனிந்த அமுதையும், தெய்வம் பொன் நகர் அமுதம் - தேவருலகிலுள்ள அமுதையும், ஆசை புதை படகணங்கள் நல்க-பிராட்டியார் விருப்பம நிரம்பச சிவகணங்கள் (கொண்டுவந்து) கொடுக்கவும்.

என்ன அன்ன எஎர விகுவிடைச்சொல் லடியாகவும், அகரச்சுட்டிடைச்சொல்லடியாகவும் பிறந்த குறிப்புவினை முற்றுப்பெயர்கள். போகபூமிகளாவன—ஆதியரிவஞ்சம் நல்லரிவஞ்சம் ஏமதவஞ்சம ஏமவருசம் - தேவகுருவஞ்சம் உத்தரகுருவஞ்சம் எனப - போகபூமி யறுவகைபடும். என்பதனாலுணர்க. (கூ)

புண்ணியமுனிவர்வேதபண்டிதர்போந்துவேந்தர்க்
கண்ணியசடங்குமூதாரருங்கடிவெள்ளத்தாழ
வெண்ணியதிஙகடோறுமியற்றவிககன்னித்தேயம்
பண்ணியதருமசசார்பாற்படுபயன்றலைப்பாடெய்த.

(இ-ள்.) புண்ணிய முனிவர் வேத பண்டிதர் போந்து - புண்ணியவடிவமாகிய சத்தவிருடிகளும் வேதஙகளில் வல்ல அந்தணாகளும்வந்து, வேந்தர்க்கு அண்ணிய சடங்கு-அரசர்க்குவிதித்த சடங்குகளை, மூதூரா அரும கடி வெள்ளத்து ஆழ-தொன்றுதொட்டுளள மதுரைநகரிலுள்ளோர் பெறுதற்கரிய திருவிழாவென்னும் பெருக்கில் அழுந்தித் தலைதடுமாற, எண்ணிய திங்கள் தோறும் இயற்ற - வரையறுத்தமாதங்கள்தோறும செய்துமுடிக்கவும, இ கன்னி தேயம் பண்ணிய தருமம் சார்பால் படு பயன தலைப்பாடு எய்த - இந்தக்கன்னிநாடாகிய பாண்டியநாடுசெய்துமுடித்த தருமநெறியால் வந்த பயனையடையவும்.

சடங்காவது - கருப்பாதானம, புஞ்சவனம, சீமந்தம், விண்டுபலி. கருப்பாதானம் - கருவ்பநதரிக்கும்படி செய்யுங்கிரியை. புஞசவனம - ஆண்மகவு பிறக்கும் மருந்து பிழியுங் கிரியை. சீமநதம் மூன்றிடத்து விளாயபுள்ள பன்றிமுள்ளினால் தலைமயிரை வகிர்ந்துசெயயுங்கிரியை. விண்டுபலியாவது சீமந்தத்துளடங்குங் கிரியை. வரையறுத்தமாதமாவது-புஞ்சவனம் - இரணடாமாதததிலும நான்காமாதத்திலுஞ்செய்யுங்கிரியை. சீமநதம-ஆறாமாதததிலும் எட்டாமாதத்திலுஞ் செய்யுங்கிரியை. புஞ்சவனமாவது-வாமதேவமநதிரததால ஆயிரநதரமாவது நூற்றெட்டுத்தரமாவது ஓமஞ்செயது அந்தமநதிரததினால் அலநதளிர, பால், உளுநது இவைகளைக்கொண்டு கருப்பவதியின் நாசியிற்பிழிதல். சீமநதமாவது-வியாகிரிதிமநதிரத்தாலும், அகோரமநதிரத்தாலும் நூற்றெட்டுததரம ஓமஞ்செய்து தருப்பை, அத்தி, அரக்கொம்பு, பன்றிமுள் இவைகளைக்கூட்டி விதியாஙகமநதிரததினால் நெற்றிமுதல் மேலிழுத்தல். விண்டுபலி - வயிற்றிலுளளது வலிமைபெறச்செய்தல். அதாவது இருடிகேசன் முதலிய திருநாமங்களால் திருமாலைக் காலையிலும் மாலையிலும் ஆவாகனம் செய்து அர்ச்சித்து அகோரமந்திரததாலும் வியாகிரிதியினாலும் நூற்றெட்டு ஓமங்களையும், விண்டுமறுவால் ஆஹுமங்களையும் நெய்யினால் ஆஹுமங்களையுஞ்செய்து முடிவில் பிரமசரியர் எண்மருக்கு அன்னமூட்டுதல். (சo)

மாசறத்துறந்தோருள்ளமானவான்களங்கநீங்க
வீசர்தங்கிழமையென்னுமிந்துவாதிநாள்செயத

பூசையின்பயன்றுனெய்தவெரிபசும்பொற்கோள்வந்து
தேசொடுகேந்திரத்திற்சிறந்தநல்லோரைவாய்ப்ப.

(இ-ள்.) ஈசர் தம் கிழமை என்னும் இந்து - சிவபிரானுக்குரிய கிழமை என்னுந் திங்கள், மாசு அற துறந்தோர் உள்ளம் மான-குற்றமறத் துறந்தோரது இதயத்தையொப்ப, வான் களங்கம் நீங்க - (தனது) உடம்பிலுள்ள பெரியகளங்கத்தினின்று நீங்கவும், ஆதிரை நாள் தான் செய்த பூசையின் பயன வந்து எய்த - திருவாதிரைநக்ஷத்திரம (தான்) செய்த பூசையின்பயனையடையவும், எரி பசும் பொன் கோள் வந்து - விளங்காநின்ற பசிய பிரகஸ்பதிவந்து, தேசொடு கேந்திரத்தில் சிறந்த நல் ஓரை வாய்ப்ப - விளக்கத்தொடு கேந்திரத்தில சிறந்த நல்லமுகூர்த்தம் வாய்க்கவும். (௧௧)

முந்தைநான்மறைகடாமேமுழங்கமந்தாரமாரி
சிந்தநாண்மலர்பூத்தாடுமின்னெனத்திசைகடோறு
மந்தரமகளிராடத்துந்துபியைந்துமார்ப்ப
விந்தையுந்திருவுமவெள்ளைகிழத்தியும்வீறுவாய்ப்ப.

(இ-ள்.) முந்தை நால் மறைகள் தாமே முழங்க-எல்லாநூல்களுக்கு முற்பட்டுள்ள நான்குவேதங்களும் தாமே ஆரவாரித்துக்கோஷிக்கவும், மந்தாரம் மாரி சிந்த-மந்தாரவருஷத்தைத (தேவர்கள்) சொரியவும், நாள் மலர் பூத்து ஆடும் மின் என-அன்றலர்ந்தபூக்கள் மிக்கு ஆடும மின்னலைப்போல, திசைகள் தோறும அந்தரம் மகளிர் ஆட-திக்குகள்தோறும விண்ணுலகிலுள்ள வடிவமைந்தஅரம்பையர்கள் நடிக்கவும், துந்துபி ஐந்தும ஆர்ப்ப-தேவதுந்துபி ஐந்தும முழங்கவும், விந்தையும திருவும் வெள்ளை கிழத்தியும் வீறு வாய்ப்ப - வீரலட்சுமியும் பூவின்கிழத்தியும் நாவின் கிழத்தியும் இறுமாக்கவும்.

மலர்கள் அவயவங்களாகவும், மின்னல் மேனியாகவுங் கொள்ளப்படுதலால் வடிவமைந்த என்றும. இவர்கள மேன்மேலும் இனிப்பெருக்குறுதலால் வீறு வாய்ப்ப என்றார். (௧௨)

அந்தணர்மகிழ்ச்சிதூங்கவடுத்தவர்வளர்க்குமுன்னர்
மந்திரவேள்விச்செந்நீவலஞ்சுழித்தெழுந்தார்த்தாட
சிந்துரநுதன்மாவெட்டுஞ்சேடனும்பொறையெய்ப்பாற
விந்திரன்மேருப்புத்தேள்புனலிறைக்கிடந்தோளாட.

(இ-ள்.) அந்தணர் மகிழ்ச்சி தூங்க அடுத்து அவர் வளர்க்கு முன்னர் - அந்தணர்கள் ஆர்வம்பெருக அடுத்து அவர்கள் (நெய்வார்த்து) வளர்ப்பதற்குமுன்பு, மந்திரம் வேள்வி செந்தீ வலம் சுழித்து எழுந்து ஆர்த்து ஆட - மந்திரவிதிப்படி செய்யும் யாகத்திலுள்ள செவந்தீக்கொழுந்தானது வலப்பால்சுழித்து ஓங்கி எழுந்து ஒலித்துவிளங்கவும், சிந்துரம் நுதல் மா எட்டும் சேடனும் பொறை எய்ப்பு ஆற - சிந்தூரம் அப்பிய நெற்றியையுடைய அஷ்டகஜங்களும ஆதிசேடனும் உலகினைச்சுமத்தலாலுள்ள இளைப்புநீங்கவும், இந்திரன் மேரு புத்தேள் புனல் இறைக்கு - இந்திரனுக்கும் மகமேருவுக்கும் வருணனுக்கும், இடம் தோள் ஆட - இடத்தோளாடவும்.

பூபாரத்தைத் தன்றோள்மேற்சுமத்தலால் இளைப்பாற எனவும், இந்திரன் முதலியோர் செருக்கொழித்தலால் இடத்தோள் ஆட எனவுங்கூறினார். (௧௩)

ஆலத்தையமுதமாக்குமண்ணலுமணங்குங்கொண்ட
கோலத்துக்கேற்பக்காலைக்குழந்தைவெங்கதிர்போலற்றைக்
காலத்திலுதித்தசேய்போற்கண்மழைபிலிற்றுநிம்ப
மாலைத்தோட்செழியன்செல்வமகள்வயிற்றோன்றினனே.

(இ-ள்.) ஆலத்தை அமுதம் ஆக்கும் அண்ணலும் அணங்கும் - விடத்தை யமுதாக்கிய சிவபிரானும் உமாதேவியாரும், கொண்டகோலத்துக்கு ஏற்ப - தாம் கொண்டருளிய கோலத்துக்குத் தக்கதாக, காலை குழந்தை வெம் கதிர்போல் - உதயகாலத்திற்றோன்றிய இளஞ்சூரியனைப்போலவும், அன்றை காலத்தில் உதித்தசேய்போல் - அக்காலத்தில் அவதரித்த முருகக்கடவுள்போலவும், கண் மழை பிலிற்றும் நிம்பம் மாலை தோள் செழியன் செல்வம் மகள்வயின் - தேனாகியமழையைச்சிந்தும் வேப்பமலர்மாலையையணிந்த புயங்களையுடைய மலயத்துவசபாண்டியனது செல்வப்புத்திரியாராகிய தடாதகைப்பிராட்டியாரிடத்தில், தோன்றினான் - உக்கிரகுமாரர் அவதரித்தருளினார். (௧௪)

எடுத்தனள்மோந்துபுல்லியேந்தினள்காந்தன்கையிற்
கொடுத்தனள்வாங்கியிருகொங்கைநின்றிழிபால்வெள்ளம்
விடுத்தனளமுதப்போதில்வெண்ணிலாவெள்ளம்போல்வாய்
மடுத்தனளருத்திருடன்மைந்தனையெம்பிராட்டி.

(இ-ள்.) புல்லி மோந்து எடுத்தனள் ஏந்தினள் - தழுவி எடுத்து உச்சிமோந்து (தமது) திருக்கரத்திலேந்தி, காந்தன் கையில் கொடுத்தனள் - (தமது) கணவனார் திருக்கரத்திலேகொடுத்து, வாங்கி இரு கொங்கை நின்று இழிபால் வெள்ளம் விடுத்தனள் - (மீண்டும்) வாங்கியிரு (தமது) திருத்தனங்களினின்று இழியும் பால் வெள்ளத்தைச்சொரிந்து, அமுதம் போதில் வெள் நிலா வெள்ளம் போல் - ஆம்பல் மலரில் சந்திரன் நிலா வெள்ளம் பெருக்கினாற் (மடுத்தல்போல) வாய் மடுத்தனள் - திருவாயிற்புகட்டி, தன் மைந்தனை எம்பிராட்டி அருத்தினள் - தமது செல்வப்புத்திரனை எமது பிராட்டியார் உண்பித்தார்.

எடுத்தனள், ஏந்தினள், கொடுத்தனள், விடுத்தனள், மடுத்தனள் என்னும் வினைமுற்றுகள் எச்சங்களாய் ஒன்றனையொன்றுகொண்டு அருத்தினள் என்னும் பிறவினை வினைமுற்றின் முதனிலைகொண்டன. (௧௫)

சலத்தலைக்கிடக்கைப்புத்தேடருநிழல்வாழ்க்கைப்புத்தே
ளலர்த்தலையிருக்கைப்புத்தேளாதிப்புத்தேளிர்வேதப்
புலத்தலைக்கேள்விசான்றபுண்ணியமுனிவரோனோர்
குலத்தலைமகளிரோடுங்கோமகன்கோயில்புக்கார்.

(இ-ள்.) சலத்தலை கிடக்கை புத்தேள் - திருப்பாற்கடலில் சர்ப்பசயனத்தில் அறிதுயிலமர்ந்ததிருமாலும், தருநிழல் வாழ்க்கை புத்தேள் - சந்தானமுதலிய பஞ்சதருக்களினிழலில் அரசியல்செய்துவாழும் இந்திரனும், அலர்த்தலை இருக்கை புத்தேள் ஆதி புத்தேளிர் - தாமரையாகிய அத்தாணியிலிருந்து அகிலலோகங்களையுஞ் சிருட்டிக்கும்பிரமனும் ஆகிய இவர்முதலியதேவர்களும், வேதம் புலம் தலை கேள்வி சான்ற புண்ணிய முனிவர் ஏனோர் - வேதத்தின்கண் மிக்ககேள்வியாகல்

நிறைந்த புண்ணியவடிவமாகிய முனிவர்களும் அவரொழிந்தோரும், குலம் தலைமகளிரோடும் - (தத்தமக்குரிய) பன்னியரோடும், கோமகன் கோயில் புக்கார் - சவுந்தரபாண்டியர் திருக்கோயிலுள் சென்றார்கள். (௧௬)

குடபுலத்தரசும்பொன்னிக்குளிர்புனற்கோழிவேந்தும்
வடபுலத்தரசர்யாருங்குறுநிலவாழ்க்கைசெல்வத்
தடல்கெழுதொண்டைத்தண்டாரரசொடுமனிகஞ்சூழக்
கடல்கணாற்றிசையும்பொங்கிவருவபோற்கலிப்பவந்தார்.

(இ-ள்.) குட புலத்து அரசும் - குடநாட்டரசனாகிய சேரனும், பொன்னி குளிர் புனல் கோழி வேந்தும் - காவிரியினது தண்ணிய நீர்சூழ்ந்த உறையூர்க்கரசனாகிய சோழனும், வடபுலத்து அரசர் யாரும - வடதிசையிலுள்ள கஜபதிமுதலிய அரசர்களெல்லோரும், குறுநில வாழ்க்கை செல்வத்து - சிற்றரசியல்வாழ்வின் செல்வத்தில், அடல் கெழு தொண்டை தண் தார் அரசொடும் அனிகம் சூழ - வெற்றிமிக்க தொண்டைநாட்டிலுள்ள தண்ணியமாலையையணிந்த அரசனோடும் சேனைகள் சூழ்ந்துவர, கடல்கள் நாற்றிசையும் பொங்கி வருவபோல் - கடல்கள் நான்குதிசைகளினின்றும் புடைபெயர்ந்து வருவனபோல, கலிப்ப வந்தார் - பல வாச்சியங்களுங் கல்லென்றொலிக்கவந்தார்கள்.

குறுநிலமன்னர் பலரும் திறையளக்க உள்ளவன் என்பார் குறுநிலவாழ்க்கைச் செல்வத்தடல்கெழு என்றார். (௧௭)

மன்னனைத்தேவிதன்னைமுறையினால்வழுத்திவாழ்த்தி
நன்னர்கோளாகியோகைநவின்றுவெண்மழுமானீத்த
தென்னவர்பெருமான்றேவிதிருமுகக்கருணைபெற்றுப்
பொன்னடிபணிந்துதம்மூர்போகுவாரினையசொல்வார்.

(இ-ள்.) மன்னனை தேவிதன்னை - சவுந்தரபாண்டியனையும் தடாதகைப்பிராட்டியாரையும், முறையினால் வழுத்தி வாழ்த்தி - முறைப்படித் துதித்துவாழ்த்தி, நன்னர் கோளாகி ஓகை நவின்று - (அவர்களால்) மகிழ்கூர்ந்து ஏற்றுக்கொள்ளப்பட்டவராய்ச் சந்தோஷசெய்தியைப்பேசிமுடித்து, வெள் மழு மான் நீத்த தென்னவர் பெருமான் - வெண்ணிறந்தோய்ந்தமழுவையும மானையும் ஒழித்து மானிடத்திருக்கோலங்கொண்டுவந்தருளிய சவுந்தரபாண்டியர், தேவி திருமுகக் கருணைபெற்று - பிராட்டியார் (இவர்களுடைய) திருமுகங்களிலுள்ள அருட்பார்வையைப்பெற்று, பொன் அடி பணிந்து தம் ஊர் போகுவார் - (அவர்களது) பொன்போலும் அரிய திருவடிகளை வணங்கித் தம்மூரிற்செல்லும் அரசர்கள், இனைய சொல்வார் - இத்தன்மையாகிய சொற்களைச்சொல்லுவாராயினர். (௧௮)

வழுதியர்பெருமான்றன்பாற்கந்தனேவந்தானென்பார்
பழுதறுகற்பினாடன்பாக்கியமிதுவேயென்பா
ரழகினன்மதனும்பெண்மையவாவுறுமிவன்கோலனை
யெழுகடலுலகோவையமேழையுங்காக்குமென்பார்.

(இ-ள்.) வழுதியர் பெருமான் தன்பால் கந்தனே வந்தான் என்பார்-தென்னவர்பெருமானாராகிய சவுந்தரபாண்டியரிடத்து முருகக்கடவுளே அவதரித்தருளினான் என்று (சிலர்) சொல்லுவார்கள், பழுது அறு கற்பினாள் தன் பாக்கியம் இதுவே

என்பார் - குற்றமற்ற கற்பினையுடைய பிராட்டியார் பெறும்பாக்கியம் இப்புத்தி ரப்பேறே என்று சிலர் சொல்லுவார்கள், அழகினால் மதனும் பெண்மை அவாவு றும் இவன் கோல் ஆணை - (தன்னின்மிக்க பேரழகினால் மன்மதனும் பெண்தன் மையை விரும்பும் இவ்வுக்கிரகுமாரன் செங்கோலின் ஆணை, ஏழு கடல் உலகோ - ஏழுகடல் சூழ்ந்த இந்நிலவுலகமட்டுமோ காப்பது, வையம் ஏழையும் காக்கும் எ ன்பார் - இந்நிலவுலகமுதலிய ஏழுலகங்களையும பாதுகாக்கும் என்று (சிலர்) சொ ல்லுவார்கள். (கக)

மனிதர்வான்றவமோதென்பார்வைகுவோர்தவமோவானப்
புனிதர்வான்றவமோவேள்விப்பூசுரர்தவமோகேள்வி
முனிவர்வான்றவமோவீறுமுதலிலாமுதல்வனுள்ளக்
கனிதருகருணைபோலிக்காதலன்றோற்றமென்பார்.

(இ-ள்.) ஈறு முதல் இல்லா முதல்வன் உள்ளம் கனிதரு கருணைபோல்-அந் தமுமாதியுமில்லாத சோமசுந்தரக்கடவுளுடைய திருவுள்ளத்தில் கனிந்துதோன்றி ய திருவருள்போல, இ காதலன் தோற்றம - இந்தப்புத்திரனது திருவவதாரம், மனிதர் வான் தவமோ - (இந்நிலவுலகிலுள்ள) மனிதர்கள் செய்துமுடித்த தவப் பேறோ, தென பார் வைகுவோர் தவமோ - (அன்றிப்) பாண்டிநாட்டிலுள்ளோர் செய்துமுடித்த தவப்பேறோ, வானம் புனிதர் வான் தவமோ - விண்ணுலகிலுள்ள வர்கள் செய்துமுடித்த பெரியதவப்பேறோ, வேளவி பூசுரர்தவமோ-வேள்வியோ ம்பும் அந்தணர்கள்செய்துமுடித்த தவப்பேறோ, கேள்வி முனிவர் வான்தவமோ - நூற்கேள்வியில்வல்ல முனிவர்கள் செய்துமுடிதத தவப்பேறோ, என்பார் - என்று (சிலர்) சொல்லுவார்கள். (உ0)

தருமமாதவத்தின்பேறோவருத்தமாதவத்தின்பேறோ
பெருமைசால்காமநோற்றபெருந்தவபயேறோவெயதற்
கருமையாம்வீடுநோற்றவருந்தவப்பேறோவிந்தத்
திருமகனென்றுதம்மில்வினாய்மகிழ்சிறப்பசென்றார்.

(இ-ள்.) இநத திருமகன்-இந்த அழகுமிக்க செல்வத்திருமகன் (அவதாரம்,) தருமம் மாதவத்தின் பேறோ - புருடார்த்தங்களுள் தருமஞ்செய்துமுடித்த தவப்ப யனோ, அருத்தம் மாதவத்தின் பேறோ- பொருளசெய்துமுடித்த பெரியதவத்தின்ப யனோ, பெருமை சால் காமம் நோறற பெரும தவப்பேறோ - பெருமைமிக்க காமம் நோற்றுமுடித்த பெரியநோன்பின் பயனோ, எய்தற்கு அருமையாம் வீடு நோற்ற அ ரும்தவப்பேறோ என்று - அடைதற்கரியமோட்சம் நோறறுமுடித்த அரியநோன்பி ன்பயனோ என்று, தம்மில் வினாய் மகிழ் சிறப்ப சென்றார்-(ஒருவர்க்கொருவர்) தம் முள்வினவி மகிழ்ச்சிமீக்கூரப் போயினார்கள். (உக)

அவ்வவர்மனைகடோறுமங்கலவணிகளாகக்
கௌவைமங்கலங்களார்ப்புக்கடிநகரெங்கும்பொங்க
தெய்விழாவெடுப்பக்கேள்விகிரம்பியமறையோர்க்கிந்த
தெய்வமாதானநீத்தந்திரைக்கடன்மடுத்தம்மா.

(இ-ள்.) அவ்ர் அவர் மனைகள் தோறும் மங்கலம் அணிகளாக - அவரவர் கள் (தங்கள் தங்கள்) வீடுகள்தோறும் (நிகழ்ந்த) மங்கலமகோற்சவங்களாகக் கொ

ள்ளுதலால், கௌவை மங்கலங்கள் ஆர்ப்பு - முழக்கத்தையுடைய மங்கலவாச்சியங்களினொலி, கடி நகர் எங்கும் பொங்க - அந்தக்காவல்கொண்ட மதுரைநகரெங்கும் ஒலிக்கவும், நெய்விழா எடுப்ப - நெய்யணிவிழாக்கொண்டாடவும், கேள்வி நிரம்பிய தெய்வ மறையோர்க்கு ஈந்த மந்தானம் நீத்தம் - நூற்கேள்வியில் நிறைந்த அந்தணர்க்குத்தந்த பெரியதான வெள்ளமானது (உவட்டெடுத்து) திரை கடல் மடுத்தது - அலையையுடைய கடலிற்புகுந்தது.

நீத்தமென்றது-தாரைவார்க்குநீர். அவரவர் என்றது ஈறுதொக்கு, அவ்வவர் என்நின்றது. ஆக என்னும் வினையெச்சம் காரணப்பொருளில் வந்தது. (௨௨)

சுண்ணமும்பொரியுந்தூவெள்ளரிசியுந்தூர்வைக்காடுந்
தண்ணறுஞ்சிவிறிவீசுதண்பனிநீருஞ்சாந்தும்
மெண்ணெயுநானச்சேறும்பசையறவெடுத்துவாரிக்
கண்ணகன்கரமெங்குங்கழுவினதானவெள்ளம்

(இ-ள்.) தானம் வெள்ளம்-அந்தத் தானவெள்ளமானது, சுண்ணமும் பொரியும் தூ வெள் அரிசியும் தூர்வை காடும் - (மகிழ்ச்சியால் சிந்திய) சுண்ணப்பொடியையும் நெற்பொரியையும் புனிதமாகிய வெள்ளிய அரிசியின்குப்பையையும் அறுகின்குப்பையையும், சிவிறி வீசும் தண் நறும் தண் பனி நீரும் சாந்தும் - துருத்தியால் வீசுந் தண்ணிய நறுமணங்கமழும் குளிர்ந்த பனிநீரையுஞ் சந்தனக்குழம்பையும், எண்ணெயும் நானச் சேறும் பசை யற வாரி எடுத்து - எண்ணெயையுங் கஸ்தூரிக்குழம்பையும் பசையற வாரி எடுத்து, கண் அகல் நகரம் எங்கும் கழுவினது - இடமகன்ற மதுரைநகர்முழுமையுஞ் சுத்திசெய்து சென்றது.

சுண்ணமுதலியவைகள் குப்பையாகச் சுமந்திருத்தலின் எடுத்து வாரிக்கழுவினது என்றார். கழுவினது தொழிற்பெயர் தானவெள்ளம் என்றதற்கு யானையின்மதநீர் வெள்ளம் எனினும் அமையும். தண்பனிநீர் தண்சாந்து. (௨௩)

செம்பொன்செய்துருத்திதூம்புசெய்குழல்வட்டமாக
வம்பொன்செய்சிவிறிவெண்பொன்னண்டைகொண்டாரந்தூங்கும்
வம்பஞ்சுமுலையினாருமைந்தருமாறியாட
வம்பஞ்சுமாறிமாறியனங்கனுமாடல்செய்தான்.

(இ-ள்) செம் பொன் செய் துருத்தி - செவந்தபொன்னினாற்செய்த நீர்த்துருத்தியையும், தூம்பு செய் குழல் - முகத்தில் துவாரஞ்செய்த குழலையும், வட்டம் ஆக அம் பொன் செய் சிவிறி - வட்டமாக அழகிய பொன்னாற்செய்த நீர்தூவுந் துருத்தியையும், வெண் பொன் அண்டை கொண்டு - வெள்ளியாற்செய்த ஒருவகை நீர் தூவுங்கருவியையுங்கொண்டு, ஆரம் தூங்கும் வம்பு அஞ்சும் முலையினாரும் மைந்தரும் மாறி ஆட - முத்தாரந் தொங்கியதையும் கச்சு அஞ்சும் தனங்களையுடைய பெண்களும் புருடரும் மாறிமாறி (ஒருவர்மேலொருவர் நீர்தூவி) விளையாட, அம்பு அஞ்சும் மாறி மாறி-பஞ்சபாணங்களையும் மாறிமாறி, (அவ்விஸ்திரீபுமான்களின்மேல்) அனங்கனும் ஆடல் செய்தான் - மன்மதனும் பிரயோகஞ்செய்தான்.

மாறி ஆடலாவது - துருத்தியுஞ் சிவிறியுமேந்திய பெண்கள் குழலும் அண்டையும் ஏந்தி நீர்தூவலும், குழலும் அண்டையுமேந்திய புருடர்கள் துருத்தியும் சிவிறியும் ஏந்தி நீர்தூவலுமாம். (௨௪)

இன்னணங்களிப்பமூதூரிந்துவாதிரைநன்னாளிற்
பொன்னவன்கேந்திரித்தபுனிதலக்கினத்திற்போந்த
தென்னவர்பெருமானசேய்க்குச்சாதகச்செய்தியாதி
மன்னவர்க்கியன்றவேதமரபினால்வயங்கவாற்றி.

(இ-ள்.) மூதூர் இன்னணம் களிப்ப - தொன்றுதொட்டுள்ள மதுரைநகரமானது இவ்வாறு களிப்பில்மூழ்க, தென்னவர் பெருமான் - சவுந்தரபாண்டியர், இந்து நல் ஆதிரை நாளில் - சோமவாரத்தில் நல்லதிருவாதிரைநக்ஷத்திரத்தில், பொன்னவன் கேந்திரித்த புனித லக்கினத்தில் - வியாழம் கேந்திரித்த பரிசுத்தமாகிய லக்கினத்தில், போந்த சேய்க்கு - அவதரித்த (தமது) புத்திரருக்கு, சாதகம் செய்தி ஆதி மன்னவர்க்கு இயன்ற வேதம மரபினால் வயங்க ஆற்றி - சாதகன்ம முதலியவற்றை க்ஷத்திரியருக்குப் பொருந்தக்கூடிய வேதநூல்முறையால் விளங்கச்செய்து.

சாதகன்மமாவது - அத்திரமந்திரத்தால் நூறு ஓமஞ்செய்து வாமமந்திரத்தால் புத்திரன்முகத்தை எதிர்நோக்கிப் பஞ்சப்பிரமமந்திரங்களை யுச்சரித்து உச்சியைமோந்து புருடமந்திரத்தை வலக்காதில் செலுத்தல். ஆதி என்றது - உத்தாபனத்தை - அஃதாவது - அசுத்தமாகிய அறைவீட்டினின்றும் சுத்தமாகிய உயர்ந்தவிடத்தில் குழந்தையைச் சேர்ப்பிக்குங் கிரியை. (உ௫)

கரியவெண்டிரைநீர்ச்செல்வன்கல்லிறகரிந்தவென்றித்
தெரியலனுலகந்தாங்குதெய்வதவரைக்கோனாதித்
தரியலர்வீரஞ்சிந்தத்தருக்கழிந்தச்சந்தோற்றற்
குரியகாரணத்தானாமமுக்கிரவருமனென்றான்.

(இ-ள்.) கரிய வெண் திரை நீர் செல்வன் - பெரிய வெள்ளிய அலையையுடைய கடற்செல்வனாகிய வருணனும், கல் இறகு அரிந்த வென்றி தெரியலன் - மலையின் சிறகரிந்த வெற்றிமாலையையணிந்த இந்திரனும், உலகம் தாங்கு தெய்வத வரைக்கோன் ஆதி தரியலர் - உலகை (சலனமில்லாது நிலைபெறத்) தாங்குந் தெய்வத்தன்மையையுடைய மகமேரு அரசனும முதலியபகைவர்களது வீரம் சிந்த தருக்கு அழிந்து அச்சம் தோன்றற்கு உரிய காரணத்தால் - (தமது) வீரங்கெட்டுமிகிய இறுமாப்பொழிந்து (தன்னைக்கண்டபொழுதே) அச்சந்தோன்றச் செய்தற்கு உரிய காரணத்தினால், உக்கிரவருமன் நாமம் என்றான் - உக்கிரவருமனென நாமகரணஞ்செய்தருளினார்.

உத்தாபனத்துக்குப்பின் நாமகரணமாதலால் - நாமம் உக்கிரவருமன் என்றார். நாமகரணமாவது - பேரிடுதலிற் செய்யுங்கிரியை. உக்கிரவருமன் - உக்கிரமே கவசமாக உடையவன் என்பது பொருள். (உ௬)

நாலாகுமதியிற்சந்திமிதிப்பதுநடத்தியாறும்
பாலாகுமதியிலன்னமங்கலம்பயிற்றியாண்டின்
மேலாகுமதியிற்கேசவினைமுடித்தைந்தாமாண்டி
னூலாறுதெரிந்துபூணனூற்கடிமுடித்துப்பின்னர்.

(இ-ள்.) நாலாகும் மதியில் சந்தி மிதிப்பது நடத்தி - நான்காமாதத்தில் சந்திமிதித்தலாகிய பிரவாசக்கிரியைசெய்து, ஆறும் பால் ஆகும் மதியில் அன்னம் மங்கலம் பயிற்றி - ஆறாம்பகுதியதாகிய மாதத்தில் அன்னப்பிராசனக்கிரியைமுடித்து, ஆண்டின் மேலாகும் மதியில் கேச வினை முடித்து - பதின்மூன்றா மாதத்தில் சவுள

க்கிரியைமுடித்து, ஐந்து ஆம் ஆண்டில் நூல ஆறு தெரிந்து பூணூல் நூல் கடி முடித்து - ஐந்தாம்வருடத்தில் வேதநூல்விதி வழாது உபநயனக்கிரியை முடித்து, பின்னர் - பின்பு.

பிரவாசமாவது - குழந்தையை எடுத்துக்கொண்டு ஆலயத்துக்குச் செல்லுங் கிரியை. சவுளமாவது - மயிர்வினைக்குச் செய்யுங் கிரியை. உபநயனமாவது - பரசிவத்தைத் தரிசிப்பித்தற்குச் சமீபமாகிய நயனத்தையுண்டாக்குங் கிரியை. (௨௭)

பதநிரைபாழிசாகையாரணம்பணைத்தவேத
முதனிரைக்கலையும்வென்றிமூரிவிற்கலையும்வாளு
மதநிரையொழுகுமையன்மாநிரைவையமபாய்மா
விதநிரையேற்றமற்றுமுணர்த்தினன்வியாழப்புத்தேள்.

(இ-ள்.) பதம் நிரை பாழி சாகை ஆரணம் பணைத்த வேதம முதல் நிரை கலையும் - பதமும் நிரையும் பாழியும் சாகையும ஆரணமும் நிரம்பிய வேதமுதலியவரிசையாயுள்ள நூல்களையும், வென்றி மூரி வில் கலையும - வெற்றியையுடைய விற்றொழிற்குரிய நூலையும், வாளும - வாட்பயிற்சிக்குரிய நூலையும, மதம நிரை ஒழுகும் மையல் மா ஏற்றம் - மதம வரிசைபட ஒழுகுதலால் மயக்கம்பூண்ட யானையேற்றத்தையும், நிரை வையம் ஏற்றம - வரிசைபட அலங்கரித்த தேரேற்றத்தையும், விதம் நிரை பாய் மா ஏற்றம மற்றும - பலவகைப்பட்டவரிசையையுடைய குதிரையின் ஏற்றத்தையும்யுணர்த்தும் நூல்களையும இவையொழிந்த வேறுநூல்களையும, வியாழப்புத்தேள் உணர்த்தினன் - பிரகஸ்பதி பயிற்றுவித்தார்.

பத நிரை பாழி சாகை யாரணம பணைத்த வேதமுத னிரைகலை என்றது - காண்டோபக்கிரமணக்கிரியை எனக்கொள்க. காண்டோபக்கிரமணமாவது - வேதபாகங்களை அத்தியயனஞ்செய்ய ஆரம்பிக்குங்கிரியை. பதம - வாசகம், நிரை - பூர்வபூர்வபதத்தை அனுசரித்து உத்தரோத்தரபதத்தை யுச்சரிக்கும் கிரமம். பாழி-இரண்டுபதத்தை எடுத்துக்கொண்டு பூர்வபதத்தை யொருமுறை யுச்சரித்து உத்தரபதத்தை இரண்டுமுறை யுச்சரித்து மீட்டும பூர்வபதத்தை இரண்டுமுறை யுச்சரித்து உத்தரபதத்தை ஒருமுறை யுச்சரிக்கும சடை. சாகை - சந்தகாண்டத்தினவேறுயுள்ளது. ஆரணம் - அச்சாகையில் பதத்துப் பிரச்சினங்கள கூடியது. பணைத்த என்றது - இவ்வுறுப்புகளால் நிரம்பிய எனப் பொருள்கொள்க. வேதமுதல் நிரை கலை என்றது - ஆறங்கங்களையும். அவையாவன - மந்திரம, வியாகரணம, நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம, சோதிடம. (௨௮)

குருமுகத்தறியவேண்டுமென்பதோர்கொள்கையாலே
யொருமுறைகேட்டாங்கெண்ணெண்கலைகளுமொருங்குதேறி
யரனலதொருவராலுந்தேற்றுவதருமையாலப்
பரனிடைத்தெளிந்தான்பாசுபதாத்திரப்படையுமன்றே.

(இ-ள்.) குரு முகத்து அறிய வேண்டும் என்பது ஓர் கொள்கையால்-(நூல்களைக்) குருமுகமாய் ஆராய்ந்தறியவேண்டுமென்னும் ஒருகோட்பாட்டால், ஒருமுறை கேட்ட ஆங்கு எண் எண் கலைகளும ஒருங்கு தேறி - ஒருகால் கேட்டபடியே அறுபத்துநான்குகலைகளையும ஒருசேர ஐயந்திரிபறத்தெளிந்து, அரன் அலது ஒருவராலும் தேற்றுவது அருமையால் - சிவபெருமானன்றி மற்றொருவராலும்தெளிவித்தற்கருமையால், அப்பரன் இடை பாசுபதாத்திரம் படையும் தெளிந்தான் - அச்சிவபெருமானிடத்துப் பாசுபதாஸ்திரப் பயிற்சியையும் ஆராய்ந்தறிந்தார்.

பாசுபதாத்திரப்படை - பாசுபதாஸ்திர ஆயுதமெனவிற்றலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (உக)

எல்லையில்கலைகளெல்லாமகவைநாலிரண்டின்முற்றத்
தொல்லறிவுடையனாகிக்குரவரைத்தொழுதுபோற்ற
வல்லவனாகியன்னார்மகிழ்ச்சிகொள்கலனாய்வென்றிச
செல்வவேற்றிளைஞரோடுந்திருவிளையாடல்செய்வான்.

(இ-ள்.) நாலிரண்டு அகவையில் - எட்டுவயதில், எல்லையில் கலைகள் எல்லாம் முற்ற - அளவில்லாத நூலுணர்ச்சியெல்லாங் குறைவின்றிநிரம்ப, தொல் அறிவு உடையன் ஆகி - பண்டுள்ள முற்றறிவுடையராகி, குரவரை தொழுது போற்ற வல்லவன் ஆகி - (தாயதந்தையராகிய) இருமுதுகுரவரையும் வழிபட்டுத் துதித்து வாழ்த்த வன்மையையுடையவராகி, அன்னார் மகிழ்ச்சி கொள் கலன் ஆய் - அவ்விருமுதுகுரவருடைய மகிழ்ச்சிக்கோர் பாத்திரமாய், வென்றி செல்வம் ஏறு இளைஞரோடும் - வெற்றிச் செல்வத்தையுடைய ஆண்சிங்கம்போன்ற இளைஞரோடும் (சென்று) திரு விளையாடல் செய்வான் - திருவிளையாடல் செய்து வருவாராயினர்.

நுதற்கண்ணிற் பிறந்த புத்திரனாதலின தொல்லறிவுடையனாகி என்றார்.(கூo)

புகர்மதவேழமுட்டிப்போர்விளையாடிவென்றுந்
தகரொடுதகரைத்தாக்கித்தருக்கமராடிவென்றும்
வகிர்படுகுருதிச்சூட்டுவாரணமாடிவென்று
நகைமணிப்பலகைசெம்பொனான்குறுப்பாடிவென்றும்.

(இ-ள்.) புகர் மதம் வேழம் முட்டி போர் விளையாடி வென்றும் - புள்ளிதங்கிய முகத்தையும் மதத்தையுமுடைய யானைகள் (தம்முள்போர்செய்யப்)பொருத்தி வெற்றிகொண்டும், தகரொடு தகரை தாக்கி தருக்கு அமர் ஆடி வென்றும் - ஆட்டுக்கடாக்களோடு ஆட்டுக்கடாக்களைப் பொருத்தி இறுமாப்போடு போர்செய்யச்செய்து வெற்றிகொண்டும், வகிர் படு குருதி சூட்டு வாரணம் ஆடி வென்றும் - பிளவுபட்ட உதிரம்போலும் செந்நிறமவாய்ந்த சூட்டையுடையசேவல்களை (தம்முள்போர்செய்யப்) பொருத்தி வெற்றிகொண்டும், நகை மணி பலகை - விளங்கும் இரத்தினங்கள் குயிற்றிய பலகையினவரையுள்ளமைந்த, செம் பொன் நான்கு உறுப்பு ஆடி வென்றும் - இரத கஜ துரக காலாள்கள் என்னும் நான்குறுப்புகளைத்தொட்டு விளையாடி வெற்றிகொண்டும்.

வாரணம் என்னும் பலபொருளொருசொல் - வகிர்படு குருதிச் சூட்டென்னுங் குறிப்பால் சேவலையுணர்த்திற்று. வாரணம் - யானை, கோழி, சங்கு, கடல், கவசம், கேடகம். (கூக)

காற்றினுங்கடியமாவிற்காவதம்பலபோய்மீண்டுங்
கூற்றினுங்கொடியசீற்றக்குஞ்சரமுகைத்துமவையை
யாற்றினும்யானத்தாவியகத்தினுள்ளின்பந்துய்த்தும்
வேற்றிறன்மைந்தரோடுமல்லமர்விளைத்துவென்றும்.

(இ-ள்.) காற்றினும் கடிய மாவின் பல காவதம் போய் மீண்டும் - காற்றினும் விரைந்துசெல்லுங் குதிரையின்மேல் பலகாதஞ்சென்று திரும்பியும், கூற்றினும் கொடிய சீற்றம் குஞ்சரம் உகைத்தும் - இயமனிலுங் கொடுந்தொழில்பூண்டகோ

பத்தையுடைய யானையைச்செலுத்தியும், வையை ஆற்றின் உய்யானத்து ஆவி அகத்தினுள் இன்பம் துய்த்தும் - வையையாற்றின்கண்ணும் பூந்தோட்டத்தின்கண்ணும் தடாகத்தின்கண்ணும் இன்பநுகர்ந்தும், வேல் திறல் மைந்தரோடு மல் அமர் விளைத்து வென்றும் - வேலின்வெற்றிவாய்ந்த இளைஞரோடும் மற்போர்புரிந்து வெற்றிவாய்ந்தும்.

வையையாற்றிலும் தடாகத்திலும் நீர்விளையாட்டயர்தலும், பூந்தோட்டத்தில் மலர்கொய்து சூடலும் உடைமையால் இன்பந்துய்த்துமென்றார். (௫௨)

சந்தவெற்படைந்துவேட்டஞ்செய்துமச்சைலவாழ்க்கை
யந்தணராசிகூறவவர்தொழில்விளையுமன்றோர்
கந்தமென்கனிவிருந்துண்கைதழீஇக்களித்துமீண்டு
மிந்தவாறைம்மூவாண்டுகழியமேலெய்துமாண்டில்.

(இ-ள்.) சந்தம் வெற்பு அடைந்து வேட்டம் செய்தும் - பொதியமலையை யடைந்து வேட்டையாடியும், அச்சைலவாழ்க்கை அந்தணர் ஆசி கூற - அப்பொதியமலையில்வாழும் வாழ்க்கையையுடைய முனிவர்கள் ஆசிவசனங்கூற, அவர் தொழில் விளையும் - அவர்செய்யுந்தவத்தொழில் (முட்டின்றிமுடிதலை) விளைவியும், அன்னோர் கந்தம் மெல் கனி விருந்து ஊண் கைதழீஇ களித்தும் - அம்முனிவர்கள் (களிகூர்ந்து) தந்தகிழங்கும் மெல்லியகனியும் ஆகிய விருந்துணவைக் கைக்கொண்டு மகிழ்ந்தும், மீண்டும் - (தமது) திருக்கோயிற்குத் திரும்பியும், இந்த ஆறு ஐம்மூவாண்டு கழிய - இந்தப்படி பதினைந்து வருடங்கழிய, மேல் எய்தும் ஆண்டில் - இனிவரும் பதினாறாம் வருடத்தில்.

சந்தவெற்பு - சந்தனமரநெருங்கிய மலையென்றமையால் பொதியமலையென்றும். (௫௩)

சூர்முதறடிந்ததங்கடோன்றலேயிவனென்றெண்ணிக்
கார்முகமயிலும்வேலுங்கைவிடாக்காக்குமாபோல
வார்முகமுலையினாரும்வடிக்கணுமருங்குமொய்ப்பக்
கூர்முகவேலானின்னகொள்கையனாகத்தாதை.

(இ-ள்.) சூர் முதல் தடிந்த தங்கள் தோன்றலே இவனென்று எண்ணி - சூரபன்மனாகிய மாமரத்தினவேரை அறுத்த தங்கள் இறைவனே இவனென்றுகருதி, கார்முகம் மயிலும் வேலும் கைவிடாது காக்கும் ஆறுபோல - கரியநிறம்வாய்ந்த முகத்தையுடைய மயிலும் வேலும் (சிறிதும்) நெகிழாமல் நின்றுகாக்குமவைபோல, வார்முகம் முலையினாரும் - கச்சினமுகத்திலடங்கிய முலையையுடைய பெண்களும், வடி கண்ணும் மருங்கு மொய்ப்ப - (அவர்கள்) மாவடுவின் பிளவையொத்தகண்களும் (தமது) பக்கங்களில் மொய்க்க, கூர்முகம் வேலான் இன்ன கொள்கையன் ஆக - கூர்மையையுடைய வேலையேந்திய உக்கிரகுமாரர் இக்கோலப்பருவமுடையவராக, தாதை - சவுந்திரபாண்டியர்.

விடாது என்னும் எதிர்மறை வினையெச்சமும், ஆறு என்னும் பெயர்ச்சொல்லும் ஈறு தொக்குநின்றன. (௫௪)

பங்கயச்செவ்விதாக்கிக்கண்மனம்பருகுகாந்தி
யங்கழற்காலுஞ்சொன்னவடைவினிற்றிரண்டுநீண்ட
சங்கையும்வட்டந்தோன்றுஞ்செழுமுழந்தாளுநால்வாய்த்
துங்கவீரங்கவுண்மால்யானைத்துதிக்கைபோற்றிரள்கவானும்.

(இ-ள்.) பங்கயம் செவ்வித்து ஆகி - அன்றலர்ந்த தாமரைமலர்போலும் அழகினையுடையதாகி, கண் மனம் பருகு காந்தி அம் கழல் காலும் - (கண்டோர்கள்) கண்ணையும்மனத்தையும் கொள்ளைகொள்ளும் ஒளிவாய்ந்த அழகிய வீரகண்டையணிந்த காலையும், சொன்ன அடைவியில் திரண்டு நீண்ட, சங்கையும் - சாமுத்திரிகை நூலிற்சொன்னமுறையே திரண்டுநீண்ட கணைக்காலையும், வட்டம் தோன்று செழுமுழந்தாளும் - எலும்பின் வட்டவடிவுதோன்றுமற் றசைந்தமுழங்காலையும், கால்வாய் தங்கம் ஈரங்கவுள் மால் யானை துதிக்கைபோல் திரள்கவானும்-காற்றசையும் வாயையும் உயர்ந்த மதநீரின் தண்மைவாய்ந்த கபோலத்தையும் மயக்கத்தையுமுடைய யானையினது துதிக்கைபோலத் திரண்டதொடையையும். (௬௫)

சிறுகியவயிறுந்தாழ்ந்தநாபியுஞ்செவ்விநோக்கு
மறுவில்கண்ணடியினன்னகடியகல்வரைகொண்மார்பு
மெறியிசைவீணைத்தண்டி னிளைந்துநீண்டிழிந்தகையும்
வெறியதாரிடந்தமேருவெற்பிரண்டனையதோளும்.

(இ-ள்.) சிறுகிய வயிறும் - சிறுகிய உதரத்தையும், தாழ்ந்த நாபியும்-ஆழ்ந்தவுந்தியையும், செவ்வி நோக்கும் மறு இல கண்ணடியின் அன்ன கடி அகல்வரைகொள் மார்பும் - (உலகத்தினர் தமது படிவத்தினது) அழகுநோக்குதற்கு(கருவியாகிய) குற்றமற்ற கண்ணடிபோல(சருச்சரையின்றி) ஒளி(மிக்க) அகன்றமலையையொத்த மார்பையும், எறி இசை வீணை தண்டின் இளைந்து நீண்டு இழிந்தகையும் - நரம்பைத்தடவுதலால் இசையெழும் வீணையினது தண்டைபோலத் தம்முளொத்து நீண்டு முழந்தாளதொட நிமிர்ந்தகைகளையும், வெறிய தார் கிடந்த மேரு வெற்பு இரண்டு அனைய தோளும் - வாசனையையுடைய மாலைசூழ்ந்த இரண்டுமகமேருவையொப்பப் பணைத்ததோள்களையும். (௬௬)

வலம்புரியென்னவாய்ந்தகண்டமுமலராண்மன்றும்
பொலம்புரிகமலமன்னவதனமும்பொதுவனோக்கி
நிலம்புரிதவப்பேறன்னான்வடிவெலாநின்றுநின்று
நலம்புரிநூலானோக்கிச்சோதிப்பானடிக்கவல்லோன்.

(இ-ள்.) வலம்புரி என்னவாய்ந்த கண்டமும் - வலம்புரிச்சங்கைப்போல வரைவாய்ந்து திரண்டகண்டத்தையும், மலராள் மன்றும் பொலம்புரி கமலம் அன்ன வதனமும் - இலக்குமி நிலைபெயராது வசிக்கும் பொன்னிறம்வாய்ந்த தாமரையையொத்த முகத்தையும், நடிக்கவல்லான் - இந்திரசாலவிச்சைசெய்யவல்ல சவுந்தரபாண்டியர், பொதுவால் நோக்கி - பொதுவிலக்கணத்தாற் பார்த்தருளி நிலம்புரி தவம் பேறு அன்னான் வடிவு எல்லாம்-நிலமகள்செய்த தவப்பயனையொத்த உக்கிரகுமாரருடைய அவயவங்களையெல்லாம், நின்று நின்று நலம்புரி நூலால் நோக்கி சோதிப்பான் - உற்றுநோக்கிச் சாமுத்திரிகை நூலிற்கூறிய சிறப்பிலக்கணமரபால் நோக்கிச் சோதிக்கத்தொடங்கினார்.

நலம்புரிநூல் - அவயவங்களி னிலக்கணங்கூறுநூல். (௬௭)

உன்னதமாறுநீண்டவுறுப்பைந்துகுறுகுநான்கு
மன்னதுகுறுக்கநான்காமகலுறுப்பிரண்டேழாகச்
சொன்னதுசெவப்புமூன்றுகம்பீரந்தொகுத்தவாறே
யின்னவைவிரிக்கினெண்ணிலக்கணவுறுப்பாமென்ப.

(இ-ள்.) உன்னதம் ஆறு ஆக - உயர்ந்த வுறுப்புகளாறாகவும், நீண்ட உறுப்பு ஐந்து ஆக - நீண்ட வுறுப்புகளைந்தாகவும், சூக்கம் தானும் அன்னது ஆக - சிறிய வுறுப்புகளைந்தாகவும், குறுக்கம் நான்கு ஆக - குறுகிய உறுப்புகள் நான்காகவும், அகல் உறுப்பு இரண்டு ஆக - அகன்ற வுறுப்புகளிரண்டாகவும், சொன்னது செவப்பு ஏழு ஆக - நூலிற்சொல்லிய செவந்தவுறுப்புகளேழாகவும், கம்பீரம் மூன்று ஆக - ஆழ்ந்தவுறுப்புகள்மூன்றாகவும், தொகுத்த ஆறு ஏ - (சாமுத்திரிகைநூலில்) தொகுத்துக்கூறியபடியே, இன்னவை விரிக்கில் - இவற்றையெடுத்து விரித்துக் கூறில், உறுப்பு எண்ணான்கு இலக்கணம் என்ப - உறுப்புகளாலமைந்த முப்பத்திரண் டிலக்கணமென்று கூறுவர்.

ஆக என்னும் வினையெச்சம் இடையில் நின்று ஏனையிடங்களிற் பிரிந்துசெல்லுதலால் இடைநிலைத்தீவகவணி. ஆம் சாரியை யிடைச்சொல். (௩௮)

வயிறுதோ ணெற்றிநாசிமார்புகையடியிவ்வாறு
முயரில்வான் செல்வனாகுமொளிகவர்கண்கபோலம்
புயல்புரைவள்ளறசெங்கைபுதுமணங்கவருந்துண்டம்
வியன்முலைநடுமார்பைந்துநீண்டவேல்விளைக்குநன்மை.

(இ-ள்.) வயிறு தோள் நெற்றி நாசி மார்பு கை அடி இவ்வாறும் உயரில் வான் செல்வனாகும் - வயிறும் புயமும் நெறறியும் நாசியும் மார்புமகையினடியும் ஆகிய இந்த ஆறுறுப்பும் உயர்ந்திருப்பானாயின் பெருஞ்செல்வமுடையவனாவான், ஒளி கவர்கண் - (புலன்களுள் ஒன்றாகிய) ஒளியைத் தனதாகப்படுத்தியகண்ணும, கபோலம்—கபோலமும், புயல் புரை வள்ளல் செங்கை - மேகம்போலக் கைம்மாறு கருதாதுகொடுக்கும் செவந்தகையும், புதுமணம் கவரும் துண்டம் - நறுமணங்கவரும் நாசியும், முலை நடு வியன மார்பு ஐந்தும் நீண்ட வேல் - முலையின்மத்தியிலுள்ள பரந்தமார்பும் ஆகிய இவ்வைந்துறுபபும் நீண்டிருப்பானாயின், நன்மை விளைக்கும் - (அவை அவனுக்கு) நன்மையைத்தரும். (௩௯)

நறியபூங்குஞ்சிதொக்குவிரல்கணுநகம்பல்லைந்துஞ்
சிறியவேலாயுள்கோசஞ்சங்கைநாமுதுகிந்நான்குங்
குறியவேற்பாக்கியப்பேறாஞ்சிரங்குளமென்றாய்ந்தோ
ரறியுமிவ்வுறுப்பிரண்டுமகன்றவேலதுவுநன்றாம்.

(இ-ள்.) நறிய பூம் குஞ்சி - நறுமணங்கமழும மலரையணிந்த சிகையும், விரல் கணு நகம் பல் ஐந்தும் - விரலுங் கணுவும் நகமும் பல்லும் ஆகிய இவ்வைந்தும், தொக்கு சிறியவேல் ஆயுள் - சிறுதநுச் சிறியனவாயிருக்கப் பெறுவானாகில் ஆயுள்விருத்தியாம், கோசம் சங்கை நா முதுகு இந்நான்கும் குறியவேல் பாக்கியப்பேறாம் - கோசமுங் கணைக்காலும் நாவும் முதுகும் ஆகிய இந்நானகுறுப்பும் குறியனவாயிருக்கப் பெறுவானாகில் பெரும்பாக்கியப் பயனுண்டாம், ஆய்ந்தோர் அறியும் சிரம் குளம் என்ற இவவிரண்டு உறுப்பும் அகன்ற வேல் - (சாமுத்திரிகைநூலின்) ஆராய்ச்சியின்வல்லோர் நன்கறியும் தலையும் நெற்றியும் என்றுசொல்லப்பட்ட இந்த இரண்டு உறுப்புகளும், அகன்றவேல் அதுவும் நன்றாம் - அகன்றிருந்தானாகில் அவ்வகற்சியும் நன்மையைவிளைக்கும். (௪0)

அகவடியங்கைநாட்டக்கடையிதழண்ணநாக்கு
நகமிவையேழுஞ்சேந்தநன்மையிற்பெறுமாவின்ப

இகல்வலியோசைநாபியென்றிவைமூன்றுமாழ்ந்த
தகைமையாலெவர்க்குமேலாநன்மைசாறக்கோனென்று.

(இ-ள்.) அடி அகம் அங்கை - அடியினுள்ளிடமும் உள்ளங்கையும், நாட்டம் கடை - கட்கடையும், இதழ் அண்ணம் நாக்கு நகம் இவை எழும் - இதழும் மேல்வாயும் நாக்கும் நகமும் (ஆகிய) இவ்வுறுப்புகளேழும், சேந்த நன்மையால் மா இன்பம் பெறும் - செவந்திருக்கும் நன்மையையுடையதனால் பெரிய இன்பம் பெறுவான், இகல் வலி ஓசை நாபி என்ற இவை மூன்றும் - (மிக்க) வலிமையும் ஓசையும் கொப்பூழும் என்றுசொல்லப்பட்ட இம்மூன்றுறுப்புகளும், ஆழ்ந்த தகைமையால் - ஆழ்ந்திருக்குந் தன்மையுடையன, எவர்க்கு மேலாம் நன்மைசால் நற் கோன் என்று - உலகிலுள்ள யாவர்க்கும் மேம்பட்ட நன்மைநிறைந்த தகுதியுடையோனென்றுகருதி.

என்ற என்னும் இடைச்சொலலடியாகப்பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம் ஈறுதொக்குநின்றது இகல்வலி ஒருபொருட்பன்மொழி (௬௧)

எல்லையின்மூர்த்திமைந்தனிலக்கணநிறைவினோடு
நல்லவாங்குணனுநோக்கிப்பொதுவறஞாலங்காக்க
வல்லவனிவாழ்நாணனிபெறவல்லனென்று
வல்லணிமிடற்றானபின்னுமனத்திலெண்ணுகின்றான்.

(இ-ள்) எல்லை இல் மூர்த்தி - அளவைகளால் அளந்தறியவொண்ணாத சவுந்தரபாண்டியர், மைந்தன் இலக்கணம் நிறைவினோடும் - (தமது) புத்திரனுடைய முப்பத்திரண்டிலக்கணங்களின் சால்பினோடும், நல்ல ஆம் குணனும் நோக்கி - (அவற்றிற்கியைந்த) நல்லனவாகிய குணங்களையும் ஆராய்ந்தறிந்து (இவன்றான்) ஞாலம் பொது அற காக்கவல்லவன் ஆகி - உலகந்தனதடிப்படக் காக்கவல்லவனாய், வாழ் நாள் நனிபெற வல்லன் என்று - வாழ்நாளும் மிகப்பெறவும் வல்லனென்று கருதி, அல் அணி மிடற்றான் - (விஷத்தால்) இருண்ட ஸ்ரீகண்டத்தையுடைய அப்பெருமானார், பின்னும் மனத்தில் ஆய்ந்து சூழும் - பின்னும் மனத்தினால் தனித் தனிவரையறுத்து ஆலோசிக்கின்றார். (௬௨)

இத்தகுபண்புசான்றநீர்மையாலிசைமைநீதி
வித்தகநல்லவுள்ளமுடைமைமெய்வீறுதெய்வ
பத்திமையுலகுக்கெல்லாமகிழ்ச்சிசெய்பண்புசாந்த
சித்தமெவ்வுயிர்க்குமன்புசெய்கைநல்லீகைகல்வி.

(இ-ள்.) இத்தகு பண்புசான்ற நீர்மையால் - இவ்வாறு தக்கருணங்கள் நிறைந்ததன்மையால், இசைமை நீதி - புகழும் நீதியும், வித்தகம் உடைமை நல்ல உள்ளம் உடைமை - சதுரப்பாடுடைமையும் நல்ல உள்ளமுடைமையும், மெய் வீறு தெய்வ பத்திமை - சத்தியமும் நிகரின்மையும் ஈசுரபத்தியும், எல்லா உலகுக்கும் மகிழ்ச்சிசெய் பண்பு சாந்தசித்தம் - எல்லாவுலகங்களுக்கும் இதஞ்செய்யும் தன்மையும் சாந்தசித்தமும், எவ்வுயிர்க்கும் அன்பு செய்கை நல் ஈகை கல்வி - எல்லாவுயிர்களின்மேலுங் கருணைசெய்தலும் நல்லகொடையும் கல்வியும்.

எழனுருபு நிற்குமிடத்து நான்கனுருபுவந்தது உருபுமயக்கம். எல்லாம் என்பதனிறுதியில் முற்றும்மைதொக்கது. (௬௩)

வெல்லுதற்கரியார்தம்மைவெல்லுதறேவராலுஞ்
செல்லுதற்கரியதேத்துஞ்சென்றிடுதிறையுங்கோடல்
புல்லுதற்கரியஞாலமாலைபோற்புயத்திலேந்திச
சொல்லுதற்கரியகீர்த்தியுலகெலாஞ்சுமப்பவைத்தல்.

(இ-ள்.) தேவராலும் செல்லுதற்கு அரிய தேத்தும் சென்று - தேவர்களாலும் அடைதற்கரிய இடத்துஞ்சென்று, வெல்லுதற்கு அரியார் தம்மை வெல்லுதல் - அத்தேவர்களால் வெல்லுதற்கரிய பகைவரை வெற்றி கோடலும், இடு திறையும் கோடல் - (அவர்கள்) கட்டுந் திறையையுங் கைக்கோடலும், புல்லுதற்கு அரிய ஞாலம் - (பிறரால் ஒரு சேர) அடைதற்கரிய உலகத்தை, மாலை போல் புயத்தில் ஏந்தி - மாலைபோலப் புயத்தி லெளிதாகச் சுமந்து, சொல்லுதற்கு அரிய கீர்த்தி - வரையறுத்துச் சொல்லவொண்ணாத (தனது) பிரதாபத்தை, உலகு எலாம் சுமப்ப வைத்தல் - உலகமுற்றும் சுமக்க நிலைபெற வைத்தலும்.

வெற்றிகோடலும், திறைகோடலும், உலகமுற்றுந் தாங்குதலும் உடைமை பற்றிக் கீர்த்தியைப் பிரதாபமென்றும். பிரதாபம் என்றது வெற்றியால் வரும் புகழ்ச்சி. தேம் இடப்பெயர்ச்சொல்-அது உருபேற்குமிடத்து ஏழாம் அத்துச்சாரியை யினகரமுங்கெட்டுத் தேத்து என நின்றது. (௪௪)

என்றிவையாதியாயவியற்குணமுடையனாகி
நன்றிசெய்துலகுக்கெல்லாநாயகனொருவனாகி
நின்றிடுமிவற்குப்பின்னர்நீண்முடிகவித்துமுன்னர்
மன்றல்செய்கென்றுசூழ்ந்துமதிஞரோடுசாவினானே.

(இ-ள்.) என்ற இவை ஆதியாய - என்று சொல்லப்பட்ட இவை முதலாகிய (பெருந்தகைமைகளை) இயல் குணம் உடையன் ஆகி - இயற்கைக் குணங்களாக வுடையவனாயிருத்தலால், நன்றி செய்து - (உயிர்களுக்கு) இதமே புரிந்து, உலகுக்கு எல்லாம் ஒருவன் நாயகனாகி நின்றிடும் இவற்கு - உலகங்களுக்கெல்லாந் தானொருவனே தலைவனாய் நிற்கு மிவனுக்கு, பின்னர் நீள் முடி கவித்தும் - பின்பு ஒளிமிக்க நீண்ட முடி சூட்டுவோம், முன்னர் மன்றல் செய்க என்று சூழ்ந்து - முன்பு திருமணஞ்செய்வோமென்று ஆலோசித்து, மதிஞரோடு உசாவினான் - சுமதி முதலிய அமைச்சரோடு ஆலோசித்தருளினார்.

ஆகி காரணப்பொருளில்வந்த இறந்தகால வினையெச்சமாதலால் ஆதலால் எனப் பொருள் கொண்டாம். கவித்தும் எதிர்காலத்தன்மைப்பன்மைவினைமுற்று. தும் தன்மைப்பன்மை. (௪௫)

உக்கிரகுமாரபாண்டியனது திருவவதாரப்படலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரமுளபடத் திருவிருத்தம் - ௧௮௫.

உக்கிரகுமாரனுக்கு வேல்வளைசெண்டு கொடுத்ததிருவிளையாடல்.



## பன்னிரண்டாவது

# உக்கிரகுமாரனுக்கு

## வேல் வளை செண்டு கொடுத்த படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உருக்குந்திறலுக்கிரகுமரனுதயமிதுவான்மதியுநதிப்
பெருக்குங்கரந்தசடைக்கற்றைப்பெருந்தேர்ச்செழியர்பிரானவற்குச்
செருக்குஞ்செல்வமணமுடித்துச்செய்வேல்வளைசெண்டளித்துள்ளந்
தருக்குமுடிதந்தரசுரிமைதந்தசெயலுஞ்சாற்றுவாம்.

(இ-ள்.) உருக்கும் திறல் உக்கிர குமரன் உதயம் இது-(பகைவரைக்) கெடுக்கும் வலிமைவாய்ந்த உக்கிரகுமாரர் அவதரித்த வரலாறு இத்திருவிளையாடலாம், வால் மதியும் நதிப்பெருக்கும் கற்றை சடை கரந்த - வெள்ளிய சந்திரனையும் நதிப்பெருக்கையும் நெருங்கியசடையையும் ஒளித்தருளிய, பெரும் தேர் செழியர் பிரான்-பெரியதேரையுடைய பாண்டியர் இறைவராகிய சவுந்தரபாண்டியர், அவற்கு-அவ்வுக்கிரகுமாரருக்கு, செல்வம் செருக்கு மணமுடித்து - செல்வத்தாலிறுமாந்திருக்குந்திருமணத்தை (முன்னர்) முடித்து, செய் வேல் வளை செண்டு அளித்து - உதிரந்தோய்ந்தவேலையும் சக்கரத்தையும் செண்டையுங்கொடுத்து, உள்ளம் தருக்கு முடிதந்து - மனமிறுமாக்கும் முடிசூட்டி, அரசு உரிமை தந்த செயலும் சாற்றுவாம் - (தமது) அரசுரிமையுந்தந்த திருவிளையாடலைச்சொல்லுவாம்.

செல்வம் செருக்கு மணம், உள்ளந்தருக்குமுடி, உடையவன்றொழிலை உடைமைகண்மேலேற்றிக்கூறினார். (௧)

வையைக்கிழவன்றன்னருமைக்குமரன்றனக்குமணம்புணர்ச்சி
செய்யக்கருதுந்திறநோக்கியறிஞரோடுந்திரண்டமைச்சர்
மையற்றழியாநிலந்திருவுமரபுங்குடியும்புகழ்மையுநம்
மையற்கிசையத்தக்ககுலத்தரசர்யாரென்றளக்கின்றார்.

(இ-ள்.) வையை கிழவன் - வையையாற்று நீர்த்துறைக்குரிய சவுந்தரபாண்டியர், தன் அருமை குமரன் தனக்கு - தமது அருமைப்புத்திரருக்கு, மணம் புணர்ச்சி செய்ய கருதும் திறன் நோக்கி - திருமணஞ்செய்யக்கருதிய பாருபாட்டையுணர்ந்து, அமைச்சர் அறிஞரோடும் திரண்டு - சுமதிமுதலிய மந்திரிமார் மூதறிஞரோடும் ஒருசேரக்கூடி, மை அற்று அழியா நிலம் திருவும் - குற்றமற்று ஒருபொழுதும் சிதையாத நிலவுரிமைச்செல்வமும், மரபும் குடியும் புகழ்மையும்-தொன்றுதொட்டு முறைபிறழாதுவரும் மரபும் குடிப்பிறப்பும் (இவற்றிற்கியைந்த) புகழ்ச்சியும் (ஆகிய இவைகளுக்கு) நம் ஐயற்கு இசைய தக்க குலத்து - நமது பெருமானுக்குப் பொருந்தத்தக்க குலத்திற்பிறந்த, அரசர் யார் என்று அளக்கின்றார்- அரசர்யாவரென்று (தம்முள்) அளந்து அறிவாராயினர். (௨)

தீந்தண்புனல்சூழ்வடபுலத்துமணவூரென்னுந்திருநகர்க்கு
வேந்தன்பரிதிதிருமரபின்விளங்குஞ்சோமசேகரனென்
றோய்ந்தகேள்வியவனிடத்துத்திருமாதென்னவவதரித்த
காந்திமதியைமணம்பேசவிருந்தாரமைச்சரனையிருள்வாய்.

(இ-ள்.) தீம் தண் புனல் சூழ் வடபுலத்து மணவூர் என்னும் திருநகர்க்கு வேந்தன் - இனிய தண்ணியநீர்சூழ்ந்த (மதுரையின) வடபாலுள்ள மணவூரென்னும் திருநகர்க்கு அரசனாய், திரு பரிதி மரபின் விளங்கும் சோமசேகரன் என்ற ஆய்ந்த கேள்வி அவன் - சிறந்த சூரியன்மரபில் அவதரித்த சோழனாகிய சோமசேகரனென்று சொல்லப்பட்டு ஆராய்ந்தகேள்வியில்வல்லவன் (மேற்கூறியவற்றுள் ஒன்றும் முட்டின்றி நிறைந்தவனாதலால்) இட்டது திருமாது என்ன அவதரித்த காந்திமதியை-அவனிடத்தில் இலக்குமிபோல அவதாரஞ்செய்த காந்திமதி என்பவளை, மணம்பேச இருந்தார்-திருமணவினைக்குப் பேசவிருந்தார்கள், அற்றை கனை இருள்வாய் - அந்நாளில் நடுராத்திரியில்.

கனையிருள் - மிக்கவிருள் ஆதலால் நடுராத்திரி என்றும். (௩)

வெள்ளைக்களிற்றின்பிடர்சுமந்தகுடுமிக்கோயின்மேயவிளம்
பிள்ளைக்கதிர்வெண்மதிமௌலிப்பெருமானிரவிமருமானாம்
வள்ளற்கரத்தான்கனவிலெழுந்தருளிவானோர்நனவிறக்குங்
கள்ளத்துருவாந்திருமேனிகாட்டியிதனைவிளம்புவார்.

(இ-ள்.) வெள்ளைக் களிற்றின் பிடர் சுமந்த குடுமி கோயில் மேய - வெள்ளையானையின் பிடர்சுமந்த சிகரத்தையுடைய திருக்கோயிலுள் எழுந்தருளிய, வெள் கதிர் இளம் பிள்ளை மதி மௌலி பெருமான் - வெள்ளியகிரணத்தையுடைய இளஞ்சந்திரனையணிந்த சடாமுடியையுடைய சவுந்தரபாண்டியர், இரவி மருமான் ஆம் வள்ளல் கரத்தான் கனவில் எழுந்தருளி - சூரியன் புத்திரனாகிய வள்ளன்மை நிறைந்த கையையுடைய சோமசேகரச்சோழன் கனவில் எழுந்தருளி, வானோர் நனவு இறக்கும் கள்ளத்து உருவாம் திருமேனிகாட்டி - தேவர்கள் நனவிற்கு மறைந்தபடிவமாகிய (தமது) திருமேனியைப் புலப்படுத்தி, இதனை விளம்புவார் - இதனைச் சொல்லியருளுகின்றார்.

உம்மை - சிறப்புப்பொருட்டு. (௪)

அன்னமிறைகொள்வயன்மதுரைச்சிவன்யாமரசநீயீன்ற
பொன்னையனையாடனைமதுராபுரியிற்கொடுபோய்மறுபுலத்து
மன்னர்மகுடமணியிடறமழுங்குங்கழற்கார்சுந்தரனாந்
தென்னர்பெருமான்குமரனுக்குக்கொடுத்தியென்றுசெப்புதலும்.

(இ-ள்) அரச-அரசனே, யாம் அன்னம் இறைகொள் வயல் மதுரைச்சிவன்-யாம் அன்னம்வசிக்கும் வயல்கள்சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சிவன், நீ ஈன்ற பொன்னை அனையாள் தனை - நீபெற்ற இலக்குமியையொத்த காந்திமதியை, மதுராபுரியில் கொடுபோய் - மதுரைத் திருநகருக்குக்கொண்டு சென்று, மறு புலத்து மன்னர் மகுடமணி இடற மழுங்கும் (திறை இறுக்கவந்துவணங்கிய) வேற்றுத்தேயத் தரசர்களது கிரீடவுருப்பிலுள்ள இரத்தினங்களிடறுதலால் தேய்ந்த, கழல் கால் சுந்தரனாம் தென்னர் பெருமான் குமரனுக்கு - வீரகண்டையணிந்த சவுந்தர பாண்டியர் குமாரராகிய உக்கிரகுமாரபாண்டியருக்கு, கொடுத்தி என்று செப்புதலும் - தாராயென்றுகூற.

செப்புதலும் - நிகழ்காலவினையெச்சம். செப்பு-பகுதி. து - அல் இரண்டும் சாரியை. உம்-எச்சவிகுதி. (௫)

உள்ளக்கமலமுகக்கமலமுடனேமலரவிருதடங்க
ணள்ளற்கமலமலர்ந்துதனதங்கைக்கமலமுகிழ்த்தெழுந்து
வள்ளற்பரமன்கருணையெளிவந்தசெயலைநினைந்தன்பின்
வெள்ளத்தழுந்தியெழுந்திரவிவேலைமுளைக்கும்வேலையினில்.

(இ-ள்.) உள்ளம் கமலம் முக கமலம் உடனே மலர - இதயமாகிய தாமரையானது முகமாகிய தாமரையோடே மலர்ந்து பொலிய, இரு தடம் கண் அள்ளல் கமலம் மலர்ந்து - இரண்டு பெரிய கண்களாகிய தாமரைகள் மலர்ந்து, தனது அம் கை கமலம் முகிழ்த்து எழுந்து - தனது அழகிய கைகளாகிய தாமரைகளைக் குவித்து (கண்படைப்பள்ளியினின்றும்) எழுந்து, வள்ளல் பரமன் கருணை எளிவந்த செயலை நினைந்து - அருட்கொடையையுடைய சிவபெருமான் திருவருள் (தனக்கு) எளிதிற் கிட்டிய செயலைக் கருதி, அன்பின் வெள்ளத்து அழுந்தி எழுந்து - அன்பாகிய பெருக்கில் ஆழ்ந்து மீண்டெழுந்து, இரவி வேலை முளைக்கும் வேலையினில் - சூரியன் கடலிற்றோன்றும் வைகறைப்போதில்.

தாமரைக்குப் பங்கயம் என்பது ஓர் பரியாய நாமமாதலால் சாதியடைதந்து அள்ளற்கமலம என்றார். சேற்றிற்றோன்றிய தாமரையென்பது பொருள். பங்கயம் சேற்றிற்றோன்றியது. கண் கமலமலர்ந்து விழித்து என்னும் பொருள்மேல்நின்றது.

நித்தநியமக்கடனிரப்பிநிருபனமைச்சரொடுநான்கு
பைத்தகருவிப்படையினொடுபலவேறியமுங்கலிப்பத்தன்
பொய்த்தமருங்குற்றிருமகளைப்பொன்னனாரோடிரதமிசை
வைத்துமணஞ்சேர்திருவினொடுமதுரைநோக்கிவழிக்கொண்டான்.

(இ-ள்.) நிருபன் நித்தம் நியமக்கடன் நிரப்பி - சோமசேகரச்சோழன் நித்த நியமக்கடன்களைக் குறைவின்றிச் செய்துமுடித்து, அமைச்சரொடு நான்கு பைத்த கருவிப்படையினொடு - மந்திரிகளோடு நான்காய்ப் பரந்த ஆயுதங்களேந்திய சேனைகளோடு, வேறு பல இயமும் கலிப்ப - வெவ்வேறாகிய பல வாச்சியங்களும் தொனிக்க, பொய்த்த மருங்குல் தன் திருமகளை பொன்னனாரோடு இரத மிசை வைத்து - பொய்போலும் இல்லாத இடையையுடைய தனது செல்வப்புத்திரியை (மெய்க்காவலராகிய) இலக்குமியையொத்த பெண்களோடு தேரின்மேல் வைத்து, மணம் சேர் திருவினொடு மதுரை நோக்கி வழிக் கொண்டான் - திருமணத்துக்குரிய செல்வத்தோடு மதுரைத் திருநகரை நோக்கியாத் தொடங்கினான்.

கருவியே சேனையாதலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக்கொண்டு கருவியாகிய படையெனக்கொள்ளுதலுமொன்று. "பொருள்கருவிகாலம்" என்னுந் திருக்குறள் உரையிற்காண்க. பைத்த இறந்தகாலப்பெயரெச்சம். பை-பகுதி.

நென்னலெல்லைமணம்பேசநினைந்தவாறேயமைச்சர்மதி
மன்னர்பெருமான்றமரோடுமணவூர்நோக்கிவழிவருவா
ரன்னவேந்தன்றனைக்கண்டாரடல்வேற்குமரனனையானெந்
தென்னர்பெருமான்குமரனுக்குந்திருவைத்தருதியெனவனையான்.

(இ-ள்.) அமைச்சர் - மந்திரிமார், நென்னல் எல்லை மணம் பேச நினைந்த ஆறே - நேற்றுப்போது (மணவூர்க்குச் சென்று) மணவினைபேச நினைந்தபடியே,

மதிமன்னர் பெருமான் தமரோடு மணவூர் நோக்கி வழி வருவார்-சந்திரமரபிற்றோ ன்றிய பாண்டியர் பெருமானாகிய சவுந்தரபாண்டியருடைய சுற்றத்தாரோடு மணவூரைநோக்கி வருகின்றவர்கள், அன்ன வேந்தன் தனைக்கண்டார் - (தமக்கெதிரில்வரும்) அச்சோமசேகரச் சோழனைப்பார்த்து, அடல் வேல் குமரன் அனையான்-கொல்லுதற்றொழில் வாய்ந்த வேலையேந்திய முருகக்கடவுளை யொத்த, எம் தென்னர் பெருமான் குமரனுக்கு - எமது சவுந்திரபாண்டியர் புத்திரராகிய உக்கிரகுமாரபாண்டியருக்கு, உன் திருவை தருதி என - உனது புத்திரியைத் தருவாயென்று வினவ, அனையான் - அச்சோமசேகரச்சோழன்.

அமைச்சர் - அமாத்தியர் என்னும் வடசொற்றிரிபு. அமாத்தியர் அருகிலுள்ளோர். அன்ன சுட்டுத்திரிபிடைச்சொல. (அ)

குலனுங்குடியுங்கனவின்கட்கொன்றைமுடியார்வந்துரைத்த
நலனுங்கூறிமணநேர்ந்துநயப்பவதனைநன்முதியோர்
புலனொன்றுழையாதமைவிடுத்துப்பொருனைத்துறைவற்குணர்த்திவரு
வலனுந்தயில்வேன்மன்னனொடுமதுரைமூதூர்வந்தணைந்தார்.

(இ-ள்) கனவின் கண் கொன்றை முடியார் வந்து உரைத்த-(நேற்றிரவில்) கனவினிடத்துக் கொன்றைமாலையை யணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக் கடவுள் எளிவந்து ஒத்துளவெனக் கூறிய, குலனும் குடியும் நலனும் கூறி - குலத்தையும் குடிப்பிறப்பையும் அவற்றிற் கமைந்த மேம்பாட்டையும் எடுத்துச்சொல்லி, மணம் நேர்ந்து நயப்ப-(அவர்கள் வினவிய) மணவினைக்குடன்பட்டு விரும்பாநிற்க, அதனை - (உடன்பட்ட) அச்செய்தியை, நல் முதியோர் - நல்ல வறிவாலமைந்த முதியோர்கள், புலன் ஒன்று உழையர் தமை விடுத்து - அறிவுசான்ற தூதுவரை முன்னர் அனுப்பி, பொருனை துறைவற்கு உணர்த்தி - தாமிரபரணி நீர்த்துறைவராகிய சவுந்தரபாண்டியருக்குத் தெரிவித்து, வரு வலன் உந்து அயில் வேல் மன்னனொடு-தம்மோடுவரும் வெற்றிவாய்ந்த (பகைவரை மாய்க்கும்) நுதியையுடைய வேலையேந்திய சோமசேகரச் சோழனோடும், மதுரை மூதூர் வந்து அணைந்தார் - மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள திருநகரத்தை வந்தடைந்தார்கள். (கூ)

இரவிமருமான்மதிமருமானெதிரேபணியத்தழீஇமுகமன்
பரவியிருக்கைசெலவுய்த்துப்பாண்டிவேந்தனிருந்தான்மேல்
விரவியமைச்சர்திருமுகங்களவேந்தர்யார்க்கும்விடுத்துநகர்
வரைவுநாள்செய்தணிசெய்யமன்றன்முரசமறைவித்தார்.

(இ-ள்.) இரவி மருமான் மதி மருமான் எதிரே பணிய - சோமசேகரச்சோழன் சவுந்தரபாண்டியர் எதிரே சென்று வணங்க, பாண்டி வேந்தன் தழுவி முகமன் பரவி இருக்கை செல வுய்த்தான் - பாண்டிநாட்டு மன்னராகிய அச்சவுந்தரபாண்டியர் அவனைத் தழுவி உபசாரவார்த்தைகள் சொல்லி அச்சோழன் அமைத்த விடுதியில் செல்ல அனுப்பி இருந்தருளினார், மேல அமைச்சர் விரவி - அதனமேல் மந்திரிகள் தம்முட்கலந்து, வரைவு நாள் செய்து, திருக்கலியாணமகோற்சவநாள் வரையறை செய்து, வேந்தர் யார்க்கும் திருமுகங்கள் விடுத்து - அரசர்கள் எவர்க்கும் திருமுகங்களனுப்பி, நகர் மன்றல் முரசம் அறைவித்தார் - மதுரைத்திருநகரை அலங்கரிக்கக் கலியாணபேரிகையை வள்ளுவரால் அறையச்செய்தார்கள். (௧௦)

மாடம்புதுக்கிப்பூகதமுங்கதலிக்காடுமறுகெங்கு
நீடநிரைத்துப்பாலிகையுநிறைபொற்குடமுமுறைநிறுத்தி
யாடுகொடியுந்தோரணமும்புனைவித்தழகுக்கழகாகக்
கூடநெருங்குநகரைமணக்கோலம்பெருக்கக்கொளுத்தினார்.

(இ-ள்.) மாடம் புதுக்கி - (அத்தமக்குரிய) மாடங்களைச் சுண்ணமுதலியவை ற்றாற் புதுக்கி, பூகத்தும் கதலிக் காடும் மறுகு எங்கும் நீட நிரைத்து - கமுகமரங்களையும் வாழைமரக்காடுகளையும் வீதிகளெங்கும் பொலிந்து தோன்ற வரிசைபடக்கட்டி, பாலிகையும் பொன் நிறை குடமும் முறை நிறுத்தி - முளைப்பாலிகையையும் பொன்னாலாகிய பூரணகலசங்களையும் முறைப்பட வேதிகைதோறும் நிறுத்தி, ஆடு கொடியும் தோரணமும் புனைவித்து - ஆடாநின்ற துவசங்களையும் மகர தோரணங்களையும் (வீடுகள் தோறும் கட்டி) அலங்கரித்து, அழகுக்கு அழகாக - அழகுக்கு ஓர் அழகு செய்வாராக, கூடம் நெருங்கும் நகரை மணக்கோலம் பெருக்க கொளுத்தினார் - யானைக்கூடங்கள் நெருங்கிய மதுரைத்திருநகரை மணக்கோலம் பொலிந்து பெருக அலங்கரித்தார்கள்.

கொளுத்தினார் என்றதற்கு அலங்கரித்தார் என்றது சிந்தாமணியில் நச்சினார்க்கினியர் உரையிற்கண்டது. (௧௧)

தென்றனாடன்றிருமகளைத்தேவர்பெருமான்மணம்புரிய
மன்றலழகாலொருநகரொப்பதிகமின்றிமதுரைநக
ரன்றுதானேதனக்கொப்பதாகும்வண்ணமணியமைத்தா
ரின்றுதானேதனக்கதிகமென்னும்வண்ணமெழிலமைத்தார்.

(இ-ள்.) தென்றல் நாடன் திருமகளை - தென்றற்காற்றுத் தோன்றுதற்குரிய பாண்டிநாட்டரசனாகிய மலயத்துவசன் புத்திரியாரை, தேவர் பெருமான் மணம்புரிய - தேவர்பெருமானாராகிய சவுந்தரபாண்டியர் திருமணஞ்செய்ய, மன்றல் அழகால் - அத்திருமணப்பொலிவால், ஒரு நகர் ஒப்பு அதிகம் இன்றி - மற்றொரு நகரம் தனக்கு ஒப்பும் அதிகமுமில்லாமல், மதுரை நகர் - மதுரைத்திருநகரமானது, அன்று தனக்கு தானே ஒப்பது ஆகும் வண்ணம் அணி அமைத்தார் - அப்பொழுது தனக்குத் தானே ஒப்பாகும்படி அலங்கரித்தார்கள், இன்று - இப்போது, தனக்கு தானே அதிகம் என்னும் வண்ணம் எழில் அமைத்தார் - தனக்குத்தானே அதிகம் என்று சொல்லும்படி அலங்கரித்தார்கள். (௧௨)

கலிவிருத்தம்

முன்னர்மாலைமுடியணிசுந்தரத்
தென்னரேற்றின்றிருமுகங்கண்டுதாழ்ந்
தன்னவாசகங்கொண்டயற்புல
மன்னர்மாதவர்யாரும்வருவரால்.

(இ-ள்.) முன்னர் - தமது முன், மாலை முடி அணி சுந்தரத் தென்னர் ஏற்றின் - மலர்மாலைசூழ்ந்த மகுடமணிந்த சவுந்தரபாண்டியருடைய, திருமுகம் கண்டு தாழ்ந்து - திருமுகவரவைக்கண்டு வணங்கி, அன்ன வாசகம் உட்கொண்டு - அத்திருமுகத்தில் வரைந்த வாசகத்தைத் தம்முட்கொண்டு, அயல் புல மன்னர் மாதவர் யாரும் வருவர் - வேற்றுத்தேயத்திலுள்ள அரசர்களும் தபோதனர்களும் யாரும் வருகின்றார்கள்.

தென்னர் ஏறு - பகைவராகிய யானைகளுக்குப் பாண்டியருள் ஆண்சிங்கம் போன்றவனெனப் பொருள் கொள்க. சுந்தரத்தென்னனேறு ஈறுகெட்டு வருமொழி வல்லெழுத்து மிகாது "சில விகாரமாமுயர்திணை" என்றதனால் ஈறுகெட்டு "இயல்பினும் விதியினும் நின்ற வுயிர்முன் கசதப மிகும்" என்ற விதியால் வல்லெழுத்து மிக்கது. (௧௩)

புரவிவெள்ளமும்போர்க்கரிவெள்ளமும்
வரவிற்காலவலிமள்ளரினவெள்ளமும்
விரவியாழியவெள்ளமுமுள்ளுற
விரவிதன்வழித்தோன்றல்வந்தெய்தினான்.

(இ-ள்) புரவி வெள்ளமும் - குதிரைச் சேனை வெள்ளத்தோடும், போர்க் கரி வெள்ளமும் - போர்த்தொழிலையுடைய யானைச் சேனைவெள்ளத்தோடும், வரவில் கால வலி மள்ளரின வெள்ளமும் விரவி-விரைந்து செல்லுதலில் காற்றுப்போலும் வன்மையையுடைய பதாதிச் சேனைவெள்ளத்தோடும் கலந்து, ஆழிய வெள்ளமும் உள்ளுற-ஆழ்ந்த கடல் வெள்ளமும் நிலந்துடிப்பக், இரவி தன் வழித் தோன்றல் வந்து எய்தினான் - சூரியன் மரபில் வந்த சோழன் வரத்தலைந்தான். (௧௪)

கோடுவில்லொடுமேகக்குழாங்கண்மின்
னீடுவாளொடுநேர்ந்தெனமார்புதாழ்ந்
தாடுகுண்டலக்காதுடையாடவர்
சேடனீகத்துச்சேரன்வந்தண்டினான்.

(இ-ள்) மேகம் குழாங்கள் - மேகபடலங்கள், கோடு வில்லொடும் - வளைந்த வில்லோடும், மின் நீடு வாளொடும் நேர்ந்தால் என - மின்னலாகிய ஒளிமிக்க வாளாயுதத்தோடும் வந்ததுபோல வந்து, மார்பு தாழ்ந்து ஆடு குண்டலம் காதுடை ஆடவர் சேடு அநீகத்து - மார்புகாறுந் தாழ்ந்து ஆடாநின்ற குண்டலத்தை யணிந்த காதினையுடைய வீரர்களாகிய பெரிய பதாதிச்சேனைகளோடு, சேரன் வந்து அண்டினான் - சேரன் வந்து நெருங்கினான்.

வில்லையும் வாளையும் ஏந்திய வீரர்கள் மேகம்போலுங் கரிய நிறமுடையவர்களாதலால் - கோடு வில்லொடு மேகக்குழாங்கள் மின் நீடு வாளொடு நேர்ந்தென என்ற தொழில்பற்றிய உவமையணியாகக் கூறினார். ஆடவர் எனப் பால் பொதுப்படக் கூறினாரேனும் கோடுவில்லொடும் மின் நீடுவாளொடும் என்ற குறிப்பால் பெண்பாலை நீக்கி ஆண்பாலைக்கொள்க. (௧௫)

கடலுமுள்ளமுங்காற்றும்பலவண்ணமு
முடலுங்கொண்டெனவுந்துறுவாம்பரிப்
படுகடற்குடபரிதியிற்றோன்றினு
னடுபரிப்பதியாகியவேந்தனே.

(இ-ள்) கடலும் உள்ளமும் காற்றும் பல வண்ணமும் - சமுத்திரமும் மனமும் வாயுவும் பலநிறங்களும், உடலும் கொண்டால் என்ன - (தாம் தாம் ஒவ்வொரு) சரீரங்கொண்டு வந்தாற்போலவந்த, உந்துறும் வாம் பரி படு கடற்கு உள - விரைந்து தாவிச்செல்லும் குதிரைச்சேனையையுடைய ஆழ்ந்தகடலுள், அடு பரிப் பதியாகிய வேந்தன் - கொலைத்தொழிலமைந்த துரகபதியாகிய அரசன், பரிதியில் தோன்றினான் - சூரியனைப்போலக் கண்களுக்குப் புலப்பட்டு விளங்கினான்.

கடல் உடல் கொண்டென என்பது-குதிரைச்சேனையின் அளவின்மைமேலும், உள்ளமும் காற்றும் உடல் கொண்டென என்பது-விரைவின் மேலும், பல்வண்ணமும் உடல்கொண்டென என்பது-ஒவ்வொரு குதிரைகளும் ஒவ்வொருநிறங்களில் முட்டின்றி நிறைந்த நிறத்தின் மேலும்நின்றன. கொண்டாலென்ன - தொகுத்தல் விகாரம். (௧௬)

அலகிலாவுதயந்தொறுமாதவ
ரலகிலாருதித்தென்னப்பொன்னோடைசே
ரலகிலானையனீகமொடெய்தினு
னலகிலாற்றற்கயபதியண்ணலே.

(இ-ள்.) அலகு இல்லாத உதயம் தொறும்-அளவில்லாத வுதயமலைகள்தோறும், அலகு இல்லார் ஆதவர் உதித்தால் என்ன - அளவில்லாத சூரியர்கள் உதயஞ்செய்ததுபோல, பொன் ஓடை சேர் அலகு இல் ஆனை அனீகமொடு-பொன்னாலாகிய நெற்றிப்பட்டம் அணிந்த அளவில்லாத யானைச்சேனையோடு, அலகு இல் ஆற்றல் கயபதி யண்ணல் எய்தினன் - அளவில்லாத வன்மையையுடைய கயபதி அரசன்வந்துசேர்ந்தான்.

உதயகிரிகள் யானைகளாகவும், சூரியர்கள் பட்டங்களாகவும்கொண்டுகூட்டி ஒப்புமைக்கூட்ட அணியாகக்கொள்க. அளவில்லாத உதயகிரிசளும் அக்கிரிகள் தோறும் அளவில்லாதசூரியர்கள் உதித்தலும் இன்மையின் இல்பொருளுவமையணியாகக்கொள்ளலும் ஒன்று. இல்லார் என்பது எதிர்மறைக்குறிப்பு வினைமுற்றுப் பெயரெச்சத்தின்மேல் நின்றது. (௧௭)

தொக்கமன்னரடிப்படுதூளிபோய்த்
திக்கடங்கவிழுங்கித்திரைக்கட
லெக்கர்செய்யவெழுந்தியங்கல்லென
நக்கவேற்கைநரபதிநண்ணினான்.

(இ-ள்.) தொக்க மன்னர் அடிபடு தூளிபோய் - நெருங்கியவீரர் காலாலெழுந்ததூளிகளெங்கும் பரந்து, திக்கு அடங்க விழுங்கி திரைகடல் எக்கர் செய்ய-அட்டதிக்குமுழுமையும் விழுங்கி அலைகளையுடையகடலைத் திடர்செய்யவும், எழுந்து இயம் கல் என-(எங்கும) எழுந்த பலவாச்சியங்கள் கல்லென்றொலிக்கவும்,நக்கவேல்கை நரபதி நண்ணினான் - விளங்காநின்ற வேலையேந்திய கையையுடைய நரபதி என்னும் அரசன் வந்தடைந்தான.

தூளியின்மிகுதியைக்கூறினமையால் மிகுதிநவிற்சியணி. (௧அ)

மீனவேலையிற்கந்துகமேற்கொடு
கூனல்வார்சிலைவஞ்சகொடுஞ்சமர்க்
கானவாழ்க்கையரட்டககருமபடை
மானவேறந்துமன்னவர்நண்ணினார்.

(இ-ள்.) மீனம் வேலையில் - மகரமீன்முதலியவற்றையுடைய கடல்போல, கந்துகம் மேற் கொடு - குதிரையின்மேலேறி, கூனல் வார் சிலை வஞ்சம் கொடும் சமர்க்கு - வளைந்தவார்போக்கிய வில்லுகளாற்செய்யும் வஞ்சமாகிய கொடியபோருக்கே, ஆன வாழ்க்கை அரட்டர் கரும் படை - அமைந்தவாழ்வையுடைய அரட்டராகிய பெரிய பதாதிகளையுடைய, மானம் வேல் குறு மன்னவர் நண்ணினார்-மானமமைந்த வேலேந்திய குறுநிலவரசர்கள் வந்தடைந்தார்கள்.

அரட்டர்-குறுநிலமன்னர். குடியரசாதலின் அரட்டக்குறும்பக்குறுமன்னவர் என்றார். அரட்டர்-ஈறுகெட்டுவரு மொழிமுதல் வல்லெழுத்துமிக்கது. உடையவன்றொழிலை உடைமைமேலேற்றி மானவேல் என்றார். (கக)

சீனர்சோனகர்சிங்களர்கொங்கணர்
மானவேல்வலமாளவர்சாளுவர்
தானமாகிரைசசாவகராதியா
மேனைநாட்டுளமன்னருமீண்டினார்.

(இ-ள்.) சீனரும் சோனகரும் சிங்களரும் கொங்கணரும், மானம் வேல் வ..ம் மாளவர் சாளுவர்-மானம அமைந்த வேலை வலக்கரத்திலேந்திய மாளவரும் சாளுவரும், தானம மா நிரை சாவகர் ஆதியாம் - மதமொழுக்குஞ் சுவட்டையுடைய யானைகளின் வரிசைகளையுடைய சாவகரும் முதலாகிய, ஏனை நாடு உள மன்னரும் ஈண்டினார் - மற்றைநாடுகளிலுள்ள அரசர்களும வநதடைந்தார்கள். உ௦

நூலொடுந்துவக்குண்டுநுடங்குமான்
றோலர்தூங்குசொருக்குடைததானையார்
கோலமுஞ்சியர்கிஞ்சுகக்கோலினர்
நாலுநூல்பயினாவினர்நண்ணினார்.

(இ-ள்.) நூலொடும் துவக்குண்டு - உபவீதத்தோடுங் கட்டுப்பட்டு, நுடங்கு மான் தோலர் - துவளும்மான்றோலையுடையவரும், தூங்கு சொருக்கு உடை தானையர் - கொய்சகமாக முன்னர்த தொங்கியசையும சொருகினையுடைய ஆடையையுடையவரும், கோலம் முஞ்சியர் - அழகியமுஞ்சியினாலாகிய அரைஞாணையுடையவரும், கிஞ்சுகம் கோலினர் - முண்முருக்கந்தண்டையேந்தினவர்களும, நாலு நூல் பயில் நாவினர் - நான்குவேதங்களையும கற்றுப்பயிலும் நாவினருமாகிய பிரமசாரியரும், நண்ணினார் - வந்துநெருங்கினார்கள. (உக)

வட்டநீர்க்கலக்கையினர்வார்ந்துதோ
ளிட்டகுண்டலக்காதினர்வேட்டதீத்
தொட்டகோலினர்வேள்வியிற்சுட்டநீ
றிட்டநெற்றியரில்லொடுநண்ணினார்.

(இ-ள்.) வட்டம் நீர் கலம் கையினர் - வட்டமாகிய உறியிறபொதிந்த கமண்டலத்தையேந்திய கையையுடையவரும, வார்ந்து தோள் இட்ட குண்டலம் காதினர் - நீண்டு தோள்காறும் நானறசையும குண்டலமணிநதகாதினையுடையவரும், வேட்ட தீ தொட்ட கோலினர் - யாகஞ்செயதற்குக கருவியாகிய தீக்கடைகோலேந்தினவர்களும், வேள்வியில் சுட்ட நீறு இட்ட நெற்றியர் - யாகததில் நீற்றிய நீற்றையணிந்த நெற்றியையுடையவருமாகிய வானபபிரஸ்தர்கள், இல்லொடு நண்ணினார் - தத்தமக்குரிய பன்னியர்களோடு வந்து நெருங்கினார்கள்.

வேட்ட என்னும் இறந்தகாலப் பெயரெச்சம் "நின்முகங்காணு மருந்தினேன்" என்றாற்போலத் தொழிற்பெயர்ப் பொருளில்வந்தது. வேள் பகுதி, ளகரம் டகரமாகத்திரிதல் சந்தி, டகரமெய் இறந்தகாலஇடைநிலை, அ எச்சவிகுதி. (உஉ)

முண்டநெற்றியர்வெண்ணிறமூரலர்
குண்டிகைக்கையர்கோவணம்வீக்கிய

தண்டிகையர்கற்றானையர்மெய்யினைக்
கண்டுபொய்யினைக்காய்ந்தவர்நண்ணினார்.

(இ-ள்.) முண்டம் நெற்றியர் - திரிபுண்டரமணிந்தநெற்றியையுடையவரும், வெள் நிறம் மூரலர் - வெள்ளிய நிறமிக்க பற்களையுடையவரும், குண்டிகை கையர் - கமண்டலமேந்திய கையையுடையவரும், கோவணம் வீக்கிய தண்டு கையர் - கோவணம் ஆர்த்த தண்டமேந்திய கையையுடையவரும், கல் தானையர் - செங்கல்லிற் றோய்த்த வுடையையுடையவரும், மெய்யினை கண்டு பொய்யினை காய்ந்தவர் - உண்மையையுணர்ந்து பொய்மையையொழித்தவருமாகிய சந்நியாசிகள், நண்ணினார் - வந்துநெருங்கினார்கள்.

மெய்யினைக்கண்டு பொய்யினைக்காய்ந்தவர் என்றது பொருள்கடோறு மூலகத்தார் கற்பித்துவழங்கும் கற்பனைகளைக்கழித்து நின்றவுண்மையைக்காண்பது. அதாவது "கோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை" என்றவழி, கோ என்றதனால் அரசன் என்பதோர் சாதியும், சேரமான் என்றதனால் சேரமான் என்பதோர்குடியும், யானைக்கண் என்றதனால் யானைநோக்கினை யுடையா னென்பதோர் வடிவும், சேஎய் என்றதனால் சேஎய் என்பதோரியற்பெயரும், மாந்தரஞ்சேரலிரும்பொறை என்றதனால் மக்கட் கூட்டத்தார்கூறுங் கடுஞ்சொல் லிற் பெரும்பொறையை யுடையானென்பதோர் சிறப்புப்பெயரும், ஒருபொருளி ன்கட் கற்பனையாதலால், அவ்வாறுணராது நிலமுதலுயிரீறாகிய தத்துவங்களின் றொகுதியென அப்பொருளையுணர்ந்து, அவற்றை நிலமுதலாகத் தத்தங்காரணங் களோடொடுக்கிக்கொண்டு சென்றால் காரணகாரியங்களிரண்டுமின்றி முடிவாய்நிற்ப தனையுணர்தல். இதனை "எப்பொருளெத்தன்மைத்தாயினுமப்பொருள்-மெய்ப்பொருள்காண்பதறிவு" என்னுந் திருக்குறளானுமறிக. (௨௩)

தீந்தண்பாற்கடல்செந்துகிர்க்காட்டொடும்
போந்தபோன்மெயிற்புண்ணியப்பூச்சினர்
சேந்தவேணியர்வேதசிரப்பொரு
ளாய்ந்தகேள்வியருந்தவரெய்தினார்.

(இ-ள்.) தீம் தண் பால் கடல் - இனிய தண்ணியபாற்கடலானது, செம் துகிர் காடு ஒடும் போந்தது போல் - செவந்த பவளக்காட்டோடும் வந்ததுபோல, மெய்யில் புண்ணியம் பூச்சினர் - (தமது) திருமேனியில் விபூதிப்பூச்சினையுடையவரும், சேந்த வேணியர் - செவந்த சடையையுடையவரும், வேதம் சிரம் பொருள் ஆய்ந்த கேள்வி அருந்தவர் - வேதத்திறுதியிலுள்ள மெய்ப்பொருளாகிய பரசிவத்தை ஆராய்ந்தறியும் ஆகமநூற்கேள்வியையுடையவருமாகிய அரியசைவதபோதனர்கள், எய்தினார் - வந்தடைந்தார்கள்.

பாற்கடல் புண்ணியபூச்சாகவும், பவளக்காடு சேந்த வேணியாகவுங்கொண்டு கூட்டி ஒப்புமைக்கூட்ட அணியாகக்கொள்க. போந்தது ஈறுதொக்கது.

பூச்சினர் பூசுதலையுடையவர் என்பதுபொருள் "சாம்பற்பூச்சினர்" எனவருந்தேவாரத்தால் உணர்க. (௨௪)

ஆதிசைவர்முதற்சைவரைவருங்
கோதிலாவகச்சைவக்குழாங்களும்
பூதிமேனியர்புண்ணியனைத்தொழு
தோதுநாவினரொல்லைவந்தெய்தினார்.

(இ-ள்.) ஆதி சைவர் முதல் சைவர் ஐவரும்-ஆதிசைவர் முதலாகவுள்ள ஐந்து சைவர்களும், கோது இல்லாத அகச் சைவம் குழாங்களும்-குற்றமில்லாத அகச்சமயிகளாகிய சைவர்முதலிய அறுவகைக்கூட்டத்தாரும், பூதி மேனியர் - விபூதியணிந்த மேனியையுடையவரும், புண்ணியம் ஐந்து எழுத்து ஓது நாவினர் - புண்ணியவடிவமாகிய ஸ்ரீபஞ்சாக்கரத்தைப் பயிலும் நாவினையுடையவருமாய், ஒல்லை வந்து எய்தினர் - விரைந்து வந்தடைந்தார்கள்.

அநாதிசைவர், ஆதிசைவர், மகாசைவர், அநுசைவர், அவாந்தரசைவர், பிரவரசைவர், அந்தியசைவர் எனச் சைவர் எழுவகையர். அவருள் அநாதிசைவர் சதாசிவமூர்த்தியாதலாலும், அந்தியசைவர் அநுலோமர் ஒழிந்த ஏனையோராதலாலும் அவர்களையொழித்து ஆதிசைவர் முதலாகப் பிரவரசைவரீறாக ஆதிசைவர் முதற் சைவராவரும் என்றார். ஆதிசைவர் ஆவார்-சதாசிவமூர்த்தியின் சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்னும் ஐந்துதிருமுகங்களினின்று தோன்றிய கௌசிகர், காசியபர், பாரத்துவாசர், கௌதமர், அகத்தியரென்னும் பஞ்சருஷிகோத்திரத்திலே சனித்தசிவப்பிராமணர்கள்; மகாசைவர் ஆவார் - பிரமாமுகத்திற்றோன்றிய வைதிகப்பிராமணருள்ளே சிவதீக்ஷைபெற்றவர்; அநுசைவராவார் - சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும் ஆம். அவாந்தரசைவராவார்-சிவதீக்ஷைபெற்ற சூத்திரர். பிரவர சைவராவார்-சிவதீக்ஷைபெற்ற அநுலோமர். "அரியசதாசிவனென்போ னநாதிசைவனவன்பால் அவதரித்தசிவமறையோ ராதிசைவரிவர்பால், உரியசிவதீக்கைபெற்றபூசுரர்மாசைவ ருயர்ந்தவரசன்வணிக னநுசைவராவார், பெரியகுவலைப்புயத்தோ னவாந்தரசைவன்சீர் பெறுசவன்ன ருதியநுலோமர்பிரவரராம், விரியவணிமிசையொழிந்தோராந்தியசைவத்தோர் விரிந்திடுமேழ்சைவவித மிவையெனநூல்விளம்பும்" என்பதனாலுணர்க. அகச்சமயங்களாவன சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வயிரவம். இச்சமயங்கள் ஒன்றோடொன் றொற்றுமையுடையனவும் தனித்தனிநோக்குமிடத்து ஒன்றுக்கொன்று சலியாதமான்மியத்தையுடையன. இவற்றைஇங்குவிரிப்பிற்பெருகும்.

வெண்களிற்றவன்வேரியந்தாமரைப்
பெண்களிப்புறுமார்பன்பிரமனோ
டொண்களிப்புறவும்பர்முதற்பதி
னெண்கணத்தவர்யாவருமீண்டினார்.

(இ-ள்.) வெண் களிற்றவனோடு - வெள்ளையானை யூர்தியாகிய தேவேந்திரனோடும், வேரி அம் தாமரை பெண் களிப்புறு மார்பனோடு - வாசமிக்க அழகிய தாமரையில் வசிக்கும் இலக்குதேவி களித்துவாழும் மார்பையுடைய திருமாலோடும், பிரமனோடு - அயனோடும், ஒண் களிப்பு உற - மிக்க களிப்பு மீக்கூர, உம்பர்முதல் பதினெண் கணத்தவர் யாவரும் ஈண்டினார் - தேவர் முதலாகவுள்ள பதினெட்டுக்கணத்தோரெல்லோரும் வந்துநெருங்கினார்கள்.

தேவர்முதலாவுள்ள பதினெண்கணத்தோராவார் - கின்னரர் கிம்புருடர் விச்சாதரர் கருடர் - பொன்னமர் பூதர் புகழியக்கர் - மன்னும்-உரகர் சுரர் சாரணர் முனிவர் மேலாம், பரகதியோர் சித்தர் பாலர். காந்தருவர் தாரகைகள் காணுப்பசாசுகள் - ஏந்துபுகழ்மேய விராக்கதரோ - டாய்ந்ததிறல் - போகாவியல்புடைய போகபூமியாருடனே - ஆகாசவாசிகளாவார். என்பவற்றாலுணர்க. (௨௬)

அணைந்துகோயிலடைந்தரிச்சேக்கைமேற்
குணங்கடந்தவன்கோமளவல்லியோ

*டிணங்கிவைகுமிருக்கைகண்டேத்தினார்*
*வணங்கினார்வணங்குமுறைவாழ்த்தினார்.*

(இ-ள்.) அணைந்து கோயில் அடைந்து - சேர்ந்து திருக்கோயிலையடைந்து, அரி சேக்கை மேல் - சிங்காதனத்தின்மேல், குணம் கடந்தவன் கோமளம் வல்லியோடு இணங்கி வைகும் இருக்கை கண்டு ஏத்தினார் - முக்குணங்களையுங்கடந்த சவுந்தரபாண்டியர் இளங்கொடிபோன்ற தடாதகைப்பிராட்டியாரோடு பொருந்தி வீற்றிருக்கும் இருப்பைக்கண்டு துதித்து, வணங்கினார் - வணங்கினார்கள், வணங்கும் முறை வாழ்த்தினார் - (அவரவர்கள் தத்தந்தகுதிக்கு ஏற்ப) வணங்கிய முறைப்படி வாழ்த்தினார்கள்.

ஏத்தினார் என்னும் வினைமுற்று எச்சமாய் வணங்கினார் என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டது. (௨௭)

விரைசெய்தார்முடிச்சுந்தரமீனவன்
சுரர்கண்மாதவர்வேந்தர்க்குத்தொன்முறை
வரிசைநல்கியிருந்தனன்மன்னவன்
றிருமகன்மணஞ்செய்திறஞ்செப்புவாம்.

(இ-ள்.) விரை செய்தார் முடி சுந்தர மீனவன் - வாசம் வீசும் மாலைசூழ்ந்த மகுடமணிந்த சவுந்தரபாண்டியர், சுரர் கட்கு மாதவர்க்கு வேந்தர்க்கு - திருமால் முதலிய தேவர்களுக்கும் பெரியதபோதனர்களுக்கும் அரசர்களுக்கும், தொல் முறை வரிசை நல்கி இருந்தனன் - தொன்றுதொட்டுள்ள முறைப்படி (அவரவர் தகுதிக்கேற்பச்) சிறப்புச்செய்து இருந்தருளினார், மன்னவன் திருமகன் மணம் செய் திறம் செப்புவாம் - அச்சவுந்தரபாண்டியருடைய சிறந்தபுத்திரராகிய உக்கிரகுமாரபாண்டியரது திருமணம் நிகழும்வகையை இனிக்கூறுவாம். (௨௮)

சோமசேகரன்றோகைவனப்பெலாங்
கோமகன்கண்டுவப்பவக்கொள்கைகண்
டேமமேனியனூல்வழியார்க்குமந்
தேமன்கோதையுறுப்பியறேற்றுவான்.

(இ-ள்.) சோம சேகரன் தோகை வனப்பு எல்லாம் கோமகன் கண்டு உவப்ப - சோமசேகரச்சோழனுடைய புத்திரியாகிய காந்திமதியின் அழகை எல்லாம் சவுந்தரபாண்டியர்கண்டு மகிழ்கூர, ஏமம் மேனியன் அக் கொள்கை கண்டு-பொன் மேனியராகிய பிரகஸ்பதி அக்குறிப்பினையறிந்து, நூல் வழி-சாமுத்திரிகை நூலின் வழியே, யார்க்கும்-எவர்க்கும், அத் தேமன் கோதை-அந்தக்காந்திமதியினது, உறுப்பு இயல் தேற்றுவான் - அவயவங்களி னிலக்கணங்களைத் தெளியக்கூறுகின்றார்.

தேமன்கோதை-தேன் நிலைபெற்ற கூந்தலையுடையாள், தோகை-மயில்போலுஞ் சாயலையுடையாள். (௨௯)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பெருகநீண்டறவுங்குறுகிடாவாகிப்பிளந்திடாக்கடையவாய்த்தழைந்து
கருவிவான்வண்டின்கணமெனக்கறுத்துக்கடைகுழன்றியன்மணங்கான்று
புரையறச்செறிந்துநெறிந்துமெல்லென்றுபுந்திகண்கவரநெய்த்திருண்ட
மருமலர்க்குழலாடன்பதிக்கினியமல்லல்வான்செல்வமுண்டாகும்.

(இ-ள்.) பெருக நீண்டு-மிகவும் நீண்டு, அறவுங் குறுகிடா ஆகி-மிகவுங் குறுகாமல், பிளந்திடாத கடைய வாய்-பிளவுபடாத நுனியையுடையனவாகி, தழைந்து - (கடவுங் கைபிழியெண்ணெயும் பெற்றதுபோல) இயற்கையிலே பொலிந்து,

கருவி வான் என வண்டின் கணம் என கறுத்து - உலகிற்குத் தனைக்காரணமாகிய நீர்க்கொண்ட மேகம்போலவும் கருவண்டின் கூட்டம்போலவுங் கறுத்து, கடைகுழன்று - நுனியில் வளைந்து, இயல் மணம் கான்று - இயல்பாகவே மணம்வீசி, புரை அற செறிந்து - குற்றமற இடைவெளியின்றி நெருங்கி, நெறிந்து - நெளிவுடைத்தாகி, மெல்லென்று - மெதுவென்ற தன்மையுடையதாகி, புந்தி கண் கவர - (கண்டோர்) மனத்தையும் கண்ணையுங் கொள்ளைகொள்ள, நெய்த்து இருண்ட - நெய்ப்பசையுடைத்தாகி இருள்போலும் நிறம் வாய்ந்த, மருமலர் குழலாள் தன்பதிக்கு - வாசமிக்க மலரையணிந்த கூந்தலையுடையவள் கணவனுக்கு, இனிய மல்லல் வான் செல்வம் உண்டாகும் (கடைபோங்காறும்) இனிய வளமையும் பெருஞ் செல்வமும் உண்டாகும். (௩௦)

திண்மதவேழமத்தகம்போலத்திரண்டுயர்சென்னியாளவ
னுண்மகிழ்கணவனுயுணீண்டகிலவுலகரசுரியனுமெட்டாந்
தண்மதிபோன்றுமயிர்நரம்பகன்றுதசைந்துமூவிரலிடையகன்ற
வொண்மதிநுதறன்பதிக்குநற்றிருவொடுலப்பிலாரோக்கியமுண்டாம்.

(இ-ள்.) திண் மதம் வேழம் மத்தகம் போல திரண்டு உயர் சென்னியாள் அவள் - திண்ணிய மதத்தையுடைய யானையின் மத்தகம்போலத் திரண்டு உயர்ந்த தலையையுடையவள், தன் உள் மகிழ் கணவன் - தனது மனத்தால் மகிழ்கூரப்பட்ட தலைவன், ஆயுள் நீண்டு அகில உலகு அரசு உரியன் ஆம் - ஆயுள் நிறைந்து எல்லாவுலகங்களையுந் தனதடிப்படுத்திய அரசனுவான, தண் எட்டாம் மதி போன்று-தண்ணிய எட்டாநாள் சந்திரனையொத்து, மயிர் நரம்பு அகன்று - இடையில் மயிரும் நரம்பும் ஒழிந்து, தசைந்து - தசைப்பற்றுடைத்தாகி, மூவிரல் இடை அகன்ற ஒள் மதி நுதல் தன் பதிக்கு - மூன்று விரலளவு புருவத்திற்கும் கூந்தலுக்கும் இடையே பரந்த ஒள்ளிய சந்திரன்போன்ற நெற்றியையுடையவளது கணவனுக்கு, நல் திருவோடு - முட்டின்றி இன்பமூட்டுஞ் செல்வத்தோடு, உலப்பு இல் ஆரோக்கியம் உண்டாம் - அளவில்லாத ஆரோக்கியமும உண்டாகும். (௩௧)

கண்கடைசெவந்தான்பாலெனவெளுத்துநடுவிழிகழியவுங்கரிதா
யெண்கவினடைந்துகோமளமாகியிமைகருமயிர்த்தெனினினிய
வொண்கரும்புருவங்குனிசிலையொத்ததநுமிலொத்திருதொளையும்
பண்கொளவுருண்டுதுண்டமெட்போதுபதுமமேற்பூத்ததுபோலும்.

(இ-ள்.) கண் கடை செவந்து ஆன பால் என வெளுத்து கடைக்கண் செவந்து பசுவின்பாலைப்போலப் புறம்பே வெண்ணிறம்வாய்ந்த, நடுவிழி கழியவும் கரிது ஆய்-நடுவிலுள்ளகருமணி மிகவுங்கரியநிறமுடையதாகி, எண் கவின் அடைந்து-யாவருங் கருதும் அழகு வாய்ந்து, கோமளம் ஆகி - இனியபதத்தை யுடையதாகி, இமை கரு மயிர்த்து எனின் - இமை கருமயிரினையுடையதாகப்பெறின், இனிய-(அவ்விலக்கணங்கள் அவளுக்கு என்றும்) இன்பந் தருவனவாம், ஒள் கரும் புருவம் - ஒள்ளிய கரியபுருவங்கள், குனி சிலை ஒத்த - வளைந்த வில்லை (தம்முள்) ஒத்தனவாயிருத்தல்வேண்டும், துண்டம் - நாசியானது, இரு தொளையும் தத்தமில் ஒத்து-இரண்டுதொளையும் வேறுபாடின்றித் தம்முள் நிகர்த்து, பண் கொள உருண்டு-அமைதிபெற உருட்சியுடைத்தாகி, எள் போது பதுமம் மேல் பூத்தது போலும் - எள்ளின்மலர் தாமரைமலர்மேல் பூத்திருத்தல்போ லிருத்தல்வேண்டும். (௩௨)

வள்ளைபோல்வார்ந்துதாழ்ந்திருசெவியுமடற்சுழிநல்லவாய்முன்னர்த்,
தள்ளியகாதுமனோகரமாகுந்தன்மையானன்மையேதழைக்கு,மொள்ளிய
கபோலம்வட்டமாய்த்தசைந்திட்டுயர்ந்துகண்ணாடிமண்டிலம்போற், றெ
ள்ளியவூற்றமினியதுநன்றென்றோதினன்றிரைகடற்செல்வன்.

(இ-ள்.) இரு செவியும - இரண்டுகாதுகளும், வள்ளை போல் வார்ந்து தாழ்ந்து - வள்ளைத்தண்டுபோல வார்தலுடையதாகிக் கீழேதாழ்ந்து, மடல் சுழி நல்ல ஆய் முன்னர் தள்ளிய - மடலின் சுழிகள் நல்லனவாகி முன்பு தள்ளினவாயிருத்தல் வேண்டும், காது - (அவ்வாறு உள்ள) செவிகள், மனோகரம் ஆகும் தன்மையால் - அழகுசெய்யுந் தன்மையுடையனவாயிருத்தலால், நன்மையே தழைக்கும்- (அவ்வுடையவளுக்கு என்றும்) நன்மையையே பொலியச்செய்யும், ஒள்ளிய கபோலம் வட்டம் ஆய் தசைந் திட்டு உயர்ந்து - ஒளிவாய்ந்த கபோலமானது வட்டவடிவினதாய்த் தசைப்பற்றுடையதாகி உயர்ந்து, கண்ணாடி மண்டிலம் போல் தெள்ளிய ஊற்றம் இனியது - கண்ணாடியின் வட்டம்போல மிக்கபரிசமானது சருச்சரையகன்று (காண்போர்க்கு)இன்பத்தையேதருமாயின,திரை கடல் செல்வன் நன்று என்று ஓதினான் - அலைக்குங் கடற்செல்வனாகிய வருணன் அது நலமே விளைக்குமென்று கூறியிருக்கின்றான். (௧௩.)

கொவ்வைவாயதரந்திரண்டிருபுடையுங்குவிந்துசேந்திரோகைநேர்கிட
ந்தா, லவ்வணியிழைதன்னனபனுக்கென்றுநண்புருவாகுமெண்ணான்கு,
வல்லவாளெயிறுமிடைவெளியின்றி வார்ந்துமேல்கீழிரண்டொழுங்குஞ்,
செவ்வனேர்ந்தாவின்பாலெனவெளகிதிகழினன்றென்பர்நூறெளிந்
தோர்.

(இ-ள்.) கொவ்வை வாய் அதரம் திரண்டு இருபுடையும் குவிந்து சேந்து - கோவைக்கனிபோன்ற வாயினிதழ் திரண்டு இரண்டுபக்கமும் குவிந்து சிவந்து, நேர் இரேகை கிடந்தால் - நேரே வரைகளிருக்குமானால், அவ் அணி இழை - அந்தப் பெண், தன் அன்பனுக்கு என்றும நண்பு உருவாகும - தன் கணவனுக்கு என்றும் நட்பினளாயிருப்பாள், எண்ணான்கு வல்ல வாள் எயிறும - முப்பத்திரண்டென வரையறைப்பட்ட வன்மையையுடைய ஒளியையுடையபற்களும், இடை வெளி இன்றி வார்ந்து - இடையே வெளியின்றி வார்தல் உடைத்தாகி, மேல் கீழ் இரண்டு ஒழுங்கும் செவ்வன் நேர்ந்து - மேலுங்கீழுமாகிய இரண்டுவரிசைகளும் நிரையாகத் தம்முளொத்து, ஆவின் பால் என வெளகி திகழின - பசுவினது பால்போல வெண்ணிறம்வாய்ந்து விளங்கினால், நூல் தெளிந்தோர் நன்று என்பர் - சாமுத்திரிகைநூலிற்றெளிந்த வல்லோர் நன்மையை விளைக்குமென்று சொல்லுவார்கள்.

வெள்கி பண்படியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் வெண்மை பகுதி, கு சாரியை, ஈறுகெடுதலும் உகரக்கேடும சந்தி, இ எச்சவிகுதி. (௧௪)

மெல்லிதாய்ச்செவந்துகோமளமானநாவினாள்வேட்டவேட்டாங்கே
வல்லைவந்தெய்தநுகர்ந்திடுந்தசைந்துவட்டமாயங்குலமிரண்டி
னெல்லையதாகிமஞ்சுளமாகியிருப்பதுசுபுகநன்றென்ப
நல்லியங்கமலம்போன்மணந்திருடார்ந்தவிரமதிபோல்வதுமுகமே.

(இ-ள்.) மெல்லிது ஆய் செவந்து கோமளம் ஆன நாவினாள் - மென்மையதாகிச் செந்நிறம்வாய்ந்து தடிப்பில்லாத நாக்கினையுடையவள், வேட்டது வேட்ட

ஆங்கே வல்லை வந்து எய்த நுகர்ந்திடும் - விரும்பியது விரும்பியபடியே விரைவில் வந்தடைய அனுபவிப்பாள், சுபுகம் - மோவாய், தசைந்து-தசைப்பற்றுடையதாகி, வட்டமாய் - வட்டவடிவாய், அங்குலம் இரண்டின் எல்லையதாகி - இரண்டங்குல அளவினதாகி, மஞ்சுளம் ஆகி இருப்பது - அழகினையுடையதாகியிருத்தல், நன்று என்பர் - (உடையவளுக்கு) நன்மையைத்தருமென்று கூறுவர், முகம்-முகமானது, அல்லி அம் கமலம் போல் மணந்து - அகவிதழையுடைய அழகியதாமரைமலர் போல மணமவீசி, இருள் தீர்ந்து அவிர் மதி போல்வது - பொலிவில்லா திருத்த லொழிந்து விளங்குஞ் சந்திரனைப்போலத் தண்ணிய ஒளிவீசியிருத்தல்வேண்டும்.

கோமளம் - இளமை. வேட்டது ஈறுதொக்குநின்றது. (௩௫)

திரைவளைக்கழுத்துத்தசைந்து நால்விரலினளவதாய்த்திரண்டுமூன்றிரே
வரைபடிற்கொழுநனகிலமன்னவனுமார்பகந்தசைந்துமூவாறு [கை
விரலளவகன்றுமயிர்நரம்பகன்றுமிதந்ததேல்விழுமிதாம்வேய்த்தோள்
புரையறத்தசைந்துமயிரகன்றென்புபுலப்படாமொழியகோமளமாம்.

(இ-ள்.) திரை வளை கழுத்து - அலைகள் எறியுஞ் சங்குபோன்ற கழுத்து, தசைந்து - தசைப்பற்றையுடைத்தாகி, நால் விரலின அளவதாய் திரண்டு - நான்கு விரல் அளவினையுடையதா யுருட்சிவாய்ந்து, மூன்று இரேகை வரைபடில் - மூன்றிரேகைக்கீற்றுகள் பொருந்தியிருந்தால், கொழுநன் அகில மன்னவனும் - (அவ்விலக்கணமுடைய கழுத்தையுடையவள்) கணவன் எல்லாவுலகங்களுக்கும் அரசனுவான், மார்பு அகம் தசைந்து-மார்பினிடம் தசைப்பற்றுடையதாய், மூவாறு விரல் அளவு அகன்று-பனிரண்டுவிரற்பரப்பினளவுபரந்து, மயிர் நரம்பு அகன்று மிதந்த தேல் - (இடையில்) மயிரும் நரம்பும் ஒழிந்து சிறிது உயர்ந்திருக்குமாகில், விழு மிது ஆம்- (அது) மேன்மையைத்தரும், வேய் தோள் - மூங்கிலையொத்த தோள், புரை அறத் தசைந்து-குற்றமறத் தசைபபற்றினையுடையதாகி, மயிர் அகன்று என்பு புலப்படா-மயிரொழிந்த எலும்புதோன்றாமல், மொழிய - மொழிகளையுடையனவாகி, கோமளம் ஆம் - மெத்தென்றதன்மை யுடையனவா யிருத்தல்வேண்டும். (௩௬)

செங்கைநீண்டுருண்டுகணுக்களபெற்றடைவே சிறுத்திடிற்செல்வமோ
டின்பந், தங்கும்வளருகிர்சேர்ந்துருண்டுகண்ணுள்ளங்கவாவதாய்சசரச
ப்பகன்று, லங்கவைநலலவகங்கைமெலலெனசசேர்ந்திடைவெளியகன்றி
டையுயர்ந்து,மங்கலமாய்சசில்வரைகளினல்லவிலக்கணவரையுளமாதோ

(இ-ள்.) செங் கை நீண்டு உருண்டு கணுக்கள் பெற்று அடைவே சிறுத் திடில் - செவந்தகைகள் நீண்டு உருட்சிவாய்ந்து கணுக்களைப்பெற்று முறையே சிறுத்திருக்குமாகில், செல்வம் இன்பம் தங்கும் - (அவற்றையுடையவளுக்குச்) செல்வமும் இன்பமும் (இடைவிடாது) நிலைபெறும், வள் உகிர் சேர்ந்து உருண்டு - கூரியநகங்கள் செவந்து உருட்சிவாய்ந்து, கண் உள்ளம் கவாவதாய் சரசரப்பு அகன்றால் - (கண்டோர்)கண்களையும் மனங்களையுங் கொள்ளைகொள்வதாய்ச் சருச்சரையொழிந்திருந்தால்,அவை நல்ல-அந்நகங்கள் உடையவளுக்கு நன்மையையே என்றும் தரும், அகம் கை மெல்லென சேர்ந்து-உள்ளங்கை மெத்தென்று செந்நிறம்வாய்ந்து,இடைவெளி அகன்று இடையுயர்ந்து-இடையே வெளியிடம் ஒழிந்து இடையே உயர்ந்து, மங்கலம் ஆய் - (கண்டோர் கண்களுக்குப்) பொலிவைத்தருவனவாய், சில் வரைகளில் நல்ல இலக்கண வரை உள - சில இரேகைகளுள் நல்ல இலக்கணம்வாய்ந்த இரேகைகள் உள்ளனவாயிருத்தல் வேண்டும்.

ஓடு - எண்ணிடைச்சொல். (௩௭)

முத்தணிதனங்கள்கடினமாய்த்தசைந்துவட்டமாய்முகிழ்த்திருகடமே
ரொத்திறுமாந்தீர்க்கிடையறநெருங்கியுள்ளனமெலிந்தமர்ந்துரோம
பத்திபெற்றயலேமயிர்நரம்பகன்றபண்டியாளுண்டிவேட்டாங்கே
துய்த்திடுநாபிவலஞ்சுழித்தாழ்ந்தாற்றொலைவிலாத்திருவளம்பெருகும்.

(இ-ள்.) முத்து அணி தனங்கள் கடினம் ஆய் தசைந்து - முத்தாரத்தையணிந்த முலைகள் இறுகியவாய்த்தசைப்பற்றுடையவாகி, வட்டம் ஆய் - வட்டவடிவினவாய், முகிழ்த்து - தாமரை அரும்புபோல அரும்பி, இரு கடம் நேர் ஒத்து இறுமாந்து-(தம்முளொத்த) இரண்டுகுடங்களையொத்து (யானைக்கொம்புபோல) இறுமாப்புற்று, ஈர்க்கு இடை அற நெருங்கி உள்ளன - ஈர்க்கு இடையேபோகாமல் (தம்முள்) நெருங்கி உள்ளனவும், மெலிந்து அமர்ந்து-குழைந்து பொருந்தி, உரோம பத்தி பெற்று-(இடையே) உரோமவரிசைபெற்று, அயலே மயிர் நரம்பு அகன்ற பண்டியாள் - அதன்பக்கத்துமயிரும் நரம்பும் ஒழிந்தவயிறுமுடையவள், வேட்ட உண்டி வேட்ட ஆங்கே - விரும்பிய உணவை விரும்பியபடியே, துய்த்திடும் - அனுபவிப்பாள், நாபி வலம் சுழித்து ஆழ்ந்தால் - உந்தி வலப்பாற்சுழித்து ஆழ்ந்திருக்குமாகில், தொலைவு இலா திருவளம் பெருகும்-(அதனை யுடையவருக்கு) என்றும் அழிவில்லாத செல்வவளம் (முடிவுகாறும்) ஒரே தன்மையாய்ப் பெருகிநிற்கும்.

தசைந்து பெயரடியாகப்பிறந்த இறந்தகால வினையெச்சம். தசைபகுதி, இறுமாந்து இறந்தகால வினையெச்சம். இறுமா பகுதி, வேட்ட ஈறுதொக்க இறந்தகாலப்பெயரெச்சம், வேள் பகுதி (௬௮)

இடைமயிர்நரம்பற்றிருபதோடொருநான்கெழில்விரலளவொடுவட்ட
வடிவதாய்ச்சிறுகிமெலிவதுநிதம்பமத்தகம்யாமையின்புறம்போற்
படிவநேரொத்தனன்றிருகுறங்கும்படுமயிரென்பகன்றியானைத்
தடவுடைக்கையுங்கரபமுங்கதலித்தண்டுமொத்திருக்கினன்றென்ப.

(இ-ள்.) இடை மயிர் நரம்பு அற்று-இடையே மயிரும்நரம்பும் ஒழிந்து, எழில் இருபதோடு ஒருநான்கு விரல் அளவொடு-தோற்றத்தையுடைய இருபத்துநான்கு விரல் அளவினதோடு, வட்டம் வடிவது ஆய் சிறுகி மெலிவது நிதம்பம் - வட்ட வடிவினதாய்ச் சிறுத்துக் குழைந்த தன்மையுடையதாகிய அல்குல், மத்தகம் யாமையின் புறம்போல் - யானையின்மத்தகத்தையும் ஆமையின் புறத்தையும்போல, படிவம் நேர் ஒத்தல் நன்று - (அவற்றின்) வடிவத்தைச் (சிறிதும்வழுவாது) ஒத்திருத்தல் நல்லது, இருகுறங்கும்-இரண்டுதொடையும், படுமயிர் என்பு அகன்று-பொருந்தியமயிரும் எலும்பும் ஒழிந்து, யானை தடவு உடைய கையும் - யானையினது பெருமையையுடைய துதிக்கையையும், கரபமும் - கையினடியையும், கதலித்தண்டும் - வாழைத்தண்டையும், ஒத்து இருக்கில் நன்று எனப - (தம்முள்) ஒத்திருந்தால் நன்மையைத்தருமெனறு கூறுவர்.

"தடவுங் கயவும் நளியும்பெருமை" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால் தடவு பெருமை எனவுணர்க. எழில் தொழிற்பெயர், எழு பகுதி, உகரக்கேடுசந்தி, இல் தொழிற்பெயர் விகுதி. (௬௯)

அங்கமுண்மறைந்துவட்டமாய்த்தசைவந்தணிமுழந்தாண்மயிர்நரம்பு
தங்கிடாதடைவேயுருட்சியாய்ச்சிறுத்துச்சமவடிவாயழகடைந்த [கு
சங்கையாஞ்சிரைீயென்பறத்தசைந்தியாமைமுதுகெனத்திரண்டுயர்ந்து
மங்கலம்பொலிந்தபுறவடிமடந்தைமன்னவன்பன்னியாமன்றே.

(இ-ள்.) அணி முழந்தாள் - அழகியமுழந்தாள், அகம் உள் மறைந்து வட்டம் ஆய் தசைவந்து - எலும்பு புறம்பு தோன்றாமல் வட்டவடிவாய்த் தசைப் பற்றுடையதாயிருத்தல்வேண்டும், சங்கை - கணைக்கால், மயிர் நரம்பு தங்கிடாது - மயிரும் நரம்பும் ஒழிந்து, உருட்சியாய் - உருட்சிவாய்ந்து, அடைவே சிறந்து - முறையேசிறந்து, சமவடிவாய் - (தம்மில்) ஒத்தவடிவாய், அழகு அடைந்த ஆம் - பொலிவுடையனவாயிருத்தல்வேண்டும், சிரை என்பு அற தசைந்து - நரம்பும் எலும்பும் ஒழியத் தசைப்பற்றுடையதாய், யாமை முதுகு என திரண்டு - யாமையின்முதுகுபோலுந் திரட்சிவாய்ந்து, உயர்ந்து அழகு மங்கலம் பொலிந்த புறஅடி உடந்தை-மேலுயர்ந்து அழகாலும (கட்புலன்களுக்கு) இனிமையாலும் நிறைந்து விளங்கிய புறங்காலையுடையபெண், மன்னவன் பன்னியாம் - அரசன்பன்னியாவாள். (௪0)

அல்லியங்கமலக்கால்விரலுயர்ந்துதூயவாயழகவாய்க்கழுநீர்
மெல்லிதழ்நிரைத்தாங்கொழுங்குறத்திரண்டுவாலுகிர்வெண்மதிப்பிளவு
புல்லியபோன்றுமெல்லியவாகிப்புகரறத்தசைந்தனவகத்தாள்
சொல்லியதசைவுமென்மையுஞ்சமமுந்துகளறப்படைத்தனநன்றால்.

(இ-ள்.) அல்லி அம் கமலம் கால் விரல்-அகவிதழையுடைய அழகிய தாமரை மலர்போன்ற கால்களின்விரல்கள், உயர்ந்து தூய ஆய் அழகவாய்-(தம்முள்) உயர்ந்து குற்றமற்றுப் பொலிவுவாய்ந்து, கழுநீர் மெல் இதழ் நிரைத்த ஆங்கு-குவளையின் மெல்லியவிதழ்களை வரிசைபடவைத்தாற்போல, ஒழுங்கு உற திரண்டு - ஒழுங்குபடத்திரண்டு, வால் உகிர் - வெள்ளியநகங்களை, வெண்மதி பிளவு புல்லிய போன்று - அர்த்தசந்திரனைக் கௌவியனபோலவாய்ந்து, மெல்லிய ஆகி - மென்மைத் தன்மையை யுடையனவாகி, புகர் அற தசைந்தன - குற்றமறத் தசைப்பற்றுடையனவாகி யிருத்தலும், அகத்தாள் - உள்ளங்கால், சொல்லியதசைவும் மென்மையும் சமமும் துகள் அற படைத்தன - நூலிற்சொல்லிய தசைபபற்றும மென்மைத்தன்மையும் தம்முளொத்தலும் குற்றமறப்பெற்றிருத்தலும், நன்று - நன்மைபயவிளைக்கும்.

நிரைத்த என்றதொக்க இறந்தகாலவுமெபெயரெச்சம். (௪௧)

வண்ணமாந்தளிர்போற்செவந்தெரிபொன்போல்வைகலும்வெயர்வையற்
றுண்ணமாயிருக்கிற்செல்வமுண்டாகுமொண்மணம்பாடலங்குவளை [றுக
தண்ணறுமுளரிமல்லிகைநறுந்தண்சண்பகம்போல்வனவாகும்
பண்ணவாங்கிளவிகுயில்கிளியாழிற்படின்வரும்பாக்கியமென்று.

(இ-ள்.) ஆகம் - உடம்பானது, வண்ணம் மாந்தளிர்போல் - செந்நிறம்வாய்ந்த மாந்தளிர்நிறத்தைப்போலவும், எரி பொன் போல் - விளங்கும் பொன்னைப் போலவும், செவந்து - செந்நிறம்வாய்ந்து, வைகலும் வெயர்வை அறறு - எந்நாளும் வெயர்வரும்பாமல், உணணமாய் இருக்கில் - மெத்தென்றிருக்குமாகில், செல்வம் உண்டாகும் - பெரும் செல்வம என்றும் உண்டாகும, ஒள் மணம் - (அவ்வுடம்பின்) மிக்க வாசனை, பாடலம் - பாதிரிமலரும், குவளை - நீலோற்பலமலரும், தண் அறு முளரி - வாசனையினின்று நீங்காத தாமரைமலரும், மல்லிகை - மல்லிகைமலரும், நறும் தண் சண்பகம் - நறிய தண்ணிய சண்பகமலருமாகிய இம்மலர்களின்வாசனைகளை, போல் வன வாகும் - ஒத்திருத்தல்வேண்டும், பண் அவாம் கிளவி - இசைவிரும்பும் சொற்கள், குயில் கிளி யாழின் படின் - குயிலின்குரல்

போலும் கிளியின்குரல்போலும் வீணையினிசைபோலும் இருந்தால், *பாக்கியம் வரும் என்னு - (அதையுடையவனுக்கு) செல்வமுண்டாகுமென்றுகூறி.

செவக்து உரிச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம் செவ வினைப்பகுதி. பெருக நீண்டறவும் என்னும் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் தனித்தனி ஒவ்வொருபொருளின் இலக்கணங்களைக்கூறுதலால் பொருட்டன்மையணி.(சஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம.

கருங்குழற்கற்றைதொட்டுச்செம்மலர்க்காலினெல்லை
மருங்குனல்கூர்ந்தகன்னிவடிவெலாம்வாக்கின்செல்வ
னொருங்குநூலுணர்வாறதெள்ளியிம்பரின்றும்பர்தேத்து
மிரங்குமிக்குயிலன்னாண்மெய்யிலக்கணமரியதென்றான்.

(இ-ள்.) கற்றை கரும் குழல் தொட்டு - நெருங்கிய கரியகூந்தல்தொடங்கி, செம்மலர் காலின் எல்லை - செந்தாமரைமலர்போன்ற பாதத்தினளவும், நல் கூர்ந்த மருங்குல் கன்னிவடிவெல்லாம் - வறுமைகூர்ந்த இடையையுடைய காந்திமதியின் வடிவங்களையெல்லாம், வாக்கின் செல்வன நூல் உணர்வால் ஒருங்கு தெள்ளி-பிரகஸ்பதி சாமுத்திரிகை நூலுணர்ச்சியால் ஒருசேர வாராய்ந்துணர்ந்து, இரங்கும் இக்குயில் அன்னாள் மெய் இலககணம் - கூவும் இந்தக்குயில்போலுஞ் சொல்லையுடையவளது உறுப்பிலக்கணம், இம்பர் இன்று - இநநிலவுலகிலுள்ள பெண்களுக்குமில்லை, உம்பர் தேத்தும் அரியது என்றான் - விண்ணுலகத்திலு மில்லையென்று கூறினார்.

இம்பர் இகரச்சுட்டிடைச் சொல்லடியாகப்பிறந்த இடப்பெயர்ச்சொல் இடவாகுபெயராய் உயிர்கள்மேல் நின்றது. இ-பகுதி, மகரத்தோற்றம் சந்தி, பர் பகுதிப்பொருள்விகுதி, தேம் இடப்பெயர்ச்சொல், அத்துசாரியை, நிலைமொழியீறும் வருமொழி உயிரும் கெடுதல் சநதி. (சங)

அங்கதுகேட்டோர்யாருமகங்களிதுளும்பவிப்பாற்
கொங்கலாநறுந்தார்க்குஞ்சியுக்கிரகுமரன்போந்து
மங்கலவரிசைமானமத்தமான்சுமந்தவையைச்
சங்கெறிதுறைநீராடித்தகுங்கடிவனப்புக்கொள்வான்.

(இ-ள்.) அங்கு அது கேட்டோர் யாரும் - அவ்விடத்தில் அதனைக்கேட்டவரெல்லோரும், அகம் களி துளும்ப - மனங்களிகூர, இப்பால் - இப்புறம், கொங்கு அலர் நறும் தார் குஞ்சி - மகரந்தத்தோடுமலர்நத நறுமணங்கமழும் மாலைவேய்ந்த சிகையையுடைய, உக்கிர்குமரன் போந்து - உக்கிரகுமாரபாண்டியர் (அங்குநின்றும்) எழுந்து, மங்கல வரிசை - மங்கலவரிசைகளோடு, மானம் மத்தம் மான் சுமந்த-மிக்கமதமயக்கத்தையுடைய யானைசுமந்துவந்த, சங்கு எறி வையை துறை நீர் ஆடி - சங்கினைவீசும் வையைததுறையிலுகண்ணுள்ள தீர்த்தமாடி, தகும் கடி வனப்பு கொள்வான் - (தமது) அரசச்செல்வத்துக்குத்தக்க கலியாணத்திருக்கோலங்கொள்ளத் தொடங்கினார்.

மங்கலவரிசைகளாவன - சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல். (சச)

கட்டவிழ்கண்ணிவேய்ந்துமான்மதக்கலவைச்சாந்த
மட்டனஞ்செய்தமுத்தான்மாண்கலன்முழுதுந்தாங்கி
விட்டவிர்கலைவான்றிங்கள்வெண்கதிர்ச்செல்வன்போல்வந்
திட்டபூந்தவிசின்மேற்கொண்டிருந்தனன்சங்கமேங்க.

(இ-ள்.) கட்டு அவிழ் கண்ணி வேய்ந்து - முறுக்கவிழ்ந்தமாலைசூடி, மான் மதம் கலவை சாந்தம் மட்டனம் செய்து - மிருகமதங்கலந்த சந்தனத்தையப்பி, முத்தால் மாண் கலன் முழுதும் தாங்கி - முத்துக்களால் செய்த மாட்சிமைப்பட்ட ஆபரணமுற்றும்பூண்டு, விட்டு அவிர் கலைவான திங்கள் வெண் கதிர் செல்வன் போல் வந்து - விட்டுவிட்டுவிளங்கும் கிரணங்களையுடைய பூரணசந்திரன்வந்தது போல (அலங்காரமண்டபத்தினின்றும்) வந்து, சங்கம் ஏங்க - மங்கலச்சங்கங்கள் கோஷிக்க, இட்ட பூம் தவிசின் மேல் கொண்டு இருந்தனன் (மணவறையில்) இட்டபொலிவினையுடைய வாசனத்தினமேலிருந்தார். (௬௫)

அந்நிலைமணநீராட்டியருங்கலப்போர்வைபோர்த்த
கன்னியைக்கொணர்ந்துநம்பிவலவயிற்கவினவைத்தார்
பன்னியோடெழுந்துசோமசேகரன்பாறும்பங்கின்
மன்னியவுமையுமாகமதித்துநீர்ச்சிரகந்தாங்கி.

(இ-ள்.) அந்நிலை மணம் நீர் ஆட்டி - அப்பொழுது வாசமூட்டியநீராட்டி, அரும் கலப் போர்வை போர்த்த கன்னியை கொணர்ந்து - விலையுயர்ந்த ஆபரணமாகிய போர்வையால் போர்க்கப்பட்ட காந்திமதியைக்கொண்டுவந்து, நம்பி வலவயின் கவின வைத்தார் - ஆளுடையபிள்ளையாராகிய உக்கிரகுமாரர் வலப்பால் பொலிவுபெறவைத்தார்கள், சோமசேகரன் பன்னியோடு எழுந்து - சோமசேகரச் சோழன் (தனது) மனைவியோடெழுந்து, பாறும் பங்கில் மன்னிய உமையும் ஆக மதித்து-சிவபெருமானும் அச்சிவபெருமானிடப்பாகத்தினின்று நீங்காத வுமாதேவியுமாக (அவர்களைக்) கருதி, நீர் சிரகம் தாங்கி-நீர்நிறைந்த கரகத்தைக்கரத்திலேந்தி.

கொணர்ந்து இறந்தகாலவினையெச்சம், கொளல் பகுதி, மணநீராவது - பத்துத்துவரிலும் ஐந்துவாசனையிலும் முப்பத்திருவகையோமாலிகையிலும் ஊறியநீர். பத்துத்துவராவன - பூவம் திரிபலைபுணர்வன கருங்காலி. நாவலொடு நானமரமாம்-பூவம், மாமரம், திரிபலை, கடுக்காய, தான்றிக்காய், நெல்லிக்காய். நால்மரம்-ஆல், அரசு, அத்தி, இத்தி, ஐந்துவாசனையாவன. "கொட்டநறுக்கந்தகரமகிலாரம், ஒட்டியவைந்தமவினை" முப்பத்திருவகையோமாலிகையாவன - "இலவங்கம்பச்சிலைக்கச்சோலமேலம், குலவியநாகணங்கோட்டம்-நிலவிய, நாமேதர்வரிசிதக்கோல நன்னாரி, வேகமில்வெண்கோட்டமேவுசீர - போகாத, கத்தூரிவேரிவிலாமிச்சைக ண்டில்வெண்ணெய், ஒத்தகடுநெல்லியுயர்தான்றி-கொத்தலரும, வண்ணக்கச்சோ மரோணுகமாஞ்சியுடன், எண்ணுஞ்சயரோகமின்புழுகு கன்னியிளம், புன்னைநறுந் தாதுபுலியுகிர்பூஞ்சரளம், பினணுதமாமைபெருவகுளம்-பன்னும், பதுமுகநுண்ணே லம்பைங்கோடுவேரி, கதிரகையாயோமாலிகை" இதுகலிவெண்பா. (௬௬)

மங்கலநீராளம்பிமலரடிவிளக்கிவாசக்
கொங்கலர்மாலைசூட்டிக்குளிர்மதுபருக்கமூட்டி
நங்கைதன்கையைப்பற்றிநம்பிதன்கையிலேற்றிப்
புங்கவரறியநன்னீர்மந்திரம்புகன்றுபெய்வான்.

(இ-ள்.) மங்கலம் நீரால் - மங்கலமமைந்த அக்ஷதைநீரினால், நம்பி மலர் அடி விளக்கி - உக்கிரகுமாரபாண்டியரது தாமரைமலர்போன்ற பாதங்களை விளக்கி, வாசம் கொங்கு அலர்மாலை சூட்டி - வாசமிக்க மகரந்தத்தோடு மலர்ந்த மலர் மாலையைச்சூட்டி, குளிர் மதுபருக்கம் ஊட்டி - குளிர்ந்த மதுபருக்கத்தையுண்பித்து, நங்கை தன்கையை பற்றி நம்பி தன்கையில் ஏற்றி - பெண்பாலிற்சிறந்த காந்திமதியின் கையைப்பற்றி உக்கிரகுமாரபாண்டியரது கையில் வைத்து, புங்கவர் அறிய - தேவர்முதலியோர் அறிய, மந்திரமுகமாறு நல்நீர் பெய்வான் - மந்திரங் கூறி நல்லதாரைநீர்வார்ப்பவன்.

மதுபருக்கம் - பாலும்பழமும் சருக்கரையும் நெய்யுங்கலந்துள்ளது. (சஎ)

இரவிதன்மருமான்சோமசேகரனென்பேர்திங்கள்
மரபினைவிளக்கவந்தசுந்தரமாறன்மைந்த
னுரவுநீர்ஞாலந்தாங்குமுக்கிரவருமற்கின்றென்
குரவலர்க்கோதைமாதைக்கொடுத்தனனெனநீர்வார்த்தான்.

(இ-ள்.) என் பேர் இரவி தன் மருமான் சோமசேகரன் - என்னுடைய பேர் சூரியன்புத்திரனாகிய சோமசேகரச்சோழன், திங்கள் மரபினை விளக்க வந்த சுந்தர மாறன் மைந்தன் - சந்திரன்மரபினை விளக்கவந்த சுந்தரபாண்டியருடைய புத்திரராகிய, உரவு நீர் ஞாலம் தாங்கும் உக்கிரவருமற்கு - பெரியகடல்சூழ்ந்த வுலகினைப் (புயத்தில் மாலைபோல) தாங்கிய உக்கிரகுமாரபாண்டியருக்கு, இன்று - இப்பொழுது, என் குரவு அலர் கோதை மாதை கொடுத்தனன் என்ன - என்னுடைய புத்திரியாகிய குரவமலரையணிந்த பெண்ணைக் கொடுத்தேனென என்று, நீர் வார்த்தான் - தாரைவார்த்தான். (சஅ)

மைந்துறுமடங்கற்றிண்காண்மணிவடவயிரவூச
லைந்துடன்பதஞ்செய்பஞ்சிபெய்யணைநான்கன்னத்தூவிப்
பைந்துகிலணையீரைந்துபவளவாய்ப்பசும்பொன்மேனி
யிந்திரமணிக்கட்பாவைவிளக்குநாலிரட்டியென்ப.

(இ-ள்.) மைந்து உறு மடங்கல் திண் கால் - வலிமைமிக்க சிங்கத்தின் திண்ணியகால்போலும் காலமைந்த, மணி வடம் வயிர ஊசல் ஐந்துடன் உம் - முத்துவடம் பூட்டிய வைரத்தாற்செய்த ஊசலைந்தோடும், பதம் செய் பஞ்சி அணையின் ஓடு உம் - பதஞ்செய்த பஞ்சுசெறித்த மெத்தையோடும், அன்னம் தூவி பைம் துகில் அணை ஈர் ஐந்து உம் - அன்னத்தின் தூவிசெறித்த (பாம்பினதுரிபோன்ற) மெல்லியவஸ்திரத்தால் அமைந்தமெத்தைபத்தும, பவளம் வாய் - பவளமேவாயாகவும், பசும் பொன் மேனி - பசியபொன்னே மேனியாகவும், இந்திர மணி கண் - நீலமணியே கண்ணாகவும் (அமைந்த) பாவை விளக்கு நான்கு இரட்டி உம் - பாவைவிளக்கு எட்டும்.

அன்னத்தூவி - அன்னத்தின் சிறையடியில் உள்ள மெல்லிய மயிர். என்ப - அசைநிலை. பை என விகாரப்பட்டு நின்ற பசுமை என்னும் பண்பு மென்மைமேல் நின்றது. எண்ணும்மைகள் தொக்கு நின்றன. (சக)

அட்டில்வாயடுக்குஞ்செம்பொற்கலங்களாறம்பொன்வாக்கி
யிட்டிழைமணிக்கள்ளாஞ்சியேழுபொற்கவரியெட்டு
விட்டொளிர்பசும்பொற்கிண்ணம்பந்திரூழ்விளங்காப்ப
ணட்டபொற்காவிரொன்பதிங்கைமணிக்கலந்தாறென்ப.

(இ-ள்.) அட்டில் வாய் அடுக்கும் செம் பொன் கலன்கள் நூறு உம்-அடுக்களையிலடுக்கும் அடுக்குகளாகிய செவந்த பொன்னாலாகிய பாத்திரங்கள் நூறும், அம் பொன் வாக்கி - அழகிய பொன்னால் கருக்கட்டிவார்த்த, மணி இட்டு இழை களாஞ்சி ஏழும் - இரத்தினங்களை விளிம்புகளி லிட்டிழைத்த படிக்கங்களேழும், பொன் கவரி எட்டும்-பொன்னாற் (காம்பு) செய்த சாமரைகள் எட்டும், விட்டு ஒளிர் பசும் பொன் கிண்ணம் பந்தி சூழ் விளங்க - ஒளிவீசும் பசிய பொன்னாலாகிய கிண்ணப் பந்திகள் நிரையாகப் புறம்பே சூழ்ந்து விளங்க, நாப்பண் நட்ட பொன் காலி னோடு நகை மணி கலன் நூறும் - நடுவேநட்ட பொன்னாலாகிய காலோடுவிளங்கும் இரத்தினங்களிழைத்த பாத்திரங்கள நூறும.

என்ப - அசைநிலை. (௬०)

பெருவிலையாரப்பேழையாயிரம்பெற்றநுண்டு
சருவிலைப்பட்டுவெவ்வேறமைத்தனபேழைமுந்நூ
றுருவமுதெழுதிசசெயதவோவியப்பாவையன்னார்
திருமணிககலனோடேவறசேடியரெழுநூறறைவா.

(இ-ள.) பெரு விலை ஆரம் பேழை உம்-அளவுபடுததறகரியவிலையுள்ள முத்தாரமுதலிய ஆரங்களவைககும பெட்டிகளும, ஆயிரம பெறற நுண துாசும-அளத்தற்கரிய விலைபெறற நுண்ணிய பருததியும, அருவிலை பட்டு - அளத்தறகரிய விலையையுடைய பட்டுகளுமாகிய, வெவவேறு அமைததன பேழை முந்நூறு உம்-வெவவேறுடைகளை வைக்கும் பெட்டிகளும் வகை ஒன்றுககு முந்நூறும, திரு மணி கலன் ஓடு-சிறந்த ரத்தினஙகளிழைத்த ஆபரணங்களோடு, அமுது உருவு எழுதி செய்த ஓவியம பாவை அன்னா - அமுதிறரூயதது உருவநீட்டிய சிததிரபபதுமையொதத, ஏவற் சேடியர் எழு நூற்று ஐவர் உம் - ஏவலசெயயுந தோழியர் எழுநூறறைவர்களும்.

ஒவ்வோரவயவஙகளும காண்போர்க்கு இன்பம்பயத்தலின் - உருவமுதெழுதிச்செய்த வோவியம் என்றா. அன்னார் உவமை யிடைச்சொல்லடியாகப்பிறந்த குறிப்புவினைமுற்றுப் பெயரொச்சத்தின்மேல் நின்றது. அன் இடைச்சொற்பகுதி. ()

விளைவொடுமூன்றுமூதூர்மின்னுவிட டெறியுஞ்செம்பொ
னளவிருகோடியின்னவரும்பெறன்மகடகுசசெல்வ
வளமுறவரிசையாகவழஙகினான்முழஙகிவண்டு
திளைமதுக்கண்ணிசசோமசேகரமன்னன்மாதோ.

(இ-ள.) விளை வொடு மூனறு மூதூர் உம் - விளைச்சலோடு மூன்று பெரிய ஊர்களும், மின்னு விட்டு எறியும செம் பொன் அளவு இரு கோடி உம் - ஒளிவிட்டு வீசும் செம்பொன்னளவு இரணடுகோடியும், இன்ன உம் - இவைபோலுள்ள ஏனைப்பொருள்களும், (ஆகிய இவைகளை) அரும பெறல் மகட்கு - (தனது) பெறுதற்கரிய புத்திரிக்கு, வண்டு முழங்கி மது திளை கண்ணி சோம சேகரன் மன்னன் - வண்டுகள்முழங்கி மதுவிறதிளைக்கும் மாலைசூடிய சோமசேகரச்சோழன, செல்வ வளம் உற வரிசையாக வழங்கினான் - செல்வவளமிக்க வரிசைகளாகக் கொடுத்தான்.

இன்ன உவமை யுருபிடைச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புவினை முற்றுப் பெயர். (௬௨)

ஆர்த்தனவியங்களெல்லாமமரர்மந்தாரமாரி
தூர்த்தனர்வேள்விச்செந்தீச்சுழித்ததுவலமாய்த்துள்ளி
வார்த்தனமடவார்நாவின்முளைத்தனவாழ்த்துமன்றல்
பார்த்தனர்கண்களெல்லாமபெற்றனபடைத்தபேறு.

(இ-ள்.) இயங்கள் எல்லாம் ஆர்த்தன - வாத்தியங்களெல்லாம் ஒலித்தன, அமரர் மந்தாரம் மாரி தூர்த்தனர் - தேவர்கள் மந்தாரபுஷ்பவருஷத்தை (எங்கும்) சிந்தினர், வேள்வி செந்தீ வலமாய் துள்ளி சுழித்தது - யாகச்செந்தீ வலப்பாலாக வெழுந்து சுழித்தது, வார் தனம் மடவார் நாவில் வாழ்த்து முளைத்தன - கச்சணிந்த தனங்களையுடைய பெண்கள் நாவில் வாழ்த்துப்பாடல் அரும்பின, மன்றல் பார்த்தனர் கண்கள் எல்லாம - கலியாணமகோற்சவத்தைப் பார்த்தோர் கண்களெல்லாம், படைத்த பேறு பெற்றன - தாமடையும பயனை அடைந்தன.

சுழித்தது பெயரடியாகப் பிறந்த இறந்தகாலவினைமுற்று. சுழி பகுதி. (௫௩)

பொதியவிழ்கடப்பந்தண்டார்ப்புயத்திளங்காளையன்னான்
முதியவர்செந்தீயோமபவின்னியமுழங்கக்காந்தி
மதியைமங்கலநாண்பூட்டிவரிவளைசசெங்கைபற்றி
விதிவழியேனைமன்றலவினையெலாநிரம்பசசெய்தான்.

(இ-ள்.) பொதி அவிழ் கடப்பம் தண் தார் புயத்து இளமை காளை அன்னான் - முறுக்கவிழ்ந்த கடப்பமலராலாகிய தண்ணியமாலையணிந்த புயத்தையுடைய முருகக்கடவுளையொத்த உக்கிரகுமாரபாண்டியர், முதியவர் செந்தீ ஓம்ப - (வேதமுதலிய நூல்களில்) பெரியோர் ஓமத்தை விதிவழி வளர்க்கவும், இன இயம முழங்க - இனிய வாத்தியங்கள் (ஒருபால்) முழங்கவும, காந்திமதியை மங்கல நாண் பூட்டி - காந்திமதிக்கு மங்கலசூத்திரம் புனைந்து, வரி வளை செம் கை பற்றி - வரிபொருந்திய வளையலணிந்த செவந்த கைகளைப்பிடித்து, விதி வழி ஏனை மன்றல் வினை எல்லாம் நிரம்ப செய்தான் - வேதநூல்விதிவழியே அதுவொழிந்த மணவினை யெல்லாவற்றையும் குறைவின்றிச செய்து முடித்தார.

இயற்று வோன் றொழிலே ஏவி முடிப்போனும் இயற்றுதற்கருத்தாவாகலால் ஏனை மன்றல் வினையெலாம நிரம்பச்செயதான் என்றா. அரசன் கட்டிய கோயில் எனவருதல்காண்க. (௫௪)

வேறு.

எண்ணிலாதவளத்தினெடும்பிரவிமருமான்மடப்பிடியைப்
பண்ணிலாவுமறையொழுககமபயப்பவேள்விவினைமுடித்துந்
தண்ணிலாவெண்கலைமதியுந்தாராகணமுந்தவழ்ந்துழல
விண்ணிலாவுமணிமாடவீதிவலமாய்வருமெலலை.

(இ-ள்.) எண இல்லாத வளத்தினொடும் - அளவில்லாத செல்வவளத்தோடும், இரவி மரு மான் மடப் பிடியை - சூரியனமரபில் வநத சோமசேகரச் சோழனுடைய புத்திரியாகிய காந்திமதியை, பண் நிலாவு மறை ஒழுக்கம் பயப்ப - பண்கள் நிறைந்த வேதவிதிவழுவாது நிரம்ப, வேள்வி வினை முடித்து - திருக்கல்யாண முடித்து, தண் நிலா வெண் கலை மதியும் - தண்ணிய கிரணம நிறைந்த வெள்ளிய கலையையுடைய சந்திரனும், தாரா கணமும் தவழ்ந்து உழல - நக்ஷத்திரக்கூட்டமுந் தவழ்ந்து (போக்குவரவுதெரியாமையாக) சுழன்றுவருந்த, விண் நிலாவு மணி மாட

வீதி வலமாய் வரும் எல்லை- விண்ணுலகமட்டும் உயர்ந்து விளங்கும் இரத்தினங்கள் குயிற்றிய மாடங்கள் நெருங்கிய வீதியை வலமாக வரும்பொழுது.

மடப்பிடி இளமைபொருந்திய பெட்டையானைநடைபோன்ற நடையையுடையவள். (ருரு)

மின்னேர்பொன்னந்தொடியினருமென்செம்பஞ்சியடியினரும்
பொன்னேர்மணிப்பூண்முலையினருமபுலம்புமணிமேகலையினரு
மன்னேரோதித்தாரினருமாகிகண்ணுமனமுமவன்
முன்னேதூதுநடப்பதெனநடப்பநடந்தார்முகிழ்முலையார்.

(இ-ள்.) மின் நேர் பொன்னம் தொடியினரும் - ஒளிநிறைந்த பொன்னாலாகிய அழகிய வளையலணிந்த முன்கையையுடையவரும், மெல் செம் பஞ்சி அடியினரும் - மெல்லிய செம்பஞ்சுக்குழம்பூட்டிய கால்களையுடையவரும், பொன் நேர் மணி பூண் முலையினரும் - பொன்னாற்செய்து தமமொளாதத இரத்தினங்கள்பதித்த ஆபரணங்களவிளங்கும முலையையுடையவரும், புலம்பு மணி மேகலையினரும்-ஒலிக்கும் அழகிய மேகலாபரணத்தை யணிந்தவர்களும், அல் நேர் ஓதி தாரினரும் ஆகி-இருளையொத்த கூந்தலிற செருகிய மாலையை யுடையவருமாகி, கண்ணும் மனமும் அவன் முன்னே தூது நடப்பது என நடப்ப - (தமது) கண்களும் மனங்களும்அவன்முன்னே தூதுசெல்லுதல்போல (அவைகள் அவாமுன்னே) செல்ல, முகிழ் முலையார் நடந்தார் - தாமரையருமபையொத்த அப்பெண்கள் சென்றார்கள்.

நடப்பது எதிர்காலவினைநிலைபெற்ற தொழிற்பெயர். பவனிபார்க்கவந்த பெண்களாதலிற பொன்னந்தொடியினரென்பது - பேதமைப்பருவப் பெண்களும், செம்பஞ்சுஅடியினரென்பது-மங்கைப்பருவப் பெண்களும், மணிப்பூண்முலையினரென்பது - மடந்தைப்பருவப்பெண்களும, மணிமேகலையினரென்பது - அரிவைப் பருவப் பெண்களும், அல் நேர் ஓதித்தாரினரெனபது-தெரிவைப்பருவப்பெண்களும் ஆகிய இவர்கண்மேல் நின்றனவெனக்கொள்க. (ருசு)

சுருங்குமிடையார்தன்பவனிதொழுதுவருவார்தமக்கிரங்கி
மருங்குற்பாரங்கழிப்பான்போற்கலையைக்கவர்ந்தும்வளைத்தோண்மே
லொருங்குபாரங்கழிப்பான்போலவளையைக்கவர்ந்துமுள்ளத்து
ணெருங்குபாரங்கழிப்பான்போனிறையைக்கவர்ந்துநெறிசெல்வான்.

(இ-ள்) சுருங்கும் இடையார் தன் பவனி தொழுது வருவார் தமக்கு இரங்கி - (அளகமுதலியபாரத்தால்) மெலியும இடையையுடையவராகிய தமதுபவனியைத் தொழு வருபவர்களுக்கு இரக்கங்கொண்டு, மருங்குல பாரம் கழிப்பான்போல்-அவ்விடையினபாரத்தை யொழிப்பவனைப்போல, கலையைக் கவர்ந்தும்-மேகலையை (முன்னே) கொள்ளைகொண்டும, வளை தோள் மேல் ஒருங்கு பாரம் கழிப்பான் போல் - வளையலணிந்த கரங்களில ஒருசேரவுள்ள பாரங்களையொழிப்பவர்போல, வளையை கவர்ந்தும - வளையல்களைக் கொள்ளைகொண்டும, உள்ளத்துள் நெருங்கு பாரம் கழிப்பான் போல் - மனத்தில் நெருங்கிய பாரத்தைக் கழிப்பவர்போல, நிறையை கவர்ந்தும் - நிறையைக் கொள்ளைகொண்டும, நெறி செல்வான் - வீதியில் வலம் வருகின்றார்.

நிறை - மனம் தீநெறியிற் செல்லாது நன்னெறியில் நிறுத்துதல், தொழுது செயவெனெச்சத்திரிபு. மேகலை - கலை - முதற்குறை. பெண்களிடத்துநிகழ்ந்த ஒருதலைக்காமமாதலால் இது பெண்பாற்கூற்றுக்கைக்கிளைத்திணை. இதுமெலிதற்றுறை.

வானமதிசேர்முடிமறைத்தவழுதிமகனேயிவனென்று
லானைபொருத்திற்சிங்கவிளவடலேறென்னவயல்வேந்தர்
சேனைதழுவவரும்பவனிக்கொப்பேதொப்புச்செப்புங்கால்
யானைமகளைமணந்துவருமிளையோன்பவனிச்செல்வமே.

(இ-ள்.) இவன் வானம் மதி சேர் முடி மறைத்த வழுதி மகனே என்றால்- இப்பாண்டியன் ஆகாயத்திற்றவழும் சந்திரனையணிந்த முடியை மறைத்து வந்தருளிய சோமசுந்தரபாண்டியருடைய புத்திரனே யென்றுசொன்னால், ஆனை எருத்தில் இளமை அடல் சிங்கம் ஏறு என்ன - யானையின்பிடரில் இளம்பருவத்தையுடைய வெற்றிவாய்ந்த சிங்கவேறு பவனிவருதல்போல, அயல் வேந்தர் சேனை தழுவ வரும் பவனிக்கு ஒப்பு ஏது - மறுபுலத்தரசர்கள்சேனை புறத்திற்றழுவ வாராநின்றபவனிக்கு உவமையாது, (இல்லையென்றபடி) ஒப்பு செப்புங்கால் - உவமைசொல்லுமிடத்து, யானை மகளை மணந்து இளையோன் வரும் பவனி செல்வமே - தெய்வயானையாரை மணவினைமுடித்துக் குமாரக்கடவுள் வலம்வரும் பவனிச்செல்வத்தையே (ஒக்குமென்றுகூறுவார்)

இது காண்டற்றுறை. ஒருதருமத்தை யாரோபித்தற்பொருட்டு மற்றொருதருமத்தை மறுத்தலால் அவநுதியணி. (௫௮)

இம்மைதனிலுநன்மைதருமீசன்றனையும்வாசவற்கு
வெம்மைதருவன்பழிதவிர்த்தவிமலன்றனையுமங்கயற்க
ணம்மைதனையும்பணிந்துமீண்டரசன்கோயிலடைந்தீன்றோர்
தம்மைமுறையாலடிக்கமலந்தலையிற்பணிந்தான்றனிக்குமரன்.

(இ-ள்.) இம்மை தனிலும் நன்மை தரும் ஈசன் றனையும் - (தமது பிதாவின் ஆன்மார்த்தமாய்) இப்பிறப்பிலும் (வழிபடுவோர்க்கு) வேண்டியாங்கு அருளும் மஹாபீஷ்டபிரதேசுரரையும், வாசவற்கு வெம்மை தரு வன் பழி தவிர்த்த விமலன் றனையும் - தேவேந்திரனுக்குக் கொடிய வலியபழியைத் தவிர்த்த சோமசுந்தரக்கடவுளையும், அங்கயற்கண் அம்மை தனையும் - அங்கயற்கண்ணம்மையாரையும், தனி குமரன் பணிந்து மீண்டு - உக்கிரபாண்டியா வணங்கித் திரும்பி, அரசன் கோயிலடைந்து - சவுந்தரபாண்டியர் திருமாளிகையையடைந்து, ஈன்றோர் தம்மை - தம்மைப்பெற்ற இருமுதுகுரவரையும், முறையால் - முறைப்படி, அடிக் கமலம் தலையில் பணிந்தான் -(அவர்களது) திருவடித்தாமரைகளைத் தமது தலையால் வணங்கினார்.

சோமசுந்தரக்கடவுள் சவுந்தரபாண்டியராய் அரசுசெய்துவருங் காலையில் அரசர்கள் சிவபூசைசெய்யவேண்டுமெனத் தாமருளியதை, ஆன்மாக்கள் கைக்கொண்டுய்ய நடுவூரொன்றும் ஓர் நகர் கண்டு அந்நகரிற்றாபித்த சிவலிங்கத்தின் திருநாமம் மஹாபீஷ்டபிரதேசுரர் ஆதலால் - இம்மைதனிலும் நன்மைதருமீசன்றனையும் எனவும், விருத்திராசுரனைக்கொன்ற வன்பழி விடாதுபற்ற அச்சமிக்குத் தாமரைநாளத்தில் ஒளித்திருந்த இந்திரன் தனது ஆசிரியர் ஏவலால் அங்குநின்றும் நிலவுலகில்வந்து பூசிக்க அவன்பழி தொலைத்தருளினமையால் - வாசவற்கு வெம்மை தரு வன்பழிதவிர்த்தவிமலன்றனையும் எனவுங்கூறினார். இல் ஏதுப்பொருளில் வந்த ஐந்தனுருபு. அடிக்கமலம் பாதங்களாக உருவுதிரிந்த தாமரை என்பது பொருளாதலால் திரிபணி. (௫௯)

ஆறுவாறுசுவையடிசிலயில்வோர்தம்மையயில்வித்து
நாறுவரிசைவரன்முறையானல்கிவிடையுநல்கிப்பின்
வாறுடவர்க்கும்விடைகொடுத்துமதிக்கோனெழுகிவைகுநாட்
டேனார்கண்ணித்திருமகனுக்கிதனைசெப்பியிதுசெய்வான்.

(இ-ள்.) மதிக் கோன் - சந்திரன்மரபிற் கிறைவராகிய சவுந்தரபாண்டியர், ஆறு ஆறு சுவை அடிசில் - நீங்காத வறுசுவை யமைந்த கறியையும் போனகத்தையும், அயில்வோர் தம்மை அயில்வித்து - உண்போர்தம்மை உண்பித்து, நாறு வரிசை வரன்முறையால் நல்கி-(அவரவர்கள் தகுதிக்கேற்பப்)பலவரிசைகளையும் முறைப்படி கொடுத்து, விடையும் நல்கி-விடையுங் கொடுத்து, பின வாறுடவர்க்கும் விடைகொடுத்து-பின்பு தேவர்களுக்கும் விடைகொடுத்து, ஒழுகி வைகு நாள் - (செங்கோல்) செலுத்தி யெழுந்தருளியிருக்குங்காலையில், தேன் ஆர் கண்ணி திரு மகனுக்கு-தேனிறைந்த மாலையணிந்த (தமது) புத்திரனுக்கு, இதனை செப்பி இது செய்வான் - இதனைக்கூறி இதுசெய்கின்றார்.

சுவை கறிமேல் நிற்றலால் பண்பாகுபெயர். அடிசில் தொழிலாகுபெயர் அடு பகுதி, உகரக்கேடு சந்தி, இ சாரியை, சகரம் விரித்தல் விகாரம, இல் தொழிற்பெயர்விகுதி. ஆறுத ஈறுதொகுத்தல். இதனைக்கூறி யிதுசெய்வான் என்பதை அடியிற்காண்க. (சுo)

மைந்தகேட்டியிந்திரனுங்கடலுமுனக்குவான்பகையாஞ்
சந்தமேருத்தருக்கடையுஞ்சதவேளவிக்கோன்முடிசிதற
விந்தவளைகொண்டெறிகடலிலிவ்வேல்விடுதியிசெண்டா [ம்
லந்தமேருதனைப்புடையென்றெடுத்துக் கொடுத்தானவைமூன்று

(இ-ள்.) மைந்தகேட்டி - புத்திரனே கேளாய், இந்திரனும் கடலும் உனக்கு வான்பகையாம் - இந்திரனும் வருணனும் உனக்குப் பெரியபகைவராவார், சந்தம் மேருதருக்குஅடையும் - பொலிவமைந்த மகமேரு (உன்வழி நில்லாது) இறுமாப்படையும் (ஆதலால்) சதவேள்விக் கோன்முடி சிதற - அவ்விந்திரன்முடிசிதற, இந்த வளைகொண்டு எறி - இந்தச்சக்கரங்கொண்டெறியாய், கடலில் இவ்வேல்விடுதி - சமுத்திரத்தில் இவ்வேலைவிடுவாய், இச்செண்டால் அந்தமேருதனை புடை என்று - இந்தச்செண்டாயுதத்தால் அந்தமகமேருவை யடியென்று, அவைமூன்றும் எடுத்துக்கொடுத்தான் - அந்தமூன்றுயுதங்களையும் எடுததுக்கொடுததருளினார்.

சதவேள்விக்கோன் நூறு அசுவமேத யாகங்களைச் செய்தவனுதலால் இந்திரனுக்கு ஓர்பரியாய நாமம். விடுதி இங்கு இகரவிகுதி முன்னிலையொருமையேவற்பொருளில்வந்தது. விடு பகுதி, த சாரியை, உகரகேடுசந்தி, இ விகுதி. (சுக)

அன்னமூன்றுபடைக்கலமுந்தொழுதுவாங்கியடலேறு
தன்னேரராயெதிர்நிற்குந்தனையன்றனையுகிரவழுதி
யென்னவாதிமறைமுழங்கவியங்களேங்கமுடிகவித்துத்
தன்னதாணையரசுரிமைதனிச்செங்கோலுந்தானல்கா.

(இ-ள்.) அன்னமூன்றுபடைக்கலமும் தொழுதுவாங்கி - அந்தமூன்றுயுதங்களையும் தொழுது கையிலேற்று, அடல் ஏறு தன்னேராய் எதிர்நிற்கும் தனையன்றனை - கொலைத்தொழிலமைந்த சிங்கத்தையொத்துத் (தமது) எதிர்நிற்கும் புத்திர

னை, உக்கிரவழுதி என்ன - உக்கிரபாண்டியனேயென்றழைத்து, ஆதி மறை முழங்க - தொன்றுதொட்டுள்ள வேதங்கள் (ஒருபால்) முழங்கவும், இயங்கள் ஏங்க - (ஒருபால்) வாச்சியங்கள் ஒலிக்கவும், முடிகவித்து - முடிசூட்டி, தன்னது ஆணை அரசு உரிமை - (எவ்வுயிரையும்) தனதாணைவழிநிற்கச்செய்யும் அரசியலுரிமையையும், தனிச்செங்கோலும் - ஒப்பற்றசெங்கோலையும், தான் நல்கா - தாம்தந்தருளி.

அரசியலுள் செங்கோல் அடங்குதலால் அரசுரிமை என்றதை இறைமை எனக்கொண்டு இரண்டுபொருள்களாகக்கொள்க. அன்ன சுட்டுத்திரிபு - கவித்து மருவுவதாகிலே-நல்கா செய்யா என்னும்வாய்ப்பாட்டிறந்தகாலவினையெச்சம். அன்ன சுட்டுத்திரிபு, உக்கிரவழுதி அண்மைவிளி. (௬௨)

சூழ்ச்சிவினையிற்பொன்னனையசுமதிதன்னைத்தொன்னூலின்
மாட்சியறிஞர்தமைநோக்கிவம்மினிவனைக்கண்ணிமைபோற்
காட்சிபயக்குங்கல்வியும்போற்காப்பீரிதுநுங்கடனிம்ம
ணூட்சியிவனதென்றிளையவரியேறனையான்றனைநல்கா.

(இ-ள்.) சூழ்ச்சி வினையில் பொன் அனைய சுமதிதன்னையும் - மந்திராலோசனைத் தொழிலில் பிரகஸ்பதியை யொத்த சுமதியையும், தொல்நூலின் மாட்சி அறிஞர் தமையும் நோக்கி-தொன்றுதொட்டுள்ள நூல்களாராய்ச்சியிற்பெருமை வாய்ந்தமுதியோரையும்பார்த்து, வம்மின்-வாருங்கள், இவனை கண் இமைபோல்-இப்புத்திரனைக் கண்களைக்காக்கும் இமையும் போலவும், காட்சி பயக்கும் கல்வியும் போல் - (தளர்ச்சிவந்தவழி) அறிவுதந்து ஊன்றுகோல் போலுதவும் கல்வியும்போலவும், காப்பீர் - காக்கக்கடவீர், இது நும்கடன் - இது நுமது கடமை, இம்மண் ஆட்சி இவனது என்று - இந்நிலவுலகுரிமை இவனுடையதென்று, இளைய அரி ஏறு அனையான் தனைநல்கா - இளஞ்சிங்க ஏற்றையொத்த அவ்வுக்கிரகுமாரபாண்டியனை அவர்கள் கையடையாகக்கொடுத்து.

வம்மின் முன்னிலைப்பன்மையேவல் வினைமுற்று வா பகுதி, முதல் குறுகல் விகாரம், மகரமெய்சந்தி, மின் முன்னிலைப்பன்மையேவல் விகுதி. (௬௩)

மேற்படி வேறு.

வெய்யவேற்காளையன்னான்றன்னையும்வேறுநோக்கி
யையவிவ்வையந்தாங்கியளித்தனனெடுநாளிந்த
மையறுமனத்தார்சொல்லும்வாய்மையாறொழுகிநீயுஞ்
செய்யகோன்முறைசெய்தாண்டுதிருவொடும்பொலிகவென்றான்.

(இ-ள்.) வெய்ய வேல் காளை யன்னான் தன்னையும் வேறு நோக்கி - கொடியவேலையேந்திய காளைபோலும் பெருமிதமுடைவாய்ந்த தமது புத்திரனையும் தனித்துப் பார்த்தருளி, ஐய - ஐயனே, நெடு நாள் இவ் வையம் தாங்கி அளித்தனன்-பலகாலிவ்வுலகினைச் சுமந்து பாதுகாத்துவந்தனம், நீயும் இந்த மை அறு மனத்தார் சொல்லும் வாய்மை ஆறு ஒழுகி - நீயும் இந்தக் குற்றமற்ற சுமதிமுதலியோர்கூறும் உண்மைவழியிற்சென்று, செய்ய கோல் முறை செய்து ஆண்டு- செங்கோலைமநுநூல்முறைவழி வழாது நடாத்தி இவ்வுலகாண்டு, திரு வொடும் பொலிக என்றான்-

(மறுபுலத்தரசர்கள் திறையளக்கும்) பெருஞ்செல்வத்தோடும் பொலிந்து விளங்கக் கடவாயென்று ஆசீர்வதித்தருளினார்.

வெய்ய செய்ய பண்பு அடிகளாகப்பிறந்த குறிப்புவினைப் பெயரெச்சங்கள் வெம்மை, செம்மை பண்புகள், ஈறுகெடுதலும் முன்னின்ற மெய் திரிதலும் சந்தி, அ எச்சவிகுதி. நெடுநாள் என்றது அறுபதினாயிரவருடத்தை. (௬௪)

பன்னருங்கணங்களெல்லாம்பண்டையவடிவமாகத்
தன்னருடுணையாய்வந்ததடாதகைப்பிராட்டியோடும்
பொன்னெடுங்கோயில்புக்குப்பொலிந்தனனிசைதன்னு
லின்னருட்படிவங்கொள்ளுமீறிலாவின்பமூர்த்தி.

(இ-ள்.) பன் அரும் கணங்கள் எல்லாம் பண்டைய வடிவம் ஆக - (உருவ மாறி வேலவழிநின்ற) சொல்லுதற்கரிய சிவகணங்களெல்லாம் முன்னுள்ள வடிவ மாக, தன் அருள் துணையாய் வந்த தடாதகைப் பிராட்டியோடும் - தமது திருவரு ளே தமக்கோர் துணைவியாகக் கோலங்கொண்டருளிய தடாதகைப் பிராட்டியாரோ டும், தன் இசைதன்னால் இன் அருள் படிவம் கொள்ளும் - தமதிச்சைவழியால் இனிய அருளுருவங் கொண்டருளிய, ஈறு இலாத இன்பமூர்த்தி - முடிவில்லாத பேரின்பமூர்த்தமாகிய சோமசுந்தரக்கடவுள், பொன் நெடும் கோயில் புக்கு பொ லிந்தனன் - பொன்னாலாகிய நெடிய திருக்கோயிலுட் சென்று விளங்கினார்.

பிரான் ஆட்டி - பிராட்டி இது ஒருசொல். (௬௫)

கலிவிருத்தம்.

பின்னருக்கிரப்பெயர்தரித்தவத்
தென்னர்கோமகன்றெய்வநான்மறை
மன்னுநல்லறம்வளரவையகந்
தன்னதாணையாற்றாங்கிவைகினான்.

(இ-ள்.) பின்னர் உக்கிர பெயர் தரித்த, அ தென்னர் கோமகன் - பின்பு உக்கிரனென்னுந் திருநாமங்கொண்ட அப்பாண்டியர் பெருமான், தெய்வம் நான் மறை மன்னு நல் அறம் வளர - தெய்வத்தன்மையையுடைய நான்குவேதங்களும் நிலைபெற்ற நல்லதருமமும் நீடித்தோங்க, வையகம் தன்னது ஆணையால் தாங்கி வைகினான் - நிலவுலகைத் தமது ஆணைவழிநிற்கச்சுமந்து அரசியல்செய்துவந்தார்.

பின்காலப்பொருளில்வந்த இடைச்சொற்பகுதி, னகரத்தோற்றம் சந்தி, அர் பகுதிப்பொருள்விகுதி. (௬௬)

உக்கிரகுமாரனுக்கு வேல்வளைசெண்டுகொடுத்தபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உளபடத் திருவிருத்தம் - ௧0௩௧.

## பதின்மூன்றாவது

# கடல்சுவற வேல்விட்ட படலம்.

கலிவிருத்தம்.

வளையொடு செண்டுவேன் மைந்தற் கஞ்சுரும்
பளையவேம் பணிந்தகோ னளித்தவா றிதத்
தளையவிழ் தாரினான் றனயன் வேலைமே
லிளையவ னென்னவே லெறிந்த தோதுவாம்.

(இ-ள்.) அம் சுரும்பு உளைய வேம்பு அணிந்த கோன் - அழகிய வண்டுகள் மொய்க்கும் வேப்பமலர்மாலையை அணிந்த சவுந்தரபாண்டியர், மைந்தற்கு வளையொடு செண்டு வேல் அளித்த ஆறு இது - (தமது) புத்திரருக்குச் சக்கரத்தையுஞ் செண்டையும் வேலையும் கொடுத்த திருவிளையாடல் முந்தத்திருவிளையாடல், தளை அவிழ் தாரினான் தனயன் - கட்டவிழ்ந்த மாலையையணிந்த அச்சவுந்தரபாண்டியர் புத்திரராகிய உக்கிரகுமாரபாண்டியர், வேலை மேல் இளையவன் என்ன வேல் எறிந்தது ஓதுவாம் - கடலின்மேல் (சூரபன்மன் நிலைகெடவேலெறிந்த) முருகக்கடவுள்போல வேலெறிந்த திருவிளையாடலை இனிச்சொல்லுவாம். (க)

திங்களி னுக்கிரச் செழியன் வெண்குடை
யெங்கணு நிழற்றவீற் றிருக்கு நாளவயிற்
சங்கையில் லாதமா தருமவேள் விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற வாற்றுநாள்.

(இ-ள்.) உக்கிரச் செழியன் - உக்கிரகுமாரபாண்டியர், திங்களின் வெண்குடை எங்கணும் நிழற்ற வீற்றிருக்கும் நாள் அவயின் - சந்திரனைப்போல வெள்ளைவட்டக்குடை எவ்விடத்தும் நிழல்செய்ய வீற்றிருக்கும் நாளில், சங்கை இல்லாத மா தருமம் வேள்விகள் - அளவில்லாத பெரியதருமங்களையும் யாகங்களையும், புங்கவர் புடை தழீஇப் போற்ற ஆற்றும் நாள் - தேவர்கள் பக்கத்திற் சூழ்ந்து துதிக்கச் செய்து வருங்காலையில். (உ)

அரும்பரி மகந்தொண் ணூற்றா றுசெய்துழிச்
சுரும்பரி னிசைத்தருந் தோன்றறண் ணறு
விரும்பரி முரன்றுசூழ் வேம்பி னங்குழைப்
பொரும்பரி வீரன்மேற் பொருது பொங்கினான்.

(இ-ள்.) அரும் பரி மகம் தொண்ணூற்றாறு செய்துழி - அரிய அசுவமேதயாகம் தொண்ணூற்றாறு செய்து விட்டது, சுரும்பரின் இசை தரு தோன்றல் - வண்டுகளினிசைநிறைந்த பஞ்சதருக்களின் நிலையனாகிய இந்திரன், தண் நறு விரும்பு அரி முரன்று சூழ் வேம்பின் அம் குழை - தண்ணிய தேனைவிரும்பி வண்டுகள் இசைபாடிப் புறம்பே சூழ்ந்த வேம்பின் பூக்கொத்தையணிந்த, பொரும் பரி வீரன் மேல் - (பகைவரோடு) போர்செய்யுங் குதிரைச்சேனையையுடைய உக்கிரகுமாரபாண்டியர்மேல், பொருது பொங்கினான் - மனம்புழுங்கிக் கோபித்தான்.

நூறுயாகஞ்செய்தால் தனது பட்டத்துக்கு வருவாரென்னுங் காரணத்தால் மனம் புழுங்கினமையால் பொருது பொங்கினானென்றார். (ங)

மன்னியநாடெலாம்வளஞ்சுரந்துவான்
பொன்னியனுடுபோற்பொலிதலாலிந்த
மின்னியவேலினன்வேள்விசெய்வதென்
றுன்னியமாத்தனோர்சூழ்ச்சியுன்னினன்.

(இ-ள்.) மன்னிய நாடு எல்லாம் வான் வளம் சுரந்து - நிலைபெற்ற நிலவுலகெல்லாம் பெரியமழைவளமிக்கு, பொன் இயல் நாடு போல் பொலிதலால்-பொன்னுலகுபோல விளங்குங்காரணத்தால், இந்த மின்னிய வேலினன் - இந்த விளங்காநின்ற வேலையேந்திய உக்கிரகுமாரபாண்டியன், வேள்வி செய்வது என்று - யாகஞ்செய்கிறதென்று, உன்னிய மாத்தன் ஓர் சூழ்ச்சி உன்னினன் - கருதியமனத்தையுடையவனாய் ஓர்வினயஞ்செய்தான். (ச)

பொருங்கடல்வேந்தனைக்கூவிப்பொள்ளென
விருங்கடலுடுத்தபாரேழுமூழிநா
ளொருங்கடுவெள்ளமொத்துருத்துப்போய்வளைந்
தருங்கடிமதுரையையழித்தியாலென்றான்.

(இ-ள்.) பொரும் கடல் வேந்தனை கூவி - கரையொடுமோதும் கடற்கரசனாகிய வருணனையழைத்து, பொள்ளென - விரைந்து, இரும் கடல் உடுத்த பார் ஏழும் - பெரியகடல்சூழ்ந்த நிலவுலகாய்ப் பரந்த சத்த தீவுகளையும், ஊழி நாள் ஒருங்கு அடு வெள்ளம் ஒத்து - ஊழிக்காலத்தில் ஒருசேர அழிக்கும் மஹாப்பிரளயத்தையொத்து, உருத்து போய் வளைந்து - கோபித்துச் சென்று முற்றுகைசெய்து, அரும் கடி மதுரையை அழித்தி என்றான் - செய்தற்கரிய காவல்பூண்ட மதுராநகரத்தையழிப்பாயென்று ஏவினன்.

சத்ததீவுகளாவன - நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு. (ரு)

விளைவதுதெரிகிலன்வேலைவேந்தனும்
வளவயன்மதுரையைவளைந்திட்டிம்மெனக்
களைவதுகருதினன்பேயுங்கண்படை
கொளவருநனந்தலைக்குருட்டுக்கங்குல்வாய்.

(இ-ள்.) வேலை வேந்தனும் விளைவது தெரிகிலன் - கடற்கரசனாகிய வருணனும் (தனக்குப்பின்)விளைவதைச் சற்றும் ஆலோசியாதவனாய், வளம் வயல் மதுரையை வளைந்திட்டு - வளமிக்க வயல்சூழ்ந்தமதுரையை முற்றுகைசெய்து, இம்மென களைவது கருதினன் - விரைந்து களையக்கருதி, பேயும் கண் படை கொள - பேயுங் கண்டுயில்கொள்ளவும், குருடு வரும் - (கட்புலன் உடையவரும்) குருட்டுத்தன்மையையடையவும்வரும், நனந்தலை கங்குல் வாய் - (இருள்மிக்க) பாதிராத்திரியில்.(சு)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொதித்தலைக்கரங்களண்டகூடமெங்குமூடுபோ
யதிர்த்தலைக்கவூழிநாளிலார்த்தலைக்குநீத்தமாய்
மதித்தலத்தையெட்டிமுட்டிவருமொரஞ்சனப்பொருப்
புதித்தலொத்துமண்ணும்விண்ணுமுட்கவந்ததுதகியே.

(இ-ள்.) உததி கொதித்து - கடலானது கோபித்து, அலை கரங்கள் அண்டகூடம் எங்கும் ஊடு போய் - அலையாகிய கரங்கள் அண்டகூடமெங்கும் ஊடுருவிச் சென்று, அதிர்த்து அலைக்க - கோஷித்து அலைக்க, ஊழி நாளில் ஆர்த்து அலைக்கும் நீத்தம் ஆய் - ஊழிக்காலத்தில் கோஷித்து (நிலைகடந்து) அலைக்கவரும் பெருவெள்ளமாய், மதிதலத்தை எட்டி முட்டி - சந்திரமண்டிலத்தை எட்டி அளாவி, வரும் ஓர் அஞ்சனம் பொருப்பு உதித்தல் ஒத்து - வராநின்ற ஒரு நீலமலைத தோற்றத்தையொத்து, மண்ணும் விண்ணும் உட்கவந்தது - மண்ணுலகமும் விண்ணுலகமும் நிலைதடுமாறவந்தது. (எ)

வங்கவேலைவெள்ளமாடமதுரைமீதுவருசெயல
கங்குல்வாயதிஙகண்மீதுகாரிவாயகாருடல்
வெங்கண்வாளராவிழுங்கவீழ்வதொக்குமலதுகா
ரங்கண்மூடவருவதொக்குமல்லதேதுசொல்வதே.

(இ-ள்.) வங்கம் வேலை வெள்ளம் - மரக்கலமூருங் கடற்பெருக்கானது, மாடம் மதுரை மீது வருசெயல் - மாடங்கள் நெருங்கிய மதுரைநகர்மேல்வருஞ் செய்கை, கங்குல் வாய திங்கள் மீது - இராப்போதி லுதித்த சந்திரனமேல், காரி வாய கார் உடல் வெங் கண் வாள் அரா விழுங்க வீழ்வது ஒக்கும் - விஷம் நிறைந்த வாயையுடைய கரிய உடலையும் கொடியகண்களையும் உடைய வொள்ளியராகுவென்னும் பாம்பு விழுங்கும்படி விரைந்துவருதலையொக்கும், அல்லது - அன்றி, கார் அங்கண் மூட வருவது ஒக்கும் - (சிவபெருமான் ஏவலால்) நான்குமேகங்களும் அவ்விடத்து நானமாடக்கூடலாய் வருஞ் செயலையொக்கும், அல்லது - இவையன்றி, ஏது சொல்வது - எதை உவமையாக எடுத்துக் கூறுவது. (அ)

வட்டயாமைபலகைவீசுவாளைவாள்கண்மகரமே
பட்டயானைபாய்திரைபரப்புவாம்பரித்திரள்
விட்டதோணியிரதமின்னவிரவுதானையொடுகட
லட்டமாகவழுதிமேலமர்க்கெழுந்ததொக்குமே.

(இ-ள்.) வட்டம் யாமை பலகை - வட்டமாகிய ஆமைகள் கேடகங்களாகவும், வீசும் வாளை வாள்கள் - எறிகின்றதாவும வாளைமீனகள் வாள்களாகவும், மகரமே பட்டம் யானை-சுறுமீன்களே நெறறிபபட்டத்தையுடைய யானைகளாகவும், பாய்திரை பரப்பு வாம் பரித்திரள் - மடங்கிப்பாயும அலைகளின் பரப்புகளேதாவிச்செல்லுங் குதிரைக்கூட்டங்களாகவும், விட்ட தோணி இரதம் - கடலிற்செல்லுந்தோணியே தேராகவும், இன்ன விரவு தானையோடு - இவைபோன்ற இன்னும் பலவுறுப்புகள்கலந்த சேனையோடு, அட்டம் ஆக - குறுக்காக, வழுதிமேல் அமர்க்கு எழுந்தது ஒக்கும் - உக்கிரகுமாரபாண்டியாமேல் கடல் போர்க்கெழுந்துவாத தோற்றத்தையொக்கும்.

அட்டம் - திசைச்சொல். திருத்தொண்டர்புராணம் - கண்ணப்பநாயனார் புராணத்தில். "மஞ்சலைக்குமாமலைச்சரிப்புறத்துவந்தமா, அஞ்சவித்தடர்க்குநாய்களட்டமாகவிட்டு" எனவருஞ்செய்யுளானுணர்க.

இவைபோன்ற உறுப்புகளென்றது - வாளும் மரக்கலமும் துறையும் முதலியன. (க)

இன்னவாறெழுந்தவேலைமஞ்சுறங்குமிஞ்சிசூழ்
நன்னகர்க்குணக்கின்வந்துநணுகுமெல்லையாமிரா
மன்னவன்கனவில்வெள்ளிமன்றவாணர்சித்தராய்
முன்னர்வந்திருந்தரும்புமுறுவறோன்றமொழிகுவார்.

(இ-ள்.) இன்ன ஆறு எழுந்தவேலை - இவ்வாறு சேனைவடிவமாக எழுந்த கடலானது, மஞ்சு உறங்கும் இஞ்சி சூழ் - மேகங்கள் கண்ணுறங்கும் மதில்சூழ்ந்த, நல் நகர் குணக்கின் வந்து நணுகும அமையிரா எல்லை - நலலமதுரையின் கிழ்பால்வந்தடையும் நடுராத்திரிக்காலத்தில், மன்னவன் கனவில் - உக்கிரகுமாரபாண்டியர்கனவில், வெள்ளிமன்றவாணர் சித்தராய முன்னர்வந்து - வெள்ளியம்பலவாணராகிய சோமசுந்தரக்கடவுள் சித்தவடிவங்கொண்டு முனனேவந்து, அரும்பு முறுவல் தோன்ற மொழிகுவார் - அரும்பிய புன்னகைதோன்றக் கூறுகினறார்.

வாணர் - வாழ்வோரென்பதுபொருள். வாழ் பகுதி, நகரம் எதிர்காலவிடைநிலை, ழகரககேடும நகரத்திரிபும் சநதி, அர் பலர்பால்விகுதி. (௧௦)

வழுதியுன்றனகராழிக்கவருவதாழிவல்லைநீ
யெழுதிபோதிவென்றிவேலெறிந்துவாகைபெறுகெனத்
தொழுதசெங்கரத்தினான்றுதிக்குநாவினானெழீஇக்
கழுதுறங்குகங்குலிற்கனவுணர்ந்துகாவலான்.

(இ-ள்.) வழுதி-பாண்டியனே, ஆழி-கடலானது, உன் தன் நகர் அழிக்க வருவது - உன்னுடைய நகரையழிக்கவராநின்றது, நீ வல்லை எழுதி - நீவிரைநதெழுவாய், போதி - போவாய, வென்றி வேல் எறிநது வாகை பெறுக என - (அதன் மேல்) வெற்றியையுடைய வேலைவீசி வெறறிமாலைபெறககடவாயென்று (கூறியருள) காவலான் - காத்தலில் வல்லவராகிய அவவுககிரகுமாரபாண்டியா, தொழுத செங்கரத்தினான் - கூப்பிய செவந்தகையையுடையவராய (எழுநது) கழுது உறங்கு கங்குலின் கனவுணாநது - பேயுங் கண்ணுறஙகும நடுராததிரியில் சித்தவேடராய்வநத அச்சோமசுந்தரக்கடவுள் உணர்த்திய கனவின் திறததையுணர்நது.

வல்லை யென்னும இடைச்சொல் வினையெச்சபபொருளமேல்நின்றது. (௧௧)

கண்ணிறைந்தவமளியிற்கழிந்துவாயில்பலகடந்
துண்ணிறைந்தமதியமைச்சருடன்விரைந்துகுறுகியே
மண்ணிறைந்ததெனமுழங்கிவருதரங்கவாரிகண்
டெண்ணிறந்தவதிசயத்தனாகிநிற்குமெல்லைவாய.

(இ-ள்.) கண் நிறைந்த அமளியில் கழிந்து - கண்டுயில்கூருதற்குத்தக்க படுக்கையினின்று நீங்கி, பலவாயில் கடந்து - பலவாயில்களைக்கடந்து, உள் நிறைந்த மதி அமைச்சர் உடன் விரைந்து குறுகி - உள்ளீடாகநிறைநத அறிவமைந்த மந்திரிகளோடு விரைந்துசென்று, மண் இறந்தது என முழங்கி வருதரங்கம் வாரி கண்டு - நிலவுலகழிந்ததென்று (கண்டோர்சொல்ல) கோஷித்துவரும் அலைகளையுடைய கடலைக்கண்டு, எண் இறந்த அதிசயத்தன் ஆகி நிற்கும எல்லைவாய் - அளவில்லாத அதிசயமடைந்து நிற்குஞ்சமயத்தில். (௧௨)

கனவில்வந்தசித்தவேடர்நனவில்வந்துகாவலேறி
னினைவுகண்டுபொழுதுதாழ்விற்பதென்கொலப்பனே

சினவிவேலைபோலவந்ததெவ்வைமானவலிகெட
முனையவேலெறிந்துஞாலமுடிவுதீர்த்தியாலென.

(இ-ள்.) கனவில் வந்த சித்த வேடர் கனவில் வந்து - கனவில் வந்தருளிய சித்தவேடமூர்த்திகள் கனவில்வந்தருளி, காவலோன் நினைவுகண்டு - உக்கிரகுமார பாண்டியருடைய கருத்தையுணர்ந்து, அப்பனே பொழுது தாழ நிற்பது என் கொல் - அப்பனே நீ காலந் தாழநிற்குங் காரணம்யாது, சினவி வேலைபோல வந்த தெவ்வை - கோபித்துக் கடல்வடிவமாகவந்த பகைவனை, மானம் வலி கெட - மானமும்வலியுங் கெட, முனைய வேல் எறிந்து ஞாலம் முடிவு தீர்த்தி என - நுதியையுடைய வேலை யெறிந்து (அக்கடலால்) உலகத்திற்குவந்த இறுதியையொழித்தியென்றருளி. (௧௬)

எடுத்தவேல்வலந்திரித்தெறிந்தவேலைவேன்முனை
மடுத்தவேலைசுஃறெனவறந்துமானவலிகெட
வடுத்துவேரிவாகையின்றியடிவணங்குதெவ்வரைக்
கடுத்தவேல்வலான்கணைக்காலின்மட்டதானதே.

(இ-ள்.) எடுத்த வேல் வலம் திரித்து எறிந்த வேலை - எடுத்தவேலை வலப்பால் சுழற்றி வீசியகாலத்தில், வேல் முனை மடுத்த வேலை சுஃறென வறந்து - வேலின் நுனிதோய்ந்த கடல் சுஃறென்று வறந்து, மானம் வலி கெட அடுத்து - தனது மானமும் வலிமையுங் கெட்டழிய அடைக்கலம் புகுந்து, வேரி வாகை இன்றி அடி வணங்கு தெவ்வரை கடுத்தது - வாசமிக்க வெற்றிமாலைபுனையாது (தம்மாற்றார்)காலில்வணங்கும் பகைவரை யொத்து, வேல் வல்லான் கணைக் காலின் மட்டது ஆனது - வேலை வலக்கரத்திலேந்திய உக்கிரகுமாரபாண்டியருடைய கணைக்காலின் அளவினதானது.

கடுத்தது - ஈறுதொக்கு நின்ற வினைமுற்று வினையெச்சப் பொருள்மேல்நின்றது. வடுத்து குற்றப்பட்டு எனப் பொருள்கொள்ளலும் ஒன்று. சுஃறென ஒலிக்குறிப்புப்பொருளில்வந்த இடைச்சொல். (௧௭)

சந்தவேதவேள்வியைத்தடுப்பதன்றியுலகெலாஞ்
சிந்தவேறுசூழ்ச்சிசெய்ததேவர்கோவினேவலால்
வந்தவேலைவலியழிந்தவஞ்சகர்க்குநன்றிசெய்
திந்தவேலைவலியிழப்பதென்றுமுள்ளதேகொலாம்.

(இ-ள்.) சந்தம் வேதம் வேள்வியை தடுப்பது அன்றி - பண் அமைந்த வேத விதி வழாது செய்யும் யாகத்தைத் தடுப்பதல்லாமல், உலகு எல்லாம் சிந்த வேறு சூழ்ச்சி செய்த தேவர் கோவின ஏவலால் - உலகமெல்லாம் நிலைகெட்டழியத் தீயஆலோசனைசெய்த இந்திரனுடைய ஏவலால், வந்த வேலை - வந்தகடலானது, வலி அழிந்தது - வன்மைகெட்டது, வஞ்சகர்க்கு நன்றி செய்து - தீயருக்கு உதவிசெய்து, இந்த வேலை - இந்தக்கடலானது, வலி இழப்பது என்றும் உள்ளதே கொல் - (தனது) வலியிழத்தல் என்றும் உள்ள செயலேயாம்.

முன்னொருகால் சூரபன்மனுக்கு இடங்கொடுத்து முருகக்கடவுள் வேலால் தனது வலிகெட்டழிந்தும், விருத்திராசுரனுக்கு இடங்கொடுத்து அகத்திய ராசமனத்தால் வலியழிந்தும் உளதாதலால் இந்தவேலை வலியிழப்பதென்று முள்ளதே கொலாம் என்றார். முன் தொடங்கிய ஒன்றை முடித்தற்குப் பின் ஒருபொருளை வைத்துக் கூறினமையால் இது வேற்றுப்பொருள் வைப்பணி. அழிந்தது ஈறுதொகுத்தல். (௧௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புண்ணிடைநுழைந்தவேலாற்புணரியைப்புறங்கண்டோன்பான்
மண்ணிடைநின்றசித்தர்வானிடைநிறைந்துஞானக்
கண்ணிடைநிறைந்துதோன்றுங்கருணையால்வடிவங்கொண்டு
விண்ணிடையணங்கினோடுவிடையிடைவிளங்கினின்றார். ௧

(இ-ள்.) புண் இடை நுழைந்த வேலால் - பகைவருடலில் நுழைந்துசெல்லும் வேலாயுதத்தினால், புணரியை புறம் கண்டோன் பால் - கடலைமுதுகுபார்த்த உக்கிரபாண்டியரிடத்து, மண் இடை நின்ற சித்தர் - மண்ணுலகில் சித்தவேடமூர்த்தமாய் நின்ற சோமசுந்தரக்கடவுள், வானிடை நிறைந்து - சிதாகாயமாய் எங்கும் நிறைந்து, ஞானக்கண் இடை நிறைந்து தோன்றும் கருணையால் - ஞானக்கண்ணில்நிறைந்துபுலப்படும் தமது திருவருளால், வடிவங்கொண்டு விண் இடை அணங்கினோடு விடை இடை விளங்கி நின்றார்-திருவுருக்கொண்டு ஆகாயத்தினிடத்தில் உமாதேவியாரோடு இடபவூர்தியில் விளங்கிநின்றருளினார்.

பரஞானவடிவாய் நிறைதலால் தன்னையுணர்ந்த பரிபக்குவரறிவிற்கு விளங்கித் தோன்றுவானாகையின் ஞானக்கண்ணிடை நிறைந்து தோன்றும் என்றார் "வள்ளல்வரவர வந்தொழிந்தானென்மனத்தே" என்ற திருவாக்காலும், "விதவெனப்படுந் தாதுவின்வித்தையும் - உதையமுறுமுயிர்கட்குயிராகிய - பதிதனக்குருவம்மதுபக்குவர் - மதிதனக்குவிளக்கெனவாய்த்ததே" என்ற திருவாக்காலும்உணர்க. வானாகிய இடமென நிற்றலால் வானிடை ஒருசொல். வானிடை நிறைந்து என்பதற்கு ஞானாகாசமாகிய அம்பலத்தில் நிறைந்து எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. ()

முக்கணும்புயங்கணான்குமுளைமதிக்கண்ணிவேய்ந்த
செக்கரஞ்சடையுங்காளகண்டமுந்தெரிந்துதென்னன்
பக்கமேபணிந்தெழுந்துபரந்தபேரன்புந்தானுந்
தக்கவஞ்சலிசெய்தேத்தித்தரைமிசைநடந்துசெல்வான்.

(இ-ள்.) முக்கண்ணும் புயங்கள் நான்கும் - திரிநேத்திரங்களையும் நான்குதிருப்புயங்களையும், முளைமதி கண்ணிவேய்ந்த செக்கர் அம் சடையும்-தோன்றிய இளஞ்சந்திரனை மாலையாகச்சூடிய செவந்த அழகியசடாமுடியையும், காளகண்டமும்-காளகண்டத்தையும், தென்னன் தெரிந்து-உக்கிரகுமாரபாண்டியர் தரிசித்து, பக்கமே பணிந்து எழுந்து - சோமசுந்தரக்கடவுளருகில் வணங்கி எழுந்து, பரந்த பேர் அன்பும் தானும் தக்க அஞ்சலி செய்து ஏத்தி - பரவியெழுந்த பெரிய அன்பும் தானும் விதிப்படி அஞ்சலிசெய்துதுதித்து, தரைமிசை நடந்து செல்வான் - நிலவுலகின்மேல் (பருந்தினிழல்போல்) விடாதுதொடர்ந்து செல்லுகின்றார்.

விதிவழி யஞ்சலிசெய்தலாவது - அட்டாங்கம், பஞ்சாங்கம், திரியாங்கங்களாம். அவற்றைமுன்னர்க்காண்க. பரவசமுற்ற முதலையுஞ் சினையையும் வேறுவைத்துக்கூறுதல் நெறி ஆதலால் அன்புந் தானும் அஞ்சலிசெய்தேத்தி என்றார் "நானுமென்சிந்தையும் நாயகனுக்கெவ்விடத்தோம்" என்ற திருவாக்கால் உணர்க. (௧௭)

துந்துபியைந்துமார்ப்பப்பாரிடந்தொழுதுபோர்ப்பத்
தந்திரவேதகீதந்தும்பியெண்டிசையுந்தாக்க
வந்தரார்டரோத்தவகல்விசும்பாறதாக
வந்துதன்கோயில்புக்கான்வரவுபேர்க்கிறந்தவள்ளல்.

(இ-ள்.) **துந்துமி ஐந்தும் ஆர்ப்ப** - பஞ்சதுந்துபிகளும் (ஒருபால்)கோஷிக்கவும், பாரிடம் தொழுது போர்ப்ப - சிவகணங்கள் தொழுது சூழ்ந்துவரவும், தந்திரம் வேத கீதம் ததும்பி எண் திசையும் தங்க - பலகலைகளமைந்த வேதகீதங்கள் நிறைந்து அட்டதிக்குகளிலும் பரவவும், அந்தர நாடர் ஏத்த-தேவர்கள் (ஒருபால்) துதித்துவரவும், வரவு போக்கு இறந்த வள்ளல் - பிறப்பு இறப்பில்லாதவராகிய சோமசுந்தரக்கடவுள், அகல் விசும்பு ஆறது ஆகவந்து தன் கோயில் புக்கான்-அகன்றவிண்ணே வழியாகவந்து தமது திருக்கோயிலுள் எழுந்தருளினார்.

ஆறது அது பகுதிப்பொருள் விகுதி. (௧௮)

அஞ்சலிமுகிழ்த்துச்சேவித்தருகுறவந்தவேந்த
னிஞ்சிசூழ்கோயிலெய்தியிறைஞ்சினன்விடைகொண்டேகிப்
பஞ்சின்மெல்லடியாரட்டமங்கலம்பரிப்பநோக்கி
மஞ்சிவர்குடுமிமாடமாளிகைபுகுந்தான்மன்னோ.

(இ-ள்.) அஞ்சலி முகிழ்த்து சேவித்து அருகு உற வந்தவேந்தன் - அஞ்சலிகூப்பிச் சேவைசெய்து அருகில்விடாதுவந்த உக்கிரகுமாரபாண்டியர், இஞ்சிசூழ் கோயில் எய்தி இறைஞ்சினன் - மதில்சூழ்ந்த திருக்கோயிலையடைந்து வணங்கி, விடைகொண்டு ஏகி - சோமசுந்தரக்கடவுளிடத்து விடைபெற்றுச்சென்று, பஞ்சின் மெல்லடியார் - பஞ்சினு மெல்லியகால்களையுடைய சுமங்கிலிகள், அட்டமங்கலம் பரிப்ப நோக்கி - அஷ்டமங்கலங்கள் சுமந்து எதிர்வரப்பார்த்து, மஞ்சு இவர் குடுமி மாடமாளிகை புகுந்தான் - மேகந்தவழுஞ் சிகரத்தையு மேன்மாடத்தையுமுடைய (தமது) திருக்கோயிலுட்சென்றார்.

பகைவென்று வாகைவேய்ந்து வருபவராதலால் பஞ்சின்மெல்லடியாரட்டமங்கலம் பரிப்ப நோக்கி என்றார். (௧௯)

வளையெயின்மதுரைமூதூர்மறிகடலிவற்றினாப்பண்
விளைவயனகரமெல்லாம்வெள்ளியம்பலத்துளாடுந்
தளையவிழ்கொன்றைவேணித்தம்பிரான்றனக்கேசேர்த்துக்
களைகணாயுலகுக்கெல்லாமிருந்தனன்காவல்வேந்தன்.

(இ-ள்.) வளை எயில் மதுரை மூதூர் மறிகடல் இவற்றின் நாப்பண் - வளைந்தமதில்சூழ்ந்த மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள நகரமும் அலைகள்மடங்குவரும் தென்கடலுமாகிய இவற்றின்மத்தியிலுள்ள, விளைவயல் நகரம் எல்லாம்-விளைவினையுடைய வயலும் நகரமுமாகிய இவைகளை எல்லாம், வெள்ளியம்பலத்துள் ஆடும் தளை அவிழ் கொன்றைவேணி தம்பிரான் தனக்கே சேர்த்து - வெள்ளியம்பலத்துள் திருநடனஞ்செய்யும கட்டவிழ்ந்த கொன்றைமாலையையணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கே யுரிமையாக்கி, காவல் வேந்தன் - காவல்செய்யும் உக்கிரகுமாரபாண்டியர், உலகுக்கு எல்லாம் களைகணாய் இருந்தனன்-இவ்வுலகின் பகுதிக்கெல்லாம் பற்றுக்கோடாக இருந்து அரசுபுரிந்துவந்தனர்.

ஆய் செயவெனெச்சத்திரிபு. (௨௰)

கடல்சுவற வேல்விட்டபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கபுக.

பதினேழாவது.

# இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிர்மணிப்பூண்மார்பன்வேலையைவேலால்வென்று
பொன்னவிர்வாகைவேய்ந்தபுகழுரைசெய்தேம்நாக
நன்னகராளிசெம்பொனகைமுடிசிந்தவந்த
மன்னவன்வளைகொண்டோச்சிவென்றதும்வகுத்துச்சொல்வாம்.

(இ-ள்.) மின் அவிர் மணிப்பூண் மார்பன் – மின்னல்போல் விளங்கும் இரத்தினம்பதித்த ஆபரணத்தையணிந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர், வேலையை வேலால் வென்று - கடலைத் (தமது)வேலால்வென்று, பொன் அவிர் வாகை வேய்ந்த புகழ் உரை செய்தேம் - பொன்னிறங்கொண்டுவிளங்கும் வாகை மாலையையணிந்த புகழாகிய திருவிளையாடலைக்கூறினோம், நல் நாகம் நகர் ஆளி செம்பொன் நகைமுடி சிந்த - நல்லபொன்னுலகாள்வோனாகிய இந்திரனுடைய செவ்வந்தபொன்னாலாகிய விளக்கத்தையுடைய மகுடஞ்சிதற, அந்த மன்னவன் வளை கொண்டு ஓச்சி வென்றதும் வகுத்து சொல்வாம் - அந்தவுக்கிரகுமார பாண்டியா சக்கரம் எறிந்து வென்ற திருவிளையாடலையும் இனி விரித்துக்கூறுவாம். (க)

கோமகனிகழுநாளிற்கோணிலைபிழைத்துக்கொண்மூ
மாமழைமறுப்பப்பைங்கூழ்வறந்துபுற்றலைகடீந்து
காமருநாடுமூன்றுங்கையறவெய்தமன்னர்
தாமதுதீர்வுநோக்கித்தமிழ்முனியிருக்கைசார்ந்தார்.

(இ-ள்.) கோமகன் நிகழும் நாளில் - (இவ்வாறு) உக்கிரகுமாரபாண்டியர் அரசியல் வழுவாது செங்கோல்செலுத்திவருங்காலையில், கோள் நிலை பிழைத்து- நவக்கிரகங்கள் தத்தமக்குரிய நிலையினின்று தவறுதலால், கொண்மூ மாமழை மறுப்ப - மேகங்கள் பெருமைமிக வருஷித்தலொழிய, காமரு மூன்று நாடும் - விருப்ப மிக்க சேரசோழபாண்டியர்களுடைய மூனறுநாடுகளும், பைங்கூழ் வறந்து - பசியபயிர்கள் தீந்து, புல் தலைகள் தீந்து-பசியபுல்லின்தலைகள் கருகி, கையறவு எய்த- வறுமைகூர, மன்னர் தாம் அது தீர்வு நோக்கி - அவ்வரசர் அவ்வறுமையொழிதலைக்கருதி, தமிழ்முனி இருக்கை சார்ந்தார் - அகத்தியமுனிவரிருக்கையாகிய பொதியமலையையடைந்தார்.

கையறவு ஒழுக்கம் அறுதல், மக்கட்பரப்பிற்கன்றி ஏனைவிலங்கின் பரப்பிற்கும் உணவொழிந்தது என்பார் புற்றலைகடீந்து எனவும், இடத்து நிகழ்பொருள்களின்றொழில்களை யிடத்தின்மே லேற்றித் தீந்து கருகிக் கையறவெய்தவெனவுங் கூறினார். (உ)

முனிவனையடைந்துவேந்தர்மூவருந்தங்கணாட்டிற்
பனிவருமாரியின்றிவறந்தமைபகரமேருக்
குனிவருசிலையார்க்கன்பர்கோணிலைகுறித்துநோக்கி
யினிவருமாரியில்லையாதினுலென்றுகேண்மின்.

(இ-ள்.) வேந்தர் மூவரும் முனிவனை அடைந்து - பாண்டியர்முதலிய மூன்றரசர்களும் அகத்தியமுனிவரை யடைந்து, தங்கள் நாட்டில் பனிவரு மாரி இன்றி

இந்திரன்முடிமேல்வளையெறிந்ததிருவிளையாடல்



வறந்தமை பகர - தங்கள் நாடுகளில் குளிர்ச்சியைத்தரும் மழையில்லாமையினால் வறுமையிருந்தமையைக்கூற, மேரு குனி வருசிலையார்க்கு அன்பர் - மகமேருவாகி ய வளைந்தவில்லையேந்திய சிவபெருமானுக்கு அன்பராகிய அகத்தியர், கோள் நிலை குறித்து நோக்கி - கிரகங்கள் நிற்குந்நிலையை ஆராய்ந்துபார்த்து, இனிவரும் மாரி இல்லை - இனிப்பெய்யும் மழையில்லை, யாதினால் என்று கேண்மின் - என்னகாரண த்தால் என்று சொல்லக்கேளுங்கள்.

உம்மை இனைத்தென அறிபொருளில் வந்த முற்றுப்பொருட்டு. பனிமழையி ன்மையால் வரும் ஓர் நோய் எனப் பொருள்கொண்டு பனிவரு மாரியின்றி என்பத ற்குப் பனியென்னு நோய்வருதற்குக் கருவியாகிய மழைவறந்தமை எனப் பொருள் கொள்ளாலும் ஒன்று. பனி அமமை. இது குடநாட்டு வழக்கு. (௩)

காய்சினவேய்யோன்சேயோன்முன்செலக்கதிர்கால்வெள்ளித்
தேசிகன்பின்புசென்றுநடக்குமிச்செயலான்மூந்நீர்த்
தூசினவுலகிற்பன்னீராண்டுவான்சுருங்குமென்று
பேசினநூல்கண்மாரிபெய்விப்போற்சென்றுகேண்மின்.

(இ-ள்.) காய்சினம் வெய்யோன் சேயோன் முன்செல - உயிர்களைச்சுட்டு வருத்தும் கோபத்தையுடைய சூரியனும் அங்காரகனும் முன்னேசெல்ல, கதிர்கால் வெள்ளித்தேசிகன் பின்பு சென்று நடக்கும் இச்செயலால் - கிரணத்தைவீசும் சுக் கிரன் அக்கோள்களுக்குப் பின்புசென்றுநடக்கும் இக்காரணத்தால், மூந்நீர் தூசி ன உலகில் பன்னீர் ஆண்டு வான் சுருங்கும் என்று நூல்கள் பேசின - கடலையா டையாகவுடைய உலகில் பன்னிரண்டுவருடம் மழைபெய்யாதொழியுமென்று நூ ல்கள்கூறின, (ஆதலால்) மாரி பெய் விப்போன் சென்று கேண் மின் - மழைபெய் விக்கும் இந்திரனைச்சென்று கேளுங்கள். (௪)

என்றவனெதிர்யாமெவ்வாறேகுதுமென்றனாந்தும்
வென்றவன்சோமவாரவிரதநீர்நோற்றுவெள்ளி
மன்றவனருளைப்பெற்றுவான்வழிசெல்மினென்றக்
குன்றவன்சிலையானோன்பின்விதியினைக்கூறுகின்றான்.

(இ-ள்.) என்றவன் எதிர் - என்றுகூறிய அகத்தியமுனிவர் எதிரில், எவ்வா று யாம் ஏகுதும் என்றார் - எப்படி யாம் (வான்வழிச்) செல்வோம் என்று வினவி னார்கள், ஐந்தும் வென்றவன் - பஞ்சேந்திரியங்களையும் வென்ற அம்முனிவர், நீர் சோமவார விரதம் நோற்று வெள்ளி மன்றவன் அருளைப்பெற்று - நீங்கள் சோம வாரவிரதத்தை யநுட்டித்து வெள்ளியம்பலத்துள் நடனஞ்செய்தருளிய பெருமா னார் திருவருளையடைந்து, வான் வழி செல்மின் என்று - ஆகாயத்தின்வழியாகச் செல்லுங்கள் என்று, அக்குன்றம் வன் சிலையான் நோன்பின் விதியினை கூறுகின்றா ன் - அந்தமகமேருவாகிய வலியவில்லையேந்திய சிவபெருமான் விரதத்தின் விதியி னைச்சொல்லத்தொடங்கினார். (௫)

உத்தமவானோர்தம்முளுத்தமனுருமீச
னுத்தமசத்திமாருளுத்தமியுருத்திராணி
யுத்தமவிரதந்தம்முளுத்தமந்திங்களோன்பெ
ன்றுத்தமமறைநூலாதியுரைக்குமிச்சோமவாரம்.

(இ-ள்.) உத்தமம் வானோர் தம்முள் ஈசன் உத்தமன் ஆகும் - உத்தமத்தன்மைவாய்ந்த திருமால்முதலிய தேவர்களுள் சிவபெருமான் உத்தமனாவன், உத்தம சத்திமாருள் உருத்திராணி உத்தமி - உத்தமத்தன்மைவாய்ந்த இலக்குமி முதலிய சத்திமாருள் உருத்திராணி உத்தமியாவாள், உத்தம விரதம் தம்முள் திங்கள் நோன்பு உத்தமம் என்று - உத்தமத்தன்மைவாய்ந்த விரதங்களுள் சோமவாரவிரதம் நோற்றல் உத்தமமென்று, உத்தமம் மறை நூல் ஆதி உரைக்கும் - உத்தமத்தன்மை வாய்ந்த வேதம்முதலிய நூல்கள் கூறாநிற்கும், இச்சோமவாரம் - இந்தச்சோமவாரமானது. (௬)

மந்தரங்காசியாதிபதிகளில்வதிந்துநோற்கத்
தந்திடும்பயனிற்கோடிதழைத்திடுமதுரைதன்னி
லிந்தநல்விரதநோற்போர்க்கதிகம்யாதென்னிற்சோம
சுந்தரனுரியவாரமாதலாற்சோமவாரம்.

(இ-ள்.) மந்தரம் காசி ஆதி பதிகளில் வதிந்து நோற்க தந்திடும் பயனில் - மந்தரம் காசிமுதலிய திருப்பதிகளில் தங்கி அநுஷ்டிக்க (அவ்விரதம்) தரும்பயனிலும், மதுரைதனில் இந்த நல்விரதம் நோற்போர்க்கு - மதுரையிலிருந்து இந்த நல்லவிரதத்தை யநுட்டிப்பவர்க்கு, கோடி தழைத்திடும் - கோடிமடங்குபயனுண்டாம், அதிகம் யாது என்னில் - (அம்மதுரையிலிருந்துநோற்றலால்) அதிகபலன் கிடைத்தற்குக் காரணம் யாது என்றால், சோமவாரம் சோமசுந்தரன் உரியவாரம் ஆதலால் - சோமவாரமானது சோமசுந்தரக்கடவுளுக்கு உரியவாரம் ஆதலால் (என்று அறியுங்கள்) (௭)

அங்கதினதிகப்பேறுண்டருக்கனின்மதிதோய்ந்தொன்றித்
தங்கியதிங்கணோன்புதகுதியினோற்கவல்லார்க்
கிங்கதினதிகநீதியிட்டியபொருளகொண்டாற்று
மங்கலவிரதப்பேறொன்றனந்தமாய்வளருமன்றே.

(இ-ள்.) அருக்கனில் மதிதோய்ந்து ஒன்றி தங்கிய திங்கள் நோன்பு - சூரியனில் சந்திரன்கலந்துபொருந்திய அமாவாசையில்வந்த சோமவாரவிரதநோன்பை, தகுதியில் நோற்க வல்லார்க்கு - ஆகமவழியால் அநுட்டிக்கவல்லவருக்கு, அங்கு அதின் அதிகம் பேறு உண்டு - அப்பயனிலும் அதிகபயனுண்டு, நீதி ஈட்டிய பொருள் கொண்டு ஆற்றும் - நீதிவழிநின்று தேடியபொருளைக்கொண்டு செய்யும், மங்கல விரதம் பேறு - மங்கலந்தரும் சோமவாரவிரதப்பயன், இங்கு அதின் அதிகம் - இங்கு அப்பயனிலும் அதிகமாம், ஒன்று அனந்தமாய் வளரும் - ஒன்று பலவாய்ப்பெருகும்.

தங்கிய விளையாலிணையும்பெயர். (அ)

நலமலிவிரதநோற்கத்தொடங்குநாணவில்வாந்தேளிற்
சிலையினிலாதலன்றியிரட்டியதெரிசஞ்சேர்ந்த
மலமதியொழித்துமற்றைமதியிலுமுந்தைப்பக்கத்
தலர்கதிர்வாரத்தல்லுாணயின்றிடாவயலிற்றுஞ்சா.

(இ-ள்.) நலம் மலி விரதம் நோற்க தொடங்கு நாள் நவில்வாம்-நன்மைமிக்க சோமவாரவிரதத்தையனுட்டிக்கத் தொடங்கும் நல்லமுகூர்த்ததினத்தைக் கூறுவாம், தேளில் சிலையினில் ஆதல் அன்றி - விருச்சிகமாதத்திலுந் தனுர்மாதத்திலும் அனுட்டிக்கத்தொடங்குதலுமல்லாமல், இரட்டிய தெரிசம் சேர்ந்த மல மதி ஒழித்து - இரட்டித்துவரும் அமாவாசைசேர்ந்த மலமாசத்தையொழித்து, மற்றை

மதியிலும் - மற்றைமாதத்திலும் (அனுட்டிக்கத்தொடங்கில்) முன்னைப் பக்கத்து - சுக்கிலபக்கத்தில், அலர் கதிர் வாரத்து அல் - பரந்த கிரணத்தையுடைய ஞாயிற்றுக் கிழமை யிரவில், ஊண் அயின்றிடாது அயலில் துஞ்சாது - ஊணுண்ணாமலும் வேற்றிடத்தில் நித்திரைசெய்யாமலும்.

விரதம்நோற்கத் தொடங்குவோர்க்கு இரண்டமாவாசைகூடிய மாதம் மலமாதம் ஆதலால் அந்தமாதத்தையொழித்து ஏனைமாதங்களில் தொடங்கவேண்டுமென்பது தோன்ற மலமதியொழித்து என்றார். சோமன் வெண்ணிறமுடையவனாதலால் முன்னைப்பக்கத்தில் தொடங்கவேண்டும் என்பது. (௯)

வைகறையெழுந்துசேற்கணமணாளனையுள்கியற்றைச்
செய்கடனிறீஇக்காமாதிசிந்தைநீத்தலர்பொற்கஞ்சப்
பொய்கையையடைந்துகையிற்பவித்திரம்புனைந்துவாக்கு
மெய்கருத்தொருப்பாடெய்தச்சங்கற்பம்விதந்துகூறி.

(இ-ள்.) வைகறை எழுந்து - விடியற்காலத்தி லெழுந்து, சேல் கண் மணாளனை உள்கி - அங்கயற்கண்ணம்மையார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளைத் தியானித்து, அற்றை செய் கடன் நிறுவி - அன்று செய்யும் நியதியகடன்களை முறையாகச் செய்து முடித்து, காமாதி சிந்தை நீத்து - காமமுதலிய தீக்குணங்களை மனத்தினின்றுநீக்கி, அலர் பொன் கஞ்சம் பொய்கையை அடைந்து - அலர்ந்த பொற்றாமரைத்திருக்குளத்தை யடைந்து, கையில் பவித்திரம் புனைந்து - கைவிரலுள் அநாமிகையில் பவித்திரந்தரித்து, கருத்து வாக்கு மெய் ஒருப்பாடு எய்த - மனவாக்குக்காயங்கள் ஒன்றுபட, சங்கற்பம் விதந்து கூறி - சங்கற்பமெடுத்துச்சொல்லி.

சங்கற்பம் ஆவது தானெடுத்தகாரிய முட்டின்றி முடிந்து பயன் எளிதிற் கைகூடக்கூறுவது. பவித்திரம் பாவத்தைநீக்கி முத்தியைத்தருவது. காமாதி - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இவ்வாறும் உட்பகையாதலால் காமாதிசிந்தை நீத்து என்றார். மனவாக்குக்காயங்கள் ஒருப்படுதலாவது தம்முள் ஒன்றுபட்டுநிற்றல். வைகறை அறைநாட்கழிந்தறுதல். (௰)

கடம்படிமுளைத்தமுக்கட்கரும்பினைநினைந்துஞாலத்
திடம்படுதீர்த்தமெல்லாமாடியபயனையீண்டுத்
திடம்படத்தருதியென்றுதிரைதடம்படிந்துவெண்ணீ
றுடம்பணிந்தக்கமாலையொளிபெறவிதியாற்றாங்கி.

(இ-ள்.) கடம்பு அடி முளைத்த முக்கண் கரும்பினை நினைந்து - கடம்பமரத்தினடியில் முளைத்தெழுந்த மூன்றுகண்களையுடைய கரும்பினைத் தியானித்து, ஞாலத்து இடம்படு தீர்த்தம் எல்லாம் ஆடிய பயனை - நிலவுலகத்தினிடத்திற் பொருந்திய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் மூழ்கியபயனை, ஈண்டு திடம் பட தருதி என்று - இத்தீர்த்தத்தி லுறுதியாகத் தந்தருள்வாய் என்று, திரை தடம் படிந்து - அலையையுடைய பொற்றாமரைத்தீர்த்தத்தில ஸ்நானஞ்செய்து, வெள் நீறு விதியால் உடம்பு அணிந்து-வெள்ளியநீற்றினை ஆகமவிதிப்படிதமது உடம்பிலுள்ள உறுப்புகளில்அணிந்து, அக்கமாலை ஒளி பெற தாங்கி - உருத்திராக்ஷமாலிகைகளை யொளிவீசத்தரித்து.

தலை, நெற்றி, மார்பு, உந்தி, முழங்கால், ங்கை, கழுத்து, முதுகு, செவி ஆகிய இவ்வுறுப்புகளில் நெற்றி, மார்பு, தோளடி என்னும் உறுப்புகளில் ஆறங்குலமும், ஏனையுறுப்புகளில் ஓரங்குலமுமாக விபூதிதரித்தலும்; சிகை, தலை, கழுத்து, மார்பு, புயம், கை, காது ஆகிய இவ்வுறுப்புகளில் சிகையில் - ஒருமணியும், தலையில் - முப்

பத்தாறுமணியும், கழுத்தில் - முப்பத்திரண்டுமணியும், மார்பில் - நாற்பெட்டுமணியும், புயத்தில் - பதினாறுமணியும், கையில் - பனிரண்டுமணியும், காதில் - ஒருமணி அல்லது ஆறுமணியும் ஆகக் கோவைசெய்த உருத்திராட்சமாலிகையணிதலும் விதியாதலால் விதியாலணிந்த, தாங்கி என்றார். முக்கட்கரும்பு - திரிநேத்திரங்களையுடைய கரும்புபோல்பவர்எனவும், மூன்றுகணுக்களையுடைய கரும்பு எனவும், செம்மொழிச் சிலேடையாகப் பொருள்கொண்டு, தன் சாதிபபொருளிடத்துத் தோன்றுதல் மரபாதலால்-கடம்படிமுளைத்த முக்கட்கரும்பு என்றார், தான் எடுத்த காரியம் இனிது முடிந்து இன்பம் தரவேண்டு மென்னும் அபிப்பிராயத்தோடு முக்கட்கரும்பினை நினைந்து என்றது கருத்துடை யடையணி. (௧௧)

வெள்ளைமந்தாரமுல்லைமல்லிகைவெடிவாய்சசாதி
கள்ளவிழ்மயிலையாதிவெண்மலர்கவர்ந்துவேழப்
பிள்ளையைமுந்தப்பூசித்திரந்துசங்கற்பம்பேசி
யுள்ளணைந்துச்சிமேற்பன்னிருவிரலுயர்ச்சிகரும்பர்.

(இ-ள்.) வெள்ளை மந்தாரம் முல்லை மல்லிகை வெடிவாய் சாதி - வெள்ளைமந்தாரமலரும் முல்லைமலரும் மல்லிகைமலரும், வெடித்தவாயையுடைய சாதிமலரும், கள் அவிழ் மயிலை ஆதி வெள் மலர் கவர்ந்து - தேனொழுகுமலர்ந்த இருவாக்ஷிமலரும் முதலிய வெள்ளிய மலர்களைககொய்து, வேழப பிள்ளையை முந்தப் பூசித்து-சித்திவிநாயககடவுளை முன்பு பூசித்து, இரந்து சங்கற்பம் பேசி - குறையிரந்து தாம் எடுத்தகாரிய மினிது முடியவேண்டுமென்னும சங்கறபங்களை யெடுத்துககூறி, உள் அணைந்து - திருக்கோயிலுள் சென்று, உச்சிமேல் பன்னிரு விரல் உயர்ச்சிக்கு உம்பர் - உச்சிமேல் பன்னிருவிர லுயர்ச்சிககுமேலுள்ள துவாதசாநதத்தில். (௧௨)

சத்தியஞானாநந்தத்துவந்தன்னை யுள்கி
வைத்ததன்வடிவங்கொண்டுமண்முதற்சிவமீறான
வத்துவவிலிங்கந்தன்னையாசனமூர்த்திமூல
வித்தைமற்றுநூலின்விதியினாற்பூசைசெய்க.

(இ-ள்.) சத்திய ஞானாநந்த தத்துவம் தன்னை உள்கி வைத்து - உண்மையறிவானந்தவடிவாகிய சோமசுந்தரக்கடவுளைத் தமது மனத்தில் தியானித்துவைத்து, அதன் வடிவம் கொண்டு - அச்சிவவடிவமாய் நின்று, மண் முதல் சிவம் ஈறு ஆன அத்துவ இலிங்கம் தன்னை - பிருதிவி தத்துவம் முதலாய்ச் சிவதத்துவமீறாகின்ற சிவலிங்கப்பெருமானை, ஆசனம் மூர்த்தி மூலம் வித்தையாலும்-ஆசனமந்திரத்தாலும் மூர்த்திமந்திரத்தாலும மூலமந்திரத்தாலும், நூலின் விதியினாலும - ஆகம விதியினாலும், பூசை செய்க - பூசைசெய்யக்கடவர்.

அத்துவம் - வடசொற்றிரிபு.

உச்சிமேற் பன்னிருவிரலுயர்ச்சிக்கும்பர் என்றது தொடங்கிச் சத்தியஞானாநந்தத்துவந்தன்னை யுள்கிவைத்த தன்வடிவங்கொண்டு என்பதுகாறும் மானத பூசை ஆதலால் சூக்குமதேகசுத்தியும், தூலதேகசுத்தியும், ஆன்மசுத்தியும் அடங்கும். விடைபெற்றுப் பின்னர்ப் புறப்பூசை நடத்துதலால் ஆசனமூர்த்தி மூலவித்தை மற்று நூலின் விதியினாற்பூசைசெய்க என்றார். ஆன்மதத்துவம் அடிப்பாகமும், வித்தியாதத்துவம் நடுப்பாகமும், சிவதத்துவம் முடிவுமாக இருத்தலின் மண் முதற் சிவமீறான தத்துவம் என்றார். (௧௩)

ஐந்தமுதாவினைந்துநறுங்கனியைந்துசெந்தேன்
சந்தனந்தோயம்புட்பத்தண்புனன்மணிநீராட்டிச்
சுந்தரவெண்பட்டாடைகருப்புரசுண்ணஞ்சாந்தங்
கந்தமல்லிகைமுன்னானவெண்மலர்க்கண்ணிசாத்தி.

(இ-ள்.) ஐந்து அமுது ஆவின் ஐந்து நறுங்கனி ஐந்து - பஞ்சாமிர்தம்பஞ்சகவ்வியம் நறுமணங்கமழும் வாழைக்கனி முதலிய ஐந்துகனிகள், செம் தேன் - செவ்வந்தேன், சந்தனம் தோயம் - சந்தனக்குழம்பு (ஆகிய இவைகளாலும்) புட்பம் தண் புனல் - மலர்பெய்த தண்ணியநீராலும், மணி நீர் - கங்கைமுதலியநீரினாலும், ஆட்டி - திருமஞ்சனஞ்செய்து, சுந்தரம் வெண் பட்டாடை கருப்புரம் சுண்ணம் சாந்தம் - அழகிய வெள்ளிய பட்டாடையையும் பச்சைக்கருப்புரங் கலந்த கலவையையும் வெள்ளிய சந்தனக்குழம்பையும், கந்தம் மல்லிகை முன் ஆன வெண் மலர் கண்ணி சாத்தி - வாசமிக்க மல்லிகை முதலாகிய வெள்ளியமலர்களாலாகிய கண்ணிமாலையையுஞ்சாத்தி.

கண்ணிமாலை - [illegible] (௧௪)

காசணிபொலம்பூண்சாத்திக்கழலாதியங்கப்
பூசனைசெய்துசேர்கட்பூரணப்பரையையவ்வா
றீசனைந்தெழுத்தைப்பெண்பாற்கிசையவுச்சரித்துப்பூசித்
தாசறுசுரபிதீம்பாலட்டவின்னமுதினோடும்

(இ-ள்.) காசு அணி பொலம் பூண் சாத்தி - இரத்தின மிழைத்த பொன்னாலாகிய திருவாபரணங்களைச்சாத்தி, கழல் ஆதி அங்க பூசனை செய்து - ஒலிக்கும் வீரகண்டையையணிந்த பாதாதிகேசமீறாக வுள்ள அங்கபூசை செய்துமுடித்து, சேர் கண் பூரண பரையை - அங்கயற்கண்ணியாகிய பராசத்தியை, அ ஆறு - அவ்வகையாக (பூசித்து) ஈசன் ஐந்து எழுத்தை - சிவபெருமான் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை, பெண்பாற்கு இசைய உச்சரித்துப் பூசித்து - பெண்பாலாகிய அப்பராசத்திக்குப்பொருந்த உச்சரித்துப் பூசனை செய்து, ஆசு அறு சுரபி தீம் பால் அட்ட இன் அமுதின் ஓடும் - குற்றமற்ற இனிய பசுவின்பாலோடு கலந்து சமைத்த இனிய திருவமுதோடும் (௧௫)

பண்ணியவகைபானீயநிவேதனம்பண்ணிவாச
நண்ணியவடைகாய்நல்கிநறுவிரைதூபந்தீப
மெண்ணியவகையாற்கோட்டிக்கண்ணடியேனைமற்றும்
புண்ணியன்றிருமுன்காட்டிவில்வத்தாற்பூசைசெய்தல்.

(இ-ள்.) பண்ணியவகை பானீயம் நிவேதனம்பண்ணி - பலகாரவகைகளும் பானீயமும் ஆகிய இவைகளை நிவேதனஞ்செய்து, வாசம் நண்ணிய அடை காய் நல்கி - (தக்கோலமுதலிய) வாசனைத்திரவியங்கூடிய வெற்றிலையும் பாக்குந் தந்து, நறுவிரை தூபம் தீபம் எண்ணிய வகையால் கோட்டி - நறுமணங்கமழும் தூபத்தையும் தீபத்தையும் வரையறுத்தவகையால் வளைத்து, கண்ணடி ஏனை மற்றும் புண்ணியன் திருமுன் காட்டி - கண்ணாடியும் அதுவொழிந்த மற்றை உபசாரங்களையுஞ் சோமசுந்தரக்கடவுள் திருமுன்காட்டி, வில்வத்தால் பூசைசெய்தல் - வில்வத்தாலருச்சிக்கக்கடவர்.

பஞ்சோபசாரங்களுள் - பண்ணியம், அடை, காய், வெற்றிலை, பாக்கு, இவை பிருதிவிசம்பந்தமாயுள்ளன. பானீயம் அப்புசம்பந்தமாயுள்ளது. தீபம் அக்

கினிசம்பந்தமாயுள்ளது. கண்ணடியும் அவ்வக்கினிசம்பந்தமுள்ளது. தூபம் வாயு சம்பந்தமுள்ளது. மற்றும் என்றது மணியோசைமுதலிய ஆகாயசம்பந்தமுள்ள வற்றை.

வரையறுத்தவகை என்றது மூன்றுதரம். பானியம் - பானக்கம். (௧௬)

புரகரனிச்சாஞானகிரியையாய்ப்போந்தவில்வ
மரமுதலடைந்துமூன்றுவைகலூணுறக்கமின்றி
யரகரமுழக்கஞ்செய்வோரைம்பெரும்பாதகங்கள்
விரகில்செய்கொலைகடீருமாதலால்விசேடம்வில்வம்.

(இ-ள்.) புரகரன் இச்சாஞான கிரியையாய் போந்த வில்வமரமுதல் அடைந்து - சிவபெருமானுடைய இச்சாஞானகிரியாசத்திகளின் வடிவாய்வந்த வில்வமரத்தடியில்வந்து, மூன்று வைகல் ஊண் உறக்கம இன்றி - மூன்றுநாள் ஊண் உறக்கமில்லாமல், அரகர முழக்கம் செய் வோர் ஐம்பெரும பாதகங்கள்-அரகரவென்னும்கோஷம் செய்வோருடைய ஐந்துமகாபாதகங்களும், விரகு இல் செய் கொலைகள் தீரும் - பேரறிவில்லாமையாலசெய்யுங் கொலைகளுநதீரும், ஆதலால் வில்வம் விசேடம் - ஆதலால் அருச்சனைப்பொருள்களில் வில்வம் விசேடமாம்.

அடைந்தவர் மாயையை வேரோடரிதலின அரன் எனச் சிவபெருமானுக்கு ஓர் திருநாமம். "நாரத்திலுறையுமாற்ற ஞரணன்சேர்நதோர்மாயை, வேர்முற்று மரியுமாற்றலரன்" எனவருஞ்செயயுளாலுணர்க. (௧௭)

மடங்கிதழ்சுருங்கல்வாடியுலர்ந்ததுமயிர்ச்சிக்குண்டன்
முடங்குகாற்சிலம்பிக்கூடுபுழுக்கடிமுதலாங்குற்ற
மடங்கினுங்குற்றமில்லையுத்தமமாகும்வில்வந்
தடங்கைகொண்டீசனாமமாயிரஞ்சாற்றிசசாத்தல்.

(இ-ள்.) மடங்கு இதழ் சுருங்கல் - இதழ்மடங்கிச் சுருங்கி இருத்தலும், வாடி உலர்ந்ததும் - வாடியுலர்நதிருத்தலும், மயிர்ச்சிகுண்டல் - மயிர்ச்சிக்குண்டிருத்தலும், முடங்கு கால் சிலமபி கூடு - முடங்கியகாலகளையுடைய சிலமபிப்பூச்சி கூடுகட்டியிருத்தலும், புழுக்கடி - புழுக்களின்கடியும், முதலாங் குற்றம்-ஆகிய இவைமுதலாயுள்ளவை குற்றமாம், அடஙகினும் குறறம இல்லை-அக்குறறங்களடங்கியிருப்பினும் குற்றங்களாகா, வில்வம் உத்தமமாகும் - வில்வம் உத்தமமாம், ஈசன் நாமம் ஆயிரம் சாற்றி தடம் கைகொண்டு சாத்தல் - அநஙகைக்கொண்டுச் சிவபெருமான் சகஸ்திரநாமஙகளைக்கூறி நீண்டகைகளால் அருச்சிக்கக்கடவர். (௧௮)

அடியனேன்செய்யுங்குற்றமன்றைக்கன்றனந்தமாகுங்
கொடியநஞ்சமுதாக்கொண்டாய்குற்றமுங்குணமாக்கொண்டு
படியெழுதரியமங்கைபங்கனேகாத்தியென்று
முடியுறவடியில்வீழ்ந்துமும்முறைவலஞ்செய்தேத்தி.

(இ-ள்.) அடியனேன் செய்யும் குற்றம் அன்றைக்கு அன்று அனந்தம் ஆகும் - அடியேன்செய்யுந்தவறுகள் நாளுக்குநாள் அனந்தமாயுள்ளன, கொடிய நஞ்சு அமுதாக கொண்டாய் - கொடியநஞ்சத்தையும் அமுதமாகக்கொண்ட பெருமானே, குற்றமும் குணமாக்கொண்டு-(அடியேன்செய்த) அக்குற்றங்களையுங் குணங்க

ளாகக்கொண்டருளி, எழுது அரிய படிவம் மங்கை பங்களே காத்தி என்று-எழுது தற்கரிய திருவுருவத்தையுடைய உமாதேவியாரை யிடப்பாகத்திலுடையவனே காப்பாய் என்று, முடி உற அடியில் வீழ்ந்து மும்முறை வலம் செய்து எத்தி-(தமது) தலைகள்தோயத் திருவடிமேல்விழுந்து மூன்.றுதரம் பிரதக்ஷிணஞ்செய்துதுதித்து.

படிவம் ஈறுதொகுத்தல், கொடியீரஞ்சமுதாக்கொண்டாய் என்றதற்கியையக் குற்றமும் குணமாகக்கொள்ளவேண்டும் என கிரனிறையாகவைத்துப் பொருள்கொள்க. (௧௯)

வன்மனங்கரையநின்றுவேண்டியவரங்கள்வேண்ட
நன்மணப்பேறுமக்கட்பேறுநல்வாக்குக்கல்வி
பொன்மனக்கினியபோகந்தெவ்வரைப்புறகுகாண்ட
லிம்மையிலரசுமற்றுமெண்ணியாங்கெய்துமன்றே.

(இ-ள்.) வல் மனம் கரைய நின்று வேண்டியவரங்கள் வேண்ட - (கல்போலும்) கடியமனம் மெழுகுபோல இளகநின்று தமக்குவேண்டிய வரங்களைக்கூறி யிரக்க, நல்மணம் பேறு மக்கள்பேறு நலவாக்கு கல்வி பொன் - நல்லவிவாகம்பெறுகையும் நல்லபுத்திரர்பெறுகையும் நல்லவாக்கும் கல்வியும் திரவியமும், மனக்கு இனிய போகம் - மனதுக்கினியபோகமும், தெவ்வரை புறகு காண்டல் - பகைவரைப் புறங்காணுதலும், இம்மையில் அரசும் மற்றும் - இப்பிறப்பில் பலஅரசுரிமையும் இவையொழிந்தனவும், எண்ணிய ஆங்கு எய்தும் - எண்ணியபடி கிட்டும்.

அரசுரிமை என்றது அரசியலை, இவையொழிந்தன என்றது அவற்றிற்குரிய அங்கங்களை. (௨௰)

ஆதியிவ்விலிங்கந்தீண்டற்கருகரல்லாதவேத
வேதியர்முதலோரிட்டவிலிங்கத்திவ்விதியாலர்ச்சித்
தோதியவிரதநோற்கவாசசனைக்குரியரல்லாச
சாதியர்பொருணேர்ந்தாதிசைவரானபூசைசெய்தல்.

(இ-ள்.) ஆதி இவ்விலிங்கம் தீண்டற்கு அருகர் அல்லாத வேத வேதியர் முதலோர் - ஆதியாகிய இந்தச்சிவலிங்கப்பெருமானைத்தீண்டி யர்ச்சிக்க அருகரல்லாத வேதமுணர்ந்த அந்தணர்முதலியோர், இட்ட இலிங்கத்து இவ்விதியால் அர்ச்சித்து ஓதிய விரதம் நோற்க - இட்டலிங்கத்தில் முனனர்க்கூறிய விதியால் அருச்சனைசெய்து சோமவாரவிரதம் அனுட்டிக்கக்கடவர், அர்ச்சனைக்கு உரியர் அல்லா சாதியர் - சிவார்ச்சனைக்குரியரல்லாத சாதியார்கள், பொருள் நேர்ந்து ஆதிசைவரால் பூசைசெய்தல் - பொருளைகொடுத்து ஆதிசைவர்களால் பூசைசெய்விக்கக் கடவர்.

செய்தல் உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று. (௨௧)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பொருவிலிவ்விரதமைவகைத்துச்சிப்போதிலூணிரவிலூணிரண்டு
மொருவுதலுறங்காதிருத்தலர்ச்சனைநால்யாமமுமுறைமுற்றுதலென்னக்
கருதினிவ்வைந்துமொன்றனுக்கொன்றுகழியவுமதிகமாநோற்கும்
வருடமொன்றிரண்டுமூன்றுபன்னிரண்டுவருடம்வாழ்நாளளவிவற்றுள்.

(இ-ள்.) உச்சிப் போதில் ஊணும் - உச்சிக்காலத்தி லுண்ணுதலும், இரவில் ஊணும் - இராக்காலத்திலுண்ணுதலும், இரண்டும் ஒருவுதலும் - இவ்விரண்டுவகை

யையும்விடுதலும்,உறங்காதிருத்தலும்-நித்திரைசெய்யாதிருத்தலும், ஆசசனை நக்ஷ யாமமும் உஞற்றுதலும் என்ன - சிவார்ச்சனை நான்குசாமங்களிலும் செய்தலும் என்று, பொருவில் இவ்விரதம் ஐவகைத்து - ஒப்பில்லாத இந்தவிரதம் ஐந்துவகையா யுள்ளது, கருதின் இவ்வைந்தும் ஒன்றனுக்கு ஒன்று கழியவும் அதிகமாம்-ஆராயின் இவ்வைவகைவிரதமும் ஒன்றுக்கொன்று அதிகபலன் தருவனவாம், நோற்கும் வருடம் ஒன்று இரண்டு மூன்று பன்னிரண்டு வருடம் வாழ்நாள் அளவு - அனுட்டிக்கும் வருட அளவு ஒருவருடமும் இரண்டுவருடமும் மூன்றுவருடமும் பன்னிரண்டு வருடமும் வாழ்நாள் அளவுமாம், இவற்றுள் - இக்காலவளவைகளுள்

எண்ணுமவைகள் தொகுக்கின்றன (௨௨)

உடலளவெண்ணிநோற்பவர்முந்தவுத்தியாபனஞ்செய்துநோற்க
கடவர்வ்வருடக்கட்டளைக்கிறுதிகற்பித்துத்தாபனவிதிதான
மடலவிழ்மாலைமண்டபங்குண்டமண்டலமவகுத்துமாபதியைப்
படரொளிவெள்ளிமுப்பதுகழஞ்சிற்படிமையானிருமிதஞ்செய்து.

(இ-ள்.) உடல் அளவு எண்ணி நோற்பவர் - (தமது) உடலின் இயற்கையள வை எண்ணிச் சோமவாரவிரதம் நோற்பவர், முந்த உத்தியாபனஞ் செய்து நோற்க கடவர்-முற்படவுத்தியாபனஞ்செய்து நோற்கக்கடவர், உத்தாபன விதி தான்-உத்தாபனவிதியானது, அவ் வருடம் கட்டளைக்கு இறுதி கற்பித்து மேற்கூறிய அவ் வருடங்களில் தாம் மேற்கொண்ட காலவளவையி னியதியின் இறுதியிற் செய்யுங் கடனகளை முந்தமுடிப்பது, மடல் அவிழ் மாலை மண்டபம் குண்டம் மண்டலம் வகுத்து - இதழவிழ்ந்த மாலை சூடித்த மண்டபமுங் குண்டமு மண்டலமும் வகுத்து, உமாபதியை படர் ஒளி முப்பது கழஞ்சு வெள்ளியின் படிமை நிருமிதம் செய்து - சிவபெருமானை விளங்குகிறவொளியையுடைய முப்பதுகழஞ்சு அளவின் வெள்ளியி னால் திருவுருவம் நிருமித்து

ஆல் அசை (௨௩)

காலையிலாசானசொல்வழிநித்தக்கடன்முடித்துச்சிதொட்டந்தி
மாலையினளவும்புராணநூல்கேட்டுமாலைதொட்டியாமமோர்நான்கு
ஞ் சேலனகண்ணாளபங்கனைப்பூசைசெய்கவப்பூசனைமுடிவின்
மூலமந்திரநூற்றெட்டு நூற்றெட்டுமுறையினாலாகுதிமுடித்தல்

(இ-ள்) காலையில் ஆசான் சொல் வழி நித்தம் கடன் முடித்து - உதயகாலை யில் ஆசிரியன்சொல்வழியினால் நித்தியகடன்களை முடித்து, உச்சி தொட்டு அந்தி மாலையின் அளவும் புராணநூல் கேட்டு - உச்சிக்காலந் தொட்டு மாலைக்காலமளவும் சிவபுராணங்கேட்டு, மாலை தொட்டு யாமம் ஓர் நான்கும் - மாலைக்காலந்தொட்டு நான்குசாமங்களிலும், சேல் அன கண்ணாள் பங்கனை பூசைசெய்க-சேற்கெண்டையை யொத்த கண்களையுடைய பிராட்டியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமானைப் பூசைசெய்யக்கடவர், அப்பூசனை முடிவில் - அந்தப்பூசனைமுடிவில், மூலமந்திரம் நூற்றெட்டு நூற்றெட்டு முறையினால் ஆகுதி முடித்தல் - மூலமந்திரம் நூற்றெட் டால் நூற்றெட்டுத்தரம் ஆகுதிசெய்து முடிக்கக்கடவர் (௨௪)

வில்லமாயிரங்கொண்டாயிரநாமமவிளம்பிநாலயாமமுஞ்சாத்தி
னல்லவைந்தெழுத்தாலந்தெழுந்துருவினுக்கருக்கியங்கொடுத்த

எல்லையின்மூலமந்திரத்தாலுமேனைமந்திரங்களினாலும்
வில்லழலோம்பிப்பூரணாகுதிசெய்தீறிலான்வேள்வியைமுடித்தல்.

(இ-ள்.) ஆயிரம் வில்லம் கொண்டு ஆயிர நாமம் விளம்பி நால் யாமமும் சாத்தல் - ஓராயிரவில்வங்கொண்டு சஹஸ்ரநாமங்கூறி நான்குசாமமும் அருச்சிக்கக் கடவர், நல்ல ஐந்து எழுத்தால் ஐந்து எழுத்து உருவின் நாதனுக்கு அருக்கியங்கொடுத்தல் - நன்மையைத்தரும ஸ்ரீபஞ்சாக்ஷரத்தால் அந்த ஸ்ரீபஞ்சாக்ஷரமே திருவுருவமாகக்கொண்ட சிவபெருமானுக்கு அருக்கியங்கொடுக்கக்கடவர், எல்லையில் மூல மந்திரத்தாலும் ஏனைமந்திரங்களினாலும் - அளவில்லாத மூலமந்திரங்களினாலும் அது ஒழிந்த மந்திரங்களினாலும், வில் அழல் ஓம்பி பூரணாகுதி செய்து - வில்வமயமாகச் செய்த குண்டத்தில் வேள்வித்தீவளர்த்துப்பூரணாகுதிசெய்து, ஈறு இல்லான் வேள்வியை முடித்தல் - முடிவில்லாத அச்சிவபெருமானுடைய வேள்வியை முடிக்கக் கடவர்.

வில் அழல் ஓம்பி என்றதற்கு விளக்குத் தீயோம்பி எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. (௨௫)

புலர்ந்தபின்னித்தவினைமுடித்தரம்பைபொதுளும்பாசிலைபதின்மூன்றி
னலந்தருதூவெள்ளரிசிபெய்தினியநறியகாய்கறியொடுபரப்பி
யலந்தரவான்பானிறைகுடம்பதின்மூன்றரிசிமேலவைத்தரனடியிற்
கலந்தவன்பினராய்சிவார்ச்சனைக்குரியகடவுள்வேதியர்களைவரித்து.

(இ-ள்.) புலர்ந்த பின் நித்த வினை முடித்து - விடிந்தபின் காலையில்செய்யும் நித்தியகடன்களை முடித்து, அரம்பை பொதுளும் பாசு இலை பதின் மூன்றில் - வாழைமரத்தில் நெருங்கித் தழைத்த பசிய பதின்மூன்றிலைகளில், நலம் தரு தூ வெள் அரிசி பெய்து - நன்மையைத்தரும் பரிசுத்தமாகிய பச்சரிசியை நிரப்பி, இனிய நறிய காய் கறியொடு பரப்பி - சுவையைத்தரும் நறுமணங்கமழும் காய்கறிகளைப் பரப்பி, அலந்தர - அமைவுபெற, ஆன் பால் நிறை பதின்மூன்று குடம் அரிசி மேல் வைத்து - பசுவின்பால் நிறைந்த பதின்மூன்று குடங்களையும (ஒவ்வொரிலைகளில் நிரப்பிய) அவ்வரிசிகளின்மேல் வரிசைபடவைத்து, அரன் அடியில் கலந்த அன்பினராய் சிவார்ச்சனைக்கு உரிய கடவுள் வேதியர்களை வரித்து - சிவபெருமான் திருவடியிற்கலந்த அன்பினையுடையவராகிச் சிவார்ச்சனை (தமக்கே) உரிய தெய்வத்தன்மைவாய்ந்த ஆதிசைவர்களை வரவழைத்து. (௨௬)

காதணிகலனுங்கையணிகலனுநகவின்பெறவணித்தரனை
வாதரம்பெருகநினைந்தருச்சனைசெய்தரியதக்கிணையொடும்பாதப்
போதணிகாப்புவிசிறிதண்கவிகைபூந்துகின்முதற்பலவுடனே
மேதகுதானஞ்செய்துபின்குருவைக்கற்புடைமின்னிடையோடும்.

(இ-ள்.) காது அணி கலனும் கை அணி கலனும் கவின் பெற அணித்து - காதிலணியுங் குண்டலமும கையிலணியுங் காப்பும பொலிவுபெறத் தந்து, அரன் ஆக ஆதரம் பெருக நினைந்து அருச்சனை செய்து - சிவபெருமானாக அன்புபெருக அவர்களைச் சிந்தித்து அருச்சித்து, அரிய தக்கிணை யொடும் - ஆசைநிரப்பும் தக்ஷிணையோடும், பாதம் போது அணி காப்பு விசிறி தண் கவிகை பூம் துகில் முதல் பல - பாதமாகிய தாமரையிலணியும் பாதுகையும் சிவிறியும் தண்ணிய நிழல்தரும் குடையும் பொலிவுநிறைந்தபீதாம்பரமுமாகிய இவைமுதலாய்ப் பலவாக, உடனே மேதகு

தானம் செய்து - விரைந்து மேன்மைமிக்க தானங்கொடுத்தனுப்பி, பின் குருவை கற்பு உடைய மின் இடையோடும் - பின்பு (தமது மரபின்) குருவை அவரது கற்பிலையுடைய பத்தினியோடும் வரித்து. (உஎ)

ஆசனத்திருத்திப்பொலந்துகில்காதுக்கணிகள்கைக்கணிகளுமணிந்து
வாசநன்மலரிட்டருச்சனைசெய்துமலைமகட்டலைவனைவரைந்து
பூசனைசெய்தபடிமையோடம்பொன்பூதலம்பதாதிகள்பிறவுந்
தூசலர்மாலைகோட்டணிபுனைந்தசுரபிமாதானமுஞ்செய்து.

(இ-ள்.) ஆசனத்து இருத்தி-ஆசனத்திலெழுந்தருளியிருக்கச்செய்து, பொலம் துகில்-பீதாம்பரம்(தரிப்பித்து,) காதுக்கு அணிகள் கைக்கு அணிகளும் அணிந்து-காதுக்கு ஆபரணங்களும் கைக்கு ஆபரணங்களும் அணிவித்து, வாசம் நல் மலர் இட்டு அருச்சனை செய்து - வாசமிக்க நல்லமலர்சாத்தி யருச்சித்து, மலைமகள் தலைவனை வரைந்து பூசனை செய்த படிமையோடு - உமாதேவியார் இறைவனாகிய சிவபெருமானைப் பூசித்த திருவுருவத்தோடு, அம் பொன் பூதலம் பதாதிகள் பிறவும் - அழகிய பொன்னும் பூமியும் சேனைகளும் அவையொழிந்தனவும், தூசு அலர் மாலை - வஸ்திரமும் பூமாலையும், கோட்டு அணி புனைந்த சுரபி மா தானமும் செய்து-கொம்பிற் பூணணிதரித்த பசுவும் ஆகிய பெரிய தானங்களையும் செய்து. (உஅ)

இனையவாறுத்தாபனமுடித்தாசானேவலாற்சிவனடிக்கன்பர்
தனையரோடொக்கலுடனமுதருந்தற்குதியிவ்விரதமுன்கண்ண
னனையதாமரையோனிந்திரன்முதல்வானாடவர்மூவறுகணத்தோ
ரனைவருநோற்றார்மனிதருமனுட்டித்தருமபெறற்போகம்வீடடைந்தார்.

(இ-ள்.) இனைய ஆறு உத்தாபனம் முடித்து - இவ்வாறாக முடிவிற்செய்யும் உத்தாபனவிதியை முடித்து, ஆசான் ஏவலால் - ஆசிரியன் ஏவலால், சிவன் அடிக்கு அன்பர் - சிவபெருமானடிக்கன்பராகிய அடியாரோடும், தனையர் ஒடும் ஒக்கல் உடன் அமுது அருந்தல் தகுதி - புத்திரரோடும் சுற்றத்தாரோடும் திருவமுது உண்ணுதல் தக்கது, இவ்விரதம் - இச்சோமவாரவிரதத்தை, முன் - பூர்வத்தில், கண்ணன் அனைய தாமரையோன் இந்திரன் முதல் வானாடவர் மூவறு கணத்தோர்-திருமாலும் அந்தத் தாமரையில் வசிக்கும் பிரமனும் இந்திரனும் முதலிய தேவராகிய பதினெண்கணத்தோரும், அனைவரும் நோற்றார்-யாவரும் அனுட்டித்தார்கள், மனிதரும் அனுட்டித்து அரும் பெறல் போகம் வீடு அடைந்தார்-மனிதர்களும் அனுட்டித்துப் பெறுதற்கரிய போகத்தையும் மோக்ஷத்தையும் அடைந்தார்கள்.

அனைய என்னும் சுட்டுத்திரிபு உயர்வின்மேல் நின்றது. (உகூ)

ஈதுநோற்பவர்வெம்பகைமனத்துயர்தீர்ந்தாயிரம்பிறவியிலியற்றுந்
தீதுசேர்வினைதீர்ந்தெடுத்தயாக்கையினிற்சிவகதியடைவரிவ்விரத
மோதினோர்கேட்டோர்மனைவியர்மக்களொக்கலோடினிதுவாழ்ந்தும்பர்
மேதகுபதினாலிந்திரன்பதத்தில்வீற்றினிதிருப்பரொன்றறவோன்.

(இ-ள்.) ஈது நோற்பவர் - இவ்விரதத்தை யனுட்டிப்பவர்கள், வெம் பகை மனம் துயர் தீர்ந்து - கொடியபகையும் மனத்துன்பமும் ஒழிந்து, ஆயிரம் பிறவியில் இயற்றும் தீது சேர் வினை தீர்ந்து - அளவில்லாத பிறவிகடோறும் செய்துவந்த தீவினைகளொழிந்து, எடுத்த யாக்கையினில் - எடுத்த மானிடசரீரத்தி லிறுதியி

ந், சிவகதி அடைவர் - சிவகதி பெறுவர்கள், இவ் விரதம் ஓதினோர் கேட்டோர்- இச்சோமவாரவிரதநூலை ஓதினோரும் கேட்டோரும், மனைவியர் மக்கள் ஒக்கலோடும் இனிது வாழ்ந்து-(தமது) மனைவியர் புத்திரர் பந்துக்களோடும் இடையூறின்றி வாழ்ந்து, உம்பர் மேரகு பதினால் இந்திரன் பதத்தில் இனிது வீற்றிருப்பர் என்று- மேன்மைமிக்க பதினான்கு தேவேந்திரபட்டக்காலமும் அவன்பதத்தில் நிகரின்றி மகிழ்கூர்ந்திருப்பார்களென்று, அறவோன் - அகத்தியமுனிவர்.

பதினான்கு இந்திரபட்டம் ஓர் பிரமகற்பம் "உந்தியோன்கற்பத்திரேழ்பொருவிலிந்திரர்கண்மாய்வர்" எனவருஞ் செய்யுளாலுணர்க. (௯௦)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

> சொல்லியநெறியாற்சோமசுந்தரன்விரதநோற்பான்
> வில்லிடுமணிப்பூண்வேந்தர்முனிவனைவிடைகொண்டேகி
> யல்லியங்கனககஞ்சத்தாடியங்கயற்கண்வல்லி
> புல்லியபாகன்றன்னைவழிபாடிப்போற்றிநோற்றார்.

(இ-ள்.) சொல்லிய நெறியால் - கூறியவழியால், சோமசுந்தரன் விரதம் நோற்பான் - சோமசுந்தரக்கடவுளுடைய சோமவாரவிரதத்தை நோற்கும்பொருட்டு, வில் இடு மணி பூண் வேந்தர் முனிவனை விடைகொண்டு ஏகி - ஒளிவீசும் இரத்தினமழுத்திய ஆபரணத்தை யணிந்த சேர சோழபாண்டியர் அகத்தியமுனிவரிடத்து விடைபெற்றுச் சென்று, அல்லி அம் கனகம் கஞ்சத்து ஆடி - அழகிய அகவிதழ்களையுடைய பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அம் கயற் கண்ணி வல்லி புல்லிய பாகன் றன்னை வழிபட்டு போற்றி நோற்றார் - அங்கயற்கண்ணம்மையார் பொருந்திய இடப்பாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை வழிபட்டுத் துதித்து அவ்விரதத்தை யநுட்டித்தார்கள். (௯௧)

> சுந்தரன்றன்னைப்பூசைதொழில்செய்துவரம்பெற்றேகி
> யந்தரத்தாறுசெல்வாரஃதறிந்தமரர்வேந்தன்
> வந்தவரிருக்கவேறுமடங்கன்மான்றவிசுமூன்று
> தந்திடப்பணித்தானிட்டார்தனதரியணையிற்றாழ.

(இ-ள்.) சுந்தரன் தன்னை பூசை தொழில் செய்து-சோமசுந்தரக்கடவுளைப் பூசித்து, வரம் பெற்று ஏகி அந்தரத்து ஆறு செல்வார் - வரம் பெற்றுச்சென்று ஆகாயமார்க்கத்தின்வழிச் செல்வாராயினார், அமரர் வேந்தன் அஃது அறிந்து - தேவர்கள் தலைவனாகிய இந்திரன் அவர்கள் வருகையை அறிந்து, வந்தவர் இருக்க வேறு மூன்று மடங்கல் மான் தவிசு தந்திட பணித்தான்-வந்த நிலவுலகரசரிருக்க வேறே மூன்று சிம்மாதனங்களிட ஏவினான், தனது அரி அணையில் தாழ இட்டார் - தனது சிம்மாதனத்துக்குத் தாழ்ந்திருக்க ஏவலாளர்கள் இட்டார்கள். (௯௨)

> வான்வழிவந்தமூன்றுமன்னரும்பொன்னாடெய்தி
> யூன்வழிகுலிசவைவேலும்பர்கோன்மருங்கிற்புக்கார்
> தேன்வழிபோந்தின்கண்ணிச்சேரனுமார்த்தார்வேந்துங்
> கான்வழிதாருநாடன்காட்டியதவிசின்வைக.

(இ-ள்.) வான் வழி வந்த மூன்று மன்னரும் - ஆகாயநெறியாக வந்த சேர சோழ பாண்டியர் மூவரும், பொன் நாடு எய்தி ஊன் வழி குலிசம் வை வேல் உம்

பர் கோன் மருங்கில் புக்கார்-பொன்னுலகடைந்து ஊன் சிந்தும் வச்சிராயுதத்தை யேந்திய இந்திரனருகில்வந்து, தேன் வழி போந்தின் கண்ணி சேரனும் - (அக்ருள்) தேன்சிந்தும் பனைமாலையணிந்த சேரனும், ஆர் தார் வேந்தும் - ஆத்தி மாலையணிந்த சோழனும், கான் வழி தாரு நாடன் காட்டிய தவிசின் வைக-வாசம் வீசுங் கற்பகநாட்டையுடைய இந்திரன் சுட்டிக்காட்டிய ஆசனத்திலிருக்க. (௧௧)

மைக்கடல்வறப்பவென்றவாகைவேற்செழியன்மௌலிச்
செக்கர்மாமணிவிற்காலத்தேவர்கோன்றவிசிலேறி
யொக்கவீற்றிருந்தானாகவும்பர்கோனழுக்காறெய்திப்
பக்கமேயிருந்தவேனைப்பார்த்திபர்முகத்தைப்பாரா.

(இ-ள்.) மை கடல் வறப்ப வென்ற வாகை வேல் செழியன் - கரியகடலை சுவற வென்று வெற்றிமாலையணிந்த வேலையேந்திய உக்கிரகுமாரபாண்டியர், மௌலி செக்கர் மா மணி வில் கால - கிரீடத்திற்பதித்த செவந்த பருத்த மாணிக்கங்கள்ஒளி வீச, தேவர் கோன் தவிசில் ஏறி ஒக்க வீற்றிருந்தான ஆக - (இந்திரன் ஆசனத்துக்குத் தாழவிருந்த ஆசனத்தி லிராமல்) அவன ஆசனத்திலேறி அவனோடுகூட நிகரின்றி இருக்க, உம்பர் கோன் அழுக்காறு எய்தி - இநதிரன் பொறாமை யடைந்து, பக்கமே இருந்த ஏனை பார்த்திபர் முகத்தைப் பாரா - தன்னயலிலிருந்த மற்றைச் சேரசோழர்கள் முகம் பார்தது. (௧௨)

முகமனன்கியம்பிநீவிர்வந்ததென்மொழிமினென்ன
மகபதியெங்களுட்டின்மழைமறுத்தடைந்தேமென்று
ரகமலர்ந்தனையார்நாட்டினளவும்வான்சுரக்கநல்கி
நகைமணிககலன்பொன்றுடைநல்கிநீர்போமினென்றான்.

(இ-ள்.) முகமன் நன்கு இயம்பி - உபசாரவார்த்தையை இனிதாகக்கூறி, நீவிர் வநதது எனமொழிமின என்ன - நீங்கள்வநதகாரணம் யாது கூறுங்கள் என்றுவிளமப, மகபதி - இந்திரனே, எங்கள் நாட்டில் மழை மறுத்து அடைந்தேம் என்றார் - எங்களுடையநாடுகளில் மழைவளம இல்லாமையால் வந்தோமென்றுகூறினார், அகமலர்நது அனையார் நாட்டின் அளவும் வான் சுரக்க நல்கி - இந்திரன்மனமகிழ்ந்து சேரசோழர்நாடுள்ளளவும் மழைவளஞ்சுரக்கத்தந்து, நகைமணி கலன் பொன் ஆடை நல்கி நீர் போமின் எனறான் - விளஙகும் இரத்தினம்பதித்த ஆபரணங்களும் பீதாம்பரங்களுங்கொடுத்து நீஙகள் போஙகளென்று கட்டளையிட்டான்.

அன்னவரகன்றபின்னையமரர்கோன்கன்னிநாடன்
றன்னரியணைமேலொக்கத்தருக்கினோடிருக்குமாறும்
பின்னருமாரிவேண்டாப்பெருமிதவீறுநோககி
யின்னதுபுலப்படாமையினையதோர்வினையமுன்னா.

(இ-ள்.) அன்னவர் அகன்ற பின்னை - சேரசோழர்கள் போனபின்னர், அமரர்கோன் - இந்திரன், கன்னிநாடன் தன் அரி அணைமேல் ஒக்க தருக்கின் ஓடு இருக்கும் ஆறும் - பாணடியன் தன்சிம்மாதனத்தின்மேல் தனனோடுகூட இறுமாப்போடிருக்கும் விதத்தையும், பினனரும் மாரிவேண்டா பெருமித வீறும் நோக்கி - பின்னும் மழைவளம்வேண்டாத பெருமிதச் செருக்கையும்பார்த்து, இன்னது புலப்படாமை இனையது ஓர் வினையம் உன்னா-(அவன்வருகை) இன்னதென்று (தனக்குப்) புலப்படாமையால் இவ்வாறு ஓராலோசனைசெய்து. (௧௩)

பொற்புறவரிசைசெய்வான்போலளவிறந்தோர்தாங்கி
வெற்புறழ்திணிதோளாற்றன்மெலிவதோராரந்தன்னை
யற்புறவளித்தான்வாங்கியலர்மதுத்தார்போலீசன்
கற்புடையுமையாண்மைந்தன்கதுமெனக்கழுத்திலிட்டான்.

(இ-ள்.) பொற்பு உற வரிசை செய்வான் போல்-பொலிவுமிக வரிசைசெய்பவனைப்போல, அளவிறந்தோர் தாங்கி - எண்ணிறந்தோர் சுமந்துவந்த, வெற்பு உறழ் திணி தோள் ஆற்றல் மெலிவது - (உக்கிரகுமாரபாண்டியருடைய) மலையை ஒத்த திண்ணிய தோளின் வலிமை மெலிவதற்குக் கருவியாகிய, ஓர் ஆரம் தன்னை அன்பு உற அளித்தான - ஒருமுத்துமாலையை அன்புமிகத்தந்தான், ஈசன் கற்பு உடை உமையாள் மைந்தன் வாங்கி - சவுந்தரபாண்டியர் கற்பின்மிகுதியாராகிய தடாதகைப்பிராட்டியார் குமாரராகிய உக்கிரகுமாரபாண்டியர் (அதனை) வாங்கி, அலர் மது தார்போல் கதுமென கழுத்தில் இட்டான் - அலர்ந்து தேன் ஒழுகுகின்ற மலர்மாலைபோல விரைந்து கழுத்திற்றரித்தார்.

இந்திரன்கொலைகருத் தழுவகச்செய்தான் என்பார். கதுமெனக்கழுத்திலிட்டான் என்றார். (௯௭)

கண்டனன்கடவுணாதன்கழியவுமிறும்பூதுள்ளங்
கொண்டனனின்றுதொட்டுக்குளாயளிதுழாவுநிம்பத்
தண்டழைமார்பவாரந்தாங்குபாண்டியனென்றுன்னை
மண்டலமதிக்கவென்றான்வானநாடுடையமன்னன்.

(இ-ள்.) கடவுள் நாதன கண்டனன் - இந்திரன்பார்த்து, கழியவும் உள்ளம் இறும்பூது கொண்டனன்-மிகவும் மனத்தில் வியப்புக்கொண்டு, வான நாடு உடைய மன்னன் - விண்ணுலகையுடைய அவ்விந்திரன், குளா அளி துழாவு நிம்பம் தண் தழை மார்ப-ஒலிக்கும்வண்டுகள் மகரந்தத்திலளையும் வேப்பமலர்மாலையும் தண்மையும் நிறைந்த மார்பனே, இன்று தொட்டு ஆரம் தாங்கு பாண்டியன் என்று உன்னை மண்டலம் மதிக்க என்றான் - இந்நாள்தொட்டு உன்னை ஆரந்தாங்கு பாண்டியனென்று நிலவுலகத்தோர் மதிக்கக்கடவர் என்று புகழ்ந்தான். (௯௮)

அன்னதுசிறிதுமெண்ணாதங்குநின்றிழிந்துதென்னன்
றன்னகரடைந்தானிப்பாற்சதமகனாணையாலம்
மன்னவரிருவர்நாடுமழைவளம்பெருகப்பெய்த
தென்னவனாடுபண்டைச்செயலதாயிருந்ததன்றே.

(இ-ள்.) தென்னன் அன்னது சிறிதும் எண்ணாது - பாண்டியர் இந்திரன் தமக்குக்கூறிய புகழ்ச்சியைச் சிறிதும் பொருளாகக்கருதாது, அங்குநின்று இழிந்து - அச்சிங்காசனத்தினின்றும் இறங்கி, தன் நகர் அடைந்தான் - தமது மதுரைநகரையடைந்தார், இப்பால் சதமகன் ஆணையால்-இப்புறம் இந்திரன் ஆணையினால், அம் மன்னவர் இருவர் நாடும் வளம் பெருக மழை பெய்த-அச்சேர சோழருடைய இருவர் நாடுகளிலும் வளமிக்கோங்க மழை பெய்தன, தென்னவன் நாடுபண்டை செயலது ஆய் இருந்தது - பாண்டியனாடு முன்னுள்ளவண்ணமே மழையொழிந்திருந்தது. (௯௯)

ஆயதோர்வைகல்வேட்டையாடுவானண்ணல்விண்ணந்
தாயதோர்பொதியக்குன்றிற்சந்தனச்சாரனண்ணி
மேயதோலரிமானேனம்வேங்கையெண்கிரலையின்ன
தீயவோர்விலங்குவேட்டஞ்செய்துயிர்செகுக்குமெல்லை.

(இ-ள்.) ஆயது ஓர் வைகல் - (தமதுநாடு) மழைவறங்கூர்ந்திருக்குங் காலையில், அண்ணல் வேட்டை ஆடுவான் - உக்கிரகுமாரபாண்டியர் வேட்டையாட, விண்ணம் தாயது ஓர் பொதியம குன்றில் சந்தனம சாரல் நண்ணி-விண்ணுலகை யூடுருவிச்சென்ற ஒப்பில்லாத பொதியமலையில் சநதனமரம் நெருங்கிய சாரலையடைந்து, மேய தோல் அரிமான் ஏனம வேங்கை எண்கு இரலை இன்ன தீய ஓர் விலங்கு வேட்டம் செய்து - (அம்மலைச்சாரலிற) பொருந்திய யானையும் சிங்கமும் பன்றியும் புலியும் கரடியும மானும் இவைபோனற கொடிய ஒப்பில்லாத மிருகவேட்டையாடி, உயிர் செகுக்கும் எல்லை-அவற்றினுடைய உயிர்களைக்கொல்லுங் காலையில். (சO)

பொன்றத்துமருவிக்குன்றிற்புட்கலாவருத்தமாதி
மின்றத்துமேகநான்கும்வீழ்ந்தனமேயக்கண்டு
குன்றத்தினெடியதிண்டோட்கொற்றவனவற்றைப்பற்றிக்
கன்றத்திண்களிறுபோலக்கடுந்தளைசிககயாத்தான்.

(இ-ள்.) பொன் தத்தும் அருவி குன்றில் - பொற்கட்டிகளை அரித்துப்பாயும் அருவியையுடைய பொதியமலையில, புட்கலா வருத்தம ஆதி மின் தத்தும் மேகம் நான்கும் வீழ்ந்தன மேய-புட்கலாவருத்தமுதலிய மின்னிடும் நான்கு மேகங்களும் வீழ்ந்துமேய, குன்றத்தின் நெடிய திண தோள் கொற்றவன் கணடு - மலையினும் உயர்ந்த திண்ணிய தோளையுடைய உககிரகுமாரபாண்டியர் பார்தது, அவற்றை பற்றி - அம்மேகங்களைப் பிடிதது, கனற - (அவைகள) வருந்த, திண களிறு போல கடும் தளை சிகக யாத்தான -திண்ணிய யானைபோலக கொடியவிலங்கை விரையப்பூட்டினான்.

புட்கலாவருத்த முதலிய நான்குமேகங்களாவன - புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம, காளமுகி, இவைமுறையே பொன், பூ, மண், கல் பொழிவன. (சக)

வேட்டத்திற்பட்டசெங்கண்வேழம்போற்கொண்டுபோகிக்
கோட்டத்திலிட்டானகக்குன்றிறகரிந்தவென்றி
நாட்டத்துப்படிவத்தண்டநாடன்மற்றதனைக்கேட்டுக்
காட்டத்துக்கனல்போற்சீறிக்கடுஞ்சமர்குறித்துச்செல்வான்.

(இ-ள்.) வேட்டத்தில் பட்ட செம் கண வேழம் போல் கொண்டு போகி - வேட்டையி லகப்பட்ட சிவந்த கண்களையுடைய யானைகளைப்போல மேகங்களைக் கொண்டு சென்று, கோட்டத்தில் இட்டானாக-சிறைக்கூடத்தில் இட,குன்று இறகரிந்த வென்றி நாட்டத்து படி வத்து அண்ட நாடன் அதனை கேட்டு-மலையின் சிறகரிந்த வெற்றி வாய்ந்த கண்கள் நிறைந்த உடலத்தையுடைய இந்திரன் அதனைக் கேள்வியுற்று, காட்டத்து கனல் போல் சீறி-விறகிற்பற்றிய தீப்போலக் கடுங்கோபங்கொண்டு, கடுஞ் சமர் குறித்து செல்வான் - கொடியபோர்குறித்துச் செல்லத் தொடங்கினான். (சஉ)

வாங்குநீர்வறப்பவேலைவிடுத்ததும்வலியவாரந்
தாங்கியசெருக்குங்காணாத்தளையிடுதருக்குநோக்கி
யீங்கொருமனிதயாக்கைக்கித்துணைவலியாதென்று
வீங்கியமானமூக்கமீனவன்மதுரைசூழ்ந்தான்.

(இ-ள்.) வாங்கு நீர் வறப்ப வேலை விடுத்ததும் - வளைந்த கடல்சுவறவேலை யெறிந்ததும், வலிய ஆரம் தாங்கிய செருக்கும் - (தாங்குதற்கரிய) வன்மையையுடைய முத்தாரந்தாங்கிய இறுமாப்பும், காணா தளை இடு தருக்கும் நோக்கி - புட்கலாவருத்தமுதலிய மேகங்களை விலங்குபூட்டிய பெருமிதமும் பார்த்து, ஈங்கு ஒரு மனித யாக்கைக்கு இத்துணை வலியாது என்று - இந்நிலவுலகில் ஒருமனிதசரீரத்துக்கு இவ்வளவு வலிமைவந்தது யாதுகாரணம் என்று, வீங்கியமானம் ஊக்க-மேலெழுந்த மானம் செலுத்த, மீனவன் மதுரை சூழ்ந்தான் - உக்கிரகுமாரபாண்டியருடைய மதுரையை முற்றுகை செய்தான்.

உடையவன் ஒருமிழலை உடைமை மேலேற்றி இத்துணை வலியாது என்று வீங்கியமானமூக்க என்றார். (௬௩)

கலிவிருத்தம்.

ஓடினரொற்றர்போய்ச்செழியனொண்கழல்
சூடினர்நகர்ப்புறஞ்சுரர்கள்சேனைகண்
மூடினவென்னலுமுனிவுமானமு
நீடினனரியணையிருந்துநீங்குவான்.

(இ-ள்.) ஒற்றர் ஓடினர் போய் - தூதுவர் ஓடிச் சென்று, செழியன் ஒண் கழல் சூடினர் - உக்கிரகுமாரபாண்டியருடைய ஒள்ளிய திருவடிகளைத் (தமது) தலையிற்சூடி, நகர்ப்புறம் சுரர்கள் சேனைகள் மூடின என்னலும் - நகரின்புறத்துத் தேவர்கள்சேனைகள் முற்றுகை செய்தன வென்றுகூற, முனிவும் மானமும் நீடினன்-கோபமும் மானமும் மேலெழப் பொங்கி, அரியணை இருந்து நீங்கு வான்-சிங்காதனத்தினின்று போர்க்குச் செல்ல நீக்கும் அப்பாண்டியர்.

ஓடினர் - சூடினர், நீடினன் வினைமுற்று எச்சங்களாயின. (௬௪)

பண்ணுகதேர்பரிபகடுவீரர்முன்
னண்ணுககடிதெனநடாத்தியாவரொன்
றெண்ணலன்மதமலையெருத்தமேற்கொடு
கண்ணகன்கடிநகர்க்காப்புநீங்குமுன்.

(இ-ள்.) தேர் பரி பகடு பண்ணுக - தேரையுங் குதிரையையும் யானையையும் போர்க்கோலஞ் செய்யக்கடவீர், வீரர் கடிது நண்ணுக என முன் நடாத்தி - பதாதி வீரர்கள் விரைந்து செல்லக் கடவீர் என்று முன்னே நடத்தி, யாவர் என்று எண்ணலன் - போர்க்குவந்தவர் இன்னாரென்று சிறிதும் எண்ணாது, மதம் மலை எருத்தம் மேல் கொடு - மதத்தையுடைய யானைமேலேறி, கண் அகன் கடி நகர் காப்பு நீங்கு முன் - இடம் (பரந்த) காவல்பூண்ட நகரின் (புறம்பு) காவலாகச்சூழ்ந்த மதிலைவிட்டுநீங்குமுன்.

மலை, காடு, மதில், கடல் என்னும் நால்வகையரணுள் மதில் ஓர் அரணாதலால் காப்பு என்றது தொழிலாகுபெயராய் மதில்மேல் நின்றது. அரண் - காவல்.

கண், அகண் இவ்விரண்டும் இடம் என்னும் ஒருபொருளைத் தருஞ் சொற்களாதலா லின்னிசை தரவந்த ஒருபொருட் பன்மொழி. (௪ரு)

அடுத்தனர்வானவரார்த்துப்பல்படை
யெடுத்தனர்வீசினர்சிலையிலெய்கணை
தொடுத்தனரிறுதிநாட்சொரியுமாரிபோல்
விடுத்தனர்மதிக்குலவீரன்சேனைமேல்.

(இ-ள்.) வானவர் அடுத்தனர் ஆர்த்து - தேவர்களடுத்துக் கோஷித்து, பல் படை எடுத்தனர் வீசினர் - பலவாயுதங்களையுந் தொட்டு வீசி, சிலையில் எய் கணை தொடுத்தனர் - வில்லினுநாணில் பிரயோகித்தற்குரிய அம்புகளைத்தொடுத்து, மதி க்குலம் வீரன் சேனைமேல் - சந்திரன் மரபிற்றேன்றிய உக்கிரகுமாரபாண்டியர் சேனையின்மேல், இறுதி நாள் சொரியும் மாரி போல் விடுத்தனர் - ஊழிக்காலத்தில் சொரியும் மழைபோலப் பிரயோகித்தார்கள். (௪௬)

ஆர்த்தனர்மலயவெற்பரையன்சேனையோர்
பார்த்தனர்வேறுபல்படைக்கலக்குவை
தூர்த்தனர்குனிசிலைதொடுத்துவாளியாற்
போர்த்தனரமரர்மெய்புதைத்தவென்பவே.

(இ-ள்.) மலய வெற்பு அரையன் சேனை யோர் ஆர்த்தனர் - பொதியமலைக்கு அரசராகிய உக்கிரகுமாரபாண்டியர் சேனாவீரர்கள் கோஷித்து, பார்த்தனர் - ஆராய்ந்து, வேறு பல் படைக் கலம் குவை தூர்த்தனர் - வெவ்வேறு வகைப்பட்ட பல ஆயுதக் கூட்டங்களை இடைவெளியின்றி எறிந்து, குனி சிலை தொடுத்து வாளியால் போர்த் தனர் - வளைந்த வில்லில் நாணேறிட்டுச் சரவருஷத்தால் மறைத்தார்கள், அமரர் மெய் புதைத்த - தேவர்கள் சரீரத்தில் தைத்தன.

என்ப - ஏ இவ்விரண்டும், அசைநிலைகள். (௪எ)

தறிந்தனதாள்சிரந்தகர்ந்ததோள்கரம்
பறிந்தனகுருதிநீர்கடலிற்பாய்ந்தன
செறிந்தனபாரிடஞ்சேனங்கூளிகண்
முறிந்தனவானவர்முதல்வன்சேனையே.

(இ-ள்.) தாள் தறிந்தன - (சிலர்க்குக்) கால்கள் அறுபட்டன, சிரம் தகர்ந்த - (சிலர்க்குத்) தலைகள் உடைபட்டன, தோள் கரம் பறிந்தன - (சிலர்க்குப்) புயங்களும் (சிலர்க்குக்) கைகளும் குறைபட்டன, குருதி நீர் கடலில் பாய்ந்தன - உதிரநீர்கடலிற்சென்று பாய்ந்தன, பாரிடம் சேனம் கூளிகள் செறிந்தன - பூதங்களும் கழுகுகளும் பசாசுகளும் போர்க்களத்தில் நெருங்கின, வானவர் முதல்வன சேனை முறிந்தன - தேவர்கட்கு இறைவனாகிய இந்திரனுடைய சேனைகள் முதுகுகாட்டி ஓடின. (௪அ)

ஆடினகுறைத்தலையவிந்தபோர்க்களம்
பாடினபாரிடம்விந்தைப்பாவைதாள்
சூடினகூளிகள்சோரிசோரப்பார்
மூடினபிணக்குவையண்டமுட்டவே.

(இ-ள்.) குறைத்தலை ஆடின-கவந்தங்களாடின, போர்க்களம் அவிந்த -போர்க்களம் பேரொழிந்தன, பாரிடம் பாடின - பூதகணங்கள் (களிகூர்ந்து உக்கிரகுமாரபாண்டியர் பிரதாபத்தைப்) பாடின, விந்தை பாவைதான் கூளிகள் சூடின-விஜயலக்ஷ்மியின் பாதங்களைப் பசாசுகள் (சிரமேற்) சூடின, சோரி சோர பிணக்குவை அண்டம் முட்ட பார் மூடின - உதிரம் சோர பிணக்குப்பல்கள் அண்டமுகடுரிஞ்ச நிலவுலகை மூடின.

இடத்தி னிகழ்பொருளின் ஞெழிலை யிடத்தினமே லேற்றிப் போர்க்களம் அவிந்த என்றார். (௪௯)

வெஞ்சினவலாரிதன்வீரச்சேனைக
டுஞ்சினகண்டெரிசொரியுங்கண்ணனாய்ப்
பஞ்சின்முன்னெரியெனப்பதைத்துத்தெய்வத
வஞ்சினப்படைகளான்மலைவதுன்னினான்.

(இ-ள்.) வெஞ்சினம் வலாரி - கொடிய கோபத்தையுடைய இந்திரன், தன் வீரம் சேனைகள் துஞ்சின கண்டு - தனது வீரமிக்க பதாதியினாகள் இறந்தொழிந்தலைக்கண்டு, எரி சொரியுங் கண்ணன் ஆய் - கோபாக்கினி சிந்தும் கண்களையுடையவனாய், பஞ்சின் முன் எரி என பதைத்து - பஞ்சின் முற்பட்ட நெருப்பு விரைந்து பற்றுதல்போல (கோபம் விரைந்து பற்றப்) பதைத்து, வஞ்சினம் தெய்வதப்படைகளான் மலைவது உன்னினான் - நெடுமொழிகூறித் தெய்வததன்மையுடைய ஆயுதங்களால் போர்செய்யக் கருதினான்.

வஞ்சினம் - போர்முகத்துத் தமதுவீரத்தைப் புகழ்ந்து கூறல், இது நெடுமொழி வஞ்சித்துறை "ஒன்றுதாரபடைகெழுமித் - தன்னுள்ளமையெடுத்துரைத்தன்று" என்னும் (தொ) சூத்திரநதாலும் "நம்பன்சிலைவாய்நடக்குங்கணைமிச்சிலல்லால் - அம்பொன்முடிப்பூணரசம்மிலை" என்னுஞ் (சி)செய்யுளாலும் உணர்க.(௫௦)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப்படைவிட்டார்த்தான்விண்ணவனதனைத்திங்கட்
பைங்கதிர்ப்படைதொட்டோச்சியவித்தனன்பாராள்வேந்தன்
சிங்கவெம்படைவிட்டார்த்தான்றேவர்கோனதனைசசிம்புட்
புங்கவன்படைதொட்டோச்சியடக்கினான்புணரிவென்றோன்.

(இ-ள்.) விண்ணவன் - இந்திரன், வெங் கதிர் படை விட்டு ஆர்த்தான்-சூரியாஸ்திரந்தொட்டு வீரகோஷஞ்செய்தான், அதனை - அந்த அஸ்திரத்தை, பார் ஆள் வேந்தன் - நிலவுலகையாளும் உக்கிரகுமாரபாண்டியர், பைங்கதிர் திங்கள் படை தொட்டு ஓச்சி அவித்தனன் - இளங்கிரணத்தையுடைய சந்திராஸ்திரத்தை வில்லில்தொடுத்துப் பிரயோகித்து அழித்தான், தேவர் கோன் வெஞ் சிங்கப் படை விட்டு ஆர்த்தான்-அவ்விந்திரன் வெவ்விய நரசிம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்து வீரகோஷஞ்செய்தான், அதனை-அந்த அஸ்திரத்தை, புணரி வென்றோன் - கடல் சுவற வென்ற அவ்வுக்கிரகுமாரபாண்டியர், புங்கம் வன் சிம்புள் படை தொட்டு ஓச்சி அடக்கினான்-மிக்க வலிமையையுடைய சரபாஸ்திரத்தைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்து அதன்வலிமையை யடக்கினான்.

பசுமை என்னும் பண்பு இங்கு இளமைமேல் நின்றது. முன்னர்த் தெய்வதப்படை என்றமையால் சிங்கப்படை யென்றதை நரசிம்மாஸ்திரம் என்றும். (௫௧)

தானவர்பகைவன்மோகசரந்தொடுத்தெறிந்தானாக
மீனவனதனைஞானவாளியால்விளித்துமாய்ந்து
போனபின்மற்போராற்றிப்புக்கனர்புக்கார்தம்மில்
வானவன்மீண்ணினான்மேல்வச்சிரம்வீசியார்த்தான்

(இ-ள்.) தானவர் பகைவன்மோக சரம் தொடுத்து எறிந்தானாக - அசுரர் பகைவனாகிய இந்திரன் மோகாஸ்திரத்தை வில்லில்தொடுத்துப் பிரயோகஞ்செய்ய, மீனவன் அதனை ஞான வாளியால் விளித்து - உக்கிரகுமாரபாண்டியர் அந்த அஸ்திரத்தை ஞானாஸ்திரத்தாலழிக்க, மாய்ந்துபோனபின் - (அந்த அஸ்திரம்) அழிந்த பின், மல்போர் ஆற்றி புக்கனா - இருவரும் மல்யுத்தஞ்செய்யப் புகுந்தார்கள், புக்கார் தம்மில் - அவ்வாறுபோர்செய்யப் புகுந்தவருள், வானவன் - அவ்விந்திரன், மண்ணினான்மேல் வச்சிரம் வீசி ஆர்த்தான் - அவ்வுக்கிரகுமாரபாண்டியர்மேல் வச்சிராயுதம்வீசி வீரகோஷஞ்செய்தான.

விளித்து, ஆற்றி செயவெனெச்சத்திரிபுகள். (௫௨)

காய்சினமடங்கலன்னான்கைவளைசுழற்றிவல்லே
வீசினன்குலிசந்தன்னைவீழ்த்ததுவிடுத்தான்சென்னித்
தேசினன்மகுடந்தள்ளிச்சிதைத்ததுசிதைத்தலோடுங்
கூசினனஞ்சிப்போனான்குன்றிறகரிந்தவீரன்.

(இ-ள்.) காய் சினம் மடங்கல் அன்னான் - வருத்துங்கோபத்தையுடைய சிங்கத்தையொத்த உக்கிரகுமாரபாண்டியர், கைவளை சுழற்றி வல்லே வீசினன் - கையிலேந்திய சக்கரத்தைச்சுழற்றி விரைந்துவீச, குலிசந்தன்னை வீழ்த்தது - வச்சிராயுதத்தைச்சிதைத்து, அது விடுத்தான் சென்னி தேசின் நன் மகுடம் தள்ளி சிதைத்தது - அவ்வச்சிராயுதத்தை விடுத்த இந்திரனுடையசிரசில் அணிந்தவிளக்கத்தையுடைய நல்லகிரீடத்தைத்தள்ளியழித்தது, சிதைத்தலோடும் - ('அவ்வாறு') சிதைக்க, குன்று இறகு அரிந்த வீரன் - மலையின்சிறகரிந்த வீரனாகிய அவ்விந்திரன், கூசினன் அஞ்சிப்போனான் - நாணியஞ்சிப் புறங்கொடுத்துப்போனான். (௫௩)

இந்திரண்டனையகூர்ம்பலிருள்வரைநெஞ்சுபோழ்ந்த
மைந்தனில்வலியகாளைவரைந்தெறிநேமிசென்னி
சிந்திடாதாகியம்பொன்மணிமுடிசிதறசோம
சுந்தரநாதன்பூசைத்தொழிற்பயனளித்ததென்று.

(இ-ள்.) இரண்டு இந்து அனைய கூர்ம்பல் இருள் வரை நெஞ்சு போழ்ந்த மைந்தனில் வலியகாளை - இரண்டு அர்த்தசந்திரனையொத்த கூரியபற்களையுடைய கிரவுஞ்சகிரியின் மார்பைப்பிளந்த முருகக்கடவுள்போல வன்மைவாய்ந்த உக்கிரகுமாரபாண்டியர், வரைந்து எறி நேமி - கையிற்கொண்டெறிந்த சக்கரமானது, சென்னி சிந்திடாதாகி அம் பொன் மணிமுடி சிதற-(நமது) சிரத்தைச் சேதிக்காமல் அழகிய பொன்னாலாகிய இரத்தினம்பதித்த கிரீடத்தைச்சேதிக்க, சோமசுந்தரநாதன் பூசைத்தொழிற்பயன் அளித்தது என்று-சோமசுந்தரக்கடவுளை (நாம் முன்னர்ப்பூசித்த) பூசைத்தொழிலின் பயன் (இப்போதுநம்மைக்) காத்ததென்றுகருதி. (௫௪)

போரினுக்காற்றுதோடிப்பொன்னகர்புகுந்தவென்றித்
தாரினுக்கிசைந்தகூர்வேற்சதமகன்பின்புநின்னாட்
டேரினுக்கெல்லாமாரியுதவுவேனிகளநீக்கிக்
காரினைத்தருகவென்றுக்கவுரியற்கோலைவிட்டான்.

(இ-ள்.) போரினுக்கு ஆற்றாது ஓடி - (உக்கிரகுமாரபாண்டியருடைய) போருக்காற்றுமல்புறங்கொடுத்தோடி, பொன் நகர் புகுந்த வென்றி தாரினுக்கு இசைந்த கூர்வேல் சதமகன்-விண்ணுலகில்புகுந்த வெற்றிமாலைக்கிசைந்த கூரியவச்சிராயுதத்தையேந்திய இந்திரன், பின்பு - பின்னர், நின் நாடு ஊரினுக்கு எல்லாம் மாரி உதவுவேன் - உனதுநாட்டிலுள்ள ஊரினுக்கெல்லா மழைவளந்தருவேன், நிகளம் நீக்கி காரினைத்தருக என்று கவுரியற்கு ஓலைவிட்டான் - விலங்கினின்றும்நீக்கிப் புட்கலாவருத்தமுதலிய மேகங்களைத்தரக்கடவாயென்று உக்கிரகுமாரபாண்டியருக்குத் திருமுகம் அனுப்பினான். (ருரு)

முடங்கல்கொண்டணைந்ததூதன்முடிகெழுவேந்தன்பாதந்
தொடங்கிநின்றோலைநீட்டவுழையுளாரொருவன்வாங்கி
மடங்கலேறனையான்முன்னர்வாசித்துக்காட்டக்கேட்டு
விடங்கலுழ்வேலான்விண்ணோர்வேந்துரைதேறுனகி.

(இ-ள்.) முடங்கல் கொண்டு அணைந்த தூதன் - திருமுகங்கொண்டுவந்த தேவதூதன், முடிகெழு வேந்தன பாதததை ஒடுங்கி நின்று ஓலை நீட்ட - கிரீடமணிந்த உக்கிரகுமாரபாணடியர் திருவடிக்கீழ் ஒடுஙகி (ஒருபால்) நின்று திருமுகம்நீட்ட, உழை உளான ஒருவன் வாங்கி - அருகிலுள்ள ஒருவன (அத்திருமுகத்தை) வாங்கி, மடங்கல் ஏறு அனையான் முன்னர் வாசித்தது காட்ட-சிங்கவேறறையொத்த அவ்வுக்கிரகுமாரபாணடியர் முன்புவாசித்து உணர்த்த, விடம கலுழ் வேலான் கேட்டு-விஷத்தைச்சிந்தும் வேலையேந்திய (அநத) உக்கிரகுமாரபாண்டியர்கேட்டு, விண்ணோர்வேந்து உரை தேறுனகி - (திருமுகத்திலடங்கிய) இந்திரனுடையவார்த்தைகளை நம்பாமல்.

தேறுனகி ஒருசொல். (ருசு)

இட்டவன்சிறையைநீக்கியெழிலியைவிடாதுமாறு
பட்டசிந்தையனேயாகப்பாகசாதனனுக்கென்று
நட்டவனொருவேளாளனான்பிணையென்றுதாழ்ந்தான்
மட்டவிழ்ந்தொழுகுநிம்பமாலிகைமார்பினானும்.

(இ-ள்.) இட்ட வன் சிறையை நீக்கி எழிலியை விடாத மாறு பட்டசிந்தையனே ஆக - பூட்டிய வலியவிலங்கினைநீக்கிப் புட்கலாவருத்தமுதலிய மேகங்களை விடாமல் பகைகொண்டமனத்தை யுடையவராகவே உக்கிரகுமாரபாண்டியர் இருக்க, பாகசாதனனுக்கு என்றும் நட்டவன் ஒருவேளாளன் நான் பிணை என்று தாழ்ந்தான் - இந்திரனுக்கு எந்நாளும் சிநேகனாகிய ஒருவேளாளன் நான் பிணையென்று வணங்கினான், அவிழ்ந்து மட்டு ஒழுகு நிம்பம் மாலிகை மார்பினானும் - மலர்ந்து தேன்சிந்தும் வேப்பமலர்மாலையையணிந்த மார்பையுடைய அவ்வுக்கிரகுமாரபாண்டியரும்.

பாகசாதனன் - பாகனென்னும் ஓர் அசுரனைவென்றவன். (ருஎ)

இடுக்கண்வந் துயிர்க்குமூற்றமெய்தினும்வாய்மைகாத்து
வடுக்களைந்தொழுகுநாலாமரபினனுரையையாத்த
னெடுத்துரைமறைபோற்சூழ்ந்துசிறைக்களத்திட்டயாப்பு
விடுத்தனன்பகடுபோலமீண்டனமேகமெல்லாம்.

(இ-ள்.) இடுக்கண் வந்து உயிர்க்கும் ஊற்றம் எய்தினும் - வறுமைமேலிடலால் (தனது உடம்பிற்கன்றி) உயிருக்கும் இடையூறுவரினும், வாய்மை காத்து வடு களைந்து ஒழுகும் நாலாம் மரபினன் உரையை-(பிறர்க்குச்சொல்லிய) வாய்ச்சொல்லைக்காத்துக் குற்றங்களைந்து நல்லொழுக்கத்திற் செல்லும் நான்காம் வருணத்தனாகிய வேளாளன்வாய்ச்சொல்லை, ஆத்தன் எடுத்து உரை மறைபோல் சூழ்ந்து - சிவபெருமான்விதந்து கூறியவேதவாக்கியம்போலச் சிந்தித்து, சிறைக்களத்து இட்ட யாப்பு விடுத்தனன் - சிறைக்களத்திற்பூட்டிய விலங்கைத்தறித்துவிட்டார், மேகம் எல்லாம் பகடுபோல மீண்டன - புட்கலாவருத்தமுதலிய மேகங்களெல்லாம் யானைகள்போல அங்குநின்றுந்திரும்பின.

வந்து என்னும் செய்தெனெச்சம் காரணப்பொருட்டு. உம்மை - இறந்தது தழீஇய உயர்வுசிறப்பு. (ருஅ)

தேவர்கோனேவலாலேதிங்கண்மும்மாரிபெய்து
வாவியுங்குளனும்யாறுமடுக்களுமடுத்துக்கள்வாய்க்
காவிசூழ்வயலுஞ்செய்யுஞ்செந்நெலுங்கன்னற்காடும்
பூவிரிபொழிலுமகாவும்பொலிந்ததுகன்னிநாடு.

(இ-ள்.) தேவர் கோன் ஏவலால் திங்கள் மும்மாரி பெய்து - இந்திரன் ஏவலால் மாதந்தோறும் மூன்றுமழைபெய்தவர, வாவியும குளனும் யாறும் மடுக்களும் மடுத்து - வாவிகளும் குளங்களும் ஆறுகளும் மடுக்களும் நிறைதலால், கள்வாய் காவி சூழ்வயலும் செய்யும் - தேன்சிந்தும் வாயையுடைய நீலோற்பலங்கள் நெருங்கிய வயல்களிலும் படங்களிலும் உள்ள, செந்நெல் காடும் கன்னல் காடும்- செந்நெற்காடுகளாலும கருமபின்காடுகளாலும், பூவிரி பொழிலும் காவும் - மலர்விரிந்த பூஞ்சோலைகளாலும பயன்தருஞ்சோலைகளாலும், கன்னிநாடு பொலிந்தது- பாண்டிநாடு பொலிவுபெற்று ஓங்கியது.

பெய்து - செயவெனெச்சத்திரிபு. மடுத்து - காரணப்பொருளில்வந்த வினையெச்சம். (ருக)

இந்திரன்முடிமேல் வளையெறிந்தபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கககo.

மேருவைச்செண்டாலடித்த திருவிளையாடல்.



## பதினைந்தாவது.

# மேருவைச்செண்டாலடித்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அண்டரஞ்சவமருழந்தவமரர்கோனையரசர்கோன்
வண்டலம்புமௌலிசிந்தவளையெறிந்துவெம்புறங்
கண்டவண்ணமின்னதன்னகன்னிநாடன்மேருவிற்
செண்டெறிந்துவைபபெடுத்தசெயலுநன்குசெப்புவாம்.

(இ-ள்.) அமர் உழந்த அமரர் கோனை - போர்செய்த இந்திரனை, அண்டர் அஞ்ச - தேவர்களஞ்ச, அரசர் கோன் - உக்கிரகுமாரபாண்டியர், வண்டு அலம்பு மௌலிசிந்த வளை எறிந்து - வண்டுகளொலிக்கும் (வெற்றிமாலையேய்ந்த) கிரீடஞ் சிதறச் சக்கரத்தையெறிந்து, வெம் புறங் கண்ட வண்ணம் இன்னது - முதுகுகண்ட திருவிளையாடல் இத்திருவிளையாடல், அன்ன கன்னி நாடன் - அப்பாண்டியர், மேருவில் செண்டு எறிந்து வைப்பு எடுத்த செயலும் நன்கு செப்புவாம் - மகமேருவின்மேற செண்டாயுதம் எறிந்து வைப்புநிதியெடுத்த திருவிளையாடலையும் இனிக் குறைவின்றிச் சொல்லுவாம். (க)

மன்னவன்றனக்குமுன்னர்மலயவெற்பின்முனிவர்கோன்
சொன்னதிங்கள்விரதமன்றுதொட்டுநோற்றுவரலுமந்
நன்னலஞ்செய்பேறுபோலநங்கைகாந்திமதிவயிற்
றுன்னருஞ்சயங்கொண்மைந்தனொருவன்வந்துதோன்றினன்.

(இ-ள்.) மன்னவன் - உக்கிரகுமாரபாண்டியர், தனக்கு முன்னர் மலயவெற்பின் முனிவர்கோன் சொன்ன திங்கள் விரதம் அன்று தொட்டு நோற்று வரலும், - தமக்குமுனபு பொதியமலையிலுள்ள முனிவர்களுக்குத் தலைவராகிய அகத்தியமுனிவர்கூறிய சோமவாரவிரதத்தை அக்காலந்தொட்டு அனுஷ்டித்துவர, அ நல் நலம் செய் பேறு போல - அவ்விரதத்தின் பயன்போல, நங்கை காந்தி மதிவயிறு - பெண்ணிற் சிறந்தவராகிய காந்திமதியின் திருவயிற்றில், உன்னரும் சயங்கொள் மைந்தன் ஒருவன்வந்து தோன்றினன் - நினைத்தற்கரிய வெற்றிகொண்ட புத்திரன் ஒருவன்வந்து பிறந்தான்.

நன்னலமென்னுங் காரியம் அதனைத்தரும் காரணத்தின்மேனிற்றலால் காரியவாகுபெயர். (உ)

வயந்தனைப்பயந்ததென்னமைந்தனைப்பயந்தபோ
தியந்துவைத்துநகர்களிப்பவினிதிருந்தபுரவலன்
சயந்தழைக்கவிந்திரன்சயந்தனைப்பயந்தநாள்
வியந்தகத்தடைந்தவின்பமவினமகிழ்ச்சியெய்தினன்.

(இ-ள்.) வயந்தனை பயந்தது என்ன-(திருமால்)மன்மதனைப்பெற்றதுபோல, மைந்தனை பயந்த போது - புத்திரனைப்பெற்றகாலத்து, இயம் துவைத்து நகர் களிப்ப - பலவாத்தியங்களும் ஒலிக்கவும் நகரிலுள்ளோர் களிகூரவும், இனிது இருந்த புரவலன்-மகிழ்கூர்ந்திருந்த உக்கிரகுமாரபாண்டியர், சயம் தழைக்க இந்திரன்

சயந்தனை பயந்த நாள் - வெற்றிபெருக இந்திரன் சயந்தனைப்பெற்றகாலத்து, வியந்து அகத்து அடைந்த இன்பம் - அதிசயங்கூர்ந்து அவன்மனத்தில்விளைந்த இன்பம்போல, விளைமகிழ்ச்சி எய்தினன் - மிக்கமகிழ்கூர்ந்தார்.

சயந்தனைப்பயந்தது என்ன - வெற்றியைப்பெற்றதுபோல எனப்பொருள் கொள்ளுதலுமொன்று. துவைத்து செயவெனெச்சத்திரிபு. (௩)

தென்னரேறுசாதகாதிசெய்துவீரபாண்டிய
னென்னநாமவினைவிரப்பியெழுதொணாதகலைமுதல்
பன்னுகேள்விகரிகடேர்கள்பரிபடைக்கலம்பயின்
றன்னகாதலான்விளங்கவகமகிழ்ச்சியடையுநாள்.

(இ-ள்.) தென்னர் ஏறு சாதகாதிசெய்து - பாண்டியருள் ஆண்சிங்கம்போன்ற உக்கிரகுமாரபாண்டியர் சாதகன்முதலிய கிரியைகளைச்செய்து முடித்து, வீரபாண்டியன் என்ன நாமவினை விரப்பி - வீரபாண்டியனென்று நாமகரணஞ்செய்து, எழுத ஒண்ணாத கலைமுதல் பன்னு கேள்வி - வேதமுதலிய சொல்லப்பட்ட கலைகளையும், கரிகள் தேர்கள் பரி படைக் கலம் பயின்று - யானையேற்றமும் தேரேற்றமும் குதிரையேற்றமும் ஆயுதப்பயிற்சியும் (ஆகிய இவைகளைப்) பயிலச்செய்தலால், அன்ன காதலான் விளங்க - அப்புத்திரன் விளங்கித்தோன்ற, அகமகிழ்ச்சி அடையு நாள்-(அவ்வுக்கிரகுமாரபாண்டியர்) மனமகிழ்ச்சி யடையுங்காலையில்.

சாதகன்முதலிய கிரியைகளாவன - உத்தாபனம், அன்னப்பிராசனம், பிரவாசமுதலியன. இவற்றை உக்கிரகுமாரபாண்டியர் திருவவதாரப்படலத்திற்காண்க. அத்தியயனஞ்செய்து பயிலுதலன்றி யெழுதிப்பயிலுதலின்மையின் எழுதொணாத என்ற குறிப்பால் கலை என்றதை வேதம் என்றும். "எழுதருமறைகடேறு" என இந்நூலுள் வருதல்காண்க. (௪)

மல்குமாறுகோடிரிந்துமழைசுருங்கிநதியுநீ
ரொல்குமாறுப்ருவமாறியுணவுமாறியுயிரொலா
மெல்குமாறுபசியுழந்துவேந்தனுக்குவிளைபொரு
ணல்குமாறிலாமையின்னனலியவந்தநாடெலாம்.

(இ-ள்.) மல்கும் ஆறுகோள் திரிந்து - (உலகுக்குநன்மை) மிக்க ஆறுகிரகங்களும் தத்தம் நிலைகளினின்று மாறுதலால், மழை சுருங்கி நதியும் நீரும் ஒல்குமாறு - மழைவளஞ்சுருங்கி நதியும் நீர்நிலைகளும் வறப்ப, பருவம் மாறி - கார்ப்பருவம்மாறி, உணவுமாறி - (அதனால்வரும்) உணவுகளும்மாறி, உயிர் எல்லாம் மெல்கும் ஆறு பசி யுழந்து - குடிகளெல்லாம் மெலியும்வண்ணம் பசியால்வருந்தி, வேந்தனுக்கு விளைபொருள் நல்குமாறு இல்லாமை - அரசனுக்கு விளைந்தபொருள்களுள் ஆறுகூறிலொன்று கொடுக்கவும் இல்லாமல், எல்லாம் நாடு இன்னல் நலியவந்தது-எல்லாநாடுகளிலும் வறுமை குடியேறி வருத்தவந்தது.

ஆறுகிரகங்களாவன - சநி, செவ்வாய், குரு, சூரியன், இராகு, கேதுக்கள். ஒல்குமாறு மாறு வினையெச்சப்பொருளில்வரும் ஓரிடைச்சொல். மாறி செயவெனெச்சத்திரிபு. நீரினிறுதியில் எண்ணும்மைதொகுத்தல். (௫)

மழைவறந்ததென்கொலென் றுவழுதிகூறமுழுதுணர்ந்
தழிவிலாதபிரமகற்பமளவுமெல்லைகண்டநூ
லுழவர்கோள்களிரவிதன்னையுற்றுநோக்கிநிற்றலாற்
றழையுமாரிவருடியாதொர்வருடமென்றுசாற்றினார்.

(இ-ள்.) மழை வறந்தது என்கொல் என்று வழுதி கூற - மழைவளம்வறந்தது யாதுகாரணம் என்று உக்கிரகுமாரபாண்டியர்வினவ, முழுது உணர்ந்து அழிவு இலாத பிரமகற்பம் அளவும் எல்லைகண்ட நூல் உழவர் - சோதிடநூல் முற்றுமுணர்ந்து அழியாத பிரமகற்பங்காறுங் காலவளவைதேர்ந்துணர்ந்த புலவர்கள், கோள்கள் இரவி தன்னை உற்று நோக்கி நிற்றலால் - ஏனைக்கோள்கள் சூரியனையடைந்து பார்த்துநிற்றலால், ஓர் வருடம தழையும் மாரி வருடியாது என்று சாற்றினார் - ஒருவருடம் (உலகைச்) செழிப்பிக்கும் மழைவருஷியாதென்று கூறினார்கள்.

பிரமகற்பம் - பிரமனுக்கு ஒருதினம். அது பதினான்கு தேவேந்திரபட்டம் அழியுங்காலம். (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மகவுறுநோயைநோக்கிவருந்துறுதாயபோன்மன்னன்
பகவுறுமதியருந்திம்பரருகடர்முன்போய்த்தாழ்ந்து
மிகவுறுபசியால்வையமெலிவதையையவென்றுத்
தகவுறவிரங்கிகண்ணீர்ததும்பிநின்றிரந்துவேண்ட.

(இ-ள்.) மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போல் - பிள்ளையடைந்த பிணியைநோக்கி மனவருந்துந் தாயபோல, மன்னன்-உக்கிரகுமாரபாண்டியர், பகவு உறு மதியம் சூடிய பரஞ்சுடர் முன்போய் தாழ்ந்து - பிளவுபட்ட சந்திரனையணிந்த சோமசுந்தரக்கடவுள் முன்சென்று வணங்கி, ஐய மிக வுறுபசியால் வையம் மெலிவது என்று - ஐயனே மிககபசியால் உயிர்கள் வருந்துகின்றதே என்று, தகவு உற இரங்கி - மிகவும் இரங்கி, கண்ணீர் ததும்பி நின்று இரந்து வேண்ட - கண்ணீர்சிந்தக் குறைகூறிவேண்ட.

தங்கோற்கீழ்வாழுங் குடிகளுக்கு வருந்துன்பத்தைத் தமதுதுன்பம்போற் கருதித் தாங்கினார் எனபார் மகவுறுநோயைநோக்கி வருந்துறுந் தாய்போல் என்றார். ததும்பி-செயவெனெச்சத்திரிபு. மெலிவதை ஐ சாரியை. (௭)

திரைக்கடல்விடஞ்சேர்கண்டர்காலத்தின்செவ்விநோக்கி
யிரக்கமில்லவர்போல்வாளாவிருந்தலுமருத்தார்மார்பன்
கரைக்கரிதாயதுன்பக்கடலில்வீழ்ந்திருக்கைபுக்கா
னரக்கர்போர்க்கடந்தோனிந்தியருக்கனீர்க்கடலில்வீழ்ந்தான்.

(இ-ள்.) திரை கடல் விடம் சேர் கண்டர் - அலைகளையுடைய கடலிற்றோன்றிய விஷந்தங்கிய ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், காலத்தின் செவ்வி நோக்கி - காலத்தின்கூறுபாட்டைத் திருவுளத்திலோர்ந்து, இரக்கம் இல்லவர் போல் வாளா இருந்தலும் - (உயிர்கள்மேல்) இரக்கமில்லாதவர்போல் வாளாவிருக்க, மருதார் மார்பன் - வாசமிக்க மாலையையணிந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர், கரைக்கு அரிதாய துன்பக்கடலில் வீழ்ந்து இருக்கை புக்கான் - சொல்லுதற்கரிய துன்பசாகரத்துள் மூழ்கி அழுந்தி (தமது) கோயிலுட்சென்றார், அரு

க்கன் அரக்கர் போர்க்கடலில் நீந்தி நீர்க்கடலில் வீழ்ந்தான் - சூரியன் அரக்கர்செய்யும் போர்க்கடலினின்று நீங்கி நீர்மயமாகியகடலில் அழுந்தினான். (அத்தமனஞ்செய்தானென்றபடி)

அயன்முதலிய பல்லுயிர்களுக்கிரங்கி விஷமுண்டபெருமானார் நிலவுலகிலுள்ள உயிர்களிடத்து இரக்கமில்லாமல் வாளாவிருந்தது அவர்கள் வினைப்பயன் நோக்கி என்பார். காலத்தின்செவ்விநோக்கி என்றார். புலத்தியர்முதலியமுனிவர்கள் மறைபாடவும், சுரதன்முதலியோர் தேர்வடம்பற்றவும், கேதிமுதலிய அரக்கர்கள் வாளேந்தி முன்வரவும், வாசுகிமுதலியபாம்புகள் தேர்சுமந்துவரவும், நாரதன்முதலியோர் இசைபாடவும், கிருத்தலைமுதலிய தேவப்பெண்கள் நடனஞ்செய்யவும், சூரியன்தோன்றி வருங்காலிடையில் அறுபத்துநான்குகோடி அரக்கர்வந்து போர்புரிதலின் அரக்கர் போர்க்கடலினீந்தி என்றார்.

"கருதியந்தணர்யாவருந்தங்கடன்கழிப்பச்
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்
பரிதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலிற்பரந்த
குருதியாமெனச்செவந்தெழச்செவந்ததுகுடபால்."

எனப்பாரதத்தில் வருதல்காண்க. (அ)

வள்ளறன்குடைக்கீழ்த்தங்குமுயிர்ப்பசிவருத்தமெல்லாங்
கொள்ளைகொண்டிருந்தநெஞ்சிற்குளிர்முகச்செவ்விகுன்றத்
தள்ளருந்துயரின்மூழ்கித்தரையிடைத்துயின்றானாக
வெள்ளிமன்றுடையார்சித்தவேடராய்க்கனவில்வந்தார்.

(இ-ள்.) வள்ளல் தன் குடைக்கீழ் தங்கும் உயிர்ப்பசி வருத்தம் எல்லாம் - உக்கிரகுமாரபாண்டியர் தமது குடையின்கீழ்த்தங்கிய உயிர்களின் பசிவருத்தமெல்லாம், கொள்ளை கொண்டு இருந்த நெஞ்சில் குளிர் முகம் செவ்வி குன்ற - (ஒருசேரக்) கொள்ளைகொண்டு குடியிருந்த மனத்தினோடு குளிர்ந்த முகமலர்ச்சிகுறைய, தள்ளரும் துயரின் மூழ்கி தரையிடை துயின்றானாக - நீங்குதற்கரிய துன்பத்தில் மூழ்கி நிலத்தின்மேற்கிடந்து நித்திரைசெய்ய, வெள்ளி மன்று உடையார் - வெள்ளியம்பலத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், சித்தவேடராய் கனவில் வந்தார் - சித்தவேடமூர்த்தியாய்க் கனவில்வந்தருளினார். (கூ)

அடற்கதிர்வேலோய்மாரியரிதிப்போததனைவேண்டி
யிடர்ப்படல்வரைக்குவேந்தாயிருக்கின்றவெரிபொன்மேருத்
தடப்பெருவரையின்மாடோர்தனிப்பெருமுழையிலிட்டுக்
கிடப்பதோரெல்லையில்லாக்கேடிலாச்சேமவைப்பு.

(இ-ள்.) அடல் கதிர் வேலோய் - கொல்லுந்தொழிலையுடைய ஒளியமைந்தவேலையுடைய பாண்டியனே, இப்போது மாரி அரிது - இப்பொழுது மழையில்லை, அதனைவேண்டி இடர்ப்படல் - அம்மழைவருஷித்தலைவிரும்பி வருந்துதலொழிக, வரைக்கு வேந்தாய் இருக்கின்ற எரி பொன் மேரு தடம் பெருவரையின் மாடு - மலைகளுக்கரசாயிருக்கின்ற விளங்கும்பொன்னாகிய மேருவென்னும் உயர்ந்தபெரியமலையின்பக்கத்து, ஓர் தனி பெரு முழையில் - ஒப்பில்லாத வொருபெருங்குகையில், ஓர் எல்லை இல்லா கேடு இலா வைப்பு சேமம் இட்டு கிடப்பது - ஒரு அளவுகடந்த அழிவில்லாத வைப்புநிதி சேமஞ்செய்திருக்கின்றது. (க0)

கிடைத்துமற்றனையமேருகிரிச்செருக்கடங்கச்செண்டாற்
புடைத்துநின்றனைத்தாக்கிப்பொன்னறைபொதிந்தபாறை
துடைத்துநீவேண்டுங்காறுந்தொட்டெடுத்ததனைமீள
வடைத்துநின்குறியிட்டடையுவருதியென்றடிகள்கூற.

(இ-ள்.) ஐய - ஐயனே, கிடைத்து - அடைந்து, அனையமேருகிரி செருக்கு அடங்க செண்டாற் புடைத்து - அந்தமேருகிரியின் இறுமாப்பு அடங்கச் செண்டாயுதத்தாலடித்து, நின் ஆணைத்து ஆக்கி - (அம்மலையை) உன்னுடைய ஆணைவழிப்படுத்தி, பொன் அறை பொதிந்த பாறை துடைத்து - சேமநிதி இருக்கும் அறைமேற் பொதிந்த பாறையையெழுப்பி, நீ வேண்டுங்காறும் தொட்டு எடுத்து - நீ பொன் வேண்டுமளவும் அள்ளியெடுத்து, அதனை மீள அடைத்து நின் குறி இட்டு - அந்த அறையைத்திரும்ப (அப்பாறையால்) அடைத்து நின்பெயரிலச்சினையை இட்டு, வருதி என்று அடிகள் கூற-வருவாயென்று சித்தவேடமூர்த்திகள் கூறியருள. (கக)

விழித்தனனெழுமான்றேரோன்விழிக்குமுன்கடன்களெல்லாங்
கழித்தனன்மீனநோக்கிகணவனைவலமாய்ப்போந்து
சுழித்தெறிகடலனீகத்தொகைபுறஞ்சூழக்கொண்டல்
கிழித்தெழுவாயினீங்கிக்கீழ்த்திசைநோக்கிச்செல்வான்.

(இ-ள்.) எழுமான் தேரோன் விழிக்குமுன் விழித்தனன் - ஏழுகுதிரைபூண்ட சூரியன்விழித்தற்குமுன் (தாம்) விழித்து, கடன்கள் எல்லாம் கழித்தனன் - காலையிற்செய்யுங் கடன்களெல்லாம் செய்துமுடித்து, மீனநோக்கி கணவனை வலமாய்ப்போந்து - சோமசுந்தரக்கடவுளைப் பிரதக்ஷிணஞ்செய்து, சுழித்து எறிகடல் அனீகம் தொகை புறம் சூழ - சுழித்து அலைகள்வீசும சமுத்திரம்போன்ற சேனைக்கூட்டங்கள் புறத்திற்சூழ, கொண்டல் கிழித்து எழுவாயில் நீங்கி - மேகமண்டலத்தைக்கிழித்து ஓங்கியமதில்வாயிலினின்றுநீங்கி, கீழ் திசை நோக்கி செல்வான் -(உக்கிரகுமாரபாண்டியர்) கீழ்த்திசைநோக்கிச் செல்வாராயினார். (கஉ)

அதிர்ந்தனமுரசஞ்சங்கமதிர்ந்தனவியங்களண்டம
பிதிர்ந்தனவென்னவார்ப்பப்பெயர்ந்துவெண்கவரிதுள்ள
முதிர்ந்தநான்மறையோராசிமொழியநாவல்லோரேத்தப்
பதிந்துபார்கிழியத்திண்டேர்பாகுமுன்செலுத்தவூர்ந்தான்.

(இ-ள்.) முரசம் அதிர்ந்தன - பேரிகை ஒலிக்கவும், சங்கம் அதிர்ந்தன-சங்கு ஒலிக்கவும், இயங்கள் அண்டம் பிதிர்ந்தன என்ன ஆர்ப்ப - வாச்சியங்கள் அண்டங்கள் பிளவுபட்டன வென்று சொல்லும்படி யொலிக்கவும், பெயர்ந்து - (அங்குநின்றும்) பெயர்ந்து, வெண்கவரி துள்ள-வெள்ளியசாமரைகள் எழுந்துதுள்ளவும், முதிர்ந்த நான்மறையோர் ஆசி மொழிய - பயன்மிக்க நான்குவேதங்களையுணர்ந்த அந்தணர்கள் ஆசிவசனங்கூறவும், நாவல்லோர் ஏத்த - புலவர்கள் பாடவும், பதிந்து பார் கிழிய - உருள்பதிதலால் நிலவுலகுகிழியவும், திண் தேர் பாகு முன் செலுத்த ஊர்ந்தான் - திண்ணியதேரைப் பாகன்முன்னேசெலுத்த நடந்தார். (கங)

பவளக்காற்பிச்சம்பொற்காற்பன்மணிக்கவிகைமுத்தத்
தவளக்காற்பதாகைக்காடுதானவானருவிதூங்கும்

கவளக்காற்பொருப்பும்பாய்மாக்கடலுமண்மடந்தையாகத்
துவளக்கால்வயவர்மான்றேர்த்தொகுதியுஞ்சூழல்போக.

(இ-ள்.) பவளக்கால் பிச்சம் - பவளத்தாற்செய்த காம்பையுடையபீலிக்குடையும், பொன் கால் புல் மணிக்கவிகை - பொன்னாலாகிய காம்பையும் அளவில்லாத விலையையுடைய முத்துக்கோவைசெய்த விளிம்பையுமுடைய குடையும், முத்தம் தவளக்கால் பதாகை காடு - முத்துகள்கோத்த காலையுடைய விருதுகொடிக்காடும், தானம் வான் அருவி தூங்கும் கால் கவளம் பொருப்பும் - மதமாகிய பெரிய அருவி அசைந்திழியும் காலையுடைய கவளமுண்ணும் மலையையொத்த யானைகளும், பாய்மா கடலும் - பாய்ந்துசெல்லுங் குதிரைவெள்ளமும், கால் வயவர் மான் தேர் தொகுதியும் - காலாள்கூட்டமும் குதிரைபூட்டிய தேர்க்கூட்டமும், மண் மடந்தை ஆகம் துவள சூழல் போக-பூமிதேவியின் சரீரம்வருந்தச்சூழ்ந்துவரவும்.

சூழல் போக ஒருசொல். (கச)

கோழிணர்ஞாழலன்னகோட்டுகிர்ப்புலவுப்பேழ்வாய்த்
தாழ்சினவுழுவையொற்றைத்தனிப்பெருங்கொடியுங்கூனற்
காழ்சிலைக்கொடியுஞ்சூழக்கயற்கொடிநிலந்துழாங்கை
யேழுயர்வரைமேற்றோன்றியிருவிசும்பகடுகீற.

(இ-ள்.) கோழ் இணர் ஞாழல் அன்ன கோடு உகிர் - கொழுவிய பூங்கொத்தையுடைய குங்குமமரத்தின் அரும்பின்வளைவுபோன்ற வளைவினையுடைய நகத்தையும், புலவு பேழ் வாய் - புலால்நாறறம்நாறும் பிளந்தவாயையும், தாழ் சினம் - மிக்ககோபத்தையும் உடைய, உழுவை ஒற்றை தனி பெருங் கொடியும் - புலியெழுதிய ஒப்பற்ற பெரியதுவசமும், கூனல் காழ் சிலை கொடியும் - வளைந்த வலியவில்லெழுதிய கொடியும், சூழ - (தனனைச்) சூழ்ந்துவர, கயல் கொடி-மீனக்கொடியானது, நிலம் துழாம் கை ஏழு உயர்வரை மேல் தோன்றி - நிலத்தைத்தீண்டுந் துதிக்கைமுதலிய ஏழுறுப்புயர்ந்த மலைபோன்ற யானையினமேல் தோன்றி, இருவிசும்பு அகடு கீற - பெரியவிண்ணுலகின் வயிற்றைக்கிழித்துச்செல்லவும். (கரு)

தென்கடல்வடபானோக்கிசெல்வதுபோலத்தென்னன்
றன்கடலனிகங்கன்னித்தண்டமிழ்நாடுநீந்தி
வன்கடநெறிக்கொண்டேகிவளவர்கோனெதிர்கொண்டாற்று
நன்கடன்முகமனேற்றுநளிர்புனனாடுநீந்தி.

(இ-ள்.) தென் கடல் வடபால் நோக்கி செல்வதுபோல் - தென்சமுத்திரம் வடதிசையைநோக்கிச் செல்வதுபோல, தென்னன் - உக்கிரகுமாரபாண்டியர், தன் கடல் அனிகம் - தமதுகடலையொத்த சேனையோடு, கன்னி தண் தமிழ் நாடு நீந்தி, பாண்டிநாடாகிய தமிழ்நாட்டைக்கடந்து, வல் கடம் நெறி கொண்டு ஏகி-வலியகாட்டுவழிச்சென்று, வளவர் கோன் எதிர்கொண்டு ஆற்றும் நனகடன் முகமன் ஏற்று - சோழன் எதிர்கொண்டு செய்யும நல்ல வரிசையாகிய உபசாரங்களை அங்கீகரித்து, நளிர் புனல் நாடு நீந்தி-குளிர்ந்த நீர்நாடாகிய அச்சோழநாட்டினின்றுநீங்கி.

வன்கடம் என்றது முரம்புங் கூரங்கல்லுநெருங்கியகாட்டினை. (கசு)

தண்டகநாடுதள்ளித்தெலுங்கநாடகன்றுசாய்நாட்
கண்டகக்கைதைவேலிக்கருநடங்கடந்துகாடுங்

தொண்டகந்துவைக்குங்குன்றநதிகளுந்துறந்துகள்வாய்
வண்டகமலர்க்காவேலிமாளவதேசநண்ணி.

தண்டக நாடு தெள்ளி - தண்டகநாடாகிய தொண்டைநாட்டினின்று நீங்கி, தெலுங்க நாடு அகன்று - (திருவேங்கடத்துக்கு அப்பாற்பட்ட) தெலுங்கநாட்டினின்று நீங்கி, சாய் தாள் கண்டகம் கைதை வேலி கருநடம் கடந்து - சாய்ந்த தாளையுமுள்ளையுமுடைய தாழையையே வேலியாகச்சூழ்ந்த கருநடநாட்டைக்கடந்து, காடும் தொண்டகம் துவைக்கும் குன்றும் நதிகளும் துறந்து - முல்லைநிலத்தையும் தொண்டகம் என்னும் வாச்சியம் ஒலிக்கும் குறிஞ்சிநிலத்தையும் நதிகளையுங் கடந்து, கள்வாய் வண்டு அகம் மலர் கா வேலி மாளவதேசம் நண்ணி - மதுவாய்ந்த வண்டுகளைத் தமதிடத்துடைய மலர்கள்நெருங்கிய சோலைகளையே வேலியாகவுடைய மாளவதேசத்தையடைந்து.

தொண்டகம் - குறிஞ்சிப்பறை. (கஎ)

அங்குநின்றெழுந்துநீவாயருஞ்சுரநெறிப்பட்டேகி
மங்குனின்றதிருஞ்செம்பொன்மாடநீள்விராடநண்ணிக்
கொங்குநின்றவிழுங்கானங்குன்றுநீறுவாளைபாயத்
தெங்குநின்றிளநீர்சிந்துமத்தியதேயத்தெய்தி.

(இ-ள்.) அங்கு நின்று எழுந்து - அந்நாட்டினின்று நீங்கி, நீவாய் அருஞ்சுரம் நெறிப்பட்டு ஏகி - நீவாய்ந்த செல்லுதற்கரிய பாலைநிலத்தின் வழிப்பட்டுச்சென்று, மங்குல் நின்று அதிரும் செம் பொன் மாடம் நீள் விராடம் நண்ணி - மேகங்கள் நின்று முழங்கும் செவ்வியபொன்னாலாகிய மாடங்கள்நெருங்கிய விராடதேசத்தையடைந்து, கொங்கு நின்று அவிழும் கானம் குன்று ஒருவி - மகரந்தம்பரவமலரும் மலர்கணிறைந்த முல்லையையுங் குறிஞ்சியையுங்கடந்து, வாளை பாய தெங்கு நின்று இளநீர் சிந்தும் மத்திய தேயத்து எய்தி - வாளைமீன்பாய்தலால் தென்னைமரத்தினின்று இளநீர் சிந்தாநின்ற மத்தியதேசத்தையடைந்து.

நின்றுசெயவெனெச்சத்திரிபு. (கஅ)

அந்நெடுநாடுநீங்கியாடலேறுயர்த்ததோன்றல்
பொன்னெடுஞ்சடையிற்றாழ்ந்துபுனிதமாந்தீர்த்தக்காசி
நன்னெடுநகரமெய்திநளிர்புனற்கங்கைநீந்திக்
கன்னெடுநெறியனேககாவதங்கடந்தபின்னர்.

(இ-ள்.) அ நெடு நாடு நீங்கி - அந்தநெடியநாட்டினின்று நீங்கி, ஆடல் ஏறு உயர்த்த தோன்றல் பொன் நெடும் சடையில் தாழ்ந்து - வெற்றிவாய்ந்த இடபக்கொடியை உயர்த்தியருளிய சிவபெருமானுடைய பொன்போன்ற நெடியசடையிற்றங்கி, புனிதமாம் தீர்த்தம் காசி நல் நெடு நகரம் எய்தி - புனிதமாகிய கங்கையையுடைய காசியாகிய நல்லநெடியநகரத்தையடைந்து, நளிர் புனல் கங்கை நீந்தி - குளிர்ந்த நீர்மயமாகிய அக்கங்கையைக்கடந்து, கல் நெடு நெறி அனேககாவதம் கடந்த பின்னர் - கற்கள்செறிந்த தொலைவழியாகிய அனேககாதங்கடந்தபின்பு.

உமாதேவியார் திருவிரல்களிற்றோன்றி யுலகமுற்றுங்கோத்த மகாவெள்ளத்தைத் திருமால், பிரமன், இந்திரன் வேண்டுகோளால் சிவபெருமான் தனது

சடையிற்றரித்தமையால் பொன்னெடுஞ்சடையிற்றாழ்ந்து புனிதமாம் எனவும், அக்கங்கையுட் சிறிதுபெற்றுச்சென்ற பிரமனுலகிலுள்ளகங்கை பகீரதன்தவத்தால் நிலவுலகில்வர மீளவும் சடையிலேற்றுச் சிறிதுவிடுத்த அக்கங்கை இத்தீர்த்தம் ஆதலால் தீர்த்தக்கங்கை எனவுங்கூறினார்.

"மேதினியண்டமுற்றும் விழுங்கியகங்கையுன்றன்
பாதியாள்கரத்திறரேன்றும் பான்மையாலுனதுசென்னி
மீதினிற்செறிக்குமாண்பால் விமலமாம்" எனவும்,

"அந்ததிமூன்றுதன்னி லயனகர்புகுந்தகங்கை
பன்னருந்திறலின்மிக்க பகீரதன்றவத்தான்மீளப்
பின்னருமிமையாமுக்கட் பெருந்தகைமுடிமேற்றாங்கி
இந்நிலவரைப்பிறசெல்ல விறையதில்விடுத்தல்செய்தான்" எனவும்,

"நானிலமிசையேயுய்த்த நன்னதிசகரரெல்லாம்
வானுயர்கதிபெற்றுய்ய மற்றவரொன்பிற்பாய்ந்து
மீனெறிதரங்கவேலை மேவியது"

எனவும் வருதலைக் காந்தம் தக்ஷகாண்டம் ததீசியுத்தரப்படலத்திற்காண்க. (கக)

மடங்கன்மாநாகம்யாளிவழங்கலான்மனிதர்செல்லா
விடங்கடந்தாகவைஞ்நூற்றிரட்டியோசனைத்தாமெல்லைக்
கடங்கெழுகுமரிகண்டங்கடந்துமற்றதுபோலெட்டுத்
தடங்கெழுகண்டங்கொண்டபாரதவருடந்தள்ளி.

(இ-ள்.) மடங்கல் மாநாகம் யாளி வழங்கலால் - சிங்கமுதலிய பெரியயானைகளும் யாளிகளும் வழங்குதலால், மனிதர் செல்லா இடம் கடந்து - ஆள்வழக்கொழிந்த இடங்களைக்கடந்து, ஆக ஐஞ்ஞூறு இரட்டி யோசனைத்து ஆம் எல்லை கடம கெழு குமரி கண்டம் கடந்து - ஆக ஆயிரயோசனையாகிய அளவையுடைய கொடுவழி மிக்ககுமரிகண்டத்தைக்கடந்து, அதுபோல் தடம் கெழு எட்டுகண்டம் கொண்ட பாரதவருடம் தள்ளி - அதுபோல விசாலமிக்க எட்டுக்கண்டங்கொண்ட பாரதவருடத்தினின்றும் நீங்கி.

இமையகிரிக்குத்தெற்கு, தென்சமுத்திரத்திற்குவடக்கு நடுவேயுள்ளது பாரதவருடம் இக்கண்டம்-சுவாயம்புமனுபுத்திரன் பிரியாவிரதனென்பவன் சத்ததீவுகளையும் ஆண்டுவருங்கால் தன்புத்திரர் அங்கிநீரன், மேதாதி, வபுட்டு, சோதிட்டு, துதிமான், அவ்வியன், சவனன் என்னும் எழுவர்க்கும் அவ்வேழுதீவுகளையும்பகிர்ந்து கொடுக்க அவர்களாண்டுவருங்காலையில் அங்கிநீரன் தனதுபுத்திரராகிய பாரதன், கிம்புருடன், அரி, கேதுமாலன், பத்திராசுவன், இளாவிரதன், இரமியன், ஏமன், குரு என்னும் ஒன்பதுபேருக்கு நாவற்றீவை ஒன்பதுகண்டமாகப் பகிர்ந்துகொடுத்தனன், அவர்களுள் பாரதன் தனது குமரியென்னும் புத்திரியோடு இந்திரன், கசேருகன், தாமிரபன்னன், கபத்தி, நாகன, சவுமியன், காந்தருவன், வருணன் என்னும் எட்டுப்புத்திரருக்கும் தனது கண்டத்தை ஒன்பதுகண்டமாக்கித் தந்தமையால் பாரதவருடம் எனப் பெயர்பெற்றது. குமரித்தீவு முதலியன கண்டம் எனப் பெயர்பெற்றன. வருடம் பெரும்பிரிவு. இவற்றைச் சிவதருமோத்தரம் கோபுரவியலிலும், காந்தம் அண்டகோசப் படலத்திலுங் காண்க. அது குமரிகண்டம், இந்திரகண்டம், சேருககண்டம், தாமிரகண்டம், கபத்திக்

க்ண்டம், நாககண்டம், சவுமியகண்டம், காந்திருவகண்டம், வருணகண்டம், என ஒன்பதுகண்டமாக உள்ளது. அவற்றுள் குமரிகண்டம் ஓராயிரயோசனை யள வும், அவ்வாறே ஏனையகண்டங்களும் ஒவ்வோராயிரயோசனை யளவு முடைமை யால் ஐஞ்ஞூற்றிரட்டியாமெல்லைத்தாகிக் கடங்கெழுகுமரிகண்டம் எனவும், கும ரிகண்டத்துக்கு அப்பால் இந்திரகண்டமுதலிய கண்டங்களைதலால் கடந்து என வும், அக்கண்டம்போல ஒவ்வொருகண்டமும் ஒவ்வோராயிரயோசனை விசாலமு டைமையால் அதுபோலெட்டுத்தடங்கெழுகண்டங்கொண்ட பாரதவருடம் எனவு ங்கூறினார். குமரிகண்டம் தெற்குவடக்கிருக எழுமலைகளையுடையது. அவற்றின்பெ யர்கள் மயேந்திரகிரி, பொதியகிரி, சையகிரி, சுத்திககிரி, விருக்குகிரி, விந்தகிரி, பாரியாத்திரகிரி.

> "உன்னதந்தென்மயேந்திரமே யுயர்மலயஞ்சையகிரி
> வின்னவிலுஞ்சுத்திகமேவிருக்குமுயர்விந்தியமே
> பன்னுபுகழ்மிகுபாரியாத்திரமேயெனப்பகர்ந்த
> வின்னகிரியேழுமுதற்குமரிதலத்திசைந்தனவே." எனவும்,

> "கங்கைமுதனதிபலவுங்காசிமுதல்பதிபலவும்
> பொங்குமயேந்திரம்பொதியமுதன்மலையும்பொருந்தியிடு
> மங்கதற்குயோசனையோராயிரமுண்டெனவறிக
> வெங்கொடியமிலேச்சரிடமெட்டிறுமெண்ணாயிரமே" எனவும்,

> "இந்திரமேசேருகமேதாமிரமேயெழிற்கபத்தி
> சந்துமலிநாகமதேசவுமியமேகாந்திருவ
> மந்தமலிவாருணமேயெனவெட்டுமதித்திடுக
> இந்தவளவெனைநிலத்துங்கிரிவிரிபீராயிரமே"

எனவும வருதலை சிவதருமோத்தரம் கோபுரவியலிற்காண்க.　　(உ0)

> யாவையுமீன்றுடன்னையின்றபொன்னிமயந்தன்னைத்
> தாவியப்புறம்போய்ப்போகந்ததும்புகிம்புருடகண்ட
> மேவியங்கதுநீத்தேமவெற்படைந்ததுபின்னாக
> வோவியப்புறத்துத்தோன்றுமரிவருடத்தையுற்று.

(இ-ள்.) யாவையும் ஈன்றாள் தன்னை ஈன்ற பொன் இமயம் தன்னை தாவி அப்புறம் போய் - எல்லாவறறையும் பெற்றருளிய உமையம்மையைப்பெற்ற பொ ன்னிறைந்த இமயமலையைக்கடந்து அப்புறமசென்று, போகம் ததும்பு கிம்புருட கண்டம் மேவி அங்கு அது நீத்து-போகமிகக கிம்புருடகண்டத்தை அடைந்து அக் கண்டத்தினின்றும் நீங்கி, ஏம வெற்பு அடைந்து - ஏமமலையையடைந்து, அதுபின் னாக ஓவி-அந்த ஏமமலை பிற்படக்கழித்து, அப்புறத்து தோன்றும் அரிவருடத்தை உற்று - அந்த ஏமமலைக்கு அப்புறத்துததோன்றும் அரிவருடகண்டத்தையடைந்து.

இமயகிரிக்கும் ஏமகிரிக்கும் இடையிலுள்ளபாகம் கிம்புருடகண்டம் ஆத லால் பொன்னிமயந்தன்னைத்தாவி யப்புறம்போய்ப் போகந்ததும்பு கிம்புருடகண் டமேவி யங்கது நீத்தேமவெற்படைந்து எனவும், ஏமகிரிக்குவடக்கு நிசதகிரிக்குத் தெற்கு அரிவடரும் ஆதலால் அதுபின்னாக - ஓவியப்புறத்துத்தோன்றும் அரிவரு டத்தையுற்று எனவுங் கூறினார்.

"இமகிரிக்குந்தென்கடற்குமிடைப்பாகம்பாரதமே
யிமகிரிமற்றேமகிரியிடைப்பாகங்கிம்புருடம்
அமைகிலவுநிசதகிரித்தென்பாகமரிவருடம்
இமையவருமிருந்தபெருவரைச்சாரலிளாவிரதம்"
என ஷை நீயலில்வருதலைக்காண்க. (உக)

உற்றதுகழிந்தப்பாற்போய்நிசதவெற்பொழிந்துசம்புப்
பொற்றருக்கனிகால்யாறுபோகிளாவிரதகண்டத்
துற்றனன்கண்டான்மூன்றூரொருங்கடுஞான்றுகூனி
வெற்றிவெஞ்சிலையாய்நின்றவெற்பினைமலயவெற்பன்.

(இ-ள்.) உற்ற அது கழிந்து - (தாம்) அடைந்த அவ்வரிவருடத்தைக்கடந்து, அப்பால் போய்-அப்புறஞ்சென்று, நிசத வெற்பு ஒழிந்து-நிசதமலையினின்றுநீங்கி, பொன் சம்பு தரு கனிகால் யாறு போகு இளாவிரத கண்டத்து - பொன்மயமாகிய சம்புவிருக்ஷத்தின் கனிசிந்தும் சாறாகிய ஆறுசெல்லும் இளாவிரதகண்டத்தை, மலயவெற்பன் உற்றனன் - பொதியமலைக்கரசராகிய உக்கிரகுமாரபாண்டியரடைந்து, மூன்று ஊர் ஒருங்கு அடு ஞான்று கூனி வெற்றி வெம் சிலையாய் நின்ற வெற்பினைகண்டான் - திரிபுரங்களை யொருசேர எரித்தருளுங்காலையில் வளைந்து வெற்றி வாய்ந்த கொடியவில்லாய்நின்ற மகமேருவைப்பார்த்தார்.

நிசதகிரிக்குத்தென்பாகம் அரிவருடம் ஆதலால் அது கடந்து எனவும், அவ்வரிவருடத்துக்கப்பால் நிசதகிரி ஆதலால் அப்பாற்போய் நிசதவெறபொழிந்துஎனவும், மகமேருவின்சாரல்முற்றும் இளாவிரதகண்டம் ஆதலால் சமபுப்பொற்றருக்கனி கால்யாறு போகிளாவிரதகண்டம் எனவுங் கூறினர். முனனர்க்காட்டிய உதாரணத்தில் "இமையவருமிருந்தபெருவரைச்சாரலிளாவிரதம்" என்பதனாலுணர்க.

வெம்படைமறவர்சேனைவெள்ளநீத்தேகித்தென்பாற்
சம்புவின்கனியின்சாறுவலம்படத்தழுவியோடு
மம்பொனீராறுமாற்றினருகுபொன்மயமாய்நிற்கும்
பைம்புனங்கானகோக்கிவளைந்துதென்பால்வந்தெய்தா.

(இ-ள்.) வெம்படை மறவர் சேனை வெள்ளம் நீத்து ஏகி - கொடிய ஆயுதங்களையேந்திய வீரர்சேனைவெள்ளத்தினின்றும் நீங்கித் (தனித்துச்) சென்று, தென்பால் சம்புவின் கனியின் சாறு வலம்பட தழுவி ஓடும் அம்பொன் நீர் ஆறும் - தென்பாலினின்ற நாவலின்கனியின்சாறனது வலப்பாற்படத்தழுவியோடாநின்ற அழகிய பொன்மயமாகிய நீர்நிறைந்த ஆற்றையும், ஆற்றின் அருகு பொன்மயமாய் நிற்கும் பைம்புனம் கானம் நோக்கி - அவ்வாற்றின் பக்கத்துப் பொன்மயமாய் நிற்கும் பசியகொல்லைகளையும் காடுகளையும்பார்த்து, வளைந்து தென்பால் வந்து எய்தா - சுற்றி அந்தச்சம்புநின்ற தென்பக்கத்தைவந்தடைந்து.

மேருமலைக்கு உறுதியாகக் கீழ்த்திசையில் மந்தரபர்வதமும், தென்றிசையில் கந்தமாதனபர்வதமும், மேற்றிசையில் விபுலபர்வதமும், வடதிசையில் பாருசுவவத்திரிபர்வதமுமுள. அவற்றில் முறையாகக் கடம்பு, நாவல், அரசு, ஆல் என்னும் விருக்ஷங்களும், அருணம், மானதசரசு, சிதோதம், மகாமடு என்னுந் தடங்களுமுள. அவற்றுள் கடம்பின்பழச்சாற்றினின்றும் ஆறுகள் புறப்பட்டுக் கீழ்த்திசை

யிற்பாயும். அரசமாத்தினின்று பால்முதலியன பஞ்சதாரையாகப் பெருக்கெடுத்து மேற்றிசையிற்பாயும். ஆலமாத்தின் சாகையினின்று உண்டான பால், தயிர், நெய், தேன்முதலியன பெருக்கெடுத்து வடதிசையிற்பாயும். தென்பால்நின்ற நாவற்பழச்சாறு பொன்மயமாய்ப்பெருக்கெடுத்து மேருவை வலமாகச்சூழ்ந்துவந்து அந்நாவன்மூலத்தைத்திரும்பவந்தடைதலால் தென்பால் சம்புவின்கனி கால்யாறு வலம்படத்தழுவியோடு மம்பொனீராறும் எனவும், அந்த ஆறுசென்றவழித் தாமுஞ்சென்று அந்நாவன்மரத்தருகுவந்தமையால் வளைந்து தென்பால்வந்தெய்தா எனவுங்கூறினர். "மறுவறுமக்கனித்திநீர்வரையதனைவலம்வருமே" எனச் சிவதருமோத்தரத்தில் கோபுரவியலில்வருஞ் செய்யுளாலுமிற்காண்க. (உக)

அவ்வரையரசைநோக்கிவரைகளுக்கரசேயெந்தை
கைவரிசிலையேபாரின்கலைகணேயளவில்வானந்
தைவருசுடருங்கோளுநாள்களுந்தழுவிச்சூழுந்
தெய்வதவரையேமேலைத்தேவராலயமேயென்று.

(இ-ள்.) அ வரை அரசை நோக்கி - அம்மலைக்கரசாகிய அதிதேவதையைப் பார்த்து, வரைகளுக்கு அரசே - எல்லாமலைகளுக்கும் ஓர் அரசே, எந்தை கை வரி சிலையே - என் தநதையாகிய சிவபெருமான்கையிலேநதிய கட்டமைந்தவில்லே, பாரின் கலை கணே - உலகிற்கோர் பற்றுக்கோடே, அளவில் வானம் தைவரு சுடரும் கோளும நாள்களும் தழுவி சூழும் தெய்வத வரையே - வரம்பில்லாத வானத்திற்றவழும் சந்திரசூரியரும் மறறைகிரகங்களும் நக்ஷத்திரங்களுந் தழுவிச்சூழ்ந்துவருந் தெய்வத்தன்மையையுடைய மலையே, மேலை தேவர் ஆலயமே என்று - விண்ணுலகிலுள்ள தேவர்கள் வாசஞ்செய்யும் இடமே என்று.

உலகுநிலை தளராதிடைநிற்றலால் பாரின்கலைகணே எனவும், சூரியன் முதலிய நவகோள்களின் தேர்கலைத் துருவன்காற்றென்னுங்கயிற்றிற்பிணித்து மேருவை வலம்வர இயக்குதலால் தழுவிதைவருசுடருங் கோளுநாள்களுந் தழுவிச்சூழுந் தெய்வதவரையே எனவும், இந்திரன் முதலிய திக்குப்பாலகரும் இவர்கள் நடுவாகப் பிரமன் முதலிய மூவரும் அதன் கொடுமுடிகளில் வசித்தலால் மேலைத்தேவராலயமே எனவுங் கூறினார். அக்கொடுமுடிகளாவன - கிழக்கில் அமராவதியும், அக்கினியில் தேசோவதியும், தெற்கில் சம்யமனியும், நிருதியில் கிருட்டிணாங்காரவதியும், மேற்கில் சுத்தவதியும, வடமேற்கில் கெந்தவதியும, வடக்கில் மகோதயபுரியும், ஈசானத்தில் எசோவதியும், இவற்றினிடையில பிரமன் வசிக்கும் இடம் மனோவதியும், அதற்கு மேற்றிசையில் திருமால் வசிக்குமிடம் வைகுண்டமும், வடகிழக்கில் உருத்திரமூர்த்தி வசிக்குமிடம் சோதிட்கமுமாம். காமவதி முதலிய கொடுமுடிகளில் தேவகன்னியர் முதலியோர் வசிப்பார்கள.

"நீணிறக்கலிங்கம்புனைந்தவெஞ்சனியின்பரியிருநான் குடைநெடுந்தேர்
மாநிறவிருடபினியனறதாமிராகுககேதுவின்மணிநெடுந்தடந்தே
ருனமின்றியங்கும்வாம்பரியவ்வாறுமெனவுரைப்பர்மற்றிவரைப்
பான்மையிற்றுருவன்காற்றெனுங்கயிற்றிற்பணிவரைவலம்வரவியக்கும்."
எனக்கூர்மபுராணத்திலும்,

"இந்திரனமுதலாயவெண்டிசைப்பாலருமவற்றிற்
றந்தமக்குத்தக்கதிசைக்கொடுமுடியிற்றங்கிடுவ

ரந்தவனாயெட்டினுக்குரவிவாகவணியுறவே
முந்திமூனைத்தெழுசிகரமூன்றுளவேமூவர்க்கும்."

எனவருஞ் சிவதருமோத்தரச்செய்யுளாயிலும்,

"மேருவரையதனுநடுப்பிரமன்மூதூர்மிக்கமனோவதியதற்குமேலைத்திக்கி
னுரணன்வாழ்வைகுண்டம்வடகீழ்பாலிறுதனமர்சோதிட்கம்."
எனக்காந்தபுராணத்திலும் காண்க. (உச)

மாணிக்கமிமைக்கும்பூணுன்விளித்தலும்வரைக்குவேந்தன்
பாணித்துவரவுதாழ்ப்பப்பாகசாதனனைவென்றோ
னாணித்தன்சினமுமேருநகைவரைச்செருக்குமாறச்
சேணுற்றசிகரந்தன்னிற்செண்டினலடித்துநின்றான்.

(இ-ள்.) மாணிக்கம் இமைக்கும் பூணுன் விளித்தலும் - மாணிக்கம் விளங்கும் ஆபரணமணிந்த உக்கிரகுமாரபாண்டியர் அழைக்க, வரைக்கு வேந்தன் வரவு பாணித்து தாழ்ப்ப-மலைக்கரசாகிய மகமேருவின்வருகை தாமதித்தலால், பாக சாதனனை வென்றோன் நாணி-இந்திரனைவென்ற அப்பாண்டியர்வெட்கி, தன் சினமும் நகை மேருவரை செருக்கும் மாற - தமதுகோபமும் விளங்கு மேருமலையின் இறுமாப்பும் ஒழிய, சேண் உற்ற சிகரம் தன்னில் செண்டினால் அடித்து நின்றான்-விண்ணுலகத்தை யளாவிய (அம்மகமேருவின்)சிகரத்தைச் செண்டாயுதத்தால் அடித்துநின்றார்.

இல்-உருபுமயக்கம். (உரு)

அடித்தலுமசையாமேருவசைந்துபொற்பந்துபோலத்
துடித்தததுசிகரபந்திசுரர்பயில்மாடப்பந்தி
வெடித்தனதருணபானுமண்டிலம்விண்டுதூளாய்ப்
படித்தலைதெறித்தாலென்னப்பன்மணியுதிர்ந்தவன்றே.

(இ-ள்.) அடித்தலும் -(செண்டாயுதத்தால்) அடிக்க, அசையாமேரு அசைந்து பொன் பந்துபோல துடித்தது - ஒருக்காலுஞ்சலியாத மகமேருசலித்துப்பொன்னாற்செய்த பந்துபோலத் துடித்தது, சிகரபந்தி சுரர்பயில் மாடம் பந்தி வெடித்தன-சிகரவரிசைகளும் தேவர்கள் வாசஞ்செய்யும் மாடவரிசைகளுஞ்சிதறி, தருண பானு மண்டிலம் விண்டு தூளாய் படிதலை தெறித்தால் என்ன - இளஞ்சூரியமண்டிலஞ்சிதறித் துகளாய்ப் பூமியிற்சிந்தியதுபோல, பல் மணி உதிர்ந்த - பலரத்தினங்களையுஞ்சிந்தின.

சிகரபந்தி என்றது ஆயிரங்கொடுமுடிகளை. சுரர்பயில் மாடப்பந்தி என்றது அக்கொடுமுடிகள்தோறும் தேவர்கள்வசித்தலின் சிகரபந்திசிந்தும்போது அவர்வசிக்கும் மாடபந்தியுஞ் சிந்தும் ஆதலின் சிகரபந்தியோடு மாடப்பந்தியையும் உடனெண்ணினார். (உசா)

புடைவரைக்குலங்களெட்டும்புறந்தழீஇக்கிடக்குஞ்செம்பொ
னடைகலோர்நான்குநான்குகிடங்கருமலர்ந்தநான்கு
தடமலர்ப்பொழிலுநான்குதருக்களுஞ்சலித்தவம்மா
வுடையவனிடையூறுற்றாலடுத்தவர்க்குவகையுண்டோ.

(இ-ள்.) புடைவரை குலங்கள் எட்டும் - (மேருவின்) பக்கஞ்சூழ்ந்த மலைக் குலங்களெட்டும், புறம் தழுவி கிடக்கும் ஓர் நான்கு செம்பொன் அடைகல்லும்- புறந்தழுவிக்கிடக்கும் நான்கு செம்பொன்னாகிய அடைகற்களும், நான்கு கிடங்க ரும் அலர்ந்த மலர் நான்கு தடமும் பொழிலும் நான்கு தருக்களும் சலித்த-நான்கு கிடங்குகளும் மலர்ந்த மலர்க்கொத்துகளையுடைய நான்கு தடாகங்களும் நான்கு சோலைகளும் நான்குவிருக்ஷங்களுஞ்சலித்தன, உடையவன் இடையூறு உற்றால் அடுத்தவர்க்கு உவகை உண்டோ - எசமானன் வருத்தமடைந்தால் அவனை அடுத்து நின்றவர்களுக்கு மகிழ்ச்சி ஒருபொழுதும் உண்டாகுமோ (இல்லையென்றபடி.)

மேருவின்பக்கத்துள்ள எட்டுமலைகளாவன - தெற்கில் நிசதகிரியும், அதற் குத்தெற்கில் ஏமகூடகிரியும், அதற்குத்தெற்கில இமயகிரியும், மேருவுக்குவடக்கில் நீலகிரியும், அந்நீலகிரிக்குவடக்கில் சுவேதகிரியும், சுவேதகிரிக்குவடக்கில் சிருங்ககி ரியும்,மேருவிற்குமேற்கில் கெந்தமாதனகிரியும், மேருவிற்குக்கிழக்கில் மாலியவான் கிரியுமாம். செம்பொனடைகலோர் நான்கும், நான்குதருக்களும், நான்குதடங்க ளும், முன்னர்க்கூறியிருக்கின்றும். நான்குகிடங்குகளாவன-கிழக்கில் சயித்திரக்காநடு வில் தாமரைகள் நிறைந்த நாகம் என்னும் ஓடையும், தெற்கில் விசித்திரைக்காநடு வில் குமுதோற்பலங்கள்நிறைந்த மானதசரசு என்னும் ஓடையும், மேற்கில் வைப் பிரசநடுவில் செந்தாமரைநிறைந்த விமலோதகமென்னும ஓடையும், வடக்கில் திரு தாக்கியநடுவில் நீலோற்பலநிறைந்த மனோரதமென்னுமோடையுமாம். நான்குபொ ழில்களாவன - கிழக்கில் சயித்திரமும், தெற்கில் விசித்திரையும், மேற்கில் வைப்பி ரசமும், வடக்கில் திருதாக்கியமுமாம். இவற்றைச்சிவதருமோத்தரம் கோபுரவிய லிலும் காந்தம் அண்டகோசப்படலத்திலுங்காண்க. தடம் என்பதனிறுதியில் எண் ணும்மைதொக்கது. (௨௭)

> புடைத்தபின்மேருத்தெய்வம்புடைக்குலவரையெட்டென்னப்
> படைத்தவெண்டோளுநான்குமுடியுமேற்படுவெண்சோதி
> புடைத்தனிக்குடையுங்கொண்டவுருவினோடெழுந்துநாணிக்
> கிடைத்தது கருணைவேந்தன்கொர்சினந்தணிந்துநோக்கா.

(இ-ள்.) புடைத்தபின் - செண்டாயுதத்தாலடித்தபின், மேரு தெய்வம்-மக மேருவினதிதேவதை, புடை குலவரை எட்டு என்ன படைத்த எண் தோளும் - (தனது) அயலிலுள்ள அட்டகுல பர்வதங்களைப்போலக்கொண்ட எட்டுப்புயங்களை யும், நான்குமுடியும் - நான்குதலைகளையும், மேல்படு வெண் சோதி உடை தனி கு டையும் - மேலேகவிக்கும் வெள்ளியகிரணத்தையுடைய ஒப்பில்லாதகுடையையும், கொண்ட உருவினோடு எழுந்து நாணி கிடைத்தது - கொண்டவுருவத்தோடெழுந் து நாணங்கூர்ந்து எதிர்ப்பட்டது, கருணை வேந்தன் கொர் சினம் தணிந்து நோக் கா - கிருபையையுடைய உக்கிரகுமாரபாண்டியர் மேலெழுந்துபொங்கிய கோப மாறிப்பார்த்து. (௨௮)

> இத்தனை வரவுதாழ்த்ததென்னெனமேருத்தெய்வம்
> வித்தகநம்பிகேட்டிமீனெடுங்கண்ணியோடும்
> பைத்தலையரவம்பூண்டபரனையிப்படிவங்கொண்டு
> நித்தலும்போகிப்போகிவழிபடுநியமம்பூண்டேன்.

(இ-ள்.) இத்தனை வரவு தாழ்த்தது என்ன என - இவ்வளவுபோது உன்வ ருகை தாமதித்தகாரணம் என்னென்றுவினவ, மேருதெய்வம் - மேருவினதிதேவ

தை, வித்தகம் நம்பி கேட்டி - சீதரப்பாமுடைய பாண்டியனேகேளாய், மீன் நெடும் கண்ணியோடும் பைதலை அரவம் பூண்ட பரனை- அங்கயற்கண்ணியோடும் படம்பொருந்திய தலையினையுடைய சர்ப்பமணிந்த சோமசுந்தரக்கடவுளை, இ படிவம் கொண்டு நித்தலும் போகி போகி வழிபடு நியமம் பூண்டேன்-இவ்வுருவங்கொண்டு தினமும் சென்று சென்று வழிபட்டுவணங்கும் நியமத்தை மேற்கொண்டிருந்தேன்.

இன்றுகேட்டிலையோவையவேந்திழையொருத்திகாமந்
துன்றுமாகடலின்மோகச்சுழித்தலைப்பட்டுவெள்ளி
மன்றுளாடியபொற்பாதம்வழிபடன்மறந்துதாழ்ந்து
நின்றுளேனினையதீங்கினிமித்தினாலடியும்பட்டேன்.

(இ-ள்.) ஐய இன்றுகேட்டிலையோ - ஐயனே இன்றைத்தினம் நடந்தசெய்தியைக் கேட்கவில்லையா, ஏந்திழை ஒருத்தி காமம துன்று மாகடலில் மோகம் சுழித்தலை பட்டு - ஒருபெண்ணினுடைய காமமாகிய மிக்கபெரியகடலிலுள்ள மோகமாகிய சுழியிலழுந்தி, வெள்ளி மன்றுள் ஆடிய பொன்பாதம் வழிபடல் மறந்து தாழ்ந்து நின்றுளேன் - வெள்ளியம்பலத்துளாடிய பொன்போலும் அரியதிருவடிகளை வழிபட்டுவணங்கல் மறந்து தாமதித்து நின்றேன், இனைய தீங்கின் நிமித்தினால் அடியும் பட்டேன் - (சோமசுந்தரக்கடவுளின் திருவடிபிழைத்த) இத்தீங்கின் காரணத்தால் நின்னால் அடியும் உண்டேன். (௯0)

திருவடிபிழைத்ததீங்குதீர்த்தனையிதனிலையன்
றருவதோருறுதிதானுந்தக்கதோர்கைம்மாறென்னால்
வருவதுமுண்டாங்கொல்லோமற்றதுநிற்கமன்றற்
பருவரைமார்பவந்தபரிசென்கொல்பகர்தியென்ன.

(இ-ள்.) திருவடி பிழைத்த தீங்குதீர்த்தனை - சோமசுந்தரக்கடவுளின் திருவடிக்கு (அடியேன்) பிழைத்த தீங்கினையொழித்தாய், ஐயன் இதனில் தருவது ஓர் உறுதி தானும் - ஐயனே இதைப்பார்க்கிலும் நீ செய்யு மொருபயனும், என்னால் தக்கது ஓர் கைம்மாறு வருவதும உண்டாம் கொல்லோ-அதற்கு என்னால் பிரதியாகச் செய்யத்தக்கதாகிய ஓர் பிரதிப்பகாரமும் பெறுதல் உளதோ (இல்லையென்றபடி) அது நிற்க - அந்தச்செய்திநிற்க, மன்றல் பருவரை மார்ப வந்த பரிசு என்கொல் பகர்தி என்ன-வாசமிக்க பருததமலைபோலத் (திண்ணிய)மார்பையுடைய பாண்டியனே (இங்கு) வந்ததன்மையாது கூறுயென்றுவினவ.

ஐயன்-அண்மைவிளி. (௯௧)

மன்னவன்வெறுக்கைவேண்டிவந்தனனென்றுனைய
வுன்னதுபுலத்தோர்க்கேற்பவுரைபடுமாற்றதாய
பொன்னவிர்தேமாநீழற்புதைபடக்கிடக்குஞ்செம்பொ
னென்னவங்கையாற்சுட்டிக்காட்டியதெரிபொற்குன்றம்.

(இ-ள்.) மன்னவன் வெறுக்கை வேண்டி வந்தனன் என்றான் - உக்கிரகுமாரபாண்டியர்பொருளை விரும்பிவந்தோமென்றார், ஐய உன்னது புலத்தோர்க்கு ஏற்ப உரைபடு மாற்றது ஆய செம் பொன் - ஐயனே உனதுநாட்டிலுள்ளோர்க்குப் பொருந்த உரைக்கப்படுமாற்றுள்ள செம்பொன், பொன் அவிர் தேமா நீழல் புதை

பட கிடக்கும் என்ன - போன்போலவிளங்கும் தளிர்களையுடைய மாமர்த்தி னிழலின்கீழ் (ஓர் அறையில் ஓர்பாறையால்) மூடுபட்டுக்கிடக்காநிற்குமென்று, எரி பொன் குன்றம் அங்குலியால் சுட்டி காட்டியது - விளக்காகின்ற பொன்மலையினதிதேவதை (தனது) அங்கைவிரலால் சுட்டிக்காட்டியது.

மாற்றதிகமுள்ள பொன்னும் அதனிடத்துளதென்பார் உன்னதுபுலத்தோர்க்கேற்ப உரைபடுமாற்றதாய பொன் எனக்கூறியதெனவுரர். (௯௨)

மின்னகுவேலான்முந்நீர்வேலையைவணககங்கண்டோன்
பொன்னறைமருங்கிற்போகிபொத்தியபாறைநீக்கித்
தன்னவாவளவிற்றூயதமனியமுகந்துமூடிப்
பின்னதுந்தன்னதாகப்பெயரிலச்சினையுநீட்டா.

(இ-ள்.) மின் நகு வேலால் முந்நீர் வேலையை வணக்கம் கண்டோன்-மின்போல விளங்கும் வேலினால் கடற்றெய்வமாகிய வருணனைத் தனதடிக்கீழ்ப்படுத்திய உக்கிரகுமாரபாண்டியன், பொன் அறை மருங்கில் போகி - பொன்னிறைந்த அறையின் அயலிற்சென்று, பொத்திய பாறை நீக்கி தன் அவா அளவிற்று ஆய தமனியம் முகந்து மூடி - அதன்மேல் மூடியபாறையைநீக்கி தமது ஆசையினளவினதாகப் பொன்னை யெடுத்து அப்பாறையைமூடி, பின்னதும் தன்னது ஆக பெயர் இலச்சினையும் நீட்டா - எஞ்சியதையும் தமமுடைய பொருளாகத் தமதுபெயர்முத்திரையையும் அப்பாறைமேலெழுதி. (௯௩)

மின்றிகழ்மணிப்பூண்மார்பனீண்டுதன்றானையோடுந்
தென்றிசைநோக்கிப்பாகன்செலுத்தமான்றடந்தேரூர்ந்து
பொன்றிகழ்வரையும்போகபூமியும்பிறவுநீத்து
நன்றிகொண்மனிதர்வைப்பினண்ணுவானணைறுமெல்லை.

(இ-ள்.) மின் திகழ் மணி பூண் மார்பன் தன் தானையோடு மீண்டு - மின்னல்போலவிளங்கும் இரத்தினங்குயிற்றிய ஆபரணமணிந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர் தமதுசேனையோடும் அங்குநின்றுந்திரும்பி, தென் திசை நோக்கி பாகன் செலுத்த மான் தடம் தேர் ஊர்ந்து - தென்திசையைநோக்கிப் பாகன்செலுத்தக் குதிரைபூண்ட பெரியதேரைநடாத்தி, பொன் திகழ் வரையும் போக பூமியும் பிறவும் நீத்து - பொன்மலையையும் (அதனைச்சூழ்ந்த) போகபூமியையும் மற்றுள்ள நாடுகளையும் கழித்து, நன்றி கொள் மனிதர் வைப்பில் நண்ணுவான் - நன்மைமிக்க மனிதர்கள் வசிக்கும் நாடுகளில் வரத்தொடங்கினர், நணுறும் எல்லை-வரும்போது.

மகமேருவைச்சூழ்ந்த எல்லைகளில் போகபூமி அறுவகைப்படும். அவையாவன - ஆதியரிவஞ்சமும், நல்லரிவஞ்சமும், ஏமதவஞ்சமும், ஏமவஞ்சமும், தேவகுருவஞ்சமும், உத்தரகுருவஞ்சமுமாம். (௯௪)

மாத்திமர்விராடமன்னர்மாளவர்தெலுங்கதேயப்
பார்த்திபர்பிறருந்தத்தம்பதிதொறும்வரவுநோக்கித்
தேர்த்திகழணிகத்தோடுஞ்சென்றெதிர்முகமன்செய்யத்
தார்த்திருமார்பன்கன்னித்தண்டமிழ்நாடுசார்ந்தான்.

(இ-ள்.) மாத்திமர் விராடமன்னர் மாளவர் தெலுங்கதேயப் பார்த்திபர் பிறரும் தத்தம் பதிதொறும் வரவு நோக்கி - மாத்திமநாட்டரசரும் விராடநாட்டர

சரும் மாளவநாட்டரசரும் தெலுங்கநாட்டரசரும் ஏனைநாட்டரசரும் தத்தமக்குரிய நாடுகள்தோறும் (தமது) வருகையை எதிர்நோக்கி, தேர் திகழ் அணிகத்தோடும் எதிர் சென்று முகமன் செய்ய - தேரொடுகூடிவிளங்குஞ் சேனையோடும் எதிர்கொண்டுசென்று உபசாரஞ்செய்ய, தார் திரு மார்பன் கன்னி தண் தமிழ் நாடு சார்ந்தான் - மாலையாற்பொலிவுமிக்க மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியர் ஏற்று பாண்டிநாடாகிய தண்ணியதமிழ்நாட்டை அடைந்தார். (௩௫)

கன்னிப்பொன்னெயில்சூழ்செம்பொற்கடிநகர்க்கணியனாகிப்
பொன்னிற்செய்திழைத்தநீள்கோபுரத்தினைக்கண்டுதாழ
வுன்னித்தேரிழிந்தெட்டோடைந்துறுப்பினாற்பணிந்தெழுந்து
வன்னிச்செஞ்சுடர்க்கணெற்றிமன்னவன்மதுரைசார்ந்தான்.

(இ-ள்.) நெற்றி வன்னி செம் சுடர் கண் மன்னவன் - சிவபெருமானுதலிலுள்ள தீக்கண்ணிற்றோன்றிய உக்கிரகுமாரபாண்டியர், கன்னி பொன் எயில் சூழ் செம்பொன் கடிநகர்க்கு அணியன் ஆகி - அழியாத பொன்னாலாகிய மதில்சூழ்ந்த செம்பொன் நிறைந்த காவல்பூண்ட மதுராநகர்க்குச் சமீபித்தவனாகி, பொன்னில் செய்து இழைத்த நீள் கோபுரத்தினை கண்டு தாழ உன்னி-பொன்னாற்செய்து மணிகளிழைத்த நீண்டகோபுரத்தினைக்கண்டு வணங்கக்கருதி, தேர் இழிந்து எட்டோடு ஐந்து உறுப்பினால் பணிந்து எழுந்து - (தமது) தேரினின்றும் இறங்கி எட்டுறுப்பும் ஐந்துறுப்பும் நிலத்திறதோயப் பணிந்தெழுந்து, மதுரை சார்ந்தான் - மதுரைத்திருநகரடைந்தார்.

கோபுரம் தூல இலிங்கமாதலால் நீள்கோபுரத்தினைக்கண்டு தாழ என்றார். அட்டாங்கத்திற்கும், பஞ்சாங்கத்திற்கும், எட்டுறுப்பும், ஐந்துறுப்பும் ஏதுக்களாதலால் எட்டைந்துறுப்பினால் பணிந்தெழுந்தென்றார். ஓடு-எண்ணிடைச்சொல். (௩௬)

அறத்துறையந்தணாளர்துறந்தவராரன்றாள்பற்றிப்
புறத்துறையகன்றசைவபூதியர்புனிதன்கோயிற்
றிறத்துறையகத்துத்தொண்டர்திரண்டெதிர்கொள்ளமுத்தி
னிறத்துறைவையைநீத்துநெடுமதில்வாயில்புக்கான்.

(இ-ள்.) அறத்துறை அந்தணாளர் - தருமநெறியிற்செல்லும் பிராமணரும், துறந்தவர் - துறவினரும், அரன் தாளபற்றி புறம் துறை அகன்ற சைவம் பூதியர்-சிவபெருமான் திருவடிப்புணைபற்றிப் புறச்சமயமாகிய கடலைக்கடந்த சைவப்பெருஞ்செல்வவாழ்வினரும், புனிதன் கோயில் திறத்துறை அகத்து தொண்டர்-சிவபெருமான் திருக்கோயிலினிகழும் நித்தமுதலியவாகக்கூறப்பட்ட விதியினின்ற அகம்படித்தொண்டர்களும், திரண்டு எதிர்கொள்ள - ஒருசேரத்திரண்டு எதிர்கொள்ள, முத்தின் நிறத்துறை வையை நீத்து நெடுமதில் வாயில் புக்கான் - முத்தின் ஒளிமிக்க நீர்த்துறையையுடைய வையையாற்றைக்கடந்து விண்ணுலகையளாவிய மதிலின் வாயிலிற்புகுந்தார். (௩௭)

கொங்கலர்கோதைமாதர்குங்குமம்பனிப்பச்சிந்து
மங்கலமறுகினேகிமறைகள்சூழ்கோயிலெய்தித்
தங்கணாயகனைச்சூழ்ந்துதாழ்ந்தெழுந்தேத்திப்போந்து
திங்களூர்குடுமிச்செல்வத்திருமணிக்கோயில்புக்கான்.

(இ-ள்.) கொங்கு அலர் கோதை மாதர் குங்குமம் பனிப்ப சிந்தும் மங்கலம் மறுகின் ஏகி - வாசம்பரந்த கூந்தலையுடைய பெண்கள் குங்குமநீரைத் தண்மைசெய்யத்தெளிக்கு மங்கலநிறைந்த வீதியிற்சென்று, மறைகள் சூழ் கோயில் எய்தி - வேதகோஷங்கள் நிறைந்த திருக்கோயிலையடைந்து, தங்கள் காயகளை சூழ்ந்து தாழ்ந்து எழுந்து ஏத்தி போந்து - தமது இறைவனுகிய *சோமசுந்தரக் கடவுளைப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கி எழுந்து துதித்து அங்குநின்றுந் திரும்பி, திங்கள் ஊர் குடுமி செல்வம் திருமணி கோயில் புக்கார் - சந்திரன் தவழுஞ் சிகரத்தையுடைய செல்வமிக்க பொலிவையுடைய இரத்தினங்கள்குயிற்றிய(தமது)கோயிலையடைந்தார். (௩௮)

பொன்மலைக்கடவுளீந்தபுண்ணியநிதியையந்த
நன்மலைமானக்கூப்பிநல்கிப்பல்குடியுமோம்பித்
தென்மலைக்கிறைவன்றெய்வந்தென்புலவாணரொக்க
றன்மனைவிருந்துகாத்துத்தருக்கினிருக்குநாளில்.

(இ-ள்.) தென்மலை கிழவன் - பொதியமலைக்கிறைவராகிய உக்கிரகுமார பாண்டியர், பொன்மலை கடவுள் ஈந்த புண்ணியம் நிதியை - மகமேருவின் அதிதேவதைதந்த தருமவழியா லீட்டிய பொருளை, அந்த நல் மலை மான கூப்பி நல்கி பல் குடியும் ஓம்பி - அந்த நல்ல பொன்மலையையொப்பக் குவித்துக் கொடுத்துப் பல குடிகளையும் பாதுகாத்து, தெய்வம் தென்புலவாணர் ஒக்கல் தன் மனை விருந்து காத்து தருக்கினுன்-தெய்வத்தையும் தென்புலத்தாரையும் சுற்றத்தாரையும் தமது மனைக்கு வந்த விருந்தினரையும் ஓம்பி மகிழ்ச்சியோடு, இருக்கும் நாளில் - (இவ்வாறு) இருக்குங்காலையில்.

மறநிலையாற் பொருளீட்டலும் அரசர்க்குரிய செயலாதலால் புண்ணியநிதி என்றதற்குத் தருமவழியா லீட்டிய பொருள் என்றும். தென்புலவாணர் என்றது பிதிரரை. பிரமன் சத்துவவுடலெடுத்துத் தேவரையும் பிதிரரையும் படைத்தமையால் தெய்வம் தென்புலவாணர் என வுடனெண்ணினுர். இல்வாழ்க்கையர் தென்புலத்தார் முதலாயினேரைப் பாதுகாத்தல் தலையாகிய*கடனுதலால் தெய்வந் தென்புலவாணரொக்கல் தன் மனை விருந்து காத்து என்றார். "தென்புலத்தார்தெய்வம் விருந்தொக்கறுனென்றுங்-கைம்புலத்தாறேம்பறலை" என்ற திருக்குறளானுணர்க.

ஐவினைநடத்துமீசனுணையானடக்குங்கோளுஞ்
செய்வினைத்திரிவுமாறத்தென்னனுடெங்குமாரி
பெய்வினையுடையதாகிப்பெருவளம்பகிர்ந்துநல்க
வுய்வினையுடையவாகியுயிரெலாந்தழைத்தவன்றே.

(இ-ள்.) ஐவினை நடத்தும் ஈசன் ஆணையால் நடக்கும் கோளும்-(ஆன்மாக்களின்பொருட்டுப்) பஞ்சகிருத்தியங்களை நடத்தும் சிவபெருமான் ஆணைவழியால் நடக்குங் கோள்களும், செய்வினை திரிவு மாற - மழைவறங் கூரச்செய்யும் பொல்லாச் செய்கையினின்று நீங்க, தென்னன் நாடு எங்கும்-பாண்டியனுடு முற்றும், மாரி பெய் வினை உடையதாகி பெருவளம் பகிர்ந்து நல்க-மழைபெய்யுந் தொழிலையுடையதாகிப் பெரியவளங்களை உயிர்களுக்குப் பங்குசெய்து கொடுக்க, உயிர் எல்லாம் உய்வினை உடையவாகி தழைத்த - எல்லாவுயிர்களும் வருந்தும் பசிப்பிணியினின்றும் நீங்கிப் பிழைக்குஞ் செயலையுடையவாகிப் பெருகின.

ஐவ்வினை என்றது சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகங்களை. திரோபவம் அருட்சத்தியே ஆன்மாக்களுக்குப் பரிபாகம்வர ஆணவமலத்தோடு கூடிநின்று அவ்வான்மாவி னிச்சாஞானக்கிரியைகளை மறைப்பது. ஆணை என்றது அவன் சத்தியை. மழையால் எல்லா வளங்களும் உளதாதலால் மாரிபகிர்ந்து நல்க என்றார். "கெடுப்பதூஉங்கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே - எடுப்பதூஉமெல்லா மழை" என்ற திருக்குறளால் உணர்க. (சo)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

புவனியிம்முறையாற்புரந்தளித்தாரம்பூண்டபாண்டியன்றிருமகனுங்
கவனியேழறியவீரபாண்டியனென்றணிமுடிகவித்தரசளித்து
நவநிரதிசயபூரணவின்பஞானநோக்கருளியமதுரைச்
சிவனடிநிழலிற்பிளப்பறப்பழையதேசொடுநிறைந்துவீற்றிருந்தான்.

(இ-ள்.) ஆரம் பூண்ட பாண்டியன் புவனி இம் முறையால் புரந்து அளித்து - உக்கிரகுமாரபாண்டியர் நிலவுலகை இம்முறையால் பாதுகாத்து ஓம்பி, திருமகனுக்கு அவனி ஏழ் அறிய வீரபாண்டியன் என்று அணி முடி கவித்து - (தமது) செல்வப்புத்திரனை ஏழுலகுமறிய வீரபாண்டிய என்றழைத்து அழகிய முடிசூட்டி, அரசு அளித்து - (தமது) அரசியல் தந்து, நவ நிரதிசய பூரண இன்ப ஞான நோக்கு அருளிய மதுரை சிவன் அடிநிழலில் - புதிய நிரதிசயமாகிய பரிபூரண இன்பத்தைத் தந்தருளும் ஞானநோக்கினை அடியார்க்கருளும் மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரகடவுளின் திருவடிநிழலால், பிளப்பு அறபழைய தேசொடு நிறைந்து வீற்றிருந்தான் - வேறுபாடற முன்னுள்ள தேசொடு கலந்து நிறைந்து நிகரின்றியிருந்தார்.

இன்பம் ஆராத்தன்மையதாதலால் நவம் எனவும், ஆன்மபோதத்தாற் சுட்டியறிதற்கரியதாதலில் நிரதிசயம் எனவும், என்றும் ஒருபடித்தாய் நிறைதலில் பூரணம் எனவும், பாசக்ஷயம்செய்து அருளொடு கூட்டுகையால் ஞானநோக்கு எனவும், அடியார்க்கு விரைந்தருளுதலால் இறந்தகாலப் பொருள்பட அருளிய எனவும், திருவடியே திருவுருவாதலால் ஏதுப்பொருளில்வந்த ஐந்தனுருபுதந்து அடிநிழலில் எனவும், செந்தழல் நாட்டமீன்ற செல்வனாதலால் பழைய தேசொடு நிறைந்து வீற்றிருந்தான் எனவுங் கூறினார். "இன்பத்தை யருள்பெருக்குகையால் தந்தருளுமென்றும். "பருகியுமாரேன் - விழுங்கியுமொல்லகில்லேன்" எனவும், "உள்ளத்துணர்ச்சியிற் கொள்ளவும்படாஅன்" எனவும், "அண்டங்கடந்த பொருளளவில்லதோ ரானந்தவெள்ளப்பொருள்", எனவும், "தில்லை மூதூராடியதிருவடி" யெனவும், "அன்பினாலடியே னாவியோடியாக்கையானந் தமாய்க்கசிந்துருக - என்பரமல்லா வின்னருடந்தாய்" எனவும் வருந் திருவாக்குகளாலுணர்க. முன்னர்த் திருவவதாரப்படலத்தில் "செந்தழனாட்டமீன்றசெல்வன்" எனக் கூறியிருத்தலால் ஞானநோக்குப் பாசத்தை யழிக்கும் ஒற்றுமை நயம்பற்றி எல்லாவற்றையும் அழிக்கும்நுதற்கண் எனப்பொருள்கொண்டு நெற்றிக் கண்ணால் தம்மையருளிய எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. (சக)

மேருவைச் செண்டாலடித்தபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ககரு

வேதத்திற்குப்பொருளருளியதிருவிளையாடல்.



பதினோராவது

# வேதத்துக்குப் பொருளருளிச்செய்தபடலம்

எழுசீரடியாசிரியவிருத்தம்.

உலம்பொருதடந்தோளுக்கிரச்செழிய னுயரியமேருமால்வரையைப், பொலம்புரிசெண்டாற்புடைத்துவைப்பெடுத்துப்போந்தருளடைந்தவாறுபுகன்றாம், வலம்படுதிணிதோள்வீரபாண்டியன்கோல்வழங்குநாண்மதுரையெம்பெருமான், புலம்பொருமுனிவர்தேறநால்வேதப்பொருளுணர்த்தியதிறம்புகல்வாம்.

(இ-ள்.) உலம் பொரு தடம் தோள் உக்கிரச் செழியன் - திரண்ட கல்லோடொத்த பெரிய புயத்தையுடைய உக்கிரகுமாரபாண்டியர், உயரிய மேரு மால் வரையை பொலம்புரி செண்டால் புடைத்து வைப்பு எடுத்து போந்து அருள் அடைந்த ஆறு புகன்றாம் - உயர்ந்த பெரிய மேருமலையைப் பொன்னாற்செய்த செண்டாயுதத்தால் அடித்து நிதியை எடுத்து அங்குநின்றும மீண்டு சோமசுந்தரக்கடவுள் திருவருளை அடைந்த திருவிளையாடலைக் கூறினோம், வலம் படு திணி தோள் வீரபாண்டியன் கோல் வழங்கு நாள் - வெற்றிமிக்க திண்ணிய தோளையுடைய வீரபாண்டியன் செங்கோல் நடத்துங்காலையில், மதுரை எம்பெருமான - மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், புலம் பொரு முனிவர் தேற நால் வேதப் பொருள் உணர்த்திய திறம் புகல்வாம் - இந்திரியங்களை வென்ற கண்ணுவர் முதலிய முனிவர்கள் தெளிந்துய்ய நான்குவேதங்களின்பொருள்களை (ஐயமற) உணர்த்திய திருவிளையாடலை இனி யெடுத்துக் கூறுவாம். (க)

ஐம்பெரும்பூதநிலைதிரிந்தீரேழடுக்கியவுலகொடுமயன்மா
லும்பர்வான்பதமுமுதித்தவாறொடுங்கவுருத்ததோரூழிவந்தெய்தச்
செம்பொருண்மறையுமொடுங்கியவழிநாட் செஞ்சுடர்க்கடவுண்முன்மல
வம்பவிழ்கமலமெனவரன்றிருமுன்மலர்ந்ததாலகிலமுமாதோ. [ரும்

(இ-ள்.) பெரு ஐம்பூத நிலை திரிந்து - பெரிய ஐந்துதூல பூதங்களும் தத்தம் நிலைகளினின்றுமாறுபடுதலால், ஈரேழ் அடுக்கிய உலகும் அயன் மால் உம்பர்வான் பதமும் உதித்த ஆறு ஒடுங்க - பதினான்குலகங்களும் அவற்றுளடங்கிய பிரமன் திருமால் இந்திரனாகிய இவர்களுடைய பெரியபதங்களும் தோன்றியபடியே யொடுங்கும்படி, உருத்தது ஓர் ஊழி வந்து எய்த - கோபித்து ஒரூழிக்காலம் வந்தடைய, செம்பொருள் மறையும் ஒடுங்கிய - வேதங்களும் ஒடுங்கின, வழிநாள் - பின்னாளில், செஞ்சுடர்க் கடவுள் முன் மலரும் வம்பு அவிழ் கமலம் என - சூரியன் சந்நிதியில் மலரும் வாசமிக்க தாமரைமலர்போல, அரன் திருமுன் அகிலமும் மலர்ந்தது - சிவபெருமான் சந்நிதியில் ஒடுங்கிய யாவுந் தோன்றின.

ஐம்பூதம் நிலைதிரிதலாவது பிருதிவு அப்பிலும், அப்பு நெருப்பிலும், நெருப்புக் காற்றிலும், காற்று ஆகாயத்திலும் ஒடுங்குதல். ஒன்றின்மேலொன்றுநிற்றலால் அடுக்கியவுலகு எனவும், ஈரேழென முன்னர்த் தொகைப்படுத்தினமையால் அவற்றுள் நின்று வகைப்படுத்தி அயன்மாலும்பர்வான்பதமும் எனவும், அயனுந் திருமாலும் பிரகிருதிசம்பந்தமுடையராதலால் ஆகாயம் ஆங்காரதத்துவத்திலும், அது மா

ன்தத்துவித்திலுஞ் அது பிரகிருதி தத்துவத்திலுஞ் சென்றொடுங்குதலின் அவர்களைத்தமக்குரிய பதங்களோடு ஒடுங்கினராதலின் அயன்மாலும்பர்வான்பதமுமொடுங்க எனவும், உருத்திரமூர்த்தியால் பிரகிருதியினின்று ஏனைத்தத்துவங்கள் தோன்றினமையால் உதித்தவாறு எனவும் மகாப்பிரளயம் ஆதலின் உருத்தரோரூழி எனவும், பேரூழிக்காலமாதலால் சுத்தமாயையீற்றேன்றிய விந்துவில் வேதம் ஒடுங்குதலில் செம்பொருள்மறையும் ஒடுங்கியஎனவும், தோற்றத்திலும் ஒடுக்கத்திலும் சிவம் விகாரமின்றி நிற்றல் தோன்றச் செஞ்சுடர்க்கடவுள்முன் மலரும் வம்பவிழ்கமலமலரென எனவுங்கூறினர். திருமுன் என்றது சிவசத்தியை. ஐம்பெரும்பூதங்கேலே திரிதலே

"மாநிலம்புனலிலொளிக்குமப்புனல்போய்வன்னியிற்கரக்குமவ்வன்னி
"யூனமில்வளியிற்சேருமவ்வளிபோயுயர்விசும்படையுமவ்விசும்பாங்
கேனையவாங்கரத்திடையொளிக்குமாங்கதுமகானிடையெய்து
மானவம்மகான்போயுயர்பிரகிருதிதன்னிடையினிதினமரும்."
எனவருங் கூர்மபுராணத்தாலுணர்க. (உ)

பண்டுபோற்பின்னுமுத்தொழினடத்தப்பராபரஞ்சுடர்திருவுள்ளங்
கொண்டுபோர்த்திகிரிவலவனேத்தரவிக்குரிசிறன்னுபிமுண்டகத்தில்
வண்டுபோற்பிரமனுதித்துமூவுலகும்வரன்முறைபடைக்குநாணஞ்ச
முண்டுபோற்றியவானவர்க்குயிரளித்தவும்பர்நாயகன்றிருவாக்கில்.

(இ-ள்.) பண்டுபோல் பின்னும் - முன்புபோலப் பின்னரும், முத்தொழில் நடத்த பராபரஞ்சுடர் திருவுள்ளங்கொண்டு - படைப்பு முதலிய மூன்று தொழில்களையும் நடத்தச் சிவபெருமான் திருவுள்ளங்கொண்டு, போர் திகிரி வலவனேதர - போர்த்தொழிற்குரிய சக்கரத்தையேந்திய திருமாலேத்தர, அக்குரிசில் தன்னுபி முண்டகத்தில் வண்டுபோல் பிரமன் உதித்து - அத்திருமாலினுடைய உந்தித்தாமரையில் வண்டுபோலப் பிரமன் றேன்றி, மூவுலகும் வரன்முறை படைக்கும் நாள் - மூன்றுலகங்களையும் முறையாகப் படைக்குங்காலையில், நஞ்சம் உண்டு போற்றிய வானவர்க்கு உயிர் அளித்த உம்பர் நாயகன் திருவாக்கில் - நஞ்சினையுண்டு தன்னைத் துதித்த அயன் முதலிய தேவர்களுக்கு உயிர்தந்தருளிய தேவதேவன் திருவாக்கில்.

தோற்றமும் ஒடுக்கமும் காலம்போல மாறிமாறி வருமென்பார். பண்டுபோற் பின்னும் எனவும், ஆன்மாக்களுக்குப் பாகம் வருவித்தற்பொருட்டென்பார். முத்தொழில்நடத்தப் பராபரஞ்சுடர் திருவுள்ளங்கொண்டு எனவும், அவ்வான்மாக்கள் கன்மம்புசித்தாலன்றி மலபாகம்வருதற்கு ஏதுவின்றென்பார். போர்த்திகிரிவலவனேத்தர எனவும், " மற்றத்தோற்றமலபாகம்வர" என்றமையால் அவ்வான்மாக்கள் மலபாகம்வந்து தனது திருவடியிற் கூடுதற்கு மீளவுதித்தாலன்றி யின்றென்பார். அக்குரிசிறன்னுபிமுண்டகத்தில் வண்டுபோற் பிரமனுதித்து எனவும், சிவபிரான் திருவருளால் பிரமன் சிருட்டி, மக்த்துடைச்சிருட்டி, சத்தாதிசிருட்டி, இந்திரியாதிசிருட்டி, தருவாதிசிருட்டி, மிருகசிருட்டி, தேவசிருட்டி, மானிடசிருட்டி, பூதாதிசிருட்டி, கௌமாரசிருட்டியென வொன்பதுவகைப்படும் என்பார் வரன்முறை படைக்குநாள் எனவும், அபரப்பிரணவத்தின் வாச்சியமாய்ப் பரப்பிரணவமாய் நின்றான் என்பார் உம்பர்நாயகன் எனவுங்கூறினர். திருமால் உந்தித்தாமரையில் பிரமன்தோன்றச்செய்தது. இலிங்கபுராணம் மாயனும் அரியும் வரம்பெற்ற அத்தியாயத்தில் "மூதியதனிநான்மறைவடித்தமுதல்வன்பாதமகற்பத்துள், புதல்வனுகியுந்திவளர்பூந்தாமரையிற்றேன்றுவனுல்" எனவருஞ்செய்யுளால் உணர்க. (ங)

**பிரணவமுதித்ததனிடைவேதம்பிறந்தனநைமிசாரணியத்**
**தருணிறைமுனிவர்கண்ணுவர்கருக்கராதியோரதிகரித்தவற்றின்**
**பொருணிலைதெரியாதுள்ளமுமுகமும்புலர்ந்தனரிருப்பவப்போதத்**
**திருண்மலவலிவென்றவனரபத்தனென்றொருவேதியன்வந்தான்.**

(இ-ள்.) பிரணவம் உதித்தது - பிரணவந்தோன்றியது, அதனிடை வேதம் பிறந்தன - அப்பிரணவத்தில் வேதங்கள்தோன்றின, நைமிசாரணியத்து அருள் நிறை முனிவர் கண்ணுவர் கருக்கர் ஆதியோர் அதிகரித்து - நைமிசாரண்ணியத்தில்வசிக்கும் கருணைநிறைந்த முனிவர்களாகிய கண்ணுவர் கருக்கர்முதலியோர் நெருங்கி, அவற்றின் பொருள் நிலைதெரியாது உள்ளமும் முகமும் புலர்ந்தனர் இருப்ப - அவற்றின் உட்கிடையாயுள்ள பொருளை யுணராமல் மனமும் முகமும் வாடியிருக்க, அப்போது-அக்காலையில், இருள் மலம வலிவென்றவன் அரபத்தன் என்று ஒருவேதியன் வந்தான் - ஆணவமலவலியைவென்ற அரபத்தனென்னுந் திருநாமத்தையுடைய ஒருமுனிவர்வந்தார்.

பிரணவம் என்றது அபரப்பிரணவத்தை. பிரணவம் பரப்பிரணவம்,அபரப்பிரணவம் என இருவகைப்படும். பரப்பிரணவம் ஆவது சச்சிதானந்த சொரூபமாகிய சிவமே யின்பத்தைப் பெருக்கும் ஆதிக்கத்தோடு பொருந்தவிருப்பது. அபரப்பிரணவம் ஆவது மாயாசொரூபமாய்ச் சத்தவடிவமாய்ச் சிவதத்துவ வுண்மைஞானமாகிய ஆதிக்கத்தை யுண்டாக்கி யான்மாக்களுக்கு எல்லா நன்மைகளையுந் தருவது. வாசகமாகிய அது வாச்சியமாகிய பரப்பிரணவத்தை யடைதற்குக் கருவியாய்; எல்லாப்பொருள்களுந் தோன்றுதற்கு மூலமாயுள்ள அகரம, உகரம், மகரம் என்னும் அக்கரங்களின்வடிவாய்ப் பரசிவம் பிரதிவிம்பித்தற்கு விம்பமாய் அப்பரசிவமும் தானும் இரும்பும் நெருப்பும்போல வேறன்றாய்ச் சிவவாசகமாயிருத்தலின் அவ்வாறுள்ள அவ்வபரப்பிரணவந்தோன்றினதென்பார். உம்பர்நாயகன் திருவாக்கிற் பிரணவம் உதித்ததெனவும், அப்பிரணவத்தினின்று இருக்கு முதலிய மூன்று வேதங்களும் பின்னர்த் தோன்றினதென்பார். அதனிடை வேதம் பிறந்தனவெனவும் பிரணவத்திற்றோன்றிய வேதத்தைப் பயின்றதொழிய அவற்றின்பொருளை யுணர்ந்திலரென்பார். அவற்றின் பொருணிலைதெரியாதுள்ளமுமுகமும் புலர்ந்தனரிருப்ப எனவுங்கூறினர்.

கலியுகத்தோற்றத்தில் முனிவர்கள் பிரமன்பாற்சென்று யாங்கள் தவஞ்செய்தற்கு ஓரிடங்கூறுக என இரப்ப, அப்பிரமன் தருப்பையால் ஓர் நேமி செய்து இது போய்நின்றவிடத்து இருந்து தவஞ்செய்யக்கடவீர் எனறு உருட்ட அந்நேமி நின்று சம்பந்தமானவிடம் நைமிசம் எனப்பேர்பெற்றது.

"சிறகர்வண்டிமிரும்விட்டவாய்க்கமலச்செழும்பொகுட்டரசுவீற்றிருக்கும்
மறைமுதற்கிழவன்முனிவரர்வேண்டவளைத்தனன்விடுத்தபுனனேமி
யிறவுறுநின்றமாயிடையுறைவதெனக்கவின்காட்டிடும்"

எனவருங்காஞ்சிப்புராணச்செய்யுளாலுணர்க. (௮)

**வந்தவேதியனையிருந்தவேதியர்கள்வரவெதிர்ந்திறைஞ்சிவேறிருக்கை**
**தந்தவேலையிலம்மறையவன்முனிவர்தமைமுகநோக்கியீதுரைப்பான்**

பந்தவேதனைசாலவாவெறுப்பிகந்தபண்பினராயினீர்நீவிர்
சிந்தைவேறுகிமுகம்புலர்ந்திருக்குஞ்செய்தியாதெனவவர்சொல்வார்.

(இ-ள்.) வந்த வேதியனை இருந்த வேதியர்கள் வரவு எதிர்ந்து இறைஞ்சி வேறு இருக்கை தந்த வேலையில்-வந்தமுனிவனை அங்கிருந்தமுனிவர்கள் அவர் வருகையை எதிர்கொண்டுவணங்கி வேறு ஆசனந்தந்தகாலையில், அம்மறையவன் முனிவர் தமை முகம் நோக்கி ஈது உரைப்பான்-அவ்வரபத்தர் ஏனையமுனிவர்கள் முகம் பார்த்து இதனைக்கூறுகின்றார், நீவிர் வேதனை பந்தம் சால் அவா வெறுப்பு இகந்த பண்பினர் ஆயினீர்-நீங்கள் பாசபந்தத்தினின்மிக்க விருப்பு வெறுப்புகளினின்று நீங்கிய தன்மையையுடையராயினீர், சிந்தை வேறுகி முகம் புலர்ந்து இருக்கும் செய்தி யாது என -(இப்பொழுது) மனம்வேறுபட்டு முகம்வாடியிருக்கும் செய்தியாதென்று வினவ, அவர் சொல்வார் - அம்முனிவர்கள் கூறுவார்கள்.

தருப்பையாலியற்றிய ஆசனம் என்பார் வேறிருக்கை என்றார். (ரு)

மருட்படுமாயைகழிந்தவன்மொழிந்தமறைபயின்றுரைசெய்தேசிகனற்
றிருட்படுமனத்தேமிருத்துமாலையயாதுசூழ்தற்கெனக்கேட்ட
தெருட்படுமனததோன்செப்புவான்வேதஞ்செப்பியசிவபரஞ்சுடரே
யருட்படிவெடுத்துப்பொருளையுமுணர்த்துமல்லதுசூழ்ச்சியாதறைவீர்.

(இ-ள்.) ஐய-ஐயனே, மருள் படு மாயை கழிந்தவன் மொழிந்த மறை பயின்று-மயக்கம்நிறைந்த மாயையினின்று இயல்பாகவே நீங்கிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய வேதங்கள் பயின்று, உரை செய் தேசிகன் அற்று இருள் படும் மனத்தேம் இருத்தும் - அவற்றினுட் கிடைப்பொருளையுணர்த்தும் ஆசிரியரில்லாமல் அஞ்ஞானம் நிறைந்த மனத்தையுடையோமாயிருக்கின்றேம், இதற்கு சூழ் யாது என - இதற்குஆலோசனை யாதென்று வினவ, கேட்ட தெருள் படு மனத் தோன் செப்புவான் - அதனைக்கேட்டஞானம்நிறைந்த மனத்தையுடைய அரபத்தர் கூறுகின்றார், வேதம் செப்பிய சிவபரம் சுடரே அருள் படிவம் எடுத்து பொருளையும் உணர்த்தும் - அவ்வேதங்களைக் கூறியருளிய அச்சிவபெருமானே அருளுருவங்கொண்டுவந்து அவற்றினுட் கிடைப்பொருளையும் உணர்த்துவான், அல்லது சூழ்ச்சி யாது - இதுவன்றி வேறு ஆலோசனையாது, அறைவீர் - கூறுவீர் (எனக்கூறி.) (சு)

பண்ணியதவத்தாலன்றியாதானும்படுபொருள்பிறிதிலைதவமும்
புண்ணியதலத்தினல்லதுபலியாபுண்ணியதலத்தினும்விழுப்ப
நண்ணியசைவதலத்தினிலியற்றினல்குமசசிவதலங்களினு
மெண்ணியவதிகதலத்தினிலியற்றினிருந்தவமெளிதுடன்பயக்கும்.

(இ-ள்.) பண்ணிய தவத்தால் அன்றி யாதானும் படு பொருள் பிறிது இலை-செய்யுந் தவத்தாலன்றி யாதொன்றாலும் (ஒருவனுக்குக்) கைகூடும்பயன் வேறில்லை, தவமும் புண்ணியதலத்தின் அல்லது பலியா - அத்தவங்களும் புண்ணியதலங்களிற் செய்தாலன்றிக்கைகூடா, புண்ணியதலத்தினும் விழுப்பம் நண்ணிய சைவதலத்தினில் இயற்றின் நல்கும் - அப்புண்ணியதலங்களினும் மேன்மைமிக்க சைவதலங்களிற்செய்தால் அது கைகூடும், அச்சிவ தலங்களினும் எண்ணிய அதிகதல

த்தினில் இயற்றின் இருந்தவம் எளிது உடன் பயக்கும்- அந்தச்சைவதலங்களினும் சிறந்து மதிக்கப்பட்ட மேம்பட்ட சைவதலத்தில் செய்தால் அப்பெரியதவப்பயன் எளிதில் விரைந்து கைகூடும்.

அறமுதலிய நான்கு பொருள்களையும் பெறுதற்குத் தவத்தாலன்றி அவை ஏனையவற்றாற் கைகூடா என்பார் பண்ணிய தவத்தாலன்றி யாதானும் படுபொருள் பிறிதில்லை என்றார். (௭)

அத்தருதலமற்றியாதெனினுலகமகிலமுந்தன்னுடம்பான
வித்தகன்சென்னிப்பன்னிருவிரன்மேல்விளங்கியதலமதுசீவன்
முத்தராயெண்ணில்வானவர்முனிவோர்முயன்றுமாதவப்பயனடைந்து
சித்தமாசகன்றுவதிவதென்றறநூல்செப்பியமதுரையந்நகரில்.

(இ-ள்.) அத்தரு தலம் இயாது எனில் - அந்த மேம்பட்ட சைவதலம் யாதென்று வினவில், உலகமு அகிலமும் தன உடம்பான வித்தகன் சென்னி பன்னிருவிரல் மேல் விளங்கிய தலம் அது என்று - எல்லாவுலகங்களுந் தனது சரீரமாகவுள்ள விராட்புருடனுடைய சிரத்தின்மேல் பன்னிரண்டுவிரல அளவுக்குமேல் விளங்கியதலமாயுள்ளதெனவும், சீவன் முத்தராய் எண்ணில் வானவர் முனிவோர் மாதவம் முயன்று பயன் அடைந்து சித்தம மாசு அகன்று வதிவது என்று- சீவன்முத்தராய் அளவில்லாத பெரியதேவர்களும் முனிவர்களும பெரியதவஞ்செய்து அத்தவப்பேற்றை எளிதிலடைந்து மனக்குற்றமுமொழிந்து என்றும் வசிப்பதாயுள்ளது எனவும், அறம் நூல் செப்பிய மதுரை - தருமநூலெடுத்துக்கூறும் மதுரையாம், அந்நகரில்-அத்திருநகருள். (௮)

தெளிதருவிசும்பினிழிந்ததோர்விமானசிகாமணியருகுதென்மருங்கின்
முளிதருபராரைவடநிழல்பிரியாமுழுமுதல்வழிபடுமறவோர்க்
களிதருகருணைமுகமலர்ந்தளவாவருங்கலையனைத்தையுந்தெளிவித்
தொளிதருமனையமூர்த்தியேயுங்கட்கோதியமறைப்பொருளுணர்த்தும்.

(இ-ள்.) தெளிதரு விசும்பின் இழிந்தது ஓர் விமான சிகாமணி அருகு தென் மருங்கின்-ஒளிமிக்க விண்ணுலகினின்றும வந்த ஒப்பில்லாத தெய்வதவிமானங்களுக்கெல்லாம் சிகாமணியாயுள்ள விமானத்தின் அருகில் தென்பாலில், முளிதரு பராரை வடநிழல் பிரியா முழுமுதல்-உலர்ந்த பருத்த தூரையுடைய கல்லாலவிருக்ஷத்தினிழலினின்றும் பிரியாத தக்ஷிணாமூர்த்தி, வழிபடும் அறவோர்க்கு அளிதரு கருணை முகமலர்ந்து அளவா அருங்கலை அனைத்தையும் தெளிவித்து ஒளிதரும்-தம்மை வழிபட்டொழுகும் சனகா முதலிய முனிவர்களுக்கு அன்பும அருளும் மிக்கமுகமலர்ச்சிசெய்து அளவில்லாத ஆரியநூலமுறறையும் தெளியச்செய்து விளங்குவர், அனைய மூர்த்தியே உங்கட்கு ஓதிய மறைப் பொருள் உணர்த்தும்-அந்தமூர்த்தியே உங்களுக்குத் (தாம்) திருவாயமலர்ந்தருளிய வேதத்திறுட்பொருளை யுணர்த்தாநிற்பர்.

அங்கவன்றிருமுனருந்தவவிரதமாற்றுவான்செல்லுமினெனவப்
புங்கவனருள்போல்வந்தமாதவன்பின்புனிதமாமுனிவருமங்கை
பங்கவன்மதுரைப்பதிபுகுந்தம்பொற்பன்மணிக்கோயில்புக்காழிச்
சங்கவன்கைபோல்வளைசெறிசெழும்பொற்றாமரைத்தடாகநீராடி.

(இ-ள்.) அவன் திருமுன் அரும் தவவிரதம் ஆற்றுவான் செல்லுமின் என- அம்மூர்த்தியின் திருமுன்னரிருந்து செய்தற்கரிய தவத்தைச் செய்யச்செல்லுங்க ளென்று கூற, அப்புங்கவன் அருள்போல் வந்த மாதவன் பின் - அந்தமூர்த்தியின் திருவருள்போல் வந்துதவிய அரபத்தர்பின்பு, புனிதம் மா முனிவரும்-களங்கமில் லாத கண்ணுவர்முதலிய முனிவர்களும், மங்கை பங்கவன் மதுரை பதி புகுந்து- அங்கயற்கண்ணம்மையை இடப்பாலிலுடைய சோமசுந்தரக்கடவுளுடைய மதுரைத் திருநகரத்திற்சென்று, அம் பொன் பல் மணி கோயில் புக்கு - அழகிய பொன்னாற் செய்த பலரத்தினங்களழுத்திய திருக்கோயிலுட்புகுந்து, ஆழி சங்கவன் கைபோ ல் வளை செறி செழும் பொன் தாமரை தடாகம் நீர் ஆடி - சக்கரத்தையும் சங்கை யும் ஏந்திய திருமால் கரத்தைப்போலப் பாஞ்சசன்னியம் வசிக்கும் பொலிவுமிக்க பொற்றாமரைப்பொய்கையில் ஸ்நானஞ்செய்து. (க0)

கரைகடந்துள்ளங்கடந்தவன்புந்தக்கடிதுபோய்நான்கிருவெள்ளி
வரைகடம்பிடரிறகிடந்ததோர்மேருவரைபுரைவிமானமேற்காணு
வுரைகடம்பொருளைக்கண்களாற்கண்டாங்கும்பர்தம்பிரானைநேர்கண்டு
திரைகடந்திடும்பேரின்பவாரியிலுஞ்சேணிலத்திலும்விழுந்தெழுந்தார்.

(இ-ள்.) கரை கடந்து உள்ளம் கடந்த அன்பு உந்த கடிதுபோய் - எல்லைக டந்து இதயத்தையும்விழுங்கி (மேலெழுந்த) அன்பானது (தம்மைச்) செலுத்த வி ரைந்துசென்று, நான்கிரு வெள்ளிவரைகள தம்பிடரில் கிடநதது ஓர் மேருவரை புரை விமானமேல் - எட்டுவெள்ளிமலைகளின் பிடரினமேலிருந்த ஒருமேருமலை யையொத்த எட்டுவெள்ளையானைகள பிடரிறசுமநதவிமானததினமேல், காணு உரை கள் தம்பொருளை கண்களால் கண்டால் ஆங்கு - (தமது உள்ளக்கண்களாற) கண் டறியாத வேதவாக்கியஙகளின்பொருளை (புறததிலுள்ள) கண்களால் கண்டாற்போ ல, உம்பர் தம்பிரானை நேர்கண்டு-தேவர்களதேவனாகிய சோமசுந்தரக்கடவுளை நே ரேதரிசித்து, திரை கடந்திடும் பேரின்ப வாரியினும் சேண் நிலததினும் விழுந்து எ ழுந்தார் - அலையொழிந்த பேரின்பககடலிலும பரநத நிலவுலகத்தினமேலுமாக விழுந் து எழுந்தார்கள்.

கடலோடு பேரின்பக்கடல் வேற்றுமையுடைய தென்பார் திரைகடந்திடும் பேரின்பவாரி என்றார். (கக)

கைதலைமுகிழ்த்துக்கரசரணங்கள்கம்பிதஞ்செய்துகண்ணருவி
பெய்தலைவெள்ளத்தாழ்ந்துவாய்குழறிப்பிரமன்மாலினமுந்தேறு
மைதழைகண்டவெள்ளிமன்றுடிமவானவாநாயகவானோ
ருய்தரவிடமுண்டமுதருள்புரிந்தவுத்தமபோற்றியென்றேத்தா.

(இ-ள்.) கை தலை முகிழ்த்து கரசரணங்கள் கம்பிதம் செய்து-கைகளைத்த லை மேற்கூப்பி அக்கைகளுங் கால்களுங் கம்பித்து, கண் அருவி பெய்து அலை வெள் ளத்து ஆழ்ந்து வாய் குழறி - கண்கள் ஆனந்தவெள்ளஞ்சொரிய அலைக்கும் அவ்வா னந்தவெள்ளத்தில்அழுநதி வாய்குழறி, பிரமன் மால் இனமும் தேறு மை தழை கண்ட வெள்ளி மன்று ஆடும் வானவர் நாயக - பிரமனுந் திருமாலும் இன்னமுந் தெரிந்துணராத கருமைமிக்க ஸ்ரீகண்டத்தையுடையானே வெள்ளியம்பலத்தாடும் தேவர்கள் தேவனே, வானோர் உய்தர விடம் உண்டு அமுது அருள் புரிந்த உத்தம போற்றி என்று ஏத்தா - தேவர்களுய்ய விடமுண்டமுதருளிய உத்தமனே உன்னை வந்திக்கக்கடவேமென்று வந்தித்து.

எங்களறியாமையையொழித்து வேதத்தின்பொருளையருளுக என்னும் அபிப்பிராயத்தோடு பொருந்த வானோருய்தரவமுதுண்டருள்புரிந்த உத்தம என்றது கருத்துடையடையணி. (௬௨)

மறைபொருள்காணாதுள்ளமாலுழந்துவாடியவெமக்குநீயேயந்
நிறைபொருளாகிநின்றனையதற்குநீயலாற்பொருள்பிறிதியாதென்
றிறைவனையிறைவன்பங்கிலங்கயற்கணிறைவியையம்முறையேத்தி
முறைவலஞ்செய்துவடநிழலமர்ந்தமூர்த்திமுன்னெய்தினார்முனிவோர்.

(இ-ள்.) முனிவோர் - கண்ணுவர் முதலிய முனிவர்கள், மறை பொருள் காணாது உள்ளம் மால் உழந்து வாடிய எமக்கு-வேதத்தின்பொருளை யுணராது மனமயங்கிப் புலர்ந்த எங்களுக்கு, நீயே அ நிறை பொருளாகி நின்றனை - நீயே அவ்வேதத்தினுட்கிடையாய் நிறைந்த பொருளாய் நின்றாய், அதற்கு நீ அலால் பொருள் பிறிது யாது என்று - (ஆதலால்) அவ்வேதத்திற்கு நீயேயன்றி வேறுபொருள் யாது (உளது) என்று, இறைவனை ஏத்தி-இறைவனாகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, இறைவன் பங்கில் அங்கயற்கண் இறைவியை அம்முறை ஏத்தி - அச்சோமசுந்தரக் கடவுளின் இடப்பாலமர்ந்த அங்கயற்கண்ணம்மையாகிய இறைவியையும் அம்முறையே துதித்து வணங்கி, முறை வலம் செய்து - முறையாகப் பிரதக்ஷிணஞ்செய்து, வடநிழல் அமர்ந்தமூர்த்தி முன் எய்தினார் - கல்லாலவிருக்ஷத்தி னிழலின்கீழ் எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியின் திருமுன்னரடைந்தார்கள்.

மறைப்பொருள்தொகுத்தல். (௬௩)

சீதளப்பளிக்குமேனியும்பளிக்குச்செழுமலைபதித்ததுப்பன்ன
பாதமுஞ்செவ்வாய்மலருமுக்கண்ணுமபங்கயச்செங்கரநான்கும்
வேதபுத்தகமுமமுதகும்பமுந்தன்விழிமணிவடமுமெய்ஞ்ஞான [த்தா.
போதமுத்திரையுந்தரித்ததோர்தனிமைப் போதன்முன்றாழ்ந்தெழுந்தே

(இ-ள்.) சீதளம் பளிக்கு மேனியும்-குளிர்ந்த பளிங்குமலையையொத்த வெள்ளிய திருமேனியையும், செழு பளிக்கு மலை பதித்த துப்பு அன்ன பாதமும்-ஒளிநிறைந்த அப்பளிங்குமலையில் பதித்த பவளத்தையொத்த பாதங்களையும், செவ்வாய் மலரும்-செவந்த திருவாயாகிய தாமரையையும், முக்கண்ணும்-திரிநேத்திரங்களையும், பங்கயம் செம் கரம் நான்கும்-தாமரையையொத்த செவந்த திருக்கரங்கள் நான்கையும், வேத புத்தகமும்-உண்மையை விளம்பும் ஞானபுத்தகத்தையும், அமுத கும்பமும்-அமுதம் நிறைந்த கமண்டலத்தையும், தன் விழி மணி வடமும்- தன் கண்மணியாகிய உருத்திராக்க வடத்தையும், மெய்ஞ்ஞானபோத முத்திரையும் தரித்தது ஓர் தனிமை போதன்முன்-உண்மைஞானப்பயனைத் தெரித்தருளும் சின்முத்திரையையுந் தரித்தருளிய ஒப்பில்லாத தக்ஷிணாமூர்த்தி திருமுன், தாழ்ந்து எழுந்து ஏத்தா - பணிந்து எழுந்து துதித்து.

தேவர்கள் நரை திரை மூப்பு முதலியவற்றை நீக்குந் தேவாமிர்தம்போலப் பிறப்பிறப்புகளைப்போக்கும் ஞானாமிர்த நிறைந்த கும்பம் ஆதலால் வேதபுத்தகமுதலியவற்றோடு எண்ணி அமுதகும்பமும் எனவும், தேவர்கள் திரிபுரவாசிகளால் தங்களுக்கு உண்டாகிய வருத்தங்களை யெடுத்து விண்ணப்பஞ் செய்துகொள்ளச் சிவபெருமானார் ஆயிரந் தேவவருடம் தமது திரிநேத்திரங்களையு மலர்த்தியிருந்தருள அத்திருக்கண்கள் நீர்பொழிந்தருளின, சூரியன் வடிவமாகிய வலக்கண்பொழிந்த

நீரில் நின்று பன்னிரண்டுருத்திராட்சமரங்களும், சந்திரன் வடிவமாகிய இடக்கண் பொழிந்த நீரில் நின்று பதினாறுருத்திராட்சமரங்களும், அக்கினிவடிவமாகிய நெற்றிக்கண் பொழிந்த நீரினின்று பத்துருத்திராட்சமரங்களுந் தோன்றினமையால் தன்விழி மணிவடம் எனவுங் கூறினார். (கசு)

வடநிழலமர்ந்தமறைமுதன்மேதாமனுவெழுத்திருபதுமிரண்டிங்
கிடமுறவரபத்தன்றனாற்றெளிந்துதேணிறைமதிமுதலடைவிற்
படிமதியளவுந்தருப்பணவோமம்பார்ப்பனவுண்டிமுப்போது
மடைவுறநுவன்றுநோற்குமாதவர்முனருமறைப்பொருள்வெளிவருமால்.

(இ-ள்.) வடநிழல் அமர்ந்த மறைமுதல் மேதா மனு எழுத்து இருபதும் இரண்டும் - கல்லாலவிருக்ஷத்தினிழலில் எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியின் மேதாமந்திரமாகிய இருபத்திரண்டெழுத்தையும், இடம் உற அரபத்தன் தன்னால் தெளிந்து- உறுதிப்பட அரபத்தமுனிவரால் தேர்ந்துணர்ந்து, தேள் நிறை மதிமுதல் அடைவில் படிமதி அளவும்-விருச்சிகமாதமுதல் முறையேவரும் அவ்விருச்சிகமாதங்காறும், தருப்பணம் ஓமம் பார்ப்பன உண்டி முப்போதும் அடைவுற நுவன்று நோற்கு மாதவர்முன்-தருப்பணத்தையும் ஓமத்தையும் பாரப்பனவுண்டியையும் காலை உச்சிமாலை என்னும் முப்போதிலும் முறையாகச்செய்து அனுட்டித்து நோற்கும் கண்ணுவர் முதலிய முனிவர்கள் முன்பு, அருமறைப் பொருள் வெளிவரும் - (கட்புலன்களால் பிறர்) அறிதற்கரிய தக்ஷிணாமூர்த்தி (அவர்கள்) கட்புலன்களாலறிய வந்தருளுகின்றார்.

மேதா தக்ஷிணாமூர்த்தி பிரசாதத்தையடைதற்குரிய மூலமந்திரம். அது மெய்ஞ்ஞானத்தைத் தருதற்குரிய திருமந்திரமாதலால் மேதா என்றுங் காரணப்பெயரே இயற்பெயராய் நின்றதென வறிக. அத்திருமந்திரத்தை ஆயிரந்தரம் செபித்தால் பத்துக்கொன்று அருக்கியமும், நூற்றுக்கொன்று ஓமமும், ஆயிரத்துக்கொன்று பிராமணபோசனமுஞ் செய்வித்தல் முறையாதலால் அடைவுற நுவன்று என்றார். அவ்வாறே பதினாயிரம் இலட்சத்துக்குங் கொள்க. (கரு)

கலிவிருத்தம்.

மானமுனிவோரதிசயிப்பவடநீழன்
மோனவடிவாகியமுதற்குரவனொன்னாறன்
கூனமிலிலக்கணவுறுப்பகவைநாணன்
கானவொருகாளைமறையோன்வடிவமாகி.

(இ-ள்.) மானம் முனிவோர் அதிசயிப்ப - பெருமையையுடைய கண்ணுவர் முதலியமுனிவர்கள்அதிசயங்கூர, வடம் நீழல் மோனம் வடிவாகிய முதல் குரவன்-கல்லாலவிருக்ஷத்தினிழலில் மௌனமூர்த்தமா யெழுந்தருளிய காரணதேசிகர், ஊனம் இல் எண்ணான்கு இலக்கண உறுப்பு அகவை நாலான்கு ஆன - குற்றமில்லாத முப்பத்திரண்டிலக்கணங்களையும் வாய்ந்த அவயவங்களும் பதினான்குவயதுமுள்ள, ஒருகாளை மறையோன் வடிவம் ஆகி - ஒப்பில்லாத காளைப்பருவத்தையுடைய அந்தணர்திருக்கோலங்கொண்டு.

ஆசிரியன் கைகால்முதலிய வுறுப்புகளிற் குற்றமில்லாதவனாய்ப் போழகு வாய்ந்திருப்பவன் உத்தமதேசிகனாதலால் ஊனமிலிலக்கணவுறுப்பு என்றார். "என்றேயிசைத்தவிவைமுதலாகும்பழுதின் - ஒன்றுமிலாருத்தமரென்றோர்" எனவரும் சைவசமயநெறித் திருக்குறளாலுணர்க. (கசு)

நீண்டதிரிமுண்டமழனெற்றிவிழிபொத்தக்
காண்டகையகண்டிகைவளைந்தொழுகுகாதிற்
பூண்டகுழைகெளவியபொலன்செய்பலகாசு
சேண்டவழிளங்கதிர்சிரித்திருள்சிதைப்ப.

(இ-ள்.) நீண்ட திரிமுண்டம் அழல் நெற்றி விழி பொத்த - நீண்ட திரிபுண்டரமானது அக்கினிவடிவாகிய நெற்றிக்கண்ணைமறைக்கவும், காண் தகைய கண்டிகை வளைந்து ஒழுகு காதில் - கண்களாற்காணுந்தோறும் அழகுசெய்யுங் கண்டிகை வளைந்து விளங்கும் திருக்காதில், பூண்ட குழை கெளவிய பொலன் செய் பலகாசு - தரித்த குண்டலத்திற் பதித்த விளக்கம் செய்யும் பல இரத்தினங்களும், சேண் தவழ் இளங் கதிர் சிரித்து இருள் சிதைப்ப - ஆகாயத்தில் தவழும் இளஞ்சூரியனிலுமிக்குக் கிரணம்வீசி இருளை ஓட்டவும்.

ஏனையுறுப்புகளிலணிந்த திரிபுண்டரத்திலும் நெற்றியிலணிந்த திரிபுண்டரம் நீண்டதாதலால் நீண்டதிரிமுண்டமெனவும், காதிலணியும் உருத்திராட்சகண்டிகை பன்னிரண்டு திருமுகங்களை யுடையதாதலால் காண்டகையகண்டிகை யெனவுங் கூறினார். (௧௭)

உத்தரியவெண்படம்வலம்படவொழுங்க
முத்தவளநூலினொடுமுத்தமிடையிட்டு
வைத்தணியுமக்கவடமாலையெறிவாளாற்
பத்தரைமறைத்தமலபந்தவிருள்சிந்த.

(இ-ள்.) உத்தரிய வெண் படம் வலம்பட ஒழுங்க - உத்தரியமாகிய வெள்ளிய ஆடை வலப்பாற்பட ஒழுங்கவும், தவள முந்நூலினொடு - வெள்ளிய வுபவீததநோடு, முத்தம் இடையிட்டு வைத்து அணியும் அக்கம் வடமாலை - முத்தங்களையிடையிடையிட்டுக் கோவைசெய்து புனைந்த உருத்திராக்கமாலை, எறி வாளால் - வீசுங்கிரணத்தால், பத்தரை மறைத்த மல பந்த இருள் சிந்த - முனிவர்களை அறிவில் மறைத்த ஆணவவிருள் சிதையவும்.

பிராமணதேசிகர் தரிக்கவேண்டிய முத்திரைகளுள் ஒன்றாதலால் உத்தரிய வெண்படம் வலம்பட வொழுங்கவெனவும், ஏழு பூணூல் தரிக்கவேண்டுவது முறையாயினும் ஒவ்வொரு பூணூலும் ஒன்பதிழையால் முறுக்கிய வொவ்வொருநூலாலமைந்த மூன்றுநூலாதலால் முத்தவளநூலினொடு எனவும், கட்புலங்களைமறைக்கும் புறவிருளைச் சிந்தும் சூரியனொளியினும் மேம்பட்ட ஒளியையுடையதாதலால் சொல்லாற்றல்தோன்ற எறிவாளால் எனவுங் கூறினார். (௧௮)

கண்டிகைதொடுத்திருகரத்தினொடுவாகு
தண்டினிடுமாலைவிடவாளரவுதள்ள
வெண்டுகிலினானவிரிகோவணமருங்கிற்
றண்டரியபட்டிகைவளைந்தொளிதழைப்ப.

(இ-ள்.) கண்டிகை தொடுத்து இருகரத்தின் ஒடு தண்டு வாகின் இடுமாலை - கண்டிகையாகப் புனைந்து இரண்டுகைகளோடு தண்டினையொத்த புயங்களிலணிந்த உருத்திராக்ஷமாலிகை, விடம வாள் அரவு தள்ள - விஷத்தையுடைய சர்ப்பத்தையொழிக்கவும், வெண் துகிலின் ஆன விரி கோவணம் மருங்கில் - வெள்ளியவஸ்திரத்தாற் போக்கிய கோவணத்தின்பக்கத்தில், தண்டரிய பட்டிகை வளைந்து ஒளிதழைப்ப - நீங்குதலில்லாத பட்டிகை சூழ்ந்து விளங்கவும். (௧௯)

வண்டுவரிபாடுவனபோலமலர்பாத
புண்டரிகமேலுழலசிலம்புகள்புலம்பத்
தொண்டரகமாசிருடிணித்துமுடிசூட்டு
மூண்டகமலர்ப்புறம்விறற்கழன்முழங்க.

(இ-ள்.) வண்டு வரி பாடுவன போல - வண்டுக ளிசைபாடுதல்போல, மலர் பாத புண்டரிக மேல் உழல் சிலம்புகள் புலம்ப - மலர்ந்த திருவடித்தாமரைமேல் வளைந்துகிடக்கும் சிலம்புகள் ஒலிக்கவும், தொண்டர் அகம் மாசு இருள் துணித்து முடி சூட்டும் முண்டக மலர்ப் புறம் - அடியாருடைய மனக்குற்றத்தை (விளைக்கும்) ஆணவமலத்தை வீட்டி (அவர்கள்) முடியிற்சூட்டுந் தாமரைமலர்போன்றதிருவடியினமேல், விறல் கழல் முழங்க - வெற்றியையுடைய வீரகண்டை முழங்கவும்.

குற்றங்களாவன - விகற்பம், சங்கற்பம், குரோதம், மோகம், கொலை, துன்பம், அகங்காரம், நகை. கட்புலங்களுக்கு விடயமாகின்ற பொருள்களை மறைத்துத் தன்னைப் புலப்படுத்தி நிற்கும் புறவிருளிலும் ஆன்மாக்களுக்கு விடயமாகிய பொருள்களையு மறைத்துத் தன்னையு மறைக்கு மிக்கவிருளாதலால் ஆணவமலத்தை இருள் எனவும், அடியார்கள் வினைகளைவென்று பிறப்பினை யறுத்தற்குத் திருவடியிற் கட்டும் ஓரறிகுறியாதலால் விறற்கழல் எனவும், முனிவர்கள் கருவி கரணாதிகளின் ஆரவாரங்களை யோட்டச்செல்லும் பரநாதமாதலால் சிலம்புகள்புலம்ப, முழங்க எனவுங்கூறினார். "வீட்டின்ப வெள்ளத்தழுத்திவிடுந்தாளினுமடியார் - உள்ளத்தினும் பிரியாவொண்சிலம்பும் - கள்ளவினை - வென்றுபிறப்பறுக்கச்சாத்தியவீரக்கழலும்" எனப்போற்றிப் பஃறொடையில்வருதல்காண்க. முடிசூட்டும் என்றதை "சூட்டுவார் வினையொத்தபோது" என்னுஞ் செய்யுளானுமறிக. (உ0)

ஏதமில்பவித்திரம்வலக்கரனிமைப்பப்
போதம்வரைபுத்தகமிடக்கையதுபொற்ப
வோதியுணராதலறியோலமிடும்வேதம்
பாதுகைகளாகியிருபாதமலர்சூட.

(இ-ள்.) ஏதம் இல் பவித்திரம் வலக்கரன் இமைப்ப-குற்றமில்லாத பவித்திரம் வலக்கையில் விளங்கவும், போதம் வரை புத்தகம் இடக்கையது பொற்ப - சிவஞானபோதமெழுதிய புத்தகம் இடக்கையில் விளங்கவும், ஓதி உணராது அலறி ஓலம் இடும் வேதம் பாதுகைகளாகி - எடுத்துக்கூறியும் அறியாது கதறிக் கதறி அபயமிடும் வேதங்கள் பாதுகைகளாகி, இரு பாதம் மலர் சூட - இரண்டு பாததாமரைகளைச் சூடவும். (உக)

கள்ளமுளரிக்குண்முரல்காளையறுகால
புள்ளொலியினவ்விதழும்புடைபெயர்ந்து
துள்ளவெழுவேதவொலிதொண்டர்செவியாற்று
ளுள்ளவயல்புக்குவகையொண்பயிர்வளர்ப்ப.

(இ-ள்.) கள்ள முளரிக் கு உள் முரல் காளை யறு கால புள் ஒலியின் - தேனையுடைய தாமரைக்குளிருந்து ஒலிக்கும் ஆறுகால்களையுடைய ஆண் வண்டின் ஒலியைப்போல, நாவும் இதழும் புடை பெயர்ந்து துள்ள எழு வேத ஒலி - நாவும் இதழும் (தத்தம் நிலையினின்று) புடைபெயர்ந்து துள்ளவெழா நின்ற வேதவொலியா

னது, தொண்டர் செவி ஆறால் உள்ளம் வயல் புக்கு உவகை ஒள் பயிர் வளப்ப - கண்ணுவர்முதலிய முனிவர்களுடைய காதாகிய கால்வழியால் மனமாகிய வயலிற் சென்று சந்தோஷமாகிய ஒள்ளியபயிரைவிளர்க்கவும்.

உதாத்தம், அநுதாத்தம், சொரிதமாகிய சுரபேதங்களால் வேதத்தின்பொருள்விளங்க இசையறாத் தச்சரித்தவர்த்தீர் என்பார் நாவுமிதழும் புடைபெயர்த்துள்ள வெழுவேதவொலி உவகையொண்பயிர்வளர்ப்ப எனக்கூறினார். (௨௨)

சீதமணிமூரறிருவாய்ச்சிறிதரும்ப
மாதவர்களகாணவெளிவந்துவெளிநின்று
னாதமுடிவாயளவினான்மறையினந்தப்
போதவடிவாகிநிறைபூரணபுராணன்.

(இ-ள்.) நாத முடிவாய் - நாதத்துவத்தின் முடிவாய், அளவில் நான்மறையின் அந்தம் போத வடிவாகி நிறை பூரண புராணன் - அளவில்லாத நான்கு வேதங்களின்முடிவில் ஞானவடிவாய்நிறைந்த என்றும் பழையராகிப் பூரணராயுள்ளபெருமானார், சீதம் மணி மூரல் திருவாய் சிறிது அரும்ப - குளிர்ந்த அழகிய புன்முறுவல் திருவாய் சிறிதரும்ப, மாதவர்கள் காண எளி வந்து வெளி நின்றான் - கண்ணுவர்முதலிய முனிவர்கள்காணக் (கட்புலன்களுக்கு வெளிப்பட்டு) வெள்ளிடையில்வந்து நின்றருளினார்.

தமக்கோர் தோற்றமு மிறுதியுமில்லாமையின் - புராணனென்றதற்கு என்றும் பழையனெனப் பொருள்கூறினும். நிர்மலமாகிய சிவம் மாயைக்கப்பாற்பட்டதாதலால் சுத்தமாயையின காரியமாகிய நாதத்துவத்துக்கும், அம்மாயையிற்றோன்றிய விந்துதத்துவத்தின் காரியமாகிய வேதங்களுக்கும் அப்பாற்பட்டு நின்றது என்பார் நாதமுடிவாகி யளவினான்மறையினந்தப் - போதவடிவாகிநிறை எனக் கூறினார்.

"வேதவேதாந்தம்விளக்கஞ்செயவிந்துவுடன்
நாதநாதாந்தநடுவேதம் - போதத்தால்
ஆமளவுநதேடவளவிறந்தவப்பாலைச்
சேமவொளி"

எனப் போற்றிப்பஃறொடையில் வருதல்காண்க. (௨௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வட்டவாண்மதிகண்டார்க்குமுவாக்கடன்மானமாண்ட
சிட்டராமுனிவர்காளைத்தேசிகவடிவநோக்கி
யொட்டருமுவகைவெள்ளமேற்கொளவுருத்தகூற்றை
யட்டதாமரைதஞ்சென்னிக்கணிமலராகத்தாழ்ந்தார்.

(இ-ள்.) வட்டம் வாள் மதி கண்டு ஆர்க்கும் உவாக் கடல் மான - வட்டமாகிய வொள்ளிய பூரணசந்திரனைக்கண்டு ஒலிக்கும் நிறைந்த கடலையொப்ப, மாண்ட சிட்டரா முனிவர் - மாட்சிமைப்பட்ட பெரியோராகிய முனிவர்கள், காளை தேசிகவடிவம் நோக்கி - காளைப்பருவத்தையுடைய தேசிகர் திருவுருவத்தைநோக்கி, ஒட்டு அரு உவகை வெள்ளம் மேல் கொள - நீங்காத மகிழ்ச்சியாகிய வெள்ளம் மேலெழுந்தோங்க, உருத்த கூற்றை அட்ட தாமரை தம் சென்னிக்கு அணிமலர் ஆக தாழ்ந்தார் - கோபித்தெழுந்த இயமனை உதைத்தருளிய தாமரைபோன்ற திருவடிகளைத் தமது சிரத்துக்கு அணியும் மலர்களாகச்சூடி வணங்கினார்கள். (௨௪)

அளவறுகலைகட்கெல்லாமுறைவிடமாகிவேத
விளைபொருளாகிநின்றவேதியசரணமென்ற
வளைவுறுமனத்தினரைத்தேசிகவள்ளனோக்கிப்
பளகறுதவத்தீர்வேட்கையாதெனப்பணிந்துசொல்வார்.

(இ-ள்.) அளவு அறு கலைகட்கு எல்லாம் உறைவிடம் ஆகி - அளவில்லாத நூல்களுக்கெல்லாம் உறையுளாகி, வேதம் விளை பொருளாகி நின்ற வேதிய - வேதத்தில் விளையும் பொருளாய் நின்றருளிய வேதியரே, சரணம் என்ற வளை வுறு மனத்தினரை - (நீர் எமக்கு) அடைக்கலமென்றடைந்த கோட்டமுற்ற மனத்தையுடைய கண்ணுவர் முதலிய முனிவர்களை, தேசிகவள்ளல் நோக்கி-ஆசிரியமூர்த்தமா யெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தி நோக்கியருளி, பளகு அறு தவத்தீர் - குற்றமற்றதவத்தையுடையீர், வேட்கை யாது என - உங்கள் விருப்பம் யாதென்று வினவ, பணிந்து சொல்வார் - வணங்கி முனிவர்கள் கூறுவார்கள்.

அவரது அருட்சத்தியால் சுத்தமாயையிற்றோன்றிய விந்து தத்துவத்தினின்றுந் தோன்றினமையால் அளவறுகலைகட்கெல்லா முறைவிடமாகியென்றார். (௨௫)

அடியரோமுய்யுமாறுமுலகெலாமளிக்குமாறும்
படியிலாவரத்தவேதப்பயனருள்செய்தியென்னக்
கொடியமாபாசந்தீர்ப்பான்குரவனம்முனிவரோடு
முடிவிலாவிலிங்கமுன்போய்மறைப்பொருண்மொழிவதானான்.

(இ-ள்.) அடியரோம் உய்யும் ஆறும் - அடியேங்கள் ஐயமறத் தெளிந்துபிழைக்கும் வண்ணமும், உலகு எல்லாம் அளிக்கும் ஆறும் - உலகத்தை யெல்லாம் பாதுகாக்கும்வண்ணமும், படி இல்லா வரத்த வேதம் பயன் அருள் செய்தி என்ன - அளவில்லாத நன்மையையுடைய வேதத்தின்பொருளை உணர்த்தியருளா யென்று (குறையிரப்ப) கொடிய மா பாசம் தீர்ப்பான் (விடாது சூழ்ந்த) கொடிய பெரியமலப்பிணிப்பை யொழிக்க, குரவன் அம்முனிவரோடும் - ஆசிரியர் திருக்கோலங்கொண்டுவந்த பெருமானார் அந்தமுனிவர்களோடும், முடிவு இல்லா இலிங்கம் முன் போய்- (என்றுந்) தனக்கோர் இறுதியில்லாத இலிங்கமூர்த்தியின் திருமுன்சென்று, மறைப்பொருள் மொழிவது ஆனான் - வேதத்தினுட் கிடைப்பொருளைத் தெரித்தருளத்திருவாய்மலர்ந்தருளினார்.

வேதத்தின் பொருளுணர்ந்தால் உமது அருட்பேறு வாய்க்கும் என்பார் அடியரோமுய்யுமாறும் எனவும், எங்கட்கு இவ்வேதப்பொருள் கைகூடில் பலருந்தெளிதி னெங்களிடத் துணர்ந்து பிறவியைக் களைந் துய்வார்களென்பார் உலகெலாமளிக்குமாறும் எனவுங்கூறினார். (௨௬)

அந்தணிர்கேண்மின்சாலவருமறைப்பொருள்களெல்லா
மந்தணமாகுமிந்தமறைப்பொருளறிதறானே
நந்தலில்லாதபோகப்பயனுக்குநவியும்பாச
பந்தனைகழிக்கும்வீட்டின்பயனுக்குங்கருவியாகும்.

(இ-ள்.) அந்தணிர் கேண்மின் - முனிவர்களே கேளுங்கள், சால அருமறை பொருள்கள் எல்லாம் மந்தணம் ஆகும் - மிகவும் அரிய வேதங்களின் உட்கிடைப் பொருள்களெல்லாம் இரகசியமாயிருக்கும். இந்த மறைப்பொருள் அறிதல் தானே-

இந்தவேதத்தினுட் கிடைப்பொருளையறிதலே, கந்தல் இல்லாத போகப் பயனுக்கும்-கெடுதலில்லாத போகப்பேற்றிற்கும், நலியும் பாச பந்தனை கழிக்கும் வீட்டின்பய னுக்கும் கருவியாகும் - வருத்தும் பாசபந்தத்தைப் போக்கும் மோக்ஷப்பேற்றிற் குஞ் சாதனமாம்.

வேதம் கருமகாண்டம், ஞானகாண்டம் என இருவகைப் படுதலால் கரும காண்டத்திற்கூறிய யாகாதிபுண்ணியங்களால் போகமும, ஞானகாண்டத்திற்கூறி ய நின்மலசொரூபியாகிய சிவத்தால் முத்தியுங் கைகூடுசலால் மறைப்பொருளறித லதானே போகப்பயனுக்கும் வீட்டின்பயனுக்குங் கருவியாகும் என்றார். சாலோக முதலியபத முத்திகளாதலால் கந்தலில்லாத போகப்பயனென்றார் "தெருட்பெறு போகவீடு காரணமாய்ச் சிவமயமா மறைபபொருளே" எனப் பின்னர் வருதலுங் காண்க. (உள)

உத்தமசயம்புக்குள்ளுமுத்தமதரமாய்மேலாந்
தத்துவமாகுமிந்தசுந்தரசயம்புலிங்க
நித்தமாய்மறைகட்கெல்லாநிதானமாம்பொருளாயுண்மைச்
சுத்தவத்துவிதமானசுயம்பிரகாசமாகும்.

(இ-ள்.) உத்தம சயம்புக்கு உள்ளும் உத்தம தரமாய்-உத்தம சுயம்புமூர்த் திகளுக்குள்ளும் மேம்பட்ட உத்தரமாயம்புவாய், மேலாம் தத்துவ மாகும் இந்த சுந்தா சயம்பு லிங்கம் - மேம்பட்ட தத்துவங்களின் வடிவமாகிய இந்தச்சுயம்புலி ங்கமாகிய சோமசுந்தரமூர்த்தி, நித்தமாய் - என்றும் அழியாததாய், மறை கட்கு எல்லாம் நிதானமாம் பொருளாய் - வேதங்களுக்கெல்லாம ஆதிகாரணமாகிய பொ ருளாய், உண்மை சுத்த அத்துவிதமான சுயமபிரகாசமாகும் - உண்மையாகிய சுத் தாத்துவிதமான சுயம்பிரகாசமாக விளங்கும.

நாத விந்து தத்துவங்களின் பொருளாய் விளங்குதலால் மேலாந் தத்துவ மாகும் எனவும், பிரணவசொருபமாய் நிற்றலால் நிதானமாம பொருளாய் எனவு ம், ஏனையோர்கூறுதல்போலாது, உடலும உயிரும் தம்முளொன்றுபட்டறியும் அறி வும், கண்ணினொளியும் சூரியனொளியும் தமமுளொன்றுபட்டுக் காணுந்தன்மையை யும பிரிக்கக்கூடாததுபோலச் சிவத்தையும பிரபஞ்சத்தையும தமமிற்பிரிக்கவொ ண்ணாது இரண்டறநிற்கும் அத்துவிதமாதலால சுத்தவத்துவிதம எனவுங்கூறினார்.

நிறைபராபரம்விஞ்ஞானநிராமயமென்றுநூல்க
ளறைபரம்பிரமமாகுமிதனுருவாகுமேக
மறையதன்பொருளேயிந்தசுந்தரவடிவாயிங்ங
னுறைசிவலிங்கமொன்றேயென்பர்நூலுணர்ந்தநல்லோர்.

(இ-ள்.) நிறை பராபரம விஞ்ஞானம நிராமயம என்று - எங்கும் நிறைந்த பராபரமென்றும் விஞ்ஞானமென்றும் நிராமயமென்றும், நூல்கள் அறை பரம்பிர மம் ஆகும் இதன் உரு ஏக மறை ஆகும் - நூல்கள்கூறும் பரம்பிரமமாகிய இந்த ச்சிவலிங்கமூர்த்தியின் திருவுருவமே ஒன்றாயுள்ள வேதமாம, நூல் உணர்ந்த நல் லோர் - நூல் முற்றுமுணர்ந்த பெரியோர்கள், அதன் பொருளே - அவ்வேதத்தின் பொருளே, இந்த சுந்தரம் வடிவாய் இங்ஙன் உறை சிவலிங்கம் ஒன்றே என்பர்-இ ந்தச் சோமசுந்தரமூர்த்தமாய் இவ்விடத்து எழுந்தருளிய சிவலிங்கமூர்த்தி யொன் றே என்று கூறுவார்.

பராபரம் பராசத்திக்கு மேலானவன். விஞ்ஞானம் மேலான பரஞான வடிவையுள்ளவன். நிராமயம் நோயில்லாதவன். பரம்பிரமம் மேலான வியாபியாயுள்ளவன். இவ்வாறுள்ள நின்மலசொரூபமாகிய சிவபெருமானொருவனே கர்த்தாவாய் நிற்றலால் வேதமும் ஒன்றேயெனவும், அச்சிவபெருமான் பிரதிவிம்பித்தற்கு விம்பமாய் நின்ற பிரணவத்திற்றோன்றுதலால் அவ்வேதம் அவனுருவாகும் எனவும், அப்பிரணவத்தின் வாச்சியமாய் நிற்றலால் அதன் பொருளே சிவலிங்கம் எனவும், பூரணகர்த்தாவாகிய பரசிவத்தைப்போல அப்பராசத்தியும் நிற்றலால் நிறையெனவுங் கூறினர். பராபரம் என்றது தாபரமூர்த்தம் எனவும், பரம்பிரமம் என்றது சொரூபசிவம் எனவும்கொள்க. சிவபெருமான் பிரதிவிம்பம் எனவும், அதன் பொருளே சிவலிங்கமெனவும் கூறியதற்கு "அகநிலவிப்பிரணவத்துப்பரசிவமே பிரதிவிம்பமாயிருக்கும் - அகலமுறவாதலின்மற்றது சிவவாசகமென்றே யறிஞர் சொல்வர் - அகமில்பரம்பொருளதுவுமிதுவு மிரண்டலவிரும்புமழலும்போலும்" எனவும், "பேராரிப்பரசிவமும் பிரணவத்தின்வேறாகப்பெற்றியாலே" எனவும் சூதசங்கிதை எக்கிய வைபவகாண்டம் பிரணவமுரைத்த அத்தியாயத்தில் வருதல்காண்க. (உகூ)

ஆகையான்மறையுமொன்றேயருமறைப்பொருளுமொன்றே
சாகையாலனந்தமாகித்தழைத்ததச்சாகையெல்லா
மோகையாலிவனையேத்துமுலகுதயாதிக்கிந்த
வேகனாணையினான்மூன்றுமூர்த்தியாயிருந்தானன்றே.

(இ-ள்.) ஆகையால் - நூலுணர்ந்தோ ரிவ்வாறு கூறுதலால், மறையும் ஒன்றே - வேதமும் ஒன்றே, அருமறைப்பொருளும் ஒன்றே - அவ்வேதத்தின் அரிய பொருளும் ஒன்றே, சாகையால் அனந்தமாகித் தழைத்தது - (அவ்வொரு வேதம்) சாகைகளால் அனந்த பேதமாய்த் தழைத்துள்ளது, அச் சாகை யெல்லாம் ஓகையால் இவனை ஏத்தும் - அவ்வேதத்தின சாகைகளெல்லாம் விருப்பால் இவனையே துதியாநிற்கும், உலகு உதயாதிக்கு இந்த ஏகன் ஆணையினால் மூன்று மூர்த்தியாய் இருந்தான் - உலகத்தோற்றத்திற்கும் பாதுகாப்பிற்கும் இறதிக்கும் இந்தச் சோமசுந்தரமூர்த்தி(தனது)அருட்சத்தியால் பிரமன் முதலிய மூர்த்திகளாயிருந்தான்.

வேதம் ஒன்றே சாகாபேதங்களால் இருக்கு முதலியனவாக நானகுவகைப்பட்டது ஆதலால் சாகையாலனந்தமாகித் தழைத்ததெனவும், அதுபோல ஏகமாயுள்ள தானும் சிருஷ்டி, திதி, சங்காரத்தின்பொருட்டுப் பிரமன் முதலிய திரிமூர்த்திகளாய் நிற்றலால் உலகுதயாதிக்கிந்த ஏகனாணையினால் மூன்றுமூர்த்தியாயிருந்தான் எனவுங் கூறினர். சாகாபேதங்களால் வேதம நானகுவகைப்பட்டதென்பது "சீட்டிசைமுகத்து" எனப் பின்வருஞ் செய்யுளாலுணர்க. (கூ0)

மலர்மகனாகிமூன்றுவையமும்படைத்துமாலா
யலைவறநிறுத்திமுக்கணாதியாயழித்தம்மூவர்
தலைவனாய்ப்பரமாகாசசரீரியாயமுதலிறின்றித்
தொலைவருஞ்சோதியாமிசசுந்தரவிலிங்கந்தன்னில்.

(இ-ள்.) மலர் மகனாகி மூன்று வையமும் படைத்து - பிரமனாகி மூன்றுலகங்களையும் படைத்து, மாலாய் அலைவு அற நிறுத்தி - திருமாலாய் உயிர்கள் வருத்தமறத் தாங்கி, முக்கண் ஆதியாய் அழித்து - திரிநேத்திரங்களையுடைய உருத்திரமூர்

த்தியாய் இலைப்பொழித்து, அம்மூவர் தலைவனாய் - அத்திரிமூர்த்திகளுக்கு மிறைவனாகி, பரமாகாச சரீரியாய் - சிதாகாசமே தனக்கோர் திருமேனியாக வுடையவனாய், முதல் ஈறு இன்றி தொலை வரும் சோதி ஆம் இச்சுந்தர இலிங்கக் தன்னில் - தோற்றமும் நடுவும் இறுதியுமில்லாமல் என்றுங் கெடாத ஒளிவடிவாயுள்ள இந்தச்சோமசுந்தர இலிங்கமூர்த்தியில்.

முதலீறு என்றமையால் நடுவென்பதுகூறாதேயமைதலால் நடுவென விரித்துக்கூறினும். ஆன்மாக்களுக்கு மலபாகம் வருவித்துத்தனது திருவடியிற்கூட்டுதற்குச்சிருட்டியாதிதொழில்களைநடத்துதலால்மலர்மகனாகி மூன்றுவையமும் படைத்து மாலாய் அலைவற நிறுத்தி முக்கணாதியாயழித்து எனவும், இத்தொழில்களையம்மூவரும் தனது ஆணைமேற்கொண்டு நடத்த நிற்றலால் அம்மூவர் தலைவனாய் எனவும், இவற்றில் தாகசற்று விகாரமின்றி நிற்றலால் பரமாகாசசரீரியாய்எனவும், இவ்வாறுநிற்பவன் வாக்குமனாதீதனாதலால் முதலீறின்றி எனவும், சந்திர சூரியாக்கினி நக்ஷத்திரங்கள் முதலியவற்றிற்கெல்லாம் ஒளிதருவோன் ஆதலால் தொலைவருஞ் சோதியாம் எனவுங் கூறினார். சிவபெருமானே சிருட்டியாதித் தொழில்களை நடத்துகின்றான் என்பது "போற்றியெல்லாவுயிர்க்குந் தோற்றமாம்பூங்கழல்கள் - போற்றியெல்லாவுயிர்க்கும் போகமாம்பூங்கழல்கள் - போற்றியெல்லாவுயிர்க்கு மீறுமிணையடிகள் - போற்றிமாலுநான்முகனுங் காணாதபுண்டரிகம் - போற்றியாமுய்யவாட்கொண்டருளும் பொன்மலர்கள்" எனத் திருவாசகத்திலும், அம்மூவர் தலைவனாய் என்பது "மூவணைவல்தன்சத்தி முத்தொழில்செய்யவாளா - மேவண்ணல்" என இந்நூலிலும், விகாரமின்றி என்பது "கந்தமலரயன்படைக்கும்"என்னும்விருத்தத்தில் "விகாரங்கள் மருவான" எனச் சிவப்பிரகாசத்திலும், சந்திர சூரியாக்கினி நக்ஷத்திர முதலியவற்றிற்கு ஒளிதருவான் என்றது "மெய்ச்சுடருக்கெல்லாம் - ஒளிவந்தபூங்கழல்" என ஷை திருவாசகத்திலும் வருதல் காண்க. (கூ௪)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதியிலான்மதத்துவமானவலர்மகன்பாகமுநடுவி
னீதியின்விச்சாதத்துவமானநெடியவன்பாகமுமுடிவி
லோதியசிவதத்துவமெனலானவுருத்திரபாகமுமுதிக்கும்
பேதியிம்மூன்றிலெண்ணிறந்துவங்கள்பிறக்குமம்மூன்றின்முறையால்.

(இ-ள்.) ஆதியில் ஆன்ம தத்துவம் ஆன அலர் மகன் பாகமும் - முதலில் ஆன்மதத்துவமாயுள்ள பிரமன் பாகமும், நடுவில் நீதியின் விச்சாதத்துவமான நெடியவன் பாகமும் - மத்தியில் முறைப்படி வித்தியாதத்துவமாயுள்ள திருமால்பாகமும், முடிவில் ஓதிய சிவ தத்துவம் எனல் ஆன உருத்திரபாகமும் உதிக்கும் - மத்தகத்தில் கூறப்பட்ட சிவதத்துவமென்னும் உருத்திரபாகமுந் தோன்றும், பேதி இம்மூன்றில் - இவ்வாறு வேறுபட்ட இம்மூவகைத தத்துவங்களில், எண்ணில் தத்துவங்கள் பிறக்கும் - அளவில்லாத தத்துவங்கள் தோன்றும், அம்மூன்றினும் முறையால் - அம்மூன்று தத்துவங்களின் முறைப்படி.

சிவலிங்கம் பன்னிரண்டங்குலமாகில் நந்நான்கங்குலங்களாகப்பிரித்து முறையே ஆன்மதத்துவமுதலாகக்கொள்ளநிற்றலால் ஆதியில், நடுவில், முடிவில் என்றார்.

ஆன்மதத்துவம்-உச. பூதம்-ரு, புலன்-ரு, ஞானேந்திரியம்-ரு, கன்மேந்திரியம்-ரு, அந்தக்கரணம்-ச, ஆ உச. வித்தியாதத்துவம் காலம், நியதி, கலை, வித்

தை, இராகம், புருடன், மாயை ஆ எ. சிவதத்துவம் சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆ ரு. இத்தத்துவங்களினின்று சூக்குமை முதலிய வாக்குகளும், பிராணவாயுமுதலிய வாயுக்களும், வசனாதிகளும், குணதத்துவமும், தைசதமுதலிய ஆங்காரமும், சாக்கிர முதலிய அவத்தைகளும் ஆகிய இவை முதலியன தோன்றுதலால் பேதி யிம்மூன்றி லெண்ணிறத்துவங்கள் பிறக்கும் என்றார். மத்தகம் என்றது பூசாம்சத்தை. (கூஉ)

ஓதருமகாரமுகாரமேமகாரமுதித்திடும்பிரணவம்விந்து
நாதமோடுதிக்கும்வியத்ததாரகத்தினல்லகாயத்திரிமூன்று
பேதமாம்பதத்தாற்பிறக்குமிக்காயத்திரியிருபேதமாம்பேதம்
யாதெனிற்சமட்டிவியட்டியென்றிரண்டுமேதுவாம்வேட்டவைக்கெல்லா[ம்

(இ-ள்.) ஓது அரும் அகாரம் உகாரம் மகாரம் உதித்திடும்-சொல்லுதற்கரிய அகாரமும் உகாரமும் மகாரமும் அத்தத்துவங்களினின்று தோன்றும், பிரணவம் விந்து நாதமோடு உதிக்கும்-(அவ்வக்கரங்களோடு) பிரணவமானது விந்து நாதங்களோடுந்தோன்றும், வியத்த தாரகத்தின் நல்ல காயத்திரி மூன்று பேதம் ஆம் பதத்தால் பிறக்கும்-விளங்கும் அப்பிரணவத்தில் (வியாகிருதிகளோடு) நன்மையைத் தரும் காயத்திரி மூன்றுபேதமாகிய பதங்களால் தோன்றும், இ காயத்திரி இருபேதம் ஆம் - இந்தக்காயத்திரி யிரண்டுபேதமாம், பேதம் யாது எனில் சமட்டி வியட்டி - பேதம் யாதென்று வினவில் சமட்டி வியட்டியாம், என்ற இரண்டும் வேட்டவைக்கு எல்லாம் ஏதுவாம் - என்று கூறப்பட்ட இவவிரண்டும் ஆன்மாக்கள் விரும்பினவைகளெல்லாம் பெறுதற்குக் காரணங்களாம்.

வியத்ததாரகம் என்றதற்கு விளங்கும் ஆதாரமாகிய இச்சிவலிங்கமூர்த்தியினின்று எனப்பொருள்கொள்ளலும் ஒன்று.

பிரணவமானது அகர முதலிய ஐந்தக்கரங்களின் வடிவாய் நிற்றலால் அவ்வக்கரங்களோடு என்றும். இருபத்துநான்கு எழுத்துகளின் வடிவாயுள்ள காயத்திரி மூன்று வாக்கிய முடிபாயுள்ளது ஆதலால் காயத்திரி மூன்றுபேதமாம் பதத்தாற் பிறக்கும் என்றார். அகரமுதலிய அக்கரங்களின் வடிவாய் நிற்றல் "அவ்வுடனுவ்வுமவ்வுமனம் புத்தியகங்காரங்கள் - செவ்வியவிந்துநாதஞ் சித்தமோடுள்ளமாகும் - ஒவ்வெனுமெழுத்தாமைந்தும" எனவரும் சிவஞானசித்தியாரில் சமட்டியிற் பிரணவரூபம் ஐந்தெழுத்தாம் எனக்கூறியிருத்தல்காண்க. வியாகிருதிகளென்றது காயத்திரிக்குரியஅங்கங்களை. சமட்டி, வியட்டி என்றது உச்சரிப்பின்பேதங்களை.

இன்னவையிரண்டுமிவனருள்வலியாலின்றநான்மறையயந்நான்கும்
பின்னிவனருளாலளவிலவானபிரணவமாதிமந்திரமு
மன்னவாறனதாரகத்தகாரமாதியக்கரங்களுமுதித்த
சொன்னவக்கரத்தின்சிவாகமநூலிசுரவரனடுமுகத்துதித்த.

(இ-ள்.) இன்னவை இரண்டும் இவன் அருள் வலியால் நான்மறையை ஈன்ற - இவ்விரண்டும் இச்சோமசுந்தரக்கடவுளின் திருவருட்சத்தியால் நான்கு வேதங்களையுந் தந்தன, அந்நான்கும் - அந்நான்கு வேதங்களும், பின் இவன் அருளால் அளவு இலவான - பின்பு இம்மூர்த்தியின் திருவருளால் அளவில்லாதனவாய் விரிந்தன, பிரணவம் ஆதி மந்திரமும் அன்னவாறு ஆன் - பிரணவத்தை முதலிலுள்ள சத்தகோடி மகாமந்திரங்களும் (அப்பிரணவத்தில்) அவ்வாறு தோ

ன்றின, தாரகத்து அகாரம் ஆதி அக்கரங்களும் உதித்த - அப்பிரணவத்தில் அகார முதலிய ஐம்பத்தோரக்கரங்களுந் தோன்றின, சொன்ன அக்கரத்தின்-கூறிய அக்கரங்களின் (வடிவாயுள்ள) சிவாகமநூல் இச்சுரவரன் ஈடுமுகத்து உதித்த- சிவாகமநூல்கள் இந்தச் சோமசுந்தரக்கடவுளின் ஈடுமுகத்திற்றோன்றின.

தாரகம் என்றது வேதமுதலியன தோன்றுதற்கு ஆதாரமாய் நிற்றலால் அக்காரணம்பற்றிப் பிரணவத்தின்மேல் நின்றது எனஅறிக.

சிவாகமங்கள் காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகசிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கிநேயம, வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம, இலளிதம, சித்தம, சந்தானம், சருவோக்தம், பாரமேச்சுரம், கிரணம், வாதுளம் என - உஅ. இவை தனித்தனி ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என நான்கு பாதங்களை யுடையனவாயிருக்கும். (௩௪)

நீட்டிசைமுகத்தொன்றடுத்தநாலைந்திற்கிளைத்ததாமிருக்கதுதென்பா
னீட்டியவிரண்டாம்வேதநூறுருவோடெழுந்தது குடதிசைமுகத்தி
னீட்டியசாமமாயிரமுகத்தாலிமிர்ந்தது வடதிசைமுகத்தி
னாட்டியவொன்பதுருவொடுகிளைத்து நடந்தது நான்காமறையே.

(இ-ள்.) சீழ் திசை முகத்து ஒன்று அடுத்த நாலைந்தில் கிளைத்தது இருக்கு - தற்புருடமுகத்தில் இருபத்தொரு சாகையோடு இருக்குவேதந் தோன்றியது, தென்பால் ஈண்டிய இரண்டாம வேதம் நூறு உருவோடு எழுந்தது - அகோரமுகத்தில் நெருங்கிய யசுர் வேதம் நூறு சாகைகளோடு தோன்றியது, குட திசை முகத்தில் நீட்டிய சாமம் ஆயிர முகத்தால் நிமிர்ந்தது - வாமதேவமுகத்தில் அளவில்லாத சாமவேதம் ஆயிரஞ்சாகைகளோடு தோன்றி எழுந்தது, வடதிசை முகத்தில் நாட்டிய ஒன்பது உருவொடு கிளைத்து நான்காமமறை நடந்தது - சத்தியோசாத முகத்தில் உண்மைப்பொருளை நிலைநிறுத்திய ஒன்பது சாகைகளாகி அதர்வ வேதந்தோன்றி நடந்தது.

இருக்கது நான்கது அது பகுதிபொருள்விகுதி. ஈட்டிய வலித்தல்விகாரம்.

அருமறைநால்வேறுகையால்வருணமாச்சிரமங்களுநான்காந்
தருமம்யாகாதிகருமமுமறையின்றகைமையிற்றோன்றினமறையுங்
கருமநூன்ஞானநூலெனவிரண்டாங்கருமநூலிவனருச்சனைக்கு
வரும்வினையுணர்த்துஞானநூலிவன்றன்வடிவிலாவடிவினையுணர்த்தும்.

(இ-ள்.) அருமறை நால் வேறு ஆகையால்-அரிய வேதங்கள் நான்கு கூறுகையால், வருணமும் ஆச்சிரமங்களும் நான்காம - வருணமும் ஆச்சிரமங்களும் நந்நான்கு வகைப்படும், தருமம் யாகாதி கருமமும் மறையின் தகைமையில் தோன்றின - தருமவடிவாகிய யாகமுதலிய கருமங்களும் வேதத்தின்பொருளின் வழியிற்றோன்றின, மறையும் கருமநூல் ஞானநூல் என இரண்டு ஆம்-வேதமும் கருமநூல் ஞானநூலென இரண்டுவகைப்படும், கருமநூல் இவன் அருச்சனைக்குவரும் வினை உணர்த்தும்-கருமநூல் இவனருச்சனைக்குரிய கிரியைகளைக் கூறும், ஞானநூல் இவன் தன் வடிவு இல்லாவடிவினை உணர்த்தும்-ஞானநூலானது இச்சிவபெருமானுடைய நின்மல சொரூபத்தைத் தெரிவிக்கும்.

வருணம் நான்காவன பிரம, சத்திரிய, வசிய, சூத்திரர் எனப்படும். ஆச்சிரமம் நான்காவன பிரமசரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் எனப்படும். வேதத்தின் அபரார்த்தமாகிய தருமம் யாகாதி கருமங்களாதலால், தருமம் யாகாதிகருமம் எனவும், யாகம் தூலம், சூக்குமம் என இருவகைப்படுதலால் பொதுப்பட யாகாதியெனவும், கருமம்-மானதம, வாசிகம், காயிகம் என மூவகைப்படுதலால் மூற்றும்மை தந்து கருமமும் எனவும், கருமம் எல்லாத்தொழிற்கும் பொதுப்பட நின்றதெனினும் சிவார்ச்சனை சிவத்தைப் பெறுகைக்குரிய தொழிலாகையால் கருமநூலிவனருச்சனைக்குவரும் வினையுணர்த்தும் எனவும், வேதத்தின் பரார்த்தம் சிவத்தைப் பெறுகைக்கு அப்பரசிவத்தின் நின்மலசொரூபத்தை யுணர்த்துதலால் ஞானநூலிவன்றன் வடிவிலா வடிவினையுணர்த்தும் எனவுங் கூறினார். (ருசு)

முதனுகர்நீராற்சினைகுழைத்தாங்கிம்முழுமுதற்கருத்துநல்லவியின்
பதமிவன்வடிவப்பண்ணவர்பிறக்குந்திருத்தியாம்பரனிவன்முகத்தின்
விதமுறுநித்தமாதிமூவினைக்கும்வேண்டியங்குலகவர்போகங்
கதிபெறவியற்றுஞ்சிவார்ச்சனைவினைக்குங்காரணமீசசிவகோசம்.

(இ-ள்.) முதல் நுகர் நீரால் சினை குழைத்தால் ஆங்கு-வேர் நுகரும் நீரினால் கிளைகள் தளிர்த்தாற்போல, இம் முழு முதற்கு அருத்தும் நல் அவியின் பதம் - இச்சிவலிங்கப்பெருமானுக்கு ஊட்டும் நல்ல அவியுணவு, இவன வடிவம் பண்ணவர் பிறக்கும் திருத்தியாம் - இம்மூர்த்தியின் திருவுருவமாகிய தேவர்கள் பிறக்குந் திருத்தியாய் முடியும், பரன் இவன் முகத்தில் - இறைவனாகிய இச்சிவபெருமான் சந்நிதியில், விதம் உறும் நித்தம் ஆதி மூவினைக்கும்-(செய்யும்) வெவ்வேறு வகைப்பட்ட நித்த முதலிய மூன்று தொழில்களுக்கும், உலகவர் போகம் கதி வேண்டி பெற இயற்றும் சிவார்ச்சனை வினைக்கும் - உலகினர் போகத்தையும் முத்தியையும் பெறச்செய்யும் சிவார்ச்சனைக்கும், ஈச சிவ கோசம் காரணம - இச்சிவலிங்க மூர்த்தியே காரணமாயுள்ளது. .

பிரமன் முதலிய தேவவடிவமாய் நிற்றலால் இம்முழுமுதற்கருத்து நல்லவியின் பதமிவன் வடிவம் பண்ணவர் பிறக்குந் திருத்தியாம் என்றார், நித்த முதலிய மூவினைகள் நித்தம், நைமித்தம், காமியம் இவைகளை முன்னர்க் காண்க. அங்கு அசைநிலை. (ருஎ)

மறைபலமுகங்கொண்டலறிவாயிளைத்துமயங்கவேறகண்டபூரணமாய்
நிறைபரம்பிரமமாகுமிக்குறியைக்கருமநன்னெறிவழாப்பூசை
முறையினுஞானநெறியினிப்பொருளையருளினான்முயக்கறமுயங்கு
மறிவினுந்தெளிவதுமக்குநாமுரைத்தவருமறைப்பொருள்பிறர்க்கரிதால்.

(இ-ள்.) மறை பல முகங் கொண்டு அலறி வாய் இளைத்து மயங்க - வேதங்கள் அனேக முகங்கொண்டு (தேடியுமுணராது) கதறி வாய்சோர்ந்து மயங்க, வேறு அகண்ட பூரணமாய் நிறை பரம் பிரமம் ஆகும் இக்குறியை - (அவற்றிற்கு) வேறாய் அகண்ட பூரணமாகி நிறைந்த சொரூபசிவமாகிய இந்தச் சிவலிங்கப்பெருமானை, நல் கருமம் நெறி வழா பூசை முறையினும் - நல்ல கருமகாண்டத்திற் கூறிய நெறியினின்றுந் தவறாத பூசைமுறையினாலும், ஞான நெறியின் இப்பொருளை அருளினால் முயக்கு அற முயங்கும் அறிவினும் தெளிவது - ஞானகாண்டத்திற்கூறிய நெறியினின்று இச்சிவலிங்கப்பெருமானை (அவனது) திருவருளினால் கலப்பறக்கல

க்கும் உணர்வினாலும் அவனையறிதல், உமக்கு நாம் உரைத்த அருமறைப்பொருள் - உமக்கு நாங்கூறிய வேதத்தினுட்கிடைப்பொருள். பிறர்க்கு அரிது-(இதனையுணர்தல்) ஏனையோர்க்கரியது.

பலமுகங்கொண்டு என்றது சாகைகளை. வேதத்தினுட்கிடைப்பொருளாயிருப்பினும் அவ்வேதம் சடமாயுள்ள விந்துவிற் றோன்றினமையால் சித்தாயுள்ள சிவத்தை யறிதலருமையால் அலறி வாயிளைத்து மயங்க வேறகண்ட பூரணமாய் நிறை எனவும், ஞானகாண்டம் வடிவிலா வடிவினை புணர்த்ததலால் அவனது நின்மல சொரூபத்தை யவன் திருவருளாலே இரண்டற நின்றுணரவேண்டுதலால் அருளினுன் முயக்கற முயங்கும் அறிவினும் எனவுங் கூறினார். (௩௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

> கருமத்தான் ஞானமுண்டாங் கருமத்தைச்சித்தசுத்தி
> தருமத்தாலிகந்தசித்தசுத்தியைத்தருமநல்கு
> மருமைத்தாந்தருமத்தாலேசாந்திமுண்டாகுமாண்ட
> பெருமைத்தாஞ்சாந்தியாலேபிறப்பதட்டாங்கயோகம்.

(இ-ள்.) கருமத்தால் ஞானம் உண்டாம் - கருமகாண்டத்திற்கூறிய சற்கருமத்தால் ஞானகாண்டத்திற்கூறிய ஞானங் கைகூடும், கருமத்தை சித்த சுத்தி தரும் - அச்சற்கருமத்தைச் சித்தசுத்தி கொடுக்கும், மந்தம் ஆல் இகந்த சித்த சுத்தியை தருமம் நல்கும் - மயக்கத்தினின்றும் நீங்கிய சித்த சுத்தியை அத்தருமங் கொடுக்கும், அருமைத்து ஆம் தருமத்தால் சாந்தி உண்டு ஆகும் - அருமையை யுடைத்தாகிய அத்தருமத்தாலே சாந்தி உண்டாகும், மாண்ட பெருமைத்து ஆம் சாந்தியாலே அட்டாங்கயோகம் பிறப்பது - மாட்சிமைப்பட்ட பெருமையையுடைய அச்சாந்தியினாலே அட்டாங்கயோகந் தோன்றும.

கருமம் என்றது முன்னர்க்கூறிய சிவார்ச்சனையை. ஞானம் என்றது பரஞானத்தை. சித்த சுத்தி என்றது நித்திய நைமித்திய கருமங்களைச் சிவார்ப்பணமாகச் செய்ததால் வந்த பயனை. தருமம் என்றது பத்துவகைப்பட்ட சிவபுண்ணியத்தை. சாந்தி என்றது அகக்கரணநிக்கிரகத்தை. அட்டாங்கயோகம் என்றது இயம முதலிய எட்டினை. சிவபுண்ணியம் கொல்லாமை, பொறுமை, உண்மைகூறல், பழி பாவத்துக்கு அஞ்சுதல், புண்ணியத்திலிச்சை, மனமுதலியவற்றை யொடுக்கல், கொடை, சிவார்ச்சனை, தவம், சதாசிவாதி விக்கிரகங்களைத் தியானித்தல் எனப் பத்தாம். அட்டாங்கயோகம் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டுவகைப்படும். கருமத்தால் ஞானமுண்டாம் என்பது "கிரியையெனமருவுமவையாவுஞானங் கிடைத்தற்குநிமித்தமெனக் கிளக்கும்" என்னுஞ் சிவப்பிரகாசத்தாலும், சித்தசுத்தி என்பது "நித்தியநைமித்தியகன்மங்களிட்காமியமாகப் - பத்தியுறச்செய்வதாற் பாவமெலாநாசமுறும் - ஒத்தியன்மற்றதனுனே யொழியாமலுறுஞ்சித்த - சுத்தியுளதாமென்று சொல்லுமான்மறையனைத்தும்" என்னும் சூதசங்கிதையாலும், சிவபுண்ணியம் பத்தென்றது "அகிம்சைபொறையேமெய்ம்மை யறைதலேயரியநாணே - உயர்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே - வியந்தவர்ச்சனையேமெய்யூன் வெறுத்துறுதவமே மேனி - நயந்தபாவனையேயென்னத் தசமிவைநன்றெந்நாளும்" என்னும் சிவதருமோத்தரத்தாலும், அட்டாங்கயோகம் "இயமநியமமாசனமே யிலங்குபிராணாயாமமே - வயமார்பிரத்தியாகாரம் வருதாரணையேதியானமே - பயமார்சமாதி யென

வெட்டு" என்னும் ஷெ சூதசங்கிதையாலும் உணர்க. இயமமுதலியவற்றை விரிக்கிற் பெருகும். மத்தம் ஈறுதொக்குநின்றது. ஆல் உருபுமயக்கம். (௩௯)

கிரியையான் ஞானந்தன்னாற்கிளர்சிவபத்திபூசை
தெரிசனஞ்சைவலிங்கதாபனஞ்செய்தலீசற்
குரியமெய்யன்பர்பூசையுருத்திரசின்னந்தாங்க
லரியதேசிகன்பாற்பத்தியனைத்தையுந்தெரியலாகும்.

(இ-ள்.) கிரியையால் ஞானந் தன்னால் - கிரியையினாலும் ஞானத்தினாலும், கிளர் சிவபத்தி பூசை தெரிசனம் - விளங்கும் சிவபத்தியும் சிவபூசையும் சிவதெரிசனமும்; சைவ லிங்க தாபனம் செய்தல் - சிவலிங்க தாபனஞ்செய்தலும், ஈசற்கு உரிய மெய் அன்பர் பூசை - சிவபெருமானுக்குரிய மெய்யடியார் பூசையும், உருத்திர சின்னம் தாங்கல் - சிவவேடம் தாங்குதலும், அரிய தேசிகன் பால் பத்தி - பெறுதற்கரிய ஞானாசிரியனிடத்து அன்பு கொள்ளுதலும், அனைத்தையும் தெரியலாகும்- (ஆகிய) இவை முற்றும் அறியலாம்.

பரஞானமடைந்த சீவன்முத்தர்களும் பற்றற நீங்கின மும்மலங்களும் பழைய வாசனுபலத்தால் விளக்கற்றம் பார்க்கும் இருள்போல் அறிவற்றம்பார்த்துத் தாக்குதலால் அவற்றைப் பரிகரித்தற்குத் துணையாகச் சிவபத்தி, சிவபூசை, சிவதரிசன முதலியவறறைக் கொள்ளவேண்டுதலால் ஞானந் தன்னால் அனைத்தையுந் தெரியலாகும் என்றார். "செங்கமலத்தாளிணைகள் சேரவொட்டாத் - திரிமலங்களறுத் தீச னேசரொடுஞ் செறிந்திட் - டங்கவர்நற்றிரு வேடமாலயங்களெல்லாம் - அரனெனவேதொழுதிறைஞ்சி யாடிப்பாடி - எங்குமியாமொருவருக்கு மெளியோமல்லோம் - இயாவருக்குமேலானேமென் றிறுமாப்பெய்தித் - திங்கண்முடியாரடியாரடியோமென்று - திரிந்திடுவர்சிவஞானச் செய்தியுடையோரே" எனவரும் சிவஞானசித்தியாரால் உணர்க. (௪0)

மறைவழிமதங்கட்கெல்லாமறைபிரமாணம்பின்சென்
றறைதருமிருதியெல்லாமவைக்கனுகுணமாமின்ன
முறையினான்மார்த்தமெனறுமொழிவதம்மார்த்தஞ்சேர்ந்த
துறைகள்வைதிகமாமேலாச்சொல்வதிச்சுத்தமார்க்கம்.

(இ-ள்.) மறைவழி மதங்கட்கு எல்லாம் மறை பிரமாணம் - வேதத்தின்வழி நின்ற கொளகைகளுக்கெல்லாம் வேதமே பிரமாணமாம், பின் சென்று அறை தரும் மிருதி எல்லாம் அவைக்கு அனுகுணம ஆம - அவ்வேதத்தின் வழியே சென்று அவ்வேதத்திற்குப் பொருந்தக்கூறும் மிருதிகளெல்லாம அக்கொள்கைகளுக்கு அனுகுணப்பிரமாணமாம், இன்ன முறையினால் மார்த்தம் என்று மொழிவது - (வேதத்திற்குப் பொருந்தக்கூறும்) இநத முறையினால் அவ்வனுகுணப்பிரமாணம் மார்த்தமென்று கூறப்படும, அம் மார்த்தம சேர்ந்த துறைகள் வைதிகமாம் - அம்மார்த்தஞ்சேர்ந்த பாகுபாடுகள் வைதிகமாகும், இச் சுத்த மார்க்கம் மேலா சொல்வது - இச் சுத்தமார்க்கமாகிய வைதிகமார்க்கம மேலாகக் கூறப்படும்.

வேதத்திற்கூறுங் கொள்கைக்கு மிருதியிற்கூறுங் கொள்கை விருத்தமின்றியொத்திருக்கவேண்டும் என்பார் பின்சென்றறைதரும் எனவும், இந்தப்பிரமாணம் இரண்டாவது என்பார் அனுகுணமாம் எனவும், சுருதியிற்கூறுவது சிரௌதம் என்

ருற்போல மிருதியிற்கூறுவது மார்த்தம் என்பார் இன்ன முறையினால மார்த்தம் எனவும், தன்னொடு முரணுதலின்றி நின்ற மார்த்தந்தழுவிய வேதமார்க்கம் என்பார் வைதிகம் எனவுங் கூறினார். (சக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தெருள்பெறுபோகம்வீடுகாரணமாய்ச்சிவமயமாமறைப்பொருளை
யிருட்கெடவுரைத்தேமிப்பொருட்கதிகமில்லையிப்பொருளெலாமுமக்கு
மருட்கெடத்தெளிவதாகெனவினையவழிவழாமாதவர்புறத்தை
யருட்கையாற்றடவியிலிங்கத்துட்புகுந்தானருள்பழுத்தன்னதேசிகனே.

(இ-ள்.) தெருள் பெறு போகம் வீடு காரணமாய் - தெளிவுபெற்ற பந்தமோக்ஷங்களுக்குக் காரணமாகி, சிவமய மாம மறைப் பொருளை இருள் கெட உரைத்தேம்-சிவமயமாகிய வேதப்பொருளை மயக்கங்கெடக் கூறினேம், இப்பொருட்கு அதிகம் இல்லை-(யாங்கூறிய) இந்தப் பொருளுக்கு மேம்பட்ட பொருளில்லை, இப் பொருள் எல்லாம் உமக்கு மருள் கெட தெளிவது ஆகென - இப்பொருள்களெல்லாம் உங்களுக்கு அறியாமை நீங்க விளங்கக்கடவதென்று, அருள் பழுத்தால் அன்ன தேசிகன்-அருள் கனிந்தாலொத்த திருவுருவத்தையுடைய தேசிகர், இனைய வழி வழா மாதவர் புறத்தை அருள் கையால் தடவி இலிங்கத்துள் புகுந்தான் (கூறிய) இம்மார்க்கத்தினின்றுஞ் சிறிதும் வழுவாத கண்ணுவர் முதலிய முனிவர்களுடைய முதுகைக் கருணையோடு தமது திருக்கரத்தால் தடவிச் சிவலிங்க மூர்த்தியுள் கரந்தருளினார்.

பக்குவர்க்குப் பிராரத்தவாதனையை ஒழித்தற்குச் செய்யுந் தீக்கையாதலால் மாதவர்புறத்தை யருட்கையாற்றடவி யென்றார். (சஉ)

வேதத்துக்குப் பொருளருளிச் செய்தபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கககூரு.

---

## பதினேழாவது.

# மாணிக்கம்விற்றபடலம்.

கலிநிலைத்துறை.

சுகந்தவார்பொழின்மதுரையெம்பிரான்றனதுணைத்தா
ளுகந்தவாவறுகண்ணுவமுனிமுதலோரது
மகந்தவாதபேரன்பருக்கருமறைப்பொருளைப்
பகர்ந்தவாறிதுமாணிக்கம்பகர்ந்தவாபகர்வாம்.

(இ-ள்.) சுகந்தம் வார் பொழில் மதுரை எம்பிரான் தன துணைத்தாள் உகந்து - நல்ல வாசமிக்க சோலைசூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய இரண்டு திருவடிகளையும் விரும்பி, அவா அறு கண்ணுவ முனி முதல் ஓதும்-ஆசையொழிந்த கண்ணுவமுனிவர் முதலாகக் கூறும், அகம் தவாத பேர் அன்பரு

க்கு - மனத்தினின்று நீங்காத பெரிய அன்பினையுடைய முனிவர்களுக்கு, அருமறைப் பொருளை பகர்ந்த ஆறு இது - அரிய வேதத்தின் பொருளைக் கூறிய திருவிளையாடல் இத்திருவிளையாடல், மாணிக்கம் பகர்ந்த ஆறு பகர்வாம் - மாணிக்கம்விற்ற திருவிளையாடலை இனிக் கூறுவாம்.

தவாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சத்தின் பகுதி தா என முதல் குறுகின்றது. (௯)

அன்னநாள்வயின்வீரபாண்டியற்கணங்கனைய
மின்னனாருளோம்போகமும்விளைநிலமனைய
பொன்னனார்பெறுகாளையராய்கணைப்புத்தே
ளன்னவீறினார்வான்பயிர்க்கெழுகளையென்ன.

(இ-ள்.) அன்ன நாள் வயின் - அந்நாளில், வீரபாண்டியற்கு அணங்கு அனைய மின் அன்னாருள் - வீரபாண்டியனுக்குக் கொல்லியம்பாவையையொத்த கிழத்தியருள், ஐம் போகமும் விளை நிலம் அனைய பொன் அன்னார் பெறு காளையர் - ஐந்து போகங்களும் விளைதற்குரிய காமக்கிழத்தியர் பெற்ற புத்திரர்கள், வான் பயிர்க்கு எழு களை என்ன - பெரும்பயன்றரும் பயிர்க்கு இடையூறாக மேலெழுந்தோங்குங் களையைப்போலவும், ஐங் கணைப் புத்தேள் என்ன - பஞ்சபாணங்களை யேந்திய மன்மதனைப்போலவும், வீறினார் - ஓங்கினார்கள்.

கோடாதசெங்கோல் என்றாற்போல அணங்கனைய மின்னனார் என்றதனுள் மின்னனார் விசேடியமாகின்றது. மின்னன்னார்மின்னலையொத்தவர்கள். பொன்னன்னார் இலக்குமியையொத்தவர்கள். ஐம் போகம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்துப்பரிசித்தலாகிய ஐம்புலன்களால் நுகரும் போகங்கள். ஏனை விளைநிலங்கள் முப்போகங்களைத் தருவன இப்பெண்கள் ஐம்போகங்களைத் தருபவர் எனபார் ஐம்போகமும விளைநிலமனைய மின்னனார் என்றார். (௨)

பின்னரும்பெறற்குமரனைப்பெறுவதுகருதி
மன்னனுங்குலதேவியுங்கயற்கணிமணாளன
றன்னைநோக்கியட்டமிசதுர்த்தசிமதிவார
மின்னநோன்புநோற்றொழுகுவாரிறைவனின்னருளால்.

(இ-ள்.) பின் அரும் பெறல் குமரனை பெறுவது கருதி - பின்பு பெறுதற்கரிய புத்திரனைப் பெறக்கருதி, மன்னனும குலதேவியும் கயல் கண்ணி மணாளன் தன்னை நோக்கி - வீரபாண்டியனும் அவன்குலமாதும் சோமசுந்தரக்கடவுளைநோக்கி, அட்டமி சதுர்த்தசி மதிவாரம் இன்ன நோன்பு நோற்று ஒழுகுவார் - அட்டமிநோன்பு சதுர்த்தசிநோன்பு சோமவாரநோன்பு ஆகிய இந்நோன்புகளை நோற்று நடப்பாராயினார், இறைவன் இன் அருளால் - அச்சோமசுந்தரக்கடவுளின் இனியதிருவருளால்.

அட்டமி திதிகளுள் சிவபெருமானுக்குரிய விரததிதி. சதுர்த்தசி மாதந்தோறும் வருஞ் சிவராத்திரி இவைபஞ்சபருவங்களுளடங்கினவை. சோமவாரம் வாரங்களுள் சிவபெருமானுக்குரியவிரதவாரம். (௩)

சிறிதுநாள்கழிந்தகன்றபின்கன்னிகையிற்சிறந்த
மறுவிலாவடமீன்புரைகற்பினாள்வயிற்றில்

குறியவாலவித் தங்குரம்போன் றொருகுமா
னிறையுநீருலகருட் குடைநிழற்றவந் துதித்தான்.

(இ-ள்.) **சிறிது நாள் கழிந்து அகன்றபின்** - சிலநாள்சென்று நீங்கினபின், **கங்கையில் சிறந்த மறவு இல்லா வடமீன் புரை கற்பினாள் வயிற்றில்** - கங்கையினும் புனிதமாகிய குற்றமில்லாத அருந்ததியையொத்த கற்பினையுடைய வீரபாண்டியன் மனைவியின் வயிற்றில், **குறிய ஆல வித்து அங்குரம் போன்று** - (ககத்தாற்கின்னிடுக்கும்) சிறிய அளவினையுடைய ஆலவிதையினின்றுந்தோன்றிய முளையைப்போல, **ஒரு குமரன் நிறையும் நீர் உலகு அருள் குடை நிழற்ற வந்து உதித்தான்** - ஒருபுத்திரன் நிறைந்த நீர்மயமாகிய (கடல்சூழ்ந்த) உலகத்திற்குத் (தனது) கருணையே வெள்ளிய வெண்கொற்றக்குடையாக நிழல்செய்யவந்து அவதரித்தான்.

கங்கை எல்லாப்பொருள்களினும் மிக்க புனிதமாக்கும் தீர்த்தமாதலால் அதனினு மேம்பட்ட புனிதமுடைமை போதாநிற்றலால் இன் உருபு உறழ் பொருவு பொருட்டு. சிறிய ஆலவித்தினின்று தோன்றிய அங்குரம் பலசாகைகளாகப் பரந்து பல இயங்கியற்பொருள்களுக்குக் குளிர்ந்த நிழல்தந்து கொடிய வெப்பத்தைப் போக்குதல்போலத் தன்குடைக்கீழ் வாழுங் குடிகளுக்குப் பகைவெப்பொழித்துத் தண்மைதருதல் தோன்றக் குடைநிழற்றவந் துதித்தான என்பது தோன்ற நிற்றலால் குறிப்பணி. (௪)

அந்தணிசறு குமரனுக்ககங்களி சிறப்ப
மெய்த்தநான் முறைசாதகவினை முதல்வினையும்
வைத்தனன் பொலிவெய்து நாண் மன்னவ னூழ்வந்
தொத்தநாள்வர வேட்டைபுக் குழுவைகோட் பட்டான்.

(இ-ள்.) அந்தணி சிறு குமரனுக்கு - அந்த வொப்பில்லாத இளங்குமரனுக்கு, அகம் களி சிறப்ப மெய்த்த நால் முறை சாதக வினை முதல் வினையும் வைத்து - மனங்களிகூர உண்மையாகிய வேதநூல்முறையே சாதகன்ம முதலிய கிரியைகளையுஞ் செய்துமுடிக்க, அவ்வூன் பொலிவு எய்து நாள் - (வளர்ந்துநாள்) அப்புத்திரன் வளர்ந்துவருங்காலையில், மன்னவன் ஊழ் வந்து ஒத்த நாள் வர - வீரபாண்டியன் போகூழ் கூடிவருங்காலம் வர, வேட்டை புக்கு உழுவை கோட்பட்டான் - வேட்டைமேற்சென்று புலியால் விழுங்கப்பட்டான்.

சாதகன்மமுதலிய கிரியைகளை என்றது உக்கிரகுமாரர் திருவவதாரப் படலத்திற்காணக. வை, து ஒருசொல் சதுரப்பிரிபு. வலியின்மையா லுழுவைகோட்பட்டான அல்லன் எனப்பா லூழ்வந்தொத்தநாள்வர என்றார். (௫)

வேங்கைவாய்ப்படு மீனவன் விண்விருந்தாக
வாங்குநூன்மருங் கிறக்கரமார்பெறிந் தாரந்
தாங்குகொங்கைசாந் தழிந்திடத் தடங்கண்முத் திறைப்ப
வேங்கமாதர்பொன் னகருளாரியாவரு மிரங்க.

(இ-ள்.) வேங்கை வாய் படு மீனவன் விண் விருந்து ஆக - வேங்கைவாயிற்பட்ட வீரபாண்டியன் வீரசுவர்க்கத்திற்கு (ஓர்) விருந்தாகச் செல்லுதலால், **வாங்கு நூல் மருங்கு இற** - ஒசியும் நூலிழையையொத்த இடை முறியும்படி, **கரம் மார்பு எறிந்து** - (தமது) கைகளால் மார்படித்து, ஆரந் தாங்கு **கொங்கை சாந்து அழிந்திட** - முத்தாரத்தைச் சுமந்த தனங்களிற்றிமிர்ந்த கலவைச்சாந்தழிய, **தடம் கண்**

மூத்தூ இறைப்ப - விசாலித்தகண்கள் நீர்சிந்த, மாதர் ஏங்க - குலமாது முதலிய காமக்கிழத்தியர் வருந்தவும், பொன் நகர் உள்ளார் யாவரும் இரங்க-இலக்குமி(வசிக்கும்) மதுரைநகரிலுள்ளோர் யாவரும் வருந்தவும்.

பொன்னகருளார் யாவரும் இரங்க என்பதற்கு - இம்மாதராழுங்குதலைநோக்கி விண்ணுலகிலுள்ளார் யாவரும் வருந்த எனப் பொருள் கூறுதலும் ஒன்று. (௬)

மற்றவேலைகாமக்கிழத்தியர்பெறுமைந்த
ரற்றநோக்கியீதமையமென்றுனைமாவாதி
யுற்றபல்பிறபொருணிதியொண்கலனொடுங்
கொற்றமௌலியுங்கவர்ந்தனர்கொண்டுபோய்மறைந்தார்.

(இ-ள்.) மற்ற வேலை - அவ்வாறு யாவரும் வருந்தும் காலையில், காமக்கிழத்தியர் பெறும் மைந்தர் அற்றம நோக்கி - காமக்கிழத்தியர்கள் பெற்ற பிள்ளைகள் அச்சமயம்நோக்கி, ஈது அமையம் என்று - இதுதான் நல்லசமயமென்று, ஆனை மா ஆதி உற்ற பல் பிற பொருள் நிதி ஒண் கலன் கொற்றம் மௌலியும கவர்ந்தனர் கொண்டு போய் மறைந்தார் - ஆனை குதிரை முதலாகவுள்ள ஏனைப்பொருள்களும் திரவியமும் ஒள்ளிய ஆபரணமும வெற்றியையுடைய கிரீடமும் (ஆகிய இவைகளைக்) கொள்ளைகொண்டுபோ யொளித்தார்கள். (எ)

மன்னனாணையாறொழுகியமந்திரக்கிழவர்
மின்னுவேலிளங்குமரனைக்கொண்டுவிண்ணடைந்த
தென்னர்கோமகற்கிறுதியிற்செய்வினைநிரப்பி
யன்னகாதலற்கணிமுடிசூட்டுவானமைந்தார்.

(இ-ள்.) மன்னன் ஆணை ஆறு ஒழுகிய மந்திர கிழவர் - வீரபாண்டியன் ஆணைவழிச்சென்ற சுமதிமுதலிய மந்திரிமார்கள், மின்னு வேல் இளம் குமரனைக் கொண்டு - மின்னல்போல விளங்காநின்ற வேலையேந்திய புத்திரனைக்கொண்டு, விண் அடைந்த தென்னர் கோமகற்கு இறுதியில் செய் வினை நிரப்பி - விண்ணுலகடைந்த வீரபாண்டியனுக்கு இறுதியிற் செய்யவேண்டிய அந்தியேட்டிமுதலிய கடன்களைச்செய்துமுடித்து, அன்ன காதலற்கு அணி முடி சூட்டுவான் அமைந்தார் - அப்புத்திரனுக்கு மகுடஞ்சூட்ட யத்தனித்தார்கள்.

உலகையாது காத்தற்பொருட்டு ஆதலால் முடிசூட்டுவா னமைந்தார் என்றார். (அ)

நாடிப்பொன்னறைபுகுந்தனர்நவமணிமகுடந்
தேடிக்கண்டிலர்நிதிசிலகண்டிலர்திகைத்து
வாடிச்சிந்தைநோயுழந்திவைமாற்றலர்கூட்டுண்
டோடிப்போயினவாகுமென்றுணர்ந்துதுநினைவார்.

(இ-ள்.) பொன் அறை புகுந்தனர் நாடி - கருவூலத்தில் புகுந்து ஆராய்ந்து, நவ மணி மகுடம் தேடி கண்டிலா - ஒன்பதிரத்தினங்களழுத்திய கிரீடத்தைத் தேடிக்காணாது, சில நிதி கண்டிலர் - அரியவிலையுள்ள சில ஆபரணங்களையுங் காணாது, திகைத்து வாடி சிந்தை நோய் உழந்து-மயங்கி வாடி மனம் வருந்தி, இவை மாற்றலர் கூட்டுண்டு ஓடிப்போயின ஆகும்-இவைகள் பகைவர் கொள்ளையாடிக் கைக்கொண்டுபோயினவாகும், என்று உணர்ந்து - என்றாராய்ந்து, இது நினைவார் - இதனை ஆலோசிக்கின்றார்கள்.

இவை போயினவாகும் எனச்செயப்படுபொருளை வினைமுதல்போல வைத்து வினைமுதல் வினையேற்றிக் கூறினமையால் கருமகருத்தா. புகுந்தனர், கண்டிலர் வினைமுற்றுகள் எச்சங்களாய் நின்றன. (௯)

வேறுமாமுடிசெய்துமாலென்னினோவிலைமிக்
கேறுமாமணியிலையரசிருக்கையின்றின்றேற்
றேறுநீருலகுய்யுமென்செய்வதிங்கென்று
வாறுசேர்சடையாரருள்காண்டுமென்றமைச்சர்.

(இ-ள்.) வேறு மாமுடி செய்தும் என்னினோ - வேறோ விலைமிக்க கிரீடத்தைச் செய்துமுடிப்போமென்று கருதினாலோ, விலைமிக்கு ஏறு மாமணி இல்லை - அளவறுத்தற்கரிய விலையுள்ள பெரிய இரத்தினங்கள் நம்பாலில்லை, அரசு இருக்கை இன்று - (எப்போது மகுடமில்லையோ) அப்போது அரசிருக்கையுமில்லை, இன்றேல் தேறு நீர் உலகு அலையும - அரசில்லையாகில தெளிந்தகடல்சூழ்ந்த உலகுவருந்தும், இங்கு என் செய்வது என்று - இங்கு (நம்மால்) செய்துமுடிப்பது என்னவென்று கருதி, ஆறு சேர் சடையார் அருள் காண்டும் என்று அமைச்சர் - கங்கையையணிந்த சடையையுடைய பெருமானுர் திருவருளைக்காண்போமென்று மந்திரிமார்கள்.

நம்மாலாவது ஒன்றுமில்லையென்று கருதினார் என்பார் இங்கென்செய்வது என்றார். (௧௦)

களைசெயாப்பெருங்கவலைகூர்மனத்தராய்க்கறங்கு
முரசகண்படாக்கடிமனைமுற்றநீத்தருமை
யரசிளந்தளிர்க்கொழுந்தினைக்கொண்டுபோயம்பொன்
வரைசெயகோபுரவாயின்முன்வருகுவார்வருமுன்.

(இ-ள்.) களை செயா பெரும் கவலைகூர் மனத்தராய - அளவுசெய்தற்கரிய மிக்கதுன்பநிறைந்த மனத்தையுடையவராய், கறங்கும முரசு கண்படா கடிமனை முற்றம் நீத்து - ஒலிக்குமுரசங்கண்டுயிலாத காவலுடைய அரசனகோயிலின் முற்றத்தினின்றும் நீங்கி, அருமை தனி அரசு இளம் கொழுந்தினை கொண்டுபோய் - அடைதற்கரிய வொப்பில்லாத அரசகுமாரனைக்கொண்டுசென்று, அம் பொன் வரை செய் கோபுரவாயில் முன் வருகுவார் - அழகிய மகமேருமலையைக் கோபுரமாகச் செய்துவைத்தாலொத்த கோபுரத்தின் வாயிலின் முன்வரத்தொடங்கினார்கள், வருமுன் - அவர்கள்வருதற்குமுன். (௧௧)

எற்றதும்புகோவணவுடையிடப்படபிறங்கத்
துற்றபல்கதிர்மணிப்பொதிசுவன்மிசைத்தூங்க
மற்றடம்புயவரைமிசைவரம்பிலாவிலைகள்
பெற்றவங்கதம்பரிதியிற்போந்துபேர்ந்திமைப்ப.

(இ-ள்.) எல் ததும்பு கோவண உடை இடம்பட பிறங்க - ஒளிமிக்க கோவணமாகப்போக்கிய ஆடையானது இடப்பாற்படவிளங்கவும், துற்ற பல் கதிர்மணி பொதி சுவல் மிசை தூங்க - நெருங்கிய பலவகைபட்ட கிரணத்தையுடைய இரத்தினப்பொதியானது பிடரின்மேற்றொங்கியசையவும, மல் தடம் புய வரைமிசை வரம்பு இல்லா விலைகள் பெற்ற அங்கதம - மற்போர்செய்யும் பெரியபுயமாகிய மலையின்மேல் அளவில்லாத விலைபெற்ற வாகுவலயமானது, பரிதியின் பேர்ந்து பேர்ந்து இமைப்ப - சூரியனைப்போல விட்டுவிட்டு ஒளிவீசவும்.

வரம்பில்லாத செல்வப்பெருக்கின் மிகுதிதோன்ற வரம்பிலாவிலைகள்பெற்றவங்கதம் பரிதியினிமைப்ப என்றார். பேர்த்து பேர்த்து - மிகுதிப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (௧௨)

மந்திரப்புரிநூலதுவலம்படப்பிறழ
விந்திரத்திருவில்லெனவாரமார்பிலங்கச்
சுந்தரக்குழைகுண்டலந்தோள்புரண்டாடத்
தந்திரத்தருமறைகளிதாணிலந்தோய.

(இ-ள்.) மந்திரம் புரிநூலது வலம்பட பிறழ - மந்திரவிதி யமைந்த உபவீதமானது வலப்பாற்படப் புரண்டுவிளங்கவும், திரு இந்திர வில் என ஆரம் மார்பு இலங்க - பொலிவமைந்த இந்திரதனுவைப்போல இரத்தினமாலைகள் மார்பில் விளங்கவும், சுந்தரம் குழை குண்டலம்-அழகமைந்த சங்ககுண்டலமணிந்த (காதிலணிந்த இரத்தினம்பதித்த) குண்டலமானது, தோள் புரண்டு ஆட - தோளின்மேல் புரண்டாடவும், தந்திரத்து அருமறை களிதாள் நிலம் தோய - கலைகளமைந்த அரியவேதங்கள் (சுமந்து) களிக்கும திருவடிகள் நிலவுலகின்மேற்றோயவும்.

குழைசங்கம் அதுதானியாகுபெயராய்க் காதையுணர்த்திநின்றது. (௧௩)

கலிவிருத்தம்.

பொன்னவிர்ந்திலங்குகோபுரமுன்போதுவார்
முன்னவர்துனிவுகூர்முன்னநீக்கிய
தென்னவர்குலப்பெருந்தெய்வமாகிய
மன்னவர்வணிகராய்வந்துதோன்றினார்.

(இ-ள்.) பொன் அவிர்ந்து இலங்கு கோபுரமுன் போதுவார் முன் - பொன்னாற்செய்து விளங்கும் திருக்கோபுர வாயிலின்முன்வரும் மந்திரிமுதலியோர்க்கு முன், அவர் துனிவு கூர் முன்னம் நீக்கிய - அவர்களுடைய வருத்தமிக்க மனக்குறிப்பைநீக்க, தென்னவர் குலம் பெரும் தெய்வமாகிய - பாண்டியர் குலத்திற்கு முதற்றெய்வமாகிய, மன்னவர் வணிகராய் வந்துதோன்றினார் - சவுந்தரபாண்டியர் வசியகுலசிகாமணியாய்வந்து தோன்றியருளினார்.

'சிவபெருமானுக்குப் பாண்டியர் வழிவழிக் கொத்தடிமையாயுள்ளார் ஆதலால் தென்னவர்குலப் பெருந்தெய்வமாகிய என்றார். (௧௪)

வந்தவரெதிர்வருவாரைமம்மர்கொள்
சிந்தையராய்வருசெய்தியாதென
முந்தையில்விளைவெலாமுறையிற்கூறினார்க்
கெந்தையாம்வணிகனீதியம்புமாலரோ.

(இ-ள்.) வந்தவர் எதிர் வருவாரை - வசியகுலசிரேஷ்டராய்வந்த பெருமானார் தம்முன்வரும் மந்திரிமுதலாயினோரை (நோக்கியருளி) மம்மர் கொள் சிந்தையராய் வரு செய்தி யாது என - மயங்கியமனமுடையவராய் நீர்வரும்செய்தியாதென்றுவினவ, முந்தையில் விளைவு எல்லாம் முறையிற் கூறினார்க்கு-முன்னடந்தசெய்திகளெல்லாம் முறையாகத் தொகுத்துச்சொல்லிய மந்திரிமுதலியோருக்கு, எந்தையாம் வணிகன் ஈது இயம்பும் - என்தந்தையாகிய வணிகர்பெருமானார் இதனைக்கூறுகின்றார்.

மனத்தளர்ச்சியை மெய்ப்பாட்டாலறிந்தனராதலால் மம்மர் கோள்சிந்தையராய் வருசெய்தியாதென என்று வினவினார். மெய்ப்பாடாவன உடல்வாடல், முகங்கருகல், தளர்நடை முதலியன. (கசு)

என்படவெய்துகின் றீர்களென்வயி
னொன்பதுமணிகளுமுள்ளவாலவை
பொன்பதினாயிரங்கோடிபோனதென்
றன்புறமணியெலாமடைவிற்காட்டுவார்.

(இ-ள்.) என் படர் எய்துகின்றீர்கள் - (இரத்தினம் இல்லையென்று) ஏன் துன்பப்படுகின்றீர்கள், என் வயின் ஒன்பது மணிகளும் உள்ள - என்னிடத்தில் நவமணிகளுமுள்ளன, அவை பதினாயிரங்கோடி பொன் போனது என்று - அந்த இரத்தினங்கள் பதினாயிரங்கோடி பொன் விலையாகச்சென்றது என்று, அன்பு உற மணி எல்லாம் அடைவில் காட்டுவார் - (அதாகப்பமேல்) அன்புமிக இரத்தினங்களையெல்லாம் முறையாகக்காட்டத்தொடங்கினார்.

மணிகளுட்சில இருக்கின் அவர்கள் குறைபாடொழியாதாகலால் என்படவெய்துகின்றீர்களென்வயின் - ஒன்பதுமணிகளுமுள்ள எனவும், சிறுவிலைமணிகளாயின் மகுடத்துக்கு அமையா ஆதலால் பொன்பதினாயிரங்கோடி போனதென்று எனவுங்கூறினார். (கஅ)

இருந்தனர்கீழ்த்திசைநோக்கியிட்டதோர்
கருந்துகினடுவுமிந்திராதிகாவல
ரருந்திசையெட்டினுமடைவிற்செம்மணி
பெருந்தண்முத்தாதியெண்மணியும்பெய்தரோ.

(இ-ள்.) கீழ்த்திசை நோக்கி இருந்தனர் - கீழ்த்திசைநோக்கியிருந்து, இட்டது ஓர் கரும் துகில் நடுவும் - பரப்பிய கம்பலத்தின் நடுவிலும், இந்திராதிகாவலர் அரும் திசை எட்டினும் - இந்திரன்முதலிய திக்குப்பாலகர் வசிக்கும் செல்லுதற்கரிய எட்டுத்திக்கிலும், அடைவில் - முறையாக, செம்மணி - பதுமராகமென்னும் இரத்தினத்தையும், பெரும் தண் முத்து ஆதி எண்மணியும் பெய்து - பெரிய குளிர்ந்த முத்துமுதலிய எட்டுவகை இரத்தினங்களையும்வைத்து.

கம்பலத்தின் நடுவில் பதுமராகத்தையும், அதனைச்சூழ எட்டுத்திக்கிலும் முத்துமுதலிய எண்வகை இரத்தினங்களையும் வைத்தாரெனப் பொருள்கொள்க. மணிவிலைபகர்வோர் கம்பலத்தைப்பரப்பிக் கீழ்த்திசைநோக்கியிருத்தல் மரபாதலால் இருந்தனர் கீழ்த்திசைநோக்கி யிட்டதோர்கருந்துகில் என்றார். (கள)

இம்மணிவலனுடற்சின்னமென்னவக்
கைம்மறிகரந்தவர்கூறக்கற்றநூற்
செம்மதியமைச்சரச்செம்மல்யாரவன்
மெய்ம்மணியாயதென்விளம்புகென்னவே.

(இ-ள்.) இம்மணி வலன் உடல் சின்னம் என்ன அ கை மறி கரந்தவர் கூற - இந்தஇரத்தினங்கள் வலாசுரனுடைய வுடம்பிலுள்ள உறுப்பினபேதங்களென்று கையிலேந்திய மானை யொளித்துவந்த அவ்வணிகர்பெருமானார் கூறியருள, நூல் கற்ற செம்மதி அமைச்சர் - மநுநூல்முதலியவற்றைக் கற்றுணர்ந்த நுண்ணியவறிவமைந்த சுமதிமுதலிய மந்திரிகள், அ செம்மல் யார் - அவ்வலன் என்பவன்யார், அவன்

மெய் மணியாயது என் - அவனுடைய வுடம்பிலுள்ள உறுப்புகள் இரத்தினங்கள் ஆனவகையாது, விளம்புக என்ன - கூறக்கடவீரென்று குறையிரப்ப. (௧௮)

மேவரும்வலனெனுமவுணன்மேலைநாண்
மூவரின்விளங்கியமுக்கண்மூர்த்திசெஞ்
சேவடியருச்சனைத்தவத்தின்செய்தியால்
யாவதுவேண்டுமென்றிறைவன்கூறலும்.

(இ-ள்.) மேவரும் வலன் எனும் அவுணன் - பகைவரடைந்து போர்செய்தற்கரிய வலன் என்னும் அசுரன், மேலை நாள் - முன்னாளில், மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்தி - உலகு சிருட்டி திதி சங்காரப்பட்டுவருதற்கு ஏதுவாகத் திரிமூர்த்திகளின் வடிவமாய் விளங்கிய திரிநேத்திரங்களுடைய சிவபெருமானுருடைய, செம்சேவடி அருச்சனை தவத்தின் செய்தியால் - செவந்ததிருவடியில் அருச்சனையாகிய தவத்தைச்செய்துவந்தமையால், இறைவன் - அச்சிவபெருமானார், யாவது வேண்டும் என்று கூறலும் - என்னவேண்டுமென்று கூறியருள.

மூவரின் விளங்கிய என்பதற்குப் பிரமன் முதலிய மூவரினுமேம்பட்டு விளங்கிய எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. அருச்சனை காயிகதவத்துள் அடங்குதலால் அருச்சனைத்தவத்தின் என்றார். (௧௯)

தாழ்ந்துநின்றியம்புமியான்சமரில்யாரினும்
போழ்ந்திறவாவரம்புரிதியூழ்வினை
சூழ்ந்திறந்தாலென்மெய்துறந்தமாந்தரும்
வீழ்ந்திடநவமணியாதல்வேண்டுமால்.

(இ-ள்.) தாழ்ந்து நின்று இயம்பும் - பணிந்துநின்று கூறுவான், யான் சமரில் யாரினும் போழ்ந்து இறவா வரம் புரிதி-யான் போரில் எவராலும் பிளவுபட்டு இறக்காதவரந்தருவாய், ஊழ்வினை சூழ்ந்து இறந்தால் - போகூழ்நெருக்கால் (ஒருபோது) இறப்பினும், என் மெய் துறந்த மாந்தரும் வீழ்ந்திட - என்னுடலைச்சிதைத் தவீரரும் விரும்ப, நவமணி யாதல் வேண்டும் - (என் உடலின உறுப்புகள்) ஒன்பது வகை இரத்தினங்களாகவேண்டும்.

சூழ்ந்து காரணப்பொருளில்வந்த இறந்தகாலவினையெச்சம் ஆதலால் நெருக்கால் எனப்பொருள்கொண்டாம. என்னைவென்றோரடையும் பெருஞ்செல்வப்பேறாக என்னுறுப்புகள் பயனபடவேண்டும் என்பான் என்மெய்துறந்தமாந்தரும் வீழ்ந்திட நவமணியாதல் வேண்டுமால் எனக்கூறினான். (௨௰)

என்றுவேண்டலும்வரமீசனல்கினு
னன்றுபோயமர்குறித்தமரர்கோனொடு
சென்றுபோராற்றலுந்தேவர்கோனெதிர்
நின்றுபோராற்றலனீங்கிப்போயினான்.

(இ-ள்.) என்று வரம் வேண்டலும் - என்றுவரம் வேண்ட, ஈசன் நல்கினான் - சிவபெருமானார் (அவ்வாறே) தநதருளினார், அன்றே அமர்குறித்து போய்-அப்பொழுதே போர்குறித்துச்சென்று, அமரர் கோனொடு சென்று போர் ஆற்றலும், இந்திரனோடெதிர்த்துப் போர்செய்ய, தேவர் கோன் எதிர் நின்று போர்

ஆற்றலன் நீங்கி போயினான்-அவ்விந்திரன் எதிர்நின்றுபோர்செய்யவன்மையின்றிப் புறங்கொடுத்துச்சென்றான்.

அவன்பூசித்து வரம்பெற்றது இந்திரன்முதலியோரை வெல்லுதல்குறித்தே யாதலால் அன்றுபோயமர்குறித் தமரர்கோனொடுசென்றுபோராற்றலும் எனக்கூறினார். அன்று என்பதன் இறுதியில் பிரிநிலை ஏகாரந்தொகுத்தல். (௨௧)

தோற்றவானாடவன்மீண்டுசூழ்ந்தம
ராற்றினும்வெல்லரிதழிவிலாவர
மேற்றவனாதலாலிவனைச்சூழ்ச்சியாற்
கூற்றினூரேற்றுதல்குறிப்பென்றுன்னியே.

(இ-ள்.) தோற்ற வான் நாடவன் மீண்டு சூழ்ந்து - தோல்வியுற்ற இந்திரன்மீள ஆலோசித்து, அழிவு இல்லா வரம் ஏற்றவன் ஆதலால் - அழியாதவரத்தைச் சிவபெருமானிடத்துப்பெற்றவன் ஆகையால், அமர் ஆற்றினும் வெல் அரிது- (எதிர்த்துப்) போர்செய்தாலும் (நம்மால்) வெற்றிகொள்வது அரிது (ஆகையால்) சூழ்ச்சியால் இவனை கூற்றின் ஊர் ஏற்றுதல் குறிப்பு என்று உன்னி - விநயத்தால் இவ்வசுரனை இயமனூரில் குடியேற்றுதல் தக்கதென்றுகருதி. (௨௨)

விடங்கலுழ்படைக்கலனின்றிவிண்ணவ
ரடங்கலுந்தழீஇக்கொளவடுத்துத்தானவ
மடங்கலைவருகெனநோக்கிவானவக்
கடங்கலுழ்யானைபோற்கரைந்துகூறுவான்.

(இ-ள்.) விடம் கலுழ் படைக்கலன் இன்றி - விஷத்தைச் சிந்தும் ஆயுதமில்லாமல், விண்ணவர் அடங்கலும் தழீஇ கொள அடுத்து-தேவர்முற்றுந் (தன்னைச்) சூழ்ந்துவரப் (போர்க்களத்தை) அடைந்து, தானவ மடங்கலை வருக என-அசுரருள் ஆண்சிங்கம்போன்ற வலனைப் போர்க்கு வருக என (அறைகூவி) நோக்கி- (அவனை) பார்த்து, கடம் கலுழ் வானவ யானை போல் - மதத்தைச் சிந்தும் ஐராவதம்போல, கரைந்து கூறுவான் - நெடுமொழி கூறுகின்றான்.

அறைகூவல் போர்க்கு வாவென்றழைத்தல். நெடுமொழிவீரன்றன்னைப் புகழ்ந்து கூறுங்கூற்று, இது வஞ்சித்திணையுள் அடங்கும். (௨௩)

விசையநின்றோள்வலிவென்றிவீக்கமெத்
திசையினும்பரந்தவச்சீர்த்திநோக்கியுன்
னசையறுமகிழ்ச்சியானல்குவேனுனக்
கிசையவேண்டியவரம்யாதுகேளென.

(இ-ள்.) விசைய - வெற்றியையுடையோய், நின் தோள் வலி வென்றி வீக்கம் எத்திசையினும் பரந்த - உனதுபுயத்தின் வன்மையும் வெற்றியின் பெருக்கமும் எந்தத்திசையிலும்பரவின, அச்சீர்த்திநோக்கி-அப்பிரதாபத்தைப்பார்த்து,உள் நசை அறு மகிழ்ச்சியால் உனக்கு இசைய நல்குவேன் - (எனது) மனத்திலெழுந்த ஆசைப்பெருக்கினின்று நீங்காத மகிழ்ச்சியால் உனக்குப் பொருந்துவனவற்றைக்கொடுப்பேன், வேண்டிய வரம் யாது - (உனக்கு என்பால்) வேண்டியவரம்யாது, கேள் என-(அதனை) கேளாயென்றுகூற.

யான் பொருத அசுரர் பலருள்ளும் உன்னைப்போலத் தோள்வன்மையையும் வெற்றிப்பெருக்கினையும் உடையவர் ஒருவரையுங்கண்டிலேன் என்பான் தோள்வலி வென்றி வீக்க மெத்திசையினும் பரந்த என்றான். (௨௪)

கடிபடுகற்பகநாடுகாவலோ
னொடியுரைசெவித்துளை நுழையத்தானவ
னெடியகைபுடைத்துடனிமிர்ந்துகார்படு
மிடியெனநகைத்திகழ்ந்தினையகூறுவான்.

(இ-ள்.) கடி படு கற்பக நாடு காவலோன் நொடி உரை செவித்துளை நுழைய - வாசமிக்க விண்ணுலகு காவல்செய்யும் இந்திரன்கூறியவார்த்தை (தனது) இரண்டுசெவிகளின் துளைகளிலும் புக, தானவன் நெடிய கை புடைத்து - வலாசுரன் (அதிசயித்துத் தனது) நீண்டகைகளைக் கொட்டி, உடல் நிமிர்ந்து - சரீரம்சோர்தலின்றி நிமிர்ந்து, கார் படும் இடி என நகைத்து - மேகத்திற்றோன்றும் இடியேற்றைப்போல அட்டகாசஞ்செய்து, இகழ்ந்து - அசதியாடி, இனைய கூறுவான் - இத்தன்மையுடையனவற்றைச் சொல்லுகின்றான்.

தனக்குத்தோற்ற இந்திரன் கூறியது அவனுக்குப் பெருநாணை விளைத்தலால் கைபுடைத்துடல் நிமிர்ந்து கார்படுமிடியென நகைத்திகழ்ந் தினையகூறுவான் என்றார். (௨௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நன்றிதுமொழிந்தாயாருநகைக்கநீயெனைவெங்கண்ட
வென்றியுமதனாற்பெற்றபுகழுநின்வீறுபாடு
மின்றுநின்போரிற்காணப்பட்டவேயிசைபோயெங்கு
நின்றதேயிதுபோனின்கைவண்மையுநிற்பதன்றோ.

(இ-ள்.) யாரும் நகைக்க நன்று இது மொழிந்தாய் - எவரும்நகைக்க மனங்கூசாது இந்தவார்த்தையைக் கூறினாய், நீ எனை வெங்கண்ட வெற்றியும் - நீ என்னைப் புறங்கண்ட வெற்றியும், அதனால் பெற்ற புகழும் - அவ்வெற்றியால்வந்த பிரதாபமும், நின வீறு பாடு - இவற்றாலெழுந்த உனது இறுமாப்பும், இன்று நின் போரில் காணப்பட்ட - இப்பொழுது (எனதுடனிகழ்ந்த) உன்போரில் பலராலுங் காணப்பட்டன, எங்கும் இசை போய் நின்றது - எவ்விடத்தும் உன் பிரதாபம் சென்று நிலைபெற்றது, இது போல் நின் கை வண்மையும் நிற்பது அன்றோ - இப்பிரதாபம் நிலைபெற்றுள்ளதுபோல உன் ஈகையும் நிலைபெறுமல்லவா.

உனது சிறுமையைக் கருதாது கூறினாய் என்பான் யாரும் நகைக்கநன்றிது மொழிந்தாய் எனவும், பலகாலும் என்னால் அடிபட்டுப் புறங்காட்டிச்சென்றாய் என்பான் எனை வெங்கண்ட வென்றியும் எனவும், இவற்றால் உனக்குவிளைந்தன பெரும் பழியும் மானமின்மையுமே என்பான் பெற்றபுகழும் நின்வீறுபாடும எனவும், இவற்றைப் பலராலும் அறிந்து நன்குமதிக்கப்பட்டாய் என்பான் இன்று நின்போரிற்காணப்பட்ட எனவும், எங்கும் இசைபோய் நின்றது எனவும், இந்த அதிதகைமையையுடையார் கொடையும் அதிதகைமையுடையது என்பான் நின் கைவண்மையும் நிற்பதன்றோ எனவுங்கூறினான். (௨௬)

ஈறிலானளித்தநல்லவரமெனக்கிருக்கநின்பால்
வேறுநான்பெறுவதுண்டோவேண்டுவதுனக்கியாதென்பாற்
கூறுநீயதனையின்னேகொடுக்கலேனுகினின்போற்
பாறுவீழ்களத்திற்றோற்றபழிப்புகழ்பெறுவனென்றான்.

(இ-ள்.) ஈறு இலான் எனக்கு அளித்த நல்ல வரம் இருக்க - (தனக்கு) ஓர் இறுதியில்லாத சிவபெருமான் எனக்குத் தந்தருளிய நல்லவரங்கிடைத்திருக்க, நின்பால் நான் பெறுவது வேறு உண்டோ - உன்னிடத்தில் நான் பெறும்வரம்வேறுளதோ, உனக்கு வேண்டுவது யாது - உனக்கு வேண்டும் வரம் யாது, என்பால் நீ கூறு - என்பக்கல் நீ சொல்லு, அதனை இன்னே கொடுக்கலேன் ஆகில் - அதனை இப்பொழுதே நான் கொடாதொழிவேனாகில், நின் போல் பாறு வீழ் களத்தில் தோற்ற பழிப்புகழ் பெறுவன் என்றான் - உன்னைப்போலப் பருந்து விரும்பி வீழும் போர்க்களத்தில் புறங்கொடுத்த நிந்தையை நான் பெறுவேன் என்று கூறினான்.

தனக்கு ஓர் ஒப்புயர்வில்லாச் சிவபெருமான் அருட்கொடை பெற்றுள்ளேனுக்கு ஏனையோராற் பெறுங்கொடை சிறிதுமில்லை என்பான் வேறுநான் பெறுவதுண்டோ எனவும், அச்சிவபெருமானது அருட்கொடையையடைந்த என்னால் நீ இப்போதடைந்துள்ள இந்திரபட்டத்திலும் பெருமைபெறுடைய செல்வங்கொடுக்கவுள்ளது என்பான் உனக்கு வேண்டுவதியாது எனவும், ஒரு சிறு துரும்பும் அச்சிவபெருமானருள்பெற்றுத் திருமூலமுதலியோர் படைக்குச் சிறிதுஞ் சலியாதுநிற்குமாகில் அவன் அருள்பெற்ற யானுஞ் சிறிதுஞ்சலிப்பேனோ என்பான் கொடுக்கலேனாகிலெனவும், உன்னை நம்பி யடைந்தோர் பட்டபாடு போர்க்களத்திற் றெரியும் என்பான் பாறுவீழ்களம் எனவுங் கூறினான். (உஎ)

மாதண்டவவுணன்மாற்றமகபதிகேட்டுவந்து
கோதண்டமேருக்கோட்டிக்கொடும்புரம்பொடித்தான்வெள்ளி
வேதண்டமெய்தியாங்கோர்வேள்வியான்புரிவனீயப்
போதண்டர்க்கூட்டவாவாய்ப்போதுவாய்வல்லையென்றான்.

(இ-ள்.) மா தண்டம் அவுணன் மாற்றம் மகபதி கேட்டு - பெரியதண்டாயுதத்தையேந்திய வலாசுரனுடைய வார்த்தையை இந்திரன் கேட்டு, உவந்து - (தான் நினைத்தது கைகூடியதென்று) மகிழ்கூர்ந்து, கோதண்டம் மேரு கோட்டி கொடும் புரம் பொடித்தான் - வில்லாக மகாமேருவை வளைத்துக் கொடியதிரிபுரத்தை நகைத்துச் சாம்பலாக்கிய சிவபெருமான (வீற்றிருக்கும்,) வெள்ளி வேதண்டம் எய்தி ஆங்கு ஓர் வேள்வி யான் புரிவன் - வெள்ளிமலையையடைந்து அவ்விடத்தில் ஓர்யாகத்தை யான்செய்வேன், நீ அப்போது அண்டர்க்கு ஊட்ட ஆவாய் வல்லை போது வாய் என்றான் - நீ அப்பொழுது தேவர்களுக்கு அவியூட்ட ஓர் பசுவாய் விரைந்து வாராய்என்று இந்திரன் கூறினான்.

இந்திரனெண்ணமுற்றியதாகையால் உவந்து என்றார். நரமேதயாகம் என ஆலாஸ்யமகத்துவத்திற் கூறப்பட்டுளது. (உஅ)

அன்றொருதவத்தோனென்புவச்சிரமொன்றேயாக
வொன்றியகொடையாற்பெற்றபுகழுடம்பொன்றேயென்போல்
வென்றியினுலும்வியாமெய்யெலாமணிகளாகப்
பொன்றியகொடையினுலும்புகழுடம்பிரண்டுண்டாமே.

(இ-ள்.) அன்று ஒரு தவத்தோன் என்பு வச்சிரம் ஒன்றே ஆக - அக்காலத்தில் ததீசிமுனிவருடைய முதுகந்தண்டெலும்பு நவமணிகளுள் ஒரு வைரமேயாக, ஒன்றிய கொடையால் பெற்ற புகழ் உடம்பு ஒன்றே - மனமிசைந்து கொடுத்த பூதவுடம்பின் கொடையினால் அடைந்தபுகழுடம்பு அம்முனிவர்க்கொன்றே(அன்றி)வெ

ன்றியினும் - பிறர் வெல்லுதற்கரிய வெற்றியினும்,' வீயா மெய் எலாம் மணிக ளாக பொன்றிய கொடையினும்-(பிறர் ஆயுதங்களினால்) அழியாத எனதுசரீரத்து ள்ள உறுப்புகளெல்லாம நவமணிகளாகப் பூதவுடம்பழிந்த கொடையினும், என் போல் புகழ் உடம்பு இரண்டு உண்டாமே-என்னைப்போலப் புகழுடம்பு (அவருக்கு) இரண்டுண்டாகுமா (இல்லையென்றபடி.)

ததீசிமுனிவர் இந்திரன்வேண்டத் தமது பூதவுடம்பு வச்சிரம் ஒன்றேயாக க்கொடுத்துப் பெற்ற புகழுடம்பு ஒன்று; யான் பிறர் வெல்லுதற் கரிய வெற்றியு ம் எனது மெய்யுறுப்புகளெல்லாம் நவமணிகளாகப் பூதவுடம்பு அழிதலும் ஆகிய இரண்டுகொடையையும் உடையவன் என்பான் என்போல் புகழுடம்பு இரண்டுண் டாமோ எனவும், சிவபெருமானிடத்துப் பிறரால் தனது பூதவுடம்பு அழிதலில்லா த வரத்தைப் பெற்றுள்ளேன் என்பான் அவ்வரத்தை வென்றியினால் எனவும், ஒரு வாறு பூதவுடம்புக்கு அழிவுவரினும் என் பூதவுடம்பைச் சிதைத்தோன் விரும்பிக் கொள்ள அவ்வுடம்பின் உறுப்புக்களெல்லாம நவமணிகளாகப் பெற்றேன்என்பான் பொன்றிய கொடையால் பெற்ற புகழுடம்பு எனவுங் கூறினான். (௨௯)

மேவலனல்லைநீயேநட்டவன்மேலைவானோர்
யாவருமருந்துமாற்றாலறம்புகழெனக்கேயாக
வாவுருவாதியென்றாயன்னதேசெய்வேனென்றா
னீவதேபெருமையன்றியிரக்கின்றஇழிபேயன்றோ.

(இ-ள்.) மேவலன் அல்லை - (நீ எனக்குப்) பகைவனல்ல, நீயே நட்டவன்- நீயே எனக்குச் சிநேகன், மேலை வானோர் யாவரும் அருந்தும ஆற்றால் - விண்ணுல கிலுள்ள தேவர்களெல்லோரும் (எனது பூதவுடம்பை அவியுணவாக) உண்ணும்வ கையால், அறம் புகழ் எனக்கே ஆக - புண்ணியமும் அதனாற புகழும் எனக்கு உள வாக, ஆ உருவாதி என்றாய் - பசுவின்வடிவாக வருவாயென்றாய், அன்னதே செய் வேன் என்றான்-அதனையே செய்து முடிப்பனென்று வலன்கூறினான், ஈவது பெரு மை ஏ அன்றி இரக்கின்றது இழிபே அன்றோ-(ஏற்றோர்க்குக்) கொடுத்தல் (ஒருவனு க்குப்) பெருமையேயல்லாமல் (பிறர்பாற்சென்று) இரத்தல் இழிந்ததொழிலல்லவா.

தனக்குப் பகைவனாகிய இந்திரன் கூறியது கேடுதியை விளைப்பினும் தனக் கு அறமும் புகழுந்தருதலால் மேவலனல்லை நீயேநட்டவன் என்றான. முன்னர் க்கூறியதை முடித்தற்கு ஈவதே பெருமையன்றி யிரக்கின்ற இழிபேயன்றோ என் றது வேற்றுப்பொருள்வைப்பணி. (௩0)

அதற்கிசைந்தவுணர்வேந்தனமரர்வேந்தனை முன்போக்கி
மதர்க்கடுங்குருதிசெங்கண்மைந்தனுக்கிறைமையீந்து
முதற்பெருங்கலையாம்வேதமொழிமரபமைந்தவானாய்ப்
புதர்க்கடுவேள்விச்சாலைப்புறத்துவந்திருத்துநின்றான்.

(இ-ள்.) அவுணர் வேந்தன் அதற்கு இசைந்து - அசுரர்தலைவனாகிய வலன் அவ்வார்த்தைக்குடன்பட்டு, அமரர் வேந்தனை முன் போக்கி - தேவர்கள் தலைவனா கிய இந்திரனை முன்னேயனுப்பி, மதர் கடும் குருதி செம் கண் மைந்தனுக்கு இறை மை ஈந்து - மதர்ப்பையுடைய கொடியவுதிரம்போலச் செவந்தகண்களையுடைய தனதுபுத்திரனுக்கு அரசியலைத்தந்து, முதல் பெரும் கலையாம் வேதம் மொழி மரபு அமைந்த ஆன் ஆய் வந்து - (அறுபத்துநான்கு கலைகளுக்கும்) முதலாய்ப்பெருங்க

லையாயுள்ள வேதவாக்கியத்தினெறியே இலக்கணமமைந்த பசுவின்வடிவாய்வந்து, புதர்க்கு அடு வேள்விசாலை புறத்து இறுத்து நின்றான்-தேவர்களுக்கு அவியுணவாக்கும் யாகசாலையின்புறத்து நிலைபெயராது நின்றான்.

தேவர்களுக்கு விபுதர் எனப்பெயராதலால் புதர் என்றார். விபுதர் விசேடமான அறிவுடையவர். (கூக)

வாய்மையான்மாண்டநின்போல்வள்ளல்யாரொன்றுதேவர்
கோமகன்வியந்துகூறத்தருக்குமேற்கொண்டுமேரு
நேமியோடிகலும்விந்தவரையெனநிமிர்ந்துவேள்விக்
காமெனையூபத்தோடும்யாமினென்றடுத்துநின்றான்.

(இ-ள்.) வாய்மையால் மாண்ட நின்போல் வள்ளல் யாரொன்று - (கொடுத்தகொடையைப் பிறழ்ந்துமறுக்காத) மெய்மையால் மாட்சிமைப்பட்ட நின்னைப்போல வள்ளல் எவருளரென்று, தேவர் கோமகன் வியந்து கூற - இந்திரன்மனம் வியந்து சொல்ல, தருக்குமேல் கொண்டு மேரு நேமியோடு இகலும் விந்தவரை என நிமிர்ந்து-அகங்கரித்து மேருமலையோடு பகைத்துயர்ந்த விந்தமலையைப்போல ஓங்கியுயர்ந்து, வேள்விக்கு ஆம் எனை யூபநதோடும் யாமின் என்று அடுத்து நின்றான் - (நீங்கள் செய்யும்) வேள்விக்குப்பயன்படும் என்னை யூபஸ்தம்பத்தோடும் கட்டுங்கள் என்று அதனையடுத்து இறுமாந்து நின்றான்.

மனத்தூய்மைக்கு வாய்மை கருவியாதலால் வாய்மையான் மாண்டநின் போல் வள்ளல் யார் என்றான். (கூஉ)

யாத்தனர்தருப்பைத்தாம்பாலூர்னையால்யாத்தசிங்கப்
போத்தெனநின்றான்வாயைப்புதைத்துயிர்ப்படங்கவீட்டி
மாய்த்தனர்மாய்ந்தவள்ளல்வலனுமந்தாரமாரி
தூர்த்திடவிமானமேறித்தொல்விதியுலகஞ்சேர்ந்தான்.

(இ-ள்.) தருப்பை தாம்பால் யாத்தனர் - தருப்பையாலாகிய கயிற்றால் யூபஸ்தம்பத்தில் கட்டினார்கள், ஊர்னை யால் யாத்த சிங்கப் போத்து என நின்றான்- கம்பலக்கயிற்றால் கட்டப்பட்ட ஆண்சிங்கம்போலக் கட்டுப்பட்டு நின்றான், வாயைப்புதைத்து உயிர்ப்பு அடங்க வீட்டி மாய்த்தனர் - வாயையிறுகப்புதைத்துச் சுவாசம் உள்ளடங்கக்கொன்றார்கள், மாய்ந்த வள்ளல் வலனும் - இறந்தவள்ளலாகிய வலாசுரனும், மந்தார்மாரி தூர்த்திட விமானம் ஏறி தொல்விதி உலகம் சேர்ந்தான்- (தேவர்கள்) மந்தாரவருஷஞ்சிந்த விமானத்திலேறிப் பிரமனுலகத்தையடைந்தான்.

தொல்விதி-பழையோனாகிய பிரமன் எனப்பொருள்கொள்க. தேவர்கள் பிணித்தபிணிப்பு அவன்வன்மைக்கேற்ற பிணிப்பன்று என்பார் ஊர்னையால் யாத்தசிங்கப் போத்தென எனவும், அவன்கட்டுண்டது வாய்மைவழியாலாலென்பார் நின்றான் எனவுங்கூறினார். (கூங)

மணித்தலைமலையின்பக்கமாய்த்தவன்வயிரவேலாற்
பிணித்துயிர்செகுத்தவள்ளற்பெருந்தகையாவைவேதம்
பணித்திடும்வபையைவாங்கிப்படரொரிசுவைமூன்பார்க்கக்
குணித்தவாறடர்க்கூட்டிக்கோதிலாவேள்விசெய்தான்.

**(இ-ள்.) மணிதலை மலையின்பக்கம் மாய்த்தவன்-இரத்தினங்கள்நிறைந்த சிகரத்தையுடைய மலையின்சிறகையரிந்த இந்திரன், வயிர வேலால் பிணித்து உயிர் செகுத்த வள்ளல் பெருந் தகை ஆவை - தனதுவச்சிராயுதத்தால்யூபஸதம்பத்தில் கட்டி யுயிர்மாய்க்கப்பட்ட மறுக்காத கொடையின் பெருந்தன்மைவாய்ந்த பசுவின்நின்று,** வேதம் பணித்திடும் வபையை வாங்கி - வேதம்விதித்த வபையினைவாங்கி, படர் எரி சுவைமுன் பார்க்க குணித்து-படர்ந்தெழுந்த வேள்வித்தீசுவையினை முன்புபார்க்க இட்டு, அ வானுடர்க்கு ஊட்டி கோது இல்லா வேள்வி செய்தான்- (அவிப்பாகத்திற்குவந்து நெருங்கிய) அத்தேவர்க்கு உண்பித்துக் குற்றமில்லாத யாகத்தைச்செய்து முடித்தான்.

தேவர்கள் செயலும் இவனது ஆணைவழியது ஆகையால் - வயிரவேலால் உயிர்செகுத்த என்றார். வள்ளல் பெருந்தகையாவை என்றது-பசுவின் வடிவாய் வந்த வலாசுரனை ஆவை-ஐ-உருபுமயக்கம். (ருச)

அத்தகையாவின்சோரிமாணிக்கமாம்பன்முத்தம்
பித்தைவயிரேயமென்புவச்சிரம்பித்தம்பசசை
நெய்த்தவெண்ணிணங்கோமேதந்தசைதுகிர்நெடுங்கணீல
மெய்த்தவைபுருடராகமிவைநவமணியின்றோற்றம்.

(இ-ள்.) அத்தகை ஆவின் சோரி மாணிக்கமாம் - உயிர்மாய்ந்த பசுவின்வடிவாய்வந்த வலாசுரன் உதிரம் மாணிக்கமாம், பல் முத்தம் ஆம் - பல் முத்தமாம், பித்தை வயிரேயம் - மயிர் வயிரேரியமாம், என்பு வச்சிரம் ஆம் - எலும்பு வைரமாம், பித்து பச்சை - பிச்சு பச்சையாம், நெய்த்த வெள் ணிணம் கோமேதம் ஆம் - நெய்ப்பசையையுடைய வெள்ளிய நிணம் கோமேதகமாம், தசை துகிர் ஆம்- தசை பவளமாம், நெடும் கண் நீலம் - பரந்தகண் நீலமாம், எய்த்த ஐ புருடராகம்-ஆராய்ந்தறியத்தக்க கபம் புருடராகமாம், இவை நவ மணியின் தோற்றம் - இங்குக் கூறிய வுறுப்புகள் நவமணியின் தோற்றங்களாம்.

ஆம் என்பதனை - ஏனையிடங்களிலுங் கூட்டுக. பித்தம் அம் பகுதிப்பொருள் விகுதி "பசுவென்புவயிரம்பல்லு பனிமுத்தங்குருதியோதில் - வசையறுகதிர்மாணிக்கம் மயிர்வயிரேரியங்கள் - தசைபவளங்கணீலந்தரும்பிச்சுப்பச்சைமெச்சு -நிசகபம்புருடராக நிணங்கோமேதகமென்றோதும்" எனவருஞ்செய்யுளில் இங்குக்கூறிய முறையேவருதல்காண்க. (ருரு)

இவ்வடிவெடுத்துத்தோன்றியிருண்முகம்பிளப்பக்காந்தி
தைவருமணியொன்பானுஞ்சார்விடநிறங்கள்சாதி
தெய்வதமொளிமாசெள்ளிசசோதனைசெய்துதேசு
மெய்வரவணிவோரெய்தும்பயனிவைவிதியாற்கேண்மின்.

(இ-ள்.) இவ்வடிவு எடுத்து தோன்றி - இவ்வுருவெடுத்ததோன்றி, இருள் முகம் பிளப்ப காந்தி தைவரும் மணி ஒன் பானும்-இருளினமுகம பிளவுபடவொளி வீசும் ஒன்பதுமணிகளும், சார்விடம் நிறங்கள் சாதி தெய்வதம் ஒளி மாசு-தோன்றுமிடமும் அவற்றின் நிறங்களும் சாதியும் தெய்வமும் ஒளியும் குற்றமும், எள்ளி- (இவைகளுள்) களைவதைக் களைந்து, சோதனை செய்து தேசு மெய் வர அணிவோர்- சோதித்து ஒளிவீசத் தேகத்திலணிவோர், எய்தும் பயன்-அடையும் பயனும்,இவை விதியால் கேண்மின் - (ஆகிய) இவற்றை விதிப்படி சொல்லக்கேளுங்கள். (ருசு)

வேறு.

வானவிரு மாணிக்கங் கிரேதமுத லுகநான்கும் வழியே மக்கங்
காளபுரந் தும்புரஞ் சிங்களமிந் நான்கிடைப்படு மக்கமலராக
மாறுநிற மொன்பதர விந்தமாதுளம்பூ வித்தழல் கல்லாரங்
கோளரிய கச்சோத நரந்த நறும்பலந்தீபங் கோபமென்ன.

(இ-ள்.) வான் அவிரும் மாணிக்கம் கிரேத முதல் நான்கு உகமும்-ஒளிவிளங்கும் பதுமராகமானது கிரேதாயுகமுதலிய நான்கு உகங்களிலும், வழியே-கிரமமாக, மக்கம் காளபுரம் தும்புரம் சிங்களம் இந்நான்கு இடைப்படும்-மக்கமும் காளபுரமும் தும்புரமும் சிங்களமும் ஆகிய இந்தநான்குதேயத்திலிடத்தில் தோன்றும், அக்கமலராகம் ஆறும் நிறம் - அப்பதுமராகம் ஆளாநின்ற நிறம், அரவிந்தம் பூ மாதுளம் பூ மாதுளம் வித்து அழல் கல்லாரம் கோள் அரிய கச்சோதம் நரந்தம் நறும் பலம் தீபம் கோபம் என்ன ஒன்பது - தாமரைப்பூ, மாதுளம்பூ, மாதுளம்வித்து, நெருப்பு, செங்குநீர், குற்றமில்லாத மினமினிப்பூச்சி, நாரத்தையினது நல்லபழம், விளக்கு, இந்திரகோபம் (ஆகிய இவைகளினிறம்போல) ஒன்பதுவகை நிறங்களாம்.

பதுமராகம் கிரேதாயுகத்தில் மக்கத்திலும், திரேதாயுகத்தில் காளபுரத்திலும், துவாபரயுகத்தில் தும்புரத்திலும், கலியுகத்தில் சிங்களத்திலும் முறையேதோன்றினமையால் வழியே இந்நான்கினிடைப்படும் எனவும், இப்பதுமராகம் சிறப்புவகையாலன்றிப் பொதுவகையாலுள்ள நிறம் ஒன்பதாகையால் ஆறுநிறம் எனவுங் கூறினர். (கூஎ)

இந்நிறத்த பொதுவாய மாணிக்க மறையவர்முன் னியனாற் சாதி
தன்னியல்பாற் சாதரங்க குருவிந்த சௌகந்திகங் கோவாங்க
மென்னுமிவற் றாற்சிறந் நான்காகு மிவ்வகையே யிந்நான்கிற்குஞ்
சொன்னவொளி பத்திருநான் கிருமூன்று நான்கனையுஞ் சொல்லக்கேண்மின்.

(இ-ள்.) பொது வாய இந்நிறத்த மாணிக்கம் - பொதுவாயுள்ள இவ்வொன்பது நிறங்களையுடைய பதுமராகமானது, மறையவர் முன் இயல் நால் சாதி தன் இயல்பால் - அந்தணர் முதலிய நான்குசாதிவகைப்பட்டு வழங்கும் வழக்கால், சாதரங்கம் குருவிந்தம் சௌகந்திகம் கோவாங்கம் என்னும் இவற்றால் சிறந்து நான்கு ஆகும் - சாதரங்கம் குருவிந்தம் சௌகந்திகம் கோவாங்கம் என்னும் இந்நான்குவகையாக மேம்பட்டு நான்குவகைப்படும், இந் நான்கிற்கும் சொன்ன ஒளி - இந்த நான்குசாதிக்குங்கூறிய நிறமானது, இவ்வகையே பத்து இரு நான்கு இரு மூன்று நான்கு - (முன்னர்க்கூறிய) இந்தமுறையே பத்தும் எட்டும் ஆறும் நான்கும் ஆம், அனையும் சொல்லக் கேண்மின் - அவ்வவற்றி னிறத்தையுஞ் சொல்லக்கேளுங்கள்.

கோவாங்கம் கவாங்கம் என்னும் வடசொற்றிரிபு. கோவாங்கம் எனப்பெயர்பெறுதல் கல்லாடத்தில் "கதிர்சிறப்பும்" என்னும் அகவலுள் "குருவிந்தஞ்சௌகந்தி கோவாங்கு - சாதரங்கமெனச் சாதிகள் நான்கும்" என இதுபோலச் சாதிவகையுட் கூறியிருத்தல்காண்க. சூத்திரச்சாதியாகிய கோவாங்கத்தோடு நீலகெந்தி என ஒருவகைகூட்டி ஆலாஸ்யமகத்துவத்திற் கூறப்பட்டிருக்கிறது. சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம் ஊர்காண் காதையில் சாதரங்கம், சௌகந்திகம், நீலகெந்தி எனவும், குருவிந்தம், விந்தம் எனவும், இரத்தவிந்து எனவும், கோவாங்கம், படிகம் எனவும் உரையிற் கூறியிருக்கின்றனர். நிறத்தின் தொகைகளைப் பின்னர் விரித்தலிற்காண்க. (கூஅ)

சாதரங்கநிறங்கமலங்கருநெய்தலிரவியொளிதழல்கச்சோத
மாதுளம்போததன்வித்துக்கார்விளக்குக்கோபமெனவகுத்தபத்து
மேதகையகுருவிந்தநிறங்குன்றிமுயற்குருதிவெள்ளலோத்தம்
போதுபலாசலர்திலகஞ்செவ்வரத்தம்விதாரமெரிபொன்போலெட்டு.

(இ-ள்.) சாதரங்க நிறம் - சாதரங்கநிறமானது, கமலம் கரு நெய்தல் இரவி ஒளி தழல் கச் சோதம் மாதுளம் போது அதன் வித்து கார் விளக்கு கோபம் என வகுத்த பத்து - தாமரை கருநெய்தல் சூரியனொளி தீ மின்மினி மாதுளம்பூ மாதுளம்வித்து மேகம் தீபம் இந்திரகோபம் எனப் பாகுபாடு செய்த பத்துவகை நிறமாம், மேதகைய குருவிந்த நிறம் குன்றி முயல் குருதி வெள்ளலோத்தம் போது பலாசு அலர் திலகம் செவ்வரத்தம் விதாரம் எரி பொன்போல் எட்டு - மேன்மைத்தன்மையையுடைய குருவிந்தநிறமானது குன்றிமணி, முயல் இரத்தம், வெள்ள லோத்தம்பூ, முண்முருக்கம்பூ, மஞ்சாடிப்பூ, செவ்வரத்தம்பூ, முள்ளிலவம்பூ, விளங்கும் பொன்னுமாகிய இவைகளைப்போல எட்டுவகைநிறமாம்.

"சாதகப்புட்கண்டாமரைகருநீர் - கோபமின்மினிகொடுங்கதிர்விளக்கு - வன்னிமாதுளம்பூவிதையென்னப் - பன்னுசாதரங்கவொளிக்குணம்பத்தும" எனவும் "தாமரைகருநீர்சாதகப்புட்கண் - கோபமின்மினிகொடுங்கதிர்விளக்கு - மாதுளம்பூவிதைவன்னியீரைந்தும் - ஓதுசாதரங்கவொளியாகும்மே" எனவும், "செம்பஞ்சாத்தந்திலகமலோத்தம் - முயலின்சோரிசிந்துரங்குன்றி - கவிரலரொன்னக்கவர்நிறமெட்டும்" எனவும், "குருவிந்தத்தின் குறித்தனநிறமும- திலகமலோத்தஞ்செம்பருத்திப்பூ - கவிர்மலர்குன்றிமுயலுதிரம்மே-ம்ரதுரங்குக்கிற்கணனெனவெட்டும்-எண்ணியகுருவிந்தமண்ணியநிறமே" எனவும் கல்லாடத்திலும், சிலப்பதிகாரம் உதாரணச்சூத்திரத்திலும் அவ்வவற்றின்நிறம் சிறிதுவேறுபட்டுவருதல்காண்க.(ருக)

களிதருசௌகந்திகத்தினிறமிலவம்போதுகுயிற்கண்ணசோகந்
தளிரவிர்பொன்செம்பஞ்சியைவண்ணமெனவாறுதருகோவாங்க
வொளிகுரவுகுசும்பைமலர்செங்கற்கொவ்வைக்கனியென்றொருநான்கந்த
மிளிர்பதுமராகத்தைப்பொதுமையினுற்சோதிக்கவேண்டுமெல்லே.

(இ-ள்.) களி தரு சௌகந்திகத்தின் நிறம் - சந்தோஷத்தைத் தரும் சௌகந்திகத்தினிறமானது, இலவம் போது குயிற் கண் அசோகந் தளிர் அவிர் பொன் செம்பஞ்சி ஐ வண்ணம் என ஆறு- இலவமலர், குயிலின்கண், அசோகந்தளிர், விளங்கும்பொன், செம்பஞ்சி, மருதோன்றி என அறுவகைப்படும், கோவாங்க ஒளி - கோவாங்கத்தினிறமானது, குரவு மலர் குசும்பை மலர் செங்கல் கொவ்வைக்கனி என்று ஒரு நான்கு - குராமலர், குசும்பைமலர், செங்காவிக்கல், கொவ்வைக்கனி என்று ஒருநான்கு வகைப்படும், அந்த மிளிர் பதுமராகத்தை பொதுமையினுல் சோதிக்கவேண்டும் எல்லே - அந்த விளங்காநின்ற பதுமராகத்தினைப் பொதுவிலக்கணத்தால் ஆராயவேண்டுமெனவில்.

" அசோகப்பல்லவமலரிசெம்பஞ்சி-கோகிலக்கண்ணிளிலவலர்செம்பொனத்-தருசௌகந்திதன்னிறமாறும் " எனவும் " கோகிலக்கண்செம்பஞ்சி கொய்மலர்ப்பலாசம் - அசோகப்பல்லவமணிமலர்க்குவளை - இலவத்தலர்களென்றுறுகுணமும் - சௌகந்திக்குச் சாற்றியநிறனே " எனவும், " செங்கல்குராமலர்மஞ்சளகோவை-குங்குமமைந்தின்கோவாங்குநிறமும் " எனவும் "கோவைகற்செங்கல்குராமலர்மஞ்

சனைக் - கூறியகான்குக்கோவாக்குகிறனே" எனவும் மேற்காட்டிய நூல்களுள் சிறஞ் சிதிது வேறுபட்டு வருதல்காண்க. (சo)

திண்ணியதாய்மேல்கிழ்சூழ்பக்கமுறவொளிவிடுதல்செய்தாற்செவ்வே
யண்ணியவுத்தமமுதன்மூன்றுமென்பர்சாதரங்கமணிவோர்விச்சை
புண்ணியவான்கன்னியறுசுவையன்னமுதலானபுனிததானம்
பண்ணியதும்பரிமேதயாகமுதன்மகம்புரிந்தபயனுஞ்சேர்வர்.

(இ-ள்.) திண்ணியதாய் மேல் கீழ் சூழ் பக்கம் உற ஒளிவிடுதல் செய்தால்-திணமுடையதாய் மேலும் கீழும் இவற்றைச்சூழ்ந்த பக்கமுமாகிய இவற்றில்பொருந்த ஒளிவீசில், செவ்வே அண்ணிய உத்தமமுதல் மூன்றும் என்பர்-கிரமமாகப்பொருந்திய உத்தமமுதலிய மூன்றுவகைப்படும் என்பார், சாதரங்கம் அணிவோர் விச்சை புண்ணிய ஆன் கன்னி அறுசுவை அன்னமுதலான புனிததானம் பண்ணியதும்-சாதரங்கத்தையணிவோர் கல்வியும் புண்ணியவடிவாயுள்ள பசுவும் கன்னியும் அறுசுவையமைந்த கறியோடுகூடிய அன்னமுமுதலாகிய குற்றமில்லாத தானங்களைச்செய்தபயனையும், பரிமேத யாகமுதல் மகம்புரிந்த பயனும் சேர்வர்-அசுவமேதமுதலிய யாகத்தைச்செய்த பயனையுமடைவார்.

உத்தமமுதல் மூன்றுவன - உத்தமம், மத்திமம், அதன்மம். இதருணத்துள்ளும், மாணிக்கத்தினிலக்கணத்துள்ளும் அடங்கும். "குச்சையின் மத்தகக் குறியிரோத்தின்" எனக்கலாடத்தில் குணத்துள்ளும் "மாணிக்கத்தியல்வகுக்குங்காலே - சமனொளிசூழ்ந்த விருநான்கிடனும் - நால்வகைவருணத்தி னயின்றவிப்பெயரும் - பன்னிருகுணமும் பதினறுகுற்றமும் - இருபததெண்வகை யிலங்கியநிறனும் - மருவியவிலையும் பத்தியுமபாய்தலும் - இவையெனமொழிப வியலுணர்ந்தோரோ" எனவருஞ் சிலப்பதிகாரத்தில். "பாய்தல் என்பதினுள்ளும் அடங்குதல்காண்க. பிரமனும் திருமாலும் கொம்பினதடியிலும், கோதாவரிமுதலிய நதிகளும் சராசரவுயிர்களும் கொம்பினுனியிலும், சிவபெருமான் சிரததிலும, சத்தி நெற்றியிலும், முருகக்கடவுள் மூக்கினுனியிலும, இந்திரன்முதலிய தேவர்களமூக்கி னுள்ளிடத்திலும், அச்சுவினிதேவாகள் இரண்டுகன்ன நடுவிலும், சூரியனும் சந்திரனும் இரண்டுகண்களிடத்திலும், வாயு நந்ததிலும், வருணன் நாவிலும், கலைமகள் நெஞ்சிலும், இயமனும் இயக்கரும மணிகளிடத்திலும, சநதிதேவதைகள் உதட்டிலும், இந்திரன் கழுத்திலும், அருக்கதேவர் முரிப்பிலும், சாத்தியர் மார்பிலும், அநிலவாயு நான்குகாலிலும், மருத்துவர் முழந்தாளிலும், நாகர்கள் காற்குளமபினுனியிலும், கந்திருவர் அக்குளமபி னடுவிலும, அரம்பையா அக்குளம்பின் மேலிடத்திலும், உருத்திரர் முதுகினிடததிலும், அட்டவசுக்கள் சந்துகளிலும், பிதிர்தேவதைகள் அரைப்பரப்பிலும், சத்தமாதாகள் யோனியிலும், திருமகள் குதத்திலும், நாகபதிபர் அடிவாலிலும், சூரியன்வாலி னுரோமத்திலும், ஆகாயகங்கை கோசலத்திலும், யமுனைநதி கோமயத்திலும், மாதவர்கள உரோமங்களிலும், பூமிதேவி வயிற்றிலும், கடல்கள் கொங்கையிலும், காருகபத்தியம் வயிற்றிலும், ஆகவநீயம் இதயத்திலும், தக்கணக்கினியம் முகததிலும், யாகத்தொழில்கள் எலும்பினிடத்திலும் சுக்கிலத்தினிடத்திலும், கற்புடையபெண்கள் அங்கங்களமுற்றிலும் வசித்தலால் புண்ணியவான் என்றார்.

" வேதாவுங்கரியவனுமாவினதுகோட்டடியின்விளங்கிவாழ்வர்
கோதாவிமுதநீர்த்தங்கோட்டினுநிச்சராசரமுங்கூடிநிற்கு

மீதான்சிரந்தமலன்விமலையதனடுநெற்றிவிசாகனுசி
மீதானந்தனிலதனுண்ணுசிதனிறுகேசர்விளங்குவாரோ."

"ஆசகலவிருகன்னாநாப்பணைச்சுவினிதேவரமர்ந்துவாழ்வர்
தேசுடையபரிதிமதிநயனத்திற்றந்தத்திற்செறியும்வாயு
வோசையுறுநாவதனில்வருணனுமைமகளோங்கூங்காரநெஞ்சி
னேசமுறயமனியக்கர்கெண்டதலத்தெந்நாளுநிலவுவாரே."

"ஒட்டத்திலுதையாத்தமனசந்தியிவையுறையுமுறைவன்கண்டத்
திட்டமுடையிந்திரனேயிமிலிருப்பாருக்கரெனவியம்புந்தேவர்
வாட்டமிலாச்சாத்தியரோவாழ்வார்களுரமதனிலனிலவாயு
நீட்டியதாளொருநான்கின்மருததென்பர்முழந்தாளினிலவுவாரோ

"குரத்தினுதிப்பன்னகரோகுடிகொள்வர்சாங்கிருவர்குரர்திறைப்ப
ணிருப்பாரமகளிர்கணமிவரெல்லாமேற்குரத்தின்முதுகினெல்லை
யுருத்திரரோசந்துதொறுமுறைவார்கள்வசுதேவர்பிதிர்களோங்கிப்
பருத்தவரைப்பலகைதன்னிற்பகத்துறைவரொழுமாதர்ப்பிரிவுகூர்ந்தே.

"திருமகளேயபானத்திறுகேசரடிவாலிற்சிறந்துவாழ்வ
ரிரவியொளிவாலின்மயிரிலக்கியிடுஞ்சுராதிதானேயுநீரின்
வரமுடையயமுனைமயமதுதன்னின்மாதவர்களுரோமம்வாழ்வர்
உரமுடையபூதேவியுதரத்திற்பயோதரசரிறுதநியெல்லாம்."

"சடாத்தினிதயத்திற்றழைத்துமுகமதுதன்னிறறங்குமங்கி
கடனுடனேகாருகபத்தியமெழுவாயொருமூன்றுங்கடினவென்பி
னுடலூறுசுக்கிலந்தனினுமுறையுமகவினையனைத்துமுறுப்புத்தோறுந்
திடமுறுகற்புடைமடவார்செறிந்திருப்பாரிமமுறையைச்சிந்தைசெயதே."

எனவருஞ் சிவதருமோத்தரத்திற்காண்க. (௪௧)

குருவிந்தந்தரிப்பவர்பார்முழுதுமொருகுடைநிழலிற்குளிப்பவாண்டு
திருவிந்தையுடனிருப்பார்சௌகந்திகந்தரிப்போர்செல்வங்கீர்த்தி
மருவிந்தப்பயனடைவர்கோவாங்கந்தரிப்போர்தம்மனையிற்பாலும்
பெருவிந்தமெனச்சாலிமுதல்பண்டமுடன்செல்வப்பெருக்குமுண்டாம்.

(இ-ள்.) குருவிந்தம் தரிப்பவர்-குருவிந்தத்தைத் தரிப்பவர்கள், பார்முழுதும் ஒருகுடைநிழலில் குளிப்ப ஆண்டு திருவினையுடன் இருப்பர் நிலவுலகமுற்றுந் தமது ஒருவெள்ளைவட்டக்குடை நிழற்கீழ்த் தங்க அரசாண்டு தனலட்சுமியோடும் விஜயலட்சுமியோடுங்கூடி யிருப்பார்கள், சௌகந்திகம் தரிப்போர் - சௌகந்திகத்தைத்தரிப்போர்கள், செல்வம் கீர்த்தி மருவு இந்தப்பயன் அடைவர் - செல்வமுங் கீர்த்தியுமாகிய பொருந்திய இந்தப்பயனகளை அடைவார்கள், கோவாங்கம் தரிப்போர் தம்மனையில் - கோவாங்கந்தரிப்பவர்களுடையவீட்டில், பாலும் பெருவிந்தம் என சாலிமுதல் பண்டமுடன் செல்வப்பெருக்கும் உண்டாம - பாலும் பெரியவிந்தமலைபோல நெல் முதலிய பல பொருட்டுவைகளோடும் செல்வப்பெருக்கமும் உண்டாகும். (௪௨)

எள்ளியிடுகுற்றமெலாமிகந்துகுணனேற்றொளிவிட்டிருள்கால்சித்துக்
தள்ளியவிச்செம்பதுமராகமதுபுனைதக்கோர்தம்பாலேனைத்

தெள்ளியமுத்துள்ளிட்டபன்மணியும்வந்தோங்குஞ்செய்யாளோடு
மொள்ளியநற்செல்வமதற்கொப்பநெடும்பாற்கடலினோங்குமாலோ.

(இ-ள்.) தள்ளி யிடு குற்றம் எலாம் இகந்து - விலக்கப்பட்ட குற்றங்களெல்லாவற்றினின்றும் நீங்கி, குணன் ஏற்று ஒளிவிட்டு இருள் கால் சீத்து தள்ளிய இசெம் பதுமராகமது புனை தக்கோர் தம்பால்-குணமிகுந்து ஒளிவீசி இருளைச்சிதைத்தோட்டும் இந்தச் செவந்த பதுமராகத்தை யணிந்த மேலோரிடத்து, எனை தெள்ளியமுத்து உள்ளிட்ட பல் மணியும் வந்து ஓங்கும்-அதுவொழிந்த குணமிக்க முத்து உள்ளிட்ட பலரத்தினங்களும வந்துநிரம்பும், செய்யாள் ஓடும் ஒள்ளிய நல் செல்வம் - இலக்ஷுமியோடும புகழைத்தரும் நல்ல செல்வமும், அதற்கு ஒப்ப நெடும் பால் கடலின் ஓங்கும் - அம்மணிகளிருத்தறகேற்ப நெடியபாறகடல்போல் உயர்ந்தோங்கும.

கருகிநொய்தாதல், காற்று, வெருளி, திருகல், முரணுதல், செம்மண், இறுகல், மத்தகக்குழிவு, காசம, இலேச்சுமி, வெச்சம், பொரிவு, புகைதல், புடாயம், சந்தை, நெய்ப்பிலியெனக் குற்றங்கள்பதினாறு. தேய்க்குதல், நெருப்பு, கையிலெடுத்தல், அங்கைக்குறி, தூககல், தகடு, வெயில், குச்சை, மததகக்குறி, ஓரம், நெய்ப்புப்பார்வையாகிய இவைகளில் ஒத்த செநிறமுடைமையாயிருக்குங் குணங்கள் பன்னிரண்டு. "கருகிநொய்தாதல்காற்றுவெருளி - திருகனமுரணேசெம்மணிறுகல் - மத்தகக்குழிவுகாசமிலேச்சுமி - வெச்சமபொரிவுபுகைதல்புடாயம் - சந்தைநெய்ப்பிலி யெனத்தருபதினாறு - முநதிய நூலின்மொழிந்தனகுற்றமும்" எனவும் "தேய்க்கினெருப்பிற்சேர்க்கினங்கையிற - றூக்கினறறகட்டிற சுடர்வாய்வெயிலிற் - குச்சையின்மத்தகக்குறியினோரத்தில் - நெய்ப்பிற்பார்வையினோநதுசெவந்தாங் - கொத்தநற்குணமுடையபன்னிரண்டும்" எனவுங் கல்லாடததில் வருதல்காண்க. முன்னர்க்காட்டிய சிலப்பதிகாரததின் உதாரணச்சூததிரத்திலும் வருதல்காண்க. காற்று, மண், என்பனவற்றைக் காற்றேறு, மணணேறு என்பர். (௪௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பிறநிறசசார்புபுள்ளிபுள்ளடிபிறங்குகீற்று
மறுவருதாரசமென்னவகுத்தவைங்குற்றந்தள்ளி
யறைதருபண்புசான்றவரதனமணியும்வேந்தன்
செறுநர்வாளூற்றமின்றிசெருமகட்கன்பனாவான்.

(இ-ள்.) பிறநிறம் சார்பு-(அவ்வவற்றிற்குக் கூறிய) நிறமொழிந்த ஏனைநிறம் பொருந்துதலும், புள்ளி புள்ளடி-புள்ளியும் பறவையின் பாதவடிவாயுள்ள புள்ளடியும், பிறங்கு கீற்று-விளங்காநின்ற கீறறும, மறுவரு தாரசம் என்ன வகுத்த ஐங்குற்றம் தள்ளி - குறறம்பொருந்திய தாரசமெனறு நூலில் வகுத்த ஐந்து குற்றங்களையும் ஒழித்து, அறை தரு பண்பு சானற அரதனம அணியும் வேந்தன்-(நூலுள் அவ்வவற்றிறகுரிமையாகக்) கூறுங் குணமிக்க இரத்தினங்களை யணியும் அரசன், செறுநர்வாள் ஊற்றம் இன்றி செருமகட்கு அன்பன் ஆவான் - பகைவரேந்தியவாளால் இடையூறில்லாமல் வீரலக்ஷுமிக்கு நண்பனாவான்.

இதுமுதல் ஒன்பதுசெய்யுள்காறும் இரத்தினங்களின் பொதுவிலக்கணங்களைக் கூறுகின்றார். புள்ளியை விந்து எனவும், புள்ளடியைக் காகபாதம் எனவும், கீற்றைத் தாரை யெனவும் கூறுவர். தாரசம் என்றது ஒளிசலித்தலை. (௫௰)

குறுநிலக்கிழவனேனுமவன்பெருங்குடைக்கிழ்த்தங்கி
மறுகுநீர்ஞாலமெல்லாம்வாழுமற்றவனைப்பாம்பு
தெறுவிலங்கலகைபூதஞசிறுதெய்வம்வறுமைநோய்தீக்
கறுவுகொள்கூற்றச்சீற்றங்கலங்கிடவாதியாவாம்.

(இ-ள்.) குறு நிலக் கிழவன் எனும் - (இந்தரத்தினங்களை) அணிபவன் சிற்றரசனாயினும், அவன் பெருங் குடைக் கீழ் மறுகு நீர் ஞாலம் எல்லாம் தங்கி வாழும் - அவ்வரசனது பெரிய வெள்ளி வட்டக்குடை நிழலின்கீழ் - (அலைமுதலியவற்றால்) சுழலும் கடல் சூழ்ந்த வுலகமெல்லாம் நிலைபெற்று வாழாநிற்கும், அவனை பாம்பு தெறு விலங்கு அலகை பூதம சிறு தெய்வும் வறுமை நோய் தீ கறுவு கொள் கூற்றம் சீற்றம் - அவ்வரசனைப் பாம்புங் கொல்லாநின்ற மிருகமும் பேயும் பூதமும் சிறுதெய்வங்களும் வறுமையும் நோயும் நெருப்பின் வெம்மைபோல வெம்மை வாய்ந்த கோபமிக்க இயமனது கோபமும, கலங்கிட வாதியாவாம - நிலைகலங்கவாதியாவாம்.

நான்குசாதிகளாக வகுக்கப்படும் இரத்தினங்களை யணிவோர் அடையும்பயன் பொதுவமையால் இதனாற் கூறப்பட்டது "மறையோரணியின்மறையோராகிப்-பிறவியேழும்பிறந்துவாழ்குவரே" மன்னவரணியினமனனவர்சூழ-இருநிலவேந்தராவொழுபிறப்பும "வணிகரணியில்மணிபொன்மலிநது - தணிவறவடைந்து தரணியில் வாழ்வர்" சூத்திரரணியிற்றெகையிலகனகநெல் - வாய்ப்பமன்னிமகிழ்நதுவாழ்குவரே" எனச் சிலப்பதிகாரததில் ஷை காணடததில், ஷை காதையில அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டிய சூததிரஙகளால் இவவருணததாாககு இப்பயன் என்பதுணர்க. (சரு)

முன்னவரொன்பகற்றோர்வச்சிரமுந்நீர்முத்த
மன்னவரொன்பதுப்புமாணிக்கம்வணிகரொன்ப
மின்னவிர்புருடராகம்வயிடூயமவெயிற்கோமேதம்
பின்னவரொன்பநீலமரகதம்பெற்றசாதி.

(இ-ள்.) வச்சிரம் முந்நீர் முத்தம் - வயிரத்தையும் கடலிற்றோன்றிய முத்தினையும், கற்றோர் முன்னவர் என்ப - கற்றுவல்லோர் அநதணரொன்று சொல்லுவர், துப்பு மாணிக்கம் மன்னவர் என்ப - பவளததையும மாணிக்கததையும அரசரென்றுகூறுவர், மின் அவிர் புருடராகம் வயிடூயம வெயில் கோமேதம - ஒளிவிளங்கும் புருடராகத்தையும் வயிடூயததையும ஒளியையுடைய கோமேதகத்தையும், வணிகர் என்ப - வைசியரென்று கூறுவர், நீலம் மரகதம் பின்னவர் எனப-நீலத்தையும் மாணிக்கத்தையும் சூத்திரரென்றுசொல்லுவா, பெறற சாதி-இவ்வயிரமுதலிய இரத்தினங்கள் பெற்ற சாதியின வகுப்புகள இவையாம.

"வயிரமுத்தந்தணன்மாணிக்கம்பவளமவேநதன் - நயமலிபுட்பராகநல்ல கோமேதநீதி - வயவயிடூயமூனறும்வாழவுறுவணிகனுக்கும் - இயலுடைநீலம்பச்சையிரண்டுஞ்சூத்திரனுமன்றே" எனவருஞ் செயயுளால உணர்க. (சசு)

பார்த்திவர்மதிக்குமுத்தம்பளிங்கன்றிப்பச்சைதானுஞ்
சாத்திகந்துகிர்மாணிக்கங்கோமேதந்தாமேயன்றி
மாத்திகழ்புருடராகம்வயிடூயம்வயிரந்தாமு
மேத்திராசதமாநீலந்தாமதமென்பராய்ந்தோர்.

(இ-ள்.) பார்த்திவர் மதிக்கும் முத்தம் பளிங்கு அன்றி பச்சை நீறும சாத்திகம் - அரசர்கள் நன்கு மதிக்கும் முத்தும் பளிங்கும் இவையன்றிப் பச்சையுஞ்சாத்துவிதமாம், ஆகிர் மாணிக்கம் கோமேதம் - பவளமும் மாணிக்கமும் கோமேதமும், அன்றி மாதிகழ் புருட ராகம் வயிடூயம் வயிரம் தாமும் - இவையன்றி மிகவும் விளங்கும் புருடராகமும் வயிடூயமும் வயிரமும், எத்து இராசதமாம் - பலருந்துதிக்கும் இராசதமாம், நீலம் தாமதம் என்பர் ஆய்ந்தோர் - நீலத்தைத் தாமதமென்று நூல் ஆராய்ச்சியில் வல்லோர் கூறுவர்.

"வடிவுறுபடிகமுத்துவைத்தசாத்துவிகமாமால் - விடுதுகிர்மாணிக்கங்கோமேதகமிராசதமமேல்" எனவும, "அஞ்சனக்கல்லுநீலந்தானுந்தாமதமதாகும்-எஞ்சில்சாதுவிகத்தோடுமிராசதங்கலததல்வச்சிரம்- மஞ்சுறுபுட்பராகமணிவயிடூயமாகும் - தஞ்சராசதங்கலநதசாத்திகமபசசையாமே" எனவும் ஒரு சூரார் கூறுஞ் செய்யுள்களால் குணத்தின பிரிவுகள் சிறிதுவேறுபடுதல் காண்க. (௬௭)

இனையவையளந்துகண்டுமதிக்குநாளெழுமான்பொற்றேர்
முனைவனுண்முதலாவேழின்முறையினுற்பதுமராகங்
கனைகதிர்முத்தந்துப்புககாருடம்புருடராகம்
புனையொளிவயிரநீலமென்மனார்புலமைசான்றோர்.

(இ-ள்.) இனையவை அளந்து கண்டு மதிக்கும் நாள் - இவ்விரத்தினங்களை வரையறுததுச் சோதிகக ஆராயுங்காலம், எழு மான் பொன் தேர் முனைவன் நாள் முதலா ஏழில் - ஏழுகுதிரைபூண்ட பொன்னலாகிய தேரையுடைய ஞாயிற்றுக்கிழமைமுதலிய ஏழுகிழமைகளில், முறையினுல் - (அஞ்ஞாயிற்றுக்கிழமைதொட்டு) முறையாக, பதுமராகம - பதுமராகமும, கனை கதிா முத்தம் துப்பு காருடம் புருடராகம் - மிக்ககிரணததையுடைய முத்தும் பவளமும் பச்சையும் புருடராகமும், புனை ஒளி வயிரம நீலம என்மனார் புலமை சான்றோர் - பொருந்திய ஒளியையுடைய வயிரமும நீலமும் எனறு கூறுவர் அறிவின்மிக்க பெரியோா. (௬௮)

வெய்யவன்கிழமைதானேமேதகமணிக்குமாகு
மையறுதிங்கடானேவயிடூயமணிக்குமாகு
மையறவிவையொன்பானுமாய்பவரகம்புறம்பு
துய்யராயறவோராய்முனசொன்னநாளடைவேயாயவர்.

(இ-ள்.) வெய்யவன் கிழமை தானே மேதக மணிக்கும் ஆகும் - ஞாயிற்றுக் கிழமையே கோமேதகரததினததுககும் ஆராய்தற்கு உரியநாளாம், மை அறு திங்கள் தானே வயிடூய மணிக்கும் ஆகும் - குற்றமற்ற திங்கட்கிழமையே வயிடூயஇரத்தினத்திற்கும் ஆராய்தறகுரியநாளாம், ஐயம் அற இவை ஒன்பானும் ஆய்பவர் - சந்தேகமற இவ்வொன்பது இரத்தினங்களையும அளந்தறிவோர், அகம் புறம்பு துய்யராய் அறவோராய் - உள்ளும் புறம்பும் புனிதமுடையவராய்த் தருமநெறியிற் செல்பவராய், முன் சொன்ன நாள் அடைவே ஆய்வர் - முன்புகூறிய கிழமைதொட்டு முறையே ஆராயக்கடவர்.

"ஞாயிறுமாணிக்கங்கோமேதகந்திங்கள்முத்தம்-வாய்வயிடூயஞ்செவ்வாய்வனப்பவளங்களாகும் - மேயவன்புதனிற்பச்சைவியாழமாம்புட்பராகம் - காய்கதிர்வெள்ளிவச்ரங்கூடுஞ்சனிநீலமாமே" எனவருஞ் செய்யுளால் ஞாயிற்றுக்கிழமைமுதலிய கிழமைகளுக்குரிய மணிக ளின்னவையெனவுணர்க. (௬௯)

அல்லியம்பதுமஞ்சாதியரத்தவாயாம்பல்கோடல்
வல்லிசேர்மௌவற்போதுநூற்றிதழ்மரைகள்வாய்
மெல்லிதழ்க்கழுநீர்பேழ்வாய்வெள்ளைமந்தாரமின்ன
சொல்லியமுறையால்வண்டுசூழத்தம்முடிமேற்சூடி.

(இ-ள்.) அல்லி அம் பதுமம் சாதி அரத்தம் வாய் ஆம்பல் கோடல் - அகவி தழையுடைய அழகிய தாமரைமலரும் சிறுசண்பகமலரும் செவந்த வாயையுடைய ஆம்பல்மலரும் செங்காந்தள்மலரும், வல்லி சேர் மௌவல் போது நூறு இதழ் மரை - கொடியாய்ப்படர்ந்த மல்லிகையினமலரும் நூறு இதழ்வாய்ந்த தாமரைமல ரும், கள்வாய் மெல் இதழ கழு நீர் பேழ் வாய வெள்ளை மந்தாரம இன்ன-கள்பொ ருந்திய மெல்லிய இதழ்நெருங்கிய குவளைமலரும் செங்குவளைமலரும பிளந்தவாயை யுடைய வெள்ளிய மந்தாரைமலரும் ஆகிய இவைபோன்ற மலர்களையும, சொல்லிய முறையால் வண்டு சூழ தம் முடி மேல் சூடி - முன்னாககூறிய முறையால் வண் டுகள்சூழத் தமது தலைமேற்சூடி.

மாணிக்கத்திற்குத் தாமரையும் முத்திற்குச் சிறுசெண்பகப்பூவும் பவளத்தி ற்குச் செவ்வாம்பலும் மரகதததிற்குக் காந்தளும புட்பராகததிறகு மல்லிகைமலரு ம் வயிரததிற்கு நூற்றிதழ்த தாமரைமலரும் நீலததிறகுக் கருங்குவளைமலரும் கோ மேதகத்திறகுச் செங்குவளைமலரும வயிடூயததிறகு வெளளைமந்தாரமலருமெனக் கொள்க. “நவமணியாசசித்ததறகுநறுமலாடூனைதலசொல்வாம - தவறின்மாணிக்க த்திற்குத்தாமரைப்பூததரிகக - உவகையாமுததுககோதுமொணசிறுசணபகப்பூ - க வைப்டுபவளம்பாக்கிறகமழுஞ்செவவலலிபபூவே” “மரகதங்காநதள்புட்பராகம ல்லிகைப்பூவச்ரம் - நுரைதருநீரிறபூதத நூறறிதழததாமரைபபூ - கருநீலஙகருவிள ங்கோமேதகங்கமழுங்காவி - திரைவயிடூரியபபூசதேஙகமழவெணமநதாரை” என ஒருசாரார்கூறுஞ் செய்யுளகளால் இரததினஙகளைப பூசிபபோர தாஞ் சூடுமலரும அவ்விரத்தினங்களைப் பூசித்தறகுரிய மலருமஇவையெனவுணாக இனன எனறமை யால் நீலத்திற்குக் கருங்குவளையும் அனறிக கருவிளமலா இச்செயயுளிறகூறியிருத தலுங்கொள்க. (ருல)

தலத்தினைச்சுத்திசெய்துதவிசினையிட்டுத்தூய
நலத்துகில்விரித்துத்தெய்வமாணிககநடுவேவைத்துக்
குலத்தமுத்தாதியெட்டுங்குணதிசைமுதலெண்டிககும்
வலப்படமுறையேபானுமண்டிலமாகவைத்து.

(இ-ள்.) தலத்தினை சுத்தி செய்து - பூமியைச் சுத்தஞ்செய்து, தவிசினை இ ட்டு - ஆசனத்தையிட்டு, தூய நலம துகில விரிதது - அதனமேல் வெளளிய நல்ல வாடையை விரித்து, தெயவம மாணிககம் நடுவே வைதது - தெயவததன்மையையு டைய பதுமராகததை நடுவில்வைத்து, குலதத முதது ஆதி எட்டும - நனமையை யுடைய முத்துமுதலிய வெட்டையும, குண திசை முதல் எண திககும் - கிழத்திசை முதலிய எட்டுத்திக்கிலும், முறையே வலபபட - (சூரியனுதிககுந திசைமுதல்) முறையே வலமாக, பானு மண்டிலமாக வைதது - சூரியமண்டிலமபோல வட்டவ டிவமாகச் சூழவைத்து.

“தூயநன்னிலத்திலொத்த சுத்தபீடத்தைவைத்து - மேயவப்பீடமீதுவெ ண்படாம்விரித்துவைத்துப்-பாயவப்படத்துநாப்பண்பதுமராகத்தைவைத்துச் - சே யவாதவனுதிக்குந்திசைமுதறிசைகடோறும்” “கோமேதாத்துமுத்துக்குளிர்வயிடூ

சிவஞ்செந் - தமேவுபவளம்பச்சைசுத்தரப்புட்பராகம் - வாமேவுவயிரமுமென்டி கைவலஞ்சூழ்வைத்து " எனவருஞ் செய்யுள்களால் இரத்தினங்களை வைக்குமுறை மையுணர்க. (௫௧)

அன்புறுபதுமராகமாதியாமரதனங்க
ளொன்பதுங்கதிரோனாதியொன்பதுகோளுமேற்றி
முன்புரைகமலப்போதுமுதலொன்பான்மலருஞ்சாத்தி
யின்புறநினைந்துபூசையியன்முறைவழாதுசெய்தல்.

(இ-ள்.) அன்பு உறு பதுமராகம் ஆதியாம் அரதனங்கள் ஒன்பதும் - விருப்பமிக்க பதுமராகமுதலிய ஒன்பதுரத்தினங்கள்மேலும், கதிரோன் ஆதி ஒன்பது கோளும் ஏற்றி-சூரியன்முதலிய ஒன்பதுகோள்களையும் அதிதேவதைகளாகத் தாபித்து, முன்பு உரை கமலப்போது முதல் ஒன்பான்மலரும் சாத்தி - முன்னர்க்கூறிய தாமரைமலர்முதலிய ஒன்பதுமலரையுஞ்சாத்தி, இன்பு உற நினைந்து பூசை இயல் முறைவழாது செய்தல் - இன்பமிக அக்கோள்களைத் தியானித்துப் பூசையை நூலிற்கூறியமுறைதவறாமல் செய்யக்கடவர்.

பதுமராகத்திற்கு ஆதித்தனும், முத்தத்திற்குத் திங்களும், பவளத்திற்குச் செவ்வாயும், பச்சைக்குப் புதனும், புருடராகத்திற்கு வியாழமும், வயிரத்திற்கு வெள்ளியும், நீலத்திற்குச் சனியும், கோமேதகத்திற்கு அவ்வாதித்தனும், வயிடூயத்திற்கு அத்திங்களும் அதிதேவதைகளாதலால் ஒன்பதுகோளுமேற்றி என்றார். முன்னர்க்கூறிய தாமரைமலர்முதலியவற்றா லருச்சித்தலை "பூமேவமுன்னஞ் சொன்னபூவினாற்பூசைசெய்வர்" எனவருஞ்செய்யுளாலும் உணர்க. (௫௨)

தக்கமுத்திரண்டுவேறுதலசமேசலசமென்ன
விக்கதிர்முத்தந்தோன்றுமிடன்பதின்மூன்றுசங்க
மைக்கருமுகில்வேய்பாம்பின்மத்தகம்பன்றிக்கோடு
மிக்கவெண்சாலியிப்பிமீன்றலைவேழக்கன்னல்.

(இ-ள்.) தக்கமுத்து தலசமே சலசமே என்ன இரண்டு வேறு - குற்றமில்லாத முத்தங்கள் தலசமெனவும் சலசமெனவும் இரண்டுவகைப்படும், இ கதிர் முத்தம் தோன்றும் இடன் பதின் மூன்று - இந்தவிளக்கத்தையுடைய முத்தங்கள்தோன்று மிடங்கள் பதின்மூன்றிடங்களாம், சங்கம் மை கருமுகில் வேய் பாம்பின் மத்தகம் பன்றிக்கோடு - சங்கமும் கரியமேகமும் மூங்கிலும் பாம்பின்தலையும் பன்றிக்கொம்பும், மிக்க வெண் சாலி இப்பி மீன்தலை வேழம் கன்னல் - மிக்கவெண்ணெல்லும் சிப்பியும் மீனினதுதலையும் கரும்பும்.

தலசம் தலத்திற்றோன்றியது. சலசம் சலத்திற்றோன்றியது. தலத்திற்றோன்றியவை வேய், பாம்பின்றலை, பன்றிக்கொம்பு, நெற்பயிர், கரும்பு, யானையின்கொம்பு, சிங்கத்தின்கை, கற்புடையபெண்கள்கழுத்து, கொக்கின்கழுத்து ஆகிய இவைகளிற்றோன்றிய முத்தங்கள். சலத்திற்றோன்றியவை சங்கு, மேகம், சிப்பி, மீனின்தலை ஆகிய இவைகளிற்றோன்றியமுத்தங்கள். (௫௩)

கரிமருப்பைவாய்மான்கைகற்புடைமடவார்கண்ட
மிருசிறைக்கொக்கின்கண்டமெனக்கடைகிடந்தமூன்று
மரியனவாதிப்பத்துநிறங்களுமணங்குந்தங்கட்
குரியனநிறுத்தவாறேயெனவுமுரைப்பக்கேண்மின்.

(இ-ள்.) கரி மருப்பு ஐவாய்மான் கை கற்புடைய மடவார் கண்டம் - யானையின்கொம்பும் சிங்கத்தின்கையும் கற்பினையுடைய பெண்கள் கழுத்தும், இருசிறை கொக்கின் கண்டம் என - இரண்டுசிறகினையுடைய கொக்கின்கழுத்தும் என (முன்னர்க்கூறிய இடங்களாம்) கடை கிடந்த மூன்றும் அரியன - இறுதியிற்கூறிய பெண்கழுத்துமுதலிய மூன்றிடங்களிற்றோன்றிய மூன்றுமுத்தங்களும் கிடைத்தற்கரியன, ஆதி பத்து நிறங்களும அணங்கும் - சங்குமுதலிய இடங்களிற்றோன்றிய பத்து முத்தின் நிறங்களும தெய்வமும், தங்கட்கு உரியன நிறுத்த ஆறே எனவும் உரைப்ப கேண்மின் - அவைகளுக்குரியனவான நூல்களில் நிறுத்திய முறையே மற்றையவற்றையும் சொல்லககேளுங்கள்.

சிங்கத்திற்குப்பஞ்சானனம என்பது ஓர்பரியாயப்பெயர் அது பரந்தமுகமுடையது என்னும் பொருள்மேல்நிற்றலால் காரணப்பெயர். இதனைககருதாது ஐந்துமுகமுடையத் எனக்கருதி ஐவாய மான் எனக்கூறினார் எனச்சிலர் கூறுவர் அது தவறு. ஐவாய் மான் என்றது மிருகங்களுக்கெல்லாம் அரசதன்மைவாய்ந்த மிருகம் எனப்பொருள்கொண்டு சிங்கம எனக்கொள்க. மிருகராசன என்பதனுல் உணர்க. "பனிமதிகதலிமேகமபைந்தொடி கழுசதாவினயல், தனியானையேனககொம்பு தடங்கராவுடும்புசொக்கு, வினையராசசலஞ்சலமசக்திபபிமீன்மூங்கில்பூகம், நினை செந்நெல்கரும்புகளுசனிகழிருபதினமுத்தாகும" எனவருஞ்செய்யுளால் முத்து இருபதிடத்திறறோன்றுமெனப பிறாகூறுதலுங்காணக. (௫௪)

> மாடவெண்புறவின்முட்டைவடிவெனத்திரண்டபேழ்வாய்க்
> கோடுகொன்முத்தம்வெள்ளைநிறத்ததுகொண்மூமுத்த
> நீடுசெம்பரிதியன்னநிறத்ததுகிளைமுத்தாலி
> பீடுசானிறத்தராவின்பெருமுத்தநீலத்தாமால.

(இ-ள்.) வெளமாடப் புறவின முட்டை வடிவு எனதிரண்ட பேழ்வாய் கோடு கால் முத்தம் வெள்ளை நிறத்தது - வெள்ளியமாடப்புறவின முட்டையின வடிவைப்போலத திரட்சிவாய்ந்த பிளந்தவாயையுடைய சஙகுபெற்ற முத்தம் வெள்ளைநிறத்தையுடையது, கொண்மூமுத்தம் நீடு செமபரிதி அன்ன நிறத்தது - மேகம்பெற்ற முத்தம மிகக செந்நிறமவாய்ந்த சூரியனையொத்த நிறத்தையுடையது, கிளை முத்து ஆலி பீடு சால் நிறத்தது - மூங்கிலின்முத்தம் கலமழைபோலப்பெருமையமைந்த நிறத்தையுடையது, அராவின பெருமுத்தம நீலத்து ஆம - பாம்பினது பெரியமுத்தம நீலமணியின நிறத்தையுடையதாம. (௫௫)

> ஏனமாவாருஞ்சோரியீரஞ்சுவைசசாலிமுத்த
> மானதுபசுமைத்தாகும்பாதிரியனையதாகு
> மீனதுதரளம்வேழமிரண்டினும்விளையுமுத்தந்
> தானதுபொன்னின்சோதிதெய்வதஞ்சாற்றக்கேண்மின்.

(இ-ள்.) ஏன மா ஆரம சோரி-பன்றியினகொம்பின் முத்தமானது உதிரநிறத்தையுடையது, ஈராஞ்சுவை சாலி முத்தம ஆனது பசுமைத்து ஆகும் - குளிர்ந்த இனிய வெண்ணெல்லின் முத்தமானது பசியநிறமுடையது, மீனது தரளம் பாதிரி அனையது-மீனினதுமுத்தம் பாதிரிமலரையொத்த நிறத்தையுடையது, வேழம் இரண்டினும் விளையுமுத்தம் தானது பொன்னின் சோதி - யானைகொம்பு கரும்பு இரண்டினுந்தோன்றிய முத்தமானது பொன்னின் நிறமுடையது, தெய்வதம் சாற்ற கேண்மின் - அவ்வவ்முத்தங்களுக்குககூறிய தெய்வங்களைச்சொல்லக் கேளுங்கள்.

பான்முத்தம்வருணன்முத்தம்பகன்முத்தம்பகலோன்முத்த
மான்முத்தநீலமுத்தமாசறுகுருதிமுத்தங்
கான்முத்தம்பசியமுத்தங்காலன்றன்முத்தந்தேவர்
கோன்முத்தம்பொன்போன்முத்தங்குணங்களும்பயனுஞ்சொல்வாம்.

(இ-ள்) பான்முத்தம் வருணன்முத்தம் - (மேற்கூறியமுத்துக்களுள்) வெள்ளியமுத்தங்கள் வருணனுக்குரியமுத்தங்களாம், பகல் முத்தம் பகலோன் முத்தம் - சூரியன்போலும் ஒளிவிடும் முத்தங்கள் சூரியனுக்குரியமுத்தங்களாம், நீலமுத்தம் மால் முத்தம் - நீலநிறத்தையுடைய முத்தங்கள் திருமாலுக்குரிய முத்தங்களாம், மாசு அறு குருதி முத்தம் கால் முத்தம் - குற்றமற்ற உதிரம்போலுஞ் செந்நிறம்வாய்ந்த முத்தங்கள் வாயுதேவனுக்குரிய முத்தங்களாம், பசியமுத்தம் காலன் தன்முத்தம் - பசியநிறம்வாய்ந்த முத்தங்கள் இயமனுக்குரியமுத்தங்களாம், பொன்போல்முத்தம் தேவர்கோன்முத்தம் - பொன்னைப்போலும் நிறம்வாய்ந்த முத்தங்கள் இந்திரனுக்குரிய முத்தங்களாம், குணங்களும் பயனும் சொல்வாம் - இனி முத்தின் குணங்களையும் அதனையணிவோர் அடையும் பயன்களையும் எடுத்துக்கூறுவாம். (ருஎ)

உடுத்திரளனையகாட்சியுருட்சிமாசின்மைகையா
லெடுத்திடிற்றிண்மைபார்வைக்கின்புறல்படிகமென்ன
வடுத்திடுகுணமாறின்னவணியின்மூதணங்கோடின்மை
விடுத்திடுந்திருவந்தெய்தும்விளைந்திடுஞ்செல்வம்வாழ்நாள்.

(இ-ள்) உடு திரள் அனைய காட்சி - நக்ஷத்திரத்தின் கூட்டத்தையொத்த தோற்றமும், உருட்சி - திரட்சியும், மாசு இன்மை - குற்றங்களில்லாமையும், கையால் எடுத்திடில் திண்மை - கையிலெடுக்கில் கனம்வாய்ந்திருத்தலும், பார்வைக்கு இன்பு உறல் - கட்பார்வைக்கு இன்பஞ்செய்தலும், படிகம் என்ன அடுத்திடு குணம் ஆறு - பளிங்குபோலத் தம்மையடுத்த பொருள்களைத் தம்பால் பிரதிபிம்பிக்க விளங்குங்குணமுடைமையுமாகிய அறுவகைப்பட்ட குணங்களுமாம், இன்ன அணியின் - இக்குணங்களையுடைய முத்துக்களை அணிந்தால் (அணிவோர்க்கு) மூதணங்கோடு இன்மை விடுத்திடும் - மூதேவியும் மூதேவிபால்விளையும் வறுமையும் நீங்கும், திருவந்து எய்தும் - இலட்சுமிவந்து சேர்வாள், செல்வம் வாழ்நாள் விளைந்திடும் - (அவ்விலட்சுமியால்) செல்வமும் அச்செல்வத்தை நுகர்தற்குரிய ஆயுளும்வந்து கைகூடும்.

குணம் எனவே குற்றமுங் கூறுதேயமையும். அவை காற்றேறு, மண்ணேறு, கல்லேறு, நீர்நிலையென்று மிந்நான்கு குற்றங்களொழிந்து சுக்கிரன்போல வெண்மையையும், செவ்வாய்போலச் செந்நிறத்தையுமுடையவாய்ந்து உருண்டவடிவினவாய் முத்தங்களிருக்கவேண்டும் என "காற்றினுமண்ணினுங்கல்லினுநீரினுந், தோற்றியகுற்றந்துகளறத்துணிந்தவுஞ், சந்திரகுருவேயங்காரகனென்ன, வந்தநீர்மைவட்டத் தொகுதியும்" எனச் சிலப்பதிகாரத்தில்வருதல்காண்க. குற்றங்கள் மண்ணேறு, செந்நீர், செவப்பு, முகங்கறுத்தல், இனமருட்சி, இவ்வைந்தோடு கோணியிருத்தல் எனப் பத்துவகைப்படும் என "இனிமுத்தின்குணமுருட்சியியலும் வான்மீனின் றேசு, அனமறுவின்மைநோக்கிற் கவினுறப்படிகநன்று, வினவுமண்ணேறல்செந்நீர் செவப்புமென்முகங்கறுத்தல், இனமருளிவற்றினோடு கோணலென்றீரைங்குற்றம்" என ஒரு சாரார் செய்யுளில் குணம் ஆறுங் குற்றம்பத்தும் எனவருதல் காண்க.

மாசறுதவத்தோனென்பும்வலாசுரனென்பும்வீழ்ந்த
கோசலமாதிநாட்டிற்பட்டதுகுணத்தான்மாண்ட
தேசதாயிலேசதாகித்தெள்ளிதாயளக்கினெல்லை
வீசியவிலையதாகிமேம்படுவயிரந்தன்னை.

(இ-ள்.) மாசு அறு தவத்தோன் என்பும் வலாசுரன் என்பும் வீழ்ந்த - குற்றமற்ற ததீசிமுனிவருடைய முதுகந்தண்டெலும்பின் பிதிரும், வலாசுரனுடைய எலும்புகளுஞ்சிந்திய, கோசலம் ஆதி நாட்டில் பட்டது - கோசலமுதலியநாடுகளிற்றோன்றி, குணத்தால் மாண்ட தேசது ஆய - குணங்களாலமாட்சிமைப்பட்டவிளக்கமுடையதாய், இலேசது ஆகி - (கையிலெடுக்கில்) இலேசாய், தெள்ளிது ஆய்-சஞ்சலையகன்றதாய், அளக்கின்-(விலையை) வரையறுக்கில், எல்லை வீசிய விலையது ஆகி மேம்படு வயிரம் தன்னை - அளவுகடந்தவிலையை யுடையதாகி (இவவாறு) மேம்பட்டவயிரத்தை.

கோசலமாதிநாட்டிற் பட்டது என்றதற்குக் கோசலமுதலியநாட்டிறறோன்றி நிறமும அதிதேவதையும் சாதியுமபெற்று எனககொள்க. கோசலமுதலியநாடுகளாவன - கோசலம, கலிஙகம, மாதங்கம, இமயம், மாராஷ்டம், சவவீரம, பவுண்டரம், மக்கமாம. நிறஙகளாவன-கோசலநாட்டிறபிறநத வயிரம காட்டுவாழைப் பூநிறமும், கலிஙகநாட்டிறபிறநத வயிரம பொனனிறமும, மாதஙகநாட்டிறபிறந்த வயிரம் மல்லிகைமலாநிறமும, இமயமலையிறபிறந்தவயிரம வெணணிறமும, மாராஷ்டநாட்டிறபிறநதவயிரம செவநதநிறமும, சவவீரநாட்டிறபிறநதவயிரம கரியநிறமும், பவுணடரநாட்டிறபிறநதவயிரம குவளைநிறமும, மககநாட்டிறபிறநதவயிரம் பொன்னிறமுமாம். அதிதேவதைகளாவாா காட்டுவாழை, வாழை,மூங்கில, இவற்றின்மலர்போனற வயிரததிறகுததிருமாலும, ஆழுமலைவாயாகச வெணணிறமுடைய வயிரததிற்கு இநதிரனும, பசுவினகொமபு, வணடு, குவளைபோலும் உளள வயிரததிற்கு இயமனும், முளளிலவு, முணமுருககுமலாபோன்ற வயிரததிறகு வாயுவும், கோஙகமலாபோலுமுளள வயிரததிறகு வருணனும, நீாபோலும உள்ள வயிரததிற்குச் சந்திரனும, இநதிரகோபமபோலுமுளள வயிரததிறகுச சூரியனும, தீபபோன்றவயிரததிறகு அககினியுமாம." சாதிகளாவன ,- படிகநிறமபோலுமுளளவயிரம மறையவனும், முயற்கணபோலுமுளளது அரசனும, வாழைக்குருத்துபபோலுள்ளது வைசியனும, மேகமபோலநிறமுடையது சூததிரனுமாம. "ஒருவலாசுரன்ததீசியுடலென்புவீழநததேசம, அாதநாடெனருகும்நதேசங்கௌசலாதி, வருமதிலுதித்தவச்ரமவாகைப்பூநிறததவாகும, புனாகலிஙகததுதிததவயிரமபொனனிறததவாமே." "மாதங்கதேசவசரமலலிகைமலரினமேனி, பீதஞசேரிமயவெறபிறபிறநதன தவளமேனி, தீதங்கினமாராட்டததிற செனிததனசெவநதமேனி, யோதுசவவீரதேசத்துதிததனகரியமேனி." "பேசியபவுணடரததிற பிறநதனகுவளைமேனி,ஓசைசேர்மக்கதேசததுதிரதபொனனிறத்தவிபபால், பூசியவுாகைவாழை மூஙகிலின்பூநிறத்த, மாசிலாவச்சிரஙகட்கட் கசசுதனறெயவமாமே." "ஓரமாருய்வெளுததவயிரத்துக்கும்பாகோமான், பாாியபசுவின்கொமபிற பலநிறவயிரஙகூறறும, கூரமுள்ளிலவம்போது குலாவியபலாசமபொறபூச், சீரியவயிரததிறகுத தெயவமிவ்வாயுவாமே." "கோங்கலர்நிறஞசெறிந்தகுறையுருவயிரததிற்குத, தேங்கியநாரஞ்சேருந் தெண்டிசைவருணனாகும், ஒங்குநீாநிறவச்ரததிற்கொளிகொளவெண்டிங்கடேவன், பாங்குறுகோபமேனி வயிரததேபரிதிததேவே." "தீநிறவயிரத்திற்குச்செய்யதீக்கடவுடெய்வம், ஆனவிவ்வயிரதுள்ளு மமைந்தகாற்குலமுமுண்டு, வானுறுபடிகம்பா

புழுயற்கன்வாழைக்குருத்து, நீனிறைகார்வானத்துகிறமணிமறையோர்ராதி." என ஒருசாரார்கூறியிருத்தலாலும் ஆலாஸ்யமாகாத்மியத்தாலும்உணர்க. சி-இல் அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டிய "அந்தணன்வெள்ளையரசன்செவப்பு, வந்த வைசியன்பச்சைசூத்திரன், அந்தமில்கருமையென்றறைந்தனர்புலவர்." என்னுஞ்சூத்திரத்தால் நால்வகைவருணத்தினெளியைக்காண்க. குணத்தால்மாண்டதேசதாய் என்பதற்குக் குற்றத்தினின்றுநீங்கிக் குணங்களால் மாட்சிமைப்பட்ட விளக்கமுடைய தாயெனப்பொருள்கொள்க. குற்றம்பன்னிரண்டு, சரை, மலம், கீற்று, சம்படி, பிளத்தல், துளை, கரி,விந்து, காகபாதம், இருத்து, கோடிமுரிதல், தாரைமழுங்கல் "சரைமலங்கீற்றுச்சம்படிபிளத்தல், துளைகரிவிந்துகாகபாதம், இருத்துக்கோடிமுரிதல் தாரை, மழுங்கறம்மோடெண்ணீராறும், வயிரத்திழிபென மொழிபவான்றோர்" எனவும், குற்றத்தினபயன் "காகபாதம்நாகங்கொல்லும், மலம்பிரியாதது நிலந்தருநிலைகெடும், விந்துசிந்தையிற் சந்தாபந்தரும், கீற்றுப்பாலேற்றுமாய்வர்" எனவும், குணங்கள் ஐந்து-பலகைவெட்டு, கோணமாறு, தாரை, சுத்தி, தாராசாம். "பலகைவெட்டுங்கோணமாறும், பல்கியதாரையுஞ்சுத்தியுந்தராசமும், ஐந்துங்குணமென்றறைந்தனர்புலவர்" எனவும், குணத்தின்பயன் "மறையோரணியின் மறையோராகிப், பிறவியேழும்பிறந்துவாழுதவரோ" எனவும் "மன்னவரணியின்மன்னவர்சூழ, விந்நிலவேந்தரவொழுபிறப்பும்" எனவும் "வணிகரணியின்மணிபொன்மலிந்து, தணிவறவடைந்து தரணியில்வாழ்வர்" எனவும் "சூத்திரரணியிற் றொகையில்கனகநெல், வாய்ப்பவணியின் மகிழ்ந்துவாழ்குவரோ" எனவும் குற்றங்கட்கும் குற்றங்களால்வரும்பயனுக்கும், குணங்களுக்கும் குணங்களால்வரும்பயனுக்கும் சி-இல் அடியார்க்கு நல்லார் எடுத்துக்காட்டிய உதாரணங்களால் உணர்க. குற்றங்கள் நான்கிற்குமட்டும் பயன்கூறினமையால் ஏனைக்குற்றங்கள் தீயபயனைக்கொடுப்பனவல்லவெனக்கொள்க. வயிரத்தின்குணங்கள் ஏழென ஒருசாரார் கூறியிருத்தலை "நவன்றிடு தாரைசுத்தி சொய்மையிந்திரசாபம்நோ, உவந்திடுபலகையாங்க ளோங்கியவெண்கோணங்கள், அவந்தவிராறுகோணமைந்துகோணுங்களாக, நிவந்தளகுணங்களேழா, திகழ்த்துபமணிநூல்வல்லோர்" எனபதனுல் உணர்க. மேம்படு என்றமையால் அரசர், கிரீடதிலன்றி யேனையுறுப்புகளிலும், அரசிமார் மங்களாபரணத்திலும் அணியக்கூடா எனப்பொருள்போந்தவெனக்கொள்க "அரசிர்தம்மெளலிமேலு மணியொளுவரசிமார்க்கும், மருவியதாலிப்பூணில்வயிரத்தாற்பண்ணவொண்ணு" என்பதனுல் உணர்க. (௫௬)

> குறுநிலத்தரசுந்தாங்கிற்குறைவுதீர்செல்வமெய்தி
> யுறுபகையெறிந்துதன்கோன்முழுதுலகோச்சிக்காக்கும்
> வறுமைநோய்விலங்குசாராவரைந்தநாளன்றிச்செல்லுங்
> கறுவுகொள்கூற்றம்பூதங்கணங்களுமணங்குசெய்யா.

(இ-ள்.) குறு நிலத்து அரசும் தாங்கில் - குறுநிலக்கிழமைபூண்ட சிற்றரசும் அணிந்தால், குறைவுதீர் செலவம் எய்தி-நிறைந்தசெல்வத்தையடைந்து, உறு பகை எறிந்து - மிக்க பகைவரை யோட்டி, தன கோல் உலக முழுதும் ஓச்சி காக்கும் - தனது செஙகோல் உலகமுற்றுஞ்செல்ல நடாத்திக் காப்பான், வறுமை நோய் விலங்கு சாரா - (அவ்வரசனை வருதத) வறுமையும் கொடியபிணிகளும் மிருகங்களும் அடையாவாம், வரைந்த நாள அன்றி செல்லும் கறுவு கொள் கூற்றம்-வரையறுத்த நாளன்றி யிடையில்வரும்கோபமிக்க இயமனும், பூதங்களும் கணங்களும் அணங்கு செய்யா - பூதங்களும் பசாசுகளும் வருத்தஞ்செய்யாவாம்.

"இம்புவாளிம்பர்த்தையா ளாட்படைஞாட்பில்வெல்வார் - செம்பொருட்சி றதேசத்தார்செலுத்துவர்பஃறேயங்கள் - பம்புகல்குரவுபூதம்பசருசுபாம்பஞ்சிதீண் டா - நம்புமுன்சொன்னதேசி னல்வயிரங்கொள்வார்க்கே" என்பதனாலும் வயிரம் அணிவோர் அடையும்பயன்காண்க. (௬௦)

மாமணிமரபுக்கெல்லாம்வயிரமேமுதன்மைச்சாதி
யாமெனவுரைப்பர்நூலோரதிகம்யாதென்னிலேனைக்
காமருமணிகட்கெல்லாந்தமரிடுகருவியாமத்
தூமணிதனக்குந்தானேதுளையிடுங்கருவியாகும்.

(இ-ள்.) நூலோர் - இரத்தினநூலுணர்ச்சியில் வல்லோர், மாமணி மரபுக்கு எல்லாம் வயிரமே முதன்மை சாதி ஆம் என உரைப்பர் - பெரிய இரத்தினங்களின் மரபுகளுக்கெல்லாம் வயிரமே முதற்சாதியென்று கூறுவர், அதிகம் யாது என்னில்- அவ்வயிரம் மேம்பட்டது யாதுகாரணம் என்று வினவில், ஏனை காமரு மணிகட்கு எல்லாம் தமர் இடு கருவியாம் - (அது) ஒழிந்த விருப்பஞ்செய்யும் மற்றை யிரத்தி னங்களுக்கெல்லாம் துளையிடும் கருவியாகும், அ தூ மணி - அந்தப் பரிசுத்தமாகிய வயிரம், தனக்கும் தானே துளையிடும கருவியாகும்- தனக்கும் தானே துளைபோடும் கருவியாம். (ஆதலால்)

"வயிரவூசியுமயன்வினையிரும்பும்-செயிரறுபொன்னைச்செம்மைசெயாணியும்- தமக்கமைகருவியுந்தாமாமவைபோல்-உரைதசிறமுணர்தநலமுரையதுதொழிலே" என்னும் அகத்தியச்சூத்திரத்தால் வயிரத்தின முதன்மையுணர்க. (௬௧)

மரகதத்தோற்றங்கேண்மின்வலாசுரன்பித்தந்தன்னை
யிரைதமக்காகக்கௌவிப்பறந்தபுள்ளீர்ந்தண்டில்லித்
தரைதனிற்சிதறவீழ்ந்துதங்கியதோற்றமாகு
முரைதருதோற்றமின்னும்வேறுவேறுள்ளகேண்மின்.

(இ-ள்.) மரகதம் தோற்றம் கேண்மின் - மரகதத்தினது தோற்றத்தைக்கேளுங்கள், வலாசுரன் பித்தம் தன்னை - வலாசுரனுடைய பிச்சினை, தமக்கு இரை ஆகக் கௌவி பறந்த புள் - தமக்கு இரையாகக் கௌவிப்பறந்த கருடன், ஈரம் தண்டில்லி தரை தனில் சிதற வீழ்ந்து தங்கிய தோற்றம் ஆகும - (நீர்வளத்தால்) தண் ணுமைவாய்ந்த டில்லிநாட்டிற்சிதற (அங்கிலத்தில்) வீழ்தலால் அங்கு மரகதந்தோன் றிய கனிகளுளவாம், இன்னம் உரை தரு தோற்றம்வேறு வேறு உள்ள கேண்மின் - இன்னமும் (நாம்) சொல்லும் மரகதத்தின் தோற்றங்கள் வெவ்வேறுள்ளன (அவற்றைக்) கேளுங்கள்.

வலாசுரன பிச்சினைக் கருடன் கவ்விக் கைத்து இமயமலைமுதலிய விடங்களி லுமிழ்ந்தமையால் மரகதத்திற்குக் 'கருடோற்காரம்' என்றோர்பெயர்வந்ததென அடி யார்க்கு நல்லார் கூறினர். (௬௨)

விதிர்த்தவேலனையவாட்கண்வினதைமாதருணச்செல்வ
னுதித்தவான்முட்டையோடடையுவணவேற்றரையில்பபடக்
கதிர்த்தவோடரையிற்றப்பிவீழ்ந்தொருகடல்சூழ்வைப்பி
லுதித்தவாறுகுமின்னுமுண்டொருவகையாற்றோற்றம்.

(இ-ள்.) விதிர்த்த வேல் வாள் அனைய கண் வினதை மாது-அசைக்கும் வே லையும் வாளையும் ஒத்த கண்களையுடைய (தக்கன்புத்திரியும் காசிபமுனிவர் மனைவியு

மாகிய) விளைத ஏனபுவன், அருணச் செல்வன் உதித்த வால் முட்டைஞெட்டை உவளை வுழ அளையில் யாப்ப-அருணன் உதித்த வெள்ளிய முட்டையினோட்டினைக் கருடனது அளையிற்கட்ட, கதிர்த்த ஓடு அளையில் தப்பி வீழ்ந்து ஒருகடல் சூழ்வைப்பில் உதித்த ஆறு ஆகும்-விளங்கும் அம்முட்டையினோடு அத்தவளையினின்றும் வழுவி வீழ்ந்து கடல்சூழ்ந்த ஒரு தீபத்தில் தோன்றிய வண்ணம் ஒருவகையாம், இனனும் ஒரு வகையால் தோற்றம உண்டு-இன்னும் ஒருவகையால் மரகதத் தோற்றமுளது.

உவமைக்கு உவமையில்லாமையால் வேலனையவாட்கண் என்பதற்கு வேல்வாளினையகண் எனக் கொண்டு கூட்டினும் "உவமைக்குவமையில்லெனமொழிப" என்னும் சூத்திரததாலுணர்க. (௬௩)

முள்ளளைமுளரிககண்ணன்மோகினியணங்காயோட
வளளைமதியஞ்சூடிமநதரவளைமடடாகத்
துள்ளரியேறுபோலததொடர்ந்தொருவிளையாடடாலே
யெள்ளரிதாயசெந்தீயிந்தியக்கலனஞ்செயதான்.

(இ-ள்.) முள் அளை முளரி கண்ணன - முள் நெருங்கிய துளையுடைய தாமரைமலாபோலுங கணணையுடைய திருமால், மோகினி அணங்காய் ஒட - மோகினிவடிவாயோட, வள் அளா மதியஞ் சூடி - ஒளிவண்மையையுடைய அாத்தசந்திரனைச் சூடிய சிவபெருமானார், மநதர வளா மடடு ஆக - மந்தரகிரியின் எல்லையளவாக, ஒரு விளையாட்டால் துள அரி எறு போல தொடர்ந்து - ஒரு திருவிளையாட்டால் துள்ளிச் செல்லும் ஆண்சிங்கத்தைபபோலப பின்றொடாநது, எள் அரிது ஆய செந் தீ இந்தியக் கலனம் செய்தான் - பழிடபிலலாத செந்தீயாகிய இநதியக்கலனஞ் செய்தருளினார். (௬௪)

அப்பொழுதமலவித்திலரிகாகுமரன்கான
வைபபுறைதெயவநதோடுமவநதனனந்தவிந்து
துப்புறுகருடன்சௌவிக்கடலிலுந்துருககாடடும்
பப்புறவிடுத்தவாறேபட்டதுகலுழப்பசசை.

(இ ள்.) அப பொழுது அமல விநதில்-அக்காலையில் அத்தியாகிய இந்திரியத்தில், அரிகாகுமரன் கானவைப்பு உறை தெயவத தோடும வநதனன்-மகாசாத்தா காட்டில் வசிககுந தெயவப்பரிவாரங்களோடும வநது தோன்றினா, அந்த விநது துப்பு உறு கருடன் கௌவி - அந்த விநதினை வலிமையுள்ள கருடபபுள்கௌவி, கடலிலும் துருக்காட்டும பப்பு உற விடுதத ஆறே - கடலிலுந் துருக்கநாட்டிலும் பரவ விடுத்த வழியே, கலுழப் பசசை பட்டது - கருடப்பச்சை தோன்றியது.

திருமால், தேவர்முதலியோரோடு கூடிக் சிவபெருமானருள்பெறாது கடலைக்கடைந்தவழி விடநதோனற அசசமுறறுத திருக்கயிலையை யடைநது ஓலமிடச், சிவபெருமானார் அபயந்தநது கடலைககடையுஙகள அமுதந்தோனறுமெனறருள, அவ்வாறேசென்று மூததபிள்ளையாரைச் சிநதியாது கடைநதவழி மததாகநின்ற மந்தரகிரி நிலைகுலைநது பாதாளததிற்செல்லவும் அதனைநோக்கி யப்பிள்ளையாரையாராதித்துப் பண்டு போற்கடைய அமுதகும்பந தோன்றியது. அதனைக்கண்ட தேவர்களும் அசுரர்களும் தமமாலிதுவந்ததென்று தம்முள் மாறுபட்டுப் போர்செய்யக் கருதியவழித் திருமாலுணர்ந்து மோகினிவடிவாய் அவர்முன் னிற்பத் தானவர்கள் காமங்கொண்டு நெருங்கினர்கள். அதுநோக்கி யமுதத்தையும் என்னையும் விரும்பினோர்வ

ரோ அவரவர் அவ்வப்பொருள்களைப் பெறலாமென்றுகூற அசுரர்கள் தன்னைக் கைக்கொண்டு செல்ல, அவர்களைநோக்கி வலியர் யாரோ அவர் என்னைப் புணர்கவென அசுரர்கள் யாம் வலியோம் யாம் வலியோமென்று யாருந் தம்முள் முன்[illegible] செய்து மாண்டனர்கள். பின்னர்த் திருமால் தேவரிடஞ்சென்று அமுதம் [illegible] கொடுத்துத் தேவர்கள் வணங்க இருந்தவிடத்து, அச்சிவபெருமானார் பேரழகுவாய்ந்த திருவுருவத்தோடு மோகினிவடிவாய்நின்ற அத்திருமால் முன்சென்று எமது சத்திமாருள் நீயொருசத்தியாதலால் எம்மைப் புணர்கவென்று கைநீட்டியவழி, அத்திருமால் நாணியோடப் பெருமானாரும் பின்சென்றோடிக் கைப்பற்றி நாவலந்தீவில் ஓர்கடற்சார்பில் வடபாலுள்ள ஓரிடத்திற்கூடிப்புணர்ந்தனர்கள். அப்போது இருவர்பாலும் ஓர் புத்திரன்றோன்ற அரிகரன் எனனும் நாமமிட்டுச் சிலபரிவாரதேவர்களையுந்தந்தருளினார்.

"இந்தவண்ணமிருக்கமுராரியும் - அந்திவண்ணத்தமலனுமாகியே
மூந்துகூடிமுயங்கியவேலையில் - வந்தனன்னெமைவாழ்விக்குமையனே"

"அத்தகுந்திருமைந்தற்கரிகர - புத்திரனெனுநாமம்புனைந்தபின்
ஒத்தபான்மையுருத்திரர்தம்மொடும் - வைத்துமிகக்வரம்பலநல்கியே."

எனவருதலைக் காந்தம் அசுரகாண்டம் மகாசாத்தாபடலத்திற்காண்க. (௬௫)

காடமேசுப்பிரமேகாளமெனக்குணமூன்றுகருடப்பச்சைக்
கீடறுகினிதழ்நிறத்தகாடமதுசாதியினாலிருவேறுகுஞ்
சாடரியசகுணமெனசதோடமெனவவையிரண்டிறசகுணமாறும்
பீடுபெறுகாடமொடுமுல்லசிதமபேசலமபித்தகமேமுத்தம்.

(இ-ள்.) கருடப் பச்சைக்கு காடமே சுப்பிரமே காளமே எனக் குணம் மூன்று ஆம்-கருடப்பச்சைக்குக் காடமெனவும் சுப்பிரமெனவும் காளமெனவும் குணம் மூன்றுவகைப்படும், ஈடு அறுகின் இதழ் நிறத்த காடம் அது - பெருமை பொருந்திய அறுகினிதழ்போலும் பசியநிறத்தையுடைய காடமானது, சாடு அரிய சகுணம் என சதோடம் என சாதியினால் இரு வேறு ஆகும் - கெடுதலில்லாத சகுணமெனவுஞ் சதோடமெனவும் சாதியினால் இருவகைப்படும், அவை இரண்டில் - அவ்விரண்டுசாதியுள், பீடு பெறு காடமொடும் உல்லசிதம் என பேசலம் என பித்தகம் என முத்தம் என - பெருமைபெற்ற காடமோடும் உல்லசிதமெனவும் பேசலமெனவும் பித்தகமெனவும் முத்தமெனவும். (௬௬)

புல்லரியபிதுகமெனவிவையாறிற்காடமதுபுல்லின்வண்ண
முல்லசிதமெலிதாகும்பேசலமேகுளச்செந்நெலொண்டரளம்போலு
மல்லடரும்பித்தகமேபசுங்கிளியின்சிறைநிறத்ததாகுமுத்தங்
குல்லைநிறம்பிதுகமனையிலையின்றறஞ்சதோடத்தின்குணைந்தாகும்.

(இ-ள்.) புல் அரிய பிதுகம் என சகுணம் ஆறு ஆம்-அடைதற்கரிய பிதுகமெனவும் சகுணம் அறுவகைப்படும, இவை ஆறில்-இவவாறுள், காடம் அது புல்லின்வண்ணம் ஆகும்-காடமானது புல்லைப்போலும் பசியவண்ணமுடையதாம், உல்லசிதம் மெலிது ஆகும் - உல்லசிதமானது மென்மைத்தன்மையையுடையதாம், பேசலம் குளச் செந்நெல் ஒள் தரளம போலும்-பேசலமானது குளநீரால் விளையும் செந்நெற்பயிரிற்றோன்றிய ஒள்ளிய முத்துப்போன்ற பசியநிறத்தினையுடையதாம், அல் அடரும் பித்தகமே பசும் கிளியின் சிறை நிறத்தது ஆகும்-இருளையோட்டும் ஒளிமிக்க பித்த

சமானது பசியவேலியின் சிறகைப்போலப் பசியநிறத்ததாம், முத்தம் குவளை நிறம் - முத்தமானது அலரிபத்திலிலைபோலும் நிறமுடையதாம், பிதம் மரை இலையின் நிறம் - [illegible]தமானது தாமரையின் இலைபோலும் நிறமுடையதாம், சதோடத்தின் குணம் ஐந்தாகும் - சதோடத்தின்குணம் (இவ்வாறு) ஐந்துவகைப்படும்.

சகுணம் - குணசம்பந்த முள்ளதெனவும், சதோடம் - தோஷசம்பந்தமுள்ளதெனவும் பொருள்கொள்க.

சகுணங்கள் மயிற்கழுத்தையொத்திருத்தல், பயிர்போன்றிருத்தல், பொன்மை, நன்னுடல் முற்றும் பசுத்தல், மின்னல்போன்றிருத்தல், பாய்தல், பொன்வண்டின்வயிறொத்தல், சருச்சரையின்மையென எட்டுவகைப் படுமென, சி - இல் - அடியார்க்கு நல்லார் "செயத்தமயிற்கழுத்தொத்தலைபைம்பயிற் - பசுத்தல்பொன்மைத னனுடல்பசுத்தல - தடித்துப்பாய்தல்பொன்வண்டின்வயிறொத்தல் தெளிதலோ டெட்டுங்குணமெனமொழிப" என வெடுத்துக்காட்டியதால் உணர்க. (கள)

தோடலேசாஞ்சிதமேதுட்டமேதோடமூர்ச்சிதமேவெய்ய
தோடலேசத்திறனுஞ்சூழமந்ததோடமெனத்தொகுத்தவைந்திற
னோடலேசாஞ்சிதஞ்சம்பிரவிலையாமலரியிலைதுட்டநீலத்
தோடதாம்புல்லினிறந்தோடமூர்ச்சிதமுளரிதோடலேசம்.

(இ-ள்.) தோடலே சாஞ்சிதமே துட்டமே தோட மூர்ச்சிதமே - தோடலே சாஞ்சிதமெனவும் துட்டமெனவும் தோடமூர்ச்சிதமெனவும், வெய்ய தோடலேசம் சூழ்மந்த தோடம் என தொகுத்த ஐந்தில் - கொடியதோடலேசமெனவும் நீங்காதமந்ததோடமெனவுந் தொகுத்துக்கூறிய சதோடமைந்தனுள், தோடலே சாஞ்சிதம் சம்பிரவிலையாம்-தோடலேசாஞ்சிதமானது எலுமிச்சையிலையின் நிறமுடையதாம், துட்டம் - துட்டமானது, அலரி இலை - அலரியிலையின் நிறத்தையும், நீலத்தோடது ஆம் - கருங்குவளையி னிதழ்நிறத்தையும் உடையதாம், தோடமூர்ச்சிதம் புல்லின நிறம் - தோடமூர்ச்சிதமானது புல்லினநிறத்தையுடையதாம், தோடலேசம் முளரி - தோடலேசம் தாமரையிலையின நிறத்ததாம். (கஅ)

மந்ததோடங்கலபமயிலிறகினிறமாமிவ்வகுத்ததோடஞ்
சிந்தவானுதகுணமணியணிவோர்நாற்கருவிசசேனைவாழ்நா
ளுந்தவாழ்வார்வலன்கணீலமிரண்டரன்கண்டத்தொளிவிட்டோங்கு
மிந்திரநீலந்தான்மாநீலமெனவேறிரண்டுண்டிந்தநீலம்.

(இ-ள்.) மந்ததோடம் கலபம் மயிலிறகின் நிறமாம் - மந்ததோடமானது கலாபத்தையுடைய மயிலினுடைய இறகினிறம்போலும் நிறமுடையதாம், இவ்வகுத்ததோடம் சிந்த குணம் ஆனதமணி அணிவோர் - இங்குவகுத்துக்கூறிய தோஷம் நீங்க (முன்னர்க்கூறிய குணங்களினின்று நீங்காதமரகதத்தை யணிபவர்கள், நாற்கருவி சேனை வாழ்நாள் உந்தவாழ்வார் - நான்குசேனைகளோடு வாழ்நாளும்மேன்மேலோங்கப் பேரரசராய் வாழ்வார்கள், வலன் இரண்டு கண் நீலம் அரன் கண்டத்து ஒளிவிட்டு ஓங்கும் - வலாசுரனுடைய இரண்டுகண்களாகிய இரண்டுநீலங்களும் சிவபெருமானது ஸ்ரீகண்டத்தைப்போல ஒளிவீசிவிளங்கும், இந்த நீலம்- இந்த நீலமானது, இந்திர நீலம் தான் மாநீலம் என வேறு இரண்டு உண்டு - இந்திரநீலமெனவும் மாநீலமெனவும் வேறே இரண்டு வகையாயுள்ளது.

சந்தேரடங்கள் கருகல், வெண்மை, கல்லேறு, மண்ணேறு, காற்றேறு, தாரக, இற்குதல் என எழுவகைப்படுமென்று சி-இல் அடியார்க்கு நல்லார் "கருகல்வெண்மை கன்மணல்காற்றுப், புரிவுதாராசாமிறுகுதல்மரகதத், தெண்ணியகுற்றமிவ்வேயெழனமொழிப" என எடுத்துக்காட்டியதாலுணர்க. கருவியேசேனையாதலில்கருவிச்சேனையென்றது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ௬௬)

முந்தியவிந்திரநீலம்விசுவரூபனைமகவான்முடித்தநாளி
னந்தியடுபழிதவிர்ப்பான்புரியுமகப்பரிமகத்தினறியதூம
முந்தியரும்பரியிமையாநாட்டநுழைந்தழிசேறறிறொழுகும்பீளை
சிந்தியவாறிடைப்படுமொன்றிந்திரவில்னீலமெனத்திகழுநீலம்.

(இ-ள்.) முந்திய இந்திர நீலம் ஒன்று - முற்பட்ட இந்திரநீலம் ஒன்று, விச்சுவரூபனை மகவான முடித்த நாளில்-(தனக்காசிரியனாயத துவட்டாவின் புத்திரனாயுள்ள) விசுவரூபனை இந்திரன் (அவனதுவஞ்சத்தையறிந்து) சேதித்தகாலத்தில், நந்தி அடுபழி தவிர்ப்பான - மேலிட்டுத் தன்னைவருத்தும் பிரமகத்தியையொழிக்க, புரியும் மகப்பரி மகத்தில் நறியதூமம் உந்தி அரும்பரி இமையா நாட்டம் நுழைந்து - செய்யும் பெரிய அசுவமேதயாகத்தில் எழுந்த நறுமணங்கமழும் புகையானது ஓங்கிப் பரந்து அரிய விலக்கண மமைந்த குதிரையினது இமையாத கண்களில் நுழைதலால், அழிசேற்றின் ஒழுகும் பீளை சிந்திய ஆறு இடைப்படும - இளகியசேற்றைப்போல அக் கண்களினின்றொழுகிய பீளையானது சிந்திய விடத்திற்றோன்றும், நீலம - இந்தநீலமானது, இந்திரவில நீலம் எனத்திகழும்-இந்திரதனுசிலுள்ள பஞ்சவர்னங்களுள் ஒன்றாகிய நீலம்போல விளங்காநிற்கும்.

விச்சுவரூபனை இந்திரன் தனக்கு ஆசிரியனாககொண்டதை இந்திரன்பழிதீர்த்தபடலத்திறகாண்க. மகப்பரிமகத் என்னும வடசொற்றிரிபு. (௭௦)

சஞ்சையாம்பகற்கடவுண்மனைவியவன்கனலுடலந்தழுவலாற்று
தஞ்சுவாடன்னிழலைத்தனதுருவாநிறுவிவனமடைந்துநோறக
விஞ்சையாலறிந்திரவிபின்றொடரமாப்பரியாமின்னைததானுஞ
செஞ்செவேவயப்பரியாய்மையல்பொறுதிந்தியத்தைசசிந்தினனே.

(இ-ள்.) சஞ்சை ஆம் பகல் கடவுள் மனைவி - சஞ்சை என்னும் பெயரையுடைய சூரியன்மனைவியானவள், அவன கனல் உடலம் தழுவல் ஆற்றாது அஞ்சுவாள் - அவனது தழல்போன்ற உடலத்தைத் தழுவப்பொறாளாய் அஞ்சுகின்றவள், தன் நிழலை தன் உருவா நிறுவி - தனது தேகநிழலைத தனதுருவாககக்கண்டு (சாயை என்னும் பெயருந்தந்து இல்வாழ்க்கைக்கு) நிறுத்தி, வனம் அடைந்து நோறக-(அவனைத்தழுவுதற்கேற்ற வன்மைபெறுதற்பொருட்டு) வனத்திறசென்று தவஞ்செய்ய, விஞ்சையால் அறிந்து இரவி பின தொடர - தனது ஞானநோககாலுணர்ந்து சூரியன் பின்தொடர, மாபரியாம் மின்னை - (தன்னைக்கண்டஞ்சிக் குதிரைவடிவாயோடிய அச்சஞ்சையை, தானும செஞ்செவே வயப்பரியாய் - அச்சூரியனும் செவ்வேயிலக்கணமமைந்த ஆண்குதிரையாய்ப் பின்சென்று, மையல் பொறாது இந்தியத்தை சிந்தினன் - காமமயக்கத்திற்கு ஆற்றாது இந்தியகலனஞ்செய்தான்.

நெடுநாள்பிரிந்தவனாதலால் மையல்பொறாதென்றார். சஞ்ஞை-சம்ஞா என்னும் வடசொற்றிரிபு. இவள் தன்கணவனாகிய சூரியனொடுகலந்து வாழுங்கால் அ

வனுடைய அழல்வெப்பத்துக்கு ஆற்றுளாகித் தனது தேகச்சாயையைத் தன்னைப் போலச்சமைத்துச் சாயை என்னும் பெயருந்தந்து என்னுயகன் உன்னைத்தழுவவரின் யான் சஞ்சை யல்லவென அவனுக்குக் கூறு தொழிகவென வற்புறுத்தித், தன்பிதாவாகிய விசுவகர்மா இல்லிற்சென்று சிலகாலிருக்கத் தன்பிதாவாகிய விசுவகர்மாநீ இங்குவந்தமர்தல் கற்புடைப்பெண்களுக்கு இலக்கணம் அன்றே உன்னில்லிற்செல்கவெனவிடுக்க, மறுக்காது அவன் வார்த்தைக்கிசைந்து தன்னில்லிற்குச் செல்பவள்போலவனத்திற்சென்று அவன் வெப்பத்தைதயாற்றும் வன்மைபெறத்தவஞ்செய்துகொண்டிருந்தனள். இங்ஙனமிருக்க, சாயை என்பவள் சூரியனைக்கலந்து சிலபிள்ளைகளைப்பெற்றுச் சஞ்சையின் பிள்ளைகளாகிய யமனை, காளிந்தி என்னும். இவர்களிடத்துக் கண்ணோடாது கலகஞ்செய்தவழி, அவர்கள் தம்பிதாவாகிய சூரியனிடத்துக்கூறினர்கள் அதனையுணர்ந்த வச்சூரியன் சாயையை அழைத்து நிகழ்ந்தசெய்தியைக் கூறுகவென, அவள் நிகழ்ந்ததைக்கூறக்கேட்டு விசுவகர்மா இல்லிற்சென்று உன்புத்திரி எங்கெனவினவ, அவன அவள்முன்னரே தன்னில்லிற்குச் சென்றனள் என்றான். அதுகேட்டு ஞானநோக்கினாலுணர்ந்து வனத்திற்குச்சென்றவழி இவன்வருகையைச் சேய்மைக்கண்ணே கண்ட சஞ்சையென்பவள் பெண்குதிரைவடிவங்கொண்டோட, அதனையும் உணர்ந்து ஆண்குதிரைவடிவாய் விரைந்தோடிப்புணர்ந்தன னென்பது புராணவரலாறு. (எக)

அவைசிதறும்புலந்தோன்றுநீலமாநீலமிவையணிவோர்வானோர்
நவையறுசீர்மானவரிந்நகைநீலஞ்சாதியினாலவேறந்தக்
கவலரியவெள்ளைசெவப்பெரிபொன்மைகலந்திருக்கிற்கரிதாய்முற்றுந்
தவலரிதாயிருக்கிலிருபிறப்பாளர்முதன்முதனாற்சாதிக்காகும்.

(இ-ள்.) அவை சிதறும் புலம் தோன்று நீலம் மாநீலம் - அவ்விந்திரியங்கள் சிந்தியவிடங்களிற்றோன்றும் நீலங்கள் மாநீலங்களாம், இவை அணிவோர்-இந்நீலங்களுள் குற்றங்களைநீக்கு குணமுள்ளவற்றைத் தரிப்போர், வானோர் நவை அறுசீர் மானவர் - தேவர்களும் குற்றமற்ற மானுடர்களுமாம், இந்நகை நீலம் சாதியினால் நால் வேறு - இந்தவொளியையுடைய மாநீலம் சாதியினால் நால்வகைப்படும், கவலரிய அந்தம் வெள்ளை செவப்பு எரிபொன்மை கலந்திருக்கில் - குறைதலில்லாத அழகுவாய்ந்த வெண்ணிறத்தோடும் செந்நிறத்தோடும் பொன்னிறத்தோடும் சிறிதுகலந்திருக்கினும், முற்றும் கரிதாய தவல அரிதாய இருக்கில் - முழுதுங்கரியதாயும் கெடுதலில்லாததாயுமிருந்தால், இருபிறப்பாளர் முதல்-அந்தணர்முதலாயுள்ள, முதல் நால் சாதிக்கு ஆகும் - முதன்மைதங்கிய நான்குவருணத்தாருக்கும் பயன்படும்.

குற்றங்கள்-இட்டம், மஞ்சு, அணி, தராசு, பிணி, வச்சம், இரசம், சருச்சரை என எட்டாம். குணங்கள்-குயிலின்கழுத்து, குவளை, வண்டு, பசுவின்கன்றின்கண், அவிரிசசாறு, காயா, நெய்தல், கனத்தல், துளசி, மேகம், பத்திபாய்தல் எனப்பதினொன்றும். சிறிது வெண்ணிறமுடைய நீலம் அந்தணருக்கும், சிறிது செந்நிறமுடையநீலம் சத்திரியருக்கும், சிறிது பொன்னிறமுடையநீலம் வைசியருக்கும், முழுதுங்கரிதாயுள்ளநீலம் சூத்திரர்க்கும் என அறிக. "நீலத்தியல்புரைக்குங்காலை, நால்வகைவருணமு நணுமாகாரமும், குணமபதினொன்றுங் குறையிருநான்கும், அணிவோர்செயலு மறிநதிசினோரே" எனவும், "கோகுலக்கழுத்துக்குவளைசுரும்பர், ஆகுலக்கண்ணினவிரிச்சாறு, காயாநெய்தல் கனத்தல்குல்லை, கொண்மூபத்திபாய்தல் என்னக், குணம்பதினொன்றெனக்குறித்தனர்புலவர்" எனவும், வெள்ளைசெவ்

புப்பச்சைச்சூமையென், றெண்ணியகாற்குலத் தியக்கியதிறமே" எனவும், இ-இல் அடியார்க்கு நல்லார் எடுத்துக்கூறுதல்காண்க. குற்றம் எட்டிற்கு "வாலியமேகமெட்டாக் கிட்டமஞ்சணிதராசு, மேலுமன்பிணிகொள்வச்ச மிராசஞ்சூர்ச்சனையெட்டெனம்" எனப்பிறநூலில் வருதல்காண்க. (௭௨.)

இலங்கொளியவிந்நீலமெய்ப்படுப்போர்மங்கலஞ்சேர்ந்திருப்பாரேனை
யலங்குகதிர்நீலத்திற்பெருவிலையாயிரப்பத்தினளவைத்தாகித்
துலங்குவதான்பாற்கடத்தினூறுகுணசிறப்படைந்துதோற்றுஞ்சோதி
கலங்குகடலுடைவைப்பிலரிதிந்தவிந்திரன்போர்க்கரியநீலம்.

(இ-ள்.) இலங்கு ஒளிய இந்நீலம் மெய்படுப்போர் - விளங்குங்கிரணத்தையுடைய விந்துமகாநீலததைச் சரீரத்திலணிவோர், மங்கலம சேர்ந்து இருபபர்-மங்களாகரத்தை எந்நாளுமடைநதிருப்பார்கள், ஏனை அலங்கு கதிர் நீலத்தின் பெருவிலை ஆயிரப்பத்தின் அளவைத்தாகி துலங்குவது - அதுவொழிந்த விளங்காநின்றகிரணத்தையுடைய விந்திரநீலத்தின் பெருவிலையானது பதினாயிரமென்னுமோர் அளவினையுடையதாகி மேம்பட்டுத்தோன்றுவது, ஆனபால் கடததின ஊறுகுண சிறப்பு அடைந்து தோற்றும சோதி - (மாநீலமானது) பசுவின்பால் நிறைநதகுடத்திற்போட்டால் தனதுகுணமே அப்பால் முற்றுமடையும குணச்சிறப்பினைப்பொருந்தி விளங்குங்கிரணததையுடையது, கரிய இந்த இநதிரன் பேர் நீலம - (இநதிரதனுசின் கருமைநிறம்போலக்) கருமைவாயநத இநதவிநதிரநீலமானது, கலஙகு கடல் உடைவைப்பில அரிது - (அலைமுதலியவற்றால) கலஙகுங கடல்சூழ்ந்த விந்தவுலகிற்கிடைத்தற்கரியது.

அளவறுத்தற்கரிய விலையின என்பார் பெருவிலையெனவும், ஓர்வரையறை வேண்டுமென்பார் அளவினமையை யோராளவாககி யாயிரப்பததின அளவைததாகித்துலங்குவதெனவுங்கூறினார். (௭௩)

மைந்துறுசெம்மணிமுத்துவாள்வயிரம்பசசையொளிவழங்குநீல
மைந்திவைமேற்கோமேதமுதலபவளமீறுகவறைந்தநான்கு
நந்தொளியவேனுமவைசிறுவேட்கைபயப்பவழனகுசெஙகுஞ்சி
வெந்தறுகண்வலனிணங்கள்சிதறுமிடைப்படுவனகோமேதமென்ப.

(இ-ள்.) மைந்து உறு செம்மணிமுத்து வாள் வயிரம் பச்சை ஒளிவழங்கு நீலம் ஐந்து இவைமேல் - வனமைமிகக பதுமராகம் முத்தம் ஒள்ளியவயிரமமரகதம் ஒளிவீசும் நீலம என்னும ஐந்தாகிய விவற்றிறகுமேல், கோமேத முதல் பவளம் ஈறுக அறைந்த நான்கும் - கோமேத முதலாகப் பவளம இறுதியாககூறும நான்கு இரத்தினங்களும், நநத ஒளிய வேனும் - மிக்கவொளியை யுடையனவாயினும், சிறுவேட்கைபயப்ப - இவவிரததினங்கள் சிறியவிலையுள்ளன, அழல் நகு செம் குஞ்சி வெம் தறுகண வலன நிணங்கள் சிதறுமிடை படுவன கோமேதம் என்ப - நெருப்பைப்போலும் விளங்காநின்ற செவநதசிகையையும் கொடிய அஞ்சாமையையுமுடைய வலாசுரனது நிணங்கள் சிந்தியவிடததிலுணடாகு மிரத்தினங்கள் கோமேதங்கள் என்றுசொல்லுவார்கள்.

கோமேதமுதல் பவளமீறுக நானகு என்றது கோமேதம், புருடராகம், வைடூரியம், பவளம். இவை பெருவிலையுடையன வல்லவென்பார் சிறுவேட்கை பயப்பவென்றார். வேட்கை-விருப்பம், இங்குக் காரணத்தைக் காரியமாகவுபசரித்தார். ௭௪

உருக்குநறுநெய்த்துளிதேன்றுளிநல்லான்புண்ணியநீரொத்துச்சேந்து
செருக்குபசும்பொன்னிறமும்பெற்றுமெலிதாய்த்துய்தாய்த்திண்ணிதாகி
யிருக்குமதுதரிக்கினிருட்பாவம்போம்பரிசுத்தியெய்தும்வென்றித்
தருக்குவலன்கபம்விழுந்தவிடைப்புருடராகமொளிதழையத்தோன்றும்.

(இ-ள்.) உருக்கு நறு நெய்த்துளி - உருக்கிய நறுமணங்கமழும் நெய்த்துளியும், தேன் துளி-தேனின் துளியும், நல் ஆன் புண்ணிய நீர் ஒத்து-நல்லபசுவின்கோசலமுமாகிய இவற்றையொத்து, சேந்து செருக்கு பசும்பொன்னிறமும்பெற்று-செவத்திறமாக்கும் பசியபொன்னிறத்தையும்பெறறு, மெலிது ஆய் துய்து ஆய் திண்ணிது ஆகி இருக்குமது தரிக்கின் - வழுவழுப்புடையதாய்க் களங்கமில்லாததாய்க் கனமுடையதாயிருக்குங் கோமேதகதமைத்தரித்தால, இருள் பாவம் போம்-இருள்போலுங் கருநிறமவாய்ந்தபாவம்போம், பரிசுத்தி எய்தும் - பரிசுத்தமு உண்டாகும், வென்றி தருக்கு வலன் கபம் விழுந்த இடை புருடராகம் ஒளிதழையத்தோன்றும்-வென்றியின்செருக்குவாய்ந்த வலனுடையகபம் விழுந்தவிடத்துப் புருடராகமானது ஒளிபெருகத்தோன்றாநிற்கும்.

கோசலத்தைக் கங்கையாகக்கூறுதலால் ஆன்புண்ணிய நீர் என்றார். உடையவன் தொழிலை யுடைமைமேலேற்றிச் செருக்கு பசும்பொன் என்றார். (எ௫)

தாழ்ந்தபிலத்திழிந்தெரிபொற்கண்ணவுணனுயிர்குடிக்குந்தறுகட்பன்றி
போழ்ந்தமுழைவாய்திறந்துதிசைசெவிடுபடநகைத்துப்பொன்போற்கக்கி
வீழ்ந்தகபம்படுதீவிற்படுமுச்சிவட்டமாய்மெலிதாய்ப்பொன்போற்
சூழ்ந்தொளிவிட்டவிர்தழல்போற்றெளிவெய்திமனங்கவர்ந்துதோற்றஞ்செய்யும்.

(இ-ள்.) தாழ்ந்த பிலத்து இழிந்த எரிபொன்கண் அவுணன் உயிர்குடிக்கும் தறுகண் பன்றி-ஆழ்ந்தபாதலத்திற் (பூமியைச்சுருட்டிக்கொண்டு) சென்றொளித்த விரணியாக்ஷனுடைய வுயிரைக்குடித்த அஞ்சாமையையுடைய வராகமானது, போழ்ந்த முழைவாய்திறந்து திசைசெவிடு படநகைத்து கக்கி - பிளந்தகுகைபோன்ற வாயைத்திறந் தெட்டுத்திக்குகளும் செவிடுபட அட்டகாசஞ்செய்து கக்குதலால், பொன் போல் வீழ்ந்த கபம் படு தீவில் படும - பொன்னைப்போற தெறிவிழுந்த கபம்பொருந்திய தீவத்தில் (ஒருவாறு) தோன்றும், உச்சிவட்டமாய்(அது)உச்சியில் விருத்தமாய், மெலிதாய்-மிருதுவுடையதாய், பொன் போல் அவிர் தழல்போல் சூழ்ந்து ஒளிவிட்டு-பொன்னைப்போலவும் விளங்காநின்ற நெருப்பைப்போலவும் சூழவொளிவீசி, தெளிவு எய்தி மனம் கவர்ந்து தோற்றம்செய்யும் - சருச்சரை அகன்று கண்டோர்மனத்தைக் கொள்ளைகொண்டு விளங்காநிற்கும்.

இரணியாக்ஷன் நிலவுலகைச்சுருட்டிப் பாதலத்திற்புகுந்தொளிக்கத் தேவர்முதலியோர் நடுங்கித் திருமாலைச்சரணடைய, அத்திருமால் வராகவடிவாய்ப் பாதலத்திற்சென்று ஒளித்த அவ்விரணியாக்ஷனோடு போர்செய்து அவனைக்கொன்று மீளவும் அவ்வுலகைப் பண்டுபோல்நிறுத்தினர், என்பதைக் காந்தம் - தக்ஷகாண்டம்-ததீசியுத்தரப்படலத்திற்காண்க. (எ௬)

இந்தமணிபாரியாத்திரகிரியின்கொடுமுடியாயிலங்குந்தெய்வ
மந்தரமால்வரைப்புறஞ்சூழ்மேகலையாமயனிந்தமணியினுலே
யந்தரநாடவனகருமரசிருப்புமண்டபமுமமைத்தானிந்தச்
சந்தமணிதரிப்பவரோதரியார்வெங்கிடவாகைதரிக்கவல்லார்.

(இ-ள்.) இந்தமணி பாரியாத்திர கிரியின் கொடுமுடியாய் இலங்கும் - இந்த இரத்தினம் பாரியாத்திரகிரியின் சிகரமாய் விளங்காநிற்கும், தெய்வம் மந்தர மால் வரைபுறம் சூழ்மேகலையாம் - தெய்வத் தன்மையையுடைய மந்தரமலையாகிய பெரியமலையின்புறத்திற் சூழ்ந்த மேகலையாகவும் விளங்காநிற்கும், மயன் இந்த மணியினால் - அசுரத்தச்சனிந்தவிரத்தினத்தால், அந்தர நாடவன் நகரும் அரசு இருப்பு மண்டபமும் அமைத்தான் - தேவேந்திரனுடைய நகரத்தையும் அவன்கொலுவிருக்கும் (சுதன்மம் என்னும்) மண்டபத்தையும் நிருமித்தனன், இந்த சந்தம் மணி தரிப்பவரே - இந்தவழகிய புருடராகத்தைத் தரிப்பவர்களே, தரியார் வெந்நிடு வாகை தரிக்க வல்லார் - பகைவர்புறங்கொடுக்க வெற்றிமாலையைத்தரிக்கவல்லவராவர்.

பாரியாத்திரகிரி குமரிகண்டத்திலுள்ள ஏழுமலைகளுளொன்று. அதனைமுன்னர்க்காண்க. மேகலை என்றது புறமாயுள்ள ஓரிடத்தை. (௭௭)

வலன்மயிராம்வயிடூயமிளாவிரதகண்டத்தில்வந்துதோன்றிப்
பலர்புகழுங்கோரக்கமகதஞ்சிங்களமலயம்பாரசீக
மிலகுதிரிகூடாதிதேயங்கள்பிறதீபமெங்குந்தோற்று
மலைகடலும்படுமிறுதிக்காரிடிக்கும்போதுநிறமதற்கியாதென்னில்.

(இ-ள்.) வலன் மயிராம் வயிடூயம் இளா விரத கண்டத்தில் வந்து தோன்றி- வலாசுரனுடைய மயிராகிய வைடூயமானது இளாவிரதகண்டத்தின் (மேற்குத்திசையில்) வந்துதோன்றி, பலர் புகழும் கோரக்கம் மகதம் சிங்களம் மலயம் பாரசீகம் இலகு திரி கூடாதி தேயங்கள் - பலரும்புகழும் கோரக்கத்திலும் மகதத்திலும் சிங்களத்திலும் பொதியமலையிலும் பாரசீகத்திலும் விளங்காநின்ற திரிகூடம் முதலிய தேசங்களிலும், பிற தீபம் எங்கும் தோற்றும் - பிறதீபங்களாகிய எவ்விடத்திலும் தோன்றுநிற்கும், அலை கடலும் படும் - அலைக்குங் கடலினுந் தோன்றும், இறுதி கார் இடிக்கும் போதும் - ஊழிக்காலத்தில் மேகங்களிடிக்கும் இடிக்குந்தோன்றும், அதற்கு நிறம் யாது எனில் - அவ்வைடூயத்திற்கு நிறம் யாதென்று வினவில். (௭௮)

கழையிலைகார்மயிலெருத்தம்வெருகின்கண்ணிறத்ததாய்க்கனத்ததாகி
விழைவுதருதெளிதாகித்திண்ணிதாய்மெலிதாகிவிளங்குமீதி
லழகுபெறவலமிடமேல்கீழொளிவிட்டனமுறையேயறவோராதித்
தழைவுறுநாற்சாதிகளாந்தினமிதனைப்பூசித்துத்தரிககசான்றோர்.

(இ-ள்.) கழை இலை கார் மயில் எருத்தம் வெருகின கண் நிறத்தது ஆய்- மூங்கிலிலையும் கரியமயிலின்பிடரும் பூனையின்கண்ணுமாகிய இவற்றின் நிறம்போலும் நிறமுடையதாய், கனத்தது ஆகி - கனமுடையதாய், விழைவு தரு தெளிதாகி-விரும்பத்தக்க சருச்சரையகன்றதாய், திண்ணிது ஆய் - வன்மையையுடையதாய், மெலிது ஆகி விளங்கும் - மிருதுத்தன்மைவாய்ந்து விளங்காநிற்கும், ஈதில் அழகு பெற வலம் இடம் மேல் கீழ் ஒளி விட்டன - இவ்வைடூயத்தில் முறையாகப் பொலிவுமிக வலப்பாலாயினு மிடப்பாலாயினும் மேற்பக்கத்தாயினும் கீழ்ப்பக்கத்தாயினு மொளிவீசும் தன்மையையுடையவை, அறவோர் ஆதி தழை வுறு நால் சாதிகளாம்-அந்தணர்முதலாகப் பொலியும் நான்குவருணங்களாம், இதனை தினம் பூசித்து சான்றோர் தரிக்க - இவ்வைடூயத்தைத்தினமும் பூசித்து அறிவுடையோர் தரிக்கக்கடவர்.

வலப்பால் ஒளிவீசி லந்தணசாதியும், இடப்பாலொளிவீசில் க்ஷத்திரியசாதியும், மேற்றிசைப்பக்கமாக வொளிவீசில்வைசியசாதியும், கீழ்த்திசைப்பக்கமாகவொ

ளிவீசில் சூத்திரசாதியுமாகக்கொள்க. இடவேறுபாடுணர்தல் வையேத்தைக்கையி லெடுத்தோனிருந்த திசைநோக்கியெனவுணர்க.

கோமேதகம், வையேம், புட்பராகம் இம்மூன்றும் ஒருமுதலிற்றோன்றும் இரத்தினங்களென்பனவறறை, வையேத்தைச்சொல்லுமிடத்து, சி-இல் "இருவேறுருவமுமீ' எனவும், அதற்கு அடியார்க்குநல்லார்முற்கூறிய கோமேதகத்தின்மேல் வெள்ளையான நன்னிறம் வயிடூயம், இது "ஒருமைத்தோற்றம்" எனவும் பொருள் கூறியிருத்தலாலும் "தழைவயிடூயஞ்செம்பொற்றகட்டினில் மூலைப்பால்வாக்க, வொழுகியவொளியாங்கோமேதகம்வயிடூயந்தன்னிற், றழுவுதன்மேனியாம்புட்பராகம்பொற்றகட்டிற்றேன்பாய், முழுநிறமாமிவைக்குமும்மணியென்றுநாமம்" என ஒருசாரார்கூறியிருத்தலாலும் உணர்க. (எக)

வலத்தவுணன்றசைவிழ்ந்தவழிபடுந்துப்பயன்சந்திவடிவமாதிதென்
புலத்தவரைவிதிக்குமிடத்தவனுடன்மாசிழிபுலத்தும்புயல்போல்வண்ண
வலத்தமதுகைடவரைக்குறைகுருதிவழிநிலத்துமகவான்வெற்பின் [ன்
குலத்தைபிறகரிசோரிசிதறிடத்தும்வந்துகுடிகொண்டுதோன்றும்.

(இ-ள்.) வலத்தவுணன் தசைவீழ்ந்த வழிதுப்புபடும் - வெற்றியையுடைய வலாசுரனது மாமிசஞ்சிந்தியவழிப்பவளந்தோனறும்,அயன் சந்தி வடிவமாக தென் புலத்தவரை விதிக்கும் இடத்து அவன் உடல் மாசு இழிபுலததும் - பிரமன் சந்திவடிவமாகத் தென்புலத்தவரைச்சிருட்டிக்குமிடத்து அப்பிரமன் தனதுடற்களங்கத்தை யொழித்த விடத்திலும், புயல் போல் வண்ணன் வலத்த மதுகைடவரை குறைகுருதி வழிநிலததும் - மேகம்போலுங் கரியநிறததையுடைய திருமால் வன்மையையுடைய மதுகைடவரைச்சேதித்த வுதிரஞ்சோர்ந்தவிடத்திலும், மகவான் வெற்பின் குலத்தை இறகு அரி சோரி சிந்திடத்தும் வந்து குடிகொண்டு தோன்றும் - இந்திரன் மலைக்கூட்டங்களின சிறகு அரிந்த வுதிரஞ் சிந்தியவிடத்திலும் (ஓர்வகை) உதித்துக் குடியேறிவிளங்கும்.

பிதிர்க்களைச்சிருட்டிக்க எடுத்தவுடலை விடுத்தகாலம் சந்திக்காலமாதலால் சந்திவடிவமாத் தென்புலத்தவரை விதிக்குமிடத்தவனுடன் மாசிழிபுலத்தும் எனவும், ஓர்கால் பிரமன் உநதித்தாமரையிலிருக்க, திருமால் திருப்பாற்கடலில் அறிதுயில் செய்யும்போது அவர் இரணடு செவிகளிலிருநது மதுகயிடவர்தோன்றி யண்டங்கள் நடுங்க வுலவும்போது "அபபிரமன் இவர்யாதொன்று துணுக்குற்றுவினவ அஞ்சேலெனக்கூறி, விட்டுணு சிட்டுணு என்றிருவரைச்சிருட்டித்து ஏவ, அவர்கள் கொன்றனராதலால் புயல்போல்வண்ணன் வலநதமதுகயிடவரைக் குறை குருதி வழிநிலத்தும் எனவுங்கூறினூர் "என்றும்எல்லையுயர்பிதிர்க்கடோன்றவெடுத்தவுடல்விடுத்தான், நண்ணுமுடலமுயர்சந்தியெனப", எனவும் "தண்ணந்தாமரையயன் வெரீஇச்சாற்றுதல்கேளா, வெண்ணெயுண்டமால்விட்டுணுசிட்டுணுவென்ன, நண்ணுபேருடையிருவரைவகுத்து நான்முகத்தோன், கண்ணனைக்குறவருபவர்க்கடிதிரென்றுரைத்தான்" எனவும் கூர்மபுராணததில் பலவகைத்தோற்றமுரைத்த வத்தியாயத்திலும், அட்டமூர்த்தியியல்புரைத்த அத்தியாயத்திலுங்காண்க. மலைகளைச்சிறகரிந்தவரலாற்றை முன்னர்க்காண்க. (அ0)

அவ்வழியிற்படுபவளமுருக்கம்பூப்பசுங்கிளிமூக்கலர்ந்தசெவ்விச்
செவ்வரத்தமலர்கொவ்வைக்கனிபோலுங்குணக்குற்றந்திருகிக்கோட

**லெவ்வமுறப்புழுவரித்தன்முகமொடிதல்பெரும்பாலுமிப்பூணேந்தல்**
**பெய்வளையார்தமக்கேயாந்தரிக்கின்மகப்பேறுமுதல்பேறுண்டாகும்.**

(இ-ள்.) அவ்வழியில் படுபவளம் - அந்நான்கிடத்திலுந்தோன்றிய பவளத்தினது, குணம் - நிறமானது, முருக்கம் பூ புசுங்கிளிமூக்கு அலர்ந்த செவ்வி செவ்வரத்த மலர் கொவ்வைக்கனிபோலும் - முருக்கம்பூவும் பசியகிளியின்மூக்கும் மலர்ந்தபருவத்தையுடைய செவ்வரத்தமலரும் கொவ்வைக்கனியுமாகிய இவற்றினிறத்தைப்போலுமுள்ளது, திருகிக்கோடல் எவ்வம் உற புழுவரித்தல் முகமொடிதல் குற்றம்-திருகிக்கோணுதலும் குற்றமிகப்புழுவரித்தலும் முகமொடிதலும் (அதற்குரிய) குற்றங்களாம், பெரும்பாலும் இப்பூண் ஏந்தல் பெய்வளையார் தமக்கே ஆம் - பெரும்பாலு மிப்பவளங்களாலாகிய வாபரணங்களைத் தரித்தல் பெண்களுக்கேயுரியதாம், தரிக்கில் மகப்பேறு முதல் பேறு உண்டாகும் (அவர்கள்) தரித்தால் புத்திரப்பேறு முதலாகிய பெரும்பயனுண்டாகும்.

பவளத்தின்குற்றங்கள் பிளவு, கல்லிடுக்கிற்பட்டுமுடங்குதல், கருப்பத்தேதுளையுடைத்தாதல், கறுப்பு, திருகல், வெளிறல் என ஆறும் எனவும், குணங்கள், சிந்தூரம், செங்காய், முசுமுசுக்கைக்கனி, வீளைக்கனி, தூதளங்கனி என ஐந்தாமெனவும் "பவளநற்குணஞ்சிந்தூரம் பன்னுசெம்மணிச்செங்காய்நற், றுவமுசுமுசுக்கைவீளை தூதளம்பழம்போன்றுகும், கவைமுடந்தொளைகறுப்புத் திருகுதல்வெளிறருனென், றிவைகளோராறுங்குற்றமென்பர்நன் புலமையோரே" என ஒருசாரார்கூறுதல்காண்க. (அக)

*இரவியெதிரொரியிறைக்குங்கல்லுமதியெதிர்செழுநீரிறைக்குங்கல்லு*
*முரையிடுமொன்பதிலொன்றினுட்கிடையாய்க் கிடக்குமெனவொன்பான்*
*மரபுரைத்துவணிகரேறுகியவானவரேறுவடபாலேநோக்கிப்* [வேறு
*பரவியிருந்தருச்சித்துமணிகைக்கொண்டெதிர்மதுரைப்பரனைநோக்கா.*

(இ-ள்.) இரவி எதிர் எரி இறைக்கும் கல்லும் - சூரியனெதிரே யனலைச்சிந்துஞ் சூரியகாந்தக்கல்லும், மதி எதிர் செழுநீர் இறைக்கும் கல்லும் - சந்திரனெதிரே தண்ணியநீரைச்சிந்துஞ் சந்திரகாந்தக்கல்லும் (ஆகியவிவை) உரை இடும் ஒன்பதில் ஒன்றின் உட்கிடையாய் கிடக்கும் என - முன்னர்க்கூறிய வொன்பதுவகையிரத்தினங்களுள் ஒரு இரத்தினத்தி னுட்கிடையாகி வடங்கிக்கிடக்குமென்று, வணிகர் ஏறு ஆகிய வானவர் ஏறு - வணிகருளாண்சிங்கமாகிய தேவர்சிங்கம், ஒன்பான் வேறுமரபு உரைத்து-ஒன்பதுவகையிரத்தினங்களைத் தனித்தனி யதனதன்மரபுகள் முதலியவற்றை முறையாக (எடுத்துக்) கூறி, வடபால் நோக்கி இருந்து மணிபரவி அருச்சித்து கை கொண்டு - வடதிசையைநோக்கியிருந்து இரத்தினங்களைவணங்கி யருச்சனைசெய்து கையிலேந்தி, மதுரை பரனை எதிர் நோக்கா - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரமூர்த்தியை யெதிரேநோக்கியருளி.

சூரியகாந்தமும் சந்திரகாந்தமும் இரத்திநங்களுள் ஒருவகையவென ஒருசாரார் கூறுவாராயினும் இரத்திநங்களின்வகையிற்பட்டன அல்லவென்பார் உட்கிடையாய்க்கிடக்குமெனவும், அவைகோமேதம், வயிடூயம், புட்பராகம் இம்மூன்றினுள் ஒன்றின்கீழ்ப்பட்டு அடங்கிநிற்பனவென்பார் ஒன்பதிலொன்றின் எனவும், விலைபகருங்கால் கீழ்த்திசைநோக்கியிருந் தருச்சித்தலும், கொடுக்குங்கால் வடதிசை

நோக்கியிருந்தருச்சித்தலு மரபு என்பர் வடபாஞேக்கிப் பரவியிருந்தருச்சித்து எனவுங்கூறினர் (௮௨)

அஞ்சலிசெய்தகநோக்காலிக்குமரற்களவிறந்தவாயுள்செல்வம்
விஞ்சுகவென்றளித்தருளவிறைமகனும்விண்ணிழிந்தவிமானநோக்கிச்
செஞ்சரணம்பணிந்திருகைத்தாமரையும்விரித்தேற்றான்செல்வநாய்கர்
மஞ்சனையும்புடைநின்றவமைச்சரையுநோக்கிமுகமலர்ந்துசொல்வார்.

(இ-ள்.) அஞ்சலிசெய்து அகம் நோக்கால் இக்குமரற்கு அளவிறந்த ஆயுள் செல்வம் விஞ்சுக என்று அளித்து அருள - கைகூப்பித் திருவருட்பார்வையாலிந்த வரசிளங்குமரனுக்கு எல்லைகடந்த வாயுளுஞ்செல்வமும் ஓங்குகவென்றுகொடுத்தருள, இறைமகனும் விண் இழிந்த விமானம் நோக்கி செஞ் சரணம் பணிந்து இருகை தாமரையும் விரித்து ஏற்றான்-அவ்வரசிளங்குமரனும் வானுலகினின்றுவந்தஇந்திர விமானத்தைப்பார்த்துச் சோமசுந்தரக்கடவுளுடைய செவ்வந்திருவடிகளைவணங்கித் தனது இரண்டுகைகளாகிய விரண்டுதாமரைகளையு மலர்த்திவாங்கினன், செல்வநாய்கர் - செல்வமநிறைந்த வணிகராய்வந்த வச்சோமசுந்தரக்கடவுள், மஞ்சனையும் புடை நின்ற அமைச்சரையும் நோக்கி முகம்மலர்ந்து சொல்வார் - அந்தவரசிளங்குமரனையும் அவன் புடைசூழ்ந்துநின்ற மந்திரிமார்களையும்பார்த்துத் திருமுகமலர்ந்து கூறுகின்றார்.

மைந்தன் மஞ்சன் எனவருதல்போலி. (௮௩)

இம்மணியாலிழைத்துநவமுடிசூட்டியிச்சிங்கவிளவேறன்ன
செம்மறனையபிடேகபாண்டியனென்றியம்புமெனச்செம்பொன்றூக்கிக்
கைம்மறியில்வணிகருக்குவிலைகொடுப்பான்வருவார்முன்கருணைநாட்ட
மம்மகன்மேனிரப்பியிளநகையரும்பிநின்றாரைங்குக்காணார்.

(இ-ள்.) இ நவமணியால் இழைத்தமுடி சூட்டி-இந்தவொன்பதுவகையிரத்தினங்களைக்கொண்டிழைத்து மகுடஞ்சூட்டி, இச்சிங்க இளமை ஏறு அன்ன செம்மல் தனை அபிடேக பாண்டியன் என்று இயம்பும் என - இந்த விளஞ்சிங்கவேற்றையொத்த வரசிளங்குமரனுக்கு அபிடேகபாண்டியனென்று நாமமிடுங்களென்று கூறியருள, செம்பொன் தூக்கி கை மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான் வருவார்முன்-(விலையின்மையால்) செம்பொன்னையோர் வரையறையாகத் துலையாற்றூக்கித் தமது திருக்கரத்திலேந்திய மானைக்காந்துவந்த வணிகராகிய சோமசுந்தரக் கடவுளுக்கு விலையாகக்கொடுக்கவரு மந்திரிகள்முன்பு, கருணைநாட்டம் அம் மகன்மேல் நிரப்பி இளநகை அரும்பி நின்றாரை அங்கு காணார் - தமதுகிருபாநோக்கத்தை யந்தவரசிளங்குமரன்மேற்பரப்பிப் புன்னகையரும்பிநின்ற அந்தவணிகேசரை யவ்விடத்திற்காணாராயினார்கள். (௮௪)

ஓருருவாய்நேர்நின்றவணிகேசர்விடையின்மேலுமையாளோடு
மீருருவாய்முக்கண்ணுநாற்கரமுமஞ்சமரரிறவாவாறு
காருருவாயெழுமிடறுங்காட்டித்தங்கோயில்புகக்கண்டாரின்று
பாருருவாய்நின்றவணிகேசரிவரொனவேபின்பற்றிப்போவார்.

(இ-ள்.) ஓர் உருவாய் நேர் நின்ற வணி கேசர்-ஒரு திருவுருவங்கொண்டு அவர்கள் நேர்நின்று நவமணிகள் தந்த வணிகேசராயுள்ளவர், விடையின் மேல் உமை

யாள் ஓடுமீ ஈருருவாய் - இடபத்தின்மே லுமையவளோடு மிரண்டுதிருவுருவங்கொண்டு, முக் கண்ணும் நாற்கரமும் அஞ்சு அமரர் இறவா ஆறு கார் உரு வாய் எழு மிடறும் காட்டி - திரிநேத்திரங்களையும் நான்கு திருக்கரங்களையும் விடங்கண்டஞ்சிய திருமால் முதலிய தேவர்களிறக்காவண்ணம் கரியநிறங்கொண் டெழுந்த ஸ்ரீகண்டத்தையுங்காட்டி, தம் கோயில் புக கண்டார் - தமது திருக்கோயிலுட்சென்றருளப் பார்த்தார்கள், இன்று பார் உருவாய் நின்ற வணிகேசர் இவரோ என பின் பற்றி போவார் - இப்போதுலகினர்திருவுருவங்கொண்டு நம்முன் நின்ற வணிகேசர் இவரோவென்று பருந்தினிழல்போல விடாது பின்றொடர்ந்துசெல்வாராயினார்.

பிறிதினியைபுநீக்கிய ஒன்றுமுதல் எழு ஈறுய்நின்ற விசேடணங்களால் இறைவனது எழுகுணங்களும் இதனுற் கூறப்பட்டன. வணிகனுய்வந்தது உயிர்கள் வாடாதிருத்தற்பொருட்டாதலால் பேரருளுடைமைதோன்ற ஒருருவாய் நேர்நின்ற வணிகேசர் எனவும் "எத்திறமீசனின்றனதிறமவனுநிற்பள்" என்றமையால் சுதந்திரனெனப்படுந் தன்வயத்தனுதலும் "பவன்பிரமசாரியாகும்பான்மொழிகன்னியாகும்" என்றமையால் இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்றலுமாகிய பொருளாற்றல்தோன்ற உமையாளோடு மீருருவாய் எனவும், அநாதியேயுள்ள மும்மலங்களையும் மந்தரமுதலிய சத்திநிபாதமுமுடையவராய் நூல்வழி முத்திவிரும்புஞ் சகலர்க்குப்போக்குதலால் முடிவிலாற்றலுடைமைதோன்ற முக்கண்ணும் எனவும், அடியார் விரும்பி யாங்கே கூறுதுணர்ந்து அச்சமொழித்துக் கொடுத்தருளுதலால் சர்வஞ்ஞத்துவம் எனப்படு முற்று முணர்தல்தோன்ற நாற்கரமும் எனவும், பிரமன்முதலிய தேவர் இறத்தல்போல இறப்பில்லாதலால் விசுத்ததேகமெனப்படுந தூயவுடம்பினன் என்பதுதோன்ற அஞ்சமரரிறவாவாறு எனவும், கொல்லும் விடமுண்டருளியும் அளவிலின்பமுடையனுயிருத்தலால் பூர்த்தியெனப்படும் வரம்பிலின்பமுடைமைதோன்றக் காருருவாயெழுமிடறும் எனவும், அவைவருமாறுகாண்க. ஒருருவாய் என்பதுமுதல் நாற்கரமும் என்பதுகாறும் சொல்முரணணி. அஞ்சமரரிறவாவாறு காருருவாயெழுமிடறும் என்பதுகாறும் பொருள்முரணணி. (௮௫)

தேன்செய்தகொன்றைநெடுஞ்சடையார்முன்றாழ்ந்தெழுந்துசெங்கைகூப்பி
யான்செய்யுங்கைம்மாறெம்பிராற்கொன்றுண்டோயானுமென்ன
தூன்செயுடலும்பொருளுமுயிருமெனினவையாவுமுனவேயையா
வான்செய்யுநன்றிக்குவையகத்தோர்செய்யுங்கைம்மாறுண்டேயோ.

(இ-ள்.) தேன் செய்த கொன்றை நெடுஞ்சடையார் முன் தாழ்ந்து எழுந்து - தேன் நிறைந்த கொன்றை மலர்மாலையையணிந்த நெடிய சடையையுடைய சோமசுந்தரக் கடவுள்முன் பணிந்தெழுந்து, செங் கை கூப்பி - செவந்தகைகளைச் சிரத்தின்மேற்குவித்து, யான் செய்யும் கைம்மாறு - நாயேன செய்யும் பிரதியுபகாரமாக, எமபிராற்கு யானும் ஒன்று உண்டோ - நமது பிராணுகிய உனக்கு என்னுலும் செய்யப்படும ஒன்றுள்ளதோ, என்னது ஊன செய் உடலும் பொருளும் உயிரும் எனின் - எனது ஊன்பொதிந்த வுடலும் பொருளும் ஆவியுமுளவெனில், ஐயா அவை யாவும் உனவே - ஐயனே அவையெல்லாம் (முன்னமே) உன்னுடையனவே, வான் செய்யும் நன்றிக்கு வையகத்தோர் செய்யும் கைம்மாறு உண்டேயோ - மேகம்செய்யுமுதவிக்கு உலகினர்செய்யும் பிரதியுபகாரமுளதோ, (இல்லையென்றபடி.)

ஆன்மாக்களுக்கு மலபாகம் வருவித்தற்பொருட்டுத் தனுகரண புவனயோகந்தந்து கருவிகளையும் ஆன்மாக்களையுங் கூட்டிப் புசிப்பித் தருளுகின்றமையால் மு

ன்னமே யெனவருவித்தாம். ஆன்மாக்களையுங் கருவிகளையுங்கூட்டிப் புசிப்பித்தல் "தனக்கெனவறிவிலாதான்றானிவையறிந்தசாரான்-தனக்கறிவிலாதவாயினுமிவை யறிந்தசாரா -தனக்கெனவறிவிலாதான்றத்துவவன்னரூபன் - தனக்கெனவறிவா னொலிச்சகலமுறுகருந்தானே " எனவருஞ் சிவப்பிரகாசத்திற்காண்க. யான் என ஒருமையிற்கூறி எம்பிராற்கு எனப் பன்மையிற்கூறியது வழுவன்றோ எனின், தன் னினத்தோரையும் உளப்படுத்திக் கூறினமையால் வழுவன்றென்க. யானும் என்ப தினும்மை இழிந்தனிப் பொருள்மேல் நின்றது "தாம்வீழ்வார்" தம்மால்வீழப்ப டுவேரா் என நின்றாற்போல வனைறால் எனநின்றது. செய்யப்படும் இசை யெச்சம். உன பொருளடியாகப்பிறந்த பலவின்பாற் படர்க்கைக்குறிப்புவினைமுற்று. (அசு)

என்றுமுன்வழுத்தவூறும்விறன்மாறன் கோக்கொழுந்தையிகல்வேல்விந்
மன்னருமிவற்குமனவாக்கிறந்தபூரணமாமதுரைநாதன் [றை,த
பொன்னருமணிமகுடஞ்சூடமணிநல்குதலாற்புவியனேகம்
பன்னாளுமுறைபுரியத்தக்கதெனவாழ்த்தினர்பல்சான்றோரும்.

(இ-ள்.) என்று முன் வழுத்த ஊறும் விறல் மாறன் கோக் கொழுந்து- என் று திருமுன்னின்று வணங்கித் துதிக்கும் வெற்றிவாய்ந்த வீரபாண்டியனுடைய வர சிளங்குமரனும், இகல் வேல் விந்தை மன் ஆகும் இவற்கு - போர்செய்யும் வேலை யேந்திய சயலட்சுமியின் தலைவனுமாகிய விவராசனுக்கு, மனம் வாக்கு இறந்த பூ ரணம் ஆம் மதுரை நாதன்-மனவாக்கிற்கெட்டாத பூரணமாகிய மதுரையிலெழுந்த ருளிய சோமசுந்தரக் கடவுள், பொன் ஆரு மணி மகுடம் சூட மணி நல்குதலால்- பொன்னாற்செய்த விரத்தினங்களழுத்திய கிரீடஞ்சூட நவமணிகள்தந்தருளினமை யால், புவி அனேகம் பல் நாளும் முறை புரிய தக்கது என பல் சான்றோரும் வாழ் த்தினர் - உலகமுற்றிலு மெந்நாளும் மனுநூல்முறைப்படி செங்கோல் செலுத்த க்கடவனென்று அறிவாலமைந்த பெரியோர்கள் பலரு மாசிவசனங்கூறினார்கள்.

புரியதக்கது வியங்கோள் வினைமுற்று "பொறுப்பதறிவிலன்கூற்றுக்க ளே" எனத்திருவாசகத்தில் தவ்விகுதி வியங்கோட்பொருளில் வருதல்காண்க. கொழுந்தை - ஐ - சாரியை யிடைச்சொல். (அள)

எத்திவலங்கொண்டிருநான்கிபந்தழுவப்பெற்றோங்கியிருக்குமட்ட
மூர்த்திவிடையருள்பெற்றுமூவாநான்மறையாசிமுனிவர்கூறப் [விச்
பார்த்திவன்றன்பொலன்மாடமனைபுகுந்தானிறைமணிப்பண்பாயுங்கேள்
சாத்திரருமந்திரருமணிநோக்கிவியப்படைந்தார்சங்கைகூர்ந்தார்.

(இ-ள்.) எத்தி வலம் கொண்டு இரு நான்கு இபம் தழுவ பெற்றது ஓங்கி இ ருக்கும் அட்ட மூர்த்தி அருள் விடை பெற்று-துதித்துப் பிரதக்ஷிணஞ் செய்து அஷ் டகசங்கள் சுமக்கப்பெற்ற தெய்வவிமானத்தில் நிகரின்றி யெழுந்தருளிய அட்ட மூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளருளும் விடையைப் பெற்று, மூவா நல் மறை முனிவர் ஆசி கூற - கெடாத நல்லவேதங்களை யுணர்ந்த முனிவர்கள் ஆசிவசனங் கூற, பார்த்திவன் தன பொலன் மாட மனை புகுந்தான் - அரசிளங்குமரன் பொன் னாலாகிய மேன்மாடமமைந்த கோயிலுட்புகுந்தான், இறை மணி பண்பு ஆயும் கே ள்வி சாத்திரரும் மந்திரரும் - தலைமைவாய்ந்த நவரத்தினங்களின் குணங்களை யா ராய்ந்தறியு நூற்கேள்வியில் வல்லவரும் வேறுள்ள மந்திரிமார்களும், மணிநோக்கி வியப்பு அடைந்தார் சங்கை கூர்ந்தார் - (கொண்டுவந்த) நவமணிகளைக்கண்டதிசயி த்தார்கள் (சூரியன் முதலிய கோள்களோவென்று) ஐயங்கொண்டார்கள்.

நின்ற எனச் சொல்வகைசெய்து ஒளிநிறைந்தமவனைப் பொருள்கொள்ளுத லுமொன்று. சிவாலயத்திற்குத் தரிசனஞ்செய்யச்சென்றோர் 'தரிசித்து மீளுங் கால் விடைபெற்றுச்செல்லுதல் முறையாதலால் அட்டமூர்த்தியினிடையருள்பெற்று என்றார், அட்டமூர்த்தி என்றதை முன்னர்க்காண்க. நிலப்பொருண்மேல்நின்ற பெ ற்றது என்னும் வினைப்பெயர் ஈறுதொக்கது. கேள்வியுஞ் சாத்திரமும் ஒருபொருட் கிளவிகளாதலால் நூற்கேள்வியில் வல்லோர் என்றும். பொன் என்னுஞ்சொல் ஈறு கெட்டு லகரமு மகரமும்பெற்றுப் பொலம் என நின்று இறுதிநிலைப் போலியாய்ப் பொலன் என நின்றது "பொன்னென்கிளவியீறுகெடமுறையின் - முன்னர்த்தோ ன்றும்லகாரமகாரம் - செய்யுண்மருங்கிற்றொடரியலான" எனத்தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-புள்ளிமயங்கியலிற்காண்க.' (அஅ)

ஷை வேறு.

வேளெனவந்தநாய்கர்சுந்தரவிடங்கராணு
னாள்களுங்கோளும்பற்றிநவமணியாக்கினரோ
தாள்களுந்தோளுமார்புந்தரித்தநீணாகமீன்ற
வாள்விடுமணியோவீந்தார்யாதெனமதிக்கற்பாலேம்.

(இ-ள்.) வேள் என வந்த நாய்கர் சுந்தர விடங்கர் ஆனல் - முருகக்கடவுள் போல வழகு மிளமையும் வாய்ந்துவந்த வணிகேசர் சோமசுந்தரக்கடவுளே யானு ல், நாள்களும் கோளும் பற்றி நவமணி ஆக்கினரோ - அசுவினிமுதலிய நக்ஷத்திர ங்களையுஞ் சூரியன்முதலிய வேழுகோள்களையும்பற்றி நவமணிகளாகச்செய்தாரோ, தாள்களும் தோளும் மார்பும் தரித்த நீள் நாகம் ஈன்ற வாள் விடு மணியோ ஈந்தா ர்-(தமது) திருவடிகளின்மேலுந் திருத்தோளின்மேலும் மார்பின்மேலுஞ் சிலம்புக ளாகவும் வாகுவலயமாகவும் முதாணியாகவுந் தரித்த நீண்டசர்ப்பங்கள்பெற்ற வொ ளிவீசுகின்ற ரத்தினங்களைத் தந்தருளினரோ, யாது என மதிக்கற்பாலேம - இவற் றுளெதுவென்று வரையறுத்துககூறும் பகுதியுடையேம்.

விடங்கர் உளிநீக்கமுடையவர். இன்னதெனத்துணியாமையால் ஐயவணி.

இந்திரக்கடவுணாட்டுமிம்மணியரியவென்று
'மந்திரக்கிழவர்நல்கிமயனினுமாண்டகேள்வித்
தந்திரக்கனகக்கொல்லர்க்குவப்பனததும்பவீசிச
செந்திருமார்பினுற்குத்திருமணிமகுடஞ்செய்தார்.

(இ-ள்.) இந்திரக்கடவுள் நாட்டும் இம் மணி அரிய என்று மந்திரக் கிழவர் நல்கி - இந்திரனுலகினு மிவ்விரத்தினங்கள் கிடைத்தற்கரியன வென்று அதிசயங் கூர்ந்து மந்திரிகள் தந்து, மயனினும் மாண்ட கேள்வி தந்திரம் கனகக் கொல்லர்க் கு உவப்பன ததும்ப வீசி - அசுரதச்சனினும் மாட்சிமைப்பட்ட சிற்பநூலில்வல் ல பொற்கொல்லர்க்கு வேண்டும் பொருள்களை யாசைநிரம்பத்தந்து, செந் திரு மா ர்பினற்கு திரு மணி மகுடஞ் செய்தார் - இலக்குமிவசிக்கு மார்பினையுடைய திரு மால்போன்ற வரசிளங்குமானுக்குப் பொலிவமைந்த விரத்தினமயமான கிரீடஞ் செய்வித்தார்கள்.

இறைவணிகிய சோமசுந்தரக்கடவு ளருளினமையால் இந்திரக்கடவுணாட்டு மிம்மணியரியவென்று என்றார். அமைச்சர்கள் நவமணிகளையும் பொற்கொல்லர்க்

குத் தக்கது மகுடஞ்செய்வித்தார்கள் என்பது கருத்து. செய்தார் முதனிலை திரியாது வந்த பிறவினை வினைமுற்று. (௬௦)

மங்கலமரபான்மாலைமணிமுடிசூட்டிநாமஞ்
செங்கணேறுயர்த்தகாய்கர்செப்பியமுறையால்வேத
புங்கவரிசைப்பவீதிவலஞ்செய்துபுனிதன்பாத
பங்கயமிறைஞ்சிவேந்தன்பன்மணிக்கோயிலெய்தா.

(இ-ள்.) மங்கல மரபால் மாலை மணி முடி சூட்டி - நல்ல முகூர்த்தநாளில் நூலிற்கூறிய மரபால் மாலைவேய்ந்த நவமணிமகுடத்தைச்சூட்டி, நாமம் செம் கண் ஏறு உயர்த்த காய்கர் செப்பிய முறையால் - அபிடேக பாண்டியனெனச் சிவந்தகண்களையுடைய இடபக்கொடியை யுயர்த்தியருளிய வணிகேசராய்வந்த சோமசுந்தரக்கடவுள் பேரிடுகவெனத் திருவாய்மலர்ந்தருளிய முறைப்படி, வேத புங்கவர் இசைப்ப - வேதநூலில்வல்ல அந்தணர்கூற, வீதி வலம் செய்து புனிதன் பாதபங்கயம் இறைஞ்சி - அரசவீதியையவலம்வந்து அச்சோமசுந்தரக்கடவுளுடைய திருவடித்தாமரைகளைவணங்கி, வேந்தன் பல் மணி கோயில் எய்தா - அவ்வபிடேகபாண்டியன் பலவிரத்தினங்கள் பதித்த தனது கோயிலையடைந்து. (௬௧)

போர்மகட்குறையுளானபுயத்தபிடேகத்தென்னன்
றேர்முதல்கருவித்தானைத்தெவ்வர்நீண்முடியெலாந்தன்
வார்கழற்கமலஞ்சூடமனுமுறைபைங்கூழ்காக்குங்
காரெனக்கருணைபெய்துவையகங்காக்குநாளில்.

(இ-ள்.) போர் மகட்கு உறையுள் ஆனபுயத்து அபிடேகத் தென்னன்-சயமகட்கு உறைவிடமான புயத்தையுடைய அந்தவபிடேகபாண்டியன், தேர் முதல் கருவி தானை தெவ்வர் நீள்முடி எல்லாம தன்வார்கழல் கமலம் சூட - தேர்முதலிய நான்குவகைச்சேனைகளையுமுடைய பகைவரது நீண்டகிரீடங்களெல்லாந் தனது நீண்டபாததாமரைகளைச்சூட, மனுமுறை பைங்கூழ்காக்கும் கார் என கருணைபெய்து வையகம் காக்கும் நாளில் - மனுநூன்முறைப்படி பசியபயிரைக்காக்கும் மேகம்போல (உயிர்த்தொகையின்மேற்) கருணைசொரிந்து உலகினைக் காத்துவரும்நாளில்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

தந்தைதன்காமக்கிழத்தியரீன்றதனையராய்த்தனக்குமுன்னவராய்
முந்தைநாளரசன்பொன்னறைமுரித்து முடிமுதல்பொருள்கவர்ந்துட்கு
சிந்தையராகிமறுபுலத்தொளித்ததெவ்வரைசிலர்கொடுவிடுப்ப [ஞ்
வந்தவர்கவர்ந்ததனமெலாமீளவாங்கினன்றீர்ங்கதிர்மருமான்.

(இ-ள்.) ஈர்ங்கதிர் மருமான் - குளிர்ந்தகிரணம்வாய்ந்த சந்திரன்மரபில்வந்த வபிடேகபாண்டியன், தந்தைதன் காமக்கிழத்தியர் ஈன்ற தனையர் ஆய் தனக்கு முன்னவர் ஆய் - தனதுபிதாவாகிய வீரபாண்டியனுடைய காமக்கிழத்தியர்பெற்ற புத்திரராய்த் தனக்குமுன்பிறந்தவராய், முந்தை நாள் அரசன் பொன் அறை முரித்து முடிமுதல் பொருள் கவர்ந்து - முன்னாளிலவ்வீரபாண்டியனுடைய கருவூலத்தின் தாளைமுரித்துக் கிரீடமுதலிய பெரும்பொருள்களை யெல்லாங் கொள்ளையாடி, உட்கும் சிந்தையர் ஆகி மறுபுலத்து ஒளித்த தெவ்வரை - (தீச்செயலால்)திடுக்கிடும் மனமுடையவராய் வேற்றூரிற்புகுந்தொளித்த பகைவரை, சிலர்கொடு வி

டுப்ப வந்தவர் கவர்ந்த தனம் எல்லாம் மீளவாங்கினான் - சிலவேவுகாரர்கொண்டு வந்து விடுப்பவந்த அந்தக்காமக்கிழத்தியர் புதல்வர்கொள்ளையாடிய கிரீடமுதலிய பொருள்களையெல்லா மீளவும்வாங்கினான்.

சோமசுந்தரக்கடவுளருளிய நவமணிகளின் மான்மியத்தால் எல்லாநாடுகளையும் தனதடிக்கீழ்ப்படுத்தினான் என்பார் மறுபுலத்தொளித்த தெவ்வரைச் சிலர் கொடுவிடுப்ப வந்தவர் கவர்ந்ததனமெல்லா மீளவாங்கினான் என்றார். (௬௩)

மாணிக்கம்விற்றபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௨அஎ.

## பதினெட்டாவது.

# வருணன்விட்டகடலை வற்றச்செய்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காழ்கெழுகண்டத்தண்ணல்கௌரியன்மகுடஞ்சூட
வீழ்கதிர்மணிகளீந்தவியப்பிதுவிடையோன்சென்னி
வாழ்கருமுகிலைப்போக்கிமதுரைமேல்வருணன்விட்ட
வாழ்கடல்வறப்பக்கண்டவாடலைப்பாடல்செய்வாம்.

(இ-ள்.) காழ்கெழுகண்டத்து அண்ணல் கௌரியன் மகுடஞ்சூட - கரிய நிறமிக்க ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் அபிடேகபாண்டியன் கிரீடஞ்சூட, கதிர் வீழ் மணிகள் ஈந்த வியப்பு இது - சூரியன்முதலிய கோள்களும் விரும்ப நவமணிகள்தந்த திருவிளையாடல் இது, விடையோன சென்னிவாழ் கருமுகிலை போக்கி - இடபவூர்தியையுடைய அச்சோமசுந்தரக்கடவுள் தமது சடாமுடியின் மேல் வாழும் புட்கலாவர்த்த முதலிய மேகங்களைச் செலுத்தி, மதுரைமேல் வருணன்விட்ட ஆழ்கடல் வறப்பகண்ட ஆடலை பாடல் செய்வாம் - மதுரையின்மேல் வருணன் ஏவிய ஆழ்ந்தகடலை வற்றச்செய்தருளிய திருவிளையாடலை யினியெடுத்துக்கூறுவாம்.

முன்னர்க்கூறிய திருவிளையாட லான்மாக்களிடத்துவைத்த கருணையின்வியப்பை யுணர்த்தினமையால் வியப்பென்பது தானியாகுபெயராய்ப் படலத்தின் மேனின்றது. மணிகளென்றமையால் சூரியன்முதலியகோள்கள் என்றும், கதிர் ஏனைக்கோள்களை யுணர்த்தி நிற்றலாற் முதற்குறிப்பு. (௧)

சித்திரைமதியிற்சேர்ந்தசித்திரைநாளிற்றென்னன்
மைத்திரண்மிடற்றுவெள்ளிமன்றுளாற்களவுமாண்ட
பத்திமைவிதியிற்பண்டம்பற்பலசிறப்பநல்கிப்
புத்தியும்வீடுநல்கும்பூசனைநடத்தலுற்றான்.

(இ-ள்.) தென்னன் சித்திரை மதியில் சேர்ந்த சித்திரை நாளில் - அபிடேகபாண்டியன் (எப்பொழுதும் அபிடேகம் நடத்திவருவோனாய்) சித்திரைமாதத்தில்



வருணன்விட்டகடலைவற்றச்செய்ததிருவிளை

வந்த சித்திரைநக்ஷத்திரத்திலே, மைதிரள் மிடற்று வெள்ளி மன்றுளார்க்கு அள வுமாண்ட பத்திமை - கரியகாளகண்டத்தையுடைய வெள்ளியம்பலத்தி லெழுந்தருளிய பெருமானாருக்கு எல்லைகடந்த அன்போடு, விதியில் மாண்ட பற்பல சிறப்பு நல்கி புத்தியும வீடும் நல்கும் பூசனை நடத்த லுற்றான் - ஆகமவிதிப்படி பூசனைக்குரிய பலதிரவியங்களையும் மிகப்ப (ஆதிசைவரிடத்தில்) கொடுத்துப் போகத்தையும் மோக்ஷத்தையுங் கொடுக்கும் பூசையை நடத்தத்தொடங்கினான்.

பௌரணைசேர்ந்த சித்திரைநக்ஷத்திரம் வருமாதஞ் சித்திரைமாதமாதலால் பௌரணை கூறுதொழிந்தார். தனது பெயர்க்காரணத்தைப் புலப்படுத்தினான் என்பார் விதியால் பண்டம் பற்பல சிறப்புநல்கிப் பூசனைநடத்தலுற்றான் என்றார். (௨)

நறியநெய்யாதியாரநறுங்குழம்பீறுவாட்டி
வெறியகர்ப்புரநீராட்டியற்புதவெள்ளம்பொங்க
விறைவனைவியந்துநோக்கியேத்துவானெறிநீர்வையைத்
துறைவநீயென்கர்ப்பூரசுந்தரனேயோவென்றான்.

(இ-ள்.) நறிய நெய் ஆதி ஆரம் நறுங் குழம்பு ஈறாக ஆட்டி - நறுமணங்கமழும் ஆனெய் முதல் நறுமணம்வீசுஞ் சந்தனக்குழம் பிறுதியாக வபிடேகஞ்செய்து, வெறிய கர்ப்புர நீர் ஆட்டி-வாசமிக்க பச்சைக்கர்ப்பூரக்குழம்பாலபிடேகஞ் செய்து, அற்புதம் வெள்ளம் பொங்க இறைவனை வியந்து நோக்கி ஏத்துவான்-சிவநேயப்பெருக்குத் தன்னைவிழுங்கச் சிவபெருமானை யதிசயங்கூர்ந்து பார்த்துத்துதிக்கும் அபிடேகபாண்டியன், எறி நீர் வையை துறைவ நீ என் கர்ப்பூர சுந்தரனேயோ என்றான் - அலைவீசும் நீர்மயமாகிய வையைநீர்த்துறையை யுடையவனே நீ எனது கர்ப்பூரசுந்தரனோவென்று துதித்தான்.

இறைவன் சவுந்தரபாண்டியனாய் அரசியல் நடத்திவந்தமையால் வையைத் துறைவ எனவும், சிவநேயப்பெருக்கால் விழுங்கப்பட்டவனாதலால் என்கர்ப்பூரசுந்தரனேயோ வெனவுங் கூறினான் எனவுங் கூறினார். (௩)

பூசனைபுரியுமெல்லைப்பொன்னகர்க்கிறைமைபூண்ட
வாசவன்வருடந்தோறும்பூசித்துவருவானன்ன
காசறுமனத்தான்பூசைகழிவுறுமளவுந்தாழ்ந்து
தேசமைசிறப்பார்பூசைசெய்துதன்னாடுபுக்கான்.

(இ-ள்.) பூசனை புரியும் எல்லை - இவ்வாறு பூசனைநிகழுங்காலையில், பொன்னகர்க்கு இறைமை பூண்ட வாசவன்-பொன்னுலகிற்குஅரசுரிமைபூண்ட இந்திரன், வருடந் தோறும் பூசித்து வருவான் - அச்சித்திரைமாதத்திற் சித்திரைநக்ஷத்திரந் தோறும் பூசித்து வருகின்றவன், அன்ன காசு அறு மனத்தான் பூசை கழிவுறும் அளவும் தாழ்ந்து-அந்தக் குற்றமற்ற மனத்தையுடைய வபிடேகபாண்டியன் பூசை முடியுமளவுங் காலம்பார்த்து நின்று, தேசு அமை சிறப்பு ஆர் பூசை செய்து தன் நாடுபுக்கான் - விளக்கமமைந்த சிறப்புமிக்க பூசைமுடித்துத் தன் விண்ணுலகிற் புகுந்தான்.

ஆகமவிதிப்படி பூசித்தான் என்பார் தேசமைசிறப்பார் பூசை என்றார். (௪)

அன்றுநீர்க்கடவுள்வேள்விநாயகனவையத்தெய்தி
நின்றிவன்றன்னேய்நீருஞ்செவ்வியினிகழ்ச்சிதோன்றக்

குன்றவன்சிறகரீர்ந்தகொற்றவன்முகத்தைநோக்கி
யின்றுநீசிறிதுதேம்பியிருத்தியாலிதென்கொலென்றான்.

(இ-ள்.) அன்று நீர்க் கடவுள் - அக்காலையில் வருணன், வேள்வி நாயகன் அவையத்து எய்தி நின்றவன் - மகபதியாகிய இந்திரனுடைய தேவசபையையடைந்துநின்று, தன் நோய் தீரும் செவ்வியின் நிகழ்ச்சி தோன்ற - தனது சலோதரநோய் தன்னினின்றும் நீங்குங் காலநிகழ்ச்சிவந்துகைகூட, குன்றம் வன்சிறகர் ஈர்ந்த கொற்றவன முகத்தை நோக்கி இன்று நீ சிறிது தேம்பி இருத்தி - மலையினது வலியசிறகையரிந்த இந்திரனுடைய முகத்தைப்பார்த்து இப்போது நீசிறிது வருந்தியிருக்கின்றாய், இது என் கொல் என்றான் - இது யாதுகாரணமென்று வினாவினான்.

சிவபெருமான் திருவருளிற் றலைப்பட்டனன் என்பார் தன்னோய்தீருஞ் செவ்வியினிகழ்ச்சி தோன்ற எனக்கூறினார். வருணன் சலோதரநோயுடையவனென்பது "வலாரிதோள்வாதநோயனவண்மதிகயநோயாளன், சுலாவுறுவெப்பநோயாற்றொடக்குண்டான்தக்கனென்பான், உலாவுறுகாலிலாதமுடவனேயுரங்கொண்மந்தன், சலோதரநோய்க்கோட்பட்டான் றண்புனற்கரையன்மாதோ" எனவருதலால் காண்க. (௫)

சிலைப்படுமுகிலூரண்ணல்செப்புவானிருடீரன்பின்
வலைப்படுபெருமானெம்மான்மதுரையெம்பிரானையன்பு
தலைப்படுபூசைசெய்யத்தாழ்த்ததின்றதனாலிப்போ
தலைப்படச்சிறிதெனுள்ளமாகுலமடைந்ததுண்டால்.

(இ-ள்.) சிலை படு முகில் ஊர் அண்ணல் செப்புவான் - இந்திரதனுசு பொருந்திய மேகத்தை யூர்தியாகவுடைய மிந்திரன் கூறுகின்றான், இருள் தீர் அன்பின் வலை படு பெருமான எம்மான் மதுரை எமபிரானை - அநாதியேயுள்ள ஆணவமலத்தினின்று நீங்கிய அடியார்பத்திவலையிலகப்படும் பெருமானும் எமமானும் மதுரையிலெழுந்தருளிய எமதுபிரானுமாகிய சோமசுந்தரமூர்த்தியை, அன்பு தலைப் படு பூசை செய்ய இன்று தாழ்த்தது - அன்பின்றலைப்பட்ட பூசைசெய்து முடிக்க விண்ணோர் நரபதியால் தாமதித்தது, அதனால் இப்போது என உள்ளம் அலைப பட சிறிது ஆகுலம் அடைந்தது உண்டு - அதனாலிப்பொழுது என்னுடையமனம் தட்டழியச் சிறிது துன்பம் நேரிட்டதுண்டு.

சூரியனொளியால் இருள் கீழ்ப்பட்டுநின்றாற்போலச் சிவஞானமேலீட்டால் ஆணவமலங் கீழ்ப்பட்டுநிற்கும் என்பார் இருடீர் எனவும், அதனால் சிவத்தோடுகூடியிரண்டறநின்றனுபவிப்போர் அன்பு என்பார் அன்பின்வலைப்படும் எனவும், என்னினுமேம்பட்ட சிவநேயமுடையான் என்பான் என்பார் இன்று தாழ்த்தது, உள்ளம் சிறிதாகுலமடைந்ததுண்டு எனக்கூறினான் எனவுங்கூறினார். (௬)

என்னவவ்விலிங்கந்தான்மாவிலிங்கமோவென்றுமுந்நீர்
மன்னவன்வினவலோடுமகபதிமொழிவான்முன்பென்
றன்னரும்பழியும்வேழசசாபமுந்தொலைத்ததன்றோ
வன்னதையறிந்திலாய்கொலென்னநீரண்ணல்கூறும்.

(இ-ள்.) என்ன - என்று இந்திரன்கூற, அ இலிங்கந்தான் மா இலிங்கமோ என்று மூக் கீர் முன்னவன் வினவலோடும்-(மதுரையிலெழுந்தருளிய) அந்தவிலிங்க மூர்த்தியானது எல்லாத் திருத்தலங்களினு மெழுந்தருளிய சிவலிங்கமூர்த்திகளினும் மேம்பட்ட விலிங்கமூர்த்தியோவென்று வருணன்வினவ, மகபதி மொழிவான்- இந்திரன் கூறுகின்றான், முன்பு எனறன் அரும் பழியும் வேழம் சாபமும் தொலைத் தது அன்றோ-முன்பு எனது நீக்குதற்கரிய பழியையும் வெள்ளையானையின்சாபத்தை யுந் தொலைத்ததல்லவோ, அனனதை அறிந்திலாய்கொல் என்ன - அதனை நீ யறியா யோவென்றுகூற, நீர் அண்ணல் கூறும் - வருணன் கூறுகின்றான்.

வினைப் புண்ணியதீர்த்த தலமூர்த்திகளாலுந் தீர்த்தற்கரியதென்பான் என்ற ன் னரும் பழியும் வேழச்சாபமும் என்றான். (எ)

அற்றதுவாகிற்றெய்வமருத்துவராலுந்தீரச்
செற்றிடவரிதாயென்னைத்தெறும்பெருவயிற்றுநோயை
வற்றிடுமாறுதீர்க்குங்கொல்லெனவலாரியைய
மூற்றுநீவினவதென்னென்றுண்ணகையரும்பிச்சொல்வான்.

(இ-ள்.) அது அற்றாகில் - அச்சிவலிங்கம் அத்தன்மையதாகில், தெய்வ மருத்துவராலும் தீர செற்றிட அரிதாய் என்னை தெறும பெரு வயிற்று நோயை வற்றிடும் ஆறு தீர்க்கும் கொல் என-அச்சுவினிதேவராலும் என்னினின்று நீங்கப்போக்கு தற்கரிதா யென்னைவருத்தும பெரியவயிற்றுநோயைப் பசையறநீக்குமோ வென்று வினவ, வலாரி ஐயம உறறு நீ வினவுது என என்று-இந்திரன் நீ சந்தேகங் கொண்டு வினவியது யாதென்று, உள் நகை அரும்பி சொல்வான் - புன்னகையரும்பிக் கூறுகின்றான். (அ)

அரியயராலுந்தீராப்பிறவிநோயறுக்கவல்ல
பெரியவனிந்தயாக்கைப்பெரும்பிணிபிறவுந்தீர்த்தற்
கரியனோவையன்செய்புந்திருவிளையாட்டையின்னே
தெரியநீசோதியென்னதெண்கடற்சேர்ப்பனசொல்வான்.

(இ-ள்) அரி அயராலும் தீரா பிறவி நோய் அறுக்க வல்ல பெரியவன் - திரு மாலினாலும பிரமனாலுந தீராத பிறவிநோயை வேரோடறுக்கவல்ல பெரியோன், இந்த யாக்கை பெருமபிணி பிறவும தீர்ததற்கு அரியனோ - இந்தப் புல்லிய சரீரத் திலுள்ள பெரிய நோய் முதலிய பிறவறறினையு மொழித்தற்கரியனோ, ஐயன் செ ய்யும் திருவிளையாட்டை இனனே தெரிய நீ சோதி என்ன-நமது பெருமானார் செய் தருளுந் திருவிளையாடலை யிப்பொழுதே (உனக்குத) தெளிவுதோன்ற நீ யாராய்ந்து பாராயெனறு கூற, தெண கடல் சேர்ப்பன சொல்வான் - தெள்ளிய கடற்றுறைக் கிறைவனாகிய வருணன கூறுகின்றான்.

அவர்கள் மாயை வசத்தராய்த் தற்சுதந்தரமில்லாதவர்கள் என்பான் அரிய யராலுந்தீரா எனவும்,அநாதியேமுததனாதலால் அம்மாயையைப்போக்கவல்லானெ ன்பான் பிறவிநோயறுக்கவல்ல பெரியவன்எனவும, இப்பெரியோன் மாயாகாரிய மாகிய சரீரத்திலுளள நோயைப்போக்குதல் அவனுக்கு ஓர்அரிய செயலன்றென்பா ன் யாக்கைப் பெருமபிணிபிறவுந் தீர்த்தறகரியனோ எனவும், அப்பெரியோன் அடி யார்க்கு எளியனாய் நடிக்குந் திருவிளையாடலை யபிடேகபாண்டியன் முன்னிலையாய தியா யென்பான் ஐயன்செய்யுந் திருவிளையாட்டை யின்னே தெரிய நீசோதி என வுங் கூறினான். (க)

கல்லிறகரிந்தோயிங்குநான்வருங்காலைவேட்டார்க்
கெல்லையில்காமநல்குஞ்சுரபியுமின்பால்சோரப்
புல்லியகன்றுமாற்றுப்பட்டவப்போதுகண்ட
நல்லசோபனத்தாலிந்நன்மொழிகேட்டேனென்று.

(இ-ள்.) கல் இறகு அரிந்தோய் இங்கு நான் வருங் காலை - மலையின் சிறகை யரிந்த விந்திரனே நானிங்கு வருங்காலையில், வேட்டார்க்கு காமம் எல்லையில் நல்கும் சுரபியும்-விரும்பினவருக்கு விரும்பினபடியே இன்பத்தை யளவில்லாமற்கொடுக்குங் காமதேனுவும, இன் பால் சோர புல்லிய கன்றும் ஆறு பட்ட-(தனது மடியினின்றும்) இனிய பால் சோரத் தன்னால் தழுவப்பட்ட கன்றும் வழியிலெதிர்ப்பட்டன, அப்போது கண்ட நல்ல சோபனத்தால்-அப்பொழுது நான பார்த்த நல்ல மங்கலத்தால், இநத நனமொழி கேட்டேன் என்று-இந்த நல்லமொழியை யிப்பொழுது கேட்டேனென்று.

நான் வரம்பில்போக நுகர்தற்கு இடையீடாய் அச்சுவினிதேவராலுந் தீர்த்தற்கரிதாயுற்ற பெருநோய்தீர்ந்து எல்லையில்போக நுகராநிருங்காலத்தை முன்னர்க் குறிப்பித்தற்கு ஓரேதுவாயிருந்ததென்பான் வேட்டார்க் - கெல்லையில்காமநல்குஞ் சுரபியுமின்பால்சோரப்-புல்லியகன்று மாற்றுப்பட்டஎன்றான். இது ஏதுவணி.(கo)

வருணனுமேகிவெள்ளிமன்றுடையடிகள்செய்யுந்
திருவிளையாடல்கண்டுவயிற்றுநோய்தீர்ப்பானெண்ணி
முரசதிர்மதுரைமூதூர்முற்றுநீயழித்தியென்றுக்
குரைகடறன்னைவல்லேகூவினனேவினானே.

(இ-ள்.) வருணனும் ஏகி - வருணனுஞ்சென்று, வெள்ளி மனறு உடை அடிகள் செய்யும் திருவிளையாடல் கண்டு வயிற்றுநோய தீர்ப்பான் எண்ணி-வெள்ளியம்பலத்தையுடைய சோமசுநதரக்கடவுள செய்யாநின்ற திருவிளையாடலைப்பார்த்துத் தனது வயிற்றுநோயைத் தீர்க்கததானகருதி, முரசு அதிர் மதுரை மூதூர் முற்றும் நீ அழிததி என்று - முரசங் கணபடாத மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள நகரைச் சிறிதுமின்றி முறறும் நீ யழிபபாயென்று, குரை கடல் தன்னை வல்லே கூவினன் ஏவினானே - ஒலிக்குங்கடலை விரைநதுகூவி யேவினான்.

முரசு எனப் பொதுப்படக் கூறினாரேனும் இங்குக் கொடை முரசைக் கொள்க. (கக)

கொச்சககலிப்பா.

கொதித்தெழுந்துதருக்களிறக்கொத்தியெடுத்தெத்திசையு
மதிர்த்தெறிந்துவரைதமெல்லாமகழ்ந்துதிசைடபுறஞ்செல்லப்
பிதிர்த்தெறிந்துமாடநிரைபெயர்த்தெறிநதுபிரளயத்தி
லுதித்தெழுந்துவருவதெனவோங்குதிரைக்கடல்வருமால்.

(இ-ள்.) ஓங்கு திரைக்கடல் - மேலெழுந்தோங்கும் அலைகளையுடைய கடலானது, கொதித்து எழுநது தருக்கள் இற கொத்தி யெடுத்து - கோபித்தெழுந்து மரங்களை வேரோடறப் பறித்தெடுத்து, எத்திசையும் அதிர்த்து எறிந்து - எந்தத் திசையிலுங் கோஷித்து வீசி, வரைகள் எல்லாம் அகழ்ந்து திசைப்புறம் செல்ல பிதிர்த்து எறிந்து - மலைகளையெல்லாம் வேரோடு பறித்துத் திசைகளினப்பாற் செல்லப் பிண்டிசெய்து வீசி, மாட நிரை பெயர்த்து எறிந்து - மாடவரிசைகளையுந்

கல்லி வீசி, பிரளயத்தில் உதித்து எழுந்து வருவதெனவரும்-பிரளயத்திலெல்லை கடந்து (உலகமுற்றும் போர்த்து) வருதல்போல, (நிலைகடந்து) வாராநிற்கும்.

> கந்தமலர்த்தனிக்கடவுள்கற்பத்துமழியாத
> விந்தவளம்பதிக்கிடையூறெய்தியதெம்பதிக்குமினி
> வந்ததெனச்சுந்தரனைவந்திறைஞ்சிவானவருஞ்
> சிந்தைகலங்கினர்வருணன்செய்தசெயறெளியாதார்.

(இ-ள்.) கந்தமலர் தனிக் கடவுள் கற்பத்தும் அழியாத இந்த வளம்பதிக்கு இடையூறு எய்தியது - வாசமிக்க தாமரைமலரில் வசிக்கும் ஒப்பில்லாத பிரமகற்பாந்தத்தும் தனது நிலைகலங்காத இந்த வளமிக்க மதுரைக்கு இடையூறு வந்தது, எம்பதிக்கும் இனி வந்தது என-(பிரமகற்பத்து அழியும்) எமது பொன்னுலகினுக்கும் அழிவுவந்தது என்று, வானவரும் வருணன் செய்த செயல் தெளியாதார் - தேவர்களும் வருணன் சோதித்தற்பொருட்டுச்செய்த செயலை யறியாதவராய், சுந்தரனை வந்து இறைஞ்சி சிந்தை கலங்கினா - சோமசுந்தரக்கடவுளை வந்து வணங்கி மனங்கலங்கி நின்றார்கள்.

கந்தமலர்த்தனிக்கடவுள் கற்பத்துமழியாத இந்த வளம்பதி என்றதை முன்னர்க்கூறிய தலவிசேடத்தாலும் பின்னர்வருந் திருவிளையாடல்கலாலு முணர்க.()

> சூலமோடழலேந்துஞ்சொக்கர்திருவிளையாட்டின்
> சீலமோநாமிழைத்ததீவினையின்றிறமிதுவோ
> வாலமோவுலகமெலாமழியவரும்பேரூழிக்
> காலமோவெனக்கலங்கிக்கடிநகரம்பனிப்பெய்த.

(இ-ள்.) சூலமோடு அழல் ஏந்தும் சொக்கர் திருவிளையாட்டின் சீலமோ - சூலமொடு நெருப்பையுமேந்திய சொக்கலிங்கமூர்த்தியின் திருவிளையாடலின் மான்மியமோ, இது நாமிழைத்த தீவினையின் திறமோ - இவ்வூழிப்பெருக்கு நாம் செய்த பாவத்தின் பாகுபாடோ, ஆலமோ-(தேவர்கள் நடுங்க எழுந்த) விஷமோ, எல்லாம் உலகம் அழிய வரும் பேரூழிக்காலமோ என-எல்லா உலகமும் நிலைகெடவாராநின்ற பெரிய சங்காரகாலமோ வென்று, கடி நகரம் கலங்கி பனிப்பு எய்த - காவல்மிக்க மதுரைநகரிலுள்ளோர் மனங்கலங்கி நடுங்கவும்.

நான் இறைவன் நான் இறைவனெனத் தனித்தனிகருதும் பிரமன் முதலியோரகந்தையை யொழித்துத் தான் இறைவன் என்பதை யுணர்த்தற்பொருட்டும், பக்குவருடைய மும்மலங்களைப்போக்கிப் பிறவிவேரறுத்து முத்தியிற் கூட்டவல்லோன் தானென்பதை யுணர்த்தற்பொருட்டும், வேள்வியே பொருளென்றழன்ற தாருகவனத்து முனிவர்கள் தனைக்கொல்ல ஏவிய அழலைத்தான் பொருள் என்றுணர்த்துதற்பொருட்டும் ஏந்தினன் என்பார் சூலமோடழலேந்தும் எனவும், இரத்தினம் தந்தருளிய திருவிளையாடலைக் கண்டறிந்தவராதலால் அந்த வற்புதம்போல இதுவும் ஒன்றோ என்பார் சொக்கர் திருவிளையாட்டின சீலமோ எனவும், அச்சத்தால் விழுங்கப்பட்டோராதலால் நாம் செய்த பாவத்திரட்சி யோருருக்கொண்டு வந்ததோ என்பார் நாமிழைத்த தீவினையின்றிற மிதுவோ எனவும், விஷமாயின் சிவபெருமானைத் திருமான் முதலியோர் சரணடைந்துய்ந்ததுபோல நாமுஞ் சரணடைந்துய்வோம் என்பார் ஆலமோ எனவும், சர்வசங்காரகாலமாயின் நாமுய்வது அரிது என்பார் உலகமெலா மழியவரும் பேரூழிக்காலமோ வெனக் கலங்கியெனவுங் கூறினார். "அல்லுதங்கவர் தங்களைமுத்தலையயிலால்-மெல்லவேயெடுத்தேந்திடும்" எனவும், "வன்னியந்தேவுமுட்க வந்திடுகனலையார்க்கு-முன்னவனொருகையேந்தி" என

வும் வருதலைக் காந்தம்-தக்ஷகாண்டம்-ததீசியுத்தரபடலத்திலும், "அழுக்கடையாச மலாண்டுகொண்டருள்பவன் - கழுக்கடைதன்னைக்கைக்கொண்டருளியும்" எனவருதல் கீர்த்தித்திருவகவலினும் காண்க. (௧௪)

மண்புதைக்கத்திசைபுதைக்கமயங்கிருள்போல்வருநீத்தம்
விண்புதைக்கவெழுமாடவியனகரின்புறத்திரவி
கண்புதைக்கவருமளவிற்கண்டரசனடுநடுங்கிப்
பெண்புதைக்குமொருபாகப்பிரானடியேசரணென்னு.

(இ-ள்.) மண் புதைக்க திசை புதைக்க மயங்கு இருள்போல் வரும் நீத்தம்-மண்ணுலகு புதைபடவும் எட்டுத்திக்குகளும் புதைபடவும் கட்புலன் ஒளியை மயக்கவோங்கிய இருளைப்போலவந்த வெள்ளமானது, விண் புதைக்க எழுமாடம் வியன் நகரின் புறத்து இரவிகண் புதைக்க வரும் அளவில்-விண்ணுலக மறைபடவோங்கிய மாடங்கள் நெருங்கிய பெரிய நகரின்புறத்தில் சூரியனும் அச்சத்தால் தனது கண்களை மூடவரும் அமையத்தில், அரசன் நடுநடுங்கி பெண் புதைக்கும் ஒரு பாகம் பிரான் அடியே சரண் எனு - அபிடேகபாண்டியன் கண்டு விதிர்விதிர்ப்படைந்து உமாதேவியார் வசிக்கும் இடப்பாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளின் திருவடியே யடைக்கலமென்று கருதி.

பிரமன் தனது சிருட்டி பல்காதொழியக் கவலைகூர்ந்து தனது புத்திரரோடுந் திருமாலோடுஞ் சிவபெருமானைச்சரணடைந்து குறைகூறக், கருணைகூர்ந்து அச்சிருட்டி பல்குதற்பொருட்டுத் தனது இடப்பாகத்தைநோக்கித் திருவருளே ஓர்பால் முற்றுமாகக் கண்டருளினமையால் பெண்புதைக்கும ஒருபாகம் எனவும், வழிவழித்தன் குலத்தினர் குறைபாடுகளைக் கூறுதற்கு முன்னரே முந்திச் சென்றொழிக்கும் இறைவனுயிருத்தலால் பிரானடியே சரணென்று எனவுங் கூறினர். "ஏகனையாகிவைகுமெநதைதன்னிடப்பாலான - வாகுளவைநோக்குமெல்லை மற்றவனுமையாடோன்றப் - பாகமதிருத்தியன்றைட் பரிவொடுகலந்துமேவிக்- கோகநகக்கண்ணனைக் குமரனையயனைத்தந்தான்." "தந்துழியீசன்றன்னைத் தனையருமயனுமாலும் - வந்தனைசெய்துபோற்ற மாயவன்வதனநோக்கி - நந்தமதருளா(ல்)து நங்கையோடிணி துசேர்ந்தாம் - முந்தையின்வேதாச்செய்கை முற்றிடும்போதியென்றான்" எனவும் வருதல் ஷை ததீசியுத்தரப்படலத்திற்காண்க. (௧௫)

ஆலமெழுந்திமையவர்மேலடரவரும்பொழுதஞ்சு
மாலெனவுந்தன்னுயிர்மேன்மறலிவரும்பொழுதஞ்சும்
பாலனெனவுங்கலங்கிப்பசுபதிசேவடியில்வீழ்ந்
தோலமெனமுறையிட்டானுலகுபுகழுறையிட்டான்.

(இ-ள்.) உலகுபுகழ் உறை இட்டான் - உலகிற்குத் தனது புகழாகிய உறையைச்செறித்த அபிடேகபாண்டியன், ஆலம் எழுந்து இமையவர்மேல் அடரவரும் பொழுது அஞ்சுமால் எனவும - விடமெழுந்து தேவர்களை வருத்தவருங் காலையில் மனமஞ்சிய திருமாலைப்போலவும், தன் உயிர்மேல் மறலிவரும் பொழுது அஞ்சும் பாலன் எனவும் கலங்கி-(கவர்தற்பொருட்டுத்) தனது உயிரினமேல் யமன் வருங்காலையில் மனமஞ்சிய மார்க்கண்டேயரைப்போலவும் தனது நிலைகலங்கி, பசுபதி சேவடியில் வீழ்ந்து ஓலமென முறை இட்டான் - அயன் முதலிய பசுக்களுக்கு இறைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய செவந்த திருவடியின்மேல் வீழ்ந்து அடைக்கலமெனத் தனது குறைகூறி முறையிட்டான்.

